

# தி. ஜானகிராமன் சிறுகதைகள்

முழுத் தொகுப்பு

பதிப்பாசிரியர்
சுகுமாரன்



# ஆசிரியரின் பிற நூல்கள்

**நாவல்**

- அமிர்தம்
- மோகமுள்
- அம்மா வந்தாள்
- அன்பே ஆரமுதே
- மலர்மஞ்சம்
- உயிர்த்தேன்
- செம்பருத்தி
- மரப்பசு
- நளபாகம்

**குறுநாவல்**

- சிவஞானம்
- அடி

**சிறுகதை**

- கொட்டு மேளம்
- சிவப்பு ரிக் ஷா
- அக்பர் சாஸ்திரி
- யாதும் ஊரே
- பிடிகருணை
- சக்தி வைத்தியம் (சாகித்திய அக்காதெமி விருது, 1979)
- மனிதாபிமானம்
- எருமைப் பொங்கல்

**பயண நூல்**

- உதய சூரியன்
- நடந்தாய் வாழி காவேரி (சிட்டியுடன்)
- கருங்கடலும் கலைக்கடலும்
- அடுத்த வீடு ஐம்பது மைல்

**மேடை நாடகங்கள்**

- டாக்டருக்கு மருந்து
- நாலு வேலி நிலம்
- வடிவேலு வாத்தியார்



# தி. ஜானகிராமன் சிறுகதைகள்

முழுத் தொகுப்பு

### தி. ஜானகிராமன் (1921-1982)

தி. ஜானகிராமன் தஞ்சை மாவட்டம் மன்னார்குடியை அடுத்த தேவங்குடியில் பிறந்தவர். பத்து வருடங்கள் பள்ளியாசிரியராகப் பணியாற்றியவர். பின்பு அகில இந்திய வானொலியில் பணியாற்றி ஓய்வுபெற்றார். கர்நாடக இசை அறிவும் வடமொழிப் புலமையும் பெற்றிருந்தவர்.

1943இல் எழுதத் தொடங்கிய தி. ஜானகிராமன், 'மோக முள்', 'அம்மா வந்தாள்', 'மரப்பசு' உள்ளிட்ட ஒன்பது நாவல்கள், நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், மூன்று நாடகங்கள், பயண நூல்கள் ஆகியவற்றை எழுதினார். சிட்டியுடன் இணைந்து எழுதிய 'நடந்தாய் வாழி காவேரி' பயண இலக்கிய வகையில் முக்கியமான நூலாகக் கருதப்படுகிறது.

'மோக முள்', 'நாலு வேலி நிலம்' ஆகியன திரைப்படமாக்கப்பட்டுள்ளன. 'மோக முள்', 'மரப்பசு', 'அம்மா வந்தாள்' ஆகிய நாவல்களும் பல சிறுகதைகளும் இந்திய, ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன.

1979இல் 'சக்தி வைத்தியம்' சிறுகதைத் தொகுப்பிற்கு சாகித்திய அக்காதெமி விருது வழங்கப்பட்டது.

**சுகுமாரன் (பி. 1957)**

பதிப்பாசிரியர்

கோவையில் பிறந்தார். அச்சிதழ், தொலைக்காட்சி, நூல் வெளியீட்டுத் துறைகளில் பணியாற்றினார். கவிஞர், கட்டுரையாளர், நாவலாசிரியர், மொழிபெயர்ப்பாளர். காலச்சுவடு இதழின் பொறுப்பாசிரியர். கனடா தமிழ் இலக்கியத் தோட்டத்தின் வாழ்நாள் சாதனையாளருக்கான இயல் விருதை 2016இல் பெற்றார். திருவனந்தபுரத்தில் வசிக்கிறார்.

தொடர்புக்கு: *nsukumaran@gmail.com*

# தி. ஜானகிராமன் சிறுகதைகள்

## முழுத் தொகுப்பு

பதிப்பாசிரியர்

**சுகுமாரன்**



**காலச்சுவடு பதிப்பகம்**

தி. ஜானகிராமன் சிறுகதைகள்: முழுத் தொகுப்பு ♦ சிறுகதைகள் ♦ © உமாசங்கரி ♦ பதிப்பாசிரியர்: சுகுமாரன் ♦ பதிப்பும் அமைப்பும் © சுகுமாரன் ♦ முதல் பதிப்பு: டிசம்பர் 2014, மூன்றாம் பதிப்பு: ஏப்ரல் 2021 ♦ வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669, கே.பி. சாலை, நாகர்கோவில் 629001.

***Thi.jaanakiraaman ciRukataikaL*** ♦ *Complete Short Stories of Thi. Janakiraman (1921-1982)* ♦ *© Umashankari* ♦ *Edited by: Sukumaran* ♦ *Compilation, editorial format and arrangement © Sukumaran* ♦ *Language: Tamil* ♦ *First Edition: December 2014,Third Edition: April 2021*

*Published by Kalachuvadu Publications Pvt. Ltd., 669 K.P. Road, Nagercoil 629001, India* ♦ *Phone: 91-4652-278525* ♦ *e-mail: publications@kalachuvadu.com*

*ISBN: 978-93-91093-83-9*

# பொருளடக்கம்

முன்னுரை:

# அழகின் சிலிர்ப்பு

*‘காலம் கனிந்து அளித்த கொடை’ என்ற வாசகம் பொதுவாக எல்லாக் கலைகளுக்கும் பொருந்தக் கூடியதுதான். ஆனால் தி. ஜானகிராமன் கதைகளை ஒவ்வொரு முறை வாசிக்கும்போதும் இந்த வாசகத்தை அவரது சிறுகதைக் கலைக்கு அழுத்தம் கொடுக்கும் பிரத்தியேக வாக்கியமாகவே புரிந்துகொள்ளத் தோன்றியிருக்கிறது. இந்தப் புரிந்துகொள்ளலுக்கு ‘கொட்டு மேளம்’ தொகுப்பைப் பற்றி க.நா. சுப்ரமணியம் தனது ‘படித்திருக்கிறீர்களா?’ நூலில் குறிப்பிட்டிருக்கும் வரிகள் ஒருவேளை காரணமாக இருக்கலாம். ‘1946க்குப் பிந்திய இலக்கியத் தேக்க காலத்திலே தோன்றிய நல்ல ஆசிரியர் என்று தி. ஜானகிராமனைச் சொல்ல வேண்டும். சூழ்நிலை, இன்றைய வேகம் இரண்டையும் எதிர்த்து நீச்சுப் போடுவதென்பது சிரமமான காரியம். இந்தக் காரியத்தை இலக்கியபூர்வமாகவும் ஒரு அலக்ஷிய பாவத்துடனும் செய்திருக்கிறார் தி. ஜானகிராமன்.’ இவை க.நா.சு.வின் வரிகள்.*

*க.நா.சு. வரையறுத்துச் சொல்லும் காலப்பகுதி நவீன இலக்கிய வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்தது. மறுமலர்ச்சி எழுத்துக்களின் களமாக இருந்த மணிக்கொடி இதழ் தனது மூன்று கட்டச் செயல்பாடுகளுக்குப் பின்னர் ஏற்கனவே ‘ஜீவன் முக்தி’ அடைந்துவிட்டிருந்தது. மணிக்கொடி மூலம் தமது சாதனைப் படைப்புகளை வெளியிட்டிருந்த சிறுகதை ஆசிரியர்கள் பலரும் களம் நீங்கியிருந்தார்கள். கு.ப.ராஜ கோபாலன் காலமாகிவிட்டிருந்தார். புதுமைப்பித்தன் திரைப்பட முயற்சிக்காகப் புனே வாசியாகிருந்தார். அபூர்வமாகவே கதைகளை எழுதிய மௌனியும் இடைவேளை எடுத்துக்கொண்டிருந்தார். வேறு பலரும் தமது முன்னாள் சாதனைகளுக்காகவே பேசப்பட்டுக் கொண்டிருந்தார்கள். புதிய சலனங்கள் இல்லாமல் மந்தகதியில் நகர்ந்துகொண்டிருந்த இலக்கியப் போக்கையே தேக்க காலம் என்கிறார் க.நா.சு. இந்தப் போக்கில் புது வேகத்தை ஏற்படுத்திய ஒன்றாகவே தி. ஜானகிராமனின் வருகையை அறிவிக்கிறார். இது மிகச் சரியான*

இனங்காணல்தான் என்பதை ஜானகிராமனின் சிறுகதைகள் நிறுவின. 'தனித் தன்மையும் உணர்ச்சி நிறைவும் தெறிப்பும்' கொண்ட கதைகள் மூலம் அவர் தமிழ்ச் சிறுகதை மரபைப் புதிய திசைக்கு நகர்த்தினார். இந்த முன்னெடுப்பில் தி. ஜானகிராமனுடன் இன்னொரு பெயரையும் இணைக்கலாம். லா.ச. ராமாமிருதம். க.நா.சு. குறிப்பிட்ட தேக்கத்தை இவ்விருவருமே உடைத்தார்கள், இரு வேறு முறைகளில்.

தி. ஜானகிராமனின் முதல் தொகுப்பான 'கொட்டு மேள'த்தில் இடம் பெற்றிருக்கும் கதைகளை வைத்தே அவரது சிறுகதைப் பங்களிப்பை க.நா.சு. பாராட்டுகிறார். தொகுப்பில் இடம்பெற்றுள்ளவை 1946 முதல் 53ஆம் ஆண்டு வரையிலான எட்டு ஆண்டுகளில் எழுதிய கதைகள். அவற்றில் தேர்ந்த சிறுகதையாளனின் அடையாளம் துலக்கமாகப் புலப்படுகிறது. தொகுப்பிலுள்ள கதைகளில் காலவரிசைப்படி பழமையானது 'பசி ஆறிற்று' என்ற கதை. கலாமோஹினி இதழில் 1946ஆம் ஆண்டு வெளியானது. ஜானகிராமனின் பிற்காலக் கதைகளில் காணக் கிடைக்கும் தனித்துவமான அழகும் ஆழ்மன விசாரமும் வெளிப்படும் நேர்த்தியான கதை இது. இந்தக் கதை வெளியான ஆண்டைத்தான் தேக்க உடைப்பின் காலமாகக் க.நா.சு. கணிக்கிறார் என்று யூகிப்பது ஒருவகையில் பொருத்தமானது.

ஜானகிராமனின் தனித்துவம் இலக்கணச் சுத்தமாகத் தென்படும் முதல் கதையாக 'பசி ஆறிற்று' கதையையே முன்வைக்க விரும்புகிறேன். இந்தக் கதையில் கூடியிருக்கும் இலக்கண ஒழுங்குக்கு வருவதற்கு முன்பே அவரது ஏழு கதைகள் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கின்றன. தொகுப்புகள் எதிலும் சேர்க்கப்படாத இந்தக் கதைகள் சோடையானவை அல்ல. வாழ்வையும் இலக்கியத்தையும் குறித்த அவருடைய ஆதாரமான அக்கறைகளை இந்தக் கதைகள் ஓரளவுக்கு முன்னறிவிக்கின்றன. 'மணச் சட்டை' என்ற கதையில் வரும் கனோரா அரசியின் பெண்மைச் சாகசத்தைப் பிற்காலக் கதையான 'சிவப்பு ரிக் ஷா'விலும் பார்க்க முடியும். இரண்டுக்கும் காலப் பின்னணி வேறு. ஆனால் கதையில் தெரியும் மனத்தளம் ஏறத்தாழ ஒன்றுதான். 'மன்னித்து விடு' கதையில் வெளிப்படுவது தானறியாமல் இழைத்துவிட்ட குற்றத்துக்காக மனம் கொள்ளும் தத்தளிப்பும் பரிகார முனைப்பும். இதுவே அவரது பிற்காலச் சிறந்த கதைகளில் ஒன்றான 'கண்டாமணி'யின் கதை மையமும். ஒரு படைப்பாளியாக

தி. ஜானகிராமன் தன்னியல்புடனும் அநாயாசமான மேதைமையுடனும் வெளிப்படுவது சிறுகதைகளில்தான்.

சிறுகதைகள் வெளிவரத் தொடங்கிய அதே நாட்களில் நாவலையும் ஒரு கை பார்க்க, ஜானகிராமன் முயன்றிருக்கிறார். அவரது முதல் நாவலான 'அமிர்தம்' 1944இல் கிராம ஊழியன் இதழில் தொடராக எழுதப்பட்டு 48இல் புத்தகமாக வெளிவந்தது. முதல் சிறுகதைத் தொகுப்பு வருவதற்கு முன்பே நாவல் வெளிவந்திருக்கிறது. அவரை முதன்மையாக ஒரு நாவலாசிரியராகவே முன்னிறுத்தி வந்ததன் காரணம் இந்த அறிமுகமாக இருக்கலாம். சற்று அத்துமீறிச் சிந்தித்தால் அவரே நாவலாசிரியராகத்தான் அறியப்பட விரும்பி இருப்பார் என்றும் தோன்றுகிறது. அவர் காலத்திய எழுத்து முன்னோடிகளான புதுமைப்பித்தனும் கு.ப.ரா.வும் அப்படி அறியப்பட விரும்பினார்கள். ஆனால் அவர்களது நாவல் முயற்சிகள் பலிதமாகாத குறைக் கனவுகளாகவே மிஞ்சின. ஜானகிராமனின் நாவல் முழு வடிவை எட்டியது; எனினும் அதுவும் ஒரு சிதைவுற்ற கனவுதான். 'அது ஆசைக்கு எழுதிப் பார்த்தது. அதற்கு மேல் சொல்ல ஒன்றுமில்லை' என்று நேர்ப் பேச்சில் அவர் குறிப்பிட்டது நினைவுக்கு வருகிறது.

நாவலில் அவரது தோல்விகளை எளிதாகச் சுட்டிக் காட்ட முடியும். ஆனால் அவரது மாற்றுக் குறைவான சிறுகதைகளையும் தோல்வி என்று குறிப்பிடுவது கடினம். அவற்றைப் பாதியில் நிறுத்தப்பட்ட அல்லது முழுமை கூடாத சித்திரங்கள் என்றே சொல்ல முடியும். அவரது தனித்துவம் தென்படும் ஏதாவது கூறு, கதைகளில் நிச்சயம் இருக்கும். 'பாப்பாவுக்குப் பரிசு' அந்த வகையிலான கதை. குழந்தையின் வெகுளித்தனமான சாட்சியம் ஒரு திருடனைத் தண்டனைக்குள்ளாக்குகிறது. அவன் நையப்புடைக்கப்படுகிறான். தவறை ஒத்துக்கொள்கிறான். தவறை ஒத்துக் கொண்டவனைத் தண்டிப்பதை பாப்பா விரும்புவதில்லை. அவன் மீது ஏற்படும் இரக்கத்தால் தனது தீரத்துக்குப் பரிசாக வழங்கப்பட்ட பட்டுச் சட்டையைப் புறக்கணிக்கிறாள். மிகச் சாதாரணமான இந்தக் கதை ஜானகிராமனின் கைப் பக்குவத்தால் சுவாரசியமான வாசிப்புக்குரியதாகிறது. கதைப் பொருள் களங்கமில்லாத மானுடக் கரிசனத்தை வெளிப்படுத்தும் எளிய பிரகடனமாகிறது. இந்த மானுடப் பரிவே தி. ஜானகிராமன் கதைகளின் பொது இயல்பு எனலாம்.

இலக்கிய உரையாடல்களில் தி. ஜானகிராமன் தமிழின் முதன்மையான நாவலாசிரியர்களில் ஒருவராகவே பேசப்படுகிறார். உண்மை. பிற இந்திய மொழிகளில் புகழ்பெற்ற எந்த நாவலுக்கும் ஈடுநிற்கும் நாவலை (மோக முள்) எழுதியவர். இதுவும் உண்மை. இந்த இரு உண்மைகளின் வெளிச்சத்தில் தமிழ்ச் சிறுகதையில் கலாபூர்வமான சாதனைகள் நிகழ்த்தியவர் என்ற அகல் வெளிச்சம் மங்கலாகவே புலப்படுகிறது. அவரது நாவல்துறைச் சாதனைக்குச் சற்றும் குறைந்ததல்ல சிறுகதைகளில் நிகழ்த்தியிருக்கும் சாதனை. ஒரு செவ்வியல் படைப்பாளர் என்ற நிலையில் நாவலைவிடவும் ஒரு மாற்று உயர்வானது என்பது என் எண்ணம். இந்தக் கருத்து தமிழ் இலக்கியச் சூழலில் வலியுறுத்திச் சொல்லப்பட்டதும்கூட. முன்னுரையின் ஆரம்பப் பகுதியில் மேற்கோள் காட்டப்படும் க.நா.சு.வின் வாசகங்கள் வலியுறுத்தலின் தொடக்கம். ஜானகிராமன் மறைந்து கால் நூற்றாண்டுக்குப் பின்பு எழுதிய கட்டுரையில் (ஜானகிராமன் அனுப்பிய தந்தி தி ஹிந்து ஞாயிறு பதிப்பு 9 மார்ச், 2008) அசோகமித்திரன் ‘ஜானகிராமனின் களம் சிறுகதைதான்’ என்று குறிப்பிடும் வாசகத்திலும் இந்த வலியுறுத்தல் தென்படுகிறது. தனது இலக்கிய முன்னோடிகள் வரிசைத் தொடரின் மூன்றாவது நூலான ‘சென்றதும் நின்றது’மில் தி. ஜானகிராமனைக் குறித்த பகுதியில் ஜெயமோகன் ‘தி. ஜானகிராமனின் சிறுகதைகளே கலைஞனாக அவரைத் தமிழில் நிலைநிறுத்துபவை’ என்று குறிப்பிடுகிறார்.

## 2

தி. ஜானகிராமனின் படைப்பு ஆளுமையை வார்த்தெடுத்தவை, அவருக்கு இருந்த வடமொழிப் புலமையும் ஆங்கிலக் கல்வியும் எனலாம். கல்லூரிப் பருவத்தில் வாசிக்கக் கிடைத்த நவீன ஆங்கிலப் படைப்புகளும் மறுமலர்ச்சிக் காலத் தமிழ் இலக்கியங்களும் அவரைத் தூண்டிவிட்டன. அதே பருவத்தில் கு.ப.ரா.வுடன் ஏற்பட்ட நெருக்கம் படைப்புச் செயல்பாட்டுக்கு உந்துதல் அளித்தது. கு.ப.ரா.வைத் தனது ‘வழிகாட்டி’ என்றே அவர் பெருமைப்படுத்துகிறார். இந்த நெருக்கத்தால்தான் அவர் கு.ப.ரா.வின் மரபைச் சேர்ந்தவராக அடையாளப்படுத்தப்படுகிறாரா? இருக்கலாம். ஆண் பெண் உறவுச் சிக்கல், பெண்ணின் உளவியல் குறித்த அலசல், காமத்தின் ஸ்வர பேதங்கள் ஆகிய கருப்பொருள்களைக் கையாளுவதில் கு.ப.ரா.வின் பாதிப்பும் தொடர்ச்சியும்

ஜானகிராமனிலும் தென்படுகின்றன. எனினும் தனது வழிகாட்டியின் காலடியை விலகாமல் பின்தொடர்ந்தவர் அல்லர். அவரது ஆரம்பகாலக் கதைகளிலேயே கு.ப.ரா.வை அணுகும் போக்கும் விட்டு விலகும் முனைப்பும் ஒருசேரத் தென்படுகின்றன. முன் சொன்ன 'பசி ஆறிற்று' கதையில் கு.ப.ரா.வின் வலுவான பாதிப்பைப் பார்க்க முடியும். டமாரச் செவிடான சாமிநாத குருக்களுக்கு வாழ்க்கைப்பட்ட அகிலாண்டத்தின் வேட்கைதான் கதையின் உள் முரண். அடுத்த வீட்டு இளைஞன் ராஜத்தின் மீது அவளுக்கு ஈடுபாடு உருவாகிறது. அது பாலுணர்வுத் ததும்பலாக வழியும் தருணத்தில் அவன் வெளியூர் செல்கிறான். அகிலாண்டத்தின் வேட்கையை அவனது விலகல் கலைக்கிறது. அந்த மன வெறுமையை செவிட்டுக் கணவனின் பரிவு நிரப்புகிறது. உடலின் பசி தணிகிறது. பெண்ணின் பாலுணர்வுத் தத்தளிப்பைச் சொல்லும் இந்தக் கதை, கு.ப.ரா.வின் வரைகோட்டில் ஜானகிராமன் பூர்த்தி செய்த ஓவியமாகவே தெரிவது வியப்புக்குரியது அல்ல. 'ஆற்றாமை' உட்பட கு.ப.ரா.வின் பல கதைகளிலும் இந்தக் கதைத் தருணத்தைக் காணலாம். தி. ஜானகிராமன் கு.ப.ரா.வை ஒட்டி நிற்கும் இடம் இது.

இன்னொரு கதைக் களத்திலும் இருவரையும் பொதுமைப் படுத்தலாம். வரலாறு, இதிகாசம், தொன்மம் ஆகியவற்றைப் பின்புலமாக வைத்து உருவான கதைகளை இருவரும் எழுதியிருக்கிறார்கள். இந்தப் போக்கு அன்றைய இலக்கிய நடைமுறை சார்ந்த ஒன்று. பழங்கதைகளின் ஏற்றுக்கொள்ளப்பட்ட மதிப்பீடுகளை மறு விசாரணைக்கு உட்படுத்தும் கதைகளை மிக அதிக அளவில் எழுதியவர் கு.ப.ரா. அவரது 'காணாமலே காதல்' இத்தகைய கதைகளின் தொகுப்பு. 'மணச் சட்டை', 'ராஜ திருஷ்டி', 'ராவணன் காதல்', 'யதுநாத்தின் குரு பக்தி', 'அதிர்வு' முதலான ஜானகிராமன் கதைகள் இந்த வகையானவை. இப்படியான ஒற்றுமையிலும் ஜானகிராமன் கதைகள் முன்னோடியான கு.ப.ரா.வை மீறிச் செல்கின்றன. இந்த வகையிலான கு.ப.ரா. கதைகள் நெருப்பின் சுடர்கள் என்றால் ஜானகிராமன் கதைகள் தாவிப் பரவும் ஜுவாலைகள்.

ஆரம்பகாலக் கதைகளுக்குப் பின்பு, தனது தனிப் பாதை துலக்கமான நிலையில் ஜானகிராமன் உருவாக்கிய கதையுலகம் விரிவானது. கதைத் தளங்கள் வெவ்வேறானவை. தலைகீழாகச் சொல்வதென்றால் எண்ணிக்கையில் ஜானகிராமனுக்கு நிகரான

கதைகளைக் கு.ப.ரா.வும் எழுதியிருக்கிறார். ஆனால் வழிகாட்டியின் கதைப் பரப்பு வரையறைக்கு உட்பட்டது. இரண்டே பிரதானவகைகளில் கு.ப.ரா. கதைகளை அடக்கிவிடலாம். ஆண் பெண் உறவு சார்ந்த கதைகள், சமூக விமர்சனமாக அமைந்த கதைகள் என்ற இரண்டு வகையில். இவற்றிலும் முதல்வகைக் கதைகளே பெரும்பான்மையானவை. ஆண் பெண் உறவுச் சிக்கலையும் காமத்தையுமே அதிகமாக எழுதினார் என்ற பாரபட்சமான விமர்சனத்துக்கு மாறானதாகவே தி. ஜானகிராமனின் கதையுலகம் அமைந்திருக்கிறது. அவரது நாவல்களுடன் பொருத்திப் பார்த்தால் இந்தக் கருத்து ஓரளவு சரியானதாக இருக்கலாம். ஆனால் அவரது சிறுகதைகள் அவற்றின் பொருள் விரிவால், கதாபாத்திரங்களின் பெருக்கத்தால் இந்தக் கருத்தை மிக எளிதாகப் புறந்தள்ளுகின்றன. சமூகத்தின் கோணல்களைப் பற்றியும் மனித மனத்தின் விநோதங்கள் குறித்தும் தார்மீக அக்கறைகளைச் சார்ந்தும் கலை மேன்மையும் அழகும் நிரம்பிய கதைகளை எழுதியவர் அவர். வாழ்வின் எல்லாத் தளங்களையும் தீண்டும் கதைகள் அவருடையவை. தனது வழிகாட்டியிடமிருந்து ஜானகிராமன் விலகும் இடம் இது என்பது என் கணிப்பு.

கு.ப.ரா. சிறுகதைகள் முழுத் தொகுப்பின் முன்னுரையில் அதன் பதிப்பாசிரியர் பெருமாள்முருகன் கு.ப.ரா.வின் கதைத் திறனை 'ஒரே இடத்தில் நின்றபடி நிகழ்த்தும் வாள் வீச்சாக' உருவகப்படுத்துகிறார். அவரைப் பின்தொடர்ந்த ஜானகிராமன் பல களங்களில் நின்று வாளைச் சுழற்றுகிறார் என்று குறிப்பிடலாம். இப்படிச் சொல்வது முன்னவரைத் தகுதி இறக்கம் செய்வதோ பின்னவரைச் சிகரத்தில் ஏற்றுவதோ அல்ல. காலமும் அனுபவங்களும் இருவரிடமும் செயல்பட்டிருக்கும் பாங்கைச் சுட்டிக் காட்டுவதுதான். தாய்ப் பாய்ச்சல் எட்டு அடியென்றால் குட்டிக்குப் பதினாறு அடிதானே இலக்கணம். இலக்கியத்தில் முன்னேற்றம் என்பது இந்தப் பாய்ச்சல்தானே.

## 3

தி. ஜானகிராமனின் சிறுகதை ஆளுமை செவ்வியல்தன்மை கொண்டது என்பது என் அனுமானம். அவரது ஆரம்பகாலக் கதைகளில் ஒன்றான 'பசி ஆறிற்று' முதல் கடைசிக் கதை 'சுளிப்பு' வரையிலும் இந்தத் தன்மைகளைக் காணலாம். வடமொழி

இலக்கியங்களில் பெற்ற அறிமுகம், தமிழ் இலக்கியங்களிலிருந்து பயின்ற விரிவு, பிறமொழி இலக்கியங்களிலிருந்து அடைந்த செய்நேர்த்தி இவை கதைகளின் புற வடிவத்தையும் காலங்காலமாகப் போற்றப்பட்ட மானுட மதிப்பீடுகள்மீது கொண்ட நம்பிக்கை கதைகளின் ஆழத்தையும் நிர்ணயித்திருக்கிறது. இந்தக் கூறுகளால் ஆன படைப்பு மனம் இயல்பாகவே ஒரு பூரித நிலையை எட்டியிருந்தது. அதில் மேலதிகமாக எதையும் சேர்க்கவோ அல்லது எடுக்கவோ அனுமதிக்காத முழுமையை அந்த மனம் கொண்டிருந்தது. காற்றிலிருந்து ஈரத்தை உறிஞ்சிக்கொள்வதுபோல காலத்தின் கசிவை அந்தப் படைப்பாற்றல் உள்ளிழுத்துக்கொண்டு தன்னை நிரந்தரப் புதுமையாகவும் வைத்துக்கொண்டிருந்தது என்றே நம்புகிறேன். இன்று வாசிக்கும்போதும் தி. ஜானகிராமனின் கதைகள் புதுமை குன்றாதவையாகவும், வாசகனை ஈர்க்கும் வசீகரத்தை இழந்து விடாததாகவும் இருப்பது இந்த குணத்தால்தான் என்று தோன்றுகிறது. இசை தொடர்பான ஒரு குறிப்பு மூலம் இதை விளக்கமாகப் பார்க்கலாம். ஜானகிராமனின் படைப்பு மனத்தை உருவாக்கியதில் இசைக்கும் பங்கு உண்டு என்பதனால் இந்த விளக்கம் பொருத்தமானதுதான்.

ஜானகிராமனின் ஆதர்சப் பாடகரும் நண்பருமான மதுரை மணி அய்யரின் இசையை செவ்வியல்தன்மை நிரம்பியது என்று சொல்வது சரி. அந்த இசை இலக்கண சுத்தமானது, அதே சமயம் இலக்கணத்தை மூடத்தனமாகப் பின்பற்றாதது. முழுமையான மனோதர்மத்துக்கு உட்பட்டது, அதே போல கேட்பவனின் மனத்துக்கும் இடமளிப்பது. மரபு சார்ந்தது. அப்படி இருக்கும்போதே மரபை மீறுவது. வெறும் உத்திகளில் நம்பிக்கை கொள்ளாதது. அதேவேளையில் வித்தியாசங்களைக் கொண்டது. இந்தக் காரணங்களாலேயே அது ஒரே நேரத்தில் ஜனரஞ்சகமானதாகவும் செவ்வியலானதாகவும் நிலைபெறுகிறது. இந்த விளக்கத்தில் இசையின் இடத்தில் இலக்கியத்தைப் பொருத்தினால் அது தி. ஜானகிராமனின் கதைக்கலையை எளிதாக விளக்கிவிடும்.

செவ்வியல்தன்மையின் இன்னொரு கூறு அழகுணர்ச்சி. தமிழில் அழகுணர்ச்சி மேலிட எழுதப்பட்ட கதைகள் தி. ஜானகிராமனுடையவை. தனது எழுத்தை செளந்தர்ய உபாசனை என்று சொன்ன லா.ச.ரா. நினைவுக்கு வருகிறார். ஜானகிராமனின் சக காலத்தவர். எனினும் அழகுணர்ச்சி குறித்த இரு

எழுத்தாளர்களின் பார்வையும் வேறுபட்டவை. லா.ச.ரா. இயல்பிலேயே அழகானதை ஆராதனை செய்யும்போது ஜானகிராமன் தனது ஆராதனை வாயிலாகவே ஒன்றை அழகானதாக ஆக்குகிறார். பொக்கை வாயும் சருமமே தெரியாத அளவு முகச் சுருக்கங்களும் கொண்ட மூதாட்டி பார்வைக்குக் குரூபியாக இருக்கலாம்; ஆனால் அந்த முகத்தை நுட்பமாகப் பதிவுசெய்யும் ஓவியத்தையோ புகைப்படத்தையோ அழகில்லாதது என்று சொல்லுவதில்லை. எதார்த்தத்தின்மீது கலையின் ஸ்பரிசம் பட்டு அழகானதாகிறது அந்த நகல். ஜானகிராமனின் கலையின் அடிப்படை இதுதான். அதனாலேயே அவர் கதைகளில் சித்திரிக்கப்படும் எதுவும் அழகானதாகவும் வெளிச்சம் நிரம்பியதாகவும் அமைகிறது. இது அவரது கதைகளுக்கு ஆழமான பொருளை அளிக்கிறது. ஜானகிராமன் கதைகளில் வரும் நிலம், மனிதர்கள், மரணம், ஏமாற்று, துரோகம், கீழ்மை, வியப்பு , தந்திரம், வன்மம், மூடத்தனம் எதுவும் வசீகரமானதாகவே தோன்றுகிறது. ஆனால் அந்த அழகின் ஆழத்தில் மனிதனின் ஆதார உணர்வுகளின் சிக்கல்களும் மோதல்களும் கிடக்கின்றன. அழகை விரும்பி வாசிப்பவனுக்கு கதை, ஜனரஞ்சக சுவாரசியமுள்ளதாகவும், ஆழத்தை உணர்பவனுக்கு இலக்கிய நுண்மை கொண்டதாகவும் ஆகிறது. இந்த ரசவாதத்தை தமிழ்ச் சிறுகதைகளில் வெற்றிகரமாகச் சாதித்தவர்களில் முக்கியமானவர் ஜானகிராமன்.

## 4

தனது எழுத்துக்களைப் பற்றி தி. ஜானகிராமன் வெளிப்படையாகப் பேசிய சந்தர்ப்பங்கள் மிகவும் குறைவு. நாவல்களைப் பற்றியாவது ஓரிரு சந்தர்ப்பங்களில் பேசியிருக்கிறார். 'அம்மா வந்தாள்' நாவல் சர்ச்சைக்கு இலக்கானபோதும் பத்திரிகைத் தேவைக்காக நாவல் பிறந்த கதை என்ற விதத்தில் 'மோக முள்'ளைப் பற்றியும். அதுவும் தவிர்க்க இயலாமல். ஆனால் கதைகள் குறித்துப் பேசியதில்லை. அவரது வாழ்நாளிலேயே முக்கியமான சிறுகதைகள் கொண்ட ஏழு தொகுப்புகளும் வெளிவந்திருந்தன. அவற்றில் 'அக்பர் சாஸ்திரி', 'யாதும் ஊரே', 'பிடி கருணை' ஆகிய மூன்று தொகுப்புகளுக்கு மட்டுமே முன்னுரைக் குறிப்புகளை எழுதியிருக்கிறார். அதுவும் தவிர்க்க முடியாமல். இந்த மூன்று குறிப்புகளிலும் அவர் வலியுறுத்திச் சொல்லும் வாசகம் 'இவையெல்லாம் இலக்கண

சுத்தமான சிறுகதைகள் அல்ல’ என்பது. தனது வாழ்க்கையில் தி. ஜானகிராமன் சொன்ன மாபெரும் பொய் இதுவாக இருக்க வேண்டும் என்று கதைகளை வாசிக்கும் எளிய வாசகனும் புரிந்துகொள்வான். ‘சிறுகதை எழுதுவது எப்படி?’ என்ற கட்டுரையில் ‘தனித் தன்மையும் உணர்ச்சி நிறைவும் தெறிப்பும்’ இருப்பதுதான் சிறுகதை என்று வரையறுக்கிறார். அவரது எந்தக் கதையும் இந்த வரையறையை மீறுவதில்லை. கட்டுரையில் அவர் தொடர்ந்து சொல்லும் கருத்துகள் இவை:

> எந்தக் கலைப்படைப்புக்கும் முழுமையும் ஒருமையும் அவசியம். அவை பிரிக்க முடியாத அம்சங்கள். சிறுகதையில் அவை உயிர்நாடி. ஓர் அனுபவத்தைக் கலைவடிவில் வெளிப்படுத்த சிறுகதையில் இடமும் காலமும் குறுகியவை. எனவே எடுத்துக்கொண்ட விஷயம் உணர்வோ, சிரிப்போ, புன்சிரிப்போ, நகையாடலோ முறுக்கேறிய, துடிப்பான ஒரு கட்டத்தில்தான் இருக்க முடியும். சிறிது நேரத்தில் வெடித்துவிடப் போகிற ஒரு தெறிப்பும், ஓர் அவசரத் தன்மையும் நம்மை ஆட்கொள்ள வேண்டும். தெறிக்கப் போகிறது பட்டுக் கயிறாக இருக்கலாம். எஃகு வடமாக இருக்கலாம். ஆனால் அந்தத் தெறிப்பும் நிரம்பி வழிகிற துடிப்பும் இருக்கத்தான் வேண்டும். இந்தத் தெறிப்பு விஷயத்திற்குத் தகுந்தாற்போல் வேறுபடுவது சகஜம். கதையின் பொருள் சோம்பல், காதல், வீரம், தியாகம், நிராசை, ஏமாற்றம், நம்பிக்கை, பக்தி, உல்லாசம், புதிர் அவிழல் அல்லது இவற்றில் சிலவற்றின் கலவைகளாக இருக்கலாம். அதற்குத் தகுந்தபடி அந்தத் தெறிப்பு பஞ்சின் தெறிப்பாகவோ, பட்டின் தெறிப்பாகவோ, எஃகின் தெறிப்பாகவோ, குண்டு மருந்தின் வெடிப்பாகவோ சத்தம் அதிகமாகவோ குறைந்தோ மௌனமாகவோ மாறுபடும். எனக்கு வேறுமாதிரியாக இந்த அனுபவத்தை விளக்கத் தெரியவில்லை. பல சமயங்களில் சிறுகதையைப் பற்றி நினைக்கும்போது, நூறு அல்லது ஐம்பது கஜ ஓட்டப்பந்தயத்திற்கு ஆயத்தம் செய்துகொள்ளுகிற பரபரப்பும் நிலைகொள்ளாமையும் என்னைக் கவ்விக் கொள்கிறதுண்டு. இது ஒரு மைல் ஓட்டப்பந்தயமல்ல. சைக்கிளில் பல ஊர்கள், வெளிகள், பாலங்கள், சோலைகள், சாலைகள் என்று வெகுதூரம் போகிற பந்தயம் இல்லை. நூறு கஜ ஓட்டத்தில் ஒவ்வோர் அடியும் ஒவ்வோர் அசைவும் முடிவை நோக்கித் துள்ளி ஓடுகிற அடி அசைவு. ஆற அமர,வேடிக்கை

பார்த்துக்கொண்டு செல்லவோ வேகத்தை மாற்றிக்கொள்ளவோ இடமில்லை. சிறுகதையில் சிக்கனம் மிக மிக அவசியம். வளவளப்புக்கு இடமே கிடையாது. வளவளப்பு என்றால் அதிகச்சுமை. ஓடுவது கஷ்டம்.

இந்தக் கருத்துகளின் தூல வடிவமே அவரது சிறுகதைகள் அல்லது கதைகளின் சூக்குமமே இந்தக் கருத்துகள். தெளிவாகவும் திடமாகவும் இப்போது சொல்லும் இந்த வாக்கியத்தைத் தேசலான ரூபத்தில் நேரிடையாக அவரிடம் தயங்கித் தயங்கிச் சொன்னது நினைவுக்கு வருகிறது. தமிழில் மாற்றுச் சிந்தனை கொண்டவர்களின் பொது அமைப்பான இலக்கு உருவாகி நடந்த முதல் கூட்டம். சென்னை வில்லிவாக்கத்தில் 1982ஆம் ஆண்டு ஜனவரி முதலிரண்டு நாட்கள் நடைபெற்றது. கோவையிலிருந்து அதில் கலந்துகொள்ள சென்னை சென்றிருந்தபோது தி. ஜானகிராமனை முதன்முதலாகச் சந்தித்தேன். பெல்ஸ் சாலையில் இருந்த கணையாழி அலுவலகத்தில். அப்போது அவர் கணையாழி யின் கௌரவ ஆசிரியர். காலை ஒன்பதரை மணிக்குத் தொடங்கிய சந்திப்பு நண்பகல் வரை நீண்டது. நண்பர்களான ஆறுமுகமும் கோவை வாணன் என்ற துரையும் உடனிருந்தார்கள். ‘மோக முள்’, ‘அம்மா வந்தாள்’, ‘மரப்பசு’ நாவல்களைப் பற்றித் தொடங்கிய உரையாடல் சிறுகதைகளில் மையங்கொண்டு நின்றது. தமிழ்ச் சிறுகதைகளின் தீவிர வாசகரான நண்பர் ஆறுமுகம் தி. ஜானகிராமனின் பிரசித்தி பெற்ற கதைகளைக் குறித்த சந்தேகங்களையும் மேன்மைகளையும் சொல்லிக்கொண்டிருந்தார். ‘இதெல்லாம் ரொம்ப’ என்று சிரிப்புடனும் மேற்கொண்டு பேச்சைத் தவிர்க்கும் நோக்கத்துடனும் ஜானகிராமன் ஒற்றை வார்த்தை ஆமோதிப்புகளுடனும் கேட்டுக்கொண்டிருந்தார். இடையில் புகுந்து அப்போது வாசிக்கக் கிடைத்திருந்த ஜானகிராமன் தொகுப்புகளில் இடம்பெறாமலிருந்த ‘கடைசி மணி’ கதை எனக்குத் தந்த பரவசத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். பேசி முடியும்வரை கேட்டுக்கொண்டிருந்த ஜானகிராமன் புன்னகையுடன் ‘அது நல்ல கதையா என்ன?’ என்று சந்தேகம் தொனிக்கக் கேட்டார். ‘எழுதுவது எப்படி?’ கட்டுரையில் அவர் சொல்லியிருக்கும் சிறுகதைக்கான இலட்சணங்கள் அந்தக் கதையில் எப்படி வெளிப்படுகின்றன என்பதை அதிகப் பிரசங்கம் செய்துகொண்டிருந்தேன். ‘எழுதியவனுக்குத் தெரியாத ஒன்று வாசகனுக்குப் புலப்பட்டால் அது நல்ல கதைதான். அப்படி ஒரு

இடம் படிக்கிறவனுக்கு இருக்கிறது இல்லையா?'. அவர் அப்போது கேட்ட கேள்விக்கு எனக்கு உடனடியான விடை தெரியவில்லை. இப்போது வெளிச்சமாகப் புலப்படுகிறது. வாசிக்க வாசிக்க அதன் நுண் தளங்கள் வெளிப்படுகின்றன.

பள்ளிக்கூட கெமிஸ்ட்ரி வாத்தியார் ஆராவமுதனுக்கு முப்பத்து நான்கு வருட சர்வீசில் ஒரு நாள் தலைமை ஆசிரியராக இருக்கும் வாய்ப்பு கிடைக்கிறது. ஒருநாள் ஹெட்மாஸ்டராக இருந்தது ஜில்லாவிலேயே நினைவிருக்க வேண்டும் என்பதற்காகத் தன்னுடைய தைரியமின்மையையும் மீறி இரண்டாவது பீரியடோடு பள்ளிக்கு விடுமுறை விடுகிறார். எளிய கதை. ஆனால் கதை சொல்லப்பட்ட விதத்தில் இயல்பாகவே துணைப் பிரதிகள் உள்ளே புகுந்து கொள்கின்றன. நிலவு கொட்டிக் கிடக்கும் இரவில் ஒரு வெள்ளை யானையின் மேலேறி தென்னை மரத்திலிருந்து காய் பறிப்பதாக ஆராவமுது காணும் கனவுடன் தொடங்குகிறது கதை. அது அவரது ரகசிய ஆசையைச் சொல்கிறது. தன்னுடைய அந்தஸ்துக்குக் குறைந்த தகுதியிலிருக்கும் எவருடனும் பேசாத ஓய்வுபெற்ற அதிகாரியான பள்ளிச் செயலாளரைப் பற்றிய சித்தரிப்பில் ஆராவமுதுவின் பயமும் அதிகாரி பற்றிய பார்வையும் வெளிப்படுகிறது. 'ஒரு பெரிய சாய்வு நாற்காலியில் அந்த மனுஷ ஏணி வளைந்து படுத்திருந்தது' என்ற வரியிலேயே இருவரின் குணப் பதிவுகள் விளங்குகின்றன. ஒருநாள் அதிகாரம் கிடைத்த தெம்பு மனைவியை விரட்டுகிறது. 'நீர்தான் இன் சார்ஜாமே இன்னிக்கு' என்று இளப்பமாகக் கேட்கும் சக ஆசிரியர் ஆனைக்கால் கோபாலய்யரிடம் 'ஆமா, தலையெல்லாம் லீவு எடுத்துண்டா, என் மாதிரிக் காலுக்குப் பாரம் வந்து சேர்கிறது' என்று எதிர்ப் பேச்சாளரின் உடற் குறையைச் சுட்டிக் காட்டிக் கேலி செய்கிறது. அடுத்த கணம் கழிவிரக்கத்துடன் வருந்தும்போதே ஆராவமுது திக் விஜயத்தில் வெற்றிபெற்ற சக்கரவர்த்தி போலவும் தன்னை உணர்கிறார். அதைக் கொண்டாடிக்கொள்ளவே விடுமுறையும் அறிவிக்கிறார். மனித மனத்தின் விநோதங்களை வாசகன் முன்னால் பகிரங்கப்படுத்துகிறது கதை. இவ்வளவு நுட்பங்கள் வெளிப்படும் கதை நல்ல கதைதான் என்று அந்தச் சந்திப்பில் ஜானகிராமனிடம் சொல்ல முடியாமல் போயிற்றே என்று இப்போது ஏங்குகிறேன்.

பள்ளிப் பருவத்தில் படித்த 'கடைசி மணி' கதை மனதுக்குள் இத்தனை நீண்ட காலத்துக்குப் பின்பும் கலையாமல் இருக்கத்

தனிப்பட்ட காரணமும் இருக்கிறது. கதை கல்கி தீபாவளி மலரில் வெளிவந்தது. அன்று கைக்குக் கிடைத்ததை வாசித்து மேலும் பசியுடன் தவித்த காலம். அம்மாவிடம் மன்றாடி வாங்கிய காசில் பள்ளி உணவு இடைவேளையில் ஓடிப் போய் முகவரிடமிருந்து மலரை வாங்கி வந்தேன். இடைவேளைக்குப் பிறகு கூடிய பள்ளி ஒரே வகுப்புடன் அன்றைக்கு முடிந்தது. வீடு திரும்பியதும் மலரில் வாசித்த முதல் கதை தி. ஜானகிராமனின் 'கடைசி மணி'தான். கதைச் சம்பவம் அந்த தினத்தின் எதார்த்தமாக இருந்ததை உணர்ந்த நொடியில் தெறித்துப் பரவிய பரவசம் வாழ்வின் பேரனுபவம். ஒருவேளை அந்த ரச வாதத்தின் பேரில்தான் ஜானகிராமன் கதைகளை மதிக்கிறேன்போல. இலக்கியத்தின் விளைவு என்று அன்று தீர்மானிக்கத் தெரியாமலிருந்த இந்த அனுபவம் பின்னர் அநேகமாக அவரது எல்லாக் கதைகளிலும் கிடைத்திருக்கிறது. கலையின் இந்த உயிர்ச் செயலை ஜானகிராமனே தனது ஆகச் சிறந்த கதைகளில் ஒன்றான 'செய்தி'யில் எடுத்துக் காட்டியிருக்கிறார் என்பதும் ஞாபகம் வருகிறது.

தி. ஜானகிராமனின் பெரும்பான்மையான கதைகள் அவரே வகுத்துச் சொல்லும் இலக்கணத்துக்குப் பொருந்துபவைதான். சிலகதைகளில் நூறு சதவீதப் பொருத்தம். சிலவற்றில் சதவீதக் குறைவு. அவருடைய உவமையை மேற்கோளாக வைத்துச் சொன்னால் 'மரத்தின் நிழல் கருக்காகக் கத்தரித்தாற்போல விழுந்தவையும் பூசினாற்போல விழுந்தவையும்'.

கத்தரித்த நிழல்போல விழுந்தவை அவருடைய சிறந்த கதைகள். பூசினாற்போல விழுந்தவை மற்றவை. ஆனால் எந்தக் கதையும் அவரது தனித் தன்மையைக் கொண்டிராதவை அல்ல.

## 5

தி. ஜானகிராமன் படைப்புகள் குறித்த சிந்தனையில் கூறியது கூறலாக மனதுக்குள் வரும் வாசகம் 'அவர் நவீனத்துவர் அல்ல' என்பது. சிறுகதைகளைப் பற்றி யோசிக்கும்போது கூடுதலான அழுத்தத்துடன் இந்த வாசகம் நினைவில் மிளிர்கிறது. அவரது மனப் பாங்கும் படைப்புமுறையும் மரபு சார்ந்தவை. ஆனால் மரபை மீற வேண்டிய தருணங்களில் தன்னிச்சையாகவே அவை விடுதலை பெற்றுவிடுகின்றன. மனித சுதந்திரத்துக்கு முட்டுக்கட்டையாக

இல்லாதவரை மரபை ஏற்றுக்கொள்கிறார். அது தடையாக முன் நிற்கையில் மிக இயல்பாக மீறுகிறார்.

ஜானகிராமனின் வாழ்க்கை சார்ந்தும் படைப்பு சார்ந்தும் இதை விளக்க முடியும். ஜானகிராமன் நினைவுகூரலாக எழுதிய கட்டுரையில் கரிச்சான் குஞ்சு தனி வாழ்க்கைச் சம்பவங்கள் சிலவற்றைச் சொல்லுகிறார். அதில் ஒன்று ஜானகிராமன் சகோதரியின் மறுமணம். 'அவனுடைய இளைய சகோதரி மூத்த ஸகோதரியின் புருஷரையே மணக்க வேண்டிய நிர்ப்பந்தம் நேர்ந்தபோது அவர்கள் குடும்பத்தில் அது பெரிய குழப்பத்தை, அதிர்ச்சியை ஏற்படுத்தியது. கிடந்து பொறுமினான் இவன். தந்தையாரிடம் இருந்த மரியாதையால் அடங்கினான். ஆனால் பிற்பாடு அந்த ஸகோதரிகள் இருவருடைய கணவனாய் இருந்தவர் இறந்த பத்தாவது நாள் கழுத்தில் புடவை போடுவது வேண்டாமென்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்து துடிதுடித்தான். புரோஹிதர் வயதானவர் ஒருவரைத் திட்டியும் விட்டான். அப்போது சமாதானம் செய்யப்போன என்னையும் அடித்துவிட்டான்'. இந்த தார்மீகக் கோபத்தை அவரது முதன்மையான சில கதைகளில் பார்க்கலாம். குறிப்பாக 'சண்பகப் பூ' சிறுகதையில். கணவனை இழந்த பதினெட்டு வயது மனைவி. ஆனால் அந்த இழப்பை அவள் பொருட்படுத்துவதில்லை. சுற்றி இருப்பவர்கள் சுட்டிக் காட்டியும் தன்னை அலங்கரித்துக்கொண்டு நடமாடுகிறாள். உச்சக்கட்டமாகக் கணவனின் தமையனுடன் 'நாணம் பூக்க' வண்டியேறுகிறாள். மரபை மீறிய ஒரு வாழ்க்கைக் கணத்தை விரித்துச் சொல்லுகிறது கதை. இன்று இந்தக் கதைக்குக் காலப் பொருத்தம் இல்லை. ஆனால் கதையின் மையத்துக்குக் காலத்தை மீறிய இசைவு இருக்கிறது. அன்று விதவை மறுமணத்துக்கு வாதிட்ட கதையை ஒரு பெண் தன் வாழ்க்கையைத் தானே தேர்ந்துகொள்ளும் உரிமை சார்ந்த ஒன்றாகப் பார்க்கும்போது சம காலத்தியதாகப் பொருள் படுகிறது. இது அவரது மனப்பான்மையை எடுத்துக் காட்டும். அவரே தன்னை விலக்கப் பட்டவனாகவும் (பிரஷ்டனாக) விலக்கப்பட்டவர்களின் சார்பாளனாகவும் அறிவித்திருக்கிறாரே. 'நல்ல கலை பிரஷ்டர்களிடமிருந்துதான் தோன்றுகிறது' என்று பிரகடனமும் செய்திருக்கிறாரே.

சிறுகதைகளின் வடிவத்திலும் கூறுமுறையிலும் ஜானகிராமன் நவீனத்துவத்தின் இயல்புகளைக் கையாள மறுத்தவர். எளிமையும்

நேரடித்தன்மையும் கொண்டவை அவரது கதைகள். கச்சிதமானவையாக இருக்கும் அதேநேரத்தில் உள் விரிவுகள் கொண்டவை. அவரைச் செவ்வியல் கதைஞர் என்று வகைப்படுத்த இதுவே காரணம். ஏறத்தாழ ஒரே மாதிரியான வடிவத்திலேயே கதைகளை எழுதியிருக்கிறார். புதுமை என்றோ நவீனம் என்றோ சொல்ல முடியாத செவ்வியல் வடிவமே அவற்றில் காணக் கிடைப்பவை. காலத்தின் நகர்வில் களிம்பேறிப் போகும் செவ்வியல் அல்ல; மாறாக பழைய இலக்கியங்களில் தென்படும் சிரஞ்சீவிப் புதுமை கொண்டவை. உத்திகள் மூலம் கதைகளை முன்வைப்பது அவருக்கு உவப்பில்லாத செயல். பூரிதநிலையில் இருக்கும் அவரது படைப்பு மனம் அவற்றைப் புறக்கணிக்கிறது. சமயங்களில் அவற்றைக் கேலியும் செய்கிறது. 'கருங்கடலும் கலைக் கடலும்' என்ற பயண நூலில் அதி நவீனரான பிரான்ஸ் காஃப்காவின் கதைகளைக் குறித்து வெளிப்படுத்தும் கிண்டலும் நவீன ஓவியங்கள் பற்றிய அணுகுமுறையும் இந்த செவ்வியல் மனதின் நிராகரிப்புகள்தாம்.

நூற்றுச் சொச்சம் வரும் கதைகளில் வித்தியாசமான கூறுமுறைகளில் எழுதப்பட்டவை பத்துக்கும் குறைவே. தன்மைக் கூற்றிலும் படர்க்கைக் கூற்றிலுமான நேரடியான கதையாடல் கொண்டவை, துணைப் பாத்திரங்கள் மூலம் முன்வைக்கப்படுபவை, உரையாடல் மூலம் நிகழ்த்தப்படுபவை, கடிதங்கள் மூலமாக விரிபவை என்ற நான்கு முறைகளிலேயே பெரும்பான்மையான கதைகள் அமைந்திருக்கின்றன. விமர்சன அடிப்படையில் வரையறுத்தால் ஜானகிராமனின் கதைகள் அவரே உருவாக்கிய சூத்திரங்களுக்கு உட்பட்டவை. 'ஆரம்பம், இடை, முடிவு ஆகியவை தெளிவாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை' என்பது அவரது கருத்து. அதை ஏறத்தாழ எல்லாக் கதைகளிலும் பின்பற்றியிருக்கிறார். இடைப் பகுதியில் ஆரம்பித்து முன்னும் பின்னுமாகச் செல்லும் கதையாடலையே அதிகமாகக் காணலாம். ஒருவேளை இது அவரது இசை ரசனையின் தூண்டுதலாக இருக்கலாம். அனுபல்லவியிலிருந்தோ சரணத்திலிருந்தோ தொடங்குவதன் மூலம் கேட்பவனுடன் சட்டென்று ஒன்றிவிடும் இசைக் கலைஞனின் அநாயாசத் திறனுடன் இதை ஒப்பிட முடியும். விஸ்தாரமான ஆலாபனையோ ராகத்தை இடை நிறுத்தி மேற்கொள்ளும் ஸ்வரப் பிரஸ்தாரங்களோ இல்லாமல் கீர்த்தனையை மட்டுமே பாடுவது

போன்ற செயலைத்தான் கதையில் ஜானகிராமன் கையாண்டது போலப் படுகிறது. ஒரு கீர்த்தனைக்கு அமைந்திருக்கும் கச்சிதவடிவத்தை அவருடைய கதைக்குப் பொருத்தலாம். அது ஒரு திட்டமிட்ட வடிவம். சூத்திரப்படியான வடிவம். அது மறைமுகமாக செவ்வியல் முழுமையின் அடையாளம் கூட. ஜானகிராமனின் வீச்சுக் குறைவான சிறுகதைகூட வடிவ ஒருமை கொண்டிருப்பது இந்தச் செவ்வியல்தன்மையால்தான். அவரது கதைகள் எதுவும் பலமுறை திருத்தி எழுதப்பட்டவையாகத் தோன்றுவதில்லை. எடுத்த எடுப்பிலேயே முழுமை கூடிய ஒரு உருவம் அமையப் பெற்றவையாகவே தெரிகின்றன. அவற்றில் மூளியானவை குறைவுதான்.

## 6

செவ்வியல்தன்மை கொண்டது ஜானகிராமனின் படைப்புகள் என்பதை நிறுவ உதவும் பெரும் சான்று படைப்புகளில் அவர் வெளிப்படுத்தும் உலகம். மிகப் பரந்தது அந்த உலகம். வெவ்வேறு நிலக் காட்சிகள் கொண்டது. அவருடைய ஆக துயரமான கதைகளில்கூட அந்த உலகம் பிரகாசமானதாகவே இருக்கிறது. எடுத்துக்காட்டாக இரண்டு கதைகளை ஒப்பிடலாம். புதுமைப் பித்தனின் மகத்தான சிறுகதையான ‘செல்லம்மாள்’; தி. ஜானகிராமனின் குறிப்பிடத்தகுந்த கதையான ‘வேண்டாம் பூசனி’. இரண்டும் வெவ்வேறு கதை நிகழ்வுகள் கொண்டவை. ஆனால் மரணத்தின் பின்புலத்தில் நிகழ்பவை. ‘செல்லம்மாளுக்கு அப்போதுதான் மூச்சு ஒடுங்கியது’ என்ற மரண அறிவிப்புடன் முதல் கதை தொடங்குகிறது. ‘பாட்டிக்குக் கைகால்கள் எல்லாம் வீங்கிவிட்டன. ரத்தம் இல்லாத குறைதான்’ என்ற மரணத்துக்குக் காத்திருக்கும் அறிகுறியுடன் இரண்டாவது கதை ஆரம்பமாகி பாட்டியின் சாவில் முடிகிறது. இரண்டிலும் சித்தரிக்கப்படும் பின்னணி மரணத்தையும் அதையொட்டிய நினைவுகளையும் சார்ந்தவைதாம். ஆனால் புதுமைப்பித்தனின் கை அந்தப் பின்னணியை இருளின் வர்ணத்தில் தீட்டிக் காட்டும்போது ஜானகிராமன் அதை வெளிச்சத்தின் நிறத்தில் வரைந்து காட்டுகிறார்.

இந்த அவதானிப்பு தி. ஜானகிராமன் கதைகளில் மரணம் சித்தரிக்கப்படும் பொது அவதானிப்புக்கு இட்டுச் செல்கிறது. ‘செண்பகப் பூ’, ‘நானும் எம்டனும்’, ‘அக்பர் சாஸ்திரி’, ‘பரதேசி

வந்தான்’, ‘வெயில்’, ‘கோபுர விளக்கு’, ‘அத்துவின் முடிவு’ ஆகிய கதைகளில் மரணம் முக்கிய இடம்பெறுகிறது. ஆனால் அந்த மரணங்கள் அச்சுறுத்துபவையாகச் சித்தரிக்கப்படுவதில்லை. ஒரு பார்வையாளனின் வேடிக்கைக் கோணத்திலோ, குழந்தையின் பராக்குப் பார்க்கும் போக்கிலோ, கோமாளியின் நையாண்டியாகவோ, தவிர்க்க முடியாத சங்கதி என்ற பெரும் போக்குடனோதான் இடம்பெறுகின்றன. மரண நிகழ்வை மிக இயல்பான ஒன்றாகவும் சற்றுக் கவித்துவமானதாகவுமே அவர் குறிப்பிடுகிறார். ‘டாக்டர் உதவியில்லாமலே அக்பர் சாஸ்திரி மனிதன் செய்கிற கடைசிக் காரியத்தையும் செய்து விட்டார்’ (அக்பர் சாஸ்திரி), ‘அம்மாவின் காதில் ஒன்றும் விழவில்லை. அம்மா கைலாசத்தில் சிவனாரின் மடியில் தலைவைத்து உறங்கிக்கொண்டிருந்தாள்’ (வேண்டாம் பூசனி) -ஆகிய சித்தரிப்புகள் இதற்கு உதாரணங்கள். அவரது அக்கறையும் பரிவும் வாழ்வின் மீதுதான்; அதன் விநோதங்கள் மீதுதான். அதை நடத்தும் மனிதர்கள் மீதுதான் என்பதையே இது வலியுறுத்துவதாகப் படுகிறது. அவரது கதையுலகம் மனிதர்களால் நிரம்பி இருப்பதும் இதற்கு அத்தாட்சி.

இது இன்னொரு உண்மையையும் வெளிப்படுத்துகிறது. தி. ஜானகிராமனின் படைப்புகளைப் பற்றிய ஒரு விமர்சனம், அவர் பிராமணக் கதைமாந்தர்களையே அதிகம் படைத்திருக்கிறார் என்பது. ‘எனக்கு அம்மாமிகளைப் பற்றிதான் அதிகம் தெரியும். ஆத்தாள்களைப் பற்றித் தெரியாது. தெரிந்ததைத்தானே எழுத முடியும்’ என்பதாக அந்தத் தூற்றுதலுக்கு ஜானகிராமன் மெனக்கெட்டுப் பதிலும் அளித்திருக்கிறார். மொத்தமாகக் கதைகளைப் பரிசீலிக்கும்போது அவருடைய ஒப்புதல் வாக்குமூலம் பொருத்தமற்றதாகத் தெரிகிறது. அம்மாஞ்சிகளையும் அம்மாமிகளையும் பாத்திரங்களாக வைத்து எழுதியதை விடவும் அய்யாக்களையும் ஆத்தாள்களையும் கதை மாந்தராக்கி எழுதியவையே அதிகம். இன்று அந்தக் கதைகளை எழுத நேரிட்டால் அவரைக் குறிவைக்கக் காத்திருக்கும் ஆபத்துகளை யோசிக்கும்போது அந்தக் கலைஞனின் துணிவு வியக்க வைக்கிறது. கலைக்கான எதார்த்தங்கள்தாம் சார்பு கொண்டவை. கலையின் செயல்பாடு சார்புகளை மீறியது என்று சொல்லலாமா? எல்லாப் பெருங் கலைஞர்களின் படைப்புகளைப் போலவே ஜானகிராமன் படைப்புகளும் ‘சொல்லலாம்’ என்றே ஆமோதிக்கின்றன.

# 7

தமிழ்ச் சிறுகதைகளில் மிகமிக அதிகக் கதாபாத்திரங்கள் வரும் கதைகள் தி. ஜானகிராமனுடையது என்று படுகிறது. இதைச் சொல்லும் போதே ஒற்றைப் பாத்திரத்தை வைத்து புதுமைப்பித்தன் எழுதியிருக்கும் 'தெரு விளக்கு' நினைவுக்கு வருகிறது. அப்படியான செய்கையை ஜானகிராமனிடம் பார்ப்பது அசாத்தியம். முதன்மையான இரண்டோ மூன்றோ பாத்திரங்கள் கொண்ட கதையில்கூட துணைப்பாத்திரங்களின் எண்ணிக்கை அதிகம். பெரும்பாலும் துணைப்பாத்திரங்களே கதையை விரிக்க உதவுபவையாக அமைகின்றன. 'கொட்டு மேளம்' கதை டாக்டரை மையமாகக் கொண்டது. உலகியல் சூதுகள் தெரிந்தும் அதில் ஈடுபட முடியாத மனித மனத்தின் மேன்மையைச் சொல்லுகிறது கதை. டாக்டர் துரைசாமி, அவரை மணக்கவிருக்கும் பார்வதி, கம்பவுண்டர் ஜீவரத்தினம் ஆகிய மூன்று புள்ளிகளைச் சேர்த்து உருவாகும் கதையைத் துணைப் பாத்திரங்களே முழுமையாக்குகின்றன. ஐராவதம் முதலியார், மாரியப்பப் பிள்ளை என்று பருண்மையாகக் கதையின் நிகழ் காலத்தில் வரும் துணைப்பாத்திரங்களும் அண்ணன், அண்ணி, அம்மா, கர்னல் சுந்தரத் தாண்டவன் என்று குறிப்பாகச் சொல்லப்படும் உப பாத்திரங்களும் சேர்ந்தே கதையை முழுமையாக்குகின்றன. இத்தனைப் பாத்திரங்களும் இத்தனைக் கிளை பிரிதல்களும் வேண்டுமா என்று கேட்கவிடாமல் இணைவது ஜானகிராமனின் உத்தியால்; அல்லது சூத்திரத்தால். இந்தத் துணைப்பாத்திர சகாயம் இல்லாமல் கதை இல்லை. திட்டமிட்டு ஒரு கதையை உருவாக்குவதல்ல; மாறாகத் தன் முன் காட்சியளிக்கும் பரந்த வாழ்க்கையின் ஒரு விள்ளலைப் பிரித்தெடுத்துக் காண்பிப்பதே அவரது கலை.

கதைகளில் அங்கம் வகிக்கும் பாத்திரங்கள் வெவ்வேறு வகையானவர்கள். காதலர்கள், கணவர்கள், பிறன்மனை நயப்பவர்கள், தேவதைகள், பிசாசுகள், குழந்தைகள், அரசர்கள், துறவிகள், பரதேசிகள், தாசிகள், இசைக்கலைஞர்கள், விமர்சகர்கள், வாத்தியார்கள், மாணவர்கள், வண்டியோட்டிகள், தொழு நோயாளிகள், பிச்சைக்காரர்கள், அரசு அதிகாரிகள், கன்னிகள், விதவைகள், அம்மாக்கள், அண்ணிகள், சகோதர சகோதரிகள், மாமியார்கள், மைத்துனர்கள், அர்ச்சகர்கள், உஞ்சவிருத்திக்காரர்கள்,

நடன மணிகள், சினிமா நடிகைகள், டாக்டர்கள், வைத்தியர்கள், பக்தர்கள், தெய்வ தூஷணையாளர்கள், பக்தர்கள், ஆஷாடபூதிகள், கிழவர்கள், கிழவிகள், பகுத்தறிவுச் செம்மல்கள், கடன்காரர்கள், வாங்கிய கடனைத் தர வக்கில்லாதவர்கள், ஏமாற்றுப் பேர்வழிகள், தரகர்கள், ஜமீன்தார்கள் என்று வாழ்வின் சகல மனிதர்களும் நடமாடும் பரந்த முற்றம் ஜானகிராமனின் கதைப் பரப்பு. தட்டச்சு எந்திரமும் பஸ்ஸும் கிளியும் குதிரையும்கூட அந்த முற்றத்தில் நடமாடுகின்றன. இவர்கள் வாழ்வின் பொருட்டாகச் செய்யும் எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஒரு பெருங்காட்சியாக ஜானகிராமன் கதையுலகின் இயக்கம் விரிவு பெறுகிறது.

பெரும்பான்மையான கதைகள் அவரது சொந்த நிலமான தஞ்சாவூரைக் களமாகக் கொண்டவை. பெரிதும் அந்த மண்ணின் மொழியைப் பேசுபவை. அந்த நிலத்தின் இயற்கையையும் கிராமங்களையும் நகரங்களையும் சித்தரிப்பவை. அதைப் புவியியல் சித்தரிப்பாக அல்லாமல் மானுட வயப்படுத்தப்பட்ட நிலக் காட்சியாகவே ஜானகிராமன் காட்டுகிறார். அந்த மண்ணின் பிரத்தியேக குணத்தைச் சொல்லும்போதே அதைக் கடந்த இன்னொரு இடத்துக்கும் பொருந்தும் வகையில் உருவாக்குகிறார். காமமும் ஏமாற்றும் பரிவும் காதலும் மண்ணின் குணம் என்பதுபோலவே மானுடத்தின் குணம் என்பது அவரது எண்ணம். ‘கடன் தீர்ந்தது’ சிறுகதையில் தன்னிடம் வாங்கிய இருபதினாயிரம் ரூபாய்க் கடனைத் திரும்பத் தராத ராமதாஸிடம் வெறும் இரண்டு அணாவை வசூல் செய்துவிட்டுக் கடன் தீர்ந்தது என்று சொல்கிறார் சுந்தர தேசிகர். நாடுவிட்டு நாடுவந்த விருந்தாளியைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பின் இடையே தனக்கு நேர்ந்த பேரிழப்பைச் சொல்லாமல் அவரை உபசரிக்கிறார் ஜப்பானியரான யோஷிகி. இந்த இரண்டு எளிய மனிதர்களின் பெருந்தன்மையைச் சொல்லும் கதைகள் முறையே தஞ்சாவூர் கிராமத்திலும் ஜப்பானிய கோபே நகரத்திலும் நடக்கின்றன என்பது தற்செயலானது. இடம் மாறியிருந்தாலும் ஜானகிராமன் இதே பரிவுணர்வைத்தான் சொல்லியிருக்க முடியும். மனிதர்கள்மீது காட்டும் வாஞ்சையே அவரது கலையின் மையம். அந்த அளவில் இலட்சியவாத எழுத்தின் பிரதிநிதி. எனினும் எதார்த்தத்தை விட்டு விலகாதது அந்த இலட்சியவாதம்.

## 8

தி. ஜானகிராமன் கதைகளின் தனித்துவம் அதில் வரும் உரையாடல்கள். பாத்திரங்களின் கூற்றாக நிகழும் உரையாடலின் மூலமே அவர்களின் குணங்களையும் கதையின் உருவத்தையும் கொண்டு வந்துவிடுகிறார். ரசிகரும் ரசிகையும் கதை உரையாடலாகவே அமைந்தது. அந்தப் போக்கிலேயே தானில்லாமல் தியாகராஜ உற்சவமில்லை என்று அகங்காரம் கொள்ளும் பாடகர் மார்க்கண்டமும் ‘இப்பத்தான் சமயம் வாச்சுது எனக்கு’ என்று இடித்துரைக்கும் பக்க வாத்தியக்காரரும் ‘தியாகய்யரைவிட நான் நல்லாப் பாடறேனாம், இந்த மாதிரி உளறிகிட்டு அலையாதே’ என்று பாடகரை விரட்டும் தாசி ஞானாம்பாளும் குரல்களிலிருந்து உயிர்த்துத் திட வடிவம் பெறுகிறார்கள். வேறு சில உரையாடல்கள் பாத்திரங்களின் குணாம்சத்தைப் பகிரங்கப்படுத்துகின்றன. அவரது ஆகச் சிறந்த கதையான ‘சிலிர்ப்’பில் வரும் உரையாடல் மொத்தக் கதாபாத்திரங்களின் குணாம்சத்தையும் வெளிப்படுத்துகிறது. ‘சத்தியமா?’ கதையின் உரையாடல் போக்கே முழுமையாகக் கதையையும் அதன் ஆழத்தையும் எடுத்துக் காட்டிவிடுகிறது. இதே பணியை அவரது உவமைகளும் மேற்கொள்ளுகின்றன. ‘பழைய பேப்பர்க்காரன் தராசு தெய்வீகக் கொல்லன் கைவேலை. ஆனையை வைத்தால் ஆறு பலம் காட்டும். ஆறு மாசத் தினசரிக் காகிதம் எந்த மூலை?’ என்ற ‘கோதாவரிக் குண்டு’ கதையின் ஆரம்ப வரிகள் சுவாரசியமானவை. ஒருவகையில் கதையைத் திறக்கும் கருவியும் அந்த வரிகளே. பழைய பேப்பரை விற்று மாதாந்திர பட்ஜெட்டைச் சரிக்கட்டும் ஆளிடம் மனைவி வெட்டிச் செலவுக்காகப் பாத்திரத்தை அடகு வைப்பதையும் அதை மிக இயல்பாக எடுத்துக்கொள்ளும் கணவனையும் மையப்படுத்தும் கதைக்கு ஆரம்ப வரிகளின் தரித்திரநிலை விளக்கம் பொருத்தமானதுதானே.

## 9

ஆண் பெண் உறவில் எழும் பிரச்சனைகளையும் காமத்தையும் அதிக அளவில் ஜானகிராமன் எழுதியதாக ஒரு கருத்து நிலவுகிறது. மொத்தக் கதைகளை வைத்துப் பார்த்தால் இது போன்ற கதைகள் பத்து விழுக்காடுகூட இல்லை. ‘சண்பகப் பூ’, ‘பசி ஆறிற்று’, ‘வேறு வழியில்லை’, ‘மணம்’, ‘அதிர்வு’, ‘தூரப் பிரயாணம்‘, ‘குளிர் ஜுரம்’, ‘பாஷாங்க ராகம்’, ‘மனநாக்கு’, ‘தவம்’, ‘யதுநாத்தின் குரு பக்தி’,

‘ராவணன் காதல்’ ஆகிய கதைகளில் மட்டுமே பாலுறவுச் சிக்கல்களும் காமத் தத்தளிப்பும் சித்திரிக்கப்படுகின்றன. இதே கதைகளிலும் இன்னொரு உப பிரதியை வாசிக்க முடியும். உதாரணமாக, ‘சண்பகப் பூ’ கதையில் பெண்ணின் சுதந்திரத்தையும் சமூகத்தின் பொருமலையும். மணத்தில் பெண்ணின் உடல்மீது நிகழும் தந்திரமான சுரண்டலையும் அவளது அருவருப்பையும் தவம் கதையில் காமத்தின் வியர்த்தத்தையும் ஆணின் முட்டாள்தனத்தையும் தூரப் பிரயாணத்தில் ஆணின் அத்துமீறலையும் அவளது சுய தேர்வையும் வாசிக்கலாம்.

‘ஜானகிராமனின் மகோன்னத பாத்திரங்கள் பெண்கள்தாம்’ என்று அசோகமித்திரன் குறிப்பிடுகிறார். அது துல்லியமான கணிப்பு. குழந்தை முதல் கிழவிவரையான எல்லாப் பருவங்களிலுமாக அவரது பெண் பாத்திரங்கள் இருக்கிறார்கள். அவர்களை வியந்து பாராட்டுவதில் அவருக்கு அலுப்பே ஏற்படுவதில்லை. பல சமயங்களில் அவர்கள் மானுடப் பிறவிகள்தானா என்று பரவசப்பட்டுக் கேட்கிறார். அப்படிப் பரவசம் மேலிடும்போது அவரது வர்ணனைகள் கவிதையின் சாயலை அடைகின்றன. நெருப்பின் வெவ்வெறு நிலைகளுடன் சுடர், ஜுவாலை, குத்து விளக்கு என்றுதான் வர்ணிக்கப்படுகிறார்கள். சிருஷ்டியின் வெம்மை அவர்களிடமே இருக்கிறது என்பதனாலாக இருக்கலாம் இந்த வியப்பு. சிருஷ்டியின் குளிர்ச்சியை அவரது குழந்தைப் பாத்திரங்கள் பரப்புகின்றன. அதன் மகத்தான உதாரணம் ‘சிலிர்ப்பு’. பெண்கள் மீதான அவருடைய வியப்பு கவித்துவமானது என்றால் பிற பாத்திரங்களுடனான அணுகுமுறை எதார்த்தம் சார்ந்தது. நடைமுறை உலகின் எல்லா மனிதர்களும் எல்லா மனித நடவடிக்கைகளும் கதைகளில் இடம் பெறுகின்றன. கதை மாந்தர் எல்லாரும் உணர்வு சார்ந்தே முன்னிருத்தப் படுகிறார்கள். மனிதனின் காமம் (தூரப் பிரயாணம்). ஏமாற்று (கங்கா ஸ்நானம்), வன்மம் (பாயசம்), தனிமை (கிழவரைப் பற்றி ஒரு கனவு), அற்பத்தனம் (விரல்), பரிவு (கோபுர விளக்கு), கருணை (சிலிர்ப்பு), கழிவிரக்கம் (சாப்பாடு போட்டு நாற்பது ரூபாய்), அரசியல் சூது (மரமும் செடியும்), குற்ற உணர்வு (கண்டாமணி), வஞ்சம் (அத்துவின் முடிவு) என்று மேலோட்டமாக அட்டவணைப்படுத்தலாம். ஆனால் அது அவரது கதைக் கலைக்குச் செய்யும் அநீதி. ஏனெனில் கதைகள் வெறும் கதைகள் மட்டுமல்ல.

மனிதர்களின் களிப்பையும் துயரத்தையும் வெற்றியையும்

வீழ்ச்சியையும் தடுமாற்றத்தையும் திடத்தையும் மதிப்பீடுகளையும் பிறழ்வுகளையும் ஏறத்தாழ சமமாகவே பார்க்கும் பார்வையில் வெளிப்பட்டவை ஜானகிராமன் கதைகள். வாங்கிய இருபதாயிரம் ரூபாய்க் கடனைத் திருப்ப மறுப்பவனிடம் இரண்டணா வாங்கிக்கொண்டு கடன் தீர்ந்தது, என்று சமாதானம் கொள்ளும் சுந்தர தேசிகரும் (கடன் தீர்ந்தது) மருமகன் எண்ணிக்கொடுத்த மூவாயிரத்து நாற்பத்தேழு ரூபாயை மறைத்து வைத்துவிட்டுப் பணத்தைக் கொடுக்கவில்லை என்று வழக்கு தொடுக்கும் துரையப்பாவும் (கங்கா ஸ்நானம்) ஜானகிராமனின் கதைப் பார்வையில் சமமானவர்களாகவே இருக்கிறார்கள். சூழ்நிலையும் உணர்வும் மனிதர்களை ஆட்டிவைக்கும் விசித்திரத்தைப் பார்க்கும் பார்வை அது. “ஒரு சிறுவன்போல நான் அன்றாட உலகத்தைப் பார்த்து வியக்கிறேன். சிரிக்கிறேன். பொருமுகிறேன், நெகிழ்கிறேன், முஷ்டியை உயர்த்துகிறேன், பிணங்குகிறேன், ஒதுங்குகிறேன், சில சமயம் கூச்சல் போடுகிறேன்” இந்தச் சேஷ்டைகள்தாம் தனது கதைகள் என்கிறார் ஜானகிராமன். சொன்ன ஒவ்வொரு சேஷ்டைக்கும் சான்றாகும் வகையில் கதைகளை வரிசைப்படுத்திவிட்டால் அவரது படைப்பு ரகசியத்தையும் செய்தியையும் கண்டடைந்துவிடலாம். ஆனால் அது அவ்வளவு எளிதல்ல.

## 10

இன்றைய தேதிக்கு தி. ஜானகிராமன் சிறுகதைகள் காலப் பழக்கம் கொண்டவை. அவற்றில் கையாளப்படும் விஷயங்கள் இன்று காலக்கெடு தீர்ந்தவை. இடம்பெறும் நிலக் காட்சிகள் மாறியிருக்கின்றன. பின்புலங்கள் மாறியிருக்கின்றன. மனிதர்களின் தோற்றங்களும் பழக்கங்களும் மதிப்பீடுகளும் மாறியிருக்கின்றன. கதைகளில் செயல்பட்ட உத்திகளும் கூறுமுறைகளும் மாறியிருக்கின்றன. ஆனால் இந்தக் கதைகள் இன்றைய வாசிப்பிலும் பழையனவாக மாறிவிடவில்லை. ஏனெனில் அவை மனிதப் படைப்பின் ஆதார குணங்களின் மீது உருவாக்கப்பட்டவை. என்றென்றைக்குமான நித்தியப் புதுமையைக் கொண்டிருப்பவை. இந்தத் தொகுப்பிலிருந்து அப்படியான பல கதைகளை எடுத்துக் காட்ட முடியும். ஆனால் அந்தப் பட்டியல் வாசிப்பவருக்குத் தகுந்தவாறு மாற்றங்களைக் கொண்டிருக்கும். ஒரு வாசகனாக,

நாவலாசிரியர் தி. ஜானகிராமனுக்கு என் வாசிப்பில் உயர்வான இடம் உண்டு. அதைவிடவும் ஓர் அங்குலம் உயர்ந்த இடத்தையாவது சிறுகதையாசிரியர் ஜானகிராமனுக்கு அளிக்கவே விரும்புவேன். அப்படிச் செய்வதற்கான சான்று அட்டவணையில் பின்வரும் கதைகள் நிச்சயம் இருக்கும். கொட்டு மேளம், சண்பகப் பூ, ரசிகரும் ரசிகையும், பசி ஆறிற்று, நானும் எம்டனும், கழுகு, தவம், சிலிர்ப்பு, சிவப்பு ரிக் ஷா, கடன் தீர்ந்தது, பரதேசி வந்தான், சத்தியமா, செய்தி, தூரப் பிரயாணம், அக்பர் சாஸ்திரி, துணை, குளிர், அடுத்த . . ., கோபுர விளக்கு, கண்டாமணி, யோஷிகி, மணம், யதுநாத்தின் குரு பக்தி, வெயில், பிடி கருணை, பாயசம், கங்கா ஸ்நானம், தீர்மானம், முள் முடி, இசைப் பயிற்சி, கோதாவரிக் குண்டு, சாப்பாடு போட்டு நாற்பது ரூபாய், சுளிப்பு, கடைசி மணி, அத்துவின் முடிவு, பாஷாங்க ராகம்.

‘கொட்டு மேளம்’ தொகுப்பை முன்வைத்துப் பேசிய க.நா.சு. தி. ஜானகிராமன் கதைகள் வாசிக்கக் கிடைத்த வாசகர்கள் பாக்கியசாலிகள் என்றார் 1965இல் இலக்கிய வட்டம் இதழில். தி.ஜானகிராமனின் தேர்ந்தெடுத்த கதைகளை முன்னிலைப்படுத்திய பிரபஞ்சன் அதே சொற்களை வழி மொழிந்தார் 2005இல் ‘சிலிர்ப்பு’ தொகுதி முன்னுரையில் ஐம்பது ஆண்டுகளுக்கும் பத்து ஆண்டுகளுக்கும் முற்பட்ட அதே வாசகங்களையே நானும் வலியுறுத்த விரும்புகிறேன். இது கலையின் அருமையா, தி.ஜா.வின் பெருமையா? அல்லது இரண்டுக்குமான மரியாதையா?

**சுகுமாரன்**

திருவனந்தபுரம்

25 டிசம்பர் 2014

பதிப்புரை:

# ஆர்வப் பதிப்பு

*நவீன இலக்கிய முன்னோடிகளின் எழுத்துகளை முழுத் தொகுப்புகளாகவும் செம்பதிப்புகளாகவும் காலச்சுவடு பதிப்பகம் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. ஜி. நாகராஜன் படைப்புகள் (சி. மோகன், 1997), புதுமைப்பித்தன் கதைகள் (ஆ.இரா. வேங்கடாசலபதி, 2000), ஆத்மாநாம் படைப்புகள் (பிரம்மராஜன், 2006), மு. தளையசிங்கம் படைப்புகள் (மு. பொன்னம்பலம், 2006), சுந்தர ராமசாமி சிறுகதைகள் (2006), கிருஷ்ணன் நம்பி ஆக்கங்கள் (ராஜ மார்த்தாண்டன், 2009), மௌனி படைப்புகள் (சுகுமாரன், 2010), கு. அழகிரிசாமி சிறுகதைகள் (பழ. அதியமான், 2011), கு.ப.ரா. சிறுகதைகள் (பெருமாள்முருகன், 2013) என்று தொடரும் வரிசையில் புதுச் சேர்க்கையே தி. ஜானகிராமன் சிறுகதைகள் - முழுத் தொகுப்பு.*

*தி. ஜானகிராமனின் படைப்புகள், வாழ்க்கை வரலாறு, படைப்புகள் பற்றிய மதிப்பீட்டு நூல் ஆகியவற்றை உருவாக்கக் காலச்சுவடு பதிப்பகம் ஏற்கனவே திட்டமிட்டிருந்தது. திட்டத்தின் முதற் கட்டமாக தி. ஜா.வின் கதைகளிலிருந்து பிரபஞ்சன் தேர்ந்தெடுத்துத் தொகுத்த கதைகளின் தொகுப்பு - சிலிர்ப்பு (2006) வெளியானது. வெவ்வேறு காரணங்களால் திட்டத்தின் அடுத்த கட்டங்கள் செயலாக்கம் பெறவில்லை. எனினும் அவரது படைப்புகள் பலவும் காலச்சுவடு பதிப்புகளாக வெளிவந்திருக்கின்றன. 'அம்மா வந்தாள்', 'மோக முள்' நாவல்கள் காலச்சுவடு நவீனத் தமிழ் கிளாசிக் வரிசையிலும், 'கொட்டு மேளம்' தொகுப்பு முதல் சிறுகதை வரிசையிலும் அடுத்தடுத்து வெளிவந்திருக்கின்றன. பயண நூலான 'நடந்தாய் வாழி காவேரி'யும் 'செம்பருத்தி'யும் புதிய பதிப்புகளைக் கண்டிருக்கின்றன. அந்த வரிசையிலேயே இந்த முழுத் தொகுப்பும் வெளியாகிறது.*

*நவீன இலக்கியப் படைப்பாளிகளில் இன்றும் வாசகர்களால் விருப்பத்துடன் தேடப்படுபவர்களில் தி. ஜானகிராமனும் ஒருவர். அவரது கதைகள் ஆர்வத்துடன் வாசிக்கப்படுகின்றன. பரவலாகவும்*

நுட்பமாகவும் விவாதிக்கப்படுகின்றன. அவரது கதைத் தொகுப்புகள் இப்போதும் வாசகனுக்குக் கிடைப்பவையாகவே இருக்கின்றன. தொடர்ந்து புதிய பதிப்புகளும் வெளியாகின்றன. அவரது படைப்புகள் இரண்டு பெருந்தொகுதிகளாகக் கிடைக்கின்றன. இந்த நிலையில் அவரது கதைகளைத் தொகுத்துப் புதிய பதிப்பாக வெளியிடுவதற்கான தேவை என்ன என்ற கேள்வி எழுவது இயல்பு. அவரது படைப்புகள் எளிதில் வாசிக்கக் கிடைக்கின்றன என்பது உண்மை. ஆனால் அவை வாசக ஆர்வத்தைக் கிளர்த்தும் வகையிலோ படைப்பாளியின் கலைக்கு மேன்மைசேர்க்கும் விதத்திலோ அமைந்தவை அல்ல. தி. ஜானகிராமனின் தீவிர வாசகனாக, அவர் பெயரில் வெளியாகும் எந்த நூலைப் பார்க்கும்போதும் ஏற்படும் ஆதங்கத்தைத் தவிர்க்க முடியாமல் உணர்ந்திருக்கிறேன். இவ்வளவு மகத்தான படைப்பு இன்னும் நேர்த்தியான வடிவில் உருவாக்கப்பட்டிருக்கலாகாதா? பார்வையை இடறாத எழுத்துருக்கள் இருந்திருக்கக் கூடாதா? தரமான தாளாகப் போட்டிருக்கக் கூடாதா? திருத்தமாக அச்சிடப்பட்டிருக்க இயலாதா? பொருத்தமான அட்டைப்படம் போட்டிருக்க முடியாதா? இந்தக் கேள்விகள் தொடர்ந்து எழுந்திருக்கின்றன. சரி, வாசிக்கப் புத்தகமாகக் கிடைக்கிறதே என்று ஆறுதல் சொல்லிக்கொண்டாலும் தரமான வேறு புத்தகப் பதிப்புகளைப் பார்க்கும்போது கேள்விகள் புத்துயிர் பெற்று முனகுவதைத் தடுக்க முடிந்ததில்லை.

பதிப்பிக்கப்பட்ட புத்தகம் ஒரு வணிகப் பண்டம் மட்டுமல்ல, ஒரு கலைப் பொருளும் காலங்கடந்து நிற்கும் பண்பாட்டு ஆவணமும்கூட என்ற எண்ணத்திலிருந்து இந்தக் கேள்விகள் முளைத்திருக்கலாம். என் விருப்பத்துக்குரிய எழுத்தாளர்களின் நூல்களை அப்படிப் பார்க்கக் கிடைத்ததில்தான் இந்தக் கேள்விகள் முளைவிட்டிருந்தன. தமிழில் சிற்றிதழ்களின் அறிமுகமும் சிறு பதிப்பாளர்களின் கலாபூர்வமான பதிப்புத் துறை முயற்சிகளும் இந்தக் கேள்விகளை வலுப்படுத்தின. அச்சுத் தொழிலில் ஏற்பட்டிருக்கும் தொழில்நுட்ப வளர்ச்சியும் பதிப்புக் கலையில் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றமும் தமிழ்ப் பதிப்புகளிலும் வெளிப்பட்டிருந்த தருணத்தில் தி. ஜானகிராமன் போன்று அழகையே வாழ்வின் மதிப்பீடுகளில் ஒன்றாகக் கருதிய எழுத்தாளரின் படைப்புகளுக்கு அளிக்கப்பட்ட நூல் வடிவம் பொருத்தமானதல்ல, வாசகனுக்கு இதமளிப்பதல்ல என்ற எண்ணம் ஆழமாக வேர்கொண்டது. புத்தகங்களைக்

காதலிக்கும் எந்த நுட்பமான வாசகனுக்கும் தனது அன்புக்குரிய படைப்பாளியின் நூல் வெறும் காகிதக் கோப்பாகக் காணக் கிடைப்பது வருத்தமளிப்பது; அவனது வாசக நுண்ணுணர்வை உதாசீனப்படுத்துவதும்கூட. இதுவரை ஒரு சரக்காக மட்டுமே தி. ஜானகிராமன் நூல்கள் அச்சிடப்பட்டு வாசகன் கைக்குக் கிடைத்து வந்திருக்கின்றன.

நூல் பதிப்பின் தோற்றத்தைக் குறித்த ஆதங்கம் இது. நூலின் உள்ளீடு தொடர்பான வருத்தங்கள் இதைவிட அதிகம். ஒரு தொகுப்பில் இடம்பெறும் கதை எந்த இதழில் வெளிவந்தது என்ற குறிப்பு இடம் பெறுவது இல்லை. அது எந்த ஆண்டு எழுதப்பட்டது என்று அறிந்துகொள்ளும் வாய்ப்பு இல்லை. இவை வாசகனுக்கு எழுத்தாளனின் வளர்ச்சி நிலைகளைப் புரிந்துகொள்ள உதவும். ஆய்வாளனுக்கு எழுத்தைப் பற்றிய தரவாக அமையும். ஒரு கதை வெளியான இதழையும் காலத்தையும் அறிந்துகொள்வதன் மூலம் அந்தக் குறிப்பிட்ட காலப்பகுதியின் இலக்கியப் போக்கையும் இதழியல் நடைமுறைகளையும் ஊகிக்க முடியும். இன்று கிடைக்கும் தி. ஜானகிராமன் கதைத் தொகுப்புகளில் 'சக்தி வைத்தியம்' தொகுப்பில் மட்டுமே சிறுகதைகள் வெளியான இதழ், காலம் ஆகிய குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. அதே பதிப்பகம் பின்னர் வெளியிட்ட முழுப் படைப்புகள் தொகுதிகளில் இந்தக் குறிப்புகள் சேர்க்கப்பட்டுள்ளன.

ஒரு வாசகனாக, எனது விருப்பத்துக்கும் மரியாதைக்கும் உரிய எழுத்தாளரின் கதைகளை எப்படிப் பார்க்கவும் வாசிக்கவும் விரும்புகிறேனோ அந்த உருவத்திலும் உள்ளடக்கத்திலும் இந்தத் தொகுப்பை அமைக்க முயன்றிருக்கிறேன். அதில் அடைந்திருக்கும் வெற்றி ஓரளவு மட்டுமே.

காலச்சுவடு பதிப்பகம் வெளியிட்டிருக்கும் புதுமைப்பித்தன் கதைகள், கு. அழகிரிசாமி சிறுகதைகள், கு.ப.ரா. சிறுகதைகள் நூல்களை ஆய்வுப் பதிப்புகள் என்று குறிப்பிடலாம். இந்தத் தொகுப்பை நான் ஆர்வப் பதிப்பு என்று குறிப்பிடவே விரும்புகிறேன். முந்தைய நூல்களின் பதிப்பாசிரியர்களுக்கு இருக்கும் கல்விப்புல ஆய்வு நோக்கு எனக்கில்லை என்பது காரணம். ஆனால் அந்தக் குறையை வாசிப்பனுபவத்தின் துணையாலும் படைப்பாளியின் மீதுள்ள காதலாலும் சரி செய்ய முயன்றிருக்கிறேன். அதனாலேயே

இதை ஆர்வப் பதிப்பு என்று அழைக்கிறேன்.

தி. ஜானகிராமன் சிறுகதைகளின் வெளியீட்டு வரலாறு ஓரளவுக்குச் சிக்கலில்லாததுதான். அவர் எழுதிய கதைகளில் பெரும்பான்மையானவை தொகுப்புகளில் இடம்பெற்றிருக்கின்றன. அவரது வாழ்நாளிலேயே வெளியான ஏழு தொகுப்புகளில் இவை இடம்பெற்றிருக்கின்றன. முதல் இரண்டு தொகுப்புகளான 'கொட்டு மேளம்', சிவப்பு ரிக் ஷா' ஆகியவற்றின் முதற் பதிப்புகள் கலைமகள் காரியாலயத்தால் வெளியிடப்பட்டன. இவை முறையே 1954 , 1956ஆம் ஆண்டுகளில் வெளிவந்தன. நீண்ட காலம் அச்சில் இல்லாமலிருந்த இந்த இரு நூல்களும் வயல் பதிப்பகம் (சென்னை) வாயிலாக ('சிவப்பு ரிக் ஷா', 1980, 'கொட்டு மேளம்', 1989)- வெளிவந்தன. 'எருமைப் பொங்கல்' என்ற தலைப்பில் ஒரு தொகுப்பு அவரது மறைவுக்குப் பின்பு வெளியிடப்பட்டது. இந்தத் தொகுப்பு நீங்கலாகப் பிற எல்லாத் தொகுப்புகளின் முதற் பதிப்புகளையும் மீனாட்சி புத்தக நிலையம், மதுரை வெளியிட்டிருந்தது. பின்னர் வந்த பதிப்புகள் அனைத்தையும் ஐந்திணைப் பதிப்பகம், சென்னை வெளியிட்டுள்ளது.

'எருமைப் பொங்கல்' என்ற தலைப்பில் ஐந்திணைப் பதிப்பகம் வெளியிட்ட தொகுப்பில் முதற் பதிப்பு 1990 என்றும், இரண்டாம் பதிப்பு 1996 என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஏற்கனவே 'அடி' என்ற தலைப்பில் டிசம்பர் 1985இல் வெளியான நூலில் இந்தக் கதைகள் இடம்பெற்றிருந்தன. மோனா மாத இதழில் (செப்டம்பர் 1979) வெளிவந்த 'அடி' குறுநாவலும் 1954 முதல் 79வரையிலுமான காலப் பகுதியில் வெவ்வேறு ஆண்டுகளில் எழுதிய பத்துச் சிறுகதைகளும் சேர்ந்து இந்தத் தலைப்பிலான நூல் தயாரிக்கப்பட்டிருக்கிறது. பின்னர் சிறுகதைகள் மட்டும் அடங்கிய தொகுப்பாக 'எருமைப் பொங்கல்' என்ற தலைப்புடன் 1990இல் புதிய புத்தகமாக வெளியிடப்பட்டிருக்கிறது.

தனித் தொகுப்புகளாக தி. ஜானகிராமன் கதைகளை வெளியிட்ட கலைமகள் காரியாலயம், மீனாட்சி புத்தக நிலையம், ஐந்திணைப் பதிப்பகம் ஆகியவற்றின் பதிப்புகளில் ஓர் ஒற்றுமை காணப்படுகிறது. தொகுதியில் சேர்க்கப்பட்ட கதைகள் எந்த இதழில், எந்த ஆண்டு வெளிவந்தவை என்ற குறிப்பு கொடுக்கப்படவில்லை. அவை கால வரிசைப்படியும் தொகுக்கப்படவில்லை. எடுத்துக்காட்டாக, அவரது

முதல் சிறுகதைத் தொகுப்பான ‘கொட்டு மேளம்’ நூலில் இடம்பெறும் பன்னிரண்டு கதைகளும் 1946க்கும் 1953க்கும் இடையிலான ஆண்டுகளில் எழுதப்பட்டவை. இவை கால வரிசையில் தொகுக்கப்படவில்லை. கதைகளைத் தனிப்பட்ட தேர்வின் மூலம் சேர்த்திருப்பதாகவே தோன்றுகிறது. தன்னைச் சரியாக அடையாளம் காட்ட உதவும் கதைகளாக இருக்க வேண்டும் என்ற கருத்தில் தி. ஜானகிராமனே தேர்ந்தெடுத்திருக்கலாம் என்று யூகிப்பது எளிது. இந்தக் கதைகளில் காலத்தால் முந்தையது, 1946ஆம் ஆண்டு கலாமோஹினி இதழில் வெளியான ‘பசி ஆறிற்று’ என்ற கதை. தி. ஜானகிராமன் கதைகளின் முன் மாதிரிகளில் ஒன்று இது என்பதை வாசிக்கும்போது உணரலாம். ஆனால் இதற்கு முன்பேயும் தி. ஜானகிராமன் கதைகள் இதழ்களில் வெளியாகியிருக்கின்றன. அவை ‘கைப்பாகம் கூடாத’ கதைகள் என்று முதல் தொகுப்பில் தவிர்க்கப்பட்டிருக்கலாம்.

1937, டிசம்பர் ஆனந்த விகடன் இதழில் வெளிவந்த ‘மன்னித்து விடு’ என்ற சிறுகதையையே தி. ஜானகிராமனின் அச்சில் வந்த முதல் கதையாகக் கருத வேண்டும். பள்ளிப் பருவத்திலேயே இலக்கிய ஆர்வம் கொண்டிருந்த அவர் கல்லூரிப் படிப்பின்போது எழுத்து முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார் . கல்லூரிக் காலத்தில் கு.ப. ராஜகோபாலனுடன் ஏற்பட்ட நெருக்கம் அதை வளர்த்திருக்கிறது. ‘1936ஆம் ஆண்டு தி. ஜானகிராமன் கும்பகோணம் கல்லூரி மாணவன். அப்போதே இலக்கியப் பைத்தியம் பிடித்துவிட்டிருந்தவன். மணிக்கொடி பரம்பரையின் இலக்கியச் சிறப்பை அறிவுறுத்தி என் மனத்தில் புதுமை வாடை வீச வைத்தான்’ என்று அவரது நண்பரும் சக எழுத்தாளருமான கரிச்சான்குஞ்சு வைகை செப்டம்பர் 1979 இதழில் கு.ப.ரா. பற்றி எழுதிய கட்டுரையில் குறிப்பிடுகிறார். இந்தக் கூற்றை ஆதாரமாகக் கொண்டு கல்லூரி மாணவனாக இருந்தபோதே அவரது கதைகள் பத்திரிகைகளில் வெளிவர ஆரம்பித்தன என்று தீர்மானிப்பது பொருந்தக் கூடியதுதான். கரிச்சான் குஞ்சுவை அவரது கும்பகோணம் டபீர் தெரு இல்லத்தில் 1983ஆம் ஆண்டு சந்தித்தேன். ஒரு பகல்முழுவதும் நீண்ட உரையாடலின் இடையே ஜானகிராமனைப் பற்றிய நினைவுகூரலில் ‘அவன் எனக்கு முன்பே கதை எழுதி அது பத்திரிகையில் வெளிவந்துவிட்டது’ என்று குறிப்பிட்டது ஞாபகத்தில் பதிந்திருக்கிறது. இந்த ஞாபகமும் முதற் கதை பற்றிய தீர்மானத்துக்கு அழுத்தம்

சேர்த்தது. அதை எழுதியபோது அவருக்கு வயது பதினாறுதான் என்பது லேசான வியப்பையும் அளிக்கிறது.

‘கொட்டு மேளம்’ தொகுப்பில் பன்னிரண்டு கதைகள் இருக்கின்றன. அவை யாவும் 1946ஆம் ஆண்டிலும் அதற்குப் பின்பும் எழுதப்பட்டவை. அதற்கு முன் எழுதி இதழ்களில் வெளியான ஏழு கதைகள் உள்ளன. அவை: ‘மன்னித்து விடு’ (ஆனந்த விகடன், டிசம்பர் 1937), ‘ஈசுவரத் தியானம்‘ (ஆனந்த விகடன், மே 1938 ), ‘கமலியின் குழந்தை’ (ஆனந்த விகடன், ஜூலை 1944), ‘ராஜ திருஷ்டி’ (ஆனந்த விகடன், அக்டோபர் 1944), ‘மணச் சட்டை’ (கலைமகள், செப்டம்பர் 1945), ‘காத்திருந்தவள்’ (சிவாஜி, அக்டோபர், 1946), ‘ஆண்டவன் நினைத்தது’ (ஆனந்த விகடன், டிசம்பர் 1946). இந்த ஏழு கதைகளும் தி. ஜானகிராமன் வாழ்ந்த காலத்தில் வெளியான தொகுப்புகளிலோ அவரது மறைவுக்குப் பின்பு வந்த தொகுப்பிலோ சேர்க்கப்படவில்லை. ஐந்திணை பதிப்பகம் இரு தொகுதிகளாக வெளியிட்டிருக்கும் தி. ஜானகிராமன் படைப்புகள் புத்தகங்களிலும் இவை இல்லை. ஏழு கதைகளில் ஐந்து இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ‘ஈசுவரத் தியானம்‘ என்ற கதை ஆனந்த விகடன் 1938 மே இதழில் வெளியானதாக விவரம் கிடைத்தது. எனினும் கதை கிடைக்கவில்லை. ஆனந்த விகடன் நூலக ஆவணப் பட்டியலில் கதையின் தலைப்பும் வெளியான இதழ் பற்றிய தகவலும் இருந்தன. ஆனால், குறிப்பிட்ட இதழில் கதை இடம்பெறவில்லை. அதேபோன்று ‘காத்திருந்தவள்’ கதையையும் காண முடியவில்லை.

ஓர் எழுத்தாளனின் ஆரம்ப நிலைப் படைப்புகளுக்குரிய பக்குவமின்மை இந்தக் கதைகளில் தெளிவாகவே புலப்படுகிறது. ஜானகிராமனின் பிற்காலக் கதைகளில் தென்படும் நுட்பமும் மொழிக் கச்சிதமும் இவற்றில் இல்லை. தொகுதிகளில் சேர்க்கப்படாமைக்கு இவை காரணமாக இருக்கலாம். ஆனால் ஜானகிராமன் கதைகளின் தனிக் குணங்களாகக் கருதப்படும் சில அம்சங்களின் தொடக்க அடையாளங்கள் சரளமான கதையோட்டம், பாத்திரங்களின் சாதுரியமான உரையாடல் போன்றவை - இவற்றில் காணப்படுகின்றன. ஒரு படைப்பாளியின் வருகையை அறிவிக்கும் எல்லா அறிகுறிகளும் இருக்கின்றன. அந்த எண்ணத்திலேயே இந்தக் கதைகளைத் தொகுப்பில் உட்படுத்தியிருக்கிறேன்.

தி. ஜானகிராமனின் மொத்தக் கதைகளையும் ஒரு சேரத் தொகுக்கும் பணியில் கிடைத்த விவரங்களின் அடிப்படையில் சில முடிவுகளுக்கு வந்து சேருவது இயல்பாக இருந்தது.

1937 இல் எழுதிய ‘மன்னித்து விடு’ என்ற கதையை அவரது அச்சில் வெளிவந்த முதல் கதையாக எடுத்துக்கொள்ளலாம். 1980 ஆம் ஆண்டு மூன்று சிறுகதைகளை எழுதியிருக்கிறார். ‘ஆயா’ என்ற கதை அமுதசுரபி மாத இதழிலும் ‘கிழவரைப் பற்றி ஒரு கனவு’ தினமணி கதிரிலும் வெளிவந்திருக்கின்றன. மூன்றாவது கதை, ‘சுளிப்பு’ அமுதசுரபி தீபாவளி மலரில் வெளிவந்தது. 1980ஆம் ஆண்டு தீபாவளி நவம்பர் மாதத்தில் வந்திருக்கிறது. இந்தத் தகவல்களை வைத்துப் பார்க்கும்போது அக்டோபர் மாதத்திலேயே இந்த மூன்று கதைகளும் பத்திரிகைகளுக்கு அளிக்கப்பட்டிருக்க வேண்டும். இவற்றில் ஒன்றைத்தான் அச்சில் வந்த அவரது கடைசிக் கதையாகக் கொள்ள வேண்டும்.

தீவிர இதழ்களுக்கும் வெகுஜன இதழ்களுக்கும் இணக்கமான எழுத்தாளராகவே தி. ஜானகிராமன் இருந்திருக்கிறார். அவரது முதல் கதையே அன்று வெகுஜனப் பிரபலம் மிகுந்த ஆனந்த விகடனில்தான் வெளியானது. அதே இதழில் தொடர்ந்தும் எழுதியிருக்கிறார். கலைமகள் இதழும் அவரைத் தனது செல்ல எழுத்தாளராகக் கருதியிருக்கிறது. மாத இதழிலும் தீபாவளி மலர்களிலுமாக தி. ஜானகிராமனின் இருபத்தைந்து கதைகள் வெளிவந்திருக்கின்றன. நண்பரும் இலக்கிய சகாவுமான எம்.வி. வெங்கட்ராம் நடத்திய தேனீ இதழில் தொடர்ந்து ஒவ்வொரு மாதமும் அவரது கதைகள் வெளியாகி இருக்கின்றன. தன்னைக் கவர்ந்த இலக்கிய இதழ் என்று கரிச்சான் குஞ்சுவுக்கு அறிமுகப்படுத்திப் பரிந்துரைத்த மணிக்கொடியில் ஜானகிராமனின் இரண்டு கதைகளே வெளிவந்திருக்கின்றன. அவரது சிறந்த கதைகளின் வரிசையில் இடம்பெறும் ‘நானும் எம்டனும்’, ‘துணை’ ஆகியவை 1950களில் மீண்டும் தொடங்கப்பட்ட மணிக்கொடி இதழில் வெளிவந்தன. ‘இரண்டாவது முறையாக மணிக்கொடியைத் தொடங்கி நடத்தியதில் என் சாதனை தி. ஜானகிராமன் எழுதிய கதைகளை வெளியிட்டதுதான்’ என்ற பி.எஸ். ராமையாவின் ‘தற்புகழ்ச்சி’ பொய்யானது அல்ல. அதற்கு இந்த இரு கதைகளும் சான்று.

*1950 முதல் எழுபதுகள் முடிய மூன்று பதிற்றாண்டுகளில் எல்லா பத்திரிகைகளும் விரும்பும் எழுத்தாளராக தி. ஜானகிராமன் செல்வாக்குப் பெற்றிருந்திருப்பதைத் தகவல்கள் உறுதிப்படுத்துகின்றன. ஏறத்தாழ நட்சத்திர மதிப்பை அடைந்திருந்தார். மேற்சொன்ன காலப் பகுதியில் வெளியான எல்லாப் பத்திரிகைகளின் தீபாவளி மலர்களிலும் அவரது கதைகள் தவறாமல் இடம்பெற்றிருக்கின்றன. 'முள்முடி', 'கடைசி மணி', 'கோதாவரிக் குண்டு' போன்ற சிறந்த கதைகள் தீபாவளி மலர்களிலேயே வெளியாகி இருக்கின்றன. அவை பொருளாதார ரீதியிலும் உதவியிருக்கின்றன என்பதை மகள் உமா சங்கரி சுட்டிக் காட்டுகிறார். அப்பா தீபாவளி மலர்களுக்கு நாலு கதைகள் எழுதி தீபாவளிக்கு இரண்டு நாள் முன்பு வரும் ஊதியத்தில் எங்களுக்கு உடைகள் பட்டாசுகள் வாங்கப் போவார். அம்மாவுக்கு நூல் புடவை, எங்களுக்குக் கதர் உடுப்புகள், அவருக்கு கதர் வேஷ்டி, ஜிப்பா; இவற்றோடு பாட்டு வாத்தியார், குடும்ப வைத்தியர், நண்பர், வேலைக்காரி எல்லோருக்கும் கதர் / நூல் உடைகள். பட்டாசுக்கு மாத்திரம் குறைச்சலே கிடையாது' (சொல்வனம் இணைய இதழ் 24.05.2011).*

*ஆனந்த விகடன், கலைமகள், கல்கி, சுதேசமித்திரன், தினமணி கதிர், அமுதசுரபி போன்ற வெகுஜனப் பத்திரிகைகளில் மட்டுமல்ல சிற்றிலக்கிய ஏடுகளான மணிக்கொடி, கலாநிலையம், தேனீ, காதம்பரி, தீபம், கணையாழி, பொன்னி, சிவாஜி ஆகியவற்றிலும் தி. ஜானகிராமன் கதைகள் வெளிவந்திருக்கின்றன. அந்தக் காலத்தில் அநாச்சார இதழாகக் கருதப்பட்ட காதல், அதிகம் அறிமுகமில்லாத விந்தியா பத்திரிகைகளிலும் கதைகள் வெளிவந்துள்ளன. அவர் பணியாற்றிய வானொலியில் வாசித்த கதை ஒன்றும் உள்ளது. இவ்வளவு அதிக எண்ணிக்கையிலான இதழ்களில் கதைகள் வெளிவந்திருப்பினும் அவற்றில் பெரும்பான்மை வெகுஜன இதழ்களாக இருப்பினும் இன்று அந்த இதழ்களைத் தேடிக் கதைகளைக் கண்டுபிடிப்பது சிரமமானதாகவே இருந்தது. தனது கதைகள் வெளிவந்த இதழ்களையோ, அவற்றின் வெளியீட்டு விவரங்களைப் பற்றிய குறிப்புகளையோ பத்திரப்படுத்தும் பழக்கமில்லாதவர் தி. ஜானகிராமன் என்று பலரும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவருடனான நேர்ச் சந்திப்பில் இதை நானும் அறிந்திருக்கிறேன். தனது படைப்புகளைப் பற்றிப் பேசுவதை*

அவர் விரும்பியதில்லை; அப்படியான உரையாடலை ஊக்குவித்ததுமில்லை என்பது நேர் அனுபவம். கதைகள் பெரும்பாலும் எழுதப்பட்ட வடிவத்திலேயே பத்திரிகைகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுக்குப் பெரும்பாலும் நகல்கள் இல்லை. இந்த நிலையில் பத்திரிகை அலுவலகங்களின் ஆவணக் காப்பகங்களையே நம்ப வேண்டியிருந்தது. அவற்றிலிருந்தும் நூலகச் சேகரிப்புகளிலிருந்துமே தொகுப்புக்கான கதைகளில் சிலவும் விவரங்களும் திரட்டப்பட்டன. தி. ஜானகிராமன் மறைந்து முப்பத்துச் சொச்சம் வருடங்களே ஆகின்றன. இலக்கிய வரலாற்றைப் பொறுத்தவரை இது நீண்ட காலமும் அல்ல. எனினும் கதைகளையும் விவரங்களையும் சேகரிப்பது புராதன காலத்து ஏட்டுச் சுவடிகளைத் தேடுவது போன்ற இடர்ப்பாட்டையே அளித்தது. இந்த இடர்ப்பாடே தொகுப்பின் முறையியலுக்கும் வழிகோலியது.

காலச்சுவடு பதிப்பகம் வெளியிட்டுள்ள முழுத் தொகுப்புகள் அனைத்தும் கால அடிப்படையிலேயே கதைகளை வரிசைப்படுத்தி உருவாக்கப்பட்டவை. ஓர் எழுத்தாளரின் முதல் கதைமுதல் அவர் கடைசியாக எழுதியது வரையிலான எல்லாக் கதைகளும் அவை இதழ்களில் வெளிவந்த கால வரிசையிலேயே அமைந்திருக்கின்றன. படைப்பாளியின் வளர்ச்சியைப் புரிந்துகொள்ள இந்த வைப்பு முறையே பொருத்தமானது. காலத்துடன் அவன் கொள்ளும் உறவை விளங்கிக்கொள்ள இந்த முறை துணை புரிகிறது. அவனுடைய படைப்புலகம் எதிர்கொண்ட மாற்றங்களை அறிந்துகொள்ள உதவுவது. இவற்றை அறிந்திருக்கிறேன் எனினும் தி. ஜானகிராமன் சிறுகதைகள் முழுத் தொகுப்பில் இந்த முறையியலை மேற்கொள்ளவில்லை. உதாரணமாக, புதுமைப்பித்தன் கதைகளில் தென்படும் கால வளர்ச்சி, அதனுடன் ஒவ்வொரு கட்டத்திலும் நிகழ்ந்த பார்வை மாற்றம், நடை வேறுபாடு ஆகியவை தி. ஜானகிராமன் கதைகளில் பெருமளவுக்கு இல்லை. முதல் கதையான ‘மன்னித்து விடு’வில் ஓர் ஆரம்ப கட்ட எழுத்தின் குறைகள் உள்ளன. ஆனால் கதைப்போக்கு, பாத்திரங்களின் உரையாடல், கதையின் வடிவம் ஆகியவற்றில் பிற்காலக் கதைகளின் முன் மாதிரியாகவே அமைந்துள்ளது. ஒரு செவ்வியல் பூரிதநிலை கொண்டவை அவரது கதைகள். அவை காலத்தின் போக்குக்கு ஏற்ப மாற்றம் அடையவில்லை என்றே சொல்லலாம். கால, இட மாறுதல்கள் உள்ளடக்கத்தில் நுட்பமான மாற்றங்களை நிகழ்த்தியிருந்தாலும்

அவரது கதைக் கலையின் செவ்வியல் நிலைக்கு வெளிப்படையான மாற்றம் ஏற்பட்டிருக்கவில்லை. தி. ஜானகிராமனின் மேதைமையாகவே இதைக் காண விரும்புகிறேன். இந்த அடிப்படையிலேயே காலவரிசைப்படி கதைகளைத் தொகுப்பதைவிடவும் வெளிவந்த தொகுப்புகளில் கடைபிடிக்கப்பட்ட அதே முறையில் அமைப்பது என்ற தீர்மானத்தை மேற்கொண்டேன்.

தி. ஜானகிராமன் வாழ்ந்த காலத்திலேயே அவரது முக்கியமான கதைகள் தொகுக்கப்பட்டு நூல்களாக வெளிவந்துவிட்டன. அவருடைய மொத்தச் சிறுகதைத் தொகுப்புகளின் எண்ணிக்கை எட்டு. இவற்றில் ஏழு தொகுப்புகள் - 'கொட்டு மேளம்' (1954), 'சிவப்பு ரிக் ஷா' (1956), 'அக்பர் சாஸ்திரி' (1963), 'யாதும் ஊரே' (1967), 'பிடி கருணை' (1974), 'சக்தி வைத்தியம்' (1978), 'மனிதாபிமானம்' (1981) அவர் காலத்திலேயே வெளிவந்தவை. இவற்றுக்கான கதைத் தேர்வு அவரால் செய்யப்பட்டிருக்கிறது என்று நம்புவது தவறல்ல. எந்தக் கதைகளை வாசகப் பார்வைக்குக் கொண்டு செல்வது என்பது படைப்பாளியின் சுதந்திரம். தனது படைப்பாளுமையைச் சரியாகப் பிரதிநிதித்துவப்படுத்தும் கதைகளை முன்வைப்பதும் படைப்பாளியின் விருப்பம். இந்த நோக்கில்தான் அவரது கதைகள் தொகுப்புகள் அமைந்திருக்கின்றன என்று உறுதியாக நம்புகிறேன். படைப்பாளியின் சுதந்திரத்தையும் விருப்பத்தையும் மதிக்க வேண்டும் என்ற எண்ணத்தைச் சார்ந்தே தொகுப்புகளின் அடிப்படையில் இந்த வரிசையைப் பின் பற்றியிருக்கிறேன். தி. ஜானகிராமன் மறைவுக்குப் பிறகு வெளியான ஒரே தொகுப்பு 'எருமைப் பொங்கல்' மட்டுமே.

தி. ஜானகிராமன் எழுதிய கதைகளின் மொத்த எண்ணிக்கையை நிர்ணயிப்பதும் எளிதாக இருக்கவில்லை. அச்சில் வந்து தொகுப்புகளில் சேர்க்கப்படாத பல கதைகள் உடனடியாகக் கிடைக்கவில்லை. ஆனால் அவை அச்சில் வெளிவந்திருக்கும் தகவல்கள் கிடைத்தன. எனினும் மொத்தக் கதைகளின் எண்ணிக்கையைத் தீர்மானிப்பது குழப்பத்தையே கொடுத்தது. இந்த நிலையில் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக 1995ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட டாக்டர் பழ. முத்து வீரப்பனின் 'தி. ஜானகிராமன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு' என்ற நூலும் சாகித்திய அக்காதெமியின் 'இந்திய இலக்கியச் சிற்பிகள்' வரிசையில் வெளியிடப்பட்ட மு.அ. முகம்மது உசேனின் 'தி. ஜானகிராமன்'

என்ற நூலும் பார்வைக்கு வந்தன. இருவரும் முறையே தி. ஜானகிராமன் சிறுகதைகளிலும் நாவல்களிலும் ஆய்வை மேற்கொண்டவர்கள். டாக்டர் முத்து வீரப்பனின் ஆய்வு நூலே எண்ணிக்கைச் சிக்கலைப் பெருமளவுக்குத் தீர்த்துக்கொள்ள உதவியது. அந்த நூலில் பின்னிணைப்பாக 'சிறுகதைகளும் வெளிவந்த இதழ்களும்' என்ற தலைப்பில் கொடுத்திருக்கும் அட்டவணை இரு வகையில் துணையாக இருந்தது. இதழ்களை வைத்துக் கதைகளைத் தேடவும், எண்ணிக்கையைச் சரிபார்க்கவும் துணை புரிந்தது.

டாக்டர் முத்து வீரப்பன் நூலில் மொத்தம் 120 கதைகள் வெளியீட்டு விவரங்களுடன் பட்டியலிடப்பட்டுள்ளன. நூல் வெளியான ஆண்டான 1995இல் 'எருமைப் பொங்கல்' தொகுப்பு வெளிவந்திருக்கவில்லை. எனவே அதில் இடம் பற்றிருக்கும் 10 கதைகள், தொகுப்பில் இடம்பெறவில்லை என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் முத்து வீரப்பனின் நூல் வெளிவந்து பத்து ஆண்டுகளுக்குப் பின்னர், 2005 இல் வெளிவந்த முகம்மது உசேனின் நூலில், பக்கம் 19இல், 'ஏழு சிறுகதைத் தொகுதிகளில் 85 கதைகள் எழுதியுள்ள இவரது (ஜானகிராமனது) படைப்புகளை நூல் வடிவில் வராத கதைகளையும் தேடிப் பிடித்து 120 சிறுகதைகளைத் திரட்டி ஆய்வு செய்துள்ளார் பழ வீரப்பன்' என்று குறிப்பிடப்பட்டிருப்பது எண்ணிக்கை நிர்ணயிப்பைத் தடுமாறச் செய்தது. பழ. முத்து வீரப்பன் தனது டாக்டர் பட்ட ஆய்வுக்காக தி. ஜானகிராமனின் கதைகளை எடுத்துக் கொண்டிருக்கிறார். ஆய்வையொட்டி தி. ஜானகிராமனுடன் கடிதத் தொடர்பும் கொண்டிருந்திருக்கிறார். அதன் மூலம் பல தகவல்களைப் பெற்றிருக்கிறார். எனவே அவரது நூலையே நம்பகமாக தரவாக எடுத்துக்கொண்டேன். அவரது பட்டியலை வழிகாட்டும் படமாக வைத்துக்கொண்டு தி. ஜானகிராமனின் தொகுக்கப்படாத கதைகளைத் தேடத் தொடங்கினேன். தொகுப்பில் வெளிவந்திருக்கும் கதைகள் 85. 'சக்தி வைத்தியம்' தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கும் 'வீடு' என்ற கதை குறுநாவலாக எழுதப்பட்டது. அதை நீக்கினால் தொகுப்புகளில் இடம்பெற்றிருப்பவை 84 கதைகள். தொகுப்பில் இடம்பெறாதவை என்று ஆய்வாளர் பட்டியலில் குறிப்பிடப்பட்டவை 35. இவற்றில் 10 கதைகள் 'எருமைப் பொங்கல்' தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. மீதி 25 கதைகள். இவற்றில் 5 கதைகள்

(‘பிரயாணக் கதை’, அமுதசுரபி / அக்டோபர் 1979, ‘அதிர்ஷ்டம்‘, கலைமகள் / செப்டம்பர் 1949, ‘வேறு வழியில்லை’, கலைமகள் / மே 1951, ‘குளிர் ஜுரம்’, கலைமகள் / ஏப்ரல் 1952, ‘தற்செயல்’, குமுதம் 6.8.1970) ஐந்திணைப் பதிப்பகம் வெளியிட்டுள்ள ‘தி. ஜானகிராமன் படைப்புகள் தொகுதி - 2இல் சேர்க்கப்பட்டுள்ளன. ஆக மீதமிருப்பவை 20 கதைகள். இந்த 20 கதைகளை மீட்டெடுப்பதே முதற் பணியானது. சென்னை ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம், கல்கி, ஆனந்த விகடன் நூலகங்கள் வாயிலாகவும், கணையாழி அலுவலகச் சேகரிப்பிலிருந்தும் கதைகள் கிடைக்கப்பெற்றன. அவ்வாறு தேடிக் கண்டுபிடித்த கதைகள் மொத்தம் 8. பழ. முத்து வீரப்பனின் பட்டியலில் இரு கதைகள் விடுபட்டுள்ளன. அவை ; ‘பாப்பாவுக்குப் பரிசு’, ‘தற்செயல்’ (குமுதம் 1970). இவற்றைக் கூட்டினால் தி. ஜானகிராமனின் மொத்தச் சிறுகதைகளின் எண்ணிக்கை 122 ஆகிறது.

இந்த முழுத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ள கதைகளின் எண்ணிக்கை பின் வருமாறு அமைகிறது.

தி. ஜானகிராமனின் எட்டுத் தொகுப்புகளில் இடம்பெற்றுள்ள கதைகளின் மொத்த எண்ணிக்கை 94. ஐந்திணை பதிப்பக வெளியீடான தி. ஜானகிராமன் படைப்புகள்: தொகுதி - 2இல் உள்ளவை 5. இந்தத் தொகுப்பில் முதன் முறையாக இடம்பெறும் கதைகள் 8. காலச்சுவடு வெளியீடான தி. ஜானகிராமன் சிறுகதைகள் முழுத் தொகுப்பில் ஆக மொத்தம் 107 கதைகள் உள்ளன. இனி கண்டுபிடிக்கப்பட வேண்டிய கதைகள் 15. விடுபட்ட கதைகளைத் தேடி அடுத்த பதிப்பில் சேர்க்க முடியும் என்ற தெம்பை தற்போதைய தொகுப்புப் பணி அனுபவம் அளிக்கிறது. வாசகர்களும் ஆய்வாளர்களும் தற்போதைய முழுத் தொகுப்பை முழு முற்றான தொகுப்பாக உருவாக்க உதவுமாறு கோருகிறேன். சிறுகதைகளின் எண்ணிக்கையில் குளறுபடிகள் இருந்ததுபோலவே வெளியீட்டுத் தகவல்களிலும் போதாமைகள் இருக்கின்றன. சில கதைகளுக்கு வெளியான இதழ்கள் பற்றிய விவரங்களும் சில கதைகளுக்கு வெளிவந்த காலம் குறித்த தகவல்களும் மட்டுமே கிடைத்திருக்கின்றன. அவை பற்றிய விவரங்கள் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைத் துல்லியமாக்கவும் வாசகர்களின் ஆதரவை நாடுகிறேன்.

அநேகமாக எழுதப்பட்ட சுருக்கிலும் எழுதப்பட்ட வடிவிலுமே தி. ஜானகிராமன் சிறுகதைகள் இதழ்களில் அச்சேற்றப்பட்டிருக்கின்றன. கைப்பிரதிக்கும் அச்சுப் பிரதிக்கும் சிறிதும் வேறுபாடு இல்லை என்றே சொல்லலாம். கதையை ஒரே மூச்சில் எழுதி விடுவது அவரது பழக்கம். அதை அப்படியே பிரசவக் கவிச்சை மாறாமல் பத்திரிகைகளுக்கு அனுப்புவதும் அவரது இயல்பு. வெளிவந்த பின்னர் மேலதிகத் திருத்தங்கள் எதையும் அவர் செய்ததில்லை என்பதை இந்தத் தொகுப்புப் பணியில் கண்டடைய முடிந்தது. தொகுப்புகளில் இடம்பெற்றிருக்கும் கதைகள் சிலவற்றின் அச்சுப் பிரதிகளை ஒப்பிட்டுப் பார்த்ததில் இதை உறுதிப்படுத்த முடிகிறது. விதி விலக்காக ஒரு கதையில் மட்டுமே மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. தேனீ இதழில் வெளிவந்த ‘ரத்தப் பூ’ என்ற கதை தொகுப்பில் சேர்க்கப்பட்டபோது ‘சண்பகப் பூ’ என்று தலைப்பு மாற்றப்பட்டுள்ளது. இந்த ஒத்திசைவைச் செவ்வியல் குணம் என்றும், ஜானகிராமனின் படைப்பு மேதைமையின் உள்ளார்ந்த இயல்பு என்றும் எண்ணுகிறேன்.

முன்பே குறிப்பிட்டதுபோல இது ஆய்வுப் பதிப்பல்ல, ஆர்வப் பதிப்பு. ஏனெனில் நான் ஆய்வாளன் அல்லன். இந்தத் தொகுப்பில் பின்னிணைப்பாகச் சேர்க்கப்பட்டுள்ள ‘சிறுகதை எழுதுவது எப்படி?’ என்ற தி. ஜானகிராமனின் கட்டுரையின் வாசகம் நினைவுக்கு வருகிறது. ‘நான் சிறுகதை ஆசிரியனும் இல்லை. சிறுகதை வாத்தியாரும் இல்லை. சிறுகதை எழுது என்று யாராவது என்னைக் கேட்டால் எனக்கு வயிற்றில் புளியைக் கரைக்கத் தொடங்கிவிடும்’. அதுபோலத்தான் நானும். ஆய்வாளனும் இல்லை; அதற்குத் தகவமைத்துக் கொள்ளும் முனைப்பும் இல்லை. ஆய்வு, திறனாய்வு என்று சொல்லக் கேட்டால் எனக்கும் மனக்கலவரம் மூண்டுவிடுகிறது. எனினும் இந்தத் தொகுப்புப் பணியில் ஈடுபடுத்திக் கொண்டேன். ஒரு வாசகனாக தி.ஜா.வின் படைப்புகள்மீது எனக்கிருக்கும் வாஞ்சையே அதற்குக் காரணம். வாசகர்களும் ஆய்வாளர்களும் நண்பர்களுமாகப் பலர் இந்த ஈடுபாட்டைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார்கள். சிறிதும் பெரிதுமாக அவர்கள் செய்த உதவிகள் இல்லாமல் இந்தப் பணி நிறைவு அடைந்திருக்காது.

காலச்சுவடு நவீனத் தமிழ் கிளாசிக் நாவல் வரிசையில் வெளியான ‘அம்மா வந்தாள்’, ‘மோக முள்’ நாவல்களுக்கு எழுதிய முன்னுரைகள் மூலம் தி. ஜானகிராமன் படைப்புகள் மீது நான்

கொண்டிருக்கும் மோகத்தைத் துப்பறிந்து வைத்திருக்கும் நண்பர் கண்ணன் தி. ஜானகிராமன் சிறுகதைகள் மொத்தத் தொகுப்பின் பணியை என்னிடம் ஒப்படைத்தார்.

நவீன இலக்கியப் பதிப்புகளுக்கான முறையியலை அறிமுகப்படுத்திய நண்பர் ஆ.இரா. வேங்கடாசலபதி இந்தப் பதிப்புப் பணியில் ஆலோசனைகளை வழங்கினார். அவரது முறையியலின் சில கூறுகளை இந்தப் பணியில் கடைப்பிடித்திருக்கிறேன். முழுத் தொகுப்பைக் காலவரிசைப்படி அமைக்க வேண்டிய கட்டாயம் இல்லை; தனித் தொகுப்புகளின் வரிசையிலேயே நிரல்படுத்தலாம் என்று சலபதி வழங்கிய ஆலோசனையே தொகுப்பு வேலையை விரைந்து முடிக்கத் தூண்டுதலாக இருந்தது. கலைமகளில் வெளியான தி. ஜானகிராமன் கதைகளின் பட்டியலை அளித்ததும் அவரே. அதுவே கதைத் தேடலின் தொடக்கம். நண்பர் பழ. அதியமான் சுதேச மித்திரன், சிவாஜி, தேனீ இதழ்களில் வெளியான கதைகள் தொடர்பான தகவல்களை வழங்கினார்.

தொகுப்பில் இடம்பெறும் கதைகளை அவை வெளிவந்த நூல்களின் முதற் பதிப்புடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தோம். ஆனால் தீர்மானத்தை எளிதில் செயல்படுத்த முடியவில்லை. பெரும்பாலான தனித் தொகுப்புகளின் முதற் பதிப்புகள் கிடைக்கவில்லை. காலச்சுவடு இதழிலும் முகப்புத்தகத்திலும் தொகுப்புகளின் முதற் பதிப்புகளை அனுப்பி உதவுமாறு வாசகர்களுக்கு வேண்டுகோள் விடுத்திருந்தோம். வாசக நண்பர்கள் பலர் முன்வந்து உதவினார்கள். சீனி மோகன் ‘மனிதாபிமானம்’ முதல் தொகுப்பையும் ‘சக்தி வைத்தியம்’, ‘எருமைப் பொங்கல்’, ‘அபூர்வ மனிதர்கள்’ ஆகிய தொகுப்புகளையும் அனுப்பிக் கொடுத்தார். சி. தனபால் (தருமபுரி) ‘எருமைப் பொங்கல்’ முதல் பதிப்பை அனுப்பினார். கேரளப் பல்கலைக்கழக தமிழ்த் துறை ஆய்வு மாணவி ம. அனுஷா, பல்கலைக்கழகக் கல்லூரி தமிழ்த்துறை நூலகத்திலிருந்து ‘அக்பர் சாஸ்திரி’ முதல் பதிப்பைப் பெற்றுத் தந்தார். கே.என். பாலசுப்பிரமணியன் (கோவை) ‘பாப்பாவுக்குப் பரிசு’ சிறுகதை வெளிவந்த விந்தியா இதழின் நகலை அனுப்பினார் ஆர். மகாலிங்கம் (பெங்களூர்), சு. சாமிநாதன் (கும்பகோணம்), சரவணன் (சென்னை), சுரேஷ் (புதுதில்லி), திருவள்ளுவனார் (திருச்செங்கோடு), செல்வராஜ் ஜெகதீசன் (அபுதாபி) ஆகியோர் பல தொகுப்புகளின் பிரதிகளை அனுப்பினர்.

மேலும் சிலரும் நூல்களை அனுப்பி உதவினர். ஆனால் முதற் பதிப்பை மட்டுமே கணக்கில் எடுத்துக்கொள்வது என்று முடிவெடுத்திருந்ததால் அவற்றைப் பயன்படுத்தும் வாய்ப்பு அமையவில்லை.

தேடலின் கணிசமான பங்கை நூலகங்கள் நிறைவேற்றின. புதுக்கோட்டை ஞானாலயா நூலகத்திலிருந்து சில முதற் பதிப்புகள் பெறப்பட்டன. கிடைத்தற்கு அரிதாக இருந்த 'கொட்டு மேளம்' முதற்பதிப்பு அங்கிருந்தே கிடைத்தது. 'கலைமகள்' இதழில் வெளியாகி இதுவரையில் எந்தத் தொகுப்பிலும் சேர்க்கப்படாமலிருந்த 'மணச் சட்டை', 'பட்சி சாஸ்திரக் கிளி', 'போர்ஷன் காலி', 'விரல்' ஆகிய கதைகள் ரோஜா முத்தையா ஆய்வு நூலகத்தின் சேகரிப்பிலிருந்து பெறப்பட்டவை. அவை முதல் முறையாகத் தொகுப்பில் இடம் பெறுகின்றன. தேவையான ஆவணங்களைப் பார்வையிட நூலக இயக்குநர் சுந்தர் பேருதவி புரிந்தார். நூலக ஊழியரான மாலா நகலெடுக்க உதவினார். தி. ஜானகிராமனின் ஆரம்பகாலக் கதைகளான 'மன்னித்து விடு', 'கமலியின் குழந்தை', 'ராஜ திருஷ்டி', 'ஆண்டவன் நினைத்தது' ஆகிய நான்கு கதைகளை ஆனந்த விகடன் ஆவண நூலகத்தின் வாயிலாகப் பெற்றேன். எழுத்தாளரும் என் முன்னாள் சக ஊழியருமான தமிழ்மகன் இதற்கு உதவினார். கல்கி இதழிலும் அதன் தீபாவளி மலர்களிலும் வெளியான கதைகள் தொடர்பான விவரங்களைச் சரிபார்க்க கல்கி இதழின் பொறுப்பாசிரியர் ஆர். வெங்கடேஷ் துணைபுரிந்தார். கணையாழி யின் பழைய இதழ்களைப் பார்வையிட ஓவியரும் நண்பருமான சீனிவாசன் உறுதுணையாக இருந்தார்.

தொகுப்பின் முறையியல் தொடர்பாக எழுந்த சந்தேகங்களுக்கு நண்பரும் எழுத்தாளருமான பெருமாள்முருகன் நிவாரணமளித்தார். டாக்டர். பழ. முத்து வீரப்பனின் திறனாய்வு நூலைத் தனது நண்பரும் அண்ணாமலை பல்கலைக்கழக தமிழ்த்துறை உதவி பேராசிரியருமான நாகராஜனிடமிருந்து பெற்றுத் தந்தது அரிய உதவி. தொகுப்பு வேலையில் எதிர்கொண்ட இடையூறுகளைக் களைய இந்த நூலே பெருமளவு உதவியது.

இந்தத் தொகுப்புப் பணியில் ஈடுபட்டது முதல் பலருடனும் உரையாடியிருக்கிறேன். சில தகவல்களைச் சரி பார்க்கவும், சில சந்தேகங்களைப் போக்கிக்கொள்ளவும், சில திருத்தங்களை

மேற்கொள்ளவும் அவ்வப்போது நடந்த உரையாடல்கள் துணை புரிந்திருக்கின்றன. எழுத்தாள நண்பர்கள் பிரபஞ்சன், திலீப்குமார், ரவி சுப்ரமணியன், திருப்பூர் கிருஷ்ணன் போன்றோருடன் நடத்திய உரையாடல்களிலிருந்து சில தெளிவுகள் புலப்பட்டன.

பணியின் நிமித்தம் சென்னையில் நான் மேற்கொண்ட அலைச்சல்களில் உடன் வந்தவர் நண்பர் கிருஷ்ணபிரபு. ரோஜா முத்தையா நூலகம், கல்கி அலுவலகம், கணையாழி அலுவலகம், கன்னிமரா பொது நூலகம் என்று நான் ஏறிய படிகளில் கூடவே வந்தார். கதைகளைப் படியெடுக்க உதவினார். சில இடங்களுக்கு மீண்டும் சென்று தேவைப்பட்ட தகவல்களையும் ஆவணங்களையும் திரட்டி அனுப்பிக் கொடுத்தார்.

காலச்சுவடு பதிப்பக ஊழியரான ரெத்தினகுமாரி பிரதியைக் கணினியாக்கம் செய்வதோடு நின்றுவிடவில்லை. தி. ஜானகிராமன் சிறுகதைகள் – முழுத் தொகுப்பு தொடர்பான கடிதப் போக்கு வரவுகளைப் பதிவு செய்தார். வாசகர்களிடமிருந்தும் நூலகங்களிலிருந்தும் கிடைக்கப் பெற்ற புத்தகங்களைப் பாதுகாத்தார்.

பேராசிரியர் பா. மதிவாணன் பிரதியை மெய்ப்புப் பார்த்து உதவினார்.

தி. ஜானகிராமன் வாழ்க்கைக்குறிப்பு சார்ந்து எழுந்த சந்தேகங்களை அவரது மகள் உமாசங்கரி தீர்த்து வைத்தார்.

மேற்சொன்ன இவர்களில், ஒருவரது உதவி இல்லாமல் போயிருந்தாலும் தொகுப்புப் பணி சீராக நடைபெற்றிருக்காது. முழுமை பெற்றிருக்காது. இவர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி.

**சுகுமாரன்**

திருவனந்தபுரம்

11 டிசம்பர் 2014

# கொட்டு மேளம்

டாக்டர் வரும்போது ஒன்பது மணிக்கு மேல் ஆகிவிட்டது. கம்பவுண்டரின் முகத்தைப் பார்த்தார்.

"ஐயாவுக்கு ரொம்பப் பசி போல் இருக்கு. என்ன செய்ய? நாழியாயிட்டுது."

"அதெல்லாம் ஒண்ணும் இல்லீங்க!"

"என்ன ஒண்ணும் இல்லீங்க? உம் மூஞ்சிதான் ஆறு மாசம் பட்டினி கிடந்தவனாட்டம் இருக்கே. என்ன செய்ய? கல்யாணம் பண்ணிக்கப் போறவன் கடைக்குப் போனா, நேரந்தான் ஆவுது. நீ கல்யாணம் பண்ணிக்கப் போறபோது, இப்படித்தானே அலைஞ்சிருப்பே?"

"நீங்க நேரம் களிச்சு வந்தீங்கன்னு நான் இப்பச் சொன்னேனா?"

"நீ சொல்லித்தான் பாரேண்டா. நான் அப்படித்தான் வருவேன். என்ன தபாலா, மேஜைமேலே?"

"ஆமாம் இன்னிக்கு மெயில் நானூறு நிமிஷம் லேட்டாம்."

"நல்ல வேளை. நானூறு வருஷம்னு சொல்லாம இருந்தியே. அட, கர்னல் சுந்தர தாண்டவனா? ஏய் பார்த்தியாடா பத்திரிகையை? கர்னல் சுந்தர தாண்டவன் அனுப்பிச்சிருக்காரு. இவர் யார் தெரியுமா? எங்க அண்ணிக்கு அத்தை மகன். என்னைவிட ஒரு வருஷம் சின்னவரு. மகளுக்குக் கல்யாணம் பண்றாராம். மருமவனும் லேசுப்பட்டவன் இல்லை. சப் கலெக்டர். நீயும் நானும் இருக்கமே. அம்பது ரூபா சம்பளத்துக்கு நீ எங்கிட்டச் சேவகம் பண்ணறே. நான் ஜெனரல் ஆஸ்பத்ரியும் இருபத்துமூணு டாக்டரும் இருக்கிற இந்த ஊரிலே இருநூறு ரூபாய்க்கு மோளம் அடிக்கிறேன். இவனைப் பார்த்தியா? கர்னல் ஆயிட்டான். நீ ஏண்டா நிக்கறே? என் பேச்சைக் கேட்டுக்கிட்டு நின்னா வயிறு ரொம்பிடுமா? போயிட்டு வா."

புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டே ஜீவரத்தினம் நகர்ந்தான்.

"போன தடவை தம்பிக்குக் கல்யாணம்னு பத்திரிகை அனுப்பிச்சிருந்தான். அப்ப மேஜராயிருந்தான். இப்பக் கர்னலாப்

போயிட்டான். ஜீவரத்தினம், உனக்கு எங்கடா இதெல்லாம் புரியப் போறது? நீ எட்டாம் கிளாசுக்கு அப்பாலே எட்டிப் பார்த்ததில்லெ. என் மாதிரி எம்.பி.பீ.யஸ். எல்லா வருஷமும் முதல் பிரைஸ் அடிச்சுப் பாஸ் பண்ணிவிட்டுக் கடைசியில் சாண் ஏறி முழம் சறுக்கற வித்தையிலே அடி பட்டவனாயிருந்தாத் தெரியும்."

டாக்டர் உட்கார்ந்துவிட்டார். அவருடைய உற்சாகத்தில் பனி படர்ந்துவிட்டது. வரிசை வரிசையாக வந்த தோல்விகளின் ஏக்கம் அவரை அழுத்திற்று. அவரோடு படித்தவர்கள் அவரைப் போலச் சாண் ஏறி முழம் சறுக்காமல் முழம் முழமாக ஏறிவிட்டார்கள். அவரைச் சறுக்கிவிட்டது எது என்று புரியவில்லை. சகபாடிகளின் முகங்களும் மலர்ச்சிகளும் அதிகாரமும் மோட்டார்களும் அவர் கண்முன் ஊர்ந்துகொண்டிருந்தன.

"என்ன டாக்டர் சார், திரும்பியே பாக்கமாட்டீங்க போல் இருக்கே."

"அட பார்வதியா, நீ எப்ப வந்தே?"

"நான் வந்து இரண்டு நிமிஷமாச்சு. நீங்க திரும்பிப் பாக்கற வழியாயில்லே. கூப்பிட்டு விட்டேன்!"

"ஒண்ணுமில்லே. என்னமோ யோசிச்சுக்கிட்டே இருந்தேன்."

டாக்டர் முகம் சுண்டிக் கிடந்தது.

"முன்னுக்கு வரது எப்படீன்னு யோசிச்சுக்கிட்டிருந்தேன்."

"வழி கிடைச்சுதா?"

"இன்னும் கிடைக்கவில்லை."

"ஏன்?"

"ஏனா? ஏன்னா?"

கொட்டு மேளச் சத்தம் கேட்டது. வெறும் மேளச் சத்தம் இல்லை. நாயனக்காரன் என்ன வாசிக்கிறான் என்று புரியவில்லை. டடிம் டகு டகு, டடிம் டகு டகு என்று ஒரே சொல்லைத் திருப்பித் திருப்பி நாலைந்து தவுல்காரர்கள் சேர்ந்து அடித்துப் பிளந்துகொண்டு வந்தார்கள். அந்தச் சத்தம் 'எல்லையில்லாத வஸ்துவான சங்கீதத்தையே விழுங்கிவிட்டேன்!' என்று ஏப்பம் விட்டுக்கொண்டே தெருக்கோடியிலிருந்து டாக்டர் வீட்டு வாசலை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது.

டாக்டர் உடனே எழுந்து வாசலுக்கு ஓடிவிடவில்லை. அவர் இந்தச் சத்தத்திற்கெல்லாம் அசைகிறவர் அல்ல.

'டாக்டர் வீடு நல்ல 'ஷகரில்' இருக்கிறது' என்று ஐம்பது வருஷம் முன்னால் அவர் தந்தை அந்த வீட்டை வாங்கியபோது எல்லோரும் சொல்லுகிற வழக்கம். தெருவின் மேலக்கோடி வீடு அது. வாசற்படி இறங்கி இரண்டடி மேற்கே நடந்தால் ராஜவீதி. தெருவைப் பார்த்துக்கொண்டு வைகுண்டநாதர் கோயில் கொண்டிருந்தார். பெருமாள் கொஞ்சம் பெரிய புள்ளி. முந்நூறு வேலி நிலம், மூன்று நான்கு லட்சத்திற்கு நகைகள், இரண்டு பெரிய பிரகாரங்கள், வெள்ளி வாகனங்கள், தங்கத்தில் கருட வாகனம். இவ்வளவு சம்பிரமங்களும் உண்டு. ஆறு கால பூஜை அவருக்கு நடந்ததில் ஆச்சரியம் இல்லை. நாகஸ்வர வித்தைக்கே பிரமாணமாக விளங்கின கிருஷ்ணன் கோயில் மேளக்காரன் – பரம வைஷ்ணவன் என்று அவனைச் சொல்வது வழக்கம் – ஆறு கால பூஜைக்கும் அவன்தான் சேவகம் செய்வான். நாத வெள்ளமாகப் பொழிவான். பொழுது புலருவதற்கு முன்னால் அவன் வாசிக்கிற பௌளி ராகத்தையும் மலயமாருதத்தையும் கேட்டுக்கொண்டுதான் டாக்டர் படுக்கையை விட்டு எழுந்திருக்க வேண்டும். மறுபடியும் ஒன்பது மணி பூஜை, உச்சி காலம், மாலை, இரண்டாம் காலம், அர்த்த ஜாமம்; எல்லா வேளைகளிலும் கால நியதியை ஒட்டி ராகங்களில் சஞ்சரித்துக்கொண்டிருப்பான். கல்யாண மண்டபத்தின் எதிரொலியில் அந்தச் சங்கீதம் விம்மி வளர்ந்து ஆகாய வெளியெல்லாம் முழங்கும்.

மாலை வேளையில் கோயில் நகராக்காரன், மான்யத்திற்கு வஞ்சனை பண்ணிவிடாமல் அரை மணிநேரம் கெத்துவைத்து ஊரையே கிடுகிடுக்க அடித்துவிடுவான்.

டாக்டர் இருக்கிற தெரு ராஜ வீதி நான்கிற்கும் மையமானது. மேல வீதியையும் கீழ வீதியையும் இணைக்கும் வீதி அது. கல்யாண ஊர்வலங்கள் நாலு வீதியையும் சுற்றக் கூடாது என்று ஒரு கட்டுப்பாடு இருந்தது. நாலு வீதி ஊர்வலம் வைகுண்டநாதருடைய தனி உரிமை. மனிதன் மனிதன்தான் என்று இடித்துக் காட்டுவதற்காக, கல்யாண ஊர்வலங்கள் நாலு வீதியையும் சுற்றாமல் டாக்டர் இருக்கிற மைய வீதி வழியாகப் போகவேண்டும் என்று வரைசெய்து வைத்திருந்தார்கள். ஆக, நாலு வீதியில் எந்த முடுக்கில் கல்யாணம் நடந்தாலும், அந்த ஊர்வலங்கள் டாக்டர் வீட்டு வாசலை மிதித்துத்தான் ஆகவேண்டும். ஊர்

பெரிய ஊர். வருஷத்திற்கு ஐம்பது கல்யாணம் என்பது குறைந்த கணக்கு.

அதைத் தவிர, நாலு வீதியிலும் உள்ள சின்னக் கோயில் கடவுள்கள், வைகுண்டநாதருக்கு அபசாரம் செய்துவிடாமல் இருப்பதற்காக இந்தப் பவனி வருகிற விஷயத்தில் மனிதர்கள் மாதிரியே நடந்துகொண்டார்கள்.

டாக்டருக்குக் கொட்டு மேளம் மூச்சுக் காற்றாக மாறிவிட்டது. நாதக் கடலில் அவருடைய உள்ளம் ஆறு காலமும் முழுகிக் கிடந்தது. மற்றவேளைகளில் நாத வெள்ளம் இல்லாவிட்டாலும், கொட்டு மேளமாவது அவர் காதை அறைந்துகொண்டிருக்கும். அவர் காது காய்த்துப் போய்விட்டது. குருதியையும் பிணிகளையும் கண்டு காய்த்துப்போன உள்ளம் போலவே, அபஸ்வரங்களுக்கும் சத்தங்களுக்கும் அவர் செவி காய்த்துப் போய்விட்டது. கொட்டு மேளம் இல்லாவிட்டால் அவருக்கு வேலை ஓடுவதுகூடச் சந்தேகந்தான்.

இந்தத் தவுல் சத்தத்துக்கா அவர் அசையப்போகிறார்?

திடீரென்று அந்தத் தவுல் சத்தத்துக்கிடையே 'ஜே! ஜே!' என்று கோஷம் எழுந்தது. டாக்டர் அசைந்து கொடுத்தார்.

"பார்வதி? அது என்ன சத்தம்? வேல் வேலா, ஜே ஜேயா?"

பார்வதி உற்றுக் கேட்டாள். இரண்டு பேரும் மூச்சை அடக்கி மனத்தைச் செலுத்தினார்கள். புரியவில்லை.

"யாருக்கு ஜயகோஷம்? முருகனுக்கா மனுஷனுக்கா?"

"இன்னிக்கிக் கிருத்திகைகூட இல்லையே. கிருத்திகையாயிருந்தாலும், ராத்திரியா காவடி தூக்குவார்கள்?"

"ஸ்வாமி புறப்பாடோ என்னவோ?"

"அதுக்கு இத்தனை தவுல் என்னாத்துக்காம்?"

"அதுவும் சரிதான்!"

"இதைக் கண்டுபிடிக்க ஒரே வழிதான் தோணுது."

"நானும் அதான் நெனச்சேன். வா." — இருவரும் எழுந்து வாசலுக்குப் போனார்கள்.

தெருப்பாதியில் காஸ் விளக்குகள் வரிசையும் கும்பலுமாக நகர்ந்து வந்துகொண்டிருந்தன. இருபது கஜத்துக்கு முன்னால், நாலு விளக்கை

வைத்துக்கொண்டு பொய்க்கால் குதிரை ஜோடி டம் டிம் டகுடகு என்று கிறுக்கட்டி ஒலித்த ஒற்றைக் கொட்டுக்கு இசைவாக ஆடிக்கொண்டிருந்தது.

"என்னாப்பா சத்தம்?" என்று வாசலில் ஓர் ஆளைப் பார்த்துக் கேட்டார் டாக்டர்.

"எலக்ஸனுங்க! ஆமாம். நம்ப விறகுவாடி மாரியப்ப பிள்ளை ஜெயிச்சுப்பிட்டாரு."

"மாரியப்பபிள்ளை ஜெயிச்சுப்பிட்டாரா?"

"ஆமாங்க."

"போடு சக்கை."

பொய்க்கால்குதிரை போனதும், கொட்டு மேளம் வாசலுக்கு வந்துவிட்டது. நாயனம் நாலு ஜோடி. தவுல்காரர்கள் எட்டுப் பேர். அதே டடிம் டகு டகுவைப் பிளந்துகொண்டே வந்தார்கள். தவுல்காரர்களுக்கு அந்தக் கலையே தேகப்பயிற்சியாகவும் அமைந்துவிட்டதை நினைத்து வியந்தார் டாக்டர். கல்லுக்கல்லாக மின்னும் முண்டாக்கள், வயிறு மார்பெல்லாம் கண்டு கண்டாகத் தசைகள்; அகன்ற வைரம் பாய்ந்த மார்பு, மெல்லிய கழுத்துச் சங்கிலி, தலையில் ஒரு சொருக்கு, மேலெல்லாம் வேர்வை – தவுல் சொன்னபடி கேட்காமல் என்ன செய்யும்?

வாத்தியக்காரர்களுக்குப் பின்னால், 'மாரியப்பருக்கு ஜே! மாரியப்பருக்கு ஜே!' என்று ஒரு பெரிய கூட்டம் கோஷம் போட்டுக் கொண்டு வந்தது. மாரியப்பபிள்ளை மோட்டாரில் உட்கார்ந்திருந்தார். அவர் முகத்தைப் பூ மாலைக்கிடையே தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. புஸ்தி மீசை; ஜவ்வாது பொட்டு; கையைப் பார்த்தால் ஜிப்பாதான் போட்டுக் கொண்டிருப்பார் போல் இருந்தது. டாக்டரைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டார் மாரியப்பர். டாக்டர் அதைவிடப் பெரிய கும்பிடாக போட்டபோது இரண்டு கை நீளம் கிண்டலும் அதில் இருந்ததை மாரியப்பர் அந்த நிலையில் கவனிக்கவில்லை.

ஊர்வலம் வந்த சுருக்கில் தேய்ந்துவிட்டது. காஸ் விளக்குகள் மறைந்ததும் இருள் சற்று அதிகமாகவே இருந்தது. அந்த இருளில் இன்னொரு கூட்டம் கூச்சல் போட்டுக்கொண்டே வந்தது.

முப்பது நாற்பது வாண்டுப்பயல்களும், சோதாக்களுமாகக்

கூடிக்கொண்டு, ‘ஐராவதத்துக்கு ஜே! தியாகி ஐராவதத்துக்கு ஜே!’ என்று கத்திக்கொண்டு வந்தார்கள். டாக்டர் வீட்டு வாசல் விளக்கொளிக்கு முன் வந்ததும், ‘இருங்கடா, டாக்டர் ஐயாகிட்டே ரெண்டு வார்த்தை பேசிக்கிட்டு வரேன்’ என்று பித்துக்குளி ஐராவதம் நின்றான். கழுத்தில் ஏழெட்டு அரளிப் பூ மாலைகள், மார்பு நிறையச் சந்தனம்; ஐராவதம் சிரித்தான்.

“டாக்டர் சார், கும்பிடறேன்!”

“என்ன, முதலியாரா? வாங்க.”

“அரளிப்பூ மாலையையும் சந்தனத்தையும் கண்டு என்னமோ ஏதோன்னு பயந்திடாதிங்க; விரலுக்குத் தகுந்த வீக்கம். அவ்வளவுதான்.”

“ஒண்ணும் புரியலியே!”

“என்ன புரியலே? ‘தியாகி ஐராவதத்துக்கு ஜே!’ன்னு கூப்பாடு போடறாங்களேன்னு யோசிக்கிறீங்களா? ஆமாங்க டாக்டர். நான் மூளையைத் தியாகம் பண்ணிவிட்டேன். மாரியப்ப பிள்ளையைப் பாருங்க – என்னமோ பார்லிமெண்டுக்குச் செலவு பண்றாப் போலப் பண்ணிக்கிட்டு வராரு. இத்தோட விட்டுதுங்கிறீங்களா? நாலு ஜதை நாயனம், பொய்க்கால் குதிரை, இன்னும் கூச்சல் போடறவங்களுக்கெல்லாம் ஸ்வீட்டு, காரம், காபி எல்லாம் வாங்கிக் கொடுத்தாகணும். கடாசியிலெ என்னடாய்யான்னு பார்த்தாத் துக்கினியூண்டு ஊர்லே துக்கினியூண்டு ஏளாவது வார்டுக்கு மெம்பர் – எனக்குப் பாருங்க, செலவே இல்லாம எல்லாம் ஆயிடிச்சி. இந்த அரளிப்பூ மாலையெல்லாம் சத்யமாத் தம்பிங்க வாங்கிப் போட்டதுதான். நான் காசே கொடுக்கலை. கடாசியிலெ இதையும் சொல்லிப்பிடறேன். மாரியப்ப பிள்ளைக்கு எதிராக நான் ஏன் நின்னேன் தெரியுமா? புத்தி நிதானமா இருக்கறவங்கள்ளாமே ஓட்டுக்கொடுக்கறது, புத்தி நிதானமாயிருக்கறவங்களையே தேர்ந்து எடுக்கறதுன்னா, புத்தியில்லாதவங்க கதி என்னா ஆவுறதுன்னு என்னை நிக்கச் சொல்லித் தம்பிங்கள்ளாம் தொந்தரவு பண்ணிட்டாங்க. ஆயிரத்துத் தொளாயிரத்து இருபத்தெட்டாம் வருஷத்துலெ மாரியப்ப பிள்ளை கடையிலே நாலு மணு விறகு வாங்கினேன். ‘மீதி மூணரையணா சில்லறை இல்லே. அப்புறம் வா, தாரேன்’னாரு, இன்னம் கொடுக்கப்போறாரு. நான் அந்தக் கோவத்துனாலெ அவருக்கு எதிராக நிக்கலெ. உள்ளதைச் சொல்லிப்பிடணும் பாருங்க. சரி, நாளியாச்சு, நான் வரட்டுங்களா?”

“செய்யுங்க. எலெக் ஷனானத்துக்கு காபி, கீபி ஒண்ணும் கிடையாதா?”

“அது நீங்கள்ள வாங்கிக் கொடுக்கணும்” என்று கழுத்தை ஒடித்து நீட்டிக் கண்ணைச் சிமிட்டிவிட்டு நகர்ந்தான் ஐராவதம்.

ஐராவதம் உண்மையாகவே பைத்தியமா என்று டாக்டருக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

உள்ளே வந்ததும், “பார்வதி, அதோ அந்தப் பீரோவைத் திறந்து அடித்தட்டிலெ சிகப்பா, சின்னதா ஒரு நோட்டு இருக்கும். அதை எடேன்” என்று சாவியைக் கொடுத்தார்.

“பதினெட்டாவது பக்கத்தைப் புரட்டு. என்ன எழுதியிருக்கு?”

“மாரியப்ப பிள்ளை – முந்நூறு ரூபாய்ன்னு போட்டிருக்கு.”

“போட்டிருக்கறது என்ன? நான் எழுதினதுதான் அது. இது ரொம்ப ரகசியமான தஸ்தாவேஜி. அதனால்தான் உனக்குக் காண்பிக்கணும்னு எடுக்கச் சொன்னேன். இந்த மாரியப்பன் என்னோடெ வாசிச்சவன். அஞ்சாங்கிளாஸ் மட்டும் வாசிச்சு விட்டுட்டான். நான் டாக்டர்னு போர்டு போட்டுத் தொழில் பண்ண ஆரம்பிச்சதுலேருந்து எங்கிட்டத்தான் வைத்தியம் பாத்துக்கிட்டு வரான். ஆனா ஆச்சரியத்தைப் பாரு! காலணாக் காசு எனக்குக் கொடுக்கணும்னு அவனுக்குத் தோணினதேயில்லெ!”

“என்னது!”

“வைகுண்டநாதர் சாட்சியாகக் கொடுத்ததே இல்லை.”

“ஏன் கொடுக்கலெ?”

“வைகுண்டநாதரைத் தான் கேக்கணும்.”

“எலக் ஷன்லெ ஏகச்செலவு பண்ணியிருக்கிறாரே.”

“எனக்குக் கொடுக்கத் தோணலை. அவ்வளவுதான்.”

“நீங்க முந்நூறு ரூவா ஆகிறவரையிலெ அவரைச் சும்மாவா விட்டு வச்சிருந்தீங்க.”

“இன்னமும் சும்மாத்தான் விடப்போறேன்.”

“எதுக்காக?”

“பார்வதி, நான் பணம் வரலைங்கிற கோபத்தினாலெ சொல்லலெ.

மனிதன் எப்பேர்ப்பட்டவன்னு சொல்றதுக்காகத் தான் இதை எடுத்துக் காமிச்சேன்."

"இன்னமும் எனக்குப் புரியலெ. இவ்வளவு செலவு செய்யறவரு ஏன் உங்களுக்குப் பணம் கொடுக்கலெ?"

"அதைத்தான் நான் இப்ப யோசனை பண்ணிக்கிட்டிருக்கேன்."

"நீங்க கேக்கலையா?"

"பில் ஒழுங்கா அனுப்பிக்கறேன்."

"இப்பவும் நீங்கதானே டாக்டரு அவருக்கு?"

"இப்பவும் நான்தான்."

"அவர் வரபோது வாயைத் திறந்து கேட்கக் கூடாதா?"

"பில் அனுப்பிச்சாச்சு. வாயை வேறே திறக்கணுமா?"

"கடன், கேக்காம போச்சுன்னு வசனம் சொல்லுவாங்க. சில ஆளுங்க கேட்டால் ஒழியக் கொடுக்க மாட்டாங்க."

"மாரியப்பன் கேட்டாலும் கொடுக்கப் போறதில்லை. சாதாரணமாக, டாக்டர் என்றால் இந்தக் காலத்திலெ மதிப்பு அதிகந்தான். எந்த உயிரையும் கூண்டை விட்டுப் போயிடாமல் பிடித்து நிறுத்துகிறவன் டாக்டர். உயிர், உடல் ரகசியம் எல்லாம் தெரிந்தவர். சாமான்ய மனிதர்களுக்கு— அதாவது டாக்டரல்லாத மனிதர்களுக்கு — இல்லாத சக்தியெல்லாம் அவருக்கு உண்டு. ரொம்ப சின்ன டாக்டருக்குக்கூட இந்தப் பெருமை உண்டு. அதனால்தான் டாக்டரிடம் ஒரு மரியாதை, பயம் எல்லாம் வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஒரு டாக்டரை முந்நூற்றுச் சொச்ச ரூபாய்க்கு நாமம் சாத்தலாம் என்று மாரியப்பன் முடிவு கட்டிவிட்டான். மாரியப்பன் என்ன கருமியா? ஐராவதம் சொன்னாப்பலே, துக்கினியூண்டு ஊரிலே துக்கினியூண்டு ஏழாவது வார்டுக்குப் பார்லிமெண்டுக்குச் செலவு பண்றாப் போலப் பண்ணிவிட்டான். என்னைக் கண்டால் கொடுக்க வேண்டாம் என்று தோன்றியிருக்கிறது அவனுக்கு. அவ்வளவுதான்."

"உங்களைக் கண்டால் மாத்திரம் அப்படித் தோணுவானேன் அவருக்கு?"

"பார்வதி, அதிருஷ்டம் என்று சொல்லுகிறார்கள். அந்த வார்த்தை பல

பேருக்குப் பிடிக்கிறதில்லை. சோம்பேறிகளின் மந்திரம் என்று நினைக்கிறார்கள். சோம்பேறிகள் சொல்லிச் சொல்லி அந்த வார்த்தைக்கே கெட்ட பெயர் வந்துவிட்டது. ஆனால் எனக்கு அந்த வார்த்தைதான் உயிர். மனிதனுக்குத் தன் முயற்சி அவசியம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் முயன்றால் மனிதன் நூறு மைல் வேகத்தில் ஓட முடியுமா? அதற்கு ரெயிலும் விமானமும் வேண்டும். தானாக இந்த உடம்பை வைத்துக்கொண்டு அந்த வேகத்தில் ஓடுவதற்குத் தவம் வேண்டும்; உறுதி வேண்டும்; அந்தத் தவம் செய்ய நீண்ட வாழ்வு வேண்டும். எல்லா மனிதர்களுக்கும் இந்தச் சக்திகள் கிட்டுமா? என்னைப் போன்ற சாமான்யமான மனிதர்களுக்கு அதிருஷ்டந்தான் தேவை. அசாதாரணமான திறமையும் சக்தியும் உள்ளவர்கள் சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்துவிடுகிறார்கள். அப்படி இல்லாத என்னைப் போலொத்தவர்களுக்கு நான் சொன்ன அதிருஷ்டந்தான் வேண்டும். அது எனக்குக் கிடையாது. இருந்திருந்தால் அது மாரியப்பன் காதில் போய், "ஏண்டா பயலே; டாக்டர் பணத்தை இன்னும் கொடுக்கலெ?" என்று கட்டாயமாகக் கேட்டிருக்கும். அதிருஷ்டத்தை நம்பி நாளை ஓட்ட வேண்டுகிறவர்களில் நானும் ஒருவன்."

"மாரியப்ப பிள்ளை முந்நூறு ரூபாய் கொடுக்காவிட்டால் குடி முழுகிப் போய்விடாது. உங்களுக்கு என்ன அதிருஷ்டக் குறைவு வந்துவிட்டது இப்போது?"

"இதோ பாரு, கல்யாணப் பத்திரிகை வந்திருக்கிறது."

"இது யாரு? கர்னல் சுந்தர தாண்டவனா?"

"அவன் மகளுக்குக் கலியாணம். மருமவன் யாருன்னு பாத்தியா?"

"மருதவாணன் எம்.ஏ., ஐ.ஏ.எஸ்., சப் கலெக்டர்."

"நீ என்ன நினைக்கிறே?"

"இரண்டு இடமும் பெரிய இடந்தான்."

"இந்தச் சுந்தர தாண்டவன் எனக்கு ஒரு வயசு சின்னவன். நாற்பத்திரண்டு வயசாகிறது. எங்க அண்ணன்தான் அவனுக்கு மிலிடரியிலே வேலை பண்ணி வச்சாரு. அந்தக் காலத்துலெ வெள்ளைக்காரன் ஆண்ட காலத்துலே – நாமெல்லாம் ராணுவ ஆபீசரா ஆறதுன்னா ஜலஸ்தம்பனம் வாயுஸ்தம்பனம் பண்ணுகிற மாதிரிதான். அண்ணன் மனசு வச்சாரு; தாண்டவன் மிலிடரி ஆபீசராயிட்டான். அவன்

புத்திக்கும் சாமர்த்தியத்திற்கும் எடை போட்டு வேலை கொடுக்கிறதுன்னு ஆரம்பிச்சா — அதை நான் சொல்லுவானேன்? ரெயில் போர்ட்டர் எல்லாம் சண்டைக்கு வந்திடுவாங்க. அதாவது அவன் அப்பன் இருந்த நிலையிலே சொல்றேன். இப்ப அவன் கெட்டிக்காரனா மாறியிருக்கலாம். என்ன சிரிக்கிறே? நீயானும் சிரிக்கிறே. இந்த மாதிரி வேடிக்கையாப் பேசறேன்னு. பேசிட்டுத்தான் நான் பெருமாள்கோயில் தேர் மாதிரி இருந்த இடத்துலேயே உட்கார்ந்துக்கிட்டிருக்கிறேன். இல்லாட்டி, நானும் இப்பக் கர்னலாயிருக்க வேண்டியவன் தான்."

"யாராவது ஆபீசரைப் பார்த்து ஏதாவது இந்த மாதிரி பேசினீங்களாக்கும்?"

"ஆபீசர் கிட்ட பேசலே. ஆபீசர் பெண்ஜாதிகிட்டப் பேசினேன். பிடிச்சுது சனி. வெறெ யாரும் இல்லெ. எங்க அண்ணிகிட்டத்தான். என் கூடப் பிறந்த அண்ணன் பெண்ஜாதி கிட்டத்தான் பேசினேன். இந்தத் தாண்டவன் என் அண்ணிக்கு அத்தை மகன். அண்ணாரு அப்ப மீரத்திலெ இருந்தாரு. அண்ணி ஊருக்கு வந்திருந்தா. நான் இன்டர் பரீட்சைக்குப் போயிட்டே இருந்தேன். அண்ணி ஊருக்குக் கிளம்பற அன்னிக்கி இந்தத் தாண்டவன் வந்து சேர்ந்தான். அவனையும் கூட அளச்சிக்கிட்டு அவனை மிலிடரியிலெ இழுத்து விடறதாக ஏற்பாடு பண்ணியிருந்தாங்க அண்ணி. சாப்பிடறப்போ வேடிக்கையாப் பேசிக்கிட்டிருந்தேன் நான். 'மிலிடரி டிபார்ட்டுமென்டே அண்ணி ஆளாவே போயிடும் போல் இருக்கே'ன்னு சிரிச்சுக்கிட்டே சொன்னேன். உலகத்துலே எப்பவும் அண்ணிங்களே ஒரு தனி ஜாதீன்னு எனக்கு எண்ணம். கொழுந்தன் சொல்றதெல்லாம் அவகளுக்குத் தேனா இருக்கும். பெத்த புள்ளை மாதிரி கொழுந்தனை மதிக்கிறவ அண்ணிதான்னு எனக்குத் தீர்மானம். எங்க அண்ணியும் அப்படித்தான் இருப்பாங்க. ஆனா அந்தச் சமயத்துலெ அண்ணி சிரிக்கலெ. மொலு மொலுன்னு அம்மாகிட்டப் போய்ப் பிடுங்கித் தின்னுக்கக் கிளம்பிட்டாங்க. 'அம்மா, நாங்க என்னம்மா பண்ணுவோம்? அவுங்க அவுங்க தலையெளுத்துப்படிதானே நடக்கும்? உங்க பெரிய புள்ளைக்குக் கத்தியும் கபடாவும் எடுத்துச் சண்டை போட்டுப் பொளைக்கணும்னு இருக்கு. எப்பிடியோ வயித்தை வளக்கிறோம். காக்கிச் சட்டைதான் எங்களுக்குக் குலதெய்வம். அதுதான் எங்களுக்குச் சோறு போடுது. அது ஒண்ணும் ஈனாயமா, கௌரவக் குறைச்சலாகப் படலெ. அவுங்க அவுங்க மனுசங்களை அவுங்க அவுங்க கவனிச்சுக்கறதும் என்ன தப்பு? மறுபடியும் சொல்றேன், தின்ன உப்புக்கு உளைக்கிறாங்க அவங்க. அந்த

மாதிரி வேலை ஈனாயமாப் படலெ அவுங்களுக்கு. அப்படி நெனச்சிக்கறவங்க வேறே வேலைக்குப் போகட்டுமே, இந்த உலகம் எவ்வளவோ பெரிசு' அப்படி இப்படீன்னு பொரிஞ்சு கொட்டிப்பிட்டா. நான் அப்படியே பிரமை புடிச்சாப் போல உக்காந்துப்பிட்டேன். அப்ப அம்மாகூடச் சொன்னாங்க.

"என்னம்மா சொல்லிப்பிட்டான், சிறிசு. அண்ணியாச்சேன்னு வேடிக்கையாய்ப் பேசிட்டான். நானும் கேட்டுக்கிட்டுத்தான் இருக்கறேன். தவறுதலா ஒண்ணும் சொல்லிவிட்டதாகத் தெரியலியே"ன்னு சொன்னாங்க அம்மா.

"வேடிக்கையாவது? என்ன பச்சைக் குளந்தையா? இடம் பொருள் ஏவல் இருக்கு எல்லாத்துக்கும்" என்று திருப்பினாள் அண்ணி.

"அடியம்மாவே. என்னென்னமோ பேசக் கிளம்பிட்டியே? . . . ஏய் துரைசாமி, துடைப்பக்கட்டே. உனக்குக் குட்டிச்சுவருக்கு ஆவுறாப்பலே வயசாச்சே, நாக்கை அடக்கி ஏண்டா பேசத் தெரியலே?"ன்னு அம்மா என்னைக் கோவிச்சிட்டாங்க.

"அண்ணியை ரெயில் ஏற்றி விடும்போது மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். அண்ணி முகங்கொடுத்தே பேசலை. போய் என்ன வத்தி வச்சாங்களோ? அண்ணன் ஆறுமாசம் காயிதமே போடலை. அப்புறம் ஒருவருசமும் காத்துக்கிட்டிருந்தேன். சரி, காக்கிச்சட்டைக்கு நாம் கொடுத்து வக்கலேன்னு டாக்டருக்குப் படிச்சேன். கர்னல் அதிர்ஷ்டம் மலை ஏறிடிச்சி."

"அதிர்ஷ்டம் என்ன செய்யும்? நீங்க கொஞ்சம் ஜாக்கிரதையாப் பேசியிருக்கணும்."

"அந்த அஜாக்கிரதையைத்தான் நான் அதிர்ஷ்டம்னு சொல்றேன்."

"சண்டை நடக்கிறபோது டாக்டரெல்லாம் போனாங்களே."

"அதுவா? நான் வெள்ளைக்காரன் சண்டையிலே சேர்றதுக்கு இஷ்டமில்லாமெ, போகலேன்னு சில பேரு சொல்லிக்கிறாங்க. அதுவும் உண்மைதான். ஆனால் சண்டைக்கு முந்தியே எனக்குக் காக்கிச்சட்டை கசந்து போச்சு. ஒரு தடவை இந்தியா முளுக்கச் சுத்தினேன். புனாப்பக்கம் போனேன். என் சிநேகிதன் ஒருத்தன் லெப்டினன்டா இருந்தான். ஒரு சிறுபையனைச் சிப்பாய் ஆஸ்பத்திரியிலே வேலைக்கு வச்சிருந்தான். அந்தப் பையன் திடீர்னு ஒரு நாளைக்கு அழுதுகொண்டு வந்தான்.

நானும் சிநேகிதனும் பேசிக்கிட்டிருந்தோம். இந்தப் பையன் வேஷ்டி கட்டிக்கிட்டு அவன் ஆபீசர் – ஒரு மேஜர் – அவன் முன்னாலே போய்நின்னானம். ‘என்னப்பா, கௌபீனம் கட்டிக்கிட்டு வரதுதானே, மரியாதைகெட்டவனே! ஆபீசருக்கு முன்னாடி வர டிரஸ்ஸாடா இது?’ன்னு கேட்டானாம் அந்த மேஜர். பையன் சுடச்சுட பதில் கொடுத்திருக்கான். ‘மேஜர் ஐயா, நம்ம தேசத்துலே கௌபீனங் கட்டிக்கிட்டு அலையறவங்களுக்கு மதிப்பு அதிகம். அந்த மதிப்புக்கூட இந்த வேட்டிக்குக் கொடுக்க மாட்டேங்கறீங்களே!’ன்னு சொல்லியிருக்கான் பையன். ‘வாயை மூடுடா பிச்சைக்காரப் பயலே!’ன்னு கத்தினான் ஆபீசர். ‘ஒரு ஆபீசர் வாயிலிருந்து வர வார்த்தையா இது?’ன்னு பையன் கேட்டிருக்கான். உடனே அந்த ஆபீசர் எளுந்து பளார் பளார்னு இரண்டு கையாலேயும் மாறி மாறி அந்தப் பையனைக் கன்னத்திலெ இழுத்துப்பிட்டான். பையன் அழுதுகொண்டே ஓடி வந்துவிட்டான். அதுக்கு என் சிநேகிதன் என்ன சொன்னான் தெரியுமா? ‘போடா போக்கத்த களுதை! அவன் சொன்னானாம், இவன் எதிர்த்துப் பேசினானாம். பணிஞ்சு போகாத நாயில்ல நீ? மேலே இருக்கறவங்க சொன்னா என்னடா குடி முளுகிப் போச்சு? இடைவெட்டுப் பண்ணிவிட்டு இஞ்ச வந்து அளுவிறியே? உனக்கு வேலை பண்ணிவச்சதற்கு நல்ல கைம்மாறுடா. ஏண்டாலே, எதிர்த்துப் பேசினயே, உனக்கு வேலைக்குச் சிபார்சு பண்ணினேனே நான்; என்னைப்பத்தி அவன் என்ன நினைச்சுப்பான்னு யோசிச்சியாடா, பிச்சைக்காரப்பயலே!’ன்னு ஒரு மணி நேரம் குலைச்சுத் தள்ளிப்பிட்டான். அவன் சொன்னதை நான் இப்ப முளுக்கச் சொல்லலே. புழுத்த நாய் குறுக்கே போகாது, அந்த மாதிரி வசவுகள். நான் அப்படியே அதிர்ந்து போயிட்டேன். பையனும் இடிந்து போய் நின்றான். என் நண்பன் எப்படி இவ்வளவு மூர்க்கனானான்? ராணுவத்து வெள்ளைக்காரன் சகவாசமா? அப்புறம் அந்தப் பையன் தனியாக என்னிடம் வந்தான். ‘ஸார், உங்க சிநேகிதர்தான் வேலை பண்ணி வச்சாரு. அதை நெனைக்காட்டி நான் சோத்துக்குப் பறக்கணும். இருந்தாலும் என் மனசிலே பளுவை யாருகிட்ட பாத்யத்தோட சொல்லி இறக்கிக்கறது? இந்த ஊர்லே இவருதானே எனக்கு எல்லாம். இவர்கூட இப்படிப் பேசிப்பிட்டாரு பாத்தீங்களா? நான் சின்னப் பையன்தான். ஆனா எனக்கும் சின்னதா ஒரு நெஞ்சு சின்னதா ஒரு சுய மரியாதை எல்லாம் இருக்குதால்லியா?’ என்று என்னிடம் வந்து வேதனைகளைச் சொல்லித் தீர்த்துக்கொண்டான். மறுநாளைக்கே கால்கடுதாசையும் நீட்டிவிட்டு, நான் வரும் போது என்னோடு ஊருக்குக் கிளம்பி வந்திட்டான். அன்னிக்கி முடிவு கட்டினேன், ‘இந்தக் காக்கிச் சட்டை

போடக் கூடாது’ன்னு. ‘மிலிடரிக்குப் போறதைவிட மிருகத்தனம் கிடையாது’ன்னு அன்னக்கி முடிவு கட்டினேன். மிலிடரியிலே இருக்கறவங்க எல்லோரும் மிருகம்னு நான் இப்பச் சொல்ல வரலை. அப்படி நினைக்கவும் இல்லை. என்னைப் பத்தினவரையில் நம்ம சிநேகிதன் அடிச்ச கூத்தும், பையன் சொன்ன சொல்லும் என்னை உலுக்கி விட்டிடிச்சு. அந்தப் பையன் யார் தெரியுமா? நம்ம கம்பவுண்டர் ஜீவரத்தினம்தான்.”

“நம்ம கம்பவுண்டரா, ஜீவரத்தினமா?”

“ஆமாம்.”

“அவரும் சோடைதான்னு சொல்லுங்க.”

“ஏன்!”

“இல்லை. இவ்வளவு துடியாயிருந்தவரா மாரியப்ப பிள்ளையை அறஞ்சு பணத்தை வாங்காம இருக்கார் இன்னமும்?”

“பார்வதி, ஜீவரத்தினத்தை மருந்து கலக்கிற வேலைக்குத்தான் வச்சிருக்குறேன். கணக்கும் நிலுவையும் என் வேலை.”

“உங்க அதிருஷ்டத்தை யாராவது சரிப்படுத்திடப் போறாங்களேன்னு பயமாக்கும் உங்களுக்கு!”

“மாரியப்பனை ஒரு கோடியாகத்தானே காட்டினேன். நம்ம அதிருஷ்டம் மாரியப்பனுக்கு அந்தப் புத்தியைக் கொடுத்திருக்கறப்போ, ஜீவரத்தினமா அதை மாற்றிவிட முடியும்? அப்புறந்தான் நான் சறுக்காமல் ஏறியிருக்கக் கூடாதா? நானும் பெரிய டாக்டர் வேலைக்கெல்லாம் எழுதிப் போட்டேன். ஆனா என் அதிருஷ்டம் எனக்கு முந்தியே ரெயில் ஏறிப் போக ஆரம்பிச்சிது. வைகுண்டநாதருக்கு என்னை விட இஷ்டமில்லேன்னு தெரிஞ்சுக்கிட்டேன். இந்த ஊர்தான், இந்த வீடுதான் நமக்குச் சரீன்னு தங்கிப்பிட்டேன். பேப்பரைப் பார்க்கறபோது கொஞ்சம் நப்பாசை தட்டும் அடிக்கடி. ஆனா ஒரு ஆச்சரியம் பாரு. எந்த வேலைக்கும் நம்மை விட ஒண்ணு இரண்டு வயசு குறைச்சலாகவே கேப்பாங்க எல்லாரும். இந்தப் பய எங்கயாவது அப்ளிகேஷன் போட்டுறப் போறானோன்னு பயந்துக்கிட்டே விளம்பரம் கொடுத்தாப் போலத் தோணும். ஆச்சுடாப்பா, நானும் நாளைக் கடத்திப்பிட்டேன். இன்னமே இந்த நப்பாசையே வராது. முப்பத்தஞ்சு, இல்லாட்டி நாற்பது வயசுக்கு மேலே ஒருத்தருமே வாண்டாமாம் இப்ப” என்று இடி இடித்தாற் போலச் சிரித்தார் டாக்டர்.

அவர் முகம் மலர்ந்துவிட்டது.

"காலம் ஒத்துக்கறதுன்னு சொல்றாங்களே, அதுதான் இது. நீ கூட எட்டாங் கிளாசுக்கு இங்கிலீஷ்ப் பாடம் சொல்லிக் கொடுப்பியே, 'லேட் லத்தீப்னு' அது நான்தான். இப்பத்தான் லேட் லத்தீபானதும் நல்ல காரியம்னு தெரியுது" என்று பார்வதியைப் பார்த்துச் சிரித்தார்.

"தாமதமா இருக்கிறவங்களும் நல்லாத்தான் இருப்பாங்க" என்று சிரித்தாள் பார்வதி. "அது சரி, மாரியப்பனை ஒரு கோடியாய்க் காட்டினேன்னு சொன்னீங்களே. வேற எதாவது வரவேண்டியது இருக்கா?"

"பார்வதி, நீ கேக்கறதைப் பாத்தா எனக்குச் சந்தேகமாயிருக்கே!"

"என்ன?"

"இன்கம் டாக்ஸ்காரன் மாதிரி கணக்குக் கேக்கிறியேங்கறேன். கலியாணம் ஆறதுக்கு முந்தியே இப்படிக் கணக்குக் கேக்கக் கிளம்பிட்டா, அப்புறம் நான் எங்கே போறது? பேசாம, கல்யாணப் பெண்ணா, லக்ஷணமா வெக்கப்பட்டுக்கிட்டு இருப்பியா! அதோ பாரு, அந்தச் சேப்பு நோட்டு முளுக்க வராத கடன் எல்லாம் எளுதி வச்சிருக்கேன். பத்துப் பதினஞ்சுன்னு வராத கேசு ஐந்நூறு இருக்கும். சேர்மன் மாரியப்ப பிள்ளைக்கு அடுத்தாப்பலே பாரு, இருக்கா? எவ்வளவு!"

"நாலாயிரம்."

"விச்வலிங்கமையர்தானே?"

"ஆமாம்."

"பத்திரிகை நடத்தப் போறேன்னு நாலாயிரம் கை மாத்துக் கேட்டாரு. கொடுத்திருக்கேன். அதுதான் நல்ல புள்ளி."

"கைமாத்தாவா?"

"கைமாத்துத்தான்."

"பத்திரம் கித்திரம் கிடையாதா?"

"இந்தா, சும்மா இரேன். ரொம்ப அவசரம்னு கேட்டாரு. கொடுத்தேன். ஆறு வருஷமாச்சு. நான் பட்டணம் போற போதெல்லாம் அவரைப் போய்ப் பார்க்க ஒழியறதில்லை. போன வருஷம் போனபோது நேரம் இருந்திச்சு. போனேன். ஆபீஸ்கிட்டப் போறப்போ பணத்துக்கு

வந்திருக்கானோன்னு பயந்துக்கப் போறாரேன்னு திரும்பிட்டேன்."

"நீங்க பயப்படலியாக்கும்?"

"கேளேன். இரண்டு மாசம் முந்தி, பேச்சு வாக்கிலே, 'நீங்க ஒரு கார் வாங்கப்படாதா?'ன்னு கேட்டியா? எனக்கும் அது சரீன்னுதான் பட்டுது. போனவாரம் ஜீவரத்தினம் பட்டணம் போயிட்டு வந்தான் பாரு. அப்ப ஒரு வார்த்தை கேளுடாப்பான்னு சொல்லியிருந்தேன். போய்க் கேட்டானாம். 'டாக்டர் பணம் பத்திரமா இருக்குன்னு சொல்லு. என் பிராணன் போறதுக்குள்ள நான் கொடுத்திடப் போறேன்'னு சொன்னாராம் என்று டாக்டர் இடிச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே, "அவரு தீர்க்காயுசா இருக்கட்டும். காரில்லாம காலா ஒடிஞ்சு போச்சு? எப்படியாவது பத்திரிகை நடந்தாச் சரி" என்று முடித்து மூச்சுவிட்டார். மறுபடியும் சிரித்தார். பார்வதிக்கு அமிருத பானம் செய்கிற மாதிரி இருந்தது அந்தச் சிரிப்பு.

"அந்த நோட்டுத்தான் உனக்கு ஸ்ரீதனம். நீ எடுத்துக்க."

"நீங்க எனக்கு ஸ்ரீதனம் கொடுக்க வாண்டாம். நான் உங்களைத்தான் கல்யாணம் பண்ணிக்கப்போறேன். இந்தச் சேப்பு நோட்டையோ, உங்க அதிருஷ்டத்தையோ கல்யாணம் பண்ணிக்க வரலை."

"அப்படி வா வழிக்கு; அப்ப நிச்சயமா என்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கப்போறேன்னு முடிவு பண்ணிப் பிட்டியா?"

"ஐயோ, இதென்ன இரைச்சல்! நாலு தெருவுக்குக் கேட்குதே!"

"வாடாய்யா, இப்பல்ல கல்யாணப் பொண்ணா லட்சணமாயிருக்கு. கொஞ்சங்கூட வெக்கப்படாம கல்யாணம் பண்ணிக்கிடலாம்னு பாத்தியா?"

பார்வதி முகம் சிவக்கத் தலை குனிந்து ஸ்டெத்தாஸ்கோப்போடு விளையாடிக் கொண்டிருந்தாள்.

"என்னமோ பிரசங்கம் பண்ணிப்பிட்டேன்னு நெனச்சுக்காதே. ஏதுக்குச் சொல்ல வந்தேன்னா, முன்னுக்கு வரதுங்கறது சில ஆட்களுக்குத்தான் முடியும். மாரியப்பன் மாதிரிதானே கொட்டு மேளம் கொட்டிக்கணும். இல்லாட்டி இன்னொருத்தரை விட்டு, 'இவரு இந்திரன் சந்திரன்'னு கொட்டச் சொல்லணும். மாரியப்பன் மாதிரி நம்மாலெ செஞ்சுக்க முடியாது. எங்கண்ணாரும் எனக்காகக் கொட்ட மாட்டேன்னிட்டாரு. நான் சொல்றது சரிங்கறதுக்குச் சாட்சி பாரு. கோயில்லெ கொட்டு மேளம்

கொட்டுது. அர்த்த ஜாமக் கொட்டு மேளம். நம்மைப் படச்ச பெருமாளுக்கே கொட்டு மேளம் கொட்ட வேண்டியிருக்கு. இல்லாட்டி அவரு காலமே எளுந்திரிக்கறதும் தூங்கப் போறதும் யாருக்குத் தெரியும்? நாம் பாட்டுக்குத் தூங்கிக்கிட்டே கிடப்போம். கொட்டு மேளம் கொட்டினாத்தான் ஜயிக்கலாம். ஜயிச்சாலும் கொட்டு மேளம் கொட்டலாம்."

"அப்பன்னா நீங்க தோல்வியடைஞ்சவரா!"

"நான் இப்ப அந்த மாதிரியா பேசறேன்? கொட்டு மேளம் ஆண்டவனுக்குத்தான் வேணும்; எனக்கு வேண்டியதில்லே. நான் அவரைவிட உசத்தி, தெரியுமா?"

டாக்டர் அகந்தையே உருக்கொண்டு ஓங்கி நின்றார். உலகத்தின் சிறுமையெல்லாம் அவர் காலடியில் கிடந்தது. பார்வதி அவரையே பார்த்துக்கொண்டு விசுவரூபம் எடுத்து நின்ற அவருடைய வெற்றியைப் பார்த்துக்கொண்டு நின்றாள். அர்த்தஜாமக் கொட்டு மேளம் திடீரென்று ஓய்ந்தபோதுதான் அவள் விழித்துக்கொண்டு, "டாக்டர், நான் உங்களுக்குத் தகுதியானவள்தானா?" என்று தழுதழுத்தாள்.

"சீ சீ பைத்தியம்! இந்தப் பொம்மனாட்டித்தனந்தானே வாணாம்னு சொல்றேன்!" என்று டாக்டர் அவள் முகத்தைத் தட்டிக்கொடுத்தார்.

டாக்டருக்கு அன்று இரவு தூக்கம் பிடிக்கவில்லை. உடலிலும் அயர்வு இல்லை. எழுச்சிகொண்டு, மொட்டை மாடிக்குப் போய் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தார். வராத கடன், சருக்கல்கள், கிட்டாத வாழ்வு – எல்லாத் தோல்விகளும் திரண்டு வந்து வெற்றியாகவே காட்சியளித்தன. அண்ணியிடம் போய், 'அண்ணி, நான் பைத்தியக்காரன். குழந்தை மாதிரி உளறிவிட்டேன்' என்று மன்னிப்புக் கேட்க வேண்டும் போல் இருந்தது. விசுவலிங்கம் ஐயரிடம் போய், 'உங்களுக்கு எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருகிறேன். கவலைப்படாதீங்க' என்று சொல்ல வேண்டும் போல் தோன்றிற்று. நிறைவும் திருப்தியும் நக்ஷத்திரங்களைப் போல அவருடைய நெஞ்சு வெளியை நிறைத்துக்கொண்டிருந்தன. அவர் நெஞ்சு பொங்கி வழிந்தது. 'எடுத்த காரியம் யாவினும் வெற்றி; விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி' என்று பிலகரி ராகத்தில் வீர ரசத்துடன் பாடிக்கொண்டிருந்தார்.

அவர் ராகத்திற்குக் கீழ்ப்படிந்து பொழுதும் புலர்ந்துவிட்டது. சற்று முன் கறுத்து மங்கி நின்ற கருமேகத் துண்டுகள், அவருடைய தோல்வி

வெற்றியானது போல, கதிரொளி பட்டுத் தகதகவென்று தங்கமாகக் கனிந்தன.

0

கல்யாணப் பதிவு ஆபீசை விட்டு வெளியே வரும்போது டாக்டருக்குக் கொஞ்சம் மனசு சிரமமாகத்தான் இருந்தது. கனிந்த குரலில் சொன்னார்: "பார்வதி, ஆயுளிலேயே கல்யாணம் முக்கியமான கட்டம். அதுக்குக் கூடக் கொட்டு மேளம் இல்லாம போயிடிச்சுப் பாத்தியா?"

பார்வதி – அவர் முகத்தைப் பார்த்தாள்.

"அந்தக் கல்யாணத்தைக் கூடக் கொட்டு மேளம் இல்லாமல் நடத்திவிட்டோம் என்று நான் அகம்பாவப்பட்டுக்கிட்டிருக்கேன்! நீங்க அங்கலாய்க்கிறீங்க."

"சபாஷ்!" என்றார் டாக்டர்.

"என்ன சபாஷு? தோத்துப்போன பேச்சுப் பேசி விட்டுச் சபாஷாம்?"

"நானா தோத்துப் போயிட்டேன். பார்வதி இதைப் பாரு, மாரியப்பனுக்குச் சேர்மனாயிடிச்சாம். இன்னிக்கி அதுக்காக மறுபடியும் ஊர்வலம் விடப்போறாங்களாம். என்ன செய்யறேன் பாரு!"

"என்ன செய்யப் போறீங்களாம்?"

"பாரேன்."

இரவு சேர்மன் மாரியப்பபிள்ளை ஊர்வலம் போனபோது, 'தர்ம வைத்தியசாலை' என்று டாக்டர் வீட்டு வாசலில் வெளிச்சப்பலகை தொங்குவதைப் பார்த்துப் பிள்ளைவாள் யோசனையில் ஆழ்ந்துவிட்டார்.

மொட்டை மாடியில் டாக்டரும் பார்வதியும் அந்த முகத்தைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தார்கள்.

"மாரியப்பன் யோசிக்கிறான் பாத்தியா?"

"டாக்டரைய்யா பிழைக்கத் தெரியாதவர்னு யோசிக்கிறாரு" என்று பார்வதி சிரித்தாள்.

கலைமகள், செப்டம்பர் 1951

# சண்பகப் பூ

குடியிருக்கிற கிழவர் தந்தியை வாசித்துச் சொல்லி விட்டு வெலவெலவென்று துவண்டு உட்கார்ந்துவிட்டார். கோசலையம்மாள், விழுந்த இடியை விழவேண்டிய இடத்தில் தள்ளுவதற்காகக் கிணற்றங்கரைப் பக்கம் ஓடினாள். அங்கே அந்தப் பெண் குளித்துக்கொண்டிருந்தது. நெருப்புக்கு வடிவு கொடுத்தாற்போல் இருந்த உடலின் தக தகப்பின் மீது ஒட்டியும் ஒட்டாமலும் செம்பினின்றும் ஒழுகிய நீர் வழிந்து ஓடிற்று. பந்தாகச் சுருட்டிப் பின்னந்தலையில் செருகப்பட்டிருந்த பின்னலின் வெல்வெட்டுச் சிவப்பு ரிப்பன் எழுந்து வளைந்து தொங்கிற்று.

“குஞ்சலமே, மஞ்சளை அப்பிக்கிண்டு முழுகறையே, மகமாயி மாதிரி! கரியைப் பூசிப்பிட்டுப் போய்விட்டானேடி பாவி! முடிச்சை முழுங்கிப்பிட்டுப் போயிட்டானேடி பாவி, பாவி!”

பெற்ற வயிற்றிலிருந்து பீறின அலறல் தொண்டைக் கட்டியை அறுத்து எழுந்தது.

“அம்மா, அம்மா!”

கூடத்திலிருந்து இதைப் பார்த்துக்கொண்டிருந்த கிழவர், “ரத்தப்பூவடி அது, ரத்தப் பூ. சண்பகப் பூ மூந்தால் மூக்கில் ரத்தம் கொட்டும். அதான் மண்ணாய்ப் போயிட்டான்” என்று மனைவியைப் பார்த்துச் சொன்னார். இந்த வார்த்தையைச் சொன்ன பிறகுதான், பிரமிப்பில் ஏறி நின்ற சோகத்தின் அதிர்ச்சி கண்ணீராகக் கரைந்தது. விசிக்க ஆரம்பித்து, வாயை மூட முடியாமல், விட்டுக் கதறினார்.

ஈரம் சொட்டச் சொட்ட, பெண்ணைக் கூடத்திற்கு அழைத்து வந்தார்கள். அடுத்த வீடுகள் அமங்கலியும் சுமங்கலியுமாகத் திரண்டுவிட்டன. பெண்ணை நடுவில் போட்டுச் சுற்றி உட்கார்ந்துவிட்டார்கள்.

கிழவர் தலை தூக்கிப் பார்த்தார். பெண்ணின் பின்னல் அவிழ்ந்து அலங்கோலமாகக் கண்ணையும் மூக்கையும் மறைத்து விழுந்திருந்தது. அதிர்ந்தவர்களும் அநுபவஸ்தர்களும் கலந்து எழுப்பிய குரல்களுக்கும் ஆலிங்கனங்களுக்கும் நடுவில் பெண்ணின் குரலும் முகமும் புதைந்து

போயிருந்தன.

சம்பகப் பூவோடி, நீ

கம்முனு, மணத்தை யோடி,

மூந்து பாக்கிறேன்னு மூக்கிலே வச்சு

மண்ணில் புதைந்தானே, உன்னை

மண்ணில் புதைச்சானே . . .

என்று கிழவரின் மனைவி, அதிர்ச்சி நிலையைக் கடந்து சம்பிரதாயத்துடன் அழுதாள்.

கிழவர் மெதுவாக வாசல் திண்ணைக்குப் போய்ச் சாய்ந்துவிட்டார்.

அரை மணிக்கு முன்னால்தானே அது பதினைந்தாம் புலி ஆடிக்கொண்டிருந்தது! "தாத்தாவை (புலியை)க் கட்டிவிட்டேன்! கட்டிவிட்டேன்!" என்று கிடந்து கூத்தாடிற்றே! அரை மணி கூட ஆகவில்லையே! அதற்குள் இந்த விபரீதமா!

பதினெட்டு வயசு முடியவில்லை. குங்குமக் கிழவிகள் கட்டிப் புலம்பல் ஆகிவிட்டதே! பச்சைப் பெண்.

பெண்ணா அது! மண்ணில் பிறந்த பெண்ணும் ஆணும் முயங்கி வடித்த மனுஷ்யப் படைப்பா அது?

கிழவர் வெகு நாளாக இந்தக் கேள்விகளைக் கேட்டுக்கொண்டது உண்டு. பதில் என்ன சொல்லிக்கொண்டோம் என்று அவர் நினைத்துப் பார்த்தார். குழப்பந்தான் மிஞ்சிற்று.

இந்த இனிமைப் புதையலை எடுத்த தாயும் தந்தையும் விண்ணவள் மேனகையும் மன்னவன் விசுவாமித்திரனுமா? அதெல்லாம் ஒன்றும் இல்லை. கோசலையம்மாள் எல்லாக் குடும்பத்திலும் காண்கிற நடுத்தர ஸ்திரீதான். பங்கரையாக இருக்கமாட்டாள்; சப்பை மூக்கில்லை; சோழி முழியில்லை; நவக்கிரகப் பல்லில்லை; புஸுபுஸுவென்று ஜாடி இடுப்பில்லை; தட்டு மூஞ்சி இல்லை; எண்ணெய் வழியும் மூஞ்சியில்லை; அவ்வளவுதான். அவலட்சணம் கிடையாது. அழகு என்று சொல்லும்படியாக ஒன்றும் இல்லை. மாநிறம்.

அவள் புருஷன் ராமையா இருந்தாரே, அவரும் அப்படித்தான்.

குட்டையில்லை; கரளையில்லை; இரட்டை மண்டையோ, பேரிக்காய் மண்டையோ இல்லை; கோட்டுக்கண்ணோ, ரத்த முழியோ இல்லை; இவ்வளவெல்லாம் எதற்கு? ஓகோ என்று மாய்ந்து போகும்படியான அழகன் இல்லை. சற்று நின்று பார்க்கத் தேவையில்லாத எத்தனையோ ஆண்களில் ஒருவர்.

அவர்களுக்குத்தான் இந்தப் பெண் பிறந்திருந்தது – தேங்காய்க்கும் பூவன் பழத்திற்கும் நடுவில் நிற்கிற குத்து விளக்கைப் போல. படைப்பின் எட்டாத மர்மத்தைக் கண்டு வியந்துகொள்ளும் கிழம். காவியத்தில் அழகுக்குப் பஞ்சம் இல்லை. ரம்பையும் அபரஞ்சியும் மலிந்து கிடக்கிற அந்தக் கும்பலில் சாமானியர்களே தென்படுவதில்லை. சாமுத்ரிகைச் சின்னங்களை அறுபத்து நாலாகக்கூட விரிக்க முற்பட்டுவிட்டார்கள் போல் இருக்கிறது, காவ்ய நாயகிகள். ஆனால் மன்னார்குடி ஒற்றைத் தெருவில், ஒரு தாழ்ந்த வீட்டில், சாமான்யக் கோசலைக்கும் சாமான்ய ராமையாவுக்கும் ஒரு புதையல்! – கிழவர் ஆச்சரியப்பட்டதில் வியப்பில்லை.

தெம்புள்ள வீடுகளில் ஊட்டம் உண்டு. நடுத்தரங்கூட ஊட்டத்தில் பொலிவும் மெருகும் பெற்று எடுப்பாக நிற்கிறது. இங்கே அதுவும் இல்லை. ராமையா பள்ளிக்கூட வாத்தியார். அரைப்பட்டினி ஆரம்ப வாத்தியாராயில்லாமல், எல்.டி. வாத்தியாராயிருந்தாலும் பத்தாம் தேதிக்குப் பிறகு கடன் இல்லாமல் வாழ்ந்ததில்லை. செத்தும் போய்விட்டார். வைத்துவிட்டுப் போனது குழம்பு, ரசத்திற்குக் காணும். இருந்தும், பெண், 'ஜர்ட்சு வீட்டுப் பெண் மாதிரி இருக்கிறதே!' என்று கிழவரின் மனைவி திகைப்பாள்.

கிழவருக்கு வேலை ஒன்றும் இல்லை. பிள்ளைகள் சம்பாதித்துப் பணம் அனுப்புகிறார்கள். இங்கிலீஷ் நாவல், ராமாயணம், கீதை, குறள், வடுவூர் என்று அறிவை அவியல் உருவில் சேர்த்துக்கொண்டும், வெற்றிலையும் பொடியும் போட்டுக்கொண்டும், வேடிக்கைப் பேச்சிலும் எண்ணங்களிலும் காலம் கழிகிறது. கூட, புதையலைக் கண்டு வியப்பது அவருக்கு முக்கியமான வேலை. பலனை நோக்கிச் செய்யாத நித்தியக் கடமை போல அவருக்கு ஆச்சரியப்படுவது தினசரிக் கடமை. மனத்திற்கு வேலை வேண்டுமே.

மலர்ந்து இரண்டு நாளான கொன்னைப் பூவைப்போல வெண்மையும் மஞ்சளும் ஒன்றித் தகதகத்ததையும் நீரில் மிதந்த கரு விழியையும் வயசான துணிச்சலுடன், கண்ணாரப் பார்த்துப் பூரித்துக்கொண்டிருந்தார்.

'அது என்ன பெண்ணா? முகம் நிறையக் கண்; கண் நிறைய விழி; விழி நிறைய மர்மங்கள்; உடல் நிறைய இளமை; இளமை நிறையக் கூச்சம்; கூச்சம் நிறைய நெளிவு; நெளிவு நிறைய இளமுறுவல், இது பெண்ணா? மனிதனாகப் பிறந்த ஒருவன் தன்னது என்று அநுபவிக்கப்போகிற பொருளா?

கிழவருக்கு இந்த எண்ணந்தான் சகிக்க முடியவில்லை. லக்ஷ ரூபாய் லாட்டரி விழுந்த செய்தி கேட்டானாம் தோட்டி. ஹா! என்று மாரடைத்துக் கீழே விழுந்து செத்தானாம். இந்த முழுமையைத் தனது என்று சொல்லிக்கொள்ளக் கொடுத்து வைத்தவன் இருக்கிறானா? அப்படித்தான் புருஷன் என்று சொல்லிக்கொண்டு வருகிறவனுக்கு இதைத் தொட்டு ஆள மனசு வருமா? தொட்டுவிட்டால் . .?

கல்யாணம் செய்யத்தான் போகிறார்கள். ரோஜாப் பூவை அரைத்துக் குல்கந்து தின்கிற நாசகார உலகத்தில் ஒருவன் இவளை வந்து தொட்டு ஆண்டு, தாயாக்கி, பாட்டியாக்கி எல்லோரையும்போல மனுஷியாக்கத்தான் போகிறான். தேயா இளமையும் தெவிட்டாக் கேளியும் கந்தர்வ லோகத்தில்தான்.

கிழவருக்கு வருத்தந்தான் – அந்தப் பெண், உலகம் தவறிப் பிறந்துவிட்டதே என்று.

கடைசியில் அதற்கும் கல்யாணம் ஆகத்தான் ஆயிற்று. பெண் பார்க்க வந்தான் பையன். கூடத் தாயும் தகப்பனும் தமையனும் வந்தார்கள். 'தேவலை' என்று தாயாரிடம் அடக்கமாகச் சொல்லி முகத்தில் நிரம்பி வழிந்த ஆவலைத் தேக்கிக்கொண்டான் பையன். 'ஒரு பிடி குட்டையாக இருக்கலாம்; பரவாயில்லை' என்று வழக்கத்தையும் மீறாமல் நொட்டைச்சொல் சொல்லி சம்பந்தியம்மாள் தன்மையைக் காட்டிக்கொண்டாள் தாயார். தகப்பனார், தாயார் பேச்சை ரசிக்காமல், அதற்காகக் கோபித்தும் கொள்ளாமல் முகூர்த்தத்திற்கு நாள் பார்க்கச் சொன்னார். தமையன் – கல்யாணமானவன் – தம்பியைக் கண்டு பொறாமைப்படாதவாறு மனசைக் கடிந்துகொண்டான். 'இரட்டை நாடியாயிருந்த பெண்டாட்டி, கெட்டிக்காரி; இங்கிதம் தெரிந்தவள்' என்ற ஆறுதலில் குறையை அமுக்கிச் சந்தோஷத்தைக் காட்டிக் கொண்டான்.

கிழவர் ஓடுகிற பாம்புக்குக் கால் எண்ணுகிறவர். இந்த விசித்திரங்களைப் பார்த்து மகிழ்ந்தார். அதுதானே அவருக்கு வேலை.

பாக்கு, வெற்றிலை மாற்றிக்கொண்டார்கள். பந்தற்கால் முகூர்த்தம்

செய்தார்கள். காவிப்பட்டை அடித்தார்கள். மேளம் கொட்டித் தாலி கட்டியாகிவிட்டது.

பையன் சுமார்தான்! ஒல்லி. ஒடிந்துவிழும் உடல்; கூனல், சராசரிக்குக் குறைந்த புஷ்டி. நீள வகை. கால், கை, மூஞ்சி, விரல், மூக்கு எல்லாம் நீளம். சதைப்பற்று இல்லாதது, நீளத்தை இன்னும் நீட்டிக் காட்டிற்று. பாங்கியில் குமஸ்தா வேலையாம் அவனுக்கு. பொருத்தம் சுமார்தான். எப்படி இருந்தால் என்ன? அதிருஷ்டக்காரன்! கிழம் வயிற்றெரிச்சல் பட்டது. 'தன்னது என்று சொல்லிக்கொள்ளக் கொடுத்துவைத்தவன் இருக்கிறானா? இருக்கிறானே! கையைப் பிடித்துத் தனதாக்கிக்கொண்டு விட்டானே!'

பெண் புக்ககம் கிளம்பிற்று. கிழவரின் திருட்டுத்தனத்திற்கும் சாமர்த்தியத்திற்கும் ஈடு கொடுத்துக்கொண்டு பதினைந்தாம் புலியும் சதுரங்கமும் ஆட இனி ஆள் கிடையாது. கிழவருக்கு வலது கை ஒடிந்துவிட்டது.

'இதைப்பாரு, அவருக்கும் பதினைந்தாம்புலி கற்றுக் கொடுக்கிறேன்னு சொல்லு. உங்கிட்டக் கத்துக்கச் சங்கோசப் பட்டார்னா எனக்கு ஒரு கார்டு எழுது. நான் வந்து நாலு நாள் இருந்து சொல்லித்தரேன். காசு, பணம் வேண்டாம்மா. உன் கையாலே அந்த நாலு நாளைக்கு ரவா சொஜ்ஜியும் வாழைக்காய்ப் பஜ்ஜியும் உருண்டைக் கொட்டைக் காபியும் போட்டுக்கொடு, போதும்' என்று தெரிவித்துக்கொண்டார் கிழவர்.

'இப்பவே வாங்கோ தாத்தா' என்று தழதழப்புடன் வேடிக்கை பண்ணிவிட்டு வண்டியில் ஏறிக்கொண்டது பெண்.

கிழவர் இந்த வாழ்க்கை ரெயில் சிநேகத்தை நினைத்து வேதனைப் பட்டுக்கொண்டே கலகலப்பை நாடிக் கடைத்தெருப் பந்தலடியைப் பார்க்க நடந்தார்.

இதெல்லாம் நடந்து ஒரு வருஷந்தான் ஆகியிருக்கும். நடுவில் இரண்டுமுறை பெண் வந்துவிட்டுப் போயிற்று. அது வந்தபோதெல்லாம் தவிட்டுப் பீப்பாயில் கிடந்த பதினைந்தாம் புலிப்பலகையை எடுத்து ஈரத்துணியால் துடைத்து சாக்கட்டிக்கோடு கிழித்துத் தயார் செய்துவிடுவார் கிழவர். காலைக் காபியைச் சாப்பிட்டுவிட்டு இரண்டு பேரும் ஆட உட்காருவார்கள். நாலு ஆட்டமாவது புலியைக் கட்டினால்தான் அவளுக்கு எழுந்திருக்கக் கால் வரும். பத்து மணிக்குப் பின்னலைத் தூக்கிச் சுருட்டிப் பின்னந்தலையில் செருகிக்கொண்டு

சோப்புப் பெட்டியும் துண்டுமாகக் கிணற்றடிக்குப் போவாள். சாப்பாடு ஆனதும் ஒரு பத்து ஆட்டம். இரண்டு பேரையும் கிளப்ப, எங்காவது பட்டணம் கொள்ளை போனால்தான் உண்டு. இது பத்துப் பதினைந்து நாளைக்கு. சிரிப்பும் கூத்துமாக நாடகம் ஆடிவிட்டுக் கடைசியில் கிழவரைப் பறக்கவிட்டுவிட்டுச் சென்றுவிடுவாள் அவள். பந்தலடியில் நாலு நாள் வாசம் செய்யும் கிழம்.

இப்போது மூன்றாந் தடவையாகப் புக்ககம் வந்திருக்கிறது பெண். வந்து நாலு நாள் ஆயிற்று.

அரை மணிக்கு முன்னால் அவரோடு 'கர்வம்' கட்டிக்கொண்டு பதினைந்தாம் புலி ஆடிக்கொண்டிருந்தது. ஆட்டம் முடிந்து அது குளிக்கப் போனதும் அவர் சாப்பிட்டுக் கையலம்பிவிட்டு, வெற்றிலையைப் போட்டுக்கொண்டு, 'அப்பாடா' என்று துண்டை விரித்தார். இரண்டு நிமிஷம் ஆகியிராது. வந்துவிட்டான் சிகப்புச் சைக்கிள்காரன். தலையில் ஓங்கி அடித்துவிட்டுப் போய்விட்டான்.

அடுத்த வண்டியில் ஏறிப் பட்டணத்திற்குப் போனார்கள், தாயும் பெண்ணும் சவத்தைப் பார்க்க. யாரோ அடுத்த தெருவில் இருந்து சொந்தக்காரர் அழைத்துப்போனார்.

கிழம் அழுதது. "இது ஏன் பிறந்தது? இவ்வளவு அழகாக ஏன் பிறந்தது? எதற்காக இத்தனை அழகு? நாசமாய்ப்போகவா? கல்யாணம் ஏன் செய்துகொண்டது? சந்தியில் நிற்கவா? 'புருஷனை முழுங்கிவிட்டது' என்று தோசிப் பட்டம் கட்டிக்கொள்ளவா?" என்று கேள்விக்கு மேல் கேள்வியாகக் கேட்டுக்கொண்டது.

'எனக்கு அப்பொழுதே தெரியும். சண்பகப் பூவை மூந்து பார்த்தால் மூக்கில் ரத்தம் கொட்டும். வாசனையா அது? நெடி. அதை யார் தாங்க முடியும்? சாதாரணமாயிருந்தால் சரி. மோகினியைக் கட்டிக்கொண்டால் கபால மோக்ஷந்தான். தொலைந்தான்' என்று பதிலும் சொல்லிக்கொண்டது.

மனைவியைக் கூப்பிட்டுச் சொல்லிற்று. "என்னடி, மனுஷ்யப் பிறவியாய் இருந்தால் மனுஷனுக்கு மாலை போட்டுச் சந்தோசமா வாழலாம். இதுதான் அக்னி மாதிரி இருக்கே, தகதகன்னு. இப்படி ஒண்ணைச் சிருஷ்டிச்சிப்பிட்டு, மனுஷக் காக்காய் கொத்திண்டு போறதைப் பார்த்துண்டு பேசாமல் இருக்குமா தெய்வம்?"

"பின்னே பிறந்து தொலைப்பானேன்?"

"நம்மையெல்லாம் அசடா அடிக்க வாண்டாமா? தெய்வத்துக்கு அதைவிட வேலை கிழிக்கிறதோ?"

"என்னமோ, மலையிலிருந்து உருட்டறாப்போல உருட்டிப்பிட்டு நிக்கிறது அகமுடையானை. துடைகாலி" என்று கிழவி சொன்னாள்.

"நான் சொல்றது தாண்டி தத்துவம்."

"அப்படியே இருக்கட்டும்" என்று அலுத்துக்கொண்டாள் கிழவி.

0

மறு நாளைக்கு மறுநாள் பெண்ணும் தாயும் திரும்பி வந்தார்கள். பையனுக்கு ஒரு நாள் ஜுரம் அடித்ததாம். பிரக்ஞை இழந்து கிடந்தானாம். மறுநாள் காலையில் முடிந்துவிட்டதாம். பெண்ணை வாத்தியாரம்மா வேலைக்கு வாசிக்க வைக்கலாமா என்று கோசலையம்மாள் யோசித்துக்கொண்டிருந்தாள். மாப்பிள்ளையின் தமையன் ஏற்பாடு செய்வதாகச் சொல்லியிருக்கிறானாம்.

0

ஏழாம் நாள் காலையில் பத்து மணி இருக்கும். கிழவர் எங்கேயோ வெளியில் போய்விட்டுக் கால் அலம்புவதற்காகக் கிணற்றங்கரைக்குப் போனார்.

அந்தப் பெண் தலையை இழையச் சீவிப் பிடியில் அடங்காப் பின்னலைப் பின்னந்தலையில் எடுத்துச் செருகிச் சிவப்பு வெல்வெட்டு ரிப்பன் வளைந்து தொங்க, மூஞ்சியில் சந்தன சோப்பைத் தேய்த்துக் குளித்துக்கொண்டிருந்தது. கல் மோதிரம் பூரித்த இடதுகை ஆள்காட்டியும் கட்டை விரலும் கண்கரிச்சலை வழித்துக்கொண்டிருந்தன.

கிழவருக்குத் 'திக்'கென்றது. தலை நிமிராமல் காலை அலம்பிவிட்டு உள்ளே வந்தார். நெஞ்சு அடித்துக்கொண்டது.

சாப்பாடு கொள்ளவில்லை. சாதத்தைப் பிசைந்துகொண்டு கிழவியிடம் சொன்னார் மெதுவாக: "துக்கம் பாராட்டக்கூட வயதாகவில்லை. குறைப்பட்டுப் போயிடுத்துப் பாரு" என்று.

"என்ன செய்யறது? தலையெழுத்து."

"கொல்லையிலே பார்த்தியோ, இல்லியோ?"

“என்ன”

“என்னவா?”

“என்ன? சொல்லட்டுமே.”

“தெரிஞ்சுண்டு பதில் சொல்றயாக்கும்னு நெனச்சேன். போய் எட்டிப் பார்த்துட்டு வா.”

கிழவி எட்டிப் பார்த்துவிட்டு வந்தாள்.

“என்ன வாரல், என்ன சீவல்! என்ன சோப்பு. நலங்குக்குப் போகப் போறாப்போல்னா நடக்கிறது?” என்று மலைத்துப் போய் முகவாயில் கை வைத்துக்கொண்டாள்.

“விவரம் தெரியாத வயசுடீ. தெய்வம் இருக்கே, அந்த முட்டாளைன்னா சொல்லணும். துக்கத்தை நெனைக்கக்கூடத் தெரியாத நெஞ்சிலேருந்து தாலியை இழுத்துப் பிடுங்கிடுத்தே, அதைச் சொல்லு.”

“ரொம்ப அதிசயமாயிருக்கு, பேசறது. ஒரே அப்பாவியான்னா அடிச்சாறது. விவரம் தெரியாத வயசாம்; இப்பப் போன கார்த்திகைக்குப் பத்தொன்பது முடிஞ்சிடுத்து. நான் சுந்தரத்தையும் கமலியையும் பெத்தெடுத்த வயசு! விவரம் தெரியாத வயசாம்!”

கிழவியின் முதல் இரண்டு குழந்தைகள் சுந்தரமும் கமலியும். கமலியைப் பிரசவிக்கும்போது பத்தொன்பதுகூட ஆகவில்லை என்று கிழவி புள்ளிவிவரம் கொடுத்தாள்.

“தெரிஞ்சுண்டே செய்யறதுன்னு நினைக்கிறாயா?”

“அது என்னமோ? ஒரே அப்பாவியாக ஆக்கறது எனக்கு வேண்டியிருக்கலெ. உலகம் தலைகீழே நிற்கிறது இப்பெல்லாம்.”

‘சீ, இந்தப் பீடையோடு பேச வந்தோமே: நல்லது என்னைக்கி இது வாயிலே வந்தது’ என்று மனசிற்குள் சொல்லிக்கொண்டு மேலே பேசாமல் மோர் வரையில் சாப்பிட்டு எழுந்தார் கிழவர்.

குளித்துவிட்டுப் பனாரஸ் பச்சைப் பட்டுப் புடைவை கட்டிக்கொண்டு, ஒன்றுமே நடக்காததுபோல் பேசிச் செய்துகொண்டிருந்தது பெண். வாசனைத் தேங்காயெண்ணெய் தடவி இழைய வாரின தலை. சந்தன சோப்புத் தேய்த்த உடல். குங்குமம் இல்லாவிட்டால் என்ன? சுமங்கலிக்கே குங்குமப் பொட்டுக் கர்னாடகம் ஆகிவிட்டதே. வெண்தாழை மாதிரி

பளிச்சென்று கூடத்திற்கும் சமையல் உள்ளுக்கும் நடந்து காரியம் செய்து கொண்டிருந்தது அது. காரியம் ஓய்ந்தபோது ஓட்டையும் சூன்யத்தையும் வெறித்துப் பார்த்து உட்கார்ந்திருக்கவில்லை. புஸ்தகத்தை எடுத்து எழுத்தில் லயித்திருந்தது. கிழவர் பார்த்தார். கிழவியை, 'பீடை பீடை' என்று மனத்திற்குள் வைதார்.

எட்டாம் நாள் போயிற்று. ஒன்பதாம் நாள் போயிற்று. கூந்தல் சீவிப் பளபளத்தது. நுரையில் முழுகி முகம் ஒளிர்ந்தது.

பத்தாம் நாள் பின்னலை அவிழ்த்துக் கூந்தல் ஆக்கி, அடித்துக்கொண்டு அழுதுவிட்டுப் போனார்கள். அன்று சாயங்காலமே பின்னல் கருநாகம் போல நீண்டு தொங்கி ஆடிற்று. அழுக்கைச் சோப்பு நுரை கழுவிவிட்டது.

'இந்தக் குழந்தையை இப்படி அடித்துவிட்டதே விதி' என்று கிழத்தின் கண் அழுதது.

கிழவிக்குக் கிழத்தின் பார்வையும் பரிவும் வயிற்றெரிச்சலைக் கிளப்பிவிட்டன.

0

நாள் ஓடிற்று. பதினைந்தாம்புலிப் புலியும் ஆடுகளும் அழியாத பகையை மீண்டும் துவங்கிவிட்டன.

நாலாந்தேதி. அவன் செத்துப்போன தேதி. ஒரு மாதம் முடிந்திருந்தது. அன்று மாப்பிள்ளையின் தமையன், கோசலை அம்மாளுக்குக் கடிதம் எழுதியிருந்தான். பள்ளிக்கூடத்தில் சேர்க்க ஏற்பாடு ஆய்விட்டதாம். எட்டாந்தேதி வந்து அழைத்துப் போவதாக எழுதியிருந்தான்.

"சமுத்திரத்தில் பாய்கிற நதி பயிருக்குப் பாயட்டுமே" என்று சின்னஞ்சிறு முகங்கள் நிறைந்த பள்ளிக்கூடத்து அறையைக் கிழவர் மனக்கண்முன் கண்டார்.

முதல் இரவே பயணத்துக்கு ஏற்பாடெல்லாம் ஆய்விட்டது. காலையில் மாப்பிள்ளையின் தமையன் வந்தான்.

"ஐயா, நான் நினைக்கவே இல்லை இப்படி வரும்னு" என்று கிழம் மேலே பேச முடியாமல் கதறிற்று.

சாப்பாடானதும் அவனிடம் சொல்லிற்று: "வீட்டில் சாணி அள்ளிண்டு

உட்காரணுமா? உங்க யோஜனை சஞ்சீவி மாதிரி இருக்கிறது எனக்கு. குழந்தைக்கு நல்ல வழியா வகுத்து விடுங்கோ, சந்தோஷமாயிருக்கட்டும்."

"அது என் கடமை தாத்தா" என்றான் அவன்.

பொழுது சாய்ந்ததும், ஒற்றை மாட்டு வண்டி வாசலில் வந்து நின்றது.

"கோசலே, சந்தோஷமாயிருக்கட்டும்டீ பொண்ணு" என்று விடை கொடுத்தாள் கிழவரின் மனைவி.

பெண் வண்டியில் ஏறிற்று. முன்னால் இருந்த மூட்டையை நகர்த்தி ஏற இடம் பண்ணினான் அவன்.

நாணம் புன்னகை பூக்க, பெண் வண்டியில் ஏறிற்று. தாயார் ஏறினாள். அவனும் ஏறி ஓரத்தில் ஒட்டி உட்கார்ந்துகொண்டான்.

"போய்ட்டு வரேன் தாத்தா."

"ஆஹா."

வண்டி மறைந்தது, கிழவர் திண்ணையில் உட்கார்ந்துகொண்டார். கிழவி ஆளோடியில் நின்று சொன்னாள்.

"ரத்தப்பூவாம், எல்லா மூக்கும் ரத்தம் கொட்டாது, சண்பகப்பூவை மூந்து பார்த்தா! என்ன சிரிப்பு, என்ன நெளிசல்; அவள் அகமுடையான் உயிரோடுதான் இருக்கான். அதான் நெளியறது. குழந்தையைப் பார்க்கலே!"

"ஏ தோசி, உள்ளே போறயா இல்லையா?" என்று கிழவர் கபோதிக் கோபத்தில் அதட்டினார்.

கிழவியின் குறி தப்பாது என்பது அவர் அநுபவம்.

தேனீ, ஆனி 1948

# ரசிகரும் ரசிகையும்

“திருவையாத்லே ஆராதனை என்னிக்கி?”

“நாலாம் நாள்.”

“நீங்க போகப் போறேளா?”

“நீங்க போகப் போறேளான்னா? மார்க்கண்டம் இல்லாமல், பதினஞ்சு வருஷமாத் திருவையாற்று உற்சவம் நடக்கலியே!”

“எப்பப் போகப் போறேள்?”

“இன்னிக்கி ராத்திரி.”

“சொல்லவே இல்லியே.”

“உங்கிட்டச் சொல்லணுமா, பருப்பில்லாமல் கல்யாணம் நடக்காதுன்னு?”

“ஆராதனையன்னிக்கிக் காலமே அங்கே போய்ச் சேர்றாப் போல் போனாப் போறாதா?”

“ஏன்?”

“என் உடம்பு இப்படி இருக்கேன்னுதான் சொல்றேன்.”

“உடம்புக்கென்ன பிரமாதம்? டாக்டரைக் கேட்டேன். இன்னும் ஏழெட்டு நாள் செல்லும்னு சொன்னார். அவரும் நித்யம் வந்து கவனிச்சிக்கறேன்னு சொல்லியிருக்கார். புரசவாக்கத்துக்கும் உங்க அத்தைக்கும் வரச் சொல்லிக் கடுதாசி போட்டிருக்கேன். நாளைக்கு வந்துடுவள். அருணாசலமும் இருக்கான் கூப்பிட்ட குரலுக்கு. அவசியமாயிருந்தா ஆம்புலன்ஸுக்கும் ஏற்பாடு பண்ணச் சொல்லியிருக்கேன், எக்மோர் ஆஸ்பத்திரிக்கு அழச்சிண்டு போகச் சொல்லி. அப்புறம் என்ன கவலை?”

“அருணாசலம்?”

“அவனை அழச்சிண்டு போகலை.”

“வெத்தலைப் பெட்டியை யார் தூக்குவா?”

“வெத்தலைப் பெட்டி தூக்கச் சிஷ்யந்தானா? எத்தனையோ கெஸட்டட்

ஆபீஸரெல்லாம் காத்திண்டிருக்கான் அதுக்கு. அருணாசலத்தை இப்ப ஸ்பெஷல் ட்யூட்டிலே, போட்டிருக்கேன். மெடர்னிட்டி டிபார்ட்மென்டைக் கவனிச்சுக்க வேண்டியது அவன். சரிதானே?"

"சிரிச்சுக்குங்கோ. இந்தச் சிரிப்பு ஒண்ணுதான் குறைச்சல். உலகத்துலே எங்கேயும் கோபுரத்தைப் பொம்மை தாங்கிண்டு நிக்கறதாகத் தெரியலை. உற்சவத்துக்குப் போறாளாம்!"

"பொம்மை தாங்க வாண்டாமே கோபுரத்தை. பொம்மை இல்லாட்டாக் கோபுரத்துக்கு அழகேது!"

"இந்தா, அசடே, கண்ணைத் துடைச்சுக்கோ. சன்னதியிலே போய் உட்கார்ந்து ரெண்டு பாட்டாவது பாடாட்டா எனக்கு நிம்மதி இராது. அதுகூட முடியாட்டா இது என்ன ஜன்மம்? இந்த வைரத்தோடு, இந்த வீடு, இந்தப் பட்டம் எல்லாம் அந்தத் தியாகப் பிரும்மம் கொடுத்ததுடீ. வருஷத்துக்கு ஒரு நாள் . . . எங்கே கிடைக்கப் போறது."

"எனக்குப் பேச வாயில்லியே."

"போயிட்டு வான்னு சொல்லு, ஒரு வார்த்தை. ஆராதனை அன்னிக்கி ராத்திரியே ரெண்டு பாட்டுப் பாடிப்பிட்டு போட் மெயில்லே கிளம்பி ஓடி வந்துடறேன். சொல்லு, போயிட்டு வான்னு."

"வாயாலே சொல்லுங்கோ போரும். கன்னத்தை வேறே நிமிண்ட வாண்டாம். குழந்தைகள் வந்து பார்த்து வைக்கப் போறது!"

"பின்னே சொல்லு."

"சரி, போய்ட்டு வாங்கோ."

"அப்பா, ராஜ ராஜேஸ்வரிகிட்டத் தவங்கிடக்கறாப் போலெ கிடக்க வேண்டியிருக்கு."

"உங்க காரியம் ஆயிட்டுதோல்லியோ; சிரிச்சுக்குங்கோ. எனக்கு இப்படியெல்லாம் நாடகம் ஆடத் தெரியலியே."

"பாத்தியா!"

"ஆராதனையன்னிக்கி ராத்திரி, கட்டாயம் புறப்பட்டு வந்துடணும். நான் வாசலெப் பாத்துண்டே இருப்பேன், காலமே."

“பிள்ளைவாள், இப்படி வாருமே, கீழ நின்னுண்டிருப்போம்.”

“இருக்கட்டுங்க. காத்து, சில்லாப்பா அடிக்குது. வண்டி கிளம்ப எத்தனை நிமிஷம் இருக்கு?”

“அது இருக்கு, பத்து நிமிஷம்.”

“குளுரு தாங்கலீங்களே, கீள நிக்கிறீங்களே?”

“என்னையாது? மிருதங்கத்தைத் தட்டப் போறவர் இப்படிப் பயந்து செத்தீர்னா எனக்கு என்னமாய்யா இருக்கும் பாடறவனுக்கு?”

“அதான் சொல்றேன், உள்ள வந்திடுங்கன்னு. தொண்டை கட்டிக்கிட்டா என்ன செய்யறது?”

“நன்னாப் பயப்பட்டீர்! வாரும்யா இப்படி.”

“எனக்கு இஞ்ச இருந்தே தெரியுதே.”

“என்ன தெரியுது?”

“உங்களை எல்லாச் சனங்களும், ‘இந்தப் பார்றா மார்க்கண்டம், இந்தப் பார்றா மார்க்கண்டம்!’னு வேடிக்கை பாத்துக்கிட்டு நிக்கிறது.”

“அட யமனே! நான் அதுக்காக நிக்கலைய்யா! காத்துக்காக நிக்கறேன்.”

“நல்லா நில்லுங்க. தை மாசத்து ஊதல்தானே. உடம்புக்கு ரொம்ப நல்லது. ஒரே பக்கமாப் பாக்கிறீங்களே. இப்படியும் அப்படியும் திரும்புங்க. கொஞ்சம் அசைஞ்சு கொடுத்தாத்தானே கடுக்கன் டாலடிக்கிறது தெரியும்.”

“அப்புறம்?”

“உங்களுக்கு என்ன ஐயா? எல்லா வித்வான் மாதிரியா இருக்கீங்க! நல்ல முகவெட்டு, நல்ல ஒசரம், நடு வயசு, நல்ல படிச்ச களையும் இருக்கு.”

“படிச்ச களையா? ஓய், பஸ்ட் பாரம் பாஸ் பண்ணிருக்கேன்யா, மூக்குப்பொடிக் கந்தசாமி ஐயர் பள்ளிக்கூடத்துலே.”

“பின்ன என்னாங்க. அதுவே பிரளயம். நல்ல வேளை அத்தோட நிறுத்தினீங்களே! மேலே படிச்சு, கணக்கப்பிள்ளை வேலைக்குப் போகாமெ!”

“ஏன் நிறுத்திப்பிட்டீர்?”

“உள்ளார வாங்க சொல்றேன். சிறுசுங்கள்ளாம் உங்களைப் பாக்கறதைக் கண்டாப் பயமாயிருக்கு எனக்கு. கண்ணாலேயே பாதி ஆளைத் தின்னுடும் போலெ இருக்கு! திருவையாத்துக் கண்களுக்குப் பாதியாவது மிஞ்சட்டும். இந்தப் பொண்ணே உங்களைத் தின்னுடும்போல இருக்கே.”

“யாரு, அந்தச் சேப்பு ஸாரியா?”

“ஆமாம். நீங்க வாங்க.”

“நானும் கவனிச்சுண்டுதான் இருக்கேன். ஓய், முகம் என்ன அமைச்சல் பாத்தீரா? மூக்கைப் பாருமே, வெள்ளரிப் பிஞ்சு மாதிரி.”

“உங்களைத்தான் பாத்துக்கிட்டே நிக்கிது. நானும் தலையை ஜன்னலுக்கு வெளியிலே நீட்டிக்கிட்டு இருக்கிறேன். எம் பக்கம் திரும்பக்கூட மாட்டேங்குது. ம்ஹ்ம்.”

“நீர் மொட்டை. கிராப்பு வச்சுக்கணும் எம்மாதிரி.”

“அது போதுமா? அட்டைக் கறுப்பு, சர்க்கார் மம்மிட்டி மாதிரி பல்லு. என்னைப் பார்க்கலேன்னு நான் அளுதா? ‘சீ பேசாம இரு’ன்னு தெய்வமே கன்னத்துலே நாலு அறஞ்சிட்டுப் போயிரும்.”

“அந்த மூக்கைப் பாருமே . . . என்ன எடுப்பு! என்ன எடுப்பு! ஆஹா!”

“சும்மா முறைக்காதீங்க. கட்டின புள்ளையாண்டான் பக்கத்துலே நின்னுக்கிட்டிருக்கான். என்னடாது கொஞ்சங்கூட இனம் தெரியாதவனா இருக்காங்கன்னு நெனச்சுக்கப் போறான்.”

“நெனச்சா நெனச்சுக்கட்டும். இந்த அழகைப் பார்க்காத கண்ணு இருந்தா என்ன, அவிஞ்சா என்ன? அழகைப் பார்த்து ரசிக்க எல்லாருக்கும் பாத்யமுண்டுய்யா. அப்படிப் பார்க்கப்படாதுன்னு சொன்னா, படைச்சானே பிரும்மா, அவனைத்தான் குறை கூறணும்.”

“அப்பன்னா, இப்ப சும்மாத்தான் பாக்கறேள்னு சொல்லுங்க.”

“ஆக்ஷேபம் என்ன?”

“சரி.”

“உலகத்துலே எவ்வளவோ அழகு எத்தனையோ தினுசா இறைஞ்சு

கிடக்கு. சாந்தோம் பீச்சிலே உட்கார்ந்துண்டு அலையைப் பாக்கறோமே, அது ஒரு அழகு. மன்னன் தியாகையர் கீர்த்தனம் பண்ணினாரே அது ஒரு அழகு."

"அப்பன்னா தியாகையர் கீர்த்தனமும் இதுவும் ஒண்ணுன்னு சொல்லுங்க."

"அது ஒரு அழகு, இது ஒரு அழகு."

"நான் வாத்யத்துலே குடுக்குற ஒரு 'குமுக்குக்'குங்கூட இது காணாதுன்னுல்ல நெனச்சுக்கிட்டிருக்கேன். பெரிய குண்டாத் தூக்கித் தலையிலே போட்டுட்டீங்களே."

"ஆமாம். உம்ம குமுக்கைத் தூக்கி உடைப்பிலே போடும். இந்த மூக்கு நுனியிலே இருக்கிற அழகை எட்டிப் பிடிக்கறதுன்னா உம்ம குமுக்கு ஏணி வச்சுண்டு ஏறணும், தெரியுமா?"

"சரி, ஏணிக்குச் சொல்றேன். நீங்க உள்ளாற வாங்க, கெடக்கு; இந்தப் பொண்ணு மாத்திரமில்ல. இந்த ஸ்டேசன்லெ இன்னும் பத்துப் பதினஞ்சு பொம்பிளை, நூறு ஆம்பிளெ எல்லாரும் உங்களை முளுங்கிக்கிட்டு நிக்கிறாங்க. திருவையாத்துக்குக் கொஞ்சம் மிஞ்சியிருக்கட்டும். ஏற்கனவே உங்க உடம்பு இளைச்சுக் கிடக்கு. இந்தப் பாவிப் பயலுவ, பாட்டில் மேலே கையை வச்சானுவளே, அதைச் சொல்லுங்க. தோசி பிடிச்சவங்க. என்னமா, நிகுநிகுன்னு இருந்த உடம்பு! எப்படியிருந்த தாடை! அப்படியே வத்திப் போயிடிச்சே! பொட்டிக்குள்ளார ஏதாவது வச்சிருக்கீங்களா? வச்சிருந்தா வெளியே தூக்கிப் போட்டுடுங்க. வண்டி வண்டியா வந்து ஸர்ச்சுப் போடறானுவளாமே!

"ஆ, ஸர்ச்சா! நெஜம்மாவா!"

". . . என்னாங்க உள்ளார வந்தீட்டீங்க! பயந்து பூட்டிங்களே! சும்மால்ல சொன்னேன்."

"அட பாவி, வயத்துலெ நெருப்பள்ளிப் போட்டுட்டீரே, ஒரு ஸெகண்டிலே! உம்மோட உருப்படியாத் திருவையாறு போய்ச் சேர முடியாதுபோல் இருக்கே."

"துணிஞ்ச கட்டைன்னுல்ல நெனச்சேன். ஆகக் கூடி, போலீஸ்காரன் ஸர்ச்சு போட்டு அவமானப்படுத்தறது, நூறு சனங்களுக்கு மத்தியிலெ ஒரு பொம்பளையை வெறிக்க வெறிக்க பாக்கற அவமானத்தை விடப்

பெரிசுன்னு ஆயிடிச்சு?"

"உம்ம வாய் அடைக்காதா?"

"நீங்க உளறி அடிச்சிக்கிட்டு வந்ததைப் பார்த்தா நெசம்மாவே இரண்டு மூணு பாட்டில் வச்சிருப்பீங்க போல் இருக்கே."

"என்னையா பண்றது! பழக்கம் விடமாட்டேங்கறதே. சாயங்காலம் ஆறு மணி ஆயிடுத்துன்னாப் பைத்தியம் புடிச்சுடறது."

"அப்பன்னா இருக்குன்னு சொல்லுங்க."

"இருக்குய்யா, இருக்கு. கொஞ்சம் மெதுவாய்ப் பேசித் தொலையுமேன். நான் ஏந்து வேறே காரியேஜுக்குப் போயிடட்டுமா?"

"இன்னமே எங்கே போறது? வண்டி ஊதிப்பிட்டானே. இந்தா, நகரக்கூட நகந்திருச்சே, ஏங்க இதெல்லாம் உங்களுக்கு? நல்ல வித்வத்து, நல்ல ஞானம், நல்ல சாரீரம்; சுதியைப் போய்க் கவ்வுது. சீனியருக்கும் சீனியரா உலகமே உங்களைத் தலையிலெ வச்சிக்கிட்டுக் கூத்தாடுது. இன்னிக்குப் பேன் எடுக்கறதும் நாளைக்குக் காதைக் கடிக்கிறதுமா எளுதறானுவளே பத்திரிகைக்காரனுவ, அந்தக் குரங்குவகூட ஒரே மாதிரியா சலாம் போட்டுக்கிட்டே இருக்குறானுவ. இன்னும் நாலு தலைமுறைக்கு உங்களை அடிக்க ஆளு கிடையாது. இன்னும் மேலே ஒசரப் போறீங்க. இந்தச் சங்கீதத்தை இப்படியா காப்பாத்தறது? நின்ன வரைக்கும் நெடுஞ்சுவருன்னு இருக்கப் படாதய்யா. செவுத்தைக் கெட்டிப்படுத்தறதுதான் நாம் செய்ய வேண்டிய வேலை. இல்லாட்டிப் பாட்டு என்னமா உருப்படும்? எந்த ராட்சசன் இந்த அப்யாசம் பண்ணிக் குடுத்தான் உங்களுக்கு? இதிலே என்னடான்னா காந்தி யோடேயே பொறந்து வளந்தாப் போல, கதர்ச்சட்டை, கதர் வேட்டி, கதர்த் துவாலை, கதர்க் கைக்குட்டைன்னு, உங்க தேகமே உச்சந்தலையிலேந்து உள்ளங்கால் வரைக்கும் 'கதரு'து. உட்டுத் தொலைங்களேன்யா இதை. நம்ம தொளிலுக்கே சாபத்தீடா வந்திரிச்சையா இது."

"ஓய், நான் தனியா அம்பிட்டுக்கப் போறேன்று எத்தனை நாளாய்யா காத்துக்கிட்டிருந்தீர்?"

"இப்பத்தான் சமயம் வாச்சுது எனக்கு. வயத்தெரிச்சத் தீரச் சொல்லிப் போடணும்னு சொல்றேன்."

"என்னாலே முடியலியேய்யா."

“முடியலேன்னு சொன்னாப் போதுமா? முனஞ்சு பாக்கணும்.”

“எல்லாம் பாத்தாச்சு. பேசாம இரும்.”

“இதெல்லாம் என்னமாக் கிடைக்குது உங்களுக்கு?”

“நீர் பேசாம இருக்கிறீரா, உம்மத் தூக்கி வெளியிலே

எறிஞ்சுடட்டுமா?”

“சும்மாச் சொல்லுங்க. ஒரு ராஜாங்கத்தையே ஏமாத்தறதுன்னா, அந்தச் சூரத்தனம் எப்படீன்னுதான் தெரிஞ்சுக்கறேனே.”

“நீர் வேற ஏதாவது பேசுவீரா மாட்டீரா?”

“முடியாது.”

“சொல்லித்தான் ஆகணும்.”

“சரி, சொல்றேன். அப்பறம் இதைப்பத்திப் பேசமாட்டீரே.”

“இல்லை.”

“நிச்சயமா?”

“நிச்சயமா இல்லை.”

“சொல்லட்டுமா?”

“சொல்லுங்க.”

“ரிஷிமூலம், பாட்டில் மூலம் இதெல்லாம் கேட்கப்படாது; சொல்லியாச்சு. இப்ப வேறெ பேசும்.”

“அட ஆண்டவனே, ரிஷி மூலம், பாட்டில் மூலம் இதெல்லாம் கேக்கப்படாதா?”

“ஓய், நீர் வேற ஏதாவது பேசும்; இல்லாட்டாச் சும்மாக் கிடவும்.”

“பேசாட்டி?”

“. . .”

“வெளியிலே தூக்கிப் போட்டிருவீங்களோ?”

“. . .”

“எப்பத் திரும்பப் போறீங்க?”

“அப்படி வாரும். ஆராதனையன்னிக்கி ராத்திரியே திரும்பிவிடப் போறேன்.”

“ஏன், சுணங்கலியா?”

“வீட்டிலே பிரசவ டயமாயிருக்கு.”

“அப்ப சரி; இந்த வருஷம் எங்கே தங்கப் போறீங்க? போன வருஷம் மாதிரி . . .”

“ஓய், ஏன்யா எரிச்சப்படறீர்? நீரும் யாராவது ராஜாம்பா, கமலாம்பான்னு யாரோடேயாவது தங்கறதுதானே?”

“நான் ஆசைப்பட்டாலும் முடியலியே. எம் பல்லும் எம் மொவரையும் முன்னாடியே அவுங்க வீட்டுக் கதவைப் போய் இறுகச் சாத்திக்கிட்டுல்ல நின்னிடுத்து.”

“அதான் தப்பு. என்னோட வந்து இருக்கீறா? நீர் நினைக்கிறது தப்பூன்னு நீரே தெரிஞ்சுக்கும்படியாப் பண்றேன்.”

“அதாவது ராசாம்பா, கமலாம்பா வீட்டுக் கதவுங்கள்ளாம் எனக்கும் திறக்கும்னு சொல்றீங்க.”

“ஆமாம்.”

“அப்பனே, கதவுன்னா அதைச் சொல்லலே நான். மனக் கதவைச் சொன்னேன். எம்மாதிரி சுப்ர தீபங்களுக்கெல்லாம் அவுங்க மனக்கதவைத் திறக்க மாட்டாங்க. வெளியழகுக்கு உலகம் அழியற அளவுக்கும் மவுசு உண்டு.”

“இந்த மாதிரி வேதாந்தம் பேசறவர் இதுக்கெல்லாம் ஆசையே படப்படாது.”

“அதான் சொல்றேன். மனக்கதவு திறக்காட்டி அங்கே என்னாங்க இருக்கும்.”

“அப்ப, இன்னும் கொஞ்சம் விபூதியைப் பூசிண்டு, இந்தக் கூஜாவைத் திறந்து ஒரு டம்ளர் தீர்த்தத்தை எடுத்துக் குடிச்சுப்பிட்டு வயித்தெரிச்சலைத் தணிச்சுண்டு தூங்கும்.”

“நீங்க பேசறதைப் பார்த்தா, இந்த வருசமும் போன வருசம் போல . .

.”

“இல்லே இல்லே. ஒரு ரசிகர் கடுதாசி போட்டிருக்கார். யாரோ அழகு சிங்கு ஐயங்காராம். நம்மாத்திலேதான் தங்கணும்னு பிடிவாதமா எழுதியிருக்கார். ஸ்டேஷனுக்கு வாரராம். கார் கொண்டுவரேன்னு எழுதியிருக்கார். மகா ரசிகர்னு தோணறது. யாருன்னு தெரியலெ. பேரே புதுசா இருக்கு; அழகு சிங்கு ஐயங்காராம். உமக்குத் தெரியுமோ?”

“அழகுசிங்கா?”

“ம்.”

“தெரியலையே.”

“நம்ம சங்கீதத்திலெ இருக்கிற ஓரோரு அம்சத்தையும் எடுத்து அவர் லெட்டர்லெ சொல்லி இருக்கிறதைப் பார்த்தா, வெறுமனே மேல் பஞ்மத்துக்குக் கைதட்ற ரசிகர் இல்லேன்னு மாத்ரம் தெரியறது. வாஸ்தவமாகவே விஷயம் தெரிஞ்சவரா இருப்பார் போல் இருக்கு. நீரும் நம்மோடேய தங்கிப்பிடறீரா?”

“நமக்கு வாண்டாங்க.”

“ஏனையா?”

“நமக்கு ஒரு கை விபூதியும், ஒரு டம்ளர் தண்ணியும் போதுங்க, எரிச்சலைத் தணிச்சுக்க.”

“ஓய் யமனே, இந்த வருஷத்து உத்சவத்தை மாத்ரம் நான் மறக்கவே போறதில்லெ.”

“ஏங்க?”

“இந்த மாதிரி ஒரு வாயாடிகிட்டத் தனியா இந்தச் செகண்ட் க்ளாஸிலே ஆம்பிட்டுண்டேனே. இன்னும் நூறு ஜன்மாக்குப் போருமய்யா இது.”

3

“இன்னிக்கி எனக்கு அதிர்ஷ்ட நாள்.”

“எனக்கும் அப்படித்தான்.”

“இங்கேயேதான் இருக்கியா நீ?”

“இங்கேயேதான் இருக்கேன்.”

“எத்தனை நாளா?”

“இந்த மண்ணிலே பொறந்ததுலேந்து இங்கதான் இருக்கேன்.”

“இந்த அழகு சிங்கு யாரு!”

“ஏன்?”

“யார் சொல்லேன்.”

“எங்க காரியஸ்தர். நிலங்களுக்கெல்லாம் கார்வாரியா இருக்காரு.”

“மூஞ்சியைப் பார்த்தா, ‘சங்கீதம் மகாணி என்ன விலை’ன்னு கேட்பார்போல் இருக்கு. என்னடாப்பா பிரமாதமா என் சங்கீதத்தைப் பத்தி லெட்டர்லே எழுதியிருந்தாரேன்னு பார்த்தேன்.”

“அவர்தான் எழுதினாரு.”

“எழுதினது அவர்தான். கையெழுத்தும் அவருதான். யார் இல்லைன்னா?”

“ஏன்?”

“நீ சொல்லியிருக்கே; அவர் எழுதியிருக்கார்; அதானே?”

“அது எப்படியிருந்தா என்ன?”

“ஞானம், நீ இப்படி ஞானக்கடலா இருக்கியே. இத்தனை நாளா என் கண்ணிலியே படலியே!”

“போன வருஷத்திலிலேருந்துதானே நீங்க நெஜம்மாப் பாட ஆரம்பிச்சிருக்கீங்க.”

“அதுக்கு முன்னாடி?”

“சும்மாச் சத்தம் போட்டுக்கிட்டிருந்தீங்க.”

“ஐயையோ, இது என்ன புது தினுசு விமர்சனமா இருக்கு! பத்து வருஷமா உலகமே மார்க்கண்டத்தைத் தலையிலே தூக்கி வச்சுண்டு கூத்தாடறதே.”

“உலகம் எதைத்தான் தலையிலே தூக்கி வச்சுக்கலை? கோமாளிகூடத்தான் தலையிலே ஒரு பையைக் கவுத்துக்கிட்டுக்

கூத்தாடறான். நீங்க போன வருஷத்திலேருந்து பாடறதுதான் பாட்டு. இப்பத்தான் உங்க பாட்டு அநுபவிச்சுப் பாடற பாட்டா இருக்கு. அதுதான் பாட்டு."

"எது?"

"என் காதை ரொப்பறதுதான் பாட்டு. என் காதை ரொப்பணும். என் மனசை ரொப்பணும். என் பிராணனைப் போய்க் கவ்வணும். இந்தத் தேகம், உயிர் எல்லாம் மறந்து போகணும். இவ்வளவு தூரம், ஏன் சொல்லணும்? இந்த வீட்டுக்கு அப்படிப் பாடற ஆத்மாவை நான் வரவளைக்கணும்."

"இப்படிச் சாஞ்சுக்கணும்."

"இது கிடக்கு சனியன்."

"நீ பெரிய ஆளா இருக்கியேம்மா."

"பெரிய ஆள்தான். பாடறேன் பாடறேன்னு சும்மாப் படார் படார்னு துடையைத் தட்டிக்கிட்டு, மனசிலே படாம, நெஞ்சிலே படாம, தொண்டையைக் கடகடன்னு உருட்டிக்கிட்டிருந்தா பாட்டாயிடுமா? அதுக்கென்ன, இந்தச் சீவல் டப்பாவைத் தள்ளிவிட்டா உருளாதா? இதா பாட்டு?"

"இந்த மாதிரி ரஸிகையை நான் எங்க பார்க்கப் போறேன்?"

"இந்த வருஷம் உங்க பாட்டுக்கு ஈடே கிடையாது! அப்படி என் காது நிறஞ்சுது. என்ன சுருதி! என்ன அநுபவம்!"

"நான் இன்னிக்கி ரொம்ப அதிருஷ்டம் பண்ணியிருக்கேன். நேத்திக்கி ஊருக்குப் போயிருந்தேன்னா இந்த அமிருதம் என் காதில் எங்கே விழுந்திருக்கப் போறது?"

"நேத்தே ஊருக்குப் போகணும்னீங்களாமே."

"ஆமாம். ஊர்லே ஜோலியிருக்கு."

"பின்னே ஏன் தங்கினீங்க?"

"இந்த வார்த்தைகளைக் கேட்கத்தான். நேத்திக்கே இந்தச் சர்டிபிகேட்டைக் கொடுத்திருக்கப்படாதா?"

"கொடுத்திருக்கலாம். நேத்து ஆராதனையாச்சேன்னு இருந்தேன்.

பொழுது விடிஞ்சா இந்தப் பாவந்தான் இருக்கவே இருக்கு."

"பலே! எல்லாத்துக்கும் நடுவிலே ஆசாரம், மடி எல்லாம் வேறே வச்சிண்டிருக்காப்பலே இருக்கே."

"இதிலே என்ன தப்பு? ஒரு நாளாவது இதையெல்லாம் மறந்திட்டு இருக்கப்படாதா?"

"போன வருஷம், முந்தின வருஷம் எல்லாம் யார் சர்டிபிகேட் வாங்கினா?"

"ஒத்தருமே வாங்கினதில்லை இதுவரைக்கும்."

"ஒத்தருமே வாங்கினதில்லையா?"

"ஒத்தர்கூட இல்லை. சங்கீதக்காரங்களையே அண்ட விடறதில்லை. யாரும் மனசுக்குத் திருப்தியாய்ப் பாடினதே இல்லை."

"அப்பன்னா . .?"

"சும்மாச் சொல்லுங்க."

"வீடு வாசல்."

"வீடு வாசல்லாம் பாடறவன் கொடுக்காட்டாக் கிடைக்காதா? பாடறவங்களை நம்பிப் பொளைக்க ஆரம்பிச்சிருந்தா ஓட்டை தம்புராக் கூடக் கிடைச்சிருக்காதே."

"அம்மா, நீ நெஜமாவே ஞானாம்பாதான். வாய் முழுக்க விஷப்பல்லா இருக்கே இப்படி."

"உங்க சர்டிபிகேட்டும் நல்லாத்தான் இருக்கு."

"வாஸ்தவமாவே நீ ஞானாம்பாதான். என்ன அழகு! என்ன பேச்சு! நான் என்னமோ பாடறேன் பாடறேங்கிறியே. ஆராதனை முடிஞ்சப்புறம் நேத்திக்கி நீ சமாதிக்கிட்ட நின்னுண்டு, சந்தனக்கலர் புடைவை தளரத்தளர முதுகுலெ கூந்தல் பெரள, நெத்தியிலே ஒரு விபூதிப் பொட்டு, அதுக்குக் கீழ் ஒரு குங்குமப்பொட்டு, இந்தக் கோலத்திலே நின்னுண்டு பாடினயே . . . கண்ணைப் பறிச்சுது ரூபம், மனசைப் பறிச்சுது பாட்டு . . . நான் பாடறேங்கிறீயே . . . இந்தக் கீர்த்தனங்களை இவ்வளவு அநுபவிச்சு யார் பாடப்போறா? இன்னும் அந்தக் காட்சி என் மனசிலே தாண்டவமாடறது. இந்த லோகத்திலே எத்தனை தினுசான அழகு!

உன்னை நேத்திக்கிப் பாக்கறபோது தியாகையர் கீர்த்தனமே ரூபம் எடுத்திண்டு நிற்கிறாப்போல் இருந்தது."

"என்ன என்னமோ பேசிறீங்களே?"

"ஆம் தியாகையர் கீர்த்தனம் மாதிரியே அவ்வளவு அழகா இருந்தே நீ."

"நாம் ஒருத்தரைப்பத்தி ரொம்பப் பெரிசா நெனச்சுக்கிட்டே இருக்கறபோது அவுங்களைப் பார்க்காமலே இருந்திட்டாத் தேவலைப்போல ஆயிடுது சில சமயம்."

"ஏன்!"

"நேரே கண்டுட்டா, அசடு வளிஞ்சு ஓட ஆரம்பிச்சிடுது."

"நான் என்ன இப்ப அசடு வழிஞ்சுப்பிட்டேன்?"

"இத்தைவிட இன்னும் வழியணுமா? ஒரு நொடியிலே திடுதிடுன்னு சரிஞ்சுப்பிட்டீங்களே. இது பூச்சி அரிக்கப்போற உடம்பு. எவ்வளவோ மனுஷப் பூச்சியெல்லாம் மனம் போனபடி அரிச்சு வேறே ஆயிடிச்சு. இதுக்கும் தியாகையர் பாட்டுக்கும் சரிக்கட்ட வாணாம்."

"தலையிலெ இவ்வளவு ரோஜாப் பூவை வாரி வச்சிண்டிருக்கியே . . . ஆச்சு, வாட ஆரம்பிச்சுடுத்து. இருந்தாலும் இருக்கறவரைக்கும், மணமா வீசி, பிரளயமாடிவிட்டுத்தானே போப்போறது அது."

"உங்க மனசிலே இருக்கறதை உங்களோட வச்சிக்கிங்க. என் காது கேக்க வாணாம். விட்டுடுங்க."

"ஏன் விடணும்? வாஸ்தவத்தைச் சொல்றேன். நேத்திக்கி நீ பாடினியே, அந்தத் தியாகையர் கீர்த்தனத்தைத் தியாகையரே அப்படிப் பாடியிருக்க முடியும்னு நெனக்கிறியா?. . . ஏன் ஏந்துனூட்டே?"

"ஏ தரித்திரமே, ஏந்திரிச்சுப் போ, சொல்றேன். தேவடியாள்னா என்ன வாணாப் பேசிக்கிட்டுத் திரியலாம்னு நெனைக்க வாணாம். தாசியாப் பொறந்திட்டா, இந்த மாதிரி முட்டாத்தனத்தையெல்லாம் பொறுத்துக்கிட்டுக் கிடக்கணும்னு மொடையில்லே."

"நான் என்ன சொல்லிப்பிட்டேன் இப்ப?"

"சொன்னது போதும், போய்யா எளுந்திரிச்சு. தியாகையர் கீர்த்தனத்து

அழகையெல்லாம் நீ தானே கண்டுப்பிட்டே. அவரே இந்த மாதிரி பாடியிருக்க மாட்டாராம்! உன் நாக்கு அறுந்து விளமாட்டேங்குதே!"

"நீ பரம ரசிகைங்கற அர்த்தத்திலேதானே சொன்னேன்."

"அப்படி நான் இருக்கிறதுனாலேதான் உன்னை இப்ப வெளியே போவச் சொல்றேன் . . . போய்யா, உன் பேச்சும் மூஞ்சியும்."

"பேசறத்துலே . . ."

"போய்யான்னா, இந்தா, இந்த அங்க வஸ்திரத்தை எடுத்துக்கிட்டுப் போ. இந்த மாதிரி உளறிக்கிட்டு அலையாதே, எல்லாருட்டியும் உளர்றாப்பலே. நட்சத்ரம் இல்லெ இஞ்ச யாரும்."

"நான் சொல்றதை . . ."

"எல்லாம் கேட்டாச்சு . . . போ. நடையிலே இருட்டா இருக்கு. உளுந்து மண்டையை உடைச்சுக்க வாணாம். லைட்டைப் போடறேன். கதவைத் தெறந்து விடறேன். அய்யங்கார் ஊட்டுலெ போய் நல்லாப் படுத்துத் தூங்கினாச் சரியாப் போயிரும். இன்னமெ இங்கிதம் தெரிஞ்சு பேசக் கத்துக்க. அப்பா ஒளிஞ்சுதுடாப்பா!"

"ஏண்டி அவரை இப்படி வெரட்டியடிக்கிறே?"

"தியாகையரைவிட நான் நல்லாப் பாடறேனாம்மா. இந்த மகான் சொல்லிட்டாரு!"

"எப்பச் சொன்னாரு?"

"இப்ப உள்ற இருக்கிறப்போ?"

"அப்பத்தானே. நீ நெசம்னு நெனச்சுக்கிட்டியா?"

"அவரு நெசமாச் சொல்லேலன்னு தெரியும் எனக்கு. எந்த நேரத்துலே பேசினாலும் எல்லாத்துக்கும் வரம்பு இருக்கு. பொம்மனாட்டி கொஞ்சம் பார்க்கும்படியா இருந்திட்டா, இப்படிப் பைத்யம் புடிச்சுப் பாயைப் பிராண்டிக்கிட்டுப் பேத்திக்கிட்டுத் திரியணுமா? எனக்குப் பிடிக்காது இந்த மாதிரியெல்லாம் பேசினா. முன்னாடியே சொன்னேன், என் காது கேக்க இப்படிப் பேசாதையான்னு. கேக்கலெ. ஓடறாரு பனீலே. நான் என்ன செய்ய?"

"ரொம்பக் கெட்டிக்காரிதான் போ."

“சீமையிலே ஒரு வெசை கண்டுபிடிச்சிருக்கானாம். அதுலெ ஏறி நின்னா குத்தவாளி யாருன்னு காமிச்சுக் கொடுத்திடுமாம். அதை வந்து சமாதிக்கிட்டக் கொணாந்து வக்கணும். நெசம்மா, உத்சவத்துக்கு மாத்திரம் யாரு வந்திருக்காங்கன்னு தெரிஞ்சு போயிடுமில்ல?”

“கொண்ணாந்து வை. நான் போய்ப் படுத்துக்கறேன். நல்ல தூக்கத்திலே கௌப்பிவிட்டியே மகராசி. அடுத்த வருசத்துக்குள்ளார நீ பைத்யக்கார ஆஸ்பத்திரிக்குத்தான் போப்போறே.”

மணிக்கொடி, 1950

# கழுகு

“ஏய், இதென்னாது, கோயில் மணி கிணுகிணாய்க்குது?”

“என்னா சொல்றீங்க?”

“வேளை இல்லாத வேளையிலே கோயில்லே மணி பொளக்குதே! தோப்பன் சாமிக்கு அதுக்குள்ளார என்ன சாப்பாடு? மணி மூணரைதானே ஆச்சு.”

“அந்த வேளையாத்தான் நானும் இருக்குறேன்.”

“ஒரு எளவும் புரியலே போ, எனக்கு.”

“புரிஞ்சிரும் நாலு நாளியிலே. எளவுதான். கொல்லையிலே போய் நாலு இலை நறுக்கிக்கிட்டுவாங்க. குளம்பு இறக்கியாச்சு. சோறு கொதிக்குது. இறக்க வேண்டியதுதான். சட்டுப் புட்டுன்னு அள்ளிப் போட்டுக்கிடணும்.”

“சமையலாவுதா! யாருக்கு எளவு? எல்லாம் திடீர்ச் சேதியால்ல போயிரிச்சி, வரவர. வரை முறையே கெட்டுப் போச்சே. திடீர், திடீர்னு சொல்லிக்காம கொள்ளாமல்ல செத்துப்போக ஆரமிச்சிட்டாங்க.”

“ஆமாமா, ஊடு ஊடா நுளஞ்சி, ‘மாமா, மாமா செத்துப் போய்ட்டு வரேன்’னு சொல்லிக்கிட்டுத்தான் சாவாங்க போல் இருக்கு.”

“அது கிடக்கு, இப்ப யாரு மூட்டை கட்டிக்கிட்டிருக்காங்க?”

“இப்பவானும் கேட்டீங்களே, தயவுள்ளவங்கதான் போங்க!”

“எனக்கொண்ணும் தயவு கியவு இல்லை. செத்துப் போறவங்களைப் புடிச்சு வச்சா நிறுத்த முடியும்? தயவு எதுக்கு? யாரு செத்துக்கிட்டிருக்காங்க, அதைச் சொல்லுவியா?”

“நம்ம கணக்குப்பிள்ளை மாமாதான்.”

“யாரு? கணக்குப்பிள்ளை மாமாவா?” நம்ம சோமு மாமாவா?”

“ஆமாம்.”

“இதுக்குத்தானா இம்மாம் பறப்பு, சமையலுக்கு! அடுப்பை அவி, சொல்றேன். சித்ரகுப்தக் கணக்குப் புள்ளே திகைப்பூண்டு மிதிச்சாருன்னு

நெனச்சிட்டியா, கணக்குப்பிள்ளே மாமாகிட்ட வர?"

"நீங்க சொல்றது சரி. இ . . . இருந்தாலும் இப்ப அப்படி இல்லே."

"எப்படி இல்லே?"

"முன்னெல்லாம் போல இல்லே; இப்பத் தொண்டைக்குளிக்கு வந்திரிச்சு உசிரு. மேல் மூச்சு வாங்க ஆரமிச்சிடிச்சி. தாவாரத்துலேந்து ரேளி நடைக்குத் தூக்கியாந்து போட்டுட்டாங்க இன்னும் மூணேமுக்கா நாளி கெடு வச்சிட்டுப் போயிட்டாரு சுப்பையா வைத்தியரு."

"நெசமாவா?"

"கண்ணாலே பாத்திட்டு வந்துதான் சொல்றேன்."

"நான் நெனக்கலெ. அஞ்சு தடவையாச்சு இத்தோட, மாமா நம்மளை ஏமாத்தறது. 'செத்துப் போப்பறாரு செத்துப் போப்பறாரு'ன்னு எத்தினி தடவை அள்ளி அள்ளிப் போட்டுக் காத்துக் கிடந்தாச்சு! 'நாலு தடவை தப்பிச்சவனுக்கு நம பயம் கிடையாது'ன்னு கேட்டதில்லியா நீ?"

"பெரியவங்க சொன்னதா இல்லாட்டியும் சொல்லுங்க. நல்லாத்தான் இருக்குது. நீங்க போய் இலை நறுக்கிட்டு வாங்க. வெளையாடிக்கிட்டு இருக்கறத்துக்கு நேரமில்லே."

"அதெல்லாம் முடியாது, ஒண்ணரை மணிக்குச் சோறு திங்கிறதாம். மூணரை மணிக்கு திரும்பவும் திங்கிறதாம்; வேலையைப் பாரு."

"தெனக்கிமா இப்படி. இண்ணக்கி ஒரு வேளெதானே. பச்சப் புள்ளெயாப் பேசாதிங்க. நீங்க போறீங்களா, நான் போகட்டா? இப்ப சாப்பிட்டாத்தான் சரியாய்ப் போச்சு. அப்புறம் காரியம் முத்திடிச்சின்னா கயிஷ்டம். பாதி ராத்திரிக்கித்தான் தூக்குவாங்க. அதுவரைக்கும் காஞ்சிக்கிட்டா கெடப்பீங்க? எளுந்திருங்க, சொல்றேன்."

"ஐயையோ! ஈயக்குண்டு மாதிரி இருக்கறவங்களெச் சாக அடிச்சிட்டியே!"

"காரியம் முத்திடிச்சின்னுட்டுத்தானே சொன்னேன். செத்துப் போயிட்டாங்கன்னேனா? எளுந்திருங்களேன்." பொறுமையிழந்து அலுத்துக்கொள்ளத் தொடங்கிவிட்டாள் அவள். சாய்வு நாற்காலியை விட்டு, 'அட கடவுளே!' என்று எழுந்திருக்க வேண்டியிருந்தது.

"மாமா செத்துப் போயிடுவாங்கங்கிறியா?"

“ஆமாம்.”

“நான் மாட்டாங்கங்குறேன்.”

“ஏன்?”

“பந்தியம்?”

“பந்தியத்துக்குத் துட்டு இல்லெ எங்கிட்ட. நீங்க போறீங்களா இல்லியா?”

“எவ்வளவு இருக்கு?”

“எங்கிட்டவா? அஞ்சணா இருக்கு, அஞ்சலைப் பெட்டியிலெ.”

“அதைக் கட்டு, போதும்.”

“சரி.”

“அப்படி வா வளிக்கி.”

“போங்களேன்.”

“அஞ்சு அம்மன் காசாயிருந்தாலும் பந்தியம் பந்தியந்தான். குடு கத்தியை.”

“ஏலெ, சின்னக்கண்ணு நீலாச்சி!” என்று சத்தம் போட்டுக்கொண்டே வெயில் வீணாகிவிடாமல் வாசலில் ஏரப்ளான் பாண்டி ஆடிக்கொண்டு இருந்த குழந்தைகளை மிரட்டி உள்ளே ஓட்டிவந்தாள் அவள்.

இலை போட்டாகி விட்டது.

“இப்பச் சோறு வாணாம்மா” என்று சிணுங்கினான் சின்னக்கண்ணு.

“அதுக்குள்ளார ஏம்மா சோறு இண்ணக்கி?” என்று இலையில் உட்கார்ந்து கேட்டது நீலாச்சி.

“கணக்குப் பிள்ளைத் தாத்தா செத்துப் போப் போறாங்க. செத்துப் போயிட்டாங்கன்னா பொணம் தூக்கற வரைக்கும் சோறு திங்கக்கூடாது. ராத்திரித்தான் தூக்குவாங்க. அது வரைக்கும் பட்டினி கிடக்க முடியாதுல்ல. அதுக்குத்தான்” என்று விவரமாக அவள் எடுத்துரைத்தாள். சொன்ன மாதிரியைக் கண்டு சிரிப்பு வந்தது எனக்கு.

சோறு வேண்டியிருக்கவில்லை. பகல் சாப்பாடு சாப்பிட்டு இரண்டு மணி

நேரம் ஆகவில்லை. இராச் சாப்பாட்டையும் எப்படித் திணிக்கிறது? அவள் உருட்டலுக்குப் பயந்து மல்லுக் கட்டிக் கொறித்தன குழந்தைகள்.

“பொணம் கிடக்கையிலெ சோறு தின்னா என்னாம்மா?” என்று நீலாச்சி கேட்டது.

“தின்னா உடம்பு இளச்சிப் போயிரும். எலும்புக்கூடா ஆயிரும்.”

“அதெல்லாம் இல்லெ பாப்பா, அம்மா சும்மாச் சொல்லுது” என்று நான் சொன்னபோது அவளுக்குத் தாங்க முடியவில்லை.

“இந்தாங்க, உங்களுக்குத்தான் வரைமுறை கிடையாது. கீழ்வாரிசுகளும் உங்க மாதிரியே வளரணுமா, பயம் பக்தி இல்லாம? நல்லாருக்கு!”

நீலாச்சி விழித்தது.

“சின்னக்கண்ணு!” என்று அடுத்த வீட்டுப் பையன் கூப்பிட்டுக் கொண்டு வந்தான்.

“இரு வாரேன்” என்று சமயம் கிடைத்தது என்று எழுந்து ஓடின, சின்னக் கண்ணும் நீலாச்சியும்.

“நான் கூட சுடு சோறு தின்னேன் இப்ப” என்றான் அடுத்த வீட்டுச் சுப்பாண்டி.

“நானுந்தான்” என்றான் அவன் தம்பி மனோஹரன்.

“பாத்தீங்களா? ஊரெல்லாம் சாப்பிட்டுடிச்சு. கும்மாணத்துலெ போயிக் கோண எழுத்து வாசிச்சவங்களுக்குத்தான் வரைமுறை எல்லாம் பொய்யாயிடிச்சி.”

“இந்தா, கும்மாணத்துலெ வாசிச்சா என்ன, கொட்டையூர்லெ வாசிச்சா என்ன? நீ காரியத்தை முடிச்சுக்கிட்டே. நாக்குட்டி மாதிரி நான் இலையிலெ குந்திச் சாப்பிட்டுட்டேன். அடுக்களை நிலைவரைக்கும் ராணியம்மா வச்சதுதான் சட்டமாப் போயிடிச்சு.”

கையலம்பி, வெற்றிலை போட்டுக்கொண்டு சோமு மாமாவைப் பார்க்கக் கிளம்பினேன்.

“தாத்தா செத்துப் போப்போறாங்களா அப்பா? நானும் வர்றேம்பா” என்று வந்தான் சின்னக்கண்ணு. அவனுக்கு நல்ல வார்த்தை சொல்லி நிறுத்த வேண்டியிருந்தது.

சோமு மாமாவை ரேழி நடையில் கொண்டு போட்டிருந்தார்கள். கெடு, தவணைகள் கொடுத்துச் சாகப்போகிறவர்கள் ரேழி நடையில்தான் மண்ணுலகை விட்டு விடைபெற்றுக்கொள்ள வேண்டும். இதே நடையில் எத்தனையோ நாயனக்காரர்கள் உள்ளே நடக்கும் கல்யாண முகூர்த்தங்களுக்குப் பொழிந்து தள்ளி இருக்கிறார்கள். மண்ணின்பத்தை விடும் போதும் இங்கேதான் விடவேண்டும். இந்த நடைக்குக் கணக்குப் பிள்ளை மாமா வந்து படுத்துவிட்டார்கள். மாமாவின் கண் பஞ்சடைந்துவிட்டது.

அடிக்கடி மாமாவின் கைமாட்டிலும் கால்மாட்டிலும் அணைத்து அமர்ந்திருந்த சந்ததிக் கூட்டம் அழுது அழுது ஓய்ந்தது. அழும்போதுதான் நான் போனேன். என்னைக் கண்டதும் அழுகை சற்று ஓய்ந்தது.

“அப்பா, இதைப் பாருங்க, இதோ வந்திருக்கிறது யாரு தெரியுதா?”

மாமா உத்தரத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

“இது எத்தனை விரல் சொல்லுங்க?” என்று மாமாவின் இரண்டாவது மகள் மாமாவின் முகத்துக்கு நேராக நாலு விரலை நீட்டிப் பிடித்தாள்.

மகா யாத்திரை செய்யப் போகிறவனுக்கு எவன் யாராயிருந்தால் என்ன, எது எத்தனை விரலாயிருந்தாலென்ன?

“மாமா, இதைப் பாருங்க.”

மாமாவின் காதில் யமன் விரலை வைத்து அடைத்துவிட்டான்.

சற்றுநேரம் நின்று பார்த்தேன். மாமாவுக்கு மூர்ச்சை; மூச்சு மட்டும் இருந்தது; எண்பத்தாறு வயதாகிவிட்டது அவருக்கு. இருந்தாலும் சாவு, சாவுதானே. யாராயிருந்தால் என்ன? வயிற்றைப் புரட்டிற்று. மனத்திற்குள் அடிக்கடி எழுந்த, ‘அவ்வளவுதானு’க்கு என் தலை என்னை அறியாமல் ஆடிற்று.

இரண்டு மூன்று நிமிஷம் ஆழம் தெரியாத அமைதி நிலவியிருந்தது. இது பொறுக்க முடியவில்லை, மாமாவின் சந்ததிகளுக்கு. பெரிய புலம்பலாக ஆரம்பித்தார்கள்.

மாடி வீட்டுக் காவேரியாத்தா மெதுவாக வாசற்படி ஏறி வந்தாள். இந்தப்

புலம்பலைக் கேட்டு ஆத்தாவின் முகம் சுருங்கிற்று.

“இந்தாங்க, ஏன் இப்படி, ‘ஐயோ, ஐயோ!’ன்னு அவச் சத்தம் போடுறீங்க? மாமா என்ன குறைச்சலா வாழ்ந்தாங்களா? குறைச்ச வயசிலே போறாங்களா? மனசிலெதான் குறை உண்டா அவங்களுக்கு? கத்திரிக்காய் பச்சடி கொஞ்சமாச் சாப்பிட்டாங்களா? வாளக்காய் வதக்கல் கொஞ்சமாச் சாப்பிட்டாங்களா? அறவது வயசு வரதி, உறை குத்தின தயிரும் நத்தத்துக் களத்து மாவடுவும் போட்டுக்கிட்டுப் பளயது சாப்பிட்டுக்கிட்டிருந்தாங்க. ராசா தலையை இரடும் அந்தப் பளயது! யாருக்குச் சாப்பிட முடியும்? அது மாதிரி யாருக்குச் சாப்பிட தெரியும்? பரமக்குடிலேந்து பாவக்காய் வரவளைச்சு நெய்யிலெ வதக்கச் சொல்லிப் பளயதுக்குத் தொட்டுக்கிட்டுச் சாப்பிடுவாங்க. என்னா குறைச்சல் அவுங்களுக்கு? நாலு பேத்தியுவளுக்கும் கட்டிக் குடுத்து, கடாசிப் பேத்தி கூடப் புள்ளையும் தாச்சியுமா நவுர்றதைக் கண்ணாலெ கண்டுட்டாங்க. சம்பாரிச்சதுதான் குறைச்சலா? மாமா தலை எடுத்து எண்ணாயிரம் கடன் அடச்சாங்க. அடையற கடனா அது? வெட்டுக் காயம். அதை அடைச்சாங்க. மனசு ஆறாம போறாங்களா அவங்க? ஏன் அவச்சத்தம் போடுறீங்க? சங்கரா, ராமா, முருவான்னு காதிலே அலருங்க. போற வளியிலெயாவது பூவாக் கொட்டிக் கிடக்கட்டும்.”

அழுகை எப்பொழுதோ அடங்கிவிட்டது.

“சொல்லுங்க, ராமா, ராமான்னு.”

வெளியே வந்தேன். கிராமத்து நாற்பது வீடுகளும் கொண்டான் கொடுத்தான் முறையில் பன்னாடையாகப் பிணைந்த உறவை நினைத்து, ஒவ்வொன்றாகப் பார்த்து விட்டுப் போயிற்று.

வீட்டுக்கு வந்து, “ராணியம்மா சொன்னது சரியாப் போச்சு” என்று சொன்னபோது அவள் ஒரேயடியாக எக்களித்தாள்.

“என்னா? ஆயிடிச்சா?”

“இன்னும் செத்த நாளியிலெ ஆயிடும்.”

“சாப்பிட்டது நல்லதாப் போச்சுப் பாத்தீங்களா? குளந்தைங்கதான் நல்லாச் சாப்பிடலெ. கொறிச்சிட்டு எளுந்திருச்சுட்டுதுவ. எப்படித் தாங்கப் போவுதுவளோ!”

நிலா பாலாகப் பொழிந்தது. அடுத்த வீட்டுப் பசுபதி, பட்டா மணியம்

செந்திரு, ராசகோவாலு, சிவப்பிரகாசம் எல்லோரும் வாசலில் உட்கார்ந்து பேசிக்கொண்டு இருந்தோம். எதிர்சாரியில் நிலா விழுந்திருந்ததால், சற்று தள்ளி நிலவில் அமர்ந்திருந்தோம். பேச்சு எங்கெங்கோ சுற்றிவிட்டுக் கடைசியில் மாமாவையே மீண்டும் மீண்டும் வந்து அடைந்துகொண்டிருந்தது. செந்திரு, மாமா வீட்டுக்குப் போய்ப் பார்த்துவிட்டு இடையில் வந்து சேர்ந்தான்.

“என்னாப்பா, என்னா ஆச்சு?”

“நல்லா ஆச்சு போ. எனக்குத் தோணலெ.”

“அப்படீன்னா?”

“மாமாவாவது சாகவாவது? சும்மா திகிடுதத்தம் பண்ணிக்கிட்டிருக்காங்க. எனக்கு உடம்பெல்லாம் இசிக்குது. இந்தப் பசியை யார் பொறுக்கிறது? இந்தப் பொண்டுங்க எல்லாம் நல்லாக் கூத்தடிக்கிறாங்க.”

“பெண்டுகளே உலகத்துலெ இருக்கக்கூடாது. அநாவசியம்.”

“ஹல் . . . ல்” என்று ஓலையிழுக்கிறாற்போலச் சிரித்துவிட்டு, “அதாண்டா சரி!” என்று முடித்தான் பசுபதி.

“நல்ல சிரிப்புடா இது! இந்தப் பசியிலெ சிரிக்க முடியுது பாரு பசுபதிக்கு.”

“ஏ, பசுபதி, நீதான் பசிக் களைப்புத் தெரியாதவன். நீ போய் உண்டா இல்லையான்னு கேட்டுக்கிட்டு வா, போ.”

“என்ன உண்டா, இல்லையா?”

“மாமா செத்துப் போறாங்களா இல்லியா? ரெண்டுலெ ஒண்ணு தெரியணும். மாமாவையே முடிஞ்சாக் கேட்டுறணும்.”

“ஹல் . . . ல் . . . . ல்” என்று மறுபடியும் ஓலைச்சிரிப்பு சிரித்துக்கொண்டே, வயிற்றைப் பிடித்த வண்ணம் கீழே உட்கார்ந்துவிட்டான் பசுபதி.

“அப்பப்பா, விலாவெல்லாம் இளுத்துக்கிச்சு. நான் போக

முடியாது . . . ஹல் . . . ல். அப்பா, அப்பாடி!”

“என்ன சிரிப்புடா இது? பெரியவங்க காதிலே உளுந்தா எதானும்

நெனைச்சுக்கப் போறாங்க; சாவு வேளையிலே என்னா சிரிப்புன்னிட்டு!"

"சாவு வேளையா! அப்பா, மாமாவைக் கொன்னுப்பிட்டியே . . . ஹல் . . . ல்."

ராசகோபாலு வீட்டு வாசற் கதவு படார் என்று சாத்திக்கொள்ளவே, "நான் போறேம்பா. எனக்குத் தூக்கம் தூக்கமா வருது" என்று குறிப்பறிந்து எழுந்து போய்விட்டான் அவன்.

அவ்வளவுதான். பேச்சுச் சிறிது சிறிதாகக் குறைந்தது. ஒவ்வொருவராக எழுந்து போகவும் தொடங்கினார்கள். கடைசியில் செந்திருவுக்கு விடை கொடுத்துவிட்டு, கட்டிலைத் தூக்கித் திண்ணையில் போட்டுக் கதவைத் தாளிட்டு உள்ளே வந்தேன்.

மணி பதினொன்று. அந்த நிசப்தத்தில் சுவர்க்கோழியின் ஶ்ரீ ஒலியும் தாழ்வாரத்தில் தூங்கிக்கொண்டிருந்த குழந்தைகளின் மூச்சும் பயங்கரமாக இருந்தன. குழந்தைகளுக்கு அப்பால் அவள் அடித்துப் போட்டாற்போல் உறங்கிக்கொண்டிருந்தாள்.

'வயிறு காய்கிறது! நல்ல தூக்கம் . . . உடம்பு தெரியாமல்!. . . இந்தப் பொண்டுக வர்க்கமே இருக்கக்கூடாது; பொணம் கிடந்தாப் பத்து வீட்டுக்கு இப்பாலே சாப்பிட்டா என்ன? – காவேரி வெள்ளத்துக்கில்ல கையாலே அணை போடுறாங்க! – பத்தாம் பசலி. ம்ஹ.ம்! – நூறாம் பசலி; – தூங்கறத்தைப் பாரு, கும்பகருணி மாதிரி!'

பேச்சு முடியுமுன் என் உடல் விசுப்பலகை மீது பரப்பியிருந்த மெத்தையில் நீண்டு விழுந்துவிட்டது.

தூக்கம் பிடிக்கவில்லை. பெட்ரூம் விளக்கு மாடத்தில் முத்திட்டிருந்தது. படுத்த வாக்கில் முற்றத்தில் திறப்பில் தெரிந்த கொல்லைப் புளிய மரத்து உச்சியையும், மேலே எலி அறுத்துக் கொண்டிருந்த ஓட்டு வளையையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தேன் . . . ஶ்ரீ ஶ்ரீ ஶ்ரீ ஶ்ரீ என்று எங்கிருந்தென்று தெரியாமல் வந்த சுவர்க்கோழியின் சிவநாமம் ஒரு பக்கம். எலி அறுப்பு ஒரு பக்கம். பத்து வீட்டுக்கப்பால் மாமா வீட்டிலிருந்து அழுகைச் சத்தம் வருவது போல் அடிக்கடி தோன்றிற்று. காதிற்குள் விரலை விட்டுக்கொண்டேன். இன்னும் அழுகை கேட்டது. 'சை, பிரமையல்லவா? மனத்தையல்லவா பொத்த வேண்டும்? எப்படி?' சற்றுப் பேசலாம் என்றால் கும்பகர்ணி மாதிரி மல்லாந்து படுத்து வாயை வேறு சிறிது திறந்து தூங்குகிறாள் அவள். 'ராம ராம ராம ராம ராம!'

பயத்தை மறக்க வெகுநாள் பழக்கம் இது. 'ராம ராம — சீதை — காடு — அதோ, தசரதர் செத்துப்போகிறார். முந்நூறு பொம்பிளைகள் அழுகிறார்கள் — தசரதர் கண் செருகிவிட்டது. "ராமராமா"ன்னு ஓதுங்க— காவேரியாத்தா சொல்கிறாள் — மாமா கண்ணும் செருகிவிட்டது — சை— நல்ல ராம நாமம்!' எங்கேயாவது ஓடிப்போய்விடலாம் போல் இருந்தது. நல்ல யம வாதனை.

தாழ்வாரத்திலிருந்து இருந்தாற்போல் இருந்தது "இக் . . . க் . . . ம் . . . ஊ . . ." என்று நீலாச்சியின் அழுகை கேட்டது. கட்டிலில் படுத்தபடியே 'த்ஸ த்ஸ த்ஸ த்ஸ' என்று தூங்கச் செய்தேன். அழுகை நின்றது. ஆனால் 'த்ஸ் த்ஸ' நின்றதும் மீண்டும் அழுகை துவங்கிற்று. மீண்டும் சூள் கொட்டினேன். ஆனால் அழுகை நிற்கவில்லை. புரண்டு பார்த்தபோது, நீலாச்சி எழுந்து உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தது. வெறும் அழுகையல்ல. அடிவயிற்றிலிருந்து தாங்கமாட்டாத குறையைச் சுமந்து நெஞ்சு நோக வேதனை நிரம்பிவரும் அழுகை. எழுந்து போய்த் தூங்கச் செய்தால்தான் உண்டு.

"பாப்பா, அளுவாதே, தூங்கு; எங்கிட்டப் படுத்துக்கிறியா?"

"ஊ . . . ம் . . . க் . . . ஆ . . . ப் . . ."

"வா, படுத்துக்க."

"ம்ஹ்ம்."

"வாணாம். அம்மாகிட்டப் படுத்துக்கிறியா?"

"பசிக்கிறது."

அப்படியா சேதி!

அவள் எழுந்திருக்கிற வழியாயில்லை. வா என்று கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு, மாடத்தில் இருந்த பெட்ரூம் விளக்கை எடுத்து, அடுக்களைக்குள் சென்றேன். நீலாச்சியின் அதிர்ஷ்டம், பழையது மாடம் காலியாயில்லை. ஈயச் சட்டியை எடுத்து வெளியே வைத்தேன். உறியிலிருந்து மோர்ச் செம்பை எடுப்பதற்குள், பழையதுச் சட்டி மூடியை எடுத்து வைத்துவிட்டு இரண்டு பிடி சோற்றையும் போட்டுக் கொண்டுவிட்டது நீலாச்சி. என் வம்சம் புத்திசாலிகளுக்குப் பெயர்போனது. மோர்ச்சட்டியை எடுத்து வரும்போது, தூணுக்கருகில் கவிழ்த்திருந்த பித்தளைத் தாம்பாளம் உதை பட்டு, ஓலமிட்டுக்கொண்டே சுவரின்மீது

மோதிற்று.

"த்தா, சூ. சூ."

அவள் விழித்துக்கொண்டு விரட்டினாள்.

"பூனையில்லை. நான்தான்."

"அ, யாரு? அ?"

"நான்தான்."

"எங்க இருக்கீங்க?"

"இஞ்சத்தான், அடுக்களையிலே."

"என்னா செய்யுறீங்க?"

"எழுந்திருச்சு வந்தால்ல தெரியும். படுத்துக்கிட்டே கேட்டுக்கிட்டிருந்தா?"

தூக்கக் கலக்கத்துடன், தலைமயிர் சூரிய கிரணமாய்ப் பரந்து நிற்க அடுக்களைக்குள் வந்தாள் அவள்.

"நீலத்துக்கா சோறு போடுறீங்க?"

"இப்பத்தான் புரிஞ்சிது போல்ருக்கு."

"எடுத்திட்டாங்களா அங்கே?"

"அஸ்தி கரைச்சாயிடிச்சான்னிட்டுக் கேளு."

"ஏங்க?"

"என்னா ஏங்க? எல்லாம் உன்னாலெ வருது. உன்மாதிரி அஜீரண வியாதி எல்லாருக்குமா இருக்கும்?"

"சும்மா ஏன் கோவிச்சுக்கிறீங்க? வேணுமின்னா சாப்பிட்டு, பாவத்தைக் கட்டிக்கங்களேன்."

"நீ கட்டிக்க பாவத்த; கல்லு மாதிரியிருக்கறவங்களைச் சாக அடிச்சிட்டு."

"என்னாங்க இது? இன்னுமா முடியலெ?"

"மாமா முடிய மாட்டாங்க. இஞ்ச வா."

“நல்ல கூத்து இது.”

“கூத்துதான். இலையைப் போட்டுக்கிடறேன். கொஞ்சம் சாதம் பிசஞ்சி போடு.”

தலைமயிரைக் கோதிவிட்டு, முந்தானையைச் செருகி கையைக் கழுவிவிட்டு வந்தாள்.

“உனக்குப் பசிக்கலியா?”

“ஐய, பாதி நிசியிலே யாருக்கு இறங்கும் சோறு?”

“சும்மாக் கொஞ்சம் சாப்பிடேன்.”

முறுக்கெல்லாம் செய்துகொண்டு கடைசியில் பணிந்தாள் அவள். சோறு போன இடம் தெரியவில்லை.

நீலாச்சி படுத்துத் தூங்கிவிட்டது.

எங்களுக்குத் தூக்கம் வரவில்லை. முற்றத்து நிலவில் உட்கார்ந்து கொண்டோம். தெளிவும் தண்மையும் வெண்மையும் நிறைந்து நிலவு பரந்திருந்தது. அந்த நிசப்தத்தில் கொல்லைப் புளிய மரத்தில் ஒரு காக்கை கரைந்தது, பொழுது புலர்ந்த பிரமையில்.

“காக்காய்க்குப் புத்தியே கிடையாது; இல்லீங்களா?”

“ஏன்?”

“நிலவை விடிஞ்சாப்பலே நெனைக்குதே.”

“நெனச்சா என்னவா? இப்ப இல்லாட்டி இன்னும் நாலு நாளியிலெ பொளுது புலரப் போவுது. நிச்சயமாப் புலரத்தான் போவுது. சாகப் போறாங்க, சாகப் போறாங்கன்னு பட்டினி கிடக்கலையே காக்கா!”

“ஆமா, உங்களுக்கு எம் மண்டையை உருட்டிக்கிட்டே இருக்கணும். மாமாவுக்கும் ஒரு நாளைக்குப் பொலரத்தான் போவுது.”

“யாரு மாமாவா? பொணந்தின்னிக் கழுகுவளுக்குச் சுடுகாட்டை விட்டுப் போகவா மனசு வரும்? நான் நெனைக்கல்லே. மாமா செத்து நாம் பார்க்கப் போறதில்லெ. நீலாச்சி, சின்னக்கண்ணு இவங்க யாராவது பாத்தாத்தான் உண்டு.”

“சும்மா இருங்க. அச்சான்யமாப் பேசக்கூடாது.”

நான் மட்டும் பேசக்கூடாதாம். மணி மூன்று, நாலுக்கு மேல் ஆகிவிட்டது. தூக்கம் அடியோடு கலைந்துவிட்டது. வெகு நாழி பேசிக்கொண்டிருந்தோம்.

கிழக்கு வெளுக்கும்போது ஒரு சின்ன அழுகைக் குரல் வாசலில் கேட்டது. சரேலென்று எழுந்து போனோம். கணக்குப் பிள்ளை மாமாவின் கடைசித் தங்கை தங்கக் கிளியாத்தா வெள்ளைத்துணியில் எதையோ சுற்றிக்கொண்டு போனாள். கூட இரண்டுபேர் அழுதுகொண்டு போனார்கள்.

அடுத்தவீட்டுத் திண்ணையிலிருந்து பசுபதி சொன்னான். "சேதி புரிஞ்சுதாப்பா. மாமா கடாசிப் பேத்திக்கு ராத்திரி ரெண்டு மணிக்கு நோவு கண்டிடிச்சாம். ரெட்டைக் கொளந்தை. ஒண்ணு இப்படி ஆயிடிச்சு."

"மாமா?"

"ஹல் . . . ல் மாமா நடையிலிருந்து திரும்பி உள்ளாரப் போய்ட்டாங்களாம் மறுபடியும்."

"நெசம்மாவா?"

"பொய்யா பின்னே?"

"ராணியம்மா கேட்டுக்கிட்டியா, எடு அஞ்சணாவை."

"ஏனாம்?"

"ஏன்னா? மாமா செத்துப்போகலே!"

"போகாட்டி? யமன் வந்தானா இல்லியா மாமா ஊட்டுக்கு?"

"அதுக்காக."

"மாமாவுக்குத்தான் வந்தான். ரெட்டைப்புள்ளெ எதுக்குன்னு ஒண்ணைத் தூக்கிக்கிட்டுப் போயிட்டான். யோசிச்சுப் பாருங்க."

0

சாயங்காலம் மாமாவைப் பார்க்கப் போனோம், பசுபதியும் நானும். நடையைக் கடந்து, முற்றத்துத் தாழ்வாரத்தில் நாலைந்து தலையணைகளைச் சுவர் ஓரமாகக் குவித்துச் சாய்ந்திருந்தார் மாமா.

"மாமா!"

"யாரப்பா பெரிய தம்பியா? இன்னும் யாரு?"

"நான்தான்."

"ம். பசுபதியா? வாப்பா, உக்காருங்க. பாத்தீங்கள்ள, சேதியை? முருவன் என்னை அளச்சிக்க மாட்டான்போல் இருக்கு. என்னமோ ரொம்பக் குடுத்திட்டாப்பலே, ஒண்ணைப் பிடுங்கிக்கிட்டுப் போயிட்டான் . . . ஏதோ, ஒண்ணையாவது வச்சானே."

நாங்கள் ஒன்றும் பேசவில்லை.

"போன மாசிக்கு இப்பிடித்தான் கெடந்தேன். அப்பவும் இதேதான் ஆச்சு. முந்நூறு ரூவாய்க்கு எருமை மாடு ஓட்டியிருந்தது. பதினாலு சேர் கறவை. அது செத்துப்போச்சு. இந்தத் தடவை இப்படியாயிருக்கு. அடுத்த தடவை என்ன ஆகுதோ?"

சும்மா இருந்தோம்.

"ஏதோ நடக்குது. முருவன் மனசு நமக்கா தெரியும்?" என்று பசுபதி சொன்னான்.

"ஆமாம்பா, ஆமாம். இல்லாட்டி இப்பிடியா நடக்கும்?"

சற்று யோசித்து ஒரு நிமிஷம் கழித்துச் சொன்னார் மாமா. "ஏதோ . . . நம்ம சுப்பையாதான் சுப்ரமண்யர்னு எனக்குத் தோத்தம். தொண்டைக் குழிக்கு வந்த உசிரைல்ல உள்ள தள்ளிட்டான்! இப்பிடி ஊட்டுக்குள்ளாரத் திரும்பி வந்து படுக்கப் போறேன்னு கனாக் கண்டுருப்பேங்கிறியா? வைத்தியன்னா எவ்வளவோ பேரு எவ்வளவோ சொல்லுவாங்க . . . என்னமோ, சுப்பையா கையிலே சஞ்சீவிப் பச்செலை முளச்சிருக்கூன்னுதான தோணுது!"

பசுபதி, 'ஹல்ல்' என்று சிரித்துவிடாமல், 'அட கழுகே!' என்று மூன்றாவது காதில் விழாமல் சொன்னான்.

**தேனீ, ஆவணி 1948**

# பசி ஆறிற்று

"மணி பன்னிரண்டாகப் போகிறது. சுருக்க வாங்கோ" என்று மத்தியான்ன பூஜைக்கு நைவேத்தியத்தை எடுத்துக்கொண்டு கோயிலுக்குப் போகும் புருஷனுக்குப் பின்னால் கத்தினாள் அவள். கத்தின கத்தில் குரல் விரிந்துவிட்டது. புகைந்து புகைந்து இருமி, நெஞ்சு கமறி இரண்டு பொட்டு ஜலம்கூடக் கண்ணில் வந்துவிட்டது.

"என்ன?" என்று திரும்பிப் புருவத்தை உயர்த்திக்கொண்டு கேட்டார் சாமிநாதக் குருக்கள்.

"நாசமாய்ப் போச்சு!" என்று மெதுவாகச் சொல்லிக் கொண்டே முற்றத்தில் வந்திருந்த வெள்ளை வெயிலையும் நிழலையும் காட்டி ஜாடை செய்தாள் அகிலாண்டம்.

"நாழியாயிடுத்துன்னு சொல்றயா? இதோ வந்துடறேன்" என்று அவர் பதில் கொடுத்துவிட்டுக் கிளம்பினார்.

சாலப் பிறை வழியாக அடுத்த வீட்டில் பேசுவது காதில் விழுந்தது. "ஏனக்கா, ஏன் இவ்வளவு மெதுவாகப் பேசுகிறாள், அடுத்த வீட்டு அம்மாமி?" என்று.

அதற்காக அவள் வருத்தப்படவில்லை. அதைப் போல எவ்வளவோ பேர் சொல்லியிருக்கிறார்கள். டமாரச் செவிட்டுக்கு மாலை போட்டுவிட்டு இதையெல்லாம் சட்டை செய்துகொண்டிருந்தால் எப்படி வேலை நடக்கும்? அதைப்பற்றி அவள் கவலைப்படவில்லை. அவள் கவனத்தை இழுத்தது, அந்தக் குரல் புதிதாக இருந்ததுதான். அடுத்த வீட்டு ருக்மிணி அம்மாமி, 'தம்பி வரப்போகிறான்' என்று நேற்றுச் சொல்லிக் கொண்டிருந்தாள். பேசினது அவனாகத்தான் இருக்க வேண்டும்.

சற்றுக் கழித்து, "நான் காவேரிக்குப் போய்க் குளித்து விட்டு வருகிறேன் அக்கா" என்று அவன் சொல்லிக்கொள்வது காதில் விழுந்தது. இருப்புக் கொள்ளாமல் வாசலுக்கு ஓடினாள் அகிலாண்டம்.

வாசலுக்கு வந்த அவன், இடுப்பிலிருந்த பொடி மட்டையை எடுத்து, ஓட்டுச் சார்ப்பின் மூங்கிலுக்குள் செருகிவிட்டுத் தற்செயலாகத் திரும்பினான். திண்ணையிலிருந்தே போக்குவரத்துச் செய்துகொள்வதற்காக

இருந்த திறப்பின் வழியாக அகிலாண்டம் நிற்பதைப் பார்த்தான். உடனே உள்ளே ஒருமுறை பார்த்தான். தெருவில் கிழக்கும் மேற்குமாக ஒரு முறை பார்த்தான். குரைக்கக்கூடச் சோம்பல்படும் நாயைத் தவிர வேறு ஈ, காக்காய் இல்லை. தைரியமாக அவளைப்பார்க்க ஆரம்பித்துவிட்டான்.

நறுக்கென்று அவள் மறைந்துவிட்டாள். ஆனால் ரேழிக்குப் போனதும் கால் தயங்கிற்று. சற்று நின்றாள். உள்ளுக்கா, வாசலுக்கா என்று கேட்டுக்கொண்டிருந்த மனத்தைக் கடைசியில் வாசல் பக்கமே திருப்பிவிட்டாள். நிலைக்கருகில் நின்று பார்த்தபோது அவனைக் காணவில்லை, சோப்புப் பெட்டியை ஆட்டிக்கொண்டு வேகமாகப் போய்க்கொண்டிருந்தான். சடக்கென்று தான் மறைந்ததைப் பார்த்ததும் பயந்துகொண்டு போய்விட்டானோ, என்னவோ?

வாஸ்தவமாகத் தன் துணிச்சலை நொந்துகொண்டுதான் அவன் போனான்.

அவளுக்கும் தான் செய்தது தப்பு என்று பட்டது. 'வேறு என்ன செய்வது? பைத்தியக்காரப் பெண் ஜன்மம்! அந்தச் சமயத்தில் வேறு என்ன செய்யும்?' என்று பெண்மையை நொந்துகொண்டாள். 'அவன் திரும்பி வரட்டும். இங்கேயே நின்றுகொண்டிருக்கலாம். அவன் திரும்பி வரும்போது அவனுடைய சந்தேகத்தையும் பயத்தையும் போக்கிவிடலாம்' என்று தீர்மானித்துக்கொண்டாள்.

மேல் வீட்டில் எல்லோருமே அழகுதான். ருக்மிணி அம்மாமிக்கு நாற்பது வயது ஆனாற்போலவே இல்லை. கன்னமும் காலும் பட்டுத் துடைத்துவிட்டாற் போல இருக்கின்றன. தம்பியும் அப்படித்தான் இருக்கிறான். காலேஜில் வாசிக்கிறானாம். சிரிக்கச் சிரிக்கப் பேசுவானாம். ஓடுகிற பாம்புக்குக் கால் எண்ணும் வயசு. வெகு புத்திசாலி என்று ருக்மிணி அம்மாமி சொல்வதுண்டு.

'எப்படியிருந்தால் என்ன? இதையெல்லாம் நினைத்து என்ன பிரயோஜனம்? கவைக்குதவாத ஆசை.'

கல்யாணமாவதற்கு முன், பிறந்த ஊரில் எதிர் வீட்டுக்கு ஒரு பையன் வந்திருந்தான். அவன் பார்த்த பார்வை! என்ன குளுமை! விழுங்கி விழுங்கிப் பார்த்துவிட்டுக் கடைசியில் ஊருக்குப் போய்விட்டான். பிறகு ஆளையே காணவில்லை.

'இந்த டமாரச் செவிட்டுக்கு வாழ்க்கைப்பட்டாகிவிட்டது. குருக்கள்

பெண் குருக்களுக்குத்தான் வாழ்க்கைப்பட வேண்டும் என்றாலும் அப்பாவுக்கு இந்தப் பூமண்டலத்தில் வேறு ஒரு வரன்கூடவா அகப்படவில்லை? கட்டை குட்டையாய், கல்லு மாதிரி உடம்பு. காதிலே கடுக்கன்; எதற்காகவோ தெரியவில்லை. கேட்காத காதுக்குக் கடுக்கன் என்ன? மாட்டல் என்ன? கல்யாணமானது முதல் நாலு வார்த்தை சேர்ந்தாற் போல் பேசினோம் என்பதே இல்லை. இரண்டு வார்த்தை பேசுவதற்குள் விழி பிதுங்கி, தொண்டை உடைந்துபோய் விடுகிறதே. இவள் குரல் எப்படி இருக்குமென்றே அவனுக்குத் தெரியுமோ என்னவோ? பரவச நிலையில், அடங்கிய குரலில், பேசும் பாதி ரகஸ்யப் பேச்சுக்கள் அவளுக்கு எப்படிக் கிட்டும்? அவனோடு பேசிப் பேசித் தொண்டை பெருகிவிட்டது. பிறந்த ஊருக்குப் போனபோது, 'ஏண்டி இப்படிக் கத்தறே? மெதுவாய்ப் பேசேன். ஊர் முழுக்கக் கிடுகிடுக்கணுமா?' என்று தங்கை தமக்கைகள் அலுத்துக்கொள்வார்கள்.

'போடி போ, அத்திம்பேருக்கு நீங்கள் மாலை போட்டிருந்தால் தெரியும். அவர் காதுக்கிட்டப் பீரங்கி வெடிச்சா, நெருப்புக் குச்சி கிழிக்கிற மாதிரி இருக்கு அவருக்கு. என்னைப் போய்ச் சொல்ல வந்துட்டா!' என்று அவள் பதில் சொல்லும் போது எல்லோரும் சிரிப்பார்கள்.

இப்படி அவர்கள் சிரிக்கச் சிரிக்கப் பேசினாலும், அவள் மனத்திற்குள் மட்டும் துணுக்கென்றது. செவிடாய்ப் போவதை விட மட்டம் ஒன்றுமே இல்லை; யாராவது பேசும்போது, 'அ . . . ஆ?' என்று ஜடம் மாதிரி கேட்டுக்கொண்டேயிருந்தால்? செவிட்டுப் புருஷனோடும் செவிட்டு மனைவியோடும் எத்தனையோ பேர் அந்யோந்நியமாகத் தாம்பத்தியம் நடத்துகிறார்கள். அவளுக்கு மட்டும் . . . அவளுக்கு மட்டும் என்ன? பிரியம் இல்லாமலா இருக்கிறது? எல்லாம் இருக்கிறது. ஆனால் குறை குறைதானே.

போன வருஷம் எதிர்வீட்டில் ராதா கல்யாணத்தின் போது மதுரை மணி சங்கீதக் கச்சேரி நடந்தது. கூட்டத்திற்கு நடுவில் அவள் புருஷனும் உட்கார்ந்திருந்தான். பக்கத்தில் வாயைப் பிளந்தும் ஆகாரம் போட்டும் மெய் மறந்திருந்தவர்களை ஜடம் மாதிரி பார்த்துக் கொண்டிருந்தான். நடுநடுவே பெரிய வீட்டு வாயாடி கிட்டுச்சாமி, 'கச்சேரி எப்படி?' என்று கண்ணைச் சிமிட்டி அவனிடம் ஜாடை செய்து கொண்டிருந்தான்.

ஸ்திரீகளுக்கு நடுவில் உட்கார்ந்திருந்த அகிலாண்டத்திற்கு வந்த ஆத்திரத்திற்கும் துக்கத்திற்கும் அளவே இல்லை. 'காதுதான் இல்லையே! நடுக் கச்சேரியில் உட்கார்ந்து அசட்டுத்தனத்தைத்

தப்படித்துக்கொள்ளுவானேன்!’ புருஷன் கையைக் கரகரவென்று பிடித்து இழுத்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டால் தேவலைபோல் இருந்தது அவளுக்கு. அருகில் உட்கார்ந்திருந்த ஸ்திரீகளை ஏறிட்டுப் பார்க்கவே கூச்சமாக இருந்தது. பார்த்தால் எல்லோர் கண்ணிலும் தென்படும், ‘ஐயோ, பாவ’த்தை எப்படிச் சகிப்பது? அவ்வளவு தூரத்திற்கு – எல்லோரும் பாட்டைக் கேட்காமல் அவளைப் பார்த்து இரக்கப்பட்டுக்கொண்டிருப்பார்கள் என்ற அளவுக்கு – அவள் துன்பம் வந்துவிட்டது.

கச்சேரி நடக்கும் பெஞ்சுக்கு முன்னால், உட்கார்ந்திருந்தான் ராஜம். அந்த வீட்டுக்காரரின் பையன் அவன். இருபது வயதிருக்கும். எங்கோ மீரத்தில் மிலிடரியில் உத்தியோகம், ராதா கல்யாணத்திற்காக லீவு எடுத்துக்கொண்டு வந்திருந்தான். நல்ல சாரீரம் அவனுக்கு. நன்றாகப் பாடுவான். அகிலாண்டம் பாடகரைப் பார்க்கப் பிரம்மப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தாள். ஆனால் கண், தலையாட்டிப் பொம்மை மாதிரி ராஜத்தின் மேலேயே திரும்பித் திரும்பி விழுந்தது. அவன் பாட்டை ரஸிக்கும் அழகைக் கண்டு வியந்துகொண்டிருந்தாள்.

பிறகு இரண்டு நாளைக்கு அகிலாண்டத்திற்கு ஒன்றும் ஓடவில்லை. தேனீ மாதிரி அவன் நினைவே வந்து அவளை ஒட்ட ஒட்ட மொய்த்துக்கொண்டிருந்தது. எதாவது ஒரு சாக்கைச் சொல்லி எதிர்வீட்டுக்கு, மணிக்கு ஏழு தடவை போக ஆரம்பித்தாள். ராஜம் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தான்.

“மாமி, சற்று எறும்பு வடிகட்டியைக் கொடுங்களேன். இதோ தந்துவிடுகிறேன்” என்று அகிலாண்டம் அதை வாங்கி வந்தாள். சற்றுப் பொறுத்து, அதை ஜோட்டி ஜலத்தில் நனைத்துத் திருப்பிக் கொடுத்துவிட்டு வந்தாள். அவள் கூடத்திற்குத் திரும்பி வரும்போது “ஏண்டி, அகிலம், தேங்காய் உரிக்கிற பாறையைத் திருப்பிக் கொடுத்துவிட்டாயோ?” என்று ராஜத்தின் தாயார் கேட்டாள் சமையல் உள்ளிலிருந்து. “என்ன?” என்று கேட்டுக்கொண்டே ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த ராஜத்தைப் பார்த்தாள் அவள். அப்பொழுதுதான் அவன் கண்ணெடுக்காமல், இத்தனை நாளாக இல்லாத ஒரு பார்வை பார்த்தான். அவளைப் புரிந்துகொண்டுவிட்டதாகச் சொல்வதுபோல் இருந்தது.

“பாறையா? இதோ கொண்டு வருகிறேன்” என்று சொல்லிவிட்டு அவள் திரும்பினாள்.

திரும்பி வந்தவள் ஏதோ ஞாபகம் வந்து ஒரு வெண்கலப்பானையை, "மறந்தே போய்விட்டது" என்று கெஞ்சிக் கொடுத்து விட்டு வந்தாள்.

ஏழெட்டு நடை ஆகிவிட்டது. மறுபடியும் போனாள்.

"வெற்றிலை இருக்கோ, மாமி?"

சமையல் உள்ளில் இருந்த ராஜத்தின் தாயார், 'ராஜம், அலமாரியிலிருந்து கொஞ்சம் வெற்றிலை எடுத்துக் கொடேன் அந்த மாமிகிட்ட' என்று உள்ளே இருந்தபடியே சொல்லி விட்டுப் பத்துப்பாத்திரத்தை எடுத்துக்கொண்டு புழக்கடைக்குப் போய்விட்டாள். ராஜம், ராதா கல்யாணத்திற்குக் கண்டு மிஞ்சியிருந்த வெற்றிலையில் பாதி எடுத்து அவள் கையில் வைத்தான். அவன் நிமிர்ந்து பார்த்தாற்போல் அவளுக்குப் பார்க்க முடியவில்லை. வெடவெடத்துக்கொண்டு, அதை வாங்கிக்கொண்டு திரும்பி விரைந்தாள். தன் வீட்டு ஆளோடியில் ஏறும்போது இருமல் ஓசை கேட்கவே, திரும்பிப் பார்த்தாள். நிலையின்மேல் இரு கைகளையும் தூக்கி வைத்துக்கொண்டு, ராஜம் அவள்மீது பார்வையை நாட்டியிருந்தான்.

அவசர அவசரமாக அவள் உள்ளே வந்து அடுக்கில் வெற்றிலையை வைத்து மூடிவிட்டு, மீண்டும் வாசலுக்கு வருவதற்காகக் கிளம்பினாள். "காபி போட்டாச்சா?" என்று கூடத்தில் துணியை விரித்துப் படுத்திருந்த அவள் புருஷன் தூக்கம் தெளிந்து உலர்ந்த உதட்டை நனைத்துக்கொண்டே கேட்டான். அப்போதுதான் அவளுக்கு மறந்துபோன காரியங்களெல்லாம் ஞாபகத்திற்கு வந்தன. மாட்டுக்குத் தண்ணீர் காட்டவில்லை; பால் கறக்கவில்லை; பசு சோர்ந்துவிட்டிருந்தது. அதைக் கவனிக்க ஆரம்பித்தாள். பாலைக் கறந்து, அடுப்பை மூட்டிக் காபியைப் போட்டாள். சர்க்கரை டப்பாவை எடுத்துத் திறந்தபோது, அது துடைத்துவிட்டாற்போல் இருந்தது. தட்டித்தட்டி, ஓர் ஓரத்தில் ஒட்டி மினுங்கின துண்டைத் தவிர ஒன்றுமில்லை.

"சர்க்கரை வாங்கிண்டு வந்துடறேன்" என்று அவன் காதருகில் கர்ஜித்துவிட்டு எதிர் வீட்டுக்கு ஓடினாள். வாசலில் அரை வண்டி பூட்டி நின்றுகொண்டிருந்தது. உள்ளே போனாள். கூடத்தில் கோட்டும் சட்டையும் போட்டுக்கொண்டு ராஜம் நின்றுகொண்டிருந்தான். அவன் தாயார் தட்டிலிருந்து விபூதியைக் கட்டைவிரலால் எடுத்து அதை அவனது நெற்றியில் இட்டுக்கொண்டிருந்தாள். ஊஞ்சலில் அவன் தகப்பனார் உட்கார்ந்திருந்தார். விபூதி இட்டுக்கொண்டதும் ராஜம் அவர்கள்

இருவருக்கும் நமஸ்காரம் செய்தான்.

"ஒன்றும் மறக்கவில்லையேடா? எல்லாம் எடுத்து வச்சினுட்டியோ இல்லையோ?" என்று கேட்டார் அவர்.

"ஒன்றும் மறக்கவில்லை."

"போய்ச் சேர்ந்தவுடனே லெட்டர் போடு. வாரம் ஒரு கடுதாசி போடணும். உன் செளகர்யப்படிதான் எழுதணும் என்று வச்சுக்கப்படாது. அம்மா ரொம்பக் கவலைப்பட ஆரம்பிச்சுடறாள்."

"நீங்க சொல்லிண்டே இருக்க வேண்டியதுதான். அவன் போட்டால்தானே."

"போடுகிறேம்மா" என்று ஆயிரம் மைல் பிரயாணத்திற்கும் தனிமைக்கும் ஹோட்டல் சாப்பாட்டுக்கும் கிளம்பிக்கொண்டிருந்த ராஜம் தழுதழுத்தான்.

ரேழி வாசற்படிக்கருகில் நின்று இவ்வளவையும் பார்த்துக்கொண்டிருந்த அகிலாண்டத்திற்கு ஏக்கம் பிடித்துவிட்டது. அயர்ச்சி தாளாமல் திரும்பினாள்.

"என்னடி அகிலாண்டம், என்ன வேணும்?" என்று கேட்டாள் ராஜத்தின் தாயார்.

"சர்க்கரை ஒரு கரண்டி வேணும். காபி கலந்து வைத்தேன். அப்புறந்தான் சர்க்கரை இல்லை என்று ஞாபகம் வந்தது . . ."

"வாங்கிக்கொண்டு போயேன். நன்னாத் திரும்பிப்போகிறாள் அசடு."

"நிறையக் கொடுடீ, ஒரு கரண்டி என்ன?" என்று உத்தரவு போட்டார் ராஜத்தின் தகப்பனார். சகுனம் ஆயிற்றே என்று அவருக்கு முகம் மலர்ந்துவிட்டது. "ராஜம், கிளம்பு" என்று பெட்டியை எடுத்துக்கொண்டு வாசலுக்குப் போனார். ராஜம் தயங்கி நின்றான்.

"போயிட்டு வரேம்மா, அந்த மாமி கிட்டவும் சொல்லு" என்று விடைபெற்றுக்கொண்டான்.

"போயிட்டு வரேன்னு சொல்லிக்கிறாண்டீ" என்று அகிலாண்டத்திற்கு அஞ்சல் செய்தாள் தாயார்.

"சரி" என்று வேதனையை அடக்கிப் புன்சிரிப்புடன் கூறினாள்

அகிலாண்டம். உடனேயே வாசலுக்கு வந்துவிட்டாள்.

எல்லோரும் வாசலுக்கு வந்ததும், "பார்த்தாயா, ஊஞ்சல் பலகையில் வச்சிருக்கிற புஸ்தகத்தை மறந்துவிட்டேன்" என்று நினைத்துக்கொண்டு சொன்னான் ராஜம்.

"நான் போய் எடுத்துண்டு வரேண்டா" என்று உள்ளே ஓடினார் தகப்பனார்.

"அம்மா ஒரு கிராம்பு கொண்டு வாயேன்" என்றான் ராஜம்.

அம்மாவும் உள்ளே போனாள். வாசலில் வண்டிக்காரனைத் தவிர வேறு ஒருவரும் இல்லை. அவனும் மாட்டுச் சலங்கையைச் சரிப்படுத்திக்கொண்டிருந்தான்.

"போயிட்டு வரட்டுமா?" என்ற பாவனையில் அகிலாண்டத்தைப் பார்த்துத் தலையாட்டினான் ராஜம். தன்னிடம் தனியாகச் சொல்லிக்கொள்ள அவன் இவ்வளவு சிரமப்பட்டதைக் கண்டு அவளுக்குப் பெருமை தாங்கவில்லை. கண்ணில் நிறைந்த ஜலத்தை விழாமல் தேக்கிக்கொண்டு தலையாட்டினாள். கிராம்பும் புஸ்தகமும் வந்துவிட்டன. சலங்கை ஒலித்தது. ஒரு நிமிஷத்தில் வாசல் வெறிச்சோடிவிட்டது. கண்ணைத் துடைத்துக்கொண்டு உள்ளே போனாள் அகிலாண்டம்.

பித்துப் பிடித்தாற்போல உட்கார்ந்திருந்தாள் அவள். பறி கொடுத்துவிட்ட மனது அடித்துக்கொண்டே இருந்தது. சாயந்தரம், வேலைக்காரி வந்தபோது, பாத்திரத்தில் ஏதோ பத்து ஒட்டிக்கொண்டிருந்ததென்று, விதியிடம் பட்ட ஆத்திரத்தை அவள்மீது திருப்பிவிட்டாள்.

"எத்தனை நாளைக்கடி சொல்றது சொரணை கெட்டவளே, இப்படி தேய்க்காதேன்னுட்டு; நீ சோறுதான் திங்கிறியா? இதென்ன வேலை? கழுதைக்குட்டி மாதிரி இளிக்கிறியே. சீ, பல்லை மூடு, மானங் கெட்டவளே . . ."

இளித்துக்கொண்டிருந்த வேலைக்காரியின் முகம் இருண்டு விட்டது. அவள் விஸ்வரூபம் எடுத்துவிட்டாள்.

"என்னாம்மா களுதை குதிரைங்கறே? என்ன மானங்கெட்டுப் போயிட்டேன்? நாக் கூசாம அடுக்கிறியே; மானங்கெட்டவ, மானங் கெட்டவன்னுட்டு? இந்தப் பேச்சுக்கு, அந்த மவராசன், உன் புருஷன்

பூசை பண்றானே அந்த ஆண்டவன் தான் உன்னைக் கேக்கணும்; ஐயையோ, இதென்னாடி பேச்சு!"

"சீ சீ, பதில் பேசாதே."

"சரிதாம்மா, பேசாம இரு. ரொம்ப நல்லாப் பேசிட்டே பாரு. கணக்கைப் பாத்துக் காசை விட்டெறி. மானங்கெட்டவ வேலையும், சங்காத்தமும் உனக்கு வாணாம். நீ ஒரு மனுசி மாதிரி" என்று பொரிந்துவிட்டுக் கொல்லைப் படலைத் திறந்துகொண்டு பறந்துவிட்டாள் வேலைக்காரி.

படபடப்பு ஓய்ந்ததும், நடந்ததை நினைத்து அழுதாள் அகிலாண்டம். நிம்மதியிலிருந்து நழுவிவிட்ட மனம் வேதனை தாங்கமாட்டாமல் அழுந்திக்கொண்டிருந்தது. நாலு நாள் கழித்துத் தற்செயலாக அவள் தகப்பனார் வந்தார். அவரோடு பிறந்தகம் போய்ப் பத்துப் பதினைந்து நாள் இருந்துவிட்டு வந்ததுந்தான் மனம் நிலைகொண்டது. கொஞ்சம் கொஞ்சமாக, இரண்டு நாள் அவள் கற்பனையிலும் ஆசையிலும் நாடகம் ஆடிவிட்டுப் போன ராஜத்தை மறந்துவிட்டாள்.

இப்பொழுது அந்த ஸ்தானத்திற்கு வந்துவிட்டான் அடுத்த வீட்டு ருக்மிணி அம்மாமியின் தம்பி. அவனுக்கு லீவு பத்துப் பதினைந்து நாள் இருக்கிறது. இருந்தால் என்ன? அவள் அதிருஷ்டம் தெரிந்ததுதானே. இருந்தும் மனது கேட்கமாட்டேன் என்கிறது. ஒரு ஆசை – குளிக்கப்போனவன் இன்னும் வரவில்லை. துடிக்கத் துடிக்க அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் அவள்.

"என்ன யோஜனை பலமாயிருக்கு!" என்று குரல் கேட்கவே, சூன்யத்தைப் பார்த்து, நினைவிழந்திருந்தவளுக்குத் தூக்கி வாரிப்போட்டது. அவள் புருஷன் நைவேத்தியப் பாத்திரத்துடன் புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டு நின்றான்.

"ரொம்ப நாழி பண்ணிவிட்டேனா? பசி துடிக்கிறதாக்கும் அம்பாளுக்கு?" என்று கேட்டார் அவர். செவிடனின் சிறு குரலில் எவ்வளவு பரிவு! எவ்வளவு கனிவு! எவ்வளவு நம்பிக்கை! என்ன நிர்மாயமான, நிர்மலமான பார்வை! வெயிலில் கால் பொரிய நடந்துவிட்டு வந்த தேகம் வேர்த்து விறுவிறுத்துக்கொண்டிருந்தது. ஜன்மத்திலேயே கோபத்தை அறியாத கண்ணும் உதடும் வழக்கம்போல் புன்சிரிப்பில் மலர்ந்திருந்தன.

“இதைவிட என்ன வேண்டும்!” என்று மயங்கிப் போனாள் அகிலாண்டம்.

சிரித்துக்கொண்டே, நைவேத்தியப் பாத்திரத்தைக் கையில் வைத்துக்கொண்டு அவ்வளவு அன்பைக் காட்டிய விதியை உள்ளே அழைத்துப்போய்க் கதவைத் தாழிட்டு, அதன் உடல் வேர்வையைத் துடைத்தாள். அது, இலையில் உட்கார்ந்து சாப்பிட்டபோது, அவளுக்கு எல்லாப் பசியும் தீர்ந்துவிட்டது.

கலாமோஹினி, 1946

# வேண்டாம் பூசனி!

பாட்டிக்குக் கைகால்கள் எல்லாம் வீங்கிவிட்டன. ரத்தம் இல்லாத குறைதான். வயது என்ன, கொஞ்சமாக ஆயிற்றா? வருகிற கந்த சஷ்டிக்கு எண்பத்திரண்டு நிறைந்துவிடுகிறது. இனிமேல் சாப்பாடு சாப்பிட்டா ரத்தம் ஊறப் போகிறது? திடீர் திடீரென்று கிறுகிறுவென்று மயக்கம் வருகிறது. கண்ணில் நிழலாடுகிறது. யாராவது வந்தால் ஏதோ தேய்த்துவிட்டாற்போல் தெரிகிறதே தவிர, இன்னாரென்று பளிச்சென்று சொல்ல முடியவில்லை. பொழுது சாய்ந்து விட்டால் இந்த அரைப்பார்வையும் மங்கிவிடுகிறது. இப்போது ஆறு மாதமாக ராத்திரிப் பலகாரம் கூடக் கிடையாது. மத்தியானம் பன்னிரண்டு மணி சுமாருக்குச் சாப்பிடுவதோடு சரி. வாய் ருசிக்கத் தோசை, இட்டலி, கொத்தமல்லித் துவையல் என்று தவறாமல் சாப்பிட்டுவிட்டுத் திடீரென்று இவற்றை எல்லாம் நிறுத்திவிட்டது, முதலில் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் உடம்புப் பாட்டைக் குறைத்துக்கொள்ளத்தான் இந்த ஏற்பாட்டை ஆரம்பித்தாள் பாட்டி. நடக்கவோ முடியவில்லை. கையில் தெம்பில்லை. பலகாரம் சும்மா வாயில் வந்து விழுமா? அதற்கும் அரிசி, உளுந்து என்று எதையாவது நனைத்துக் கல்லுரலில் போட்டு அரைத்தால்தானே உண்டு. கல்லுரல் குழவியைப் பம்பரமாகச் சுற்றிக்கொண்டிருந்த கைக்கு இப்போது அதை நகர்த்துவதே பாடாக இருந்தது. அதுவுமின்றித் தட்டித் தடவிக் கொண்டு இலையைப் போட்டுப் பலகாரத்தை வைத்து, எண்ணெய், மிளகாய்ப் பொடி எல்லாம் தானேதான் போட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதோடு நின்று விடுகிறதா? அந்த இலையை வாசலில் கொண்டு எறிய வேண்டும். பிறகு தின்ற இடத்தை மெழுகவேண்டும். 'இவ்வளவு பாடு எதற்காக?' என்றுதான் பலகாரப் பழக்கத்தையே நிறுத்தினாள் பாட்டி.

ஒரு வேளைச் சாப்பாடு சமைப்பதே பிரம்மப் பிரயத்தனமாக இருக்கிறது. 'டா'னாப் பாடாக வளைந்து விட்ட உடம்பைச் சுமந்துகொண்டு எத்தனை வேலை செய்ய வேண்டியிருக்கிறது! விடியற்காலையில் வாசலைப் பெருக்கிச் சாணி தெளித்துக் கோலம் போடவேண்டும்.

"ஏண்டி ராது, வாசல் எவ்வளவு பெரிசு இருக்கு. என்னமோ பிளாஸ்திரி போட்டாப்போல் கையகலத்துக்குப் பெருக்கி மொழுகியிருக்கியே!" என்று

சுந்தராம்பாக் கிழவி சொன்னபோது, “நான் பிள்ளை பெத்த அழகுக்கு இது போரும். என்னைச் சொல்லி என்னடி பண்றது? ஒரு வீடு தள்ளித்தானே இருக்கா நாட்டுப் பொண்ணு. அவளை அழச்சிண்டு வந்து காண்பியேன் என்று பாட்டி பதில் கொடுத்தாள்.

“அவ இந்தக் கோலத்தை மிதிச்சுண்டுதானே காவேரிக்குப் போறா, குளிக்க?”

“பின்னே ஏன் என்னைக் கேக்கறே? என் வயத்தெரிச்சலைக் கிளப்பாம போ. நீ கொடுத்துவச்ச மகராசி. உன் நாட்டுப்பெண் இரண்டும் அடங்கின சரக்கு. காலைப் புடிக்கிறதென்ன, புடவை தோய்ச்சுப் போடறதென்ன, ‘ம்’ முன்னாப் பத்து அரைச்சுப் போடறதென்ன, அதுக்கெல்லாம் கொடுத்து வைக்க வாண்டாமா?” – சுந்தராம்பாக் கிழவி போன பிறகு, பாட்டி அந்தக் கையகல மெழுகலையும் கோலத்தையும் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அறுபது, அறுபத்தைந்து வருஷத்துக்கு முன், சாந்திகல்யாணம் ஆகிப் புக்ககம் வந்த புதிதில் பிடாரியம்மன் புறப்பாட்டுக்காகத் தெருவடைத்துத் தேர்க்கோலம் போட்டாள் அவள். ஊரே அதைப் பார்த்துப் பிரமித்தது. அவளுடைய மாமியார், ‘நன்னாப் போட்டா, அசடு!’ என்று பூரிப்புத் தாங்காமல் சொல்லிக்கொண்டே, சுவாமி அலமாரியைத் திறந்து விபூதி எடுத்து ஒரு பொட்டு அவள் நெற்றியில் வைத்தாள். ‘அடுத்த வீட்டுச் சிவகாமு கண்ணு படப்படாது, சுவாமி! என் மாட்டுப் பொண்ணு பரம சாது’ என்று வேண்டிக்கொண்டாள். ‘அவ கண்ணிலே ஆலகால விஷம் இருக்குடி அம்மா. பட்டுதோ போச்சு. அதோ உயரக்க, சுவத்துலே இருக்கே ராதாகிருஷ்ண படம், அது அவா போட்டது. பரண்கட்டி அதுமேலே உட்கார்ந்து எழுதிண்டிருந்தா. சிவகாமு வந்து, ‘அட, சித்திரம் போட்டாறதா’ன்னாள். சொல்லி ஒரு முகூர்த்தமாகலே, பரண் முறிஞ்சு திடீர்னு விழுந்தது. ஒரு மாசம் எழுந்திருக்கலெ. அவ்வளவு குளுமையான கண்ணு! அப்பப்பா! இந்தா, ‘ஆக்’காட்டு” என்று ராதையின் வாயிலும் கொஞ்சம் விபூதியைப் போட்டாள்.

நேற்று நடந்தாற்போல இருக்கிறது. இந்த மாதிரி மாமியார் யாருக்குக் கிடைக்கப் போகிறாள்? தெய்வப்பிறவி! ராதையும் அந்த மாமியாருக்குக் கொஞ்சமாகச் செய்யவில்லை. முடக்கு வாதம் வந்து இருந்த இடத்தை விட்டு நகரமுடியாமல் அவள் கிடந்தபோது ஒரு காரியம் விடாமல், கூசாமல், ஜுகுப்ஸை இல்லாமல் செய்தாள். ‘உனக்கு ஒரு குறைவும் வராதடி அம்மா’ என்று வாயார அவள் ஆசி கூறினதும், அதைக் கேட்டு

உணர்ச்சி தாங்காமல் கண்ணைத் துடைத்துக்கொண்டதும் நன்றாக ஞாபகத்தில் இருக்கின்றன. 'அந்த உத்தமி வாக்குக்கூடப் பலிக்கவில்லை? பலித்தால் மூன்று பிள்ளைகளையும் இரண்டு பெண்ணையும் கல்லுக் கல்லாகப் பெற்றுவிட்டு இந்தக் காடு அழைக்கிற வயசில் ஒன்றியாக, வீங்கின கையும் வீங்கின காலுமாகத் திண்டாடுவோமா? வாக்குப் பலிக்கத்தான் இல்லை.'

கோலம் போட்டானதும் நடுப்பிள்ளை வீட்டிலிருந்து அரைச்சேர் பால் வரும். அவன் ஸ்வீகாரம் போய்விட்டான். அபார சம்சாரி. ஒன்பது பெண்கள்! ஸ்வீகாரச் சொத்து மூன்று வேலியும் கரைந்து மூன்றரை மாவுக்கு வந்துவிட்டது. 'ஒன்பது பெண்ணைப் பெத்தூட்டு உசிரோடே இருக்கானே. அதுதான் பெரிசு' என்று ராதுப் பாட்டி வாய்க்குள் சொல்லிக் கொள்வாள். நடுப்பிள்ளையிடம் ஒரு தயவும் அன்பும் உண்டு. இவ்வளவு சம்சாரத்துக்கிடையில் அவன் சொந்தத் தாயாரை மறக்கவில்லை. வருஷத்திற்கு இரண்டு புடைவை, பத்துக்கலம் நெல், காய்கறி, பட்சணங்கள் என்று அவளுக்கு வேண்டியதையெல்லாம் கொடுத்துக்கொண்டிருந்தான். மருமகளையும் கோயிலில் வைத்துக் கும்பிடவேண்டியதுதான். அவன் வீட்டிலிருந்து தினமும் அரைச் சேர் பசும்பால் வரும். வேண்டுமென்றால் காபியாகவும் வந்துவிடும்.

காபி குடித்துவிட்டு, ஆற்றங்கரைக்குப் போய்க் குளித்துவிட்டு வருவதற்குள் ஒன்பது மணியாகிவிடும். அப்புறம் சூரிய நாராயண ஜபம். 'என்னமோ அந்த மாமியார்த் தெய்வம் கொடுத்துவிட்டுப் போன சொத்து அது. அது இல்லாவிட்டால் இந்த வயசில் இவ்வளவு தூரம் எங்கே கண் தெரியப்போகிறது?' என்று சாயாதேவி ஸுவர்ச்சலா தேவி சமேதரான சூரியபகவானை விடாமல் பூஜை செய்து வந்தாள் பாட்டி. காலணா அகலத்திற்கு ஒரு பொன் தகட்டில் ரதமும் குதிரைகளும் கதிரவனும் வெகு நுணுக்கமாக வேலை செய்யப்பட்டிருந்தன. கால் மணி நேரம் அதற்கு முன்னால் உட்கார்ந்து அதன் புகழ் பாடி அதன் அழகைப் பார்த்துத் தினம் ஒரு முறை பூரித்து, இரண்டு வறட்டுத் திராட்சைப் பழங்களை நைவேத்தியம் செய்து, நமஸ்கரித்து அந்தப் பகவானை ஒரு வெள்ளிச் சம்புடத்தில் – சம்புடமும் மாமியார் சொத்துத்தான் – போட்டு மூடி, யாராவது தெருவோடு போகிற குழந்தையைக் கூப்பிட்டு அந்த இரண்டு திராட்சைகளைக் கொடுத்த பிறகுதான் பாட்டி சமைக்க ஆரம்பிப்பாள்.

சமைக்கிறதுதான் மகா பாடு. கொல்லைத் தோட்டத்தில் இருந்து

தண்ணீர் கொண்டுவர வேண்டும். அந்தக் கிணறு தரையோடு தரையாக இருக்கும். சுவர் கிடையாது. ஏற்றமோ சகடையோ கிடையாது. நின்ற வாக்கில் கயிற்றில் குடத்தைக் கட்டிவிட்டு இழுக்க வேண்டும். இந்தத் துர்ப்பலமான உடம்பில், ஒரு நாளைக்கு அந்தக் கிணற்றுக்குள் அப்படியே விழுந்தாலும் விழுந்ததுதான்.

பாதி நாள் ரசம் அல்லது வெறுங் குழம்பு என்று ஏதாவது ஒன்றுதான் பண்ணிச் சாப்பிட முடியும்.

'மொகரையைப் பாரு. உங்களுக்கெல்லாம் வேளைக்குச் சமைச்சுக் கொட்டணுமோ? வெறுமனே கரைஞ்சுண்டுகிடங்கோ. இன்னும் ஒரு நாழியாகும் இன்னிக்கு. நீயுந்தான் போயேன். எங்கேயாவது பந்தல் கால்லெ படுத்துத் தூங்கிப்பிட்டு ஒரு நாழி கழிச்சு வந்து சேரு' என்று முற்றத்தில் உட்கார்ந்து கரையும் காக்கைக் கூட்டத்தையும், இடைக்கட்டில் வந்து வாலையாட்டிக் குழையும் நாயையும் செல்லமாகக் கடிந்துகொள்வாள் பாட்டி.

சாப்பாடானால் அன்று வேலை தீர்ந்தாற்போல. வீட்டைச் சாயங் காலம் ஒரு முறை பெருக்கிவிட்டால் போதும். குப்பையை மூலையிலிருந்து திரட்டி வாசலில் எறிவதும் சிரமமான வேலைதான். எத்தனை தடவை எழுந்து உட்கார்ந்து குனிந்து நிமிர வேண்டியிருக்கிறது? 'பெண்ணாகப் பிறந்தவர்களின் ஆயுசில் பாதி குனிந்து நிமிர்வதிலேயே போய்விடுகிறது' என்பது பாட்டி கணக்கு. ஆனால் இந்த வயசில் ஒரு தடவை குனிந்து நிமிர்கிறதானால் . . . அப்பப்பா!

சாயங்காலம் திண்ணையில் காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு விட்டால் பொழுது போவதே தெரியாது. இயந்திரம் மாதிரி கை உருத்திராக்ஷக் காய்களை எண்ணும். வாய் ராமாயணத்தைச் சொல்லும். ஆனால் மனம் மட்டும் பழைய முகங்கள், ஆசைகள் எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்து ஏங்கிக்கொண்டிருக்கும்.

மூத்த பிள்ளையைப் பார்த்து இரண்டு வருஷம் ஆகிவிட்டது. எப்போதாவது நான்கு வருஷத்திற்கு ஒரு தடவை வருவான். வந்தால் தாயாரைப் பார்க்கக்கூடத் தோன்றாது. அவனுக்குத் தாயார், தகப்பனார் இருவர் மீதும் கோபம். 'சின்னப் பிள்ளைக்கு அதிகமாகச் செய்துவிட்டார்கள்' என்று அவன் எண்ணம். இந்த மாதிரி அசட்டு எண்ணங்கள் தோன்றிவிட்டால் படைத்தவன் கூடத் திருத்த முடியாது. அதுவும் அவனுக்காகப் படாமல் பெண்டாட்டி சொல்லி ஏற்பட்டுவிட்டால்

அது கல்லில் செதுக்கினாற்போலத்தான். அவன் மனைவி 'படாமணி!' இது ஊர் அறிந்த விஷயம். அவளுக்குச் சிநேகிதர்களே கிடையாது. ஒரு நிமிஷத்தில் யாரோடும் சண்டை போட்டுக்கொண்டுவிடும் வித்தை அவளோடு கூடப் பிறந்திருந்தது. புகுந்த நாள் முதல் மாமியார், மைத்துனன் மனைவி எல்லோரோடும் வரிந்து கட்டிக்கொண்டு குஸ்திக்கு நின்றுவிட்டு, கடைசியில் பாகம் பிரித்துக்கொண்டு புருஷனோடு வேறு வீட்டுக்குப் போனாள். கடைசியில் ஊரைவிட்டே இருவரும் போய்விட்டார்கள். தகப்பனார் செத்துப்போனபோது வந்தான் அவன். ஈமக் கடன் செய்ய முடியாது என்று ஒற்றைக் காலால் நின்றான். கடைசியில் யார் யாரோ சொல்லி நடுப்பிள்ளை அவனுக்குப் பணத்தைக் கொடுத்துப்பண்ணச் சொல்வதற்குள் ஊர்கூடித் தேர் இழுக்கிற பாடுபட்டுவிட்டது. நடுப்பிள்ளை ஸ்வீகாரம் போய்விட்டோமே என்று பார்க்காமல் தாராளமாகச் செலவு செய்தான். கிழவர் சாவுக்கு கல்யாணத்திற்கு நடக்கிறதுபோல்தான் இருந்தது. இந்த வைபவத்தை மூத்த மாட்டுப்பெண் வந்து எட்டிக்கூடப் பார்க்கவில்லை. 'இந்தச் சமயத்திலே இப்படித் துவேஷம் பாராட்டலாமா? யாரும் பாராட்ட மாட்டா. ஒண்ணு, அவ பரம அசடா இருக்கணும்; இல்லைன்னா மனுஷ்ய ஜன்மமா இல்லாம இருக்கணும்' என்று சமாதானம் செய்து கொண்டாள் பாட்டி. இருந்தாலும் அந்தரங்கத்தில் அவள் வரவில்லையே என்ற தாங்கல் ஒட்டிக்கொண்டுதான் இருந்தது.

கடைசிப் பிள்ளைதான் ஒரு வீடுபோட்டு அடுத்த வீட்டில், பிதிரார்ஜிதமான வீட்டில், பாட்டி அறுபது வருஷமாக வாழ்ந்து குடித்தனம் செய்த வீட்டில் இருக்கிறான். அவனும் பெரிய பிள்ளையைப் போலத்தான். தகப்பனாரிடம் தன் கோபத்தைக் காட்டவில்லை அவன். 'தாயார், பெண்ணுக்கு அதிகமாகச் செய்கிறாள்' என்பது அவன் எண்ணம். அவனுக்கு அதைப்பற்றிச் சந்தேகம் இருந்தாலும் அவன் பெண்டாட்டிக்கு நிச்சயந்தான்.

"அம்மாடியோவ்; வயசாவது ஆகவாவது! ஒண்ணரைப் படி சாதம் சாப்பிடறதே! இந்தாருங்கோ, உங்கம்மாவுக்குச் சாதம் என்னாலே போட முடியாது. ஆனாலும் இந்த மாதிரி, பகாசுரத் தீனி திங்கறத்தைப் பார்த்தா எனக்குப் பயமாயிருக்கு. குழந்தைகள்ளாம் பயப்படறது. உங்கம்மாவைத் தனியாச் சமைச்சுச் சாப்பிடச் சொல்லுங்கோ, ஆமாம். இல்லேன்னா நீங்களும் உங்க அம்மாவுமாச் சேர்ந்து குடுத்தனம் நடத்திக்கோங்கோ. நான் என் குழந்தைகளை அழச்சிண்டு தனியாகப் போறேன்" என்று மாமியார் சாப்பிட்டுக் கொண்டிருக்கையிலேயே ஒரு கர்ஜனை போட்டாள்.

அம்மா அப்படியே மண்டையில் அடித்தாற்போல் திகைத்துவிட்டாள். பிள்ளை தலையைக் குனிந்துகொண்டே வாசலுக்குப் போய்விட்டான். 'சீ நாயே! என்று சொல்லத் துப்பில்லையே இவனுக்கு' என்று ஏங்கினாள். சாப்பிடும்போது இந்தக் கடும் வார்த்தைகளைக் கேட்டபோது அவள் நெஞ்சு சுட்டது. சாதத்தை விழுங்க முடியாமல் தாரை தாரையாகக் கண்ணீர் விட்டாள். குழந்தைகள் திக்கிப் போய் உட்கார்ந்திருந்தன. கடைசியில் மனது இருந்த எழுச்சியில் இலையைக் கையோடு எடுத்துச்செல்ல மறந்துவிட்டாள்.

"ஏ முண்டமே! இந்த எச்சில் இலையை யார் தூக்கிண்டு போவா?" என்று எச்சில் இலையை எடுத்துப் பாட்டி தலை மீது வீசிவிட்டாள் அவள். பாட்டி வாய்விட்டு அழுதுகொண்டே இலையைப் பொறுக்கி வாசலில் எறிந்து கையை அலம்பி விட்டு அப்படியே நடுப்பிள்ளை வீட்டைப் பார்க்க ஓடிப்போய் நடந்ததைச் சொல்லி அழுதாள். நடுப்பிள்ளை ரௌத்ராகாரமாகச் சீறிக்கொண்டு ஓடிவந்து, "ஏ நாயே, என்ன துளுத்துப் போச்சு, கட்டை! இனிமே வாயைத் திறந்தாயோ மூட்டை கட்டி அனுப்பிச்சுடுவேன். ஏண்டா, பெண்டாட்டியை ஆள்கிறது அழகாயிருக்குடா, மானங்கெட்டவனே! பேசாம உட்கார்ந்திருக்கியே, இடுப்பிலே நாலு உதை விடறதுக்கில்லாம; கூறு கெட்டவனே; முதுகெலும்பில்லே உனக்கு?" என்று தம்பியைப் பார்த்துச் சத்தம் போட்டான். தம்பி இப்போதும் வாயைத் திறக்கவில்லை; தலையைக் குனிந்துகொண்டே உட்கார்ந்திருந்தான். இந்த மௌனத்திற்கு என்ன அர்த்தமென்றே தெரியவில்லை. அன்று முதல், பாட்டி அந்த வீட்டில் ஓர் ஓரமாகச் சமைத்துச் சாப்பிட ஆரம்பித்தாள். ஆனால் ஆறு மாசத்திற்குள் அந்த வாழ்க்கையும் நாசமாகப் போய்விட்டது. திடீரென்று உலர்த்தியிருக்கிற புடவையின் நடுவில் தானாக ஒரு கஜம் கிழிந்திருக்கும். படுக்கிற இடத்தில் ஒரு முட்டுச் சாணம் இறைந்து கிடக்கும். கரண்டிகள் மறைந்துவிடும்.

பாட்டி நடுப்பிள்ளையிடம் வந்து அழுதாள்.

"அப்பா, என்னாலே ஒத்தருக்கும் தொந்தரவு வாண்டாம். கோடி வீட்டிலே ஓர் ஓரமாக நான் இருந்துக்கறேன்" என்று தழுதழுத்தாள். கோடி வீடு நடுப்பிள்ளையுடையது. நெல் சேர் கட்டி வைத்திருந்தான் அங்கே. அங்கே வாசல் பக்கத்தில் ஓர் அறை இருந்தது. அந்த அறையைத் தவிர வேறு எங்கும் வெறும் திறந்த வெளிதான். தேர் தேராக நாலைந்து சேர் இருந்தன. அந்த வீட்டில்தான் இப்போதும் இருக்கிறாள் பாட்டி. ஆறு

வருஷமாக ஒன்றியாகக் காலம் கழிந்துகொண்டு வருகிறது.

தெய்வத்தின் வழியே அவளுக்குப் புரியவில்லை. மாமியார், மாமனார், மைத்துனர்கள் எல்லோருக்கும் அவள் கொஞ்சமாகவா உழைத்தாள்? அரை மனது, கால் மனது என்றில்லாமல், கபடமில்லாமல் அவள் செய்தது பகவானுக்குத்தான் தெரியும். எல்லோரிடத்திலும் நல்ல பெயர். 'நீ செத்த இடத்திலே செங்கழுநீர் பூக்கணும்டீம்மா' என்று மாமனார் ஆசீர்வாதம் செய்வது வழக்கம். ஆனால் பாட்டிக்கு இதுவரை எந்த ஆசை, எந்த ஆசீர்வாதம் பலித்தது? 'மஞ்சளும் பூவுமாகப் போகப் போகிறோம்' என்றுதான் மனப்பால் குடித்துக்கொண்டிருந்தாள். ஆனால் திடமாயிருந்த கிழவர் திடீரென்று மாரடைப்பு வந்து முந்திக்கொண்டுவிட்டார். அதுவே பெரிய இடியாக இருந்தது. ஏனென்றால், 'நாம்தான் முன்னால் போகப்போகிறோம்' என்று பாட்டிக்கு நிச்சயமாக ஒரு தீர்மானம் வேரூன்றிவிட்டிருந்தது. அது எதிர்பாராத வகையில் திடீரென்று பொய்த்துப் போனது பொறி கலங்கச் செய்தது.

அதுதான் நிறைவேறவில்லையென்றால் சாதாரணமாகவாவது வாழக் கூடாதா? பாபமே வடிவெடுத்தாற் போல இரண்டு நாட்டுப் பெண்கள். 'தின்கிற ஒரு பிடிச்சாதத்தைக் கூடப் பகாசுரத் தீனி தின்கிறது என்றாளே! "உங்க அம்மாவோட நீங்க குடுத்தனம் பண்ணிக்குங்கோ; இல்லாட்டா என் குழந்தைகளை அழச்சிண்டு நான் போறேன்; என் குழந்தைகளிடம்!" அவனுக்குக் குழந்தைகள் இல்லையா? ஐய, காதுகொண்டு கேக்கவே கூசறது. என்னமோ, இப்ப அவளுக்கே வந்துடுத்து. பம்பாயிலே இருக்கிற பிள்ளை திரும்பிக்கூடப் பார்க்க மாட்டேங்கறானாம்; நாம் பெரியவாளுக்குச் செஞ்சாத்தானே நம்ம கீழ் வாரிசுகள் நமக்குச் செய்யும்? அதையுந்தான் என்னமாச் சொல்றது?

'இந்தக் கட்டை கொஞ்சமாகச் செஞ்சுதா? இப்ப ஏன் லோல் படறது இப்படி!'

பாட்டி என்ன என்னவோவெல்லாம் எண்ணிக்கொண்டிருப்பாள். கணகணவென்று மேற்குக் கோடியிலுள்ள பெருமாள் கோயிலிலிருந்து தீபாராதனை மணியோசை கேட்கும். உடனே திண்ணையை விட்டு எழுந்து வாசலில் வந்து நின்று, தெருவின் அந்தக் கோடியிலிருந்த அந்தப் பெருமாளை இந்தக் கோடியிலிருந்தே வணங்கிவிட்டு, பாட்டி வாசல் கதவைத் தாழிட்டுக்கொண்டு உள்ளே சென்றுவிடுவாள்.

அன்று சாயங்காலம் கணகணவென்று கோயில் மணி ஒலித்தபோது

திண்ணையை விட்டு எழுந்து வந்தவளுக்கு ஏதோ கிறுகிறுவென்று தலையைச் சுற்றுவது போல் இருந்தது. அவ்வளவுதான். மறுகணம் நடு வாசலில் மயக்கம் போட்டு மடேரென்று விழுந்துவிட்டாள்.

மண்டையில் நல்ல அடி. ரத்தம் சடசடவென்று கொட்டிக் கொண்டிருந்தது. யார் யாரோ வந்து தூக்கினார்கள். நடுப்பிள்ளை வீட்டில் கொண்டுபோய்ப் போட்டார்கள். சாணார வைத்தியன் வந்து மருந்து போட்டுவிட்டுப் போனான். நடுப்பிள்ளை நன்றாகத்தான் கவனித்தான். அவன் மனைவியும் ஆஸ்த்மா இழுப்பு, இரைப்பு, இருமல் ஒன்றையும் லட்சியம் செய்யாமல் இயல்புக்கு மீறிய வேகத்துடன் சுச்ருஷை செய்து கொண்டிருந்தாள்.

இரண்டு நாள் ஆன பிறகு பாட்டியின் பெண்ணும் மாப்பிள்ளையும் வந்தார்கள் பார்க்க. மூன்று மைலில் கிழக்கே ஒரு கிராமம். அங்கேதான் பெண் வாழ்க்கைப்பட்டிருந்தாள். அவளும் சம்சாரிதான்; ஆறேழு பெண்கள்; நான்கு பிள்ளைகள்; கையில் ஒரு பெண்.

“அண்ணா, நான் அம்மாவை அழைச்சிண்டு போய் வச்சுக்கறேன்” என்றாள் பெண்.

“நானும் அதான் சொல்லணும்னு நெனச்சேன்” என்று மாப்பிள்ளையும் கூடச் சேர்ந்துகொள்ளவே, பாட்டி பெண்ணுடன் போவது என்று தீர்மானம் ஆகிவிட்டது.

பெண் வாழ்க்கையில் அடிபட்டவள்; சம்சாரி; கெட்டிக்காரி. கையும் காலும் வீங்கியிருப்பதைப் பார்த்து, மூன்று நாலு மாதத்திற்குமேல் அம்மா தரிக்கமாட்டாள் என்று நிச்சயமாகத் தோன்றிற்று. ‘கடைசிக் காலத்தில் கிழவிக்குச் செய்த புண்ணியமும் கிடைக்கும்; நூற்றைம்பது இருநூறு ரூபாய்ப் பாத்திரங்களும் கிடைக்கும் என்று புள்ளி போட்டுவிட்டாள். மறுநாள், அம்மா, அவளுடைய வெந்நீர்த் தவலை, வெண்கலப் பானைகள், ஈய ஜோட்டி, ஈயச் சொம்பு, சீனாச்சட்டி, அகப்பைக்கூடு, பித்தளைச் செம்புகள், வெண்கல டம்ளர்கள், உருளி, கால்பவுனில் ஒரு சிகப்புக்கல் மோதிரம் எல்லாம் ஒரு வண்டியில் ஏறி மாப்பிள்ளை வீட்டுக்குப் போயின.

பாட்டிக்குக் கஷ்டமெல்லாம் ஒரு மாதிரியாக விடிந்துவிட்டது என்று சொல்ல வேண்டும். கடைசிக் காலத்தில் பிள்ளை வீட்டில் இராமல் பெண் வீட்டில் இருப்பது வழக்கத்திற்கே விரோதமாகத்தான் இருக்கிறது. என்ன செய்ய முடியும்! பெண்ணாவது அழைத்து வைத்துக்கொள்கிறேன் என்று

சொன்னாளே, அதுவே சந்தோஷப்பட வேண்டிய விஷயம்.

இப்போது குனிந்து நிமிர வேண்டிய வேலை கிடையாது. தண்ணீர் இழுக்க வேண்டியதில்லை. வீடு பெருக்க வேண்டியதில்லை. உட்கார்ந்த இடத்திலிருந்தே கறி நறுக்கிக் கொடுப்பாள். புளிக்குக் கொட்டை எடுப்பாள். இல்லாவிட்டால் காலை நீட்டிக்கொண்டு பெண்ணின் கைக்குழந்தையை இரண்டு கால்மீதும் மல்லாக்க விட்டு ஆராரோப் பாடி இட்டாச்சுக் காட்டிக்கொண்டிருப்பாள். ஆறு வயதிலும் பத்து வயதிலும் இரண்டு பேத்திகள். அது இரண்டுக்கும் தினமும் இருட்டியதும் கதை சொல்ல வேண்டும். பிள்ளை வயிற்றுப் பேரன்களைப் போல ஓசைப்படாமல் கிள்ளிவிட்டு ஓடத் தெரியாது அதுகளுக்கு. பாட்டிக்கு உடம்பில் புது பலம்கூட ஊறிவிட்டது. கவலை இல்லை. எப்போதும் உற்சாகம், எப்போதும் அமைதி. கண்ணாடி மேல் ஓடுவதுபோல் பொழுது ஓடிற்று. ஆடி வந்தது. பிள்ளையார்ச் சதுர்த்தி வந்தது. நவராத்திரி வந்தது. தீபாவளி, கார்த்திகை – அட வைகுண்ட ஏகாதசி வந்துவிட்டதா! 'நான் வந்து எட்டு மாசமா ஆயிட்டுது!' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் பாட்டி.

"ஆனா என்னம்மா. நீ சாப்பிட்டா இங்கே ஆயிடப்போறது?" என்று பெண் வறட்டுக் குரலில், 'அப்பா குதிர்க்குள்ளே இல்லை' என்கிற மாதிரி சொல்லிவைத்தாள்.

"என்னமோ பகவான் இன்னும் அழச்சுக்க மாட்டேங்கிறான் என்று பாட்டியும் பதில் சொல்லிவைத்தாள். பெண் சொன்ன பதில் அவளுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. 'பாத்திரத்தையெல்லாம் இவளிடம் கொடுத்துவிட்டு இரண்டு மாசத்தில் செத்துப்போகலாம் என்று வந்தால், ஆயுசு நீண்டு கொண்டே போகிறதே' என்று கலங்கினாள்.

பொங்கலுக்கு ஒரு வாரம் இருக்கும். பாட்டி கூடத்தில் உட்கார்ந்து உருத்திராட்சத்தை எண்ணிக்கொண்டிருக்கையில், "அம்மா!" என்று குரல் கேட்டது. மூத்த பிள்ளையின் குரல்.

"யாரு, நீலுவா?"

"ஆமாம்மா."

"வா, உட்காரு, இப்பத்தான் வரியா?"

"ஆமாம்."

“எங்கேயிருந்து?”

“மாயவரத்திலேருந்து தான்.”

“அங்கேதான் இருக்கியா! எத்தனை நாளா?”

“ஒரு வருஷமா.”

“என்ன வேலையோ?”

“ஒரு செட்டியார் கடையிலே கணக்கு எழுதிண்டிருக்கேன்.”

“சவுகர்யமா இருக்கா ஊரு?”

“ஏதோ இருக்கு.”

“நான் இங்கே இருக்கேன்னு தெரியுமா?”

“ஊருக்கு வந்து பார்த்தேன். இஞ்ச வந்துட்டதாகச் சொன்னா. வந்தேன்; அடுத்த திங்கட்கிழமை எனக்குச் சஷ்டியப்த பூர்த்தி.”

“ஓஹோ, தை மாசம்னாடா நீ பிறந்தே! அட, அறுபது ஆயிட்டுதா உனக்கு!”

“ஆசீர்வாதம் பண்ணும்மா, அதுக்குத்தான் வந்தேன்.”

பிள்ளையின் குரல் கம்மித் தழுதழுத்தது.

“தீர்க்காயுசா இருடாப்பா. நல்லபடியா நூறு வயசு இருக்கணும், சௌக்யமாக் குழந்தை குட்டிகளோட விசாலாட்சி இருக்காளா?”

“இருக்கா.”

பாட்டிக்குப் பிள்ளையின் அறுபதாம் கல்யாணத்தைப் பார்க்க ஆசைதான். ஆனால் அவன் அழைத்தால்தானே. ஆசீர்வாதத்தை மட்டும் பெற்றுக்கொண்டு போய்விட்டான்.

“கலியாணம்னு சாக்கு வச்சுண்டாவது அம்மாவை அழச்சிண்டு போகணும்; நாலு நாள், பத்து நாள் வச்சுக்கணும்னு தோணித்தா பாரும்மா அண்ணாவுக்கு” என்று பெண் சொன்னாள். சொன்னது உண்மைதான். ஆனால் இவ்வளவு ஸ்பஷ்டமாக இவள்தான் இதை ஏன் சொல்ல வேண்டும்? – அம்மாவுக்கு வேதனை, பூச்சி அரிக்கிறது போல அரித்தது.

வர வர, பெண்ணும், தான் போட்ட கெடுவிற்குமேல் அம்மா

பிழைப்பதைச் சுட்டிக் காட்டுவது போலப் பேசிக் கொண்டிருந்தாள்.

சூரிய நாராயண சம்புடத்திற்கு முன்னால் உட்கார்ந்து பாட்டி மனப்பூர்வமாக வேண்டிக்கொண்டாள். 'அப்பனே, உன் கை பட்டுதுன்னா எவ்வளவு சீக்கிரம் எல்லாம் வாடறது? பூமி, ஜலம் எல்லாத்தையும் சுட்டுக் கொளுத்தறயே! என்னையும் பொசுக்கிப்பிடேன். ஏன் என்னை வச்சு வச்சுக் கொல்றே? அப்பனே!'

அன்று மாலை தாழ்வாரத்திலிருந்து முற்றத்தில் இறங்கும் போது கால் தடுக்கிற்று. பாட்டி இசைகேடாக விழுந்தாள். உதட்டில் முற்றத்துக் கருங்கல்படி ஆழமாகக் குத்தி, ரத்தம் ஆறாகப் பெருகிற்று. மேல் உதடு நன்றாகக் கிழிந்து – ஈறு தெரியும்வரை கிழிந்தது – ரத்தம் கொட்டிற்று. மூக்கும் கிழிந்து விட்டது. 'இந்த உலர்ந்த கட்டையில் இவ்வளவு ரத்தம் எங்கிருந்து வந்தது!' என்று எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது. அரை மணி நேரத்திற்குள் அதிர்ச்சி தாளாமல் முகம் பெரிதாக வீங்கிவிட்டது. ரத்தம் மட்டும் நிற்கவில்லை. விபூதியை வைத்து அப்பினார்கள். 'ராமா, ராமா!' என்று பாட்டி புலம்பிக்கொண்டிருந்தாள்.

ஆஸ்பத்திரி மூன்று மைலில் இருக்கிறது. இருள் கவிந்துவிட்டது. வண்டியைக் கட்டிக்கொண்டு போக வேண்டும்.

"டாக்டர் இத்தனை நாழிக்குமேல் இருக்கமாட்டார். வீட்டுக்குப் போயிருப்பார்."

"வீட்டுக்கே வண்டியை ஓட்டிண்டு போயிடறது."

"இத்தனை நாழிக்கு மேல் இருக்கமாட்டார்."

"ஏன்?"

"நாழியாயிடுத்தே."

"உடம்புக்கு வர வியாதிக்கும், ஆபத்துக்கும் ஜோஸ்யமா தெரியும்; அல்லது ஆஸ்பத்திரி மூடறத்துக்குள்ளே வரணும்னு தெரியுமா?"

"டாக்டர் பாக்கணுமே."

"டாக்டர் என்ன மளிகைக் கடைக்காரரா, கடை பூட்டினப்புறம் வியாபாரம் பண்ணமாட்டேன்னு சொல்றதுக்கு?"

"ம் . . ." என்று இழுத்தார் மாப்பிள்ளை.

“கட்டும் வண்டியை” என்று எதிர் வீட்டுக்காரர் துரிதப்படுத்தினார்.

மாப்பிள்ளை அசையவில்லை.

“என்னையா உக்காந்திருக்கிறே?” என்று மேலே தூண்டுதல் வரவும், ‘இதோ வரேன்’ என்று உள்ளே எழுந்து போனார்

“எம் பாட்டி, தாத்தா, ரெண்டு பேரும் இப்படி விழுந்துதான் செத்துப்போனா. அதே மாதிரிதான் அம்மாவுக்கும் வந்திருக்கு. பாட்டி ஆத்துக்குப் போய் ஸ்நானம் பண்ணிட்டு, வரபோது சாலையிலே மண் தடுக்கி விழுந்தா. மூர்ச்சை போட்டுடுத்து. கொண்டு கூடத்திலேயே போட்டுது. அரைமணிக்கெல்லாம் நின்று போச்சு. தாத்தா பூப் பறிச்சிண்டிருக்கும் போது மடேர்னு விழுந்து செத்துப்போனார். அம்மாவும் வம்சவழக்கத்தையே புடிச்சிண்டுட்டா” என்று பார்க்க வந்திருந்த அக்கம்பக்கத்து ஸ்திரீகளிடம் பெண் சற்று இரைந்தே சொல்லிக்கொண்டிருந்தாள்.

இதைக் கேட்டுவிட்டு மாப்பிள்ளை வண்டி கட்டும் யோசனையை விட்டுவிட்டு வாசல் பக்கம் திரும்பியவர், அங்கே எதிர் வீட்டுத் தூண்டும் புலி உட்கார்ந்துகொண்டிருப்பது ஞாபகம் வந்ததும் மாட்டுக்கொட்டில் பக்கம் போய்விட்டார்.

இரவு வெகுநேரம் கழித்துத்தான் ரத்தப்பெருக்கு நின்று கசியும் நிலைமைக்கு வந்தது. மறுநாள் மாலை அந்தக் கசிவும் நின்றுவிட்டது. பாட்டி, கோயில் மணியோசை கேட்டு எழுந்துகூட உட்கார்ந்தாள். ‘இந்தக் காயத்திற்குப் பலியாக மாட்டோம்’ என்று ஓர் உணர்ச்சி ஏற்பட்டபோது தாங்க முடியாத வேதனை வயிற்றைக் கலக்கிற்று. பெண்ணை நினைத்தும் வருந்தினாள்.

கோயில் மணி நின்றதும் பெண்ணைக் கூப்பிட்டாள்.

“ஏம்மா?”

“சிவராத்திரி நாளைக்குத்தானே?”

“ஆமாம்.”

“ஒரு காரியம் செய்யறியா?”

“என்ன, சேவை புழியணுமா, பலகாரத்துக்கு?”

“அதெல்லாம் ஒண்ணும் வாண்டாம். அறுபது வருஷமாக ஒரு

சிவராத்திரி விடாமல், நம்ம ஊர் கங்காதரேசுவரரைத் தரிசனம் பண்ணிண்டு வந்திருக்கேன். இந்த சிவராத்திரிதான் கடைசி சிவராத்திரியா இருக்கும். ஒரு வண்டியை வச்சு ஊர்லெ கொண்டுவிடச் சொல்லு. போய்த் தரிசனம் பண்ணறேன். அடுத்த சிவராத்திரி எனக்குக் கிடையாதுன்னு தோண்றது."

"இந்தத் தள்ளாத உடம்பிலே போக முடியாதும்மா, உனக்கு. உன் ஆசைக்கு நான் குறுக்கே நிக்கலெ. கட்டாயமாப் போய்த்தான் ஆகணும்னா கொண்டுவிடச் சொல்றேன்."

"போனால் தேவலை."

0

சிவராத்திரியன்று காலையில் பாட்டி நடுப்பிள்ளை வீட்டிற்குப் புறப்பட்டுவிட்டாள். வண்டியில் வரும்போதெல்லாம், வண்டி கைலாசத்தை நோக்கிப் போவதுபோல் தோன்றிக்கொண்டிருந்தது அவளுக்கு. 'ஈசனே! என்னை ஏமாற்றித் திருப்பியனுப்பிவிடாதே. வேண்டாத பூசனிக்காயை நீதான் எடுத்துக்கொள்ளணும். இவ்வளவு வயசான பிறகு உலகத்தில் மனுஷ்யர்கள் உயிரோடிருக்கலாமா? யாருக்காவது சாதகமாகச் செய்துபோட முடிகிறதா? ஒரு குடும்பத்திற்கு வீண் பாரம். அப்படித்தான் சொத்து இருக்கிறதா, கொடுத்து விட்டுப் போகலாம் என்பதற்கு? ஈசனே! உனக்கா தெரியாது?' என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு வந்தாள்.

வண்டி நடுப்பிள்ளை வீட்டு வாசலில் வந்து நின்றது.

வண்டி நிற்கிற சத்தத்தைக் கேட்டுப் பிள்ளையும் அவன் மனைவியும், 'யார்?' என்று பார்க்க ஓடி வந்தார்கள்.

"அம்மா!"

"அம்மா!"

"ராத்திரிக் கண் முழிக்கணுமேன்னு இப்பத் தூங்கறார் போல் இருக்கு" என்றாள் அவள்.

"அம்மா, அம்மா!" என்று பிள்ளை எழுப்பினார்.

"அம்மா, அம்மா!" என்று வண்டிக்காரன் குரல் கொடுத்தான்.

அம்மா காதில் ஒன்றும் விழவில்லை. அம்மா கைலாசத்தில் சிவனாரின்

மடியில் தலைவைத்து உறங்கிக்கொண்டிருந்தாள்.

**அமுதசுரபி 1951**

# இக்கரைப் பச்சை

முப்பத்தாறு ரூபாய் சம்பளத்தில், பால் பணம், மோர்ப் பணம், வீட்டு வாடகை, மளிகைப் பற்று எல்லாம் போக மீதியிருந்த மூன்று ரூபாயைச் செலவழிக்க முடியாமல் திண்டாடிக் கொண்டிருந்தான் அவன். எதிர் வீட்டு ராயரிடம் வாங்கின கைமாற்றைத் திருப்பிக் கொடுப்பதா? சுதந்தரக் கொண்டாட்டத்திற்கு ஜம்பமாகக் கையெழுத்திட்ட ஒரு ரூபாயைக் கொடுப்பதா? ஊரில் தேசீயக் கொடி ஸ்டாக் இல்லாமல் போனதும் மத்தியான்னத்தோடு மத்தியான்னமாகக் காடாத் துணியைச் சாயம் நனைத்து உலர்த்தி மூட்டுப்போட்டுச் சக்கரம் தைத்து முக்கால் ரூபாய் பொறாத கொடியை ஆறு ரூபாய்க்கு வியாபாரம் பண்ணின அஜீஸ்ராவுத்தரிடம் பற்று எழுதி வாங்கிய கொடிக்குப் பணம் கொடுப்பதா? அன்றைக்கு இருந்த வெறியில் ஆறு ரூபாய் பெரிதாகத் தோன்றவில்லை. மேலும் பற்று எழுதி வாங்கியதுதானே!

பாம்பு வாயில் தவளை, தவளை வாயில் வண்டு; அந்த வண்டு எதிரேயிருந்த சிலந்தி வலையில் சிக்கின ஒரு பூவைக் கண்டு தேன் குடிக்கத் திட்டம் போட்ட சந்தோஷம் ஒன்று அவனுக்கு ஏற்பட்டது. மேலண்டை வீட்டு வேலைக்காரி ஊமைச்சி, கொல்லையில் போய்க் கொண்டிருந்தாள். அவனுக்கு உடனே முதல் நாள் வாசித்த விகடத் துணுக்கு நினைவிற்கு வந்தது. 'பெப்பே . . . பாவ் . . . ஊ. ஆ. அ. பாவ்' என்ற பிச்சைக்காரனைப் பார்த்து, 'ஏனப்பா உனக்கென்ன வந்துடுத்து?' என்று ஒருவர் கேட்க, 'ஒண்ணுமில்லீங்க, ஊமைங்க, அவ்வளவுதான்' என்று அவன் பதில் சொன்னானாம். அதை நினைத்ததும் கைலாசத்திற்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. அடக்கி அடக்கி உடல் குலுங்க வாய்க்குள்ளேயே சிரிக்க முயன்றான். வீட்டுக் கொல்லைக் கிணற்றங்கரையில் துவைக்கிற கல்லின்மீது உட்கார்ந்திருக்கிறோம் என்ற ஞாபகம் வரவே, யாராவது பார்த்துவிட்டார்களோ என்ற சந்தேகத்துடன் நாலு பக்கமும் சுற்றிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! கீழண்டை வீட்டில் அத்து நின்று சிரித்துக்கொண்டிருந்தார். சிரிப்பில்லை, புன்முறுவல்தான். ஒரு பர்லாங்குக்கு அப்பால் கவலையில்லாதவன் மாதிரி, இருட்டைக் கொட்டி வளர்ந்து கிடந்த மூங்கில் கொல்லையைப் பார்த்துப் புன்முறுவல் பூத்துக்கொண்டிருந்தார். தன்னைப் பார்த்துவிட்டுச் சிரிக்கிறாரோ என்று கைலாசம் யோசித்தான். அது இல்லை என்று படவே வியப்பாகத்தான்

இருந்தது அவனுக்கு.

"என்ன ஐயா? மூங்கில் கொத்தைப் பார்த்து மந்தஹாசம் பண்ணுகிறீர்? கோவிந்த வன்னி விகடத் துணுக்கு எழுதி வச்சிருக்காரோ அங்கே?" என்று கேட்டான் அவன்.

"அட இங்கேயா உட்கார்ந்திருக்கீர்! இன்னிக்கென்ன, ஞாயிற்றுக்கிழமை லீவாக்கும்? தேவலை ஐயா உம்ம பாடு, இந்த ஆளையும் கட்டிண்டு மாரடிக்கறதைவிட."

"எம்பாடு இருக்கட்டும். கோவிந்த வன்னியர் கொல்லையைப் பார்த்துச் சிரிச்சுண்டிருந்தீரே, என்ன விசேஷம்?"

"யாரு? கோவிந்த வன்னியரா? யாரையா அது?"

"யாரா? என்னையா புதிர் போடறீர்? என்ன விசேஷம் சொல்லுமேன்?"

"நேத்தி மத்யானம் பன்னிரண்டு மணிவரை கோவிந்த வன்னியர் சொத்து அது. அப்புறம் – "

"அப்புறம் என்ன? நன்னாச் சொல்லுமேன். அத்துவின் கைக்கு வந்துட்டுதோ?"

"அப்படித்தான் வச்சுக்குமேன்" என்று சிரித்துக்கொண்டார் அத்து.

"ரிஜிஸ்டர்தான். நேத்திக்கிப் பன்னிரண்டு மணிக்கு. சாசனம் எழுதி ஒரு வாரமாச்சு."

"அதானா? என்னடா பாத்துப் பாத்து மகிழ்ந்து போறீரேன்னு பார்த்தேன்? எத்தனை ஏக்கர்?"

"ரண்டு வேலி சொச்சம். ஒண்ணரை வேலி நஞ்சை. மூங்கில் கொத்து முந்நூறு. தென்னந்தோப்பு நூத்தைம்பது மரம்."

"நூத்தம்பது தென்னமரமா? ம், ஹ், ம்! உம்ம 'ஐடியலை' நெருங்கிட்டாப்போல் இருக்கே."

"நெருங்கியும் ஆச்சு. கொஞ்சம் தாண்டியும் ஆச்சு! இப்ப ஆயிரத்து இருவது தென்னமரம், ஆயிரத்து நூறு மூங்கில் கொத்து ஆயிருக்கு. நஞ்சை ஒரு ஒன்பது, பன்னிரண்டு, படுகை நாத்தங்கால் இரண்டு, பிள்ளையார் கோயில் கட்டு ஒரு பதினாலு, ஆகக் கூடிப் பத்து வேலி பதினஞ்சு மாவாச்சு, எல்லாம் மொத்தமா . . ." இருந்த பூரிப்பில்

அத்துவால் மேலே பேச முடியவில்லை. நெஞ்சுக்குள்ளேயே இந்த ஆனந்தத்தை நிறுத்திப் புன்சிரிப்புப் பூத்துப் பூத்து அநுபவித்தார்.

“விலை என்ன?”

“அதான் கூடிப்போச்சு. சகட்டுமேனிக்குக் குழி அஞ்சரை ரூபாய்னு கொடுத்துட்டேன். ஒரேயடியாய் இழுத்துண்டு போயிடுத்து.”

“ஓய், அஞ்சரை ரூபாய்க்கு லாட்டரிச் சீட்டு அடிச்சாப் போல வாங்கிப்பிட்டு வலிக்கிறதோ உமக்கு! விலை கூடிப்போச்சாம், மலைமுழுங்கி!”

ரொம்ப மலிவாக வாங்கிவிட்டால் மேற்படி பாணியில் அதைக் குறிப்பிடுவதில் அத்துவுக்கு ஒரு திருப்தி. அத்துவின் விசேஷ பாணியே அதுதான்.

அவர் சொன்னார். “ ‘ஏ ஒன்’ நிலங்கள்! இருபோகமும், நாற்பது கலத்துக்கு எந்தப் பஞ்சத்திலும் குறையாது.”

“உமக்கென்னையா! கனகாபிஷேகம் பண்ணியிருக்கீர்; அடிக்கிறது!”

“போன ஞாயித்துக்கிழமைக்கு முந்தின ஞாயித்துக்கிழமை அக்ரிமண்ட் ஆச்சு. ஆன மறுநாள் விடிய விடியக் கண்ணுப்பத்தர் ஆத்துக்கு வந்தார்; மேலே ஐயாயிரம் கொடுத்துடறேன். அக்ரிமெண்டை என் பேருக்கு மாற்றி விடுங்கோன்னார். த்ஸ. ஆமாம். ஐயாயிரம், பதினாயிரம்! கொல்லையிலே இருக்கு நிலம். மொட்டை மாடியிலே நின்னுண்டு பார்த்தேன்னா வயல்லே ஓரோர் அங்குலமும் கண்ணில் படும். ஒரு எட்டிலே நடந்தால் போச்சு. நெனச்ச போது போய்ப் பார்க்கக் கொள்ளச் சௌகரியமாயிருக்கும். ‘சரிதான் போய்யான்’னு கழிச்சு விட்டுட்டேன். ஐயாயிரம் ரூபாயை வாங்கி என்னையா பண்றது? பொட்டீலே வச்சுத் திறந்து திறந்து பார்த்திண்டிருக்க வேண்டியதுதானே. ஏன்? நான் சொல்றது என்ன?”

“ஆமாம்.”

“போனவருஷம் பெருமாள் கோயில்கிட்ட ஒரு ஸ்தலம் வாங்கினேனோல்லியோ? ஒரே தாக்கா இரண்டரை வேலி, இதே மாதிரிதான். வாங்கிப் பத்து நாள் ஆச்சு. ரொட்டிக்கார யூசுப்பு ராவுத்தர் வந்தார். ரொக்கத்தை வச்சிண்டு திண்டாடிண்டிருந்தவர் அவர். ஒரு நாள் காலமே ஒம்பது மணி இருக்கும். ஆத்துக்கு வந்து குழி பதினஞ்சு ரூபாய் மேனிக்கு அப்படியே அந்தத் தாக்கைக் கொடுத்துடுங்கோன்னார். குழி

பதினஞ்சு ரூபாய்! நான் வாங்கினது ஏழு ரூபாய்; பார்த்தேன். எழுபத்தி ஐயாயிர ரூபாய், முக்கால் லக்ஷமா? மலைப்புத் தட்டித்து. ஏன்?"

"ஆமாம்."

"இல்லையோ, முக்கால் லக்ஷம்னா! முக்கால் லக்ஷமும் என்ன? கைமேலே ரொக்கம். பேசிண்டேயிருக்கச்சே, குனிஞ்சு குல்லாயைக் கையில் எடுத்தார் சாய்பு. பச்சை நோட்டா எழுபத்தஞ்சு கட்டி வச்சிருந்தான் மனுஷன். பார்த்தேன். செச்சே, இப்பத் தளரப்படாதுன்னு தீர்மானம் பண்ணிண்டேன். வாண்டாம், நான் விற்கலைன்னூட்டேன்."

"முக்கால் லக்ஷத்தையா! நீரா!"

"ஆமாம்யா, நான்தான். என்ன சொன்னேன் தெரியுமோ; 'சாயபூ, உம்ம பணத்தை மடிச்சுப் புடிச்சா உள்ளங்கைக்குள்ளே அடக்கிப்பிடலாம் காணும். கட்டுக் கரையோரமாய் நின்னுண்டு ரண்டரை வேலி ஸ்தலத்தையும் ஒரே இடத்துலே, பச்சேப் பசேர்னு, கண் குளிர, மனசு குளிர ஒரு தடவை பாக்கறத்துக்கு ஈடாகுமாங்காணும், உம்ம முக்கால் லக்ஷம்! பொட்டி மூலையிலே, இடுக்கிலே மடிஞ்சு தூங்கற உம்ம முக்கால் லக்ஷம்'னு கேட்டேன். ஏன்? நான் கேட்டது சரிதானே?"

"பேஷா."

"சாய்பு அப்படியே மூக்கிலே விரலை வச்சார். நீங்கன்னா ஆளுன்னார்."

"ம்?"

"ஆமாம். அப்புறம் கஜகர்ணம் போட்டுப் பார்த்தார். ஆயிரம் சிபார்சு வச்சார். சப் ஜட்ஜு சீமா ராகவையங்காரைத் தெரியுமாம் அவருக்கு. அவர் வந்தார் சிபார்சுக்கு. எங்க அத்தான் சுப்புணி இருக்கானே, டிவிஷனல் ஆபீசர், அவன் சிபார்சு பண்ணினான். போடா ஜாண்டான்னுட்டேன்."

"நீர் இடமே கொடுக்கலை?"

"கொடுப்பேனோ? இதுமாதிரி எத்தனையோ ரூபாயைப் பாத்தாச்சு, தள்ளும். அதே நிலம் போன தையோடே, குறுவையும் சம்பாவுமா ரண்டாயிரம் கலம் கண்டுது. செலவு செத்தாயம் போகக் கலம் அஞ்சு ரூபாய்னு வித்தேன் – எண்ணாயிர ரூவா கிடைச்சுது. நாலு வருஷம் ஆச்சுன்னா போட்ட முதல் முப்பத்திரண்டு ரூபாயையும் எடுத்துடறேன். அப்பறம் லாபம் தானேய்யா? அகவிலை என்ன குறைஞ்சாலும் முக்கால்

வட்டிக்குக் குறையுமா? அகவிலை குறையறபோது பாத்துப்போம். ஏன்?"

"ஆமாம்."

"என்ன சிரிக்கிறீர்?"

"உம்ம அதிர்ஷ்டத்தை நினைச்சுத்தான். சும்மா உட்கார்ந்திருக்கிறவனைக் குத்திக் குத்தி, 'இந்தா எடுத்துக்கோ'ன்னு கொடுக்கிறது உம்ம அதிர்ஷ்டம். ஆயிர ரூவாய்க்கு ஏதாவது பழைய வீட்டை வாங்கி, பிரிச்ச, சாமானை ஆயிர ரூவாய்க்கு வித்து, கல்லையும் விக்கிறீர். மனைக்கட்டை ஆயிர ரூவாய்க்கு கேட்கிறான். தகராறு பண்ணறீர்."

"நீர் ஒண்ணு. கொஞ்ச அவஸ்தையா பட்டோம், அப்ப. நாங்கள்ளாம்! தொளாயிரத்தி முப்பது, முப்பத்தி ஒண்ணுலேருந்து முப்பத்தெட்டு வரைக்கும் கொஞ்சக் கஷ்டமா? கொஞ்ச நஷ்டமா? 'ஸ்லம்ப்' வந்து எங்களை அதல பாதாளத்திலே அழுத்திப்பிடுத்து ஐயா. கலம் முக்கால் ரூவாய்க்கு வாங்கறத்துக்கு ஆள் கிடையாது. நெல்லைக் கொண்டு வீடுவீடாகத் தலையிலெ கட்டி, பணத்தை மொள்ளக் கொடுங்கோன்னு சந்திலே நின்னோம் ஐயா, சந்திலெ நின்னோம்! இந்த வீட்டைப் பிரிச்சு வேலை செய்ய ஆரம்பிச்சுட்டேன். இப்பன்னா ரட்டை மாடியா விளங்கறது. பிள்ளைகள் கால்மேலே கால் போட்டுண்டு படிக்கிறத்துக்கு ஒரு உள்ளு, படுக்கறத்துக்கு ஒரு உள்ளுன்னு. அப்பத் துளியூண்டு ஓட்டு வீடுதானே. கையை வச்சா இதோ இதோன்னு எண்ணாயிர ரூவாயை முழுங்கிப்புட்டுது. வரும்படி யென்ன? நானூறு கலம் – காசு முந்நூறு ரூபா, அந்தக் கடனை அடைக்கப் பத்து வருஷமாச்சே எனக்கு. நல்ல வேளையா இனாம் கிராமமா இருக்கோ, பொழச்சோமோ! இல்லாட்டாத் தலை தூக்க முடியுமா? எங்கப்பா ஆறு ரூபாய் சம்பளத்துக்கு முதலியார் பண்ணையிலே காரியம் பார்க்கப் போனாராம் முப்பதாவது வயசிலே. விவகாரத்துலெ மகா சூரர். செத்துப் போறபோது ஆறு வேலி நிலம் வச்சுட்டுப் போனார். அண்ணன், தம்பி மூணு பேரும் பிரிச்சுண்டு, கடன் போக ஆளுக்கு ஒண்ணரை வேலி மிஞ்சித்து. பெரிய அண்ணா நிலத்தை வித்துட்டு உத்தியோகத்துக்குப் போயிட்டான். சின்ன அண்ணா பாட்டு, தேவடியான்னு ஆடி, சொத்தைத் துவம்சம் பண்ணிப்பிட்டு வாயைப் பொளந்துட்டான். நானும் உத்தியோகத்துக்குப் போகலாம்னுதான் ஆசைப்பட்டேன். நல்ல சான்ஸெல்லாம் வந்தது. போயிருந்தா இந்த அம்பது வயசிலெ நூறு ரூபாய் வாங்கிண்டு ரேஷனுக்கு ஓடிண்டிருக்கணும். ஏன்?"

“ஆமாம்.”

“என்னமோ பகவான் நல்ல புத்தி கொடுத்தான். ஊரோடே உட்கார்ந்தேன்.”

“அதிருஷ்டமும் அடிச்சுது.”

“ஆமாம் அதிருஷ்டம். எதோ போமேன். எல்லாம் நம்ம செயலிலா இருக்கு?”

“யார் செயலோ? கடைசியிலே லக்ஷ்யத்தைப் போய்ப் புடிச்சிப்பிட்டீர். அதென்ன சொல்லும்? தம்பிடி கிஸ்தியில்லாமல் பத்து வேலி நஞ்சை. ஆயிரம் தென்ன மரம், ஆயிரம் மூங்கில் கொத்து. அதானே?”

“ரெண்டு ஏக்கர் கறி காய்க் கொல்லை.”

“ஓகோ, அதை விட்டுட்டேனே.”

“இவ்வளவும் இருந்துட்டா, ஒரு மனுஷன் யாரை ஐயா லக்ஷ்யம் பண்ணணும்? நெல்லுக்கு நெல்லாச்சு. காசும் ஆச்சு. மூங்கில் அப்படியே பணம். கறிகாய்க் கொல்லை ஏழு குடும்பத்துக்கு நாலு வருஷத்துக்கு இலையும் கறியும் கொடுக்கும். உத்தியோகம் பாக்கறான்களாம், உத்தியோகம்! கையைக்கட்டி வாயைப்பொத்திண்டுதானே நிக்கணும் ஒத்தன்கிட்ட. கவர்னர் ஜெனரலே ஒத்தனுக்கு அடங்கியவன் தானேய்யா!”

“ராஜாவே பார்லிமென்டுக்குக் கட்டுப்பட்டவன்தான்.”

“ம் . . .”

அத்துவின் வாதத்தைக் கைலாசம் இன்னும் சற்றுத் தொடர்ந்து பார்த்ததில் கடவுளுக்குத்தான் அவர் சமம் என்று தோன்றிற்று. பாழுங்கிணற்றில் விழுந்து விகடத் துணுக்குத் தேன் சொட்டை நக்கி நப்புக் கொட்டிக்கொண்டிருந்தவனுக்குப் பொறாமைப்படாமல் இருக்க முடியவில்லை. சம்பளத்தில் மிஞ்சின மூன்று ரூபாயை வைத்துக்கொண்டு யாருக்கு எப்படிச் சாக்கு சொல்வதென்று அவன் வாசகம் தேடும்போது அத்துவுக்கு லக்ஷ்யசித்தி கிடைத்துவிட்டது.

எதிர்த்த வீட்டுப் பழைய காலத்து எம்.ஏ.எல்.டி. ராம லிங்கத்தின் பெண்ணுக்கு மூன்று வயசிலேயே ‘டயாபிடீஸ்’ வந்துவிட்டதாம். டாக்டர் கண்டம் கண்டமாகக் கழித்துவிட்டு இன்ஸூலின் இன்ஜக் ஷன் நாள் தவறாமல் கொடுக்கச் சொல்லி விட்டான். ராமலிங்கம் நடுக்கமில்லாமல்

இன்ஜக் ஷன் பண்ணுவார். தொண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு மூவாயிர ரூபாய் பெண்ணுக்குச் செலவழித்து விட்டாராம்.

நாலாவது வீட்டு மகாலிங்கம் பி.ஏ. வரையில் மூன்று பிள்ளைகளையும் வாசிக்க வைக்கப்போக, அவர்கள் உத்தியோகம் பார்க்க ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டார்கள்.

அதே தெரு, பெரிய பண்ணை சேஷசாயி இப்போது எல்லாம் தொலைந்து சவடால் மாத்திரம் போகாமல் கடைத் தெருவில் உட்கார்ந்து காபி சாப்பிட ஆள் தேடுகிறான்.

அத்துவின் வளர்ச்சியும் கைலாசத்திற்கு நன்றாகத் தெரியும். பத்து வருஷத்துக்கு முன் சூனா பானா கடையில் அவன் கணக்குப் பிள்ளையாக வந்தபோது அத்துவுக்கு இரண்டு வேலியும் ஓட்டுவீடுந்தான். இப்போது ஓட்டுவீடு இரட்டை மாடிக் கிரீடம் வைத்துக்கொண்டு வானொலி ஏரியலைத் தரித்து நிற்கிறது. தெருவில் ஏழெட்டு வீட்டுக்கு மேல் அத்துவின் உடமையாகிவிட்டன. இரண்டு வேலி, பத்துவேலி, ஆயிரம் மூங்கில் வகையறாவாயிற்று. மூங்கில் கொத்தைப் போலவே அதிருஷ்டமும் கால தேசம் பாராமல் வெடித்து வெடித்துப் பெருகிவிட்டது.

கைலாசத்திற்கும் ஒன்றும் குறைச்சல் இல்லை. பன்னிரண்டு ரூபாய் சம்பளம், முப்பத்தாறு ரூபாயாகத் தாண்டிக் குதித்திருக்கிறது. கல்யாணமாகி மூன்று குழந்தைகள். இரண்டுக்குக் கட்டி. மருந்தும் ஆரஞ்சும் மாசம் தலைக்கு ஐந்து ரூபாயாகச் சாப்பிட்டு வருகிறது. ஆரஞ்சைக் குழந்தைகளுக்கு உரித்துக் கொடுத்துவிட்டுக் கடைசியில் அவன் விரலை நக்கிப் பார்ப்பதுண்டு.

“சாமி!” குரல் அடுத்தவீட்டில். முத்துக் கொத்தனார் அத்துவைக் கூப்பிட்டுக் கொண்டுவந்தார்.

“யாரு, முத்துவா? வா, சித்தாள் அழைச்சிண்டு வந்திருக்கியா?”

“ம்.”

“கூடத்திலே சிமிண்டு மூட்டையிருக்கு. செங்கல் வாசல்லேகிடக்கு, சட்டுனு முடி.”

“முடிக்காமெ? இதென்னங்க, அரை மணி வேலை.”

“என்னையா? என்ன வேலை?” என்று கேட்டான் கைலாசம்.

“ஒண்ணும் இல்லை. கிணத்தோரமா ஒரு மேடைகட்டலாம்னு.”

“எதுக்கு?”

“உக்காந்துக்கும்படியா ஒரு மேடை. அதிலேயே ஒரு தாம்பாளம் மாதிரி குழிவாக் கட்டிப்பிடறது. ஒரு அமாவாசை, திதி, கிதின்னா உட்கார்ந்து தர்ப்பணம் பண்ணலாமோல்லியோ?”

“ஏன்?”

“பேஷாச் சொந்த லக்ஷ்யத்தை அடைஞ்சு திருப்தியடைஞ்சாச்சு. இனிமே பாட்டன்மார்களைத் திருப்தி பண்ண வேண்டியதுதானே!”

“ஓய், நீர் பொல்லாத ஆளுங்காணும்!”

“என்னது? தர்ப்பணம்னா என்ன அர்த்தம் தெரியுமோல்லியோ?”

“ம் . . .”

“திருப்தி பண்ணுகிறதென்று அர்த்தம்.”

“தன்னைத் திருப்தி பண்ணிண்டாச்சு, இப்பப் பித்ருக்களைத் திருப்தி பண்ணக் கிளம்பிவிட்டேன் என்கிறீர். அதானே?”

“அதென்ன சாதாரணக் காரியமா? செய்ய வேண்டியது தானே.”

அத்து அப்படியே பூரித்துவிட்டார்.

“அப்பா, அப்பாவ்!”

கைலாசத்தின் மூத்த பெண்ணின் குரல்.

“அம்மா காபி சாப்பிடக் கூப்பிடறா.”

“போட்டாச்சா?”

“அப்பவே போட்டாச்சு.”

பல்லைத் தேய்த்தான் கைலாசம்.

“ஏனய்யா, உனக்குக் காபி ஆயிடுத்தா?”

“இனிமேல்தான்.”

அப்போதுதான் அத்துவின் சம்சாரம் செம்பையும் சாம்பலையும் எடுத்துக்கொண்டு தூக்கம் தெளிந்ததும் தெளியாததுமாக வந்தாள்.

கைலாசம் உள்ளே வந்தான்.

"காபி போட்டாச்சா? இப்பத்தான் அடுத்தாத்து மாமி எழுந்திண்டு வரா. இனிமே எப்ப அடுப்பு மூட்டப் போறா?"

"பணக்காராளுக்குப் பசி பொறுக்க முடியும். நீங்க சாப்பிடுங்கோ. ராஜாவுக்குப் பசி தாங்காது."

கைலாசம், 'ராஜா'ப்பட்டம் பெண்ணின் காதில் விழுந்து விட்டதோ என்று திரும்பிப் பார்த்தான். பெண் புத்தக மூட்டையுடன் வாசல் திண்ணைக்குப் போய்விட்டாள். சங்கீத சாதகத்திற்கு இரண்டு குழந்தையும் போயிருந்தது.

"அத்து சமாசாரம் கேட்டியா? நேத்திக்கு இரண்டு வேலி சொச்சம் படுகையோரமா நிலம் வாங்கியிருக்கு."

"போனால் போயிட்டுப் போறது, பாவம்!"

"என்னடி பாவங்கறே!"

"இப்படி அநாவசியமாகச் சேர்த்துக் கவலையை வளர்த்துக் கறதே பிராமணன்னுட்டுத்தான்."

"கவலையா? அவர் ரொம்ப நாளாச் சொல்லிண்டிருந்த ஆஸ்தை— பத்துவேலி, ஆயிரம் தென்னமரம், ஆயிரம் மூங்கில் கொத்து, ரெண்டு ஏக்கர் கறிகாய்க்கொல்லை – இந்த ஆஸ்தை நேத்திக்கித்தான் கை கூடித்துன்னு கவலை நீங்கிப் பெருமூச்சு விட்டுண்டிருக்கார். கவலையை வளத்துக்கறார்ங்கிறியே?"

"இனிமே சொத்துலே ஆசையே கிடையாதாமோ?"

"அப்படித்தான் இருக்கும்போல் இருக்கு. இல்லாட்டாப் பித்ருக்களைக் கரை ஏத்தக் கிளம்புவாரா?"

"என்னது?"

"தன் கவலை தீர்ந்து போச்சுன்னு, தர்ப்பணம் பண்ணிப் பித்ருக்களைக் கரையேத்தக் கிணத்தடியிலே ஒரு தர்ப்பண மோடை கட்டப் போறார். கொத்தன் வந்திருக்கான்."

“தர்ப்பண மோடையா?”

“ஆமாம்.”

“அதானா? நேத்துச் சாயங்காலம் ரெண்டு பேரும் தகரார் பண்ணிண்டிருந்தா. எதோ கட்டணும்னார் அவர். அவ, ‘படாது, அழகாயிராது’ன்னா. ‘இல்லை, கட்டியாகணும்’னார் அவர். ‘கட்டினாத் தெரியும் சேதி’ன்னு அதட்டினா அவ.”

“கொத்தன் வந்துட்டான்.”

“ஒண்ணிலேயும் குறைச்சல் இருக்கப்படாது, அவருக்கு.”

“நீ பாரு, என்னை, ‘ராஜா ராஜா’ன்னு கூப்பிட்டிண்டிருக்கே.”

“ராஜாவுக்கு என்ன குறைச்சலாம்?”

“இரண்டுதான் குறைச்சல். ராஜ்யம், காசு!”

“ராஜ்யம் இல்லாட்டா என்னவாம்? உங்களுக்குத்தான் போட்டிப் பந்தயம் இருக்கே. அந்த ராஜாக்கள் குதிரைப் பந்தயத்துக்குப் போறா. நீங்க, தலை தடையா, குலை குடையா, நாக்கு நாதேவியா, மூக்கு மூதேவியான்னு கேட்டுண்டு மண்டையை உடைச்சுக்கறேளே; நீங்களும் ராஜாதான்.”

“போக்கிரி!” என்று அப்படியே அவளை ஆட்டுக்குட்டி மாதிரி தூக்கி அவன் கொஞ்சினான்.

“விடுங்கோன்னா, குழந்தைகள் வந்து தொலைக்கப்போறது. நல்ல புருஷாடீம்மா இவா!” என்று குதித்துக் கன்னத்தைத் துடைத்துக்கொண்டு விரைந்தாள் அவள்.

0

ராஜா கூடத்தில் உட்கார்ந்து ‘பயர், பியர், டயர்’ என்று முணுமுணுத்துக்கொண்டே இங்கிலீஷ் அகராதியை ஆதிக்கும் அந்தத்திற்கும் புரட்டிவிட்டு இரண்டு மணி நேரத்தில் மூளை சோர்ந்து மனம் சேர்ந்து உடலும் சோர்ந்தவுடன் குளிப்பதற்காகக் கொல்லைப்பக்கம் எழுந்து சென்றான்.

அடுத்த வீட்டுப் பக்கம் பார்த்தபொழுது, கொத்தன் வேலையை முடித்துவிட்டுப் போயிருந்தான். கிணற்றுக்கு நாலடி தூரத்தில் ஒரு

மேடை; மேடைமீது ஒரு குழிவு; அதற்கு முன் ஒரு ஆள் உட்கார இடம்; குழிவிலிருந்து ஒரு வடிகால். வேலை கச்சிதமாக, அழகாக இருந்தது.

மனுஷனுக்குத்தான் என்ன அதிருஷ்டம்! என்ன வாய்ப்பு! எள்ளிறைக்கக் கூடப் பிரத்தியேகமாக ஒரு இடம். அதுவும், ஊர் முழுவதும், ஆபீசுக்கு வருவது போலப் பத்து மணிக்கு வந்துவிட்டு நாலு மணிக்குக் கொத்தர்கள் திரும்புகிறார்கள். இருட்டு விடிய விடிய வந்துவிட்டுப் போய்விட்டான். நினைத்த லட்சியம் நிறைவேறிவிட்டது. பத்துவேலி, ஆயிரம் தென்னை, ஆயிரம் மூங்கில்! என்ன விரைவு! இது போதாதென்று மாட்டுத் தரகில் சம்பாத்யம்! இன்சூரன்ஸ் ஏஜன்ஸியில் சம்பாத்யம்! நிலத் தரகு, வீட்டுத் தரகு, நகைத் தரகுகளில் சம்பாத்யம். தெருவில் ஏழெட்டு வீடு. அந்த வாடகை வேறு. காய்கறி விற்றுமுதல். இன்னும், திண்ணையில் உட்கார்ந்து வீதியில் போகிற எள்ளு, பயறு மூட்டைகளைச் சும்மாவாவது பணத்தைப் போட்டு வாங்கி வைத்து, எட்டு, பத்து என்று லாபத்தில் விற்கிறது. ஏதாவது ஒரு வீட்டை விலைக்குப் பேசி ஒப்பந்தம் எழுதி, கூட நானூறு, ஐந்நூறு வாங்கிக் கொண்டு ஒப்பந்தத்தை யாருக்காவது மாற்றிவிடுகிறது. தனக்கென்று வாங்கின வீடுகளில் தலைமுறை தலைமுறையாக மூன்று, நாலு என்று வாடகை கொடுத்து வந்தவர்களை மிரட்டி இருபது ரூபாய்க்குக் கொண்டு விட்டுவிடுகிறது. அத்துவாலேயே ஊரில் வீட்டு வாடகை உயர்ந்துவிட்டதாம். கைலாசம் வந்த புதிதில் கொடுத்த ஒன்றரை ரூபாய் இப்போது ஆறாகிவிட்டது.

எல்லாவற்றையும்விட, சிகரம் வைத்தாற்போல், அத்துவிற்கு பெண்டாட்டி வாய்த்திருந்தாள். கொன்னைப் பூ நிறம். கண்ணை நிறுத்திவிடும் வனப்புள்ளவள். கருகருவென்று சிற்றலையிட்ட கூந்தல். பூசனிக்கொடி நுனிபோல, நெற்றியில் இரண்டு சுருள் தொங்கி ஆடிக்கொண்டிருக்கும். அவள் சாதாரணப் புடைவையே உடுத்துவதில்லை. ஆனால் எந்த நிறமும் எந்த மட்டமும் அவளுக்குப் பொருந்தித்தான் இருக்கும். எண்ணெய் தேய்த்து நுனி முடிச்சுப் போட்டு, நகையில்லாமல் பழம் புடைவையுடன் அவள் காட்சியளிப்பதும் யாருக்கும் கிட்டாத ஒரு மோகன நிலைதான். நாலு பெண்ணும் நாலு பிள்ளையும் பெற்றுவிட்டாள். முதல் பிள்ளை இஞ்ஜினியரிங் மாணவன்; இரண்டாவது வைத்யம்; சின்னஞ் சிறுசுகளாக ஐந்தாறு. இவ்வளவுக்கும் அவளை முப்பது வயதிற்கு மேல் மதிக்க முடியாது. பிரமித்து நின்றான் கைலாசம். அத்துவையும் தன்னையும் ஒத்துப் பார்த்தான். குழம்பினான்; வருந்தினான். கடைசியில், 'கடவுள் மடப்பயல்' என்று தைரியமாகப் பரம்பொருளை

மட்டந்தட்டிவிட்டுத் தோண்டிஜலத்தைத் தலையில் கவிழ்த்துக்கொண்டான்.

0

மாலை ஆறு மணிக்குக் கருவடாம் உலர்த்துகிற ஈச்சம் பாயை மொட்டைமாடியில் போட்டு, 'ராஜா' சேம்பர்ஸ் அகராதியை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

'பயர், பியர் போடலாமா, டயர் டியர் போடலாமா? பயர் செயப்படு பொருள் கொண்ட வினைதானோ?. . .'

பலவகை முணுமுணுப்பு; இலக்கண ஆராய்ச்சி; ஆண் பெண் மனோதத்துவ ஆராய்ச்சி; கொச்சை மொழி ஆராய்ச்சி.

இதையெல்லாம் முடித்து எதிரே கிடந்த அச்சிட்ட சதுரத்தில் அதிர்ஷ்ட தேவிக்குக் காதல் கடிதம் எழுதியாக வேண்டும். அவள் என்ன செய்கிறாளோ!

'பயர், பியர் . . .'

திடீரென்று ஒரு மைலுக்கு அப்பாலிருந்த மாதா கோயிலிலிருந்து மாலை மணி ஒலித்தது.

'பேஷ், பியர்தான். பயமில்லை' என்று முடிவுகட்டி ஒரு கட்டத்தைப் பூர்த்தி செய்தான் அவன். 'ராகு காலத்தில் எழுதவேண்டாம்; சும்மா யோசிப்போம்' என்று வந்து உட்கார்ந்தவனின் ஞாபகத்தை மணி கேட்ட சந்தோஷம் சாப்பிட்டுவிட்டது. அதே தாது புஷ்டியுடன் கைக்கு வந்த எழுத்துக்களைக் கொண்டு இன்னும் நாலைந்து கட்டங்களைப் பூர்த்தி செய்தான்.

"ஏன்னா!"

அவள் கூப்பிட்டாள்.

"என்ன?"

"கொஞ்சம் வரேளா? ஒரு வேடிக்கை."

"எங்கே?"

"வாங்கோளேன். வந்தால் தானே தெரியறது."

"என்ன விசேஷம்? சொல்லேன்."

“வந்தான்னா தெரியும்.”

அவன் எழுந்தான்.

கொல்லைத் தாழ்வாரத்தை அடைந்ததும், “இங்கேயே நில்லுங்கோ” என்று எச்சரித்தாள் அவள்.

அடுத்த வீட்டுக் கொல்லையிலிருந்து டங் டங் என்று சத்தம் கேட்டது.

“என்னன்னா, தெரியறதா?”

“தர்ப்பண மோடைன்னா இடியறது! யாரு இடிக்கறா? சிங்காரமா?”

“சிங்காரம், தானா இடிப்பானா?”

“அம்மாமி உத்தரவோ?”

“பின்னெ, காலமே கட்டினதைச் சாயங்காலம் அவரா இடிக்கச் சொல்லுவர்?”

“மாமா எங்கே?”

“ஆத்தில் இல்லை.”

“அவர் வந்தால்?”

“அதை அப்பப் பாத்துக்கறது.”

“இப்ப வயலுக்குப் போயிருக்கும் அது.”

“வருகிற சமயந்தான்.”

“ஏன் இடிக்கிறா?”

“அதான் காலமே சொன்னேனே.”

“என்ன?”

“அவளுக்குப் பிடிக்கலை. கட்டினாத் தெரியும் சேதின்னு சொன்னான்னேனே.”

“கட்டறத்துக்கு முந்தியே தடுக்கப்படாதோ?”

“அவளைத்தான் கேட்கணும்.”

“நல்ல பொம்மனாட்டி!”

“நல்ல பொம்மனாட்டிதான் . . . இருக்கட்டும். நான் இப்படிச் செஞ்சா என்ன பண்ணுவேள்?”

“நீ இப்படிச் செய்யமாட்டியே.”

“செஞ்சா?”

“அப்படியே பக்கத்திலே இருக்கிற கிணத்திலெ குதிச்சு உசிரை விட்டுடுவேன்.”

“ரொம்பச் சமத்துத்தான் போங்கோ.”

“ஏண்டி?”

“ஏண்டியா, இழுத்து வச்சுப் பளீர் பளீர்னு கன்னத்திலே நாலு விடுவேன்னு சொல்லுவேளா, கிணத்திலே விழறாளாம்! புருஷாளைப் பாரு!”

“அத்து அப்படிச் செய்யமாட்டார் என்கிறாயா?”

அவள் யோசித்துப் பதில் சொல்ல வாயெடுப்பதற்குள், “இரு இரு” என்று நிறுத்தினான் கைலாசம்.

அத்து கொல்லையில் வந்திருந்தார்.

“என்ன இது?” என்று அத்து கத்தினார்.

ஸ்ரீமதி அத்து பதில் சொல்லவில்லை.

“என்ன இது?” – ஸ்வரம் கொஞ்சம் உயர்ந்தது. பதில் இல்லை.

“என்ன இது?” – இன்னும் உரக்க.

“. . .”

“சொல்றயா, மாட்டியா?”

ஸ்ரீமதி அத்து வாயைத் திறந்தாள்.

“பார்த்தாத் தெரியலியோ?” என்று பதில் கேள்வி.

“என்ன?”

“இடிக்கிறது.”

“ஏன் இடிக்கிறே?”

“எனக்குப் பிடிக்கலை.”

“உனக்குப் பிடிக்காததெல்லாம் நாசமாய்ப் போயிடணுமா, இந்த லோகத்திலே!”

“ஆமாம்.”

‘பளார்’ என்று நல்ல அறை ஒன்று ஸ்ரீமதியின் கன்னத்தில் விழுந்தது.

ஸ்ரீமதி அத்து பதில் சொல்லவில்லை.

“ஏய் சிங்காரம், காமாட்டிக் கழுதை, நிறுத்து, போ வெளீலே.”

ஸ்ரீமதிக்கு இன்னொரு அறை, இன்னொன்று, இன்னொன்று, நாலு, ஐந்து.

“பிசாசே, இடங்கொடுத்தா மடத்தையா பிடுங்கறே?” அத்துவின் தொண்டை நரநரத்தது.

ஸ்ரீமதி அத்து விர்ரென்று உள்ளே நுழைந்தாள்.

பளீர் என்று கொல்லைத் தாழ்வாரத்தில் இன்னும் இரண்டு அறை.

“ம்ஹ்ம் . . .” என்று அத்துவின் ரௌத்ராவஸ்தை உறுமிற்று.

கைலாசம் தம்பதிகள் சற்றுநேரம் மண்டையில் ஓங்கி அடித்தாற்போல் நின்றுகொண்டிருந்தார்கள். காதும் மனதும் ஒரு சுவரைக் கடந்து லயித்திருந்தன.

“நாயே, வெளியிலே போ, இந்த வீட்டிலே உனக்கு இடமில்லெ.”

“நீ போ.”

“ஹாம். ஹ்ம். நீயா, நீயாயிட்டேனா நான்?”

அடி.

சிறிது நிசப்தம்.

ஙணஙண, மட்டுமட்டு — தட்சட் — டின், பாத்திரங்கள் உருண்டு ஓடும் சப்தம். குழந்தைகளின் ஓலம்.

“பார்றா உங்க அம்மாவை!”

வெளியே போயிருந்த முதல் பிள்ளை இன்ஜினியரிங் மாணவன்—வந்துவிட்டான்போல் இருக்கிறது.

ஐந்து நிமிஷம் கழித்து ஒன்றும் கேட்கவில்லை. ஸ்ரீமதி அத்துவின் கனத்தொண்டை அழுகை, குழந்தைகளின் ஓலம் விசும்பல்களின் நடுநாயகமாகக் கேட்டது.

0

“ரொம்ப அடிச்சுட்டார், பாவம்.”

“ரொம்ப மாஞ்சு போறேளே. மென்னியைத் திருகிப் போட்டுடாமெ இருக்கே, அந்தப் பிராமணன், அதைன்னா சொல்லணும்! என்ன நெஞ்சழுத்தம்! ஒரு புருஷன் மெனக்கட்டுக் கட்டியிருக்கான், கல்லும் கூலியும் போட்டு, ஆசையா; இடிக்கறாளே இவ, காள கண்டி!”

“உன்னை இதுமாதிரி அடிக்கணும்!”

“ஏனாம்?”

“உனக்கு வாய் ஜாஸ்தியாயிருக்கோல்லியோ?”

“ஏன்! இப்பத்தான் அடியுங்களேன். எனக்கும் அடி வாங்கணும் போல ஆசையாத்தான் இருக்கு.”

சாப்பிட்டுவிட்டுக் கைலாசம் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தான். ஒன்பதரை மணி இருக்கும்.

“ஐயா!”

“யாரு?”

“நான்தாங்க.”

சிங்காரம் உள்ளே வந்தான்.

“என்னடா சேதி? சாப்பிட்டாச்சா? எங்கே ஐயரு? படுத்துட்டாரோ?”

“படுக்கிறதா, வயிறு காயுது . . . படுக்கையாம்!”

“ஏண்டா, என்ன? ஐயருக்குப் பலகாரமா!”

“காரந்தான். பலகாரம் இல்லே. நீங்க ஒண்ணு. ஒண்ணுமே தெரியாததுபோல!”

கைலாசம் மெதுவாகச் சிரித்தான். “நீ சாப்பிடலையாடா?”

“பூசாரி சாப்பிட்டுல்ல நாக்குட்டிக்கி.”

“ஐயருக்கு இன்னும் கோவம் தணியிலியா?”

“அம்மா கோவமில்லெ பெரிசா இருக்கு!”

“என்ன?”

“இப்படி அடிச்சா?”

“பின்னே இடிக்கச் சொல்லலாமா அவங்க? நல்லாத்தான் அடிப்பாரு.”

“அய்யரு அடி கிடக்கட்டுங்க. அம்மா அடியில்லெ பார்க்கணும்.”

கைலாசத்திற்குத் தூக்கிப் போட்டது.

“ஏய், என்ன உளர்றே?”

“உளர்றதா? நீங்க என்னா செய்வீங்க? எங்கேயாவது நடக்கிற காரியமாயிருந்தா நம்புவாங்க. இல்லாட்டி உளர்றேன்னுதான் சொல்லுவாங்க.”

“என்னடாது, நெஜம்மாவா?”

“ஆமாங்க.”

“இவர்தானேடா அடிச்சார்!”

“அது கொல்லையிலே. அடி வாங்கிக்கிட்டு அம்மா உள்ளார வந்தாங்க. அய்யரும் உறுமிக்கிட்டே கூட வந்தாரு. கொல்லைத் தாவாரம் வந்ததும் திரும்பிக்கிட்டு பட்பட்னு அம்மா இளுத்தாங்க பாரு, அய்யரு அப்படியே உலுங்கிப் போயிட்டாரு!”

“என்னடா இது!”

“அய்யரு ஹாம் ஹாம்னு சத்தம் போட்டாரு; நாயேன்னாரு பேயேன்னாரு; கடாசிலே கையலம்பற சின்னச் சொம்பை எடுத்து ஓங்கி ஒரு மொத்துமொத்தினாங்க பாரு, அவ்வளவு தான்! அம்மா விர்ருன்னு உள்ளே போனாங்க. சாவியை எடுத்துப் பீரோவைத் துறந்தாங்க. வெள்ளிப் பிளேட்டு, டவரா, தமிளரு, கிண்ணம், பேலா எல்லாம் அய்யரு மூஞ்சியைக் காட்டிப் பறக்க ஆரம்பிச்சிடிச்சு. மூஞ்சியிலே சாரலடிச்சாக் குனியுவமே, அது மாதிரி குனிஞ்சு எல்லாத்தையும் தடுக்கப் பாத்தாரு

அய்யரு, . . . பீரோலெ உள்ள சாமானெல்லாம் தீந்து போனதும், அய்யரு மடமடன்னு அடுக்களைக்குள்ள போயி அலமாரி, தட்டு ஸ்டாண்டுலெ இருக்கிற வெங்கலத் தமிளரு, அலுமினியம் தட்டு, கரண்டி எல்லாத்தையும் எடுத்து வீச ஆரம்பிச்சிட்டாங்க – ”

“அப்பக்கூடத் திருப்பி அந்த வெள்ளிப் பாத்திரங்களையே எடுத்து வீச மனசுவல்லெ பாத்தியா அய்யருக்கு!”

சிங்காரம் சிரித்தான்.

“ம்! அப்பறம்?”

“அப்பறம் என்னா? நாணா வெளியிலே போயிருந்தது வந்திரிச்சு. பாத்திரமும் பாடியும் இறைஞ்சு கிடக்கிறதைப் பாத்திச்சு. பொலபொலன்னு கண்ணாலெ ஜலம் விட்டிடுச்சு. அய்யரு கிடுகிடுன்னு வெளியிலெ போயிட்டாரு. அம்மா லைட்டை அணைச்சு அடுக்களையிலெ படுத்திட்டாங்க. நானும் நாணாவும் சேந்து பாத்திரத்தையெல்லாம் எடுத்துப் பீரோல்லெ வச்சிப் பூட்டினோம். குளந்தைங்கள்ளாம் பட்டினி. அரை நாளி முன்னாடி கடாசிக் குளந்தையிருக்குல்ல பேபி – அதுக்கு இருக்கிற புத்தியைப் பாருங்க – அம்மாகிட்டப் போகாமெ, மாடிக்குப் போயி, ‘அண்ணா பசிக்கிலது, பசிக்கிலது’ன்னு நாணாகிட்ட அளுதிச்சு. ‘வா சாதம் போடறேன்’னு நாணா அதைத் தூக்கிட்டுக் கீளே வந்தாரு. அடுக்களை லைட்டைப் போட்டு வெங்கலப் பானையைத் துறந்தாராம். தொறந்த சாதத்து மேலே ஒரே சாணித் தண்ணியாக் கிடந்திச்சாம். ஒரு பானை சோத்திலேயும் சாணியைக் கரைச்சு ஊத்திட்டுப் படுத்திருக்காங்க அம்மா.”

“பாவி பாவி! கேக்கறதுக்கே முடியலியே!” என்று பெருமூச்செறிந்தாள் கைலாசத்தின் மனைவி.

“அப்பறம் நாணா சில்லரை எடுத்துக்கிட்டுக் கோயிலுக்குப் போயிருக்காரு, உண்டக் கட்டி வாங்கி வார. புள்ளைங்கள்ளாம் வாசலெப் பாத்துக்கிட்டு நிக்கிது. அளுதுக்கிட்டு.”

“அய்யரு?”

“அய்யரைக் காணோம்.”

“உண்டக் கட்டி வந்துதான் உனக்கும் சாப்பாடோ?”

“என்னமோ தெரியலியே!”

“இஞ்ச சாப்பிட்டுடு.”

“அடேயப்பா, வாணாங்க. அய்யருக்குத் தெரிஞ்சா மண்டையை உடச்சிடுவாரு.”

ரொம்ப நிர்ப்பந்தம் செய்த பிறகு நாலு தோசை தின்றான் அவன்.

கைலாசம் பெருமூச்சு விட்டான்.

“என்னடி, எப்படியிருக்கு கதை?”

“எப்படியிருக்கா? எனக்கு என்னமோ பண்றது.”

0

பத்து மணிக்குப் பிறகு ‘புல்லட்டின்’ கொடுக்கவந்தான் சிங்காரம். குழந்தைகள் உண்டைக் கட்டியைத் தின்று தூங்கிவிட்டனவாம். அம்மா இன்னும் அப்படியே படுத்திருக்கிறாள். அத்து – போன ஆள் இன்னும் வரவில்லை. அப்பா வந்தால் சாப்பிடச் சொல்லச் சிங்காரத்திடம் சொல்லிவிட்டு, அவனுக்கு நாலணாச் சில்லறையையும் கொடுத்துவிட்டு மாடிக்குப் படுக்கப் போய்விட்டான் நாணா.

0

பதினோரு மணி இருக்கும். அத்து வாசல் கதவைத் தட்டினார். (ரேழி உள்ளிருந்து கைலாசம் தம்பதிகள் பார்த்தது) – உள்ளேயிருந்து பதில் இல்லை.

இன்னொரு குரல் கூப்பிட்டார்.

இன்னொரு குரல்.

பதில், கதவு திறப்பு ஒன்றும் நடக்கவில்லை.

அரை மணி கழித்து, கைலாசம் வாசலில் வந்தான். திண்ணையில் துண்டை விரித்துப் படுத்திருந்தது அத்து.

“என்னையா, என்ன இன்னிக்கு வெளியிலே?”

“சும்மாத்தான். உள்ளே ஒரேயடியா வேகறது, காற்றாடக் கொஞ்சம் இருக்கலாம்னு வந்தேன்.”

“வேகறதா? சிலுசிலுன்னு அடிக்கிறது காத்து!”

“நீர் இந்தக் காலத்துப் பிள்ளை. இந்தக் காத்தைக்கூடத் தாங்க முடியலை உமக்கு. எனக்கு இது போதவே இல்லை” என்று அந்தப் பசியிலும் சொந்தப் பாணியை விடாமல் பதில் சொல்லிவிட்டு, அப்பால் திரும்பி ஒருக்களித்தார் அத்து. பேச விருப்பமில்லை போல் இருக்கிறது.

0

காலை நாலு மணி இருக்கும். கைலாசம் வெளியே எழுந்து வந்தான். அதே இடத்தில்தான் அத்து படுத்திருந்தார். ஆனால் நல்ல தூக்கம். திண்ணைக் கோடியில் சிங்காரத்தின் சிணுக்குக் குறட்டை கேட்டது.

சற்று நின்று நக்ஷத்திரத்தைப் பார்த்துவிட்டு உள்ளே திரும்பி வந்தான் கைலாசம்.

“என்ன?” என்று அவள் கேட்டாள்.

“நீ முழிச்சிண்டிருக்கியா?”

“சொப்பனம் கண்டு பயந்து முழிச்சுண்டூட்டேன்.”

“ஏன் சுவப்னம்?”

“யாரோ வாசல் கதவைத் தட்றாப்போல் இருந்தது. எழுந்து போய்க் கதவைத் திறக்கிறேன். யாரோ ஓர் ஆள் கறுப்பா, தாடி வச்சிண்டு, ‘நான்தான், அத்துவின் அதிர்ஷ்டம்’னு சொல்லிண்டே உள்ளே வரப் பார்க்கிறான். தடார்னு கதவைச் சாத்திண்டு உள்ளே ஓடிவந்து படுத்துண்டுட்டேன். அப்புறம் முழிப்புக் கொடுத்துப் போச்சு . . . வாசக்கதவைத் தாப்பாள் போட்டேளோ?”

“போட்டுட்டேன். பயப்படாதே! அவன் உள்ளே வரமாட்டான். அதிருக்கட்டும்; தூங்காமெயே மனுஷா ஸ்வப்னம் காண்றதும் உண்டோ?”

அவள் சிரித்தாள் “போறது, சேம்பர்ஸ் டிக் ஷனரியைப்பாத்தோ கீத்தோ இதானும் கண்டுபிடிக்கத் தெரிஞ்சதே, என் ராஜாக்கு!”

“அத்து இன்னும் திண்ணையிலெதான் படுத்திண்டிருக்கு. ஊதல் காத்தா அடிக்கிறதே.”

“பொம்மனாட்டியை ஆளத் தெரியாட்டா அப்படித்தான். கிடக்கட்டுமே ஒரு நாளைக்கு.”

“பரிதாபமாயிருக்கு!”

"பொண்டாட்டிகூட இப்படிக் கவலைப்படலை?"

"அம்மாமி ஒண்டியாயிருப்பாளே. குளுராது?"

"இன்னிக்கு ஒருநாள்தானே. எப்பவும் இப்படியே இருந்துடப் போறாளோ? இல்லை, நாணாவுக்கு இன்னும் நாலஞ்சு தம்பி தங்கைகள் பிறக்காமல் போயிடப்போறதோ?"

"உனக்கு இரக்கமே கிடையாதுடீ."

"இல்லாட்டாப் போறது. போர்வை முழுக்க நீங்களே இழுத்துக் கொண்டுவிட வாண்டாம். எனக்குக் கொஞ்சம் இருக்கட்டும்."

கைப் போர்வையும் மூச்சுக் காற்றும் பட்டு, குளிர், அத்து, அவர் அதிர்ஷ்டம் எல்லாவற்றையும் மறந்துவிட்டுத் தூங்கினான் கைலாசம்.

சிவாஜி தீபாவளி மலர், 1947

# நானும் எம்டனும்

இந்தப் பஞ்சப்பாட்டுப் பாடிப் பாடி அலுத்து விட்டது. இல்லையே இல்லையே என்று ஏங்கிக்கொண்டே இருப்பதற்காகவா ஜன்மம் எடுத்தோம்? சாருதத்தன் தூக்கு மேடைக்குப் போகும்பொழுது, 'வறுமையே, நான் செத்துப் போவதைப் பற்றிச் சற்றுக்கூட வருந்தவில்லை. உன்னை நினைத்தால்தான் எனக்குத் துன்பம் உண்டாகிறது. ஐயோ, நான் போய்விட்டால் உனக்கு நெருங்கிய நண்பன் வேறு யார் இந்த உலகத்தில் கிடைக்கப்போகிறான்?' என்று, தாரித்திரியத்தை அநாதையாக விட்டுவிட்டுப் போவதை நினைத்துப் புலம்பினான். 'சாருதத்தா, உனக்கு ஏன் கவலை? நான் வந்துவிட்டேன். நீ போய்விட்டால் சிநேகத்திற்கே பஞ்சம் வந்துவிடுமென்று நினைந்துவிட்டாயே.'

"என்னங்க யோசிக்கிறீங்க?"

"ஒண்ணுமில்லை."

"பின்னே ஒண்ணுமில்லாமையா யோசனை பண்றீங்க? எனக்கு நாளியாச்சில்ல?"

"வேறு எல்லார்கிட்டேயும் வாங்கிட்டு வாங்களேன்; அப்புறம் பாத்துக்கலாம்."

"எல்லாரும் கொடுத்துட்டாங்க. நீங்கதான் பாக்கி."

"யாரு கொடுத்தா?"

"பின்னே நான் பொய்யா சொல்றேன்!. . . நோட்டு பேசுதா இல்லையா?"

நோட்டு நன்றாகத்தான் பேசுகிறது. கண்ணுச்சாமிப் பிள்ளை இருநூறு ரூபாய், மகாலிங்க மழவராயர் இருநூறு ரூபாய், வைத்தியநாதக் கண்டியர் நூற்றைம்பது, கருப்பையாக் கோனார் நூற்றைம்பது, லேண்டு லார்டு குப்புசாமி ஐயங்கார் நூற்றைம்பது, நெல் மிஷின் நடேசையர் நூறு, காபி ஹோட்டல் அம்பி ஐயர் நூறு, மிலிட்டேரி ஹோட்டல் குப்புராவ் நூறு. கெடிகார வியாபாரம் ஜானகிராம் நாயுடு நூறு – இப்படி நூறு ரூபாய்ப் புள்ளிகளே இருபது இருந்தன. பிறகு ஐம்பது, நாற்பது, இருபது –

பத்துத்தான் கடைசித் திட்டம்.

நோட்டு நன்றாகத்தான் பேசுகிறது. எனக்குத்தான் பேச முடியாமல் நாக்கு உள்ளே போய்விட்டது.

“இருக்கட்டுமே, இன்னும் நாலு பேரைப் பாத்துட்டு வாங்களேன்.”

“நாலு பேரைப் பாத்திட்டு உங்க கிட்ட வரணும். நீங்க அஞ்சு ரூவாயைக் கொடுத்திட்டுப் போடான்னு என்னை விரட்டிரணும். அதானே சொல்றீங்க?”

“அப்படீன்னா – நீங்க என்னை அஞ்சு ரூபாய் கொடுக்கணும்னு எதிர்பார்க்கறேளா?”

“உங்களுக்குக் கொடுக்கறத்துக்கு இஷ்டம் இல்லைன்னா சொல்லிடுங்க, நறுக்குன்னு. எளுந்திரிச்சுப் போயிடறேன். ஏன் வீண் பேச்சு?”

பட்டென்று, ‘இஷ்டமில்லை’ என்று சொல்லிவிடலாம். அவ்வளவு தைரியமும் கண்டிப்பும் இருந்திருந்தால், பத்து வருஷமாகவா மளிகைக் கடைக் குமாஸ்தாவாக இருக்க வேண்டும்? இத்தனை நாள் தனிக் கடையே வைத்திருக்கலாமே.

‘என் நிலைமைக்கு அஞ்சு ரூபாய் கொடுக்க முடியுமா, நீங்களே யோசித்துப் பார்த்துச் சொல்லுங்கோ?”

“ஐயா, பத்து ரூபாய்க்குக் குறைச்சலில்லாமே வாங்கிக்கிட்டுப் போகலாம்னு வந்திருக்கேன். நாட்டியமா, டீ பார்ட்டியா? வெள்ளத்திலே அடித் துண்டைக்கூடப் பறிகொடுத்திட்டு நிக்கிறாங்கையா. நீங்கள்ளாம் இப்படிச் சண்டித்தனம் பண்ணினா அப்புறம் எங்கையா போறது நான்?”

“நீங்கள்ளாம்னா என்ன? இங்கே என்ன கொல்லையிலே காய்க்கிறதா?”

“சரி, கடையிலே காய்க்கிறதுன்னு வச்சிக்குங்களேன். எளுந்திருங்க, போய்க் கொண்டாங்க சொல்றேன்.”

“இப்பக் கையிலே தம்பிடி கிடையாது.”

“என்னது!”

“ஆமாம்.”

“தம்பிடி கிடையாதா?”

"தம்பிடின்னா தம்பிடிகூட இல்லை."

"நீங்கதான் பேசறீங்களா?"

"நான்தான், கைலாசந்தான் பேசறேன்."

"என்னையாது, பிரளி பண்றீங்க?"

"பிரளி என்ன? இருக்கறத்தைச் சொல்றேன். கையிலே காலணா இல்லை."

"சரி, எப்ப இருக்கும்?"

". . ."

"சரி, இதிலே கையெழுத்துப் போடுங்க. நாளைக்கு வந்து வாங்கிக்கறேன்."

"நாளைக்கு மாத்திரம் ஆகாசத்திலேருந்து குதிச்சுடப் போறதா?"

"உங்களுக்குக் குடுக்கணும்னு மனசு இருந்தா எங்கேருந்தாவது குதிச்சுருமையா."

"ம், ம், குதிக்கும் குதிக்கும்!"

"ஐயய்ய. பெருத்த மோசமாப் போயிடிச்சே. ஏது ஏது!. . . போடுங்கையா கையெழுத்தே."

பிள்ளை நோட்டை நீட்டும்பொழுது அது நோட்டாகத் தோன்றவில்லை எனக்கு. ஆந்திர தேசத்து கிருஷ்ணா நதியே கரைபுரண்டு அலையெறிந்து, என்னை என் உண்டிப் பெட்டியில் உள்ள பத்து ரூபாய் நோட்டுடன் அடித்துப் போக வருவதுபோல் இருந்தது. வேதனையுடன் நோட்டை வாங்கிக் 'கைலாசம், மளிகைக் கடை ரூ. 5 – 0 – 0' என்று போட்ட பொழுது, 'இவ்வளவுதான் தெரியுமா உங்களுக்கு?" என்று பிள்ளை அதட்டினார்.

"இந்தாங்கோ. பேசாமே நோட்டை வாங்கிக்குங்கோ."

"அஞ்சுக்கு முன்னாடி ஒரு கோட்டை இளுங்க சொல்றேன்."

"ஏன், பின்னாடி இழுத்தால் சந்தோஷக் குறைச்சலா இருக்கப் போறதோ உங்களுக்கு?"

"சந்தோஷமாகத்தான் இருக்கும். ஆனா இதுக்கேதான் ஊர் கூடிச்

செக்குத் தள்ளவேண்டியிருக்கே. சரி, நான் திருத்திரட்டுமா?"

"என்ன திருத்தப் போறேள்?"

"பதறாதீங்க," என்று 5க்கு முன் ஒரு கோட்டைப் போட்டு 5ஐச் சுழியாகத் திருத்தினார் பிள்ளை.

"பேஷாகத் திருத்திக்குங்கோளேன். கொடுத்தாத்தானே?"

"கொடுக்காட்டிப் போனா யாரு வுடப்போறாங்க . . . சரி, நாளைக்குக் காலமே பத்து மணிக்கு வரேன்."

பிள்ளை ரப்பர் பூட்ஸை மாட்டிக்கொண்டு கிளம்பினார். வாசல்வரையில் அவரைக் கொண்டுவிடப் போனேன்.

'கிடுகிடு, கிடுகிடு, கிடுகிடு, கிடு' என்று, ஹோட்டல் அம்பி ஐயர் பையன் எம்டன் மூச்சுப் பிடித்துக்கொண்டே, கட்டிக்கொண்டு தொங்கின நான்கு பையன்களையும் நாய்க் குட்டியை இழுக்கிறாற்போல, தரதரவென்று இழுத்துக்கொண்டு போய் கோட்டைத் தொட்டுவிட்டான். கோலாகலம் காதைப் பிளந்தது.

"எலே, எம்டன்டா!" என்று எம்டன் கட்சிப் பையன்கள் ஓர் ஓரத்தில் நின்றுகொண்டு கால் கீழே படாமல் குதித்தார்கள்.

இதைப் பார்த்து ரஸித்தார் பிள்ளை. அவர் எம்டனை விட்டுக் கண்ணெடுக்கவில்லை. எம்டனுக்குப் பதின்மூன்று வயசு இருக்கும். மஞ்சள் நிறம். பூதாகாரமான தேகம். கைகள் தொடையளவு இருக்கும். நீல நிக்கர், கூடை மாதிரி இடுப்பு, சட்டி மண்டை, செம்பட்டை மயிர், மேலெல்லாம் மினுமினுவென்று தங்க மயிர். இந்த உடம்பைத் தூக்கிக்கொண்டு அவன் நடக்கிறதே ஒரு பெரிய சாதனை. ஆனால் அவன் பூனைக் கண்ணால் பார்த்துக்கொண்டே குண்டு குண்டென்று ஓடிக்கொண்டிருந்தான்.

"ஐயரே, எனக்கு ஒரு யோசனை தோணுது. இந்தப் பையனை சலாங்குடு ஆடவைச்சு டிக்கட் வைச்சோம்னா, உங்க மாதிரி மூஞ்சியைத் தூக்காமே எல்லாரும் காசைக் கக்குவாங்க. இது யார் பையன்?"

"ஹோட்டல் அம்பி ஐயர் கொடுக்கு."

"அப்படிச் சொல்லுங்க. அதானே! என்னடான்னு பாத்தேன். உளுத்த மாவு சேராட்டி உடம்பு இப்படியா மினுக்கும்?"

“பிள்ளைவாள் கண் பட்டுடப் போறது. ஒரே பிள்ளை அவன்.”

“எலே டில்லி, ஏந்திர்றா. நீ பொழச்சுட்டே!” என்று எம்டன் குரல் கொடுத்ததும், திண்ணையிலிருந்து வந்தான் டில்லி. அவனுக்குப் பிழைத்துவிட்டதில் எல்லையில்லாத சந்தோஷம். ஆனால் அவன் உடம்பில் எலும்புதான் இருந்தது. ஆறு மாசம் பட்டினி கிடந்தவன் மாதிரி முட்டிக்கால் தட்டிக்கொண்டே அவன் வந்து நின்றான்.

“வாங்க வாங்க. டில்லி மட்டம் வரது பார்றா” என்று எதிர்க்கட்சி, இரைக்கு நப்புக் கொட்டிற்று.

“எலே, டில்லி! நீ சும்மா இர்றா. நான் போய்ட்டு வறேன். நான் போகச் சொன்னாத்தான் நீ போகணும்” என்று உத்தரவு போட்டுவிட்டு எம்டன் கிளம்பினான்.

பளபளவென்று திரண்டிருந்த மஞ்சள் துடைகளில் நாலு தட்டுத் தட்டிவிட்டு, ‘கிடுகிடு, கிடுகிடு’வென்று எதிர் வியூகத்தில் புகுந்துவிட்டான். உடனே, பாய்ந்து கவ்வுவதற்குத் தயாராக முறைத்துக்கொண்டிருந்த புலிகள் தாறுமாறாகச் சிதறி ஓடின. கையை நீட்டிக்கொண்டே ஓர் ஆளைத் தட்டி விட்டு எம்டன் கோட்டுக்கு வந்துவிட்டான்.

“எலே, ராஜா, நீ எழுந்திர்றா, நீ பொழச்சுட்டே.”

ராஜா வந்தான். அதாவது நோஞ்சான்களுக்கு ராஜா இவன். டில்லியைப்போல இவனுக்குச் சூணா வயிறு இல்லை. ஆனால் எலும்புகள் டில்லியின் எலும்புகளோடு போட்டி போட்டுக்கொண்டு தோலை முட்டின.

எதிர்க் கட்சி படையெடுத்தது.

“நாலு பக்கம் பாத்தாலும் நாதியத்த வீடுதான்
நாம தாண்டா இந்த இடிஞ்ச நாதியத்த வீட்டுக்கும்
வளைகளுக்கும் மகாராஜா என்று சொல்லி வந்துதாம்
சுண்டெலீ, சுண்டெலீ, சுண்டெலீ, சுண்டெலீ!”

திடீரென்று பாட்டு நின்றுவிட்டது. பின்பக்கமாக ஒரே பிடி. எம்டன் எதிர்பாராமல் திடீரென்று அமுக்கிவிட்டான். மூச்சு நின்றுவிட்டது.

“சுண்டெலீ மாட்டிக்கிச்சுறா பொறியிலே. கத்து, கத்து, கீச்சு, கீச்சினு” என்று டில்லி எம்டனை வந்து கட்டிக் கொண்டான். அவனைக்

கட்டிக்கொண்டால் எதிரியைக் கட்டிக்கொள்வதாக அவன் பாவனை.

"எலே சம்பத்து, ஏந்திர்றா, நீ பொழச்சுட்டே" என்று எம்டன் கத்தினதும், ஒரு பையன் – ஏழு வயதிருக்கும் – ஓடி வந்தான்.

"என்னாங்க இது. எம்டன் ஆளுங்க எல்லாம் ம்யூஸியத்திலேருந்து ஓடி வந்தாப்பலே இருக்கே!" என்று கேட்டார் பிள்ளை.

"எம்டன் ஒத்தன் போறாதா எங்க கட்சிக்கு?" என்று செத்துப்போய்த் திண்ணையில் உட்கார்ந்திருந்த ஒரு பையன் பதில் கொடுத்தான்.

"நீ எம்டன் கட்சியா?" என்று கேட்டார் பிள்ளை.

"ஆமாம்."

"உன் பெயரென்ன?"

"சோனி. பள்ளிக்கூடத்திலே அட்டண்டென்ஸிலே வீரராகவன்னு கூப்பிடுவா."

"பள்ளிக்கூடத்திலே சோனீன்னு கூப்பிட மாட்டாங்களா?"

"ம்ஹ்ம்."

"ஏன்?"

"கூப்பிட்டா ஒரே குத். இப்படி ஒரு குத் விட்டேன்னா" என்று இடது கையை முருங்கைக்காய் மாதிரி ஓங்கினான் அவன். "அப்பாடியோவ்!"

பிள்ளையோடு சேர்ந்து பையனும் சிரித்தான். "எலே, சோனி, எழுந்திர்றா, நீ பொழச்சுட்டே."

"ம்ஹ்ம், பலே! யார் செத்தா?"

"எல்லாம் போயிடிச்சி, ஐயா ஒத்தர்தான் பாக்கி" என்று எதிர்க் கட்சியில் நின்றுகொண்டிருந்த ஒரே பையனைப் பார்த்து எம்டன் சிரித்தான்.

தனிப்போராட்டம் நடத்தப் போகும் எதிர்க்கட்சியின் கடைசி நம்பிக்கை, முன் ஜாக்கிரதையாகத் தூரத்தில் நின்று கொண்டிருந்தது.

எம்டன் புறப்பட்டான் "கிடுகிடு, கிடுகிடு!"

"எலே எம்டன்! என்ன நீயே வந்திண்ட்ருக்கே; நானும் ஒரு நாழியாப் பாக்கறேன்."

எம்டன் கோட்டுக்குத் திரும்பி வந்து சொன்னான். "ஏண்டா, என் கட்சியிலே வாண்டு நண்டுகளையெல்லாம் போட்டுண்டிருக்கேன். அவங்க வெறும்னே வெறும்னே வர முடியுமா? இந்த அழுகுணிப் பேச்செல்லாம் பேசக்கூடாது."

"எலே, யாரைச் சொல்றே அழுகுணீன்னு? இனிமே சொன்னயோ தெரியுமா?"

"நீ இப்ப என்ன சொல்றே?"

"வேறே யாரையாவது வரச் சொல்லு."

"சரிடா – இதோரு அழு மூஞ்சி – ஏய், நீ போடா டில்லி."

குடு குடு நாதா, குளஞ்சி நாதா

கொட்டையில்லாப் பழம் என்ன பழம்?

வாழைப்பழம். தோலைக்கடி

பூசணிக்காய், காம்பைக் கடி

உங்கப்பனுக்கம் ஆயிக்கும் ஒரு பணம்

தண்டம்

தண்டம் தண்டம் தண்டம்

என்று பெரிய பாட்டாகப் பாடிக்கொண்டு கோட்டுக்கு ஒரு சாண் தூரத்திலேயே நாட்டியமாடிவிட்டுத் திரும்பி விட்டான் டில்லி.

"ஒன்ஸ்மோர்."

"ஏன், சிங்கம் களைச்சுப் போச்சோ?" என்று நையாண்டி செய்தான் டில்லி.

"ஆமாண்டி சிங்கி. உனக்கு ஆறுபேர் கூட இருக்காங்க, நீ பேச மாட்டியா?"

"எலே சும்மாயிருடா டில்லி" என்று சொல்லிவிட்டு எம்டன் கஜேந்திரன் மாதிரி புறப்பட்டு ஒரு கை வீச்சில் எதிரியைத் தொட்டுவிட்டுக் கோட்டுக்கு வந்துவிட்டான்.

அவ்வளவுதான், "கேம், கேம்" என்று எம்டன் கட்சி ஈர்க்குச்சிகள்

முழுதும் ஆகாசத்தில் குதித்தன. டில்லி முட்டிக்காலைத் தட்டிக்கொண்டு குதித்தவன் கீழே விழுந்துவிட்டான். ஒரே ரகளைப் பட்டது.

பிள்ளை விழுந்து விழுந்து சிரித்தார். எதிர்க் கட்சிச் சிங்கத்திற்கு எரிச்சல் வந்துவிட்டது. “எலே எம்டன் என்ன, ப்ரமாதமாக் குதிக்கிறே? படிப்பிலே ஒரு மார்க் வாங்கறத்துக்கு யோக்யதை இல்லை. கணக்கிலே ஸைபர், ஹிஸ்டிரிலே ஒண்ணரை, இங்கிலீஷிலே ஸுட்டா. பள்ளிக்கூடத்திலே ஐயராம் நாயுடுகிட்ட நீ வாங்கற உதை எங்களாலே எண்ண முடியல்லே; என்ன குதிக்கறே?”

“எலே நானா குதிக்கறேன். எங்க கட்சிப் பசங்களெல்லாம் குதிக்கறாங்க. அதுக்கு நான் என்ன பண்றது?”

“அதெல்லாம் இருக்கட்டும்; படிப்பிலெ நாலு மார்க் வாங்கறத்தெப் பாரு.”

“நீ போடா, நீ படிச்சுக் கிழிச்சுட்டயே. இவர் பெரிய ஸி.வி. ராமன்! போடா; தோக்கறதையும் தோத்துட்டு அநாவசியப் பேச்சுப் பேசறான். நீ இப்ப மார்க் வாங்குடா இதிலே. பள்ளிக்கூடத்து மார்க்கை அப்புறம் பாத்துப்பம்.”

“எலே, என்ன ஜாஸ்தி பேசறே?”

“சரி, நீ விளையாடப் போறயா இல்லையா? போங்கடா எல்லாரும் அந்தப் பக்கத்துக்கு.”

“முடியாது.”

“நீ ஆடலியா?”

“இல்லே.”

“அப்ப நீ அந்தண்ட போ.”

“போக முடியாது.”

“முடியாதுன்னா?”

“முடியாதுன்னா முடியாது. நீ யார் சொல்றத்துக்கு?”

“ஏண்டா வீம்பு பிடிக்கிறே?”

“நான் வரேன். காலையிலே பத்து மணிக்கு வரேன்” என்று

சொல்லிவிட்டுப் பிள்ளை இறங்கிப் போனார்.

“நீ போறயா மாட்டியா?”

“மாட்டேன்.”

“இழுத்துப் போட்டுடுவேன்.”

“அடி சிங்கம், எங்கே போடு பாப்பம்?”

அவ்வளவுதான். அவனை அப்படியே குண்டுக் கட்டாகத் தூக்கி என் வீட்டுத் திண்ணையில் கொண்டு வைத்துவிட்டான் எம்டன். கூச்சலும் கரகோஷமும் மறுபடியும் எழும்பின.

“எலே, எலே!” என்று அகற்றப்பட்டவன் ஆத்திரத்துடன் ஒரு பாய்ச்சல் பாய்ந்து எம்டனின் ஆடு சதையைப் பல்லால் கவ்விவிட்டான். “ஏய் விடு விடு, கடிக்காதே!” என்று கத்திப் பார்த்தான் எம்டன். பயனில்லை. கடைசியில் வீசி ஒரு உதறு உதறியதும் அப்பால் போய் விழுந்தான் பையன்.

“நாய் மாதிரி கடிக்கிறாண்டா.”

“வைடா நாலு” என்று பையன்கள் ஆளுக்கு ஒன்றாகச் சாத்தினார்கள்.

“எலே, அடிக்காதிங்கடா. பாருங்கோ மாமா, நாய் மாதிரிக் கடிக்கிறதை” என்று என்னிடம் வந்தான் எம்டன்.

“எலே, என்ன நாய் நாய்ங்கறே? பல்லை ஒடைச்சுப்பிடுவேன்; தெரியுமா?” என்று உதை வாங்கினவன் மீண்டும் கிளம்பினான்.

“ஏ, காலி, நீ சும்மா இருக்க மாட்டே?” என்று நான் அதட்டிய பிறகுதான் அவன் அடங்கினான். முழுவதும் அடங்கிவிடவில்லை. “பூசணிக்கா, சித்தானைக் குட்டி, சைனா குண்டு!” என்று எம்டனை நோக்கி வாய்ப்பாணமாக எறியத் தொடங்கினான்.

“ரத்தம் வரது மாமா” என்றான் எம்டன்! பார்த்தேன். பல் ஆழப் பதிந்து ரத்தம் கசிந்துகொண்டிருந்தது. பக்கத்துத் தெருவிற்கு டாக்டர் வீட்டிற்கு அழைத்துப் போனேன். அவர் ஒரு இன்ஜக் ஷனைப் போட்டு, மேலுக்கும் மருந்து போட்டு அனுப்பினார். கூட வந்த பட்டாளத்தைச் சிரமப்பட்டுத்தான் கலைக்க வேண்டியிருந்தது.

“இந்தப் பயலுக்கு நாலு குடுத்தாத்தான் புத்தி வரும்” என்று

வரும்போது சொன்னேன்.

“எதுக்கு மாமா? ஒரு அடி தாங்கமாட்டான் இந்தப்பய. ஆனா ஒரு அடி அடிச்சுட்டா, கப்பிக்கல்லு, உலக்கை எது ஆப்பிட்டாலும் எடுத்து மேலே வீசிப்பிடுவான். அடிக்கறதை அடிச்சிட்டு அழ வேறு அழுவான். அவன் அப்பா இருக்காரே சுப்பண்ணா அவருக்குக் கோவம் வந்துதோ இவனைக் கொன்னு குழியை வெட்டி மூடிப்பிடுவார். அன்னிக்கிச் சம்பத்தை அடிச்சுட்டான் இந்தப் பய. அவன் சுப்பண்ணா மாமாகிட்ட அழுதுண்டே போய், ‘அடிச்சிப்பிட்டான், உங்க நாராயணன்’னு சொல்லிப்பிட்டான். அவ்வளவுதான். அன்னிக்கு ஒரு விசிறிக் காம்பு முறிய முறிய அடிச்சிருக்கார் பாருங்கோ, பாவமாயிருந்தது. முதுகு மூஞ்சியெல்லாம் பூரான் கடிச்சாப்பலெ தடிச்சுப் போயிடுத்து” என்றான் எம்டன்.

0

டாக்டர் வீட்டுக்குப் போனதில் அரை மணி காபிக்குத் தாமதமாகி விட்டது.

“இன்ஜக் ஷன் பண்ணணுமா இதுக்கு? அவ்வளவுக்கு என்ன?” என்று கௌரி கேட்டாள்.

“ஏதாவது விஷம் கிஷம் இருக்கலாம். முன்னாடி ஜாக்கிரதை பண்ணிக்கிறது நல்லதுதானே.”

“இந்த டாக்டருக்கெல்லாம் இன்ஜக் ஷன் போடாட்டாத் தூக்கம் வராது. அந்தக் கடியையும் வாங்கிண்டு பேசாமெ இருந்துதே இந்த எம்டன், அந்தச் சமத்தை எங்க போய்ச் சொல்றது . .! சாயங்காலம் யாரு வந்திருந்தா?”

கடைசிக் கேள்வியைக் கேட்டதும் என்னை அறியாமல் மறைந்திருந்த சோகம் திடீரென்று வயிற்றைப் புரட்டிக் கலக்கிற்று.

“உண்டிப்பெட்டியைக் கொண்டா.”

“எதுக்கு?”

“கொண்டாயேன்.”

உண்டிப்பெட்டி வந்தது. சின்னப் பெட்டி. பரம்பரையாக வந்த குடும்பக் கஜானா. திறந்தேன். பத்து ரூபாய் நோட்டுக் கிடந்தது.

“இதோ பார்க்கிறார் பார், ஜார்ஜ் ராஜா. என்ன ராஜா வேண்டியிருக்கு? நமக்கு வேஷ்டி சட்டை வாங்கிக் கொடுக்கக்கூட மனசில்லை அவருக்கு.”

“என்ன, சுத்திச் சுத்தி மூக்கைத் தொட்டாறது?”

“ஒண்ணுமில்லே. ஒரு வருஷமா, ஒரு நல்ல நாலு முழத்தையும் ஒரு கிழிசல் நாலு முழுத்தையும் கட்டிண்டு காலத்தை ஓட்றேனா? இப்பவும் அப்படியே இருங்கிறார் இவர்.”

“ஏனாம்?”

“ஆந்திராவிலே புயலடிச்சு வெள்ளம் வந்து அரைத்துணிகூட இல்லாமல் பறக்கிறாளாம் ஜனங்கள். அங்கே போகணுங்கறார். என்னத்தைச் சொல்றது?”

“கொடுக்க முடியாதுன்னு சொல்றது.”

“எப்படிச் சொல்றது?”

“தனக்கு மிஞ்சித்தான் தர்மம். நம்ப கஷ்டத்தைத் தீர்க்க யார் கொடுக்கப் போறா? உங்க வேஷ்டிக்கு மூட்டுப்போட, தையக்கூலி ஓர் அணாவுக்குப் பிரயோஜனமுண்டோ இந்த மனுஷாளாலே?”

“அது அவாளுக்குத் தெரியலியே. முதலாளி பண்ற ப்ளாக் மார்க்கட்டிலே எனக்கும் பங்குண்டுன்னு நெனச்சிண்டிருக்கா எல்லாரும். எதாவது பங்குன்னு வாயைத் திறந்துடுவமோன்னு பயந்துண்டு, சம்பளத்தை நாப்பது ரூபாயிலேருந்து அறுபதா உசத்திப் போட்டுட்டார் முதலாளி. அவர் பண்ற அகட விகடமெல்லாம் ஊருக்கா தெரியப்போறது?”

“சரி, இப்ப என்ன பண்ணப் போறேள்?”

“கையில் தம்பிடி இல்லைன்னு சொல்லி அனுப்பிச்சுட்டேன்.”

“போறது. அதாவது சொல்லத் தெரிஞ்சுதே.”

“அதுக்குக்கூட வாயில்லையா எனக்கு? எட்டு வருஷமா எந்தச் சாமான் கேட்டாலும் இல்லை இல்லேன்னு குறவன் மாதிரின்னா பழக்கமாயிருக்கு.”

“நல்ல வேளையாப் பொழச்சேள்.”

“யாரு?”

“என்ன?”

“நானா பொழச்சேன்? நாளைக்கு வரேன்னு சொல்லி விட்டுப் போயிருக்கார்றீ. கையெழுத்துப் போட்டுட்டேன். இப்ப சத்தியாச் சொல்லியனுப்பிச்சிருக்கேன். அவ்வளவுதான்.”

“கையெழுத்துப் போட்டுட்டேளா, எத்தனைக்கு?”

“5ன்னு போட்டேன். 10ன்னு திருத்திண்டிருக்கார்.”

“அப்ப நீங்க ஈன்னு இளிச்சுண்டிருந்தேளா?”

“இளிக்கலை. கொடுக்க முடியாதுன்னேன்.”

“யாரு அந்தத் தடியன்?”

“தடியனா? பர்மா ஷெல் கண்ணுசாமி பிள்ளை! மூணு லக்ஷம் சொத்து இருக்கு அவருக்கு! ஊரிலேயே அவர்தான் பணக்காரர்.”

“மூணு லக்ஷம் உள்ளவன், உங்க பத்து ரூபாயையும் சேர்த்துப் போட்டுடறதுதானே?”

“அப்படி எல்லாருக்கும் போட்டா, நம்ம மாதிரி கடையிலே கணக்கு எழுதலாம்.”

“சரி, அந்தப் பத்து ரூபாயை இப்படிக் கொடுங்கோ!”

“ஏன்?”

“கொடுங்கோ, சொல்றேன்.”

கொடுத்தேன்.

“நாளைக்கு அவன் வரட்டும். போடா வேலை மெனக்கட்டவனேன்னு நாலு பாட்டுப் பாடி அனுப்பறேன்.”

“அம்மா, பரதேவதே!”

“பின்னே என்ன?”

“உங்கிட்டச் சொன்னதே தப்பு.”

“பின்ன யார்கிட்டச் சொல்லி அழப் போறேள்? தூக்கிக் கொடுத்துட்டு, இப்படிப் பரதேசி மாதிரி கந்தலைக் கட்டிண்டு அலையுங்கோ. அய்யர்வாள், அய்யர்வாள்னு ஊரெல்லாம் கெட்டிமோளம் அடிக்கிறது.

இந்த மடிச்ச வேஷ்டியை வீசி எறிய நாள் வரலை. எதுக்கு இந்த ரெண்டுங்கெட்டான் செல்வாக்கு?"

"சேது உடையார் ஜாதகம் பார்த்துட்டு அதைத்தான் சொன்னார்; 'உங்களுக்கு ஐவேஜி இராது. ஆனா லக்ஷப் பிரபுவுடைய செல்வாக்கு இருக்கும்'னு."

"அதை நெனச்சுண்டு பூரிச்சுண்டிருந்தா சரியாப் போயிடும்! ஐய, இந்த ஜாதகப் பேச்சை எடுக்கறபோது எனக்கு வயத்துலே மொளகாயை அறச்சுத் தடவினாப்பல இருக்கு. இந்த அதிசயத்தை ஜோஸ்யனா சொல்லணும்! நமக்குத்தான் தெரிஞ்சிருக்கே, ஜாதகம்! நான் சொல்றேன். நீங்களும், இந்த அசடு இருக்கே எம்டன் அதுவும் ஒண்ணு. கால்லே கடியை வாங்கிண்டு, திருப்பி நாலு வாங்கத் தெரியாமெ முழிச்சுதே. அதுவும் நீங்களும் ஒண்ணு. ஊரிலே இருக்கிறவன்லாம் உங்க தலையிலே மொளகாயை அறச்சுத்தடவட்டும். நீங்க அசையாம கட்டிண்டு நில்லுங்கோ. எனக்கென்ன? குழந்தைக்குப் புதன்கிழமை பள்ளிக்கூடத்துச் சம்பளம் கட்டணும். நீங்க எக்கேடு கெட்டுப் போங்கோ."

"அப்படீன்னு ரூபாயைச் சுருட்டிண்டு போறியே இஞ்ச போட்டுடு அதை."

"முடியாது."

0

ராத்திரித் தூக்கம் வரவில்லை. எண்ணெய் தேய்த்துக்கொண்டு நாளாகிவிட்டது. கண்ணெல்லாம் பொங்கிற்று. புரண்டு புரண்டு படுத்ததுதான் மிச்சம். தலையணைக்கு அடியிலிருந்த பொடி மட்டையை எடுத்து எடுத்து எத்தனை தடவைதான் போடுகிறது? ராத்திரிக்குப் பொடி காணுமோ காணாதோ என்று பயம் வந்துவிட்டது.

மனோராஜ்யம் விரிந்தது. 'தனியாக பிஸினஸ் பண்ண வேண்டும். நம்மை நம்பி இரண்டாயிர ரூபாய் யாராவது கடன் கொடுத்தால் போதும். ஒரு மளிகைக்கடை, ஒரு சிமின்ட் ஏஜன்ஸி, ஒரு சர்க்கரை ஏஜன்ஸி, ஒரு இரும்புக் கடை, ஒரு 'ஷாப்பு'க் கடை, பேப்பர் வியாபாரம். ஒரு ஜில்லாவுக்குத் தனி உரிமை போதும். ஒரு ஒன்பது வால்வ் ரேடியோ; ஒரு கார்; ஒரு சினிமா எடுக்க வேண்டும்; சம்பளத்தை வாரியிறைக்க வேண்டும் . . .'

தரித்திரங்களின் மனோராஜ்யத்திற்குக் கரையேது?

மணி பன்னிரண்டுக்கு மேல் இருக்கும். தென்னங்கீற்றுத் தான் சலசலத்துக்கொண்டிருந்தது.

வாய் கடுக்கத் தொடங்கிவிட்டது. சினிமாக் கொட்டகைப் பக்கம் போய், ஒரு ஆவர்த்தனம் வெற்றிலைச் சீவல் போட்டுக் கொண்டு வந்து மறுபடியும் படுக்கையில் உட்கார்ந்தேன்.

"அந்த எம்டனும் நீங்களும் ஒண்ணு."

எனக்குச் சிரிப்பு வந்தது. என்னையும் எம்டனையும் பக்கத்தில் பக்கத்தில் சேர்த்து வைத்து மனசில் பார்த்துக் கொண்டேன். கொழுகொழுவென்று தொந்தி வளைய, மஞ்சள் முகத்தில் எண்ணெய் வழிய, நீல நிக்கருடன் எம்டன்! பக்கத்தில் கச்சலாக, கறுப்பாக, உயரமாக, பித்த நரைத் தலையுடன், வெற்றிலை வாயுடன் நான்.

எம்டன் மண்டு. கணக்கில் சைபர், இங்கிலீஷில் ஸுட்டா, ஹிஸ்டரியில் ஒண்ணரை.

நான் ஜகப்புரட்டுகள் பண்ணி இன்கம்டாக்ஸ் மோப்ப நாய்களை ஏமாற்றி முதலாளிக்கு லக்ஷக்கணக்கில் பணம் சேர்த்துக் கொடுத்தவன்.

நானும் எம்டனும் ஒன்று.

போட்டோ பிடித்துக்கொள்வதற்காக நானும் எம்டனும் நிற்கிறோம். எதிரேயுள்ள காமிராவுக்குப் பின்னால் கறுப்புத் துணியில் தலையை விட்டுக்கொண்டு நிற்கிறாள் கௌரி.

விடியற்காலையில் விழிப்புக் கொடுத்துவிட்டது. பத்து நிமிஷத்திற்கு ஒரு முறை விழித்துப் பூனைத் தூக்கம் தூங்கியதில் அலுப்புத் தட்டிவிட்டது. எரிச்சலுடன் பாயைச் சுருட்டினேன்.

0

காபி ஆயிற்று. எட்டு மணி இருக்கும்.

"மாமாவ்."

ஓ, சனிக்கிழமையா!

உள்ளே எம்டனும் கோஷ்டியும் வந்தார்கள். வால் கிண்ணத்தில் எண்ணெயும் ஓர் அரப்புப்பொட்டலமும் ஏந்தி வந்தான் எம்டன். கூட வந்த சைனியம் அலுமினியம் பித்தளைக் கிண்ணங்களில் எண்ணெயும்,

மரவைகளில் அரப்புமாகக் கூச்சல் போட்டது.

“இதோ வந்துட்டேண்டாப்பா.” நானும் எண்ணெய் சீயக்காயுடன் கிளம்பினேன். நாராயணன் — கடித்த பையன் — என்னிடம் பேச்சுக் கொடுத்துக்கொண்டே, தன்னை நல்லவனாக்கிக்கொள்ளப் பிரயத்தனம் செய்துவந்தான்.

நாவல் மரத்தை உலுக்கிப் பழம் தின்றுவிட்டு மீண்டும் கிளம்பிற்று, படை.

மேலெல்லாம் தாறுமாறாக எண்ணெயை வழிய விட்டுக்கொண்டு, காவேரியை இரண்டு பண்ணத் தொடங்கிவிட்டன எல்லாம். ஒரே பாட்டு, கூத்து, நீச்சல், குதியல். காவேரிக்கு வாயிருந்தால் அழுதுதான் இருக்கும். கற்றுக் குட்டிகள் துறையோரமாகச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தன.

“ஏய் எம்டன் குதிக்கறாண்டோய்!” பார்த்தேன். அத்தி மரத்தில் பட்டாளத்தில் பாதி அமர்ந்திருந்தது.

எம்டன் குதித்தான் பர்வதம் மாதிரி.

“ஹேய் ஹேய்!”

வரிசையாகக் குதித்துக்கொண்டிருந்தார்கள். “மாமா, ஏக், க்ஊ, மாமா!”

“மாமா, மாமா, நாராயணன் ஆத்தோட போறான். மாமா, மாமா, கைலாச மாமா!”

திரும்பிப் பார்த்தேன். நாராயணனைக் காணவில்லை.

“எங்கேடா போறான்?”

“அதோ முழுகறான்.”

“இப்பக் கத்தினான்.”

“அதோ தெரியறான்.”

நாராயணன் கால் அண்டாத ஆழத்தில் போய்க்கொண்டிருந்தான்.

என் உடல் துடித்தது. பரந்தது. கால் துடித்தது.

நீந்தத் தெரியாது எனக்கு.

பக்கத்தில் ஆள் யாருமில்லை.

“நாராயணா!” என்று சத்தம் போட்டேன்.

“நான் போய் இழுத்துண்டு வரேன் இருங்கோ” என்றான் எம்டன்.

“உனக்கு முடியுமாடா?” என்றேன். அவனுக்கு முடியுமா? முடியும் என்றுதான் எனக்குத் தோன்றிற்று.

எம்டன் நீந்திப் போனான். போய்க்கொண்டே இருந்தான். நாங்கள் பார்த்துக்கொண்டே இருந்தோம்.

0

நாலு பெற்றோர்களும் அலறினார்கள்.

“குழந்தே, சங்கரா!”

“நாராயணா, இப்படி விட்டுட்டு போயிட்டியேடா.”

தெரு அல்லோலகல்லோலப்பட்டது.

“கௌரீ, எம்டன் ஆத்தோட போயிட்டாண்டி!” என்று வீட்டு வாசலில் வந்து கத்தினேன். என் தொண்டை உடைந்தது. குழந்தை மாதிரி அழுதேன்.

“துறையிலே பெரியவாளே இல்லியா?” என்று சற்று நாழிகை கழித்துக் கேட்டான் கௌரி.

“நான்தான் இருந்தேன்.”

“நீங்க பெரியவாங்கறது தெரிஞ்சிருக்கே. நீஞ்சத் தெரிஞ்சவா இல்லியா?”

“ம் ஹ் ம்.”

சோனிகளை வைத்துக்கொண்டு ஜயக்கொடி நாட்டுகிற எம்டன் போய்விட்டான். “யாரோ, பாசத்திற்கு அப்பாலுள்ள உயிரை மீட்கப் போய்விட்டான் எம்டன். இவனுக்கு யார் இந்த வித்தை சொல்லிக்கொடுத்தார்கள்?”

“எம்டனும் நானும் ஒண்ணுன்னியே.”

சொந்த குழந்தை செத்துப் போயிருந்தால்கூட அவள் அவ்வளவு ஏங்கியிருக்கமாட்டாள்.

“உசிரையே பலி கொடுத்துட்டானே, ஆளை இழுத்துண்டு வரேன்னுட்டு.

அவனும் பெரியவனாய்ப் போய், சம்பாதிச்சால் பத்து ரூபாயைப் பெரிசாய் மதிச்சிருப்பானோ?"

"அதான் பெரியவனா ஆகாமலே தப்பிச்சுனுட்டான்."

**மணிக்கொடி, 1950**

# அத்துவின் முடிவு

“சார், இவளை நான் ஒரு நாளைக்குச் சந்தியிலே நிறுத்தி வைக்காட்டா, என் பேர் அத்து இல்லை – அது எப்படி நிக்க வைக்கப் போறேனோ, எனக்குத் தெரியாது. ஆனால் கட்டாயமா ஒரு நாளைக்கு நிறுத்தத்தான் போறேன், அவ ரொம்பக் கஷ்டப்படப் போறா, பாரும் . . .”

“ஓய், அப்படியெல்லாம் பேசாதீரையா! நீர் என்ன, தாலி கட்டின புருஷனாகவா பேசுகிறீர்? என்னையாது தத்துப் பித்துன்னு.”

“தத்துப் பித்துன்னா? ஓய், இந்த உப்புமாவைத்தின்னு பாருங்காணும். அப்பாமங்கலம் அர்த்த நாரீச்வரையர், அப்பா செத்துப் போனபோது வச்சுட்டுப் போன ஆறு ஏக்கரைப் பத்து வருஷத்தில் அறுபத்தினாலு ஏக்கராவாகப் பெருக்கின அர்த்த நாரீச்வரையர், ஔரோரா இன்ஷூரன்ஸ் கம்பெனிக்கு ஐம்பது லக்ஷம் ரூபாய் பாலிஸி ஒரு வருஷத்தில் சேர்த்துக் கொடுத்த அர்த்த நாரீச்வரையர், அப்பாமங்கலம் பர்மனென்ட் பண்ட் டைரக்டர் அர்த்தநாரீச்வரையர் – இந்த உப்புமாவைத்தான் திங்கணுமா? நீர் கொஞ்சம் இதைத் தின்னு பாருமே. பாருமேன்னா பார்க்கணும், ம், பாரும், சொல்றேன்” என்று ஒரு பிடி உப்புமாவை என் கையில் வைத்து அழுத்தினார் அத்து.

“என்னையா, பேசாமல் கையில் வச்சுண்டு உட்கார்ந் திருக்கிறீர். சாப்பிட்டுப் பார்த்துச் சொல்லும். நான் உம்மை உபசாரம் பண்ணலை. நடப்பைத் தெரிஞ்சுக்கணும்னுதான் சொல்றேன். போட்டுண்டு பாரும்” என்று மேலும் மேலும் தூண்டவே, உப்புமாவை வாயில் போட்டுக்கொண்டேன்.

அரிசி உப்புமா. களி களியாக நெஞ்சைப் போய் அடைத்தது. ஒரே ஜல பக்குவம். எண்ணெய் வாசனை, ஜன்மாந்தர வாசனையாக மிகச் சிரமப்பட்டுக் கண்டுபிடிக்க வேண்டிய அளவுக்கு வீசிற்று.

“ஓய், கைலாசம், உம்ம மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் சொல்லும். அதுலெ ஏதாவது கடுகு, கருவேப்பிலை இதுகளுடைய நிழல் விழுந்திருக்கான்னு – ஏனய்யா, எனக்கு இருக்கிற சொத்துக்கு இந்த உப்புமாவை ரெண்டு முட்டை நெய்யை ஊத்திப் பண்ணினாத்தான்

என்ன? பாங்கிலெ இருக்கிற பணச் சுவரு திடுதிடுன்னு இடிஞ்சா விழுந்திடும் . .? சம்பாதிச்சாப் போறாது ஐயா! சாப்பிடக் கொடுத்து வைக்கணும்" என்று சொல்லிக்கொண்டு வந்த அத்துவின் நெஞ்சு அடைத்துத் தழுதழுத்தது. கண்களில் இரண்டு சொட்டுக் கண்ணீர் மல்கி நிறைந்தது. சட்டென்று அவர், மேல் வேஷ்டியால் கண்ணைத் துடைத்துக்கொண்டார். 'இத்தனை பலஹீனமான நெஞ்சா!' என்று எனக்கே ஆச்சரியமாயிருந்தது. சமாதானப்படுத்த முயன்றேன்.

"போனால் போகிறது ஐயா. இதுக்காக ஒருத்தர் மனசைப்போட்டு அலக்கழிச்சுப்பாளா? வீட்டிலே பண்ணிக் கொடுக்காட்டா, 'சீ, நாயே போ, நீ பண்ணிப் போடக் கொடுத்து வைக்கலை'ன்னு நெனச்சுண்டு ஹோட்டல்லேருந்து வரவழைத்துச் சாப்பிட்டுப் போவீரா? இதுக்காகக் கண்ணாலெ ஜலம் விடறீரே, பச்சைக் குழந்தை மாதிரி. மனுஷ்ய வாழ்க்கைன்னா எல்லாம் பொருந்தியிருக்குமா? ஒண்ணு இருந்தா ஒண்ணு இராது, ஒண்ணு பாதியாயிருக்கும். எல்லாம் சகஜந்தானே. இப்ப என்ன நடந்துடுத்து, பிரமாதமா நெனச்சு உருகி, இளகிக் கஷ்டப்படறதுக்கு! ஏனய்யா!"

"இல்லையா, சொல்றேன் உமக்கு – 'இவ்வளவு இருந்தும் வீட்டிலேருந்து சாப்பிடக் கொடுத்து வைக்கலை பாரும்' என்கிறதுக்காகச் சொல்ல வந்தேன். நீர் சொல்றாப்போல, 'சீ நாயே, எனக்குப் பண்ணிப் போடக் கொடுத்து வைக்கலை நீ'ன்னு சொல்லிப்பிட்டு ஹோட்டல்லெ வாங்கிச் சாப்பிடத்தான் போறேன். இருந்தாலும் ஒரு பேச்சுக்குச் சொல்ல வந்தேன். மனுஷ்யனுக்குச் சுகங்கிறது பணத்திலா இருக்கு? நீரும் இருக்கீர். மளிகைக்கடை குமாஸ்தாதான். அறுபது ரூபாய்தான் சம்பளம். இருந்தாலும் புடலங்காயை இளசாப் பொறுக்கி வாங்கி, நெய்யிலேன்னாய்யா பொறிச்சுப் போடறாள், உம்ம சம்சாரம் . . . அன்னிக்கிக் கொடுத்தீரே, என்னமா இருந்தது தெரியுமோ! ஓய், உம்ம சம்சாரம் தங்கக் கம்பியய்யா! ரொம்ப அடங்கின சரக்கு. நான் அன்னிக்கு அந்தப் பொறியலை எடுத்துண்டு உள்ளே போய்க் காமிச்சேன். அந்தப் பிசாசு என்ன சொல்லித்துத் தெரியுமோ? 'சம்பாதிக்கிறது அம்பி அரணாக் கயிற்றுக்கு போறாட்டாலும் இந்தத் திமிருக்குக் குறைச்சல் இல்லை'ன்னு சொன்னாய்யா அவ! எனக்கு அப்படியே மென்னியைத் திருகிப் போட்டுடலாமான்னு வந்துடுத்து. பாரும், தனக்குப் பண்ணிப்போடத் துப்பில்லைன்னாலும், பிறத்தியாருக்கு நொட்டை சொல்றதை . . . ம். பணமா சொத்து? பக்கத்திலே இருக்கிற மனுஷாள்னா சொத்து" என்று முடித்தார் அத்து. அத்துவுக்கு, 'பணமா சொத்து' என்று சொல்லுகிற

அளவுக்கு ஞானோதயம் ஆகிவிட்டதா என்று வியப்பாகத்தான் இருந்தது எனக்கு. உடனே கேட்டேன். "அப்படியானால் இந்தப் பர்மனண்ட் பண்ட் மானேஜிங் டைரக்டர் வேலையைக் கொடுத்துடும். இந்த இன்ஷூரன்ஸ் ஏஜண்ட் உத்தியோகத்தையும் விட்டுடும்" என்று.

அத்து சிரித்துக்கொண்டார். "விடாமலா போகப்போகிறேன்? அதுக்கு ஒரு டயம் வரணும் என்று எதிர்பார்த்துண்டுதான் இருக்கேன்" என்று சொன்னார். (அப்புறம் இரண்டு வீடு வாங்கிவிட்டார் அவர்.)

பர்மனண்ட் பண்ட் ஆபீஸில் ஏதோ 'செக்' மாற்றப்போனபோது இந்தப் பேச்சு நடந்தது. அப்போது இடைவேளை. இரண்டு குமாஸ்தாக்களும் காபி சாப்பிடப் போயிருந்தார்கள். அத்து உப்புமாவைச் சுவைக்க ஆரம்பித்தவர் தம் வேதனைகளைக் கொட்டித் தீர்த்துவிட்டார்.

சற்றுக் கழித்து – இடைவேளை முடிந்ததும் – ப்யூன் ஒரு பெரிய– இரண்டு மூன்று மணு எடையுள்ள – நோட்டை அவர் முன்னால் கொண்டு வைத்தான். அத்து அதில் முனைந்து விட்டார்.

அவர் சொன்னதில் என்ன தப்பு இருக்கிறது? பணம் சொத்தா? மனுஷ்யர்கள் சொத்தா?

அத்துவுக்கு மைதாஸின் ஸ்பர்சம் இருந்தது. அவர் தொட்டதெல்லாம் பொன்னாகத்தான் கொழிக்கும். அவர் தலைப்பட்டு, பிதிரார்ஜிதமான ஒன்றரை வேலி நிலத்தைப் பத்துவேலி நிலமாக ஆக்கிவிட்டார். அவர் அடிக்கடி கனவு கண்டுகொண்டிருந்த லக்ஷ்யமும் அவருக்குக் கிடைத்து விட்டது – "பத்துவேலி நன்செய், ஆயிரம் மூங்கில் கொத்து, ஆயிரம் தென்னை மரம், இரண்டு ஏகர் கறிகாய்க் கொல்லை! இவ்வளவும் இருந்தால், ஒரு மனுஷன் யாரை ஐயா லக்ஷ்யம் பண்ணணும்? லக்ஷம் ரூபாய் சம்பளம் வாங்கினாலும் உத்தியோகம்னா கைகட்டிச் சேவகந்தானே?" என்று உலகத்திலுள்ள உத்தியோக வர்க்கத்தையே மட்டந் தட்டிக்கொண்டிருப்பார். அத்துவுக்குப் பல வழிகளில் சம்பாத்தியம் – மாட்டுத் தரகு, கமிஷன், வியாபாரம், இன்ஷூரன்ஸ் ஏஜன்ஸி, முத்திரை ஸ்டாம்பு விற்பனை, வீட்டு வாடகை – இன்னும் எவ்வளவோ சம்பாத்தியங்கள். அப்பாமங்கலத்தில் அவருக்குப் பதினைந்து வீடு இப்பொழுது.

எனக்குப் பிரமிப்பாகத்தான் இருந்தது. பத்து வருஷம் முன்னால் நான் மளிகைக் கடை குமாஸ்தாவாகப் பதவி ஏற்றபோது அத்துவிற்கு ஒன்றரை வேலி நிலந்தான். இப்போது அத்துவிற்கு ஐந்தாறு 'லகாரம்' என்று

ஊரெல்லாம் சொல்லிற்று. அவரே நான்கு லகாரத்திற்குக் குறையாது என்று புன்சிரிப்புடன், பூரிப்புடன், சொல்லியிருக்கிறார். சாமார்த்தியத்திற்கும் அதிர்ஷ்டத்திற்கும் இனிமேல் அவர் மாதிரி பிறந்து வந்தால் தான் உண்டு.

சொல்லிக்கொண்டே போகலாம். அவருக்குச் சொத்துச் சேரும் அதிர்ஷ்டத்தைச் சொல்வதா? மனைவி வாய்த்த அதிர்ஷ்டத்தைச் சொல்வதா? பிள்ளைகள் பிறந்த அதிர்ஷ்டத்தைச் சொல்வதா?

"ஐயா" என்று யாராவது வாசலில் கூப்பிடுகையில், "யார்?" என்று அவள் கேட்டுக்கொண்டு வரும்போது யாரும் திகைத்துத்தான் போவார்கள். பளீர் என்று ஒரு சிவப்பு; கருகருவென்று சிற்றலையிட்ட கூந்தல்; கறுப்புப் பட்டுப்புடைவை; மத்தாப்பூவாகப் பூரிக்கும் தோடு; ஏதோ தேவதை வருவதுபோல்தான் இருக்கும். ஏழெட்டுக் குழந்தைகளுக்குத் தாய் என்று சத்தியம் செய்தால்தான் நம்ப முடியும். முதல் பிள்ளை இன்ஜினீயரிங் வாசிக்கிறானே, அவனுக்கு இருபத்தொரு வயது – அடுத்த பிள்ளை, வைத்தியக் கல்லூரி – பதினெட்டு வயது. அப்புறம் சின்னஞ் சிறியதாக ஐந்து. ஆனால் இத்தனை பேருக்கும் மூத்த சகோதரி மாதிரி, இப்போது தான் மணமாகிப் புக்ககம் சென்ற மூத்த சகோதரி மாதிரி இருப்பாள் அவள்; அந்த அம்மா. அந்த வம்சத்திற்கே கட்டு விடுகிறது, கிழடு என்கிற செய்திகளே தெரியாதாம்! இப்பேர்ப்பட்ட மனைவி.

பிள்ளைகள்? நடக்கிற நடையும், பேசுகிற பேச்சும், பழகுகிற தோரணையும் பெரிய மனுஷன் வீட்டுக் குழந்தைகள் என்று நூறு கஜத்தில் சொல்லிவிடலாம். முதல் பையனும் அடுத்த பையனும் அடுத்தடுத்து இன்டர் பரீட்சையில் மாகாண முதல்வர்களாகத் தேறிப் பிரமிக்க அடித்தார்கள். ஊர் எரிச்சலைக் கிளப்பிவிட்டார்கள்.

இப்பேர்ப்பட்ட அத்து, அதிர்ஷ்டமே வடிவெடுத்து வந்த அத்து!

இந்த அத்துவுக்கு மற்றப் பணக்காரர்கள் மாதிரி சொத்தை அநுபவிக்க முடியாமல் நீர் ரோகமா, வயிற்றுவலியா, ஒன்றும் இல்லை. நிறையச் சாப்பிட வேண்டும். மல்கோவாவும் ஆப்பிளும் பால்கோவாவும் பாதுஷாவுமாகச் சாப்பிட வேண்டும் என்ற ஆசை. அவரும் சாப்பிடத் தயார்தாம்.

கொடுக்கிறவர்கள்தாம் இல்லை! அந்தத் தேவதைக்குச் சமைத்துப்போட முடியாது என்று ஒரு சமையற்காரன் இருக்கிறான். அத்துவின் நோக்கம் அவளுக்கு முடியாது என்று அல்ல. சமையற்காரன் வந்தால் இரண்டு கறி,

இரண்டு கூட்டு, மத்தியான்ன டிபன் — இப்படி ஏதாவது கிடைக்கும் என்றுதான். ஆனால் தேவதை ஒரு யுக்தி செய்துவிட்டது. சமையற்காரன் சமையலுக்கு அடுப்பு மூட்டும்போது, இரண்டு முட்டை நல்லெண்ணெய், நாலு கடுகு, வெந்தயம் — இந்தச் 'சாமான்'களைக் கொடுத்துவிட்டுக் கூடத்திற்கு வாரப்பத்திரிகைகள் வாசிக்கப் போய்விடும். ஆக, அத்துவிற்குக் கிடைப்பது கொத்தவரைக்காய் வதக்கல், அவரை வற்றல் குழம்பு, இந்த இரண்டுந்தான். குழம்பும் ரசமும் சேர்ந்து ஒரே வேளையில் வரா — இரண்டு எதற்காக? இரவு பட்ஜட்— கொல்லைக் கத்திரிக்காயைச் சுட்டு ஒரு தொகையல், மிளகு ரசம், காய்ச்சின அப்பளம். தேவதையின் அப்பாவே ஊரிலிருந்து வந்தால் கூட அந்த ராத்திரி பட்ஜட்டில் பருப்போ, குழம்போ சேர்ந்து விடாது.

இதற்குப் பயந்துகொண்டே சின்ன விடுமுறைகளுக்கெல்லாம் மதராஸ் ஹாஸ்டலிலேயே தங்கிவிடுவார்கள் முதல் இரண்டு பையன்களும். கோடை விடுமுறை வந்தால், வந்து நாலைந்து நாள் இருந்துவிட்டு, எங்காவது போய் விடுவார்கள்.

இதுவும் ஓர் அதிர்ஷ்டந்தான். யாருக்குக் கிட்டும்?

"இந்தாரும், எண்ணிப் பாரும். ஐந்நூறு இருக்கா பாரும்?" என்று அந்த ரொக்கத்தை மீண்டும் எண்ணிக் கொடுக்க ஆரம்பித்தார் அத்து. பணத்தை எண்ணுவதில் என்ன சுருக்கு! என்ன லாவகம்!

ஆறு மாதம் ஆகவில்லை இது நடந்து. எனக்கும் ஞாபகம் இருக்கிறது. ஒவ்வொரு பேச்சும் கண்ணீரும் அப்படியே ஞாபகம் இருக்கின்றன.

ஒரு மாதம் லீவு எடுத்துக்கொண்டு போய் எங்கெங்கேயோ சுற்றி வந்தேன். போகும்போது பாங்கிற்குப் போய் அத்துவிடம் சொல்லிக்கொண்டுதான் போனேன்.

"பழனிக்குப் போறீரா? எனக்கு ஒரு சேர் பஞ்சாமிர்தம் வாங்கிண்டு வாரும்" என்று பணமும் கொடுத்தார் அத்து.

பஞ்சாமிர்தம் வாங்கிக்கொண்டுதான் வந்தேன்.

ஆனால் பஞ்சாமிர்தம் சாப்பிடும் நிலையில் இல்லை அத்து. அவருக்கு டி.பி.யாம். பத்து நாளாகப் படுத்த படுக்கையாம். நாலு நாளைக்கு ஒரு முறை அரைப்படி, கால்படி என்று ரத்தமா வாந்தி எடுக்கிறாராம். எக்ஸ்ரே எடுத்ததில் இடது பக்கம் முழுவதும் அரிக்கப்பட்டு, வலது பக்கத்திலும் பாதி பிடித்துவிட்டது. மனுஷ்யன் பிழைத்தால் புனர்ஜன்மம்.

பிழைக்கிறது எங்கே?

இரண்டு வருஷமாகவே வியாதி இருந்திருக்கிறாற்போல் இருக்கிறது. மனுஷன் வெளியே சொல்லவில்லை. டாக்டரைக் கேட்டேன்.

"கொல்லையில் கத்தரிக்காய் காய்க்கிறது என்று கத்தரிக்காய்த் தொகையல், எலுமிச்சங்காய் காய்க்கிறது என்று ஒருநாள் பார்த்தாற்போல டிபனுக்கு எலுமிச்சங்காய்ச் சாதம், அல்லது அரிசி உப்புமா. ஓர் உத்தரணியாவது, பாலும், தயிரும் உடம்பில் சேரவேண்டாமா, சார்? அந்த அம்மா குறும்பை வாங்கியினாலேதான் நெய் போடுவாங்களாம். மனுஷ்யனுக்கு டி.பி. ஏன் வராது? இந்தச் சொத்து நமக்கு இருந்தா நம்மைக் கட்டிப் பிடிக்க முடியுமா, ஏன் சார்?"

"அதுதான் நமக்குக் கொடுக்கலை."

டாக்டர் சிரித்தார். அத்துவைப் போய்ப் பார்த்தேன். ஆறுதல் சொன்னேன்.

"ஓய், நீர் ஒண்ணும் கவலைப்படவாண்டாம். டாக்டர் போடற இன்ஜக் ஷன் டி.பி.க்காகப் புதிசாகக் கண்டுபிடிச்சிருக்காளாம். இன்னும் ஒரு மாசத்திலே உடம்பு கல்லு மாதிரி ஆயிடும், கவலைப்படாதீர்."

"என்னமோ நீங்களெல்லாம் பகவானைப் பிரார்த்திச்சுக்குங்கோ."

"பேஷா. ஸ்வாமி கட்டாயம் உம்மைக் காப்பாத்துவார். நிறையப் பாலும் தயிரும் சாப்பிடும்."

"சாப்பிடாமலா? இப்ப ஒரு பசுமாடு வாங்கிக் கட்டியிருக்கேன். நீர் பாக்கலையே, முந்தாநாள்தான் சிங்காரம் கொடவாசல்லேருந்து ஓட்டிண்டு வந்தான். நானூறு ரூபாய். காலமே பதினாலு சேர், ராத்திரி பன்னிரண்டு சேர் கறக்கறது. பாதிப்பாலை நான்தான் சாப்பிடறேன்."

"எல்லாப் பாலையும் சாப்பிடும், நீர் கவலைப்பட்டுண்டு இன்னும் உடம்பைக் கெடுத்துண்டூடாதீர். ஒரு பயமும் இல்லை. நான் வரட்டுமா?"

"சரி, அடிக்கடி வந்து பார்த்துட்டுப் போங்கோ. உங்களுக்கு நான் சொல்ல வேண்டியதில்லை. உம்ம மாதிரி மித்ராள்தான் எனக்கு ஆறுதல்."

இதைச் சொல்லும்போது நான் அவரைப் பார்த்தேன். எல்லையில்லாத வேதனை எலும்பு முட்டும் அந்த முகத்தில் படர்ந்திருந்தது.

வெளியில் போய் ஜன்னல் வழியாக ஒருமுறை பார்த்து விட்டுப்

போனேன். எத்தனை ஹார்லிக்ஸ், ஓவல்டின் டப்பாக்கள், எத்தனை ஆரஞ்சு ஆப்பிள்கள்! இதெல்லாவற்றையும் அப்பொழுதே சாப்பிட்டிருந்தால் . .? சாப்பிட யார் விட்டார்கள்?

இந்தத் தகப்பனாரைப் பார்க்க, மதராஸிலிருந்து பையன்கள் வரவில்லை. இதைப் பற்றி அவர்களுக்குச் செய்தியே போகவில்லையாம். "அதுகள் வந்து என்ன பண்ணப் போறது? படிக்கிறபோது இந்தக் கவலை வேறா?" என்று தேவதை சொல்லிவிட்டது.

இரவு காமிரா உள்ளில் உட்கார்ந்து பேப்பர் படித்துக்கொண்டிருந்தேன். சங்கரி வந்தாள்.

"உங்க சிநேகிதருக்கு என்னமா இருக்கு உடம்பு?"

"ஏதோ இருக்கு. டாக்டர் இன்ஜக் ஷன் கொடுத்துண்டு வரான். ரத்தவாந்தி நின்னுருக்காம். ஆரஞ்சா உரிச்சுத் திங்கறார் மனுஷன்."

"அவர் சீக்காப் படுத்துண்டதிலேருந்து அந்த மாமி அவரைப் பார்க்கவே இல்லையாம்."

"பார்க்கவே இல்லைன்னா?"

"அவளுக்கு அம்மாஞ்சி யாரோ திருச்சினாப்பள்ளியிலே டாக்டராய் இருக்கானாம். அவன் அவரைப் பார்க்க வந்தானாம். ஊருக்குப் போகச்சே, 'இது ஒட்டுவாரொட்டி, அதிகமா நெருங்கப்படாது. குழந்தைகளை ஜாக்கிரதையாப் பார்த்துக்கணும்னு சொல்லிவிட்டுப் போனானாம். அம்மாமி அதைக் கெட்டியாப் பிடிச்சுனூட்டா. ஒரு மாசமா அந்த மாடிப்படியே ஏறலியாம் அவ."

"சாதம் யாரு போடறா?"

"சிங்காரந்தான். மாமி சாதத்தைப் பிசைஞ்சு ஒரு பாத்திரத்தில் அவன்கிட்டக் கொடுத்தனுப்பறாளாம்."

"சே சே, இராது."

"அப்படித்தான் நடக்கிறதாமே!"

"சும்மா? யாராவது சொல்லுவா! ஒண்ணுன்னா பத்துச் சொல்லும் ஊரு. உனக்கு யார் சொன்னா?"

"அந்த மாமிதான்."

“யாரு, மாமியா!” எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

“மோர்ப் பணம் கொடுக்கப் போனேன். அப்ப அந்த மாமிதான் சொன்னா.”

இப்பொழுது நம்பாமல் என்ன செய்வது? சங்கரி பொய் சொல்ல மாட்டாள். வீண் வம்பு பிடிக்காது அவளுக்கு.

“அந்த மாமி ரொம்ப வைதீகமாச்சே?”

“அதுக்காக உயிர் மட்டமாப் போயிடுமா!”

“சிங்காரம் மட்டும்?”

“அவன் வேலைக்காரன். அவன் போனா யாருக்கு நஷ்டம்? அவளும் செத்துப் போனாக் குழந்தைகளை யார் காப்பாத்துவான்னு எண்றாளோ, என்னமோ?”

எனக்கு வயிற்றைக் கலக்கிற்று. ‘வாழ்க்கையில் இவ்வளவு கொடுமை தென்படுமா?’ என்று நினைக்கும்போது உடல் சிலிர்த்தது.

இரவுத் தூக்கம் பிடிக்கவில்லை. வெகுநாழிகை கழித்துத் தூங்கினதாலேயே, அதிகாலையில் விழிப்புக் கொடுத்துவிட்டது. இருள் பிரியவில்லை. எழுந்து பல் தேய்ப்பதற்காகக் கொல்லைப் பக்கம் போனபொழுது, அடுத்த வீட்டுக் கொல்லையில் வெந்நீர் அடுப்பு, திகுதிகுவென்று எரிந்துகொண்டிருந்தது.

சிங்காரம் ஓலைகளை உள்ளே தள்ளித் தள்ளி நெருப்பை ஓங்க விட்டுக்கொண்டிருந்தான்.

“யார்றாது, சிங்காரமா?”

“சாமி!”

“என்னடா பண்ணிண்டிருக்கே?”

“ஒண்ணுமில்லைங்க. ஐயருக்குக் கஞ்சி வச்சிக்கிட்டிருக்கேன். ரொம்பப் பசிக்கிறதுன்னாங்க.”

“நீ எதுக்காக வைக்கணும்?”

“பின்னே யாரு வப்பாங்க?”

“என்னடாது? சேதியை நல்லாச் சொல்லு. அம்மா தூங்கறாங்களா?”

“அம்மா முளிச்சுக்கிட்டிருந்தாலும் நான்தான் வக்கணும். ஐயருக்காக ஒரு செட்டுப் பாத்திரம் எடுத்துக் கொடுத்து, அன்னன்னிக்கித் தேவையான பாலு, விறகு, அரிசி எல்லாம் கொடுத்திருவாங்க. இந்த அடுப்பிலே அதெல்லாத்தையும் வச்சுக்கிட்டு ஐயருக்கு வேணுங்கறத்தை நான் பண்ணிப்போட வேண்டியது. இந்தப் பாத்திரங்களை வேறு பாத்திரங்களோடு கலக்கக்கூடாது. கொல்லையிலேயும் இதை வைக்கக் கூடாது. ஆத்தங்கரைக்குப் போய்த்தான் வெளக்கிட்டு வரணும். பதினஞ்சு நாளா நான்தான் ஐயருக்குச் சமையல்காரன்.”

“ஏன் இப்படி?”

“அது என்னமோ!”

“இது ஐயருக்குத் தெரியுமோ?”

“நான் சொல்லலே. ஆனா, சாப்பிடுகிறபோது ஐயருக்குத் தெரியாமலா இருக்கும்?”

வாழ்க்கையில்தான் நம்ப முடியாத நிகழ்ச்சிகளெல்லாம் நிகழ்கின்றன. அந்த அம்சத்தில் கதையோ கற்பனையோ வாழ்க்கைக்கு உறைபோடக் காணாது என்றுதான் தோன்றிற்று.

சங்கரியிடம் இதைச் சொன்னேன். பொறி கலங்கிவிட்டாற் போல் சிறிது நேரம் சூன்யத்தைப் பார்த்துக்கொண்டு நின்றுவிட்டு, “நாம் இந்த வீட்டைக் காலிபண்ணி விடணும். பக்கத்து வீட்டிலே இந்த மாதிரி தெய்வத்துக்கு அடுக்காத சேதி நடக்கறபோது, எப்படிச் சகிச்சிண்டிருக்கிறது? கட்டின பெண்டாட்டி இப்படி இருக்கிற இடத்துக்கிட்ட வாழறதே பாவம். நீங்க வேறு வீடு பாருங்கோ” என்று தழுதழுத்தாள்.

“எனக்கு எப்படி வயத்தைக் கொதிக்கிறது தெரியுமோ? அப்படியே அவளைப் பிடித்து இரண்டாகக் கிழிச்சுப் போட்டுடணும்போல் பத்திண்டு வரது. நீங்க போய் அவரோட பேசறது கூட அவளுக்குப் பொறுக்காதே” என்றாள் மேலும்.

அவள் சொன்னது உண்மைதான். அன்று அத்துவைப் பார்க்கப் போனபோது, மாடிப்படி ஏறுமுன், “டாக்டர் அதிகமாப் பேச்சுக் கொடுக்க வாணாம்னாராம். அம்மா சொல்லச் சொன்னா” என்று அத்துவின் மூன்றாவது பையன் சொன்னான்.

“சரி, சும்மாப் பாத்துட்டு வந்துடறேன். ரொம்ப நெருங்கிப் பழகிவிட்டோம்டாப்பா. மனசு கேக்க மாட்டேங்கறது. இதோ வந்துடறேன்” என்று சற்று இரைந்தே சொல்லிவிட்டுப் போனேன்.

அத்துவின் முகத்தில் மனுஷ்யக் களையே இல்லை. மரவட்டையாகச் சுருண்டு கிடந்தார். என்னைக் கண்டவுடன் தட்டுத்தடுமாறி எழுந்து தலையணைமீது சாய்ந்துகொண்டு உட்காரும்படி நாற்காலியைக் காட்டினார். குரல் கம்மி விட்டிருந்தது. “நெஞ்சு பாறையாகக் கட்டியிருக்கு” என்று மட்டும் சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்தார்.

“பசி இருக்கா?”

தலையாட்டல்.

இருக்கிறது என்ற அர்த்தத்தில் தலையாட்டல்.

“இருமல்?”

“கைலாசம், ஒண்ணொண்ணாக் கேக்கிறீரே என்ன? இருமல் தணிஞ்சா என்ன, டெம்பரேச்சர் குறைஞ்சா என்ன? நான் பிழைச்சு யாருக்கு என்ன சாதிக்கப் போறேன்? நான் சீக்கிரமாப் போகணும்னு நீங்கள்ளாம் பகவானைப் பிரார்த்திச்சுக்குங்கோ.”

“அப்படியெல்லாம் பேசாதீர்யா. டாக்டரைப் பார்த்தேன். ரொம்பக் குணமாயிருக்குன்னு சொன்னார்.”

“ஏன் வீண்பேச்சு? நான் சொல்றபடி பகவானைப் பிரார்த்திச்சுக் குங்கோ. ஒரு மாசமா அவள் என்னை வந்து பாக்கலை. மாடிக்கு ஏறமுடியாமல் அவளுக்கும் டீ.பி. வந்துடுத்துப் போல் இருக்கு. அவளுக்கு வந்து பாக்கணும்னு தோணினாலும் தோணும். அதுக்கு முன்னாலே நான் போயிடணும் . . .”

அவர் கண்களில் கரகரவென்று நீர் வழிந்துகொண்டிருந்தது.

என்ன பேசுகிறது? பேசாமல் உட்கார்ந்திருந்தேன்.

“இப்பவே எனக்கு ஈச்வர தரிசனம் கிடைக்கணும்” என்று சொல்லிவிட்டுப் படுத்துக்கொண்டார் அத்து. நான் எழுந்து வந்தேன்.

உடம்பு மிகவும் கேவலமாகிவிட்டது. டாக்டர் ஆஸ்பத்திரிக்குத் தூக்கிப் போகச் சொன்னான். கும்பகோணத்திற்குத் தூக்கிக்கொண்டு போனார்கள். நிலைமையைப் பார்த்துவிட்டு, “இடமில்லை” என்று திருப்பி

அனுப்பிவிட்டான் கும்பகோணத்து டாக்டர். மோட்டார் அத்துவுடன் திரும்பிற்று. ஆனால் அவரை மாடிக்கு ஏற்ற முடியவில்லை. கீழேயே கூடத்தில் போட்டார்கள். மீண்டும் வந்த உள்ளூர் டாக்டர் இரண்டு, மூன்று நாள் கெடு வைத்துவிட்டான்.

இப்போது சமையல் உள்ளைத் தாண்டி வருவதில்லை தேவதை.

மூன்று நாள் கெடுவைக் கேட்டதும், தெருவில் உள்ளவர்கள் கடைசிமுறையாக, ஒவ்வொருவராக வந்து பார்த்துவிட்டுப் போனார்கள். வாசல் நிலை ஓயவில்லை. வெளியே வருபவர்கள் மனம் போனபடி "இன்னும் அஞ்சுநாள்", "ஏதுய்யா காலமே வரையில் தாங்கினால் போறாதா?", "அப்படிச் சொல்றதுக்கில்லை" என்று தவணை சொல்லிக்கொண்டே போய்ச் சேர்ந்தார்கள்.

தந்தி பறந்தது. மதராஸிலிருந்து பையன்கள் வந்து விட்டார்கள்.

கோவிந்தவன்னி, சுப்பட்டா உடையார், பஞ்சாயத்துத் தலைவர் கண்ணுசாமி எல்லோரும் பார்த்துவிட்டுப் போனார்கள். அவர்களுக்கு ஏதோ கடன் கொடுக்க வேண்டுமாம் அத்து.

அன்று காலை சிங்காரம் வந்தான். அழுதுகொண்டே நின்றான்.

"என்ன சமாசாரம். ஏன், முடிஞ்சு போயிடுத்தா?"

"இல்லீங்க. காலமே ஐயா வாயிலே ஈ மொச்சுக்கிட்டிருந்தது. விசிறினேன். 'என்னடா விசிறல், இன்னும் செத்தக் கழிச்சு இழுத்துப் போடணும், விசிறல் என்ன வேண்டிக்கிடக்கு?'ன்னு ஒரு சத்தம் போட்டாங்க அம்மா. அப்புறம் உத்தரணியாலெ ஒரு வாய் தண்ணி ஊத்தினேன். 'ஏய் பாவி, உன்னாலெதான் நல்லாப் போகிற உசிரும் நின்னு நின்னு கஷ்டப்பட்டுண்டு போறது. ஏன் தண்ணியைக் கொடுத்து, போகிற உசிரை, வச்சு வச்சுக் கொல்றே. நீ போ வெளியே'ன்னாங்க அம்மா. நானும் சும்மா இருக்கலை, 'ஏ பிசாசே, அந்த மவராசன் காசை வாங்கிப் பொளச்சேன். தண்ணி கொடுக்கிறேன். நீ சும்மாக் கிட'ன்னு சொல்லிப்பிட்டு நான் வெளியே வந்திட்டேன். புள்ளைங்களைக் கூப்பிட்டு, 'அப்பாக்கு ஆளுக்கு ஒரு வா தண்ணி ஊத்துங்க'ன்னு சொல்லிவிட்டு வந்திட்டேன்" என்று அழுதாள் சிங்காரம்.

சங்கரியும் நானும் வாயடைத்து நின்றோம்.

பிற்பகல் மூன்று மணிக்கு அழுகைச் சத்தம் கேட்டது. வாசலுக்கு

ஓடினோம்.

ஸ்ரீமதி அத்து வாசலில் விழுந்து அழுதுவிட்டு, தான் இனிமேல் ஸ்ரீமதியில்லை என்று காண்பித்துவிட்டு அலங்கோலமாக உள்ளே சென்றாள்.

சவம் புறப்பட்டது. ஏகக் கூட்டம். அப்பாமங்கலமே திரண்டு பின்னால் போயிற்று.

ஆற்றங்கரை முக்கில் குடியானவர் தெருவே திரண்டு நின்று கதறிக்கொண்டிருந்தது. தாய்கள் அழுததைக் கண்டு சேய்கள் சேர்ந்து கதறின.

சேரியிலிருந்து ஒரு கூட்டம் கூடி நின்று அழுதுகொண்டிருந்தது. அத்துவுக்கு வியாதிக் காலத்தில் சுச்ரூஷை செய்த, தோட்டி பேச்சிமுத்து மயானப் பாதையை ஒரு சருகில்லாமல் சுத்தம் செய்து வைத்திருந்தான்.

மனித வெள்ளம் மௌனமாக மயானத்தை நோக்கி ஊர்ந்தது.

அப்பாமங்கலத்தில் யாருக்கும் இப்படி நடந்ததில்லை. ஈமக்கிரியைகள் முடிந்தன.

ஒரு மாசம் ஆயிற்று.

அத்துவின் கடன் மூன்று லக்ஷமாம்! அவர் வாங்கின வீடுகள், நாலுவேலி நிலம் எல்லாம் கடன் வாங்கி வாங்கினவையாம். ஆறு வருஷ வட்டி விஷமாக ஏறியிருந்தது.

ஒரு மாசக் கடைசியில் ஆயிரம் தென்னையும், ஆயிரம் மூங்கில் கொத்தும் பத்துவேலியும் சேர்ந்து நிர்மாணம் செய்து வைத்த லக்ஷ்யம் இடிந்து விழுந்தது. ஒரு வீடு மிச்சம். மேல் படிப்பை முடிக்க அதையும் விற்க யோசனை செய்துகொண்டிருந்தான் பெரிய பிள்ளை.

“அவளைச் சந்தியிலே நிறுத்தி வைக்காட்டா என் பேர் அத்து இல்லை” என்று பாங்கியில் சொன்னாரே அத்து!

அத்து சாமர்த்தியசாலிதான்!

**காதம்பரி, 1950**

# பொட்டை

“பொட்டை, ஏ பொட்டை . . . . யாரு உள்ளார? பொட்டை இருக்கானா?”

“யார்றாது கட்டை?”

முதல் குரல் வாசலிலிருந்து வந்தது.

இரண்டாவது உள்ளேயிருந்து வந்த பதில். சன்னாசி, சாப்பிட்டுக்கொண்டிருந்தவன் ஆத்திரமாகப் பதில் கொடுத்தான்.

“ஏ பொட்டை?”

“யார்றா பய மவன்! உத்தண்டியாரு தத்துப்பய குரலால்ல இருக்கு? திமிரு பிடிச்ச கழுதை!” என்று சன்னாசி முணுமுணுத்தான்.

“ஏ சன்னாசி, காது கூடவா அடைச்சிப் போச்சு!”

“ஏண்டா?”

“ஏண்டாவா? ம்ஹும், யாருன்னு தெரியலே போல் இருக்கு!”

“தெரியுமே கட்டையின்னிட்டு!” என்று ஒரு புன்சிரிப்புடன் சன்னாசி வெளிப்பட்டான். அந்தப் புன்சிரிப்புக்கு என்ன பொருள் என்று தெரியவில்லை. புன்சிரிப்புக்கு பொருள் கொடுப்பது கண்தான். ஆனால் சன்னாசியின் முகத்தில் கண் இருந்த இடந்தான் இருந்தது.

கண் இல்லை. உண்மையாகவே அவன் பொட்டைதான்.

“கட்டையுமில்லை, மொட்டையுமில்லை!”

“என்ன சேதி?”

“பெரிய உடையாரு வரச் சொன்னாருடா! முள்ளு அறுக்கணுமாம். போறியா?

“சரி, போறேண்டா.”

“போறேண்டாவா? என்னடா, ‘டா’ எல்லாம் வலுத்துப் போச்சு. இன்னமும் யாருன்னு தெரிஞ்சுக்கலியாடா?”

“அதான், தெரியுதேடா, கட்டைன்னிட்டு.”

“யாரு?”

“அதான், புத்திகட்டை. இல்லாட்டி நேத்து ரவைக்கிப் பொறந்த பய இப்படிப் பேசுவானா? உத்தண்டியாரு வீட்டுத் தத்துச் சோறுல்ல இப்படிப் பேசச் சொல்லுது. நானும் பார்த்துக்கிட்டே இருக்கேன். வாற போதே, ‘பொட்டை’ன்னுக்கிட்டே வந்தே. அப்பறம் டாங்கிறே, டேய்ங்கறே. ஏண்டா தம்பி, நாலு வேலிப் பங்குக்குத் தத்துப் போயிட்டா, நாக்கைக்கூடப் போன போக்குக்கு நீட்டிக்கலாம்னு நெனச்சிட்டியாக்கும்! நீ ஒண்டிப்பயலாப் பொறந்திருந்தா, உன்னை எவண்டா தத்துக் கொடுத்திருப்பான்? அதுவும் உத்தண்டியாரு பொஞ்சாதிக்கு ஒரு தம்பி இருந்தான்னா, அவங்க தத்து எடுத்துக்க உட்டுப்புடுவாங்களா? என்னமோ தரையிலே கெடக்க வேண்டிய பய, பாயிலே கிடக்கே! அதுக்காக, நிதானங்கூடத் தலைகீளாப் போயிடணுமா? மரியாதையைக் கூடக் காத்திலே பறக்க விட்டுரணுமா? ஏண்டா தம்பி, உங்கப்பன் பாட்டனை எல்லாம் தெரியாதுன்னு நெனச்சுக்கிட்டா பேசுறே? எனக்கு வயசு என்னா ஆச்சு தெரியுமா? நல்ல கண்ணோட போய்க் கும்மாணத்துலே ரெண்டு மாமாங்கம் பாத்தேன். பொட்டக் கண்ணோட அஞ்சு மாமாங்கம் பாத்தாச்சுடா, தம்பி. அடாவாம்; டேய்யாம். நுக்கினியூண்டு பய நீ. மட்டு மரியாதையெல்லாம் பணத்துக்குத்தான் உண்டுன்னிட்டு எண்ணிக்காதே. வயசுக்கும் உண்டு, தெரியுமில்ல? பொட்டை பொட்டைன்னு கூப்பிடுறியே, யாரு பொட்டை? வயசு வந்தவனெத் தக்குப் பிக்குனு பொட்டைக் கார்வார் பண்றியே. நீ பொட்டையா, நான் பொட்டையா? ஏண்டா எல?”

“சர்த்தாண்டா, சரி, நீ பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறியே என்ன? கொட்டிக் கொட்டியளந்தா பொட்டைக் கண்ணு தாமரைக்கண்ணாப் போயிடும்னு நெனப்புப் போலேருக்கு.”

“தம்பி, நிறுத்திக்க. இன்னமேப் பேசினியோ சின்னத்தனமாப் போயிடும் . . . ம்! உன்னைச் சொல்லி என்ன? உத்தண்டியாரு உன்னைப் போய்த் தத்து எடுத்துக்கிட்டாரே! உலகத்துலே புள்ளேயே இல்லே பாரு. தூது வந்த பய சேதியைச் சொல்லிப்பிட்டுப் பளிச்சின்னு போவானா! வம்பு வளத்துக்கிட்டே நிக்கிறியே, என்னடா? போடா, வாரேன்னு சொல்லுடா.”

“நான் தூது வல்லேடா. வய வெளிக்குப் போறேன். போறப்போ கண்டு சொல்லச் சொன்னாரு உடையாரு; சொன்னேன். திருதராட்டிர மவாராசா பாரு, உங்கிட்டத் தூதுல்லெ வருவான். களுதை பொட்டையா

இருந்தாலும்னிட்டு என்னமோ சொல்லுவாங்களே, அப்படீல்ல இருக்கு கதை!” என்று சொல்லிக்கொண்டே உத்தண்டியாரின் தத்துப் பிள்ளை முத்துக்கிட்டன் போய்விட்டான்.

“பய மவனுக்கு ஆண்மையைப் பாத்தியா? தப்புப் பண்ணிட்டேன். போனாப் போவுது. மாப்புவிட்டுடுங்கன்னு சொல்லிட்டுப் போகவேண்டிய பய, கனவெறைப்பால்லெ போறான்? யாருடா தம்பி அங்கே? சுப்பிரமணியனா!”

“ஆமாம், தாத்தா!”

“கேட்டுக்கிட்டுத்தானே இருந்தே. உத்தண்டியார் கொள்ளி போட மவன் புடிச்சார் பாத்தியா? தத்தாரிப்பய. என்னை வந்து பொட்டைங்கிறான்!”

“உடுங்க தாத்தா. தொலையறாரு, எல்லாம் வயசானாச் சரியாப் போயிடுது.”

“ஏன், இப்ப என்ன வயசு கொறைச்சலோ அந்தப்பயலுக்கு? இருபத்தெட்டு ஆவுதாம். பய படுகைப் பச்சை மூங்கி மாதிரி வளர்ந்திருக்கானாம். வயசானாச் சரியாய்ப் போயிடுங்கிறியே. பொட்டைப் பயன்னு சொன்னானே, அது மட்டும் சரியா?”

“பொட்டைன்னு சொல்லாதே, கண்ணு குருடு, கண்ணு இல்லாதவரு, பாவம்னு சொன்னா சும்மாத்தானே இருப்பீங்க?”

“யாரு? நானா சும்மா இருப்பேன்? எனக்குக் கண்ணுத் தெரியறாப்லே உங்களுக்கெல்லாம் தெரிஞ்சாப் போதும்டா. இந்த எம்பத்திரண்டு வயசுக்கட்டை நடக்கிற நடை அவன் நடப்பானா? இல்லே, நீதான் நடப்பியா? சொல்லேன். ஒரு அடி அடிச்சேன்னா இந்தக் கையாலெ, அவன் தாங்குவானா? இல்லெ நீதான் தாங்குவியா? சொல்லேன். போன வருசம் மன்னார்குடிக்குப் போயிட்டு வந்தேனே, இந்தத் தடிதானே கூடவந்திச்சு. ஒரு பயலைப் பாத்து, “யேப்பா, கண்ணு குருடு, கொஞ்சம் அப்பாலே கொண்டு விட்டிடேன்னு சொன்னதுண்டா? இனிமேத்தான் சொல்லப்போறேனா? யோகாம்பா செத்துப்போயி வருசம் முப்பத்தேழு ஆச்சு. அன்னைலேந்து இப்ப வரைக்கும் நான்தான் பொங்கித்திங்கறேன்! எந்தப் பயமவடா ஆக்கிப் போட்டா? நான் சம்பாரிக்கிறதுதான் உன்னாலெ சம்பாரிக்க முடியுமா? என்னாடா தம்பி, பேசாம நிக்கிறே. இப்படி வாயேன், ஒரு சேதி.”

சுப்பிரமணியன் அருகில் நெருங்கினான். நெருங்கியதுதான் தாமதம்,

“ஐயையோ, தாத்தா, விடுங்க தாத்தா” என்று வலி பொறுக்க முடியாமல் கூச்சல் போட்டான். தாத்தாவின் எலும்புக் கையின் இரும்புப் பிடியில் அவனுடைய ஐந்து விரல்களும் சிக்கி நொறுங்கிக்கொண்டிருந்தன. தாத்தா பிடியைத் தளர்த்தினார்.

“இல்லேடா தம்பி. என்னைப் பாத்து பொட்டைப்பயன்னு சொல்றானே! பொட்டப்பய பிடியா இதுன்னு கேக்கறத்துக்காவத்தான் பிடிச்சேன். எனக்கே தெரிஞ்சுக்கணும் பாரு” என்று பொட்டை முகம் புன்முறுவல் புரிந்தது.

“போங்க தாத்தா, திருதராட்டி இரும்புத் தூணைக் கட்டிக்கிட்டாப் போலத்தான் இருக்கு. உங்க மாதிரி ஆளுங்களுக்கெல்லாம் நெஞ்சு இப்படித்தான் இருக்கும்போல் இருக்கு! யேப்பப்பா, மொளவா அரைச்சுத் தடவினாப்பலல்ல இருக்கு.”

சன்னாசி சிரித்தான். “பார்றாலே! பேசிக்கிட்டே நளுவிப்பிட்டானே பயமவன். கிட்ட நின்னுல்ல பேசியிருக்கணும்.”

சன்னாசிக்கு எந்தத் திட்டையும், எந்த வசவையும் பொறுத்துக்கொள்ள மனத்தில் வலுவுண்டு. ‘பொட்டை’ யென்றால் மட்டும் ரோசம் பீறிக்கொண்டு வந்துவிடும்.

மேலத்தெருவில் பத்துப்பன்னிரண்டு குடிசைகள் இருந்தன. மேலக்கோடிக் குடிசையில்தான் சன்னாசி எண்பத்து நான்கு வருஷமாக வாழ்ந்து வருகிறான். அவனுக்கு விவரம் தெரியும் போது ஆடு தின்னும் பொட்டலாகக் கிடந்த திட்டு இப்போது வெயிலே அறியாத புளியந்தோப்பாக மாறியிருக்கிறது. தெரு வாசலைத் தவிர மற்றப் பக்கங்களெல்லாம் ஒரே நிழல்தான்.

சிறு பயலாக இருந்தபோது உடையார் வீட்டு மாடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான் சன்னாசி. பதினாறு வயதுவரையில் அந்த வேலைதான் அவனுக்கு. அந்தச் சித்திரை மாதம் வெயில் தீயாகக் கொளுத்திற்று. தெருவுக்குப் பின்னால் இருந்த வெகு காலத்து வேப்பமரங்கூட இலை பழுத்துச் சருகாகி, முக்கால் மரம் பட்டுப்போய்விட்டது. வேம்பு வாடுவதென்றால் எப்படிப் பட்ட வெயிலாக இருக்க வேண்டும்! சன்னாசிக்குப் புளியம் பழம் பலாப்பழம் மாதிரி. பத்து அரைக்கல்லை எடுத்து வீசினால் ஒன்றரைத் தூக்குப் புளியங்காய் சடசடவென்று தரையில் கொட்டும். பொழுது சாய்ந்து மாடுகளைத் திரும்பி ஓட்டிப் போவதற்குள் அத்தனை புளியும் அரைக்கால் படி

கல்லுப்பும் சன்னாசி வயிற்றில் ஜீரணமாகிக்கொண்டிருக்கும். அமாவாசையன்று சன்னாசி அப்பனுக்கு விரதம் இருந்து பொழுது சாயத்தான் சாப்பிடுவான். சோறு அப்போதுதான் ஆக்குவாள் ஆத்தாள். சன்னாசிக்குக் கூடவா பட்டினி! அரைக்கல்லின் உதவியால் தூக்குப் புளியைப் பலகாரம் பண்ணிவிட்டான். வெயிலில் தலைமயிரே எரிந்துவிடும் போல் இருந்தது. உடம்பெல்லாம் எரிந்தது. நன்றாக அமிழ்ந்து முழுக வேண்டும்போல் இருந்தது. தண்ணீரைத்தான் காணோம். மேலத்தெருக் குட்டை பாளம் பாளமாக வெடித்து வறண்டு கிடந்தது. கீழத்தெருக் குட்டையில் இருந்த முழங்கால் நீரில் உத்தண்டியார் உடையார் வீட்டு எருமைகள் புதைந்து தண்ணீர்ச் சூடு தாங்காமல் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தன. குளிக்க இடம் எங்கே? பிடாரி கோயில் ஆலந்தோப்புக்குப் போனான் சன்னாசி. ஆல நிழலில் இருந்த கிணற்றில் இறங்கினான். அப்பாடா! ஜில்லென்றிருந்தது தண்ணீர். துடைமட்டுத் தண்ணீர்தான். உட்கார்ந்தால் தலை முழுகும். ஐந்தாறு நாழிகை அப்படியே கிடந்தான். அல்லி இலைகளைப் போட்டுப் படுத்தாற் போல ஜிலுஜிலுவென்று இதமாக இருந்தது.

“எலே, யார்றா அது?” என்று இருள் கவிகிற நேரத்திற்கு ஒரு குரல் கேட்டது.

“ட்ரூவ், நான்தான் தண்ணிப் பிசாசு” என்று குரலை மாற்றிப் பயங்கரக் குரல் கொடுத்தான் சன்னாசி.

“ஓகோ, தண்ணிப் பிசாசா! தண்ணிப் பிசாசுங்களெ விரட்ட இந்தத் துணி தோய்க்கிற கல்லுதான் ஆயுதம்” என்றார் பூசாரி. “ஏ பிசாசே! போடட்டுமா இந்தாப் பாரு கல்லை?”

சன்னாசி திடுக்கிட்டு நிமிர்ந்தான். தலை நொறுங்கியே போய்விட்டது மாதிரி இருந்தது. சாலையிலிருந்து கிளம்பி, பிடாரி கோயில் துணி தோய்க்கிற கல்லாக மாறிய அம்புக் குறியிட்ட சர்க்கார் வைத்த கருங்கல் கிணற்றுக் கட்டையில் பாதிக்கு மேல் நீட்டி நின்று விழக் காத்துக்கொண்டிருந்தது.

“ஐயையோ, போட்டுராதையா, ஐயா ஐயா, ஏறிடறேன்” என்று பயக்குரல் கெஞ்சிற்று.

“யார்றா பய, சன்னாசியா, இஞ்ச வாடாலே” என்று ஏறினவன் கையை உடும்பாகப் பிடித்துக் கொண்டார், பூசாரி.

“என்னடா பண்ணிட்டு இருந்தே?”

“குளிச்சேன், மாமா!”

“டெலே எருமை, முழுகிக்குளிக்க என் கோவில் கிணற்றையா பாத்தே? ஏண்டாலே!” என்று மாக்கு மாக்கு என்று முதுகில் குத்துகளாகச் சொரிந்தார். வேறு யாரும் தாங்க முடியாத குத்து.

“எங்க அப்பன்கிட்டே சொல்லாதீங்க மாமா, என்னை அப்படியே பலி வச்சிடுவாரு, உங்களுக்கு அடிமையாகக் கிடக்குறேன்” என்று காலில் விழுந்தான் சன்னாசி.

“சீச்சீ, களுதே! ஓடு களுதே.”

சன்னாசி எடுத்தான் ஓட்டம்!

கொளுத்தும் சூட்டில் அலைந்த அலைப்பு, புளியங்காய்ப் பலகாரம், ஐந்து நாழிகை கிணற்று முழுகல் – சன்னாசி காய்ச்சலென்று படுத்தான். ஐந்தாறு நாள் காய்ச்சல் அடித்தது; உடலெல்லாம் சிவந்தது; முத்துக்கண்டது. பிறகு ஒவ்வொரு முத்தும் பெரிதாயிற்று. ரத்தின வைத்தியர், “அடி தாயே, காப்பாத்தணும்; யப்பா இது மாரியாத்தா விளையாட்டு. அம்மை, பெரியம்மை. ஆமாம், நான் போறேன்” என்று வந்த சுருக்கில் எழுந்து போய்விட்டார். வேம்பு வாடுகிற வெயிலில் ஊர் முழுவதுமே பெரிய அம்மை சூறையாடிக் கொண்டிருந்தது. சன்னாசியின் கண்ணைப் புண் மறைத்தது. இறக்கம் கண்ட போது, கண்ணைத் திறக்க முடியவில்லை.

“ஆத்தா, ஒண்ணுமே தெரியலியே!” என்றான். கண் திறந்துதான் இருந்தது; ஆத்தாள் பார்த்தாள். ஓங்கி வயிற்றிலே அடித்துக்கொண்டாள். அலறினாள். பிள்ளைக்குக் கண்ணிரண்டும் போய்விட்டன. போன கண்கள் திரும்பி வரவில்லை. போயே போய்விட்டன. கண்கள் இருந்த இடத்தில் இரண்டு ஆழ்ந்த குழிகள்தாம் மிஞ்சியிருந்தன. புருவத்திலிருந்து சுவரெடுத்தாற் போல் செங்குத்தாக விழுந்தன இமைகள். சவத்தின் முகத்தைக் கழுத்தில் ஒட்ட வைத்தாற்போலத்தான் இருந்தது.

சன்னாசி நல்ல உயரம். இப்போது பாக்கு மரத்திற்கு முட்டுக் கொடுத்ததுபோல அவனத்தனை உயரத்திற்கு ஒரு கழியைத் தேடிக் கொண்டான். அந்தக் கழி இன்னும் அவனை விட்டுப் பிரியவில்லை. அதுவும் கூலி, சோறு கேட்காமல் ஐம்பத்தெட்டு வருஷம் சேவகம் பண்ணிவிட்டது அவனுக்கு. உயிர் இருந்தால் வேலையிலிருந்து ஓய்வு

பெற்று மூன்று ஆண்டு ஆகியிருக்கும். கழி சாமானியக் கழியில்லை. மூங்கில் கழி. கால்கட்டை விரலால் ஒன்றரை விரல் பருமன் இருக்கும். சன்னாசியின் மோவாயைத் தொடும். அதாவது குறையாமல் நாலு முழம். கண் இரண்டு போனதற்கு மாற்றாகக் கண் இரண்டாயிரமாக அது மாறிவிட்டது. எத்தனை குருடர்கள், கைக்கோலின் ஒரு நுனியைப் பற்றிக் கொண்டு, பெயர் தெரியாத ஆளிடம் இன்னொரு கோடியைக் கொடுத்து சாலையையும் ஊரையும் கடக்கிறார்கள்! சன்னாசியின் கைத்தடி இந்தக் கபோதித் தடிகளைப் பார்த்துத் தனக்குள் சிரித்துக்கொண்டது. குருடனுக்கு ஒரு கோலாம், அந்தக் கோலுக்கு ஓர் ஆளாம். தனக்கோ தன்னுடைய சன்னாசிக்கோ இந்த இழிவைத் தேடித்தர அது விரும்பவில்லை. அவனுக்கு ஓர் ஆண்மையைக் கொடுத்தது அது! அது வந்த நாளாக அவன் எந்த மனிதனையும் எதிர்பார்த்ததே இல்லை.

கண் போனதற்காக எந்த வேலை நின்றுவிட்டது அவனுக்கு?

அறுபது வயது வரையில் தடியைக் கரையில் வைத்து விட்டு ஆற்றில் நீச்சல் அடிப்பான். ஆறு வற்றிய கோடையில் கீழ்க்குளத்தை நீச்சலடித்து, இரண்டு பண்ணிவிடுவான். தடியை ஊன்றிக்கொண்டு இருபத்தொரு வயல் கடைகளை வரப்பில் கால் இடராமல் கடந்து, அப்பன் பயிர்ச்செலவு செய்த அரசாணியிலும் ஓலையாத்தானிலும் இறங்கிக் களை பிடுங்குவான். அப்படியே சுமந்த கட்டாக ஒரு கட்டுப் புல் அறுத்துச் சுமந்து வந்து மாட்டுக்குப் போடுவான். காலையில் அலக்கை எடுத்துப் பிள்ளையார் கோவில் அரச மரத்தில் தழை பிடுங்கி ஆட்டுக்குப் போடுவான். அப்பன் வாதம் வந்து இரண்டு மாதம் படுக்கையாகக் கிடந்தபோது நிலத்தை உழுதது யார்? அவன்தான்! ரெயிலில் வேலை பார்க்கிற ஆலங்குடியார் மகன் ஆறுமாதத்திற்கு ஒரு முறை நிலத்தைப் பார்க்க வருவான். பதினாலு வருஷமாகியும் இன்னும் தன் பங்கு எங்கே இருக்கிறதென்று அவனுக்கு நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. “தம்பி, உங்க லட்சுமணன் எங்கே இருக்கு? சொல்லு பார்ப்போம்” என்று அவனைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பான். இந்த வெட்கக்கேட்டைச் சிரித்து மழுப்பி முழுங்குகிற ஆலங்குடிப் பையன் மூஞ்சி சன்னாசிக்கு வெட்ட வெளிச்சமாகத் தெரியும். “இஞ்சேருந்து மூணாவது கட்டளை, தம்பி. உடமைக்காரங்கள்ளாம் இப்படியிருக்கிறீங்க” என்று சன்னாசி, தெரியாத கண்ணைச் சிமிட்டிச் சிரிப்பான். ஆலங்குடிப் பையனுக்கு எல்லா வயலும் தன் வயல் மாதிரிதான் இருக்கும்.

சன்னாசி அலக்குக் கழியைப் பிடித்து மாமரத்தில் ஏறித் தடவினால்

ஒவ்வொரு வடுவையும் கையால் அந்த அலக்கு மூலமாகவே பார்த்த அதிசயத்தை மனிதன் செய்கிற வேலையென்றா சொல்ல முடியும்? அவன் மரத்தில் ஏறி உலுக்கின புளியங்காயை எல்லாம் சேர்த்தால் நாலு வைக்கோல் போர் இருக்கும்.

கடைசியில் சர்க்காரே அவன் பார்வையை ஒப்புக்கொண்டது. அதாவது மணியக்கார வாண்டையார் அவனை வெட்டியானாகப் போட்டு ஏழரை ரூபாய் சம்பளம் கொடுத்தார். விடிந்து எழுந்து, ஒன்பது கல், சாலையோடு நடந்து தாசில்தாரிடமிருந்து தபால் வாங்கி வருவான். நாற்பது வயது வரையில் அந்த உத்தியோகம் நிலைத்துவிட்டது. மணியக்காரர் வேட்டியை ஒழிந்த நேரத்தில் தோய்த்துப் போடுவதற்கும் அவன் முகத்தைச் சுளிக்கவில்லை. இரண்டு மைலில் நெல் மிஷின் இருந்தது. நாலு நாளைக்கொரு முறை குடமுருட்டி ஆற்றைக் கடந்து ஆறு மரக்கால் நெல் அரைத்துக்கொண்டு வந்துவிடுவான்.

அவ்வளவும் செய்கிறவனைப் பொட்டையென்று யார் சொல்வது? ஆகவே, வெட்டி வேலை கிடைத்த பிறகு யோகாம்பாளைக் கட்டிக் கொடுக்க அவள் அப்பன் தயங்கவில்லை. ஒரு கால் விந்தல் அவளுக்கு. சன்னாசி, “ஆமாம் சதிராடப் போறாளா? சரிதான்னு போவியா?” என்று அவளைக் கட்டிக்கொண்டுவிட்டான். அவனுக்கு உள்ளம் வெற்றியில் விம்மிற்று. அது யாருக்குத் தெரியும்? ஜன்னல் தான் மூடியிருக்கிறதே! அது யோகத்திற்குத்தான் தெரிந்தது. வாசற்கதவைச் சாத்திவிட்டு, யோகம், நான் ஒண்ணு சொல்றேன். கோவப்படக்கூடாது. நில்லு சொல்றேன் இப்படி. இந்த பொட்டையனை ஒரு புருசனா நினைச்சு இந்த வீட்டுக்கு விளக்கேத்தி வச்செ பாரு! நான் சும்மா இருந்திடறதா? இந்த விளக்குத்தான் என் அறிஞ்ச தெய்வம்!” – என்று நெருஞ்சாண்கிடையாக விழுந்து அவள் காலைப் பற்றிக்கொண்டான்.

“அத்தான், அத்தான்” என்று பதறிப்போய் அவள் அவனைத் தூக்கினாள். அவன் தலை நனைந்து சுட்டது; அவள் காலும் நனைந்து சுட்டது. உடல் நடுங்கிற்று. “அத்தான், கண் இருந்தா உலகத்தையே ஆண்டிருப்பீங்க அத்தான், அதான் போயிடிச்சு” என்று நெஞ்சு விம்ம விம்மச் சொன்னாள் அவள்.

கலியாணம் ஆன இரண்டு வருஷம் கழித்து வந்த மாமாங்கத்திற்கும், அடுத்த மாமாங்கத்திற்கும் அவளோடு கும்பகோணம் போய்வந்தான் சன்னாசி. அதற்கும் அடுத்ததற்கு அவன் தனியாகத்தான் போகவேண்டியிருந்தது. யோகாம்பாள் அணைந்துவிட்டாள். நல்ல

வேளையாகப் பிள்ளை குட்டி பிறக்கவில்லை. “மச்சான், மச்சான்” என்று அவன் அணைத்துக் கொண்டிருந்த அந்த ஐயம்பேட்டை மூங்கில் தடி மட்டும் அவனோடு இருந்தது. அந்த மச்சானோடு அவன் மன்னார்குடித் தேர் பார்த்து வந்தான். எட்டுக்குடி கடா வெட்டுப் பார்த்து வந்தான். மாயவரத்துக் கடைமுழுக்குப் போட்டு வந்திருக்கிறான். ஆர்யமாலா சினிமாக்கூடப் பார்த்திருக்கிறான். அப்போது மட்டும் அந்தத் தடி பேசவில்லை. சுப்பிரமணியன்தான் ஒவ்வொன்றாக விளக்கவேண்டியிருந்தது. வாயில்லையே என்று அந்த தடி அப்போதுதான் வருந்திற்று! ஆனால் இன்னும் நாலு மைல் சுற்றில் காக்காமுழியான் அரிச்சந்திர நாடகமோ, ஐயனார் நாடகமோ எது போட்டாலும் சன்னாசிக்கு இருப்புக் கொள்ளாது. ‘மச்சானை’ மட்டும் இட்டுக்கொண்டு பார்த்து விட்டு வந்துவிடுவான்.

உடையார் வீட்டுக் குழம்பில் கொதிக்கிற புளி அவன் அரிவாள்மணையில் அமர்ந்து கொட்டை எடுத்த புளிதான். அவர் மாந்தோப்பு வேலி அவன் அறுத்துக் கட்டின முள்தான். மணியகாரர் வீட்டிலேயும் இதே செய்திதான்.

சன்னாசிக்கு முள் அறுக்கிறாப் போலவே இல்லை.

“நானா பொட்டை? பொட்டைதான்! கண்ணு இல்லை தான். எத்தினியோ பேருக்குத்தான் கண்ணு இல்லே. கணக்கப்புள்ளே சேரிக் கார்டெல்லாம் வாங்கி, சக்கரை வாங்கிக்கிறாராம். அதைப் பார்க்கக் கண்ணு இல்லே ஊராருங்களுக்கு. அதே கணக்குப்பிள்ளெ ஊரிலே கச்சிகட்டி ரண்டு பண்றான். மன்னார்குடியாரு மேலே மைனர்வியாச்சியம் போடறான்னு தனபாலுப் பயல் இருக்கானே – திருட்டுத் தத்தாரிப்பய அவனெக் கிளப்பிட்டு அவுரை வவுரு எரிய எரிய அடிக்கிறான் இந்தச் சேதுராயன். அவனெப் பார்க்கச் சாமிக்கே கண்ணில்லெ. நான் பொட்டையாம் . . .” என்று மூச்சு விடாமல் பொருமிக் கொண்டிருந்தான்.

முள்ளுக்கட்டைத் தலையில் தூக்கி வரும்போது கண்ணுக்குள் தெரிந்த சிவப்பு மறைந்து கறுத்துவிட்டது. அந்தி கூட மங்கி இருள் கவ்விவிட்டதை அறிந்து, சன்னாசி ‘மச்சானை’ மூன்றாம் காலாக வைத்து நடையை எட்டிப் போட்டான்.

காற்றுக்கூட உறங்கிக்கொண்டிருந்தது. கார்த்திகை மாதக்கடைசி. முன்பனிக் குளிர். லேசாக உடலைச் சிலிர்க்க அடித்தது.

“நானா பொட்டப் பய? கண்ணிருந்தா மட்டும் போதுமா?

வார்த்தையிலே சுத்தம், நெஞ்சிலே சுத்தம், வாணாமான்னு கேக்கறேன்! கண்ணில்லாட்டி என்ன? எட்டுக்குடிக் கடா வெட்டுக் கண்ணில்லாமத்தான் பாத்தேன். நேரிலே பாக்கறாப்பிலேதான் இருந்திச்சு. இந்த ஊர்லெ எவன் எட்டுக்குடிக்குப் போயிருக்கான்? உடையாரே போனதில்லையே! எத்தனையோ திருவிளா, எத்தனையோ நாடகம், கண்ணிருக்கறவன் எவன் இவ்வளவு பாத்திருக்கான்? பொட்டைப் பயலாமில்ல?"

இடதுகை தலையிலிருந்த முள்ளுக் கட்டைப் பார்த்துக் கொண்டிருந்தது. வலதுகைத்தடி தெருவுக்குத் திரும்பும் வாய்க்கால் மதகைத் தட்டிற்று. வாய்காலைக் கடந்தவுடன் மணியக்காரர் சத்திரம். எப்போதும் அங்கே கூட்டம். அங்கே பரதேசி, வழிப்போக்கு என்று இரண்டு மூன்று பேராவது தங்கி, செங்கல்லில் தீ மூட்டி சோறு ஆக்கிக்கொண்டிருப்பார்கள். ஆனால் முன் கொட்டகை இரண்டு நாளைக்கு முன் விழுந்து விட்டதாம். திண்ணையை அடைத்துக்கொண்டிருக்கிறதாம். அதனால் தானோ என்னவோ, அங்கே பேச்சு மூச்சில்லை. சத்திரத்தைக் கடந்தான் சன்னாசி. பிள்ளையார் கோவிலுக்கு முன்னால் கும்பிட நின்றான். கோயிலுக்குப் பின் சுவரை ஒட்டினாற்போல் தஞ்சாவூரார் தோட்டத்தில் பாதிரிமரம் வளர்ந்திருந்தது. மரத்துக் கவட்டில் திடீரென்று குருவிக் கூச்சல் கேட்டது. அங்கு ஏதோ குருவி கூடு கட்டியிருந்ததாம். சுப்பிரமணியன் போன வெள்ளிக் கிழமைதான் சொன்னான்.

எல்லாப் பறவைகளும் ஒடுங்கி உறங்குகிற வேளை. ஏன் இந்தக் 'கிசுமுசு' என்று சன்னாசிக்குச் சந்தேகம் வந்து விட்டது. முள்ளுக் கட்டைக் கோயில் கதவுக்கு முன்னால் வழியடைத்துக் குத்தினாற்போல வைத்தான். பேச்சு மூச்சில்லை. கோயிலுக்குப் பின்னால் பிராகாரத்தில் யாராவது இருக்கிறானோ என்று நெஞ்சில் அரிப்பு எடுத்தது! அவ்வளவுதான், சரசரவென்று காலடி ஓடிற்று.

ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான் சன்னாசி.

"யார்றாது? வெளியே ஓட முடியாது. வளியிலே முள்ளுக்கட்டுக் கிடக்கு."

காலடி பின்னால் நகர்ந்தது. நெருக்கிக்கொண்டே நகர்ந்தான். பிராகாரம் மிகவும் குறுகல். இரட்டை நாடியாக இருந்தால் ஓர் ஆள்தான் போகலாம். சுவரை நோக்கிப் போனபோது ஒரு மனிதக் கால் கையில் பட்டது. குரங்குப்பிடியாக அதைப் பிடித்துவிட்டான் சன்னாசி.

"எலே, யார்றா பய? தப்பிச்சிக்கிட்டு ஓடலாம்னா பாக்கறே? வாடா

இப்படி" என்று காலுக்கு உடைமைக்காரனைக் கீழே தள்ளி அழுத்தினான். அதற்குள் வாசலில் வளையல் சத்தம் கேட்டது. முள்ளுக்கட்டு, சற்று நகரும் ஓசையும் வந்தது. அதுவும் சன்னாசியின் காதில் விழுந்தது. "ம் . . . ஹ்ம். அப்படியா சேதி? யார்றா பய நீ, சொல்லு."

"மாமா மாமா, இரையாதீங்க. நான்தான். நான்தான் . . ."

"அட, நீயா! அட பாவிப் பயலே! உத்தண்டியாரு காதிலே உளுந்திச்சோ, நாக்கைப் பிடுங்கிச் செத்துப்பூடுவாங்களே. மானிடா அவரு."

உத்தண்டியாரின் தத்துப்பிள்ளை முத்துக்கிட்டனின் உயிரும் உடலும் இருண்டுகொண்டிருந்தன.

"ஏலே யாருடா அது குட்டி? பயமவ ஓடிப்போயிட்டாளே. உள்ளதைச் சொல்லிப்பிடு, செஞ்சத்தைச் சொல்லிப்பிடு."

"மாங்குளத்தான் மக."

"யாரு, காளிமுத்தாடா! அடப்பாவி!"

"ஆமாம், மாமா மாமா!" – பாம்பு வாயில் பட்ட தேரை மாதிரி முனகினான் முத்துக்கிட்டன்.

"டெலே, சேரியிலே பூந்து விளையாட ஆரமிச்சிட்டியா? ஏண்டாலெ, யார்றாலெ பொட்டை? தெய்வம் குடியிருக்கிற இடமாப் பாத்து இந்த விளையாட்டு விளையாடலாம்னிட்டு வந்தியாடா? தெய்வம் என்னமாடா இருக்கும் இஞ்ச? ஏண்டாலெ, தெய்வம் இருக்கிறதே தெரியலியே உனக்கு? ஏண்டாலெ, யார்றா பொட்டை? நானா, நீயா? அக்கிரமக்காரக் களுதெ . . . இந்தத் தொண்டைதானே சொல்லிச்சி, பொட்டைன்னிட்டு! இப்படி நசுக்கினா என்னாடா ஆகும்?"

கழுத்துப் புடைத்து மூச்சுவிட முடியாமல் மரணக் குரல் கொடுத்தான் முத்துக்கிட்டன். பிடி தளர்ந்தது.

"யார்றா பொட்டை, சொல்லுடா!"

"நான்தான் மாமா, நான்தான் மாமா, என்னைக் கொன்னுடாதிங்களேன் . . . மாமா, மாமா, தாங்கலியே! இனிமே சொல்ல மாட்டேன். ஐயோ, ஐயோ!" என்று அழுதான் பயல். வலதுகைக் கட்டை விரலைப் பின்னுக்கு வளைத்து ஒடித்துக்கொண்டிருந்தான் சன்னாசி.

“ஐயோ, அப்பா, மாமா மாமா!” செத்துப் போய் விடுவான்போல் இருந்தது.

“வாடா இப்படி, உளுடா கால்லெ.”

காலில் விழுந்தான் அவன்.

“சீச்சீ களுதெ, என் கால்லெ வாணாம்டா, இந்தத் தெய்வத்துக் கால்லெ உளுடா. மறுபடியும் இந்தக் கல்லுலெ வந்து பூந்துக்கன்னு அவரைப் பார்த்து அளுடா.”

முத்துக்கிட்டன் மரம் மாதிரி விழுந்தான். இன்னும் வலது புஜம் சன்னாசியின் பிடியிலேதான் இருந்தது.

“சொல்றாலே, இன்னமே இதையெல்லாம் செய்யலேன்னு சொல்லு. யாரையும் பொட்டைன்னு சொல்லலேன்னு சொல்லு.”

“இல்லை, இன்னமே சொல்லலே! உங்களை ஒண்ணும் சொல்ல மாட்டேன்.”

மறுபடியும் சன்னாசியின் காலில் விழுந்து கெட்டியாகப் பற்றிக் கொண்டான் முத்துக்கிட்டன்.

“மாமா, உங்களைக் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். அப்பாரு கிட்டச் சொல்லி, ஊரிலெ சொல்லி என் மானத்தைப் போக்கிடாதிங்க.”

“இந்தப் பாரு, இன்னம் மூணு மாசம் இந்த ஊர்லெ தலைகாட்டப்படாது, தெரியுதா? ஏண்டாலெ, கலியாணத்துக்கு இருக்கற பொண்ணையா கெடுக்க வந்தே! ஓடிப் போயிடு உங்க ஆயி ஊட்டுக்கு. திருவாரூரை விட்டு, மூணு மாசத்துக் குள்ளார அசைஞ்சேன்னு தெரிஞ்சிச்சோ, உயிரை எடுத்துப்பிடுவேன்.”

“போயிடறேன் மாமா, நாளைக்குக் கருக்கல்லியே போயிடறேன். எனக்கு வெளக்கு ஏத்தி வைங்க, மாமா” என்று அழுதான் முத்து.

“தொலைடா போ . . . ஏலே, எங்க நழுவறே, ஏ பொட்டைப் பயலே, முள்ளுக்கட்டைத் தூக்கித் தலையிலே வச்சுட்டுப்போடா, பொட்டைப் பயலே” என்றான் சன்னாசி!

முள்ளுக்கட்டைத் தூக்கிவிட்டான் முத்துக்கிட்டன்.

“இன்னமே ஒளுங்கா இர்றா, பொட்டைப் பயலே. உத்தண்டியாரை

நொந்து சாக அடிச்சிப்பிடாதே" என்று அவனைத் திட்டிக்கொண்டே சன்னாசி நகர்ந்தான்.

**பொன்னி, 1953**

# தவம்

“சரிதான் போய்யா; என்னமோ அந்தப் பொண்ணு கொஞ்சம் சேப்பாயிருக்கு. நீ அதைப் பார்த்து மயங்கறே. உன் மவனுக்குத் தகுந்த பொண்ணா அது? சேப்பா இருந்தா ஆயிடிச்சா?”

“ஏண்ணே, சேப்பு ஒரு அழகு, சூடு ஒரு ருசீன்னு சும்மாவா சொல்றாங்க?”

“சொல்லட்டுமே; சேப்புத்தான் அழகுன்னு சொல்லலியே. சேப்பாயிருந்தாப் போதுமா? முகத்துலே களை குறி ஒண்ணும் வாண்டாமா? நம்ம வகையராவிலே டில்லிமட்டம் மாதிரி பொண்ணுங்கள்ளாம் இருக்கே. அதெல்லாம் விட்டுட்டு, இதைப் போய் எடுக்கிறியே! பூன்னு ஊதினா ஒடிஞ்சு விழுந்திடும். குச்சி உடம்பு, கூனல், குச்சிக்காலு, உள்ளங்காலு சப்பை, தண்ணியை மிதிச்சிட்டு அந்தப் பொண் நடந்து வரபோது காலடியைப் பார்த்திருக்கியா? உள்ளங்காலு முளுக்க அப்படியே சொத்துனு தரையிலே பதிஞ்சிருக்கும். என்னமோ செல்லூர்ச் சொர்ணாம்பா கெட்டுப் போயிட் டாப்பலே பேசுறியே!”

அடுத்த மேஜையில் உட்கார்ந்து டீ குடித்துக் கொண்டிருந்த கோவிந்த வன்னிக்குத் தூக்கிவாரிப் போட்டது. திரும்பிப் பார்த்தான்; அந்தப் பெயரைச் சொன்ன மகாராஜன் யாரென்று. ஒரு க்ஷணம் பிரமை தட்டினாற்போல உட்கார்ந்திருந்தான். பத்து வருஷம் ஆகிவிட்டன இந்தப் பெயரைக் கேட்டு. அவன் நெஞ்சை ஆட்கொண்டு அவனை ஊக்கிக்கொண்டிருந்த அந்தப் பெயரை இந்தப் பத்து வருஷ காலத்தில் இரண்டாவது மனிதன் ஒருவன் சொல்லி அவன் கேட்கவில்லை. இடைவிடாமல் அவனுடைய அந்தரங்கத்தை நிறைத்து நின்ற அந்த வனப்பு வடிவம் எதிரே நிற்பது போல் இருந்தது. வெண்தாழை முகம், பாதம், கை; முதுகில் தளர்ந்து புரளும் சிற்றலையோடும் கூந்தல்; அரக்கு வர்ணப் புடவை; வலது கையில் பூஜைத்தட்டு, இடது கையில் முன்றானை; வாளிப்பும் வர்ணமும் ஒன்றி வடிந்த அழகு; பளீர் என்று தடுத்து நிறுத்தும் தோற்றம். கோயில் திண்ணையில் இருந்த பெரிய பிள்ளையாருக்கு முன் வந்து நின்று, மோதிரக் கற்களின் ஒளி சிதற நெற்றியில் குட்டிக்கொள்கிறாள். குருக்கள் விபூதியைக் கொடுத்ததும் வாங்கி நெற்றியில் குங்குமத்தின் கீழ் வைத்துக்கொள்ளுகிறாள்.

குருக்களின் அழுக்கு வேஷ்டித் தலைப்பில் பழைய தினசரித் துண்டில் கிடந்த அந்தச் சாம்பலுக்கு இப்போது எவ்வளவு பெரிய ஸ்தானம் கிடைத்துவிட்டது.

கோவிந்த வன்னி ஒரு கணம் இந்த லயிப்பில் ஒன்றியிருந்தான். பிறகு உலுக்கிக்கொண்டு நெஞ்சத்தில் மழை பொழிந்த அந்தப் புண்யாத்மாவைப் பார்த்தான்; இன்னும் ஏதாவது சொல்லப்போகிறாரா என்று. ஆனால் அந்தப் பேச்சு ஏதோ கல்யாணப் பேச்சாக வளரும் போல் இருந்ததே ஒழிய, மீண்டும் சொர்ணாம்பாளின் பெயரே அதில் வரவில்லை.

"அண்ணே, இப்ப ஏதோ பேர் சொன்னீங்களே, ரொம்ப அழகின்னு. அது என்ன?"

"அதுவா? சொர்ணாம்பா, செல்லூர்ச் சொர்ணாம்பா."

"ஆண்டாள் கோயில் காமாக்ஷிதான் ரொம்ப அழகுன்னு சொல்லுவாங்க. தமிழ்ச் சீமையிலேயே அவ காலிலே கட்டி அடிக்கறத்துக்குக் கூட பொம்பளை கிடையாதுன்னு பேரு."

"அதெல்லாம் ஐதர் காலத்து கதை. இந்தச் சிங்கப்பூர்லே எத்தினி நாளா நீங்க இருக்கீங்க?"

"கிட்டத்தட்ட பத்து வருஷமாச்சு."

"அதுக்கு முன்னாலே?"

"திருச்சிராப்பள்ளியிலே இருந்தேன்."

"திருச்சிராப்பள்ளியிலேயிருந்திட்டா சொர்ணாம்பாளைப் பத்திப் புதிசாச் சேதி கேக்கிறீங்க? ஜில்லா தாண்டி ஜில்லா அவ பேர் போயிருக்கே! நீங்க சொல்ற காமாச்சி இருபது வருசத்துக்கு முன்னாலே. சமீபத்திலே எப்பவாவது ஊருக்குப் போகப் போறீங்களா?"

"போகப் போறேன். ஒரு வாரத்துலே."

"போனா, தஞ்சாவூருக்கு ஒரு டிக்கட் எடுத்துக்கிட்டு அவளைப் போய்ப் பாத்திட்டு வாங்க. ரெயிலை விட்டு இறங்கினதும் ஒரு ஒத்தைமாட்டு வண்டி பிடிச்சு செல்லூர்ச் சொர்ணாம்பா வீடுன்னாக் கொண்டு விட்டுவிடுவான். ஆனால் போறபோது வெறுங்கையோட போங்க. இல்லாட்டி இந்தச் சீமையிலே சம்பாரிச்சதெல்லாம் நீங்களா அவ காலிலே கொட்டிப்புடுவீங்க. ஆனா வெறுங்கையோட போனாத்தான் என்ன?

திரும்பி வீட்டுக்கு வந்து எல்லாத்தையும் எடுத்துக்கிட்டுப் போய் அவகிட்டக் கொடுக்கத்தானே போறீங்க? அதனாலே நீங்க தஞ்சாவூருக்கும் போக வாணாம், அவளைப் பாக்கவும் வாணாம்."

"என்ன ஐயா, அவ்வளவு அதிசயமான ரதி?"

"ஐயா, ஏன் இந்த வீண் பேச்சு? நான் சொன்னா நம்பமாட்டீங்க. போய்ப் பாத்திட்டே வந்திடுங்க. எத்தனையோ லக்ஷப் பிரபுவெல்லாம் துணியை உதறிக் கொட்டிப்பிட்டான். வடக்கேயிருந்து ஒரு ஜமீன்தார் வந்து ஒரு வருஷம் அவளைச் சுத்திப்பிட்டுப் போதும் போதும்னு ஓடிப் போனான். நீங்களும் போங்க."

"நம்ம வன்னியரு அதுக்கெல்லாம் மசியறவரு இல்லே. செலவழிக்க நல்ல ஆளைப் பாத்தீங்களே. எனக்குத் தெரிஞ்ச நாளா இந்த ஹோட்டல்லே ஒரு டீ, ஒரு சைவச் சோறு; அதுக்குமேலே சாப்பிட்டதில்லையே இவரு!" என்று ஹோட்டல் முதலாளி நையாண்டி செய்தார்.

"நானா செலவழிக்கிறதில்லே? ஏய், கொண்டா சொல்றேன், மூணு பிரியாணி!"

உடனே அந்தச் சீனாக்காரப் பையன் உள்ளே ஓடினான்.

"என்னாத்துக்குங்க, ராத்திரிப் பத்து மணிக்கு மேலே?"

"பரவாயில்லீங்க. சும்மாச் சாப்பிடுங்க."

"இல்லீங்க."

"நீங்க சும்மாயிருங்க."

பிரியாணி வந்துவிட்டது. அவர்கள் சாப்பிட்டார்கள். வன்னியும் பத்து வருஷத்துக்குப் பிறகு புலவை ருசித்தான்.

"இன்னிக்கு என்ன வன்னியருக்கு ஒரே குஷி கிளம்பிடிச்சி?" என்றார் முதலாளி.

"இந்த மாதிரி பேசற ஆளைப் பார்த்தா ஏனையா செலவு செய்யக்கூடாது? பெரிய ஆளு இவரு. அந்தப் பொம்பளே அழகா இருக்கோ என்னவோ, இவரு பேசறத்திலேயே அவளை ரதியா அடிச்சிடுவாரு போல் இருக்கு."

“அப்படின்னா, நான் என்னமோ ஒண்ணுமில்லாததைப் பெரிசு பண்ணி அளக்கிறேன்னு சொல்லுறீங்க. நீங்கதான் போய்ப் பார்க்கப் போறீங்களே. நான் சும்மாச் சும்மாச் சொல்லிக்கிட்டுக் கிடப்பானேன்?”

“சரி, பாத்திடறேன்.”

“நீங்க சொன்ன காமாக்ஷி, ஆடினா, பாடினா, நாடக மாடினா. ஆனா சொர்ணாம்பா சும்மா எதிர்க்க நின்னாப் போதும். பதினாலு லோகமும் அவ காலிலே உளுந்திடும். அவ ஒத்தரையும் ஒண்ணும் கேக்கறதில்லே. தானே கொண்டு கொட்டிப்பிட்டுத் தலையிலே துணியைப் போட்டுக்கிட்டு ஓடற கதிக்கு வறாங்க. இத்தனைக்கும் அவளுக்கு ஆடவும் தெரியாது; பாடவும் தெரியாது. சும்மா ஆள்தான். அதுதான் இப்படிப் பம்பரமா ஆட்டிவைக்குது. நல்லவேளையா இத்தோட விட்டான். ஆண்டவன் ஆட்டம் பாட்டமுன்னு ஏதாவது கொடுத்திருந்தான்; இந்த உலகம் தப்பறதா?”

“அண்ணே, என்ன பேசிக்கிட்டே இருந்தா எப்பப் போறது?” என்று அவனுடைய நண்பன் குறுக்கிட்டான்.

“மணி என்ன, பத்தரை ஆயிடுச்சா? அப்ப நான் போய் வரேங்க.”

“எந்த ஊர் உங்களுக்கு?”

“எனக்குச் சிதம்பரங்க. கோலாலம்பூர்லே இருக்கேன். கடை இருக்கு.”

“வந்தா நம்ம ஊர்ப் பக்கம் வாங்க. கொடவாசல்தான். கோவிந்த வன்னின்னாச் சொல்லுவாங்க.”

“சரிங்க, நான் வரட்டுமா?”

அவர்கள் போய்விட்டார்கள்.

ஹோட்டலில் வேறு ஒருவரும் இல்லை. வன்னி, முதலாளி, சீனாக்காரப் பையன் மூவருமே இருந்தார்கள். கடை கட்டுகிற சமயம். பட்சண அலமாரியைப் பூட்டிவிட்டு வீட்டுக்குப் போகுமாறு பையனிடம் சொல்லிவிட்டு, டிராயரைத் திறந்து சில்லறையை எண்ணத் தொடங்கினான் முதலாளி.

“அண்ணே, இந்த ஆளு எப்படிப் பேசறாரு, பாத்தியா?” என்றான் வன்னி.

“அந்தப் பொம்பளை பெரிய ஆளாத்தான் இருக்கணும், பேரைச்

சொன்னதுமே அவங்களுக்கும் ரெண்டு பிரியாணி கிடைச்சது. எனக்கும் ரெண்டு ப்ளேட் வியாபாரமாச்சு."

"அட போங்கண்ணே. அந்தப் பொம்பளெக்காகவா இது? அந்த ஆளு பேச்சுக்காகல்ல?"

"அதிருக்கட்டும். நாலு வருசமா என்னோட பழகிட்டுவரீங்களே. அப்படி இருக்கிறவரு எனக்கு ஒண்ணும் கொடுக்காம, யாரோ முகந்தெரியாத ஆளுக்கு விருந்து பண்ணினீங்களே?"

"அண்ணே, நீங்கதான் விருந்தாப் பண்ணி எல்லார் வயத்தையும் நிரப்புறீங்க. நான் என்னத்தைச் செய்ய உங்களுக்கு?"

"ம், சரி."

"அலுத்துக்காதீங்க. இப்பவே ஒரு பெரிய விருந்தாச் செய்யப்போறேன் உங்களுக்கு."

"என்னாய்யா அது?"

சீனப்பையன் விடைபெற்றுக்கொண்டு போனான்.

"ஒரு உண்மையான சிநேகிதனுக்கு என்னங்க விருந்து செய்யலாம்? இன்னும் நாலு நாளிலே ஊருக்குக் கிளம்பிடப்போறேன். பாஸ்போர்ட்டும் வந்திரிச்சு. உங்களுக்குத் தெரியும். என் ஞாபகம் உங்களுக்கு மறக்காம இருக்கும்படியா ஒண்ணு கொடுக்கப் போறேன். சாமான், விருந்து இதெல்லாம் அழிஞ்சு போயிரும். அழியாத சாமானாக் கொடுக்கப் போறேன். இதுவரையில் ஒருத்தருக்குமே சொல்லாத, கடவுளுக்கும் எனக்கும் மாத்திரம் தெரிஞ்ச ஒரு ரகசியத்தை உங்ககிட்டே சொல்லப் போறேன். பெட்டியிலே போட்டுப் பூட்டறதுபோல, ஒரு அருமையான சிநேகிதனுக்குத்தான் ஒரு ரகசியத்தைச் சொல்லணும். அதைவிட உசந்த பொருள் கொடுக்க முடியாது."

"வன்னியரே, என்னமோபோல இருக்கீங்க நீங்க இன்னைக்கி. நிதம் பாக்கற வன்னியரா இல்லே."

"அந்த ஆள் பேசின பேச்சு அத்தனையும், ஒவ்வொரு எழுத்தும் உண்மை. அந்தச் சொர்ணத்துக்கு ஈடா நிக்க ஒரு பொம்பளை இந்த உலகத்திலே இருக்க முடியாது. நானும் இந்தச் சிங்கப்பூர்லே எவ்வளவோ தேசத்துப் பொம்பளைங்களைப் பாத்திட்டேன்; இன்னும் பாக்கறேன்; ஜப்பான்காரி, சைனாக்காரி, வெள்ளைக்காரி, பர்மாக்காரி, பஞ்சாப்காரி –

எவ்வளவோ பாக்கறேன்! ஆனால் அந்தச் சொர்ணாம்பா வீட்டு வாசப்படியிலே கூட இவங்களையெல்லாம் நிக்கவைக்க முடியாது."

"அப்பன்னா நீங்க பாத்திருக்கீங்களா அவளை?"

"பாத்தும் இருக்கேன். கிட்டக்க நின்னு பேசியும் இருக்கேன்."

"என்னமோ ஒண்ணுமே தெரியாதது போல விசாரிச்சீங்களே!"

"அவளைப் பத்திப் பேசிப் பேசிக் கேக்கணும்னு நெனச்சேன். பாசாங்கு பண்ணினேன். நீங்க கடையைக் கட்டிக்கிட்டு வாங்களேன். இங்கே ரொம்பப் புளுக்கமா இருக்கு. பார்க்கிலே போய்க் கொஞ்ச நேரம் உக்காந்துக்கலாமே."

ஹோட்டல் முதலாளி சில்லறைகளை எண்ணிக் கொண்டிருந்தார்.

கோவிந்த வன்னி எழுந்து வெளியில் போய்க் காற்றாட நின்றான். சிங்கப்பூர் இவ்வளவு அழகாக ஒரு நாளும் தோன்றியதில்லை அவனுக்கு. பார்க்கில் இருளில் ஓங்கி நின்ற மரங்கள், நீல விளக்குகள் ஒவ்வொன்றும் தனக்கு இன்பம் அளிப்பதற்காகப் பிரத்தியேகமாக ஏற்பாடு செய்யப்பட்டிருப்பது போல் தோன்றிற்று. சொல்லுக்கு எட்டாத நாளாக யாரிடமும் சொல்லாமல் அவன் இருதயத்தை அழுத்திச் சுமந்து போன அந்த ரகசியம், இப்போது வெடித்து வெளிப்படத் துடித்தது.

முதலாளி ஹோட்டலைப் பூட்டிக்கொண்டு வந்தார். கொஞ்ச தூரம் போனதும் வன்னி சொன்னான்:

"நான் இந்தச் சிங்கப்பூருக்கு வந்ததே அந்தச் சொர்ணாம்பாளுக்காகத் தான்."

"என்னது!"

"ஆமாம். பொண்டாட்டி புள்ளைக்குச் சேர்த்து வைக்கணும்னு வல்லை. அந்தச் சொர்ணாம்பாதான் என் மனசிலே கோயில் கொண்டிருக்கா. அவளுக்காகத் தான் இந்தக் கண்காணாத சீமையிலே வந்து ஒண்டியா நாளை ஓட்டிக்கிட்டு இருக்கிறேன். குண்டு, பீரங்கி, குத்து, வெட்டு இதுக்கெல்லாம் நடுவிலே ஊருக்கு ஓடாமே, உசிரைக் கையிலே புடிச்சுக்கிட்டு உட்கார்ந்து இருந்தேன். நல்ல வேளையா என் ஆசையும் நெறவேறிடிச்சு. அந்த மனிசன் பேசிக்கிட்டிருந்தாரே, அவரு என் மனசை அறிஞ்சுதான் பேசிக்கிட்டு இருந்தாரோ, என்னவோ? போனவுடனே ஒரு டிக்கட்டு எடுத்துக்கிட்டுத் தஞ்சாவூருக்குப் போன்னாரே; என்னமாத்தான்

சொன்னாரோ! நான் இந்த ஊரிலே பத்து வருசம் முன்னாடி காலடி எடுத்து வக்கிறபோதே அப்படிப் போற எண்ணத்தோடதான் வச்சேன். வெறுங்கையாப் போன்னாரே, அப்படிப் போகல்லே. சம்பாதிச்சதெல்லாம் அங்கேதான் கொண்டுபோகப் போறேன்.

“அப்ப ஒரு முதலாளிகிட்ட வேலை செஞ்சிக்கிட்டிருந்தேன்; சுப்பையா உடையாருன்னு பேரு. பெரிய மிராசுதாரு. நூத்தைம்பது வேலி நிலம்; காவேரிப் பாசனம். மோட்டார் வெச்சுக்கிட்டிருந்தாரு. தஞ்சாவூருக்குப் போறபோதெல்லாம் இந்தச் சொர்ணாம்பா வீட்டிலேதான் தங்குவாரு. முதல் தடவை அங்கே என்னை அளச்சிக்கிட்டுப் போனாரு. காரை வாசல்லே நிறுத்திட்டு உள்ளே நுழைஞ்சாரு. பின்னாலே பெட்டியைத் தூக்கிக்கிட்டுப் போனேன் நான்.

“வாங்கன்னு குரல் கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். இப்ப நினைக்கறப்பவே உடலெல்லாம் புல்லரிக்குது. பளீர்னு மின்னல் அடிச்சாப்பலே இந்தது. அந்த மாதிரி நிறமே நான் பார்த்ததில்லே. கொன்னைப்பூப் பூத்து ரெண்டு நாள் ஆனப்புறம் அந்த மஞ்சள் வெள்ளையாய்ப் போயிடுமே. அதுவும் காலை வெயில்லெ அதைப் பாத்தா எப்படி இருக்கும்? அந்த நெறம்! தலைமயிர் கருகருன்னு மின்ன, சுருட்டை சுருட்டையாத் தொடை மட்டும் தொங்கிக்கிட்டிருந்தது. நடந்து வராப்பலே இல்லே, மிதந்து வர மாதிரி இருந்தது. கண்ணு, மூக்கு, கைவிரல், கால்விரல் – மனுஷப் பிறவி இவ்வளவு அழகா இருக்கமுடியுமா? எனக்கு ஒரு சந்தேகம் நிழலாடிச்சு. ஏதோ மோகினியா இருக்குமோன்னுகூட அச்சமாயிருந்திச்சு. பூ அழகாயிருந்தா அது சகஜம். பழம் அழகாயிருந்தா அதுவும் நடப்புத்தான். ஆனா மனுசப் பிறவி இப்படி இருந்தா? . . . நம்பவே முடியல்லே. கொஞ்சநாழி எனக்கு ஒண்ணும் புரியலே. மண்டையிலே அறஞ்சாப்பலதான் இருந்தது.

“அதே கண்ணோடே முதலாளியையும் பார்த்தேன். போய்ச் சோபாவிலே உட்கார்ந்திருந்தாரு. அந்த மாதிரிக் கறுப்பை இனிமே பார்க்கவும் முடியாது. பண்ணவும் முடியாது. பளபளன்னு, எண்ணெய் வழியற கறுப்பு. வழுக்கைத்தலை. வாய் நிறைய வெத்திலைக் காவி. புஸூ புஸூன்னிட்டு, பள்ளமும் மோடுமாச் சேனைக்கிளங்கைப் போட்டு மூட்டை கட்டினாப்பலே உடம்பு. அவ வீட்டுப் பங்கா இளுக்கக்கூட லாயக்கு இல்லாத லச்சணம். காதிலே வைரக் கடுக்கனும் கை நிறைய வைர மோதிரமும் இல்லாட்டி எதோ மூட்டை தூக்கின்னுதான் நெனைக்கணும். அதுவும் மகாராஜன் குடிச்சிப்பிட்டாரோ, அந்த அழகைக்

கண்ணைப்பிடுங்கி வச்சிட்டுத்தான் பார்க்கணும்.

“அதே கண்ணோட என்னையும் பார்த்துக்கிட்டேன், நிலைக் கண்ணாடியிலே. மூட்டை தூக்க அவரைப் போட்டு, அந்த ஸோபாவிலே என்னைத் தள்றதுக்குப் பதிலா, கடவுள் எதோ அவசர அடியிலே கைப்பிசகா மாத்திப்பிட்டாரோன்னு தோணிச்சு.

“சொர்ணாம்பா கீளெ விரிப்பிலே உக்காந்துக்கிட்டா. ‘நீ வாசல்லே போ’ன்னாரு முதலாளி. சிவனேன்னு வாசலுக்குப் போனேன். ஒரு மணி நேரம் களிச்சுச் சமையற்காரி சாப்பிடக் கூப்பிட்டா. அவதான் சோறும் போட்டா. கீழே வேறே ஒருத்தரும் இல்லே.

“மறுநாளும் அங்கேதான் இருந்தோம். அன்னிக்கு வெள்ளிக்கிழமை. காமாக்ஷி அம்மன் கோயிலுக்குப் போனோம். நடந்துதான். முதலாளியும் அம்மா கூடவே வந்தாரு. என்னமோ கட்டின புருசன் மாதிரி. கோயில்லே நல்ல கூட்டம். நாங்க நுழஞ்ச உடனேயே கலகலப்பு, சத்தம் எல்லாம் ஓஞ்சு போச்சு. நானும் பார்த்தேன். ஒரு ஆளாவது அந்த அம்மனைப் பார்க்கணுமே. பொம்பளைங்களெல்லாம் நேரா அந்த மோகினியைப் பார்த்தாங்க. ஆம்பிள்ளைங்க பயப்பட்டுக்கிட்டே பாத்தாங்க; திருட்டுத்தனமாய்ப் பாத்தாங்க; வேறே எதையோ பாக்கறமாதிரி பாத்தாங்க. கடாசியிலே சரிதான் போன்னு துணிச்சலாக் கண்ணெடுக்காமலும் பாத்தாங்க. அந்தச் சொர்ணாம்பாளைத் தவிர வேறு ஒரு கண்ணாவது அம்பாளைப் பாக்கலே. அவதான் ஒரேயடியா அம்பாளைப் பாத்துக்கிட்டிருந்தா. அந்த அம்மன் லேசாகச் சிரிக்கிறாப்பலே பட்டுது. இத்தனை பேர் தவிக்கிறப்போ, ஒண்ணுக்கும் அசையாம, கண் எடுக்காம, ஒண்ணுமே தெரியாதது போல நம்மைப் பார்த்துக்கிட்டிருக்காளே, என்ன நெஞ்சுரப்பு, என்ன துணிச்சல்ன்னு அந்த அழகைப் படைச்ச லோக மாதா சிரிக்கிறாப்பலே இருந்தது. அர்ச்சனைத் தட்டுகளை குருக்கள்மார் வாங்கிக்கிட்டுப் போனாங்க. ஆனா எல்லாருக்கும் என்ன கொடுக்கிறோம், என்ன வாங்குகிறோம், என்ன செய்யறோம் என்கிற ஞாபகமில்லாமலே செஞ்சிட்டிருந்தாங்க. நானும் சொர்ணத்தைப் பாக்கறபோது என் நெஞ்சு குறுகுறுன்னுது. அந்த அம்மாவோ அம்மனை விட்டுக் கண்ணெடுக்கலே. மனுசர்களை மதிக்கிறதாகவே படலெ.

“ராத்திரி திண்ணையிலே படுத்துக்கிட்டிருந்தேன். ஒரே நெனப்புனாலேயோ என்னமோ ஒரு கனாக் கண்டேன். அந்தச் சொர்ணம் ரோஜாப்பூ மாலையா மாறிட்டாப்பலேயும், முதலாளி பன்னிக்குட்டி ரூபமா

மாறி ஊர்ச் சகதியிலே எல்லாம் புரண்டுட்டு, அந்த மாலையைக் களுத்திலே சுத்திக்கிட்டு விளையாடறாப் போலெயும் இருந்திச்சு.

“மறுநாள் காலமே நானும் சமையக்காரியும் கறிகாய் வாங்கறதுக்காக மார்க்கட்டுக்குப் போனோம், ஒருத்தருக்கொருத்தர் ஊரு, பேரு, குலம், கோத்ரம் எல்லாம் விசாரிச்சுக்கிட்டே. அவளுக்கு மாசம் ஆறு ரூபா சம்பளமாம், சாப்பாடு போட்டு. இதுக்கு முப்பது நாளும் தூங்கற வரையில் ஓய்ச்சல் ஒழிவு கிடையாது. இதே கணக்கிலே சம்பாதிச்சுக்கிட்டுப் போனா, அம்மா ஒரு நாளைக்குச் சம்பாதிக்கிற பணத்தை, ஏழெட்டு வருசத்திலே சம்பாதிக்கலாம்னு ஒரு கணக்குச் சொன்னா அவ. எனக்கும் முதலாளி சாப்பாடு போட்டு ஏழு ரூபா கொடுத்து வந்தாரு. நானும் கணக்குப் போட்டேன். எம் பொஞ்சாதியும் ரெண்டு குழந்தைகளும் சாப்பிடாமலே பட்டினி கிடக்கிறதா இருந்தா, நானும் ஆறேழு வருஷத்திலே அத்தனை பணம் சம்பாதிக்க முடியும். ஒரு தரம் நெனச்சுப் பார்த்தேன். எனக்கும் ஒண்ணும் புரியல்லே. ஒரு நாளைக்கா இவ்வளவு சம்பாதிக்கிறா அம்மான்னு மறுபடியும் கேட்டேன் அவளை. ‘ஆமாமையா, ஆமாம். ஒரு நாளைக்குத்தான் இவ்வளவு. இல்லாட்டி உங்க முதலாளிக்கு இங்கே என்ன வேலை? அதுவும் உங்க முதலாளிக்கு ராஜ வடிவு பாரு! அவருக்கு ரெட்டைப் பங்கு வரி இருக்கும்னு சொன்னா அவ. பொண்டாட்டி பிள்ளைகளைக் காப்பாத்தியாகணும். அப்படீன்னாப் பத்துப் பிறவி எடுத்தாலும் நாம் காலணா மிச்சம் பிடிக்கப் போறதில்லே. பாத்தேன். ஒரு மாசமா என் மனசு ஒரு நிலையிலே இல்லே. தூக்கம் பிடிக்கல்லே. முதலாளிகிட்டேயிருந்து களட்டிக்கிட்டு ஊருக்குப் போனேன். ஊட்டுப் பொம்பளையைச் சமாதானப்படுத்தி நல்ல வார்த்தை சொல்லி, நாலு பவுன்லே அட்டிகை, ஒரு மோதிரம் எல்லாத்தையும் வித்தேன். இங்கே வந்து சேந்துட்டேன்.

“அக்கரைச் சீமைக்கு வந்தா என்ன, சாக்குச் சாக்காவா பணம் கட்ட முடியும்? மூட்டை தூக்க எவ்வளவு தெம்பு வேணுமோ அவ்வளவுதான் சாப்பிட்டேன். பெண்டாட்டி பிள்ளைக்கும் துரோகம் பண்ணல்லே. மாசம் பத்து ரூவா மேனிக்கு அனுப்பிச்சுக்கிட்டு வந்தேன். சண்டை வந்தது. ரொம்பப் பேர் பயந்துக்கிட்டு ஓடினாங்க. பீரங்கி, குண்டு, குத்து, வெட்டு ஒண்ணும் பெரிசாப் படலே எனக்கு. உசிரைக் கையிலே புடிச்சுக்கிட்டு இங்கியே ஒட்டிக்கிட்டேன். ஜப்பான் காரன் ராஜ்யத்தையும் பாத்தாச்சு. மறுபடியும் நெஞ்சிலே சம்மட்டி அடிக்கிறாப்பலே வெடியும் குண்டும் வெடிச்சுது. ஆனா என் உசிரு நின்னுது. குருவி சேக்கறாப்பலே சேத்த

பணமும் நின்னுது. ஏ அப்பா! பத்து வருசம்! நான் இங்கே வந்து பத்து வருசம் ஆயிடிச்சு. எத்தனை ஆபத்து. நடுவிலே! எத்தனை அதிரல்! ஆனா இந்த உசிருக் கவலை; பூதம் காக்கிற மாதிரி பணம் காக்கிற கவலை; இத்தனைக்கும் நடுவிலே நான் சேந்தாப்போல் அஞ்சு நிமிஷம் சொர்ணாம்பாளை நெனைக்காம இருந்ததில்லே. எனக்கே ஆச்சரியமா இருக்கு! உசிருக்கு ஆபத்து வரப்போ, பெண்டாட்டி, பிள்ளை ஞாபகம் உங்களுக்கு வராதா? எனக்கு வல்லை அண்ணே. நான் அவளைத்தான் பளிச்சுப் பளிச்சினு நெனச்சுக்கிட்டிருந்தேன். ஒரு பிராணிகிட்டே இதை நான் சொல்லல்லே. இன்னிக்கு அந்த ஆளு வந்தப்புறம் எனக்குப் பொங்கிப் பொங்கி வந்திச்சு. என் நெஞ்சு வெடிச்சுப் போகும் போல ஆயிடிச்சு. இப்பக் கவணையைத் திறந்து விட்டிட்டேன். அப்பாடா!"

வன்னி பெருமூச்சு விட்டான். பத்து வருஷச் செய்தி வெளியே பாய்ந்து ஓடியதும் சலசலப்பு ஓய்ந்து அவன் நெஞ்சு அமைதியாக நின்றது. பார்க் விளக்குகள் மௌனமாக எரிந்துகொண்டிருந்தன. இலைகள் ஓய்ந்து உறங்கின.

"ம்!" என்று உடல் விரிய ஒரு பெருமூச்சு விட்டார் ஹோட்டல்காரர்.

"அம்மாடா!" என்று சோர்வைக் கழித்தான் வன்னி. ஏழெட்டு மைல் நடந்துவிட்டாற்போல் அவனுக்கு உடல் களைத்துவிட்டது.

"வன்னியரே, இது ரொம்ப வேடிக்கையான செய்தி. ஒரு நாள் செலவழிக்கிற பணத்துக்காக, பத்து வருஷம் ராப்பகலா உழைச்சு வயத்தை ஒடுக்கி ஓடாப் போறத்துக்கு என்ன முடை? நீங்க மனுஷப் பொறவி இல்லையா? வித்தியாசமா நெனச்சுக்காதீங்க. எனக்கு ஒண்ணும் புரியல்லே. நானும் யோசிச்சு யோசிச்சுப் பாக்கறேன்."

வன்னி பேசவில்லை.

"அந்த ஒரு நாளிலே எல்லாத்தையும் தீத்துப்பிட்டு, மறுபடியும் உடம்பை வேலைக்குப் பூட்டித்தானே ஆகணும்? பிழைக்கணுமே, உசிர் வாழணுமே."

ஹோட்டல்காரர் சரியாகத் தன்னைப் புரிந்து கொள்ளவில்லை என்று சந்தேகப்பட்டுக்கொண்டே மேலும் அழுத்திச் சொன்னான் வன்னி:

"அப்புறம் உசிர் வாழணும்னுதான் என்ன முடை? உசிரே இல்லாம இருந்திட்டா?"

0

கப்பல் கரையை விட்டு விலகி நடுக்கடலுக்கு வந்துவிட்டது.

ஹோட்டல்காரர் மனைவியுடன் கப்பலுக்கு வந்து வன்னிக்கு விடை கொடுத்தார்.

சிங்கப்பூர் மெல்ல மெல்ல மறைந்தது.

முதல் நாள் முழுவதும் கைலியும் நீலக் கோட்டும் அணிந்திருந்தான் வன்னி. மறுநாள் பொழுது விடிந்ததும் கூட்டத்தோடு கூட்டமாகக் குளித்துவிட்டு, மல்வேஷ்டியை எடுத்து மூலக்கச்சம் கட்டிக்கொண்டு, ஒரு ஜிப்பாவைப் போட்டுக்கொண்டான். கப்பல் டீக்கடை பீரோவின் கண்ணாடிக் கதவில் தன்னை ஒரு முறை பார்த்துக்கொண்டான். 'காய்கறி விற்று, மூட்டை தூக்கி, ஹோட்டல் மேஜை துடைத்து, இட்லி மாவு அரைத்து, கொத்தனுக்குச் சுண்ணாம்புச் சட்டி தூக்கின ஆள்' என்று அவனை யாரும் சொல்ல முடியாது. உயரமும் அகன்ற முதுகும் லட்சிய சித்தியும் உடைய அவனுக்கு அந்த உடை வெகுநாள் பழக்கப்பட்டதுமாதிரி ஒரு தோற்றம் அளித்தது. அவனுக்குத்தான் அந்தப் புதுஉடை முதலில் என்னவோபோல், உடலில் ஒட்டாதது போலக் குறுகுறுத்தது. சுப்பையா உடையார் மாதிரி தன்னையும் நினைத்துக்கொண்டு, அந்த உடை பழக இரண்டு நாள் பிடித்தது. நீள மூக்கு, ஒட்ட வெட்டிய கிராப்பு, எதிரே உள்ளதைப் பார்க்காத பார்வை எல்லாம் அவன் அந்தஸ்தை உயர்த்திவிட்டன. கம்பியின் மீது சாய்ந்து, வாரி மோதிவிழுந்த அலைகளையும் வான வெளியையும் பார்த்துக்கொண்டிருந்தான். ஒரு வாரம் ஆயிற்று. காற்று சரியாக இல்லையாம். மதராஸ் இன்னும் இரண்டு நாள் ஆகுமாம். நினைத்த நினைப்பில் எங்கும் போய், எல்லாம் தெரிந்து, எல்லாம் செய்ய வேண்டும்போல வானவெளி அவன் ஆசையைக் கிளப்பிற்று. ஆனால் கப்பலுக்கு அவன் துடிப்புத் தெரியவில்லை. நின்று நின்று தட்டித் தட்டிச் சென்னையை அடையப் பத்து நாட்கள் ஆயின.

ஒரு நாள் இரவு ரெயில் பிரயாணம். காலையில் பஸ் ஏறிக் குடவாசலை அடைந்தான்.

சாமான்களை மாட்டுவண்டியில் ஏற்றும்போது, பொம்மலாட்டம் வெங்கட்டா ஐயர் ஒரு மூட்டை நெல்லைத் தலையில் தூக்கிக்கொண்டு நெல் மிஷினுக்குப் போய்க்கொண்டிருந்தார். அப்பொழுதே அவருக்கு ஐம்பத்தாறு ஐம்பத்தேழு வயது. எப்படியும் இப்பொழுது

அறுபத்தைந்துக்குக் குறையாது. தலையில் இரண்டு கலம் நெல்! அந்த நாளில் பொம்மலாட்டத்துக்குப் பாடும்போது, பக்கத்தில் ஒரு செம்பு ஆமணக்கெண்ணெயை வைத்துக்கொண்டு, பாட்டுக்குப் பாட்டு அரைச்சேர் குடித்துத் தீர்த்துக்கட்டுவாராம்! வலுவுக்கு என்ன பஞ்சம்!

ஊரில் ஒன்றும் அப்படி மாறுதல் இல்லை. இரண்டொரு சைக்கிள் வாடகைக் கடைகள் அதிகமாயிருந்தன. ஹோட்டல்கள் இடம் மாறியிருந்தன. அவ்வளவுதான். கடைத்தெருக் கோடியில் தேரைக் காணவில்லை. யுத்த முடையில் வெட்டி விறகாக்கி விட்டார்களாம்.

அவன் பெண் பதினாலு வயது பூரித்துப் பரிசத்திற்குக் காத்துக்கொண்டிருந்தது. கைக்குழந்தை இப்போது ஹைஸ்கூலில் சேர்ந்துவிட்டது. அவளும் அப்படியேதான் இருந்தாள். கொஞ்சம் வயது, சதை வைத்திருந்ததைத் தவிர வேறொன்றும் மாறிவிடவில்லை. தாரைதாரையாக அவள் கன்னத்தில் வழிந்த கண்ணீர் அவனை மறுபடியும் குடும்பஸ்தனாக்கிற்று. அணைத்து அவள் முதுகைத் தடவினான். கப்பலில் ஓரிரண்டு தடவைக்கு மேல் அவள் நினைவே வரவில்லை. 'இதுவா மனுஷத்தனம்?' என்று கேட்டுக்கொண்டான். நெஞ்சு குழம்பிற்று. ஊசலாடினான்; தயங்கினான்.

சாப்பிட்டதும் தூக்கம் பிடிக்க நேரமாயிற்று. அதுவும் மூன்று மணிக்குக் கலைந்துவிட்டது; உதறிக்கொண்டான். உலுக்கிச் சஞ்சலத்தைச் சிலிர்த்து எறிந்துவிட்டுக் கும்பகோணம் போகிறதாகக் கிளம்பிவிட்டான்.

அக்கரைச் சீமையிலிருந்து வந்தவனுக்கு எவ்வளவோ வேலை இருக்கும். அவள் பேசாமல் இருந்துவிட்டாள்.

0

தஞ்சாவூர் வரும்போது இருட்டி இரண்டு நாழிகையாகி விட்டது. ரெயிலடி ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு வன்னி வேகமாக நடந்தான். மாறுதல் ஒன்றும் தெரியவில்லை. மணிக் கூண்டுக்கு அப்பால் புதிதாக முனிசிபல் ரேடியோ நிலையம் முளைத்திருந்தது. பெயர் தெரியாத வாத்தியம் ஒன்று, சாகிற பூனைமாதிரி முனகிக்கொண்டிருந்தது அப்போது. எதிரே சற்றுத் தூரத்தில் ஒரு புதுச் சினிமாக் கொட்டகை. இன்னும் கொஞ்ச தூரம் நடந்ததும் பழகின குரல் ஒன்று கேட்டது. ராமர், கிருஷ்ணர் படம் எழுதும் எதிராஜு, இடிந்து பொக்கை விழுந்த திண்ணையில், ஒட்டி உலர்ந்த அழுக்கும் கிழிசலுமாக உட்கார்ந்து ஒரு நோஞ்சான் குழந்தையைக் கொஞ்சிக்கொண்டிருந்தான். வருஷம்

தவறினாலும் அவனுக்குப் பிள்ளை தவறுகிறதில்லை.

புதிது புதிதாக லாண்டரிகள்! தஞ்சாவூர் பெரிய ஊராகத் தான் போய்விட்டது.

இன்னும் சற்றுத் தூரம் வந்தான் வன்னி. நெஞ்சு படபடத்தது. வயிற்றில் இருந்தாற்போல் இருந்து ஒரு கனம். நீலச் சுண்ணாம்பு அடித்த அந்த வீடு அதோ வந்துவிட்டது. அவன் உடல் முழுதும் சூடேறி நிலைகொள்ளாமல் பரந்தது. கால் இற்றுப் பலம் இழந்துவிட்டது. எப்படியோ நடந்தான்.

இரும்புக் கேட் திறந்திருக்கவே சரேலென்னு உள்ளே நுழைந்தான்.

“யாரது?”

“அம்மா இருக்காங்களா?”

“இருக்காங்க.”

வன்னி உள்ளே நுழைந்தான்.

“யாரு?”

“இன்னும் யார் இருக்காங்க?”

“வேறே ஒருத்தரும் இல்லை, ஏன்?”

“பார்க்கணும்.”

“யாரய்யா அது? பழகின குரலா இருக்கு.”

“ஆமாம்.”

“அட, வன்னியரல்லே! ஆளே மாறிப் போயிட்டியே!”

வன்னி திரும்பினான். நடை விளக்குக் குப்பென்று எரிந்தது. திண்ணையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்தவள் நடைக்கு வந்தாள். விழித்துப் பார்த்தான் வன்னி.

“என்ன ஐயா, இதோ நிற்கிறேனே. தெரியல்லியா? கண்ணு தான் தெரியலே; காது கூடவா கேக்கல்லே?” என்றாள்.

“யாரு. அம்மாவா?”

வன்னி பதறிவிட்டான். கண்ணை அகற்றிப்பார்த்தான். அவன் வாய்

அடைத்துவிட்டது.

கொன்றைப்பூ நிறம் அப்படியே அற்றுப்போய் உடல் பச்சை பாய்ந்து கறுத்திருந்தது. கூனல், வெகுநாள் கூனல்போல. தோள் பட்டையிலும் கன்னத்திலும் எலும்பு முட்டிற்று. தலை முக்கால் நரைத்துவிட்டது. வகிட்டுக் கோட்டில் வழுக்கை தொடங்கி அகன்றிருந்தது.

வன்னி பார்த்தான்.

அந்த உடலில் சதையே மறைந்துவிட்டது. மணிக்கட்டு முண்டு தோலை முட்டிற்று. புறங்கை நரம்பு புடைத்து நெளிந்தது. தோலில் பசையற்று வற்றி உலர்ந்த சுருக்கம். சிரிக்கும்போது தேய்ந்த பல்வரிசை தெரிந்தது. எத்தனை இடுக்கு! தலைமயிர் கூழை பாய்ந்துவிட்டது. குரலைத் தவிர வேறு பழைய அடையாளம் இல்லை. அவள்தான் சொர்ணம் என்று நிதானம் செய்துகொள்ள இரண்டு நிமிஷம் ஆயிற்று அவனுக்கு.

"எங்கேருந்தையா வரே?"

"சிங்கப்பூரிலிருந்து."

"சிங்கப்பூரிலிருந்தா? ஏ, அப்பா! அங்கே எங்கையா போனே?"

"உனக்காகத்தான்."

"எனக்காகவா?" அந்த ஏகவசனமான அழைப்புத்தான் அவளுக்கு வியப்பைத் தந்தது.

"ஆமாம்; உனக்காகத்தான் போனேன். ஆனா உன்னை இப்படிப் பார்க்கணும்னு இல்லை. அன்னிக்குப் பாத்த மாதிரி பாக்கணும்னு போனேன். சமையற்காரி சொன்னா, அம்மா அறுநூறு எழுநூறு ஒரு நாளைக்குச் சம்பாதிக்கிறான்னு. கிளம்பிவிட்டேன். பத்து வருஷமா மணலை எண்ணிப் போடறாப்பலே சேர்த்தேன். குண்டு, பீரங்கிக்கெல்லாம் அசையலே, தூங்கலே. மாடு மாதிரி பாடுபட்டேன். நாலு நிமிஷம் சேர்ந்தாப்போல உன்னை நான் மறந்தது கிடையாது. இதோ . . ." என்று கையிலிருந்த கடுதாசிக் கவரை எடுத்துப் பிரித்து ஏழெட்டு நூறு ரூபாய் நோட்டுகளை வைத்தான். அவன் கை நடுங்கிக்கொண்டிருந்தது.

அந்த அழகு போன ஜீவன் விக்கிப்போய் அவனைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டே நின்றது. வன்னி அந்த தேய்ந்த பல்லையும் மஞ்சளிட்ட கண்ணையும் பச்சை பூத்த தோலையும் வெறித்துப் பார்த்துக்கொண்டே கல்லாக நின்றான்.

“என்ன உடம்பு உனக்கு?”

“உடம்புக்கென்ன? ஒன்றும் இல்லை. வயசு கொஞ்சமா ஆச்சு?”

“வயசாயிடிச்சா?” என்று அவளைப் பார்த்தான் அவன். அழகில்லாதது கோரமாகலாம். அழகு கோரமானால்? பயங்கரமாக இருந்தது அவளுடைய தோற்றம்.

“ஆமாம்” என்றாள் அவள். “முப்பதுக்கப்பாலே வருஷம் பத்தாகக் கூட்டியாகணும்: நாப்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது, தொண்ணூறு; அடுத்த ஆடிக்கு நூறு பிறந்திடும். நான் தாசி. ஒரு வருஷம் எனக்குப் பத்து வருஷம். என்னைப் போல அழகே இல்லேன்னு ஆயிரம் வாய் சொல்லிக் கேட்டிருக்கிறேன். முகத்துக்குச் சொன்னதில்லே அது. இந்த நிலைக் கண்ணாடியே சாட்சி. பார்த்த பேரெல்லாம் மடங்கி மடங்கி நெருப்பிலே விழுகிற மாதிரி விழுந்தாங்க. நெருப்பு எரிய எரியக் குப்பையும் கரியும் அதிகமாகத்தானே இருக்கும்?”

வன்னி அதிர்ந்துபோய், நினைவிழந்த மாதிரி நின்றான். பேசத் தோன்றவில்லை.

“நானும் மல்லுக்கு நின்னுதான் பார்த்தேன், முடியலே. போனது வராட்டாலும் இருக்கிறதை வச்சுக்கலாம். அதுவும் முடியலே. இந்த மாதிரி விஷயங்களிலே யாராலே சண்டை போட முடியும்? பணமா? காசா?”

“ஹ்ம்” என்றான் வன்னி.

“தவங்கிடக்கறதுக்கு முறை உண்டு. கண்டதுக்கெல்லாம் தவங்கிடந்தா மனசுதான் ஒடியும். தண்டனைதான் கிடைக்கும். இப்படி வா” என்றாள் அவள்.

“இந்தா” என்று அவனைத் தழுவி முத்தமிட்டாள். அவன் கண் மூடியிருந்தது.

“இதை அறுபது வருஷத்துக்கு முன்னாடி கொடுத்திருந்தா, நீ படற சந்தோஷம் வேறே. ஆனா . . . நான் இந்த மாதிரி எப்பவும் நெறைஞ்சு ஆனந்தப்பட்டதே கிடையாது. இவ்வளவு மனசோடே நெறஞ்சு எதையும் பார்த்ததில்லே. இப்ப எப்படி இருக்கு, தெரியுமா? நான் ரொம்ப இளமையா, ரொம்ப அழகா இருக்கிறாப்போல இருக்கு.”

புருவத்தைச் சுளித்துக்கொண்டே ஒரு நிமிஷம் அவள் அணைப்பில் கண்ணை மூடிக்கொண்டு நின்றான் அவன். பிறகு கீழே கிடந்த

நோட்டுக்களைச் சேர்ந்து அடுக்கி அவன் சட்டைப் பைக்குள் வைத்தாள் சொர்ணம்.

"சாப்பிட்டாச்சா?"

"ஆச்சு."

"காலமே ஆறேகாலுக்குக் கும்பகோணத்துக்கு வண்டி இருக்கு."

"இல்லை. போட்மெயிலிலே போகப் போறேன். இப்பப்போனாச் சரியா இருக்கும்."

ஆனால் உடனே போக முடியவில்லை அவனால். கால்மணி நேரம் பேசாமல் சோபாவில் உட்கார்ந்தான். பிறகு அவள் கொடுத்த பாலையோ எதையோ சாப்பிட்டுவிட்டு வாசல்படி இறங்கினான்.

யாரோ வெகுநாள் திட்டமிட்டு அவனை முட்டாளாக அடித்துவிட்டதுபோல் அவனுக்குத் தோன்றிற்று.

தெருக்கோடியில் வெற்றிலை பாக்குக் கடையில் வெற்றிலை, சீவல் வாங்கிப் போட்டுக்கொண்டு, அங்கேயே சோடா பாட்டில்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து, பத்து வருஷங்களை அசை போட ஆரம்பித்தான்.

கலைமகள், அக்டோபர் 1952

# சிலிர்ப்பு

திருச்சிராப்பள்ளியிலிருந்தே புறப்படுகிற வண்டி அது. மாயவரத்தோடு நின்றுவிடும். பத்தரை மணிக்குத் தொடங்கி மூன்று மணியோடு அதன் வாழ்வு முடிந்துவிடும். மதுரை, மானாமதுரை, ஈரோடு என்று எல்லா வண்டிகளையும் அனுப்பிவிட்டுத் திருச்சிராப்பள்ளி ஜங்ஷன் புயல் புகுந்து விளையாடின தோப்பைப்போல, ஒரே வெளிச்சமாக ஹோவென்று வெறிச்சிட்டுக் கிடந்தது. வாழைத்தொலி, ஆரஞ்சுத்தொலி, எச்சில் பொட்டணம், தூங்குமூஞ்சிகள்– இவற்றைத் தவிர ஒன்றையும் காணவில்லை. வண்டி புறப்பட இன்னும் அரைமணிதான் இருக்கிறது. எஞ்சின், கார்டு, ஒன்றும் வரவில்லை. வண்டிக்குவண்டி ஒரு பரட்டை, அழுக்கு இப்படி ஏதாவது தூங்கிக் கொண்டிருந்தது. பங்களூர் எக்ஸ்பிரஸில் இறங்கி வந்த குடும்பம் ஒன்று இரண்டாம் வகுப்பில் சாமான்களைப் போட்டுக் காவல் வைத்து எங்கேயோ போய்விட்டது. எக்ஸ்பிரஸ் வண்டி சென்றால் என்ன கூட்டம், வரும்போது என்ன வரவேற்பு, என்ன உபசாரம்! போகும்போது எவ்வளவு கோலாகலம்! இது நாதியில்லாமல் அழுது வழிந்தது. ஷட்டிலும் கேடுகெட்ட ஷட்டில். ரயில் ஜாதியில்கூட ஏழை, பணக்காரன் உண்டு போல் இருக்கிறது.

நான் தனியாகக் கடைசிப் பெட்டிக்கு முன் பெட்டியில் உட்கார்ந்திருந்தேன். பக்கத்தில் என் பையன் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். தலைமாட்டில் கையிலிருந்து நழுவிய ஆரஞ்சு உருண்டு கிடந்தது. அதைப் பார்க்கும்போது சிரிப்பு வந்தது எனக்கு. பையனைப் பெங்களூரிலிருந்து அழைத்து வருகிறேன். மாமா சம்சாரம் ஊருக்கு வந்திருந்த போது அவனை அழைத்துப் போயிருந்தாள். நான் காரியமாகப் பெங்களூர் போனவன் அவனை அழைத்துக்கொண்டு வந்தேன். பெங்களூர் ஸிட்டி ஸ்டேஷனில் மாமா ரெயிலேற்றி விட வந்திருந்தான். ரெயில் புறப்பட ஐந்து நிமிஷம் இருக்கும் போது ஆரஞ்சுப் பழக் காரனைப் பார்த்து, “ஆரஞ்சுப்பா, ஆரஞ்சுப்பா” என்று பையன் முனகினான். மாமா காதில் விழாதது போல அந்தண்டை முகத்தைத் திருப்பிக்கொண்டுவிட்டான். மாமாவின் சுபாவம் நன்றாகத் தெரியும் எனக்கு. பையனைச் சுடுகிறாப்போல ஒரு பார்வை பார்த்தேன். அவன் வாய் மூடிக்கொண்டது. ஆனால், வண்டி புறப்பட்டதுதான் தாமதம்; ஆரம்பித்துவிட்டான். ஆறு வயசுக் குழந்தை; எத்தனை நேரந்

தான் அடக்கிக்கொண்டிருப்பான்.

“யப்பா, யப்பா!”

“ஏண்டா கண்ணு!”

“பிச்சி மாமாவுக்கு வந்து, வந்து, தொளாயிர ரூபா சம்பளம். பணக்காரர். இவ்வளவு பணக்காரர்ப்பா!” என்று கையை ஒரு கட வாத்திய அளவுக்கு அகற்றி, மோவாயை நீட்டினான் — குறை சொல்லுகிறாற்போல.

“அதுக்கு என்ன இப்ப?”

“வந்து, செத்தே முன்னாடி ஆரஞ்சு கேட்டேனோல்லியோ, வாங்கிக் குடுக்காம எங்கேயோ பாத்துண்டு நின்னார்ப்பா.”

“அவர் காதிலே விழுந்திருக்காது. விழுந்திருந்தா வாங்கியிருப்பார்.”

“நான் இரைஞ்சுதான்பா சொன்னேன்.”

“பின்னே ஏன் வாங்கிக் கொடுக்கலை?” கேள்வியை நானே திருப்பிக் கேட்டுவிட்டேன். பையன் திணறினான்.

“வந்துப்பா, வந்து பிச்சி மாமாவை வந்து ஒரு மூணு கால் சைக்கிள் வாங்கித் தான்னேன். வந்து, தரேன் தரேன்னு ஏமாத்திப்பிட்டார்ப்பா . . .”

“அவர் என்னத்துக்குடா வாங்கணும்? நான் வாங்கித் தரேன்.”

“நீ எப்படி வாங்கித் தருவியாம்?”

“ஏன்?”

“உனக்கு நூறு ரூபாதானே சம்பளம்?”

“உனக்கு யார் சொன்னா?”

“வந்து, பிச்சி மாமாதான் சொன்னா.”

“உங்கிட்ட வந்து சொன்னாரா, உங்கப்பாவுக்கு நூறு ரூபாதான் சம்பளம்னு?”

“வந்து எங்கிட்ட இல்லேப்பா. மாமிகிட்டச் சொன்னா. நீ வந்து மெட்ராஸ்லேந்து லெட்டர் எழுதியிருந்தே பாரு, புள்ளையார் பூஜையன்னிக்கி; அப்பச் சொன்னா மாமிகிட்ட. வெறுமெ வெறுமெ நீ

மெட்ராஸ் போறியாம். உனக்கு அரணாக்கொடி வாங்க முடியாதாம்."

இது ஏதுடா ஆபத்து!

"சரி நாழியாச்சு. நீ படுத்துக்கோ."

"எனக்கு மோட்டார் வாங்கித் தரயா?"

"தரேன்."

"நெஜ மோட்டார் இல்லே. கீ கொடுக்கிற மோட்டார், இவ்வுளூண்டு இருக்குமே, அது."

"அதான் அதான். வாங்கித் தரேன்."

"யப்பா, ஆரஞ்சுப்பா."

"நீ தூங்கு. திருச்சினாப்பள்ளி வந்தவுடனே வாங்கித்தந்துடறேன்."

"போப்பா!"

"இப்ப எங்கடா வாங்கறது, ரெயில் போயிண்டிருக்கிற போது?"

"அப்பன்னா ஒரு கதை சொல்லு."

"அப்படிக் கேளு. நல்ல கதையாச் சொல்றேன். ஒரே ஒரு ஊரிலே . . ." பாதிக் கதையில் பையன் தூங்கிவிட்டான்.

"குழந்தை நல்ல சமத்து ஸார். ஷ்ரூடா இருக்கான். ஆளை எப்படி 'ஸ்டடி' பண்றான்!" என்று திடீரென்று எதிரே இருந்தவர் மதிப்புரை வழங்கினார்.

"அதுதான் தலை பெரிசா இருக்கு!" என்று பையனைப் பார்த்தேன். தலை சற்றுப் பெரிதுதான் அவனுக்கு. எடுப்பான முகம். மூக்கும் முழியுமான முகம். மொழுமொழுவென்று சரீரம். தளதளவென்று தளிரைப் போன்ற தோல். கன்னத்தில் தெரிந்தும் தெரியாமலுமிருந்த பூனை மயிர் ரெயில் வெளிச்சத்தில் மின்னிற்று. தலைமயிர் வளையம் வளையமாக மண்டி, அடர்ந்து பாதி நெற்றிவரை விழுந்திருந்தது. அழகில் சேர்க்க வேண்டிய குழந்தைதான். நாளை மத்தியான்னம் அம்மாவைப் பார்க்கத்தான் போகிறான். அதுவரையில்? யாரோ அநாதையைப் பார்ப்பதுபோல் இருந்தது எனக்கு. தாய் பக்கத்தில் இல்லாவிட்டால் குழந்தைக்குச் சோபை ஏது? குழந்தையை இரண்டு மூன்று முறை தடவிக் கொடுத்தேன். கபடமில்லாத இந்தக் குழந்தையை எப்படி ஏமாற்றத்

“மனங்களின் ஒற்றுமைதான் காதல் என்றால், குறட்டை விட்டுத் தூங்கும் என் தம்பி கும்பகர்ணனைக்கூட நான் காதலிக்கலாம். ஆணும் பெண்ணுந்தான் காதலிக்க வேண்டும் என்று தேவையே இல்லை. இந்த மன ஒற்றுமைக்காகத்தான் பிரம்மா ஆணையும் பெண்ணையும் படைத்தாரா?”

“விரும்பாத ஆணும் பெண்ணும் எப்படி சேர்ந்து வாழ முடியும்?”

“விரும்பினால்கூட ஏன் சேர்ந்து வாழவேண்டும்? ஆணும் பெண்ணுந்தான் சேர்ந்து வாழவேண்டுமா, என்ன? ஆணையும் பெண்ணையும் சரீர வேட்கைதானே பிணைத்துக் காதலன், காதலியாக ஆக்கிவைக்கிறது? காதல் உடலைப் பற்றியதாக இல்லாவிட்டால் ஆண் – பெண் என்ற வேற்றுமையையே உண்டாக்கிக்க வேண்டாமே. பாலற்ற பொதுவான ஓர் உருவத்தை, உடலும் உயிரும் பிணைந்த ஓர் உருவத்தைப் படைத்துவிட்டுப் பிரம்மா திருப்தியடைந்திருப்பார். அப்புறம் உன்னுடைய பெண்மைக்கும், மேடிட்ட நீண்ட கண்களுக்கும், கரவும் சரிவும் நிறைந்த எழில் உருவத்திற்கும், உன்னதமான நாசிக்கும், ஆணின் அகண்ட மார்பிற்கும், திரண்ட தோளுக்கும், வீரத் தோற்றத்திற்கும் என்ன அவசியம்? சொல்லுக்கு அகப்பாற்பட்ட, உணர மட்டும் முடிகிற ஒரு வனப்பு வடிவத்தைக் கண்டு காதலிக்கக் காலமா வேண்டும்? உன் எழில் கண்டவுடன் என்னைக் கிறங்க அடித்துவிட்டது. அப்படியானால் காதலுக்கு அறிமுகமும் நட்பும் காலமும் அவசியமா?”

“இந்தக் காட்டுமிராண்டிப் பேச்சு, காதைத் துளைக்கிறது. நான் உன்னைக் கண்டு மயங்கிவிடவில்லை. என்னைப் போகவிடு.”

“என் தாபம் எழுந்துவிட்டது. எண்ணத்திற்கு ஈடேறல் வேண்டும்.”

“என் எண்ணத்திற்குந்தான் ஈடேறல் வேண்டும். வெறுப்பு ஈடேற வேண்டும்.”

“எல்லோருக்கும் ஈடேறல் கிடைப்பதில்லை.” அவள் ஓடத் தொடங்கினாள். ஆனால் தேவர்களைக் கதறக் கதற அடித்த கை அவளைப் பற்றிவிட்டது. மறுகணம் வெட்ட வெளியே அவள் ஆடையாகிவிட்டது. ஜாதிக் குதிரையைப்போல் புஷ்டியும் வனப்பும் பூத்து நின்ற, அந்த நீண்டவுடல் அவனுடைய இரு கரங்களிலும் கிடந்தது. எல்லையில்லாத அந்தச் சௌந்தரியம் அவனை மெய்சிலிர்க்க அடித்தது. அந்த வனப்புடல் எதிர்த்துப் போராடுவதும் மழையையும் புயலையும்போல ஓர் அழகாகத்தான் பட்டது அவனுக்கு. தீயில்

விழுந்ததுபோல் துடித்தாள். மூவுலகையும் வென்ற வீரம் அவளை மிஞ்சிவிட்டது.

புஞ்சிகஸ்தலை பிரம்மனிடம் போய்க் கதறி அழுதாள். ராவணன், பிரம்மன்முன் குற்றவாளியாக நின்றான். ஆனால், அவன் தலை குனியவில்லை. 'இரண்டாக ஒடிந்தாலும் ஒடிவேன்; இன்னொருவனை வணங்கேன்' என்ற இயல்பான அவன் அகந்தை தலைதூக்கி நின்றது.

"தாத்தா, எதற்குக் கூப்பிட்டனுப்பினீர்கள்?"

"தவம் செய்வது சாதாரண மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்டது. நீ செய்த தவம், தவங்களுக்கெல்லாம் சிறந்தது. பஞ்சாக்கினி மத்தியில் தவம் புரிந்து, கிடைத்ததற்கரிய சித்தியெல்லாம் அடைந்திருக்கிறாய் நீ. மூவுலகின் ஆதிக்கமும் பெற்றுவிட்டாய். இவ்வளவு இணையற்ற தபஸ்விக்குப் புத்தி கெட்டுவிட்டதே என்று வேதனைப்பட்டுத்தான் உன்னை அழைத்தேன்."

"என் புத்தி கெட்டுவிடவில்லையே."

"இவ்வளவு தவம் செய்து பெற்ற வீரத்தைத் தனியே சென்ற ஓர் அபலையிடந்தான் காட்ட முடிந்ததா உனக்கு?"

"புஞ்சிகஸ்தலை விஷயமா?"

"ஆமாம்."

"தாங்கள் அப்ஸரஸ்களை எதற்குப் படைத்திருக்கிறீர்கள்? தேவர்களின் போகப் பொருளாகத்தானே?"

"தேவர்களுக்கு மட்டுந்தான்."

"ஏனோ?"

"நல்வினையின் பயனாகத் தேவர்கள் ஆனவர்கள் அவர்கள்."

"இந்த இன்பந்தான் அந்த நல்வினைக்கெல்லாம் பரிசா? அப்படியானால் என் தவ வலியால் மூவுலகிற்கும் ஈசனாகிவிட்டேன் நான். எனக்கும் அவள் உரியவள்தான். பார்க்கப்போனால் எனக்குத்தான் அவள் உரியவள். இந்தத் தேவர்கள் எல்லோரும் பேடிகள். என்னைக் கண்ட மாத்திரத்தில் ஆடை பறக்க, கிலி பிடித்து ஓட்டமெடுக்கிற சூரர்கள்! வீர்யமும் தேஜஸூம் அற்ற பேடிகள். நபும்சகன் ஆகிவிட்ட இந்திரனின் பெருங்குடி மக்கள்! 'மன்னனைப்போல் மக்கள்' என்ற முதுமொழியை மெய்யாக்க

வந்தவர்கள். இவர்களுக்கு அப்ஸரஸ்கள் இல்லாமல்தான் குறைச்சலாகப் போய்விட்டது! . . .”

“தேவர்களைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல உன்னை அழைக்கவில்லை. நீ அவளைப் பலாத்காரம் செய்தது உண்மைதானே?”

“உண்மைதான்.”

“எதற்காக இந்த இழிசெயலைச் செய்தாய்?”

“எதற்காகவா? இதென்ன கேள்வி? மிகவும் நகைப்பிற்கு இடமான கேள்வியல்லவா இது? மேலும் அது இழி செயலா?”

“நீ செய்தது இழிசெயல் இல்லையா?”

“ஏன் தவறு? பிதாமஹரே, புஞ்சிகஸ்தலையின் இணையில்லாத எழில் என்னைப் பரவசப்படுத்திவிட்டது. ஒரு மகாவீரனை அடிமைப்படுத்தியது, உங்கள் சிருஷ்டிக் கலையின் உயர்வுக்கு மகத்தான சான்றில்லையா?”

“பெரும் தபஸ்வியின் போக்கு இதுதானா?”

“என் தவம் என்ன செய்யும்? தவம் சக்தியைக் கொடுக்கும் ஆண்மையை அளிக்கும். மனத்தைக்கூடப் பிடித்து நிறுத்துமா, என்ன?”

“புஞ்சிகஸ்தலை உன்னை விரும்பவில்லையல்லவா?”

“நான் அவளை விரும்பினேன். இந்தப் பிரபஞ்சத்தில் அழகெல்லாம் அவள் வனப்பில் வடிந்திருந்தது. நான் மயங்கினேன்; பலாத்கரித்தேன். பலாத்காரம் செய்தது உண்மைதான். ஆனால், அது தவறு என்று எப்படிச் சொல்லமுடியும்?”

“தவறில்லையா! மிகவும் நேரான செயலா?”

“எந்த நியாயத்தைக் கொண்டு நீங்கள் அதைத் தவறென்று சொல்கிறீர்கள்? எனக்கு விளங்கவில்லை. நான் செய்தது மிகவும் இயற்கையான செயல்தான். இந்த அழகைக் கண்டு நான் எழுச்சி கொண்டது இயற்கைதான். நானாகக் கொண்ட எழுச்சி அல்ல அது, அந்த அழகே செய்ததுதான். இயற்கையின் ரீதியில் அது நேரான செய்கைதான்.”

“அவள் விருப்பத்திற்கு மாறாகக்கூட அவளைத் தனதாக்கிக்கொண்டது நேரான செய்கையா?”

“பிதாமஹரே, அழகு அநுபவத்திற்காக ஏற்பட்டதுதான்.

தேவர்களுக்காக மட்டும் என்று தனித்து அதை ஒதுக்கமுடியாது. அழகு எல்லா ஜீவர்களுக்கும் உரித்தான ஒரு பொதுச் சொத்து. புஞ்சிகஸ்தலை விஷயத்தில் தேவர்களுக்குள்ள உரிமை எனக்கும் உண்டு . . . அப்படி நான் செய்தது குற்றம் என்று கருதினால் சரீர அழகைப் படைத்த தாங்கள், அதைக் கண்டு மயங்கிவிடாமல் மனத்தை அடக்கும் தன்மையையும் படைத்திருக்க வேண்டும்."

"ஆகையால் நான் அவளைப் படைத்ததுதான் தவறு என்கிறாயா?"

"ஏறக்குறைய அப்படித்தான் . . . முதல் குற்றவாளி தாங்கள்தான். என் தவம் என் மனத்தை அடக்கப் பயன்படவில்லை. என் தவத்தையும் மீறிய அழகைக் கண்டு நான் சஞ்சலிக்காமல் இருந்திருந்தால் இந்தத் தொல்லை வந்திராது."

"உன் தவம் எப்படிப் பயனளிக்கும்? மனத்தை அடக்குவது தவத்தின் பயனல்ல; மனத்தை அடக்குவதுதான் தவம். நீ பஞ்சாக்கினி மத்தியில் செய்த தவங்களைவிட, அரை நாழிகை நேரம் சஞ்சலங்களுக்கிடையே ஆட்டங் காணாமல் நிற்பது ஆயிரம் மடங்குப் பெரிய தவமாகும். இயற்கை இயற்கை என்று நீ செய்தது நியாயம் என்று சொல்லிக்கொண்டாயே, அது வெறும் அபத்தக் கூற்று. நல்லது கெட்டது என்று பிரித்தெடுக்கும் சுயேச்சையுடன்தான் வாழ்வு கொடுக்கப்பட்டிருக்கிறது; இயற்கையை வெல்வதுதான் வாழ்வு."

"அந்த இயற்கையை வெல்ல என் தவம் உதவவில்லையே."

"உன் தவம் மிகவும் தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தது."

"அந்த மட்டமான தவத்தைக் கண்டு மகிழ்ந்துதானா தாங்கள் எனக்கு வரங்களெல்லாம் தந்தீர்கள்!"

"தொடங்கிய இடத்திலேயே நீ இன்னும் நின்றுகொண்டிருக்கிறாய். மீண்டும் மீண்டும் பேசி என்ன பயன்? படைத்தவனே எல்லாவற்றையும் கொடுத்துவிட்டால் படைக்கப்பட்டவனுக்கு என்ன வேலை இருக்கிறது? உன் விபரீத புத்தி உன்னைக் குதர்க்கவாதம் செய்யத் தூண்டுகிறது. பலாத்காரம் செய்ததை நியாயம் என்று மிருகந்தான் சொல்லும். நீ உயர்ந்த ஜீவனாகப் பிறந்ததன் நோக்கமே பாழ்த்துவிட்டது. நீயோ உன் மனத்தைக் கட்டி நிறுத்த முடியவில்லை என்று சொல்லுகிறாய். இனி எந்தப் பெண்ணையாவது – உன்னை விரும்பாத பெண்ணை – பலாத்காரம் செய்யும் எண்ணத்துடன் நீ தொட்டால் உன் தலை நூறு

துண்டாக வெடித்துவிடும் . . . நீ போகலாம்."

இடிகுரலில் இந்தச் சாபம் எழுந்து விழுந்தது.

குற்றவாளி சிரித்தான்.

"பிதாமஹரே, அவசரப்பட்டுச் சாபம் கொடுத்துவிட்டீர்களே. மனத்தை அடக்கும் சக்தியை இயல்பாக ஏற்படுத்தாவிட்டால் உம்முடைய சிருஷ்டி அலங்கோலமாகத்தானே முடியும்? . . . என்ன செய்கிறது? கலைஞர்களுக்குக் காரணகாரிய ரீதியில் ஒன்றையும் செய்ய முடியாது. ஆதி கலைஞரான நீரும் மூடராக இருப்பதில் என்ன ஆச்சரியம்!" என்று சிரித்துக்கொண்டே வெளியேறினான்.

அவன் திரும்பி இலங்கையை நோக்கி பயணமானான் வான வீதியில் மின்னல் வெட்டிற்று.

புஞ்சிகஸ்தலை அங்கே நின்றுகொண்டிருந்தாள், வளைவும் குழைவுமாக. அவன் வேதனை எழுந்தது. உடல் தீப்பற்றி எரிந்தது.

"புஞ்சிகஸ்தலே!"

"மிருகமே, என்னைத் தொடாதே!"

"ஏன் ஒதுங்கி ஓடுகிறாய்? ஓடித்தான் என்ன பயன்?"

அவளைப் பற்றப்போனான் அவன். பளிச்சென்று தீ சுட்டாற்போல் கையை இழுத்துக்கொண்டான்.

புஞ்சிகஸ்தலை எக்களிப்புடன் சிரித்தாள்; சிரித்துவிட்டு நடந்தாள். அவளுடைய பின்னழகைக் கண்டு, கால் ஒடிந்தவன் போல நின்றான் லங்கேசன். அவன் உடல் தீப்பற்றி எரிந்தது.

காதல், 1956க்கு முன்

# அக்பர் சாஸ்திரி

மாயவரம் ஜங்ஷனில் இறங்கிச் சாப்பிட்டுவிட்டுத் திரும்பியபோது, வண்டியில் மூன்றாவது ஆத்மா ஒன்று என் தோல் பையையும் துணிப் பையையும் நடுவே நகர்த்தி, என் இடத்தில் உட்கார்ந்து பூரி உருளைக்கிழங்கு சாப்பிட்டுக் கொண்டிருந்தது. வெறுமனே சாப்பிடவில்லை. உருளைக்கிழங்கு ஒட்டிக்கொண்டிருந்த விரல்களை ஆட்டி ஆட்டிப் பேசிக்கொண்டிருந்தது. குரலாவது குரல்! தொண்டைக்குள் வெண்கலப் பட்டம் தைத்த குரல். அதிகாரமும் வயசான பெருமையும் எக்களித்துக் கொண்டிருக்கிற குரல்.

"எக்ஸைஸ் இலாக்கான்னா என்ன டெஸிக்னேஷன்?" என்று எக்களிப்பும் அழுத்தமுமாக அந்தக் குரல் போட்ட கேள்விக்கு, அடக்கமும் புன்சிரிப்புமாக என்னமோ மேலதிகாரிக்குப் பதில் சொல்லுகிறாற்போல "சூப்ரிண்டு" என்றார் மேலண்டைக் கோடியில் இருந்தவர். சீர்காழி ஸ்டேஷனில் ஏறி உட்கார்ந்திருந்த என்னை லட்சியமே செய்யாமல் ரயில்வே கைடுக்குள் முகத்தைப் புதைத்துக்கொண்டிருந்த இந்த ஆசாமிக்குப் புது ஆசாமியைக் கண்டு என்ன மரியாதை! என்ன வினயம்!

எதிரே 'சூப்ரிண்டின்' மனைவி காலை நீட்டிப் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தவள், கண்ணைத் திறந்து ஒரு தடவை பார்த்துவிட்டு, மறுபடியும் மூடிக்கொண்டாள். காலடியில் உட்கார்ந்திருந்த குழந்தைகள் இரண்டும் உருளைக்கிழங்கு சாப்பிடுகிறவரையும் அவருக்கு பதில் சொல்லுகிற அப்பாவையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தன.

"எங்கேருந்து வறீர்"

"மெட்ராஸிலேருந்து!"

"பகல் வண்டியிலே மெட்ராஸிலேயிருந்து யாராவது வருவாளோ?"

"இல்லை, நேத்து ராத்திரிப் புறப்பட்டேன். கடலூரிலே இறங்கி, என் மருமாளுக்கு உடம்புக்கு சரியில்லேன்னா, பாத்துட்டு இன்னிக்கு மத்தியானம் கிளம்பினோம்."

"எதுவரையில் பயணம்?"

“தஞ்சாவூருக்கு. தாயாருக்கு உடம்பு சரிப்படலே. பார்க்கப் போறோம்.”

“அப்படியா? . . . ம்!” என்று எழுந்து இலையை ஜன்னல் வழியாக வீசி எறிந்தார் வந்தவர். காற்று வாக்கில் இலை என் மேல் பறந்துவிடப் போகிறது என்று கதவோரமாக இருந்த நான், சற்று உள்ளே நகர்ந்துகொண்டேன். வண்டி அப்போது ஸ்டேஷனை விட்டுக்கிளம்பி லெவல் – கிராஸிங்கைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தது.

அவர் கதவைத் திறந்துகொண்டு உள்ளே கையலம்பப் போனார். நடுவே நகர்த்தப்பட்டிருந்த தோல் பையையும் துணிப் பையையும் நகர்த்திக்கொண்டு, காலியான என் சீட்டில் உட்கார்ந்துகொண்டேன். கையலம்பிவிட்டு வாயைத் துடைத்துக்கொண்டவர் இடத்தை மீட்டுக்கொண்ட என்னை அலட்சியமாகப் பார்த்துவிட்டு நடுவில் உட்கார்ந்துகொண்டார்.

ஆள் ஆறடி உயரத்துக்கு குறைவில்லை. இரட்டை நாடியில்லை.ஆனால் ஒல்லியுமில்லை – சாட்டை மாதிரி முறுக்கு ஏறிய உடம்பு. நேரான உடம்பு. உட்கார்ந்திருந்தபோதுகூட வளையா நேர் முதுகு. கறுப்பில்லை. மாநிறமுமில்லை. அப்படி ஒரு கறுப்பு. சந்திர வளைய வழுக்கையில் ஓரம் கட்டியிருந்த தலைமயிர் முழுவதும் நரைத்திருந்தது. நீள மூக்கு, நீளக் கை, கால். குரலில் தெறித்த அதிகாரத்துக்கேற்ற உடம்புதான்.

உட்கார்ந்துகொண்டவர் “நீ போடா கிடக்கு, சின்னப்பையா!” என்று சொல்லாமல் இலேசாக எனக்கு முதுகைக் காட்டிக்கொண்டு திரும்பி உட்கார்ந்துவிட்டார்.

“ம் . . . தாயாரைப் பார்க்கப் போறீராக்கும்? என்ன விசேஷம்?”

“போன மாசம் உடம்பாகக் கிடந்தா. அப்பப் போய்ப் பார்க்க முடியலே. எனக்கு இப்பத்தான் லீவு கிடைச்சுது. நீங்க . .?” – அதே அடக்கம், புன்னகை.

“நானா? எனக்கு மதுரை. கோவிந்த சாஸ்திரின்னு பேரு. அட்வகேட்டா யிருக்கேன். ஒரு கேஸ் விஷயமா பட்டணம் போயிட்டு வரேன். மாயவரத்திலே எங்க சகோதரியைக் கொடுத்திருக்கு. இறங்கி பார்த்துட்டு வரேன். முதல் கிளாஸ்லே டிக்கெட் கிடைக்கல்லே. ‘சகிண்ட்’ கிளாஸ்தான் இருக்குன்னான். வாங்கிண்டுவந்து ஏறிட்டேன். ராத்திரி சாப்பிடறதில்லே. பலகாரம் பண்றேனே அண்ணான்னா தங்கை. அடி போடி பைத்தியம்னு

வந்துட்டேன். பூரி இரண்டு வாங்கினேன். சாப்பிட்டேன். ஒண்டி ஆளுக்காகப் பலகாரம் பண்ணச் சொல்லவாவதுய்யா! இப்ப என்ன செத்தா போயிட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே கோவிந்த சாஸ்திரி வண்டியைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டார். குழந்தைகளைப் பார்த்தார்.

"உம்ம குழந்தைகளா?"

"ஆமாம்."

"என்ன வயசாகிறது?"

"அவன்தான் பெரியவன். பத்து ஆறது. இவ சின்னவ. இப்ப ஏழு நடக்கிறது!"

"மலேரியா அடிச்சுக் கிடந்தாப்ல இருக்கே ரண்டும். எலே இங்க வா . . . வாடா . . . பரவால்லே. வா . . . ஒண்ணும் பண்ணலே."

பையன் வந்து நின்றான். குச்சி குச்சியாக இருந்த கையைப் பிடித்தார் கோவிந்த சாஸ்திரி. கை முழுவதையும் ஒருமுறை தடவினார்.

"நாக்கை நீட்டு, கண்ணைக் காட்டு."

"அதெல்லாம் ஒன்றுமில்லை. சாப்பிடவே மாட்டான். சாப்பிட உட்கார்ந்தான்னா, பருப்பு நன்னாலே, நெய் நாத்தம் அடிக்கிறது, இப்படி ஏதாவது சொல்லி எழுந்திண்டு போயிடுவான்" என்றார் கோடி ஆசாமி.

"சட்டையைத் தூக்கு."

பையன் சட்டையைத் தூக்கி வயிற்றைக் காண்பித்தான். அதை ஒரு அழுத்து அழுத்தி "ம்" எனறவண்ணம் அவனைப் பார்த்தார்.

"ஏண்டா! முழங்கால், முழங்கையெல்லாம் இப்படி எலும்பு முட்றது? கண்ணு சுண்ணாம்பா இருக்கு. நித்யம் ஒரு முட்டை கொடுமையா."

"எல்லாம் பார்த்தாச்சு. எதையும் தொட மாட்டேங்கறான் சார்."

"காட்லிவர் ஆயில்."

"அதுவும் கொடுத்துப் பார்த்தாச்சு."

"காட்லிவர் ஆயிலை 'மால்டா'க் கொடுக்கிறது. தித்திப்பாயிருக்கும்."

"பார்க்கணும்."

கோவிந்த சாஸ்திரி இன்னும் கையை விடவில்லை. பார்வையையும் எடுக்கவில்லை.

"இல்லாட்டா ஒண்ணு செய்யறீரா இவனுக்கு?"

"என்ன?"

"கொள்ளு தெரியுமா கொள்ளு."

" . .?"

"குதிரைக்கு வைப்பாளேய்யா, அது."

"ம் ம்."

"அதைத் தினமும் இவ்வளவு எடுத்துத் தண்ணியை விட்டுக் கொதிக்க வைச்சு, அந்தத் தண்ணியைச் சாப்பிடச் சொல்லும். அப்புறம் அந்தச் சுண்டலையும் கொஞ்சம் உப்பைப் போட்டுச் சாப்பிடச் சொல்லும். பையன் அரபிக் குதிரை மாதிரி ஆறானா இல்லையா, பாரும். இப்ப நான் எங்க வீட்டுக்கு அழைச்சிண்டு போய் மூணு மாசம் கொடுத்தேன்னா, அப்புறம் உம்ம பையன்தான் இவன்னு நான் சத்தியம் பண்ணினாலொழிய உம்மாலே நம்ப முடியாது. என்ன! செய்யறீரா?" அதட்டுபவர்போலக் கேட்டார் சாஸ்திரி.

"செய்யறேன்."

"இதோ பாரும், நான் டாக்டர் இல்லே. அதுக்குப் படிச்சுக் கிடிச்சுப் பாஸ் பண்ணலே. ஆனா எங்க வீட்டிலேருந்து போற மருந்துகளும் அங்க வரவாளும் கணக்கு வழக்கு இல்லே. எல்லாம் கடசீலே பாட்டியம்மா வைத்தியம். கருவேப்பிலைக் குழம்பு வச்சுப் பத்துநாள் வட்டம் சாப்பிடுவேன். ஏழுநாள் வட்டம் வேப்பம் பூவைச் சாதத்து மேலே வச்சு ஆமணக்கெண்ணையைக் காய்ச்சி அது மேலே ஊத்தச் சொல்லிப் பிசைஞ்சு சாப்பிட்டுடுவேன். நீர் நம்பமாட்டீர். இதுவரை டாக்டருக்குன்னு ஒரு தம்பிடி? பேசப்படாது. பெரியவா புண்ணியத்துலே பத்துக் காணி நிலம் இருக்கு. ஆனால் அதிலேருந்து ஒரு நெல்லு வித்த காசு டாக்டருக்குப் போனதில்லை."

"நல்ல புண்ணியம் பண்ணினவா நீங்க. ஹி ஹி ஹி."

"புண்ணியமாவது, புடலங்காயாவது. எல்லாம் நம்ப மனோபலத்தைப் பொருத்திருக்குய்யா."

“என்னமோ சார்! நான் தலையெடுத்த நாளையிலேருந்து பாருங்கோ. டாக்டர் வராத நாள் கிடையாது. இதைப் பாருங்கோளேன். நீங்கதான் பார்க்கறேளே, எதிர்த்தாப்பல கிழிச்ச நார் மாதிரி படுத்துண்டு கிடக்கா. கடலூர்லே வண்டி ஏறினோம், படுத்துண்டா. இன்னும் ஏந்திருக்கலே. புருஷா முன்னாடி நிக்கமாட்டா அந்த நாள்ளே. அவளேதான் இப்படி ஆயிட்டா. என்னத்தைப் பண்றது?” என்று மனைவியைப் பார்த்தார் ‘சூப்ரிண்டு’.

சூப்ரிண்டு மனைவி இலேசாகப் பாதிக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

“என்ன உடம்பு?”

“அந்தக் காலத்திலே பம்பரமாக சுத்தி வந்து காரியம் பண்ணிண்டிருந்தவ. திடீர்னு ஒரு நாளைக்கு வயத்தை வலிக்கிறதுன்னா. டாக்டர் வயத்திலே கட்டி, ஆபரேஷன் கேஸுன்னார். செஞ்சுது. அது தேவலையாச்சு. அப்புறம் பிரமை புடிச்சாப்பல எது கேட்டாலும் பதில் சொல்றதில்லே. அப்படி நாலு வருஷம் உட்கார்ந்திருந்தா. அதுக்கு வேற ஊசி, மாத்திரை கொஞ்சமில்லே. அது தேவலையாப் போயிடுத்து. இப்ப பத்து வருஷமா தினம் போது விடிஞ்சா தலைவலி, கால் துணியாப் போயிடறது. எழுந்து நடமாட முடியலே. காப்பி சமையல் முதல்கொண்டு, கூட நான் நிக்க வேண்டிருக்கு.”

சூப்ரிண்டு மனைவி கண்ணை மூடாமல் இதைக் கேட்டுக் கொண்டேயிருந்தாள்.

“வாரா வாரம் எண்ணெய் தேச்சுக்கணும்” என்றார் கோவிந்த சாஸ்திரி.

“எண்ணெயா! ஒரு முட்டைத் தலையிலே வச்சாப்போரும், ‘ஐயோ கடப்பாறை போட்டு இடிக்கிறதே இடிக்கிறதே’ன்னு அலற ஆரம்பிச்சுடுவா. எண்ணெய்தான் சத்ரு அவளுக்கு.”

“என்னய்யா ஆச்சரியம்! எண்ணெய் ஒத்துக்காத ஒரு மனுஷா உண்டோ? நல்லெண்ணெய் தலைவலிக்குப் பரம சஞ்சீவி ஆச்சேய்யா.”

“எண்ணெயைத் தவிர மீதி எது வேணும்னாலும் சொல்லுங்கோ. போடாத ஊசியில்லை, குடிக்காத மருந்து இல்லே. இந்தத் தலைவலி நின்னாப்போரும்” என்று படுத்தவாறே வாயைத் திறந்தாள் சூப்ரிண்டின் மனைவி.

பேச ஆரம்பித்த பிறகுதான் தெரிந்தது. வயதுக்கு மீறிய மூப்பு.

முகத்தில் சோகை, வாயில் குழறல். அழகாக இருந்த அம்மாள் இப்போது, விகாரமாக மாறிவிட்டிருந்தாள்.

“தலைவலியைத்தானே நிறுத்தணும்?” என்று கேட்டுவிட்டு வெளியே பார்த்தார் கோவிந்த சாஸ்திரி.

வண்டி குத்தாலத்தில் நின்றது. ஒரு அணாவுக்கு வேர்க்கடலையை வாங்கி மென்றவாறு யோசனையில் ஆழந்திருந்தார் அவர். வண்டி புறப்பட்டதும் தம் பேச்சை ஆரம்பித்தார்.

“சொல்லட்டுமா?” என்று அவர் ஆரம்பித்ததும், அவசரம் அவசரமாக புஷ்கோட் பையிலிருந்த ஒரு டயரியையும் பென்சிலையும் எடுத்து வைத்துக்கொண்டார் ‘சூப்ரிண்டு’.

“எழுதிக்கிறீமா? சரி வேப்பம் பருப்பு, வெள்ளை மிளகு, கசகசா, சுக்கு . . .”

இன்னும் நாலைந்து சொன்னார் அவர். எனக்கு அது மறந்துவிட்டது.

“இதையெல்லாம் பால்லெ போட்டு ஊறவச்சு நசுக்கி அம்மியிலே ஓட்டி, உருண்டை உருண்டையாப் பண்ணிக் காய வச்சுக்கிறது. அப்புறம் நித்தியம் காலமே ஒரு உருண்டையைப் பால்லெ கலந்து தலையிலே தேச்சு ஸ்நானம் பண்ணச் சொல்லும். ஒரு மாசத்துக்கப்புறம் எனக்கு எழுதும்.”

அமிருதம் கிடைத்த மாதிரி சூப்ரிண்டு எழுதிக்கொண்டு நாலு தடவைகள் சந்தேகங்களைக் கேட்டு தெளிந்து, டயரியைத் திருப்பித் திருப்பி வாசித்துப் பையில் போட்டுக்கொண்டார்.

“இதுதான் கல்கம். எல்லாக் ‘கம்ப்ளெய்ண்டு’க்கும் சேத்திருக்கேன் அம்மா! உங்க தலைவலி இன்னியோட தீந்துது” என்றார் சாஸ்திரி.

அந்த அம்மாள் எழுந்து உட்கார்ந்து, “அதை இன்னொரு தடவை நன்னாக் கேட்டு வச்சுக்குங்கோ” என்றாள் தன் புருஷனைப் பார்த்து.

சாஸ்திரி இன்னும் பல ரகசியங்களையெல்லாம் சொன்னார். சொறி சிரங்கு, சீதபேதி, ஆஸ்துமா, பாலுண்ணி – இப்படிப் பல வியாதிகளுக்கு அவரிடம் சஞ்சீவிகள் இருந்தன. சூப்ரிண்டின் கண்கள் மேலே அகல இடமில்லை. அப்படி ஒரு வியப்பு. தன்வந்திரி, சித்தர்கள் – எல்லாரும் அவர்மேல் கருணைக்கொண்டு இரண்டாம் வகுப்பில் சக பிரயாணியாக வந்து காட்சி கொடுத்து, வினை தீர்த்த பரவசத்தை அவருடைய

மரியாதையிலும் அடக்கத்திலும் காண முடிந்தது.

"இத்தனைக்கும் நான் டாக்டர் இல்லே" என்றார் சாஸ்திரி மீண்டும். "எனக்கு வயசு எத்தனை இருக்கும்? எங்கே? சொல்லும், பார்ப்போம்."

வியப்பில் ஆழந்து கிடந்த 'சூப்ரிண்டு' தயங்கிப் புன்சிரிப்புச் சிரித்தார்.

"சும்மாச் சொல்லும்?"

"ஐம்பது இருக்கும்."

"ஐம்பதா? எனக்கு அறுபதாம் கலியாணம் ஆகியே எட்டு வருஷங்கள் ஆச்சுய்யா."

"அறுபத்தெட்டா! உங்களுக்கா!"

முதுகைப் பார்த்துக்கொண்டிருந்த எனக்கும் நம்பத்தான் முடியவில்லை.

"பின்னே என் பெரிய பொண்ணுக்கே இப்ப வயசு நாப்பத்தஞ்சு. அவ பிள்ளை 'அக்கௌண்ட்ஸ்' ஆபீசரா முந்தாநாள்தான் வேலை ஒத்துண்டிருக்கான். என் பெரிய பையனுக்கு வயசு நாற்பது முடிஞ்சுடுத்து . . . நீர் மாத்திரம் இல்லை. பார்க்கறவா ஒவ்வொருத்தருமே இப்படித்தான் ஆச்சரிப்பட்டுண்டிருக்கான்னேன்."

"ஏ, அப்பா!" என்று அவரையே ஒரு நிமிஷம் பார்த்து, 'சூப்ரிண்டு' புன்சிரிப்புப் பூத்துக்கொண்டிருந்தார். "நீங்கள்ளாம் அந்தக் காலத்து மனுஷா."

"யாரு? நன்னாச் சொன்னீரே, எந்தக் காலத்திலேயும் முடியும்யா!" திடீரென்று கோவிந்த சாஸ்திரி ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தார். குரலும் தணிந்தன. "ரகசியம் என்ன தெரியுமா? எட்டாவது குழந்தை பிறந்தது. என் சம்சாரத்தைப் பார்த்தேன். என்ன சரிதானேன்னேன். சரின்னூட்டா. அதிலேருந்து ஒதுங்கிப்பிட்டோம். அப்ப எனக்கு முப்பத்தெட்டு வயசுதான்."

"அப்படியா!"

"அப்படியேதான். எங்க அப்பா அம்மா செஞ்ச தப்பையும் உணர்ந்துனுட்டேன். எனக்குப் பதினேழு வயசிலே கலியாணம் பண்ணி வச்சாளே . . . அதெச் சொல்றேன். என் பிள்ளைகளுக்கெல்லாம் முப்பது வயசிலேதான் கலியாணம் பண்றது. பெண்களுக்கு இருபத்திரண்டு வயசுக்கு அப்புறம் தான் கல்யாணம் பண்றதுன்னு தீர்மானம்

பண்ணிண்டேன். அப்படியே நடத்திண்டும் வரேன். நீர் பார்க்கிறது எனக்குப் புரியறது. என்னடாது ஒரு பக்கம் சுக்குக் கஷாயம், கருவேப்பிலைக் குழம்புன்னு ரொம்பப் பாட்டியா இருக்கான், இன்னொரு பக்கம் பார்த்தா ரொம்ப "அல்ட்ரா"வா இருக்கானேன்னு நினைக்கிறீர். உண்டா, இல்லியா?"

"ஆமாம் ஆமாம், ஹிஹிஹி."

"அதனாலேதானே என் சம்பந்தி என்னை, 'அக்பர் சாஸ்திரி'ன்னு கூப்பிட ஆரம்பிச்சார் . . . ஏன்னேன். அக்பர் சக்கரவர்த்தி எப்படியிருந்தான்? உலகத்திலே இருக்கிற நல்லதெல்லாம் சேர்த்துத் தனக்குன்னு ஒரு வாழற முறையை ஏற்படுத்திண்டான். அந்த மாதிரி நீங்களும் இருக்கேள்ன்னார் அவர். பொண்களுக்குக் கலியாணம் பண்ணினேன், புள்ளைகளுக்கும் பண்ணினேன். முதல் காரியமா ஊர்வலத்தை நிறுத்தினேன். அந்தக் காலத்திலே பத்து வயசிலே கலியாணம் பண்ணினா, திருஷ்டி பட்டுடப் போறதேன்னு குழந்தைகளை வைச்சு ஊர்கோலம் எடுக்கறது. இப்பப் புள்ளைக்கு முப்பது வயசு. பொண்ணுக்கு இருபத்தஞ்சு. ஊர்வலமாவதுய்யா? இரண்டாவது பொண்ணுக்கு கலியாணம் பண்றபோது ஒரு கிழவி வந்தா. 'என்னஙகாணும் ஊர்வலம் இல்லேன்னுட்டீராமே'ன்னா. 'ஊர்வலமா, உன்னை வாணா வச்சு நாலு தெருவிலேயும் சுத்தச் சொல்றேன்'னேன். அப்புறம் ஏன் பேசறா? . . . அ! நம்ம தாத்தாவும் அப்பாவும் பண்ணினாங்கறதுக்காக எல்லாத்தையும் செஞ்சுற முடியுமோ? காலே காலே நம்ம புத்தியை உபயோகிச்சு மாத்தாட்டா நாம் என்ன மனுஷாளா? மிருகங்களா? ஒரு உதாரணம் சொல்றேன். புருஷா சாப்பிட்ட அப்புறம்தான் பொண்டுகள் சாப்பிடறதுன்னு வச்சிண்டிருக்கோமே? அது எதிலேய்யா எழுதிருக்கு? உனக்குச் சமைச்சும் கொட்டிப்பிட்டு, மீதியிருக்கிற அடிவண்டலெல்லாம் அவ தனியா சாப்பிடணுமோ? என்ன நியாயம்யா? எங்க வீட்டிலே என்ன பழக்கம் தெரியுமோ? நானும் சம்சாரமும் சேர்ந்துதான் சாப்பிடுவோம். வீட்டுக்கு யார் வந்தாலும் சரி . . . குழந்தை குஞ்சு பொண்டுகள் எல்லாரையும் சேர்த்து உட்கார்த்தி வைச்சித்தான் சாப்பிடுவேன். அவாளோட என் சம்சாரத்தையும் உட்கார வைச்சுப்பிடுவேன். கும்பகோணத்திலே மூணாவது சம்மந்தியிருக்கார். ஜவுளிக்கடை வச்சிருக்கார். சக்ரபாணி அய்யர்னு, அவர் நான் இப்படியெல்லாம் இருக்கறதைப் பார்த்துப்பிட்டு ஏதோ பரிகாசமா பேசினாராம். நான் சொல்லிப்பிட்டேன். 'சார்! இதப்பாருங்கோ, நான் உங்க வீட்டுக்கு வந்தா இந்த மாதிரி சேத்து வச்சுத்தான் போடணும்

இல்லாட்டா வரவேயில்லேன்'னேன். அப்புறம் வழிக்கு வந்தார். இத்தனை வயசுக்கு மேலே இந்தக் கிழவனுக்குச் சபலத்தைப் பாரும்னு யாராவது சொல்லிண்டிருப்பன். சொல்லட்டுமே, இதுக்கெல்லாமா பயந்து முடியும்? முப்பத்தெட்டு வயசிலேருந்து நான் எப்படியிருக்கேன்னு எனக்குன்னாய்யா தெரியும்! எல்லாரோடும் உட்கார்ந்து சேர்ந்து சாப்பிட்டு, ஒரு மணி நேரம் எல்லாரையும் பக்கத்திலே வச்சிண்டு கலகலன்னு பேசி சந்தோஷமா இருக்க முடியலேன்னா அவன் என்ன ஆள். ஐயா! யார் என்ன சொன்னாலும் சரி. நான் அப்படித்தான் இருப்பேன். இருந்துண்டு வரேன். அதனாலேதான் அறுபத்தெட்டு வயசுன்னவுடனே நீர் பிரமிக்கிறீர். நான் மாத்திரம் இல்லே. என் சம்சாரம் குழந்தைகளெல்லாம் இப்படித்தான் இருப்பா. டாக்டருக்குன்னு காலணா கொடுத்ததில்லையா! சத்தியம் வேணும்னாலும் பண்ணத் தயார். போதுமா?" என்றார் சாஸ்திரி.

சத்தியமே பண்ண வேண்டாம், உங்களைப் பார்த்தாலே போதும் என்று நினைத்துக்கொண்டேன். என்னை இவர் லட்சியம் பண்ணாவிட்டால் என்ன? பேசாவிட்டால் என்ன? அக்கறையில்லை. இந்த வயசில் இவ்வளவு நேர் முதுகு – கணார் கணார் என்று இந்தக் குரல். டாக்டருக்கு ஒரு நெல்கூடக் கொடுக்காத பத்துக் காணி – ஏ அப்பா.

எதிரே சூம்பின கையும் காலுமாக இரண்டு குழந்தைகள். துணியாகக் கிடந்த 'சூப்ரிண்டு' மனைவியின் சோகை பாய்ந்த உடல். 'சூப்ரிண்டி'ன் முகத்தில் நிரந்தரமாகக் கோடிட்டுவிட்ட குடும்பக் கவலை. இத்தனைக்கும் நடுவில் அக்பர் சாஸ்திரி, சித்த புருஷர்கள் அரைக்கைச் சட்டையும் வேஷ்டியும் அணிந்து வந்ததுபோல் உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பின்னால் வயிற்றுவலி – அதாவது நான். என்னை மூன்று வருஷங்களாக வதைத்துக்கொண்டிருக்கிற வயிற்றுவலியை நான் சொல்லவில்லை. 'சொல்லு சொல்லு' என்று அது முனகின குரல் கேட்டது. அது மட்டுமில்லை; 'இஸினோபீலியா இஸினோபீலியா' என்று என் மனைவி எட்டு வருஷங்களாக எனக்கும் அவளுக்கும் ராத்தூக்கம் வராமல் கண் பனிக்கப் பனிக்க இருமுகிற வாதையையும் சொல்லு சொல்லு என்றது. சொல்லுகிறேன் சொல்லுகிறேன் என்று அவற்றைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தேன். திடீர் என்று எப்படிச் சொல்கிறது? முன்னால் இரண்டு வார்த்தையாவது அவருடன் பேசவேண்டும் அதற்குச் சமயம் கிடைக்காமலா போகும்? . . .

"மதுரைக்கு எப்பவாவது வந்தீர்னா, வீட்டுக்கு வாரும். சந்தோஷமா எப்படியிருக்கிறது, திடகாத்திரமா எப்படி இருக்கிறதுன்னு புரியும்.

டாக்டரை எப்படி அண்டவிடாமல் வாழறதுன்னு தானே புரிஞ்சுக்குவீர். பயந்திண்டு வராம இருந்துடாதீர். அதுக்காக வந்தவர்களுக்குக் குளிக்க வெந்நீர் போடாமல் இருந்துட மாட்டோம். என்னோடத்தான் நீரும் எழந்திருக்கணும்னா காலமே நாலு மணிக்கே எழுப்பிட மாட்டேன். கவலைப்படாதீர் என்ன, வறீமா?"

"கட்டாயம் வரேன்."

"உம்ம சம்சாரத்தையும் அழைச்சிண்டு வரணும். என்ன வறீமா?"

எனக்கும் அக்பர் சாஸ்திரி வீட்டுக்குப் போக வேண்டும்போல் தானிருந்தது. கூப்பிட்டால்தானே? மனுஷன் தற்செயலாகக்கூடத் திரும்பமாட்டார் போலிருக்கிறது. ஓர இடத்தைக் கொடுக்கவில்லை என்று மனுஷனுக்கு வருத்தமோ?

திருவிடைமருதூர் ஸ்டேஷன் வந்தது. "மகிழமாலை விற்குமே இங்கே?" என்று எழுந்தார் அக்பர் சாஸ்திரி. எதிர் ஜன்னலண்டை எழுந்துபோனார். "மகிழ . . . மகிழ . . . மகிழ" என்று பாதி பாதியாகக் கூப்பிட்டார். பேசின பேச்சில் தொண்டை சோர்ந்துவிட்டது. குழந்தைகளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டார்.

"சார்!" என்று சொல்லாமல் என்னை ஜாடைகாட்டி அழைத்தார். அவர் விழியைப் பார்த்து அருகே ஓடினேன். மார்பைத் தடவு என்று சைகை காட்டினார். சடசடவென்று புத்தானைக் கழற்றி மார்பைத் தடவினேன்.

"கும்பகோணத்திலே . . ." அவரால் மேலே பேச முடியவில்லை.

"கும்பகோணத்திலே என்ன?"

"சக்ர . . . சக்ர . . . சக்ர . . ."

பேச முடியாமல் அப்படியே சாய்ந்துகொண்டார். பையனின் கை அவர் முதுகுக்கும் ஜன்னலுக்கும் இடையே அகப்பட்டுக்கொண்டது, இழுத்துக்கொண்டான்.

"என்ன சார், என்ன சார்" என்று 'சூப்பிரண்டு' எழுந்து வந்தார்.

"சார், சார், கோவிந்த சாஸ்திரிகள்" என்று உரக்கக் கூப்பிட்டார்.

அவர் மனைவி எழுந்து, "என்ன?" என்று கண்ணைத் திறந்து நிலைமையைப் புரிந்துகொண்டு எழுந்து உட்கார்ந்தாள். "இந்தாண்டை வாடா கிச்சு, கௌரி!" என்று குழந்தைகளைக் கூப்பிட்டாள்.

நான் மார்பைத் தடவிக்கொண்டிருந்தேன். “என்ன சார், என்ன சார்?” என்று பதறினார் ‘சூப்ரிண்டு’.

மூக்கில் கை வைத்துப் பார்த்தேன்.

“என்ன சார்?”

“கும்பகோணத்திலே அவர் சம்பந்தி பேர் என்ன என்று சொன்னார்.”

“சக்ரபாணி அய்யர், ஜவுளிக்கடை வைச்சிருக்காராம்.”

“நீங்க இறங்கிப் போய் ஸ்டேஷன் மாஸ்டர்கிட்டச் சொல்லி அவரைக் கும்பகோணம் ஸ்டேஷனுக்கு வரச் சொல்லி ‘மெஸ்ஸேஜ்’ கொடுக்கச் சொல்லணும்.”

“ஏன்! என்ன?”

“ஒன்றுமில்லை.”

“அப்படின்னா?”

அவர் மனைவி அருகில் வந்தாள். “அட, ராமா!” என்று சாஸ்திரியைப் பார்த்தாள்.

“என்ன?” என்றார் ‘சூப்ரிண்டு’ மறுபடியும்.

டாக்டர் உதவியில்லாமேலே அக்பர் சாஸ்திரி மனிதன் கடைசி காரியத்தையும் செய்துவிட்டார் என்று அவருக்குப் புரிந்தபாடில்லை.

கல்கி, ஏப்ரல் 1959

# துணை

“பையன்கூட வந்துவிட்டான்” என்று நான் உள்ளே நுழைந்து செருப்பை மாடத்திற்குள் கழற்றும்போது, என் தகப்பனார் சொல்லிக்கொண்டிருந்தார்.

“வந்துட்டானா, பேஷ்”

“ஏண்டா மார்க்கெட்டுக்குப் போயிருந்தியா?”

“ஆமாம்ப்பா” என்று சொல்லிவிட்டு, அப்பாவோடு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சின்னக் குழந்தையைப் பார்த்து “வாங்கோ” என்று வரவேற்றேன்.

“சௌக்யம்தானே, தாத்தா? இதோ வந்துவிட்டேன்” என்று கறிக்காய் பையை உள்ளே கொண்டு வைக்கப் போனேன்.

“யாருடா வந்திருக்கா கூடத்திலே?” என்று அம்மா கேட்டாள். அம்மாவுக்கு அரைக்கண். சதை வளர்ந்திருந்தது.

“சின்னக் குழந்தை தாத்தா?”

“சின்னக் குழந்தையா. நானும் நெனச்சேன், குரல் அது மாதிரி இருக்கேன்னு.”

கூடத்திற்கு வந்தேன்.

“தாத்தா சௌக்யமா இருக்காரா?”

“யாரு, தோப்பனாரைத்தானே கேக்கறே?”

“ஆமாம்.”

“சௌக்யமா இருக்கார். நல்ல வேளையா குளுரு நாள் போயிட்டுது. இந்த பிப்ரவரி, மார்ச்சு தாண்டியாயிடுத்துன்னா ஒரு கண்டம் தாண்டினாப்போலே.”

“ஏன்?”

“எங்கப்பாவுக்கும் ஆஸ்த்துமான்னா, குளிர் வந்துடுத்தோ இழுப்பு, இறைப்பு எல்லாம் வந்துவிடும். அப்ப அவர் படற அவஸ்தையைக்

கண்கொண்டு பார்க்க முடியாது."

"டாக்டர் பார்க்கிறாரோல்லியோ?"

"பார்க்கறான். நல்ல டாக்டர்தான் பார்க்கறான். நம்ம கலியாணசுந்தரம்தான் பார்க்கறான். மருந்து செட்டு எப்பவும் தயாரா இருந்துண்டேதான் இருக்கு. எவ்வளவு இருந்தால் என்ன? வியாதி ஒருகை பார்த்துவிட்டுத்தானே போகிறது! அப்படித்தான் என்ன இளம் ரத்தமா டக்குனு மருந்து புடிச்சு வேலை செய்ய? எனக்கே இந்த மாசிக்கு எழுபத்தொன்பது முடிஞ்சுடுத்து. அப்பாவுக்கு கேட்பானேன்!"

"அப்பன்னா உங்கப்பாவுக்கு – "

"தொண்ணூத்தெட்டு முடிஞ்சுடுத்து . . . என்ன பார்க்கறே? . . . ம் அந்தக் காலத்திலே பதினேழு வயசுக்கெல்லாம் சாந்தி கல்யாணம் ஆயிடும். எனக்கும் பதினேழு வயசிலேதான் ஆச்சு; என் பையனுக்குத்தான் இருபது வயசு. என் பேரன்தான் கலியாணம் வாண்டாம் வாண்டாம்னு சொல்லிப்பிட்டு, கடைசியிலே இருபத்தஞ்சு வயசுலே பண்ணிண்டான். அந்தக் காலத்திலே இருபது வயசுக்குள்ளே கலியாணம் ஆகலேன்னா, ஏன் ஆகலே, ஏன் ஆகலேன்னு லோகம் முழுக்க நச்சரிக்கக் கிளம்பிவிடும். அப்பாவுக்கும் இந்த ஆஸ்த்துமா நாற்பது வயசுக்கு மேலேதான் பிரகோபமா வந்தது. அவர் சரீரம்தான் இவ்வளவு உபாதைகளையும் தாங்கிண்டு நிற்கிறது. பால்யத்திலே கொஞ்ச பலமா அவருக்கு? ஏ, அப்பா! ஆஜானுபாகுவா இருப்பர். தலையிலே கருகருன்னு சுருட்டை சுருட்டையா இருக்கும் மயிர். தொடையில் வந்து இடிக்கும். மத்தியானம் படுத்துண்டார்னா அந்த மயிரையே பந்தாக முடிஞ்சு தலைக்கு அடியிலே தலையணையா வச்சுனுடுவர். லேடி, லேடின்னு அதனால்தான் பெயர் வந்தது அவருக்கு. பளபள பளபளன்னு இருப்பர். அசாத்ய பலம். ஊர்லே இருந்தபோது இருட்டுப் பிரியறதுக்கு முன்னாடி படுக்கையைவிட்டு எழுந்து கிளம்பிவிடுவாராம். மார்கழி மாசக் குளிரோ, ஐப்பசி மழையோ லக்ஷியம் பண்ணமாட்டார். நேரெ நாய்க்கன் சாவடிக்குப் போயிடுவர். எங்க ஊரிலே கோபால்சாமி நாயக்கர்னு பெரிய மனுஷன். அவர் பையன் அப்பாவோடு வாசிச்சிண்டிருந்தான். அவன் ஒரு கொட்டகை போட்டு கர்லாக்கட்டை கிர்லாக்கட்டை எல்லாம் வச்சிருந்தான். அங்கே போய் ராக்ஷஸ கர்லாவா ஒரு கட்டையை எடுத்து, இந்தக் கைக்கு நானூறு, அந்தக் கைக்கு நானூறு சுத்திச்சுத்தி, தண்டாலில் இருநூறு எடுத்து, பஸ்கி முந்நூறு எடுத்து பிரளயமா வேர்த்து ஊற்றினால் ஒழிய அவர் உடம்பு சரி வராது. அப்படியே குளத்துலே ஸ்நானத்தைப்

பண்ணி விட்டு ஜபத்துக்கு ஆரம்பிப்பார். பாட்டி, தோச்ச தயிரைப் போட்டு பழையதைப் பிசைந்து எரிச்ச குழம்பையும் வச்சுண்டு காத்திண்டிருப்பள். அப்பாவோடு நானும் உட்கார்ந்துனூடுவேன். ஈ மாதிரி ஆனை ஆனையா உருட்டி, அப்பா கையிலே சாதத்தைப் போடுவாள் பாட்டி. ஹ்ம் . . . அதெல்லாம் போச்சு . . . நானும் பதினாறு வயசு வரையில் இந்த கர்லாபஸ்கி எல்லாம் எடுத்துண்டுதான் இருந்தேன். அப்புறம் என்னமோ விட்டேபோயிடுத்து. ஆனால் ஒரு நல்ல பழக்கம் மாத்திரம் இன்னும் வச்சுண்டிருக்கேன். என்ன உடம்பு வந்தாலும் வெந்நீரிலே குளிக்கிறதில்லை; வெந்நீர் குடிக்கிறதுமில்லை; இப்பத்தான் இரண்டு வருஷமா கால் குடைச்சல் வந்து மாசம் ஒரு தடவை, இரண்டு தடவை வெந்நீரில் ஸ்நானம் பண்ணுகிறேன். என் பிள்ளையாண்டானும் அப்படித்தான். அவனுக்கும் வெந்நீர்ப் பழக்கம் கிடையாது. பேரனுக்குத்தான் இந்த சம்பிரமங்களெல்லாம் வேணும். அவன் பிறக்கறபோதே குத்துயிரும் குலை உசிருமாப் பிறந்தான். நாலு வருஷம் வரையில் உட்கார்த்தின இடத்திலேயே களிமண் மாதிரி உட்கார்ந்திருப்பான். சூணாவயிறு, கைகால் எல்லாம் காத்துலெ கோடு கிழிச்சாப்பலே குச்சி குச்சியா இருக்கும். மனுஷ்ய அவயவமாகவே இராது. ‘இது பாலாரிஷ்டம், ஆறு வருஷம் வரையில் அப்படித்தான் இருக்கும்’னு சொன்னான் ஜோசியன். அவன் சொன்னாப்போலவே ஆறு வருஷம் கழிச்சு அவன் உடம்பு தேற ஆரம்பிச்சுது. என்னதான் தேறினாலும், நான், எம்பிள்ளை மாதிரியெல்லாம் அவனாலே இருக்க முடிஞ்சதேயில்லை. ஒன்று மாற்றி ஒன்று ஏதாவது சீக்குப் படுத்திக்கொண்டேதானிருக்கும். தலைவலி, வயத்துவலி, மார்வலி, கண்குடைச்சல், மூச்சுப்பிடிப்பு இப்படி ஏதாவது வந்த வண்ணமாகத்தான் இருக்கும். கணைச்சூட்டுச் சரீரங்களே இப்படித்தான். ஒரு நாளாவது சீக்கில்லாமல் இராது. இப்பத்தான் என்ன, தாசில்தாரா இருக்கான்னு பேருதான். வாங்கற சம்பளமெல்லாம் மருந்துக்குத்தான் சரியா இருக்கு . . .’

மணி அடித்தது.

“மணி என்ன ஒன்பதா?”

“ஆமாம் . . .”

“அப்ப எனக்கு நாழியாச்சு. ஒண்ணுமில்லே. உங்கப்பா கிட்டக்கூட சொல்லிண்டிருந்தேன். இன்னிக்கு மஸ்டர்டே,”

“மஸ்டர் டேயா?”

“ஆமா; பென்ஷன் வாங்கிண்டு இருக்கோல்லியோ? வருஷத்துக்கு ஒரு தரம் அவன் கிட்டே உசிரோட இருக்கோம்னு தலையைக் காண்பித்துவிட்டு வரணும். அப்பாவும் நானும் போகிறோம். கொஞ்சம் எங்களை வண்டி வச்சு அழச்சிண்டு போய்க் கொண்டுவந்து விடணும். நாங்க இரண்டு பேரும் மாத்திரம் போகலாம், பிரமாதமில்லே. இருந்தாலும் தள்ளாத உடம்புதானே. கூட ஒருத்தர் இருந்தா தெம்பா இருக்கும்னு நினைக்கிறேன். என் பிள்ளையும் இல்லையா . . .”

“எங்கே அவர்?”

“அவன் காசிக்கு போயிருக்கிறான். ஆறு மாசமாச்சு.”

“நீங்கள்?”

“நானா? எனக்கு நாலு தடவை ஆயிடுத்து காசிப் பயணம். தெம்பு இருக்கிறபோது முடிச்சினூட்டேன். அதெல்லாம்.”

“ஏன் இப்ப போனால்தான் என்னவாம்?”

“ஏதுக்கப்பா வம்பு? எண்பது வயசுக் கிழவனை இரண்டாயிரம் மூவாயிரம் மைல் ரயில்லேயும் வண்டிலேயும் அழச்சிண்டு போறதுன்னா லேசா இருக்கா? சம்பாதிச்ச புண்யம் போருமே. ஆசையாய்தான் இருக்கு. கங்கையிலே ஸ்நானம் பண்றதுன்னா யாருக்குத்தான் ஆசையா இராது? சரீரதர்மம் இடங்கொடுக்க வாண்டாமா? பிள்ளையை மாத்திரம் போகச் சொன்னேன். அவனும் என் மாட்டுப் பெண்ணும் போயிருக்கா . . . ஆகக்கூடி இந்த வருஷம் மஸ்டருக்கு அவன் இல்லை. கொள்ளுப் பேரன் வந்திருக்கான். அவனை அழச்சிண்டு போகலாம். ஆனால் அவன் ரொம்பப் பொடிப்பயல்.”

“ஏன், இவன் அழச்சுண்டு போறான். சும்மாதானே இருக்கான்” என்று என் தந்தை சொன்னார்.

“பேஷா அழச்சுண்டு போறேன் தாத்தா” என்றேன்.

“எல்லாம் உங்க பேரன் மாதிரி அவனும்னு நெனச்சுக்குங்கோ. ஏய் ஜாக்கிரதையாய் அழச்சிண்டு போய்ட்டு வா.”

“ம்”

“இந்த மாதிரி பெரியவர்களுக்கெல்லாம் செய்றதுன்னா கொடுத்து

வைக்கணும். இப்படி ஒரு சமயம் எங்கே வாய்க்கப் போகிறது?"

"ம்"

"எத்தனை மணிக்கு வரணும்?"

"பத்தரை மணிக்குக் கிளம்பணும்."

"அப்படியானா, பத்தேகால் மணிக்கு வந்து விடறேன்."

"நல்லது, வரட்டுமா அப்ப?"

"சரி நீங்க கவலைப்பட வேண்டாம். சரியா பத்தேகால் மணிக்கு வந்துடறேன்."

"நல்லதுப்பா, யார் செய்யப் போறா! ஷேமமாயிருக்கணும்டாம்பா."

சின்னக் குழந்தை கைத்தடியை எடுத்துக்கொண்டு, கால் கட்டையையும் மாட்டிக்கொண்டு படியிறங்கினார்.

"ஒரு கிழவர், அவருக்குப் பிள்ளை, அவருக்கு ஒரு பிள்ளை, அவருக்கு ஒரு பிள்ளை, அவருக்கு ஒரு பிள்ளை . . ."

"என்னப்பா சொல்லிக்கொண்டே போனா?"

"அதுதான் நிறுத்திப்பிட்டேனே. அஞ்சு தலைமுறை. கடைசி இது – தாசில்தார் வயிற்றுப்பிள்ளை – பிள்ளையாய்ப் போயிட்டுது. பெண்ணாயிருந்தா அதுக்கும் ஒரு குழந்தை பிறந்து ஆறாவது தலைமுறை முளை விட்டிருக்கும்."

"நினைக்கிறபோதே ஜோராயிருக்கப்பா, இல்லையா? நல்ல வளம். வைரம்."

"இவர் அப்பாவுக்குத் தொண்ணூற்றெட்டு வயசுன்னு சொன்னாரே, கேட்டியா? நாலைந்து வருஷமா இப்படியே சொல்லிண்டிருக்கார். இந்த மாமாங்கம் வந்துதே. அதுக்கு முதல் வருஷமே தொண்ணூற்றெட்டுன்னு சொன்ன ஞாபகம் எனக்கு. இப்ப நூற்று இரண்டு, நூற்று மூன்றுக்குக் குறையாது. தொண்ணூற்று எட்டாம்!"

"ஞாபகம் இல்லையோ? என்னமோ இவருக்கு?"

"ஞாபகம் இல்லையா? யாருக்கு, இந்தக் கிழத்துக்கா! போன ஜன்மமெல்லாம் சொல்லுவார் இவர். ஞாபகப் பிசகில்லை. வயசைச்

சொன்னால் திருஷ்டி பட்டுவிடுமாம்."

"திருஷ்டியா?"

"ஆமாம், வயசாக ஆக, சொல்ல மனசு வராது மனுஷனுக்கு . . . தொண்ணூற்றெட்டாம் . . . இவர் பிள்ளை காசிக்குப் போயிருக்காரே, அவர், இவர், இவர் அப்பா மூணும் சேர்ந்துதான் ஒரு ஒற்றை மாட்டு வண்டியிலே மஸ்டர் டேயன்றைக்குப் பென்ஷன் வாங்கப் போகும். நாலு வருஷமா இப்படித்தான் நடக்கிறது. பெரியகிழம் இருக்கே, அது உத்தியோகம் பார்த்தது இருபத்தாறு வருஷம். ஐம்பத்தாறு வருஷத்திற்கு மேல் பென்ஷன் வாங்கிவிட்டது. இந்தக் கிழமும் இருபத்திரண்டு வருஷம் பென்ஷன் வாங்கியிருக்கும். குட்டிக் கிழம் – காசிக் கிழம் – ரிடயராகி நாலு வருஷமாகிறது."

"தாசில்தாரும் சேர்ந்துக்கிற வரையில் பெரிய கிழம் இருக்குமோ . . ."

"ம். அவன் ரிடயராக இருபது வருஷம் இருக்கு . . . ஏன்? ஆஸ்துமாதானே அதுக்கு வியாதி! ஆஸ்துமா ஆளை வச்சு வச்சுக் கொல்லும். ஆஸ்துமாக்காரர்கள் அஸ்வத்தாமா, பலி, வியாசா, ஹனுமான், விபீஷணர், கிருபர், பரசுராமர் இவர்களைப்போல சிரஞ்சீவிகள். காலபாசம் கொஞ்சம் சிரமப்படக்கூடிய இடம்தான். அப்படியே பெரிய கிழவர் போயிட்டாலும் அவர் இடத்துக்கு சின்னக் குழந்தை வந்துவிடுவார். என்ன பிரமாதம்? மேலும் பெரிய கிழம் வாழாது என்று சொல்லமுடியாது. அது காப்பியை மூந்துகூடப் பார்த்ததில்லை. பிள்ளைக்கும் காப்பி தெரியாது. காசி யாத்திரைக் கிழத்திற்கும் காபி, டீ கிடையாது. தாசில்தாருக்குத்தான் இந்தப் புது மோஸ்தரெல்லாம் உண்டு. அவன் இந்த மாதிரி பென்ஷன் வாங்கமாட்டான்னு நிச்சயமாகச் சொல்லலாம்."

அப்பா நிறையச் சொல்லுவார். ஆனாலும் அம்மா கிட்டு கிட்டு, என்று பறந்தாள்.

"ஏய் அம்மா கூப்பிடறா. போய் வெந்நீர் சுட்டுப் போச்சா பாரு, குளிச்சுடலாம்."

0 0 0

நான் போகும்போது சின்னக் குழந்தை சாப்பிட்டுவிட்டு வாய் நிறைய வெற்றிலையை மென்றுகொண்டு திண்ணையில் உட்கார்ந்து 'தினமணி' படித்துக்கொண்டிருந்தார்.

“என்ன தாத்தா?”

“வாப்பா, வா. அடே! பத்தேகாலுக்கு வந்துட்டியே, சொன்னாப்போலே, ஒரு நல்ல வண்டியாக் கூப்பிடேன்?”

வண்டிப்பேட்டை பக்கத்தில்தான் இருந்தது. ஒரு குரலுக்கு நல்ல வண்டி வந்து சேர்ந்தது.

“உள்ளே, வாப்பா!”

கூடத்தில் ஒரு பெஞ்சின் மீது லேடிக் கிழவர் – சின்னக் குழந்தையின் தகப்பனார் உட்கார்ந்திருந்தார். லேடியென்று இப்போது சொல்ல முடியாதுதான். தலை முழுவதும் ஒரு அணு விடாமல் வழுக்கை பளபளத்துக்கொண்டிருந்தது. நெற்றியில் விபூதியிட்டாற்போல் மூன்று கோடு சந்தனம். கையில் உத்ராக்ஷ மாலை. வாயில் பாக்குரலில் இடித்த வெற்றிலைப்பாக்கு. அவர் வெகு நாழியாகக் கிளம்பச் சித்தமாகிவிட்டார் என்று அல்பாகா கோட்டும், கழுத்தில் வளைந்த பழுப்படைந்த வெண்பட்டும் சொல்லின. நூற்றிரண்டு வயசாகிவிட்டதற்காக ஒரு அங்கமும் குறைந்துவிடவில்லை அவருக்கு. சாதாரணக் கிழவர்களைப் போலத்தான் இருந்தார். அவர் மனம் வெற்றிலை மணத்தில் லயித்திருந்தது. அருகில் போய் “தாத்தா, சௌக்கியமா?” என்று கேட்டேன்.

“யாரது, எனக்குக் கண்தான் சரியாகத் தெரியாது. காது கேட்கும்” என்று பதில் வந்தது. இந்தக் கிழங்களுக்கு முன் இயல்பாகவே குரல் உச்சஸ்தாயியில் நான் பேசுகிறது தவறு என்று உணர்ந்துகொண்டேன்.

“ஸப் ரிஜிஸ்ட்ரார் பையனப்பா. துணைக்கு வந்திருக்கிறான்.”

“ஓஹோ, அப்படியா, உன் பேர் கிருஷ்ணசாமிதானே?”

“ஆமாம்.”

“நீதானே புனா மிலிடரி அக்கௌண்ட்ஸிலே இருக்கே.”

“ஆமாம்.”

“லீவு எடுத்துண்டு வந்திருக்கியோ?”

“ஆமாம்.”

“ஒரு மாசமா?”

“ஆமாம்.”

“சரிதான்.”

“கல்யாணத்தைப் பண்ணின்டு குடித்தனம் வைக்கப்படாதோ?”

“ . . .”

“என்ன வயசாறது உனக்கு?”

“இருபத்தேழு.”

“என்னடாப்பா இது? இன்னும் சும்மா இருந்தா?”

“மணி பத்தரையாகப் போறது.”

“பத்தரையாகிறதா! அப்படீன்னா கிளம்பலாமே. என்னடா சின்னக் குழந்தை, கிளம்பலாமோல்லியோ?”

மணி சொன்னது பெரியவரைப் பரபரப்புக்குள்ளாக்கிவிட்டது.

“சின்னக் குழந்தை!”

“இதோ, ஆச்சுப்பா. சட்டையைப் போட்ண்டு வந்துடறேன்.”

“சட்டை போட்டுக்கப் போறியா? பேஷ். முன்னாடியே போட்டுக்க முடியலியா?”

“_ _ ”

“என்னிக்குத்தான் இந்தச் சோம்பலை நீ விடப் போறியோ, தெரியலை. சரி சரி, வா, சட்டுனு.”

சின்னக் குழந்தை புன்முறுவல் பூத்துக்கொண்டே உள்ளே போய் ஒரு ஒட்டுப்போட்ட கறுப்புக் கோட்டும், அதைச் சுற்றி ஒரு நாட்டுத் துணுக்கும் போட்டுக்கொண்டு வந்தார். கோட் ஸ்டாண்டிலிருந்த ஒரு வெண்பட்டை எடுத்து, கண்ணாடிக்கு முன்னால் நின்று ஒரு முண்டாசு– அல்லது தலைப்பாகை கட்டிக்கொண்டு, “போகலாமா?” என்றார்.

“ம்”

“யாரங்கே, போயிட்டு வந்துடறோம் நாங்க. அம்மா வரட்டுமா?”

இப்பொழுதுதான் அவர் அம்மா இருக்கிற இடம் தெரிந்தது. கூடத்திலேயே ஒரு மூலையில் நீட்டின காலோடு உட்கார்ந்திருந்தாள்.

தலை கத்தாழை நாராக வெளுத்திருந்தது. காதில் பெரிய சம்புட அகலத்திற்கு ஒரு சிகப்புத் தோடு தொங்கி ஆடிக்கொண்டிருந்தது.

பூஜை அலமாரியைத் திறந்தார் பெரியவர். பிரார்த்தித்துக்கொண்டார். சின்னக் குழந்தையும் நெடுஞ்சாண் கிடையாக நமஸ்காரம் செய்துவிட்டுக் கிளம்பினார்.

'குழந்தே, ஜாக்கிரதையாப் பார்த்துகோடாப்பா,' என்று சின்னக் குழந்தை சம்சாரம் வந்து சிபாரிசு செய்தாள். அவளுக்கும் மாமியார்க் கிழவிக்கும் அதிக வித்தியாசம் தெரியவில்லை. பெரிய கிழவி நடக்க முடியாமல் மூலையில் கிடந்ததுதான் குறை.

சின்னக் குழந்தை தகப்பனாரின் கையைப் பிடித்து மெதுவாக அழைத்து வந்தார்.

"காலைத் தூக்கிவச்சு வாங்கோப்பா."

"தூக்கித் தாண்டா வக்கறேன், தெரியலியா?"

"நிலை குனிஞ்சு வாங்கோ."

"தெரியறது."

"திண்ணையைப் புடிச்சிண்டு இறங்குங்கோ."

"ஏன், இல்லாட்டா விழுந்துடுவேனோ? ஏண்டாப்பா!"

"இல்லே, சொன்னேன்."

"என்னத்தைச் சொன்னேன்?"

வண்டியில் அவரை முன்னால் ஏற்றிவிட்டு, சின்னக் குழந்தை ஏற, நானும் உட்கார்ந்துகொண்டேன்.

0 0 0

கஜானாவுக்கு அருகில் கூட்டத்திற்கா பஞ்சம்? அதுவும் பக்கத்தில் கலெக்டர் ஆபீஸ், கோர்டுகள், நெல் கொள்முதல் ஆபீஸ் இவ்வளவு ஆபீஸுகளும் இருக்கும்போது; பெரிய காம்பவுண்டு. தூங்குமூஞ்சி மரங்கள் பரந்து நெருங்கி வளர்ந்து நிழல் எறிந்து இருந்தன. நிழல் விழுந்த இடமெல்லாம் கிழங்கள் படுத்திருந்தன. முழங்காலைக் கட்டி அமர்ந்திருந்தன. போனவருஷம் பதவி விட்ட கிழம் முதல் சின்னக் குழந்தை வரையில் பல கிழங்கள்.

வண்டி காம்பவுண்டுக்குள் நின்றது. மெதுவாக லேடிக் கிழவரை கீழே இறக்கி ஒரு தூங்குமூஞ்சி நிழலில் உட்கார வைத்தோம்.

“என்னப்பா லேடி! சௌக்கியமா? மஸ்டர் நாளைத் தவிர மத்த நாளில் உன்னைப் பார்க்க முடியாதுன்னு ஆயிட்டுது இப்ப.”

“யாருடா அது கேதாரி ராமனா?”

“ஆமாம்பா, ஆமாம்.”

“என்ன போ, இந்த வருஷம் ஆஸ்த்மா என்னைப் போட்டுக் கொன்னுடுத்து. ஏதோ போ, இழுத்துண்டு கிடக்கேன்.”

“யாரு நீயா? காந்தி போயிட்டார் நூத்திருவத்தஞ்சு, நூத்திருவத் தஞ்சுன்னு சொல்லிப்பிட்டு! நீ கட்டாயமா இருந்துதான் காமிக்கப் போறே.”

“எதுக்காக? என்னடாப்பா முடை? தேசோத்தாரணம் பாழாப் போறதே, அதுக்காகவா?”

“தேசோத்தாரணம் பண்ணினாத்தான் இருக்கணுமா. இல்லாட்டா இருக்கப்படாதா என்ன? ஏன் பிள்ளையை மாத்திரம் அழைச்சிண்டு வந்திருக்கே? பேரன் எங்கே?”

“காசிக்குப் போயிருக்கான்.”

“காசிக்கா! போடு சாம்பிராணி. ஏன் நீயும் போயிட்டு வரப்படாதோ?”

“நானுமா? பேஷ். ஹுசூர் கஜானாவே காசியா இருக்கு நமக்கு. நன்னாச் சொன்னே போ. உன் பேத்தி பிரசவிச்சுட்டாளா?”

“என் பேத்தியா? குழந்தை பிறந்து எத்தனை மாசமாச்சு. அடுத்த மாசம் ஆண்டு நிறைவு.”

“பிள்ளையா, பெண்ணா?”

“பிள்ளை.”

“பேஷ்.”

“உன் பிள்ளை லீவிலே வந்திருந்தானே டூடியிலே ஜாயினாயிட்டானா?”

“போன ஏப்பரல்லே வந்தானே, அதைச் சொல்றயா?”

“அதுதானே எனக்குத் தெரியும்.”

“ஜாயினாகி, இப்ப வேறே இரண்டு மாசம் மெடிகல் லீவிலே வந்துட்டு, மறுபடியும் போன மாசம் ஜாயினாயிட்டான். இன்னும் என்ன கேட்கப் போறே?”

“என்னத்தைக் கேக்கறது! வருஷத்துக்கு ஒருநாள் சந்திக்கிறபோது கேட்டுத்தானே ஆகணும்.”

அப்போதுதான் நானும் கவனித்தேன். லேடிக் கிழவரை எத்தனையோ பேர் கவனித்துக் கொண்டிருந்தார்கள். சுற்றி ஒரு கூட்டம். அவரை எல்லோரும் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

“இது யார் பையன்? கொள்ளுப் பேரனா?” என்று கேதாரிராமன் கேட்டார்.

“நாலு வீடுபோட்டு அந்தாண்டை இருக்கான். சப் ரிஜிஸ்ட்ரார் பிள்ளை, துணைக்கு வந்திருக்கான்.”

“போடு சாம்பிராணி! துணை வேறயா? நீ அவனுக்குத் துணையா? அவன் உனக்குத் துணையா?”

“என்னடாப்பா இது? எனக்கு உசிர் இருக்குன்னா, பலம் கூட இருக்கணும்னு அவசியமா என்ன? ஏண்டாப்பா?”

“அது சரி, இதோட எத்தனை மஸ்டர் ஆச்சு?”

“ஞாபகம் இல்லையே.”

“அறுபது இருக்குமா?”

“அறுபதா? 55 – ம் 60 – ம் நூத்திப் பதினைந்துன்னா? என்னடா இது? நூத்திப் பதினைஞ்சு வயசா ஆயிடுத்து எனக்கு?”

“பின்னே சொல்லேன்.”

“என்னமோ போ. இதெல்லாம் என்ன கேள்வி?”

“ஏன் கேக்கப்படாதோ?”

“கேட்டுண்டே இரு, போ.”

சின்னக் குழந்தை எழுப்பியபோதுதான் மணி மூன்று என்று தெரிந்தது. சுயராஜ்யத்தைத் திட்டிக்கொண்டே வண்டியைக் கட்டச் சொன்னார் அவர்.

வண்டிக்காரன் மாட்டைப் பூட்டும்போது நான் கண்ட கனவு ஞாபகம்

வந்தது. நான் ரொம்பக் கிழவனாகப் போய்விட்டதாகவும், ஆனால் ரிடயர் ஆகாமலே பென்ஷன் கொடுக்கும் குமாஸ்தாவாக இருப்பது போலவும் சொப்பனம்.

எனக்கே சிரிப்பு வந்தது.

"என்னடா குழந்தை சிரிக்கறே?" என்று கேட்டார் சின்னக்குழந்தை.

"ஒண்ணுமில்லே."

"என்ன, சொல்லேன்?"

"எல்லாரும் ஏன் ரிடயர் ஆறா?"

"அப்படின்னா?"

"ரிடயர் ஆகாமலே வேலை பார்க்கறது?"

"வயசாயிடுத்துன்னா என்ன பண்றது?"

"அப்படீன்னா இப்ப வேலை செய்ய முடியாதா உங்களுக்கு?"

திடீரென்று லேடிக் கிழவர் குறுக்கிட்டார். "ஏன் முடியாது? பேஷா முடியும், இவ்வளவு பேருக்கும் ஒரு மணி நேரத்துலே பென்ஷன் கொடுத்து, வீட்டுக்குப்போய் ஹாயாகத் தூங்குங்கோன்னு பண்ணியிருப்பேன் நான். என்னமோ 55 வயசாயிடுத்துன்னா முட்டாளாப் போயிடறான், கபோதியாப் போயிடறான்னு கவண்மெண்ட் நெனச்சிண்டிருக்கு. ரிடயராகாமல் வேலை செய்யறதுதான் சரி. அவாவா பலத்துக்கேத்தாப்போல வேலை பார்க்க பாத்யம் இருக்கணும். சகட்டுமேனிக்கு 55ன்னு வக்யறது. என்னடா பேத்தல்!"

"சரி வண்டியிலே ஏறுங்கோ."

எல்லோரும் ஏறிக்கொண்டோம். வண்டி கிளம்பிற்று. காம்பவுண்டு தாண்டியதும் பறந்தது. மெயின் ரோட்டைக் கண்டால்தான் இந்த நகரத்து மாடுகளுக்கு ஜோர் உண்டாகுமாம், வண்டிக்காரன் சொன்னான்.

நல்ல மேற்கத்திக் காளை. வண்டிக் குடமும் நல்ல அழுத்தமான குடம். குடுகுடுவென்று, அமர்ந்து கேட்கும் இடிபோல முழங்கி காதில் இனிமை ஊற்றிற்று.

"என்னப்பா விலை மாடு?" என்று லேடிக் கிழவர் கேட்டார்.

“முந்நூறு ரூபாய்ங்க.”

“வண்டி?”

“இரு நூற்றைம்பது.”

“பேஷ், இரண்டும் நல்ல அமைச்சல்.”

“பாவ் பாவ் டேய். க், க ஆவ்.”

0 0 0

எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் கீழே கிடந்தேன். எனக்குமேல் சின்னக் குழந்தையும் லேடிக் கிழவருந்தான் கிடந்திருக்க வேண்டும். வேறு யார் கிடப்பார்கள்? வண்டி பின்பக்கமாகக் குடை சாய்ந்துவிட்டது. ஏர்க்கால் ஆகாயத்தை எட்டிற்று. மாட்டுக் கழுத்துக் கயிறுதான் அறுந்திருக்கவேண்டும்.

“எலே கொசப்பயலே, வண்டியைத் தூக்குடா, கூறுகெட்ட கொசப்பயலே.”

லேடிக் கிழவரின் குரல்.

எனக்குக் கை வலித்தது.

வண்டியை இழுத்தார்கள்.

லேடிக் கிழவரைத் தூக்கினார்கள். சின்னக் குழந்தை எழுந்துகொண்டார்.

எனக்கு எழுந்திருக்க முடியவில்லை. வலது முன்னங்கை வளைந்திருந்தது. ரத்தம் பெருகிற்று. எலும்பு உடைந்து சதையைப் பிய்த்து வெளியே நீட்டிக்கொண்டிருந்தது. ரத்தத்தைப் பார்த்ததுதான் எனக்குத் தெரியும். கண் திறந்தபோது எல்லாம் மெதுவாகத்தான் விளங்கிற்று.

கண்ணாடி போட்ட ஆசாமி: ‘ஓ!’ டாக்டர், பிறகு நர்ஸு.

சர்க்கார் ஆஸ்பத்திரி என்று தெரிந்தது. சின்னக் குழந்தை நின்றுகொண்டிருந்தார்.

“எக்ஸ்ரே எடுக்க வேண்டும்” என்றார் டாக்டர்.

எக்ஸ்ரே அறைக்கு என்னைக் கொண்டு செல்லும்போது, நடையில் ஒரு பெஞ்சில் லேடிக்கிழவர் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தேன்.

எக்ஸ்ரே எடுத்தார்கள். இரட்டை முறிவாம். பொருத்தி, பாரிஸ் பிளாஸ்திரி போட்டு கையைக் கழுத்தோடு மாட்டிவிட்டார்கள். வேறு ஏதோ வண்டியில் தூக்கி உட்கார வைத்தார்கள், பிறகு லேடிக் கிழவரும் சின்னக் குழந்தையும் ஏறிக்கொண்டனர்.

வீட்டு வாசலில் வண்டி வந்து நின்றது. எல்லோரும் இறங்கிய பிறகு இறங்கினேன்.

வண்டி நிற்கும் சத்தத்தைக் கேட்டு அம்மா வாசலுக்கு ஓடி வந்தவள், என் கோலத்தைக் கண்டதும் "என்னடா குழந்தே, என்னடா இது!" என்று பதறி அருகில் வந்தாள்.

"ஒண்ணுமில்லேம்மா, சும்மா கத்தாதே வாசலிலே நின்னுண்டு. . . வண்டி குடை சாஞ்சுது. கை லேசா முறிஞ்சிருக்கு. தாத்தா அழைச்சுண்டு போய் க்ளீனா கட்டி அழைச்சிண்டு வந்துட்டார்."

சின்னக் குழந்தையின் நெற்றியில் ஒரு சிறிய குறுக்குப் பிளாஸ்திரி போடப்பட்டிருந்தது. அவர் வெறும் சிராய்ப்போடு பிழைத்துவிட்டார். லேடிக் கிழவருக்கு குதிரை முகத்தில் அடியாம். வேறு காயம் இல்லை.

"அம்மா, எங்களோடு வந்ததுக்குத் தண்டனை உங்க குழந்தைக்கு. படுகிழங்கள் இருக்கோமே, எங்களுக்கு ஏதாவது வரப்படாதோ ராஜா மாதிரி அழைச்சிண்டு போனான் குழந்தை . . ."

"நாம் அழைச்சிண்டு வந்துட்டோம்" என்று முடித்தார் லேடிக் கிழவர்.

அம்மா மெத்தையைப் போட்டாள். படுத்துக்கொண்டேன்.

"மூணு மாசம் மெடிக்கல் லீவு போட்டுவிடப்பா, ஆமாம்" என்றார் லேடிக் கிழவர்.

"சரி தாத்தா."

மணிக்கொடி, 1950

# மரமும் செடியும்

மூங்கில்காரருக்கும் ஈயக்காரருக்கும் அப்படி ஒன்றும் பகைபூசல் இல்லை. இவருக்கு மூங்கில் வியாபாரம், அவருக்கு ஈய வியாபாரம். இவர் இருக்கிறது தைக்கால் தெரு. அவர் இருக்கிறது கொடிக்கால் தெரு. இவர் தெரு கிழக்குக் கோடியில். அவர் தெரு மேலைக் கோடியில். இவர் விசுவமையர் கடையில் காபி குடிக்கிறார். அவர் மலையாளத்து நாயர் கடையில் டீ குடிக்கிறார். இவர் நிலம் தெற்கே பிடாரி கோயிலண்டை. அவர் நிலம் ஆற்றங்கரைப் பாதையில். அதிகமாகச் சந்திக்கிறதுகூட இல்லை. சந்தித்தாலும், 'சொகந்தானே, சொகந்தான்' – , அவ்வளவுதான் பேச்சு.

மூங்கில்காரனின் மூங்கில் கடை ஈயக்காரனின் ஈயக் கடைக்கு மேற்கே ஏழெட்டுக் கடை தள்ளி. காலையில் கடைத் திறக்க வரும்போது இருவரும் சந்தித்துக்கொள்வார்கள். அப்போதுதான் இந்த சுருக்கமான க்ஷேம விசாரணை நடக்கும்.

எப்போதாவது மாயூரமோ கும்பகோணமோ போவதற்காக பஸ் ஸ்டாண்டில் சந்தித்துக்கொண்டாலும் பேச்சு அதற்குமேல் நீண்டுவிடாது.

பகைக்கும் போட்டிக்கும் என்ன இருக்கிறது?

ஆனால் ஜனங்கள் சும்மா இருக்கிறார்களா? ஜனங்கள் என்றால் ஜனங்களின் தலைவர்கள். அவர்களுக்கு, ஜனங்களுக்கு நன்மை செய்துகொண்டேயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் மனம் நிம்மதிப்படாது, பொழுதும் போகாது.

கீழைச்சேத்தி நாட்டாண்மைக்காரர் மூங்கில்காரரிடம் வந்தார். அவருக்கு வேலை முத்திரை ஸ்டாம்பு விற்கிறதும், சாசனம், கோர்ட்டு மனு இவையெல்லாம் எழுதிக் கொடுக்கிறதும். இது வயிற்றைக் கழுவ. ஆனால் முக்கிய வேலை நாட்டாண்மை.

"வாங்க" என்றார் மூங்கில்காரர்.

"வர்றேன், அது என்ன ஊர் நிலவரத்தையே காதிலே போட்டுக்காம குந்திருக்கீங்க?"

"என்ன நிலவரம்? மூங்கில் என்ன சர்க்கரையா, துணியா, பால் புட்டியா

பதுக்கி வைக்க? நான் யாரு கண்ணிலியும் மண்ணைத் தூவிக் காசு சம்பாரிக்க முடியாது. இங்க நிலவரம் எல்லாம் சரியாகத்தான் இருக்கு."

"இங்க சரியாயிருந்தா மட்டும் போதாது. ஜனங்க முணுமுணுக்காம இருக்கணும். இப்ப நீங்க சொன்னதைப் பார்த்தா, நியாயமில்லாத காரியம் ஊரிலே நடந்துகிட்டுருக்கு. அதுக உங்களுக்கு தெரியாமியும் இல்லேங்கறதும் தெரியுது."

"தெரிஞ்சுருக்கு. அந்தந்த மனுஷன் யோக்கியனா இருந்துட்டா வம்பே கிடையாது."

"கிடையாது. அப்படி இல்லையே!"

"இல்லை."

"இல்லேன்னு சொல்லிட்டு பெரிய மனுசங்கள்ளாம் உக்காருந்தா அப்புறம் என்னதான் நடக்கும்?"

மூங்கில்காரருக்கு உச்சி குளிர்ந்தது. பெரிய மனிதன் என்று இவர் வாயாலே லேசில் வருமா?

"நாம என்ன செய்யறது?"

"பணத்தாலே ஒண்ணும் செய்ய முடியாது. எனக்குத் தெரியும். அப்படி நல்லது பண்றதுன்னா ஒரோரு ஊருக்கும் பத்துகோடி ரூபா வேணும்."

"வேறே வழி?"

"அதிகாரம் வேணும்."

மூங்கில்காரர், அவர் மேலே என்ன சொல்லப்போகிறார் என்று காத்திருந்தார்.

"காசுக்கடைக்காரரு சேதி தெரியுமா?"

"தெரியாதே!"

"காசுக்கடைக்காரரு இப்ப ப்ரெசிடெண்டுக்கு நிக்கிலியாம். உடம்பு தள்ளமாட்டேங்குது அவருக்கு. போதுமே பதினைஞ்சு வருசம் பார்த்தாச்சுன்னு நினைக்கிறாரு. ஈயக்காரர்கிட்ட, 'இனிமே நீங்கதான் ஊரைப் பார்த்துக்கணும்'னு சொல்லிட்டாரு."

". . . ம் . . ."

“என்ன, ‘ம்’? உங்களுக்குப் புரியவில்லையா? காசுக் கடைக்காரரு நல்லவருதான். அதுக்காக அடுத்து வர்ற ஆளையும் இவரே வச்சுப்பட முடியுமா? ஊருக்கில்ல பொறுப்பு அது!”

“ஈயக்காரரு என்ன சொன்னாரு?”

“அவருக்கென்ன கசக்குமா? மேலத் தெருக்களுக்கெல்லாம் ஊதா விளக்கு, பம்புக் குழாய் எல்லாம் போட்டுடறதுன்னு பேசிக்கிட்டிருக்காரு. இப்பவே ப்ரெசிடெண்டு நாற்காலியிலே உட்காந்திட்டாப்பல.”

“ம்.”

“அதுதான் சொல்றேன் அவருக்கு முன்னாடி உங்க பேரைத் தாக்கல் பண்ணிப்பிட்டா?”

“பிரெசிடெண்டு எலக்சனுக்கா?”

“பின்னே? முப்பது வருசமா நீங்க சம்பாரிச்சு எங்களுக்கு ஏதாவது பெருமை பிரயோசனம் வேணாமா? நாங்க யாரிட்ட போய் சொல்றது.”

“தாக்கல் பண்ணிடுவாமே” என்றார் மூங்கில்காரர்.

அடுத்த வாரம் மூங்கில்காரர் பெயர் தாக்கலாகிவிட்டது. அவருக்கு தேர்தல் சின்னம் மரம். கடைசித் தேதியன்று ஈயக்காரர் பெயரும் தாக்கலாயிற்று. அவருக்குச் சின்னம் செடி.

மாயவரத்திலிருந்தும் கும்பகோணத்திலிருந்தும் வாடகைக் கார்கள் வந்தன. ரெயிலடிக்குப் போக ஊரில் ஒரு வண்டி கிடைக்கவில்லை. மரத்துக்கும் செடிக்கும் அலைந்துகொண்டிருந்தது. மூங்கில்காரர் மரியாதைப்படி நடந்துகொண்டுவிட்டார். வீடு வீடாக நுழைந்து கேட்டுக்கொண்டார். கடை கடையாக ஏறி கேட்டுக்கொண்டார். பள்ளிக் கூடத்துக்குக் கொட்டகை போட்டுக் கொடுத்தார். மார்க்கெட்டுக்கு சரக்கு ஏற்றி வரும் வண்டி மாடுகளுக்கு அவசர அவசரமாகத் தண்ணீர் தொட்டி கட்டி வைத்தார். வயிற்றுக்கும் நிறையப் போட்டார். வெறும் காபி, டீ இல்லை; கழுத்துவரை சாப்பாடு. ஒரு மரியாதை குறையவில்லை.

ஓட்டு எண்ணினார்கள். பகீர் என்றது மூங்கில்காரருக்கு. தமக்குத் தோற்றுப் போகும் என்று அவர் கனவுக்கூடக் காணவில்லை. மரியாதைக் குறைவாக, தரித்திரத்தனமா நடந்துகொண்டால்தானே பயப்பட வேண்டும்? அவர் காசைக் காசாகப் பார்க்கவில்லையே, சின்ன மனிதன், பெரிய மனிதன் என்று பார்க்கவில்லையே? அவருக்கு எப்படித் தோற்கும்?

தோல்வி வந்துவிட்டது.

நாட்டாண்மைக்காரர் கூடவே வந்தார். வீட்டுக்கு வந்தார்.

"அது ஒண்ணுமில்லீங்க. ஈயக்காரரு கவுல் பண்ணிட்டாரு" என்றார்.

"பெட்டியை மாத்தினாரா?"

"அடிமடியிலே கையைப் போட்டுட்டாரே. அப்பவே ஒரு அப்ஜெக்ஷன் போடலாம்னு நெனச்சதுண்டு . . . இப்ப நினைச்சு என்ன?

"அடிமடியிலே கையைப் போட்டார்னீங்களே, என்ன?"

"நமக்கு மரம் அடையாளமா இருக்கறப்ப அவர் செடி வச்சுக்கிட்டாரே; அது பெரிய மோசடி இல்லியா? நேரப் பார்க்கறப்ப மரம் பெரிசு, செடி சிறிசு. படத்திலே போட்டா மரமும் சாண் உசரம், செடியும் சாண் உசரம். தொள்ளாயிரத்துச் சொச்சம் ஓட்டு வித்தியாசம் எப்படின்னு நானும் யோசிச்சுப் பார்த்தேன். இப்பல்ல புரியுது!" என்றார் நாட்டாண்மை.

மூங்கில்காரருக்கு வயிறு குமைந்தது.

"இப்படியா புத்தியில்லாத கூட்டமாயிருக்கும்? குருமாண்டும், பிரியாணிண்டும், சாப்ஸூண்டும் மூச்சு முட்டத் தின்னுப்பிட்டு மரமிண்டும் செடியிண்டுமா தெரியாத போயிடும்? பிரியாணியை முழுங்கிச்சே ஒளிய, அப்படியே ஆட்டுக் கூட்டம்யா" என்று புகைந்தார்.

"சனங்க என்ன செய்யும்? ஈயக்காரு சூது பண்ணிட்டாரு!"

"எத்தினி வண்டி! எத்தினி டின் நெய்யி!"

"நெய்யைத் திண்ட்டுப்பிட்டே கண்ணு மயங்கிடிச்சி சனங்க. அதுவும் உங்களுக்குப் பெருமைதான்" என்று தோல்வியையே வெற்றியாகக் காட்டிப் பேசினார் நாட்டாண்மைக்காரர்.

ஈயக்காரர் கடையில் கூட்டம் இப்போது அதிகம். தாசில்தார் என்ன, விற்பனை வரி ஆபிசர் என்ன, ஹெல்த் ஆபிசர் என்ன, இன்னும் 'லீடர்கள்' என்ன – யார் வந்தாலும் அங்கே தான் போகிறார்கள், பேசுகிறார்கள். ஜீப் நிற்கிறது. காராக நிற்கிறது. ஈயக்காரரை அழைத்துப் போகிறது; கொண்டு விடுகிறது.

'எல்லாம் செடியைப் போட்டு அடையாளத்தைக் குழப்பி ஏமாற்றினது தானே! ஹ்ம்! மரமும் செடியும் ஒன்றாகி விடுமா? மரத்துக்கு வயசு

அதிகம். வைரம் அதிகம். உரம் அதிகம். சமயம் வரட்டும்' என்று காத்திருந்தார் மூங்கில்காரர்.

சமயம் ஒருநாள் வந்தேவிட்டது.

ஈயக்காரர் மகன் வந்தான். ஈயக்காரருக்கு இப்போது கொடி கட்டி அல்லவா பறக்கிறது? மேலைச் சேத்தியில் இருக்கிற சொத்துப் போதாதென்று கீழைச் சேத்தியிலும் பூமி வாங்க வந்துவிட்டார். பூமியென்றால் அதுவும் வியாபாரத்துக்குத்தான். ஈயக் கடைக்குப் பக்கத்திலேயே ஒரு சர்பத் கடை ஆரம்பித்திருக்கிறார். அவர் சர்பத் வாங்கி விற்பது மட்டும் அல்ல, சர்பத்தே செய்கிறார். எலுமிச்சம்பழ சர்பத் பண்ணப் போகிறாராம். இதுவரையில் செய்து வந்தது நன்னாரி சர்பத் மட்டுந்தான்.

அதற்காகத்தான் ஈயக்காரர் மகன் வந்தான். மூங்கில்காரருக்குக் கீழைச் சேத்தியில் எலுமிச்சைக் கொல்லை இருந்தது. மிகவும் பிரயாசைப்பட்டு நானூறு எலுமிச்சங்கன்று வைத்திருந்தார் மூங்கில்காரர். கொல்லையிலேயே கிணறு தோண்டி இறைத்தார். ஆனால் பலன் மூக்கழுகை. காய்ப்புக் கண்ட நாளிலிருந்து முக்கால் வாசி வெம்பி விழுந்துகொண்டிருந்தது.

"கொல்லையைப் பார்க்கணும், பெரியப்பா" என்றான் ஈயக்காரர் மகன்.

பெரியப்பாவாம்! என்ன அன்பு சொரிய அழைக்கிறான்! ஏய் தம்பி! உங்கப்பா ஏமாத்தினது மறந்திடலேடா! செடியைப் போட்டா சயிச்சீங்க! இப்ப யாரு சயிக்கபோறா பாரு!

இதெல்லாம் மூங்கில்காரர் வாயைத் திறந்து சொல்லுவாரா? மனசுக்குள் தோன்றியது.

"பாக்கறது" என்று மட்டுந்தான் சொன்னார் அவர்.

"அப்பாவும் பார்க்கணும்கறாங்க."

"பார்க்கட்டுமே!"

"என்னக்கி வரலாம்?"

"சனிக்கிழமை வாங்களேன்."

சனிக்கிழமை வந்தார்கள் அவர்கள்.

ஒன்றரை ஆள் உயரத்திற்கு நெருக்கமாக வேலிபோட்டு, சகல

காபந்துகளும் செய்திருந்த கொல்லைக்குள் நுழைந்ததுமே ஈயக்காரருக்கு முகம் மலர்ந்துவிட்டது. குண்டு குண்டாகப் பழங்கள் உதிர்ந்து கிடந்தன. ஆயிரக்கணக்கில் கொல்லை முழுவதும் புற்களுக்கு இடையிலும் வேலிக்கு அடியிலும் அங்கும் இங்கும் எங்கும் இறைந்து கிடந்தன. ஈயக்காரர் நாலைந்து பழங்களை எடுத்து மோந்தார். நகத்தால் லேசாகச் சுரண்டி மோந்தார்.

"ஹப்பா! கீளச்சேத்திப் பழம்னு கேக்கணுமா?" என்று வாசனையை மெய்மறந்து இழுத்தார். அவர் பொடி போடுகிறதுண்டு. ஒரு சிட்டிகைப் பொடியை இடது உள்ளங்கையில் போட்டு ஓர் எலுமிச்சம் பழத்தை லேசாகத் தோல் சுரண்டி அந்தச் சிட்டிகைமீது நாலு தேய்ப்புத் தேய்த்துவிட்டு, பொடியை உறிஞ்சினார்.

"இந்த மாதிரி பொடி போடறதிண்டா எனக்கு உசிரு" என்றார்.

அவர் முக மலர்ச்சியைக் கவனித்தார் மூங்கில்காரர். ஆள் அகப்பட்டுவிட்டான்! கொல்லை ஓர் ஏக்கரா. மரம் நானூறு. இரண்டுமாகப் பதினாயிரம்.

"புன்செய்க்குப் பதினாயிரம் நீங்க கொடுப்பீங்களா, முந்நூறு குளிக்கு?" என்று கேட்டார் ஈயக்காரர்.

நீங்க வியாபாரத்துக்குக் கேக்கறீங்களேன்னுதான் கொடுக்கறதிண்டு பேச்சே எடுத்தேன் நான். ஒரு மரம் வருசம் பத்து ரூபா கொடுக்குது நாலாயிரம் ஆச்சு. என்னதான் செய்நேத்திக்குச் செலவு பண்ணினாலும் ரெண்டாயிரத்துக்கு மேலவா செலவாயிடும்? மிச்சம் ரெண்டாயிரம் நிக்குது எனக்கு. பத்துக்கு ரெண்டுன்னா ஒண்ணரை வட்டிக்கு மேலாச்சே. பத்தாயிரமான்னு மலைக்கிறீங்களே!"

ஈயக்காரருக்குப் பேச முடியவில்லை. ரூபாயைக் கொடுத்துச் சாசனம் வாங்கிவிட்டார்.

'ஈயக்காரரே, மரமும் செடியும் ஒண்ணாயிடாதுய்யா. எலக்சன்லே சயிக்கலாம், இதிலே நடக்காது. நீங்க பார்த்த அத்தனை பழமும் முதநா ராத்திரி கும்மாணத்திலேந்து வாங்கியாந்து கொல்லையிலே கொட்டினது. மரத்திலேந்து உதிந்த பழமா, கையால கொட்டின பழமான்னுகூடக் கண்டுபிடிக்க முடியல்லே. எலக்சன்லெ சயிக்கிறாரா!' என்று மூங்கில்காரர் உள்ளுக்குள் சிரித்துக்கொண்டார்.

ஈயக்காரர் எலுமிச்சை சர்பத் பண்ணி விற்க ஆரம்பித்துவிட்டார்.

வண்டியிலே வைத்து, பல இடங்களுக்கு அனுப்புகிறாராம். 'அனுப்பு, அனுப்பு! முதலை எடுக்க முப்பாட்டன் வரவேணும்.'

மூங்கீல்காரருக்கு ஓயாமல் எக்களிப்பு வரும், நடுநடுவே பயமும் வரும்; பழத்தைக் கொட்டிக் காரியத்தை முடித்ததுதானே?

அந்தப் பயந்தான் அவரைக் கொல்லைப் பக்கம் நாடவிடாமல் அடித்தது. ஆனால், அன்று சலவைக்காரனைப் பார்க்கப் போகவேண்டிய கட்டாயம் வரவே, என்ன செய்கிறது? அந்தப் பக்கம் போனார். கொல்லையை ஓரக்கண்ணால் பார்த்தும் பார்க்காமலும் நடந்தார். சாபமாகக் காய்த்திருக்குமோ என்ற அச்சம்; நடை விரைந்தது.

"என்ன பெரியப்பா?" என்று குரல் கேட்டது. வேலிக்குள்ளிருந்து வந்தது குரல்.

"இங்க பாருங்க!"

முள்ளிடுக்கில் ஈயக்காரர் மகனின் முகம் தெரிந்தது.

"இந்தப் பக்கமே தலைகாட்ட வாண்டாம்னு இருக்கீங்களா?"

மூங்கில்காரர் உள்ளே நுழைந்தார்.

"காய்ப்பெல்லாம் எப்படி இருக்கு?"

"நீங்களே பாருங்களேன்."

"மூங்கில்காரர் பார்த்தார். நன்றாகப் பார்த்தார். ஏகத்தாறாகக் காய்த்துக் கிடந்தது. குண்டு குண்டாகப் பழம். இலை தெரியாத பழம்.

"இப்ப மரத்திலேயே காய்க்குது" என்றான் அவன்.

என்ன வெகண்டை!

" . . . . . . . . . "

"நீங்க காமிச்சப்ப, தரையில்லேல்ல காச்சிருந்தது. இப்ப மரத்திலேயே காய்க்குது, அதே மாதிரிப் பழங்க!"

பேசுகிறது விஷமா, இல்லையா என்று கண்டு பிடிக்க முடியாதபோது எப்படிக் கோபித்துக்கொள்கிறது?

"கொல்லை வாங்கினவுடனே என்ஜினீயரும் விவசாய ஆபிசரும் வந்தாங்க."

“எதுக்கு?”

“வாய்க்காத் தலைப்பிலேந்து கால்வாய் சாங்சன் பண்ணினாரு என்ஜினிரு. விவசாய ஆபிசரு எரு சொல்லிக் கொடுத்தாரு. ஊரிலே நாயடிக்கிறாங்கள்ள, பஞ்சாயத்து போர்டிலே, அடிச்சதுங்களே அப்பா அப்படியே வாங்கி எருவாப் புதைச்சிட்டாங்க. இப்ப மரத்திலேயே காய்க்க ஆரம்பிச்பிடிச்சே, ஆறு மாசமா” என்று சிரித்தான். மூன்று தடவை சொல்லியாயிற்று.

“அதான் காய்ப்பு எகிறிக் கிடக்கு” என்றார் மூங்கில்காரர்.

“நல்ல வேளையா எலக்சன் ஆனதுக்கும் கொல்லை வாங்கினதுக்கும் சரியா ஒத்துக்கிட்டுது. இல்லாட்டி இந்த வசதியெல்லாம் – கிடைக்குமா?” என்றான் அவன். இப்போதுதான் அவனைத் திரும்பிப் பார்த்தார் மூங்கில்காரர். அவன் லேசாகச் சிரித்துக்கொண்டான், விஷமச் சிரிப்புத்தான்.

“எல்லாருக்கும் வசதி கிடைக்குமா? அதான் நல்லாருக்கு” என்று சிறிது நின்றுவிட்டு விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்தார்

“மரம் பெரிது. செடி சிறிது. ஆனால் மூத்தது மோழை, இளையது காளை என்றாகிவிட்டது. இருந்தாலும் முந்நூறு குழிக்குப் பதினாயிரம். மூன்று விலைதானே? அப்படி என்ன ஏமாந்துவிட்டோம்?” என்று தேற்றிக்கொண்டு நடந்தார் அவர்.

கலைமகள், நவம்பர் 1958

# காட்டுவாசம்

சுந்தரராஜனுக்கு ஒரு மாதம் லீவாம். முதல் ஒரு வாரம் கிராமத்தில் என்னுடன் வந்து தங்கப்போவதாக எழுதியிருந்தான். ஸ்டேஷனுக்கு வண்டிபோய் அழைத்து வந்தது. விடியற்காலை கொல்லையில் இரண்டு காட்டாமணக்குக் குச்சிகளை ஒடித்துப் பல்லில் கடித்து சுவைத்துக்கொண்டே ஆற்றங்கரைக்குக் கிளம்பினோம்.

"அப்பா அம்மா யாரும் இல்லையா?" என்று வழியில் கேட்டான் அவன்.

"ஊரில் இல்லை."

"எங்கே, அண்ணாவோ இந்தத் தடவை?"

"இல்லை. அக்காள் வீட்டுக்கு."

"எப்போது போனார்கள்?"

"இரண்டு வாரம் ஆச்சு."

"நீங்களெல்லாம் ரொம்பக் கொடுத்துவைத்தவர்கள் அப்பா."

"என்ன?"

"இத்தனை வயசுக்கு மேலே அப்பாவும் அம்மாவும் உயிரோடே இருந்து, அவர்களுக்கு நீங்கள் செய்து போடுகிறது என்றால் அது அதிருஷ்டந்தானே?"

"உண்மைதான். உங்கள் அப்பாவும் நீ ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறதைக் கண்டுவிட்டுத்தானே போனார்?"

"ஆனால், உங்கள் அப்பா சேதி வேறு."

"என்ன?"

"மூன்று பிள்ளை, மூன்று பெண். ஆளுக்கு இரண்டு மாசமாய் அவர் முகாம் போடலாம். இடம் மாறினாலேயே மனசுக்கு ஒரு சந்தோஷம். சலிப்பு இருக்காது. சிணுக்கல் இராது, பார்."

"சலிப்பு, சிணுகல் வந்தாலும் இடம் மாற்றிக்கொள்ள வழி இருக்கும்

என்கிறாயா?"

"ஆமாம். ஆனால் உங்கள் அப்பாவுக்குச் சலிப்புச் சிணுக்கல் வர நியாயம் இல்லை. சின்ன வயசிலிருந்து தியானம் பூஜை என்று மனசை நல்ல வழியில் ஒழுங்குபடுத்திக்கொண்டு வந்திருக்கிறார். கோபம் தாபம் எல்லாம் அடங்கினவர். எங்கள் அப்பா மாதிரி இல்லையே. எங்கள் அப்பாவுக்குக் கடைசி மூச்சு வரையில் கோபம் போகவில்லை. கோபித்துக்கொண்டாலும் என்னை விட்டுப் போகிறதுக்கும் வழி இல்லை." சுந்தரராஜன் ஒரே பிள்ளை.

"சிரமமாகத்தான் இருந்திருக்கும்" என்றேன்.

"யாருக்கு."

"அவர், நீ – இரண்டு பேருக்குந்தான்."

"பழகிப் போச்சு, ஒரு நாள் இரண்டு நாள் அல்லவே! நாற்பது வருஷமாக விவரம் தெரிந்த நாளாக அவர், கோபத்தை அநுபவித்துக்கொண்டே இருந்ததனால் நாளாக நாளாக மனசிலே உறைக்காமலே போய்விட்டது."

"எனக்குப் பழகிப் போகவில்லை. அதுதான் வித்தியாசம்."

"அப்படி என்றால்?"

"எங்கள் அப்பா கோபத்தை அடக்கினவர். அடிக்கடி கோபம் வராது. வந்தால் சிரமம்."

"உங்கள் அப்பாவுக்குத்தான் கோபமே வராதென்றுதான் நீ சொல்லியிருக்கிறாயே."

"'வெளியிலே' என்று ஒரு திருத்தம் சேர்த்துக்கொள்ளேன் இப்போது."

"இப்போது அதற்கு அவசியம் வந்திருக்கிறதா? வயசான குற்றமாக்கும்?"

"ஆமாம். வயசு அறுபத்தெட்டு ஆகிவிட்டது, அவருக்கு. ஆனால் இப்பொழுதென்று இல்லை. எப்போதும் அப்படித்தான். வெளியிலே யாரும், அவர் கோபித்துக்கொள்வாரா, கோபம் என்று ஒன்று தெரியுமா என்றுதான் நினைப்பார்கள். வீட்டில் இருக்கிறவர்களுக்குத்தான் அவர் மனசு எப்படிக் கோணுகிறது என்று தெரியும், சின்ன சமாச்சாரத்துக்கெல்லாம் கோபம் வந்துவிடும். குழம்பிலே கொஞ்சம் புளி

தூக்கலாக இருந்துவிட்டதானால் கண்ணிலே விரலைக் கொடுத்துதான் ஆட்டுவார்."

"எல்லாருக்கும் இருக்கிறதுதான். ஆனால் உங்கள் அப்பாவும் இந்த மாதிரி என்று நீ சொன்னதில்லை, இதுவரைக்கும்."

"சின்ன வயசிலே ஒன்று நடந்தது. அப்பாவும் நானும் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். எனக்குப் பதினாலு வயசு இருக்கும். அப்பா பச்சடிக்கு உப்பு ஜாஸ்தி என்று இக்குபிக்கென்று காய்ச்சுகிறார். அம்மாவுக்குத் தொண்டையை அடைத்து அடைத்து வருகிறது. இவ்வளவு சின்ன விஷயத்துக்கு இவ்வளவு பேச்சா என்று எனக்கும் தாங்கவில்லை. ஆனால் பேச முடியுமா? அப்பா எழுந்து போகிறவரைக்கும் பேசாமல் இருந்தேன். எழுந்து கையலம்பக் கொல்லைப் பக்கம் போனார். தொண்டையில் துக்கம் அடைக்க, 'அம்மா இனிமேல் இந்த அப்பாவோடு உட்கார்ந்து சாப்பிடவே போகிறதில்லை' என்று குமுறினேன். அம்மா சொன்னது என்ன தெரியுமா?"

"ம் . . ."

" 'சீ சீ நாயே! வாயை அலம்பு, நாயே. அப்பாவோடு சாப்பிடமாட்டேன் என்கிற காலிக்கு இங்கே என்ன வேலை? ஓடு வெளியிலே' என்று சீறினாள், பார். அப்படியே வெதறிபோயிற்று எனக்கு."

"பழங்காலத்துப் பெண் தெய்வம்."

"அப்பாவிடம் சொல்லட்டுமா என்றாள். சொல்லேன் என்றேன். 'சொன்னால் உன் முகரக்கட்டையிலே விழிக்கக் கூட மாட்டாரடா முகரக்கட்டை!" என்று மூன்றாம் மனிதர் காதிலே படாமல் பாட்டு பாடினாள். அப்பா கையலம்பிவிட்டு வந்தார். 'என்ன!' என்றார். 'மோர் புளிக்கிறதாம் துரைக்கு! முகரக்கட்டைக்கு' என்று அம்மா காற்றாடியைத் திருப்பிவிட்டாள். ஏதுக்குச் சொல்லவந்தேன் என்றால், அப்பா சின்னதுக்கெல்லாம் இப்படி தலைசுற்றி ஆடுவார். வெளியிலே போகிறபோது அவர் முகத்தைப் பார்த்தால் சாந்மே ரண்டு கால், ரண்டு கையோடு நடந்து போகிற மாதிரிதான் இருக்கும்!"

சுந்தரராஜன் புன்சிரிப்புடன் 'ம்' போட்டுக்கொண்டு வந்தான். எனக்கு, இறக்குவதற்கு ஒரு மாற்றுத் தலை அகப்பட்டுவிட்டாற்போல் இருந்தது அவன் வந்தது.

"என் பிள்ளைகளை அடித்துக் கண்டித்துக்கொண்டு வரவில்லை யென்று

அப்பாவுக்கு ரொம்பக் கோபம், என் பேரிலே. சின்னது, சும்மாவா இருக்கும்! கை சும்மா இருக்குமா, அவர்களுக்கு? பெரிய பயல் இருக்கிறானே!”

“மணிப்பயலா?”

“ஆமாம், அவன் ஏதாவது சத்தம் போட்டுக்கொண்டேதான் இருப்பான், அவனை விரட்டி விரட்டிக்கொண்டு ஓடுவார். கையிலே அகப்படவில்லையோ, அவருக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வரும் கடைசியிலே பிடித்து நாலு வைக்கவும் வைப்பார். அதோடு நின்றால் தேவலையே, இரண்டு மணி நேரம் வாயாலே பொரிந்து தள்ளுவார். ‘அந்தப் பயலை என்ன என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் நீ? மகா நெஞ்சு உரப்பில்லை அவனுக்கு? அரை நிமிஷம் சும்மா இருக்கிறானா? என்ன ஓட்டம்? என்ன கூச்சல்? புஸ்தகத்தை விரலாலே தொடமாட்டேன் என்கிறான். பிள்ளையாண்டானா வாயைத் திறக்கமாட்டேன் என்கிறான். பிள்ளையை அப்படிக் கொண்டுவருகிறானாம்! எலே, இங்கே வாடா எலே . . . காலமெ எழுந்திருந்தவுடனே வாசிடா என்றேனா இல்லையா?’ என்பார். ‘அதுதான் வாசித்தேனே, தாத்தா?’ என்பான் அவன். ‘என்னடா வாசித்தாய்? இரண்டு நிமிஷம் வாசித்தால் போதுமாடா?’ – ‘சும்மாச் சும்மா என்னத்தை வாசிக்கறதாம்?’ – ‘பிரபவ, விபவ பாடம் பண்ணச் சொன்னேனா, இல்லையா? சொன்னேனா இல்லையாடா?’ – ‘சொன்னாய்’ – ‘பண்ணினாயா?’ – ‘பண்ணினேன்!’ – ‘சொல்லு பார்ப்போம்!’ – ‘இருபதுதான் வரும்’ – ‘ஏன், மீதி?’ – ‘அறுபது இருக்கிறதே!’ – ‘பின்னே முப்பதா இருக்கும்?’ – ‘உக்கும்’ – ‘என்ன உக்குமா? உக்குமா? போடுகிறாய்?’ துடையைப் பிடித்துக் கிள்ளுவார் அவனை. ‘ஓ’ என்று ஒப்பாரி வைப்பான் அவன். ‘மூடு வாயை! மூச்சுப் பரிந்தாயோ, கொலை விழுந்துவிடும்’ என்பார். முன்னாலெல்லாம் மூச்சுப் பரியாமல்தான் இருந்தான் அவன், வரவரக் குளிர்விட்டுப் போய்விட்டது அவனுக்கு. அடிக்க அடிக்க வாயை ‘ஆ’ என்று நன்றாகப் பிளந்துகொண்டு அழுவான், அழுவான், அப்படி அழுவான். ஒன்றும் பலிக்கவில்லையென்றால் இவர் என்ன செய்வார் தெரியுமா? ‘அப்பா, இனிமேல் அடிக்கவில்லையடா, அடிக்கவில்லையடா, அடிக்கவில்லையடா, எனத் தன் கன்னத்திலே பளீர் பளீரென்று தானே போட்டுக்கொள்வார். ‘உன்னை விழுந்து கும்பிடுகிறேனடா’ என்று கை இரண்டையும் கூப்பிக்கொண்டு நிற்பார். இதைப் பார்த்ததும் அவன் இன்னும் வீலென்று கத்துவான். கடைசிலே அம்மா வந்து, ‘விட்டுத் தொலையுங்களேன் அதை. அதுதான் அடங்காப் பிடாரி, அதோடு என்னத்துக்கு மல்லாட்டம்’

என்பாள். ‘விட்டுத் தொலைக்காமல் என்ன பண்ணப்போகிறேன். எக்கேடும் கெட்டுப் போகட்டும். விட்டுத் தொலைக்காமல் என்ன? இதெல்லாம் விட்டுத் தொலைத்துவிட்டு, காஷாயத்தைக் கட்டிக்கொண்டு போகலாமென்றுதான் பார்க்கிறேன். அதற்கு இன்னும் படைத்தவன் மனசு வைக்கவில்லை. தொலைக்காமல் என்ன?’ என்று சொல்லி விர்ரென்று வாசலைப் பார்க்கப் போய்விடுவார்.”

“உனக்கும் குறும்பு போகவில்லை, அப்பா! அப்படியே நடிக்கிறாயே!”

“பதினைந்து இருபதுநாள் முன்னாலே என்ன ஆச்சு தெரியுமா?”

“ம்.”

“காலையில் பொழுது புலர இருக்கிறது. எனக்கு நல்ல தூக்கம். ராத்திரி ஒரு மணிக்குத்தான் படுத்தேன். விடிய விடிய அப்பா குரல் கேட்டது, கூடத்திலே உட்கார்ந்துகொண்டு மணிப்பயலைக் காய்ச்சிக்கொண்டிருக்கிறார். செஷன்ஸிலே குறுக்கு விசாரணைபோல நடக்கிறது. விஷயம் இதுதான்: தங்கை ஊரிலிருந்து வந்து ஒரு மாசம் இருந்தாள். இந்தப் பயல் வாயாடியா? அவள் ஏதோ சொல்ல இவன் தத்துப்பித்தென்று ஏதோ சொல்லியிருக்கிறான். அத்தைக்கும் பயலுக்கும் வாய் தடித்துப்போச்சு. இந்தப் பயலுக்கு எட்டு வயசுதான். ஆனால் வாய்க்கு இருபது வயசு. குழந்தைகளை வைத்துக்கொண்டு பெரியவர்கள் ஊர் வம்பு அளந்தால் அவை கற்றுக்கொள்ளாமலா இருக்கும்? நீ இனிமேல் எங்கள் வீட்டுக்கு வரவேண்டாம் என்று உள்ளே போய் கதவைச் சாத்திவிட்டானாம். தங்கை தடாலென்று கதவைத் திறந்துவிட்டு, அப்படித்தாண்டா வருவேன். எங்க அண்ணா வீட்டுக்கு நான் வருவேன். நீ யார் கேட்க?’ என்று உள்ளே போனாளாம். அந்தப் பயலுக்கு வெறி. ஒரு புத்தகத்தைத் தூக்கி தங்கை தலைமேலே எறிந்தானாம். அப்போது நானும் இல்லை; அப்பாவும் இல்லை. முதல்நாள் சாயங்காலம் நடந்ததற்குக் காலையில் விசாரணை நடக்கிறது. காலையில் ஆறு மணிக்கு, ‘எத்தனை நாழிகையடா தூங்குகிறாய்?’ என்று ஆரம்பித்து முதல்நாள் ‘கேஸை’ எடுத்துக்கொண்டார், அப்பா. அரைமணியாகக் கேள்வி மேலே கேள்வி. நான் படுத்துக்கொண்டே கேட்டேன். எட்டு வயசுப் பிள்ளை பதில் சொல்லுகிற கேள்வியாகவே இல்லை ஒன்றும். எழுந்து பாயைச் சுருட்டிக் கட்டில் மேலே போட்டுவிட்டு கூடத்துக்கு வந்தேன். இந்தப் பயல் பேதிக்குச் சாப்பிட்டவன் மாதிரி முகத்தைச் சிணுக்கிக்கொண்டே ஒற்றை வார்த்தையாகப் பதில் சொல்லிக்கொண்டிருந்தான். எனக்குத் தூக்கம் கெட்ட கோபம். “என்னடா

நாயே” என்று அந்தப் பயலைப் பளார் பளார் என்று முதுகிலே நாலு வைத்தேன். புழுமாதிரி துடிக்கக் கிளம்பிவிட்டான் அவன்.”

“அப்பாவை அடிக்க முடியவில்லை. அவனை அடித்தாயாக்கும்?” என்று குறுக்கிட்டான் சுந்தரராஜன்.

எனக்குச் சிரிப்பு வந்தது. அவன் சொன்னது ஓரளவு உண்மை போலவும் இருக்கவே, வெட்கமாகவும் இருந்தது. பதிலுக்குச் சிரித்தேன்.

“அப்புறம்?”

“அப்புறம் என்ன? அப்பா என்மேலே பாய்ந்தார். ஏண்டா, நான் அவனைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். உனக்கு என்னடா?” என்று ஆரம்பித்தார். ‘பின்னே என்ன? நாலு அறைவிட்டுக் கழுதையை வாயை மூடப்பண்ணுகிறதா? அவனாடே தர்க்கம் பண்ணிக்கொண்டே இருந்தால் வாய் வளர்கிறது, அந்த நாய்க்கு’ என்று கத்தினேன். ‘ஓகோ அப்படியா! எனக்கு தெரியாமல் போச்சுடா. நீ ரொம்ப புத்திசாலிடா. எனக்குத் தெரியாமல்தாண்டா போச்சு’ – ‘நான் புத்திசாலி’ என்று சொல்லிக் கொள்ளவில்லை இப்போது. உதை கொடுத்து அடக்கவேண்டிய கழுதையோட என்ன வாதம் என்றுதான் சொன்னேன் – அவ்வளவுதான் ‘சை! நீ ஒரு மனுசன் மாதிரி! பாகம் பிரிந்ததிலிருந்தே நீ வேறே ஆளாய்த்தான் இருக்கிறாய்’ என்று சுருக்கென்று என்னவோ சொன்னார்; வெளியே போய்விட்டார் மூன்று நாள் பேசவே இல்லை. நாலாவது நாள் எல்லோரோடும் ஊருக்குக் கிளம்பிவிட்டார். வந்து ஒருமாசம் ஆகவில்லை. ஆறுமாசம் இங்கே இருக்கிறதாகத்தான் வந்தார். காரணம் கேட்டதற்கு ஏதோ வேலை கீலை என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். நொண்டிச் சாக்கென்று அவருக்கும் தெரியும்; எனக்கும் தெரியும்.”

“மணிப்பயலை நீ அப்போது அடித்திருக்கக்கூடாது.”

“அடித்துக்கொண்டு வரவில்லை என்றுதானே அவர் புலம்புகிறார்?”

“அதுசரி, அந்தச் சமயத்திலே அடித்திருக்கக்கூடாது. அதுதான் நான் அப்போதே சொன்னேனே.”

“என்னவோ, வயசானவர்களோடு பழகுகிறது சிரமமாகத்தான் இருக்கிறது.”

“சிரமந்தான். பொறுத்துக்கொண்டுதான் போக வேணும்.”

“குழந்தைகளைப் படிக்கச் சொல்கிறது, வளர்க்கிறது எல்லாமே

மாறியிருக்கின்றன. நம் தலைமுறை நினைக்கிற வழியே வேறே; அவர்கள் போனவழி வேறே."

"அடியாத மாடு படியாது என்கிறவர்கள் அவர்கள். அந்தக் கட்சியும் சில சமயம் பொருத்தமாகத்தான் தோன்றுகிறது. ரொம்பவும் செல்லம் கொடுக்கவும் வேண்டாம்; தோலையும் உரிக்க வேண்டாம்" என்றான் சுந்தரராஜன்.

"ஏதாவது சொன்னால் 'டேய்' நீதாண்டா அதிசயமாய்ப் பிள்ளையைப் பெற்று வளர்க்கிறாய்! நாங்கள் எல்லாம் மலட்டுக் கூட்டம் பார்!" என்று புகைகிறார்.

"அதெல்லாம் பிள்ளை வளர்க்கிறதைப்பற்றி வந்த கோபம் இல்லை. வயசு கோபம், பாகம் பண்ணியாச்சு என்று வேறே சொல்கிறாய். பிள்ளைகெளல்லாம் பெரிய மனிதர் ஆகிவிட்டார்கள். வீட்டுக்கு நாலு பேர் பார்க்க வருகிறவர்களும் பிள்ளைகளோடு சிநேகிதம். தவிர, அவர்களைப் பார்க்க யாரும் வரமாட்டார்கள். வந்தால் யாராவது உறவின் முறை, இல்லாவிட்டால் கிழட்டுச் சிநேகிதம், இவர்களே வருவார்கள். சோறு ஜீரணமாகாது. பல் ஆட்டம் கண்டு சும்மா சும்மா வலிக்கும். உடம்பு தாளவில்லை. சாவியோ கையைவிட்டுப் போய்விட்டது. வேறு என்ன வேண்டும்? அசூயைப் படாமல் எப்படி இருக்க முடியும் அவர்களாளே? நாமே பொறுத்துக்கொண்டு போகவேணும்" என்று எனக்குப் புத்திமதி சொன்னான் சுந்தரராஜன். அவன் தகப்பனாரின் கோபம் சர்க்காருக்கே தெரியும். கோட்டுக்கு உள்ள பாக்கெட்டுகளுக்குமேல் உபரியாகத் தைக்காமல் தாசில்தார் வேலை பார்த்தவர் அவர். ஒரே பிள்ளையிடமே அவர் மென்மை காட்டியதில்லை. ரூல்தடி, விசிறிக் காம்பு, வேப்பங்குச்சி என்று பல சாமான்களை அவன் எலும்பு மேலேயே உடைத்திருக்கிறார் அவர்.

"அப்படி அடித்தாரோ, நான் ஆளாகப் பிழைத்தேனோ" என்பான் அவன்.

கடைசியில் மூன்று வருஷம் பாரிசவாதம் வந்து சித்தமும் ஸ்வாதீனம் இல்லாமல் அவர் கிடந்ததும், அவன் முணுமுணுக்கால் அவரைத் தாங்கியதும் – பெரிய கதை.

"அப்பா போனவர், இன்னும் ஒரு கடுதாசி போடவில்லை. வாரத்துக்கு மூன்று கடுதாசி எழுதுகிறவர், ஊருக்குப் போய்விட்டுச் சொன்ன தேதிக்கு நான் வரவில்லையென்றால், ரெயிலடிக்கு வந்து வண்டி வண்டியாகப்

பார்க்கிறவர், காலையிலே பஸ் நிற்கிற மதகிலே வந்து பைத்தியம் பிடித்தாற்போல, போகிற, வருகிற பஸ்ஸை எல்லாம் பார்க்கிறவர்" என்றேன் நான்.

"இது என்னப்பா இது? ஆற்றோரத்திலே ஒரு வீடு, தோட்டம்? போன வருஷம் நான் வந்திருந்தபோது ஒன்றையும் காணோமே?"

"அதுவா? வேலை மெனக்கெட்ட வேலை."

"என்னது?"

"சக்ரபாணி ஐயர் என்று ஒருத்தர். இந்த ஊருதான். ஆசிரமம் கட்டிக்கொண்டு இருக்கிறாராம். வானப்பிரஸ்தமாம்."

"என்னது!"

"ஆமாம்."

"வானப்பிரஸ்தமா?"

"ஆமாம்."

"பழைய காலத்து வார்த்தையாயிருக்கிறதே!"

"பழக்கமும் பழையதுதான்."

"நான் கேள்விப்பட்டதே இல்லை. இந்த இருபதாவது நூற்றாண்டிலா?"

"ஏன், இருபதாவது நூற்றாண்டிலே கிறுக்குகளே இருக்கக் கூடாதா?"

"உண்மை என்ன என்று தெரிந்துகொள்ளாமல் சட்டென்று தீர்மானம் சொல்லக்கூடாது."

"பின்னே என்ன? உனக்கு வானப்பிரஸ்தம் என்றால் என்னவென்று தெரியுமா?" என்று கேட்டேன்.

"காட்டிலே வாழ்ந்து தவம் பண்ணுகிறது."

"இது காடா?"

"காடென்றால் சிங்கம் புலி இருந்தால்தான் காடா? ஜன நடமாட்டம் இல்லாத இடம் காடுதான்."

"சரி, இது காடாகவே இருக்கட்டும். பெண்பிள்ளைக்கு என்ன வேலை அங்கே?"

“யார் பெண்பிள்ளை?”

“சக்ரபாணி ஐயர் சம்சாரத்தோடு தபசு பண்ணுகிறார்.”

“சம்சாரம் தானே? வேறு யாரும் இல்லையே?”

“தபசு பண்ண, கூட பெண்சாதி எதற்கு?”

“இதோ பார். சும்மா கோணல் கட்சி பேசி என்ன? நான் நன்றாகப் பார்க்காமல், தெரிந்துகொள்ளாமல் ஒன்றும் பேசத் தயாராயில்லை.”

“சரி, நாளைக்குப் போகலாம்.”

“நாளைக்கா? இப்போதே போகலாம்.”

“இப்போதா?”

“ஆமாம். மெட்ராஸிலிருந்து லீவு போட்டு எதற்காக வந்தது? இந்த மாதிரியெல்லாம் புதிது புதிதாய்ப் பார்க்கத்தான்.”

“மெட்ராஸிலே இல்லாத அதிசயமா இங்கே?”

“இட்டிலியோடு வடையும் சாம்பாரும் போட்டுத் தின்கிற ஜனங்களைத் தான் அங்கே பார்க்கலாம். மற்றபடி ரொம்பப் புத்திசாலிகளெல்லாம் நம்மோடு பேசமாட்டார்கள். மேற்கே ஒரு காலும் கிழக்கே ஒரு காலும் வைத்துக்கொண்டு நிதானப்படுத்திக்கொள்ளவே அவர்களுக்குப் போது சரியாகப்போய்விடுகிறது. இப்படி நாட்டுக் காற்று மேலே படுகிறபோதுதான் உயிர் வருகிறது. நாட்டு மண்ணிலேதான் புதிதாய் ஏதாவது முளைக்கிறது.”

“இந்த ஆள் ரொம்பப் பழசாச்சே, தெரியுமா?”

“எனக்குப் புதிது. அதுபோதும்.”

“அவர்கிட்டப் போகிறதென்றால் முழுகிவிட்டுப் போக வேணுமோ என்னவோ? அசுத்தமாய்ப் போகலாமோ?”

“குளிக்கிறது. ஓடுகிற தண்ணீர் எங்கே எங்கே என்று பறக்கிறது உடம்பு.”

“காபி?”

“எல்லாம் சாப்பிட்டுக்கொள்ளலாம்.”

பல்லைத் தேய்த்துக் குளித்தோம்.

“அவருக்குப் பிள்ளை குட்டி உண்டா.”

“அதில் ஒன்றும் குறைவு இல்லை. நாலு பிள்ளைகள். ஒவ்வொருத்தனும் ஆயிரம் ஐநூறு சம்பளம் வாங்குகிறான். ஒரு பையன் நிலம் நீச்சைப் பார்த்துக்கொண்டு இங்கே இருக்கிறான்.”

“பிள்ளைகளோடு ஏதாவது மனத்தாங்கல் இருக்குமோ?”

“இல்லாவிட்டால் இப்படி ஏன் பரதேசிக் கோலம் போடவேணும்? நீ என்ன இவரைப்பற்றியே பேசிக்கொண்டிருக்கிறாய்?”

“பின்னே எதைப்பற்றிப் பேசுகிறது? புதுச் செய்தியாக இருந்தால் பேசித்தானே ஆகவேணும்?”

குளித்துவிட்டுத் துணியையும் அங்கேயே உலர்த்திக் கட்டிக்கொண்டு ஆசிரமத்தைப் பார்க்க நடந்தோம்.

“இப்போது ஏதாவது நூற்றுக்கொண்டிருப்பாரோ” என்று நண்பன் கேட்டான்.

“அந்த ஆசிரமம் இல்லை இது. சும்மா தபசுதான்.”

ஒரு சின்னத் தோப்பு. நல்ல நிழல்பாங்கு, வாழை, வேம்பு, முருங்கை, செம்பருத்திச் செடிகள், பவழ மல்லிகை, மரங்கள், மல்லிகைப் புதர்கள், துளசி, விபூதிப் பச்சை, மாசிப் பச்சை, நடைவரப்புக்குப் பொன்னாங்கண்ணி, நாலைந்து எலுமிச்சங்கன்றுகள், வெண்டை வரிசை, கீரைப் பாத்திகள் – வேப்ப மரத்தில் கட்டிய ஒரு பசுவும் கன்றும். சூழ்நிலை மனத்திற்கே குளுகுளுவென்று இருந்தது, தோட்டத்தின் நடுவில் வீடு, கீற்று வேய்ந்த வீடு. நாலு பக்கமும் விசாலமான தாழ்வாரம். வீடு, தோட்டம், எல்லாம் மெழுகியும் பெருக்கியும் துப்புரவாக இருந்தன.

ஐயர் புலித்தோலைப் பரப்பிக் கண்ணை மூடி நிமிர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தார். இரண்டு நிமிஷம் என்ன செய்வதென்று, தெரியாமல் நின்றிருந்தோம்.

“அப்புறம் வருவோமே” என்றான் சுந்தரராஜன்.

ஐயர் கண் திறந்தது. திரும்பி எங்களைப் பார்த்தார். விகற்ப சமாதிதான்போல் இருக்கிறது.

“நமஸ்காரம்” என்றேன் நான்.

காலைக் கிணற்றங்கரையில் கழுவி வருமாறு சைகை காட்டினார். கழுவி வந்தோம். “தாழ்வாரத்தில் உட்காருங்கள், ஒரு நிமிஷம்” என்ற பாவனையில் சைகை காட்டவே உட்கார்ந்தோம். ஒரு சிறிய அலமாரியில் புத்தகங்கள், இரண்டு மூன்று ஞான யோகிகளின் படங்கள். அங்கு வேறு ஒன்றும் இல்லை. சுற்றி முற்றிக் கண்ணால் அளந்துகொண்டு அந்த அமைதியையும் நிழலையும் தண்மையையும் பருகிக்கொண்டிருந்தோம், ஒரு நிமிஷம் ஆயிற்று.

“என்ன துரைசாமி! எங்கே இப்படி அத்தி பூத்தாற் போல? அவர்கள் யார்?”

“என்னோடு காலேஜிலே வாசித்தவர்; மெட்ராஸிலே ஒரு மத்திய சர்க்கார் இலாகாவுக்கு உதவித் தலைவர். லீவிலே வந்திருக்கிறார்.”

“நமஸ்காரம்.”

“நமஸ்காரம்.”

“எந்த இலாகாவோ?”

சுந்தரராஜன் சொன்னான்.

“ஓகோ! பெரிய வேலைதான் – என்ன துரைசாமி அப்பா அம்மா எல்லாரும் சௌக்கியம்தானே?”

“ம். அப்பா ஊரிலே இல்லை.”

“எப்போது போனான்?”

“மூன்று வாரம் ஆயிற்று.”

“எங்கே?”

“விழுப்புரம்.”

“உடம்பு திடமாக இருக்கிறான் அல்லவா?”

“கொஞ்சம் பலக்குறைவுதான்.”

“ரொம்பச் சீக்கிலே அடிபட்டுவிட்டான். பாவம்! – என்ன, அவன் இவன் என்று பேசுகிறானே என்று பார்க்கிறீர்களா? இவன் அப்பா என் க்ளாஸ்மெட், ஸார். இத்தனையுண்டு குழந்தையிலிருந்து சேர்ந்து

வாசித்தோம். பரமசாது. தங்கக் கம்பி என்று சொல்லுவார்கள். நான் தங்க புஷ்பனம் என்றுதான் சொல்லுவேன். அவ்வளவு மிருதுவான சுபாவம்! இந்தக் கோபம், அதட்டல், உருட்டல் ஒன்றும் தெரியாது. பரம புண்ணியசாலிக்குத்தான் இந்தக் குணங்கள் வாய்க்கும்."

"இந்தக் குணங்கள் எல்லாம் என் பக்கம் திரும்பிக்கூட பார்க்கவில்லை" என்றேன் நான்.

"நீயும் ஒன்றும் குறைவு இல்லை. அதற்கு என்ன? யாரும் லட்சியம் இல்லை என்று ஒரு போக்கு. வயசானால் அதுவும் சரியாகப் போய்விடுகிறது. ம், ஸாருக்குச் சொந்த ஊர் எதுவோ?"

ஊரைச் சொன்னான் சுந்தரராஜன்.

"பேஷ் பேஷ்! நம் பக்கந்தான். அதுதான் மூஞ்சியிலே எழுதியிருக்கிறதே! நிதானம், அழுத்தம், குறும்பு, புத்தி சக்தி! தெரிகிறது, தெரிகிறது" என்று தலையாட்டினார் ஐயர்.

"எங்கே இப்படி?"

"சும்மாதான், பல் தேய்க்க வந்தோம். என்ன, தோட்டம் துரவெல்லாம் புதிதாயிருக்கிறதே என்றார் இவர், காண்பிக்கலாமென்று கூட்டி வந்தேன்."

"ஆமாம் துரைசாமி, இப்போது நான் 'எக்ஸிபிஷன்' மாதிரிதான் இருக்கிறேன். இந்தப் பேர் புதிதாக இருக்கிறது, பார்."

"எது?"

"எதுவா, உனக்குத் தெரியாதோ? வானப்பிரஸ்தம்."

"அதற்கு நிஜ அர்த்தம் என்ன?"

"பழைய நாளிலே வித்தியாப்பியாசம் பண்ணி, இல்லறம் நடத்தி, உலக சுகம் எல்லாம் அனுபவித்துவிட்டு, வயசானவுடனே கிழவியை அழைத்துக்கொண்டு காட்டிலே போய்த் தபசு பண்ணுவார்கள். அந்த மாதிரி கிளம்பி வந்துவிட்டேன் நான். அதுதான் அர்த்தம். நான் இப்போது இல்லற சந்நியாசி. கடைசியில், இல்லறம் போய்ச் சந்நியாசம்தான் நிற்கும்."

"சந்நியாசம் அவசியந்தானா?" என்று கேட்டான் சுந்தரராஜன்.

"வைராக்கியம் வந்து விட்டதனால் சந்நியாசத்திலே போய்த் தானாக மனசு விழுந்துவிடுகிறது. அப்போது அது அவசியம் என்றுதான் படும்."

“வைராக்கியம் வந்தால்தானே?”

“ஆமாம். கோபித்துக்கொண்டு சில பேர்கள் சந்நியாசம் வாங்கிக் கொண்டால் என்ன ஆகும், தெரியுமோ? கோபம் தணிந்தபிறகு, ஏனடா வந்தோமென்று அழுகை அழுகையாக வரும். இந்தமாதிரி வீட்டை விட்டு, ஊரை விட்டுத் தனியாக ஒதுங்கி வந்தால்தான் வைராக்கியம் பழகும். மனிதனை ஆட்டி வைக்கிற பெரிய சக்தி எது ஸார்? சொல்லுங்கள் பார்ப்போம். சுந்தரராஜன்.”

“சதை.”

“அப்படி என்றால்?”

“ம். காமம்.”

“கரெக்ட். ஏது ஏது! பெரிய ஆளாக இருக்கிறீர்களே? துரைசாமி, உன் சிநேகிதர் பெரிய ஆளாய் இருக்கிறாரே! அந்தக் காமத்தை வெல்ல முடியாது என்றுதான், வானப்பிரஸ்தத்திலேயும் அவளைக் கூட்டிக்கொண்டு போ. கூட வைத்துக்கொண்டே பிரம்மச்சரியம் பழகு என்று சொன்னார்கள். இல்லாவிட்டால் அங்கேயும் போய் ஏதாவது தடுமாறி விழுந்தால் இரண்டு கண்ணும் போனதுபோலத்தான் வைராக்கியம் பழகவே இந்த நிலை.”

“இப்படி வரவேணுமென்று உங்களுக்கு ஏன் தோன்றியது?” என்று கேட்டான் சுந்தரராஜன்.

“அதுவா? எனக்குப் பிள்ளைகளோடு சண்டை பூசல் ஒன்றும் கிடையாது, ஸார். ஒரு தெய்வத்துக்கே அடுக்காத அநியாயத்தைப் பார்த்தேன். அப்போது பிறவியின் ரகசியம் புரிந்துபோய்விட்டது. கிளம்பிவிட்டேன்.”

“என்ன அநியாயம்?”

“சாலிப்பாட்டி சாலிப்பாட்டி என்று இங்கே ஒருத்தி இருந்தாள். உனக்குத் தெரியுமாடா துரைசாமி?”

“யார்?”

“கிட்டன் இருக்கிறான் அல்லவா? – ‘ஸெமி’. பளிங்கு மூக்குக் கண்ணாடி.”

“ஆமாம், நாகுவுடைய அண்ணன்.”

“அவன் பாட்டி, பரம ஏழை. சின்ன வயசிலே வீணாகப் போய்விட்டாள். காலணாக் கிடையாது. இரண்டு குழந்தைகளை வைத்துக்கொண்டு படாத சிரமப்பட்டாள். பக்கத்து ஊரிலே போய்ச் சமைத்துப் போடுகிறது, சமைத்துவிட்டுத் திரும்பி வருகிறது; வருகிறபோதெல்லாம் இரண்டு இரண்டு செங்கல்லைக் கையிலே எடுத்து வருவாள்.”

“செங்கல்லா? எதற்கு?”

“வீடுகட்ட அப்போது எங்கள் அம்மா எங்கள் பழைய வீட்டைப் புது வீடாக மாற்றிக்கொண்டிருந்தாள். சாலிப்பாட்டி தூரத்து உறவு. நாலு தலைமுறைக் கணக்கிலே எங்கள் அம்மாவுக்கு அத்தை முறை. அவளுக்கு ஒரு வேகம். என் மருமாள் வீடு கட்டுகிறபோது நான் மட்டும் சும்மா இருப்பேனோ என்று சாமக்கிரியையெல்லாம் சேர்க்க ஆரம்பித்தாள். எங்கே கல்லு கிடந்தாலும் இரண்டு இரண்டாக எடுத்துக் கொண்டு வருவது, எங்கேயாவது வீட்டு வேலை நடந்தால் ஒரு படி அரைப் படியாகச் சிமிண்டைப் பிச்சை வாங்குகிறது. ஐயா, இப்படியே சேர்த்தாள் ஐயா, சேர்த்தாள் ஐயா, தம்படி செலவழிக்காமல் குவித்துவிட்டாள், கொண்டு சாமான்களை. எங்கள் வீட்டிலே தச்சு வேலை நடந்தது, துண்டு விழுகிற சட்டம், பலகை, குச்சி ஒன்றை விடமாட்டாள்; தூக்கிக்கொண்டு போய்விடுவாள். ரொம்ப ஆச்சரியமான பொம்மனாட்டி. கடைசியிலே கழுகுக்கூடுமாதிரி இருந்த அவள் வீடு, வெறும் குடிசை. அது என்ன ஆச்சு? பளபளவென்று சின்ன வீடாக, ஓட்டு வீடாக, அழகாய் வளர்ந்துவிட்டது. வயது அறுபத்தஞ்சு அப்போது அவளுக்கு. இத்தனை செய்தவளுக்கு என்ன கிடைத்தது தெரியுமோ? ஆறு மாசம் அந்த வீட்டிலே அவளால் இருக்க முடியவில்லை. பிள்ளையும் நாட்டுப் பெண்ணுமாகச் சேர்ந்து அவளை உதை உதை என்று உதைத்தார்கள்; சோறு போடாமல் விரட்டி விட்டார்கள். ஊரிலே எவ்வளவோ பேர் சொல்லியும் நடக்கவில்லை.

அந்தப் பயல் கிராதகன். கடைசியிலே திண்ணையிலாவது இருக்கட்டுமடா என்று சொல்லி அவளைத் திண்ணையில் வைத்தார்கள். ஒரு வாரம் அங்கேயே இழுத்துக்கொண்டு கிடந்தது அது. அப்புறம் ஹோகயா. முதல் நாளைக்கு வந்து ‘இந்தாருங்கள், பால்கோவா பண்ணியிருக்கிறேன். கொஞ்சம் சாப்பிடுங்கள்’ என்று மாமியார் வாயிலே கொண்டு திணித்தாள், நாட்டுப் பெண். இதை நான் கண்ணாலேயே பார்த்தேன். அன்றிலிருந்தே அது மனசிலே வேலை

செய்துகொண்டிருந்தது. ஒன்று தெரிந்துகொண்டேன்; இந்த உலகத்திலே அன்பு இருக்கிறதே, அன்பு. அது இறங்குமுகமாகப் போகும், பக்கவாட்டிலே போகும். மேல்நோக்கிப் போகாது.

"அப்பனுக்குப் பிள்ளைமேல் ஆசை. அந்தப் பிள்ளைக்கு அவன் பிள்ளைமேல் ஆசை. இப்படிப் போகுமே ஒழிய, பிள்ளை அப்பாவிடம் இருக்கிறது என்கிற சாத்தியம் இல்லை."

"என்ன இது, ஒரே அடியாக?"

"அதுதான் ஸார் உண்மை. அப்பாவிடம் பயந்தான் இருக்கும், கௌரவம் இருக்கும். பொண்டாட்டியிடமும் பிள்ளையிடமும் இருக்கிற அன்பும் ஆசையுமா இருக்கும்?"

"நீங்கள் ஏதோ புதிதாகச் சொல்ல வேணுமென்று சொல்கிறதுபோல இருக்கிறது."

"புதிதா! மிகவும் பழசான சமாசாரம், ஐயா இது. நம் சாஸ்திரங்கள், கவிகள் எல்லாம் என்ன சொல்லுகிறார்கள்? அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். ஏன் ஐயா! பிள்ளையிடம் அன்பாக இரு; பெண்டாட்டியிடம் ஆசையாக இரு என்று சொல்லக்கூடாதோ? ஆக, இந்த அன்பு போகிற போக்கு இறங்குமுகம் இல்லையா? மேல்நோக்கிப் போகிறது, இயற்கைக்கே முரண் என்று ஆகவில்லையோ?"

சுந்தரராஜன் என்னைப் பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்தான்.

"வயசான பிறகு காட்டுக்குப் போ என்று இதற்காத்தான் வைத்திருக்கிறார்கள். வயசான பிறகு உன்னைக் கவனிக்கமாட்டார்கள் யாரும். மரியாதையாய் ஒதுங்கிவிடு என்று அர்த்தம்; கடமையினாலும் நன்றியினாலும் நம்மை வைத்துக் காப்பாற்றுவான் பிள்ளை. வாஸ்தவந்தான். ஆனால், தர்மசங்கடம் இல்லாமல் இராது. இரண்டு தலைமுறை சேருவதில்லை. அடிப்படையாக நான் சொல்கிற இறங்குமுகந்தான் சரி. என்ன, உங்களுக்கு என்ன தோன்றுகிறது?"

"யோசிக்கிறோம். அப்புறம்தான் தெரியும்."

"பேஷாக யோசியுங்கள் – இந்தா என்ன, உள்ளை – விட்டு வரமாட்டேன் என்கிறாய்? இவர்கள் வந்து எத்தனை நாழிகை ஆச்சு தெரியுமோ இல்லையோ? . . . – உன்னைத்தானே! நானும் மூச்சுவிடாமல் பேசிக்கொண்டிருக்கிறேன்" என்று உள்ளே பார்த்துக் கத்தினார் ஐயர்.

"இதோ!" என்று குரல் வந்தது.

அரை நிமிஷத்தில் இரண்டு தம்ளரில் காப்பியை எடுத்து வந்தாள் ஐயர் மனைவி; பொல்லென்று வெளுத்த தலை சற்று ஸ்தூலித்த உடல். பிறகு அவருக்கும் காபி வந்தது.

நல்ல காபி, கள்ளிச் சொட்டு காபி; மணக்கிற காபி.

"காபி இல்லாமல் என்னால் இருக்க முடியாது, ஸார். நாலு வேளை சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். ஆசிரமம் எடுத்துக்கொண்ட பிறகு மூன்று வேளையாகப் பண்ணிக்கொண்டிருக்கிறேன். இரண்டு, ஒன்றாகக் குறைத்து நிறுத்திவிடுவேன். இன்னும் நாலு வருஷம் கழித்து நீங்கள் வந்தால் இங்கே கொத்தமல்லிக் காபிதான் கிடைக்கும். சொல்லிவிட்டேன்" என்று எச்சரிக்கையுடன் முடித்தார் ஐயர்.

"வெற்றிலை போடுவது உண்டோ?"

"பரவாயில்லை" என்றான் சுந்தரராஜன்.

"இருக்கிறது, வேணுமென்றால் வருகிறது."

"அவருக்கு அதுதான் உயிர்" என்றேன் நான்.

"இந்தா, உன்னைத்தான். வெற்றிலைச் சீவல்."

வெற்றிலை சீவல் பெட்டியில் வந்தன. அவற்றோடு உயரமான டப்பா ஒன்றும் வந்தது.

சுந்தரராஜன் அரைத்தான். உயரமான டப்பா நிறையக் குங்குமப் பூவாக நறுக்கிய புகையிலை.

ஐயரும் வாயில் போட்டு அரைத்துப் புகையிலை ஒரு கொத்து எடுத்து உள்ளங்கையில் வைத்துப் பிடித்து வாயில் அதக்கினார். புகையிலையைக் கண்டதும் சுந்தரராஜன் முகம் பளீர் என்று மலர்ந்தது. அவனும் ஒரு பிடி எடுத்து அதக்கினான்.

"ஒண்ணாங்கிளாஸ் புகையிலையாய் இருக்கிறதே!"

"சிவபுரியிலிருந்து நேராய் வருகிறது. ஸார் முன்னெல்லாம் பன்னீரும் வாசனையும் கலந்ததாகப் போட்டுக்கொண்டிருந்தேன். ஆசிரமத்துக்கு வந்த பிறகு வெறும் புகையிலையோடு நிறுத்திக்கொண்டிருக்கிறேன். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் விட வேண்டியிருக்கிறது."

“விட முடியுமா?”

“முயற்சி பண்ணுகிறது, முடியவில்லையென்றால் பகவான் செயல். திடீரென்று விட்டுவிட்டு, ஜபம் பண்ணுகிறபோது புகையிலையை நினைத்துக்கொண்டிருப்பதைவிட ஒரு தடவை போட்டுத் துப்பிவிட்டு உட்கார்ந்தால் தண்டா இல்லை, பாருங்கள்.”

“அது சரி, அறவே விட்டுவிடுகிறதுதான் முடியுமா என்று சந்தேகமாக இருக்கிறது.”

“அதுதான் சொன்னேனே! முயன்று பார்க்கிறது. முடியவில்லை என்றால் இன்னொரு ஜன்மாவிலேதான் விடவேணும். நாம் என்ன பண்ணுகிறது? சம்ஸ்காரம் விடுகிறதா?”

ஐயரோடு வெகு நேரம் பேசினோம். “நானே கடவுள், நானே பிரம்மம்” என்றுதான் தியானம் செய்கிறார் அவர். ஊரில் வாழ்ந்தபோது லிங்கம் விக்கிரகம் எல்லாம் வைத்து, அபிஷேகம் பூஜை எல்லாம் தினப்படி செய்து வந்தாராம். ஞான மார்க்கத்தில் இறங்குவதற்காகத் தீர்மானித்ததும் அவற்றையெல்லாம் மூட்டை கட்டி ஒன்றுவிட்ட தம்பியிடம் ஒப்படைத்துவிட்டு, ஆசிரமத்துக்கு வந்துவிட்டாராம். இப்போது அவருக்குத் தியானந்தான் தொழில்.

விடைபெற்றுக்கொண்டு கிளம்பும்போது மணி ஒன்பது ஆகிவிட்டது.

“ஒரு வாரம் இருப்பீர்கள் அல்லவா? இன்னொரு தடவை வந்துவிட்டுப் போங்கள்” என்றார் அவர் சுந்தரராஜனைப் பார்த்து.

“கட்டாயமாக வருகிறேன்.”

வெளியே வந்து நடந்தோம்.

“ஸ்வாரஸ்யமான ஆள்தான்” என்றான் சுந்தரராஜன். “அவர் மார்பெல்லாம் பார்த்தாயா? வைரம் பாய்ந்திருக்கிறது; பிராணயாம மார்பு” என்றான். “உள்ளூரிலே இந்த மாதிரி ஓர் அபூர்வமான ஆள் இருக்கிறபோது அவரோடு பழகாமல் நையாண்டி பண்ணிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாயே!” என்று என்னைக் கடிந்துகொண்டான்.

“சரி, நீ இனிமேல் ஊருக்குப் போகிறவரைக்கும் இங்கேதான் பழி கிடப்பாய் போல் இருக்கிறது.”

“பின்னே, என்ன? இந்த மாதிரிப் புகையிலை இங்கே யார்

கொடுப்பார்கள்? நீ கொடுப்பாயா? என்ன துர்ப்பழக்கமென்று உபதேசம் பண்ணுவாய்."

**கலைமகள், நவம்பர் 1955**

# கள்ளி

சட்டையைக் கழற்ற முடியவில்லை. விடேன் விடேன் என்று வேர்வை இழுத்துப் பிடித்துக்கொண்டிருந்தது. வேர்வை மட்டுமில்லை; பிடிக்கப் பிடிக்கத் தைத்திருந்த தையலும் சேர்ந்துகொண்டது. மூன்று கஜம் வாங்கினால் இந்த வேதனைகளைத் தவிர்க்க முடியாது என்றுதான் மூன்றே கால் கஜமாக வாங்கிக் கொடுத்து, தாராளமாகத் தை என்று சொன்னது. தையற்காரன் அதற்காகத் தனி மரியாதை செய்துவிடவில்லை. சென்னைப் பட்டணத்தின் பிசுக்கும் புழுக்கமும் 'ஹா ஹா' என்று தபிக்கச் செய்தன. சென்னைக்கே உரித்தான ஒரு நரக நிலை – துளிக் காற்றில்லாத, காற்று எப்போதாவது வீசும் என்ற நம்பிக்கைக்கிடமில்லாத, புழுக்கி, கண்ணை ஜிவு ஜிவு என்று பொங்கவைத்து, உடலில் ஜுரச் சூட்டை ஏற்றிவிடுகிற ஊமை வெயிலும் மூட்டமும், ஒன்றிலும் மனத்தைச் செலுத்த முடியாத திணறல்! வெளியே போனால் வீட்டுக்குத் திரும்ப வேண்டும்போல ஒரு ஏக்கம். வீட்டுக்கு வந்தால் வந்துவிட்டோமே என்று பதைப்பு. தையற்காரன் போன்ற மனிதப் புழுக்களின் அற்பத்தனம் வேறு. க்ஷவரத் தகட்டால் சட்டையைக் கிழித்துவிடலாமா என்று ஒரு கணம் நெஞ்சுக் குமுறல். மெதுவாகத் தாஜா பண்ணிப் பண்ணித் தலை வழியாகச் சட்டையை எடுத்து, பனியனையும் உரித்து 'சீ' என்று மாட்டி, தொங்கத் தொங்கக் கட்டிய வேட்டியை அவிழ்த்து கணுக்கால் முழங்கால் வரைக்கும் அந்த அடிக்காத காற்று படும்படியாகத் தூக்கிச் சுருட்டிக் கட்டி . . . அதுவும் செய்தாயிற்று.

புறக்கடைக்கு ஓடி குளுகுளுவென்ற தண்ணீரைக் கொட்டிக்கொள்ள வேண்டும்.

அதற்குள் 'இப்பதான் வராப்பல இருக்கு?' என்று குரல்.

கிருஷ்ணன் திரும்பிப் பார்த்தார். வாசலில் சரியாக வெளிச்சமில்லை.

'காலமே வந்தாரே அவர்ப்பா' என்று மரியாதையாக, மெதுவாக, உற்சாகமாகச் சொன்னான் கிருஷ்ணனின் பிள்ளை.

'நான்தான் சார். அவசரமில்லை, மெதுவா வாங்கோ.'

அந்தக் குரலைக் கேட்டதும் நெஞ்சில் வந்த முனகல், குரோதமும் வெறுப்புமாக மாறி மாறிப் பாய்ந்தது.

'யாரு! அடெடெ! சுப்பண்ணாவா! இதோ வந்துவிட்டேன்' என்று அவர் வாசல்படி ஏறுவதற்கு முன்னாலேயே ஒரு எட்டில் அங்குபோய் நின்றார் கிருஷ்ணன். படபடப்பைக் குரலில் காட்டிக்கொள்ளாமல், வறட்டு அலுப்புக் குமையச் சொன்னார். 'ரண்டு, மூணு இடத்திலே 'ட்ரை' பண்ணினேன். கிடைக்கலே சார்' என்று ஈரமில்லாமல் சொல்லி நிறுத்தினார்.

'ஆங்! கிடைக்கலியா?'

'அலைஞ்சு அலைஞ்சு பார்த்தேன், கிடைக்கலே.'

கிருஷ்ணன் வந்தவரை உள்ளே கூப்பிடவில்லை. கூப்பிட இஷ்டமில்லை.

'ரண்டு, மூணுகூடக் கிடைக்காதா?'

'கிடைக்கலியே!'

'உங்க ஆத்திலே . . .' என்று மனைவியிடம் வாங்கித் தரக் கூடாதா என்று சூசகமாக அவர் கேட்டதும், கிருஷ்ணனுக்குப் பொங்கிக்கொண்டு வந்தது. தரித்திரம் வந்துவிட்டால் என்ன கேட்கிறது, பேசுகிறது என்ற வரம்புகூடவா இடிந்துவிடும்?

'ஆத்திலே ஏது? இந்தத் தரித்திரத்துக்கு வாழ்க்கைப்பட்டத் தரித்திரம் அது!' என்று பொருமினார்.

'சார் சார் – அப்படிச் சொல்லாதீங்கோ . . .' என்று சட்டென்று குறுக்கிட்டார் சுப்பண்ணா.

'உம்மைத் திட்டுவதற்குப் பதிலாக, என்னையும் மனைவியையும் திட்டிக்கொண்டேன்' என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டார் கிருஷ்ணன்.

'அப்ப நான் வரட்டுமா?'

'சரி.'

சுப்பண்ணா நகரவில்லை. அவர் நகரட்டும் என்று உள்ளேபோகத் துடித்தார் கிருஷ்ணன்.

'நாளைக்குச் சம்பளம் கட்டினாலொழிய பரீட்சைக்கு உட்காரப் படாதுங்கறாராம் ஹெட்மாஸ்டர். பேர் அடிச்சாச்சு, நாலஞ்சு நாளைக்கு முன்னாலியே. பரீட்சைக்காவது உட்கார வச்சுப்பிடலாம்னு பார்த்தேன் – '

சொல்லிக்கொண்டே, பிரமை பிடித்தாற்போல் கிருஷ்ணனின் முகத்தையே பார்த்தார் அவர். இரண்டு வருஷங்களாக சுப்பண்ணாவின் கண்ணில் புகுந்துவிட்ட அதே பார்வைதான். கண் கொட்டாத, பித்துப் பிடித்தாற் போன்ற பார்வை. பத்து வினாடி கழித்து மீண்டும் சென்னார்: ‘ரொம்ப வேண்டியப்பட்டவர்களையெல்லாம் கேட்டாச்சு, கையை விரிச்சுப்ட்டா . . . முந்தாநாள் பத்து ரூபா இருந்தது. நேத்திக்கி சிரார்த்தம். அதுக்குச் சரியாய்ப் போயிட்டது. சிரார்த்தத்தை நிறுத்த முடியுமோ?. . . இப்ப என்ன செய்யறதுன்னு புரியலியே . . .’

கிருஷ்ணன் அசைந்து கொடுக்கவில்லை. சற்று பேசாமலிருந்துவிட்டு மீண்டும் சொன்னார் சுப்பண்ணா: ‘நான் உங்களைத்தான் நம்பிண்டிருந்தேன். நீங்கதான் என்ன செய்வேள்? அலைஞ்சு அலைஞ்சு பார்த்தேங்கறளே. எனக்குன்னு நினைச்சுண்டு கேட்டாலே வராது. இன்னிக் காலமே பாருங்கோ, ஆதிநாள் சிநேகிதன், ஐநூறோ, அறுநூறோ சம்பளம் – ஹார்பர்லே. அவனைப் போய்ப் பார்த்தேன். இப்படி ரொம்பக் கஷ்டமாயிருக்குப்பான்னு சொன்னேன். சட்டைப் பைக்குள் கையை விட்டான். அப்பறம் என்ன தோணித்தோ, தெரியலே. அரிக்கிறாப்போல, சொரிஞ்சுனுட்டான். நம்ம முகத்தைப் பார்த்தா கொடுக்கப்போன விரல் கூட அப்படி மாறிப்பிடறது . . .’

நிமிர்ந்து பார்த்தார் சுப்பண்ணா. முகத்தில் இரண்டு வார வெள்ளை மயிருடன் அடிபட்ட கிழட்டு நாய்போல் பார்த்தார் அவர்.

‘அப்ப நான் வரட்டுமா . .?’

‘சரி . . . எங்கிட்ட இருந்தா கொடுத்துப்பிடுவேன்’ என்று கிருஷ்ணன் சொல்லும்போது, அவர் கால் விரல்கள் வீட்டின் உட்பக்கத்தை நோக்கித் திரும்பி நின்றன.

‘உங்களுக்கு ரொம்பச் சிரமம் கொடுத்துட்டேன். வரேன்’ என்று நகர்ந்தார்.

‘பரவாயில்லை’ என்ற கிருஷ்ணன், அவர் ஒரு அடி எடுத்து வைப்பதற்குள் மூன்றடி உள்நோக்கி எடுத்துவைத்துவிட்டார்.

உள்ளே வந்தார். துண்டையெடுத்துக்கொண்டு கொல்லையில் போனார். தலை, முகம், முதுகு, காலெல்லாம் தண்ணீரை மடார் மடார் என்ற சத்தத்துடன் மொண்டு மொண்டு விட்டுக் கழுவிக்கொண்டார். நேராக மாடிப்படி ஏறினார்.

‘வந்து . . .’ என்ற அவர் மனைவி பின்தொடர்ந்து மாடிப்படியிலேயே நின்றாள்.

‘என்ன?’ என்று கடுகடுத்த முகமும், தடைப்பட்ட வேகமுமாக நின்றார் அவர்.

‘சாப்பிட – ’

‘இப்ப பசிக்கலே எனக்கு.’

‘கொஞ்சம் காப்பியாவது . . .’

‘அதெல்லாம் வாண்டாம்.’

‘இல்லை; அவர் என்ன சொல்லிவிட்டுப் போனார்?’

‘இவன் உயிரை வாங்காதே. வேணுங்கறபோது வந்து சாப்பிடுவன்னு சொல்லிவிட்டுப் போனார் . . . தொணதொணன்னு . . . யாரு என்ன சொன்னா என்ன, ‘பூடை’ என்று பின் பகுதியை ஆத்மகதமாக முணுமுணுத்துக் கொண்டு, மாடியேறி, சுவரில் சாத்தியிருந்த சாய்வு நாற்காலியை எடுத்து, மொட்டை மாடியில் தடார் என்று பிரித்துச் சாய்ந்துகொண்டார்.

வானம் ஸ்தம்பித்துக் கிடந்தது. மொட்டை மாடியிலிருந்து தெரிகிற தென்னந்தோப்பு யாரோ சபித்துவிட்டாற் போல ஆடாமல், அசங்காமல் கல்லாக நின்றது. அங்கு இரவு, பகலென்று பாராமல் கத்துகின்ற நார்த்தங் குருவிகள் கத்தவில்லை. வானில் நட்சத்திரங்களும் தெரியவில்லை. ஒரு அசட்டுச் சாம்பல் மூட்டம் போட்டிருந்தது.

அந்த மூட்டத்தில் வாழைக்காய்க் குடாப்பில் அகப்பட்டது போல உடல் வெந்தது. நனைத்துத் துடைத்த முதுகு, நெற்றி, ஆடுசதையெல்லாம் மீண்டும் வேர்த்து இம்சித்தன. என்ன இன்பமான பட்டணம்.

கெட்டவர்கள் சேர்கிற பட்டணம். கெடாதவர்கள் சேர்கிற பட்டணம். பசிக்கிறவர்கள் வந்து சேர்கிற பட்டணம். இருக்கிறவர்கள் போதாதென்று ஊரிலிருந்து வேறு பணத்தைக் கொண்டுவந்து வயிற்றில் அடிக்கிறவர்கள் தொகையைப் பெருக்குகிற பட்டணம்.

‘பட்டணத்திற்கு வந்ததிலேர்ந்து நீ ஆளே மாறிவிட்டாய்’ என்கிறார்கள், ஊரிலிருந்து வந்துவிட்டுப் போகிற நண்பர்கள். ஆமாம், மாறித்தான்விட்டார் அவர், சுப்பண்ணா பத்து ரூபாய் கேட்டார். கீழே

பெட்டியிலிருக்கிறது, பதினைந்து ரூபாய். எடுத்துக் கொடுக்கலாம். ஏன் கொடுக்க வேண்டும்?

'ஒரு கையெழுத்து கேட்டேனா கொண்டேனா? ஐம்பது, இருநூறு, முந்நூறு என்று கைமாற்றாக வாங்கிக்கொள்கிறான்கள். பணம் கைக்கு வரும்போது, என் ஞாபகமா வருகிறது அவனுகளுக்கு? பொண்டாட்டியாத்தாளுக்கு எந்தப் புதுத் தினுசுப் புடவை வாங்கலாம், வீட்டிலே எந்தக் கண்டா முண்டான் சாமான்களை வாங்கி அடைக்கலாம் என்றுதானே அலையறான்கள்!

'மாப்பிள்ளை அழைக்கிறபோது, இந்தான்னு தேடிண்டு வந்து கொடுத்தேள். நான் கேட்ட முழுப் பணம் இல்லாமல் கடன் வேறு வாங்கிண்டு வந்து கொடுத்தேள். எனக்கு எல்லாம் தெரியறது. ஆனா, நான் என்ன செய்வேன்! மூணு வருஷமாச்சு, காலாவதிகூட ஆயிடுத்து. இதோ பாருங்கோ, என்னை நம்புங்கோ, அடுத்த மாசம் போகட்டும். மூணாம் மாசத்திலேருந்து பத்துப் பத்து ரூபாயாவது கொடுத்துத் தீத்துப்பிடறேன். நீங்க வந்து கேக்கறது என்னாலே தாளமுடியலே' என்கிறார். சைக்கிள் பாட்டு வாத்தியார் மூணாமாசம் என்ன செய்தார், அந்த மனுஷன்? முதல் தேதியன்று பல்லைக் கடித்துக்கொண்டு மொழுக்குமாதிரி இருந்துவிட்டு, இரண்டாம் தேதி சம்பளத்தை வாங்கி மூன்று நாள் லீவு போட்டுப் போய்விட்டார். எட்டு மாசம் ஆகிவிட்டது. பத்துத் தேதி வரையில் ஆள் கண்ணில் படாமல் அலைகிறார். பத்து தேதிக்குமேல் யாருக்குத்தான் பணம் கேக்க மனசு வரும்? இந்தக் கடன் வாங்குகிற பயல்கள்தான் எவ்வளவு ஸைக்காலஜி தெரிந்து வைத்துக்கொண்டிருக்கிறான்கள்!

சுப்பண்ணா! ரங்கசாமி! வெங்கடாச்சாரி! தேவாச்சரியம்! கிட்டாண்ணா! சங்கரய்யர் . .! உங்களுக்கெல்லாம் கடன் கேட்க என் மாதிரி அன்றாடங்காச்சிதானா அகப்பட்டார்கள்! அதோ தென்னந் தோப்புக்கப்பால் நீலவிளக்கு எரிகிறதே, வாழைத்தண்டு விளக்கு, அந்த வீட்டுக்காரரை, ஆசாரவாசல், குமாஸ்தா எல்லாவற்றையும் தாண்டிக்கொண்டு போய்ப் பார்த்துக் கேட்டுப் பாருங்கள், என்ன கிடைக்கிறதென்று! இந்தக் கதையைக் கேளுங்கள்: ஹைதராபாதிலிருந்து என் தமக்கையின் கணவன் வேலையிலிருந்து ஓய்வு பெற்று வந்திருக்கிறார். அவருக்கு இந்தச் சொர்க்கலோக சென்னப்பட்டணத்தில் நிரந்தரமாக 'செட்டில்' பண்ண வேண்டுமாம், வீடு கட்டிக்கொண்டு! என்னை உட்காரவிடவில்லை. ஏதடா என்று நீல விளக்கு வீட்டுக்காரரைப்

போய்ப் பேட்டி கண்டேன். வாயைத் திறந்து உட்காரு என்று சொல்லமாட்டானா மனுஷன்! முகத்தில் ஒரு புன்சிரிப்புக்கூட இவர்களுக்கு வராதா? அவ்வளவு படிப்பு! அவ்வளவு சொத்து! அவ்வளவு செல்வாக்கு! புழு மாதிரித் துடித்தேன். காரியமல்லவா முக்கியம்? புழு பேச ஆரம்பித்தேன். நாற்பதடிக்கு அறுபதடி மனை. ஏழு மனுஷ அகலம், பதினோரு மனுஷ நீளம்! இதற்குப் பத்தாயிரம் ரூபாய் வேண்டுமாம். நாலாயிரம் ரூபாய்தான் சாஸனத்தில் எழுதுவாராம். மீதியைக் கையில் கொடுத்துவிட வேண்டுமாம் — சர்க்காருக்குத் தெரியாமல். எனக்குக் கொஞ்சம் திடுக்கென்றது. அந்த மகா சண்டாள சினிமாக் கொட்டகைப் பக்கமே போகாத இந்த சுத்தாத்மாவுக்கு அந்தப் பரம சண்டாள நட்சத்திரங்களின் தந்திரம் எப்படி தெரிந்தது! ஒரு மணி நேரம் இளிப்பு, நயம், கூழைப்பாட்டு — எல்லாம் பாடினேன். பல ராகங்களில் பாடினேன், மனிதன் இறங்கவில்லை. கடைசியில் சோபாவைவிட்டு எழுந்தார், சிரித்தார். 'இதோ பாரும் எனக்குச் சந்தியாவந்தனம் பண்ணனும். மடத்துக்கு போகணும். பூஜையை முதல்லேர்ந்து இன்னிக்குப் பார்க்கணும்னு நெனச்சிண்டிருக்கேன். நீர் நாளைக்கு வாரும். அதுவும் காலமே வந்துடனும். இல்லாட்டா, நடக்காது. பன்னிரண்டாயிரம் ரொக்கத்தோட யாராவது சாயங்காலம் வந்து நிப்பான்காணும், இப்பப் பத்தாயிர ரூபாய்ன்னு மாஞ்சு போறீர்! இன்னும் பத்து வருஷம் கழிச்சு பம்பாய், கல்கத்தா, நியூயார்க் மாதிரி சதுர அடி பதினஞ்சு ரூபா முப்பது ரூபான்னு மனைக் கணக்குக்குப் பதிலாக அடிக்கணக்கிலே அங்குலக் கணக்கிலே விக்கப் போறது. பங்கு மார்க்கெட்டிலே வேலை பார்க்கிறீர். மெட்ராஸ் வளர்ர வேகத்தையும் பார்த்துண்டிருக்கீர் . . . ம் . . . அங்காடிக்காரிகிட்ட பேசற மாதிரி பேரம் பண்றீர். நீர் ஏதோ ஸம்ஸ்கிருதம் கிம்ஸ்கிருதம் வாசிச்சிருக்கீரேன்னு உமக்குக் கொடுக்கலாம்னு நெனச்சா சொன்னத்தைச் சொன்னத்தைச் சொல்லிண்டிருந்தீர்னா! எனக்கு வேலை கிடக்கு. உம்மோடு பேசிண்டிருக்க டயமில்லே' என்று எழுந்து உள்ளே போய்விட்டார்.

'சுப்பண்ணா! அவரை உமக்குத்தான் தெரியுமே. அங்கே போய்க் கேட்கக் கூடாதோ?'

'பட்டணத்திற்கு வந்த பிறகு நான் மாறிவிட்டேனாம். ஆமாம், மாறித்தான்விட்டேன், நான் என்ன தேவனா! . . . மாறிவிட்டேன் என்று நீங்கள் சொல்லுவானேன்! எனக்கே தெரிகிறது!'

கிருஷ்ணனுக்கு மனசு புகைந்தது. குரோதம் குமைந்தது. சுப்பண்ணா

மீதில்லை. தான் மாறிவிட்டதாகச் சொன்னவர்கள் மீதுமில்லை, மாறிவிட்ட தன்மீதே வந்தது. தன்னையே சுக்கு நூறாகக் கிழித்துப் பட்டணத்து அசுரனான பணமுடைக்கு முன்னால் பலியாக வைக்கவேண்டும் போலிருந்தது. மனவலி தாளாமல் முனகினார்.

சுப்பண்ணா கடனுக்கு ஏந்திய கையை நினைத்தால் நெஞ்சு எரியாமல் என்ன செய்யும்!

அதே கைதான். பிடில் வாசிக்கிற கை அது. நாற்பது வருஷங்களாக லட்சோப லட்சம் பேர்களை அதன் ஸ்வரத்தில் மோடி கிறக்கிய கை, மகா மகா தாள அசுரர்களையெல்லாம் பல்லைப் பிடித்துப் பார்த்த கை. இங்கே இருக்கிற கீர்த்தி போதாதென்று நினைத்தோ என்னவோ பல பாஷைகள் பேசுகிற சங்கீத கோஷ்டியோடு அவரை வெள்ளைக்கார நாடுகளுக்கு அனுப்பினார்கள். அவர் போனார். ஆறு மாசம் சுற்றினார். மேதையை இறைத்து எல்லோரையும் பிரமிக்க அடித்தார். வெள்ளைக்கார நாடுகளை ரசித்தார். அனுபவித்தார். திரும்பி வந்தார். மலை, காடு, மேடு, பள்ளம், சேறு, சகதி, ஆய்ச்சல் – இப்படியெல்லாம் ஓடிவிட்டு வந்த மோட்டார் மாதிரி திரும்பி வந்தார். இங்கே வந்து செய்த முதல் கச்சேரியிலேயே நிமிஷத்துக்கு இரண்டு அபஸ்வரங்களாக உதிர்ந்தார். வாசித்துக்கொண்டே வருகிறவர் திடீர் என்று வேறு தாளத்தில் வாசிப்பார். 'பெரியவா சீமையை ரொம்ப ரஸிச்சுட்டாப்பல இருக்கு' என்று வேறு சொல்லிச் சொல்லி அவரைக் குழியை வெட்டி இறக்கினார்கள் ரஸிகப்பிரபுக்கள். பிடிலின் வில்லை விட்டு பர்மிட் விஸ்கி பாட்டில்களையும், அதன் நிழலுக்குள்ளே ஒண்டி வந்த அதிகப்படி சீசாக்களையும் பற்றிக்கொண்டது அவர் கை. காசும் போச்சு, உலகப்பிரயாணத்துக்காக மண்ணடி சாயபு தைத்துக் கொடுத்த கால், கைச் சட்டைகள்தான் இப்போது மிச்சம். அடிபட்ட நாய் போல ஒரு பார்வை இரண்டாவது மிச்சம். பிரபுக்களுக்கும் சபைகளுக்கும் பதிலாக நண்பர்கள் காப்பாற்றி வருகிறார்கள். பழைய மோட்டாருக்கு டாக்டர் உண்டு. அதையும் மீறினால் உடைத்துத் தகடும் ஆணியுமாக ஏலம் போடலாம். சுப்பண்ணாவை எப்படி ஏலம் போடுவது? யார் எடுப்பார்கள்?

சுப்பண்ணாவையும் மூட்டம் பிடித்துக்கொண்டுவிட்டது. இந்த மூச்சை முட்டுகிற பட்டணத்தின் தனியருளான புழுக்கம் அவரை ஏன் விடவேண்டும்?

கிருஷ்ணன் முனகிக்கொண்டே கண்ணைச் சற்றுத் திறந்தார். இது என்ன திடீர் என்று!

குளிர்ந்த காற்று வீசிற்று. பளீர் பளீர் என்று மொட்டைமாடியிலும் தென்னந்தோப்பிலும் ஒளி சிமிட்டிற்று. திரும்பித் தெற்கே பார்த்தார், பளீர் என்று ஒரு மின்னல் சொடுக்கிற்று. அதன் ஒளியில் ஒரு பெரிய மேகக் கும்பல் மலையில் ஏறுவதுபோல தெற்கிலிருந்து உச்சி வானத்தை நோக்கி ஏறிக்கொண்டிருந்தது. மீண்டும் மின்னிற்று. யாரும் தடுக்க முடியாததுபோல, கலகக் கூட்டம்போல் நகர்ந்தது முகில் திரள். வெள்ளிச் சாட்டையை முன்னும் பின்னும், வலத்திலும் இடத்திலும் சற்றைக்கொருமுறை சொடுக்கிற்று. 'மடார்' என்று உலோகப் பாளம் வெடிக்கிறாற்போல ஒரு பேரொலி. கிருஷ்ணன் கையைத் தலைக்குமேல் தூக்கித் தடுத்துக்கொண்டார். எலும்பு தசைகளிலெல்லாம் அச்சத்தைப் புகுத்தி உலுக்கிய ஒலியின் அடி தாங்காமல் நாற்காலியை அவசர அவசரமாக மடக்கி அறைக்குள் கொண்டு போட்டார்.

உள்ளேயும் ஒளி அவரைத் துரத்திக்கொண்டு வந்தது. சுவர்கள், அலமாரி, புத்தகங்கள், இண்டுஇடுக்கெல்லாம் வெள்ளியொளி பாய்ந்து மறைந்தது. மார்பு, முதுகு, முகமெல்லாம் சில்லிட்ட காற்று பட்டுக் குளிர்ந்து சிலிர்த்தது. அவர் விளக்கைப் போடவில்லை. இமைப்புக்கு இமைப்பு அறையில் குதித்து நிரப்பிய ஒளியைத் தடுக்க மனமின்றிப் பேசாமல் நின்றார். பீரோவுக்கும் புத்தகங்களுக்கும் பின்னால் ஒளிந்துகொண்ட இருளைக் கண்டு அவருக்கு வேடிக்கையாக இருந்தது. மறுகணமே அந்த இருள், விரட்ட விரட்டத் திரும்பிவரும் காக்காய்போல அறையை வந்து கவ்விற்று.

இடி வானத்தில் மூலைக்குமூலை உறுமிற்று. முடுமுடுத்தது. எதிரொலிகள் நீண்ட கார்வையாக ஓடித் தேய்வதற்குள் மடேர் என்று பின்னால் நின்று தலையிலடித்தாற்போல ஒரு சிரிப்பு இடிக்கும். துமுதுமுவென்று முழவின் அதிர்வாய் அதிர்ந்து ஒடுங்கும்.

சரசரவென்று கம்பி கம்பியாகத் தூற்றல் மண்ணை நோக்கிப் பாய்ந்தது. மின்னலின் ஒளியில் கம்பிகள் மெலிந்து நீண்டன.

கிருஷ்ணன் பார்த்தார். தென்னந்தோப்பு குளித்துக்கொண்டிருந்தது. குடிசைகள் குளித்தன. மின்னலும் குளித்தது. கூடல் வாயில் நீர் சுமந்து வெளியே கொட்டிற்று. ஜன்னல் சார்பில் நீர் தோரணம் கட்டித் தாரையாய் விழுந்தது. பட்டணம் முழுவதும் குளித்தது.

சாதாரண மழை இல்லை. ஒரே கனமும் இரைச்சலுமாக விழுந்த மழை. அலமாரி, புத்தகங்கள் மீதெல்லாம் சாரல் விசிறி அடித்தது.

கொடியிலிருந்து எட்டு முழத்தைப் போட்டு அலமாரியைப் போர்த்திவிட்டு மீண்டும் சாரலை உடம்பில் வாங்கிக்கொண்டு நின்றார் கிருஷ்ணன்.

கீழே தெருவில் ஆறாக ஓடிற்று. எதிர்வீட்டு ஓட்டுத் திண்ணையில் ஏறி, சின்னஞ்சிறுசாக நாலைந்து குட்டிகளுடன் இரண்டு வெள்ளாடுகள் ஒண்டி நின்றன.

தோப்புகளின் மீது ஊடே தெரிந்த கோயிற் கோபுரம் மழையில் நனைந்தது. தோப்பிலுள்ள குடிசைகள் நனைந்தன. பின்னால் திரும்பியபோது, நீல விளக்கு வீட்டுக்காரர் வீடும் மனைகளும் நனைந்து கொண்டிருந்தன. முருங்கை மரமும் வாழை மரங்களும் நனைந்தன. பட்டணம் முழுவதும் நனைந்துகொண்டிருந்தது.

அதோ அந்தத் தோப்புக்குப் போகிற திறப்பில் ஒரு முனையில் கட்டியிருந்த எருமை இரண்டும் பசு ஒன்றும் இந்தக் கொட்டுகிற மழையில் நனைந்துகொண்டு நின்றன. இருநூறு மைலுக்கப்பால் உள்ள தன் கிராமத்து மாடுகளைக் கிருஷ்ணன் நினைத்து நினைத்துப் பார்க்கிற வழக்கம். கவணை நிறைய வைக்கோல் திணித்துக் கிடக்க, வேண்டியமட்டும் தின்றுகொண்டிருந்த கொடுத்துவைத்த ஜன்மங்கள் அவை. இங்கே இந்த மூன்றும் கால்வாய்க் கரையிலிருந்து வாங்கிப் போட்ட வைக்கோல் ரேஷனைக் கடித்துவிட்டு இளம் வெயில், உச்சி வெயில், மாலை வெயில் எல்லாவற்றையும் தாங்கியவண்ணம், முளையைப் பார்த்துக்கொண்டே தவம் கிடக்கும். பசுவிற்குக்கூட கிராமணி மறைப்புக் கட்டவில்லை. வீட்டை ஒரு அங்குலம் மிச்சமில்லாமல் தடுத்துத் தடுத்து குடக்கூலிக்கு விட்டுவிட்டார். இப்போது அவை நிற்கிறது புறம்போக்கு.

கிருஷ்ணன் மழையைப் பார்த்துக்கொண்டே நின்றார். பட்டணத்தை மறந்து, பார்த்துக்கொண்டு நின்றார். ஒளியும் நீருமாக நிறைந்த வெளியைப் பார்த்தார். இப்போது, சாரலில் அவர் உடல் வேர்த்தது. தலையையும் உடலையும் தடவிய சாரல், தோலையும் எலும்பையும் ஊடுருவி உள்ளே விசிறிற்று. குளிர்ந்த காற்றை அங்கே தெளித்தது.

இன்னும் இரவு முழுவதும் இப்படியே பெய்யவேண்டும். இப்படியே மின்னவேண்டும்.

'அச்சச்சோ, மறந்தே போய்விட்டேனே' என்று எங்கோ தொலைவில் ஒரு குரல் கேட்டது.

‘நீ இங்கியாப்பா நிக்கிறே?’ என்று அருகே வந்து கேட்டது. கிருஷ்ணன் திரும்பினார், மாடிப் படியேறி வந்த குழந்தை, மொட்டை மாடியைப் பார்க்க ஓடிற்று.

‘எங்கம்மா ஓடறே? துணி உலத்திருக்கியா?’ என்று கூட ஓடி, மழைக்குப் பயந்து சார்ப்பிற்குள்ளேயே தடைப்பட்டு நின்றார் அவர்.

‘நீ போப்பா. பேசாம நின்னுண்டிருக்கியே. இஞ்சவாப்பா . . . இது ரண்டையும் உள்ள கொண்டு வையி. எனக்குத் தூக்க முடியலேப்பா’ என்று சொட்டச் சொட்ட மழையில் நனைந்துகொண்டே கத்தினாள் குழந்தை. மின்னலில் குழந்தையின் முகம், உடலெல்லாம் பளிச்சிட்டது.

ஒரு தாவாகத் தாவி ஓடினார் கிருஷ்ணன். ‘நீ உள்ள போ. நான் கொண்டுவந்து வைக்கிறேன்’ என்று கட்டைச் சுவர் மீதிருந்த மண்தொட்டியை இரண்டு கைகளாலும் அணைத்து உள்ளே கொண்டு வைத்தார். மறுபடியும் ஓடிப்போய் இரண்டாவது தொட்டியையும் உள்ளே கொண்டு வைத்தார். விளக்கைப் போட்டார்.

ஆழமில்லாத அகல மண் தொட்டிகளிரண்டும் உள்ளே உட்கார்ந்து கொண்டிருந்தன.

அவசர அவசரமாத் தொட்டியில் தேங்கியிருந்த தண்ணீரைக் கையால் இறைத்து வடித்தாள் குழந்தை.

‘உனக்குத் தெரியாதாப்பா, இதுக்கு ரொம்பத் தண்ணியே கூடாதுன்னு!’ என்று அவரைக் கடிந்துகொண்டாள்.

‘மறந்தே போயிடுத்து’ என்று கள்ளிகளைப் பார்த்தார் அவர்.

இரண்டும் கள்ளிச் செடிகள்; சப்பாத்தி மாதிரி தட்டையில்லை. உருண்டைக் கள்ளிகள். சாம்பல் நிறமான கள்ளிகள். இலை இல்லை. வெறும் தண்டு தண்டாகப் பக்கவாட்டில் காய்கள் போல உருண்டை கண்ட கள்ளிகள். அழகுக்காக அதைத் தொட்டி வாங்கிக் கொடுக்கச் சொல்லி வளர்த்திருந்தாள் குழந்தை. அவள் ‘டீச்சர்’ அம்மாவின் அக்கா, மூன்றாம் வருஷம் பல வாத்தியார்களோடு அமெரிக்கா போனபோது அதை எடுத்து வந்தாளாம். அபூர்வமான கள்ளியாம் அது. இரண்டு தண்டை ஒடித்து வந்து வளர்த்த பயிர் அது.

‘இது பாலைவனத்துக் கள்ளிப்பா. தண்ணி ரொம்ப ஊத்தப்படாது’ என்று வாங்கி வந்தவுடனேயே எச்சரித்திருந்தாள் அவள். காலையில்

கண்ணைப் பிட்டுக்கொண்டவுடன் மாடிக்குப் போய் ஒரு தடவை பார்ப்பாள். பள்ளிக்கூடம் போகுமுன் ஒரு தடவை, திரும்பி வந்ததும் வராததுமாக ஒரு தடவை, நிலாக் காயும்போது இரவில் பல தடவை.

மலரோ, காயோ இதுவரை ஒன்றும் கொடுக்கவில்லை. கொடுக்காது. இருந்தால்தானே கொடுக்க? அபூர்வமான கள்ளி என்று அவருக்குக்கூடத் தோன்றத் தொடங்கிவிட்டது.

எது அழகில்லை? மழை, வெயில், மின்னல், எருமை, மரவட்டை எல்லாம் அழகுதான். பரம்பரையாகக் கால் வயிற்றுக்கில்லாமல் எலும்பும் தோலும் துந்தனமுமாக வளர்ந்த பிச்சைக்காரனும் அழகுதான்.

கள்ளி அழகாகத்தானிருந்தது. 'இனிமே மழை வந்தா உள்ள எடுத்து வச்சுடுப்பா ஞாபகமா' என்று உதடுகளைக் கூட்டிக் குறைக்கோபமாகக் கடிந்துகொண்டாள் பெண்.

'சரிடா கண்ணு, இன்னிக்கி என்னமோ மறந்து போச்சு' என்று தொட்டிகளைச் சுவரோரமாக நகர்த்திவிட்டுக் கீழே இறங்கினார் கிருஷ்ணன். பெட்டியிலிருந்த மூன்று ஐந்து ரூபாய் நோட்டுகளில் இரண்டை எடுத்துக்கொண்டு, குடையுடன் கிளம்பினார். அவர் மனைவி, 'எங்க இந்த மழையிலே?' என்று சொன்னது கேட்டது. பதில் சொன்னோமா சொல்லவில்லையா என்று தெரியாமலேயே குடையைப் பிரித்துத் தெருவில் இறங்கினார். இரண்டு தெருக்களுக்கு அப்பாலிருந்த சுப்பண்ணா வீட்டை நோக்கி நடந்தார். மழை ஓய்ந்துகொண்டிருந்தது. தெருவில் மட்டும் வெள்ளம் நிற்கவில்லை. கணுக்கால் வெள்ளம் பாத வெள்ளமாகக் குறைந்துகொண்டிருந்தது. நாலு தடவை கதவை இடித்ததும் 'யாரு யாரு' என்று நாலு தடவை கேட்டுவிட்டுச் சுப்பண்ணாவின் மனைவி கதவைத் திறந்தாள்.

'நான்தான், சுப்பண்ணா.'

'யாரு?'

'கிருஷ்ணன்.'

'அடடெ, எங்க இப்படி!' என்று சாய்வு நாற்காலியை விட்டு எழுந்து வந்தார். கால்சட்டையும் கோட்டுமாக வந்தார்.

'வரணும். குளுரு தாங்கலே. அதுக்காக இதைப் போட்டுண்டேன்' என்று மண்ணடி சாயபு தைத்துக் கொடுத்த உடையோடு நின்றார்

சுப்பண்ணா.

'உட்காரணும்.'

'உட்கால நேரமில்லே. நீங்க சொல்லிட்டுப் போனேளோல்லியோ. உடனே சரி, இன்னொரு முயற்சியும் பண்ணிப் பார்த்துடுவமேன்னு நெனச்சுண்டேதான் கிளம்பினேன். நாலு வீடு போட்டு எங்க ஆபீசிலேயே ஒருத்தர் இருக்கார். கேட்டவுடனே எடுத்துக் கொடுத்துட்டார். முதல் தேதி ராத்திரி கொண்டுவந்து கொடுத்துடறேன்னு சொல்லி வாங்கிண்டு வந்தேன்' என்று பத்து ரூபாயை அவரிடம் கொடுத்தார் கிருஷ்ணன்.

'ஆகா, ஆகா' என்று சுப்பண்ணா வாய் நிறையக் கூறி உடைந்துவிட்டார். 'நான் என்ன சொல்றதுன்னு தெரியலியே . . . நானும் முதல் தேதிக்குள்ள கொடுத்துடறேன். ஆனா திருப்பிக் கொடுக்கிறதா பெரிசு! இப்படிக் கொட்ற மழையிலே, மூணாம் மனுஷாகிட்டே போய் . . . ஹ்ம் . . . ஸத்குரோ' என்று பெருமூச்சு விட்டார் சுப்பண்ணா.

அந்தப் பெருமூச்சில் லேசாக 'அந்த' வாசனை வீசிற்று. தன் வாயிலிருந்து வரும் பட்டணத்து வாடைக்கு ஏற்ற வாசனைதான் என்று கிருஷ்ணன் தனக்குள் சொல்லிக்கொண்டார்.

சுதேசமித்திரன் தீபாவளி மலர், 1960

# குளிர்!

கிழவிதான் இடிக்கிறாள் போலிருக்கிறது. "கொஞ்சம் கதவைத் திறங்களேன். யம்மா பாலாமணி; உன்னைத் தாண்டியம்மா . . ."

எல்லோராலும் கைவிடப்பட்ட, யாரும் கேட்காத குரல். நிர்க்கதியாக நிசியில் கதறும் குரல்.

டடும் டடும் டடும் என்று கதவு உலுங்கிற்று.

"யம்மா, தர்மாம்பா கதவைத் திறடீ. இங்கே குளிர் தாங்கலையே . . . இது என்ன அநியாயம்! வெளியே போயிட்டு வரவளுக்குக் கதவைத் திறக்கமாட்டேங்கறளே, அதற்குள்ளேயா தூக்கம் வந்திருக்கும்! ஏழெட்டுக் குடும்பம் குடி இருக்கிற வீட்டிலே அத்தனை பேருமா தூங்கிப்போயிருப்பா? யம்மா . . . கதவைத் திறங்களேன் . . . கண்ணம்மா, நீயாவது வந்து கதவைத் திறவேன். இப்பதானேடீ போனேன்?"

டடும் டடும் டடும் — கதவை உலுக்கினாள் கிழவி. சங்கிலியும் ஆடிஆடிக் கதவைத் தட்டிற்று.

புத்தகத்தைத் திறந்து வைத்துக்கொண்டதுதான் மிச்சம். ஒரு பக்கம் வாசித்தபாடில்லை.

சப்தங்களைக் கேட்டுப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருக்கிறது. ஓட்டு வீடாம், இப்படித்தான் சப்தம் கேட்குமாம். மாடியில் துணி தோய்க்கிற சப்தம் இடி அடியாகக் காதைத் துளைக்கிறது. அதுவும் தினமும் எத்தனை துணிகள்? ஒரு கழுதைப் பொதி! கீழே மனைவி தோய்க்கிற ஓசை. குழந்தைகள் என்கிற ராட்சசகர்கள் விளையாடுகிற சப்தம், கூச்சல், உரலில் இடிக்கிற ஓசை, தெருவில் சண்டைகள், கார்கள், பசி பசி என்று கோடையிடியாக முழங்கும் பிச்சைக்காரர்கள். தாயே, விஞ்ஞான வகுப்பில் சொல்லிக் கொடுத்தார்களே 'வாக்குவம்' என்று! அந்த மாதிரி ஓசை கேட்காத சூன்யப்பிரதேசம் உன் படைப்பில் இருக்கிறதா? இருந்தால் அங்கு என்னைக் கொண்டு விட்டுவிடு. ஒரு ஜன்மமாவது அப்படி வாழவேண்டும். மனுஷப் பிறப்புதான் வேண்டும் என்பதில்லை. பூச்சி, புழு, கிருமி, கல், உலோகம் எதுவானாலும் பாதகமில்லை. நிசப்தம் இருந்தால் போதும்.

பகல் பொழுது இப்படி. இரவிலோ பத்து மணிக்கு அடுத்த வீடு இப்படி இடிந்து விழுகிறது. வாசல் பக்கம் அறை. அறையை ஒட்டினாற்போல் அடுத்த வீட்டு வாசற்படி. எப்படிப் படிக்கிறது? எப்படித் தூங்குகிறது?

"யம்மாடி சுந்தராம்பா . . . கொஞ்சம் கதவைத் திறவேன். என்ன இப்படி அழும்பு பண்றேளே, எல்லோருமாச் சேர்ந்து! கேள்வி முறையே கிடையாதா! கடையிலே போய் நாலு பழம் வாங்கிச் சாப்பிட்டுட்டு வரதுகுள்ளியும் இப்படி அடம் பண்றேளே? இப்படி நெஞ்சை வழிச்சுத் துடச்சுப்பிட்டு உட்கார்ந்திருக்கேளே."

மலைக்கோட்டை கண்டாமணி அடித்தது.

கிழவிக்கு எழுபத்தைந்து வயசிருக்கும். தள்ளாதவள்தான். தானே சமையல், சாப்பாடு எல்லாம், ஒன்றிக்கட்டை. பிள்ளை ஒருவன் இருக்கிறானாம். தஞ்சாவூரில் எங்கேயோ கோயிலில் மடப்பள்ளியில் சமையல் வேலையாம், கிழவி பிறந்தது, புகுந்தது – எல்லாம் இந்தத் திருச்சிராப்பள்ளியில். இந்த ஊரைவிட்டுப் போக அவளுக்கு இஷ்டமில்லை. பிள்ளை ஏதோ வாடகைக்கு மூன்றும், சாப்பாட்டுக்கு ஆறுமாக மாசம் ஒன்பது ரூபாய் அனுப்புகிறானாம்.

இந்த மாதிரி கிழவி இருப்பது இரண்டு மாசம் முன்னால் தான் தெரிந்தது, இரண்டு மாசமாகத்தான் ரகளை.

பத்துப் பன்னிரெண்டு நாளைக்கு முன்னால் ஜன்னலில் நின்றுக்கொண்டே கேட்டேன்.

"ஏன் பாட்டி! இத்தனை நாழி கழிச்சு வந்து இடிக்கிறே? காலா காலத்திலே வரப்படாதா?"

"என்னய்யா இப்படி சொல்றேளே? மணி பத்துத்தானே ஆகிறது? கோயில்லே கிளம்பறபோது ஒன்பதே முக்கால் மணி. நடந்துதானே வரணும்."

"ஏழெட்டு குடிக்கு நடுவிலே குடியிருந்துண்டு கோயில் குளம் எல்லாம் வச்சுக்க முடியுமா?"

"கோயில் குளம்னு போக முடையில்லை எனக்கு. நான் என்ன ஞானமில்லாதவளா? தள்ளலெ. அடுப்பை மூட்டிச் சமைக்க முடியலெ. மத்தியானச் சோத்தைத் தின்கலாம்னா, ஒத்துக்கலெ. அதுக்காகக் கோயில்லே போய் இவ்வுளுண்டு ரண்டு உண்டைக் கட்டி வாங்கிப்

போட்டுண்டு வரேன். பத்து மணிக்கப்பறம் இவாள்ளாம் வரலியா? அவாளுக்கெல்லாம் திறக்கலியா? இவா ராத்திரி பன்னிரண்டு மணி ஒரு மணிவரைக்கும் பேசிப்பிட்டுத்தானே ஒரு நாளைப் பார்த்தாப் போல தூங்குறா. இந்தத் தள்ளாதவளுக்கு யாராவது ஒத்தர் ஏந்துண்டு கதவைத் திறந்தா, என்ன? நியாயம், தயவு ஒண்ணுமே கிடையாதா? பதினொண்ணரை மணி வண்டி போனப்பறம்தானே வடை விக்கிறவர் வறார். அவருக்குக் கதவைத் திறக்கலையா? மனுஷா இல்லாமெ ஒருத்தி இருக்கான்னா, இப்படி வயிறு கொதிக்கக் கொதிக்கப் பண்றாளே . . ."

எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. என்ன சொல்கிறது? ஆதரவில்லாமல் இருப்பதே அவமானம்தான். இளப்பம்தான். தெருவோடு போகிற நாய் ஒரு பாவமும் அறியாத நாய், ஏன் கல்லடி படுகிறது.

"யம்மாடி ரங்கம்மா! நீயாவது கொஞ்சம் திறவேன், நிக்க முடியலெம்மா, தள்ளாதவ எத்தனை நாழி நிப்பேன்?"

கிழவி கதவைப் போட்டு உடைத்தாள். குரலின் வேதனையும் குமுறலும் என் தொண்டைக்குள் போய் என்னமோ செய்தன.

வெளியே போகாமலிருந்தால்தான் என்ன! போன வாரம் பட்டது போதாதா?

நாலைந்து நாள்கூட ஆகவில்லை. ஒன்பதரை மணியிருக்கும். கிழவி கோயிலுக்குப் போய் வந்து கதவை இடித்தாள். கால்மணி

நேரம் கூப்பாடுபோட்டுப் பயனில்லை. "ஒன்பதரை மணிக்கே வந்துட்டேனே இன்னிக்கி. இப்பவும் இப்படிப் பண்றேளே? அடுக்குமா உங்களுக்கு? . . . இப்படிப் பாவத்தைக் கட்டிருக்கிறேளே . . . இதுக்கெல்லாம் கூலி கொடுப்பார் பகவான். கதவைத் திறந்திடுங்கோ . . . புண்ணிய பாவத்துக்கெல்லாம் பயப்படறவாளா நீங்க? ரொம்ப மோசமாயிருக்கே . . . அடாடா . . ."

யார் காதிலும் இந்தக் குமுறல் விழவில்லை. யார் நெஞ்சையும் தொடவில்லை. கதவைப் பிடித்துக்கொண்டு டமடமடமவென்று ஆட்டினாள் கிழவி, ஓயாமல் ஆட்டினாள். சங்கிலி விழுந்து விழுந்து ஓசையிட்டுது. கதவு அதிர்ந்தது.

"வரேண்டி வரேன் . . . இரு" என்று சுவருக்கப்பால் குரல் கேட்டது. படார் என்று தாழ்ப்பாள் திறந்தது! "ஏண்டி கூறுகெட்ட முண்டமே . . . கதவையா உடைக்கிறே? இங்க வாடி! இங்க வாடி சொல்றேன்" குரல்

உள்ளே போயிற்று.

“ஐயோ, ஐயோ அம்மா இப்படி அடிக்கிறாளே . . .” என்று கூக்குரல். கிழவி அலறினாள். உள்ளேயிருந்து நடைவழியாக ஓடி கதவைத் திறந்துகொண்டு ஓடினேன்.

‘ஐயோ’ச் சத்தம் பலமாகக் கேட்டது. குடியிருக்கிற, இன்னொரு கிழவி இந்தக் கிழவியின் தலைமயிரை ஒரு கையால் கவ்விக்கொண்டு, விளக்குமாற்றால் முகத்திலும் முதுகிலும் தலையிலும் பிடரியிலும் வயிற்றிலும் காலிலும் மாறிமாறிப் போட்டுக்கொண்டிருந்தாள்.

“அம்மா! அம்மா! யாரும் தடுக்கமாட்டேங்கறேளே . . . ஐயோ அம்மா!”

“இனிமே உடைப்பியாடி கதவை? உடைப்பியா, உடைப்பியா, உடைப்பியா? நாதி கெட்ட பொணமே, கதவையா உடைக்கிறே . . . கதவையா உடைக்கிறே?” ஒவ்வொரு சொல்லுக்கும் தொடருக்கும் ஒரு அடி.

கிழவி கீழே புரண்டுகொண்டிருந்தாள். மயிரைப் பற்றியிருக்கிற பிடி மட்டும் தளரவில்லை.

“நிறுத்து” என்று கத்தினேன்.

அடிக்கிறவள் என்னைக் கவனிக்கவில்லை.

“நிறுத்து . . . நிறுத்து . . . ஏய் உன்னைத்தான் நிறுத்து.”

அடிக்கிறவள் என்னை விளக்குமாறும் கையுமாகத் திரும்பிப் பார்த்தாள். விளக்குமாற்றை வீசி மூலையில் எறிந்தாள். தாழ்வாரத்தில் தன் அறைக்கு நேராகப் போட்டிருந்த பாயில் படுத்துவிட்டாள்.

“பார்த்துண்டே நிக்கறேளே இப்படி? பாருங்கோய்யா. இந்த வீட்டிலேதான் கேள்வி முறையில்லே. தெருவிலே கூடவா இல்லே?” கிழவி வாய்விட்டு அழுதாள்.

திரும்பிப் பார்த்தேன். நடையில் ஏழெட்டுப்பேர் எதிர் வீட்டிலிருந்தும் பக்கத்து வீட்டிலிருந்தும் கூடிவிட்டார்கள். அந்த வீட்டு வாசலிலேயே இருந்த அறையில் குடியிருக்கும் இரண்டு மூன்று மாணவர்களும் நின்றுகொண்டிருந்தார்கள்.

பாயில் படுத்துவிட்ட அடித்த கிழவியைப் பார்த்தேன். ஒருக்கணித்து

எங்களுக்கு முதுகைக் காட்டிக்கொண்டே படுத்திருந்தாள்.

கிழவி தலையில் கை வைத்துக்கொண்டு அழுதுகொண்டிருந்தாள்.

"ஏம்மா இப்படி அடிச்சே இந்தக் கிழவியை? இந்தாம்மா உன்னைத்தானே? இங்க பக்கத்து வீட்டிலே இருக்கிறவாள்ளாம் மனுஷான்னு நெனச்சியா? நாதியில்லாத ஒரு பிராணி இருந்தா இப்படியா அடிப்பா? பொறுத்துப் பொறுத்துப் பார்த்தா, முடியாதவன், இளிச்சவாயன்க ஊரிலிருக்கிறவன்லாம்னு . . . நெனச்சியா?"

என் குரல் நடுங்கிற்று. உதடு துடித்தது. நடையில் இருந்தவர்கள் என்னைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

அடித்த கிழவி திரும்பவே இல்லை. அலட்சியமாகப் படுத்துக் கொண்டிருந்தாள்.

குடியிருக்கிற குடும்பங்கள் தாழ்வாரத்திலும் படுத்திருந்தன. ஒரு பிராணி எழுந்திருக்கவில்லை. இவ்வளவு ரகளையில் எழுந்திராதவர்கள் எப்படியிருப்பார்கள்? பதினெட்டு வயசிருக்கும் ஒரு பெண். அது மட்டும் மல்லாந்து படுத்தவாறு சிரித்துக்கொண்டே என்னைப் பார்த்துக் கொண்டிருந்தது.

"சீச்சீ, நீங்கள்ளாம் மனுஷங்க மாதிரி, சோறு திங்கறேளொ . . . இல்லே"

அதற்கு யாரும் அசைந்துகொடுக்கவில்லை.

"உன்னை அடிக்கிறதுக்கு எத்தனை நாழியாகும்னு நெனச்சே?" என்று தொண்டை கிழியக் கத்தினேன்.

"உடம்பிலே சூடு சொரணை இருந்தா இந்த அக்கிரமம் நடக்கறச்சே சும்மா இப்படிப் பார்த்திருப்பாளா?"

"பாருங்கய்யா, யாராவது மூச்சு விடறாளா பாருங்கோ" கிழவி.

"மனுஷ ஜன்மமா இருந்தா உணக்கையிருக்கும்!"

"அனாவசியமா ஏன் சார் பேசறேள்? அடிச்சவாளைக் கோபிங்கோ, நியாயம். வீட்டிலே இருக்கிற எல்லாரையும் இழுக்கறளே?" என்று ஒரு குரல் வந்தது. குரல் வந்த பக்கம் பார்த்தேன். குடுமி வைத்துக்கொண்டு ஒருவர் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து பேசினார்.

“எல்லோரையும் இழுக்கமெ என்ன ஐயா பண்றது? நீங்க ஏந்திண்டு திறந்திருந்தா இந்த அமர்க்களமே நடந்திராதே; நான் ஏன் ஐயா இங்கே அடி வைக்கிறேன்?”

“ஒவ்வொரு வீட்டிலேயும் ஒவ்வொண்ணு இருக்கும்; அதெல்லாம் கேட்க முடியுமா?”

“கேட்க முடியுமாவா? நீர் என்ன மனுஷன் மாதிரிதான் பேசறீரா? விளக்குமாத்துக் கட்டையைப் பிடுங்கி எறியணும். இல்லாட்டா அதாலே நாலு போடணும்” – அவ்வளவுதான். படுத்திருந்த அடித்தவள் எழுந்தாள். மூலையில் கிடந்த விளக்குமாற்றை எடுத்து வந்தாள். ஓடி வந்தாள் என்னிடம்.

“அவர் என்னய்யா அடிக்கிறது? நீங்கதான் அடியுங்கோய்யா, என்னை அடியுமே” என்றாள். “ஏன் சும்மா நிக்கணும்? அடியுமேன்.”

வெலவெலத்துக் போய் நின்றேன். என்ன சொல்கிறது? “அடியுமேய்யா, நிற்கிறீரே?”

“உனக்குப் புத்தியில்லே, அடிச்சே. நானுமா உன்னை அடிப்பேன்? என் மனுஷத்தனம் எங்கே போச்சு?”

“மகா மனுஷனாச்சே . . . அவாவா அவாவா வீட்டிலெ இருப்பாளா; ஊரிலே ஆயிரம் நடக்கும் . . . ராத்திரி தினமும் பத்து மணிக்கு வந்து கதவை உடைக்கிறா கிழட்டுப் பொணம். கேக்க ஆளில்லை. விளக்குமாற்றைப் பிடுங்கிண்டு என்னை அடிக்கணுமாம் . . . அடியுமேன்?”

“பார்த்தீராய்யா! எப்படிப் பேசறா பாரும். ஒரு அசல் ஆம்பிளைகிட்ட பேசறாப்பலே பேசறாளா பாரும்!” என்றாள் கிழவி.

“ஏட்டி! நீ வாயை மூடிண்டு கிட. மூச்சுப் பறிஞ்சியோ இந்த விளக்குமாறு இன்னிக்குப் பிஞ்சே போயிடும்” என்று சொல்லிக்கொண்டே விளக்குமாற்றை வீசிவிட்டுப் படுக்கைக்குப் போனாள் அவள்.

“சார் நீங்க வாங்க சார், இந்தாண்டை” என்று நடையில் நின்ற கும்பலிலிருந்து ஒருவர் கூப்பிட்டார். “நாமதான் அவமானப்படனும். அவ கேக்கற மனுஷாளா இருந்தாத்தானே?”

“வராம என்ன பண்றது? இந்த மாதிரி ஜன்மங்கள் இருக்கிற வீட்டிலே எல்லாம் அதது அப்படியே மென்னியைத் திருகி போட்டாப்போல

படுத்துண்டு கிடக்கே!”

“சகதியிலே கல்லெறிஞ்சா நம்ம மேலேதான் தெறிக்கும் வாங்க இந்தண்டை” வெளியே வந்துவிட்டேன்.

வாசல் அறையில் குடியிருந்த மாணவர்களைப் பார்த்தேன்.

“ஏன் சார், நீங்கள்ளாம் படிக்கலையா? இதெல்லாம் உங்க கண்ணிலே படலியா?”

“நாங்க என்ன சார் செய்யறது? அந்த அம்மாதான் குடியிருக்கிற அவ்வளவு பேரையும் ஆட்டி வைக்கிறா. பாருங்களேன் இத்தனை அடி அடிச்சதுக்கு யாராவது எழுந்தாங்களா? அப்பவே தெரியலையா?”

“சேச்சே, ஆனாலும் இந்த மாதிரி யாரையும் பார்த்ததில்லை ஐயா!”

“இப்படியேதான் சார்! தேசத்திலேயும் எத்தனையோ நடக்கிறது, சர்க்கார் கவனிக்கிறதா? ஜனங்கதான் கவனிக்கிறாளா? அதே மாதிரிதான்!” என்று ஒரு மாணவன் தேசத்தைப் பற்றிக் கவலைப்படப் போய்விட்டான்.

“வீட்டிலேயே நமக்குக் கையாலாகலை . . . தேசமாம் . . . தேசம்!”

நடந்து நாலைந்து நாள்தான் ஆயிற்று. மறுபடியும் இன்று கதவை இடிக்கிறாள் கிழவி. மலைக்கோட்டை மணியடித்தது. இன்னும் அர்த்தஜாமம்கூட ஆகவில்லை.

“கிருஷ்ணம்மா, கதவைத் திறடீ . . . அரைமணியா கத்தறனே, உங்களுக்கு இரக்கமில்லையா? நிக்க முடியலியே. குளுரு தாங்கலியே . . . கடைப்படாதவளை இந்தப் பாடுபடுத்தறளே . . . என்னென்ன அனுபவிக்கறதுக்காக இப்படிச் சாத்திண்டு கிடக்கேள் . . . இப்படி உங்களுக்குக் குளிர் நடுங்கித்துன்னா எப்படியிருக்கும்?” எல்லா அம்மாளையும் கூவியாகிவிட்டது. பதில் இல்லை.

அரற்றல் ஓயவில்லை. இடையிடையே டமடமவென்று கதவு உலுங்கிற்று.

அரை மணியாக இடிக்கிறாள். ஒரு மனதும் திறக்கவில்லை.

இன்னும் ஐந்து நிமிஷம் இந்தச் சப்தம் நீடித்தால்? விளக்குமாறோ உலக்கையோ! அடித்த கிழவி அப்பளம் இட்டு விற்கிறவள். அந்தக் குழவியால் ஓங்கி ஒன்று போட்டாலும் கேட்பாரில்லை.

கிழவி அரற்றாமல் இருந்தால்? வாசல்படியிலேயே உட்கார்ந்திருந்தாள்.

பன்னிரண்டு மணிக்குமேல் ஸ்டேஷனிலிருந்து வடை விற்கிறவன் வருவான். அவனுக்குக் கதவு திறக்கும்போது உள்ளே போகலாம் அதுவரையில் குளிர் என்று இல்லை. ஆனால் பனியன் இல்லாமல் என்னால் இருக்க முடியவில்லை. அதுவும் இந்த அறைக்குள். வெளியே தோல் சுருங்கி கிழிசல் புடவை கட்டிக்கொண்டிருந்த கிழவிக்கு எப்படி இருக்கும்? குளிர் குளிர் என்று அரற்றுகிறாள். யார் கேட்கிறது?

எழுந்து கதவைத் திறந்தேன்.

“எங்கே போறேள்?” என்றாள் மனைவி.

“ஏன்?”

“எங்கே போறேள்னு கேக்கறேன்”

“எங்கேயும் இல்லை”

“அடுத்த வீட்டுக்குப் போறேளா அன்னி மாதிரி அவமானப்படறதுக்கு?”

“பின்னே இப்படிக் கத்தறதே அது?”

“ஊருக்கு நடுவிலே இருந்தா எல்லாத்தியும் சகிச்சுண்டு பேசாமத்தான் இருக்கணும்.”

“உனக்கு முடியும். என்னாலெ முடியலே.”

“ஆமாமாம் . . . நீங்க போகாதேங்கோன்னா போகாதேங்கோ”

“ஒண்ணும் பண்ணலை”

“வாண்டாம்”

“நான் கதவைத் தட்டக்கிட்டப் போறதில்லை.”

“பின்ன ஏன் போறேள்?”

“நீ சும்மா இரு”

வாசலில் போனேன்.

“என்னம்மா இன்னிக்கும் இப்படிப் பண்றியே. நாலஞ்சு நாள் முன்னாடிதானே பட்டே”

"இன்னிக்கு மத்யானமே புடிச்சு வீட்டை விட்டு அசையலை ஐயா. இன்னிக்கு ஏகாதசி, வீட்டோட கிடந்தேன். ஒன்பது மணி அடிச்சுது. பசிச்சாப்பல இருந்தது. இதோ இந்தக் கடையிலே போய் நாலு பழத்தை வாங்கி வாயிலே போட்டுண்டு வந்தேன். பத்து நிமிஷம் ஆகியிருக்காது. பெருமாள் ஆணையாச் சொல்றேன். அதுக்குள்ளியும் தாப்பாள் போட்டுண்டு திறக்கமாட்டேங்கறாய்யா! நீங்களே பார்த்துக்குங்கோ எங்கியாவது அடுக்குமா இது? . . . பகவான் பார்க்க மாட்டேங்கறானே."

குளிர் வெளியில் அதிகமாகத்தானிருந்தது. "பாட்டீ, ரொம்ப குளிரா இருக்கு. எங்க வீட்டிலே வந்து படுத்துருங்கோ. காலம எழுந்திண்டு போயிக்கலாம்."

"உங்க வீட்டிலெயா?"

"ஆமாம். வாங்கோ பாதகமில்லே; கதவோ திறக்கிற வழியாயில்லே. குளிர் நடுக்கறது. என்ன செய்யறது? வாங்கோ ஒரு பாயும் போர்வையும் தரேன். உள்ளே வந்து படுத்துக்குங்கோ"

பாட்டி தயங்கினாள்.

"வாங்களேன்."

"ம்ம்."

"வாங்கோ."

"நீர் தனியா இருக்கிறீரா? வீட்டில் இன்னும் யாராவது இருக்காளா?"

"எல்லாரும் இருக்கா."

"எல்லாரும்னா?"

"வீட்டுக்காரி இருக்கா, மூணு குழந்தை இருக்கு."

"அப்படின்னா வரேன்."

மாணவர் அறையிலிருந்து சிரிக்கிற ஒலி கேட்டது.

பாட்டி உள்ளே வந்தாள்.

"ஜலம் கிலம் வேணுமா?"

"ஒண்ணும் வேண்டாமய்யா."

பாய், ஜமக்காளம், போர்வையை எடுத்துக் கொடுக்கச் சொன்னேன். எல்லாவற்றையும் கொண்டுவந்து மனைவியை ஏற இறங்கப் பார்த்தாள்—கிழவி.

"கொடும்மா, மகராஜியா இருக்கணும் . . . இந்தக் குளிர் எல்லாம் உன்னைப் பார்த்தாலே போயிடும்மா."

பாட்டி நடையில் படுத்துக்கொண்டாள். வீட்டிலேயே குளிர் அடக்கமான இடம் அதுதான்.

"இந்த அப்பளக்காரி ஒழிஞ்சாத்தாம்மா அந்த வீடு உருப்படும். போய்ப் பத்து நிமிஷம் ஆகலே; அதுக்குள்ளியும் எல்லாம் தாப்பாப் போட்டுண்டு அழும்பு பண்றதுகளே . . ." என்று கால்மணி நேரம் புலம்பினாள் கிழவி.

"சரி தூங்குங்கோ பாட்டி" என்றேன்.

"தூங்கறேண்டியம்மா."

"தனியா இருக்கேளா? இன்னும் யாராவது இருக்காளான்னு கேட்டேளே . . . இப்ப நன்னா தூங்கலாமோல்லியோ?" என்றாள் மனைவி.

"என்னமோம்மா, நாலு பேர் நாலு சொல்லுவா. அதுக்கு இடம் கொடுப்பானேன் . . . லோகம் பொல்லாது! இப்ப குளிர் விட்டுது

பாரு . . ." என்று இருமினாள் கிழவி.

"உங்களுக்கு நன்னா வேணும்" என்று என்னைப் பார்த்துச் சிரித்தாள், பக்கத்தில் சின்னக் குழந்தையை அணைத்துப் படுத்திருந்தவள்.

காதல், நவம்பர் 1956

# ஐயரும் ஐயாறும்

## (ஒரு ஆராய்ச்சி அறிக்கை)

**'**சோழ நாடு சோறுடைத்து**'** என்று சான்றோர் ஏத்திப் போற்றும் சோழவளநாட்டின்கண், பூலோக கைலாயம் என்றும், தென் கைலாயம் என்றும் தகவோர் போற்றி வணங்கும் திருத்தலமாம் திருவையாற்றில், தைத் திங்கள் தேய்பிறை ஐந்தாம் நாளன்று, வைகறை யாமத்தில் பச்சைப் பசும் சோலையொன்றில் கரிச்சான் ஒன்று கூவிற்று. அண்மையில், கண்ணை இமைத்திமைத்து நின்ற சேவலும் கூவிற்று. சோலைக்கு முன்பிருந்த மெத்தை வீட்டின் மேல்தளத்தில் துயிலில் ஆழ்ந்திருந்த மங்கையொருத்தி சேவலின் கூவலைச் செவியுற்று, கண் திறந்தாள். அரளி ஆரம் போன்ற கைகளை உதறிச் சோம்பல் நீக்கி, எழுந்து சாளரத்தின் கதவைத் திறந்து கீழே நோக்கினாள். காவிரிக்குக் குளிக்கச் செல்லும் மக்களின் ஆரவாரத்தினைக் கேட்டாள். திரும்பினாள். "கிரிஜா, எழுந்திரடி! அலமு, எழுந்திரடி! சியமளா, எழுந்திரடி! உமா, ரமா, அம்பஜம்! எல்லோரும் எழுந்திருங்கள்" எனத் துயிலில் கிடந்த தன் தோழிமார் அனைவரையும் விளித்துத் தட்டியும் அசைத்தும் எழுப்பினாள். அந்த அரவத்தினைக் கேட்டு அந்த விசாலமான அறையில் கம்பளிப் போர்வைக்குள் முடங்கி உறங்கிக்கொண்டிருந்த திரு. அகோரநாதன் "ஆங்! யாரு! ஹென்ன! ஹென்ன! என்ன ஆச்சு!" என்றார்.

"நாழியாச்சி சார், அதுதான் எல்லோரையும் எழுப்பறேன். எல்லாம் கும்பகர்ணி மாதிரி தூங்கறதுகள்" என்றாள் அந்த மங்கை.

"யாரது! மாலதியா! நீ எங்கே வந்த இப்ப?" என்று மீண்டும் மலைத்து விழித்தார் அகோரநாதன்.

"இது திருவையாறு சார்; பட்டணமில்லே. நன்றாக முழிச்சுப் பாருங்க சார்!" என்று புன்னகை நெளிய நினைவூட்டுகிறாள் மாலதி என்ற அந்த மங்கை.

அப்பொழுதுதான் தாம் வந்து தங்கியிருப்பது திருவையாற்றில் தம் நண்பரின் இல்லத்தின் மேல் தளத்து அறையென்றும், இசைப் பெரு மூவரில் ஒருவராம் தியாகையரின் திருநாள் இன்னும் ஓரிரு யாமங்களில் கொண்டாடப்படவிருக்கிறதென்றும், அவ்வறையில் படுத்துறங்கியவர்கள்

திருநாளைக் காண, தம்முடன் சென்னையிலிருந்து வந்திருந்த தம் ஏழு மாணவியர் என்றும் அகோரநாதனுக்கு உணர்வு வந்தது. மறுகணமே வாரிச்சுருட்டி எழுந்தார். மின்சார விசையைத் தட்டினார். மங்கிய அவ்விளக்கு எரியலாயிற்று. பெட்டியைத் திறந்து சாக்லேட் டப்பாவைத் திறந்து கண்ணாடியை முன்பு வைத்து முகச்சவரம் செய்துகொண்டார். அதற்குள் மாணவியர் யாவரும் எழுந்து குளிக்கச் செல்ல ஆயத்தமாயினர். சிறிது நேரத்தில் அவ்வெண்வரும் காவிரி ஆற்றுக்குச் சென்று அரித்தோடும் நீரில், ஒரு மடுவினைத் தேடிச் சுற்றிலும் கண்ணையும் நெஞ்சையும் கவரும் சோழவள நாட்டின் தனிச் சிறப்பான இயற்கை வனப்பினையும் கண்டு மகிழ்ந்தவாறு நீராடினர். நீராடல் முடிந்ததும் தெருக்களை அடைத்துச் சென்ற கால்நடை ஊர்திகளையும், கார்களையும் பஸ்களையும் மக்களையும் கடந்தவாறு அகோரநாதனும் மாணவியரும் உணவு விடுதி ஒன்றினுட்சென்று சோழநாட்டுக்கே உரித்த இட்லி, ரவாதோசை, டிகிரி காப்பி இவற்றை உண்டு மகிழ்ந்து விடுதி திரும்பினர். வந்ததும் அகோரநாதன் தம் சுருண்ட கேசத்தைச் சீவி, கம்பளி முழுக்கால் சட்டையும் கோட்டும் போட்டுக்கொண்டு, மாணவியர் ஆயத்தமானதும் எல்லோரையும் அமரச்செய்து தம் பெட்டியைத் திறந்து ஒவ்வொரு மாணவிக்கும் ஒரு அட்டை, கிளிப், ஒரு தஸ்தா காகிதம், பென்சில் இவற்றை அளித்துவிட்டு, ஒரு சிற்றுரை நிகழ்த்தலானார்.

"அன்புள்ள மாணவிகளே, நான் நண்பர்களைக் கொண்டு நீங்கள் யார் யாரைச் சந்திக்கவேண்டும் என ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன்" என்று கூறியவாறு அகோரநாதன் தம் கையிலிருந்து காகிதச் சுருளை விரித்தார். அது ஒரு வரைபடம். திருவையாற்றின் முக்கியமான சில தெருக்கள் அதில் காண்பிக்கப்பட்டிருந்தன. எல்லா மாணவிகளும் ஆர்வத்துடன் வரைபடத்தைக் குனிந்து நோக்கினர். ஒவ்வொரு மாணவிக்கும் இரண்டிரண்டு தெருக்களும் நாலு நாலு வீடுகளும் அவ்வீடுகளில் அவர்கள் பேட்டி காண வேண்டிய நபர்களின் பேர்களும் குறிக்கப்பட்டிருந்தன.

"தத்தமக்கு இடப்பட்ட இல்லங்களில் சென்று நீங்கள் பேட்டி காண வேண்டும். நீங்கள் எத்தனைக்கெத்தனை அதிகமாகப் புள்ளி விவரங்களைச் சேகரிக்கிறீர்களோ அத்தனைக்கத்தனை நாம் மேற்கொண்டுள்ள திறனாய்வும் உறுதி பெறும். சரி, கிளம்புகிறீர்களா . . . பன்னிரண்டு மணிக்கு இங்கு எல்லாரும் திரும்பி வந்து சேருங்கள். தியாகராஜர் வாழ்ந்த இல்லத்தைக் காணச் செல்ல வேண்டும்" என்று அகோரநாதன் விடையளித்ததும், மாணவிகள் அட்டை, காகிதம்,

எழுதுகோலுடன் வெளிப்போந்தார்கள்.

மாலதி தனக்கிடப்பட்டிருந்த தெருவில் புகுந்து முப்பத்து ஏழாம் எண்ணுள்ள இல்லத்தில் நுழைந்தாள். அவள் இடைகழியை அடைந்ததும், ஒரு சிறுவன் மிடுக்கான அவள் தோற்றத்தையும் கைப்பையையும் அட்டை வகையறாவையும் பார்த்து, "சச்சு, சோப்பு விக்கிற மாமி!" என்று கத்தினான். சச்சு என்னும் அவன் தங்கை திரும்பி அவனைப் பார்த்து, "ஒண்ணும் இல்லை. இது வந்து தலைக்குத் தடவிக்கிற வாசனை விளக்கெண்ணை விக்கிற மாமி . . . இல்லே இல்லே! ஸென்ஸஸ் மாமி . . . இல்லெல்லே . . . எலக் ஷென் மாமி!" என்று தீர்மானமாகக் கத்தினாள்.

"யார்றா அங்கே!" என்று ஒரு சுமங்கலி அடுக்களையினின்றும் வெளிப்பட்டு "வாஷிங் சோப் விக்கறவாளா!" என்று மாலதியை ஏற இறங்கப் பார்த்து அவள் பையையும் காகிதங்களையும் உற்று நோக்கினாள்.

"இல்லே மாமி. நான் மெட்ராஸிலே ஆனர்ஸ் படிக்கிறேன். சங்கீதம் என்னுடைய விசேஷ பாடம். தியாகப்பிரும்மம் இருந்த காலத்தில் திருவையாறு எப்படி எல்லாம் இருந்திருக்கும் என்று ஒரு புத்தகம் எழுதுவதற்காகப் புள்ளி விவரங்கள் சேகரித்து வருகிறோம். இங்கே அனந்தலக்ஷிமிப் பாட்டி என்று நூற்றிரண்டு வயதான ஒரு பாட்டி இருக்கிறாளாமே . .?"

"இருக்கா. எங்க மாமனாருக்குக் கொள்ளுப்பாட்டி அவ."

"அந்தப் பாட்டியைப் பார்த்துச் சில கேள்வி கேட்கணும்.பார்க்கலாமா?"

"நீங்கதானா அது! நேத்து தண்டு சாஸ்திரிகள் வந்து மெட்ராஸிலிருந்து யாரோ பாட்டியைப் பார்க்கணும்னு சொன்னதாகச் சொன்னார். வாங்கோ" என்று மாலதியை உள்ளே அழைத்துச் சென்று அடுக்குகளைப் போகும் நடைஉள்ளில் உட்கார்ந்திருந்த மூதாட்டிக்கு அறிமுகப்படுத்தினாள் அந்த அம்மாள். மூதாட்டிக்குக் கண்ணிரண்டும் தெரியாவிடினும் செவியிரண்டும் கூரியவை. கும்பகோணத்தில் 'கௌளி' சொன்னால் கண்டியூரில் கேட்டுவிடும் செவிகள். அறிமுகத்துக்குப் பின்பு, மாலதிக்கும் மூதாட்டிக்கும் கீழ்க்கண்டவாறு உரையாடல் நிகழ்ந்தது.

"தியாகப் பிரம்மத்தை நீங்க பார்த்திருக்கேளா பாட்டி!"

"நான் எப்படியம்மா பார்த்திருக்க முடியும்? எனக்கு முதலாவது ஆண்டு

நிறைவு ஆச்சு. அதுக்கு நாலாம் நாள் அவர் சமாதி ஆயிட்டார். ஆனா நான் அவரைப் பத்தி நிறையத் தெரிஞ்சுண்டேம்மா!"

"எப்படி?"

"நான் மூணாவது இளையாளா பத்து வயசுலே வாழ்க்கைப்பட்டேன். எனக்கும் அவருக்கும் முப்பத்தாறு வயசு வித்தியாசம். அவருக்கு விவரம் தெரிஞ்ச நாளா தியாகராஜ ஸ்வாமியைப் பார்த்துண்டே இருந்திருக்கார் அவர். நாலுவருஷம் அவர்கிட்டே பாட்டும் சொல்லிண்டிருக்கார். அய்யர்வாள் ஆத்திலே நித்ய உத்சவமாகத்தான் இருக்குமாம். சீதா கலியாண உற்சவம் எப்படி நடத்தினாலும் இவர்தான் போய் ஐம்பது குடலை, நூறு குடலைன்னு பூவாப் பறிச்சுக் கொண்டு கொடுப்பாராம். அதெல்லாம் சொல்ல ஆரம்பிச்சார்னா என் ஸ்வாமி என் ஸ்வாமின்னு தேம்பித் தேம்பி அழ ஆரம்பிச்சுடுவார். அவர்கிட்ட கேட்ட பாட்டெல்லாம் ராத்திரி இல்லே, பகல் இல்லே, பாடிண்டே இருப்பார். ஆனா அதையெல்லாம் கேட்டுப்புட்டு இன்னிக்கு இவா பாடறதைக் கேட்டா இங்கிலீஷிலே பாடறாப்பலே இருக்கு. நகுமோமு அவர் பாடின தினுசே வேறே, இன்னிக்கு நான் கேக்கற நகுமோமு வேறே. இன்னும் எத்தனையோ பாட்டுக்கள் இப்படி அடையாளம் புரியாமல் இருக்கு. சுப்புணி பாடுவன், வையச்சேரி வைத்தா பாடுவன். அதுக்கப்புறம் எல்லாமே மாறிப் போயிடுத்து!"

"சுப்புணி, வைத்தா – இவாள்ளம் யாரு?"

"சுப்புண்ணின்னு பட்டணம் சுப்ரமண்யய்யரைச் சொல்றா பாட்டி, வையச்சேரி வைத்தான்னா மகா வைத்தியநாதய்யர்" என்று சின்ன அம்மாள் விளக்கினாள்.

"அவாளைப் பாத்திருக்கேளா நீங்கள்?" என்று பரவசமாகக் கேட்டாள் மாலதி.

"பட்டணம் சுப்ரமண்ய அய்யர்னு நீங்க சொன்னா நான் ஒப்புக்குவேனா! எனக்கு அவன் திருவையாத்து சுப்புணிதான் – இவர் தெவசத்தன்னிக்கு ஒரு தடவை வந்து கண்ணாலே ஜலம்விட்டுக் கதறிப்பிட்டான். 'புவனி தாஸுடனீயை' மாமா மாதிரி பாட முடியலையே எனக்குன்னு அன்னிக்கு புலம்பி மாஞ்சு போயிட்டான்."

"அது சரி, தியாகையர் எப்படி இருப்பாராம் பார்க்கறதுக்கு!"

"வெடவெடன்னு நல்ல சேப்பா இருப்பாராம். நான் பார்க்கக் கொடுத்து

வைக்கலெ!”

“அவருக்கு என்னென்ன பட்சணம் சாப்பாடு எல்லாம் பிடிக்குமாம்?”

“இதேதுடியம்மா! இதெல்லாம் எதுக்குடீ கேக்றது இந்தப் பொண்ணு! ஏண்டியம்மா! நம்ம ஊரிலே என்ன சாப்பிடுவா எல்லாரும்! சாதம், குழம்பு, கூட்டு, பாயசம், சுகியன், வடை, அதிரசம், இட்லி, தோசை, கொழுக்கட்டை – இதைத்தானே நாம்ம சாப்பிடறோம்! இதுகளைத்தான் தியாகையரும் சாப்பிட்டிருப்பர். ஆனா இந்த நாள் மாதிரி உருளைக்கிழங்கு, காப்பி, டீ எல்லாம் அப்ப ஏது? கிழங்குன்னா கர்ணாக் கிழங்கு; சேப்பங்கிழங்குதான். அவர் பரம ஆசாரமாயிருப்பாராம்.”

“உண்மைதான் பாட்டி. அப்புறம் தியாகப்பிரம்மம் திருப்பதிக்குப் போனாராமே? இப்படிக் காவேரியைத் தாண்டித் தஞ்சாவூர் வழியா போனாராமா? இல்லை, இப்படியே கும்பகோணம் போய்ப் போனாராமா?”

“அதெல்லாம் யாருடிம்மா கண்டா? திருப்பதிக்குப் போயிட்டு வந்தாராம், அது தெரிஞ்சிருக்கு. கொட்டையூர் வழியாய்ப் போனா என்ன? கண்டியூர் வழியாப் போனா என்ன? திருப்பதிக்குப் போயிட்டு வந்துட்டார், அத்தோட விடுவியா?”

மாலதி வெகு வேகமாக எழுதிக்கொண்டிருந்தாள். மூதாட்டியின் பேச்சில் மயங்கிவிட்டதால் மணி பன்னிரண்டடித்ததையும் ஒரு தஸ்தா தாள் தீர்ந்துவிட்டதையும் கவனிக்கவில்லை. பேட்டியை ஒரு கட்டத்தில் நிறுத்தி எஞ்சியவற்றைப் பிற்பகலில் வந்து கேட்டுக்கொள்வதாகக் கூறி விடைபெற்றாள்.

தாமதித்து வந்ததற்காக அகோரநாதன் மாலதியைக் கடிந்துகொண்டு, எல்லோரையும் தியாகையர் வாழ்ந்த இல்லத்துக்கு அழைத்துச்சென்று அவர் இறைவனைத் தொழுத இடம், உண்ட இடம், உறங்கிய இடம் போன்ற பல இடங்களைக் காண்பித்து விளக்கினார். பிறகு உணவு விடுதியில் பகல் உண்டியருந்தி, விடுதிக்குச் சென்று, தத்தம் பேட்டிகளைப் பற்றி மாணவிகள் சுருங்க எடுத்துரைத்தார்கள். தனக்குப் பேட்டியளித்தவர் தானே கூறுவதுபோல் எழுதியிருந்த கிரிஜா, அதைப் படிக்கத் தொடங்கினாள்.

“என் பெயர் ஞானஸ்கந்தன், இண்டர்மீடியட் வரையில் படித்திருக்கிறேன். என் முப்பாட்டனாரின் முப்பாட்டனாரான ஐயா தீட்சிதர் நூற்றெட்டு வாஜபேய வேள்விகளும், ஐந்து முறை சோம யாகமும்

செய்தவர். நல்ல இலக்கிய சாதனைகள் புரிந்தவர். பஞ்சநதீச்வரர் பேரில் முப்பது காவியங்களும் மூன்று நாடகங்களும் இயற்றியிருக்கிறார்.அவருடைய பல அபிப்பிராயங்கள் போற்றத்தக்கவை. ஏனெனில் எனக்கும் அவற்றோடு உடன்பாடு உண்டு. என்னவெனில் கலை என்னும் ஏணியில் சங்கீதம் என்பது அடிப்படி. அதாவது மிகமிகத் தாழ்ந்தது. கலைகளில் சிறந்தது இலக்கியம்தான். அதற்குப் பிறகுதான் சிற்பம், ஓவியம், நடனம், இசைக்கலை எல்லாம் வரும். இலக்கியத்திலும் தலையாயது உரைநடை இலக்கியமே. கவிதை கடையானது. உரைநடையிலும் சிறு கதையும் நாவலும்தான் தலையாயவை. ஹென்றிஜேம்ஸ், மாப்பஸான், செக்காவ் போன்று எழுதக்கூடியவர்கள் நம் நாட்டில் ஆறே பேர்தான் உண்டு. ஒன்று நான், இரண்டாவது சிறுத்தொண்டர், மூன்றாவது சௌனகர் என்ற புனை பெயரில் எழுதும் சோனி, நாலாவது ஐயப்பா, ஐந்தாவது மகிஷபதி, ஆறாவது தாசரதி. இந்தத் தாசரதிகூட இப்பொழுது ரொம்பத் தெரிந்தவன் மாதிரி நாவல் நாடகம் எல்லாம் எழுதத் தொடங்கிவிட்டான். இனிமேல் என்னுடைய பட்டியலில் நான் அவனைச் சேர்ப்பதாக உத்தேசமில்லை . . . தியாகையர் நாவல் எழுதியிருந்தால் நோபல் பரிசு வாங்கியிருப்பார். அவருக்கு அவ்வளவு ஆற்றல் இருந்தது. ஆனால் பயன்? விழலுக்கிறைத்த நீராக, இசைப்பாலையில் தம் திறமைகளைக் கொட்டி வீணாக்கிவிட்டார். அதனால் எங்கள் முப்பாட்டனாரான ஐயா தீட்சிதருக்கு அவரைக் கண்டால் ஆகவில்லை. ஆனால் தியாகையர் மீது எனக்கு "பர்ஸனல்" விரோதம் ஒன்றும் கிடையாது. அதனால்தான் அவரது பாட்டுக்களை பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்த்து வருகிறேன். ஒவ்வொரு கீர்த்தனைக்கும் ஐயாயிரம் பிராங்க் தருவதாக "பாரிஸ்பொக்கே" சஞ்சிகை சொல்லியிருக்கிறது. அப்படி ஐம்பதாயிரம் பிராங்க் சேர்ந்ததும் மாம்பலத்தில் ஒரு வீடு வாங்கிக்கொண்டு குடியேற உத்தேசம். இத்தனை தாராளமாக நம் தேசம் இல்லாததால்தான் தியாகையர் இலக்கியத்துக்குப் பதிலாக, குறுக்கு வழியில் புகழ் தேடும் சங்கீதக் கலையில் ஈடுபட்டார் என்பது என் கருத்து . . ."

ஞானஸ்கந்தனாரின் கருத்துக்கள் பெரும் சலசலப்பை மாணவியரிடையே எழுப்பி, ஓயாத சொற்போரை மூட்டும் தருணம் நெருங்கவே அகோரநாதன் "ஒழுங்கு, ஒழுங்கு" என்று அடக்கி, வாதப் பிரதிவாதங்கள் தேவை இல்லை என்றும், அவரவர்கள் குறிப்புகளைச் சுருக்கமாகக் கூற வேண்டும் என்றும் உத்திரவிட்டு அலமுவைப் பேச அழைத்தார்.

“நான் வைத்தியலிங்க ஆசாரி என்பவரைச் சந்தித்தேன். அவருடைய முன்னோர்கள்தாம் தியாகையருக்கு ஜாலரா, உஞ்சவிருத்திக்கான பாத்திரம் முதலியவற்றைச் செய்து தந்ததாகக் கூறினார். அதற்குமேல் உணர்ச்சிப் பெருக்கால் அவரால் பேச முடியவில்லை. நன்றி உணர்வினால் அவரது நாத் தழுதழுக்க ஏதும் கூறமுடியாமல் வருந்தினார். தியாகையருக்கு இச்சாதனங்களைச் செய்தளித்த நாள் முதலாக அவருடைய வம்சத்தில் தேவை, முடை என்பதே இல்லாது போய், சீரும் சம்பத்துமாக வாழ்கிறார்களாம். அவருடைய உறவினர்களில் பலர் தென்னாப்பிரிக்காவிலும் இலங்கையிலும் ஒப்பந்தக் கூலிகளாக வேலை செய்யப் போய் அவதியுற்ற காலையில் அவர் குடும்பம் செல்வத்தில் புரளுகிறதென்றும், அதற்கு ஒரே காரணம் தியாகையர்தான் என்றும் கூறினார் அவர்” என்று சொல்லி முடித்தாள் அலமு.

பின்பு எழுந்த உமா, கிரிஜாவைப் போலவே பேட்டியளிப்பவர் தன்மையில் சொல்வதாகவே எழுதியிருந்தாள். “என் பெயர் ஐப்யேசக் கவிராயர். சித்திரக்கவி ஆயிரக் கணக்கில் ஒரு நாளில் பாடுவேன். என் பெரியன்னையின் முப்பாட்டனாரின் அருளால் கிடைத்த வரம் அது. அந்த முப்பாட்டனார்தான் ஐயாறப்பக் கவிராயர். அவர் தியாகையரிடம் தனியன்பு கொண்டவர். அதனால் ‘தெலுங்கில் பாடாதீர்! மக்களுக்குப் புரியும் தமிழில் பாடுவீர்’ என்று பன்முறை மன்றாடியும் என்ன காரணத்தாலோ ஐயரவர்கள் கேட்கவில்லை. ‘தமிழ் நாட்டு இசைப் புலவர்கள் இந்தத் தெரியாத மொழியில் பாடி நும்பாக்களின் பொருளனைத்தையும் சிதைத்துக் கொல்வார்கள்’ யென்று எச்சரித்தும் ஐயரவர்கள் கேட்கவில்லையென்று தெரிகிறது. என் பாட்டனார் கூறியது மெய்யாகிவிட்டது என்பதை நான் விசனத்துடன் கூறத்தான் வேண்டியிருக்கிறது.”

அம்புஜம் எழுந்தாள். “நான் பேட்டி கண்டது பிரணதார்த்திஹர சர்மாவை. இவர் எம்.ஏ. படித்து அரசாங்கத்தில் நல்ல பதவியிலிருந்து ஓய்வுபெற்றவர். தியாகையர் வருடா வருடம் சீதா கல்யாணம் செய்வதைக் கண்டு இவர் வெகுண்டெழுகிறார். “ராமன் ஆப்டர் ஆல் ஒரு மனுஷன். அவனை தெய்வத்துக்குச் சமானமாக வைத்துக் கலியாணம் செய்யலாமா? ஏன் பார்வதி கலியாணம் இல்லையா! மீனாட்சி கலியாணம் இல்லையா! இதையெல்லாம் ஏன் தியாகையர் செய்திருக்கக் கூடாது? அதனால் தியாகையருக்கு ‘ஒன் ட்ராக் மைண்ட்’ என்றுதான் முடிவுகட்ட வேண்டியிருக்கிறது. அதனால்தான் அவர் காலத்தில் வாழ்ந்த என் தாத்தாவின் எள்ளுப் பாட்டரான பஞ்சு சிரௌதிகள் அவரை

முகாலோபனம் செய்வதையே நிறுத்திவிட்டார்’ என்று சர்மா அவர்கள் கூறினார்கள்.”

ரமா, ஏகநாத்ராவ் என்பவர் கூறியவற்றை எழுதியிருந்தாள். “மராட்டிய மன்னரான சரபோஜி அழைத்ததற்குத் தியாகையர் ‘நரஸ்துதி இந்த நாவால் செய்யமாட்டேன்’ என்றாராம். ராஜா தெய்வத்துக்குச் சமானம், விஷ்ணு அம்சம் என்று நம் ஸ்மிருதிகள் கோஷிக்கின்றன. மேலும் ஒவ்வொரு உயிரிலும் கடவுளைக் காணும் ஐக்கிய பாவம் தியாகையருக்கு இருந்திருந்தால் இந்த மாதிரி பதிலை அவர் சொல்லியிருக்க மாட்டார் என்பது ஏகநாத்ராவின் கருத்து” என்று ரமா கூறி அமர்ந்தாள்.

அதற்குள் நேரமாகிவிட்டது. ஏழு மாணவியரும் ஒவ்வொரு பேட்டியைத்தான் முடித்திருந்தார்கள். இன்னும் மும்மூன்று முடித்தாக வேண்டும். எல்லாவற்றையும் முடிக்க மூன்று நாட்கள் எப்படிப்போதும் என்று கலங்கினார் அகோரநாதன். மீண்டும் மாணவியர் கிளம்பினார்கள்.

ஐந்தாம் நாள் இரவுதான் எல்லாம் முடிந்தன. அலமு உதட்டைப் பிதுக்கி முனகினாள். “இருந்திருந்து இத்தனை வருஷம் கழிச்சு உற்சவம் பார்க்கணும்னு வந்தோம். ஒரு கச்சேரி கேட்கலே. சமாதியைக்கூட எட்டிப் பார்க்கலே. இத்தனை நாளா பேட்டி பேட்டி, பேட்டி, கை ஒடிய ஒடிய எழுதியே தீர்த்துப்பிட்டோம்!” என்று அவள் அழாக்குறையாக நொந்துகொண்டாள். மற்றோரும் ஒத்துப்பாடினார்கள்.

“பாட்டும் கூத்தும் கேட்கவா வந்தோம்! வேலையல்லவா முக்கியம். கல்லூரியில் படிக்கிற நீங்கள் இந்தக் கட்டுப்பாட்டைக்கூடத் தாங்காவிட்டால் என்னதான் செய்யப்போகிறீர்களோ?” என்று பெருமூச்செறித்து “சரி, சமாதிக்கு வாருங்கள். அதையும் பார்த்துவிடலாம்” என்று கிளம்பினார் அகோரநாதன்.

இவர்கள் போவதற்கும் பாகவதர்கள் ஆஞ்சனேய உற்சவத்தை முடித்து வெளியே வரவும் சரியாயிருந்தது.

எல்லோரும் காலையில் தஞ்சை வந்து, வரகப்பையர் சந்தில் தியாகையர் ஆராதித்த விக்கிரகங்களைக் கண்டுவிட்டு போட்மெயிலில் சென்னை திரும்பி வந்தார்கள்.

“ஐயரும் ஐயாறும்” என்ற ஆங்கில நூலை எழுதி அடுத்த ஆண்டு பகுள பஞ்சமியன்று தம் நண்பரிடம் காட்டினார் அகோரநாதன். அதைப் படித்து, “அகோரம், இந்த மாதிரி ரிசர்ச்சை நான் என் ஆயுசிலேயே

பார்த்தது கிடையாதுடா! மண்டூகங்கள் நெறஞ்ச இந்தத் தேசத்திலா இதை வெளியிடறது? நான் டர்னருக்கு எழுதுகிறேன்" என்று அதை அமெரிக்காவுக்கு அனுப்பினார் நண்பர்.

"சங்கீத மூவரில் ஒருவரைப் பற்றித்தானே எழுதியிருக்கிறார் அகோரநாதன். மற்ற இருவரையும் பற்றி இதே மாதிரி திறனாய்வு எழுதட்டும். அதற்காக இருபதாயிரம் டாலர் சாங்ஷன் செய்கிறோம்" என்று டர்னர் பதில் எழுதினார். அவற்றையும் எழுதி முடித்து முன்னுரையில் மாணவியரின் உதவிக்கு நன்றி செலுத்தினார் அகோரம். அதன் பயனாக அலமுக்கு அமெரிக்காவில் படிக்க உதவிச்சம்பளம் கிடைக்கவே அவள் அங்கு போய் அமெரிக்கர் ஒருவரை மணந்து அங்கேயே தங்கிவிட்டாள். மற்றவர்களுக்குச் சங்கீதப் போராசிரியைகளாகவும் ஆசிரியைகளாகவும் இந்தியாவில் பல இடங்களில் வேலை கிடைத்தது. கிரிஜா ஒரு கலெக்டரை மணந்துகொண்டாள். ஆனால் ஆராய்ச்சியை விடவில்லை. அலமுவின் யோசனையின் பேரில் தியாகையர் பாடியது தமிழ்த் தெலுங்கா, தெலுங்குத் தெலுங்கா என்று ஆராய்ந்து கொண்டிருக்கிறாள். அதை முடித்து வெற்றிபெற்றால் அவளுக்கு கிராண்ட் கான்யான் பல்கலைக்கழக 'டாக்டர்' பட்டம் கிடைக்கும்.

கல்கி, ஜனவரி 1963

# குழந்தைக்கு ஜுரம்

மனைவி சொன்னதைக் கேட்டார். குழந்தையைப் பார்த்தார். மணிபர்ஸைப் பார்த்தார். புத்தகம் போடும் பஞ்சாபகேசனை நினைத்தார். வாத்தியார் நெஞ்சு புகைந்தது. வயிற்றைப் பற்றிக்கொண்டு வந்தது.

"ஏண்டாய்யா, குழந்தையைக் கொடுத்தியே போதாதா? வியாதியை வேற கொடுத்து அனுப்பிச்சுருக்கியே அதை?" என்று மனசிலே சொல்லிக்கொண்டே சுவரில் அசைந்த காலண்டரைப் பார்த்தார். அதில் பரமசிவன் மீசையும் மாடும் இரண்டு பிள்ளையுமாக உட்கார்ந்திருந்தார். வியாதி வெக்கை இல்லாத பிள்ளைகள்.

கழுவாத சாயங்கால மூஞ்சி மாதிரி எண்ணெய்ப் பாடம் கறுத்து மின்னும் தலையணையில் தலைவைத்துக் குழந்தை மல்லாந்து படுத்திருந்தது. மூன்று நாளாக மூடிய கண் திறக்கவில்லை. நெற்றியில் நெருப்புப் பறக்கிறது. சளி ஜுரமா, பித்தவாத ஜுரமா – இன்னும் டாக்டருக்குப் பிடிபடவில்லை. நெற்றியில் நெருப்புப் பறக்கிறது. மாசம் பிறந்து இரண்டாவது வாரம் பாதி நடக்கிறது. இல்லின், மைஸின் என்று என்னவோ எழுதிக்கொண்டிருக்கிறார் டாக்டர். தம் கையிலே இருக்கிற பெட்டியைப் பிரிக்க யோசனை. 'ட்யூஷன்' சொல்லிக்கொடுத்து உளவடைக்க டாக்டருக்கு அவ்வளவு சின்னக் குழந்தைகளும் இல்லை. சந்நிதித் தெரு வன்னியர் வீட்டு 'ட்யூஷன்' பணம் எட்டு ரூபாய் தீர்ந்துவிட்டது. என்ன செய்யலாம் என்று மனசை நோண்டும்போதுதான் மனைவி அதை ஞாபகமூட்டினாள்.

"இன்னும் ஒரு புஸ்தகம் அச்சுப்போட எழுதிக் கொடுத்தீங்களே, அதைத் திருப்பிக் கேக்கறாப் போலவாவது அந்தப் பாவியைப் பார்த்துக்கிட்டு வாங்களேன்" என்றாள் அவள்.

"நீயே பாவிங்கறே. நீயே போகச் சொல்றியே?"

"வேற வழி இல்லேன்னா . . ." என்னவோ ரோசமாகச் சொல்லி வாக்கியத்தை முடிக்கத்தான் பார்த்தார். ஆனால் குழப்பத்தில் முடிவே மௌனமாகக் கரைந்துவிட்டது.

"இனிமேல் உங்க வீட்டுக் குத்துச் செங்கல் மிதிக்கமாட்டேன்யா" என்று புத்தகம் போடுகிற பஞ்சுவிடம் இரண்டு மாதம் முன்னால் சொல்லிவிட்டு

வந்ததுதான்.

சின்னராஜா எம்.ஏ., எல்.டி. எழுதியதாக பஞ்சு பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்குப் போடுகிற புத்தகங்களெல்லாம் இந்தச் சரவண வாத்தியார் எழுதிக் கொடுத்ததுதான். நாலு வருஷமாக இது நடந்து வருகிறது. இருபது புத்தகங்கள் ஆகிவிட்டன. பஞ்சு புத்தகத்துக்கு ஐம்பது ரூபாய் வீதம் ஏகபோகமாக உடைமையை எல்லாம் அவரிடம் எழுதி வாங்கி, க்ஷேமமாக இருந்து வந்தார். நானூறு ரூபாய் மிச்சம் கொடுக்க வேண்டியிருந்தது.

ஆடி மாசம் பணத்துக்காகப் போய் நின்றார் சரவண வாத்தியார்.

"அடுத்த திங்கட்கிழமை ஒரு செக் வரவேண்டியிருக்கு; வந்தவுடனே, மாத்தி உம்ம வீட்டுக்கு வந்து உமக்குக் கொடுக்கவேண்டிய முந்நூறு ரூபாயையும் கொடுத்துவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன். சரிதானா?" என்றார் பஞ்சு. முந்நூறு என்கிறானே!

"நானூறு ரூபாயில்லே?"

"நானூறா? நல்லா யோசிச்சுப் பாரும். போன வாரம் வந்திருந்தப்போ, நானூறு ரூபாய்னு சொன்னீர். இல்லை ஐயா, முந்நூறுன்னு திருத்தினேன். சரீன்னீரேய்யா."

"இல்லே. நீங்க முன்னூறுன்னீங்க. நானூறுன்னு நான்தான் திருத்தினேன். நீங்கதான் சரீன்னீங்க."

"இல்லே. நல்லா யோசிச்சுப் பாரும்."

சரவண வாத்தியார் நன்றாக யோசித்துப் பார்த்தார். நானூறு ரூபாய்தான். நிச்சயம்.

"இல்லைங்க, நானூறுதான்."

"ஏன்யா, எத்தினி நாளய்யா இந்த வேலையை ஆரம்பிச்சிருக்கீரு? வாத்தியாராச்சேன்னு கொஞ்சம் இரங்கினத்துக்கா இந்தத் தண்டனை எனக்கு? ரங்கசாமி வாத்தியார்தான் போக்கடாப் பயன்னு நெனச்சேன். நீரும் சேந்துப்பிட்டீரா?"

வாத்தியாருக்கு உடம்பெல்லாம் பதறிற்று. அவர் வாத்தியார். யாரும் அவரை இப்படித் தூக்கி எறிந்து பேசுகிறதில்லை. என்ன இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவருக்கு மரியாதை உண்டு. அதாவது அவமரியாதை

கிடைத்ததில்லை.

முட்டி வந்த ஆத்திரத்தை அமுக்கிக்கொண்டு, பணிந்த குரலில், “நீங்க தெரியாமச் சொல்றீங்க. நல்லா யோசனை பண்ணிப்பாருங்க” என்றார்.

“தெரியாமச் சொல்றேனா? நானா? நோட்டிலே எழுதி வச்சிருக்கேன்யா.”

“எடுங்க.”

“கடையிலே இருக்கு. இன்னிக்குச் சாயங்காலம் பார்த்தேன். அப்புறம் என்ன?”

“என்ன எழுதியிருக்கீங்க?”

“உமக்குக் கொடுக்கவேண்டியது ஆயிரம். எழுநூறு ரூபா உம்ம பத்துவழி ஆயிருக்கு.”

“அறுநூறில்லே?”

“ஏன்யா, செலவுக்கு வேணும்னு போன மாசம் இரண்டு நாள் ராத்திரி வந்து ஐம்பது ஐம்பதுன்னு வாங்கிண்டுப் போனீரய்யா.”

“நான் ரண்டு தடவை வந்தது வாஸ்தவம். ஆனா ஒண்ணும் வாங்கலியே!”

“வாங்கலியா? என்னமாய்யா இப்படித் துணிஞ்சி சொல்ல நாக்கு வரது உமக்கு? பையன்களுக்கெல்லாம் தர்மம் போதிக்கிறீரே. வாண்டாம்யா, இதெல்லாம் விட்டுடும். இப்படி இருந்தா லட்சுமி நீர் இருக்கிற தெருப்பக்கங்கூட வரமாட்டா.”

“பஞ்சு, நெசமாத்தான் சொல்றீங்களா?”

“நெசமாத்தானா? நான் என்ன உமக்குப் புடிச்ச சிஷ்யப் பையனா, உம்மோட உள்ளாக்காட்டி விளையாடறதுக்கு?”

ஒரு வார்த்தைக்குப் பத்து வார்த்தையாகப் பஞ்சுவின் வாயிலிருந்து தெறிக்கின்றன. குரலும் பெரிய குரல். வாத்தியார் கலங்கியேவிட்டார்.

“அப்ப முந்நூறுதான்னு சொல்றீங்க.”

“வேணும்னா நாளைக்குக் காலமே வந்து நோட்டைப் பாருமே, எழுதியிருக்கேனா இல்லியான்னு.”

“நீங்க நோட்டிலே எழுதினதுக்கு நானா பொறுப்பு? எனக்கு நேர

எழுதிலியே."

வாத்தியாருக்கே ஆச்சரியமாக இருந்தது. எப்படி இதைச் சொன்னோம் என்று.

"அப்படியா? நான்தான்யா அயோக்யன். நீர் பரமயோக்யர். அரிச்சந்திரன். ஐயா, இனிமே உம்ம சகவாசம் நமக்கு வாண்டாம்யா. நீர் எழுதிக் கொடுத்த புஸ்தகம் இன்னும் ஒண்ணே ஒண்ணு இருக்கு. அதை எடுத்துக் குடுத்துடறேன். நல்ல யோக்கியனா, நல்லவனா, புஸ்தகம் போடற ஆள் யாராவது இருப்பான். அவன்கிட்ட கொண்டு குடுத்துக்கும்."

சரவண வாத்தியார் வாய் அடைத்து நின்றார். இந்த லட்சணத்தில் வேறு யாரோ இரண்டு பேர் அங்கு வந்திருந்தார்கள்.

பஞ்சு சென்னார்! "ஓய் சரவணம், இப்ப ரொம்பச் சங்கடமான நிலையிலே மாட்டிவிட்டீரையா என்னை? இந்த உலகத்திலே வாத்தியார்னு சொன்னா அவா கட்சியைத்தான் யாரும் எடுத்துப்பன். இந்த இரண்டு பேரும் இப்ப உமக்குச் சாதகமாகப் பேசினால்கூட நான் ஆச்சரியப்படறதுக்கில்லே. என்னை இந்த மாதிரி இக்கட்டாக் கொண்டு நிறுத்திப்பிட்டீரே."

"சாயங்காலம் நோட்டைப் பார்த்தவங்க தப்பாச் சொல்லுவாங்களா?" என்றார் வந்திருந்த இருவரில் ஒருவர்.

ஒரு தடவை அந்த ஆசாமியை அர்த்தம் இல்லாமல் பார்த்துவிட்டுப் பஞ்சுவின் பக்கம் திரும்பினார் வாத்தியார்.

"பஞ்சு, ஒரு கால்கடுதாசி கொடுங்களேன்" என்றார்.

"இதோ!"

வாத்தியார் விறுவிறுவென்று எழுதினார். "இருபது புத்தகங்கள் எழுதிக் கொடுத்ததற்காகப் பஞ்சு பிரசுரம் உரிமையாளர் கோ. பஞ்சாப கேசனிடம் நான் வாங்கிக்கொண்ட ருபாய் ஆயிரம். இத்தோடு என் கணக்குத் தீர்ந்துவிட்டது" என்று கையெழுத்திட்டு எழுதி நீட்டினார்.

"என்னது?"

"பாருங்க."

பஞ்சு பார்த்தார். "எல்லா ரூபாயும் வாங்கிக்கொண்டதாக எழுதிக் கொடுத்துவிட்டீரா? எனக்கு என்னத்துக்கையா பிச்சைக் காசு?" என்று

அதைக் கிழித்து எறிந்தான் பஞ்சு. “இந்தக் கிண்டல்லாம் வாண்டாம். திங்கட்கிழமை உமக்கு முந்நூறு ரூபாய் வரும்.”

“உம்ம ரூபாயே எனக்கு வாண்டாம்.”

“என் ரூபாய் என்ன? உம்ம ரூபாய் அது. கொண்டுவந்து கொடுத்துடறேன். வாண்டாம்னா நீர் கிழிச்சுப் போட்டுக்கும். எனக்கு என்னத்துக்கு? இந்த மாதிரி யார்கிட்டியும் எனக்கு ஏற்பட்டதில்லை ஐயா.”

“அப்ப நான் வரட்டுமா?”

“சரி.”

வாத்தியார் திரும்பினார். அவர் மனத்தில் புயல் அடித்தது. அரிக்குஞ்சட்டியில் குழந்தை தண்ணீரைத் தட்டுகிற கலக்கமாகத்தான் பஞ்சுவுக்கு அது தோன்றிற்று.

கூட வந்தார் பஞ்சு. “ஓய், சும்மா மனசை அலட்டிக்காதீர். நல்லா யோசிச்சுப் பாத்து வந்து சொல்லும். நான் அப்படி எல்லாம் வார்த்தை புரளமாட்டேன்யா. நாளைக்கு வரீரா?”

“இனிமே இந்த வீட்டுக் குத்துச் செங்கல் ஏறுவனா?”

“அப்படியா? அப்படின்னா உம்ம சௌகரியம். சரி, பணத்தை அனுப்பிச்சுடறேன். அதையும் உம்ம வீட்டுக் குத்துச் செங்கல் ஏறவிடாமல் அடிச்சுப்பிடாதீர்.”

வாத்தியார் பதில் சொல்லவில்லை. பேசாமல் தெருவில் இறங்கி நடந்துவிட்டார். மனிதனுக்குப் பொய் சொல்ல எப்படி மனசு வரும்? திருடலாம், கொல்லலாம், கற்பை இழக்கலாம். அவர்களோடு பழகலாம். பொய் சொல்பவர்களோடு எப்படிப் பழகமுடியும்? பொய்! பொய்யா? பொய் எப்படிச் சொல்ல முடியும்? வாத்தியாருக்குப் புரியவில்லை. பதறிற்று. திட்டம் போட்ட கயமையாக இருக்கிறதே இது!

‘இருபத்தோராவது புத்தகத்தை இவனிடமா கொடுக்கிறது? சை! எப்பேர்ப்பட்ட புத்தகம்!’ ஆனால் புறப்பட்டு வந்த கோபத்தில் அதை வாங்கிக்கொள்ளவில்லை. வீட்டுக்கு வந்தார். பெண்டாட்டியிடம் ஒருமுறை எல்லாவற்றையும் சொல்லி அழுதார். புகைந்தார். மனசாரத் திட்டினார். அப்புறம் அந்தப் பக்கம் தலை காட்டவில்லை. பணமுடை நாலு தடவை கழுத்தைப் பிடித்தபோதும் தைரியமாக இருந்துவிட்டார்.

நேற்றோடு பதினோராவது திங்கட்கிழமை போய்விட்டது. வலிய வருகிறேன் என்று பயமுறுத்திய பணம் வரவில்லை.

மீண்டும் போகலாமா? பொய்யனை எப்படிப் பார்க்கிறது?

"குத்துச் செங்கல் ஏறமாட்டேன்னு சொல்லிவிட்டேன் தெரியுமா?" என்றார்.

"ஏறாம வாசல்லெ நின்னவாக்கிலே கேளுங்க."

"நான் போய்ப் பணம்னு கேக்கமாட்டேன்."

"புதுப் புஸ்தகத்தைத் திருப்பி வாங்கி வராப்பல போங்களேன். அப்ப அவனாப் பேச்சு எடுக்கமாட்டானா?"

அதுவும் சரிதான் என்று பணமுடை காதோடு சொல்லிற்று. சமாதானம் இல்லை.

குழந்தை இன்னும் கண்ணைத் திறக்கவில்லை. ஹார்லிக்ஸ்தான் கொடுக்க வேண்டுமாம். இல்லாவிட்டால் திராட்சைப் பழத்தை ஜலத்தில் கொதிக்கவைத்துக் கொடுக்கலாமாம்.

பெருங்காயத் தகரத்தைத் திறந்தார். ஒரு ரூபாயும் பத்து நயா பைசாவில் ஆறும் மின்னின. இரண்டு பத்தை விட்டுவிட்டு மீதியை எடுத்துக்கொண்டார். பார்லி, திராட்சை வாங்கி வரலாம், வரும்போது. பஸ்ஸில் ஏறப் பத்து நயா பைசாவுக்கு ஒரு டிக்கட் வாங்கிக்கொண்டு போய், இறங்கிப் பஞ்சுவின் வீட்டை நோக்கி நடந்தார்.

"பஞ்சு இருக்காரா?"

"வாங்க ஸார்" என்றான் ரத்தினமலை. ரத்தினமலை பஞ்சுவின் அந்தரங்க வேலைக்காரன். வாசலில் யார் வந்தாலும், "இருங்க இருக்காங்களா பாத்திட்டு வரேன்" என்று ஒன்றுமே தெரியாதவன் போல உள்ளே ஓடிப்போய் வந்து, இருக்கிறார் அல்லது இல்லை என்று வந்த ஆளுக்கு ஏற்பத் தகவல் தருகிறவன்.

"இருக்காரா?"

"இருக்காங்க" என்று உள்ளே போகாமலே சொன்னான் அவன்.

"பார்க்கலாமா?"

"பார்க்கலாம். அம்மாவுக்கு ரொம்ப உடம்பு ஜாஸ்தியா இருக்கு. ரத்த

ரத்தமாகச் சாயங்காலமே புடிச்சி வாந்தி எடுக்கறாங்க. அய்யா பக்கத்திலே உட்கார்ந்திருந்தாங்க.”

“ரத்த ரத்தமாவா? என்ன உடம்பு?”

“என்னமோ தெரியலீங்க. திடுதிடுப்பினு வந்திடிச்சி.”

“திடுதிடுப்புனா? சாயங்காலமா?”

“ஆமாங்க. சாயங்காலம் அஞ்சு மணிவரைக்கும் நடமாடிக்கிட்டுத்தான் இருந்தாங்க. அப்புறம் திடீர்னு தலை வலிக்கிறதுன்னாங்க. ரத்தமா வாந்தி எடுத்திச்சு. டாக்டர் வந்து ஊசி போட்டுப் போனாரு. கண்ணைத் தொறக்கலை, படுத்துக் கிடக்காங்க.”

போய்ப் பார்ப்பதா, வேண்டாமா? வேற்று மனிதரைக் கண்டதும் பஞ்சுவின் மனைவி கூச்சப்பட்டால் என்ன செய்கிறது? உள்ளே போவதா, திரும்பிப் போவதா என்று தெரியாமல் குழம்பிக் குழம்பி நின்றார் அவர்.

ஒரு பையன் தெருவில் ஓடிவந்து வாசல்படி ஏறினான். அவரைக் கண்டு நின்றான்.

“என்ன ஸார்?”

“என்னப்பா, கையிலே?”

“ஐஸ் ஸார். அத்தங்காளுக்கு ரொம்ப சீரிஸ்ஸா இருக்கு. உள்ள வறிங்களா?” என்று கேட்டுக்கொண்டே ஓடினான்.

இதற்கிடையில் வேலைக்காரப் பையன் உள்ளே போய் வந்துவிட்டான்.

“நீங்க வந்திருக்கீங்கன்னு சொன்னேன். ஒண்ணும் சொல்லலே ஸார்” என்றான்.

திரும்பிப் போகலாமா? வந்த சமாசாரம் பஞ்சுவுக்குத் தெரிந்துவிட்டது. உள்ளே போகாமல் திரும்பிவிட்டால் என்ன நினைத்துக்கொள்வார்? அவர் மனைவி கூச்சப்பட்டால், கூச்சம் என்ன? அப்படி உடம்பாக இருந்தால் கூச்சமா தெரியப் போகிறது? உண்மையில் கவலைக்கிடமாக இருந்தால் கூச்சமும் சங்கோசமுமா வரும்?

செருப்பைக் கழற்றிவிட்டு உள்ளே போனார். என்ன இது?

அவர் எதிர்பார்த்தவாறு இல்லை. உள்ளே ஏகக் கூட்டம். பஞ்சுவின் மனைவி படுக்கையில் கிடந்தாள். சுற்றி ஏழெட்டுப் பெண்கள். பஞ்சு,

மனைவியின் காலடியில் உட்கார்ந்திருந்தார். பஞ்சுவின் குழந்தை இரண்டு தூங்கிக்கொண்டிருந்தன. இன்னொரு குழந்தை விசித்துவிசித்து அழுதுக்கொண்டிருந்தது. அதை ஒரு பாட்டி சமாதானம் செய்துகொண்டிருந்தாள். இரண்டாவது குழந்தை விவரம் தெரிந்த பெண். அது திகில் படர்ந்த முகத்துடன் சுவரோரமாக அப்பாவைப் பார்த்த வண்ணம் சிலையாக உட்கார்ந்திருந்தது. தலைப்பக்கம் உட்கார்ந்திருந்த அம்மாளின் கண் அழுது அழுது கலங்கிக் கிடந்தது.

“என்ன உடம்பு ஸார்?”

“சாயங்காலம் வரையில் ஒண்ணும் இல்லே. திடீர்னு அஞ்சு மணிக்கு ரத்தமா வாந்தி எடுத்தாள். தலை வலிக்கிறதுன்னாள்ளாம். கடைக்குப் பையன் ஓடிவந்து சொன்னான். வந்தேன். இப்படி பிரக்ஞையில்லாமல் கிடக்கா. டாக்டர் வந்து ஊசி போட்டார். பயப்பட வாண்டாம்னார். என்னன்னு கேட்டேன். ஏதோ பலஹீனந்தான்னுட்டுப் போனார்” என்று பஞ்சு மனைவியின் முகத்தைப் பார்த்தார்.

வாத்தியாரும் பார்த்தார். கண் சொருகியிருந்தது. திடீரென்று பல்லை நறநறவென்று கடித்தாள் நோயாளி. கை விறைத்தது. உடம்பைப் போட்டு முறித்துக்கொண்டாள். பயங்கரமாக இருந்தது. எல்லோரும் அமுக்கி அவளைப் பிடித்துக்கொண்டார்கள். அமுக்க முடியாமல் அமுக்கினார்கள்.

“என்னடீம்மா இது? இப்படி முறிக்கிறதே! ஒண்ணும் புரியலியே. இந்தக் குடும்பத்தை இவ இல்லாட்டா யாருடீ காப்பாத்த முடியும்?” என்று தலைமாட்டு ஸ்திரீ புலம்பினாள், குபுகுபுவென்று அழுகை வந்தது அவளுக்கு.

“மறுபடியும் டாக்டரைக் கூப்பிட்டுப் பார்க்கணும், ஸார்” என்றார் வாத்தியார்.

“வீட்டு டாக்டர் சரியாப் போயிடும்னு சொல்லிவிட்டுப் போயிட்டார். ஆனா மறுபடியும் அழச்சிண்டு வரச் சொல்லிப் பையனை அனுப்பிச்சிருக்கேன். போயிருக்கான்.”

குழந்தை அழுதது. நினைத்து நினைத்துத் தலைமாட்டு அம்மாள் அழுதாள். ஐந்து நிமிஷத்துக்கு ஒருமுறை உடம்பை முறித்த வளைத்து விறைக்கிற போதெல்லாம் மற்றப் பெண்கள் அணைத்துப் பிடித்துக்கொண்டார்கள்.

“டாக்டர் பன்னிரண்டு மணிக்குத்தான் வருவாராம்” என்றான் பெரிய

பையன் வந்து.

"எங்கே போயிருக்காராம்?"

"தெரியலே. எனக்குச் சந்தேகமாயிருக்கு."

"என்ன?"

"அவர் பிள்ளை, படுத்துனுட்டால் ஏந்துருக்க மாட்டார்னு சொன்னான். ஆளே இல்லவே இல்லைங்கறான். எது நெஜம்னு தெரியலே."

"ராஜூ டாக்டர் சேதி தெரிஞ்சுதுதானே? படுத்துனுட்டான்னா என்ன கூப்பிட்டாலும் வரமாட்டானுகளே!" என்றது கும்பலில் ஒரு குரல்.

வாத்தியார் வெளியே ஓடினார், இரண்டு மூன்று டாக்டர்களின் வீட்டுக் கதவுகளைத் தட்டினார். 'இல்லவே இல்லை; வர முடியாது' என்ற இரண்டு பதில்களை மூடிய கதவே கொடுத்துவிட்டது. மூன்றாவது டாக்டரிடம் ஓடினார். மாடிப் பால்கனியிலிருந்தே டாக்டர் வியாதியைப் பற்றி விசாரித்தார். வாத்தியார் சொன்னதைக் கேட்டதும், "டாக்டர்தான் ஊசி போட்டிருக்கார்னேளே. காலமே வந்து எப்படி இருக்குன்னு சொல்லுங்கோ" என்று உள்ளே போனார். தாழ்ப்பாள் ஓசை கேட்டது. சட்டென்று பராங்குசத்தின் ஞாபகம் வந்தது வாத்தியாருக்கு. கூடப் படித்தவனாயிற்றே. ஒரு சைக்கிள் ரிக் ஷாவில் ஏறிக்கொண்டார். ஒரு மைல் இருக்கிறது பராங்குசம் வீடு.

"ஸார், பராங்குசம் ஸார்!"

"யாரு?"

"நான்தான் ஸார்."

நான்தானென்றால் அடையாளம் தெரியுமா? அவனைப் பார்த்தே ஒரு வருஷமாயிற்று.

"நான்தான் சரவணன் ஸார். வாத்தியார்."

"ஓகோ, இதோ வந்துட்டேன்."

அவரைக் கெஞ்சிக் கூத்தாடிக் கையோடு அழைத்துக்கொண்டே வந்துவிட்டார் சரவணன். சைக்கிள் ரிக் ஷா லொடலொடவென்று சத்தம் செய்தது.

உள்ளே போய்ச் சேர்ந்தார் பராங்குசம். உடம்பு முறியாக முறித்தது.

டாக்டர் எழுந்து "இப்படி வாங்க கொஞ்சம்" என்று பஞ்சுவையும் சரவணத்தையும் தனியாக வாசலுக்கு அழைத்துப் போனார்.

"ஸார். இது கிருமித் தொத்து, உடனே ஆஸ்பத்திரிக்குப் போனா ஆனதைச் செஞ்சிப்பிடுவாங்க. இப்படியே இன்னும் நாலு மணிநேரம் விட்டு வச்சா, 'க்ரிடிக்கலா'ப் போயிடும். அப்புறம் ரொம்ப சிரமம். இப்பவே வாங்க இப்ப ஆஸ்பத்திரியில் சேத்துட்டா நாளை மத்தியானம் திரும்பி வந்துடலாம். இங்கியே வச்சிருக்கிறது நல்லதில்லை. ஆஸ்பத்திரியிலேதான் இதுக்கு வசதி உண்டு. நானும்கூட வந்து அட்மிட் பண்ணிடறேன். என்ன சொல்றீங்க? அப்புறம் வருத்தப்படப்படாது."

பஞ்சு உள்ளே வந்தார். பெண்மணிகளைக் கலந்து பேசினார். ஆஸ்பத்திரி என்றதும் தலைமாட்டு அம்மாள் புதிதாக ஒரு பாட்டம் ஆரம்பித்துவிட்டாள். "செவ்வாய்க்கிழமையும் அதுவுமா . . . இங்கேயே பார்க்க முடியாதா?"

பஞ்சுவும் கலங்கினதைப் பார்த்து, அவருக்கும் எல்லோருக்கும் தைரியம் சொல்லிவிட்டு, ஓடிப்போய் ஒரு டாக்ஸியைப் பிடித்து வந்தார் சரவணம். டாக்ஸி வந்த பிறகு மீண்டும் தகராறு. பிரக்ஞை வந்த மனைவி அடம்பிடித்தாள். சரவணன் அவளுக்கு வேறு நல்ல வார்த்தை சொல்லி, சரி சொல்லச் செய்ய அரை மணியாயிற்று.

மெதுவாகக் காரில் ஏற்றினார்கள். சரவணமும் டாக்டரும் முன்னால் உட்கார்ந்துகொண்டார்கள்.

ஆஸ்பத்திரியில் பரபரவென்று ஒரு படுக்கையை ஒழித்துத் தயார் செய்தார்கள். டாக்டர் வந்தார், "நல்லவேளை! இப்பக் கொண்டுவந்தீங்களே. இன்னும் ஒரு மணி ஆயிருந்ததோ சொல்றதுக்கில்லே. இனிமே பயம் இல்லை. கவலைப்படாதீங்க ஸார். காலமே பத்து மணிக்கு வீட்டுக்குப் போயிடலாம்" என்று தைரியம் சொன்னார். கவனித்தார்.

வாத்தியாருக்கு உயிர் வந்தது, மருந்து கொடுத்தார்கள். ஊசி போட்டார்கள்.

"அவர் மாத்திரம் இருக்கட்டும். நீங்கள்ளாம் போகலாம். இனிமே கவலையில்லை" என்றார் டாக்டர்.

"அப்ப நீங்க போங்க. நான் இருக்கேன். ரொம்ப தாங்க்ஸ் உங்களுக்கு" என்று நன்றி சொன்னார் பஞ்சு.

பராங்குசத்தை வீட்டில் இறக்கிவிட்டது டாக்ஸி. வாத்தியாரும் இறங்கினார். பஞ்சு டாக்ஸிக்காகக் கொடுத்த மூன்று ரூபாய் போதவில்லை. காத்திருந்த கூலி ஒரு ரூபாய்க்கு மேல் ஏறியிருந்தது. மூன்று ரூபாய் ஆறணாவுக்குக் கையை விட்டு ஆறணாத் தந்தார் சரவணம். ஒரு ரூபாயைக் கொடுத்து மீதி பத்தணாவை வாங்கிக்கொண்டார்.

டாக்ஸி போனதும் திடீரென்று குழந்தையின் ஞாபகம் வந்தது சரவணத்துக்கு. அவர் சொன்னதைக் கேட்டுவிட்டு, "ஒண்ணும் இல்லை; இந்த மாத்திரையைக் கொடுங்க, சரியாயிடும்" என்று பராங்குசம் ஒரு மருந்தைக் கொடுத்தார்.

"என்ன கொடுக்கணும்?"

"ஒண்ணேகால் ரூபாய்."

"ம் . . . அப்புறம் . . ."

"கொடுங்களேன், நான் அந்தப் பக்கம் வந்தா வந்து பார்க்கறேன்."

"ரொம்ப நன்றி, பராங்குசம்."

"இங்கேயே படுத்திருங்களேன். மணி ஒண்ணாச்சே, காலமே போயிக்கிறது."

"குழந்தைக்கு மருந்து கொடுக்கணுமே!"

"அப்ப சரி, டாக்ஸியை விட்டுவிட்டீங்களே. சரி, ரிக் ஷாவாவது வைச்சிட்டுப் போங்க."

"சரி, அப்ப வரட்டுமா?"

"ரைட், குட்நைட். ஒண்ணும் கவலைப்படாதீங்க. காலமே அந்தப் பக்கம் வந்தா வர்றேன்."

"சரி."

ரிக் ஷா எதற்கு? ஒன்றரை மைல்தான்; நடந்தே போய்விடலாம். பையை எடுத்துச் சில்லறையை எண்ணினார். நயா பைசா எல்லாம் போய், ரூபாய், உடைந்து பத்தணா பாக்கி. தாகம் தாங்கவில்லை. சாயங்காலம் ஏழு மணிக்குச் சாப்பிட்டது. வெற்றிலைபாக்குக் கடையில் நாலு மலைப்பழமும் கலரும் சாப்பிட்டார். வெற்றிலை

போட்டுக்கொண்டார் நடந்தார்.

"ஹிஹிஹிஹி" என்று யாரோ இருளில் சிரித்தார்கள் . . .

பாதி பயத்திலும் பிரமையிலும் உற்றுப் பார்த்தார் அவர். யாரும் இல்லை; ஜட்கா ஸ்டாண்ட் குதிரை! புல் தின்கிற சவடாலில் அது கனைத்தது. சரவணத்திற்கும் அடக்க முடியாமல் சிரிப்பு வந்தது. வீடு போகிற வரையில் சிரித்துக்கொண்டே போனார். நிலவு எழுந்ததைக் கண்டு பொழுது புலர்ந்த திகைப்பில் நாலைந்து நார்த்தங்குருவிகள் வாழைத் தோப்பில் சிரித்துக்கொண்டிருந்தன.

**கலைமகள், அக்டோபர் 1957**

# திண்ணை வீரா!

“ஏல, என்ன கட்டை ரொம்பத் துளுத்துப் போச்சு? ம்ஹ்ம், சீ . . . கையைக் கீளப்போடு . . . ஏண்டல, கணக்குத் தீக்க அம்மாசிக்கே வரேன்னு சொன்னியால்லியாடா?... ஏண்டா! சொன்னியால்லியாடா? . . . ஏண்டா சும்மா நிக்கிறியே? எல, உன்னைத்தாண்டா . . . ஏன், பேசமாட்டியா? இப்ப எழுந்து வந்தெனோ . .?”

“அம்மாசிக்குத்தான் என் மாமியா இளுத்துக்கிட்டு கிடந்துச்சுங்க. காலங்காட்டியும் கிளம்பி வரணும்னுதான் படுத்தேன். ரண்டு சாமத்துக்கு ஆள் வந்திரிச்சு . . . முன்னெத்தி மயிரைப் புடிச்சாத் தெரியாதுங்க. அப்படி இருட்டு கும்பிக்கிட்டு இருந்தது. அதிலேயே உளுந்தடிச்சிகிட்டுப் போனோம். விடிஞ்சு போய் சேர்றதுக்குள்ளாக திருவாலூர் ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டும் போயிட்டாங்களாம். அப்புறம் மேலே போயி . . . ரொம்ப அவதியாப் பூட்டுங்க . . .”

“சரி, அப்புறம்? மருமவன் கைராசிதான் மாமியா பொளச்சுக்கிட்டா. சரி, உடனே வர்றதுக்கென்னவாம்? அம்மாசி போயி பதினோரு நாளாச்சிடா . .?”

“போன இடத்திலே டாகுட்டருக்கும் மருந்துக்கும் நாப்பது ரூவாக்கு மேலே போயிடிச்சுங்க. அப்புறம் மேலே . . .”

“சரி, எடு பணத்தை!”

“அதாங்க சொல்ல வந்தேன் . . . இந்த மருந்துச் செலவு ரொம்ப அடாபுடியாப் பூட்டுங்க . .!”

“அதுக்காக . .?”

“இந்த மார்களி முச்சூடும் பொறுத்துக்கிட்டா, பொங்கல் களிஞ்சு மூணா நா கொண்டாரெனா இல்லையா, பார்த்துக்குங்க!”

“எல, இஞ்ச வா இப்படி; வாடாங்கறேன். வாடா இப்படி. வரமாட்டியா? இப்ப எழுந்து வந்தெனோ, தெரியுமா?

பந்தல் காலடியில் நின்ற ஆசாமி திண்ணைப் பக்கம் போனான்.

“இஞ்ச வாடா இப்படி . . . இப்படிக் கிட்ட வாடா, வரமாட்டே! இப்ப

எழுந்து வந்தன்னா . . . பாத்துக்க . . .”

ஆசாமி அருகில் போனான்.

“போட்டுக்கடா . . . என்னடா பாக்கிறியே? கன்னத்திலே போட்டுக்கடாங்கறேன் . . . பளார் பளார்னு நாலு போட்டுக்கணும். மாட்டியா? நான்தான் போடணுமா?”

ஆசாமி பளார் பளார் என்று கன்னத்தில் நாலு போட்டுக்கொண்டான்.

“போட்டுக்கிட்டியா? . . . இதைக் கையிலே எடு . . . எடுத்துக்கிட்டியா? என்னிக்குப் பணம் கொண்டாரெ?”

“தை மாசம் நாலாம் தேதி.”

“நிச்சயமா?”

“நிச்சயமா.”

“கிழக்கே பார்த்துக்கிட்டு சொல்லுறே. பாத்துக்க, கையிலே எடுத்துட்டு நிக்கிறியே . . . அது என்ன தெரியுமாடா?”

“பொய்த்தவம்”

“பொய்த்தவமில்லெடா, பொஸ்தகம் . . . சும்மா தங்கமத்தில்லால இல்லே. திருமுருகாற்றுப்படெ. சுப்பரமணியசாமி இருக்குறார் பாரு, அவர் மேலே பாடின பாட்டுங்க. அத கையிலே வச்சுக்கிட்டு கிழக்கை பாத்துக்கிட்டு, தை மாசம் நாலாம் தேதி கொண்டாரென்னு சொல்லியிருக்கே, ஜாக்ருதெ. பயலெ, தேதி தப்பிச்சோ, கண்ணைப் பிடுங்கிப்புடுவாரு சுப்ரமணியரு! உஜாரா இரு . . . தெரிஞ்சுதா? ஏய், செவித்தியான்! கேட்டுக்கிட்டியா, தை மாசம் நாலாம் தேதின்னு சொல்றான் . . . சவநாது, நீயும் கேட்டுக்க!”

“கேட்டுதுங்க,” என்று பந்தல் ஓரத்திலிருந்து இரண்டு ஆட்கள் சாட்சி சொன்னார்கள்.

காலையில் காப்பி சாப்பிட்டுவிட்டு திண்ணைக்கு வந்ததிலிருந்து இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். நேர் எதிர் வீட்டுத் திண்ணையில் அங்கம் அங்கமாக, காட்சி காட்சியாக இந்த நாடகம் நடந்துகொண்டிருந்தது. எட்டு மணி அடித்தது முதல், இன்று மட்டுமல்ல, மூன்று நாளாக, அதாவது முந்தாநாள் மத்தியானம் நான் வந்ததிலிருந்து நடந்துகொண்டிருக்கிறது.

‘ஊருக்கு வா வா’ என்று நண்பன் பார்த்தபோதெல்லாம் சொல்லிக் கொண்டேயிருந்தான். எழுதிக்கொண்டேயிருந்தான். ‘எங்கள் ஊரை வந்து பாரேன், தண்ணீர் வாசனையே இல்லாமல், சுற்றிப் பத்து மைலுக்கு ஒரு பச்சைப் புல்லைக்கூட பார்க்கமுடியாத சீமையாகப் பார்த்து வசித்துக்கொண்டிருக்கிறாயே? எங்கள் ஊருக்கு வந்து நாலுநாள் இருந்து பாரேன்’ என்றான். கடைசியாக நானும் கை ஒழிந்து, நேரம் வாய்த்து வந்தேன். நண்பன் கோர்ட்டுக் காரியமாக சென்னை போயிருக்கிறானாம். அவசரக் காரியமாம். ‘உங்களை வரும்வரையில் இருக்கச் சொல்லிவிட்டுத்தான் போனான்’ என்று அவன் தந்தை சென்னார். பொழுது போவதற்காக நாலு புத்தகங்களை எடுத்துக் கொடுத்தார் அவர். கடைசி நாலு பக்கம் போன ஒரு துப்பறியும் நாவல். அருணாசலக் கவி ராமாயணக் கீர்த்தனை புத்தகம். நல்ல வேளை, இதெல்லாம் இல்லாமலேயே எனக்குப் பொழுது போய்விட்டது. பஸ்ஸை விட்டு இறங்கி வரும்போது பகல் ஒரு மணி இருக்கும். எதிர் வீட்டு மனிதர் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். தெருக்கோடியில் விசாரித்ததை உறுதிப்படுத்திக்கொள்வதற்காக நண்பன் வீடு எது என்று கேட்டேன்.

“இதோ, இந்த வீடுதான்,” என்று கையால் சுட்டிக் காண்பித்துக் கொண்டே, “உங்களுக்கு மதுரையோ, திருச்சியோ?” என்று கேட்டார்.

“இல்லே . . . ராமநாதபுரம்.”

“அப்படியா? செந்திருவை ரொம்ப நாளாத் தெரியுமா?”

“ஒண்ணாத்தான் படிச்சோம்.”

“அப்படியா? ராமனாதபுரத்திலே உத்தியோகத்திலே இருக்கீங்களாக்கும்?”

“ஆமாம். கலெக்டர் ஆபிசுலே.”

“சம்பளம் இருநூறு ரூபாய் இருக்கும், இல்லையா?”

“கிட்டத்தட்ட இருக்கும்.”

“சொந்த ஊரே ராமனாதபுரம் தானாக்கும்?”

“ஆமாம்.”

“அப்படீன்னா . . . சொந்த வீடே இருக்குமே?”

“இருக்கு.”

"அதானே . . . சொந்த ஊரிலேயே வேலையா இருக்குறதுன்னா, வீடும் பூசொத்தும் பக்கத்திலேதான் இருக்கும் . . . இல்லையா?"

"ஆமாம்."

"முப்பது ஏகாராவாவது இருக்கும், இல்லையா?"

"ம் . . . இருபத்தெட்டு ஏகரா இருக்கும்."

கேள்விகள் வேடிக்கையாகத்தான் இருந்தன. வெறும் கேள்விகளாக இல்லை. விடையே அடங்கியுள்ள புது மாதிரிக் கேள்வி. பள்ளிக்கூடக் கேள்விகளாக இருந்தன. கலியாணமாகிவிட்டதா, எத்தனை பிள்ளைகுட்டி இருக்கிறது என்று நேரடியாகக் கேட்கவில்லை. "கொளந்தீங்கள்ளாம் சுகம்தானே?" என்று கேட்டார். 'சுகம்தான்' என்றேன்.

"பள்ளிக்கூடத்திலே படிக்குதுகளாக்கும்?"

"ஆமாம்."

"மூணாவது, நாலாவது பாரமா இருக்கும்."

"இல்லை. முதல் பய ஏழாவது. இரண்டாவது பய நாலாம் கிளாசு படிக்கிறான். சின்னப்பொண்ணுக்கு இப்பத்தான் மூணு வயசாகுது!"

"தாயார் தகப்பனார் எல்லாம் சொகம்தானே?"

"சௌக்கியம்தான்."

"செந்திரு பட்டணம் போயிருக்கான் போலிருக்கே; இன்னும் வரலை போலிருக்கே. இன்னிக்கிக் காலமெ திரும்பிடுவான்னு சொன்னாரு அவன் அப்பாரு! . . ."

"பட்டணம் போயிருக்காரா? செந்திருவா?"

"ஆமா ஏதோ கோர்ட்டுக் காரியமாம்; அதனாலென்ன? இப்ப வராட்டி சாயரட்சைக்குள்ளார வந்திடுவான். நீங்க போங்க," என்று என்னை அனுப்பிவிட்டார் அவர்.

துப்பறியும் நாவலும் அருணாசலக் கவியின் புத்தகமும் இல்லாமல் நேற்றையப் பொழுதும் இன்றையப் பொழுதும் போய்விட்டன.

அசல் தஞ்சாவூர் ஜில்லாவில் இருக்கிற பிரமிப்பு இன்னும் என்னை விடவில்லை. பஸ்ஸில் வரும்போதே தெரிந்தது. பச்சைப் பசேலென்று

அலையோடும் வயல்கள், கண்ணுக்கெட்டியவரை பச்சை. போகிற வழியெல்லாம் தென்னைமரம், மாமரம். பச்சை கிடக்கட்டும். தண்ணீரைச் சொல்லுங்கள்! இப்படியா பார்த்த இடத்தில் எல்லாம் தண்ணீராக இருக்கும்? நிழல் என்று ஒரு பொருள் இவ்வளவு சிரமமில்லாமல் – இவ்வளவு மலிவாகக் கிடைக்கிறதா? அதைத்தான் சொல்லுகிறதா? ஊருக்குள் நுழையும்போதே லக்ஷ்மி வாசல் வாசலாக இறைந்து கிடந்தது. எண்ணிக்கொண்டே போனேன். நாலு வீட்டு வாசலில் நெல் உலர்த்தியிருந்தது. ஆறு வீட்டு வாசல்களில் தேங்காயை உடைத்து, பருப்பை நறுக்கிக் காணத்திற்கு உலர்த்தியிருந்தது. இரண்டு வாசலில், மஞ்சள் முட்டான் போட்டிருந்தார்கள். இன்னொரு வாசலில் தகதகவென்று ஏழெட்டு மூட்டை மஞ்சள் தங்கம்போல கனிந்துகொண்டிருந்தது.

இந்தச் செழுமையைப் பார்த்த பிரமிப்பு முதல் நாளே தீர்ந்துவிட்டது. தீரவில்லை. அமுங்கிவிட்டது. எதிர்வீட்டு மனிதரின் பேச்சு . . . அவர் பெயர் கோயிந்து மாமாவாம் – கோயிந்து மாமாவின் பேச்சு இந்தப் பிரமிப்பை எல்லாம் அமுக்கிவிட்டது.

“எல, என்ன ரொம்பத் துளுத்துப் போச்சு கட்டை?”

“எலெ, தனிக்களாசு, எங்கடால போயிருந்தே நேத்து? எங்கப்பன் போடுவான்னு நெனச்சியா? . . . ஏண்டால, எங்கடா போயிருந்தே? வாயைத் தொறக்கமாட்டியா? இப்ப எழுந்து வந்தேன்னா? . . .”

“நேத்து முழுக்க வவுத்து நோவுங்க. எங்கப்பனை வரச் சொல்லாம்னா, அவருக்குக் காய்ச்சல் ஒரேயடியா நடுக்கிட்டுதிங்க.”

‘எல . . . எலெ’ என்று மாமா எத்தனை ‘எலெ’தான் போடுவார்? ‘எலெ’ என்று அதட்டும்போது எனக்கு உள்ளுக்குள் உதறிற்று. எழுந்து வந்து கண் முகம் தெரியாமல் எதிராளியை அடித்துவிடப் போகிறாரே என்ற கவலை, ஒரு படபடப்பு என் மனதில் அடித்துக்கொண்டது. “எலெ, என்ன பேச்செல்லாம் மிதப்பாயிருக்காப்பிலேயிருக்கு? கழுதே . . . அப்புறம் தெரியுமா? ஐகோர்ட்டு வரையில் இழுத்துக்கிட்டுப் போனேனோ, அப்புறம் தலையிலெ துணியைப் போட்டுக்கிட்டு ஓடணும், தெரிஞ்சுதாடலெ? மரியாதியா சனிக்கிழமக்குள்ளாப் பணத்தை பைசா மாறாக் குடுத்து நோட்டைக் கிழிச்சு வாங்கிக்கிட்டுப் போயிடு, சனிக்கிழமை தாண்டிச்சோ, அப்பா அய்யான்னாலும் நடக்காது; உம்முனு சொல்லு; என்னடா, சும்மா நிக்கிறியே? இப்ப எழுந்து வந்தேனா? . . .” என்று சத்தம் போட்ட பிறகு, “சரிங்க!” என்று ஒப்புக்கொண்டு

போய்விடுவான் கடனாளி.

நேற்றுச் சாயங்காலம் நடந்ததை விடவா? மத்தியானம் மூன்று மணியிருக்கும். குருட்டு வெயில், தோலை உரிக்கிற வெயில் திண்ணையில் உட்கார்ந்திருந்தார் மாமா. மாமாதான் எப்போதும் உட்கார்ந்திருக்கிறாரே, திண்ணையில்! ஏழெட்டுப் பேர் கூட்டமாக வந்தார்கள். நடுவில் வலது கைக்கு ஒரு துணி, இடது கைக்கு ஒரு துணியாகப் போட்டு யாரோ ஆளை இழுத்து வந்தார்கள். பந்தலடியில் கொண்டுவந்து நிறுத்தினார்கள். பிள்ளையார் கோயில் வாழைக்கொல்லையில் முந்தாநாள் மூன்று வாழைத் தார்கள் காணாமற் போய்விட்டனவாம். குயவனார் வீட்டுக்குப் பின் இருந்தது கொல்லை. குயவனார் தங்கை மகன் கருப்பையன்மீது சந்தேகம். அந்தக் கருப்பையனைத்தான் கையில் துணியை முறுக்கி இழுத்து வந்தார்கள்.

"யார்றா பய . .? ஓகோ, கருப்பையா உடையார்வாளா! வாங்க வாங்க! எங்கே இப்படி, மந்திரி சிப்பாயெல்லாம் புடைசூழ வந்திருக்காப்பலிருக்கு . . . சீ! திருட்டுக் கழுதை, வாடா இப்படி. வாடான்னா . . . காலமெ கூப்பிட்டனுப்பிச்ச போது ரொம்ப 'ரப்'பா பதில் சொன்னியாமடா? இப்பப் பாத்தியா? ம் . . . இப்பவாவது சொல்லுவியாடா? வாழைத்தாரெல்லாம் எங்கே வித்தே?" என்று ஆரம்பித்தார் மாமா.

"எனக்கு ஒண்ணுமே தெரியாதுங்க . .!"

"ஒண்ணுமே தெரியாதா? பாவம், ஏண்டா, இந்த மகானைப் போய் இப்படி அழச்சுக்கிட்டு வந்திருக்கிங்களே? ஒண்ணுமே தெரியாதுங்கறாரே, பாவம்!– எல, இப்ப உண்மையைச் சொல்றியா? பந்தக்காலோடு சேத்துக் கட்டச் சொல்லட்டா?"

"எனக்கு சத்தியமா ஒண்ணும் தெரியாதுங்க! . . ."

"அது சரி, குத்தாலத்திலெ வித்தியா, ஆடுதுறையிலே வித்தியா?"

"மறுபடியும் அப்படியே சொல்றீங்களே? எனக்கு ஒண்ணுமே தெரியாதுங்க, சத்தியமாகச் சொல்றேன்."

"எலெ, என்ன சத்யமா சத்யமான்னு சொல்லிக்கிட்டேயிருக்கே? அப்படின்னா நானா புளுகன்? ஏண்டா, நான் சொல்றேன், நீ எடுத்திருக்கிறேன்னு! . . . சூடத்தை அணைக்கிறியே? நானா பொய் சொல்றேன்?" என்றார் மாமா. இந்த வாதத்திற்குப் பதில் சொல்ல முடியாமல் விழித்தான் கருப்பையன். அவன் சத்தியமாகச் சொன்னதே

குற்றம் என்கிறார் மாமா.

“என்னடா நிக்கிறியே, நானா புளுகன்? . . . நானாடா புளுகன்? . . . ஏய் சொல்லேண்டா, நானா புளுகன் . .?”

மாமாவின் குரல் ஏறிக்கொண்டே வந்தது. விழி உருண்டது. முகம் பளபளவென்றது. கோபத்தில் கோணிற்று.

“நானாடா புளுகன்? கருப்பையா உடையார்வாள், உங்களைத்தானே கேக்குறேன்? நானா புளுகன்? . . . தயவுசெய்து சொல்லணம்! . . .” அதற்குமேல் உயர இடமில்லை. மாமாவின் தொண்டை கம்மிற்று.

அவ்வளவுதான், கருப்பையன் முகமும் கோணிற்று. முகச் சதைகள் இழுத்துக்கொண்டன. விசும்பி விசும்பி அழ ஆரம்பித்துவிட்டான்.

“என்னடா அழுவுறியே. இப்பவாவது சொல்லப் போறியா . . . இல்லியா?”

சிறிது நேரம் மௌனம்.

“வெய்யுறது ரோசமாப் போயிடிச்சாக்கும்? மகாமானி இல்லெ. இப்பவாவது சொல்லப் போறியா இல்லியாடா? எலெ, இப்ப எழுந்து வந்தேனா, அப் . . . அப் . . . அப்ப் . . . படியே, முதுகு கிதுகு விரிஞ்சு போயிடும்; ஜாக்கிரதை. எங்கடா எலெ . . . வித்த தாரெல்லாம்?”

“குத்தாலத்திலேங்க! ஊ . . . க் . . . ஊ” என்று உண்மையைக் கக்கிவிட்டு அழ ஆரம்பித்தான் கருப்பையன்.

“வா இப்படி!”

“அடிக்காதீங்க, என்ன வேணும்னாலும் கொடுத்திடறேங்க.”

“இஞ்ச வாடாங்கறேன், ம் . . . வந்தெனோ . . .”

கருப்பையன் ஆளோடியில் ஏறி நின்றான்.

“எடுத்துக்க இதை.”

கருப்பையன் மூலையில் சாத்தியிருந்த தடியை எடுத்தான்.

“எடுத்துக்கிட்டியா, போட்டுக்க மண்டையிலே! போட்டுக்க, ஒண்ணு, ரண்டு, ஓங்கி . . . என்னடா தடவுறே? போட்டுக்க! நாலு, அஞ்சு, ஆறு,

ஏழு, எட்டு, ஒன்பது, பத்து . . . போதும், கணுக்கால் எலும்பிலே பத்துப் போட்டுக்க".

கருப்பையன் கணுக்கால் எலும்பிலும் பத்து போட்டுக்கொண்டான். அங்கேயே இருபத்தைந்து ரூபாய்க்கு நோட்டு எழுதிவாங்கி வாண்டையாரிடம் கொடுத்தார் கோயிந்து மாமா. திருட்டுப்போன வாழைத்தார் அவருடையது அல்ல, வாண்டையாருடையது. ஆக, இத்தனை நேரம் நடந்தது சும்மா பரோபகாரம், அவ்வளவுதான்!

முந்தாநாள் வந்ததிலிருந்து திருட்டுக்கேஸ் மூன்று ஆகிவிட்டது. கடனாளிகள் பத்துப் பன்னிரண்டு, ஆனால் மாமாவுக்குக் கடன் தரவேண்டியவர்கள் என்னமோ இரண்டு பேர்தான். மீதியெல்லாம் வாழைத்தார் வழக்குபோல, ஊருக்கு உபகாரம். எல்லாப் பஞ்சாயத்தும் இருந்த இடத்திலேயே நடந்துவிட்டது. அடிக்கவேண்டிய இடங்களில்கூட மாமா கையைத் தூக்கவில்லை. விசாரிக்கப்படுகிறவனே தானே அடித்துக் கொள்ள வேண்டியது.

இதற்காகச் சிலர் பிறந்திருக்கிறார்கள் என்றுதான் தோன்றுகிறது. இப்படி இருந்த இடத்திலிருந்தே, உட்கார்ந்த இடத்தைவிட்டு அசையாமலே கொடிகட்டி ஆள்கிறது என்றால் எல்லாருக்கும் நடக்கிற காரியமா? தாசில்தார் உத்தியோகம் அந்தக் காலத்தில் பெரிதாக இருந்திருக்கலாம். பல்லக்கும் கொம்பும் தாரையும், பறையும் சூழ அந்தக் காலத்துத் தாசில்தார்கள் வந்திருக்கலாம். ஆனால் இப்போது அஞ்சுமுக வாத்தியமாகிவிட்டது தாசில்தார் உத்தியோகம். யார் சொன்னதைக் கேட்கிறார்கள்? எல்லாவற்றிற்கும் நான் ஓட வேண்டியிருக்கிறது. கடைக்காரர்களா, மிராசுதார்களா, சங்கீத வித்வானா – யார் இப்போது தாசில்தாரைத் திரும்பிப் பார்க்கிறார்கள்? இப்படித் திரும்பினால் ஆபீசர், அப்படித் திரும்பினால் ஆபிசர்! – தாசில்தாராவது, தெருப் புழுதியாவது! . . . ஆபீஸ் பியூன்கூட வீட்டுக்கு வரமாட்டானாம். அதுபோகட்டும். தாசில்தார் கை நீட்டுகிறார் என்று வெறும் வாயை மெல்லுகிறார்களே . . .

கோயிந்து மாமாவுக்கு உட்கார்ந்த இடத்திலேயே எல்லாம் நடந்துவிடுகிறது. ஊரே நடுங்குகிறது. 'எழுந்து வந்தேனோ,' என்று ஓர் அதட்டல். அவ்வளவுதான், வழக்குத் தீர்ந்துவிடுகிறது.

மாமாவும் திண்ணையைவிட்டு அசைவதில்லை. நான் எழுந்து காப்பி சாப்பிட்டுவிட்டு வரும்போது திண்ணை காலியாயிருக்கும். நடையில் ஒரு தூக்கம் போட்டுவிட்டு வெளியே வரும்போது, மாமாவின் "எலே,

என்னாது?” என்ற குரல் கேட்கும். இருட்டுகிற வரையில் மாமா உட்கார்ந்திருப்பார். இரவு ஆற்றங்கரைக்குப் போய்விட்டுத் திரும்பும்போது, உள்ளே போயிருப்பார். முந்தாநாள் மாலையிலிருந்து பார்த்ததுதான். ஆனால் என்னமோ எனக்கு ஒரு மாசமாக இருந்து மாமாவைப் பார்த்துக்கொண்டிருக்கிறாற் போலிருக்கிறது. ‘எட்டுக்கண் விட்டெரிகிறது’ என்று சொல்வார்கள். ஆனால், உட்கார்ந்த இடத்திலேயே இப்படி ஊரையே உலுக்கி விடுகிறது, உலகத்தையே அளக்கிறது என்றால் ஏதோ பிறந்த வேளை – வேறு என்ன சொல்கிறது? இந்த ஜாதகம், அதிர்ஷ்டம் எல்லாவற்றிலும் நம்பிக்கைகூட ஏற்பட்டுவிடும் போலிருக்கிறது.

சாயங்காலந்தான் செந்திரு வந்தான். மூன்று நாள் பொழுது போனதைப்பற்றி ஆற்றங்கரையில் விவரமாகச் சொன்னேன்.

“ஏ, அப்பா, உட்கார்ந்த இடத்திலிருந்தே ஊரையே ஆட்டி வைக்கிறாரே மனுஷன்?” என்ற என் பிரமிப்பைக் கேட்டு, “அவர் பிறந்த வேளை!” என்று நான் நினைத்ததைத்தான் சொன்னான் அவனும்.

ஆற்றங்கரையிலிருந்து திரும்பி வந்து வீட்டுக்குள் நுழைந்த ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் வாசலைப்பார்க்கும் உள்ளிலிருந்து கூப்பிட்டான் செந்திரு, ரகசியமாகக் கூப்பிட்டான்.

அறை இருட்டாக இருந்தது. “விளக்கு இல்லையே?” என்றேன்.

“அதனால்தான் கூப்பிட்டேன். கோயிந்து மாமாவைப் பாரு,” என்ற எதிர்வீட்டுத் திண்ணையைக் காண்பித்தான். அவன் ரகசியமாகக் காதோடு காதாகப் பேசினதுதான் விசித்திரமாக இருந்தது.

“அதோ பார்! . . .”

பார்த்தேன். மாமாவை இரண்டு பேர் தூக்கிக்கொண்டு உள்ளே போனார்கள்.

“என்ன இது! ஒன்றும் புரியவில்லையே! ஏதாவது திடீர் என்று உடம்புக்கு வந்துவிட்டதா மாமாவுக்கு?”

“எழுந்து வந்தெனோ’ன்னு சத்தம் போட்டுகிட்டே இருக்காரே மாமா? இப்படித்தான் எழுந்திருக்க முடியும் அவராலெ!” என்றான் செந்திரு.

“என்னது? ஏன்? எதுக்கு?” என்று கேட்டேன்.

“மாமாவுக்கு பிறவியிலிருந்தே, இடுப்புக்குக் கீழே ஸ்வாதீனமில்லை. காலுக்கு வேலை கிடையாது. தூக்கிட்டுப் போனாத்தான் யாராவது. அதை, ஒருத்தரும் பார்க்கக் கூடாது, அவரு உள்ளே போறதையும் வரதையும்!” என்றான் செந்திரு.

ஆட்கள் மாமாவைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள். திண்ணை காலியாயிருந்தது.

ஆனால் . . . காலை ஆறு மணிக்கு, “எலெ, செவத்தியான்!” என்று மாமாவின் குரல் கணீரென்று கேட்டது.

ஆல் இந்தியா ரேடியோ

# அடுத்த . . .

வீட்டுக்குள் நுழையும்போது ஒரே பரபரப்பாக இருந்தது. அங்கும் இங்கும் ஓடுகிற பரபரப்பில்லை. ஏதோ பெரிய சம்பவம் நிகழ்வதற்காகக் காத்துக்கொண்டிருக்கிற பரபரப்பு. கோவிந்தராவின் ஆறாவது பெண் மாடிப்படியின் மேற்படியில் இடக்கால் வலக்காலையும் வலக்கால் இடக்காலையும் பார்க்க சூணா வயிற்றின் மேல் கவுன் பம்மி விழ, தேம்பிக்கொண்டிருந்தது. அம்மாவின் சுடுகிற பார்வையினாலேயே அடங்கி அடங்கிப் பொறுமை கற்றுக்கொண்டிருக்கிற அந்தக் குழந்தை அழுதே நான் கேட்டதில்லை.

"ஏம்மா கமலி! ஏன் அழறே?"

அவ்வளவுதான், "ஏ . . . க் . . . எவ் . . . அம்மா அம்மா" என்று உள்பக்கம் ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டுப் பெரிதாக அழக் கிளம்பிவிட்டாள்.

"ஏன்? அம்மா அடிச்சாளா? . . ."

சட்டென்று லோலக்கு ஆட, 'இல்லை' என்று தலையசைத்துக் கொண்டே தேம்பினாள் குழந்தை.

"அழாதேம்மா" என்று சொல்லிக்கொண்டே கௌரி வந்தாள் உள்ளே இருந்து. இடுப்பில் கோவிந்தராவின் ஏழாவது குழந்தை. என்னவோ அழிந்துபோன பூவன் சீப்பை எடுக்கற மாதிரி ஜாக்கிரதையாக அதைத் தூக்கிக் கொண்டிருந்தாள் கௌரி. கௌரியா? இதையா தூக்குகிறாள்? எதற்கு? வாசு என்கிற அந்தக் குழந்தை எட்டு மாதம்வரையில் கொழுகொழுவென்று மினுமினுவென்று க்ளாக்ஸோ பேபி மாதிரி இருந்ததாம். எட்டாவது மாதம் அம்மை குத்தினார்களாம். ஜுரம் வந்ததாம். உடம்பு இளைத்து கறுத்துக்கொண்டே வந்தது. அம்மை மருந்தின் வேகம் குழந்தையின் அழகையும் வலுவையும் தின்றுகொண்டே வந்தது. செய்யாத வைத்தியம் இல்லை. கழுத்திலும் கையிலும் முடிக்கயிறு வேறு, ஒன்றும் பயனில்லை. கடைசியில் காய்ந்து கருவாடாக வெள்ளை விழியும், எலும்பில் பிடிப்பு விட்டுப்போய்த் தளர்ந்து சுருங்கித் துவளும் தோலும், சாம்பல் பாய்ந்து முன்னே பிதுங்கியிருந்த கீழுதடுமே மிச்சம். குழந்தைக்கு அழகைக் கொடுக்கும் இடங்கள் தேய்ந்துவிட்டன.

முதுகிலிருந்தே துடை தொடங்கிவிட்டது. ஒவ்வொரு கணமும் சர்வேசுவரனின் துணையுடன் குழந்தை அம்மை மருந்தோடு எட்டு மாதமாகப் போராடிக்கொண்டிருக்கிறது. இந்தக் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொள்ளும் லாகவமும் கடமையும் உள்ளவள் கோவிந்தராவின் மனைவி ஒருத்திதான். கௌரியின் கையில் இதைப் பார்த்ததும் எனக்கு ஒன்றும் புரியவில்லை. தன்னைப் பற்றிய நம்பிக்கை எல்லாம் தீர்ந்துவிட்டதா கௌரிக்கு?

தூர இருந்துகொண்டேதான் அவள் வாசுவைக் கொஞ்சுகிற வழக்கம். தொட்டாலும் மரவட்டையைத் தொடுகிறது போல் விரல் நுனியாலேயே ஒரு தட்டு தட்டிவிட்டுக் கையை இழுத்துக்கொண்டுவிடுவாள். இப்போது அதை இடுப்பிலே மிகவும் சிரமத்துடன் தூக்கி வைத்துக்கொண்டு நிற்கிறாள். எதையும் காட்டிக்கொள்ளாமல் சமயத்துக்குக் கை கொடுக்கும் பெண்மைதான் என் கண்ணுக்குத் தெரிந்தது.

"ஏன் குழந்தை அழறா?"

"அவ அம்மாவுக்கு இடுப்பு வலி. கீழேயிருந்து கிருஷ்ணம்மாவைக் கூப்பிட்டேன். உள்ளே பக்கத்திலே உட்கார்ந்திருக்கா. சரஸ்வதியை ஓடிப்போய் அவ அப்பாவை அழைச்சிண்டு வரச் சொன்னேன். மாவும் கையுமாகச் சரியாக்கூட அலம்பாமல் ஓடிவந்தார். வந்து பார்த்துவிட்டு, ஆம்புலன்ஸுக்கு போன் பண்றேன்னு ஓடியிருக்கார்."

"ஊவ் . . . அம்மா . . . அம்மா . . ." என்று இடது பக்கத்துப் போர்ஷனிலிருந்து கூச்சல் கேட்டது.

"ரொம்பத் துடிக்கிறா, பாவம். எனக்கு என்ன செய்யறதுன்னு தெரியலை. கிருஷ்ணம்மாவைக் கூப்பிட்டேன். வெந்நீர் கிந்நீர் போட்டுண்டிருக்கா. ஏதோ மருந்துச் சரக்கு சொன்னா. எழுதிக் கொடுத்தேன். லக்ஷ்மிகிட்டே ஒரு ரூபா பணத்தைக் கொடுத்தனுப்பிச்சிருக்கேன். வாங்கிண்டு வர்ரேன்னு போயிருக்கு. கோபுவும் லில்லியும் பள்ளிக்கூடத்திலேருந்து வரலை. அதுக்குள்ளே இது 'விராச் விராச்'சுன்னு கத்த கிளம்பிட்டுது. நான் அடுப்பை மூட்டிண்டிருந்தேன். இது கத்தறதைப் பார்த்தா முழிரெண்டும் விண்டு வெளியிலே வந்துடும் போலிருந்தது. கத்தறதுக்கு இதுக்கு சீவன் ஏது? நீ குழந்தையை எடுத்து வச்சுக்கோ; நான் பார்த்துக்கறேன்னு சொன்னா கிருஷ்ணம்மா. இப்பத்தான் கொஞ்சம் ஒஞ்சிருக்கு."

என்னவோ புரிந்துக்கொண்டுவிட்டாற்போல மேலே நாலும், கீழே

நாலுமாக அரிசிப் பற்களைக் காண்பித்துச் சிரித்தது குழந்தை.

“சிரிக்கிறதைப் பாரு. கோட்டான்.”

“சரி, நீ ஜாக்கிரதையா வச்சுக்கோ. இது பெட்ரூம் க்ளாஸ் இல்லை. போனா வராது.”

“அது மாத்திரம் உடனே வந்துடறதா என்ன? நாலு நாளாச்சி. விடிவிளக்கு இல்லாம திண்டாடறேன். நீங்க இன்னிக்கும் மறந்து போச்சின்னு கையை விரிக்கப் போறேள்.”

“உனக்கென்ன விடிவிளக்கு? குழந்தையும் குஞ்சும் ராத்திரி முழிச்சிண்டு அலர்றாபோல்னா தவிக்கிறே?”

“குழந்தை குஞ்செல்லாம் உண்டானப்பறந்தான் விடிவிளக்கு ஏத்தணும் போலிருக்கு, ஐயோ . . . செத்தெ மெதுவாகப் பேசட்டுமே.”

கமலி இன்னும் விசும்பிக்கொண்டிருந்தது.

“அழாதேம்மா, அம்மாவுக்கு ஒண்ணுமில்லே. இன்னொரு பாப்பா வரப்போறது. உனக்கு விளையாட வாசு, வாசுவுக்கு விளையாட ஒரு பாப்பா வரப்போறது!”

குழந்தை ஆச்சரியத்துடன் ஒன்றும் புரியாமல் என்னையும் கௌரியையும் பார்த்துப் புன்முறுவல் செய்தாள்.

“பொய்” என்று சிரித்துக்கொண்டே கட்டை விரலை வாயில் வைத்துக்கொண்டாள். விசுக்கென்று ஒருமுறை விசும்பிவிட்டு அதையே கடைசி விக்கலாக நிறுத்திக்கொள்ள முயன்றுகொண்டிருந்தாள்.

“ஆம்புலன்ஸுக்கு எங்கே போய்ப் போன் பண்ணப் போறார் கோவிந்தராவ்!”

“தபாலாபீஸ் கிட்டவே இருக்காமே ஒரு பொது டெலிபோன்? இல்லாட்டா அவா ஹோட்டல்லேயே இருக்காம். பண்ணிவிட்டு வந்துடறேன்னு ஓடியிருக்கார்.”

“ஊவ் . . . அம்மா . . . அப்பா . . .”

உள்ளேயிருந்து வந்த புலம்பல் என் வயிற்றைக் கலக்கிற்று. காதை விரலால், பொத்திக்கொள்ளத்தான் சட்டென்று தோன்றிற்று.

“லக்ஷ்மி வந்துவிட்டாளா?” என்று கிருஷ்ணம்மா வெளியே எட்டிப்

பார்த்தாள்.

"இன்னும் வரலையே!"

"சரி, வரட்டும்" என்று மீண்டும் உள்ளே போய்விட்டாள் கிருஷ்ணம்மா.

இந்த லக்ஷ்மி, ஸரஸ்வதி, கோபு, லில்லி, கமலி, வாசு எல்லாம் கோவிந்தராவின் குழந்தைகள்தாம். லக்ஷ்மிக்கு முன்னால் பிறந்த தலைச்சன், பிறந்த பத்து நாட்களுக்குள்ளேயே போய்விட்டதாம். கமலிக்குப் பிறகு பிறந்த ஒரு பெண் குழந்தை வைசூரி போட்டு மறைந்துவிட்டதாம். அது போனது இரண்டு வயசில். முனிசிப்பாலிட்டிக்காரர்கள் வந்து 'ஏன் இத்தனை நாள் அம்மை குத்தாமல் இருந்தீர்கள்?' என்று ரகளை பண்ணிவிட்டுப் போனார்கள். கோவிந்தராவ் பயந்துபோய் அடுத்தது பிறந்த எட்டு மாதத்தில் அம்மை குத்திக்கொண்டு வந்துவிட்டார். அதைத்தான் அம்மை இப்படி உயிரோடு பிராண்டித் தின்றுக்கொண்டிருக்கிறது.

"அம்மா . . . ஊவ் . . . அப்பா . . ."

இருதயத்தின் தசைகளைச் சுருக்கென்று குத்திற்று புலம்பல்.

"என்ன சார்?"

திரும்பிப் பார்த்தேன், கோவிந்தராவ், தலையை வாருகிற வழக்கமில்லை அவருக்கு, பேயறைந்தாற்போல் நின்றார். சோடா பாட்டில் மூக்குக் கண்ணாடிக்குள் விழிகள் சிறுத்து என்னையே உணர்ச்சியில்லாமல் பார்த்துக்கொண்டு நிலைத்து நின்றன. கீழே நாலு முழத்தில் ஒரு சிவராயர் கலர்போட்ட அழுக்கு வேஷ்டி. கோடிக்கணக்கில் இட்டிலிகளுக்கும் தோசைகளுக்கும் சட்னிகளுக்கும் அரைத்துக் கொடுத்த உடம்பு. கண்டு கண்டாக புஜத்தில் முண்டா ஏறியிருந்தது. முரட்டு பலமே திரண்டு, உழைப்பின் உருவாக நின்றார் மனிதர்.

"இந்தாங்கோ மாமி" என்று லக்ஷ்மி ஓடி வந்து இரண்டு மூன்று பொட்டணங்களை நீட்டினாள்; மருந்துச் சரக்குகள்.

"ஏனம்மா?"

"மருந்து."

"மருந்தா? மருந்து என்னாத்துக்கு? நான்தான் போன் பண்ணிப்பிட்டேனே. ஆம்புலேடம் வந்திட்டிருக்கே."

"எங்கே வந்திட்டிருக்கு?"

"போன் பண்ணினேன். ஹல்லோன்னு கேட்டாங்க. இந்த மாதிரி பிரசவக் கேஸு, உடனே ஜல்தியாகப் புறப்பட்டு வாங்கோன்னு சொல்லினேன். எங்கேன்னு அட்ரஸ் கேட்டாங்க. சொன்னேன். இதோ புறப்பட்டுட்டோம். தயாரா இருன்னு சொன்னாங்க. தயாரா இருக்க வேண்டாங்களா? அதுக்குள்ளியும் உங்க சம்சாரம் பயந்து போயிட்டாங்கோ பாவம். கிருஷ்ணம்மாவும் ரொம்பவும் சிரமப்படறாங்கோ. இதோ ஆம்புலேடம் வரப்போவுது."

கோவிந்தராவுக்கு நீள மீசை, அதை ஊசியாக முறுக்கி வேறு விட்டுக்கொண்டிருப்பார். அந்த மீசைக்குக் கீழ் ஒரு சிறு புன்னகை தவழ்ந்தது. மாடிக் கட்டையைப் பிடித்துக்கொண்டு நாலு பக்கமும் பார்த்தார். அவருக்கு ஒன்றும் கவலையில்லை இனிமேல் – 'ஆம்புலேட'த்திற்குச் சொல்லியாகிவிட்டது. 'ஆம்புலேடம்' வந்து வீட்டு வாசலில் நின்று தன் சம்சாரத்தை ராஜோபசாரமாக அழைத்துப் போய் வைத்தியம் செய்யப் போகிறது. அந்தப் பெருமை அந்த உரம் பாய்ந்த மார்புக்குள் நிறைந்து இடமில்லாமல் உதட்டில் புன்சிரிப்பாக வழிந்தது.

"அம்மா . . . ஹாவ்."

"எப்ப ஐயா வரப் போறது ஆம்புலன்ஸு? வேறு யாராவது வைத்தியரைப் போய் அழைச்சிண்டு வரட்டுமா?"

"வாண்டாம் ஸார், இதோ வந்திட்டே இருக்கு. என்னாத்துக்கு டாக்டர்?"

டாக்டர் யாராவது வந்தாலும் கோவிந்தராவ் உள்ளேகூட விடமாட்டார் போலிருந்தது!

கோபுவும் லில்லியும் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிவிட்டார்கள்.

லில்லி நல்ல வாயில்சட்டை போட்டுக்கொண்டிருந்தாள், கீழே ஒரு நைலான் பாவாடை. கோபுகூடப் பளீர் என்று ஒரு முழ நிஜார் போட்டுக்கொண்டிருந்தான்.

"அப்பா?"

"ங்."

"என்னப்பா?"

"அம்மாவுக்கு உடம்பு சரியாயில்லை. சத்தம் போடப்படாது."

"அம்மாவுக்கா? என்ன உடம்பு?"

"உனக்கு ஒரு பாப்பா புதுசா விளையாட வரப்போறது" என்று கௌரி சொன்னாள். கோபுவுக்குச் சந்தோஷமுமில்லை, கவலையுமில்லை. 'இப்படி நாலு பாப்பாக்களைப் பார்த்தாகிவிட்டது; இது இன்னொன்று; அவ்வளவுதானே?' என்றுதான் நினைத்தான் போலிருக்கிறது.

"ஊவ் . . . அம்மா . . ."

உள்ளே ஓடிப்போய்ப் பார்த்துவிட்டு வந்தான். லில்லி முன்னாலயே ஓடிவிட்டாள். வெளியே வந்த கோபுவின் முகம் இருண்டுவிட்டது.

"பசிக்கிறது" என்று சொல்லிக்கொண்டே வருகிற குழந்தைகளுக்கு அந்த ஞாபகமே இல்லை இப்போது.

"அம்மா அழறா" என்று ஆரம்பித்த கோபு மேலே பேச முடியாமல் திணறினான். கண்ணில் நீர் ததும்பியது.

"ஒண்ணும் இல்லேடா கண்ணு . . . அழாதே" என்று தைரியம் சொன்னாள் கௌரி.

"என்னாத்துக்கு அழரே? என்ன இப்ப ஆயிட்டுது" என்று என்னைப் பார்த்து, "இவன் கொஞ்சம் பயந்த சுபாவம். லில்லின்னா பேசாம இருந்திடுவா" என்று விழித்தார் கோவிந்தராவ்.

கோவிந்தராவின் ஒன்றரைக் கண்ணையும், சோடா பாட்டில் மூக்குக் கண்ணாடியையும் வெறித்துப் பார்க்கிறதையும் பார்த்துக் கொண்டிருப்பது எனக்கு வழக்கமான பொழுது போக்கு. அப்பாவியான ஒரு தோற்றம். இவ்வளவு குழந்தைகளுக்கு எப்படித் தகப்பனானார் என்று ஆச்சர்யம் எனக்கு ஏற்படுவதுண்டு. இவ்வளவு பெரிய குடும்பத்தைச் சிருஷ்டித்ததில் அவர் பெருமைப் படுகிறாரா? அலுத்துக்கொள்கிறாரா? அந்தக் கண்ணிலிருந்து ஒன்றும் கண்டுபிடிக்க முடிவதில்லை. கலியாணச் செய்தி, இடி விழுந்த செய்தி, இப்போது அவர் சம்சாரம் பாடாகப் படுகிற செய்தி, எல்லாவற்றிற்கும் அந்த வெறித்த பார்வைதான். குழந்தைகள் மூலைக்கு மூலை அலறும் போது, 'டேய், கத்தக்கூடாது' என்று 'ஸ்மால் காஸ் கோர்ட் டபேதார் மாதிரி' ஓர் அதட்டல். அந்த அதட்டலுக்கு விளைவு உண்டா என்று அவர் கவனிப்பதில்லை. அதட்டுவது கடமை; அவ்வளவுதான். பயனில்லையென்றால் இன்னோர் அதட்டல். அதிலும் நிற்காது போனால் வெளியே மொட்டைமாடிக்கு வந்து கட்டைச் சுவரில் கைவைத்து நாலு பக்கமும் பார்த்துக்கொண்டு, கபாலி கோபுரம்,

தென்னமரங்கள், இப்படி ஆகாசத்திலேயே நோட்டம் விட்டுக்கொண்டிருப்பார். அது வேணும் இது வேணும் என்று குழந்தைகள் பிடுங்கினால், “இதோ, சாயங்காலம்” என்று அடக்கிவிடுவார். ஹோட்டலிலிருந்து ராத்திரி வரும்போது அவர் கையிலிருக்கும் பொட்டணங்களை விழுந்து பிடுங்கும் குழந்தைகள். சைக்கிள், பொம்மை ஊதல், பந்துகளுக்குக் கத்தின கத்தல்களையெல்லாம் மறந்து போய், ‘காராசேவு’வைக் கொறிக்க ஆரம்பித்துவிடும் எல்லாம்.

மனிதனுக்கு நாற்பது ரூபாய் சம்பளம், சாப்பாடு போட்டு.ஞாயிற்றுக்கிழமைதான் வீட்டில் சாப்பாடுகிற நாள். குழந்தைகளுக்குத் துணி மணிகளுக்குக் குறைச்சலில்லை, ஒவ்வொன்றுக்கும் ஒரு வர்ணமும் தினுசுகளாக வாங்கிக் கொடுத்துவிடுதல் எனக்குத்தான் அதிகமாகப் படுகிறதோ! என்னவோ!

ஞாயிற்றுக்கிழமையன்று, எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டுக் காதிலும் கழுத்துப்பட்டையிலும் எண்ணெய் வழிய மீசையை முறுக்கி விட்டுக்கொண்டு, சோடா பாட்டில் கண்ணாடிக்குள் ஒன்றரைக்கண் விழிக்க, சீரக ரசத்தைச் சாப்பிட்டுவிட்டு ஏப்பம் விட்டுக்கொண்டே, “என்ன ஸார் சாப்பிட்டாச்சா?” என்று என்னைக் குசலப் பிரச்னம் செய்ய வருவார். கூட லில்லி, கமலி, லக்ஷ்மி, கோபு நாலு குழந்தைகளும் வரும். உட்கார்ந்து மங்களூர் போண்டா செய்கிற விதம், ஹோட்டல் தொழிலாளர் சங்கத்தின் கடைசிச் செய்திகள், அவர் முதலாளி ராஜப்பிரமுகருக்குத் தாமே நேரே கொண்டு கொடுத்த மைசூர்ப் பாகு எல்லாச் செய்திகளையும் சொல்லுவார். குழந்தைகள் கேட்டுக்கொண்டே இருக்கும். குழந்தைகளையும் அவர் வேஷ்டியிலிருந்து கமழும் ஹோட்டல் வாசனையையும் (கடலைமாவு வாசனையோ என்னவோ) பார்க்கும்போது ஜனத்தொகை நிபுணர்கள் எல்லாரும் என் கண்முன் நடமாடத் தொடங்குவார்கள். ஜனங்கள், நாலு, எட்டு, பதினாறு என்று பெருகினால், உணவுப் பொருள் நாலு, ஆறு, எட்டு என்றுதான் பெருகுமாம். சரியாகக்கூட ஞாபகம் இல்லை. ஆனால் ஆபத்து பெரிதாகத்தான் தோன்றுகிறது. தமக்கு இவ்வளவு குழந்தைகள் அவசியமா இல்லையா என்று எப்போதாவது கோவிந்தராவ் நினைத்ததுண்டா? நாற்பது ரூபாய் சம்பளம் நிச்சயமாகப் போதாது என்று அவர் ஏன் நினைக்கவில்லை?

“இந்த வாசுவோட நின்னுப்போயிடுத்துன்னு நெனச்சேன். பகவான் இன்னும் சோதிக்கிறார், மாமி” என்று ஒரு வாரம் முன்னால் உடம்பு ‘தள்ளாத’ நிலையில் கோவிந்தராவின் மனைவி சொன்னாளாம்.

“இந்த மாதிரி ஒரே ரூமில் குடித்தனம் பண்றவாளையும் நாற்பது சம்பளம் வாங்கறவாளையும் சோதிக்காவிட்டால் பகவான் என்று சொல்ல முடியுமா அவரை?” என்று கௌரி பதில் சொன்னாளாம். பன்னிரண்டு வருஷமாக விடிவிளக்கு வைத்துவைத்துக் காத்துக்கொண்டிருக்கிற தன்னையுந்தான் பகவான் சோதிக்கிறார் என்று கோபம் போலிருக்கிறது அவளுக்கு.

“அம்மா . . . ஆவ் . . . அம்மா”

புலம்பல் அழுகையாக மாறிவிட்டது.

“என்ன ஐயா கோவிந்தராவ்?” என்றேன்.

எனக்கு உடம்பு, தோல் எல்லாம் அந்தக் கூச்சலைக் கேட்டு குன்றிச் சிலுசிலுத்தது. கோவிந்தராவ் என்னைப் பார்த்து விழித்தார். வாயைத் திறக்கவில்லை.

“கௌரீ, நான் போய் டாக்டரை அழைச்சுண்டு வந்துடறேனே.”

“கொஞ்சம் பார்க்கலாமோன்னு பார்த்தேன்.”

“பார்க்கவாவது? ரொம்பக் கஷ்டப்படறாளே.”

“சரி, எந்த டாக்டரை அழைச்சிண்டு வறேள்?”

“யாராவது கிட்ட இருக்கிறவர்கள்.”

அவளும் தீர்மானமாகப் பதில் சொல்லவில்லை. செலவைக் கோவிந்தராவ் ஒப்புக்கொள்ள முடியுமா என்று யோசனை செய்கிறாளோ என்னவோ; தயங்கினாள்.

“கௌரீ! கௌரீ!” உள்ளே இருந்து கிருஷ்ணம்மாள் கூப்பிட்டாள்.

“ஏன் மாமி?” என்று ஓடினாள் இவள்.

சற்று அழுகை, முனகலாகக் குறைந்து தேய்ந்தது.

வாசு விராச் விராச்சென்று கத்திக்கொண்டிருந்தது. கீழே படுக்க விட்டுவிட்டாள் போலிருக்கிறது.

இரண்டு நிமிஷம் கழித்து, “வாசுவுக்கு தம்பி பிறந்திருக்கான்” என்று சொல்லிக்கொண்டே வந்தாள் கௌரி. சேருகிற இடத்தில் தான் பணம் சேரும் என்கிற ஏழையின் ஏக்கம் அந்த வறட்டுச் சந்தோஷத்தில் லேசாக

ஒலித்தது.

கோவிந்தராவ், "நல்ல வேளை?" என்றார் என்னைப் பார்த்து. என்ன அர்த்தம் என்றுதான் புரியவில்லை.

வாசலில் 'ஆம்புலன்ஸ்' கார் வந்து நின்றது. மாடி ஏறி இரண்டு ஆட்கள் வந்தார்கள்.

"இங்கேதானே பிரசவக் கேஸ்?"

"ஆமாம், ஆனா . . . பிரசவம் ஆகிவிட்டது."

"உங்களுக்கு ரொம்ப சிரமம்" என்றேன்.

"ஆகிவிட்டதா?"

"ஆமாம்."

"ஆனாலும் பரவாயில்லை. ஏழெட்டு நாள் ஆஸ்பத்திரியில் வந்து இருக்கட்டுமே."

"வாண்டாம் ஸார்" என்றார் என்னைப் பார்த்து கோவிந்தராவ்.

"வாண்டாம்கிறாரே."

"அவங்க வீட்டுப் பொம்பளைதானா?"

"ஆமாம்."

"அப்புறம் உங்கள் இஷ்டம்."

"சரி ஆகிவிட்டது. இனிமேல் தூக்கிக் கீக்கிக் கார்லே ஏறிப் போறதுன்னா சிரமம். இங்கேயே டாக்டரைக் கூப்பிட்டுப் பார்த்துடறோம்" என்றேன்.

"காரில் ஏர்றதோ, போகிறதோ சிரமம் இல்லை. நாங்க அலுங்காம, பத்திரமா செஞ்சிடுவோம். எங்களைப்பத்தி ஒண்ணுமில்லே. உங்க இஷ்டந்தான் இப்ப."

"என்ன கோவிந்தராவ்?"

"பரவாயில்லை, இங்கேயே இருக்கட்டும். நானும் குழந்தைகளை விட்டுவிட்டுச் சும்மா அலையணும். அதுதான் ஆயிப்போச்சே."

"சரி."

“ரொம்ப தாங்ஸ். நீங்க ரொம்ப நல்ல மனசோட வந்தேள்.”

“ஓ நோ நோ . . . எங்க கடமை . . . அப்ப நாங்க வரலாம்ங்களா?”

“ஒண்ணும் நெனச்சுக்கக் கூடாது” என்றார் கோவிந்தராவ்.

“அதெல்லாம் ஒன்றும் இல்லை.”

மாடிப்படி இறங்கி வாசல் வரையில் வந்து அவர்களை வழியனுப்பப் போனோம்.

கார் போயிற்று. “இந்தத் தடவை ரொம்ப லேட்டாப் போயிடுச்சு. இனிமே, அடுத்த பிரசவத்துக்கு இரண்டு நாள் முன்னாடியே ஆம்புலேடத்துக்குச் சொல்லி வச்சிப்பிடனும்” என்றார் கோவிந்தராவ். “இல்லீங்களா. ஸார்!” என்று என்னைப் பார்த்தார்.

“ஆமாம்” என்றேன்.

கலைமகள், பிப்ரவரி 1955

# அர்த்தம்

“இன்ஸ்பெக்டர் சார் பெரிசா யோசனை பண்றாப் போலிருக்கே.”

“யாரு? கிட்டனா! வாடாப்பா, யோசனைதான்.”

“அப்படி என்ன யோசனையோ?”

“இந்த ஜன்மாவுக்கு அர்த்தம் என்னன்னுதான்.”

“என்னது! என்னது! ஜன்மாவுக்கு அர்த்தமென்னன்னா! ஏது! ஏது!” என்று கெக்கெக்கெக்கே சிரிக்க ஆரம்பித்து விட்டான் கிட்டன். கிட்டன் சிரிக்க ஹாஸ்யம் தான் தேவை என்பதில்லை.

“என்னதைக் கண்டு இப்படி இடிஇடின்னு சிரிக்கிறே?”

“நானே உசிரு வச்சிண்டிருக்கறதுக்கு அர்த்தமென்னன்னு யோசிக்கக்காணும். உங்களுக்கு என்னன்னேன்!”

அவன் குரலில் ஏக்கமோ வருத்தமோ ஒன்றும் இல்லை. ‘கல்லாங் காய்ப்பட்டு’ப் போய்விட்டது அவனுக்கு. இருபது வருஷங்களுக்கு முன் அவனுக்குக் கல்யாணம் நடந்தது. பெண்டாட்டி வந்து எண்ணி நாற்பத்தைந்து நாள் இருந்தாள். அப்புறம் என்ன குறையைக் கண்டாளோ அவனிடம். பிறந்த வீட்டுக்குப் போனவள் திரும்பி வரவேயில்லை. அந்தத் தேதியிலிருந்து தானே சமையல், தானே வீடு பெருக்குவது! அந்தச் சாப்பாட்டைச் சாப்பிட்டு அவனுடைய தம்பியும் ஆளாகி உத்தியோகத்திற்குப் போய்விட்டான்.

“அப்படி என்ன மாமா கவலை வந்துடுத்து உங்களுக்கு? ரிடயராயாச்சு, மாமி சக்சக்குன்னு நாக்கு சப்புக்கொட்டிக்கனும், அப்படி ஒட்டிக்க ஒட்டிக்க சமைத்துப் போடறா, உங்களுக்கு என்ன கவலை?”

“சாப்பிட்டப்பறம்?”

“தூங்கறது!”

“தூக்கம் வரலை. ரிடயராகி நாலு மாசம் பென்ஷனுக்காகச் சர்க்காரோடு மல்லுக்கு நின்னாச்சு. இப்ப அதுவும் ஒரு வகையா முடிஞ்சு, திட்டமா வரவாயிடுத்து, இப்ப வேலையே இல்லெ, படிக்கவோ மனசு செல்லலெ.

புஸ்தகத்திலே தெரிஞ்சுக்கும்படியா ஒண்ணும் இருக்கிறதாகத் தெரியலே எனக்கு. என்ன செய்ய? யாரோடாவது பேசலாம்னா ஊரிலே இருக்கிற இருபது வீட்டிலே பன்னிரண்டு பாழ்மனை. சொச்சம் எட்டிலே, நான் ஒண்ணு, நீ ஒண்ணு, குருக்கள் ஒண்ணு, கர்ணம் ஒண்ணு. நாலே ஆண் பிள்ளை. நீ சமைக்கப் போயிட்டா, ஏதோ அன்னதானத்துக்குச் சமைக்கறாப்பலே இருக்கு. நீ அடுப்பங்கரையை விட்டு வந்தாத்தானே!"

"கண் தெரியலே, என்ன பண்றது மாமா?"

"அதான் அதான், ஏதோ காரணம். குருக்களோட பேசுவோம்னா, அவனுக்கு அஞ்சு ஊர்லெ பூஜை. அஞ்சு புள்ளையார், அஞ்சு சிவன்கள் இத்தனைக்கும் அவன் மணியடிச்சு விளக்குப்போட்டு, நைவேத்தியம் உபசாரம் எல்லாம் பண்ணி, ஆறு தாண்டி வரணும். கர்ணம் கதவைச் சாத்தித் தாப்பாள் போட்டுண்டு, தலையை இழைய வாரி முடிச்சுப்போட்டு, ஊஞ்சல்லே தெக்கும் வடக்குமா ஆடறான், ஆடறான் அப்படி ஆடறான். என்னதான் இருக்கோ அந்த ஊஞ்சல்லே. மீதியெல்லாம், சீப்ரியம்மாள், வேதாம்பாள், பாகீரதி அம்மாள், காவேரி அம்மாள், ராதுப்பாட்டி, சுப்பம்மாள் — "

"வெங்கட்டா என்கிற வெங்கட லக்ஷ்மி, கிருஷ்ணையர் என்கிற கிருஷ்ணம்மாள்" என்று முடித்து கிட்டன் சிரித்தான். இந்த இருவரும் சேலை கட்டிய ஆண்கள் என்று அவன் கருத்து. பெயர் வைத்ததும் அவன்தான்.

"இவா சமயலைப் பார்ப்பாளா? வீட்டு வேலையைக் கவனிப்பாளா? என்னோட பேசுவாளா? இப்படி பேசறதுக்குக்கூட ஆள் இல்லாமத் தவிக்கிறபோது உயிர் வாழறதின் அர்த்தமென்ன என்று யோசிக்கத்தானே வேண்டியிருக்கு. நல்ல வேளையா நீ வந்தே. சாப்பிட்டுட்டியா?"

"இன்னும் இல்லை, இப்பத் தான் ரஸத்தை இறக்கி அடுப்பைத் தணிச்சேன். குளிக்கணும்."

"நாசமாகப் போச்சு போ. மணி ஒன்றாகப் போறதே."

"நாசமாகப் போச்சுன்னு சொல்லாதீமையா, இன்ஸ்பெக்டர். விருத்தியாறதுன்னு சொல்லும்" என்று குரல் கேட்டது.

தபால்கார தாத்தாச்சாரி.

"என்னய்யா, யாருக்கு லெட்டர்!"

“எல்லாம் நம்ம கிட்டனுக்குத்தான். ஏய் கிட்டா, உன் தம்பிக்கு கலியாணமாம்டா” என்றார் தாத்தாச்சாரி. தனக்கு மிஞ்சித்தானே தான தர்மம். தாத்தாச்சாரி எந்த கடுதாசியையும் வாசிக்காமல் விலாசதாரிடம் கொடுக்கமாட்டார்.

“கலியாணமா?” . . . என்று ஒன்றும் புரியாமல் கிட்டன் அதை வாங்கிக்கொண்டான். வல்லம் ஸ்படிக மூக்குக் கண்ணாடியோடு கடிதத்தை ஒட்டிவைத்து வாசித்தான்.

“பயலுக்கு நல்ல அதிர்ஷ்டம் மாமா!”

“மாமனார் இல்லையாம், பெண்ணுக்கு அண்ணாதான் இருக்கிறானாம். முந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறானாம்.”

“பொண்ணு எப்படியிருக்காம்?”

“அதெல்லாம் நன்னாத்தான் இருக்கணும். இல்லாட்டா இவன் சம்மதிப்பானா? . . . ஏன் மாமா, இவனை விட அழகாக இருக்க மாட்டாளா யாரும்?” என்று தாத்தாச்சாரியையும் என்னையும் ஒரு புன்சிரிப்புடன் பார்த்தான், கிட்டன்.

“ஏண்டா, உன் தம்பிக்கு என்ன? ரட்டை மண்டை. பளிங்கு மூக்குக் கண்ணாடி. கொஞ்சம் குட்டை. வேற என்னடா குறை அவனுக்கு?” என்றார் தாத்தாச்சாரி.

“விகாரமாயிருக்கிறவாதாண்டா பேரும் புகழுமாயிருப்பா. பிறத்தியாருடைய அனுதாபம் எப்படியோ அவாளுக்குக் கிடைச்சுப்பிடும். அதுமேலே காலைவச்சு சடசடன்னு ஏறிப்பிடலாம்” என்று ஒரு இரவல் கருத்தை அனுபவம் மாதிரி சொன்னேன் நான்.

“திருச்சிராப்பள்ளிவரை நான் கலியாணத்திற்கு வரமுடியாது. இப்பவே ஏதாவது கொடுத்துவிடு. சந்தோஷ சமாசாரம் கொண்டு வந்ததுக்கு. எனக்கு இன்னும் ரண்டு ஊர் போகணும்” என்றார் தாத்தாச்சாரி.

“வாழைக்காப் பொடிபண்ணி ரசம் வச்சிருக்கேன். வேணும்னா வந்து சாப்பிடும்.”

“போடா போ” என்று கிளம்பிவிட்டார் தாத்தாச்சாரி.

வெயில் வாழ்க்கையை இன்னும் அர்த்தமில்லாமல் செய்து கொண்டிருந்தது.

“இந்தப் பய அதிர்ஷ்டக்காரன் மாமா. அப்பா அம்மா இல்லாம நான் சமைச்சுப் போட்டதையே சாப்பிட்டு, ஏழாவதிலேயே கோட்டடிச்சிப்பிட்டு, சிவன் கோயில்லெ விளக்கு அணைச்சிண்டிருந்தவனுக்கு இருநூறு ரூபாய் சம்பளம். நல்ல இடத்திலே கலியாணம் – அதிர்ஷ்டமில்லையா?”

“எல்லாம் நீதானே காரணம்!”

கிட்டனுக்குப் பூரிப்புத்தான். யுத்த காலத்தில் ஹைதராபாத்தில் ஒரு பெரிய அதிகாரியிடம் சமையல்காரனாகச் சிறிது காலம் இருந்தான் கிட்டன். தரையில் கிடந்தவன் பாயில் விழித்துக்கொண்ட யுத்த காலம். கைகால் பழுதில்லாமலிருந்தாலே நல்ல வாழ்வு கிடைத்த யுத்தகாலம். சமையல்காரனுக்கு இல்லாத சலுகையா? ஊர் சிவன் கோயிலில் விளக்கணைத்துக் கொண்டிருந்த தம்பியை நூறுரூபாய் சம்பளத்தில் ‘இழுத்து’விட்டான் கிட்டன். இந்த ஒரு வகையிலாவது கிட்டன் வாழ்க்கைக்கு அர்த்தம் நிச்சயம் உண்டு என்றுதான் எனக்குப் பட்டது.

“நீ விளக்கேத்தி வைக்காட்டா, கோயில்லே விளக்கு அணைச்சிண்டு தானேடா இருக்கணும் அவன்!”

“ஏத்திவச்சாப் போதுமா? நின்று எரியணுமே . . . இங்கே என்னமோ என் மாதிரி மசமசன்னு இருந்தானேன்னு பார்த்தேன். அங்கெல்லாம் நல்ல பேராம். ஆபீசரெல்லாம் ரொம்ப இவன்மேலே உசிராம். வேலையிலேயும் யோக்யன், கெட்டிக்காரன்னு பேரு. மீன் தண்ணியிலே விட்டாதானே நீஞ்சும் மாமா? என்ன நான் சொல்றது?”

“வாஸ்தவம்தான்?”

மீனைத் தண்ணீரில்விட்ட பெருமை பளிங்குக் கண்ணாடி வழியாக அவன் கண்ணில் பொலிந்தது.

“எனக்கு ஒரு யோசனை தோன்றது மாமா”

“என்ன?”

“திருச்சினாப்பள்ளியிலே கலியாணம் ஆனவுடனேயே, இங்கு அழச்சிண்டுவந்து பெண்ணை அழைச்சு கிருகப்பிரவேசம் பண்ணி விடணும்.”

“பெரியப் ப்ளானாப் போடறியே. மனித சகாயம் வேண்டாமா?”

“எனக்கு என்ன மனித சகாயத்துக்குக் குறைச்சல்? நீங்க ஒண்ணு

போராதா? உங்காத்து மாமியைச் சேர்த்து மூணு சுமங்கலிகள் இருக்கா ஊர்லே. போரும் மாமா, எல்லாம் ஜமாச்சுப்பிடலாம்.”

“யோசிச்சுக்கோ.”

“அப்புறம் யோசனை என்ன? தவிரவும் எங்க வீட்டிலெ மோளச் சத்தம் கேட்டு இருபது வருஷம் ஆச்சு.”

“பெண் வீட்டுக்காரன் வசதியாயிருக்கிறவன் மாதிரி இருக்கே. அவனைக் கூப்பிட்டு உபசாரம் பண்ணி சமாளிக்கணுமே நீ.”

“தெரிஞ்சுதானே பொண்ணைக் கொடுக்கிறான். அதுவும் பொண்ணை அழைக்கிறதுதானே; ஊருக்கு ஒரு வேளைச் சாப்பாடு. முண்டி முண்டி வந்தா, முப்பது பேருக்கு மேலேயா சாப்பிடப்போறா! வர ஆம்பிள்ளை நாலு பேர் இருந்தாலும் எல்லாமா பத்து ஆண்பிள்ளை, பொம்மனாட்டிகள் பத்து. மேளக்காரன் நாலு, ஆள்காரன், பத்துபசை தேக்கிறவரண்டு – முப்பதே தேறலையே.”

“சரிடா செஞ்சிப்பிடு.”

“இப்ப லெட்டர் எழுதிடட்டுமா?”

“ம்.”

தபால் ஆபீஸ் உள்ள ஊர் ஒரு மைல். அதற்குப் போவதற்கு முன்னாலேயே ஊர் முழுவதும் கலியாணச் செய்தியைச் சொல்லிவிட்டுத் தான் போனான் கிட்டன்.

கிட்டனுக்கு ஒரு தம்பி இருக்கிறான். எனக்கு ஒன்றும் கிடையாது, நானும் மனைவியும்தான்; ஒருவருக்கொருவர் பார்த்துப் பேசிக்கொண்டு முப்பத்தாறு வருஷம் தள்ளியாய்விட்டது. அலுப்புச் சலிப்பு எல்லாம் கடந்த ‘கல்லாங்காய்ப்பு’ எனக்கும் இந்த விஷயத்தில் வந்துவிட்டது. ஏதாவது அர்த்தமுள்ள காரியம் இப்போது நான் செய்வதெல்லாம் அவளுக்குத் தலைவலித்தால் மருந்தை நானே அவள் பொட்டில் தடவுகிறேனே, அதுதான். எப்பொழுதுமா ஒருவருக்குத் தலை வலித்துக்கொண்டிருக்கும்! நல்ல வேளையாக கிட்டன் வீட்டுக் கிரஹப்பிரவேசம் வந்தது.

கிட்டன் தம்பி இங்கு வரக்கூட இல்லை. அண்ணாவைக் கல்யாணத்திற்குப் போகிற வழியில் கும்பகோணம் ஸ்டேஷனில் சேர்ந்துகொள்ளுமாறு கடிதம் எழுதிவிட்டான். கிட்டன் வீட்டைக்

கிருகப்பிரவேசத்திற்குத் தயாராகச் செய்துவைக்கும் பொறுப்பு என்னிடம் விழுந்தது. சாமானெல்லாம் முன்னமே வாங்கி வைத்துப் போய்விட்டான் கிட்டன். வாசலில் ஒரு பந்தலைப் போட்டு வாழை மரங்களுக்கும் சொல்லி, சமையல்காரனுக்கும் ஏற்பாடு செய்தேன்.

கிட்டன் நினைத்தாற்போலத்தான் எல்லாம் நடந்தது. அதாவது அவன் எதிர்பார்த்தபடி நாலு ஆண் பிள்ளைகள் வரவில்லை. பெண்ணின் இரண்டு அண்ணன்களும் ஒரு சித்தப்பா சித்தியும்தான் வந்தார்கள். ஆள்காரன் உள்பட இருபது பேருக்குள் கிரகப்பிரவேச விருந்து முடிந்துவிட்டது.

“சுப்பராயா, இருபது வருஷத்துக்கப்புறம் அருமையா வந்து வாசிச்சிருக்கே. இனிமேல் பல கலியாணங்கள் இங்கு நடக்கப்போகிறது. எல்லாம் நீதான் நடத்தி வைக்கணும்” என்று ஐந்து வைக்கவேண்டிய இடத்தில் மூன்றை வைத்து நாதஸ்வரக்காரனை நைச்சியம் பண்ணினான் கிட்டன்.

“இனிமே ஐயா கலியாணம் பண்ணிக்கிட்டாத்தான். தம்பி எங்கோயோ வடக்கே உத்தியோகம் பாக்குது – ”

“அதுக்காக! சீமந்தம், குழந்தைக்கு ஆண்டு நிறைவு எல்லாம் அங்கேயே நடந்துரும்னு நெனச்சுப்பிட்டியா?”

“ஆமாம். சீமந்தம் பண்ணிக்கிறதுக்காக, அம்மா குடியைத் தேடி வரப்போவதாக்கும் குளந்தே. கைமாத்துக்கும் குறைச்சுப்பிட்டீங்களே! நாங்களும் என்ன பட்டணத்து வாசமா? ஏதோ அப்ப இப்ப இதமாதிரி ஒண்ணு நடந்தாத்தானே?”

“சரி, உனக்குத்தான் குறையாயிருப்பானேன். இந்தா” என்று இன்னும் ஒரு ரூபாயை வைத்தான் கிட்டன்.

“நமக்கெல்லாம் நீ வந்து இனாமா வாசிக்கக் கடமைப்பட்டவன்” என்று ஜமீன் தோரணையில் சொல்லி அவனை அனுப்பியும் விட்டான்.

சுப்ராயனின் நடுக்கு மேளம் ஓய்ந்து இரண்டு நாளாகிவிட்டது. சம்பந்திகள் ஊருக்குப் போய்விட்டார்கள். நாகுள்ளு பெண்ணை அழைத்துக்கொண்டு ஒருவாரம் கழித்து ஐதராபாத் போகப் போகிறானாம்.

“இனிமே எனக்கு ஒரு கவலையும் இல்லை, மாமா. தம்பிக்குக் கலியாணம் ஆகணுமென்னுதான் கவலையாயிருந்தது. இனிமே எனக்கும்

எல்லாம் ஆயிடுத்து" என்று என்னமோ நாலைந்து பெண்களைப் பெற்று, கலியாணம் செய்து முடித்துவிட்டாற் போல விடுதலையுடன் பெருமூச்சு விட்டான் கிட்டன்.

எவ்வளவு சந்தோஷம்! என்ன நிறைவு! எவ்வளவு திருப்தி! உயிர் வாழ்வது எவ்வளவு சுலபமான காரியம்! அர்த்தம் தேடுவது எவ்வளவு முட்டாள்தனம்! தம்பி கல்யாணம் செய்துகொண்டதில் தனக்கு ஏதோ கிரீடம் வைத்தாற்போலப் பூரிப்பதற்கு எவ்வளவு வாஞ்சை வேண்டும்! கிட்டன் ஏதோ அலைமேல் மிதக்கிறமாதிரிதான் மிதந்தான். அவன் வீட்டில் இருபது வருஷம் கழித்து ஒரு பெண் சமையல் செய்து சோறு போட்டு, சாப்பிடுகிற நல்லகாலம் வந்துவிட்டது. இன்னும் ஒரு வாரம். பிறகு மீண்டும் அடுப்பு ஊதவேண்டியதுதான் அவன். இந்த ஒருவார விடுதலையைப் போல எந்த விடுதலைதான் பெரிதாக இருக்க முடியும்?

"எங்கடா கிளம்பினே கிட்டா இந்த வெயில்லே?" என்று கேட்டேன்.

"நெய் வாங்கிண்டு வரலாம்னு கிளம்பினேன்."

"இவ்வளவு பெரிய ஏனமா? எண்ணையா நெய்யா?"

"நெய்தான் மாமா. தூரதேசத்துக்குப் போய்க் குடித்தனம் போடறான். முதல்லே ஒரு மாசமாவது நல்ல கலப்படமில்லாத நெய்யா சாப்பிடட்டுமே" என்று சொல்லிக்கொண்டே பதை பதைக்கிற வெயிலில் நடந்தான். ஒரே மூச்சில் பத்து சேர் நெய் வேணும் என்றால் இந்த வட்டாரத்தில் மூன்று ஊராவது போனால்தான் உண்டு.

தஞ்சாவூர் குடமிளகாய், காஞ்ச நார்த்தங்காய், வாசனைப் பொடி எல்லாம் ரெடியாக்கிப்பிட்டான் கிட்டன், தம்பிக்கு கட்டிக்கொடுக்க. "இப்ப நெய்க்குக் கிளம்பியாச்சாக்கும்" என்று நடையில் படுத்திருந்த என் மனைவியின் குரல் கேட்டது.

"வாசனைப் பொடி கூடவா? ஹைதராபாத்திலில்லாத சோப்பா?"

"ஏதோ ஆசை."

"பெண்டாட்டிதான் இல்லை, இதெல்லாம் வாங்கிக்க. தம்பி பெண்டாட்டியாவது வாங்கிக்கட்டுமே!"

"பெண்டாட்டி கேட்டிருந்தா ஆயிரம் கணக்குப் பண்ணியிருப்பான். கிட்டன் சித்தமே அலாதி."

“என்ன அப்படிச் சொல்றே? அவன் பெண்டாட்டியோட வாழ்ந்தது ஒரு மண்டலம்! சோகை மருந்து சாப்பிடற காலம். நீ என்னமோ பாத்தாப்போல சொல்றியே.”

“ஆமாம் . . . இருபது வருஷமாக கேக்காத மோளத்தைக் கொட்டின சுப்ராயனுக்கு அஞ்சு ரூபா முழுசாக் கொடுக்க மனசு வரலியே இவனுக்கு!”

சற்றுக் கழித்து, கிட்டன் வீட்டில் டும்டும் என்று சத்தம் கேட்டது. இடிக்கிற சத்தம். பாறைக்கோலால் இடிக்கிற சப்தம். நின்று நின்று கேட்டது.

“கிட்டானாத்திலேருந்து ஏதோ இடிக்கிற சத்தம் கேட்கிறதே.”

“அப்பளத்துக்கு மாவு இடிக்கிறதோ என்னமோ.”

“மாவு இடி இல்லை. ஏதோ பாறைக்கோலாலே தரையைப் பெயர்க்கிற மாதிரின்னா இருக்கு.”

“கேளுங்கோளேன்.”

“நாகுள்ளு, நாகுள்ளு.”

“என்ன மாமாவ்!”

“என்னடா சத்தம்?”

“ஒண்ணுமில்லே!”

மீண்டும் சத்தம் கேட்டது.

“நாகுள்ளு.”

“என்ன மாமாவ்.”

“ஒண்ணுமில்லேன்னியே.”

“ஆமாம் மாமா.”

“என்ன ஆமாம்?”

“சும்மாத்தான்.”

“தளவரிசை போடப்போறியா . . . காமிரா உள்ளுக்கு?”

“இல்லை . . . ஆமாம் . . . ரொம்ப குண்டும் குழியுமா இருக்கு”

“நானும் வரட்டுமா?”

“பரவாயில்லை. வாண்டாம்.”

“சத்தம் விட்டு விட்டுக் கேட்டது. களைத்துப் போய் விடுகிறானோ என்னமோ? நாம் போய் சகாயம் செய்வோம் என்றால் சங்கோசப்படுகிறான். அர்த்தமில்லாமல் இப்படித் திண்ணையில் உட்கார்ந்திருப்பதைவிட, உதவியை நாமாகப் போய் செய்வதைவிட நமக்கு என்ன வேலை!”

போனேன்; வாசல் கதவு தாழிட்டிருந்தது. ஆனால் இடுக்கில் கையை விட்டுத் திறக்கமுடியும், திறந்துவிட்டேன்.

முற்றத்தில் இருபது இருபத்திரண்டு கொட்டாங்கச்சிகள் இருக்கும். வரிசையாக அடுக்கி வைத்திருந்தது. எல்லாவற்றிலும் மண். மண் மட்டுமில்லை, காசுகள் ஒன்றிரண்டு மினுங்கிற்று. நான் போன சமயம், நாகுள்ளுவின் புது மனைவி காமிரா உள்ளிலிருந்து ஒரு கொட்டாங்கச்சியும் கையுமாக வந்துகொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் சரேல் என்று முகம் செத்து நடுங்கி உள்ளே போய்விட்டாள்.

“என்னடா, நாகுள்ளு? என்னது இதெல்லாம்?”

“ஒண்ணுமில்லே மாமா. எங்க அம்மா சில்லறை சில்லறையாச் சேர்த்து இப்படிக் கொட்டாங்கச்சியா வச்சு காமிரா உள்ளே புதைச்சுருந்தா. எல்லாத்தையும் எடுக்கலாம்னு எடுத்தேன். என்னிக்காவது உபயோகப்படுத்தித்தானே ஆகணும் இதையெல்லாம்.”

“உங்கம்மாவா, இவ்வளவு காசை சேர்த்து வச்சா!”

“எவ்வளவு காசு! எல்லாம் காலணா, ஒரு அணா, இரண்டணா, நாலணா. ரூபாய் கொட்டாங்கச்சி ரண்டே ரண்டு, அரை ரூபாயிலே அஞ்சே அஞ்சு. மீதியெல்லாம் சின்ன நாணயம்.”

“புதையல் எடுத்துட்டேன்னு சொல்லு.”

“ஆமாம், புதையல்! நீங்க ஒண்ணு. அவளுக்குப் பாங்கியிலியா போடத் தெரியும்? பொட்டியிலே போட்டா செலவழிக்கச் சொல்லும். இப்படி போட்டு மூடிவிட்டுப் போயிட்டா அவ்வளவுதான்.”

“கங்குப் பாட்டியின் சமத்துக்குத் திருடத்தான் போகணும் . . . ம் . . .

எவ்வளவு இருக்கு எல்லாமா."

"இன்னும் எண்ணலை. நூத்தி அம்பதுக்குள்ளதான் இருக்கும்."

"நானும் துழாவிப் பார்த்தேன். விக்டோரியா, ஏழாம் எட்வர்ட், ஐந்தாம் ஜார்ஜ் காலத்து காலணா, அரையணா, ஒரு அணா வகையறா எல்லாம்."

"நகை ஏதாவது வச்சிருக்காளா?"

"நகையென்ன? தங்கக் காப்பிரண்டு, அட்டிகை ஒண்ணு, காதோலை ஒரு ஜோடி, திருகாணி நாலஞ்சு. வெள்ளியிலே நாலு உருட்டு, ஒரு ஜோடி கொலுசு. இவ்வளவுதானா?"

"இன்னும் ரண்டு மூணு கொட்டாங்கச்சி இருக்கும். பார்க்கணும்."

மீதியையும் பெயர்த்து வந்தான். அந்த மூன்றிலும் காலணாக் காசுகள்தான்.

கங்குப் பாட்டிக்குதான் சந்ததிகளிடத்தில் எவ்வளவு அக்கறை! தயவு!

"ஸ் . . . அப்பாடா நல்ல வெயில்டா" என்று குரல் கேட்டது. கிட்டன் வந்துவிட்டான்.

"நாலு சேர் நெய்க்கு நாய்ப்பாடு பட்டாச்சு" என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே வந்தான்.

"நாலுதான் கிடைச்சுதா."

"யாரு, மாமாவா? வாங்கோ மாமா. நாலு சேர்தான் மாமா கிடைச்சுது. கம்ப சேவையாம். தயிர், பாலுன்னு இன்னும் ஒரு வாரத்துக்குப் பேசாதேங்கறான். அம்மா ஐயான்னு கால்லெ விழுந்து நாலுசேர் கிடைச்சுது. கிடைச்ச வரைக்கும் பகவான் செயல்."

"அதைவிட நிறைய கிடைச்சிருக்கும். இங்கே . . . இதைப் பாரு."

"என்ன?"

"அதோ பார் முற்றத்துலெ . . . புதையல். கங்குப் பாட்டி சாசனம்டா."

"என்னது? . . . கொட்டாங்கச்சின்னா . . . இதை யாரு பெயர்த்தார்?"

"நான்தான் அண்ணா" என்றான் நாகுள்ளு.

"என்னத்துக்கு?"

“பின்னே என்னதான் பண்றது இதெயெல்லாம்?”

“என்னை ஒரு வார்த்தை கேட்கப்படாதோ? . . . பெரியவனாச்சேன்னு சொல்றேன். ம் . . . சரி . . . எவ்வளவு இருக்கு?”

“நூத்தி நாற்பத்தெட்டு ரூபா!”

“அப்படீன்னா தலைக்கு 75கூட முழுசாத் தேறலையே.”

“பாதியாவே பிரிக்கணுங்கறியா?”

“அப்டீன்னா?”

“நாங்க ரண்டு பேர் – நீ ஒருத்தன்.”

“நீங்க ரண்டு பேரா? . . .”

“ஏன் மாமா! நீங்களே சொல்லுங்களேன்” என்றான் நாகுள்ளு.

“நாங்க ரண்டு பேர்னு ஆயிடுத்தா? . . . தேவலை . . . கலியாணம் ஆகி ஒரு வாரம் ஆகலேடா நாகுள்ளு என்னென்னமோ ஆரமிச்சுட்டியே! மாமா, பார்த்தேளா?”

நான் வாயைத் திறக்கவில்லை.

“நீ ஒண்டிதானேண்ணா – அதான் சொன்னேன்.”

“நான் ஒண்டிதாண்டா. அதான் இருபது வருஷமாகத்

தெரிஞ்சிருக்கே! ஒரு வார்த்தை எங்கிட்ட சொல்லப்படாதோ, கடப்பாறையைத் தூக்கறதுக்கு முன்னாலே? ஏன் மாமா! நான் சொல்றதிலே ஏதாவது தப்பாப் படறதோ உங்களுக்கு?”

“கிடக்குடா விடு . . .” என்று மையமாக நான் வாயைத் திறந்தேன்.”

“விடாம நான் என்ன பண்ணப்போறேன்? . . . என்னைக் கேக்காம எடுத்திருக்கட்டும். மூணிலே ரண்டு பாகம்னா கேக்கறான்.”

“ஏண்டா நாகுள்ளு?” என்றேன் நான்.

“ஏன் மாமா, சட்டத்தை விட்டுடுங்கோ. தர்மத்தைப் பாருங்கோ. அவன் ஒண்டிக்காரன். நான் ரண்டு பாகம் கேட்டது தப்பா?”

“ஏண்டா கிட்டா?”

“நீங்க என்ன மாமா இது?”

“எனக்கு என்ன சொல்றதுன்னு புரியலெ! அவன் சொல்றதும் தப்பாப்படலெ! நீ சொல்றதும் தப்பாப்படலெ!”

“கிரகப்பிரவேசத்துக்கே தொண்ணூறு ரூபாய் ஆயிடுத்தே எனக்கு.”

“கிரகப்பிரவேசம் பண்ணனும்னு நானா சொன்னேன்! நீதானே சேஞ்சே?”

“அடப்பாவி” என்றான் கிட்டா.

“கிட்டா!”

“பாருங்கோ மாமா, நாக்குக் கூசாம சொல்றான்.”

“என்னடாது நாகுள்ளு?”

“பதில் இல்லை.”

“ரொம்ப விரசமாயிருக்கு நான் எழுந்து போயிடுறேன்” என்று தப்பித்துக்கொள்ளப் பார்த்தேன்.

“மாமா நீங்கதான் தர்ம நியாயமா பிரியுங்கோளேன்” என்றான் நாகுள்ளு.

ஆளுக்குப் பாதிதான் சரி. கிரகப் பிரவேசச் செலவும் நீதான் ஏத்துக்கணும். உன் பெண்டாட்டியைத்தானே அழைச்சுது.”

“நான் சட்டப்படி தீர்ப்பு கூறச் சொல்லச் சொல்லலே.”

“அப்ப என்னைக் கேட்காதே”

“மாமா” என்றான் கிட்டன்.

“என்ன!”

“கிருகப்பிரவேசச் செலவை நானே ஒத்துக்கறேன். இந்தச் கொட்டாங்கச்சிகளும் எனக்கு வாண்டாம். சும்மா பரீட்சை பண்ணினேன்.”

“உன் இஷ்டம்.”

“எனக்கு எல்லாம் வேணும்னு நான் சொல்லலியே மூணுலெ ரண்டு நியாயம்தானேன்னு கேட்டேன்.”

“மூணும் உனக்குத்தாண்டா நாகுள்ளு . . . சரி, தீந்து போச்சு . . .

இனிமேல் இதைப்பத்திப் பேச்சு வாண்டாம். காசை எல்லாம் நன்னாத் தேச்சுத் துடைச்சு வைக்கச் சொல்லு. ஒரு தலைமுறையா மண்ணிலே கிடந்திருக்கு” இப்படியாக கிட்டன் விட்டுக்கொடுத்துச் சண்டை வராமல் சமாளித்துவிட்டான். ஆனால் சாப்பாட்டில் ஒரு மயிர் விரலில் நண்டின மாதிரிதான் எனக்கிருந்தது. நாகுள்ளு இப்படி நடந்துகொண்டிருக்க வேண்டியதில்லை.

மறுநாள் காலையில் கிட்டன் வந்து கூப்பிட்டான்.

“என்ன மாமா. சொத்தை பாகம் பிரிக்கணுமாம். சொல்றான் தம்பி”

“பிரிச்சுத் தொலைச்சுடு என்னத்துக்கு சனியன்?”

“தொலைக்கிறேன். ஆனால் நஞ்சை மூணுமாவையும் அவன் எடுத்துக்கறானாம். நான் புஞ்சை ரண்டரைமாவை வச்சுக்கணுமாம். புஞ்சையிலே பத்துத் தென்னைமரம் இருக்கு. கறிகாய் கொல்லை மிச்ச இடத்திலே போடலாம், வாழை போடலாம். அவ்வளவுதான்.”

“ஏன் அப்படியாம்?”

“நீ ஒண்டிக்காரன் தானேங்கிறான். ஒண்டி ஒண்டின்னு இந்த ஒண்டிக்காரன் பேச்சை விடமாட்டேங்கறான் மாமா!”

“சம்சாரக் கவலை அவனுக்கு!”

“இருந்தாலும் விரசமா இல்லையா அது? ஏன் மாமா!”

“கிடக்கறாண்டா – சிறிசு!”

“சிறிசா, கழுதைக்கு ஆறாப் போல முப்பத்திரண்டு வயசாறது. சிறிசா?”

“என்னை என்ன செய்யணும்கறே?”

“அவனுக்கு நியாயத்தை எடுத்துச் சொல்லணும்!”

நான் நியாயத்தைச் சொல்லி ஒன்றும் நடக்கவில்லை. அதற்குள் நாகுள்ளுவின் லீவும் முடிந்துவிட்டது. பாகம் தீராமலேயே புது மனைவியுடன் பயணமாகிவிட்டான்.

இப்போது கிட்டனும் ஊரில் இல்லை. சமையல் வேலை அவனுக்கு. கலியாண சீசனில் அவனுக்கு வேலை மும்முரம். இந்தப் பளிங்குக் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு, உப்பு புளி திட்டமெல்லாம் அவனுக்கு எப்படித்தான் சரியாக விழுகிறதோ?

கலியாண காலங்களில் மாசம் இருபத்தைந்து நாள் அவன் வீடு பூட்டிக் கிடக்கும். எனக்குப் பேச்சுக்குத் துணை இல்லை. மறுபடியும் வாழ்க்கையின் அர்த்தம் புரியாமல் விழித்தேன். பதினைந்து நாளாயிற்று கிட்டன் போய். எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போல்தான் இருந்தது. கிட்டனுக்கு சம்பாதிப்பது நோக்கமாயிராது. ஏதாவது செய்துகொண்டேயிருக்க வேண்டுமென்றுதான் அவன் வேலைக்குப் போகிறான். இல்லாவிட்டால் கொடுத்த கூலியைக் கையில் வாங்கிக்கொண்டு வந்துவிடுவானா?

"மாமா."

"அட, கிட்டனா உனக்கு ஆயுசு நூறுடா. இப்பத்தான் உன்னைப்பத்தி நினைச்சிண்டிருந்தேன்."

"இவளுக்கும் ஆயுசு நூறுன்னு சொல்லுங்கோ! இங்கவா; மாமாவுக்கு நமஸ்காரம் பண்ணு. மலையாளத்துப் பொண்ணு மாமா. சொல்லாம கலியாணம் பண்ணிட்டேனேன்னு கோச்சுக்காதீங்கோ. ஒண்டிக்காரனாயிருக்கத் தொண்டுதானே, பொட்டைப் புஞ்சையும் கொட்டாங்கச்சிலே மூணுலே ஒண்ணும் தரேன்னான் நாகுள்ளு. இப்ப?"

"என்னடா இது?"

ஒரு மலையாளத்து வாளிப்பு வந்து என்னை வணங்கி நின்றது.

"மாமியைக் கொஞ்சம் ஆரத்தியைக் கரைச்சுண்டு வரச் சொல்லுங்கோ, நான் போய்க் கதவைத் திறக்கறேன் . . . இவாத்துக்குள்ளே போய்க் கொஞ்ச நாழி இரு. மாமி ஆரத்தி சுத்தினப்புறம் இங்கே வரலாம். எதிர்த்த வீடுதான் உன்வீடு . . . அர்த்தம் அர்த்தம்னு யோசிச்சிண்டிருக்கேளே நீங்க, இதை யோசிச்சுப் பாருங்கோ" என்று கிட்டன் தன் வீட்டுக் கதவைத் திறக்கப் போனான். இனி எனக்கு என்ன கவலை? இந்த நாற்பத்தைந்து வயது மாப்பிள்ளையைக் கட்டிக்கொண்ட மலையாளப் பெண்ணின் வாழ்க்கையின் அர்த்தம் என்ன என்று யோசித்துக்கொண்டிருக்கலாம்.

ஆனந்த விகடன் தீபாவளி மலர், 1955

# கோபுர விளக்கு

திடீரென்று கண்ணைக் கட்டிவிட்டாற்போல் இருந்தது: அவ்வளவு இருட்டு. கிழக்குத் தெருவின் வெளிச்சத்தில் நடந்து வந்ததால் அந்தத் திடீர் இருட்டு குகை இருட்டாகக் காலைத் தட்டிற்று. சந்நிதித் தெரு முழுதும் நிலவொளி பரப்பும் கோவில் கோபுரத்தின் மெர்க்குரி விளக்கு அவிந்து கிடந்தது. நட்சத்திரங்களின் பின்னணியில் கோபுரம் கறுத்து உயர்ந்து நின்றது. கோயிலுக்குள் நீண்டு ஒளிரும் விளக்கு வரிசையில் லிங்கத்தைச் சுற்றிய ஒளிவட்டமும் காணவில்லை. கோவில் பூட்டித்தான் கிடக்கவேண்டும். ஏதாவது நாயை மிதித்துவிடப் போகிறோமே என்ற கவலையில் தட்டித் தடவி வீட்டு வாசலை அடைந்தேன்.

"பூஜை இல்லேன்னா கதவை அடைச்சுக்கட்டும். இந்த விளக்கைக் கூடவா அணைச்சுடணும்?" என்று எதிர்வீட்டுப் பந்தலிலிருந்து குரல் கேட்டது.

"பஞ்சாயத்தும் கேட்பாரில்லாத நாட்டாமயாப் போயிடுத்து – இருக்கிறது ஒரு விளக்கு தெருவுக்கு. அதுவும் ப்பூசாயிடுத்து, ஒரு வாரமாச்சு. நாதியைக் காணோம்"– என்று நாட்டு வைத்தியரின் குரல் கீழண்டை வீட்டு வாசலிலிருந்து புலம்பிற்று.

"கோயிலில் விளக்கு எரிஞ்சுண்டிருக்கும். இந்த பஞ்சாயத்து 'பல்பு எங்காத்துக்காரரும் கச்சேரிக்குப் போறார்னு மினுங்கிண்டிருக்கும், மத்தியாணத்திலெ சந்திரன் இருக்கிற மாதிரி. இன்னிக்கு சூரியனே அவிஞ்சுபோயிட்டான். மானேஜர் இதை அணைச்சிருக்க வாண்டாம். யாராவது வந்து சொல்லட்டும்னு இருக்கார் போலிருக்கு . . ."

"அந்த 'யாராவது'க்கு அவரைத் தவிர யாராவது என்று தான் அர்த்தம்! இந்த அற்ப விஷயத்திற்காக மானேஜரை போய்ப் பார்க்கும் அகௌரவத்தை அவர் தலையில்போட்டுக் கொள்ளமாட்டார். நாட்டு வைத்தியர் அவரைவிட பெரிய மனிதர். நாட்டு வைத்தியம் அவருக்குப் பொழுதுபோக்கு. நான் இருக்கிறேன், சுனச்சேபன். எனக்கு இதைவிட என்னவேலை? பார்த்தால் போகிறது.

இரண்டாம் கால பூஜை, மேளமும் சங்கும் தாரையுமாக அமர்க்களப் படுகிற அந்த வேளையில் – இன்று இந்த நிசப்தம் நிலவுகிறது. யாருக்கு

சீட்டு கிழிந்துவிட்டதோ?

கதவைத் தட்டினேன். கௌரி வந்து திறந்தாள்.

"ஏன் கோவில் பூட்டிக் கிடக்கு?

"எல்லாம் விசேஷம்தான்" என்று கதவைத் தாழிட்டாள் அவள்.

"என்ன – ?"

"தெற்குவீதியிலே யாரோ செத்துப் போயிட்டாளாம்."

"யாராம்?"

"எல்லாம் உங்க கதாநாயகி தான்."

"என் கதாநாயகியா? அப்படி ஒருத்தரும் இருக்க கூடியதாகத் தெரியலியே!"

"செத்துப்போன அப்புறம்தானே இந்த மாதிரி மனுஷா எல்லாம்– உங்களுக்குக் கதாநாயகி ஆகிற வழக்கமாச்சேன்னு சொன்னேன் . . ."

"எந்த மாதிரி மனுஷா?"

"தருமு மாதிரி"'

"தருமு யாரு?"

"துர்க்கை அம்மன் கிட்ட வரம் கேட்பாள்னு சொன்னேளே, அந்த ஜில் தான் . . ."

"ஆ . . . அவளா!"

"என்ன மூர்ச்சை போட்டுட்டேள்?"

"மூர்ச்சை போடக் கூடிய செய்திதான் . . . தர்முவா செத்துப் போய்விட்டாள்? முந்தா நாள் கூட கோவிலிலே பார்த்தேன். என்னைக் கண்டதும், நாணத்திலும் பயத்திலும் விறுவிறுவென்று நடையைக் கட்டிவிட்டாள்! இன்னும் கண் முன்னே இருக்கிறது.

"முந்தாநாள் ராத்திரிகூட கோவிலிலே பார்த்தேன்!"

"பார்த்தா என்ன? நாலு மணிக்கு பார்த்தவளை நாலேகால் மணிக்கு பார்க்க முடியவில்லை: மாரடைச்சு பொத்துனு விழுந்து பிராணன் போய் விடுகிறது?"

“என்ன உடம்பாம்?”

“என்ன உடம்பு இருக்கும் இதுகளுக்கு? பாம்புக்காரனுக்குப் பாம்புதான் எமன். புலியை வச்சு ஆட்றவனைப் புலி தான் விழுங்கும்.”

“நான் சமைந்து போய் உட்கார்ந்தேன். தருமுவின் மெல்லிய உருவம் நிழலாடிக் கொண்டிருந்தது.

முந்தாநாள், இரண்டாங்கால பூஜை முடிந்ததும் கோவிலுக்குப் போயிருந்தபோது, அவள் நிகு நிகு என்று தீட்டித் தேய்த்த கத்தி மாதிரி நடந்து போய்க் கொண்டிருந்தாள். கோயிலில் ஒரு பிராணி இல்லை. நுழையும்போதே வெளிப் பிராகாரம் வெறிச்சென்று கிடந்தது. நந்திக்கருகில் அர்த்த ஜாமத்துக்காக காத்துக்கொண்டிருந்த இரண்டு ஆச்சிகள், தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். இரண்டு பேருக்கும் முண்டனம் செய்து முக்காடிட்ட சிரசுகள், பழுத்துப் போன வெள்ளைப் புடவை. நெற்றியில் விபூதி, பல்லும் பனங்காயுமாக மூஞ்சிகள். தோலில் சுருக்கம். பட்டினியும் பசியுமாகக் காயக் கிலேசம் செய்கிறார்களோ என்னமோ, இரண்டுபேரும்! இல்லாவிட்டால் ஐம்பது வயசுக்குள், இத்தனை அசதியும் சோர்வும் வருவானேன்? மனிதப் பிறவி எடுத்து சுகத்தில் எள்ளளவு கூட காணாத ஜன்மங்கள் இரண்டும். மங்கைப் பருவத்திற்கு முன்னாலேயே குறைபட்டுப் போனவர்களாம். பரஸ்பர அனுதாபத்தினால் ஒரு சிநேகம். இரண்டு பேரும் சேர்ந்து தான் வருவார்கள்: போவார்கள் – விருப்பு வெறுப்பு இல்லாத மரக்கட்டைகள்: உணர்ச்சி மாய்ந்துபோன மரப்பின் உருவாக, சாவை எதிர்நோக்கி கொண்டிருந்த கிழங்கள்.

அவர்களைக் கடந்து போனதும், தர்மு உள்ளே சிவ சன்னதியில் நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

“உன்னைவிட இந்த இரண்டும் எவ்வளவோ கொடுத்து வைத்தவை. முக்காடிட்டுக் கொள்கிற பாக்யமாவது இவர்களுக்கு இருக்கிறது. நீ வெறும் சுமங்கலிக் கட்டை” என்று தர்முவை நினைத்து என் நெஞ்சு குரல் கொடுத்தது.

நான் உள்ளே போனதும் சட்டென்று திரும்பி என்னைப் பார்த்து விட்டாள் அவள். உடனே வேதனையும் வெட்கத்தையும் ஒரு புன்சிரிப்பில் புதைத்துக்கொண்டு ‘விர்’ரென்று அந்த இடத்தை விட்டுப் பறந்துவிட்டாள். கட்டுக் கூந்தல் அவளுடைய பிடரியில் புரண்டு கொண்டிருந்தது. முன் தலை பக்கவாட்டில், ஒன்றோடும் சேராமல், பறங்கி கொடியின் பற்றுச்

சுருளைபோல இரண்டு சுருள்கள் அவள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடிக்கும் ஆடி அதிர்ந்து கொண்டே வந்தன. அவளை கறுப்பு என்றுதான் சொல்லவேண்டும். ஆனால், அட்டைக் கரி அல்ல. மெல்லிய உயரமான தேகம். கையில் நாலைந்து ஜோடி இருக்கும், மஞ்சளும் நீலமும் கலந்த ரப்பர் வளையல்கள். கழுத்தில் முலாம் தோய்ந்த சங்கிலி. அதுவும் முலாம் தேய்ந்து பல்லை இளித்தது. ஒரு பூப்போட்ட வாயில் புடவை. பளபளவென்று தங்க நிறத்தில் கைக்கு வழுவழுக்கும் செயற்கைப் பட்டு ரவிக்கை. நிகு நிகுவென்ற ஒரு புது மெருகு அந்த உடல் முழுதும் ஊடுருவி ஒளிர்ந்தது.

என்னைக் கண்டுவிட்டு அவள் வெட்கி ஓடியதற்குக் காரணம் இது. இரண்டும் மாதத்துக்கு முன். இரண்டாங்கால பூஜைக்குப் பிறகு கோவிலுக்குப் போனபோது நடந்தது. பிராகாரத்தை வலம் வருவதற்காக சென்றேன். துர்க்கை அம்மனுக்கு முன்னால் நின்று இந்த தர்மு வேண்டிக்கொண்டிருந்தாள். அழும் குரலில். நான் வந்ததை கவனிக்காத அளவுக்கு அவ்வளவு சோகம் அவள் மனத்தையும் புலன்களையும் மறைத்திருக்கத்தான் வேண்டும்.

"ஈச்வரி! இரண்டு நாளாக வயிறு காயறது. இன்னிக்காவது கண்ணைத் திறந்து பார்க்கணும். தாராள மனசுள்ளவனா . . . ஒருத்தனைக் கொண்டு விட்டுத் தொலைச்சா என்னவாம் . .?"

கேட்டுக் கொண்டே போனேன். இரண்டு விநாடி கழித்து சட்டென்று என்னைப் பார்த்தவள், மருண்டு நின்றாள். என்ன செய்ய? வேண்டுமென்று ஒற்றுக் கேட்கவில்லையே!

"ஈச்வரி, என் தங்கையைக் காப்பாற்றிப்பிடு, தாராள மனசுள்ளவனா ஒருத்தனை பார்த்து அவளுக்கு முடிச்சிடு, தாயே" என்று தயங்கித் தயங்கி வேண்டுகோள் முடிந்தது. உண்மையான முடிவாக இருந்தால் குரலில் இவ்வளவு அசடு தட்டுவானேன்? பயந்துகொண்டு அவசர அவசரமாக அவள்தான் ஓடுவானேன்?

அவள் போனதும், துர்க்கை அம்மனைப் பார்த்துக் கொண்டே நின்றேன். கல்லில் வடிந்த அந்தப் புன்முறுவலுக்கு என்ன பொருள்?

'மகிஷாசுரனை மர்த்தனம் செய்கிற எனக்கு இந்த உத்தியோகம் கூடவா? இந்த பிராத்தனையைக் கொடுத்து விடலாமா? கடைசியில் தங்கை கிங்கை என்று சொன்னது உன்னை ஏமாற்றத்தான், என்னை ஏமாற்ற இல்லை . . . ஆனால், நீ கூட ஏமாறவில்லை!'

என் உள்ளம் கிளர்ந்து புகைந்தது. கோபம் வந்தது: யார்மேல் என்றுதான் தெரியவில்லை. கொஞ்சம் தொண்டையைக்கூட அடைத்தது. வெளியிலே இந்த வேண்டுகோளை நினைத்து யாரும் எதுவும் பதைபதைப்பதாகக் காணவில்லை. துர்க்கைக்குமுன் மினுங்கின விளக்கு சாந்தமாக அசையாமல் மினுங்கிற்று. தட்சிணாமூர்த்தி மௌனமாக உட்கார்ந்திருந்திருந்தார். கோயில் மானேஜர் நிமிராமல் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். மானேஜர் தலைக்குமேல் தொங்கின கூண்டிற்குள்ளே கிளி கண்ணை மூடி தவத்தில் இருந்தது.

வீட்டுக்கு வந்ததும், கௌரியிடம் சொன்னேன்.

"தெய்வம் நல்ல புத்தி கொடுக்கும், ஞானம் கொடுக்கும், விவேகம் கொடுக்கும். இப்ப இதுவும் கொடுக்கும்னு தெரியறது – " என்று என் படபடப்பைக் கிண்டல் செய்தாள் கௌரி.

"ஏன், கொடுக்கப்படாதா?"

"கொடுக்கணும்னுதான் சொல்றேன். எந்த காரியத்துக்கும் தெய்வபலம் வேணும். திருடனுக்குக் கூட ஒரு தெய்வம் உண்டு. அந்த மாதிரி, தேவடியாளுக்கும் ஒரு தெய்வம் வேண்டாமா! நல்ல ஆளா கொண்டுவந்துவிடுன்னா விடத்தானே வேணும் அது?"

"அந்தப் பொண்ணு அழுதுண்டே வேண்டிண்டுது. கொஞ்சம் மனசுக்குள்ளே வேண்டிக்கப்படாதா? தன்னை அறியாமல் கஷ்டம் பொறுக்காமல் புலம்பியிருக்கு. என் காதிலே விழுந்து, உன் காதிலெயும் விழுந்து சிரிப்பா சிரிக்கணும்னு இருக்கு! வேறென்ன?"

"நீங்க வர்றதைப் பார்த்துட்டுதான் அப்படிக் கொஞ்சம் உரக்க வேண்டிண்டாளோ என்னமோ?

"அப்படி இருந்திருந்தா உன்னளவு சமாசாரம் எட்டிவிடுமா என்ன?"

"பேஷ், அவ்வளவு கெட்டிக்காரரா நீங்க? வாஸ்தவம்தான். உங்களுக்கு தாராள மனசுதான். கையிலேதான் காசு இருக்கிறதில்லை. அதனாலேதான் அனுதாபம் இங்கே வந்து அருள் பிரவாகமாக ஓடறது!"

"போருமே! நீ பேசறது வேண்டியிருக்கலெ. இங்கிதம் தெரியாம என்ன பேச்சு இது?"

"யார் அந்தப் பொண்ணு?"

“யாரோ தெரியலே. கறுப்பா உசரமா சுருட்டை மயிரா இருக்கு. முகம் களையா இருக்கு – ”

“கறுப்பா உசரமாவா?”

“ஆமாம்”

“பல்லு கோணலா இருக்குமோ?”

“அதென்னமோ பல்லைப் பார்க்கலை நான்.”

“யாரு அது? வேடிக்கையா இருக்கே!”

“வாசலோடு கூட அடிக்கடி போகும்.”

மறுநாளைக்கு அந்தப் பெண் வாசலோடு போனாள். கூட அவள் தாய் போய்க் கொண்டிருந்தாள். அவசர அவசரமாக கௌரியைக் கூப்பிட்டேன். அவள் வருவதற்குள் ஜன்னல் கோணத்தை விட்டு அவர்கள் போய்விட்டார்கள். வாசலுக்கு ஓடிப்போய்ப் பார்க்கச் சொன்னேன்.

கௌரி ஒரு நிமிடம் கழித்து வந்தாள்.

“இதுவா? இது கிரிசை கெட்டுதுன்னா! இதுக்குதானா இத்தனை புலம்பினேள்?”

“யாரது? உனக்குத் தெரியுமோ?”

“தெரியறது என்ன – குளம், சந்தி, கடைத்தெரு, எங்கே பார்த்தாலும் நிக்கறதே. காலமே கிடையாது. மத்தியானம் கிடையாது. ராத்திரி கிடையாது. எடுபட்ட குடும்பம்!”

“அதுதான் தெரியறதே. அவா யாருன்னு கேக்கறேன்.”

“யாருன்னா? முருங்கைக்காயின்னா முருங்கைகாய்தான். எந்த ஊரு? எந்தக் கொல்லை – இதெல்லாமா கேக்கணும்?”

“இது முருங்கைக்காயா?”

“முருங்கைகாய்தான். வேணும்னா நீங்க போய் விசாரிச்சு தெரிஞ்சுக்குங்களேன். இந்த வம்பு தும்பெல்லாம் எழுதி உங்களுக்கு காசாப் பண்ணணும். அதுதான் சீனு மாமா இருக்காரே, அக்கப்போர் ஆபீசர். அவரைக் கேட்டாச் சொல்றார்.”

நாலைந்து நாள் கழித்து சீனு ஐயரின் கடையில் உக்கார்ந்திருந்தபோது,

தாயும் பெண்ணும் ஒருவர் பின் ஒருவராய்ப் போவதைக் காட்டிக் கேட்டேன்: "இது யார் சார்?"

"தெற்கு வீதியிலே இருக்கா. ஒரு தினுசு!"

"அப்படீன்னா?"

"நான் நேரே பார்க்கலை சார். சொல்லிக்கிறா."

"என்ன சொல்லிக்கிறா?"

"ஒண்ணுன்னா பத்து சொல்லும் ஊரு. நானும் சரியா விசாரிக்காம சொல்லமாட்டேன்."

"நீங்க இன்னும் ஒண்ணுமே சொல்லலியே!"

"என்னத்தை சொல்றதாம். எல்லாம் அதுதான் வேறே என்ன?"

"எது?"

"மந்திரச் சாமா மந்திரச் சாமான்னு ஒருத்தன் இருந்தான். பஞ்சாங்கக்காரன், பொல்லாதவன், ஆனால், மகா உபகாரி. ரொம்ப நீக்குப் போக்கு தெரிஞ்சவன். நன்னா பேசுவான். எட்டுக் கண்ணும் விட்டெறிஞ்சுது. மில்லுச் செட்டியாருக்கெல்லாம் அவன் சொன்னா வேதவாக்கு. அவன் பொண்ணுதான் இது.

"அவன் பொண்டாட்டிதான் இந்த 'விடோ'. அவன் ஜோசியம் சொன்னான்னா ரிஷிவாக்கு மாதிரிதான். இன்ன வருஷம், இன்ன மாசம், இன்ன தேதி – இத்தனையாவது மணிக்கு இன்னது நடக்கும்னு பிரம்மதண்டத்தை தலையிலே வச்சாப்போல சொல்லுவான். அப்படியே ஒரு விநாடி பிசகாமல் நடக்கும். இந்தக் காவேரி மேற்குமுகமாகப் போனாலும் போகும், அவன் சொல்றது பிசகாது. பாம்பு கடி, தேள் கடிக்கு மந்திரிப்பான். ஆகாசத்துக்கும் பூமிக்கும் குதிச்சுண்டு வருவான். 'தேள் கடிச்சுதா? என்னது உன்னையா தேள் கடிச்சது?' என்பான். சாமா சிரிச்சுண்டே 'சரியாப் போயிடுத்தே. எங்கே கொட்டித்துன்னே தெரியலியேன்னு' திரும்பி போயிடுவான் வந்தவன். சாமா பிசாசு கூட ஓட்டுவான். நடத்தைதான் கொஞ்சம் போராது. பூர்வீகமா ஒண்ணரை வேலி சர்வமானிய சொத்து இருந்தது. எல்லாத்தையும் தொலைச்சான். நாற்பது வயசுக்கப்புறம் திடீர்னு பாரிச வாயு வந்து ஒரு பக்கம் பூரா சுவாதீனமில்லாம போயிட்டுது, ஏழு வருஷம் படுத்த படுக்கையாகக் கிடந்தான். சாப்பாட்டுக்கு வழி இல்லே. பாங்கியிலே நானூறு ஐநூறு

போட்டிருந்தான். இதோ போறதே இந்த பொண்ணு கல்யாணத்துக்கு செலவழிஞ்சு போச்சு. என்ன செய்றது? சாப்பிட்டாகணுமே! அவன் பொண்டாட்டி அவன் இருக்கிறபோதே இப்படி ஆரம்பிச்சுட்டா. இந்தப் பெண்ணோடு ஆம்படையானுக்குக் கல்யாணமாகி நாலு மாசம் கழிச்சுத்தான் இதெல்லாம் தெரிஞ்சுது. அழைச்சுவச்சுண்டிருந்தான் மதுரையிலே. சமாசாரம் தெரிஞ்ச உடனே அடிச்சு விரட்டிப்புட்டான். தாயார் அப்படி இருந்தா பொண்ணு என்ன செய்யும்? அப்ப எல்லாம் இந்தப் பொண்ணு யோக்கியமாத்தான் இருந்தது. அது வாழா வெட்டியா வந்து சேர்ந்ததும் அம்மாக்காரி இப்படி பழக்கிப்பிட்டா. ஏழெட்டு குழந்தைகள்! வீட்டோட இந்த விடோவுக்கு ஒரு அம்மா கிழவி வேறெ இருக்கா. என்ன செய்யறது? கிளப்பிலே இந்த ரெண்டும் அரைக்கிறது. என்னத்தை கிடைக்கப் போறது? ஒருநாள் முழுக்க அரைச்சா எட்டணா கிடைக்கறதே கஷ்டம். பத்துப் பேர் இருக்கிற குடும்பம். ஒரு ரூபாயிலே தினமும் ஓடுமோ? இப்படித்தான் பிழைக்க வேணும். என்னவோ யார் கண்டா – நேரிலே பார்த்ததில்லை. சொல்லக் கேள்வி. நானும் நிச்சயமா தெரியாட்டா சொல்லமாட்டேன்" என்று மறுபடியும் அதே முத்தாய்ப்பு வைத்து முடித்தார் சீனு மாமா.

"என்ன கஷ்டம்!"

"கஷ்டம்தான். ஆனா நகையும் நட்டும் வீடும் நிலமும் வச்சுண்டு சில பேர் ஊர் சிரிக்கறதுக்கு இதுவொண்ணும் கெட்டு போயிடலே. பெரியாத்து சமாசாரம் தெரியுமோ இல்லியோ?" என்று தமக்குப் பிடிக்காத யாரைப்பற்றியோ தொடங்கி விட்டார் சீனு.

"அப்படி எல்லாம் திமிர் பிடிச்சு போக்கிரித்தனம் பண்றா. அதுக்கு கேட்பாரில்லை. பணம் எல்லாத்துக்கும் பிராயச்சித்தம் பண்ணிப்பிடும். இந்தமாதிரி நாதன் இல்லாம, சோத்துக்கும் இல்லாம, எடுபட்டுடுத்தோ, அவ்வளவுதான். கட்டுப்பாடு காயிதா எல்லாம். அமர்க்களப்படறது. சாமா இருந்தபோது. ஜோஸ்யம் ஜோஸ்யம்னு – வாசல் திண்ணையிலே, திருச்சிராப்பள்ளி எங்கே, மதுரை எங்கே – கடலூர் எங்கேன்னு பெரிய பெரிய புள்ளிகள் எல்லாம் வந்து காத்துண்டிருக்கும். காரும் குதிரை வண்டியுமா வாசல்லே அதும்பாட்டுக்கு அவுத்துப் போட்டுக் கிடக்கும். வியாபாரிகள், மிராசுதார்கள்! – ஒண்ணும் அப்பைசப்பையா, இராது. அவன் அப்படி இருந்ததுக்கு கடைசியிலே சொல்லிமாளாது – அவ்வளவு கஷ்டத்தையும் அனுபவிச்சுப்பிட்டான். போராதுன்னு இதுகள் வேறே இப்படி சிரிக்கிறதுகள். ஊரிலே ஒருத்தரும் போக்குவரத்து கிடையாது.

அந்த வீடு மாத்திரம் இருக்கு. அதுவும் இடிஞ்சும் கிடிஞ்சும் யாருதலைலே விழலாம்னு காத்திண்டிருக்கு. சாமா இருக்கிறபோது அக்கிரகாரத்திலே இருக்கிறவர்களுக்கு தோசைக்கு இட்லிக்கு அரைச்சு கொடுப்பா. ஒரு கல்யாணம், ஒரு விசேஷம்னா இட்லி வார்க்கிறது, அப்பளம் இட்டுக் கொடுக்கிறது; இப்படி ஏதாவது காரியம் செஞ்சு கொடுப்பா. ஆனா ஒரு தினுசுங்கிற சேதி தெரிஞ்சுதோ இல்லியோ? எல்லாம் நின்னுபோச்சு ஒரு வீட்டிலேயும் குத்துச் செங்கல் ஏறவிடலே. கடைத் தெருவிலே ஹோட்டல்லெ வேலை செய்யறதுகள் . . ."

அக்கப்போர் சீனுவிடம் இவ்வளவு தயவை நான் எதிர் பார்க்கவில்லை. அவர் மனத்தையே கரைக்கிறதானால் உண்மைதான் கரைக்க முடியும்.

அவர் சொன்னது உண்மைதான். கௌரி சொன்னதும் உண்மைதான். எதிர்பாராத இடங்களிலெல்லாம். அந்தப் பெண்ணைப் பார்த்துப் பார்த்து மனம் துணுக்குற்றது. இரவு ஒன்பது மணிக்கு நடமாட்டம் இல்லாத தெருவில் போய்க்கொண்டிருப்பாள். போலீஸ் கான்ஸ்டபிளோடு ஸ்டேஷன் வாசலில் பேசிக் கொண்டிருப்பாள். வெற்றிலைக்காரனோடு ஹாஸ்யத்தில் ஈடுபட்டிருப்பாள். இரவில் தேர் முட்டியின் கருநிழலில் நின்று கொண்டிருப்பாள். கார் ஷெட்டின் முன்னால் நின்று சிரித்துப் பேசிக்கொண்டிருப்பாள்.

கௌரியிடம் சொன்னேன்.

"கௌரவம் என்ன? மதிப்பு என்ன இதிலே? பொம்மனாட்டி ஜன்மம். எத்தனை நாளைக்கு தேடிண்டு வருவா? முதல்லே அப்படித்தான் இருந்திருக்கும். இப்போ இவளே தேடிண்டு போற காலம் வந்திடுத்து. இல்லாட்டா இப்படி சந்தி சந்தியா நிப்பானேன்? இனிமேல் ஒரே வேகமாத் தான் போகும். வியாதி, ஆஸ்பத்திரி, பிச்சை, சத்திரத்து சாப்பாடு – எதைத் தடுக்க முடியும்? துர்க்கை அம்மன் கிட்டவே வந்து பிழைப்புக்கு மன்றாடற காலம் வந்து விட்டது.

கேக்கறதுதான் கேட்டாளே பணம் வேணும் – கஷ்டம் விடியணும்னு அழப்படாதோ? நல்ல ஆளைப் பிடிச்சுத் தரணும்னு தானா கேக்கணும்."

"அவ வேலை செஞ்சு பிழைக்கிறவ. ஒரு வேலையும் செய்யாமல் திடீர்னு பணம் வந்து குதிக்கும்னு நம்பற இனம் இல்லை. ஏதாவது கொடுத்தாத்தான் இந்த உலகத்துக்கிட்ட இருந்து ஏதாவது கறந்து சாப்பாட்டுக்கு வழி பண்ணிக்க முடியும்னு நினைக்கிறவ. தெரிஞ்சுதா?"

“என்ன தெரிஞ்சுதா? இது ஒரு வேலையா?” கௌரியின் சாமர்த்தியத்தைக் கண்டு எனக்கு வியப்பாக இருந்தது. வீட்டில் இருந்து கொண்டே அவள் எப்படி செய்திக் களஞ்சியமாக அபிப்பிராயக் களஞ்சியமாக விளங்குகிறாள்?

“இனிமே ஒரே வேகமாகத் தான் போகும் . . .”

ஆனால், இவ்வளவு வேகமாகப் போய் எல்லாம் அடங்கி விடும் என்று நான் நினைக்கவில்லை.

சாப்பிட்டானதும் கேட்டேன். “என்ன உடம்பாம் அதுக்கு?”

“அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறேள்? மூணுமாசம் குளிக்காம இருந்ததாம் . . .”

பளிச்சென்று எனக்கு முந்தாநாள் இரவு அவளைக் கோவிலில் பார்த்தது நினைவிற்கு வந்தது. தோலிலும் உடலிலும் ஊடுருவி கண்ணைக்கவர்ந்த அந்த மெருகு நினைவுக்கு வந்தது. அரைச் சாப்பாட்டுக்கு, பருவம் கடந்து ஆறு வருஷத்திற்கு அப்புறம் வரக்கூடிய மெருகல்ல அது. தாய்மையின் ஒளி; வயிற்றில் வளர்ந்த சிசுவின் ஒளி; செவ்வட்டையின் ஒளி மாதிரி அது என்னை இப்போது பதற அடித்தது.

“அவ அம்மாக்காரி இருக்காளே – டாக்டர் கிட்டே போய் கேட்டாளாம். அம்பது ரூவா பணம் கேட்டானாம் அந்த தடியன். கடைசியிலே – வாசக்கதவு, கொல்லைக் கதவு எல்லாம் சாத்திப்பிட்டு – இவளே அந்த பொண்ணு வாயிலே – வைக்கல், துணி எல்லாத்தையும் வச்சு திணிச்சு வைத்தியம் பண்ணினாளாம், அப்படியே அலறவும் முடியாம, உசும்பவும் முடியாம எல்லமே அடங்கி போச்சாம். அப்படீன்னு நம்ம பூக்காரி சொல்றா. ஆனா குருக்கள் பொண்டாட்டி சொன்னாளாம்; அந்த அம்மாக்காரி கண்ணாடியைப் பொடி பண்ணி தண்ணியிலே கலந்து அந்த பெண்ணைக் குடிக்கச் சொன்னாளாம். அது குடிக்சுப்பிட்டு வயித்து வலியிலே – அய்யோ அய்யோன்னு ஊரே குலை நடுங்க கத்தி தீத்துப்பிடுத்தாம். அப்புறம்தான் துணியை வாயிலே வச்சு அடச்சு அழுகையை அடக்கினாளாம். அது உயிரையே அடக்கிப் பிடுத்து.”

கேட்கும்போது வயிற்றைப் புரட்டிற்று எனக்கு.

கௌரி குழந்தை மாதிரி விசித்து விசித்து அழ ஆரம்பித்துவிட்டாள். என்னையும் அது தளரச் செய்துவிட்டது.

“அந்தப் பொண்ணு ஊத்தின எண்ணெய்க்காவது மனம் இரங்கப்படாதா அந்த சாமி. இவ்வளவு பெரிய கோவிலைக் கட்டிண்டு உக்கார்ந்திருக்கே! துர்க்கைக்கு முன்னாடி நின்னுண்டு அழுததுன்னேளே. பொம்மனாட்டி கண்ணுலே ஜலம் விட்டா உருப்படுமா அந்தத் தெய்வம்? அவ யாராயிருந்தா என்ன? மனசு உருகிக் கண்ணாலே ஜலம் விட்டுதே அது” என்று கௌரி குமையத் துவங்கி விட்டாள். கோவிலை ஒட்டினாற் போல இருந்தது மானேஜர் வீடு, சென்று கதவைத் தட்டினேன்.

“யாரு?”

“நான் தான் சார்?”

கதவைத் திறந்து கொண்டு வந்தார் அவர். வாசல் விளக்கு பளிச்சென்று எரிந்தது.

“ஓ . . . சாரா, வாங்க, வாங்க, எங்கே இப்படி அபூர்வமா?”

“கோவில்லே பூஜை இல்லைன்னு கேள்விப் பட்டேன் . . .”

“ஆமா சார் ஒரு சாவு – தெற்குத் தெருவுலே.”

“அதுதான் கேள்விப்பட்டேன். அது விஷயமாத்தான் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்.”

“என்ன?”

“கோபுரத்து விளக்கு இல்லாமல் தெருவே இருண்டு கிடக்கு ஊரிலே திருட்டு பயமா இருக்கு. அதுதான் . . .”

“ஒரு நாள் இப்படித்தான் இருக்கட்டுமேன்னு நினைச்சேன்.”

இது என்ன அர்த்தமில்லாத பதில்! திகைப்பாக இருந்தது எனக்கு. பேசாமல் உட்கார்ந்திருந்தேன். ஒன்று, இரண்டு நிமிடங்களாயின. இருவரும் பேசவில்லை.

“என்ன இப்படி பதில் சொன்னானேன்னு நினைக்கிறீங்களா? எனக்கு என்னமோ இந்த சாவுக்கு துக்கம் கொண்டாடணும் போல் இருக்கு. செத்துப்போனது யாருன்னு தெரியுமில்ல உங்களுக்கு?”

“தெரியும். ரொம்பக் கண்ராவி”

“நீங்க கூட பார்த்திருப்பீங்களே. கோவிலுக்கு வருமே அந்த பொண்ணுதான். சிரிச்சுப் போன குடும்பம்தான்; ஒப்புத்துக்குறேன்,

ஆனால், செத்துப் போனதுக்கு அப்புறம் தூக்கறதுக்கு ஒரு ஆள் கூட இல்லைன்னா இது என்ன, மனுஷன் குடி இருக்கிற தெருவா? காக்கா கூட ஒரு காக்கா செத்துப்போச்சுன்னா கூட்டம் கூட்டமா அலறி தீத்துப்பிடும்கள். மத்தியானம் மூணு மணிக்கு போன உசிரு. ஒரு பய எட்டிப் பாக்கலை. வீட்டிலே இருக்கிறது அத்தனையும் பொம்பளே. எல்லாம் சின்னஞ் சிறுசு. அப்படி என்ன இப்ப குடி மூழ்கிப் போச்சு? அவங்க கெட்டுப் போயிட்டாங்க — நாதன் இல்லாம கெட்டுப்போன குடும்பம். பசிக்குப் பலியான குடும்பம். என்ன அக்கிரமம் சார்? இந்த மாதிரி மிருகங்களைப் பார்த்ததில்லைங்க நான். நானும் நாலு ஊரிலே இருந்திருக்கேன் — ”

மானேஜரின் உதடு துடித்தது. கரகரவென்று கண்ணில் நீர் பெருகிற்று. பேசமுடியாமல் நின்றார். சற்றுக் கழித்துக் கண்ணைத் துடைத்துக்கொண்டு ஒரு பெருமூச்சில் துக்கத்தை இறக்கிக்கொண்டார்.

“இன்னிக்குக் கடவுள் வெளிச்சம் கேட்பானா? கேட்க மாட்டான். ஊருக்கு மட்டும் என்ன வெளிச்சம்? எத்தனை வெளிச்சம் போட்டால் என்ன, நம்ம இருட்டு கலையப் போறதில்லை. இப்படித்தான் தவிக்கட்டுமே, ஒரு நாளைக்கு . . .”

ஆத்திரம் அவர் முகத்தில் ஜொலித்தது. “கோயிலுக்கு பூஜை செய்தாகணும். இன்னும் பொணத்தைத் தூக்கினபாடில்லை. யாரு தூக்குவாங்க? ஊரு கட்டுப்பாடாம்; ஊர் தலையிலே இடிவிழ!”

நான் பேசமுடியாமல் உட்கார்ந்திருந்தேன். ஆத்திரம் தணிந்ததும் அவர் சொன்னார். ‘பத்து மணிவரையில் பார்க்கப் போறேன். அப்புறம் நாதியில்லேன்னா. நாயனக்காரர் ரெண்டு ஆளை கொண்டாறேன்னிருக்காரு. நாலு பேருமா தூக்கிக் கொண்டு போயிடலாம்னு இருக்கிறோம். வேறே என்ன செய்யறது? கோயிலைத் திறந்தாகணும்.”

“நான் வாணா வரேன்?”

“நீங்களா? என்னத்துக்காக? பேசாம நல்ல புள்ளையா இருங்க. இது ரொம்ப ஆபத்தான சமாச்சாரம். தனியாளோட போடற சண்டையில்லே . . .”

“மோசமா போச்சு! பிழைக்க இடமா இல்லை வேறே?” என்று இழுத்தேன். எனக்கு பயமாகத்தான் இருந்தது.

“இத பாருங்க. எனக்காக சொல்லவேணாம். நான் ஒண்ணும் உங்களைப் பற்றித் தப்பா நெனைச்சுக்கமாட்டேன். நிசம்மா தைரியம் இருந்துதுன்னா வாங்க. இல்லே . . . எனக்காக . . .”

“பரவாயில்லைங்க.”

“என்னமோ உங்க இஷ்டம், ஆனா தெருவுக்கு மட்டும் விளக்கு கிடையாது. நாளை ராத்திரி வரையிலும் நிச்சயமாகக் கிடையாது. அந்த துர்க்கை அம்மனுக்கும் அந்த பொண்ணுக்கும் அவ்வளவு ராசி. விளக்கு கிடையாது இப்பவே சொல்லிப்பிட்டேன் – ”

“சரி”

விளக்கை அணைத்து, வாசல் கதவைச் சாத்திக் கொள்ளச் சொல்லி விட்டுத் துண்டைப் போட்டுக்கொண்டு கிளம்பினார் அவர். இருட்டில் தட்டித் தட்டி கிழக்கு வீதி வெளிச்சத்திற்கு வந்தோம்.

**கலைமகள், ஜூன் 1954**

# யாதும் ஊரே . . .

ஒரு மாதமாக எல்லாமே என் இஷ்டப்படிதான் நடக்கின்றன! இஷ்டப்பட்டபோது குளிக்கிறேன்; இஷ்டப் பட்டபோது சாப்பிடுகிறேன். நினைத்தபோது தூங்குகிறேன் – அதுவும் பகலில்! – கால்மணி அரை மணி இல்லை! – நேற்று உச்சி வேளைக்குச் சாப்பிட்டுவிட்டுப் படுத்தவன், இந்தச் சூரியன் மறைந்தால் ஒழியக் கண்களைத் திறப்பதில்லை என்று சபதம் செய்து கொண்டாற்போல, அந்தி மயங்கிக் கறுக்கிறவேளைவரை தூங்கியிருக்கிறேன். அப்புறம் இரவு மூன்று மணிக்குத்தான் படுத்தேன். அது வரையில் கோணல் கிச்சானோடு வாசலில் கட்டிலைப் போட்டுக் கொண்டு அரட்டையடித்தேன்! என்னை யார் கேட்கிறது!

இன்னும் இரண்டு மாதங்கள் வரையில் எல்லாம் என் இஷ்டம்தான். நான்தான் ராஜா. இல்லை, இல்லை. சாதாரண, சாமான்ய மனிதன், பாமரன்; இஷ்டப்படி அலைகிற சாதாரண மனிதன். மூன்று மாத லீவில் ஒரு மாதம்தான் போயிருக்கிறது. இன்னும் இரண்டு மாதங்கள் இப்படியேதான். மார்க்கெட்டுக்குப் போக மாட்டேன். கடிகாரத்தைப் பார்த்துக் குளிக்க மாட்டேன். கடிகாரத்தைப் பார்த்துச் சாப்பிட மாட்டேன். பஸ் ஸ்டாப்புக்கு ஓட மாட்டேன். யானா மாதிரியும், டபுள்யூ மாதிரியும், வியூகம் வகுத்து பஸ்ஸைத் தாக்க நிற்கும் 'க்யூ' வரிசையில் நிற்க மாட்டேன்!

இங்கே பஸ்ஸூம் கிடையாது. மார்க்கெட்டும் கிடையாது. இது பட்டணமில்லை. பாலகரம். பட்டணத்திலிருந்து ஒரு இரவு ரயில் பயணம். ரயிலில் இறங்கி ஒன்றரை மணி பஸ்ஸில் பயணம். அப்புறம் மண் சாலையிலிருந்து வாய்க்கால் மதகைக் கடந்து ஊருக்குள் வரவேண்டும். அந்த மதகைக்கூடப் போன வருட வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. பத்து நாளாயிற்றாம் கட்டி முடிய. அது வரையில் வெளி உலக வாடையில்லாமல் கழிந்ததாம். இப்பேர்ப்பட்ட ஊரில் யார் நம்மை அதிகாரம் பண்ண? இஷ்டப்படி தூங்குகிறேன்; விழித்துக்கொள்கிறேன்.

இன்று காலையில்கூட விழித்துக்கொள்ளும்போது எட்டு மணி. பிறகு வயலுக்குப் போய் நாற்று பிடுங்கி விட்டார்களா என்று பார்த்து விட்டு வரும்பொழுது ஒன்பது மணி. அப்பொழுது தான் குரல் கேட்டது.

“மாமோவ்!”

கோணல் கிச்சான்தான். ‘வ்’வன்னாப் போட்டு வேறு யார் கூப்பிடுவார்கள்?

“இருக்கேளா – பொழைச்சேன்” என்று ஆறரை அடி உயரமும் கூனி நிமிர்ந்தான்.

“என்ன சேதி?”

“சேதிதான் . . . கைகொடுக்கணும்.”

“என்ன வந்துடுத்து இப்ப?”

“சொல்கிறேன், மாமா. காலமே எழுந்தவுடனே ஆற்றங் கரைக்குப் போனேனா? பஜனை மடத்திலே ஒரு சன்யாசி தண்டமும் கமண்டலமுமாக உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்தார். பல்லைத் தேய்த்து ஸ்நானம் பண்ணி அவருக்கு முன்னால் விழுந்து நமஸ்காரம் பண்ணினேன். உட்காருங்கோன்னார். உட்கார்ந்தேன். பேரு குடும்பம் எல்லாம் விசாரிச்சார். அப்புறம் பெரியவர்களுக்கு எந்த ஊரோ என்று கேட்டேன். சன்யாசிக்கு ஊர் ஏது. உறவு ஏதய்யான்னார். அப்புறம் தான் அட, அசடேன்னு உதட்டைக் கடிச்சிண்டேன்.”

“சந்நியாசிகளிடம் பூர்வாசிரமத்தைப் பற்றி விசாரிக்கப்படாதுன்னு தெரியாதா உனக்கு? ஏண்டா, சமர்த்து!”

“அதான் சொல்றேனே – தவறிப் போயிடுத்துன்னு. கொஞ்ச நாழி ஒண்ணும் பேசாமல் உட்கார்ந்திருந்தோம். அப்புறம் இன்னிக்குப் பிட்சை பண்ணி என்னை அனுக்கிரகம் பண்ணணும்னு கேட்டுண்டேன். பேஷா அதுக்கென்ன? செஞ்சுட்டாப் போறதுன்னார். அழைச்சுண்டு வந்தேன். உள்ளே போனால் அப்பா அம்மான்னு முனகல் கேட்டுது. என்னடான்னு பார்த்தால், மீனாட்சி அலங்கோலமாப் படுத்துண்டு கிடக்கா. காப்பி சாப்பிட்டவளுக்கு என்னமோ தலையைக் கிறுகிறுன்னுதாம். கண்ணை இருட்டிண்டு வந்துதாம். நாலைஞ்சு தடவை வாந்தி எடுத்துதாம். தொட்டுப் பார்த்தால், உடம்பு அனலா வீசறது. கண்ணைத் திறக்க முடியலே, படுத்துண்டு கிடக்கா. என்ன பண்ணறது? சன்யாசி வாசல் திண்ணையிலே உட்கார்ந்திண்டிருக்கார். இன்னும் உட்கார்ந்திண்டிருக்கார். கிடந்து முழிக்கிறேன். என்ன பண்றதுன்னு புரியல்லே. பட்டணத்து மாமாதான் கதின்னு வந்துட்டேன். நீங்கதான் வழிகாட்டணும்.”

நல்ல கறுப்பும் கச்சலுமாக இருந்த கிச்சானின் கண் ஏற்கனவே சுண்ணாம்பு வெள்ளை. இக்கட்டில் இன்னும் வெளுத்துக் கிடந்தது.

"வழி என்னடா வழி? பிக்ஷையை இங்கே பண்ணி விட்டால் போகிறது. பட்டணத்திலே சங்கோசப்படற மாதிரின்னா படறே! பார்வதீ!" என்று உள்ளே பார்த்துக் கூப்பிட்டேன். வந்தாள். சொன்னேன். "நானே வந்து அழைச்சிண்டு வரேன்" என்று கோணல் கிச்சான் முன்னே நெளிய, வெளியே வேகமாக நடந்தேன்.

கிச்சான் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்த சன்யாசியைக் கண்டேன். எட்டு அங்கமும்பட விழுந்துவணங்கினேன். 'நாராயண நாராயண' என்றார் ஸ்வாமி. புன்முறுவல் பூத்தார். ஐம்பது வயதிருக்கும். மாநிறம். முண்டனம் செய்த தலை. ஆனால் தலையிலும் முகத்திலும் ஒரு மாதரோமம் வெளுத்துக் கிடந்தது.

"கிச்சானைப் பெரிய மனசு பண்ணி மன்னிக்கணும். வீட்டில் அசந்தர்ப்பம் அவனுக்கு. உள்ளே ரொம்ப உடம்பு சரியாயில்லை. பெரியவாளை பிக்ஷக்குச் சொல்லிட்டோமேன்னு கிடந்து தவிச்சுப் போய்ட்டான். நான் இன்னிக்கிக் கொடுத்து வைச்சிருக்கேன். நாலு வீடு தள்ளி அஞ்சாவது வீடு. பெரியவா வந்து பெரிய மனசு பண்ணி பிக்ஷ பண்ணி வைக்கிற பாக்கியத்தை எனக்குத் தரவேணும்."

"அப்படியா? உடம்பு சரியாயில்லை என்று சொல்லவேயில்லையே இவர்."

"பெரியவாகிட்ட காலமே சொல்றபோது அவனுக்குத் தெரியாது. வந்து பார்த்தா ஒரே வாந்தியா எடுத்து, தலை தூக்க முடியாமல் கிடக்காளாம். பெரியவாகிட்ட சொல்ல எப்படி வாய் வரும் அவனுக்கு? ஆசையா அழைச்சிண்டு வந்தான். லபிக்கலெ. அவனும் நானும் வேறெ இல்லே. அங்கே வந்துடணும், அவ்விடத்திலே."

"செஞ்சுட்டாப் போறது."

"நான் கொடுத்து வைக்கலே இன்னிக்கு. பெரியவர் இருந்து நாளைக்கு இங்கே பிக்ஷ பண்ணிட்டுத் தான் போகணும்" என்றார் கிச்சான். அவன் குரல் நடுங்குவதைக் கேட்டு நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்தார் ஸ்வாமி.

"குழந்தை சுபாவம். கவலைப்படாதீர். நாளைக்கு இங்கேயே பிக்ஷயை வச்சுக்கறேன். ஒரு ஊர்லே ஒரு நாளைக்கு மேலே தங்கும்படியா

இதுவரை நேரலே. நீர் சொல்கிறபோது என்ன பன்றது? . . . செஞ்சுடலாம்."

"தயவு பண்ணணும். அப்ப, நான் உடையாரைப் போய்ப் பார்த்து மருந்து வாங்கிண்டு வரேன்" என்று மறுபடியும் பெரியவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான் கிச்சான். பெரியவர் தண்ட கமண்டலங்களைக் கையில் எடுத்து, பாதக் குறட்டில் ஏறி நடந்து வந்தார். கைகால் கழுவி, தாழ்வாரத்தில் தூணடியில் போட்டிருந்த மணைமீது முற்றத்தில் ஒரு காலைத் தொங்கவிட்டு உட்கார்ந்தார். இருவரும் விழுந்து வணங்கினோம்.

"சொந்த வீடுதானே?"

"ஆமாம்."

"பூஸ்திதி . . ."

"ஏதோ சொல்பம் இருக்கு."

"சொல்பம்னா – நாலு வேலி ஐந்து வேலி . . ."

"அவ்வளவு இருந்தால் பட்டணத்திலே போய் ஏன் இருபத்துஐந்து வருஷமாய்ப் பிழைக்கணும்! அரை வேலிக்குக் கொஞ்சம் கூட அவ்வளவுதான்."

"அப்படியா! நாராயண. அப்படின்னா பட்டணத்திலே தான் இருபத்தஞ்சு வருஷமா வாசம்?"

"ஆமாம்"

"என்ன உத்தியோகமோ?"

உத்தியோகத்தைச் சொன்னேன்.

"அப்படியா? எங்கே ஜாகையோ?"

அதையும் சொன்னேன்.

"பேஷ், பெரிய மனுஷா, மேதாவிகள்ளாம் இருக்கிற இடம்னு சொல்வாளே அதை!"

"ஆமா, ஆமா."

நாலைந்து பெரிய பெயர்களைச் சொல்லி அவர்கள் எல்லாம் அங்கேதான் இருக்கிறார்களா என்று கேட்டார்.

“ஆமாம்”

“நல்ல சம்பத்து; நல்ல செல்வாக்கு இல்லையா?”

“தகப்பனார்கள் சம்பத்தைத் தேடி வைத்தார்கள். அதைச் செலவழித்தும் செலவழிக்கிறாற்போல் பாச்சை காட்டியும் செல்வாக்கு சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஸ்வாமி சிரித்தார். ஏன் சிரித்தார் என்று புரியவில்லை. சற்று கழித்துப் பெருமூச்சு விட்டார். யோசனையில் ஆழ்ந்திருந்தார். “என்னமோ, பகவான் கொடுக்கிறான் இஷ்டமில்லேன்னா கொடுக்காமல் இருக்கான். தகப்பனார் சம்பாதிச்சு வச்ச பணத்தையும், பகவான் இஷ்டடப்பட்டாத்தானே இவா கையிலே கொடுப்பான்?”

“ம்! ம்!” என்றேன். இந்தத் தத்துவ விஷயங்களில் எனக்கு எப்பொழுதுமே புத்தி கட்டை. நம்முடைய அதிர்ஷ்டத்துக்கு யார் காரணம் என்று எனக்கு என்றுமே புரிந்தது கிடையாது. எனக்குப் பத்து வருஷங்களாகக் கிடைத்த சம்பள உயர்வு முப்பது ரூபாய்தான். சம்பளம் முந்நூறு. வேலை இரண்டு முந்நூற்றுக்குச் செய்கிறேன். ஆபிசில் பல காக்காய்கள் ‘லபக்லபக்’ என்று கவளம் கவளமாக விழுங்கிக் கொண்டிருக்கின்றன. போதும் போதாதற்கு ‘ஹோய்! ஓடிவாங்கோ – இதோ போன வருஷத்து மிச்சம், இதோ மூணாம் வருஷத்து மிச்சம்– போட்டுங்கோ, வாயிலே’ என்று வேறு வீசுகிறார்கள். இதில் ஏன் ஒரு பருக்கைகூட நம் பக்கம் தெறிக்கவில்லை என்று ஆராய்ந்து ஆராய்ந்து களைத்துப் போய்விட்டேன். வேலை செஞ்சாப் போதுமா? சரியான இடத்தைப் பிடிச்சிருக்கணும். துரைகிட்ட நீயாகப் போய் பேசணும். விசாரிக்கணும். ஏன் முகம் இப்படி வாடினாப்பல இருக்குன்னு கேக்கணும். அவரு ஏதாச்சும் சொன்னா, கிச்சு கிச்சு மூட்டிக்கிட்டாவது சிரிக்கணும். உன் வேலையை எவன்யா கேட்கிறான்? களுதைகூட டன் டன்னா சுமக்குது – சுமந்தப்பறம் எங்க போய் நிக்குது, பார்த்தியா?’ என்கிறான்லோ. லோ (அவன் ஊரையும் பெயரையும் குறிக்கிற முதல் எழுத்துக்கள் இவை.) பொய்ப் புன்சிரிப்பு சிரித்துச் சிரித்துப் பயலுக்கு வாய்க்கடையே வெந்து விட்டது. கூனல் நிரந்தரமாகவே விழுந்துவிட்டது. இதையே நான் செய்தால் துரைக்குப் பிடிக்காது என்று இந்தப் பயலுக்கு யார் புரிய வைக்கிறது? சீச்சீச்சீ – என்னத்துக்கு இந்த நினைவெல்லாம். இந்தச் சனியனெல்லாம் வேண்டாம் என்று தானே மூன்று மாத லீவுபோட்டுவிட்டு இங்கே வந்து ஒதுங்கியிருக்கிறேன். இந்தச் சன்யாசி ஏன் இதையெல்லாம் கிளப்புகிறார்?–

“என்ன நான் சொல்றது?” என்றார் அவர்.

“எது?”

அவர் தெளிவு படுத்துவதற்குள், உள்ளேயிருந்து என் மனைவி வந்து ஜாடை செய்யவே ஓடினேன். ஒன்றுமில்லை சமையல் திட்டம்தான். வாழைக்காயை நானே சீவி நறுக்கிக் கொடுத்தேன். கொத்தவரைக்காயை ஆய்ந்து கொடுத்தேன். ஆபீசில் செய்கிற வேலையை விட எத்தனையோ சிறந்த வேலை. கைமேல் பலன். இவள் கைக்கு அத்தனை மணமுண்டு.

அடுக்களையும் தனிமையும் என் ஆத்மாவுக்கே வேலி போட்டுக் காப்பது போல் இருந்தது. அவள் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தாள். சமைப்பதைப் பார்த்துக்கொண்டு ஈட்டியை முதுகில் பாய்ச்சவந்த எதிரியிடமிருந்து தப்பி ஒளிந்து கொண்டதுபோல் நிம்மதியாக, அமைதியாக உட்கார்த்திருந்தேன். கை மட்டும் கொத்தவரைக்காம்பை ஆய்ந்து கொண்டிருக்கிறது. அவள் சமைக்கும்பொழுது நான் இப்படி உட்கார்ந்து பார்த்தது கிடையாது என்றுதான் சொல்லவேண்டும். ஓர் ஆள் நீளம், முக்கால் ஆள் அகலமுள்ள பட்டணத்து இருட்டு அடுக்களையில் அவள் ஒருத்திக்குத்தான் பம்பரமாட இடமுண்டு. இந்தக் சமையலறை பட்டணத்து வீடளவு இருக்கிறது.

பிஞ்சு கொத்தவரைக்காய் கிள்ளக்கூட மனம் வரவில்லை.

“இப்பதான் நாற்றங்காலில் நாற்றுப் பிடுங்கியிருக்கு. மழை வந்து கலைசல் பண்ணிடப் போறது” என்று சிரிக்காமல் சிரித்தாள் அவள்.

இவ்வளவு கரிசனமாக நான் அவளுக்கு உதவுகிறது அவளுக்கே தாங்கவில்லை.

“ஸ்வாமிகளுக்குச் சுருக்கத் தயாராக வேண்டாமா?”

“நான் பாத்துக்கறேன். ஒண்டியாகக் கூடத்திலே அவரை வச்சுட்டு வரணுமா? என்ன நினைச்சுப்பார்?”

“அவர் காரியமாகத்தானே இருக்கேன் . .?”

“அவரோட போய் ஏதாவது பேசிண்டிருங்களேன். இது ஒரு பிரமாதமா எனக்கு?”

எழுந்து கொண்டேன்.

உண்மையில் இருவருக்கும் உடம்பு, உள்ளெல்லாம் நிறைந்துதான்

கிடந்தன. பத்து நாட்கள் வேலைக்குச் சம்பளம் கொடுத்து இருபத்தைந்து நாள் வேலையைக் கசக்கி வாங்கிக்கொண்டிருக்கிற பட்டணத்து ஆபீசை விட்டு இந்த ஒரு மாதம் ஒதுங்கியிருப்பதே, ரத்தக் கட்டி உடைந்து விட்டாற் போல், நோவு நீங்கிய நிம்மதியாக, விடுதலையாக எங்களைக் கவ்விக் கொண்டிருந்தது. மூங்கில் தோப்புகள், சுழியிட்டு ஓடுகிற ஆறு, வழிந்து ஓடுகிற வாய்க்கால், – கொல்லை முருங்கை மரத்தில் தினைக் குருவியின் ஊசிக்கத்தல், வலியன் குருவி கனைத்துக் கனைத்துக் குழைக்கிற இனிமை, நீளமான ஒரு வாக்கியத்தைத் திருப்பித் திருப்பிப் பேசிக்கொண்டிருந்த புளிய மரத்துக் குருவி, ஆழங்காண முடியாத நிசப்தம், அதன் நடுவே கீச்சிடும் அடுத்த வீட்டு ஊஞ்சல், நிழல், காற்று, நாற்றங்கால்களில் அலையோடுகிற பசும் பொன், வரப்புக்களில் நாயுருவிகளை உராய்ந்து நடப்பது, களத்துக் கலியாண முருங்கையில் ‘ட்ரூவ்’ என்று அழைக்கிற மணிப்புறா, மகாபிரபோ, எங்கள் மெய் சிலிர்க்கிறது எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல இந்தச் சன்யாசி வந்திருக்கிறாரே – அவருக்கு ஒரு கவளம் சோறு போடும் பேறு கிடைத்ததே – ! நாங்கள் கூடச் சன்யாசிகளாகத் தான் இருப்பதாகத் தோன்றிற்று. சிறுமை, மனநோவு, பற்றாக்குறையின் குமைச்சல் – அனைத்தையும் விட்டு விடுதலையடைந்திருப்பதே சன்யாசம்தான்.

“என்ன! நின்னுண்டேயிருந்தா? என்ன யோசனை இப்ப, அவரைக் கூடத்திலே உட்காத்தி வச்சிட்டு?”

கூடத்துக்குப் போனேன். சன்யாசி தூணில் தலையைச் சாய்த்திருந்தார். பசி. அயர்ந்துவிட்டார். என் அடியோசைகூட அவர் கண்ணைத் திறக்கவில்லை.

திரும்பி உள்ளே வந்தேன். நிலைமையைச் சொன்னேன்.

“இதோ – அஞ்சு நிமிஷம். கூட்டும் பாயசமும்தான் பாக்கி” என்று அடுப்புத் தீயைக் களைக்க விட்டாள் அவள்.

“நாமகூட சன்யாசம் வாங்கிண்டா நல்லதில்லையா?” என்று கேட்டேன்.

“நாம கூடன்னா? ரண்டு பேரும் சேர்ந்து சன்யாசம் வாங்கிண்டு ஆளுக்கொரு கமண்டலமும் தண்டமும் ஏந்திண்டு, சேர்ந்து நடக்கலாம்னா?”

“இல்லை. ஒரு கவலை கிடையாது, பந்தம் கிடையாது. தினம் ஒரு ஊர் – ஏதோ கிடைச்ச இடத்திலே சாப்பாடு – பகவானை நினைச்சிண்டே

இருக்கிறது.”

“அதை அப்புறம் யோசிச்சுக்கலாம். இலை இல்லை. கொல்லையிலே போய்ப் பெரிய நுனி இலையா ஒண்ணு நறுக்கிண்டு வரலாமா . .?”

இலையை நறுக்கிக்கொண்டு கூடத்துக்குத் திரும்பியபோது, ஸ்வாமி விழித்துக்கொண்டு கமண்டலுவைச் சாய்த்து, நீரால் கண்ணைக் துடைத்துக் கொண்டிருந்தார்.

பிட்சை ஆயிற்று. எங்களுக்கும் சாப்பாடு ஆயிற்று. ஸ்வாமி சற்று ஓய்வு எடுத்துக்கொண்டார். பிறகு ஊர் உலக விஷயங்களெல்லாம் கேட்டார். ஆத்மிக விஷயங்களைச் சொன்னார். கோணல் கிச்சான் வந்தான். அவன் மனைவியைப் பற்றி விசாரித்தார். உடையாரிடம் மருந்து வாங்கிக் கொடுத்ததில் வாந்தி நின்றுவிட்டதாம். ஜுரமும் இல்லையாம். மறுநாள் தன் வீட்டில் பிட்சை ஏற்குமாறு மீண்டும் ஒருமுறை வேண்டிக்கொண்டான் அவன். கர்ணிகர் வந்தார். அவர், அவர் குடும்பம், சொத்து முதலியவற்றை விசாரித்தார் ஸ்வாமி. சீதாராமன் வந்தார். அவரையும் விசாரித்தார். சேதுவன்னியர் வந்தார். அவரையும் விசாரித்தார். மேலத் தெருவிலிருந்து பாலுத் தென் கொண்டார் வந்தார். அவரையும் விசாரித்தார். எல்லோரும் விழுந்து வணங்கிவிட்டு போனார்கள்.

எனக்குப் பொறாமையாகத்தான் இருந்தது. அவர் யாரையும் தாழ்வாக, தவறாகப் பேசவில்லை, உபதேசத்தைத் தொழிலாகக் கொண்டவர்களைப் போல் யாரையும் குறைகூறவில்லை; கிண்டல் செய்யவில்லை. பரம சாத்திகராக எல்லாவற்றையும் துறந்துவிட்டு என்னை ஏங்க ஏங்க அடித்துக் கொண்டிருந்தார்.

சன்யாசம் என்ற ஒரு நிலையை எப்படிக் கற்பனை செய்து ஒரு மரபாகக் கொண்டு வந்தார்கள்? எந்த மகா மேதையின் கற்பனை அது? அவர் முன்பு உட்கார்ந்து நினைவிழந்து கிடந்தேன் நான். தெருவில் வெய்யில் மஞ்சள் பூசிக் குளித்துக் கொண்டிருந்தது.

வாசலோடு போய்க்கொண்டிருந்த அக்கரை கோபாலன் ஸ்வாமிகளைக் கண்டதும், வந்தான்; வணங்கினான். அவனையும் விசாரித்தார் அவர்.

“சாப்பாடு ஆயிடுத்தா? இன்னிக்குக் கதைக்கு வராப்போல்தானே?” என்றான் என்னைப் பார்த்து.

“வரணும்” என்றேன்.

“கதையா?” என்றார் ஸ்வாமி.

“ஆமாம். அக்கரையிலே இவர் ஊரிலே ராமாயணம் நடக்கிறது, ஒரு மாசமா. நானும் தினமும் போய் வருகிறேன். சீக்கிரமாகச் சாப்பிட்டு விட்டுத் தினமும் புறப்பட்டு விடுகிற வழக்கம். அதைத்தான் கேட்கிறார்” என்றேன்.

“நானும் வருகிறேனே. சாப்பிட்டுவிட்டு இதோ புறப்பட்டு விடுகிறது” என்று துரிதப்படுத்தினார் ஸ்வாமி.

இருட்டுகிற சமயத்துக்குக் கிளம்பினோம். கோணல் கிச்சான் கீரைத் தண்டு மாதிரி ஆடியவாறு முன்னால் பாட்டரி விளக்கை அடித்துக் கொண்டே நடக்க இருவரும் பின்னால் நடந்தோம். மூங்கில் பாலத்தில் அடி வைத்து ஆற்றைக் கடந்தோம். தவளைகள் கொர கொரத்தன. சிள் வண்டுகள் இரைந்தன. தென்னை மரங்கள் சலசலக்க, ஒரு சவுக்கைத் தோப்பு கிசுகிசுத்தது. மூங்கில் தோப்பு உருமிற்று. ஸ்வாமியோடு நடக்கும் பொழுது இந்த ஓசைகள்தான் மனிதன் கேட்க வேண்டிய ஓசை, எய்த வேண்டிய பேறு என்று தோன்றியது.

ஊருக்குள் திரும்பினோம். தெரு நடுவில் ஒரு பந்தலில் பெட்ரோமாக்ஸ் வெளிச்சம் தெரிந்தது. சுருதிப் பெட்டியின் ரீங்காரமும் குரலும் கேட்டன.

“கதை ஆரம்பித்து விட்டாற்போல் இருக்கு. என்னாலே தாமதம் உங்களுக்கு” என்றார் ஸ்வாமி.

நெருங்கினோம். பந்தல் வந்துவிட்டது. திண்ணையில்கதை சொல்லிக் கொண்டிருந்தவர் சட்டென்று நிறுத்தினார். கண்ணை இடுக்கி நாங்கள் வருவதைக் கவனித்தார். ஸ்வாமிகளைப் பார்த்தார்.

“வரணும் – வரணும் – இப்படி வரணும்” என்று ஸ்வாமியைத் திண்ணைக்குக் கூப்பிட்டார். ஸ்வாமி திண்ணையில் உட்கார்ந்து கொண்டார்.

“நீங்கள் தானா? நான் யாரோன்னு நினைச்சேன்” என்றார். ஸ்வாமி.

“எப்ப வந்தது”

“காலமேதான். பாலகரத்திலே இவர்களோடுதான் தங்கியிருக்கிறேன்” என்று கீழே உட்கார்ந்திருந்த என்னைக் காட்டினார் ஸ்வாமி.

எல்லோரும் என்னைப் பார்த்தார்கள். ஸ்வாமியைப் பார்த்தார்கள். கதை

சொல்கிறவர் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். திண்ணை மீது உட்கார விட்டாலும் நான் சகலத்தையும் துறந்த சன்யாசியாகத்தான் எனக்கு ஒருகணம் தோன்றியது.

நின்றிருந்த சுருதிப் பெட்டி மீண்டும் ரீங்கரிக்கத் தொடங்கிற்று. கதை தொடர்ந்தது.

ஸ்வாமி ரசித்துக் கேட்டார். நடுநடுவே சுவர்மீது சாய்ந்துகொண்டார். களைப்பாகத்தான் இருக்க வேண்டும்.

கேகயத்திலிருந்து திரும்பி வந்த பரதன் தந்தை காலமான சந்தர்ப்பங்களைக் கேட்டுத் துக்கமும் கோபமும் அடைந்து ராஜ்யத்தை வெறுக்கிறான். தாயைத் திட்டுகிறான். கூனியைத் திட்டுகிறான். ராமன் இருக்கும் காட்டுக்கு எல்லோருமாகப் போய்த் திருப்பி அழைத்து வருவதென்று சாலை போட உத்திரவிடுகிறான். மணி பத்தரை கதையை நிறுத்தினார் அவர். சுருதிப் பெட்டியைக் கையமர்த்தி நிறுத்தச் சொன்னார். பிறகு நிசப்தத்துக்கிடையே பேசினார். “தாயாதிகள் என்றால் காய்ச்சல், பொறாமை எல்லாம் கூடவே பிறந்துவிடும். அப்படித் தப்பித் தவறி அவர்கள் சுமுகமாயிருந்தாலும் மற்றவர்களுக்குத் தாங்காது – கூனியைப் போல. ஏதாவது சொல்லிக் கிளப்பிவிட்டு விடுவார்கள். ராமாயணத்துக்கோ பாரதத்துக்கோ போகவேண்டாம். இதோ நம் கண் முன்னாலே பார்க்கிறோம்” என்று சன்யாசியைக் காட்டினார்.

“இவர்களுக்குப் பூர்வாசிரமத்தில் சந்தானம் சந்தானம் என்று பெயர். இங்கிருந்து ஐம்பது மைல் அவர்கள் கிராமம். கோரையாற்றுப் பாசனத்தில் ஏழு வேலி நிலம். ஏழு வேலியும் அப்படியே தங்கம். ஸாரபூமி. விளைந்ததானால், ஒரு ஆளை அடிக்கலாம், அப்படியிருக்கும் ஒவ்வொரு கதிரும். இருபோகம் ஏழு வேலியும். நெல்லு கலம் இரண்டு ரூபாய் விற்ற நாளிலேயே வருஷம் நாலாயிரம் ஐயாயிரம் கிடைக்கும். இப்ப கலம் பத்து ரூபாய் விற்கிறது. என்ன மோசமாக விளைந்தாலும் வருஷம் இருபதாயிரத்துக்குக் குறையாது. தானமும் தர்மமும் யதேஷ்டமாகச் செய்து கொண்டிருந்தார்கள். பிள்ளை குட்டி கிடையாது. சந்தானம் என்று பெயர் வைத்தார்கள் பெற்றவர்கள். ஆனால் புத்திர பாக்கியம் இல்லாமல் போய்விட்டது. தாயாதிக்காரன்கள் எத்தனை காலமாகக் கறுவிக் கொண்டிருந்தான்களோ, பகவான்தான் சொல்லணும். போன வருஷம் சித்திரை மாதம் இவர்களுக்கு ரொம்ப உடம்பு வந்து விட்டது. பிழைக்க மாட்டாமல் கிடந்தார்கள். தாயாதிக்காரன்கள் வந்து மொய்த்து கொண்டான்கள். அண்ணா என்றார்கள். முத்தண்ணா என்றார்கள்.

பெரியண்ணா என்றார்கள். ‘எப்பவுமே உனக்கு உலகப் பற்றே கிடையாது. பிழைக்க மாட்டாமல் கிடக்கிறாய் இப்ப. ஆபத்து சன்யாசம் வாங்கிக்கொள்’ என்று கரையாகக் கரைத்தான்கள். சன்யாசிகளுக்கு மறுபிறவி கிடையாது. உயிருக்கு ஆபத்து வந்திருக்கிற இந்த வேளையில் சன்யாசம் வாங்கிக் கொண்டால் நாளைக்கே உயிர் போனாலும் ஆத்மாவுக்கு மோட்சம் – நம்ம குலத்துக்கும் பெருமை என்று இவரைக் கரைத்து சன்யாசம் எடுத்து வைத்து விட்டான்கள். படுத்த படுக்கையாக இருக்கிறவர் கையில் கமண்டலத்தையும் தண்டத்தையும் கொடுத்துவிட்டான்கள். ஆனால் விபரீதத்தைப் பாருங்கள். இவர்கள் நாலைந்து நாட்களில் பிழைத்துக்கொண்டு விட்டார்கள். உடம்பு தேறி விட்டது. நடமாட்டம் வந்துவிட்டது. ஆனால் காஷாயம் கமண்டலுவுடன் வீட்டில் இருக்கலேமோ! வீட்டை விட்டு வெளியேறுகிற நிர்ப்பந்தம் வந்துவிட்டது. சம்சாரமோ பரம சாது. ஒரு திரிசமன் அறியாதவள். அப்படியே கண்ணாலே ஜலம் விட்டுக் கதறி விட்டாள். பாருங்கள் – இந்த அபர வயதில் ஊர் ஊராகப் போய்க்கொண்டு! யார் பிகைஷுக்குக் கூப்பிடுகிறார்கள் என்று காத்துக் கொண்டு! வெய்யில், பனி, மழை என்று பாராமல் ஊர் ஊராக அலைந்து கொண்டு! பரம அயோக்கியன்கள் அந்தத் தாயாதிகள்!” என்று கதை சொல்கிறவர் அறிமுகப்படுத்தி நிறுத்தினார்.

ஸ்வாமிகள் குனிந்த தலை நிமிரவில்லை. குப்பென்று கண் கலங்கிற்று. உதடு நடுங்கிற்று, முகச் சதைகள் கோணின. விசித்து விசித்து அழத் தொடங்கினார்.

“மகாபாவம் – இப்பேர்ப்பட்ட பரம சாதுவை இப்படிச் செய்தவர்களுக்கு, என்ன கிடைக்கப் போகிறதோ?” என்றார் கதை சொல்கிறவர்.

ஸ்வாமி மேலும் விசித்து அழுதார். அவரால் அடக்க முடியவில்லை. எழுந்து தண்டத்தை எடுத்து நின்றார்.

கர்ப்பூர ஆரத்தி ஆயிற்று. எல்லோரும் சிறிது நின்று ஸ்வாமியைப் பார்த்துவிட்டு நகர்ந்தார்கள்.

“என்ன அநியாயம்! இப்படிச் செய்யலாமா?” என்றார்கள்.

ஸ்வாமி பலர் வணக்கங்களை ஏற்று, விடைபெற்றுக்கொண்டு என்னுடன் நடந்தார். கோணல் கிச்சானின் ‘பாட்டரி’ வெளிச்சம் வழி காண்பித்தது.

ஸ்வாமிக்கு வாசல் திண்ணையில் தட்டி மறைவில் கோரைப் பாயைக் கொடுத்துப் படுக்கச் சொல்லி உள்ளே வந்தேன்.

செய்தியைச் சொன்னேன்.

"அழுதாரா! ஸ்வாமிகளா!" என்று வியந்தாள், "மறுபடி சொல்லுங்கள் – கதை சொல்றவர் என்ன சொன்னார்?"

சொன்னேன்.

"கதை சொல்ல ஆரம்பிச்சாலே, குறும்பு, விஷமம் எல்லாம் வந்திடுமோ?" என்றாள்.

பிறகு விழுந்து விழுந்து குலுங்கிக் குலுங்கி, முந்தானையால் வாயைப்பொத்திச் சிரிக்க ஆரம்பித்தாள்.

என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கிறது!

சற்று நின்றவள். "அழுதாரா?" என்று கேட்டுவிட்டு மீண்டும் ஓர் ஆவர்த்தம் சிரித்தாள். கண்ணைத் துடைத்துக் கொண்டாள். இருமினாள்.

"நீங்கள் போய் அந்தத் தாயாதிக்காரா கிட்ட சொல்லி ராஜி பண்ணுங்கள். ஊருக்குள் வராமல் களத்திலாவது உட்கார்ந்து சாகுபடியைக் கவனிக்கட்டும்" என்றாள் அவள்.

அவர் தண்டமும் கமண்டலுமாகக் களத்தில் உட்கார்ந்து, ஆட்களை அதிகாரம் பண்ணுவது போலிருந்தது.

எனக்குக்கூட இரவில் அப்படித் தோன்றிற்று. சொப்பனம் என்று நினைக்கிறேன்.

காலையில் எழுந்து வாசலுக்குப் போனபொழுது, அவர் ஸ்நானத்துக்காக ஆற்றங்கரைக்குப் போகத் தயார் செய்து கொண்டிருந்தார். கோணல் கிச்சான் பந்தல் தலையில் இடித்துவிடாமல் கூனியவாறே அவரைப் பிக்ஷைக்குச் சொல்லிக்கொண்டிருந்தான்.

கல்கி தீபாவளி மலர், 1962

# கண்டாமணி

சமையல் முடிந்துவிட்டது. குழம்புக்கு மாவைக் கரைத்து ஊற்றி இரண்டு கிளறு கிளறிக் கீழே இறக்கி வைத்தார் மார்க்கம். பச்சைக் கொத்தமல்லியை ஒரு பிடி முறித்துப் போட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கி, கடுகைத் தாளித்துக் கொட்டினார். கீரை மசியலும் சாதமும் முன்பே தயாராகிவிட்டன.

“இலை நறுக்கியாச்சா” என்று கொல்லைத் தாழ்வாரத்தில் எட்டிப் பார்த்தார்.

“ஆச்சே” என்று அரிவாள்மணையையும் இலைக் கட்டையும் உட்கார்ந்தவாக்கில் அவரிடம் நீட்டிவிட்டு, சம்சாரம் கையை முந்தானையில் துடைத்துக்கொண்டு கீழே துணியில் கிடந்த குழந்தையை மடியில் போட்டுக் கொண்டு எடுத்துவிடத் தொடங்கினாள்.

மார்க்கம் கிணற்றங்கரைக்குப் போய் வேர்வை, சமையல் அழுக்கு — எல்லாவற்றைம் நீரை விட்டுக் கழுவிக் கொண்டார். விபூதியைப் பட்டை பட்டையாக இட்டுக் கொண்டார். சந்தியாவந்தனம் செய்தார். திரும்பிக் கூடத்துக்கு வந்து முற்றத்து ஓரமாக உட்கார்ந்து ஜபம் செய்யத் தொடங்கினார். சுக்கிர நட்சத்திரம் வெள்ளிப்பொட்டு வைத்திருந்தது. முற்றத்தில் கட்டியிருந்த பசுங்கன்று அவரை நக்கிக் கொடுப்பதற்காகத் தலையைத் தலையை நீட்டிற்று. இழுத்துக் கட்டியிருந்ததால் முடியவில்லை. பசு மூத்திர மணம் சிறு நெடி கலந்து வீசிற்று. அதையும் அந்த ஒற்றைச் சுக்கிரனையும் அந்தி வேளையின் அமைதியையும் பார்த்த பொழுது ஏதோ ரிஷியின் ஆசிரமத்தில் உட்கார்ந்திருப்பது போலிருந்தது மார்க்கத்துக்கு. உடனே மேல் துண்டில் கையை விட்டு, இடது கைவிரலால் எண்ணிக் கொண்டே காயத்ரி ஜபம் பண்ணினார். கண்ணையும் அவ்வப்போது மூடிக்கொண்டார். ஒரு தடவை தொடர்ந்து ஒரு நிமிஷம் மூடியபோது நடையில் செருப்பைக் கழற்றும் ஓசை கேட்டது. மார்க்கம் கதவைத் திறந்தார் “வாங்கோ” என்றார்.

“சாப்பாடு . . .” என்று இழுத்தது வந்தவரின் குரல்.

“தயாராயிருக்கே . . . இதோ!” என்று அவசரம் அவசரமாக ஜபத்தை முடித்து, கூடத்தில் பலகையைப் போட்டு இலை போட்டார் மார்க்கம்.

வந்தவருக்கு நல்ல பசி, சாப்பாட்டில் தெரிந்தது. வாடிக்கை இல்லை. எப்பொழுதோ மாசத்துக்கு ஒன்றிரண்டு முறை வருவார். அந்தப் பழக்கம்தான். சந்நிதிக் தெருவில் குடியிருக்கிறார். உள்ளூர் உயர்தரப் பள்ளிக்கூடத்தில் விஞ்ஞான வாத்தியாருக்கு உதவி செய்கிற வேலை. பார்த்தால் “பாவம்” என்று இரக்கப்பட வேண்டும் போல் இருக்கும். அப்படி ஒரு தயவை எழுப்புகிற தோற்றம். கட்டைக் குட்டையான உடல். சற்று உருண்டையாக, பூசினாற்போலிருக்கும். உருண்டைத் தலை, வழுக்கை, பின் உச்சியில் பூனை மீசை மாதிரி எண்ணி ஐந்தாறு நரை மயிர்கள். கண்ணுக்கு ஒரு வெள்ளி பிரேம் மூக்குக் கண்ணாடி. வலது கண் மட்டும் அந்தக் கண்ணாடி வழியாகப் பெரிதாகத் தெரியும். எப்போதும் ஒரு மோட்டா அரைக்கை காக்கிச் சட்டை. நடக்கிறபோதுகூட குழந்தை நடக்கிற மாதிரி இருக்கும். மேலே பார்த்துக் கொண்டு, அடிப் பிரதட்சிணம் செய்வது மாதிரியான நடை. பள்ளிக்கூடத்து விஞ்ஞான வகுப்பு தெருவை ஒட்டியது. அதில் ஜன்னலோரமாக உட்கார்ந்து தெருவை ஞானப் பார்வையாகப் பார்த்துக் கொண்டிருப்பார். மார்க்கத்துக்கு அவரைப் பார்க்கும்போதெல்லாம் காரணமில்லாமல் ஒரு தயவு சுரக்கும்.

அதனால்தான் இரண்டு மாதங்களுக்கோ, ஒரு மாசத்துக்கோ ஒரு முறை சாப்பிட வரும்பொழுது, ஏதோ ஜடபரதரோ, உள்நோக்கித் திளைக்கும் ‘அவதூதரோ வந்துவிட்டாற்போல் சற்று பயபக்தியோடு சாதம் போடுவார். பொதுவாக, தெருவோடு போகிறவர்களுக்கு மார்க்கம் சாதம் போடும் ஓசையைக் கேட்டால் இலையில் முறம் முறமாகச் சாதத்தைச் சரித்து கொட்டுகிற மாதிரி கேட்கும், உள்ளே வந்து பார்த்தால் ஒழியச் சேதி புரியாது. மார்க்கம் ஈயம் பூசிய பித்தளை முறத்தில் சாதத்தைக் கொண்டு வருவார். அந்த முறம் நடுவில் ஒடிந்து கொஞ்சம் குழிவாக இருக்கும். சாதம் சரிவதற்காக அவரே செய்த யுக்தி. அந்த முறத்தை ஏந்தி இரண்டே எட்டில் கூடத்துக்குத் தாண்டி வருவார். டம டமவென்று தட்டுவார். ஆர்ப்பாட்டம் செய்வார். ஆனால் தனக்கு எஜமானன் மார்க்கத்தின் கையோ, கரண்டியோ அல்ல, மார்க்கத்தின் மனசுதான் என்று சாதத்துக்குத் தெரியுமாதலால், கால் கால் கவளமாகத்தான் இலையில் விழும். சாதம் மட்டுமல்ல; கறி, பருப்பு, நெய், கூட்டு – எல்லாவற்றுக்கும் மார்க்கத்தின் மனசு தெரியும். “இப்படிக் கிடந்து கத்துகிறேன், பேசாமல் இருக்கிறாயே போதும் என்று சொல்லேன்” என்று சொல்வது போல் முறமும் கரண்டியும் சத்தம் போடும். போடுகிற வரையில் போடட்டுமே என்று பேசாமல் இருப்பதற்கு நாம் என்ன

அத்தனை இங்கிதம், தெரியாதவர்களா? இந்தப் பொதுவான சங்கோசத்தைப் பயன்படுத்தி நெய் போடக் குறும்பைவாங்கியையும் கறி – கூட்டு போட நெய் முட்டையையும், நெய் அல்லது ஊறுகாய் போட அதன் காம்பையும் மார்க்கம் கையாண்டு வந்தார். கொட்டிக் கொட்டி அளப்பானேன்? ஹோட்டல் சாப்பாட்டுக்கு நொட்டை கொட்டிக் கொண்டு இங்கே வர முடியாது. "ஹோம்லி"யாகவும் பத்தியமாகவும் சாப்பிடும் கட்டுப்பாடு வேண்டும்.

ஆனால் இவருக்கு மாத்திரம் மார்க்கம் இந்தக் கட்டுப்பாடுகளிலிருந்து விலக்கு அளித்திருந்தார் என்று அந்த முறம் முட்டைகளைக் கேட்டால் தெரியும். சத்தமே போடாமல் அவை இயங்கிய அடக்கத்தையும் பணிவையும் கேட்க வேண்டும்.

அவர் நன்றாகச் சாப்பிட்டார். குழம்பு நன்றாக இருக்கிறதென்று மோர் சாதத்துக்கும் கொஞ்சம் கேட்டார். போட்டுவிட்டு வந்து, மார்க்கம் குழம்பைத் தற்செயலாகக் கிளறிக் கரண்டியைத் தூக்கிய பொழுது அதிலிருந்து நீளமாக ஏதோ குழம்புக்குள் விழுந்தது. மீண்டும் கிளறித் தூக்கி வெளிச்சத்தில் உற்றுப் பார்த்தார் மார்க்கம். இதென்ன இது! நீளமாக, வழவழவென்று – சூட்டில் வதங்கி, பளபளப்பு சற்று மங்கி! பாம்புக் குட்டியா, அரணையா? அரணைக்கு கால் உண்டு. இதற்கில்லை. பாம்புக் குட்டி மாதிரிதான் இருக்கிறது. ஒரு மேகம் ஓடும் போது நிழல் பூமியில் ஓடிப் பரவுவது போல், உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் மார்க்கத்துக்கு ஒரு நிழல் ஓடிற்று! நிழல்தான்! வேறு எப்படிச் சொல்கிறது? பயமா, கிலியா, கவலையா – என்னவென்று சொல்கிறது? நிழல்தான், மனைவியைச் சமிக்ஞை செய்து கூப்பிட்டார். கரண்டியில் உள்ள ஜந்துவைக் காண்பித்தார். பார்த்த மாத்திரத்தில் அவள் கண்கள் அகன்றன. வாய் திறந்தது. பொத்திக்கொண்டாள். மார்க்கமும் இடது கையால் அவள் வாயைப் பொத்தினார். வேக மூச்சுடன் அவள் உடம்பு இரைத்தது. படபடப்பு மண்டை உச்சிக்கு ஏறிற்று. தூணைப் பிடித்துக் கொண்டாள். பாம்புக் குட்டிதான்.

சாப்பிட்ட கிழவர் கைகழுவிவிட்டு, ஏப்பம் விட்டுக்கொண்டே செருப்பை மாட்டிக் கொண்டு வாசற்படியில் தடவித் தடவி இறங்குவதைப் பார்த்தாள். மறுகணமே பாம்பைக் கரண்டியோடு எடுத்து இருட்டைப் பாராமல் கொல்லைக் கோடி வரை நடந்து குப்பைக் குழியில் எறிந்தாள். குப்பை, சத்தை எல்லாவற்றையும் ஐம்பது அறுபது பிடி படபடத்துக் கொண்டே எடுத்துப் போட்டாள். உள்ளே வந்தாள். குழம்பை எடுத்துச்

சாக்கடையில் கொட்டினாள்.

“ஏதாவது ஆயிடுமோ?” என்று கேட்டாள். அந்தக் குரல்கூட நெஞ்சை விட்டு வரவில்லை.

“ஸ்வாமிதான் . .!” என்று சொன்ன மார்க்கத்தின் முகம் அழுவது போல் இருந்தது.

விலங்கு, சிறை, சாபங்கள் – எல்லாம் வளைந்து வளைந்து நடுவில் வந்தன. அவளுக்குக் கை நடுங்கிற்று.

“ஸ்வாமியை வேண்டிக்கட்டும்”

இருவரும் பூஜைப் படங்கள் கீழ்த்தட்டில் வைத்திருக்கிற சாமான் அலமாரியின் முன் நின்றார்கள்.

“மானமாகக் காலம் தள்ளியாச்சே, இத்தனை காலமா! இப்படிச் சோதிக்கிறேளே!” என்று அலமாரியைப் பார்த்து அழுதாள் அவள்.

“பஞ்ச லோகத்திலே கண்டாமணி வாங்கித் தொங்கவிடறேன் கைநீளத்துக்கு. சேதி பரவாமல் இருக்கணும், யுகேச்வரா!” என்று வேண்டிக்கொண்டார் மார்க்கம்.

அதைக் கேட்டாள் மனைவி. “பகவானே! இரண்டாம் காதுக்குத் தெரியப்படாது, சேதி! கண்டாமணி பண்ணித் தொங்கவிடறோம் அப்பனே, யுகேச்வரா, சர்வேசா, தீனபந்தோ, மார்க்கபந்தோ!” என்று வேண்டிக் கொண்ட மனைவிக்குக் கடைசியில் கணவனின் பெயரைச் சொல்லி விட்டதற்காக அந்தப் பரவசத்துக்கு நடுவில் சற்றுநாணமும் படர்ந்தது.

வேறு குழம்பு வைத்தார்கள். அதே கும்மட்டிக்காய்க் குழம்புதான். வாடிக்கைக்காரர்கள் இருபத்து நாலு பேரும் வந்து சாப்பிட்டு விட்டுப் போனார்கள்.

என்னதான் வேண்டிக் கொண்டாலும் சந்தேகமும் பயமும் எப்படிக் போகும்? இரவு முழுவதும் சரியாகத் தூக்கமில்லை. மனைவி மட்டும் பகவான்மீது பாரத்தைப் போட்டு விட்டுச் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

மார்க்கம் புரண்டு படுத்துக் கொண்டிருந்தார். அவருக்கு சந்நிதித் தெருவுக்குப் போய்ப் பார்க்க வேண்டும் போலிருந்தது. என்ன பாபம் செய்து இந்த அஜாக்கிரதை வந்தது? அரை வயிறு அரை வயிறாகச்

சாப்பிட்டவர்களின் தாப மூச்சா? அத்தனை பேருக்கும் இல்லாத துணிச்சலுடன், "என்ன கோழிக்குப் போடறாப்பல போடறேள்? வாங்கற காசு செரிக்கணும். இப்படி வயித்துச் சுவருக்கு வெள்ளையடிக்கிறாப்பல மட்டும் போட்டு என்ன பண்ணறது?" என்ற அந்த நூல்கடை வேம்பு ஐயரின் தாயில்லாப் பிள்ளை நட்டாணி சொன்னானே – இலை முன் உட்கார்ந்து – அந்தக் கோபாக்கினியா?

மறுநாள் காலை விஞ்ஞான வாத்தியாரின் உதவியாளர் காலமாகி விட்டார் என்ற செய்தி வந்தது. இரவு இரண்டு தடவை கொல்லப் பக்கம் போய் வந்தாராம். தண்ணீர் சாப்பிட்டாராம். படுத்தாராம், தூங்கினாராம், எழுந்திருக்கவேயில்லை. மாரடைப்பினால் இறந்துவிட்டதாக டாக்டர் சொன்னார். ஊர் எல்லாம் சொல்லிற்று. உலகத்தில் நடக்கிற அத்தனை குற்றங்களுக்குக் காரணங்களையும் கர்த்தாக்களையும் கண்டுபிடிக்க முடியும் என்றிருந்தால், எல்லா வீடுகளையும் சிறைக் கூடமாகத்தான் மாற்ற வேண்டும்.

யுகேச்வரர் காப்பாற்றிவிட்டார்.

0 0 0

ஒரே மாசத்தில் கண்டாமணி தயாராகிவிட்டது. பஞ்சலோகமோ என்னவோ? மணி பாரி மணி. ஒன்றரை முழம் உயரம். இரண்டு ஆட்கள் முக்கித் தூக்க வேண்டு அவ்வளவு கனம். பார்க்க எத்தனை கம்பீரம்! நாதம் அதைவிடக் கம்பீரம்! வார்த்த ஆசாரி சாமானிய ஆசாரி இல்லை. வைத்திலிங்க ஆசாரி. எப்படித்தான் அந்த அழகைக் கொண்டு வந்தானோ? முற்றத்தில் அதைக் கொண்டு வைத்து விட்டுப் போனார்கள் ஆசாரியின் ஆட்கள்! மார்க்கம் பார்த்தார். கண்ணை அப்பால் இப்பால் எடுக்க முடியவில்லை. அப்படி ஒரு பெருமிதத்தோடு அது வீற்றிருந்தது. சில சமயம் நந்தி மாதிரி தோன்றும்! சில சமயம் ஆந்திரதேசத்து வாட்டசாட்டமான பெண்ணரசி மாதிரி தோன்றும். சில சமயம் கோவில் கோபுரம் போல் தோன்றும். சுண்ணாம்புபோல் ஏதோ வெள்ளையாக மேலே பூசி அதை வைத்திருந்தான் ஆசாரி. "மார்க்கபந்து விலாஸ், மார்க்கபந்து திருப்பணி" என்று அதன் வாயின் விளிம்பு முழுவதும் ஒரு சுற்றாகப் பொறித்திருந்தது. கெட்ட செய்தி வராமல் தடுத்து அவமானம் வராமல் காப்பாற்றிய யுகேச்வரனின் குரலே வடிவெடுத்தாற்போல் வீற்றிருத்தது. யுகேச்வரரின் கருணையின் உறுதியை மௌனமாக முழங்கிற்று.

அறுநூறு ரூபாய்க்குள் முடிந்துவிட்டது மணி. அதற்காக என்ஜினீயர் அப்பாசாமிக்கு அஞ்சலி செய்தார் மார்க்கம். அப்பாசாமி வீட்டில் இருபத்தைந்து வருடங்கள சமையல் பண்ணிப் போட்டார் அவர். கடைசியில் மூவாயிரம் ரூபாயை இனாம் கொடுத்து, "இனிமேல் சொந்தமாகத் தொழில் பண்ணிக் கொண்டு சௌக்கியமாயிரு" என்று ஆசீர்வாதம் செய்தார் அப்பாசாமி. அது வீண் போகவில்லை. மார்க்கம் ஒரு பெண்ணைச் சாப்பாட்டுக்குக் குறைவில்லாத இடமாகக் கலியாணம் செய்து கொடுத்தார். ஒரு பையனைப் படிக்க வைத்தார். அவன் மதுரையில் பாங்கியில் வேலையாயிருக்கிறான். பிறகு பிறந்த நாலைந்தும் போய், இப்போது கூடத்தில் தூளியில் கிடந்து கத்துகிற பாலாரிஷ்டத்தேவாங்குதான் மிச்சம். 'ஓகோ' என்று அதிர்ஷ்டம் அடிக்காவிட்டால் பாதகமில்லை. அவமானம் வராமல் காத்தானே சர்வேசுவரன். அறுநூறு என்ன, ஆறாயிரம் கொடுத்தாலும் பொருந்தும்.

வாடிக்கைக்காரர்களில் மணியைப் பார்த்து வியக்காதவர்கள் இல்லை. மணி செய்து கட்ட வேண்டும் என்று யாருக்குத் தோன்றும்! கண் மலர் சாத்துவார்கள், வடைமாலை சாத்துவார்கள். சத்திரம் கட்டுவார்கள். சந்தனக்காப்பிடுவார்கள் – ஆனால் கண்டாமணி செய்து வைக்க வேண்டும் என்று தோன்றுமோ!

"சும்மாத்தான். ஏதோ தோணித்து, ஸ்வாமிக்கு நம்ம கையாலே செய்யணும்னு!" என்று விசாரித்தவர்களிடமெல்லாம் அடக்கமாகச் சொல்லிக் கொண்டார் மார்க்கம்.

சாப்பிட வருகிறவர்கள் தடவிப் பார்த்தார்கள்; சுண்டிப் பார்த்தார்கள். சற்று அழுத்தி நகர்த்த முடிகிறதா என்று பார்த்தார்கள்.

"பார்வைக்கு ரொம்ப லட்சணம்!" என்று பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

"அது என்ன இப்படி ஒரு தர்மம் பண்ணணும்னு தோணித்து?" என்று வியப்பும் ஆவலுமாகக் கேட்டார்கள்.

"நம்மை எப்படியாவது காப்பாத்திடணும்னு பகவானுக்குத் தோணறபோது, நமக்கு இது தோணப்படாதா? நடந்துண்டே பொத்துன்னு விழுந்து செத்துப் போயிடறான். ஒவ்வொரு அடி எடுத்து வைக்கிறபோதும் அதை உள்ளங்கையாலே தாங்கித் தாங்கிக் காப்பாத்துறாரே ஸ்வாமி! குடிக்கத் தண்ணி கொண்டாங்கறான். கொண்டு கொடுக்கிறதுக்குள்ளே தலை சாஞ்சுப்பிடறது! அப்படிச் சாயாம யாரு காப்பத்தறா? ஒரு உதாரணத்துக்குச் சொல்றேன். பள்ளிக்கூடத்து

அட்டெண்டர் இருந்தாரே ஐராவதம், செத்துப் போறதுக்கு முதல் நாள் ராத்திரி இங்கே வந்து சாப்பிட்டுப் போனார். மறுநாள் காலமே செத்து போயிட்டார். டாக்டர் வந்து பார்த்திருக்கார். ‘ஹார்ட் அட்டாக்’னு சொன்னாராம். இல்லாட்டா என்ன சொல்லுவா? மார்க்கம் கடையிலே சாப்பிட்டார்டா மனுஷன், அடுத்த வேளைக்கு உசிர் நிக்கலேன்னு தானே சொல்லுவா!” என்று மூக்கு மலர, புகையிலை வாய் கவலையில் திறக்கச் சொன்னார் மார்க்கம்.

சேச்சே! அப்படிக்கூடவா புத்தி கெட்டுப் போயிடும் ஜனங்களுக்கு?”

“போயிடாது ஸ்வாமி! இருந்தாலும் என்னத்தைக் கண்டோம்? ஒரு பேச்சுக்குச் சொல்றேன்.”

“அது சரி – ”

“மார்க்கம் எப்படின்னு எல்லாருக்கும் தெரியும். இருந்தாலும் சொல்றேன்? எப்ப எது நடக்கும், யார் என்ன பேசுவான்னு சொல்ல முடியலியே, அப்படின்னாயிருக்கு காலம்! ஐராவதம் எப்பவாவது சாப்பிட வருவார். அவர் நடந்து வரதைப் பார்த்தாலே கவலையாயிருக்கும். சாப்பாடு சாப்பிட்டு இறங்கிப் போற வரைக்கும் வயித்திலே நெருப்பைக் கட்டிண்டு உட்கார்ந்திருப்பேன். நல்லபடியாப் போகணுமே, பகவானேன்னு ஸ்வாமியை வேண்டிண்டேயிருப்பேன். அவர் உடம்பையும் தள்ளாமையையும் பார்த்தா அப்படிப் பயமாயிருக்கும்.”

“உட்கார்ந்து பேசிண்டேயிருந்தால் என்ன பண்றது? சாதம் அளிஞ்சு போயிடும் போலிருக்கே. இறக்க வாண்டாமா?” என்று உள்ளேயிருந்து குரல் கொடுத்தாள் மனைவி.

“இதோ வந்தாச்சு” என்று உள்ளே எழுந்து போனார் மார்க்கம்.

அந்த வாடிக்கைக்காரர்கள் இரண்டு பேரும் எழுந்து போனார்கள்.

“இத பாருங்கோ – முன்னாலே அந்த மணியைக் கொண்டு போய்க் கோவில்லே வச்சுட்டு வாங்கோ. அப்பா குதிர்க்குள்ளே இல்லேன்னு நீங்க பேசறதைப் பார்த்தா எனக்கு வயத்தை என்னமோ பண்றது!” என்றாள் அவள்.

“நான் என்ன சொல்லிப்ட்டேன், இப்ப?”

“இதுவரையில் சொன்னது போரும். முதல்லெ மணியைக் கொண்டு போய்க் கோவில்லே கொடுத்துட்டு வாங்கோ. அது கண்ணிலே

படறதுனாலேதானே என்ன ஏதுன்னு கேக்றா; உங்களுக்கும் பேசாம இருக்க முடியல்லே."

"நான் என்ன அத்தனை அசடுன்னு நினைச்சியா?"

"நீங்க கெட்டிக்காராதான். ஆனா முன்னாடி, அதைக் கொண்டு கொடுத்துட்டு வாங்கோ . . ."

"நல்ல வேளை பார்த்திருக்கே."

"கட்றதுக்குன்னா நல்ல வேளை, கொடுக்கறதுக்கு என்ன?"

அன்று மாலையே மணி கோவிலுக்குப் போய்விட்டது. இரண்டு நாட்கள் கழித்து வெள்ளிக்கிழமையன்று, பிராகாரத்தில் இருந்த மேடைமீதும் ஏறிவிட்டது. கயிற்றைக் கட்டிக் கொடுத்து, மார்க்கத்தையே இழுக்கச் சொன்னார்கள், அவர் இழுத்தார்.

"டண்ண்ண்ண்ண்ண்ண் . . ."

அதன் கார்வை மெலிந்து மெலிந்து மறைய ஒரு நிமிடம் ஆயிற்று. அதிலே ஏறி உட்கார்ந்து கொண்ட அவருடைய மனம் அந்தக் கார்வையோடேயே வெட்ட வெளியில் சிறிது நேரம் மறைந்து போய்விட்டது. கண்ணை மூடிக் கொண்டிருந்த அவர் மறுபடியும் யாரோ கயிற்றை இழுத்து நாதம் கிளப்பியதும்தான் திடுக்கிட்டுக் கண்ணைத் திறந்தார். கோவில் தர்மகர்த்தாவின் கையிலிருந்தது கயிறு.

காலையில் விச்வரூப தரிசனத்துக்கே அந்த மணியைத் தான் அடித்தார்கள், உச்சிப் பொழுதில் அடித்தார்கள். மாலையில் அடித்தார்கள். அர்த்தஜாமத்துக்கும் அடித்தார்கள்.

காலையில் கேட்டபொழுது கோவிலில் இருந்தமாதிரியே மார்க்கம் கண்ணை மூடிக் கார்வையில் ஏறிக்கொண்டு, காற்றுவெளியில் 'உம் உம்' என்று வியாபித்துக் கொண்டார். பிற்பகலும் அப்படியே ஏறிக்கொண்டார்.

மாலையில் அந்தி வேளைக்குத் துணியில் கையை விட்டு ஜபம் செய்துகொண்டே முற்றத்துக் திறப்பு வழியாகப் பார்த்தார். வானம் தெரிந்தது. வெள்ளி தெரியவில்லை. டாண் என்று மணி தங்கப் புகைபோல் மிதந்து வந்தது.

"சாப்பிடலாமா?" என்று செருப்பு ஓசையைத் தொடர்ந்து குரல் கேட்டது. ஐராவதம் காக்கி சட்டையும், கண்ணாடிக்குள் ஒற்றைப் பெரிய கண்ணும்

பூனை மீசை வழுக்கைத் தலையுமாக எட்டிப் பார்த்தார்.

மார்க்கத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. இடை கழியில் யாரும் இல்லை. ஐராவதம் போய் ஒன்றரை மாதமாகி விட்டது. கண்ணை இறுக்கி மூடிக்கொண்டார். மணி அலையில் ஐராவரம் வருவதை எப்படித் தடுக்கிறது? ஐராவதம் இப்பொழுது எட்டிப் பார்த்துச் சாப்பாடு கேட்கவில்லை. கடலலையில் ஏறி ஏறி இறங்கும் கட்டைபோல் படுத்தவாக்கில் மேலும் கீழுமாக அலைபடுகிறார். படுகிறார் இல்லை. படுகிறது. அது ஐராவதம் இல்லை. ஐராவதத்தின் உடல், கடலலையுமில்லை. கும்மட்டிக் காய்க் குழம்பின் அலை. மார்க்கத்துக்குப் பனிக்கட்டியை வைத்தாற்போல முதுகு ஒரு தடவை சொடுக்கி எடுத்தது. கண்ணைத் திறந்து கொண்டார். எழுந்தார். சமையலறையில் போய் இடுப்பில் கையை வைத்து அடுப்பைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்.

“என்ன பார்த்துண்டே நிக்கறேள்?” என்று மனைவியின் குரல் வந்தது.

“ம்”

“அப்பவே பிடிச்சுப் பார்க்கிறேன். அப்படியே அடுப்பைப் பார்த்துண்டிருக்கேளே. என்ன இருக்கு, அடுப்பிலே!”

“ஒண்ணுமில்லையே!”

அவள் அருகே வந்து அவர் முகத்தைப் பார்த்தாள்.

“என்ன பார்க்கறேள்?”

“ஒண்ணுமில்லையே . . .”

“ஏன் இப்படி . . .” என்று பூஜை அலமாரியிலிருந்து விபூதியை ஒரு சிட்டிகை எடுத்து வந்து அவர் நெற்றியில் இட்டார் அவள்.

“மணி நீங்கல்ல வாங்கி வச்சீங்களாம்?” என்று சாப்பிட வந்த மளிகைக் கடைக் கணக்குப்பிள்ளை கேட்டார்.

“ஆமாம்”

“அம் . . . மா. கணார்னு எப்படிக் கேக்குது! நான் திருவாரூர், மலைக்கோட்டை மணியெல்லாம் கேட்டிருக்கேன். இந்த மாதிரி ம்ம்ம்ம்னு சுருளாது அதெல்லம்.”

“மலைப் பாம்பு மாதிரி சுருள்றது. இல்லை?” என்றார் மார்க்கம்.

“ஆமா, ஆமா. பெரிய மலைப்பாம்பு கணக்காத்தான் வருது. சத்தம் அந்த மாதிரிதான் இருக்கு. பாரியாகனமா – ”

“தக்ஷகன், வாசுகி அந்த மாதிரி.”

“யாரு?” என்று புரியாமல் கேட்டார் கணக்குப்பிள்ளை.

“தக்ஷகன் தான் பரீட்சித்தைக் கடிச்சான். வாசுகியைத்தான் மந்தர மலையைச் சுத்திக் கயிறாப் போட்டுச் சமுத்திரத்தைக் கடைஞ்சு, ஆலகாலம், அமிர்தம் எல்லாம் எடுத்தா தேவாளும் அசுராளும்.”

“ஆமாமாம். மறந்து போச்சு. வாசுகியா அது!”

“அப்படின்னா மத்த கோயில் மணி எல்லாம் குட்டிப் பாம்பு. நம்ப மணி மலைப்பாம்புன்னு சொல்றேள். என்றார் மார்க்கம்.

“இலை போடலாமா?” என்று மார்க்கத்தின் மனைவியின் குரல் வந்தது.

“போடலாமே!”

“நான் கைவேலையாயிருக்கேன். இப்படி வரட்டுமே.

“இதோ” என்று மார்க்கம் உள்ளே போனார்.

“மணிக்கு உதாரணம் பேர் சொல்ல இதுகள்தானா ஆம்பிட்டுது. ராத்திரி வேளையிலே என்ன இது, தட்சகன், வாசுகின்னு?”

“அவர் சொல்லலேடீ, நான் தான் சொன்னேன்.”

“சரி, சரி.”

கணக்குப்பிள்ளை சாப்பிட்டுப் போனார்.

இரவு பத்து மணிக்கு மீண்டும் பிரம்மாண்ட ஓசையாக வந்தது, அர்த்தஜாம அமளி . . .

மார்க்கம் படுத்துக் கொண்டிருந்தார். சற்றைக்கொருதரம் எழுந்து, அந்தப் பழைய சாந்தி கல்யாண மெத்தையைத் தூக்கிப் பார்ப்பார். மீண்டும் படுப்பார்.

“என்னடீ, அங்கே?”

“எங்கே?”

“அதோ பாரு, முத்தத்திலே.”

“ஒண்ணுமில்லையே.”

“இல்லே. அசையறது பாரு. விளக்கை எடு.”

விளக்கை எடுத்ததும் அது மறைந்து விட்டது. மாட்டியதும் மீண்டும் தெரிந்தது.

“அத பாரு.”

மனைவி பார்த்தாள். மேலும் கீழும் பட்சியைத் தொடர்கிற மாதிரி பார்த்தாள். எழுந்து தூணிலிருந்து தொங்கின நாரை வரக்கென்று இழுத்து அறுத்தாள்.

“இதோட நிழல்தான்.”

“அப்பா, என்னமோ ஏதோன்னு பயந்து போய்ட்டேன்.”

பிறகும் தூங்கவில்லை அவர். விளக்கைப் பெரிது பண்ணினார்.

படுத்துக் கொண்டார்.

மனைவியும் குழந்தையும் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

“ம்மா” என்று மாடு கத்திற்று. பால் கறக்கிற நேரம். அதற்குள்ளாகவா?

அவர் தூங்கத்தான் இல்லை.

விச்வரூப பூஜை கணார் என்று கேட்டது.

மார்க்கம் எழுந்து பல்லைத் தேய்த்தார். வெற்றிலையைப் போட்டு புகையிலையை அடக்கிக்கொண்டே போனார். தர்மகர்த்தாவின் வீட்டுக்குப் போனார்.

“வாங்க” என்றார் திண்ணையில் ஆளோடு பேசிக்கொண்டிருந்த செட்டியார். வாசலில் அவர் மனைவி சாணம் தெளித்துக் கொண்டிருந்தாள். “உங்க மணியைப் பார்த்துப் பேசாதவங்க இல்லே சாமி. ராத்திரி அம்மாப் பேட்டையிலே படுத்திட்டு இருந்தானாம். எத்தினி மைல் அது? ஒம்போது கல்லு . . . ஏண்டா!”

“ஆமாஞ்சாமி. எம்மாஞ் சத்தம்! சும்மா தும்தும்னு மிதந்துகிட்டு வந்தது. என் தம்பி மவன்கிட்டகூட சொன்னேன். ‘எலே தனிக்ளாசு! ஞானியாப் போய்ட்டமேடா. இந்த மணியைக் கேட்டா, ஏன் போம்னோம்னு இருக்குடால’ அப்படீன்னு சொன்னேன்னா பாத்துங்களேன்.”

“போடு, சக்கை! என்னா சொல்றான் புரிஞ்சுதா சாமி? இவன் ஞானியாப் போயிட்டானாம். இவங்க அப்பன் நாள்ளேயிருந்து கிறிஸ்தவனாயிட்டானாம். உங்க மணியைக் கேட்டப்புறம் திரும்பி வரலாம்னு தோணுது. அப்படித் தானேடாலே.”

“அப்படித்தானுங்க.”

“அது விஷயமாத்தான் பேச வந்தேன். செட்டியார்வாள். அதைக் கேக்கற போதெல்லாம் நாமதான் பண்ணி வச்சோம் வச்சோம்னு அகங்காரம் வந்து நிக்கறது. அது ரொம்பத் தப்பு இல்லையோ?” என்றார் மார்க்கம்.

“அட நீங்க என்ன சாமி, குப்பைத் தொட்டி வாங்கி வக்கிற பயலுவள்ளாம் ஊரைக்கூட்டி மோளம் அடிக்கிறான். முள நீளத்துக்கு சாஸனம் எழுதி வக்கிறான்கள்.”

தர்மகர்த்தாவின் மனைவி டப்பாவைத் திறந்து கோலமாவை எடுத்துப் புள்ளிகள் வைத்த பிறகு இப்பொழுது நெளி நெளியாகக் கோடு இழுத்துக் கொண்டிருந்தாள்.

“என்னமோ எனக்கு நான் செஞ்சு சரியாப்படலே. எத்தனை பெரிய மனுஷாள்ளாம் இருக்கா. நான் அதிகப் பிரசங்கி மாதிரி என்னமோ செஞ்சுட்டனேன்னு இருக்கு. ஒவ்வொரு தடவையும் மணியோசை கேக்கறச்சே எல்லாம் இந்த நினைப்பு வந்துண்டேயிருக்கு. அதுக்குத்தான் வேறுதினுசா ஒரு யோசனை தோணித்து. சொல்லலாம்னு வந்தேன்.”

“என்னய்யா இது!”

“அதே பெறுமானத்துக்குச் சின்னச் சின்னதா நாலஞ்சு வெள்ளிமணி பண்ணி வச்சுடலாம்னு பார்த்தேன். பிள்ளையாருக்கு ஒண்ணு; பகவானுக்கு ஒண்ணு; அம்பாளுக்கு ஒண்ணு – சுப்மண்யருக்கு ஒண்ணுன்னு. இதை நான் எடுத்துண்டு போயிடறேன்.”

“என்ன இது!”

“ஆமாம், செட்டியார்வாள்! என் அந்தஸ்து என்ன! நான் மூலையிலே கிடக்கிறவன்.”

“வெள்ளிமணி பண்ணி வையிங்க. வாண்டாம்னு சொல்லலே. இதைத் திருப்பி எடுத்துக்கிட்டுப் போகவாவது! எங்கப்பன் உங்க மனசிலே பூந்து ஒண்ணு பண்ணிக்கிட்டிருக்கான் . . . ரொம்ப நல்லாயிருக்கு. யாராவது

கேட்டா சிரிக்கல்ல சிரிப்பாங்க. அய்யருக்குச் சித்தம் கலங்கிப் போயிடிச்சான்னுல்ல கேப்பான்கள்? இதுக்காகவா கண்ணைப் பிட்டுக்கிட்டுப் பொல பொலன்னு வந்தீங்க. ஞானியாகப் போனவனே அஞ்ஞானியா ஆயிடணும்போல இருக்குங்கறான்."

மார்க்கம் வெளிரிப் போய் நின்றார்.

செட்டியாரோடு பேசப் பேச அவர் பிடிவாதம்தான் இறுகிக் கொண்டிருந்தது.

மார்க்கம் சோர்ந்துபோய் வீட்டுக்குத் திரும்பினார்.

அவர் குளிக்கும் போது காலைப் பூஜை நேரத்து மணியோசை கணார் என்று வந்து அவர்மீது அதிர்ந்தது. முழுச்செவிடர்கள் எப்படியிருப்பார்கள் என்று கற்பனை செய்து பார்க்க முயன்றார் அவர்.

**கல்கி தீபாவளி மலர், 1966**

# யோஷிகி

கியோத்தோ ஸ்டேஷனில் இறங்கியதும் ஒரு டாக்ஸியைப் பிடித்து, கொக்குஸாய் ஹோட்டலுக்கு விடச் சொன்னேன். ஐந்தே நிமிஷங்களில் ஹோட்டல் வந்துவிட்டது. வரவேற்பு மேஜையண்டை போனேன்.

என் பெயரைச் சொல்லி, "இந்தியாவிலிருந்து வந்திருக்கிறேன்" என்று ஆரம்பிப்பதற்குள் ஹோட்டல் சிப்பந்தியே மீதியைப் பேசிவிட்டான்.

"தெரியுமே. டோக்கியோவிலிருந்து நீங்கள் எழுதிய கடிதம் வந்தது. உங்கள் அறை தயாராயிருக்கிறது. மூன்றாவது மாடியில். இந்த ஆள் உங்களை அழைத்துக்கொண்டு போவான். யோஷிகி என்பவர் உங்களை இன்று மாலை நாலு மணிக்கு வந்து சந்திப்பதாக எழுதியிருந்தாராமே?"

"ஆமாம்"

"அவருக்கு இன்று வர முடியவில்லையாம். போனில் கூப்பிட்டுச் சொன்னார். நாளை வருகிறாராம். மன்னித்துக் கொள்ளுமாறு உங்களிடம் கேட்டுக் கொள்ளச் சொன்னார். ஏதோ அவசர வேலையாம். உங்களை இன்று சந்திக்க முடிய வில்லையாம்.'

"பரவாயில்லை. நாளைக்கே வரட்டுமே."

"நாளைக் காலை பத்து மணிக்கு உங்களைச் சந்திப்பதாகச் சொன்னார்."

சென்னையிலிருந்து புறப்படும்போது குருமூர்த்தி டோக்கியோ, ஓஸகா, கியோத்தோ நகரங்களில் உள்ள சில ஜப்பானிய நண்பர்களின் விலாசங்களைக் கொடுத்திருந்தான்.

டோக்கியோவிலிருந்து கியோத்தோ போகுமுன் யோஷிகிக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன். கியோத்தோவுக்கு வரும் தேதியைக் குறிப்பிட்டு, கொக்குஸாய் ஹோட்டலில் தங்கப் போவதாக அவருக்கு எழுதியிருந்தேன். வந்த அன்று மாலை சந்திப்பதாக யோஷிகியிடமிருந்து உடனே பதில் வந்துவிட்டது. என்ன அசௌகரியமோ! யோஷிகி மின்சாரச் சாமான் வியாபாரியாம். பி.ஏ. படித்திருக்கிறாராம். இங்கிலீஷ் பேசுவாராம். மூன்றாம் வருடம் இந்தியாவுக்கு வந்திருந்தாராம். சென்னைக்கு வந்து ஒரு வாரம் இருந்தாராம், மூன்று நாட்கள் குருமூர்த்தியோடேயே அவன் வீட்டில் தங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தாராம். "கியோத்தோவில்

அவரைப் பிடித்துக்கொள். ஓர் இடம் மீதி இல்லாமல் சுற்றிக் காண்பிப்பார்" என்று சொல்லியிருந்தான் குருமூர்த்தி.

யோஷிகி நாளைக் காலையில்தான் வரப் போகிறார். அது வரையில் எப்படிப் பொழுதைப் போக்குகிறது?

பொழுது போக்குவது அப்படி ஒன்றும் சிரமமாக இல்லை. மூன்றாவது மாடியில் தங்குபவர்களை கவனிப்பதற்காக இரண்டு மூன்று பெண் சிப்பந்திகள் இருந்தார்கள்.

அறைக்குள் நுழைந்து முகத்தைக் கழுவி துடைத்துக் கொண்டு படுத்தேன். அப்படி ஒன்றும் களைப்பாகவும் இல்லை. சும்மா கண்ணை மூடிக் கொண்டேன்.

"டொட், டொட் . . ."

"யார்?"

"உள்ளே வரலாமா?" – பெண் குரல்.

"வரலாம்"

ஒரு பெண் வந்தாள். ஹோட்டல் சிப்பந்தி.

"ஏதாவது சாப்பிடுகிறீர்களா?"

"என்ன இருக்கிறது?"

என் தலைமாட்டில் வந்து சுவரில் தொங்கிய உணவுப் பட்டியலை எடுத்துக் கொடுத்தாள். பார்த்தேன்.

"எனக்குப் பிடித்தது ஒன்றுமே இல்லையே!"

"ஏன்?"

"நான் சாகபட்சிணி. இதில் பன்றி, மாடு, கோழிக்குஞ்சு – இப்படியே இருக்கின்றனவே!"

"ஏன், மீன் சாப்பிடலாமே?"

"மீன் தாவரமா?"

"மீன் கூடவா சாப்பிட மாட்டீர்கள்?"

"ம்ஹூம்"

“சரி. ஆம்லெட் இருக்கிறதே.”

“அது முட்டையிலிருந்து செய்கிறதல்லவா . .?”

“முட்டை கூடவா சாப்பிடமாட்டீர்கள்?”

“ம்ஹூம்”

“முழு சைவமா நீங்கள்?”

“ஆமாம்”

“எனக்கு ரொம்பவும் வருத்தமாக இருக்கிறதே!”

“எதற்கு?”

“நீங்கள் சாப்பிடும்படியாக இங்கு ஒன்றும் இல்லையே.”

“பிஸ்கட் இருக்கிறதா?”

“இருக்கிறது. பிஸ்கத்து, சுருள் ரொட்டி எல்லாம் இருக்கிறது.”

“பிஸ்கத்தும் காப்பியும் கொண்டா.”

“போதுமா?”

“என்ன செய்கிறது?”

“எனக்கு ரொம்ப வருத்தமாக இருக்கிறதே.”

“வருத்தப்படாதே. பிஸ்கத்தும் இரண்டு காப்பியும் கொண்டா.”

“சரி. இதோ வந்து விடுகிறேன்.”

“காப்பிக்கு பால் வேண்டும். கறுப்புக் காப்பி வேண்டாம்.”

“பால் சாப்பிடுகிறீர்களா?”

“ஏன்?”

“முழு சைவம் என்று சொன்னாற்போல் இருக்கிறதே!”

“பரவாயில்லை. நீ ரொம்ப வருத்தபடுகிறாயே. அதற்காகப் பாலாவது போட்டுக் காப்பியைக் குடித்து வைக்கிறேனே.”

“வேண்டாம். எனக்காக பிடிக்காததையெல்லாம் சாப்பிடாதீர்கள். என்னை மன்னிக்க வேண்டும்.”

“பரவாயில்லை. பாலும் கொண்டுவா!” என்று கதறினேன்.

“நிச்சயமாகவா?”

“நிச்சயமாக.”

இந்தப் பேச்சு எனக்கு ஜப்பானில் புதிய அனுபவமில்லை. இரண்டு மாதமாகப் பழகிப் போனது. சாப்பாட்டைப் பற்றியே பல இடங்களில் பேசிப் பொழுதைக் கழித்திருக்கிறேன். மீனும் முட்டையும் சைவ உணவு என்று பலர் சாதிப்பதும் பால் சைவ உணவு என்று நான் சாதிப்பதும் தினம் நடக்கிற தத்துவ சர்ச்சை. காப்பியைக் கொண்டு வந்தவள் நான் வற்புறுத்தியதற்காக ஒரு காப்பியைக் கறுப்பாகக் குடித்தாள். சைவ அசைவச் சர்ச்சை மீண்டும் தொடர்ந்து பொழுதைத் தள்ளிற்று.

மூன்று மணி அடித்தது. என் ஜப்பானிய நண்பர் வராததைச் சொன்னேன். “இங்கு ஊர் காட்டிகள் இருக்கிறார்கள். உங்களை அழைத்துப் போவார்கள். நான் வரச் சொல்லட்டுமா ஒருவரை?”

“இங்கிலீஷ் பேசுவாரா?”

“உங்களுக்குத் தேவையானது பேசுவார்.”

அவள் போனாள். அவன் வந்தான். குளிருக்காக மேல் கோட்டை மாட்டிக்கொண்டு கிளம்பினேன். நாடகக்கொட்டகை, ஒரு கீஷா நடனம் – என்று வகைக்கு ஒன்றாகப் பார்த்துவிட்டு இரவு பதினோரு மணிக்கு வந்து சேர்ந்தோம்.

“எனக்கு ஒன்பது மணிக்கே ட்யூட்டி முடிந்துவிட்டது. ஆனால் உங்களிடம் விடை பெற்றுக் கொள்ளவில்லையே என்று தங்கியிருந்தேன். காலையில் வருகிறேன். குழந்தை மாதிரி தூங்குங்கள்” என்று விடை பெற நின்றாள் அவள்.

“நான் இரண்டு மணிக்குத்தான் தூங்குகிற பழக்கம்.”

“எனக்கு வருத்தமாக இருக்கிறதே.”

“ஏன்?”

“உங்களுக்குப் பேசக்கூட ஆள் இருக்காதே. நான் வேண்டுமானால் இரண்டு புத்தங்கள் தரட்டுமா?”

“கொண்டா.”

போகும்போது இரண்டு புத்தகங்களைக் கொடுத்துவிட்டுப் போனாள் அவள்.

ஒன்று கதைப் புத்தகம்: இன்னொன்று கட்டுரைத் தொகுப்பு. கதைப் புத்தகம் ஜப்பான்காரர்கள் எழுதின கதைகள். ஆங்கில மொழிபெயர்ப்பு. இன்னொன்று ஜப்பானியர்களின் பழக்க வழக்கங்களைப் பற்றி ஆங்கிலத்தில் யாரோ மேல் நாட்டவர் எழுதியது. வகைக்குக் கொஞ்சமாகப் படித்தேன். தூங்கினேன். காலையில் எழும்போது எட்டு மணி "குட்மார்னிங்!"

"ஒஹாயோ கொஸாய்மஸ்" என்று நான் பதில் கொடுத்தபோது அவளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை.

"உங்களுக்கு ஜப்பான் மொழி தெரியுமா?" என்று கேட்டாள்.

"அதுதான் பேசினேனே!"

"ஜப்பான் மொழி உங்கள் காதுக்கு எப்படி இருக்கிறது?"

"ரொம்ப இனிமை."

"ரொம்ப நன்றி. ஜப்பான் மொழி பேசுவீர்களோ?"

"நன்றாகப் பேசுவேன். 'குட்மார்னிங்', 'குட்ஈவினிங்', 'குட்நைட்' 'முட்டை சாப்பிட மாட்டேன், 'மரக்கறிதான் சாப்பிடுவேன்' – ஐந்தும் தலைகீழ்ப் பாடம்."

"போதுமே. உணவுப் பிரச்சனை தீர்ந்துவிட்டது" என்று சிரித்தாள் அவள். "நன்றாகத் தூங்கினீர்களா?"

"குழந்தை மாதிரி தூங்கினேன்."

மறுபடியும் சிரித்தாள் அவள். இந்த முக மலர்ச்சி ஜப்பானில் தண்ணீர் பட்டபாடு. கோடி ரூபாய் கொடுத்தாலும் சிடுசிடுப்புக் கிடைக்காது. இந்த மாதிரி மனுஷர்களோடு பேசுவதற்கு என்ன தயக்கம்? ஹோட்டலில் தங்குபவர்களுக்குப் பொழுது போக என்ன என்ன பேசலாம் என்று அவளுக்கு அற்றுபடியாக இருந்திருக்கவேண்டும். போன் மணியைக் கேட்டுத் தூக்கினபோது "யோஷிகி வந்திருக்கிறார், வரச் சொல்லலாமா?" என்று செய்தி வந்தது. மணி பத்து. ஒன்றரை மணி நேரம் பொழுதுபோனது தெரியாமல் பேசியிருக்கிறாள் இவள்! நண்பர் "யோஷிகி வருகிறார்" என்றேன்.

“நல்லது. அப்படியானால் இன்று ஊர் காட்டி தேவையில்லை.”

“வேண்டாம்.”

யோஷிகி வந்தேவிட்டார். நல்ல வெள்ளை நிறம். மூக்குக் கண்ணாடி.

“நீங்கள் . .?”

“ஆமாம்” என்று பெயரைச் சொன்னேன்.

“நான் யோஷிகி. நேற்று வரமுடியவில்லை. திடீர் என்று அவசர வேலை.”

“பரவாயில்லை.”

“அறை வசதியாக இருக்கிறதா?”

“ரொம்ப.”

“நேற்று என்ன செய்தீர்கள்”

“ஒரு வழிகாட்டியுடன் சில இடங்களைப் பார்த்தேன்” என்று பார்த்த இடங்களைச் சொன்னேன்.

“நல்லது. இன்று முழுவதும் நான் சும்மாத்தான் இருக்கிறேன். நீங்கள் எத்தனை நாட்கள் தங்கப் போகிறீர்கள்?”

“இன்னும் இரண்டு நாட்கள்.”

“அப்படியா? நீங்கள் ஊருக்குப் போகிறவரையில் உங்களோடு கூடவே நான் இருந்திருக்க முடியும். இந்தத் தடவை முடியவில்லை. இன்று முழுவதும் இருந்து முக்கியமான இடங்களுக்கு அழைத்துப் போகிறேன். அதற்குப் பிறகு தங்க முடியாது என்று நினைக்கிறேன். பொருட்படுத்த மாட்டீர்களே?”

“ஐயோ! என்ன இது? நான் பார்த்துக்கொள்கிறேன்.”

யோஷிகி உயரம் என்றுதான் சொல்லவேண்டும். அதாவது ஐந்தரை அடி உயரம். குளிரைத் தடுக்க ஜப்பான் முழுவதும் கம்பளிக் கோட்டு, கால் சட்டை, கழுத்துப் பட்டி எல்லாம் அணிகிற பருவம் அது. அவருக்கும் அந்த உடை கன எடுப்பாக இருந்தது. உட்கார்ந்து கொண்டு பேச ஆரம்பித்தார் அவர்.

“ஜப்பானுக்கு எப்போது வந்தீர்கள்?”

“இரண்டு மாதமாயிற்று.”

“ஜப்பான் பிடித்திருக்கிறதா?”

“ஜப்பான் பிடிக்கவில்லை என்று எவனாவது சொன்னால் அவன் பரம அரசிகனாக இருக்கவேண்டும்.”

“ஓ! ரொம்ப நன்றி” என்று சிரித்தார் அவர்.

“அழகான ஆரோக்கியமான ஜனங்கள் நீங்கள். நான் ஜப்பானில் காலடி வைத்து இரண்டு மாதமாயிற்று. இன்னும் ஒரு நரைமயிரைப் பார்க்கவில்லை. ஒரு சிடுமூஞ்சியைப் பார்க்கவில்லை. எந்த பஸ் ஸ்டாப்பிலும் ஒரு நிமிஷத்துக்கு மேல் காத்திருக்கவில்லை. ஏறின பஸ்ஸிலும் ‘சில்லறை இல்லேன்னா இறங்கு சார்’ என்று எந்தக் கண்டக்டரும் கத்தவில்லை. சில்லறை கொடுக்க மறந்து போகவுமில்லை. தெருவிலோ தியேட்டரிலோ யாரும் இரைந்துபேசவில்லை. பத்து கல்லூரி மாணவர்கள் சேர்ந்து உல்லாசமாகப் போகும் போதுகூட காச்சு மூச்சு என்று தலை கால் தெரியாமல் கத்தவில்லை. மாணவிகளைப் பார்த்துச் சீட்டியடிக்கவில்லை. எந்தச் சாமானும் கெட்டுப் போகவுமில்லை. ஹிபியா பார்க்கில் மத்தியானம் ஆபீஸ் இடைவேளையில் ஆயிரம் ஜனங்கள் வந்து கையில் கொண்டு வந்த டிபனைச் சாப்பிட்டு விட்டு அரைமணி நேரம் இளைப்பாறிவிட்டுப் போகிறார்கள். நானும்போய் உட்கார்ந்தவன் ஒரு பெஞ்சில் எண்ணூற்றுச் சொச்ச ரூபாய் இருந்த பர்ஸ், டயரி எல்லாவற்றையும் மறந்துவிட்டுப் போய்விட்டேன். மூன்றரை மணிக்கு மேல் ஞாபகம் வந்தது. திரும்பி ஓடி வந்தேன். மூன்று மணிக்குப் பிறகும் அது வைத்த இடத்திலேயே இருந்தது. ரயிலில் போகும் போது யாரும் இங்கு கத்துவதில்லை. சிகரெட் பிடிப்பதில்லை. படிக்கிறார்கள். இல்லாவிட்டால் கண்ணை மூடிக்கொண்டு வருகிறார்கள்.”

“போதும், போதும்” என்று சிரிக்க ஆரம்பித்தார் யோஷிகி. நான் நெட்டுருப் போட்டு ஒப்பிப்பது மாதிரி சொன்னதுதான் அவருக்குக் கிச்சுக் கிச்சு மூட்டியிருக்க வேண்டும்.

“ஏன் நான் சொல்வது சரியில்லையா? கண்ணால் பார்த்து அநுபவித்ததைச் சொல்கிறேன். உங்கள் மக்களுக்குத்தான் என்ன சுத்தம்! என்னக் கட்டுப்பாடு, என்ன கலை உணர்ச்சி! காரியங்கள் செய்வதிதல்தான் எவ்வளவு கருக்கு! எவ்வளவு நருவிசு! மேம்புல் மேயாமல் ஆழ்ந்த செயலாற்றக்கூடிய பண்பு! என்ன ஓயாத உழைப்பு!”

“ரொம்ப நன்றி. பஸ்ஸுக்காகக் காத்திராதது, கண்டக்டர்கள் இனிமையாகப் பேசுவது — எல்லாம் சரிதான். பெண் கண்டக்டர்கள் பேசுவது வேறு எப்படி இருக்க முடியும்? ஆனால் ஒரு பெண் வந்து பஸ்ஸில் ஏறினால் ஓர் ஆணும் எழுந்து இடம் தரமாட்டான் இங்கே! நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?”

“உங்கள் பெண்கள் மிக்க பலசாலிகள்!”

“இல்லை. எங்கள் ஆண்கள் அவ்வளவு எடுத்துக்காட்டாக நடந்து கொள்ளவில்லை என்று அர்த்தம்.”

பல விஷயங்களுக்கு மாற்றுச் சொல்லிக்கொண்டே வந்தார் யோஷிகி. ஆனால் உள்ளுக்குள் அவருக்குப் பூரிப்பு. ‘மிளகுத் தண்ணி’ இங்கிலீஷ் அகராதிக்குப் போய்விட்டது என்று நாம் ஆனந்ததில் வெடித்துப் போகும்போது ஜப்பான்காரன் தான் சாதனைகளை உலகம் வியப்பதைக் கண்டு பூரிக்க மாட்டானா என்ன? ஆனால் ‘நீங்கள் ரொம்பவும் மிகையாகப் புகழ்கிறீர்கள்’ என்று யோஷிகி அடிக்கடி வெட்கப்பட்டுக் கொண்டிருந்தார். ஜப்பானே வெட்கப்படுவது போலிருந்தது.

அன்று முழுவதும் கியோத்தோவைச் சுற்றினோம். நாராவுக்குப் போனோம். பௌத்தக் கோயில்கள், ஷிண்டோ ஆலயங்கள், எல்லாவற்றையும் சுற்றினோம். ஓர் இடம் மிச்சம் வைக்கவில்லை என்றுதான் தோன்றிற்று. எதைப் பார்த்தாலும் ‘எப்படி, பிடிக்கிறதா?’ என்று கேட்பார் யோஷிகி.

“ரொம்ப நன்றாக இருக்கிறது”

“ரொம்ப நன்றி.”

யோஷிகிக்குச் சிரிக்கச் சிரிக்கப் பேசவும் தெரியும். சிற்றுண்டிக் கடைக்குப் போனால் “ஆனோ . . . ஓ . . . ஓ . . .” என்று ஆரம்பித்து ஏதேதோ சொல்லுவார். பரிமாறுகிற பெண் குப்பென்று சிரிப்பாள். கடைக்காரர் சிரிப்பார், இவரும் சிரிப்பார். அப்புறம் மொழிபெயர்த்து எனக்குச் சொல்லுவார். அவருடைய நகைச்சுவை அசட்டுப் பிசட்டு ரகமல்ல. குப்புறத் தள்ளி வயிற்றைக் கிழிக்காது. சிரித்தவுடனேயே அடங்கிவிடுகிற ஹாஸ்யம்தான்!

யோஷிகி கார் கொண்டு வந்திருந்ததால் வேகமாக எல்லா இடங்களையும் பார்க்க முடிந்தது. தொழிற்சாலைகள், கோவில்கள், நாடக அரங்கு, நடன அரங்குகள், மாளிகைகள், கடைகள், மல்யுத்தம்— இப்படி

ஒரு பட்டியலாகப் பார்த்து முடித்தோம். நடு நடுவே ஒரு கடையில் நின்று போன் செய்வார் யோஷிகி. வியாபாரி, என்னென்ன காரியங்களை எனக்காக விட்டு வந்திருக்கிறாரோ! ஒரு மணிக்கு ஒருமுறை கூப்பிட்டு விசாரிப்பார். சில சமயம் ஐந்து நிமிஷங்கள் தாமதமாகும் ஆள் கிடைக்க. பேச்சு முடிந்ததும் என்னைப் பார்த்து 'ஸாரி, மன்னிக்க வேண்டும்' என்று சிரிப்பார்.

"பரவாயில்லை. நான் உல்லாச யாத்திரைக்கு வந்தவன். ஒன்றும் குடி முழுகிப் போகவில்லை. எனக்காகக் கவலைப்படாதீர்கள்." என்று நானும் சொல்லிக்கொண்டே வந்தேன்.

ஹோட்டலுக்குத் திரும்புகிற போது இரவு மணி ஒன்பதரை.

"எங்கெல்லாமோ உங்களை இழுத்து அலைக்கழித்திருக்கிறேன். ரொம்பவும் களைத்துப் போயிருப்பீர்கள்" என்று ஆறுதல் கூறினார் யோஷிகி.

"ஒரு களைப்புமில்லை. உட்காருங்கள்" என்றேன். உட்கார்ந்தார்.

"குருமூர்த்தியிடம் சொல்லுங்கள், இந்தியாவுக்குப் போனதும், நான் ரொம்பவும் விசாரித்தேன் என்று. நான் ஒரு நாள்தான் உங்களோடு கழிக்க முடிந்தது. அதற்காகவும் அவரிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன் . . . நான் மதராஸ் வந்தபோது ரொம்பவும் உதவியாக இருந்தார் அவர். சினிமா ஸ்டூடியோக்கள், மகாபலிபுரம், காஞ்சிபுரம் என்று பல இடங்களுக்கு அழைத்துப் போனார் . . . ஓகோ ஜப்பானியக் கதைகள் கூடப் படிக்கிறீர்களா?" என்று கட்டிலில் கிடந்த புத்தகங்களை எடுத்தார் யோஷிகி.

"ஆமாம். ஹிரோமி கொடுத்தாள்."

"ஹிரோமி?"

"ஆமாம். இங்கே காலையில் இருந்தாளே ஹோட்டல் சிப்பந்தி"

"ஓ! அவளா? . . . ம் . . . படித்தீர்களா?"

"பாதி படித்தேன். உங்கள் சித்திரம், பேச்சு இவற்றைப் போலவே இந்தக் கதைகளும் நளினமாக இருக்கின்றன. மூங்கில் இலை மாதிரி ஓர் எளிமை. ஒரு கருக்கு. ஓர் ஆடம்பரமில்லாத அழகு."

புத்தகங்களைப் பிரித்துப் பார்த்தார் அவர். "முன்பெல்லாம்

படிப்பதுண்டு. இப்போது வியாபாரத்தைக் கவனிப்பதற்கே பொழுது சரியாக இருக்கிறது . . . இது எப்படி இருக்கிறது?"

"அதுதான் சொன்னேனே. ரொம்ப நன்றாக இருக்கிறது. இந்தக் கட்டுரை மிக மிகப் பிடித்திருக்கிறது எனக்கு. ஜப்பானியர்களுக்குக் கோபமே வராதாம். வந்தாலும் தாறுமாறாகக் கத்த மாட்டார்களாம்."

யோஷிகி சிரித்தார். "ஜப்பானிய மக்கள் பொறுமைசாலிகள்" என்றார். பிறகு தொடர்ந்து பேசினார்:

"உங்கள் நாட்டு யோகம் பற்றிக் கொஞ்சம் படித்திருக்கிறேன். யோகம் என்றால் எது வந்தாலும் ஒரே நிலையில் மனத்தை வைத்திருப்பது இல்லையா? துன்பம் வந்தாலும் இன்பம் வந்தாலும் மனம் ஆடக் கூடாது. பொங்கிவழியவும் வேண்டாம்; சோர்ந்து மடியவும் வேண்டாம்."

"அதற்காகச் செத்தால்கூடச் சிரிக்க முடியுமா?"

"அழுது மட்டும் என்ன ஆகிவிடப் போகிறது?"

"இப்படி இருந்தால் பைத்தியமல்லவா பிடித்துவிடும்?"

"அழுகிற பைத்தியத்தை விடச் சிரிக்கிற பைத்தியம் பார்க்க அழகாகத் தானே இருக்கும்?" என்று யோஷிகி சிரித்தார்.

ஹிரோமி வந்தாள். "ஏதாவது சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டாள்.

நான் பால் கேட்டேன். யோஷிகி பீர் கேட்டார். "வேறு ஏதாவது வேண்டுமா?"

பதில் சொல்வதற்குள் போன் மணி அடித்தது. ஹிரோமி எழுந்தாள். "ஹை . . . சொத்தொ . . . உங்களுக்குத்தான்" என்று யோஷிகியிடம் 'வாங்கி'யை நீட்டினாள்.

"வேறு ஒன்றும் வேண்டாம்" என்றேன் நான்.

ஹிரோமி வெளியே போனாள்.

யோஷிகி போனில் பேசினார். பேச்சு முடிந்ததும் வாங்கியை வைத்துவிட்டு ஐந்தாறு விநாடிகள் சும்மா இருந்தார். கைகடிகாரத்தைப் பார்த்தார்.

"என்ன, மணியைப் பார்க்கிறீர்கள்?"

“மணி பத்தாகிவிட்டது. புறப்பட வேண்டும்.”

“பீரைச் சாப்பிட்டுப் போகலாம்.”

உட்கார்ந்து நிதானமாகப் பீரை சுவைக்கிறவர் நிமிஷத்தில் முடித்துவிட்டார்.

ஹிரோமியிடம் பாதிப் பாட்டிலைக் காட்டி, “சாப்பிடுகிறாயா?” என்று கேட்டார்.

நன்றி கூறிவிட்டு அவளும் சாப்பிடத் தொடங்கினாள். ஜப்பானிய மொழியில் ஒரு ஐந்து நிமிஷம் அவளோடு பேசினார்.

“ஸோ தெஸ்னே!” என்று அவள் நடுநடுவே கூறிக்கொண்டிருந்தாள். அதற்கு “ஓகோ! அப்படியா?” என்று அர்த்தம் போலிருக்கிறது.

அவள் குடித்து முடிக்கிற வரையில் காத்திருந்து, “அப்ப?” என்று புன்முறுவல் செய்தார் யோஷிகி. “நான் விடை பெறலாமா?”

“ரொம்ப நன்றி . . . உங்களோடு மிகவும் உபயோகமாகப் பொழுது போயிற்று. உங்கள் உதவியை மறக்கவே முடியாது.”

“குருமூர்த்தியிடம் சொல்லுங்கள்” என்று எழுந்தார் அவர்.

“இந்தியாவுக்கு எப்பொழுது மறுபடியும் வருவீர்கள்?” என்று கேட்டேன்.

புறப்படுமுன் கோட் பையில் கையை விட்டு ஒரு முத்துப் பதித்த தங்கக் கழுத்துப் பட்டி கிளிப் ஒன்றை என் கழுத்துப் பட்டியில் மாட்டினார்.

“அடடே, என்ன இது?”

“இருக்கட்டும், என் ஞாபகம்” என்று எழுந்தார். ஹிரோமியிடம் நின்று சொல்லிக் கொண்டார். அவர்கள் பாணியில் குனிந்து வணங்கினார். ஹிரோமி அவருக்குக் கதவைத் திறந்துவிட்டு, லிப்டில் அவரோடு இறங்கிப் போய் வாசல்வரை கொண்டு விட்டு வந்தாள். வந்ததும் சொன்னாள். “அவருக்கு ரொம்ப வருத்தம், உங்களோடு நாளைக்கும் இருக்க முடியவில்லையே என்று. மறுபடியும் மன்னிக்குமாறு என்னைக் கேட்டுக்கொள்ளச் சொன்னார். நீயாவது ஒரு நாள் லீவு எடுத்துக்கொண்டு அவரை இன்னும் பார்க்காத இடங்களுக்கு அழைத்துப் போயேன் என்றார்.”

“நீ என்ன சொன்னாய்?”

“நாளைக்கு லீவு எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. எனக்கு நாளைக்கு விடுமுறை நாள் தான் என்றேன்.”

“ரொம்ப நல்லதாயிற்று.”

மறுநாள் ஹிரோமியோடு பட்டு நெசவு, பட்டு கண்காட்சிகளையெல்லாம் சுற்ற முடிந்தது.

ஊருக்குக் கிளம்பியபோது, “நான் ஸ்டேஷன் வரையில் வரலாமா?” என்று கேட்டாள் ஹிரோமி.

“நிச்சயமாக.”

ஸ்டேஷன் போன பிறகுதான் ஞாபகம் வந்தது. தோல் பையைப் பிரித்து ஹிரோமியின் புத்தகங்கள் இரண்டையும் எடுத்துக்கொடுத்தேன்.

“அது உங்களுக்குத்தான்” என்றாள் ஹிரோமி.

“அப்படியா? ரொம்ப நன்றி. உன் ஞாபகமாக இருக்கட்டும்.”

“அது மட்டுமில்லை. இந்த உலகத்தில் எல்லாம் தற்செயலாகத்தான் நடக்கிறது. காரண காரியமே கிடையாது என்று என் சிநேகிதன் சொல்லுகிற வழக்கம். அது எவ்வளவு தூரம் உண்மையோ தெரியாது. நான் அதை நம்புகிறதே இல்லை. ஏனென்றால் கடவுளைக்கூட நம்ப முடியாது போய்விடும் – அவன் சொல்வதை நம்பத் தொடங்கினால். ஆனால் இந்த ஒரு சம்பவம் மட்டும் அவன் சொன்னதைச் சரி என்று நிரூபித்துவிட்டது” என்றாள் ஹிரோமி.

“எந்த சம்பவம்?”

“நீங்கள் வந்தது, நான் இந்தப் புத்தகம் கொடுத்தது. யோஷிகி வந்தது – எல்லாம்தான்” என்றாள் அவள்.

“எனக்குப் புரியவில்லையே!”

“யோஷிகி பழைய பசலி. இல்லாவிட்டால் மனிதன் மாதிரி நடந்து கொண்டிருப்பார். இப்படி ஜப்பான்காரராக நடந்து கொண்டிருக்க மாட்டார்” என்றாள் அவள்.

“அப்படியென்றால்?”

“நீங்கள் வந்த அன்று நாலு மணிக்கு ஹோட்டலுக்கு வந்து உங்களைச் சந்திப்பதாகச் சொல்லியிருந்தாராமே.”

“ஆமாம். வர முடியவில்லையாம்!”

“எப்படி வர முடியும்? முதல் நாள் கோபேயில் உள்ள அவருடைய கடை எரிந்து சாம்பலாகி விட்டது.”

“என்னது!”

“ஆமாம். கோபே நகரில் அவருக்குக் கிளைக்கடை ஒன்று உண்டு. மின்சாரக் கோளாறினால் தீப்பற்றி, கடையே எரிந்து கருகிவிட்டது. கிட்டதட்ட இருபதாயிரம் டாலருக்கு மேல் நஷ்டம். அவருடைய தம்பிக்குத் தீப்பட்டு மேலெல்லாம் காயமாம். ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டியதாகி விட்டது.”

“என்னது! ஒன்றுமே சொல்லவில்லையே அவர். என்னோடு சிரித்துச் சிரித்துப் பேசிக்கொண்டு ஊரெல்லாம் சுற்றினாரே!”

“எத்தனையோ தூரத்திலிருந்து நீங்கள் வந்திருக்கிறீர்கள். இந்தச் சேதியைச் சொல்லி உங்களை நோகச் செய்வானேன் என்று இருந்துவிட்டார். அதனால்தான் சொன்னேன், அவர் பழைய காலத்து ஜப்பானியராக நடந்து கொண்டு விட்டார் என்று. இப்போதெல்லாம் அப்படி துக்கத்தை மென்று விழுங்கும் வழக்கம் போய்விட்டது. துக்கமாயிருந்தால் கொஞ்சமாவது அழுது தீர்த்துவிடக்கற்றுக்கொண்டு விட்டார்கள். சந்தோஷம் வந்தாலும் சிரித்துத் தீர்த்து விடுகிறார்கள்.”

“சரி, யோஷிகி கடைத் தீயைப்பற்றி உனக்கு எப்படித் தெரியும்?”

“அவர்தான் சொன்னார். அவர் உங்களிடம் விடைபெற்றுப் போகுமுன் போன் வந்ததில்லையா? அப்போது அவர் தம்பிக்கு உடம்பு அதிகமாக இருப்பதாகச் செய்தி வந்தது. இன்னும் இரண்டு, மூன்று மணி நேரம்கூடத் தாங்காது என்று அவர் மனைவி அவசரமாக அவரைக் கூப்பிட்டனுப்பினாள். பிரக்ஞை தப்பிவிட்டதாம். எத்தனையோ வைத்தியம் செய்தும் பயனில்லையாம். ஏகச் செலவுசெய்து பெரிய டாக்டர்கள்கூட பார்த்தார்களாம்.

“ஆ!” – எனக்கு மூளை நின்றுவிட்டது போலிருந்தது. அ! அ! இதைத் தவிர வேறு பேச நாக்குப் பயன்படவில்லை.

“பிரக்ஞை தப்பிவிட்டது என்று தெரிந்த பிறகுதான் இவருக்குத் துக்கம்

தாங்கவில்லை. அதுவரை எப்படியோ தாங்கிக்கொண்டு விட்டார். இனிமேல் ஒரு வார்த்தை கூட அவன் பேச மாட்டான் என்றார் என்னிடம். அதைச் சொல்லும்போது அவர் நெஞ்சு தழுதழுத்து விட்டது. கடைசியில் இதைப் பற்றியெல்லாம் உங்களிடம் பிரஸ்தாபிக்கவே கூடாது என்று வேறு என்னை எச்சரித்து விட்டுப்போனார். ஆனால் எனக்கு எப்படிச் சொல்லாமல் இருக்க முடியும்? இவ்வளவு தூரத்திலிருந்து வந்த ஒரு நல்ல நண்பரிடம் கூடத் தம் துக்கத்தைப் பகிர்ந்து கொள்ளத் தவறிவிட்டாரே, பாவி மனுஷன். இவர்களெல்லாம் மனுஷனாக இருக்கக் கூடாதோ?" என்று தூரத்தைக் குன்றுகளைப் பார்த்தாள் அவள்.

என்னால் தாங்க முடியவில்லை தீச்சுட்ட புண்ணோடு, நினைவிழந்த இளம் உடல் என் கண்ணை மறைத்தது.

வண்டி வர இருபது நிமிஷம் இருந்தது. நான் பேசவில்லை. ஹிரோமியும் பேசவில்லை.

வண்டி வந்து ஏறும்போது, "கடைசி நேரத்தில் நானும் உங்களைக் கஷ்டப்படுத்தி விட்டேன்" என்று ஓர் இரக்கப் புன்னைகையுடன் ஹிரோமியின் குரல் தணிந்து ஒலித்தது.

"நீயும் ஜப்பான்காரியாகத்தான் இருக்கிறாய் என்று என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை."

வண்டி இரண்டு நிமிஷம்தான் நின்றது. புறப்பட்டது. நூறு மைல் போய்த்தான் அடுத்த ஸ்டேஷன். வேகமும் மணிக்கு நூற்று நாற்பது மைல். இந்த ஹிக்காரி எக்ஸ்பிரஸ் உலகமே இதுவரை சாதிக்காத சாதனை. ஆடாமல் அசங்காமல் பைன் மரங்களுக்கிடையே கனவு போல் விரைகிறது.

ஜப்பானியர்களின் எத்தனையோ சாதனைகளில் இந்த ரயிலும் ஒன்று. அவர்களுடைய புன்சிரிப்பைப் போல ஆடாமல் அசங்காமல் சீறிச் செல்கிறது.

கல்கி, ஏப்ரல் 1965

# மணம்

எதிர்வீட்டு வாசலில்தான் கார் நிற்கிறது. விமலா திரும்புகிறாள் போலிருக்கிறது. இன்று அதற்குள் முடிந்து விட்டதா? என்ன ஒன்றையும் காணோம். 'பைப . . . ய்' என்று இடது கையைத் தூக்கி விடைகொடுப்பாளே, அந்தக் குரல்கூட கேட்கவில்லை. ஒருக்கால் இப்போதுதான் புறப்படவே போகிறளோ என்னவோ . . . தீபாவளி அன்று படம் வெளிவருகிறதாம். ராத்தூக்கம் தூங்கிப் பத்து நாளாயிற்று என்று கண் சிவக்கச் சிவக்கச் சொன்னாள் அவள். ஹ்ம் வேலையும் கண் விழிப்பும் என்னமோ நட்சத்திரத்திற்கு இருக்கிறாற்போல்தான். சம்பளம் சின்ன மூன்று ஸ்தானத்தைத் தாண்ட மாட்டேன் என்கிறது. துணை நடிகை என்று பக்கபலம் இல்லாமல் தலையைக் கொடுத்த அவலம்.

'அம்மா' என்று மெதுவாக ஒரு குரல். நம் வீட்டிலா?

'அம்மா' என்று மறுபடியும் ஜன்னலண்டை அதே குரல் தான்.

'யாரு?'

'நான்தாம்மா?'

நீலா விளக்கைப் போட்டாள்.

'யாரு?'

'நான்தாம்மா?'

அருள்சாமிதான் . . .

'உன் கார்தானா?'

'ஆமாம்மா.'

'என்ன?'

'தூங்கிட்டீங்களா?'

'இப்பதான் படுத்து, அசந்தேன்.'

'அடேடே.'

‘என்ன?’

‘கதவைத் திறங்களேன்.’

என்ன சொல்லி அவனை அனுப்பலாம் என்று குழம்பிக்கொண்டே கதவைத் திறந்தாள் நீலா.

‘தூங்கிட்டீங்களோன்னு பார்த்தேன்.’ உள்ளே வந்தான் அருள்சாமி.

‘என்ன?’

‘புறப்படுங்களேன்.’

‘எங்கே?’

‘நார்த் ஹோட்டலுக்கு.’

‘வேண்டாம்.’

‘ஏன் வேண்டாம்?’

உடம்பு சரியில்லை, காலையிலே ஷூட்டிங் ஆரம்பம். பூஜை போடப் போறாங்க.’

‘எப்ப போடறாங்க?’

‘காலமே.’

‘நாளைக்கு ஒன்பது மணிவரையில் ராகுகாலமாச்சே. அதுக்கு மேலேதானே ஆரம்பிப்பாங்க. அதுக்குள்ளார ரண்டு தூக்கம் போட்டுட்டு குளிச்சிட்டு பலகாரம் சாப்பிட்டுக்கூடப் போகலாமே.

‘ம்ஹூம். வேண்டாம்.’

‘கேளுங்களேன்.’

‘கேக்கறதுக்கு ஒண்ணுமில்லே.’

– ‘ப்ஸ . . .’

‘உடம்பு சரியாயில்லை.’

‘அஞ்சு நூறும்மா.’

‘அஞ்சு நூறு?’

‘ஆமாம்.’

‘யாரு.’

‘யாரோ. சாதாரண ஆசாமி இல்லே. அதான் தெரியும் எழுந்துங்க. சட்டுப்புட்டுனு கிளம்புங்க’ என்று பையிலிருந்து எடுத்து நீட்டினான்.

இயந்திரம்போல வாங்கினாள் அதை. முந்நூறு ரூபாய். நிமிர்ந்தாள்.

‘அங்க வாங்கிக்கலாம் பாக்கியை.’

பேசாமல் அதைப் பெட்டியில் வைத்துப் பூட்டினாள் அவள். நீரால் முகத்தைக் கழுவிக்கொண்டாள். டீப்பாய் மேலிருந்த பெரிய சீப்பை எடுத்துத் தலையை வாரிக்கொண்டாள். க்ரீமை எடுத்து முகத்தில் விரலால் தேய்த்து பவுடரைப் பூசிக்கொண்டாள். புடவையை மாற்றிக்கொண்டாள். ரவிக்கையை மாற்றிக்கொண்டாள். ஒரு கைக்குட்டையால் முகத்தில் உபரியாகத் தெரிந்த பவுடர் திட்டுக்களைத் தடவி சரி செய்துகொண்டாள். பல வைடமின் மாத்திரைகள் இரண்டை வாயில் போட்டு விழுங்கினாள். தாம்பூல மாத்திரைகள் இரண்டை வாயில் போட்டுக்கொண்டாள். உள்ளே போய் கீழ் நோக்கி சாய்த்து மாட்டியிருந்த முருகன் படத்திற்கு முன்னால் பத்து விநாடி கண்ணை மூடி நின்றாள். வெளியே வந்தாள்.

ஸ்டாண்டில் இருந்த கடிகாரத்தை நிமிர்ந்து பார்த்தாள். மணி பதினொன்று ஐம்பது.

‘இவ்வளவு நேரமாயிடுச்சே.’

‘பரவாயில்லேம்மா.’

‘ப்ஸ. காலையிலே பூஜை போடறாங்க.’

‘அஞ்சு மணிக்குள்ளாற திரும்பிடலாம்மா.’

‘ஹ்ம்’ என்று பெருமூச்சுவிடத்தான் முடிந்தது அவளுக்கு.

கதவைப் பூட்டி, பூட்டை நாலைந்து தடவை இழுத்துவிட்டுக் காரில் ஏறினாள். வண்டி கிளம்பிற்று. வீதியில் திரும்பிற்று.

ஒன்றிரண்டு கடைகள் திறந்திருந்தன. ரிக் ஷாக்கள் ஒன்றிரண்டு மௌனமாக ஊர்ந்துகொண்டிருந்தன. இங்கிலீஷ் படம் பார்த்தவர்களை ஏற்றிவந்த பஸ் ஒன்று எதிரே போயிற்று.

‘ஐந்நூறு ரூபாய்? யார் அது? மூன்று மாச வாடகையை நாளைக்கு வீசி

எறிந்துவிடலாம். சீட்டுப் பணமும் கட்டிவிடலாம். ஏலக் கம்பெனியில் சொன்னானே. அந்த மெத்தை தைத்த ஸோபா செட்டு எழுபத்திரண்டு ரூபாயாம், அதையும் வாங்கிவிடலாம் . . . எதற்கு . . . வீண் செலவு? தபாலாபீசில் போட்டுவிடலாம். பன்னிரண்டு வருஷத்துக்கு எடுக்கவே முடியாது. இங்கே மூன்றாவது ஆட்டம் இன்னும் விடவில்லையா? வேதவல்லி விளம்பர அட்டையில் சிரிக்கிறாள் – வேதவல்லியா . . . அதுதான் வேதினி என்று பெயரை மாற்றிக் கொண்டுவிட்டாளே . . . வேதினி என்றால் என்ன அர்த்தம்? கேள்விப்படாத பெயராக இருக்கிறது. எப்படியிருந்தால் என்ன? ஒரு மாசத்திற்குப் பிறகு தோழியாக நுழைந்தவள் இப்போது நட்சத்திரம். ஏழு படத்திற்குக் கையெழுத்துப் போட்டு விட்டாளாம். ஒரு நிமிஷம் ஓய்ச்சல் ஒழிவு இல்லை . . . அப்படி ஒரு அழகா அவள்? அழகே இல்லை . . . முக்கோண முகம். மூக்குகூட சற்று உருண்டை மூக்கு . . . நடை கூட நேர் நடை இல்லை. கால் கொஞ்சம் பக்கவாட்டில் பார்த்து நடக்கும். அதிர்ஷ்டம்.

கார் சரசரத்துக்கொண்டு ஹோட்டலுக்குள் வளைந்தது, வளைந்து வளைந்து தனியாக நின்ற சிறு விடுதியின் முன் நின்றது.

‘இறங்கலாமா?’

‘இறங்கலாம்.’

தவளைகளின் கொரகொரப்பு எங்கோ கேட்டுக்கொண்டிருந்தது. அதைத் தவிர வேறு காற்றில் ஓசையில்லை. சற்று குளிராகக் கூட இருந்தது. மழை பெய்த குளிர்ச்சிதான். ஹோட்டலின் முகப்பிலும் ஓரிரண்டு அறைகளிலும் சிறிது வெளிச்சம். வேறு எங்கும் இருள்.

நீலா காரைவிட்டு இறங்கினாள்.

விடுதி என்ன, ஒரு பெரிய ஹால், அவ்வளவுதான். ஒரு மேஜை. இரண்டு மூன்று நாற்காலிகள், இரண்டு கட்டில்கள். எவ்வளவு பெரிய மெத்தைகள்! சிமெண்டு மூட்டை மாதிரி – மெத்தையா, மெத்தையா – என்ன சொல்லலாம். கண்ணாடியில் பார்த்துக்கொண்டாள். குழாயும் வாஷ் பேஸினும் பளபளவென்றன . . . வெளிச்சம் கண்ணை கூசிற்று. நூறு வாட்டுக்கு மேலிருக்குமோ என்னவோ, உத்தரம் இன்னும் உயரமாயிருந்தால் இவ்வளவு தாழ்ந்து தொங்காது. கண் கூசாது.

யாரோ ஆள் வந்தான்

‘வந்தாச்சா?’

‘ஆச்சு.’

ஜன்னல் கதவு நான்கும் சாத்தியிருந்தன. சாத்தியே இருக்கட்டும். குளிருக்கு இதமாக இருக்கிறது. திடீரென்று வந்த குளிர். அகாலக் குளிர். முட்டென்று தலையில் நீர் கோத்துக்கொண்டு விட்டால் நாளைக்கு முதல் செட்டிலேயே கொணகொணவென்று மூக்கடைத்தால் . . . நட்சத்திரமா, உடம்பு சரியாகட்டும் என்று காத்திருக்க? நீலா இல்லாவிட்டால் எத்தனையோ மாற்று இந்தத் தோழி வேடத்துக்கு.

‘வரட்டாங்க? என்றான் வந்த ஆள்.

‘ம்’ என்றான் அருள்சாமி. ‘கார் கொண்டாரட்டுமா?’

‘என்னாத்துக்குங்க?’

‘சரி.’

‘இப்படி வாங்களேன்’

அருள்சாமி போனான்.

தவளைகள் கொரகொரவென்று முறை வைத்துக் கொண்டிருந்தன. இருள் பகலில் அடித்த வெயிலையும் ஒளியையும் மென்று தின்பது போலிருந்தது அந்த கொரகொரப்பைக் கேட்கும்போது, மெத்தையின் ஓரத்தில் உட்கார்ந்து பார்த்தாள் அவள். மூச்சுவிட்டால் விம்மி இறங்கிற்று அது. உயர்ந்த கட்டில்தான். முனகல்கூட இல்லை. தடவிப்பார்த்தாள். வெல்வெட்தான். பூனைமாதிரி, ஆலிலை மாதிரி . . .

‘நான் வரட்டுமாம்மா?’ என்று அருள்சாமி வந்தான்.

‘எங்கே இருக்கே?’

‘வாசல்லெதான்.’

‘சரி.’

‘அப்பா’ என்று சட்டென்று கையை உதறினான். கை வளக்கில் பட்டு விளக்கு அப்படியும் இப்படியும் ஆடிற்று. ஆடிக்கொண்டுதான் இருக்க வேண்டும். அதுதான் அணைந்துவிட்டதே.

‘என்னது?’

‘என்னமோ சுரீர்னிச்சு. எறும்போ என்னவோ.’

‘விளக்கும் போயிடிச்சே.’

‘இருங்க. ஸ்விச்சைப் போடறேன்.

டிக்டிக் என்று ஏழு எட்டு தடவை புத்தான் போடும் சத்தம் கேட்டது. வெளிச்சம் வரவில்லை.

‘ப்யூஸ் ஆயிட்டாப்பல இருக்கு . . . இருங்க பல்ப்பை ஆட்டிப் பார்க்கறேன்.’

பளிச் பளிச்சென்று இரண்டு மூன்று தடவை எரித்து அணைந்தது.

‘ப்யூஸ்தாம்மா . . . இருங்க போய் மேனேஜர்கிட்ட ஒரு பல்பு வாங்கியாரேன்’ என்று ஓடினான் அவன். பல்பைத் தொடப் பயமாயிருந்தது. இருந்தாலும் தைரியமாக ஆட்டிப் பார்த்தாள் நீலா. பயனில்லை. இருட்டு கண்ணை அப்பிற்று. நிலையைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்துவிட்டாள். வெல்வெட் விரிப்பு வழவழவென்றிருந்தது. வெளியே வந்தாள். யாரது? அருள்சாமியா? . . . ஆமாம்.

‘என்னய்யா?’

‘ஸ்டோர் ரூம் சாவியை எடுத்துட்டுப் போயிட்டாராம் மானேஜரு. குமாஸ்தாதான் இருக்காரு’.

‘அப்படின்னா?’

‘வேற ஏதாவது பல்பைக் கயட்டி எடுத்திட்டு வாங்களேன்’.

‘எங்கம்மா எடுக்கறது . . . கள்ட்டலாம்னுதான் பார்த்தேன். எங்க பார்த்தாலும் ட்யூபாயிருக்கு. தாவாரத்திலே ரண்டு இருக்கு. ஏணி வச்சாத்தான் கள்ட்டமுடியும் . . . ம்.’

‘நல்ல மானேஜருய்யா இவரு! ஸ்டோர் ரூம் சாவியை எடுத்துக்கிட்டுப் போகவாவது?’

‘நெதக்கிம் விட்டுட்டுத்தான் போவாராம். இன்னிக்கி நமக்குன்னு பாருங்க.’

‘இப்ப என்ன செய்யறது?’

‘என்னத்தை செய்யறது! . . . ம்’

‘ஹ்ம்’ என்று ஆழ்ந்து பெருமூச்சு விட்டாள் நீலா.

‘மானேஜர் ஊட்டுக்காவது போய் வரட்டாம் வண்டியை எடுத்துகிட்டு?’

‘ஆமாம் இனிமே. அவர் வீட்டைத் தேடி, அவரைத் தேடி . . . போதும். அதான் அப்பவே சொன்னேன்’

‘ப்ஸ’

‘இதுதான் . . . அப்பவே சொன்னேன் . . . யாரோ வராப்பலிருக்கு’.

‘அவங்கதான் போல்ருக்கு. அப்ப நான் வரட்டா?’

‘வண்டியை எடுத்துகிட்டு சவாரி போயிடாதிங்க எங்கியாவது’.

‘இல்லேல்லே . . . நீங்க உள்ளார போங்க . . . காத்து சில்லாப்பா இருக்கு’.

‘போறேன் போறேன்’ . . . உள்ளே வந்தாள் நீலா.

ஒரு நிமிஷம் ஆயிற்று. வாசல் நிலையில் இரு உருவங்கள் தெரிந்தன.

ஒன்று ‘அப்ப நீ வறியா?’ என்றது. இன்னொன்று ‘சரிங்க’ என்றது.

‘விளக்கு அணஞ்சு போச்சே’.

‘ஆமாங்க’.

‘ம் . . . சரி போ’, அந்த உருவம் இருளில் மறைந்தது. இன்னொன்னு உள்ளே வந்தது. கதவு மூடிற்று. தாழ்ஓசை கேட்டது.

ஹம் . . . மா! என்ன வாசனை!

மூச்சை உள்ளிக்கிழுத்து வாசனையைப் பிடித்தாள் அவள்.

அம்மாடா!

சாராயத்தில் கலந்திருக்கிற பிரஞ்சு வாசனை இல்லை. மகிழப்பூ மாதிரி . . . ஜவ்வாது மாதிரி . . . ரோஜாப்பூவா . . . எல்லாம் கலந்ததா?. . . ஆகாகா! என்ன வாசனை!

0

கன்னோஜியில் வாங்கின வாசனையாம் அது. அமர்ந்து நினைவில் உட்கார்ந்திருந்தது. அமர்ந்த மணம். இழுக்க இழுக்க நெடியில்லாத

மெல்லிய மணம். கழுத்து, தொண்டையெல்லாம் நிறைகிறாற்போலிருக்கிறது. உள்ளுக்கிழுக்கும் போது.

வாசலில் சரசரவென்று திரும்பி வீதிக்கு வந்தது கார். வரும்போது திறந்திருந்த ஓரிரு கடைகள்கூட மூடிக்கிடந்தன. நடைபாதையில் பரட்டையாக அழுக்காலேயே நெய்ததுமாதிரி ஒரு துணியைப் போர்த்திக்கொண்டு ஒரு பையன் – பத்து வயதிருக்கும் மல்லாந்து படுத்து உறங்கிக்கொண்டிருந்தது. பக்கத்தில் ஒரு குழந்தை தூங்கிற்று. ரிக் ஷா ஒன்று அவ்வளவு பெரிய சாலையில் யாரையோ ஏற்றிக்கொண்டு தனியாக ஊர்ந்தது. எப்போது வீட்டில் கொண்டு சேர்க்குமோ? இன்னும் ஐந்து நிமிஷத்தில் நாம் போய்ச் சேர்ந்துவிடப்போகிறோம்.

ஒரு வளையில் போகும்போது பவழமல்லி மணம் கமழ்ந்தது.

'உள் விளக்கைப் போடுங்க'.

இசிக்.

பத்து பத்தாக இருபத்தைந்து நோட்டுகள். மூன்றை மட்டும் எடுத்து, மற்றவற்றை புடவைத் தலைப்பில் முடிந்து இடுப்பில் செருகிக்கொண்டாள் அவள்.

சாக்கடை பம்பிங் ஸ்டேஷனிலிருந்து கும்பி வாடை வீசிற்று.

வீதியிலிருந்து வளையில் திரும்பிற்று வண்டி. முனை பங்களாவில் பன்னீர்ப்பூ கமழ்ந்தது. மறுபடியும் ஒரு திருப்பம்.

வண்டி நின்றது.

'இந்தாய்யா.'

அருள்சாமி நோட்டை வாங்கி சட்டைப்பையில் செருகிக்கொண்டான். எவ்வளவு என்று பார்த்தால் என்ன?

கதவைச் சாத்தியதுமே முடுக்கென்று கிளம்பிவிட்டது வண்டி.

கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்து விளக்கைப் போட்டாள் நீலா.

கடியாரத்தைப் பார்த்தாள். மணி மூன்று பத்து வயதானவர் மாதிரிதான் தோன்றுகிறது. புஜத்தில் சதை எலும்பின் பிடிப்பிலிருந்து விடுபட்டிருந்தது. ஒற்றை நாடி . . . சிரிக்கச் சிரிக்க . . . இந்த எல்லாரும் இப்படித்தான் பேசுகிறவர்கள் . . . ஆனால் இந்த மாதிரி படித்து . . .

எப்பேர்ப்பட்ட வாசனை! அமர்ந்த, அலுக்காத மணம்.

புடவையில்கூட அந்த மணம் லேசாகத் தொற்றிக் கொண்டிருந்தது.

வெந்நீர் வெதவெதவென்றிருந்தது. ஒரு வாய் குடிக்கவும் குடித்தாள்.

படுத்தாள்.

இவ்வளவு பணம் எப்படி சம்பாதிக்கிறார்கள் இவர்கள்! தினமும் ஆயிரக் கணக்கில் வருமா? இல்லாவிட்டால் இப்படி கண்ணை மூடிக்கொண்டு இறைக்க முடியுமா!

மனம் லேசாக மிதந்தது. கிளுகிளுவென்று ஒரு மகிழ்ச்சி. எழுந்து விளக்கைப் போட்டு அலமாரியைத் திறந்து மிச்சமிருந்த இரண்டு மைசூர் பாக்கையும் கதம்ப பஜ்ஜியையும் தின்றாள். பசிதான். இரண்டு டம்ளர் தண்ணீர் குடித்த பிறகு வயிறு இரைந்தது. இரண்டு வெற்றிலையைப் போட்டு கடைவாயில் அரைத்தாள். படுத்துக்கொண்டாள். நாதபிந்து கலாதி . . .

நிம்மதி. மகிழ்ச்சி. மனிதர்களில் நல்லவர்களும் இருக்கத்தான் இருக்கிறார்கள். பிசிநாரிகள் பத்து இருக்கும். பரந்த மனம் ஒன்றும் இந்த மாதிரி எப்போதாவது எங்காவது இருக்கத்தான் இருக்கிறது . . . தூக்கம் வருகிறது.

ஐந்து மணிக்குப் பால்காரன். பிறகு அரைமணிக்கெல்லாம் கூட்டுகிற பெண்பிள்ளை. அவள் வெந்நீர் போட்டுத் தயார் செய்து மூன்றாவது தூக்கத்தில் எழுப்பினாள். மணி ஆறு முப்பத்தைந்து. காபி போட்டு. பல் தேய்த்து, காப்பியைக் குடித்து, குளித்து ஆடை உடுத்தி, தலை வாரும்போது வாசலில் கார் நிற்கும் ஓசை கேட்டது.

யார் இறங்கி வருகிறது? பாவானியா?

'இப்பதான் தலை வாரியாவுதா? கெட்டுது போ.'

'இதோ கிளம்பியாச்சு.'

'பின்னல் அங்கபோய் போட்டுக்கலாம் கிளம்பு. ஊர்மிளாவை இட்டுகிட்டுப் போகணும். அதுவும் ஏழரை மணிக்குள்ளார கிளம்பணுமாம். ப்ரொட்யூசர் ரொம்ப ஆசாரக்காரரு. கிளம்பேன். பின்னல் அங்கே போய்ப் போட்டுக்கலாம். கவலைப்படாதே. நான் போட்டுடறேன். கிளம்பு மணி ஏழு பதினெட்டு.'

‘இப்படியே வா.’

‘வா’ என்று இழுத்தாள், தள்ளினாள் பவானி. வீட்டைப் பூட்டிக்கொண்டு, ‘வானில்’ ஏறிக்கொண்டாள் நீலா.

ஒன்பதேகாலுக்கு மேல்தான் திறப்புவிழா நடத்துகிற பெரியவர் வந்து சேர்ந்தார்.

என்ன இது?

‘இவ்வளவு ஆசாரம் எல்லாம் பார்க்கிற ப்ரொட்யூஸருக்கு இந்த மாதிரி ஆள்தானா கிடைத்தது திறப்புவிழா நடத்த!’

என்ன கோரம்!

அந்த கோரமே கண்ணை இழுத்து இழுத்துக் கவர்ந்தது. ஏராளமாகப் படித்தவராம். ஏராள பணமாம். யாரும் அவர் உடம்பை கவனித்ததாகவே தெரியவில்லை. தொட்டுத் தொட்டுக் கையைக் குலுக்கினார்கள். ஐயோ! . . . டைரக்டர் சாமர்த்யமாகக் கும்பிடு போட்டுவிட்டார். இது படு சமர்த்து. இல்லாவிட்டால் நொள்ளை சில்லறை எல்லாம் போட்டு ஒரு படத்தை எடுத்து பத்துத் தடவை பார்க்கவைக்குமா?

பூஜை போட்டதும் பெரியவர் பேசினார். ‘. . . கதையைக் கேட்டேன். சில சம்பாஷணைகளைக்கூட கேட்டேன். அருமையான கதை . . . அருமையான சம்பாஷணை. பட உலகம் இருண்டுகிடக்கிற இந்த வேளையில் இந்தப் படம் ஒரு புதிய ஒளிமாதிரி. மற்ற பட முதலாளிகளுக்கு மட்டுமில்லை, மக்களுக்கே நல்வழி காட்டும். நெறியும் அறமும் நைந்துகிடக்கிற இந்த நாளில், கடவுள் என்கிற சொல்லையே சட்டையில் ஒட்டிக்கொண்டிருக்கிற கம்பளிப் பூச்சியை உதறுவதுபோல உதறுகிற இந்த நாளில், அமைதியாகச் செல்லும் சமூக அமைதியைக் குலைக்கிற இந்த நாளில், மக்கள் மனதில் நம்பிக்கையையும் நெறியில் பற்றையும் இந்தப் படம் ஏற்றி வைக்கும் என்று என் துணிவு. முக்கியமாக நவநாகரீகம் என்று திகைப்பூண்டை மிதித்து வழி தெரியாமல், நல்லது கெட்டது தெரியாமல் குழம்பும் பெண்களுக்கு இந்தக் கதையும் சம்பாஷணைகளும் பிடிப்பு ஒன்றைக் கொடுக்கும் . . . ஒழுங்கற்றதுதான் மக்களுக்குப் பிடிக்கும் என்று உற்பத்தியாளர்கள் சொல்லி அலையும்போது இந்த மாதிரி புது லட்சியம் கொண்ட முயற்சியில் முனைந்துள்ள இந்த உற்பத்தியாளரின் துணிவையும் லட்சியப்பற்றையும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. முருகன் வெற்றி அளிப்பானாக! வாழ்க இம்முயற்சி . . .’

நன்றிக்குப் பிறகு விழா முடிவுற்றது. முதல் அரை நிமிஷம் 'டேக்'கும் நடந்தது.

பழம் பாக்கு வெற்றிலை வழங்கினார்கள்.

பெரியவரை முதலாளி எல்லோருக்கும் அறிமுகப்படுத்தினார்.

நிர்வாகி கைகுலுக்கினார். சங்கீத டைரக்டர் கையைக் குலுக்கினார். எப்படி கூசாமல் குலுக்குகிறார்களோ! கதாநாயகி மாயாவை முதலிலேயே அறிமுகம் செய்தாயிற்று. மற்ற நடிக நடிகைகளை ஒவ்வொருவராகக் சொல்லிக்கொண்டு வந்தார் முதலாளி.

'உமாபாய்.'

'ரமணி.'

'உஷா.'

'கந்தசாமி.'

எல்லோருக்கும் கையை உயர்த்தினார் பெரியவர். விரல்களை நீட்ட முடியவில்லை. சுண்டு விரலில் மடக்கு. இனி மேல் நீளாத மடக்கு. சுண்டு விரல் என்ன? . . . எல்லாமே அப்படித்தான்.

'பவானி.'

'நீலா.'

இது என்ன வாசனை!

'அம்மாடா.'

மகிழம்பூ மாதிரி . . . ஜவ்வாது மாதிரி . . . ரோஜாப்பூவா . . . எல்லாம் கலந்ததா . . . அப்பாடா.

வயிற்றில் கல் விழுந்தாற்போலிருந்தது. மூச்சை இழுத்தாள் நீலா. மென்னையான மணம் அதே வாசனை தான். அதே தானா? . . . அதே . . . இராது. அந்தமாதிரி மனிதர் இப்படிப் பேசியிருக்கமாட்டார்.

பெரியவர் நகர்ந்து போய்விட்டார்.

'ஏன் பேசக்கூடாது? இப்படிப் பேசுகிறவர்கள்தான்' . . .

திரும்பி வருகிறார் . . . அதே வாசனைதான் . . . என்ன கோரம் . . .

மூக்கில் வளைந்த சப்பை . . . கன்னம், நெற்றியெல்லாம் வேர்வை வழிகிறது . . . அதே? . . . இராது . . . இந்த வாசனை பேறு. எங்கும் இதுவரை பார்த்ததில்லையே . . . அதே . . . ஒல்லி . . . வயதான உணர்ச்சி தொட்டுப் பார்த்தால் . . .

கண்ணால் பார்த்தால் . . . என்ன வயதிருக்கும்? நாற்பது, ஐம்பது, அறுபது. நூறு வயது . . . இல்லை வயதே அழிந்துவிட்டது. இத்தனை விகாரம்! இத்தனை . . .

பாவம்! . . .

ஊதுவர்த்தி மணம் கமழ்ந்தது. பிண ஊதுவர்த்தி மாதிரி . . . ஹ்ம் . . . கையிலிருந்த பூச்செண்டு . . . மரு, ஜவந்தி, அரளி, இருவாட்சி, ரோஜா . . . ஹ்ம் . . . என்ன நாற்றங்கள் . .!

அதே அந்த ஆளாக . .!

ஸ்டூடியோவிலேயே சாப்பாடு நடந்தது. கையைச் சோப்புப் போட்டு தேய்த்துத் தேய்த்துக் கழுவிவிட்டு வந்தாள் நீலா . . .

பருக்கை இறங்கவில்லை.

'இட்லி காபி எல்லாம் ரட்டை பங்காக்கும் . .!' பக்கத்து இலை முன்னிருந்து பவானிதான்.

'உன்னைத்தானே . . . நீலா . . . ஏன் சாப்பிடவேயில்லை?'

'வயிறு சரியாயில்லை . . . புரட்டுது.'

'வெயில்லெகூட நிக்கிலியே. ராத்திரி நல்ல தூங்கினியீல்ல?'

'ம்.'

'பின்னே? . . . பித்தமா இருக்கும்.'

பந்தியில் எழுந்த சிரிப்புகளும் கேலிகளும் எங்கோ தொலைவில் கேட்பதுபோலிருந்தது.

காரில் வரும்போதும் வெறித்து எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தாள் நீலா.

'நீலா, ஏன் நீ சுரத்தா இல்லெ?'

'ஒண்ணுமில்லை.'

‘வண்டியை நிறுத்தச் சொல்லி ஒரு ஜிஞ்ஜர்பீர் சாப்பிடேன்.’

‘வாண்டாம் பவானி.’

‘தலையை வலிக்குதா?’

‘க்கும்.’

பவானி தொட்டுப் பார்க்கிறாள்.

கார் நின்றது. பவானி உள்ளே வந்து படுக்கையில் படுத்துக்கொள்ளச் சொல்லி ‘உடம்பை ஜாக்ரதையாப பார்த்துக்க . . . வெந்நீர் போட்டுத் தரட்டுமா?’ என்று கேட்டாள்.

‘வாண்டாம் பவானி. கொஞ்சம் படுத்திருந்தா சரியாப் போயிடும் . . . நீ போயிட்டுவா. வண்டி காத்திருக்கு.’

‘வண்டியை அனுப்பிச்சிட்டு அப்புறம் போறேனே.’

‘வாண்டாம். கொஞ்சநேரம் தூங்கறேன். நீ போயிட்டு வா.’

‘சரி . . . அப்படின்னா. சாயங்காலமா வரட்டுமா?’

‘முடிஞ்சா வா. இதுக்காக அலையவாண்டாம்.’

‘என்ன நீலா? பின்னே எதுக்காக அலையுதாம்?’

‘சரி வா.’

‘அப்ப வரட்டுமா?’

‘சரி.’

‘சாயங்காலம் வரேன். கதவைத் தாப்பாள் போட்டுக்க.’

வயிற்றைக் குமட்டுகிறது. வாந்தி . . . வாயைக் கொப்பளித்து, கண்ணைத் துடைத்துக்கொண்டாள் அவள்.

கதவைத் தாழிட்டு வந்து படுத்தாள்.

அதே . . .

இராது. வாசனை மட்டும் . .?

அம்மாவின் படத்தின் முன்னால் நின்றாள். அம்மாதான் முன்னால் கண்ணை மூடினாள். இல்லாவிட்டால் அப்பா என்னை

அழைத்துக்கொண்டு பட்டணத்துக்கு வருவானேன்? கோயிலில் திருப்புகழும் தேவாரமும் அவருக்கும் எப்போதும் போல் படி அளந்திருக்கும்.

இங்கே வந்துதான் என்ன? வந்த ஆறு மாசத்திற்கெல்லாம் பாரிசவாயு. திருப்புகழ் சொன்ன வாய், தேவாரம் சொன்ன வாய்தான். ஆனால் கோணிக்கொண்டுவிட்டதே. படிக்கத்தான் வைத்தாரா? படிக்கப் போது எங்கே இருந்தது? மேல் துணி போனது தெரியாமல் கிடந்தவரைக் கவனிக்கிறதா? எப்போது போவார் என்று ஆய்விட்டது.

அதே . .!

காதைத் தொட்டுப் பார்த்துக்கொண்டாள் அவள். மூக்கைப் பார்த்தாள். உள்ளங்களையில் அரிப்பதுபோலிருந்தது. புடவையை விழுத்துவிட்டு கார்பாலிக் சோப்பைப் போட்டுத் தேய்த்துச் சுரண்டிக் குளித்தாள். புடவையை உடுத்திக்கொண்டாள். பிரமை பிடித்தாற்போல நின்றாள்.

'அதே வாசனைதான். ஆனால் அதே . .? இராது . . . இராது.'

சற்றுக் கீழ் நோக்கி சாய்ந்து மாட்டியிருந்த முருகன் படத்திற்கு முன்னால் நின்று நிமிர்ந்தாள்.

'அதே . . . அதே வாசனை தான் . . . அதே . . . அவரேதானா. இராது . . . இல்லை, அவரே தான் . . . ஒல்லி, மூப்பு . . . தொடும்போது கை சொரசொரவென்று . . . இராது . . . இருந்தால்.'

பேயறைந்தாற்போல் நின்றாள்.

ஏன் விளக்கு அணைந்தது? தானாக அணைந்ததா? வேண்டு மென்று . . . அருள்சாமி கூடவா ஏமாற்றுவான்? மானேஜர் ஏன் சாவியைக் கொண்டு போனான்? . . . போனானா? . . . காரில் போய் சாவி வாங்கிவருகிறேன் என்று சொன்னானே அருள்சாமி . . . அதற்குள் அவர் வராமலிருந்தால்.

அவரேவா? . . . இராது . . . இருந்தால்? அம்மாவின் படத்தைப் பார்த்தாள் நீலா. சூன்யத்தை வெறித்துப் பார்த்தாள். குமுறிக் குமுறி நெஞ்சை அடைத்தது. தொண்டை வலித்தது. கண்ணீர் தளும்பிற்று. ஜன்னல் கம்பியைப் பிடித்துக்கொண்டாள். உதட்டைக் கடித்தாள். அழுகை உதட்டைப் பீறிக்கொண்டு வந்தது.

சுதேசமித்திரன் தீபாவளி மலர், அக்டோபர் 1956

# அப்பா — பிள்ளை

ஓடும் நீரைக் குத்திட்டாற்போலப் பார்த்துக் கொண்டேயிருந்தால் மனது எங்கோ போய்விடுகிறது. ஒன்பது மாத காலம் அல்லில்லை பகலில்லை, வெயிலில்லை மழையில்லை — அப்படி கர்மசிரத்தையாக இந்தக் காவேரி ஓடிக்கொண்டிருக்கிறது. யாருக்காக ஓடுகிறது? — இதுவரை அம்மாவுக்காக ஓடிற்று. இப்போது மறுபடியும் உலகத்திற்காக ஓடத் தொடங்கிவிட்டது.

தொமேர் தொமேர் என்று வாண்டுப் பயல்கள் கரையில் நின்ற நாவல் மரத்தில் ஏறி ஏறி ஆற்றில் குதி போட்டுகொண்டிருந்தார்கள். குஞ்சு திண்ணையில் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருந்தார். குதியினால் தெறித்த நீரில் ஓரிரண்டு திவலைகள் திண்ணையில் முகட்டில் வந்து விழுகின்றன. காவேரி அவ்வளவு கையெட்டு. வாசற்படியைவிட்டு இறங்கிச் சற்றுக் காலை வீசி வைத்தால் முதல்படி மீதுதான் வைக்கவேண்டும். அக்கரையிலிருந்து பார்த்தால் ஒவ்வொரு வீடும் காலை நீரில் தொங்க விட்டுக் கனவு காண்பது போலிருக்கும். இப்படி ஒரு தெருவே கட்ட வேண்டும் என்று யாருக்குத்தான் தோன்றிற்றோ! குடிக்க, குளிக்க, சௌசம் செய்ய — எல்லாவற்றுகும் இந்தக் காவேரிதான். தெருவிலிருக்கிற ஆசாரப் பாட்டிகள் பேரன் மேலே பட்டுவிட்டான், சாக்கடை நீர் காலில் தெறித்துவிட்டது என்று நினைத்து நினைத்து வாசலுக்கு வந்து ஒரு எட்டு வைத்து முழுகிவிட்டுப் போகிறார்கள். அம்மாவும் அப்படித்தான் செய்துகொண்டிருந்தாள். நினைத்து நினைத்து வந்து முழுகுவாள். சிலுசிலுப்புக்கு அந்த எண்பத்தைந்து வயது அஞ்சினதில்லை. கைகால் மூட்டு வலி, முதுகுவலி — இதெல்லாம் அவளுக்கு என்னவென்றே தெரியாது. அவள் அஸ்தியைக் கரைக்கிற வரையில் பல் முப்பத்திரண்டும் தேசல் மாசலில்லாமல் தாக்குப்பிடித்துவிட்டன. இப்போதும் அம்மா படியில் உட்கார்ந்து அலுத்துக்கொள்வதுகூடக் கேட்கிறாற் போலிருக்கிறது — "நான் முழுகிட்டுப் போயிடறேனே, அப்புறமாகக் குதிக்கிறதோ, காலை ஒடிச்சுக்கிறதோ, எதையாவது செய்யுங்கோளேண்டா," மற்றக் கிழங்களைப்போல 'கரியாய்ப்' போகவும், 'கட்டையிலே' போகவும் அவளுக்கு 'ஆசி' கூறத் தெரியாது.

'சரி. பாட்டி, சுருக்கக் குளிச்சுட்டுப் போங்கோளேன். ஜலதோஷம் வந்து தொலைக்கப் போறது" என்று ஒருவாண்டு சொல்லி 'எலே இருங்கடா,

பாட்டி கரையேறட்டும்” என்று மற்றதுகளை அடக்கி வைத்திருக்கும், அம்மாவுக்கே காவேரி ஓடினாற் போலிருந்தது. கால் நகம், கை நகம், ஒன்றையும் விடாமல் அவள் தேய்த்துச் சுத்தி பண்ணிக் காவேரியில் கரைத்துக்கொண்டே இருப்பாள். எழுபத்திரண்டு வருஷம் இப்படிக் கரைத்திருப்பாள். பதினாறு வயதில் இந்த வீட்டில் புகுந்தாள். கடைசியிலே போன ஆனிக்கு அவளே கரைந்துபோன பொழுது அவளுக்கு வயது எழுபத்தாறு – சின்ன வயதில்லை, ஆனால் அம்மா அம்மா தானே? ஆயிரம் பெண்டாட்டி வந்தாலும் ஆகிவிடுமா? ஒரு தலைவலி வந்து இவள் நெற்றியில் கைதொடடுத் தடவினால், அம்மா தொடுகிற மாதிரி ஆகிவிடுமா?

இத்தனை குதி, இத்தனை வாண்டுகள், இத்தனை இரைச்சலுக்கும் நடுவில் படிக்கட்டு சூன்யமாகத்தான் இருந்தது குஞ்சுவுக்கு. சற்றுக் கழித்து அவர் மனதுகூடச் சூன்யமாகிவிட்டது. ‘அம்மா, அம்மா’ என்று முணுமுணுக்கையில் மனது சோம்பி, கண்செருகிக் குத்திட்டுக் கிடந்தது.

யாரோ வந்து குறட்டில் நின்றார்கள். குஞ்சு எங்கோ கிடந்த மனதை இழுத்துப் பார்த்தார். கறுப்பாக ஒரு ஆள், கட்டுமஸ்தான கை, கழுத்து. வெள்ளையாக அரைக் கைச் சட்டை; அகன்ற மார்பு என்று அது சொல்லிற்று. கீழே ஒரு எட்டு முழும். தோளில் ஒரு கட்டம் போட்ட துண்டு. கறுப்புதான். ஆனால் முகத்தில் ஒரு களை. யாரோ தெரிந்தவரின் முகஜாடை ஒன்று சாயலடிக்கிறது. “நமஸ்காரம்” என்றது அந்தக் குரல் – குரல்கூட கனம்தான். முப்பது வயதுக் கனம். வயது இருபத்தைந்து தான் இருக்கும்.

“யாரு? சட்டுனு தெரியலே!” என்று மன்னிப்புக் கேட்கிற பாவனையில் புன்னகை பூக்க முயன்றார் குஞ்சு. ஆனால் பூக்க முடியவில்லை. வந்து நின்ற முகத்தில் சோகக்களை. குஞ்சுவின் புருவத்தை ஒரு கவலை சுளுக்கிற்று. “யாரு?” என்று மறுபடியும் கேட்டபொழுது அவருடைய குரலிலும் அந்தக் கவலை இறங்கிவிட்டது. வந்த ஆசாமி பதில் பேசவில்லை. தோளில் தொங்கிய துண்டை எடுத்து இடுப்பில் சுற்றிக்கொண்டான். நெஞ்சு விம்மி விசித்தது. நெடுஞ்சாண் கிடையாகக் குறட்டிலேயே விழுந்து நமஸ்காரம் செய்தான். குஞ்சு சட்டென்று திண்ணையில் தொங்கிய காலை இழுத்து மடக்கிக்கொண்டார்.

“அடாடா! என்ன இது?”

அவன் நாலு நமஸ்காரங்களை எழுந்து எழுந்து செய்து நிற்கும்

வரையில் காத்துக் கொண்டிருந்தார். காதில் கை வைத்து "ராமநாத சர்மாஹம் அஸ்மிபோ" என்று முறைப்படித் தன் பெயரைத் தழதழத்துக்கொண்டே சொன்னான் அவன். "பெரியவா என்னைக் காப்பாத்துணும்" என்று அவன் சொல்லும் பொழுது கன்னத்தில் நீர் வழிந்து ஓடி இரண்டு சொட்டு குறட்டில் விழுந்தது. அவன் சுமங்கலியாயில்லா விட்டாலும் சுமங்கலியின் கண்ணீரே நிலத்தில் விழுவதைப் பார்ப்பதுபோல ஒரு பதட்டம் குஞ்சுவை லேசாக அசங்க அடித்தது – இளங்காளே. கட்டுமஸ்தான உடம்பு. கண்ணீர் விடவாவது!

"யாரு? என்ன?" என்று குமுறினார் குஞ்சு.

"என்னைத் தெரியலியா? . . . நான் வந்து . . . ஐயா பாகவதரின் அண்ணாபிள்ளை. உங்க பையனும் நானும் ஒரே ஆபிசில்தான் வேலை பார்க்கிறோம். மாயவரத்திலே" என்றான் வந்தவன். சட்டென்று முகஜாடை ஞாபகம் வந்துவிட்டது குஞ்சுவுக்கு. ஐயாவின் முகச்சாயை தான் அது. ஐயாவின் தமையன் வீராசாமி. ஐயா குஞ்சுவின் நெருங்கிய நண்பர். அதனால் வீராசாமியோடும் பழக்கம் உண்டு. வீராசாமி நெல் வியாபாரத்தில் பெரிய புள்ளியாக இருந்தவர். பரம உபகாரி. வேளைக்கு முப்பது நாற்பது என்று இலை விழும் சாப்பாட்டுக்கு. அவர் வீடு சத்திரம். வந்தவன் – போனவன் எல்லாம் சாப்பிட்டுப் போய்க்கொண்டே இருப்பான். தெருவில் நடந்தால் கும்பிட்டுக் கொண்டேயிருப்பார்கள். வாரி வாரி இறைத்த கை அது. அதற்கு தெய்வம் ஒரு நா குறும்பு பண்ணிற்று. கூட்டாளிக்கு ஏதோ கடனுக்கு மேலொப்பம் போட்டார் வீராசாமி. அவன் திடீரென்று வாயைப் பிளந்தான். அந்த அறுபதாயிர ரூபாய் கடன் வீராசாமியைப் பிடித்துக்கொண்டது. ஒரே நாளில் பாப்பராகிச் சாப்பாட்டுக்கே தவித்து – தம்பி ஐயா இல்லாவிட்டால் அந்தத் தவிப்பும் பட்டுத்தான் இருக்க வேண்டும். அந்த ஏக்கத்திலேயே வீராசாமி உருகி ஒரு நாள் உலகைவிட்டு போய்விட்டார். நன்றாகப் படித்து முன்னுக்கு வந்திருக்க வேண்டிய பையன், பள்ளிக்கூடப்படிப்போடு நிறுத்திவிட்டு குமாஸ்தாவாக ஆனான். குஞ்சுவின் பையனோடுதான் வேலை பார்க்கிறான் அவன்.

அந்த ராமநாதன்தான் இவன். எப்படியோ இருக்க வேண்டியவன் என்ற இரக்கம் மனத்தை உளைக்க, "உட்காருப்பா, உட்காரு முதல்லெ," என்று நகர்ந்துகொண்டார் குஞ்சு.

"பரவாயில்லை, மாமா."

“உட்காரு, சொல்றேன்.”

உட்கார்ந்தான் அவன். சொன்னான்: “அம்மாவையும் அவளையும் குழந்தையையும் அழைச்சிண்டு ஸ்வாமிமலைக்கு வந்தேன். குழந்தைக்கு முடியிறக்கணும்னு. நேரே போயிருக்கப்படாதா? கும்பகோணத்திலே இறங்கி மாமாங்கக் குளத்திலே ஒரு ஸ்நானம் பண்ணிவிட்டு அப்புறம் பஸ்லே போகலாமே, ஸ்வாமி மலைக்குன்னா அம்மா. சரின்னு இறங்கினோம். ஏதோ கிழக்கே போற வண்டி கிராஸிங்காம். வண்டியை அந்தண்டைப் பிளாட்பாரத்திலே நிறுத்திவிட்டான். இறங்கி நடந்து வந்தோம். குழந்தையை என் சம்சாரம் எடுத்துண்டா. பொட்டியை நான் எடுத்துண்டேன். அம்மா ஒரு முட்டையை எடுத்துண்டா. தண்டவாளத்தைத் தாண்டறபோது கல் தடுக்கித்தோ என்ன தடுக்கித்தோ, அம்மா மொடேர்னு விழுந்தா, பாருங்கோ. நெத்தியிலே கல் குத்தி பிரவாகமா ரத்தம் கொட்டித்து. தோளிலே வேறே அடி. காலிலே குதிரை முகத்திலே வேறே அடிபட்டுட்டாப் போலிருக்கு. எந்திருக்க முடியலே. சட்டுனு தூக்கினேன். ஒரு ஒத்தை மாட்டு வண்டியிலே போட்டு சிங்காரம் பிள்ளை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனேன். அம்மாவுக்கு மூர்ச்சையே தெளியலே. டாக்டர் காயத்தை அலம்பிக் கிலம்பிக் கட்டுப் போட்டார். இங்கேயே மூணு நாள் இன்பேஷண்டா இருக்கணும்னார். ஊசி போட்டார். சீழ் பிடிக்காம இருக்கணுமாம்; பெனிசில்லின் இன்ஜெக் ஷன் போடணுங்கறார். இருக்கற பணம் பத்து ரூபா சொச்சம்தான். நான் எங்கே போவேன்? ‘சாமிநாதா இப்படிப் பண்ணிப்பிட்டியே’ன்னு ஒரு நிமிஷம் கண்ணை மூடி ஆடிப்போயிட்டேன், முகம் தெரியாத ஊரு, எங்கே போவேன், யாரைப் பார்ப்பேன்? ஒண்ணுமே புரியலே. கடைசியிலே சட்டுனு பெரியவா ஞாபகம் வந்தது. ஓடிவந்தேன்.”

“ஸ்வாமிநாதஸ்வாமிதான் கொண்டுவிட்டான்னு நெனச்சுக் கோப்பா . . . ஆமா. இதுக்காவா இப்படிக் கண்ணாலே ஜலம் விடறது? இப்ப என்ன நடந்துட்டுது – தாங்க முடியாம?”

“அப்படியில்லை, மாமா. ஏதோ வந்தோம். காரியத்தை பார்த்துண்டோம்னு போகாம இப்படி நேர்ந்துட்டுதேன்னு நினைக்கிறபோது தாங்கலே. அதுவும் அம்மாவை நினைக்கிறபோது தாங்கவேயில்லே. அப்பா இருந்தார்னா ஒரு டாக்சி வச்சிண்டு மாயவரத்திலேர்ந்து ஸ்வாமி மலைக்கு நேரா வந்துட்டு போயிருப்பார் இல்லியா? எத்தனை பேருக்குப் பண்ணிப் போட்டிருக்கா, அம்மா! எத்தனை குடும்பங்களைத் தாங்கியிருக்கா! அவ வந்து இப்படி தண்டவாளத்திலே விழுந்து. நான்

அவளைத் தூக்கி, எங்கியோ கண்காணாத ஊர்லே ஆஸ்பத்திரியிலே போட்டு — ”

“கண்காணாத ஊராவதப்பா! கும்பகோணமா கண்காணாத ஊரு? . . . சரி சரி. வெறுமனே மனசைப் போட்டு வாட்டிக்காதே. நாங்கள்ளாம் இல்லியா? ஒரு தடவை கடைமுகத்துக்கு மாயவரத்துக்கு வந்தோம், பத்து வருஷம் முன்னாலே. உங்கம்மா ஒண்டிக்காரியா நின்னுண்டு முந்நூறு பேருக்குச் சமைச்சுப் போட்டு — வந்தவாளுக்கு யார் யாருக்கு என்ன வேணும்னு கவனிச்சு! அதிதிகளை எப்படி சந்தோஷப்படுத்தறதுன்னு உங்கம்மாகிட்டே தெரிஞ்சுண்டோம் அன்னிக்கு. இப்ப என்ன மோசம் போயிட்டுது? நீ இங்கியே இரு. சம்சாரமும் குழந்தையுமா இங்கே வந்து இருங்கோ. சாப்பாடு பண்ணி வேளா வேளைக்குக் கொண்டுபோய் அம்மாவுக்குக் கொடுங்கோ. உடம்பு நன்னா குணமான பிறகு இங்கோ வந்து தங்கி, ஸ்வாமிமலைக்குப் போயிட்டுப் போங்கோ” என்றார் குஞ்சு

“லீவு இல்லியே, மாமா? ஒரு நாள் தான் லீவு போட்டிருக்கேன்.”

“ஒரு தந்தியைக் கொடுக்கிறது. இந்தமாதிரி நேர்ந்துட்டுதுன்னு.”

“பார்க்கறேன்.”

“இப்ப அம்மாவுக்கு எப்படியிருக்கு?”

“காயமெல்லாம் கட்டுப் போட்டாச்சு, மயக்கம்தான் தெளியலே. ‘பயம் ஒண்ணுமில்லை, கவலைப்படாதீங்கோ. இந்த இன்ஜெக் ஷனை வாங்கிண்டு வந்துடுங்கோன்’னார் டாக்டர்.”

“எத்தனை ஆகுமாம் இன்ஜெக் ஷனுக்கு?”

“பதினொண்ணே சொச்சம் ஆறது. அப்புறம் டாக்டர் பீஸ் கொடுத்தாகணும். இப்ப சத்தியா இருபது ரூபா இருந்தா சமாளிச்சிடுவேன்.

“அவ்வளவுதானே?” என்றார் குஞ்சு. உள்ளே போனார்.

“அவ்வளவுதானே?” என்று அலட்சியமாகச் சொல்லி வந்தாரே ஒழிய உள்ளே அவ்வளவு இருந்ததா என்பது ஸ்வாமிநாதனுக்குத்தான் வெளிச்சம். முந்திய வியாழனன்று ஒரு சிராத்தம் சாப்பிட்டதில் இரண்டு ரூபாயும், வேட்டிக்குப் பதிலாக ஒரு ரூபாயும் வந்திருந்தன. அதற்கு முதல் நாள் ஒரு தனிகர் பேரனுக்கு முதலாண்டு நிறைவு. பன்னிரண்டு ரூபாய் வந்தது. செலவு போக எத்தனை மிச்சமோ? — அலமாரியைக் குடைந்தார். பதினாறு சில்லறை இருந்தது. சம்சாரத்தினிடம் போனார்.

“உன்னிடம் ஏதாவது இருக்கோ?” என்றார். அஞ்சறைப் பெட்டியைக் குடைந்து ஒரு ரூபாய் சொச்சம் தேறிற்று என்று அவள் கொண்டு வந்தாள். “சரி, எப்படியாவது இன்னொரு ஐந்து ரூபாய்க்கு ஏற்பாடுபண்ணு” என்றார். அந்த அம்மாள் வெளியே ஓடி, நாலைந்து வீடு தள்ளி காமாட்சிபுரத்து ஐயர் சம்சாரத்திடம் கைமாற்று வாங்கிக்கொண்டு பரபரவென்று வந்தாள். வீட்டுச் செலவுக்கு இரண்டே சொச்சத்தை வைத்துவிட்டு, இருபது ரூபாயை ராமநாதனிடம் வந்து நிட்டினார்.

“இருந்தா எத்தனை வேணும்னாலும் கொடுத்திருப்பேன், இப்ப இதை வச்சுக்கோ, மருந்து செலவுக்கு, இன்ஜெக் ஷன் பண்ணியான பிற்பாடு நேரே சம்சாரத்தையும் குழந்தையும் அழச்சிண்டு இங்கே வந்திடு” என்றார்.

“பார்க்கறேன், மாமா. எப்படியிருக்கோ உடம்பு! கூடவே இருக்கும் படியா இருந்துதுன்னா? எதுக்கும் சாயங்காலம், இல்லாட்டா ராத்திரி வந்து தகவல் சொல்றேன். நீங்க இப்படி சமயத்துக்கு ஸ்வாமிநாதஸ்வாமி மாதிரி கை கொடுத்தேளே!” என்றான் அவன். மறுபடியும் பொலபொலவென்று கண்ணீர் விடத் தொடங்கிவிட்டான்.

“என்ன இப்படி நெகிழ்ந்து போறே? நான் என்ன செஞ்சுட்டேன்? உங்கப்பா இருந்த இருப்பென்ன? மகாராஜா மாதிரி இருந்தார். என்னமோ தெய்வம் சோதனை பண்ணிட்டுது, அதைரியப்படாதே. ஸ்வாமி இருக்கார். போயிட்டு வா. சிங்காரம்பிள்ளை ஆஸ்பத்திரியிலேதானே இருக்கா, அம்மா?”

“ஆமாம்.”

“முடிஞ்சா நான் சாயங்காலம் வந்து பார்க்கறேன்.”

குஞ்சுவின் சம்சாரத்திடமும் சொல்லிக்கொண்டு, நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போனான் அவன்.

குஞ்சு சொன்னார்: “என்ன ஆச்சரியம் பாலு! திண்ணையிலே உட்கார்ந்து அம்மாவை நினைச்சுண்டே இருந்தேன். அம்மா குளிக்கிறாப்பல, ஜபம் பண்றாப்பல, காலமே பாடிண்டு வீடு மொழுகறாப்பல, என்னென்னவெல்லாமோ நினைச்சுண்டு உட்கார்ந்திருந்தேன். திடீர்னு ‘அம்மாவுக்கு அடிப்பட்டுடுத்து. மருந்து வாங்கணும்’னு வந்து நிக்கறான், இந்தப் பிள்ளையாண்டான், ஆச்சரியமா இல்லே? நான் அம்மாவை நினைக்கிறதும், யாரோ வந்து என்

அம்மாவுக்குச் செய்'யின்னு கேக்கறதும் — "

சம்சாரத்திற்கு அதில் என்ன ஆச்சரியம் என்று புரியவில்லை. இருந்தாலும் அவளுக்கு மாற்றுச் சொல்லுகிற வழக்கமோ, இயல்போ இல்லை. "ஆமாம் — ரொம்ப" என்று மையமாகச் சொல்லி விட்டாள் — அவர் சொல்கிறதற்கு, செய்வதற்கு உடன்படுவது ஒன்றுதான் அவள் வழி.

குஞ்சுவுக்கு அவன் முகத்தை மறக்க முடியவில்லை. "எப்பேர்ப் பட்ட குடும்பம்! ரயிலில் மூன்றாம் கிளாசிலே போகத் தெரியாதே, அவருக்கு! முதல் கிளாசிலேன்னா போவார்! யாராவது யாசகம்னு கையை நீட்டினா, ஒண்ணு ரெண்டுன்னு கொடுக்கத் தெரியோதே; பத்து இருவதுன்னா வீசுவார்! அப்படிக் கொடுத்தவருக்கு வந்த கதி! சொத்தெல்லாம் போயி, வீடு போயி, நகையெல்லாம் போயி, ஒரு அஞ்சு வருஷம் தம்பியை நம்பிண்டு, சொல்ல முடியாம மெல்ல முடியாம அவர் தவிச்சது . . . அப்பப்பா! இது என்ன விசித்திரம், பாரு! அவர் இருக்கிறபடி இருந்தா, அந்தப் புள்ளை இப்படியா இருக்கும்?" என்று பேசமுடியாமல் நாக்குழறினார் அவர். சிறிது மௌனத்தினால் சுதாரித்துக்கொண்டு, "சரி, வந்த இடத்திலே சாப்பாட்டுக்கு என்ன பண்றாளோ, பாவம்! நாலு மணிக்கு நல்ல ரசம் வச்சு, மூணுபேருக்குச் சமைச்ச, ரசஞ் சாதமும் தயிருஞ் சாதமுமாப் பிசைஞ்சு ரெண்டு பாத்திரத்திலே கொடு. ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்த்து அதையும் கொடுத்துட்டு வரேன்" என்றார்.

"நாலு மணிக்குப் போகணுமா?"

"ஆமாம்."

குஞ்சு இடைகழியில் இருந்த திண்ணையில் படுத்துக்கொண்டார். தூக்கம் வரவில்லை. இன்னும் இருபது முப்பது ரூபாயாவது கொடுத்து சமயத்துக்கு உதவலாம். இல்லையே! கலியாணம் என்றால் கல்லுக் கல்லாக நகையை வாங்குகிறார்கள். பத்திரிகை அடிக்க முந்நூறு, நானூறு செலவழிக்கிறார்கள். தகடுதகடாகப் புடவையில் காசைக் கொட்டுகிறார்கள். தேங்காய் வைத்துக் கொடுக்கிற பைக்கு மாத்திரம் இருநூறு முந்நூறு என்று இறைக்கிறார்கள். உள்ளேயிருக்கிற ஒல்லித் தேங்காய்க்கு ஈடு போலிருக்கிறது! மேளக்காரனுக்கும் வாசனைக்காரனுக்கும் ஐந்நூறு, ஆயிரம்! கடைசியிலே வைதீகனிடம் வரும்போது மாத்திரம் சுஷ்கம் பண்ணுகிறார்கள். ஹோமம் பண்ணி மந்திரத்தை வளர்த்து, கலியாணத்தையே ஊர்ஜிதம் செய்கிற காரியம்! மந்திரம் இல்லாவிட்டால்

கலியாணம் இல்லை. வைதீகன் இல்லாவிட்டால் மந்திரமில்லை. அந்த வைதீகனுக்கு மூணு நாலு தர எத்தனை குசுகுசுப்பு, எத்தனை சிடுசிடுப்பு! . . .

வெயிலில் ஊர், காவேரியெல்லாம் தூங்கி வழிந்தது – கொர்ர் . . .

யாரோ பேசுவது போலிருந்தது.

"மணி நாலடிக்கப் போறாப்பலிருக்கே" என்று குரல் வந்ததும் பரபரவென்று எழுந்தார் குஞ்சு. கொல்லையில் முகத்தைக் கழுவி, காலைக் கழுவி, கொடியிலிருந்த வெள்ளை வேட்டி ஒன்றை எடுத்து பஞ்சக் கச்சத்தை மாற்றிக்கொண்டார். மேலே ஆறு முழத்தைப் போர்த்துக்கொண்டார். கண்ணாடியைப் பார்த்தார். காலையில் இட்ட கோபிச்சந்தனம் பெரிய 'ப'னாவாக அப்படியே இருந்தது, நடுவில் ஒரு குங்குமப் பொட்டை வைத்துக்கொண்டார். இரண்டு பித்தளைத் தூக்குகள் கூடத்தில் தயாராயிருந்தன.

"இதிலே ரசஞ் சாதம், இதிலே தயிருஞ்சாதம் இருக்கு" என்று சொல்லிக்கொண்டே டீயைக் கொண்டு வந்து கொடுத்தாள் சம்சாரம்.

"பேஷ்!" என்று அவர் டீயை வாங்கிச் சாப்பிட்டுவிட்டுத் தூக்கை எடுத்துக்கொண்டு கிளம்பினார். நடந்தார். மகாமகக் குளத்தெரு தாராளமாக இரண்டரை மைல் இருக்கும். கைக்கு ஒரு தூக்காகத் தொங்கவிட்டு அறுபத்தாறு வயதிடம் கெஞ்சிக் கேட்டுச் சற்று அதிக சக்தியை வாங்கிக்கொண்டு விறுவிறுவென்று நடந்தார்.

சிங்காரம்பிள்ளை ஆஸ்பத்திரிக்கு ஒரு சின்னக் காம்பவுண்டு உண்டு. உள்ளே நுழைந்து திண்ணையில் பாத்திரங்களை வைத்துவிட்டு, உடம்பு மூக்கு, நெற்றி, கண் எல்லாவற்றையும் துடைத்துக்கொண்டார். திண்ணையில் நாலைந்து கிராமத்தார் – உள்ளே படுத்திருக்கிற நோயாளிகளின் உறவுக்காரர்கள் போலிருக்கிறது – பேசிக்கொண்டிருந்தார்கள். சற்று அமர்ந்துவிட்டு உள்ளே போனார். முதல் அறையில் ஆஸ்பத்திரிச் சிப்பந்தி உடையில் ஒருத்தன் இருந்தான். குஞ்சுவைப் பார்த்ததும், "யாரு?" என்றான்.

"காலமே மாயவரத்திலேர்ந்து வந்திருக்காளே, தலையிலே காயம் பட்டு ஒரு வயசான அம்மா . . . ரயில் தண்டவாளத்திலே கால் தடுக்கி மண்டை உடைஞ்சு போச்சாமே – அவர் பிள்ளை வந்து அட்மிட் பண்ணினாரே – இங்கே? அவா எந்த ரூம்லே இருக்கா?" என்று கேட்டார்

குஞ்சு.

“மாயாவரமா? சீயாழிலேர்ந்து ஒரு அம்மா வந்திருக்காங்க. அவங்களுக்கு தொண்டை ஆபரேஷனாச்சே!”

“இல்லே. மாயவரம் இவாளுக்கு. குழந்தைக்கு முடியிறக்க ஸ்வாமிமலைக்கு வந்தார். ராமராதன்னு பேரு. ஸ்டேஷன்லே இறங்கி வர்றபோது தண்டவாளத்திலே விழுந்துட்டாளாம். நெத்தியிலே ரத்த விளாராகி இங்கே கொண்டு வந்து போட்டாளாம். டாக்டர் ஒரு ஊசி போட்டாராம். அப்புறம் பெனிசில்லின் போடணும்னு சொன்னாராம். அவர் சொன்னாரே!”

“யாரு?”

“அந்த ராமநாதன்தான்; அந்த அம்மாவோட பிள்ளை.”

“எந்த ஆஸ்பத்திரின்னு சொன்னார்?”

“சிங்காரம்பிள்ளை ஆஸ்பத்திரிதானே இது?”

“ஆமாம்.”

“இங்கேதானே அட்மிட் பண்ணியிருக்கிறதாச் சொன்னார்.”

“மண்டையிலே அடிபட்ட கேஸே வரலீங்களே இங்கே.”

“நீங்க?”

“ஆஸ்பத்திரி ஆளுதான் நான் . . . இங்கே இருக்கிறதே ஆறு பேஷண்டுங்க தான். நீங்க வேணுமானா வந்து பாருங்க”

ஒவ்வொரு அறையாகக் கொண்டு காட்டினான், அந்த ஆள் . . . ஊஹும் . . . ராமநாதனை, அவன் சம்சாரத்தை, குழந்தையை, தாயாரை— யாரையும் காணோம்.

“இந்த ஆஸ்பத்திரிக்கு வேற ஏதாவது பிராஞ்சு இருக்கோ?”

“இல்லீங்களே . . . சர்கார் ஆஸ்பத்திரியிலே பாத்தீங்களா?”

“இல்லியே சிங்காரம் பிள்ளை ஆஸ்பத்திரின்னு சொன்னாரே.”

“இங்கே வர்லீங்களே அப்படி யாரும்!”

குஞ்சு சற்று நின்றார். பிறகு ராமநாதன் வந்து சொன்ன செய்தியை

மறுபடியும் சொன்னார். பணம் கொடுத்ததையும் சாப்பாடு கொண்டுவந்திருப்பதையும் சொன்னார்.

“எனக்கும் ஒண்ணும் புரியலீங்க. ஒண்ணு, அவரு வேறு எத்தையோ சிங்காரம் பிள்ளை ஆஸ்பத்திரின்னு தவறா நெனச்சிக்கிட்டுச் சொல்லியிருக்கணும். நீங்க எதுக்கும் சுப்ரமணியம் ஆஸ்பத்திரி, சர்க்கார் ஆஸ்பத்திரி ரெண்டையும் பார்த்திட்டுப் போங்களேன்” என்றான் அவன்.

“அப்படித்தான் செய்யணும்” என்று தூக்குகளை மீண்டும் தூக்கிக் கொண்டு நடந்தார் குஞ்சு. வாசற்படியில் வந்து மேற்கே பார்த்து நின்றார். ஏழை சோமேச்வரர் கோவில் கோபுரம் வானைச் சிறிது அகலமாகவே அடைத்து நின்றது.

சுப்பிரமணியத்தின் ஆஸ்பத்திரிக்குப் போனார். பிறகு சர்க்கார் ஆஸ்பத்திரிக்கும் போனார். ராமநாதனையோ நெற்றியில் அடிப்பட்ட தாயாரையோ எங்கும் காணவில்லை. அதற்குள் இருட்டிவிட்டது. நாலு மைல் நடையும் ஆகிவிட்டது. சாதம் செலவழியலில்லை. தூக்குகளைத் தூக்கிக்கொண்டு மீண்டும் வீட்டை நோக்கி, ஒரு இரண்டு மைல் நடந்தார். மனைவியிடம் எல்லாவற்றையும் சொல்லி முடிக்க அரை மணி ஆயிற்று, இரண்டு பேருமாக அதையே சாப்பிட்டார்கள். இரவோடு இரவாக உட்கார்ந்து மாயவரத்தில் இருக்கிற பிள்ளைக்கு ஒரு கடிதம் எழுதினார். நாலாம் நாள்தான் அதற்குப் பதில் வந்தது.

“. . . விபரம் யாவும் தெரிந்துகொண்டேன். ராமநாதன் அளவுக்கு மீறின புத்திசாலி. அதனால்தான் போன வருடமே அவனை வேலையை விட்டு நீக்கிவிட்டார்கள். வேலை வாங்கித் தருகிறேன் என்று முப்பது நாற்பது எம்.ஏ., பி.ஏ.க்களிடம் அவன் நூறு – இருநூறு வாங்கிக் கொண்டு விட்டானாம். ஒரு வருடமாக அவன் இந்த ஊரிலேயே இல்லை. ஆனால் போன வருடம் அவன் தாயார் தஞ்சாவூர் ஆஸ்பத்திரியில் கையில் புரையோடி ஆபரேஷனாகி. ஒரு மாதம் கிடந்தது உண்மை. அதிலிருந்து அவளுக்குப் பெனிசிலின் வாங்குவதற்காக அவன் அப்பா, சித்தப்பாவின் நண்பர்கள், நண்பர்களுக்கு நண்பர்கள் – என்று சுமார் எழுபது எண்பது பேரிடம் பத்தும் பதினைந்துமாக வாங்கிக்கொண்டு போய்விட்டான். கவலைப்பட வேண்டாம்; அந்த பணம் திரும்பி வராது. அவன் இப்போது ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டிருக்கிறான். ஆனால் அந்தத் தாயாரை விடுவதில்லை. அவளையும் அழைத்துக்கொண்டே சுற்றுகிறான். இருபது ரூபாயோடு போயிற்று என்று சாமாதானம் அடையவேண்டியதுதான். இனிமேல் இப்படி யாராவது வந்து கேட்டால்

தீர விசாரியாமல் கொடுக்க வேண்டாம் என்றுதான் நான் சொல்லுவேன். ராமநாதனுக்கு இன்னும் கலியாணமாகவில்லை. ஆனால் தாயாரிடம் அவனுக்குப் பாசம் அதிகம். அதனால் தாங்கள் வருத்தப்பட வேண்டாம் – அநேக நமஸ்காரம், தங்கள் விசுவநாதன்.”

“பேஷ்! பேஷ்!” என்றார் குஞ்சு.

“என்ன?” என்றாள் சம்சாரம்.

“பிள்ளையும் நம்ம மாதிரிதான் இருக்கான்னேன்”, என்று கடிதத்தை அவளுக்கு வாசித்துக் காட்டினார் குஞ்சு.

அவர் சம்சாரம் கண் கலங்கச் சிரிக்கத் தொடங்கினாள்.

சுதேசமித்திரன் தீபாவளி மலர், 1965

# யதுநாத்தின் குருபக்தி

பிரிட்டிஷார் இந்த நாட்டை ஆண்டபோது ஸாங்காச்ய சமஸ்தானத்தில் மன்னராக இருந்தவர், யதுநாத்பகதூர், எம்.ஏ.டி.பில். அவர் அபூர்வமான ஒரு ராஜா. குடிப்பழக்கம், பல மனைவிகள், ஐரோப்பிய டைப்பிஸ்ட் காதலிகள், குதிரைப் பந்தயம், வேட்டையாடல் ஒன்றும் அவருக்குத் தெரியாது. ஆதலால் அந்தப்புரமும் வனாந்தரமும் அங்கே வளரவில்லை. உஷ்ண மண்டலத்து வேங்கைகளையும் மங்கைகளையும் ரசிக்க வந்த ரெஸிடெண்ட் மக்னிகால், “இத்தனையும் செய்யாமல் ஒரு மகாராஜா என்னதான் செய்கிறார்? இந்தப் பக்கிரியை கட்டிக்கொண்டு அழவா நான் இத்தனை ஆயிரம் மைல் கடந்து வந்தேன்” என்று மாற்றல் வாங்கிக்கொண்டு அவருக்குச் சூழ்நிலை தரக்கூடிய டொக்கா சமஸ்தானத்து மன்னரின் நண்பராகவும் ரெஸிடெண்டாகவும் போய்விட்டார். டொக்கா மன்னரின் அந்தப்புரத்திற்கு ‘பொடானிகல் கார்டன்’ என்று இந்திய மன்னர்கள் கேலிப் பெயர் இட்டிருந்தார்கள்.

ஸாங்காச்யத்தின் மன்னர் பட்டத்துக்கு வருமுன் இங்கிலாந்துக்குப் போய், தத்துவ ஞானம் படித்து, எம்.ஏ. பட்டமும் டாக்டர் விருதும் பெற்றுத் திரும்பினார். திரும்பியதும் தகப்பனார் காலமாகிவிட்டதால் ஆட்சிப் பொறுப்பு அவர் தலையில் விழுந்தது. ஏதோ பாரம் தலையில் திடீரென விழுந்துவிட்டதுபோல்தான் இருந்தது அவருக்கு ஏனெனில் யதுநாத் ஒரு வேதாந்தி. சிறுவயது முதலே ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டவர். உலக இன்பங்களில் ஒரு ராஜாவுக்கு ஏற்படக்கூடிய சாரசரிப் பற்றுக்கூட அவருக்கு இல்லை. ஆட்சிப் பொறுப்பு ஆத்மவிசாரத்துக்குத் தடையென்றே அவருக்குப்பட்டது. ஆயினும் ஜனகர்போன்ற ராஜரிஷிகளை நினைந்து சமாதானப் படுத்திக்கொண்டார் பாரதத்தின் ஆத்மீக வளர்ச்சியில் காட்டில் வாழும் முனிவர்களைவிட, மன்னர்கள் பெரும்பங்கு கொண்டவர்கள் என்று ஒரு மகான் சொன்னதை நினைத்துப் புதுப் பொறுப்புகளுக்குத் தம்மைத் தயார் செய்துகொண்டார். தடைகள் பெருகப் பெருக, தம் வைராக்கியத்தையும் உறுதிப்படுத்த வேண்டும் என்ற வெறி அவரை ஆட்கொண்டது.

யதுநாத்தின் அழகு உலகுப் பிரசித்தம்; ஆறடி உயரம். ஸிடார் மாதிரி வெள்ளை நிறம். வழுவழுவென்று, ஆனால் வைரம் பாய்ந்த மேனி. இயற்கையிலேயே நல்ல பலம், தேகக் கட்டு, கூரிய கண்கள், சற்றுப்

பூனைவிழி — எப்போதும் சிந்திப்பது போன்ற விழி — இவ்வளவும் அவருடைய கவர்ச்சிக்கு ஆதாரம், வாய்விட்டுச் சிரித்ததே இல்லை அவர். மறையாத புன்னகை. சிரித்தால், அந்தச் சிரிப்பு, உதடு திறவாமல், மூக்கின் வழியாக இரண்டு வேகமான ஹூம்காரங்களை மட்டும் செய்துவிட்டு ஓய்ந்துவிடும். மென்சிரிப்பாகத்தான் இருக்கும்.

இங்கிலாந்துக்குப் போகுமுன்பே அவருக்கு மணமாகிவிட்டது. அபிநவ கேகயத்தின் இளவரசிதான் அவர் மனைவி. லட்சணக் குறைவு இல்லை. ராஜ குடும்பத்துக் காம்பீர்யம் நிறைந்த பேச்சும் இயல்பும் அவளிடம் உண்டு. ஆனால் யதுநாத்திற்கு ஏற்ற ஜோடியென்று கல்யாண போட்டோவைப் பார்த்தவர்கள்கூட ஒப்புக்கொள்ள மாட்டார்கள். உடல் அழகில் ஆசாதேவி சாதாரணப் பெண்மணிதான். ஒல்லி, சராசரி அழகு. அவள் அப்படி இருந்ததற்கு, யதுநாத்தின் உள்ளத்தில் மட்டும் அந்த வைராக்கியம் இல்லாவிட்டால் இங்கிலாந்தின் நீலவிழிகளும், க்ரீம் கவுனுக்குள் அடைந்த அங்கப் பொலிவுகளும், குதி உயர்ந்த ஜோடுகளுக்குமேல் அகன்ற செழித்த ஆடுசதைகளும். அவரை நிலைகுலையச் செய்திருக்கும். யதுநாத் படிப்பிலேயே கண்ணும் கருத்துமாகச் சீமை வாழ்க்கையைக் கழித்தார். பிரதேசவாரியான மதுவகைகளிலும் நடனங்களிலும் பணத்தைப் பல அயல்நாட்டுப் பெரும் பணக்கார இளைஞர்களும் அரசுவாரிசுகளும் சூறையாடிக் கொண்டிருந்த போது, யதுநாத் ஸாக்ரடிஸ், கன்பியூஷியஸ் அரிஸ்பிடால், எமர்ஸன் முதலிய மகான்களின் நூல்களில் ஆழ்ந்திருந்தார். ஸ்நான அறையில் ஆள் உயரம் இருந்த நிலைக் கண்ணாடியின் முன் நின்று தமது சாட்டமான எழில்வடிவைக் கண்டு பெருமூச்செறிவார். கடைசியில் 'சீ, இந்த அழகிய, உறுதியான உடலை, மாமிசங்களின் மீது புரளவா கொடுத்தான் ஈசன்? பிரம்மத்தை, பிரபஞ்சத்தின் ஒரே உண்மையைக் காண இதைச் சாதனமாக்கி, ராஜயோகம் புரிவதற்கல்லவா இது?' என்று மனத்தைக் கட்டிப் பிடித்து இழுப்பார்.

நல்ல யௌவனமான அந்த ஏழு வருடங்களை உடலை மாசுபடுத்தாமல் கழித்துவிட்டு, இந்தியாவிற்குத் திரும்பும் போது தம்மை நினைத்துச் சற்று கர்வங்கூட ஏற்பட்டது அவருக்கு. பணமும் வயசும் அழகும் படைத்த எவரும் காணாத அமானுஷமான வெற்றி அது. வயசு அவருக்கு இருபத்தாறுதானே அப்போது.

பட்டத்திற்கு வந்ததும் வேதாந்தப் பாடசாலைகளைப் புதிது புதிதாக நாடெங்கும் நிறுவினார். உபநிஷத்துகளை அச்சிட்டு இலவசமாக

வழங்கினார். வேதாந்த பண்டிதர்களுக்கு ஏராளமாகச் சன்மானங்கள் அளித்தார். ஆசனங்கள் செய்தார். பிராணாயாமம் செய்தார். புருவங்களுக்கு இடையே பார்வையை நிறுத்தி, தியானத்தில் ஆழ்ந்தார்.

நல்ல குரு ஒருவரை அடைய அவர் பட்ட பாடு பெரிய கதை. நூற்றுக்கணக்கான பண்டிதர்களை அழைத்து விசாரங்கள் செய்தார். யாரிடமும் திருப்தி ஏற்படவில்லை. பலர் சொந்தச் சிந்தனையற்ற நெட்டுருப் புலவர்கள். சொந்தப் புத்தி உள்ளவர்களுக்குப் பழைய நூல்களின் தொடர்பு அதிகம் இல்லை. இரண்டும் சேர்ந்த ஒரு மகாத்மா கிடைப்பாரா என்றுதான் யதுநாத்திற்கு ஏக்கம்.

பதினான்கு வருடம் கழித்து அவருக்கு அந்த ஆசை நிறைவேறிற்று. அவர் எப்படியெல்லாம் ஒரு பண்டிதர் இருக்க வேண்டும் என்று நினைத்தாரோ, அப்படி இருந்தார் வேங்கடதாசர். ஆந்திரர். மூன்று வேதங்களும் தலைகீழ்ப் பாடம். வழக்கிலுள்ள எல்லா உபநிஷத்துகளும் மனப்பாடம். பாகவதம் முதலிய புராண இதிகாசங்களிலிருந்து நினைத்த போது அவருடைய ஞாபக சக்தி சுலோசங்களை அள்ளி எறியும். தெலுங்கில் அவர் பல காவியங்கள் இயற்றியிருந்தார். நினைத்த மாத்திரத்தில் கவிதை ஊற்றெடுக்கும் வரம் படைத்தவர். பல பெரியவர்களைப் போலன்றி, வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும், நூல்களின் ஒவ்வொரு வரியிலும் அவர் பெரியவராக இருந்தார். சங்கீதத்தில் ஆழ்ந்த அறிவு உண்டு. மிருதங்கமும் வீணையும் வாசிப்பார். இத்தனைக்கும் மேலாக அவர் ஒரு ராஜயோகி என்றும் தெரிந்தது. ஐம்பது வயது ஆகியும் அவருடைய பிராணாயாம மார்பு வைரம் தேங்கியிருந்தது. தோற்றம் மட்டும் என்ன? வாட்டசாட்டமான வடிவம். தங்கம் பொலியும் மேனி. முற்றாத முகம். கரிய, கூரிய மீசை. யதுநாத்தைவிட அழகர் என்று தயங்காமல் சொல்லலாம்.

யதுநாத் மலைத்துப் போய்விட்டார். ஒரு மனித ஆயுளில் முடியாத சாதனைகள் செய்துவிட்டவர் வேங்கடதாசர். எவ்வளவு அசாதாரணமான மேதை! கடலைப் போன்று பரந்துகிடக்கும் மகாபாரதத்தையும் புராணங்களையும் வேத வேதாந்தங்களையும் இப்படி நினைவில் வைத்துக்கொள்வது என்றால்? என்ன கவிதை! என்ன இங்கிதமான நடை உடை! பேச்சில் எவ்வளவு அழகு! யோகத்தில் எவ்வளவு சாதனைகள்! எதைத்தான் நினைந்து வியப்பது? இந்தப் புருஷனாக இல்லாத வரையில் ஒரு புருஷ ஆயுளின் பாதிக்குள் இந்தச் சாதனைகள் எட்டியிருக்க முடியுமா என்ன?

யதுநாத் பச்சைக் குழந்தையைப் போல் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார். குருநாதரின் மனைவியை நினைத்தபோது அவருடைய வியப்பு எல்லை கடந்தது. வேங்கடதாசருக்கு எத்தனை பாக்கியங்கள்! அவருடைய மனைவி ரத்தினம்மா கூடவா இப்படி அழகா இருக்க வேண்டும்? ஆந்திர தேசத்து வாளிப்பு, உயரம், நீண்ட முகம், வாழையின் வழவழப்பு, சற்று மஞ்சள் கலந்த சிவப்பு – எல்லாம் பொருந்திய அந்த நடு வயசை எட்டிய அழகி வேங்கடதாசரின் பல கவிதைகளின் நாயகியாக விளங்கினாள். அவளுடைய சிரிப்பொலி மந்திர சக்தி நிறைந்தது. கேட்கும்போது உடல் புல்லரிக்கும். நெஞ்சு பூரிக்கும். முதல் முதலில் அந்தத் தம்பதிகளை வரவேற்று உபசரிக்கையில் அவருடைய களங்கமற்ற பல் வரிசையையும் சிரிப்பையும் பார்த்துக்கொண்டே நின்றார் யதுநாத். “குரு பத்தினியை வணங்குங்கள், மகாராஜ்” என்று குருவின் குரல் கேட்டதும் பதறிப்போய், தண்டாகாரமாக விழுந்தார் யதுநாத். வேங்கடதாசர் ரத்தினம்மாவைப் பார்த்துப் பூரித்துவிட்டார்.

“இப்பேர்ப்பட்ட மகா புருஷரை குருவாகக் கொள்வதற்கு நானும் சமஸ்தானமும் சாமான்யமாகப் புண்ணியம் செய்திருக்க முடியாது. என்னை அடிமையாக ஆட்கொண்டு பிரம்ம வித்தையின் சூட்சுமங்களையும் சாதனங்களையும் காட்டி, ஞானக் குருடனான என் கண்களைத் திறந்து விட வேண்டும்” என்று யதுநாத் கைகூப்பினார். அவர் நெஞ்சு தழுதழுத்தது. தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிற்று.

“ராஜரிஷிக்கு எதுவும் கிடைக்கும்” என்று ஆசி கூறினார் குரு.

வேங்கடதாசருக்கு ஒரு தனி மாளிகை கொடுக்கப்பட்டது. பழைய ராஜாவின் ஸ்விஸ் காதலி – வெளிப்படையாக ராஜ வம்சத்துக் குழந்தைகளின் ஆசிரியை – வாழ்ந்த மாளிகை அது. திடீரென்று அவள் அம்மை போட்டு இறந்துவிட்டாள். புண்ணியாகம் செய்து புனிதமாக்கப்பட்டு வேங்கடதாசரின் வசம் வந்தது அது. ஒரு குட்டி அரண்மனை தான். ஏகப்பட்ட அறைகள், விரிப்புகள், கண்ணாடிகள் கடைசல் பிடித்த ஆசனங்கள், கட்டில்கள். எல்லாவற்றையும் வைத்துக்கொண்டு என்ன செய்வது? புலித்தோல்தான் வேங்கடதாசரின் ஆசனம்.

புலித்தோல் போட்ட சாய்வு நாற்காலியில் அமர்ந்து அவர் பாடம் சொல்லும்போது அக்கினி தேவனே வந்து வீற்றிருப்பது போல் தான் தேஜஸ் வீசும்.

ஹாஸ்யம், கிண்டல் இரண்டும் அவருடைய உடன் பிறப்புகள். யதுநாத் வாய்விட்டுக் சிரிக்கத் தொடங்கிவிட்டார் என்றால் அதைவிட அந்த ஹாஸ்யத்திற்கு வேறு பாராட்டு என்ன வேண்டும்? அவர் பேச்சில் கட்டுண்டு யதுநாத் நெஞ்சு நெகிழ்ந்து அழுவார். மனிதனின் சிறுமைகளைக் கண்டு குமுறுவார். வையத்தின் மர்மங்களையும் சித்தர்களின் சக்திகளையும் கேட்டுத் திகைப்பார். சுருக் சுருக்கென்ற கிண்டலைக் கேட்டுப் புன்முறுவல் பூப்பார். குறிப்பாக ரசத்துடன் அவர் சிருங்காரத்தைத் தொட்டுவிட்டு அப்பால் போகும்போது, தம் ஒரே மனைவியான ஆசாவை நினைத்து மன்னர் மறுகுவார். கபடமற்ற, யாரையும் குத்தாத ஹாஸ்யங்களைக் கேட்டு வாயை விட்டுத் கலகலவென்று சிரிப்பார். அவருடைய ராஸிக்யம் நிறைந்த உள்ளம் வேங்கடதாசரின் வன்மையில் சிக்கிப் பாவை போல ஆடிக்கொண்டிருந்தது.

வேங்கடதாசர் விடிய வெகு நேரம் முன்பு எழுந்து, குளிர்ந்த நீரில் நீராடி, ஆசனப் பிராணாயாமங்கள் செய்து, நிஷ்டையில் ஆழ்ந்து, பூஜையை முடித்து, ஒரு மணிநேரம் கணீரென்ற குரலில் பாடுவார். வடக்கத்திய சங்கீதத்தையும் ஆறு மாதத்தில் பயின்று ஆஸ்தான வித்துவானான கௌரி மேத்தாவைக்கூட விமரிசனம் செய்யத் தொடங்கிவிட்டார் அவர். மேத்தாவே பழைய சங்கீத நூல்களை அவரிடம் கற்க முற்பட்டுவிட்டார்.

பூஜைக்குப் பிறகு, நாள் முழுவதும் அரசனுக்கும் இன்னும் பல சீடர்களுக்கும் பாடம் சொல்வதிலேயே போய்விடும். மாலைப் பொழுதில் மீண்டும் நிஷ்டை. பிறகு ஆஸ்தானத்துச் சங்கீத நடன கச்சேரிகளுக்குப் போவார். கடைசியில் கலைஞர்களின் குண தோஷங்களை எடுத்துக் கூறி வாழ்த்தும் ஆசியும் கூறுபவர் அவர்தாம். சிற்சில வேளைகளில் மன்னரோடு சதுரங்கமாடுவார். அவருடைய புத்தியின் பாறைச் சுவர்களைத் தகர்க்க முடியாமல் தவித்துத் திணறிச் சிரித்துத் தோல்வியை ஏற்பார் மன்னர். தாம் சில ஆட்டங்களில் வெல்லும் போது மன்னர் மிகமிக லஜ்ஜைப்படுவார். ‘அவராக விட்டுக் கொடுத்தது தானே?’ என்ற எண்ணந்தான் அதற்குக் காரணம். ‘பெரிய மர்ம மனிதர் இவர். பெரும் சாம்ராஜ்யத்தின் அதிபதியாக இருக்கக் கூடியவர். நம்மை ஒரு பொருட்டாக நினைத்து, நம் அன்பில் கட்டுண்டு கிடக்கிறாரே’ என்று யதுநாத் திகைப்பார்.

வேங்கடதாசர் வந்தது முதல் திவானுக்கு முக்கியத்துவம் குறைந்து

விட்டது. ராவ்சாகிப் உப்பிலி ஐயங்காருக்கு உள்ளூறக் குமைச்சல் புகைந்தது. திறப்பு விழாக்களுக்கும், சங்கீத இலக்கிய சபைகளுக்கும் வேங்கடதாசரை அழைப்பது இப்போது ஒரு மோஸ்தராகிவிட்டது. தாசர் புதுப்பாணியில் ரத்தினம்மாவுடன் இந்த அழைப்புகளில் ஈடுபடுவார். ஆனால் போகிற இடங்களில் ஒரு பழத்தைத் தவிர, வேறு எதையும் இருவரும் தொட மாட்டார்கள். பட்டபட்டினியானாலும் வெளியே சாப்பிடமாட்டார்கள் அதுவும் பசிக் கோபம், முகச் சிணுக்கல் இல்லாமல், மலர்ச்சியுடன் மறுப்பவர்களைக் கண்டு உலகம் பணியாமல் என்ன செய்யும்? ஆகவே உப்பிலி தம் குமைச்சலை அவரும் சொக்கித்தான் ஆகவேண்டியிருந்தது. கடைசியில் விஷ்ணு சகஸ்ரநாமபாஷ்யத்தை அவரிடம் வந்து பாடம் கேட்டு ஐயம் தீர்த்துக்கொள்ளும் அளவுக்குப் பணிவும் பக்தியும் அவருக்கு வந்துவிட்டன.

மன்னருக்குப் பிறந்த நாள் வாழ்த்துக் கூற வந்த ராமேசுவர குப்தன் என்ற நகை வியாபாரி ஒரு புதிய உயர்ந்த மான் தோலைக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டுப் போனான். மறுநாள் இரவு, “ரொம்பவும் அபூர்வமான தோல் இது. இவ்வளவு பெரிய மானை யாரும் பார்த்திருக்க முடியாதல்லவா?” என்று கேட்டார் மன்னர், தோலின் வழுவழுப்பைத் தடவிக்கொண்டே. அவர் முன்பு அந்தரங்கக் காரியதரிசி துர்க்கா பிரசாத் நின்றுகொண்டிருந்தான். வேறு யாரும் அப்பொழுது இல்லை.

“ஆமாம், மகராஜ்! சீமையில் ‘க்யூரி’யோவாக விலை போனால் நாலாயிரம் ஐயாயிரத்துக்குப் போகும்” என்றான் துர்க்கா.

“மான்தோல் ஒரு ‘க்யூரியோ’. இதைப் பார்த்ததும் வெள்ளைக்காரன் நினைவுதான் வருகிறதாக்கும்!” என்று யதுநாத் பரிகாசப் புன்னகை செய்தார்.

“ரசிகர்களான மன்னர்களுக்குத்தான் அதன் மதிப்புத் தெரியும். அப்படி விலை கொடுத்து வாங்கவும் வேறு யாரிடம் இங்கே பணம் இருக்கிறது? அதனால்தான் சொன்னேன்!”

“வேறு யாருடைய ஞாபகமும் வரவில்லையா உனக்கு?

“ஏன்?”

“ஏன்? இன்று உனக்குப் புத்தி மழுங்கியிருக்கிறது. கேட்டுக் கேட்டுப் பதில் வாங்கவேண்டியிருக்கிறது. மான் தோல் யாருடைய ஆசனம்?”

“துறவிகளின் ஆசனம்.”

“அப்படியானால் நம்முடைய ஆசாரியரின் ஞாபகம் வரவில்லையா உனக்கு? அவருக்கு இதைக் காணிக்கையாகக் கொடுக்கப் போகிறேன்”

“அவர் துறவி அல்லவே. கிருகஸ்தரல்லவா? கிருகஸ்தர்களுக்குப் புலித் தோல்தான் சொல்வப்பட்டிருக்கிறது.”

“அவர் கிருகஸ்தப் பிரம்மசாரி. சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட நாட்களைத் தவிர, வேறு எப்போதும் சிற்றன்பத்தில் ஈடுபட மாட்டார். மேலும் ராஜயோகி அவர்.”

“மன்னிக்க வேண்டும். மகாராஜாவிடம் எட்டு வருடங்களாக நான் மனம் கோணாமல் பணி செய்து வருகிறேன். அந்தரங்க சுத்தமான வார்த்தை இது. அந்தரங்கக் காரியதரிசி என்ற முறையில், நம்பக்கூடாத ஒரு செய்தியைச் சொல்ல வேண்டிய துர்ப்பாக்கியம் எனக்கு ஏற்பட்டுள்ளது. சொல்ல மனம் வரவில்லை”

“துர்க்கா, நான் டொக்கா ராஜா இல்லை. சொந்த புத்தி உண்டு எனக்கு. தைரியமாய்ச் சொல்லு”

“மாகாராஜா அபயம் அளித்த தைரியத்தை நம்பிச் சொல்கிறேன். செய்தி பொய்யாக இருக்கவேண்டும் என்று என் பிராத்தனை.”

“யார்! ஆசாரியரைப் பற்றியா?”

“ஆமாம். வேங்கடதாசரைப்பற்றி. ஒரு தோட்டியாம். காளிந்தி என்று பெயராம். ஆசாரியரையும் அவளையும் சம்பந்தப்படுத்திப் பேசுகிறது அந்த அபவாதம்.”

மகாராஜா படீர் என்று சிரித்தார். ஐந்து நிமிடம் சிரித்தார், சிரித்தார், அப்படிச் சிரித்தார். அவர் உடல் குலுங்கிற்று. வயிற்றைப் பிடித்துக்கொண்டார்.

“துர்க்கா, இந்த மாதிரி ஹாஸ்யத்தை வேங்கடதாசரிடங்கூட நான் கேட்டதில்லை. பிரமாதம், போ” என்றார். மறுபடியும் சிரிப்புப் பீறிட்டு வந்தது. அடக்கி அடக்கிப் பார்த்தும் அவரால் முடியவில்லை. நினைக்க நினைக்க அவருக்குச் சிரிப்புத் தெறித்து வந்தது. பத்து நிமிஷம் சிரித்தார். துர்க்கா இந்தப் பைத்தியச் சிரிப்பைக் கேட்டு முகத்தில் அடித்தாற்போல் நின்றுகொண்டிருந்தான். கடைசியில் அவனையும் அந்தச் சிரிப்புத் தொற்றிக்கொண்டது. அவனும் மகாராஜாவோடு சேர்ந்து விழுந்து விழுந்து

சிரித்தான். மன்னர் ஓயாமல் சிரிப்பதைப் பார்த்ததும் அவனுக்கு மனிதனுடைய பலஹீனங்களும் பித்துக்குளித்தனமும் ஞாபகத்துக்கு வந்தன. ராஜா இப்படிச் சிரிக்கக் கூடியவர் என்று எட்டு வருடம் மெய்காவலன் போல் பழகிய அவனுக்குத் தெரியவே தெரியாது. திடீரென்று இப்படி ஒரு குண விசித்திரம் மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டதை நினைத்து வியப்பாக இருந்தது அவனுக்கு.

இருபது நிமிடம் கழித்து, "உனக்கு ஏன் இப்படி என்னைச் சிரிக்கவைக்க வேண்டும் என்று தோன்றிற்று?" என்று யதுநாத் கேட்டார்.

மீண்டும் வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு துர்க்கா சொன்னான். "மகராஜ், இதில் ஒன்றும் ஹாஸ்யம் இல்லேயே."

"பின் நீ மட்டும் ஏன் சிரிக்கிறாய்?"

"சிரிப்பு தொற்று வியாதி."

"வியாதிதான். நன்றாகச் சொன்னாய்."

"ஆனால் நான் சொன்னது சரியான செய்தி என்று தோன்றுகிறது. காளிந்தி என்ற அந்தத் தோட்டியின் தகப்பன்தான் என் வீட்டிற்கு வந்து இதைச் சொன்னான். காளிந்திக்குப் போன வருடந்தான் கல்யாணம் ஆயிற்றாம். மருமகன் இப்போது ஆசாரியரின் கோபத்துக்குப் பயந்து ஊரைவிட்டே ஓடிப் போய்விட்டானாம்."

"துர்க்கா, உனக்குக் குடி, கஞ்சா, இந்தப் பழக்கம் ஒன்றும் கிடையாதல்லவா?"

"கிடையாது."

"பிரமை உண்டோ?"

"கிடையாது."

கனவுகள் விசித்திரமாகக் காண்பாயோ?"

"என்னை நம்பாமல் இருப்பதில் மகாராஜாவுக்கு எவ்வளவு ஆனந்தம்?"

"நீ பதில் கொடுப்பதைப் பார்த்தால், செய்தியை உண்மையாகக் கேட்டதாகவே நம்புகிறாய் என்று தோன்றுகிறது.

"உங்களுக்கு நம்பிக்கை ஏற்படாது என்று நிச்சயமான சந்தேகம் உண்டு எனக்கு. அதற்காகத்தான் அந்தக் காளிந்தியின் தகப்பனைத் தங்களிடமே

வந்து நேரில் சமாசாரத்தைச் சொல்லுமாறு சொன்னேன். அவன்கூட வெளியே காத்திருக்கிறான்."

"என்ன! வெளியே காத்திருக்கிறானா? இங்கேயா?"

"ஆமாம். என் ஆபீஸ் அறையில்."

"உன் ஆபீஸ் அறையிலேயா? பேஷ், பேஷ், என்ன சுருக்கு! என்ன துரிதம்! உப்பிலி ஐயங்கார் உறை போடக் காணமாட்டார் போலிருக்கிறதே."

"மகராஜ், இது தங்களுடைய ஆசாரியரைப் பற்றிய செய்தி. தங்களுடைய கௌரவமும் இதில் பிணைந்திருக்கிறது. ஆதனால்தான் அவனைத் தங்களிடமே நேராக விஷயத்தைச் சொல்லுமாறு தருவித்தேன். இந்த மாதிரி விஷயங்களை விரைவில் தீர்த்துவிட வேண்டும். கூப்பிடட்டுமா?"

"ஆளை நெருக்குகிறாயே? . . . ம்"

"விசுவநாத்!"

"இதோ வந்துவிட்டேன். அடிமை" என்று குரல் கேட்டது.

துர்க்கா தான்பாட்டுக்கு உத்தரவு போடுவதை மகாராஜா பார்த்துப் பிரமித்துக் கொண்டிருக்கையில், கன்னங்கரேலென்று அங்குமிங்கும் நரைத்த புஸ்தி மீசையுடன் ஓர் ஆள் வந்து தண்டனிட்டு எழுந்து நின்றான். வயது ஐம்பது இருக்கும். காட்டுத்தனமான உயரம், குறுகிய இடை காலும் கையும் ரோமங்களும் மனம் போனபடி வளர்ந்திருந்தன. உடம்பிலிருந்து நாள்பட்ட வெண்ணெய் வேகம் அடித்தது.

"இவன் தான் மகாராஜ்."

யதுநாத் அவனை ஏற இறங்கப் பார்த்தார். அந்தப் பார்வை பட்டு வெடவெடவென்று நடுங்கினான் அவன்.

"யார் நீ?"

"ஒரு தோட்டி, மகாராஜ்."

"எங்கே வந்தாய்?"

"எசமானைப் பார்த்தேன். ஆண்டவனை வந்து பார்க்கச் சொன்னார். ஏழை வந்து நிற்கிறேன்."

“சொல்லவேண்டியதைச் சொல்லு.”

மருளும் விழியுடன் மௌனமாக நின்றான் அவன். பயம் நாக்கை மடக்கிப் போட்டுவிட்டது.

“சொல்லு; பயப்பட வேண்டாம்.”

“என் மகள்தான் காளிந்தி. இருபத்திரண்டு வயசு ஆகுது. போன வருசம் கல்யாணம் கட்டிக் கொடுத்தேன். குருமகாராஜின் வீட்டிலே தோட்டி வேலை செய்து வந்தாள் அவள் . . . ”

அவன் உதடு நடுங்கிற்று. முகச் சதைகள் உணர்ச்சிப் பெருக்கால் இழுத்துக்கொண்டன.

“சொல்லு.”

“சொல்ல பயமாயிருக்கிறது.”

“ஒன்றும் பயம் இல்லை.”

“குரு மகாராஜ் அவள் வீட்டிற்கு ராத்திரி பன்னிரண்டு மணிக்குமேல் வருகிறார். நானே பார்த்தேன். என் மருமகன் காளிந்தியோடு சண்டை போட்டான். ஓடிப்போய்விட்டான். எங்களைத் தள்ளி வைத்திருக்கிறார்கள் பந்துக்கள். குரு மகராஜ் விஷயமானதால் சலசலப்பில்லாமல் புகைந்து கொண்டிருக்கிறது. ஆனால் எனக்கு அத்தை மகன் ஒரு பயல் இருக்கிறான். அவனுக்கு மூத்த தாரம் செத்துவிட்டாள். காளிந்தியைக் கொடு கொடு என்று என்னைக் கேட்டுக்கொண்டேயிருந்தான். எனக்கும் காளிந்திக்கும் விருப்பமில்லை. அவன்தான் இப்போது கறுவிக்கொண்டிருக்கிறான். காளிந்தியை விரட்ட வேண்டும் என்று சொல்லுகிறான். இல்லாவிட்டால் ஒரு வாரத்தில் என் தலையைக் கிள்ளிவிடுவானாம். எனக்குப் பயமாக இருக்கிறது. காளிந்தியை நான் எப்படி விரட்ட முடியும்? விரட்டுவதற்குத் தான் எனக்கு என்ன தகுதி இருக்கிறது? ஈசுவரனே அவதாரமான குருமகராஜே என் பெண்ணை ஆட்கொண்டிருக்கிறார். எனக்கு என்ன குறை? குருமகராஜ் என் பெண் வீட்டைத் தேடி வருவதைப் பற்றி எனக்கும் என் வீட்டுக்காரி கௌடிக்கும் எல்லையில்லாத ஆனந்தம்.”

“ஷட் அப்!”

“ஏய் விசுவநாத்! உன் ஆனந்தம் அப்புறம் இருக்கட்டும், விஷயத்தைச் சொல்லு.”

“மன்னிக்க வேண்டும். நான் அற்பன்தானே? தெரியாமல் சொல்லி விட்டேன். தாங்கள்தாம் என் உயிரைக் காப்பாற்ற வேண்டும். பரம ஏழை; ஒரு பாபங்கூடச் செய்கிறவன் இல்லை” என்று தண்டனிட்டு எழுந்து விசும்பி விசும்பி அழுதான் விசுவநாத்.

மன்னர் ஒன்றும் புரியாமல் அலமலங்கினார். விசுவநாத் கண்ணைத் துடைத்துக்கொண்டான்.

“சரி போ.”

“மகாராஜ், நான் சொன்னதாக குருமகராஜிற்குத் தெரியக்கூடாது. எனக்கு உயிர்ப் பிச்சை அளிக்க வேண்டும்.”

“சரி போ.”

விசுவநாத் வெளியே போய்விட்டான்.

மன்னரின் மனம் செய்தியை நம்புவதற்குக் கூடப் பதமாக இல்லை. கட்டாந்தரையில் விழுந்த விதை மாதிரி அது மேல் மட்டத்தில் கிடந்தது. மூதரித்தால்தான் மனசு கேட்கும்.

மறுநாள் இரவு பன்னிரண்டு மணிக்கு யதுநாத்தும் துர்க்காவும் வெளிக் கிளம்பி நடந்தார்கள். ஒரு பழைய அரைக்கைச் சட்டை, முண்டாசு, அரையில் கச்சம் — இருவருக்கும் இதே உடைதான். ஊர் நிசப்தமாக இருந்தது. வழியில் ஒரு தெருவில் புல்புல்தாராவை ஒரு ரசிகன் புராண்டிக் கொண்டிருந்தான். ஒவ்வொரு வீட்டுவாசலிலும் கட்டில்களில் ஆண், பெண், குஞ்சு, குழவி எல்லாம் காற்றுக்காக உறங்கிக் கொண்டிருந்தன. ஊரின் வடக்கு அலங்கத்தில் தோட்டிச் சேரி உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தது. பெண், ஆண் உட்பட முக்கால்வாசிக்கும்மேல் மதுபோதை. தெருவுக்கு இப்பாலேயே விசுவநாத் அவர்களுக்காகக் காத்திருந்தான். அவனை மௌனமாகத் தொடர்ந்தார்கள். சிறிது தூரம் சென்றதும், ஒரு குடிசையைச் சுட்டிக் காண்பித்தான் விசுவநாத். சற்று ஒதுங்கினாற்போல் இருந்தது குடிசை.

“அதோ அதுதான், மகாராஜ். குருமகாராஜ் ஒரு நாழிகைக்கு முன்னால்தான் வந்தார். அங்கேதான் இருக்க வேண்டும். இந்த கழியினால் சிறிது பலமாக மேற்கூரையை நெம்பினால் பெயர்ந்து நகர்ந்துவிடும்.

விசுவநாத்தின் குரல் நடுங்கிற்று. பயநடுக்கம் இல்லை. அவனுக்கு மகிழ்ச்சி. மகாராஜாவோடு இந்த எதிர்பாராத ஒரு துணிச்சலில், சாகசத்தில்

ஈடுபடுவதில் ஒரு கிளுகிளுப்பு. அவன் முகத்தில் தவழ்ந்த பெருமைப் புன்னகை இருட்டில் தெரியவா போகிறது?

"சரி, நீங்கள் அப்பால் போங்கள்." துர்க்காவும் விசுவநாத்தும் விலகிக் கொண்டார்கள்.

கம்பை எடுத்துக்கொண்டு, அடிமேல் அடிவைத்து நடந்தார் யதுநாத். அவர் கை நடுங்கிச் செத்தது, உடல் வேர்த்து ஊற்றிற்று. ஒரு தடவை உயர்ந்த கம்பு தானாகத் தாழ்ந்துவிட்டது. கை இற்றுவிட்டாற்போலிருந்தது. சிறிது நின்று யோசித்தார். 'நான் யதுநாத்: மகாராஜா. இது தோட்டிகாலனி வேங்கடதாசர் இங்கு இருக்கிறாராம். சை, என்ன பிதற்றல்! துர்காவுக்குப் பைத்தியமா? இல்லை, நான்தான் பைத்தியமா?'

பாக்குத்தூள் கடிக்கிறாற்போல ஒரு சத்தம்; குடிசையிலிருந்து வந்ததுதான்.

"புவனேசுவரி. இது என் லட்சிய புருஷர் வேங்கடதாசராக இருக்கக் கூடாது" என்று பிரார்த்தனை செய்துகொண்டே கம்பை உயர்த்தி, இடுக்கில் கொடுத்து, பலமாக ஒரு நெம்பு நெம்பினார். புவனேசுவரி மோசம் செய்துவிட்டாள்.

அவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. குருமகாராஜ்தாம். வேங்கடதாசர் தாம். அந்தப் பாவியான சிறிய அகல்விளக்கு உண்மையைக் காட்டிக் கொடுத்துவிட்டது.

காளிந்தி கருகருவென்று நாவல் பழம் போல அவர் மடியில் வீற்றிருந்தாள். பளபளவென்று அழகின் வடிவாக செழிப்பின் உருவாகக் குழைந்த அந்தப் பிம்பம் குருநாதர் மடியில் கிடந்தது. நல்ல கறுப்பு. ஆனால் கோயில் தூணில் தவழும் கரும் பெண் சிற்பம். உதட்டில் ஒரு மின்னல் புன்சிரிப்பு. திடீரென்று அது மறைந்தது. சரேலென்று பாய்ந்து ஆடையை எடுத்துக் கொண்டு இருளில் மறைந்துவிட்டாள் காளிந்தி.

வேங்கடதாசர் துள்ளி நின்றார். முதலில் முகத்தில் ஒரு திகில். பின்பு அது சீற்றமாகக் கனிந்தது. மகாராஜாவை அந்தப் கோபம் அடையாளம் கண்டுகொண்டுவிட்டது. யதுநாத் வாயடைத்து ஒரு கணம் நின்றார். அந்தத் கண்கள் மன்னரைச் சுட்டன. கண்களா அவை? பார்க்கக்கூட முடியாத சினம்! யதுநாத் சிறிது ஆடினார். பளிச்சென்று கையை உயரக் கூப்பி, "மன்னிக்க வேண்டும்" என்று கண்ணாலேயே இறைஞ்சிவிட்டு இருளில் மறைந்தார்.

துர்க்காவோடு திரும்பி விறுவிறுவென்று செல்லும்போது அவருக்கு உடல் உடலாக இல்லை. வெடவெடவென்று நடுங்கிற்று. இழிவான காரியம் செய்துவிட்டோம் என்று தம்மைச் சபித்துக்கொண்டார். காளிந்தியின் காலும் கையும், குழைவும் பூரிப்பும் இனிமையும், அவர் கண்டே இராத அந்த வனப்பும் அவரைக் குழப்பத்தில் ஆழ்த்தின.

பேசாமல் இருவரும் நடந்தார்கள். நட்ட நிடுநிசி காற்றுக்கூட ஓய்ந்து, துயின்ற அமைதி எங்கும் ஆழ்ந்திருந்தது. அரண்மனைக்குள் சென்றதும், "துர்க்கா, நீ இன்றிரவு முழுவதும் கண்விழித்துதான் ஆகவேண்டும். இன்னும் விடிய எத்தனை நாழிகை இருக்கும்?" என்று கேட்டார்.

"மணி இரண்டுதான் அடித்திருக்கிறது."

"சரி, நிறைய நேரம் இருக்கிறது. இருள் பிரிவதற்குள் அந்த அயோக்கியன் இருக்கிறானே, அந்த விசுநாத்தைப் பயமுறுத்திய அத்தைமகன், அவனைக் கைது செய்து நாளை மாலைக்குள் ஸாங்காச்யத்தின் எல்லைக்கு நூறு மைலுக்கு அப்பால் கொண்டு தள்ளிவிட வேண்டும். இந்த ஆயிரம் ரூபாயை அவனிடம் கொடு. தொலைகிறான். இனி இந்தப் பக்கம் திரும்பக் கூடாது. திரும்பினால் உயிர் இராது."

"சரி, மகாராஜ்."

துர்க்கா மறைந்தான். என்னவோ நிலைமையைச் சமாளித்து விட்டதுபோல அரைத் திருப்தியுடன் உள்ளே சென்று ஆசாவின் சயனத்தை நெருங்கினார் யதுநாத்.

"ஆசா!" ஆசாதேவிக்கு நல்ல உறக்கம்.

சிரமப்பட்டு எழுப்பிய யதுநாத் அவளைக் கண்களைத் தெளிய வைக்க முயன்றார். முழுவதும் கலக்கம் தெரியாமல் ஆசா அவரைத் தழுவிக்கொண்டாள்.

"ஆசா, தூக்கமா?"

நன்றாகத் தூக்கம் கலைந்தது.

"என்ன, அர்த்த ராத்திரியில் என் ஞாபகம் வந்தது, கிருகஸ்தப் பிரம்மசாரிக்கு!" என்று கேலி செய்தாள் ஆசா.

"ஏன் உடம்பு ஜில்லிட்டிருக்கிறது? வெளியே ரோந்தா?" என்று

அவருடைய கையைத் தடவினாள்.

யதுநாத் எல்லாவற்றையும் விடாமல் சொன்னார்.

அவளும் நம்பவில்லை.

"உங்களுக்கு என்ன? உடம்பு சரியாக இல்லையா? . . . ஸ்வப்னம் கண்டீர்களா? இதென்ன, அசடுமாதிரி! பெரியவர்களை அப்படிச் சொல்லக் கூடாது . . . நிஜமாகவா? நீங்கள் கண்ணால், உங்கள் கண்ணால் பார்த்தீர்களா? உண்மையாகவா – ஐயையோ, ஐயையோ! தோட்டியா? நம் ஆசாரியரா?" என்று நூறு ஆச்சரியக் குறிகள் போட்டுவிட்டாள். அவள் நம்ப அரைமணி பிடித்தது. ராஜா திருப்பித் திருப்பிச் சொல்ல வேண்டியிருந்தது.

"ரொம்ப விசித்திரமாக இருக்கிறது. அது சரி, வேங்கடதாசருக்கு ஓர் அரண்மனையே கொடுத்திருக்கிறீர்களே! ஏன் அவர் அவள் குடிசைக்குப் போக வேண்டும்? தலை எழுத்தா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாள்.

"ஆசா, வேங்கடதாசரின் பெருமை, அவர் அசாதாரண மனிதர் என்பது, அதில்தான் இருக்கிறது. அவர் நினைத்தால் எது செய்ய முடியாது? ஆனால் அவளைத் தேடிச் சென்று அவளுக்குக் கௌரவம் கொடுக்கத்தானே விரும்பினார், இல்லாவிட்டால் அவருக்கு அங்கே போக என்ன அவசியம்?"

"காளிந்தி என்ன அப்பேர்ப்பட்ட அழகியா?"

"நான் ஒரு கணந்தான் பார்த்தேன். சரேலென்று பாய்ந்து மறைந்து விட்டாள். அழகும் இனிமையும் ஓடி மறைந்துவிட்டன. நீ பார்த்தால்தான் தெரியும். வேங்கடதாசர் பெரிய ரசிகர். அதைவிட அந்த அழகுக்கு ஓர் அத்தாட்சி வேண்டுமா, என்ன?"

"நான் அவளைப் பார்க்க முடியுமோ?"

"எல்லோரும் பார்க்கட்டுமே. எனக்கு ஒரு யோசனை. காளிந்திக்கு, உலகத்தின் மகான்களில் ஒருவராகிய வேங்கடதாசரைக் கவர்ந்த காளிந்திக்கு, ஒரு தனி மாளிகை கட்டித் தந்துவிடலாம் என்று நினைக்கிறேன். ஒட்டன் குடிசையில் ஏன் அவர் கிடந்து தவிக்க வேண்டும்?"

"வெட்கக் கேடுதான்."

"என்ன வெட்கக்கேடு?"

"மாளிகை கட்டிக் கொடுப்பதை நான் சொல்லவில்லை. தோட்டி காலனியில் ஒவ்வொரு பெண்ணாக உருப்படாமல் அழிக்கும் உத்தேசமா உங்களுக்கு?"

"புரியவில்லை."

"காளிந்தி சந்தோஷமாக இருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லையா?"

"எனக்குப் புரியவில்லையே."

"உங்களுக்கு ஒன்றுமே புரியாது. காளிந்தி பிறன் சொத்து. கண்ணன் வெண்ணெயைத் திருடித்தான் தின்பான். நீங்கள் மாளிகை கட்டிக் கொடுத்தால் காளிந்தி வேங்கடதாசருடைய சொத்தாகிவிடுவாள். அப்புறம் அவளுக்குச் சுகம் எது?" என்று விஷமச் சிரிப்புச் சிரித்தாள் ஆசா.

யதுநாத் அவள் கன்னத்தை நிமிண்டினார். குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்.

"பொல்லாத் தனமாக, கெட்டிக்காரத்தனமாத் தான் பேசுகிறாய்.

ஆனால் நீ அசடு. கல்யாணம் பண்ணாதவரையில் அது பிறன் சொத்துத்தான்."

"கிடையாது. ஆபத்தும் இடைஞ்சலும் இருக்கிற வரையில் தான் ஒன்று பிறன் சொத்து. இடைஞ்சல் இல்லாவிட்டால் அது பிறன் சொத்து என்று எப்படியாகும்? என்று ஆசா ஆட்சேபித்தாள்.

"ஆசா, விஷயம் அது இல்லை. நீ சம்பந்தம் இல்லாமல் ஏதோ சொல்லிக்கொண்டிருக்கிறாய். பிறன் சொத்தின் கவர்ச்சி இல்லை இது. இயற்கையின் அப்பட்டமான கவர்ச்சி. மீள முடியாத கவர்ச்சி. காளிந்தியைப் பார்த்தால்தான் உனக்குப் புரியும். சரீர அழகிற்கே அவள் ஓர் இலக்கணம்."

"இலக்கணமா? அப்படி எத்தனை நாழிகை பார்த்தீர்கள்?"

"மின்னலின் அழகைக் காண ஒரு கணம் போதாதா? ஒரு கணத்துக்கு மேல்தான் கிடைக்குமா?"

"ஆசாரியர்தாம் மின்னலின் பிரிக்கமுடியாத ஒளியாகிவிட்டார். காளிந்தியின் அழகு அந்தத் தோட்டிச் சேரியிலேயே யாரையும்

கவரவில்லையா? அவ்வளவு அழகிற்காக ஒருவன் உயிரைக் கூடத் தியாகம் செய்யலாமே. அவள் புருஷன் கூடச் செய்யலாமே?"

"அவள் புருஷன் தோட்டிப் பயல், உன்னையும் என்னையும் போல."

"என்ன?"

"ஆமாம். வெறும் தோட்டி, கடலில் போகிற செம்படவனுக்கு மீன் நாற்றம்தான் தெரியும். அலையின் பேச்சும் அழகுமா தெரியும்? மேகத்தைக் கண்டு நானும் நீயுமா காவியம் எழுதினோம்? வால்மீகியும் காளிதாசனும் எழுதினார்கள்."

"அது சரி, முடிவு என்ன? காளிதாசரின் காளிந்திக்குக் கன்னி மாடமா?"

"ஆமாம்."

"அப்படியே காளிந்தி அழகிற்கு இலக்கணம் என்று வைத்துக் கொண்டாலும் இந்த மாளிகை விவகாரம் எனக்குச் சரியாகப் படவில்லை."

"ஏனாம்?"

"நீங்களே தான் சொன்னீர்கள்; குருநாதரே அவருக்குக் கௌரவம் அளிப்பதற்காக அவருடைய குடிசைக்கே போகிறார் என்று."

"அதில்தான் அவர் பெருமை இருக்கிறது. அவர் மகான் என்பது அதில்தான் நிற்கிறது."

"அப்போது மட்டுந்தான் அவர் மகான் இல்லை என்று எனக்குப் படுகிறது."

"அவர் ஒவ்வொரு நிமிஷமும், ஒவ்வொரு கணமும் மகானாத்தான் இருக்கிறார். அவர் வேறு எப்படி இருக்க முடியும்?"

"கருடன் எவ்வளவு உயரப் பறந்தாலும் மண்ணுக்கு வந்தால்தான் களைப்புத் தீரும். நேரம் போதில்லாமல் மனம் உயரவே பறந்தால். உடல் என் பங்கு என்ன என்று அதே அளவுக்குக் கீழே போகும். குரு மகாராஜருக்குக் காளிந்தியும் தேவை. அதோடு குடிசையில்தான் அவள் வேண்டும். அந்தப் புழுதியில் புரண்டால்தான் அவருக்கு நிம்மதி இருக்கும்."

"ஐயையோ, இது என்ன புதுத் தத்துவம்! வேடிக்கையாக இருக்கிறதே! எல்லாப் பெரியவர்களும் அப்படித்தான் என்று சித்தாந்தம்

பண்ணிவிடுவாய் போலிருக்கிறதே."

"கிட்டத்தட்ட, பெரியவர்கள் எல்லாம் அப்படித்தான்."

இரண்டு பேரும் சிரிப்பும் கேளிக்கையுமாக வாதப் பிரதிவாதங்கள் நடத்தினார்கள். ஆனால் ராஜா பிடிவாதமாகக் காளிந்திக்கு மாளிகை கட்டித் தருவதாகத் தீர்மானித்துவிட்டார். உலகம் என்ன சொல்லும்? சிரிக்காதா? தூற்றாதா? அதையெல்லாம் வேங்கடதாசர் பார்த்துக்கொள்வார். அவருக்கு இல்லாத சாமர்த்தியமா? அவர் தவறே செய்யமார்டார். மிகவும் ஆச்சரியமாகப் பொழுது போயிற்று. காளிந்தியின் அழகு, வேங்கடதாசரின் விசித்திர நிலை, இரவில் நடந்த மயிர் சிலிர்க்கும் அநுபவம். எல்லாவற்றையும் நினைக்க நினைக்கக் கனவு மாதிரி இருந்தது. அன்று யதுவுக்கு இருந்த எழுச்சியில் அவர் திடமாகக் காத்து வந்த இல்லறப் பிரம்மசரியங்கூடக் கலைந்துவிட்டது.

"ஆமாம். காலையில் உங்களைப் பார்த்தால் வேங்கடதாசர் முகம் எப்படி இருக்கும்? அ! தூங்கிப் போய் விட்டீர்களா?" என்று பூரிப்பிலும் அயர்விலும் துவண்டுகொண்டே கேட்டாள் ஆசாதேவி.

"எங்க மனுஷ ராஜாக்குட்டி!" என்று உறக்கத்தில் ஆழ்ந்துகிடந்த கணவனின் கன்னத்தோடு தன் கன்னத்தை ஆசா ஒட்டிக்கொண்டாள்.

கலைமகள், ஆகஸ்ட் 1954

# ஆரத்தி

அம்பாளுக்கு இன்னும் அபிஷேகமே முடிய வில்லையாம் முடிந்த பிறகு அலங்காரம் செய்துவிட்டுத்தான் சந்நிதியைத் திறந்துவிடுவார்கள். இன்னும் அரைமணி நேரமாவது ஆகும்.

வந்த கூட்டம் மூன்று பிரகாரங்களிலும் சிறுசிறு கும்பலாக உட்கார்ந்து பேசிப் பொழுதுபோக்கிக் கொண்டிருந்தது. பிராகாரம் முழுதும் மணல் கொட்டியிருந்தார்கள். ஏழாம் நிலவு அதன் மீது நரை வெள்ளையாகப் பரந்திருந்தது. மணலின் குளிர்ந்த ஸ்பரிசத்துக்காகத்தான் கூட்டம் முழுதும் அங்கே உட்கார்ந்திருந்தது. சிறுவர்கள் மணலில் வீடு கட்டினார்கள். சடுகுடு ஆடினார்கள். சுண்டலுக்காகக் கொண்டு வந்திருந்த வெண்கல டம்ளருக்குள் வாயைப் புதைத்து ஒரு பயல் பாடிக்கொண்டிருந்தான். ஓரமாக வளர்ந்திருந்த மகிழ மரத்து இலைகளூடே மின்மினிக் கூட்டம் எரிந்தும் அணைந்தும் தங்கப் பொறிகளை உதிர்த்துச் சுழன்றது.

காமாட்சிக்கு ஒன்றும் காதில் விழவில்லை. கண்ணிலும் படவில்லை. அதாவது புலன்களைக் கடந்து மனத்தில் பாயவில்லை. அவள் மனசு எங்கேயோ இருந்தது. எதிலும் ஒட்டாமல் பிடிப்புவிட்டுக் கிடந்தது.

அவள் உட்கார்ந்திருந்தது ஒரு பாட்டிக் கூட்டத்தின் நடுவில். ஞானப்பாட்டி மகிஷாசுரமர்த்தனி விருத்தம் பாடிக்கொண்டிருந்தாள். அவளைச் சுற்றியிருந்த பாட்டிகள். 'அப்பாடி! அம்மாடி! என்று வியப்புடன் தேவி யுத்தம் புரிந்த வீரத்தைக் கேட்டுப் பூரித்தார்கள். தங்கள் வீட்டுக் குழந்தையின் பேச்சையும் வேடிக்கைகளையும் கேட்பது போல் பாசக் சிரிப்பு, பாந்தவ்யச் சிரிப்புச் சிரித்தார்கள்.

காமாட்சிக்கு நடுநடுவே எப்பொழுதாவது ஓரிரண்டு வார்த்தைகள் கேட்கும். பொருளற்ற ஒலியாகத்தான் அது கேட்கும். பொருள் கொடுக்கிற மனசு அங்கு இல்லையே. பத்து நாட்களாகவே அது எங்கேயோ குத்திக்கொண்டு நின்றது. அம்பைப்போல். அம்பைப் பிடுங்கினால் உயிர் போய்விடும் என்பார்கள். அதனால்தான் அந்த மனத்தைப் பிடுங்கவும் முற்படவில்லை அவள். அவளால் இயலவுமில்லை. பத்து நாட்களாகியும் அதை மறக்க முடியவில்லை.

மன்னிக்குக் கூடவா சந்தேகம் வந்துவிட்டது! மன்னிக்குக் கூடவா!

அண்ணாவுக்குப் பேரன் பிறந்து அன்று ஆண்டு நிறைவு. ஹோமம் முடிந்து காது குத்தியானதும் ஆரத்தி எடுத்தார்கள். ஆரத்தித் தட்டுக்குக் காமாட்சியின் கை ஒரு கையாக இருக்கிறது வழக்கம். எத்தனையோ வருஷப் பழக்கம் அது. ஆனால் மன்னி அன்று அந்தப் பாத்தியத்தைப் பிடுங்கி அடுத்த வீட்டுக் கிழவியிடம் கொடுத்த சமர்த்தை நினைத்தால்! ஆரத்தி, யார் எடுத்தால் என்ன? ஆனால் மன்னி தன்னைப் பார்க்காததுபோல் அவளை விலக்கின விலக்கு! அந்தக் கணத்தில் அடுக்களை நிலையோரமாக நின்ற காமாட்சிக்கு, காலின் கீழ் மண் சரசரவென்று சரிவது போலிருந்தது. கண்ணில் பஞ்சடைந்தது. திக்பிரமை பிடித்து நின்றாள். ஆரத்தி எடுத்தாகிவிட்டது. மஞ்சள் நீரை வாசலில் கொட்டிவிட்டு, காலிறங்கிய புடவையும் காதில் ஆடும் ஓலையுமாகத் திரும்பி வந்துகொண்டிருந்தாள் அடுத்த வீட்டுக்கிழவி.

ஒன்றுமே தோன்றாமல் நின்றாள் காமாட்சி. திகைப்பு அடங்கிய பிறகு புத்தி இயங்கிற்று. பிறருக்கு எத்தனை சொன்னாலும் தனக்கு என்று வரும்போது சற்று ஜாக்கிரதையாகவே இருக்கலாம் என்று மன்னி நினைத்துவிட்டாள் போலிருக்கிறது. ஆலோசித்துப் பார்த்ததில் அதுவும் தப்பாகப் படவில்லை. நமக்கு ஒரு பெண் இருந்து அதற்கு ஒரு குழந்தை பிறந்து . . . சந்தேகத்துடன் ஒரு காரியத்தைச் செய்வானேன்.

அப்படியானால் மன்னிக்குச் சந்தேகம்தானே! மன்னிக்கும் வந்து விட்டதா அது! மன்னிக்குமா, மன்னிக்குகூடவா என்ற ஒரு சொல்தான் உள்ளே பத்து நாட்களாகப் பாறையில் மோதின வெள்ளம் மாதிரி அந்தண்டையும் போகாமல் இந்தண்டையும் போகாமல் தளும்பிக் கொண்டேயிருக்கிறது. மன்னி ஒருத்தியும் தன்னைக் கைவிட்டுப் போய்விட்டாளா!

பத்து நாட்களாக எந்தக் காரியமும் சரியாகச் செய்ய முடியவில்லை. குழம்புக்கு உப்புப்போட மறந்து போகிறது. ரசத்துக்குப் புளி தூக்கல். அரிகேன் விளக்குக் கண்ணாடி கை தவறி விழுந்துவிட்டது. எல்லாவற்றையும்விட, மனத்தில் ஒருவாறாக அடங்கி அடியாழத்தில் படிந்துவிட்ட கவலை, திகில் எல்லாம் மீண்டும் கிளர்ந்து குழம்பத் தொடங்கிவிட்டன.

ஞானப்பாட்டியின் கதை மீண்டும் காதில் விழுந்தது. காமாட்சி சுற்றும்முற்றும் பார்த்தாள். சுற்றிலும் வெள்ளைப் புடவைகள், பாட்டிகள்! முப்பது வயசு, நாற்பதுவயசு, எழுபது வயசு – இப்படி எத்தனையோ வயசுப் பாட்டிகள். நடுவே அவள் அரக்குப் புடவையும், கையில்

வளையும் மூக்கில் பேஸரியும், நெற்றியில் மஞ்சள் குங்குமமும், கழுத்தில் மஞ்சள் சரடுமாக உட்கார்ந்திருக்கிறாள். இத்தனையையும் லட்சியம் பண்ணாமல் தங்களின் ஒருத்தியாகி விட்டது போல் அவளை நினைத்துக் கொண்டிருக்கிறார்களே அவர்கள்! இப்படி ஒரு அவஸ்தையா!

இதே கோயிலில்தான் மாப்பிள்ளை அழைப்பு நடந்தது. அவள் உட்கார்ந்திருந்த இதே இடத்திலேயே அவன் அன்று உட்கார்ந்திருக்கலாம். முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்தது அந்தக் கலியாணம், காமாட்சிக்கும் அவனுக்கும் நடந்த கல்யாணம். தலையில் குடுமி, கரும்பந்து போல் பெரிய குடுமி, அதற்கு மேல் கறுப்புக் குல்லாய், திறந்த கோட்டு – கழுத்துக்கு டை, இடையில் ஜரிகைவேட்டி.

இயற்கையாகவே பெரிய கண், மை இட்டிருந்ததால் இன்னும் கறுப்பாக, பெரிதாகத் தெரிந்தது. நெற்றியில் சாந்துப் பொட்டு, காதுக்கு ஒற்றைக் கல் பச்சை வைரக்கடுக்கன். அந்த வேஷத்தில் இந்த இடத்தில்தான் உட்கார்ந்திருக்க வேண்டும் அவன்.

கல்யாணத்தின்போது அவளுக்கு ஒன்பது வயது. பிறகு ஆடி, ஆறா மாதம், தீபாவளி என்று நாலு தடவை வந்தான் அவன். தகப்பனார் கிடையாது அவனுக்கு. தாயாருடன் வருகிற வழக்கம். மறு வருடம் தீபாவளிக்குத் தனியாக வந்தான். அப்போது வயது பதினெட்டு இருக்கும். ஆறு மாதங்கள் கழித்து வருஷப் பிறப்புக்கு முதல் நாள் வந்துவிட்டுப்போனான். அப்போதுதான் கடைசித் தடவையாகப் பார்த்தது அவனை. நாலு மாதங்கள் கழித்துத் தாயாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. பிள்ளையைக் காணவில்லையாம். திருவாரூர் வரையில் போய்விட்டு வருவதாகச் சொன்னானாம். பத்து நாட்களாயிற்று; ஆளைக் காணவில்லை. இங்கு வந்திருக்கிறானா என்று கேட்டு எழுதியிருந்தது கடிதத்தில். அப்போது காமாட்சியின் தந்தை உயிரோடிருந்த சமயம். மூன்று மாதங்கள் நாலு மாதங்கள் ஆகின. ஆளைக் காணவில்லை, ஆறு மாதங்கள் கழித்துத் திடீரென்று ஒரு மணியார்டர் வந்தது: ரங்கூனிலிருந்து வந்தது பணம். சொல்லிக்கொள்ளாமல் புறப்பட்டு வந்தற்காக வருந்துவதாகவும், ரங்கூனில் ஒரு பெரிய கடையில் வேலை பார்ப்பதாகவும் எழுதியிருந்தான். இரண்டு மூன்று மாதங்களுக்கொரு தடவை அதே போல் நூறு இருநூறு என்று பணம் வரும். ஒரு வருடம் கழித்துச் சிங்கப்பூருக்கு வந்துவிட்டதாக ஒரு கடிதம் கிடைத்தது.

பிறகு இரண்டு வருடங்கள் மாதம் தவறாமல் பணம் வந்து கொண்டிருந்தது.

காமாட்சிக்கு வயது வந்து விட்டதைத் தெரிவித்து எழுதினார் அப்பா. இரண்டு மாதங்களில் லீவு எடுத்துக் கொண்டு வருவதாகவும், காமாட்சியைச் சிங்கப்பூருக்கு அழைத்துகொண்டு போவதாகவும் பதில் வந்தது. அப்பா நாட்களை எண்ணினார். அறுபதாயிற்று, இரண்டு, மூன்று, பத்து, இருபது என்று பல அறுபது போயிற்று. ஆளைக் காணோம். ஆளைப் பற்றிய தகவலையும் காணோம். படுகை வாழைபோல, மார்கழிப் பவழமல்லிபோல வளர்ந்து குலுங்கினாள் காமாட்சி. மார்கழி மார்கழியாகப் போயிற்று; பல மார்கழிகள் போய்விட்டன.

“இனிமே வந்தாக்கூட, கோவில்லேதான் போய்ப் பார்த்தாகணும். அப்புறம்தான் மனைக்கு அழைச்சிண்டு வரணும்னு சாஸ்திரம் சொல்லுவா. பன்னிரண்டு வருஷங்களுக்கு மேலே ஆயிடுத்தேடா” என்றாள் அத்தை. அதைக் கேட்டு ஒரு பதிலும் சொல்லாமல் வெளியே எழுந்து போனார் அப்பா. அப்படிச் சொன்ன அத்தை, அப்படி துக்கத்தைச் சுமந்து நின்ற அப்பா – இரண்டு பேரும் இப்போது இல்லை. அம்மாவும் இல்லை.

மேலக்காவேரி முகம்மது பாச்சா, பண்டாரவாடை ராவுத்தார்கள், கைக்கோளத் தெருவுக்கு வந்த இரண்டு முதலியார்கள் – எல்லோரையும் அண்ணா விசாரித்துவிட்டு வந்தான். அக்கரைச் சீமையிலிருந்து வந்தவர்கள் அவர்கள். யாருக்கும் மாப்பிள்ளையைப் பற்றி ஒரு தகவலும் தர முடியவில்லை. பினாங்கு, ரங்கூன் என்று சொல்லிக்கொண்டு யார் வந்தாலும் சரி – அண்ணா விசாரிக்கக் கிளம்பிவிடுவான். நாகப்பட்டினம், பட்டுக்கோட்டை, முத்துப்பேட்டை, அதிராம்பட்டணம், அய்யம்பேட்டை என்று அக்கரைச் சீமையைக் கொல்லைத் தலைமாடாக வைத்திருப்போரின் ஊர்களுக்கெல்லாம் அலைந்தான். அப்படி ஆறேழு வருடங்கள் கழிந்துவிட்டன. திடீரென்று ரங்கூன், சிங்கப்பூர் எங்கும் சண்டை என்றார்கள். குண்டு குண்டாக விழுவதாகச் சொன்னார்கள். கப்பல் கப்பலாக ஆயிரக்கணக்கில் அக்கரையிலிருந்து வந்தார்கள். நடந்து நடந்து கல்கத்தா வழியாக வந்தார்கள். மாப்பிள்ளை வரவில்லை.

சண்டை முடிந்துவிட்டது. திரும்பி எத்தனையோ பேர்கள் போனார்கள். வரவும் வந்தார்கள். மாப்பிள்ளை வரவில்லை. பெற்றவர்களை மட்டும் எடுத்துக்கொண்டு குழந்தையை விட்ட குண்டு, மனைவி குழந்தைகள் மட்டும் விழுங்கிக் கணவனை விட்டுவிட்ட குண்டு, குடும்பங்கள் முழுவதையுமே விழுங்கின குண்டு – இப்படிப் பல குண்டுகளின் கதைகள் கொத்துக் கொத்தாகக் காதில் விழுந்தன. மாப்பிள்ளை . . . மாப்பிள்ளை . . .

இருபத்துநான்கு வருஷங்களாகிவிட்டன. மாப்பிள்ளை வரவில்லை. காமாட்சி வயதை எண்ணினாள். முப்பத்தைந்து தலையில் நமைச்சல் தாங்கவில்லை. வரவரவென்று சொறிந்தாள். நரைப்பதற்கான நமைச்சலாம். விறுவிறுவென்று முழுவதும் நரைத்துவிட்டது. கண்ணாடியை எடுத்துப் பார்த்தாள். கூந்தல் கறுப்பு மாறித் துரு ஏறிய இரும்பாகியிருந்தது. முன்னெற்றி நரைக்குக் கீழ் தம்பிடி அளவு மங்களாம்பிகா குங்குமம். கோவில் வாசலில் விற்கிற மைதாமாக் குங்குமம் இல்லை. உள்ளே கொடுக்கிற மஞ்சள் குங்குமம்.

அதைப் பார்த்ததும் ஒரு கேள்வி எழுந்தது. "காமாட்சியின் கை அண்ணா வீட்டுக்குச் சமைக்கிறது. அண்ணாவின் வேட்டி, மன்னியின் புடவையைக் கூடத் துவைக்கிறது. கால் கடைக்கும், மார்க்கட்டுக்கும் நடந்து சாமான் வாங்கி வருகிறது. 'நீ யாருக்காக உழைக்கிறாய்! யாருக்காக இருக்கிறாய்?' "

அது என்ன பதில் சொல்லிற்று. "நீ வாழாவெட்டியில்லை, விதவை இல்லை . . . "

அப்புறம்; அதோடு பதில் நின்றுவிட்டது.

கண்ணாடி நல்ல கண்ணாடி. உடம்பின் அழுக்கு வறட்சியை நன்றாகப் பிரதிபலித்தது. ராமாயண சாஸ்திரிகள் கதையில் சொன்னார்: சேற்றுத் துளி தெளித்த தாமரை போல் சீதை பிரகாசமாகவும் இருந்தாள், பிரகாசமாக இல்லாமலும் இருந்தாள்.

காமாட்சியும் சோப்புப் போட்டுக்கொள்வதில்லை. தலையணை வைத்துக் கொள்வதில்லை. உடம்பை அக்கறையாகத் தேய்த்துக் குளிப்பதில்லை. மூக்கில் இருந்த ரங்கூன் கமல பேசரி, சிவப்புத்தோடு, கையில் ஒரு ஜோடி வளை, திருமாங்கல்யம் இவற்றைத் தவிர மற்றவற்றைக் கழற்றிவிட்டாள். "சீதைக்குப் பத்துமாத அழுக்குத்தான் உடம்பில். உனக்கு இருபது வருஷ அழுக்கு. ராமனும் உயிரோடிருந்தான் . . . "

மேலே நினைக்கத் துணியாமல் கண்ணாடியை எடுத்து மாட்டினாள் காமாட்சி.

பொழுது போகவில்லை. கோவிலில் ராமாயணம், ராதா கல்யாண பஜனை எதுவும் அவள் இல்லாமல் நடக்காது. எங்கு வந்தாலும் அவளோடு வருகிறவர்கள், வெள்ளைப் பாட்டிகள்தான்!

வெளி உலகம் சம்பந்தப்பட்டவரையில் எல்லோரும் தீர்மானம் செய்துவிட்டார்கள் — அந்தக் குங்குமத்துக்கு அர்த்தமில்லை என்று. கோவிலுக்கும், காவேரிக்கும் வந்து கூப்பிடுகிற சிவகாமுப் பாட்டி அவளை வெறித்துப் பார்க்கிற வழக்கம். ஒரு நிமிஷம் தாமதம் ஆகிவிட்டால், "எல்லாம் இட்டுண்டது போதும். சரியாய்த்தான் இருக்கு. வா, நாழியாயிடுத்து" என்று அவள் கண்ணாடியைப் பார்த்துப் பொட்டு இட்டுக் கொள்ளும்போது வீசுகிற அலட்சியம்!

சிவகாமுவும் வேறு யாரையும் கூப்பிடுவதில்லை. மன்னியைக் கூப்பிடலாம். மாட்டாள். அவளுக்கு வேண்டியது காமாட்சிதான். இந்த வெள்ளைப் புடவைகளோடு சுற்றுவதே அவளுக்கு விதித்தாகிவிட்டதா? அர்த்தோதயம், மகோதயம் என்றால் கோடிக் கரைக்கு. ஆடி அமாவாசைக்குக் காவேரிப் பட்டணம்; கடை முழுக்கா, மாயவரம்! எங்கு போனாலும் இதே வெள்ளைக் கூட்டம். நடுவில் இவள் — குடலை சங்குப் பூ, மந்தாரைப் பூக்களோடு ஒரு சம்பரத்தைப் பூப்போல.

இப்படி இன்னும் ஒன்பது வருடங்கள் ஓடிவிட்டன. அக்கரைச் சீமைக்குப் போகிற வருகிறவர்களை விசாரிப்பதை அண்ணா விட்டுவிட்டான். மன்னி ஒருத்திதான் விடவில்லை.

"அக்கா! சுருக்க வாங்கோளேன். ஆரத்தி எடுத்துட்டுப் போயிடுங்கோளேன்" என்று எந்த விசேஷம் நடந்தாலும், அவள் எங்கிருந்தாலும் இழுத்து வந்து ஆரத்தித் தட்டைக் கொடுத்துவிடுவாள். அந்தக் குங்குமத்தைக் குங்குமமாகப் பார்த்தவள் அவள்தான். யார் என்ன சொன்னாலும் சொல்லட்டும் என்று பிடிவாதமாக, வீம்பாகக் கூட அதற்கு மரியாதை செய்து வந்தாள். அந்த வீம்பு காமாட்சியைப் பலதடவைகள் மெய்சிலிர்க்க அடித்திருக்கிறது. காமாட்சிக்குத் தைரியம் கொடுத்ததுகூட அந்த வீம்புதான்.

அந்த மன்னிதான் திடீர் என்று பாத்யத்தைப் பிடுங்கிவிட்டாள். அவளுக்கே சந்தேகம் வந்துவிட்டால் . . .

அதை நினைக்கும்போதே பத்து நாட்கள் கழித்துத் திடுக்கென்றது அவளுக்கு. வயிற்றை என்னமோ செய்தது. மலங்க மலங்க விழித்தாள். மகிஷாசுரமர்த்தினி கதை இன்னும் முடியவில்லை. மகிழ மரத்தில் இன்னும் மின்மினிக் கூட்டம் அவளுடைய நம்பிக்கையைப் போல அணைவதும் எரிவதுமாகச் சுழன்றது.

"மகிஷாசுரன்தானா அகப்பட்டான் உனக்கு? நான் இல்லையா? ஒரு

சண்டை போடாமல், உன் கையால் அடிபட்டு விழக் காத்திருக்கிறேன். ஏன் இந்தப் பக்கமே பார்க்கவில்லை நீ?" என்று மனத்துக்குள் அழுதாள். கண்ணை மூடினாள். சிங்கத்தின் மீதேறிப் பாய்ந்து வந்து அவளே தன்னை ஒரு அறை அறைந்தால்! அந்தப் காட்சியைக் கண்டு உடல் நடுங்கிற்று. உள்ளம் திகைத்தது. கடலில் கலங்கிய நதியைப் போல் பூரித்தது. இனிமேல் ஆறில்லை, கடலாகி விடுவோம் என்று பரபரக்கிற, அழித்துக்கொள்கிற ஆவலில் உள், புறம் யாவும் துள்ளின.

கண் திறந்து திரும்பினாள்.

"அக்கா!"

மன்னி நின்றுகொண்டிருந்தாள்.

"என்ன மன்னி!"

"வாங்கோ அக்கா. அண்ணா அவசரமாக் கூப்பிடறா. கையோட உங்களை அழைச்சிண்டு வரச்சொன்னா!"

காமாட்சியை அவள் இதுவரையில் இப்படிக் கூப்பிட்டதே இல்லை.

"எதுக்கு?"

"நீங்க எழுந்து வாங்கோ, சொல்றேன்."

"தீபாராதனை ஆகலியே மன்னி!"

"அப்புறம் வந்து பார்க்கலாம். வாங்கோ" என்று கூறிய அவளை ஏற இறங்கப் பன்முறை பார்த்தாள் காமாட்சி.

"வாங்களேன்."

"என்னன்னு சொல்லேண்டி, ராதே! நானும்தான் தெரிஞ்சுக்கிறேனே" என்று குறுக்கிட்டாள் சிவகாமுப் பாட்டி.

"ஒன்றுமில்லே பாட்டி!"

"என்ன ஒன்றுமில்லே?"

காமாட்சி எழுந்து நடந்தாள்.

"என்ன மன்னி!"

"வாங்களேன், சொல்றேன்!"

இருவரும் ஆசார வாசலைக் கடந்து தெருவுக்கு வந்துவிட்டார்கள்.

"இப்பவாவது சொல்லேன், மன்னி"

"சொல்றேன் அக்கா. எனக்கு எப்படிச் சொல்றதுன்னு புரியல." மன்னியின் குரல் நடுங்கிற்று. தழதழத்தது. கண்களில் நீர் கட்டிவிட்டது.

"அம்பாள் அகத்துக்கே வந்துட்டா, அக்கா!"'

"என்னது?"

"ஆமாம் அக்கா! நீங்க வந்து உங்க கண்ணாலே பாருங்கோ."

"என்னடீது? நன்னாச் சொல்லேன்."

"மாப்பிள்ளை வந்துட்டார் அக்கா!"

"இப்பத்தானே ஆண்டு நிறைவுக்கு வந்துட்டுப் போனான்!"

"இல்லேக்கா, முப்பத்திரண்டு வருஷங்களுக்கு முன்னாடி வந்துட்டுப் போனாரே, அந்த மாப்பிள்ளை!"

"என்னது? என்ன சொல்றே நீ?"

"ஆமாம், அக்கா! உங்க சரடும் குங்குமமும் இழுத்துண்டு வந்திருக்கு."

"என்ன மன்னி இது?"

"ஆமாக்கா. இப்பத்தான் வந்தார். கூடத்திலே உட்காந்திருக்கார். அண்ணா உங்களை அழைச்சுண்டு வருகிறேன்னு கிளம்பினார். அதெல்லாம் முடியாது, நான்தான் அழைச்சிண்டு வருவேன்னு ஓடி வந்தேன்."

"என்னது! என்னது! என்ன மன்னி இது! நிஜமாவா! நிஜமாவா!"

காமுவுக்கு தாங்க முடியவில்லை. நெஞ்சை அமுக்கிப் புண்ணாக வலித்தது.

"எப்ப! எப்ப! எங்கேர்ந்து?"

"பேசாம வாங்கோ, அக்கா! கண்ணையெல்லாம் துடைச்சுக்குங்கோ!"

வீட்டு வாசலில் விளக்கு எரிந்தது. திண்ணை விளக்குகள் எரிந்தன. கூடம் முழுவதும் ஒரே வெளிச்சமாக எரிந்துகொண்டிருந்தது.

“காமு, காமு!” என்று ஆவேசம் வந்தாற்போல் கத்தினான் அண்ணா.

ஊஞ்சலில் அவனோடு இன்னொரு மனிதன். காமு ஏறிட்டுப் பார்த்தாள்.

குடுமி இல்லை. கடுக்கன் இல்லை. குல்லாய் இல்லை. இரட்டை நாடியாக, முழுக் கைச் சட்டையுடன், முக்கால் வழுக்கை விழுந்த கிராப்புடன் . . . அவர்தான் – அவர்தான்! ஏ, அப்பா! எத்தனை வயது!

“காமு, அடையாளம் புரிகிறா?” என்றான் அண்ணா.

காமு அவரை ஏற இறங்க, ஏற இறங்கப் பார்த்தாள். பைத்தியம் போல் பார்த்தாள். விக்கி விக்கி அழுதாள்.

அவரும் விக்கி அழுதார். அண்ணாவும் மன்னியும் அதையேதான் செய்தார்கள்.

“காலமே ஏரோப்ளேன்லே வந்தாராம். உடனே ஒரு காரை வைச்சிண்டு மெட்ராஸ்லேயிருந்து வந்திருக்கார் காமு.”

கூடம் முழுதும் அடைத்துக் கிடந்தது. நாலைந்து பெரிய பெட்டிகள், படுக்கை, கூடைகள், பைகள், கள்ளிப் பெட்டிகள், அட்டைப் பெட்டிகள், பாய்கள் – இன்னும் இனம் தெரியாத – பேர் தெரியாத பல சாமான்கள்.

எல்லாம் விழிக்கடையில் தெரிந்தன. “இத்தனை வருஷங்களாக எங்கே இருந்தார்? ஏன் இருந்தார்?” மனக்கடையில் இந்தக் கேள்விகள் எழுந்தன.

மன்னியைக் கூடத்தில் காணோம்.

மாப்பிள்ளை கைக்குட்டையில் முகத்தைப் புதைத்து இன்னும் விக்கிக் கொண்டிருந்தார். தலை, முகம், எல்லாம் அறுபது வயதை எட்டிவிட்டன. ஊஞ்சல் சங்கிலியைப் பற்றியவாறு நின்றாள் அவள்.

அண்ணா மூக்கைச் சிந்தி, “அப்பாடா!” என்று பெருமூச்சு விட்டான்.

இத்தனை நாட்களாக எங்கேயிருந்தார்? என்ன செய்தார்? எப்படி வந்தார்? எதற்கு வந்திருக்கிறார்? இந்தக் கேள்விகளை அவள் வாய் திறந்து கேட்கவில்லை. ஊஞ்சல் சங்கிலியைப் பற்றி நின்று அவர், அவருடைய தலை, அவருடைய வயது, முதிர்ச்சி, மௌனமான அழுகை எல்லாவற்றையும் வெறித்துப் பார்த்த கண்கள் கேட்டுக் கொண்டிருந்தன.

உடல் கட்டுக்கொள்ளவில்லை. சூடு பறந்தது. மன்னியைப் பார்த்துச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. அந்த அம்பைப் பிடுங்கி அவள் மீது

திருப்பி எறியத் தோன்றியது.

அவர் கண்களைத் துடைத்துக் கொண்டு அவளைப் பார்த்தார்.

"அக்கா உட்காருங்கோ, இப்படிச் சேர்ந்து உட்காருங்கோ!"

"ஆமாம், காமு, உட்காரு! இப்படி உட்காரு" என்று அண்ணா ஊஞ்சலிலிருந்து எழுந்து இடம் விட்டான்.

காமு திரும்பினாள்.

மன்னி ஆரத்தித் தட்டுடன் நின்றாள். மன்னியின் முகத்தில் ஆரத்தித் தட்டில் சுடர்விட்ட விளக்கின் ஒளி தகதகத்தது.

"உட்காருங்கோ, சேர்ந்து, பரவாயில்லை" என்று மன்னி கெஞ்சினாள்.

மன்னி எப்பொதுமே கெட்டிக்காரி. நாம் சிரிப்பதற்கு முன்னால் அவள் முந்திக்கொண்டுவிட்டாள்.

கல்கி, அக்டோபர் 1960

# ஸ்ரீராமஜெயம்

வேலுமாரார், ராகவாச்சாரியைக் கவனித்துக் கொண்டேயிருந்தான். அன்று மாத்திரமில்லை; நாலு நாளாகவே இந்த கவனம் நடந்து வருகிறது. ஆனால் அந்த கவனத்தில் சந்தேகமோ கல்மஷமோ இல்லை. ஒரு வேடிக்கை – அவ்வளவுதான்.

இந்த அச்சாபீஸில் அவன் காவல்காரனாக வந்து இருபது வருஷம் ஆகிவிட்டது. அவனுக்கு மூத்த மூதாதை ராகவாச்சாரி. அவர் ப்ரூப் ரீடராக வந்து இருபத்து ஆறு வருஷமாகிறது. இந்த அச்சாபீஸிலேயே சொந்தக்காரருக்கு அடுத்த பெரியவர் அவர்தான் – வயது, ஊழிய காலம் இரண்டிலும். வேலுமாராருக்குத் தெரிந்த இருபது வருஷமாக, ஆபீசு ஆரம்பிக்கிற எட்டரை மணிக்கு முன்னால் ராகவாச்சாரி இந்தக் கட்டிடத்தில் நுழைந்து அவன் ஒரு நாள்கூடப் பார்த்ததில்லை. ஒரு நாள்கூட என்று சொல்வது தவறு; ஒரே ஒரு நாள் இரண்டு நிமிஷம் நேரத்திற்கு முன்னால் வந்தார். அன்றுதான் ஜப்பான்காரன் சென்னை மீது குண்டு வீசிவிட்டுப் போனான்!

ராகவாச்சாரி எட்டு முப்பத்தைந்திலிருந்து ஒன்பதே கால் மணிக்குள் ஏதாவது ஒரு நிமிஷத்தில் ஆபீசுக்குள் வாயில் வெற்றிலை மணக்க நுழைகிற வழக்கம். காலர் இல்லாத ஒரு காக்கிச் சட்டை – அரைக்கைச் சட்டைதான் அவருக்குப் பிடிக்கும். நாலு ஐந்து வருஷத்திற்கு ஒரு ஜோடி சட்டை தைத்து, தோய்த்துத் தோய்த்துப் போட்டுக் கொண்டு வருவார். கோட்டுத் துணியாக வாங்கிச் சட்டையாகத் தைத்த விசேஷம், ஜோடி நாலைந்து வருடமாவது தாக்குப் பிடிக்கும்! பிறகு மூட்டும் ஒட்டு போட்டும் ஒரு வருடம் ஓட்டிவிட்டு, ஐந்தாவது அல்லது ஆறாவது தீபாவளியன்று புதுச்சட்டையில் புகுந்து கொண்டுவிடுவார். முகத்தில் அம்மை வடு. அம்மை போட்டு ஒரு கண் பார்வை சற்று மங்கிவிட்டது. அதற்காகத்தான் இடது கண்ணுக்கு ஒரு பூதக்கண்ணாடி. வலது கண் நல்ல கண்; வெறுங் கண்ணாடியால் பார்க்கும் அது. வலது கண்ணைப்போல இரண்டு மடங்கு பெருத்து, பூதக்கண்ணாடி வழியாக விழிக்கும் இடது கண் அவர் முக அழகைக் கெடுத்துவிடவில்லை. அம்மை வடுவோடும் வழுக்கைத் தலையோடும் அதுவும் பாந்தமாகத் தான் இருந்தது.

“ஏன் லேட்?” என்று அவரை யாருமே கேட்டதில்லை. அவருடைய

சட்டையையோ இடது கண்ணையோ பார்த்து அதன் பின்னால் மறைந்து ஏங்கின நாலு பெண் குழந்தைகளையும் மூன்று ஆண் குழந்தைகளையும் முதலாளி பார்த்து விட்டாரோ என்னவோ – சாய்த்தாற்போல இருந்து விட்டார். இன்று வரை யாருமே அவரை ஏன் தாமதம் என்று கேட்டதில்லை.

வேலுமாராரும் அவருக்கென்று இதயத்தில் ஒரு இடம் ஒதுக்கியிருந்தான். இருபத்தாறு வருடமாக அதே மேஜை முன்னால் உட்கார்ந்து அதே பழுப்புக் காகிதத்தில் வரும் கோடானுகோடி அச்சுப் பிழைகளைப் பார்த்துப் பார்த்து மன்னிக்கிற காருண்யம் மகத்தான காருண்யம் என்று அவன் நினைத்திருக்க வேண்டும். நடுப்பகல் ஒரு மணிக்கு மணியடித்ததும் இந்த ஆபீசே அப்படியே போட்டது போட்டபடி குழாயடிக்குக் கை கழுவ ஓடும். அந்த ஒரு மணி நேரத்தில் மகா விஷ்ணுவே வந்தால் கூட மரியாதை காட்ட மாட்டார்கள்; எழுந்திருக்க மாட்டார்கள். ராகவாச்சாரி மட்டும் இந்த விடுதலையில் நம்பிக்கை இல்லாமல் ஒன்றரை மணிக்குப் பேனாவைக் கீழே வைப்பார். கைகால் அலம்பிவிட்டு அலுமினிய டப்பாவைத் திறந்து அதில் இருக்கிற தேங்காய்ச் சாதத்தையோ மோர் சாதத்தையோ நாலைந்து கவளமாக உள்ளே தள்ளிவிட்டு ஒரு டம்ளர் தண்ணீரைச் சாப்பிட்டுவிட்டு மறுபடியும் பேனாவைக் கையில் எடுத்துவிடுவார். ஐந்து நிமிஷத்திற்கு மேல் சாப்பாட்டிற்கு வீணாக்காத அவருடைய பெருந்தன்மைக்காக ஒரு பெரிய இடமே வேலுமாராரின் மனத்தில் அவருக்காக ஒழித்து விடப்பட்டிருந்தது.

அவருக்கு ஆசை கிடையாது. இந்த ஆபீசில் நடந்த எத்தனையோ வேலை நிறுத்தங்களில் அவர் கலந்துகொண்டதில்லை. கலந்துகொள்ள வில்லையே என்று கம்பாஸிட்டர்களோ மற்றவர்களோ அவருடைய வெள்ளி விளிம்பு மூக்குக் கண்ணாடியைப் பிடுங்கியதும் இல்லை. காக்கிச் சட்டையைக் கிழித்ததும் இல்லை. முதலாளிக்குத் தெரிந்த குடும்பக்காட்சி தொழிலாளி கண்ணுக்குத் தெரியாதா?

வேலுமாராருக்கு எப்போதாவது ஒழிந்தால் ராகவாச்சாரியின் மேஜைக்குப் பின்னால் வந்து நிற்பதுதான் பொழுதுபோக்கு. முன்னால் நிற்பதில்லை; பின்னால் நின்றால்தானே அவர் திருத்துகிறது தெரியும்! ராகவாச்சாரிக்கு விரல்கள் பெரியவை. அந்த விரல்களில் அவர் பேனாவைப் பிடித்துத் திருத்தும் லாகவத்தை நாள் முழுவதும் பார்க்கலாம். பேனாவைக் கழுத்தைப் பிடித்து எழுதுகிறவர்கள் மன முதிர்ச்சி இல்லாதவர்கள் என்றும், நடுவில், வயிற்றில் பிடித்து

எழுதுகிறவர்கள் பக்குவமும் லாகவமும் உள்ள விசேஷ மனிதர்கள் என்றும் வேலுமாராருக்கு ஒரு அபிப்பிராயம் உண்டு. ராகவாச்சாரிக்கு மனப்பக்குவம் சராசரிக்கு அதிகம் என்றுதான் அவன் தீர்மானம் செய்து வைத்திருந்தான்.

ராகவாச்சாரி வேலை செய்யும்போது இந்தண்டை அந்தண்டை பார்ப்பதில்லை. மத்தியானம் மூன்று மணி சுமாருக்குப் பேனாவை மேஜை மேல் வைத்துவிட்டு வலது கையை ஒரு உதறு உதறிவிட்டு, இரண்டு கைகளையும் மேலே உயர்த்திச் சோம்பல் முறிப்பார்; திரும்புவார்; வேலுமாரார் அங்கு வந்து நின்றிருந்தால் "மாரார், ஒரு காரியம் பண்ணுவியா?" என்பார்.

"என்ன சாமி?"

"வெத்திலைபாக்கு வேணும்!"

"வாங்கி வரேனே."

**1944** – ம் வருஷத்திற்கு முன்னால் ஒரு தம்பிடிக்கு வெற்றிலை சீவலும் ஒரு தம்பிடிக்குப் புகையிலையும்தான் அவர் வாங்குகிற வழக்கம். அதற்குப் பிறகு அந்த இரண்டு தம்பிடிகளின் வேலையைச் செய்ய அரையணா வேண்டியிருந்தது.

"என்ன அநியாயம் சாமி!" என்று சொல்வதைத் தவிர வேறு ஒன்றும் வேலுமாராரால் செய்ய முடியவில்லை. அவனுக்கு பீடிப் பழக்கம்கூடக் கிடையாது. அவனால் செய்ய முடிந்தது ஒன்றுதான். அச்சாபீசுக்குப் பத்துக் கடை தள்ளி ஒரு நாயர் பெட்டிக் கடை வைத்திருந்தான். பக்கத்துக் கடைகளையெல்லாம் விட்டு, அதுவரையில் நடந்துபோய் ஸ்வதேச அபிமானத்திப் பயன்படுத்தி இரண்டு மூன்று வெற்றிலை அதிகப்படியாகத் தண்டி வாங்கி வருவான் மாரார்.

என்னவோ அவர்மேல் அவனுக்கு ஒரு தனிப் பரிவு, தனி அநுதாபம். வறுமை இப்படிப் பொறுமையும் பெருமையுமாக நடமாடுகிற விந்தைதான் அவனை இப்படி ஈர்த்திருக்க வேண்டும்.

இந்த ராகவாச்சாரி இப்போது நாலு நாளாக எட்டு மணிக்கே வேலைக்கு வந்துவிடுகிறார். முதளாளியே வராத நேரம். தொழிலாளிகள்கூட ஆபீஸுக்குப் பக்கத்திலும் முன்னாலும் உட்கார்ந்து காக்கத் தொடங்காத நேரம்.

முதல்நாள் எட்டு மணிக்கே வந்தவர் சிறிது நேரம் உட்கார்ந்து முதலாளியின் கண்ணாடி அறையைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்.

"சாமி என்ன இவ்வளவு சீக்கிரம் இன்னிக்கு?" என்றார் வேலுமாரார்.

"ஒரு நாளைக்கு ஒழுங்காயிருப்போமே!" என்று புன்சிரிப்புச் சிரித்தார் ராகவாச்சாரி. என்றுமே காணாத புன்சிரிப்பைக் கண்ட வேலுவுக்கு மனசு நிறைந்து வழிந்தது. இந்த மனிதனையும் சந்தோஷமடையும்படி செய்துவிட்டானே பகவான் என்று எண்ணி மகிழ்ந்தான் அவன்.

அடுத்தடுத்து நாலு நாள் அதே மாதிரி அரைமணிக்கு முன்னாலேயே வந்து கொண்டிருந்தார் ராகவாச்சாரி. அக்ஷய திருதியைக்குக் கருடசேவை பார்க்கக் காஞ்சீபுரம் போவதற்காக வருஷா வருஷம் மூன்றே மூன்று நாள் அவர் லீவு எடுக்கிற ஆச்சரியத்தைவிட நாலு நாள் அவர் நேரத்திற்கு அரைமணி முன்னே வருவது பெரிய அற்புதம் என்று வேலுவுக்குத் தோன்றியதும் அற்புதமில்லை.

நாலாம் நாள் மாலை வீட்டுக்குப் போகும்போது, "நான் நாளைக்கு வரவில்லை, மாரார்; லீவு போட்டிருக்கேன்" என்றார் ராகவாச்சாரி.

"என்ன சாமி, காஞ்சிபுரத்திலே உங்களுக்கு ஸ்பெஷல் கருடசேவையா?"

"அதெல்லாம் இல்லை. எங்க அண்ணா ஊரிலேந்து வந்திருக்கார். அவர் ஜாஸ்தி வந்ததே இல்லை. நாளைக்கு அவரோட பேசிண்டிருக்கலாம்னு . . ."

"நல்லா, நல்லா!"

மறுநாள் காலையில் ஏழேமுக்கால் மணிக்கு அவர் ஆபீசுக்கு வந்தபோதுதான் வேலு மாராருக்குச் சற்றுத் திகைப்பாக இருந்தது.

"லீவு கான்சலா சாமி?" என்றான்.

"இல்லேப்பா, கொத்தவால் சாவடிக்கு வந்தேன் — அண்ணா வந்திருக்காரே — கறிகாய் வாங்கணுமே சாப்பாட்டுக்கு! முதலாளியையும் பார்க்கணும்; கொஞ்சம் பணம் வேணும்."

"நேத்து லீவு எடுக்கிறபோது கேட்கப்படாது?"

"என்னமோ அப்ப தோணலே."

"சரி, இருங்க" என்றான் வேலு.

ராகவாச்சாரி எங்கு வேண்டுமானாலும் போகலாம், வரலாம்— ஆபிசுக்குள். அவருக்கு அவ்வளவு சுதந்திரம் உண்டு. வீட்டிலே நடமாடுகிற பூனைக்குட்டியை அடுக்களைக்குள் வராதே, அங்கு வராதே, இங்கு வராதே என்று யார் விரட்டப்போகிறார்கள்? விரட்டுகிறவர்கள் கருணையில்லாதவர்களாகத்தான் இருக்க முடியும்.

ராகவாச்சாரி வெளியே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். சற்றுக் கழித்து உதவி மானேஜரின் நாற்காலியில் உட்கார்ந்தார். அங்கும் இருப்புக் கொள்ளாமல் டெலிபோன் ஆபரேட்டர் மேரி உட்கார்கிற ஸ்டூவில் உட்கார்ந்துகொண்டார். அங்கும் இருப்புக் கொள்ளாமல் டைப்பிஸ்ட் நாற்காலிக்குப் போனார். கடைசியில் கண்ணாடி அறையைத் திறந்து முதலாளியின் மேஜைக்கு முன்னால் உள்ள விசிட்டர்கள் நாற்காலியிலேயே உட்கார்ந்துவிட்டார்.

சற்றைக்கொருதரம் வாசலிலிருந்து உள்ளே வந்து வேலுமாரார் அவரைக் கவனித்துக்கொண்டிருந்தான். கால்மணியாயிற்று. இப்போது இடம் மாற்றவில்லை அவர்; கண்ணாடி அறைக்குள்ளேயே இருந்தார்.

வேலுமாரார் மறுபடியும் வாசலில் வந்து நின்றான். மணி எட்டு பத்து; அச்சுக் கோப்பவர்கள் நாலைந்து பேர் எதிர்த்த மூக்குக் கண்ணாடி கடை வாசலில் வந்து உட்கார்ந்திருந்தார்கள். போர்மன் சுப்ரமண்யன் பக்கத்து வெற்றிலை பாக்குக் கடையில் சிகரெட் பிடித்துக்கொண்டிருந்தான்.

"மாரார், ஐயாட்ட நான் வந்திட்டு போனேன்னு சொல்லு. கறிகாயை வாங்கிக் கொடுத்திட்டு ஒரு மணியிலே வரேன்" என்று சொல்லிக்கொண்டே வாசல்படி இறங்கினார் ராகவாச்சாரி.

"இன்னும் பத்து நிமிஷத்திலே வந்திருவாங்களே முதலாளி."

"இல்லேப்பா, அப்புறம் சமையலுக்கு லேட்டாயிடும். நான் காய்கறியை வாங்கித் தந்துட்டு ஒன்பது மணிக்கு வரேன்." என்று முகத்தைப் பார்க்காமலே சொல்லிக் கோண்டு தெருவில் இறங்கினார் அவர்.

வேலுமாராருக்குச் சந்தேகப்படுவதுதானே வேலை? சந்தேகப் படுவதற்காகவே அறுபது ரூபாய் சம்பளம் கொடுக்கிறபோது ஏன் சந்தேகப்படாமலிருக்க வேண்டும் என்ற பேய் நினைவு தோன்றிவிட்டது.

"இப்படி வாங்க சாமி. ஒரு விஷயம்" என்றார் மாரார்.

"எனக்கு நிக்க நேரமில்லை" என்று நகர்ந்தார் ராகவாச்சாரி.

பேயின் உருவம் இப்போது பெரிதாகிவிட்டது.

"பரவாயில்லை, வாங்க!"

"என்ன விசேஷம்?" என்று நின்றுகொண்டே கேட்டார் அவர்.

"அங்கேயே நின்னுக்கிட்டு கேக்கிறீங்களே?"

"எனக்கு நாழியாச்சுப்பா!"

"இப்படி ஒரு ஸெகிண்டு வந்திட்டுப் போயிருங்களேன்."

"எதுக்கு?"

"உங்க பையைப் பார்க்கணும்."

"என் பையையா? என் பையிலே எட்டணாதான் இருக்கு. நான் என்ன செய்வேன்?" என்று காக்கிச் சட்டையின் தையல் பிரிந்த பையைத் தொட்டுக் காட்டினார் ராகவாச்சாரி.

"சட்டைப் பையை இல்லை; கைப்பையை!"

"கைப் பையையா? எதுக்கு?"

"பாக்கறேனே . . . " என்று கீழே இறங்கிவிட்டான் வேலு.

"எதுக்கு?" என்று சொல்லிக்கொண்டே தெருவில் நின்றவர் 'விறுவிறு' வென்று படியேறினார்.

"சும்மாத்தான்" என்று வேலு பையைப் பார்த்தான். மேலே இருந்த அழுக்குத் துண்டை எடுத்தான். உள்ளே வாயை அகட்டிப் பார்த்தான். கையை விட்டு எதையோ எடுத்தான். பளபளவென்ற பைண்ட் செய்த பெரிய நோட்டுப் புத்தகம். ஐந்நூறு பக்கம் உள்ள நோட்டு. பிரித்தான்; ஒன்றுமே எழுதாத புதுநோட்டு!

"முதலாளி மேஜைமேல் இருந்தது இது." என்றான் அவன்.

"நோட்டா! அடெடெ! பார்த்துண்டேயிருந்தேன்; தவறிப்போய்ப் பையிலே போட்டுனுட்டேன் போலிருக்கு" என்றார் ராகவாச்சாரி.

அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் வேலு.

"நீங்க தவறி எடுக்கலே. இதை எடுக்கத்தான் நாலு நாளா இங்க பராந்து மாதிரி வட்டமிட்டீங்க"

“ஏய் என்னது! யாரைப் பார்த்துச் சொன்னே? இது என்னத்துக்குடா எனக்கு?”

“அதெல்லாம் தெரியாது எனக்கு. நீங்க இப்படியே உட்காருங்க. முதலாளி வந்தப்புறம் போகலாம்.”

“இதை நீயே வச்சுக்கோ எனக்கு என்னத்துக்கு? நான் போணும்” என்று வேகமாக வாசல்படியைக் கடக்கப் போனார் அவர்.

கையில் இருந்த லத்திக் கழியைக் குறுக்கே பிடித்து நிலையில் எதிர்ப் பக்கத்தில் ஊன்றிக்கொண்டான் மாரார்.

“என்னடாது விளையாடறே?” என்று புன்சிரிப்புச் சிரித்தார், தடைப்பட்ட ராகவாச்சாரி.

மாரார் கண்ணுக்கு அந்தச் சிரிப்பில் காவிதான் தெரிந்தது. சத்தியம் தெரியவில்லை.

“நீங்க போய் உட்காருங்க” என்றான், கடுமையோ சுவாதீனமோ இல்லாத வறண்டகுரலில்.

“என்னடா அதிகப்பிரசங்கியா இருக்கே?” என்று இடது விழி பெருக்க விழித்தார் ராகவாச்சாரி.

“சும்மா கத்தாதீங்க. நீங்க கத்தினீங்கன்னா, மத்தவங்களுக்குத் தெரிஞ்சுபோயிடும். அப்படி அசிங்கம் பண்ண வேண்டாம்னு பார்க்கறேன் நான். முதலாளி வரட்டும். கண்ணாடி ரூம்லெ உங்களைக் கொண்டு நிறுத்தறேன். கதவைச் சாத்திக்கிட்டு இதைச் சொல்றேன். அப்புறம் அவர் சொல்றபடி கேக்கறேன். ஒருத்தருக்கும் காதிலே விழாது.”

“சரிடா, நீ இதைப் போய்ச் சொன்னா முதலாளி நம்பிடுவாரா?

“நம்பாம இருக்கணும்னுதான் நான் வேண்டிக்கறேன்.”

“அப்படின்னா உனக்கு வேலை போயிடும்; இல்லாட்டா அபராதம் விழும். தெரியுமா?”

“விழட்டும், நான் எனக்குத் தோண்றதைச் சொல்லணும்; அதுதான் கடமை. இல்லாட்டி முதலாளிக்குத் துரோகமாயிடும்.”

“சரி; நீ சொன்னதை அவர் நம்பி அவர் என்னை வேலையை விட்டுத் தள்ளிப்ட்டார்னா – ஏழு குழந்தைகள் பட்டினி கிடக்குமே; அதை

யோசிச்சுப் பாத்தியா?"

இதைக்கூடச் சற்று மிரட்டலாகத்தான் கேட்டார் அவர்.

"நாம என்ன சாமி செய்யறது! நம்மள் சிரசிலெ எப்படி லிகிதமோ!"

"உனக்கு ரொம்பப் பாவம் சம்பவிக்கும்."

"நீங்கதான் எடுக்கலேன்னு சொல்றப்ப, ஏன் இந்தக் கவலை? பகவான் ரக்ஷிக்கட்டும்!" என்றான் வேலு மாரார். "என் டூட்டியை நான் செய்யணுமா இல்லலையா? எனக்குச் சம்சயம் வந்திருக்கு."

ராகவாச்சாரி பெருமூச்சு விட்டுக்கொண்டே உதவி மானேஜரின் மேஜைக் கருகில் உட்கார்ந்துகொண்டார்.

எட்டு இருபத்தைந்து கார் வந்து நின்றது. முதலாளி இறங்கினார். உள்ளே வரும்போதே "என்ன ஸ்வாமி! என்ன அதிசயமாயிருக்கு!" என்று கேட்டுக்கொண்டே கண்ணாடி அறைக்குள் போனார்.

வேலு நோட்டுப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு ராகவாச்சாரியை முன்னால் போகச் சொல்லி உள்ளே சென்றான்.

ராணுவ முறையில் சலாம் செய்தான்.

"சாமி ஏழே முக்காலுக்கே ஆபீசு வந்தாங்க. ஏழு ஐம்பதுக்கு இந்த உள்ற வந்து உக்காந்தாங்க உங்களைப் பார்க்கணும்னு. திடீர்னு அப்புறம் வந்து பார்க்கறேன்னு கிளம்பிட்டாங்க. பையை 'ஸர்ச்சு' பண்ணினேன். இந்த நோட்டு இருந்தது!" என்று சொல்லிவிட்டு நின்றான் வேலு.

முதலாளி "என்னய்யாது!" என்று நோட்டை வாங்கிப் பிரித்துப் பார்த்தார். "தினப்படி கொடுக்கிற சில்லறைக் கணக்கு எழுதன்னா பண்ணச் சொன்னேன் இந்த நோட்டை, இது எதுக்கு உமக்கு?"

"எனக்கு வாண்டாம்; ஏதோ பார்த்துண்டேயிருந்தேன். அசதி மறதியா பைக்குள்ளே போட்டுனுட்டேன் போலிருக்கு."

"அப்ப, மேலேயிருந்த துண்டு உள்ளல்ல அமுங்கியிருக்கணும்!" என்று வேலு, நோட்டுக்கு மேல் துணியிருந்ததை விலக்கிக் காண்பித்தான். மறுபடியும் கண்ணைத் துடைத்துக்கொண்டார் ராகவாச்சாரி.

"அதுக்கு என்னைக் கேட்கப்படாதா? இந்த மாதிரி பத்து நோட்டுப் பண்ணித் தரமாட்டேனா? . . . சரி போம்! ஏய் மாரார், பைண்டர்கிட்டச்

சொல்லி இந்த மாதிரி பத்து நோட்டு பண்ணி இவர்கிட்ட கொடுக்கச் சொல்லு. சாயங்காலத்துக்குள்ள கொடுக்கணும்.

"சரி சார்!"

"சரி, போம்யா – போய் வேலையைப் பாரும். இனிமே ஏதாவது வேணும்னா எங்கிட்ட வந்து கேளும். இது என்ன அசட்டுத்தனம் இந்த வயசிலே! எழுந்திரும்!"

ராகவாச்சாரி எழுந்து கண்ணாடி அறையை விட்டுத் தன் மேஜையை நோக்கிப் போனார். வேலுமாரார் மணி அடித்துவிட்டு முதலாளியின் உத்தரவைத் தெரிவிப்பதற்காகப் பைண்டிங் இலாகாவுக்குச் சென்றான். ராகவாச்சாரிக்கும் தாம் அன்று லீவு எடுத்துக்கொண்ட நினைவு வராமலே போய்விட்டது.

வெளிவந்த இதழ் காலம் தெரியவில்லை

# மாற்றல்

வெங்கிடியா பிள்ளைக்கு மாற்றல் உத்தரவு வந்தது. செய்தியைக் கேட்டதும் அவர் திடுக்கிட்டுவிட்டார். ஒரு நிமிடம் கழித்து மனதைத் தேற்றிக்கொண்டார். யட்சன் தர்மபுத்திரனிடம் போட்ட கேள்வி அவருக்கு ஞாபகம் வந்தது. இந்த உலகத்தில் மிகப் பெரிய வியப்பு என்ன என்று யட்சன் கேட்டான். “பொழுது விடிந்தால் – சாய்ந்தால் மக்கள் யமபட்டணம் போய்க்கொண்டேயிருக்கிறார்கள். அத்தனையையும் பார்த்துக்கொண்டிருக்கும் மனிதனோ தனக்கு மட்டும் அந்த கதி நேரப்போவதில்லை என்று நினைக்கிறானே, அதைவிட வேறு என்ன வியப்பு இருக்க முடியும்?” என்றாராம் தர்மபுத்திரன். அப்பாமங்கலத்திற்கு அவர் வந்து பதினோரு வருஷமாகிவிட்டது. அவருக்குப் பின்வந்த வாத்தியார்கள் எத்தனையோ பேர் மாற்றலாகிப் போய்விட்டார்கள். பல பேருக்கு இரண்டு வருடங்களுக்குள்ளாகவே மாற்றல் உத்தரவு வந்திருக்கிறது. சில முரடுகளை ஆறு மாதத்திலேயே தூக்கியிருக்கிறார்கள். அவர் என்னவோ தப்பிக்கொண்டிருந்தார்.

தப்பிக்கொண்டிருந்தார் என்று சொல்வதற்குமில்லை. பள்ளிக்கூடத்தில் அவருக்கு நல்ல பெயர்; வெளியேயும் நல்ல பெயர். அப்பாமங்கலத்தில் ஒரு வாத்தியார் மரியாதை வாங்குவது கல்லில் நார் உரிக்கிற சங்கதி. அது ஊர்வாகு. என்ன காரணத்தாலோ அங்கு மாஜி கள்ளுக்கடை கண்ட்ராக்டர்கள், சிட்பண்ட் நடத்தி ஏமாற்றி கம்பி எண்ணிவிட்டு வந்தவர்கள், கைது செய்யச் சொல்லி போலீசுக்குப் பெரிய இடத்து சிபாரிசுகள் வைத்து சிறைக்குப் போய்வந்த தியாகிகள், கள்ள மார்க்கெட்டில் நூல், சர்க்கரை முதலிய அத்யாவசியப் பண்டங்களை விற்பவர்கள், பாங்கி ஏஜெண்டுகள் – மானேஜர்கள், போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர், சிங்கப்பூருக்கும் சைகோனுக்கும் சபுருபோய் “சாமார்த்தியம்” பண்ணிப் பணம் கொண்டுவந்தவர்கள்– இந்த மாதிரி ஆசாமிகளுக்குத்தான் மரியாதையும் செலாவணியும் அதிகம். வாத்தியார்கள், தெருவிலும் கடை வீதியிலும் மூஞ்சூறுபோல ஓரமாகப் போய்க்கொண்டிருப்பார்கள். இப்பேர்ப்பட்ட ஊரில் தான்மட்டும் முக்கியப் புள்ளிகளில் ஒன்றாக எப்படி ஆனோம் என்று வெங்கிடியாவுக்குப் புதிராக இருக்கும். வேலையில் தனக்கு உள்ள திறமையும் மனப்பூர்வமான ஆர்வமும்தான் காரணமாக இருக்கும் என்று பதில் சொல்லிக்கொள்வார்.

ஒரு தடவை “மொட்டைத் தம்பிரான் ஊர்கோலம் வருகிறோம். மாடியை இடித்துத் தள்ளு” என்கிற ஒரு கதை நடந்தது. “பள்ளிக்கூடத்துக்குப் பையன்கள் போதவில்லை; உயர்தரப் பள்ளியை நடுத்தரப்பள்ளியாக்கு” என்று கல்வி இலக்காகவும் ஜில்லா போர்டும் கரடிவிட்டு ஓட்டின. உடனே புயல் கிளம்பிற்று. மகஜர்கள், கூட்டங்கள், கண்டன ஊர்வலங்கள், தினசரிகளில் கடிதங்கள், கல்வி இலாகாவுக்குக் கடிதங்கள், துண்டு அறிக்கைகள் — இப்படிப் பல உருவங்களில் வீசிற்று. இத்தனையையும் ஓசைப்படாமல், வெளியே தெரியாமல் இயக்கினவர் வெங்கிடியா. மந்தர மலைக்கு அடிவாரமான ஆமைபோல் அத்தனைக்கும் அடிவாரமாக நின்று நடத்தினவர் அவர். இன்னும் எத்தனைக்கோ அவர் சொல்லிக் கொடுத்த வக்கணைதான் காரணம். ஆற்றுக்குப் பாலம், திருவனந்தபுரம் பாஸ்ட் பாசஞ்சர் அந்த ஊரில் நிற்க ஆரம்பித்தது, நெசவுக்காரன் கூட்டுறவுச் சங்கமாகக் கூடியது — என்று ஒரு முப்பது சொல்லலாம். எதை எடுத்தாலும் அவருடைய யோசனையோ, எழுதுகிற வக்கணையோ கட்டாயம் இருக்கும்.

அதனால்தான் அவருக்கு ஊர்ப் பொதுவில் பிரிவுபசார விருந்து நடத்தினார்கள். பெரிய பெரிய ஹெட்மாஸ்டருக்குக் கூட அப்படி நடந்ததில்லை. அப்போது ஆற்றில் தண்ணீர் வற்றிப் போன பருவம். ஓரமாக ஓடுகால் வெட்டியிருந்தது. அங்கே வன போஜனம் மாதிரி வெங்கிடியாவுக்கு விருந்து வைத்தார்கள். அமளிப்பட்டது. கூட்டாஞ்சோறு, சர்க்கரைப் பொங்கல் வெண்பொங்கல், வருவல்கள், பொரியல்கள், அவியல்கள், கலியாண முறுக்களவுக்கு ஜிலேபி — ஐயோ — ஏதோ கவர்னருக்கு அளித்த விருந்து என்றுதான் நீங்கள் நினைத்திருப்பீர்கள். ஒரு அறுபது பேர் அதில் கலந்துகொண்டார்கள் — யார் யார்? பஞ்சாயத்துத் தலைவர், உபதலைவர், நாகஸ்வர வித்வான் முத்துக்குமர வாத்யக்காரர், மொத்த மளிகை கோபாலசெட்டியார், அவருக்குப் போட்டியான மொத்த மளிகை பாலகிஷ்டையர், ஓதம்பேட்டை சின்னப் பண்ணை மைனர் வரதாச்சாரி, செக்கடி சிற்றம்பலம் செட்டியார், லோகல் பண்டு டாக்டர், ஸப்ரிஜிஸ்ரார், உதவி விற்பனை வரி ஆபீசர், வெண்ணாறு — காவேரி உதவி என்ஜினீர்கள், பாஸ்கர ஜோஸியர், மூங்கில் வியாபாரம் ஹாஜி அபூபக்கர், மண்டல காங்கிரஸ் கமிட்டித் தலைவர், காரியதரிசி, கோல்டன் பவர்பிரஸ் முதலாளி ஜின்னு . . . யாரைச் சொல்வது, யாரை விடுவது? எல்லாருமே பெரிய புள்ளிகள், நிலவு காயும் ஆற்று மணலில் ஒரு பெரிய வட்டமாக அத்தனை பேரும் உட்கார்ந்து சாப்பிட்ட காட்சியை என்னவென்று சொல்ல! சுற்றிலும் படுகை மூங்கில்

தோப்புகள், வாழைத் தோப்புகள், சிள்வண்டுகளின் கீதங்கள், நிலவு, மெல்லிய காற்று – எல்லாம் கனவுமாதிரி இருந்தது. நாலுபேருக்கு நடுவில் ஏப்பம் விடுவது ரசக் குறைவான செயல் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், அறுபதுபேர் கபடமில்லாமல், திருப்தியோடு அறுசுவை உண்டு ஏப்பம் விடும்போது மனித சரீரத்திலிருந்து எழும் ஓசைகள் எவ்வளவு இயற்கையானவை. மன்னிக்கத்தக்கவை. ஏன் அழகானவை என்றுகூட உங்களால் உணரமுடியும். தமக்காகவா சாப்பிட்டார்கள்? வாத்தியாருக்காகவல்லவா? அதுவும் வெங்கிடியாவுக்காகவல்லவா?

வெங்கிடியாவுக்கு அப்பாமங்கலம் அவர் அப்பன் – பாட்டன் பிறந்த ஊர் அல்ல; பிழைக்கவந்த இடம்தான். ஆனால், அவர் மற்ற வாத்தியார்களைப் போலவா இருந்தார்? சீசன் டிக்கட்டு வாங்கிக்கொண்டு ரயிலிலா வந்துகொண்டிருந்தார்? பஸ்ஸிலா வந்தார்? பல வாத்தியார்கள் அப்படி வருவதைப் பார்த்தால் பொசபொசவென்றும் வரும். அப்படி ஒரு ஒட்டு, ஒரு உறவு இல்லாமல் துடைத்து விட்டாற்போல் நடந்துகொண்டிருந்தார்கள். வெங்கிடியாதான் ஊரோடு ஐக்கியமானார். கந்தர் கோவில் ஜீரணோத்தாரணத்திற்கு வசூல் செய்தார், வேலுப்பத்தர் "ஆகஸ்டு தியாகி"தான் என்று நிரூபித்துக் காட்டினார். பஜனைகளில் கலந்துகொண்டார். இரண்டு ஷேக்ஸ்பியர் நாடகங்களை இங்கிலீஷிலேயே தயாரித்து, உள்ளூரிலேயே போட்டுக்காட்டி, பணம் திரட்டி அதை ஒரு இரவுப் பள்ளிக்கூடத்திற்கும் லேடி டாக்டர் லூயிஸா நடத்திய பிரசவ ஆஸ்பத்திரியில் மூன்று அதிகப்படியான படுக்கைகளுக்கும் கொடுத்தார். இதையெல்லாம் செய்யவேண்டும் என்று என்ன முடை?

இந்தப் பெரும் தன்மைகளை எப்படிச் சொல்லாமலிருக்க மனசு வரும்? சாப்பாடு முடிந்து ஓடுகாலில் கையலம்பி, வெற்றிலை – பாக்கு– புகையிலை, சிகரெட்டு எல்லாம் முடித்துவிட்டு எல்லோரும் பேச ஆரம்பித்தார்கள். ஒவ்வொருவரும் பேசினதை அப்படியே எழுதினால் ஒரு புத்தகமாகிவிடும். சுருங்கச் சொல்ல வேண்டும்.

தேசபக்தர் கிட்டப்பா – அதாவது (கிட்டப்பா எந்த பிரசங்கத்தையும் அதாவது என்றுதான் தொடங்குவார்.) அடிமைத்தனம் நீங்கியும் இன்றையதினம் உள்ளத்தின் அடிமைத்தனம் நீங்கவில்லை என்று தெரிகிறது. வாத்தியார்களை ஏன் ஊரைவிட்டு ஊர் மாற்றவேண்டும்? வாத்தியார்கள் லஞ்சம் வாங்குவதில்லையே! வாங்கவும் இஷ்டமில்லையே! அவர் என்ன தாசில்தாரா, ரெவின்யூ இன்ஸ்பெக்டரா? விற்பனை வரி

வேலுபத்தர்: என்னை என்னமோ தியாகி, தேச பக்தன் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். வெங்கிடியா அவர்களே தன் அன்பினாலும் அக்கறையாலும் நான் தியாகிதான் என்பதை அரும்பாடுபட்டு ஸ்தாபித்துக் காட்டினார். ஆனால், உண்மையான தியாகி வெங்கிடியா அவர்களே. அவர் நினைத்தால் ஒரு கலைக்டராகவோ, கவர்னராகவோ ஆகியிருக்கலாம். பம்பாய், டில்லி, லண்டன் முதலான பட்டணங்களில் பெரு வாழ்வு வாழ்ந்திருக்கலாம். ஆனால், நம் அப்பாமங்கலமே அவருடைய மூச்சாகிவிட்டது.

ஓதம்பேட்டை மைனர்: இங்கிலீஷில் வெங்கிடியா ஒதெல்லோவும், மாக்பெத்தும் நடத்திக் காட்டியது இந்த ஊரில் சரித்திரப் பிரசித்தமான சம்பவங்களாகும். முப்பது ரூபாய் அதற்கு நான் நன்கொடை கொடுத்தேன். ஆனால், மூவாயிரம்கூட கொடுக்கத்தகும்.

பாஸ்கர ஜோஸியர்: உபாத்தியாயர்களுக்கு உலகம் தெரியாது என்பார்கள். அதைப் பொய்ப்பித்தவர் ஸ்ரீமான் வெங்கிடியா அவர்கள்.

ஹாஜி அப்துர் ரஹ்மான்: நான் சிங்கப்பூரில் பல ஆசிரியர்களைப் பார்த்திருக்கிறேன். ஆசிரியர்களுக்கு அங்கு நல்ல ஊதியம் உண்டு. முதலாளிகளைப் போல வாழ்கிறார்கள். நம் தேசத்திலோ ஆசிரியர்களைக் கூலிகள்போல் நடத்துகிறோம். இந்த அவமானம் போதாதென்று மாற்றல் வேறா?

இன்னும் பலர் பேசினார்கள். வெங்கிடியாவின் சேவைகளையும் ஆசிரியத் தொழிலில் அவருக்கிருந்த திறமையையும் பாராட்டினார்கள். கடைசியில் ஒல்லி ராமையா பேசினார். அவர் பஞ்சாயத்துத் தலைவர்; தேசபக்தர். ஆனால், உரக்கப் பேசமாட்டார். அதிகமாகப் பேசமாட்டார். புன்சிரிப்போடு, மெதுவாகப் பேசுவார். அவர் பேசியதாவது: “நீங்கள் இத்தனை பேரும் பேசியது சரி. விருந்து வைத்தது சரி. வெங்கிடியா அவர்களின் சேவைகளையும் ஆசிரியக் கலையில் அவருக்குள்ள அளவற்ற திறமையையும் பாராட்டியது சரி. ஆனால், ஒன்றே ஒன்று கேட்கிறேன்: “அடிமைத்தனம், அடிமைத்தனம்” என்று சொன்னீர்களே. ஒரு ஆசிரியரை மாற்றக் கூடாது என்று சொன்னீர்களே – வெங்கிடியாவிற்கு மாற்றல் வந்துவிட்டது. அதை ரத்து செய்ய முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று ஏன் தோன்றவில்லை? முடியாது என்ற எண்ணமா? ரூல்ஸுக்குக் கட்டுப்பட வேண்டும் என்ற மரியாதை

உணர்ச்சியா? ஒரு அபத்தமான சட்டம் இருந்தால், அதைக்கூட எதிர்க்கக் கூடாதா? இது அடிமைத்தனம் இல்லாவிட்டால் வேறு எது அடிமைத்தனம்? மரியாதை, கட்டுப்பாடு என்ற பெயரில் நம் கோழைத்தனத்தையும், அடிமைத்தனத்தையும் மறைக்க வேண்டுமா? இல்லை, முயற்சி செய்தால் இப்படி ஒரு நல்ல விருந்து சாப்பிடும் வாய்ப்பு நழுவிவிடும் என்று நினைத்தீர்களா? விருந்துண்ண வேறு வாய்ப்புகளில்லையா? நிலவு காய்கிறது. அதற்காக விருந்துண்ணலாமே! விருந்து சாப்பிடக் காரணமா வேண்டும்? நிலா ஒன்று போதாதா? நிலா இல்லாவிட்டாலும் சேர்ந்து மகிழ்ந்து சாப்பிட வேண்டும் என்ற ஒரு காரணமே போதாதா? ஒரு ஏழை ஆசிரியரின் மாற்றல்தான் இந்தக் களியாட்டத்திற்கு மையமாக இருக்க வேண்டுமா? ஏன் நம் பிரமுகர்களுக்கு இது தோன்றவில்லை?

“வாழ்க்கை ரயில் சிநேகம் போல, ஜெயில் சிநேகம் போல” என்று பலர் சொல்லலாம். ஆனால், வெங்கிடியாவைப் பற்றியவரையில் நாம் அதை ஒப்புக்கொள்ள முடியுமா?

“அப்பாமங்கலத்திற்கு அவர் செய்த சேவைகளை உணர வெகு காலம் பிடிக்கும். ஆனால், நான் ரயில் சிநேகம் போல் பழகவில்லை. இதற்குமுன் இரண்டு தடவை அவருக்கு மாற்றல் உத்தரவு வந்திருக்கிறது. இங்கே வரவில்லை. தலைமை அலுவலகத்தில் பிறந்தது. நல்லவேளையாக நான் இரண்டு முறையும் அங்கு இருந்தேன். தலைவர் அவர்களிடம் சொல்லி “அபத்தம் இது”, என்று ஒரே வார்த்தையுடன் முளையில் கிள்ளி எறிந்தேன். நான் அந்த இரண்டு சமயங்களிலும் அங்கு இருந்தது இறைவன் திருவுளம் என்றும், வெங்கிடியா அவர்களிடம் நான் கொண்டுள்ள களங்கமற்ற நட்பிற்கு ஒரு சான்று என்றும் ஆறுதல் கொண்டேன்.

“இனியும் தாமதமாகிவிடவில்லை. வெங்கிடியா அவர்களை நம் ஊரிலேயே இருத்திக்கொள்ள நீங்கள் ஆவன செய்வீர்கள் என்று நம்புகிறேன்.”

பிரசங்கத்தை முடித்துவிட்டு ஒல்லி ராமையா உட்கார்ந்துகொண்டார்.

கிட்டப்பா எழுந்து நன்றி கூறினார். விருந்துக்கு வந்தவர்களுக்கு நன்றி கூறினார். கடைசியில் “திருவாளர் ராமையா அவர்கள் சொல்வதையும் நான் பெரிதும் வரவேற்கிறேன். அவரே இரண்டு மாற்றங்களின் ரத்துக்குக் காரணமாயிருந்திருப்பதைக் கேட்டு வியப்பில் ஆழ்ந்திருப்பீர்கள்

என்பதைப் பற்றி எனக்கு சந்தேகமே கிடையாது. இந்த முறையும் இந்த மாற்றலை ரத்து செய்து நம்முடைய அன்பிற்கும் மரியாதைக்கும் மதிப்பிற்குமுரிய திரு வெங்கிடியா அவர்களை இங்கேயே தங்கச்செய்ய ஆவன செய்ய வேண்டும் என்று என் சார்பிலும், உங்கள் சார்பிலும் பணிவன்புடன் வேண்டிக்கொண்டும், அப்படி திருவாளர் ராமையா அவர்களின் முயற்சி வெற்றி பெற்றவுடன் வெங்கிடியா அவர்கள் நமக்கு பதில் விருந்தளிப்பார் என்று நம்பிக்கொண்டும், அந்த முயற்சி நிச்சயம் வெற்றி பெறும் என்றும் இதே, இடத்தில், இதே போன்ற ஒரு நிலவில் நாம் திரு வெங்கிடியா அவர்களின் விருந்தினர்களாகக் கூடியசீக்கிரம் கூடுவோம் என்று நம்பிக்கொண்டும் இந்தச் சிற்றுரையை இத்துடன் முடித்துக்கொள்கிறேன்" என்று தேசபக்தர் கிட்டப்பா நன்றி உரையை முடித்து உட்கார்ந்தார். தேசீய கீதத்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

வெங்கிடியாவைச் சிலர் கும்பிட்டும் சிலர் கை குலுக்கியும் சிலர் "நீங்கள் இங்கேயேதான் இருக்கப் போகிறீர்கள்" என்று சொல்லியும் விடைபெற்றுக்கொண்டார்கள். எல்லோரும் போன பிறகு ஒல்லி ராமையா அஜீஸ் ராவுத்தரைக் கூப்பிட்டு ஏதோ பேசிக்கொண்டிருந்தார். ஆற்றங்கரைப் பாதையில் சேர்ந்தே நடந்து வந்தார்கள், மூவரும். தெரு வந்ததும் பிரிந்தார்கள்.

மறுநாள் காலையில் சாமான்களை எல்லாம் பிரித்து முட்டை கட்டினார்கள், வெங்கிடியாவும், அவர் மனைவியும். மாணவர்கள் மூன்று பேர் வந்து கை கொடுத்தார்கள். மூட்டை கட்டி முடியும்போது இருட்டிவிட்டது.

நடுநடுவே பலபேர் வந்து விசாரித்தார்கள். எழுந்து போகும்போது வீட்டைத் தனக்கு வாடகைக்கு விடும்படி வீட்டுக்காரியிடம் சொல்லிவிட்டுப் போகுமாறு நாலு பேர் கேட்டுக் கொண்டார்கள்.

மறுநாள் சாயங்காலம் புறப்பட வேண்டும். விடியற்காலையில் அஜீஸ் ராவுத்தரிடமிருந்து ஒரு ஆள் வந்தான். தம்மை வந்து பார்த்துவிட்டுப் போகும்படி ராவுத்தர் சொல்லியனுப்பியிருந்தார்.

வெங்கிடியாவுக்கு நமநமவென்றது. அவர் யாரையும் போய்ப் பார்க்கிற பழக்கமில்லை. அஜீஸ் ராவுத்தரையும் அவருக்கு அவ்வளவாகப் பழக்கமில்லை.

"என்ன சங்கதி?"

“என்னமோ தெரியலே. உங்களைக் கையோட வந்து பார்க்கச் சொன்னாங்க. நேத்து ரவைக்கு வந்தவுடனேயே உங்களுக்குச் சொல்லியனுப்பலாம்னு நெனச்சாங்களாம். ரொம்ப நேரமாயிடிச்சுன்னு காலமே சொல்லிக்கலாம்னு இருந்தாங்களாம்.”

வெங்கிடியா போனார்.

சாய்வு நாற்காலியில் சட்டத்தில் கால்போட்டு உட்கார்ந்திருந்த ராவுத்தார் காலை மடக்கி, புன்சிரிப்புதானா, இல்லையா என்ற ஒரு சந்தேகப் புன்சிரிப்புடன் “வாங்க” என்றார். “உட்காருங்க” என்றார். பிரசிடெண்டிடம் வெங்கிடியாவின் மாற்றலை ரத்து செய்யும்படி சொல்லிவிட்டாராம் அவர். “ஆடர் உடனே போடச் சொல்லியிருக்கு. எதுக்கும் நீங்க ஒருமுறை அவரைப் பார்த்திட்டு வந்தா நல்லது. சும்மா ஒரு மரியாதைக்கு” என்றார் ராவுத்தர்.

“ம்” என்று இழுத்தார் வெங்கிடியா.

“இன்னிக்கே போய்ப் பார்த்திட்டு வந்திடுங்க.”

இதற்குத்தான் கூப்பாடு. வீட்டுக்கு வந்ததும் சாயங்காலப் பயணத்தை ஒத்திப்போட்டுவிட்டு, பஸ் ஏறி பிரசிடெண்டின் ஊருக்குப் புறப்பட்டார் வெங்கிடியா. இரண்டு பஸ் மாறிப் போய்ச் சேரும்போது மாலை நான்கு மணி ஆகிவிட்டது. பிரசிடெண்ட் தூங்கிக் கொண்டிருந்தார். வாசலும் முன் ஹாலும் நிறைந்து வழிந்தன. கதர்ச் சட்டைகளாக எங்கு பார்த்தாலும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

ஐந்து, ஆறு, ஆயிற்று மணி. பிரசிடெண்ட் எழுந்திருக்கவில்லை. வெளியே போய் ஒரு தோசையும் காப்பியும் சாப்பிட்டுத் திரும்பி வந்தார், வெங்கிடியா.

ஏழரை மணிக்குத்தான் பிரசிடெண்டின் தூக்கம் கலைந்தது. கால்மணி கழித்துப் பேட்டிக்குத் தயாராகிவிட்டார் என்று செய்தி வந்தது.

ஹாலுக்கு அப்பால் ஒரு பெரிய அறை. அங்கிருந்து சிரிப்பும் பேச்சுமாகக் கேட்டுக்கொண்டிருந்தது. வெங்கிடியா சீட்டுக் கொடுத்தனுப்பினார். ஆனால், சீட்டில்லாமலேயே கதர்ச் சட்டைகள் போய்ப்போய் வந்துகொண்டிருந்தார்கள். வெங்கிடியாவுக்குத் தெரிந்த இன்ஷூரன்ஸ் ஏஜண்ட் ஒருவர் சோடாபாட்டில் மூக்குக் கண்ணாடியுடன் வீட்டில் வளர்ந்த பூனை மாதிரி குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண்டிருந்தார். ஹாலில் உட்கார்ந்து பேசினார்; வெளியே

பேசினார், திடீரென்று உள்ளே போவார், வருவார்.

கடைசி பஸ் ஒன்பது மணிக்கு. வெங்கிடியா கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஒல்லியாக ஒருத்தர் உள்ளே போனார். உதவி பிரசிடெண்ட் அவர் என்று அடையாளம் தெரிந்தது வெங்கிடியாவுக்கு. அவர் உள்ளே போனதும் பிரசிடெண்டின் குரல் கேட்டது. "அய்யங்காரே! வாவா எங்கேர்ந்து வரே? சுலோசனா ஊட்லேர்ந்தா?"

"நீங்க ஒண்ணு, மனுஷனுக்கு வேற வேலையே இல்லெ பாருங்கோ."

"ஏன்யா, அவளும் சரஸ்வதியும் சண்டை போட்டுகிட்டு ஸ்கூலையே நாற அடிக்கிறாளுவன்னுதானே, ரண்டுபேரையும் திக்காலுக்கு ஒருத்தியாத் தூக்கிப் போட்டேன். ஒரு மாசம்கூட ஆகலே. அதுக்குள்ளார உனக்குத் தாங்கலே. நான் மெட்ராஸ் போய்த் திரும்பி வரத்துக்குள்ளார, சுலோசனாவைத் திருப்பி மாத்திக்கிட்டியே. அட, எங்கப்பா! என்ன அவசரம்! என்ன ஆத்திரம்! அப்படி என்ன இருக்கு, அவகிட்ட? அவ பல்லும், அவ கண்ணும்!"

"என் கண்ணாலெ பார்த்தான்னா தெரியும்? என்று அய்யங்கார் பதில் சொல்லுகிறார்.

அதைத் தொடர்ந்து உள்ளேயிருக்கிற அத்தனை பேரும் படீர் என்று சிரிப்பது கேட்டது.

இப்படியாக பிரசிடெண்ட் ஆட்சி நடந்துகொண்டிருந்தது. கடைசியில் ஒன்பதரை மணிக்கு, கடைசி பஸ்போய் அரைமணி கழித்து, ஒருவாறாக உள்ளே வரச்சொல்லி வெங்கிடியாவுக்கு உத்தரவு வந்தது.

வெங்கிடியா கூனல் குறுகல் தெரியாதவாறு உடம்பை நிமிர்த்திக் கொண்டு, விறைப்பு என்று தெரியாமல் அடக்கிக்கொண்டும் உள்ளே நுழைந்தார்.

உட்கார இடமில்லை.

பிரசிடெண்ட் நிமிர்ந்து பார்த்தார். சிம்மாசனம் மாதிரி சிங்கார உயர முதுகிட்ட நாற்காலியில் உட்கார்ந்திருந்த பிரசிடெண்ட் அவரைப் பார்த்தார். அவருடைய ஒற்றைக்கல் வைரக் கடுக்கன் நீலமும் மஞ்சளுமாகக் கொட்டிற்று. பெரிய உடம்பு. அதற்கேற்ப, தலை பெரிதில்லை; புன்னைக்கொட்டை மாதிரி இருந்தது.

"யார் நீர்?"

சீட்டைப் பார்க்கவில்லையா, பிரசிடெண்ட்?

“வெங்கிடியா பிள்ளை, அப்பாமங்கலம் ஹைஸ்கூல்லெ – ”

“எங்க வந்தீம்?”

“அஜீஸ் ராவுத்தர் பார்த்திட்டு வரச் சொன்னாங்க.”

“ஓகோ! – நீர்தானா? அந்த எளவெடுத்த ராவுத்தனுக்கு வேலை கிடையாது. ஆடர்ஸ்களை ஒபே பண்றதுக்கு என்ன நீரு? ட்ரான்ஸ்பர் போட்டா போவேண்டியதுதானையா? இது என்ன நவாபு ராஜ்யமா? ஜமீன்தார் ராஜ்யமா? உத்தரவு போட்டா கீழ்ப்படியாம, ப்ரெஷ்ஷர் கொண்டு வறிமே, என்னாத்துக்கு? தொலைச்சுப்புடுவேன் தொலைச்சு! ஐ டஸ் நாட் கேர். பாருங்கய்யா – ஐ புட் ஆன் ஆர்டர். திஸ் மான் ப்ரிங் ப்ரெஷ்ஷர். யூ டஸ் நாட் நோ டிச்சிப்ளின் மான் – வாத்தி இப்படியிருந்தா, பையங்க எப்படி? நோ நோ நோ – ஐ டஸ் நாட் அப்ரூவ் – ஐ டஸ் நாட் கான்சல், வாட் டஸ் யூடு? டஸ் ஸர்ட்டன்லி டிஸ்மிஸ்! இந்தத் தடவை உட்டேன். இன்னமே இப்படி பிரஷ்ஷர் கொண்டு வந்தீமோ, தொலச்சுப்பிடுவேன், தொலச்சு! கோ!”

“தாங்ஸ்.”

“யூ டஸ் நாட் தாங்க் – கோ – டிச்சிப்ளினே போயிரிச்சியா, இந்த வாத்திகளாலெ.”

வெங்கிடியா தலையைக் குனிந்து ஓடி வந்தார். ஒல்லி ராமையா சட்டையைப் பிடித்து இழுப்பதுபோல் ஒரு பிரமை. அஜீஸ் ராவுத்தர் காலைத் தூக்கி தன் தோளில் போடுகிறார்போல் கழுத்தில் ஒரு அழுத்தம். ராவுத்தரிடமோ, ராமையாவிடமோ அவர் மாற்றலை ரத்துச் செய்யச் சொல்லி எப்போது கேட்டார்? “எப்போதாவது அசதி மறதியாகக் கேட்டுவிட்டேனா?”

அவர் பங்களாவை விட்டு வெளியே வரும்போது முந்தானை காற்றில் ஜிலுஜிலுக்க, தாங்கமுடியாத வெட்கப் புன்னகையுடன் ஒரு பெண்மணி கேட்டில் நுழைந்து அவரைக் கடந்து போனாள். சுலோசனாவா, சரஸ்வதியா?

“மாற்றல் நான் கேட்கவில்லையே.”

பிரசிடெண்டின் ஊரிலிருந்து இனிமேல் பஸ் கிடையாது. இனிமேல் காலை ஆறு மணிக்குத்தான் முதல் பஸ். எங்கே படுப்பது?

சாப்பிட்டுவிட்டுப் படுத்தால்தானே கிடைகொள்ளும்? எங்கே சாப்பிடுவது?

மணி பத்து. ஊர் அடங்கிக் கிடந்தது. இதற்கிடையே அவருக்கு பிரசிடெண்டின் ஆங்கிலமும் ஞாபகம் வந்தது. “ஐ டஸ் நாட் அப்ரூவ்!” அவர் ஆங்கிலத்தில் “நான் போகமாட்டான்; நீ போகமாட்டான்; அவர்கள் போகமாட்டான்.” ஒருமை உதவி வினை ஒன்றைத் தவிர பிரசிடெண்டு வேறு எதையும் ஒப்புக்கொள்ளவில்லை.

ஒரு கடை மூடுவதுபோலிருக்கிறது. வேகமாக ஓடினார். மிச்சமிருந்த மூன்று பஜ்ஜிகளையும் ஒரு டீயையும் சாப்பிட்டுவிட்டு பஸ் ஸ்டாண்டிலேயே படுத்துக்கொண்டார். பிரசிடெண்டின் ஆங்கிலத்தோடு, அவருடைய உத்தரவும் ஞாபகம் வந்தது. இந்தத் தடவை மாற்றலை ரத்து செய்துவிட்டார். இனிமேல் ப்ரெஷர் கொண்டுவந்தால்தான் டிஸ்மிஸ் செய்வார். இந்தத் தடவை மாற்றல் ரத்துதான்.

பதில் மரியாதை செய்ய வேண்டும். அறுபது பேருக்கு சர்க்கரைப் பொங்கல், வெண் பொங்கள், கூட்டாஞ் சோறு . . . எத்தனை ரூபாய்!

அந்தக் கலவரம்தான், இப்பொழுது பசியைக் கிளப்பிவிட்டது. வெற்றிலை போட்டுக்கொண்டார். பசி சற்று அடங்கிற்று.

பிரயாணிக் கொட்டகையின் சிமண்டுப் பலகையில் கைகளைக் கோத்து தலைக்குப்பின் வைத்துப் படுத்தார் வெங்கிடியா. தூக்கம் வரவில்லை. பிரசிடெண்ட் தன் ஆசைநாயகி சரஸ்வதிக்கும், உதவி பிரசிடெண்ட் தன் ஆசைநாயகி சுலோசனாவிற்கும் தன்னைப்பற்றிக் கதை சொல்லிச் சிரிப்பது போலிருந்தது.

துக்கம் வரத்தான் இல்லை. “ஐ டஸ் நாட் கெட் ஸ்லீப்” என்று வெகுநேரம் ஜபம் செய்த பிறகுதான் கண்ணை அயர்த்திற்று.

சுதேசமித்திரன் தீபாவளி மலர், 1966

# வெயில்

பட்ட மரமாக நின்றார் அவர். இளஇளவென்று இலையும் தளிரும் மலருமாகப் பூத்துநின்ற மரமில்லை அது இப்போது. இலை, தளிர், மலர் எல்லாம் மறைந்துவிட்டன. இடிவிழுந்த மரம்போல் உள்ளம் கூடோடிவிட்டது. புறத்தையும் துயரம் கறையான்போல் சாரி வைத்துத் தின்றுகொண்டிருக்கிறது. பலமாக ஒரு காற்று வீசினால் போதும். மளமளவென்று மரம் சாய்ந்துவிடும்.

"அப்பா, போயிட்டு வரேம்பா" என்று பெண் சொல்லிக்கொண்டாள். தைரியமா இருங்கோப்பா. நீங்களே மனசு ஆடிப்போய்ட்டா எங்களுக்கு யாரு தைரியம் சொல்லுவா? . . . " என்று வாசலில் நின்ற வண்டியைப் பார்த்துக் கொண்டே சொன்னாள் அவள்.

வெங்கு உதட்டைக் கடித்து அடக்கிக்கொண்டார்.

"போன தடவை வந்தபோது இங்கதான் நின்னுண்டு 'போயிட்டு வரியாம்மா'ன்னு அம்மா எனக்கு விபூதியிட்டு விட்டா. 'கண்ணு, பாட்டிக்கு ஒரு முத்தா கொடு'ன்னு இதை இழுத்து வச்சு ஒரு முத்தம் குடுத்தா. திடீர்னு இப்படி உங்ககிட்ட மாத்திரம் சொல்லிண்டு ஊருக்குப் புறப்படணும்னு நான் நினைக்கவேயில்லை" என்று அவள் சொல்லும் போது தொண்டையை அடைத்துக்கொண்டது.

தைரியம் சொல்ல வருகிறவர்களின் வழக்கம் இது. அதுவும் வயிற்றில் பிறந்த பெண்.

"இன்னும் எட்டு நிமிஷம்தான் இருக்கு" என்றான் கணவன், பொறுமையின் எல்லையைத் தொட்ட குரலில்.

"வரேம்பா."

ஒரு தலையசைப்பு.

"அண்ணா, அப்பாவை ஜாக்ரதையாப் பார்த்துக்கோ— மன்னி, நீதான் அப்பாவைப் பார்த்துக்கணும். அண்ணா காலமே போயிட்டு ராத்திரிதான் ஆபீஸிலேர்ந்து வரான். உனக்குத்தான் பொறுப்பு ஜாஸ்தி. வரட்டுமா?"

"அப்ப நான் வரேன்" என்று முள்மேல் நிற்கிறது போல் நின்று

கொண்டிருந்த மாப்பிள்ளையும் விடைபெற்றுக் கொண்டான்.

“தாத்தா, மாமா, மாமி, சின்ன அண்ணா எல்லாருக்கும் போயித்து வரேன்” என்று குழந்தை சொல்லிக்கொண்டது. அக்காவை ரயில் ஏற்றிவிட, தம்பியும் வண்டியில் ஏறிக்கொண்டான்.

அப்படியே திண்ணையில் உட்கார்ந்து தூணில் சாய்ந்துகொண்டார் வெங்கு.

குறட்டுச் சார்ப்புக்கு முட்டாக நின்ற மூங்கில்பக்கம் அவர் பார்வை சென்றது. பெண் புக்ககம் போகும் ஒவ்வொரு தடவையும் அந்தச் சார்பில் தலையிடித்துவிடாமல் குனிந்து நின்று சிரித்துக்கொண்டே வண்டி முக்குத் திரும்புகிற வரையில் விடை கொடுத்துக்கொண்டேயிருப்பாள் அவள். அவள் குனிந்துதான் நிற்கவேண்டும். சார்ப்பு சற்றுத் தாழ்வாகத்தான் இருந்தது. ஆகவே அவளும் புருஷர்கள் மாதிரி குனிந்துகொள்ளத்தான் வேண்டும். நல்ல உயரம் அவள். வெடவெடவென்று அந்த வயதிலும் கொடி மாதிரிதான் இருந்தாள். ஐம்பது வருஷத்துக்கு முன்னால் அவள் இந்தக் குறடை மிதித்த போதிருந்த அதே வெடவெடப்புத்தான் போன மாசம்வரையில், அவள் கண்ணை மூடுகிற வரையில் இருந்தது. அனாவசியமான இடங்களில் வயசு சதை வைக்கவில்லை. ஆனால் வயதுக்கு ஏதாவது பதில் சொல்லித்தானே ஆகவேண்டும்? தலைமயிர் தங்க நிறமாக மாறிற்று. பொதுவாக நரை என்றுதான் அதற்குப் பெயர். ஆனால் அவளைப்பற்றிய வரையில் நரையென்றா அதைச் சொல்ல முடியும்? வெள்ளையாகப் பூக்கவில்லை அவள் தலை. பழுத்து வெளிர் மஞ்சளிட்ட பூவரசிலை போல் மாறிவிட்டது. அதையும் அவள் உதாசீனம் செய்துவிடுவதில்லை; எண்ணெய் தடவி இழையச் சீவி முடிந்துகொண்டிருப்பாள். உடல் கொஞ்சம் சுருக்கம் கண்டிருந்தது. இன்னொரு இருபது வயதுச் சுருக்கம். அவ்வளவுதான். அவளுக்கு அறுபத்தைந்து வயதென்று பிறந்த தேதி தெரிந்தவர்கள் சொன்னால்தான் உண்டு.

“அடாடா!”

“என்ன?”

“குழந்தை சட்டை முத்தத்துக் கொடியிலே தொங்கறதே . . . வண்டி ரொம்ப தூரம் போயிருக்குமோ? போய்க் கொடுத்துட்டு வர முடியுமோ?” என்று பறந்தாள் அவள்.

“வெயில் மண்டையைப் பிளக்கிறதே.”

“பரவாயில்லை, நான் ஓட்டமா ஓடிக் கொடுத்துட்டு வந்துடறேன்” என்று சொல்லிவிட்டு உள்ளே ஓடிப்போய் முற்றத்துக் கயிற்றுக் கொடியில் சுருங்கிச் சுருணையா விறைத்துத் தொங்கிக்கொண்டிருந்த பாப்பாச் சட்டையை உருவிக் கொண்டு வாசலில் நடையும் ஓட்டமுமாக, காது ஓலை ஆட ஆட அவள் வண்டியைப் பிடிக்க ஓடினது –

சற்று அசப்பில் பின்னாலிருந்து பார்த்தால் அவளை யாரும் முப்பது வயதுக்கு மேல் மதிக்க முடியுமோ? என்ன உயரம்? என்ன மென்மை? நடையில் எவ்வளவு லாகவம்! ஒரு கூனல், வளைவு! ம்ஹ்ம்.

உடம்பில் ஒரு சீக்கு, நோய் நொடி, ஒரு வலி என்று இரண்டு நாளாவது படுத்திருந்தாளா? ஒரு அவுன்ஸ்தான் மருந்து வாங்கிக்கொடுத்து நாமும் செய்தோம் என்ற திருப்திக்காவது, ஆறுதலுக்காவது இடம் வைத்தாளா? காலையில் குளித்துவிட்டு வந்து பூஜை அலமாரியிலிருந்து கண்ணாடிச் சம்புடத்தை எடுத்து, குங்குமத்தை எடுத்து ஒரு பொட்டு வைத்துக்கொண்டு . . . அப்பா, ராமா என்று ஒரு சத்தம்! . . .

வெயில் அலை ஓடிக்கொண்டிருந்தது. தீ மிதிக்கிறது போல் இந்த வெயிலில் நடந்துபோய்ச் சட்டையைக் கொடுக்கப் போகிறாளா? அட அசடு, சட்டை ஓடியா போய்விடும்? குழந்தையும் பெண்ணும்தான் ஓடிவிடப் போகிறார்களா! வண்டி எவ்வளவு தூரம் போய்விட்டதோ, காளி வண்டி ஓட்டிக்கொண்டு போகிறான். அந்த வண்டியைப் போயா இவள் பிடிக்கப் போகிறாள்? வழியில் ஒதுங்கக்கூட நிழல் இல்லை. ஸ்டேஷன் முக்கால் மைல் இருக்கிறது. அப்படிப் பாதி வழியிலேயே இவள் வண்டியைப் பிடித்துவிடுகிறது என்றால்கூட ஸ்டேஷனுக்குப் போகிற தெருவெல்லாம் ஹோஹோவென்று அகலம். கம்பிக்கரை போட்டாற் போல ஓரமாக ஒரு சாரியில் ஒரு கோடு நிழல் விழுந்திருக்கும். ஒரு திருப்பத்தைத் தவிர அவ்வளவும் கிழக்கு மேற்குத் தெரு, எப்படிப் போகப்போகிறாள்?

நினைக்கும்போதே கால் சுடுகிறது. “சற்று யோசித்துவிட்டுப் போகக்கூடாது? . . . அப்படி என்ன அவசரம்? இந்தச் செருப்பைத்தான் போட்டுக் கொண்டு போகக்கூடாதா? . . . போதும் . . . போதும் . . . செருப்பை மாட்டிக்கொண்டு அவள் நடக்கிற நடை தெரியாதா? . . . ”

கிழவருக்குப் பழைய துடிப்பு ஒன்று ஞாபகம் வந்தது. எட்டு வருஷம் ஆயிற்று. காசிக்குப் போயிருந்தார்கள் கிழவரும் அவளும். கூட,

பிள்ளையும் வந்திருந்தான். காசிக்கு அக்கரையில் ராம்நகரோ, ராம்பூரோ – பெயர் சரியாக ஞாபகமில்லை – ஒரு ஊர். பழைய காசி ராஜன் வம்சமாம். அங்கு அரண்மனை பார்ப்பதற்காக ஒரு படகை அமர்த்தி, பிள்ளை அழைத்துக்கொண்டு போனான். திரும்பி வரும்போது மணி பதினொன்று. சோழ தேசத்து வெயிலில்லை அது; இரவு இரண்டு மணிக்கு கங்கை நீர் மேலேயே படுத்திருந்தால் தேவலை போலிருக்கும். தாபம் தாங்காமல் நடுநிசியில் போய் கங்கையில் திளைத்துவிட்டு வந்திருக்கிறார் கிழவர் ஒரு தடவை. பகல் பதினோரு மணி என்றால் கேட்கவா வேண்டும்? தெருவெல்லாம் பற்றி எரிந்தது. ஆனால் திரும்பி வந்து படகில் ஏறும்போது – கரை ஏகப்பட்ட உயரம். நாற்பது ஐம்பது அடி சரிவில் இறங்கி ஓரிடத்தில் ஏறவேண்டும். சரிவில் கங்கையின் பொடி மணல் வெள்ளை வெளேரென்று வைரப் பொடியை இறைத்தாற் போல ஜ்வலித்துக் கொண்டிருந்தது. பாறைக்காகக் காலை வைத்ததும் ஐயோ ஐயோ என்று துடித்துப் போய்விட்டாள் அவள். பையன் தன் செருப்பைத் தன் தாயாரிடம் கொடுத்து மேல் துண்டை எடுத்துத் தன் காலில் சுற்றிக்கொண்டான். அவள் கால் போக செருப்பு ஒன்றரை அங்குலம் பின்னால் நீட்டிக்கொண்டிருந்தது. குழந்தை மாதிரி நடந்தாள் அவள். விழுந்துவிடுவாள் போலிருந்தது. பையன் பிடித்துக்கொண்டான். இரண்டடி எடுத்துவைத்து, மூன்றாவது அடிக்குக் காலைத் தூக்கியதும் வலது செருப்புக் கழன்றுவிட்டது. அவ்வளவுதான். குதிக்க ஆரம்பித்துவிட்டாள். தீ அடியைப் பொசுக்கிற்று. சட்டென்று அவளை அப்படியே தூக்கிக்கொண்டு சரிவில் இறங்கி ஓடத்தில் கொண்டு வைத்தான் தாயாரை. கிழவருக்கு உயிர் வந்தது. கழன்ற செருப்பை எடுத்துக்கொண்டு மெதுவாக இறங்கி வந்தார், வலது அடியில் எரிச்சலடங்க அவளுக்கு ஒரு நாள் ஆயிற்று.

அப்படிக் காசி வெயில் இல்லை இங்கு. இருந்தாலும் தெருவெல்லாம் உப்புமண். பச்சு பச்சென்று உள்ளங்காலை நக்கும்.

வண்டியைப் போய் இவள் பிடிக்கப் போகிறாளாம்! வெங்கு எழுந்து நடைமாடத்திலிருந்த செருப்பை மாட்டிக்கொண்டார். நடைப்பரணிலிருந்த தாழங்குடையை எடுத்துக்கொண்டு கிளம்பினார்.

தெரு முக்குத் திரும்பியதும் கண்ணை இடுக்கிப் பார்த்தார். அவளைக் காணவில்லை.

“நல்ல பொம்மனாட்டி” என்று அலுத்துக்கொண்டே நடையை எட்டிப்போட்டார் அவர். எவ்வளவுதான் எட்டிப்போட முடியும்? வயது

எழுபத்திரண்டு.

பிள்ளையார் கோயில் போவதற்குள் அவருக்கு வேர்த்துவிடத் தொடங்கிவிட்டது.

கடைசியில் முக்கால் கிணறு தாண்டின கதையாகிவிட்டது. பள்ளிக்கூடத்து வாசல் போனதும், களைத்துக் களைத்து வந்தது. வெற்றிலைக் கடைக்காரனிடம் அனுமதி கேட்டுக்கொண்டு அந்த மொட்டை ஸ்டூலில் துவண்டு போய் உட்கார்ந்துவிட்டார்.

"அப்பாடா!"

"எங்கே சாமி இந்த வெயில்லெ புறப்பட்டீங்க?" என்று பரிவும் "இந்தக் கிழங்களுக்கு வேலையில்லை" என்கிற சலிப்பும் கலந்த குரலில் கேட்டான் கடைக்காரன்.

விஷயத்தைச் சொன்னார் அவர் "சட்டையைக் குடுக்கறதுக்காக ஓடியிருக்காங்களா? அதுக்கு நீங்க ஓடி வந்திங்களாக்கும். முழுக்கப் போக முடியும்னு தைரியம் இருந்தாப் புறப்படலாம், இப்படி வெயில்லெ கிளம்புற வயசா உங்களுக்கு? அவங்களும் ஓடினாங்க, பாத்தேன். நல்ல கூத்துத்தான் போங்க . . . ஸ்டேசன்லே போய்த்தான் வண்டியைப் புடிச்சிருக்கணும் . . . சரி, வந்திருவாங்க . . . ஒரு இளநி சாப்பிடறீங்களா?" என்று கடைக்காரன் கேட்டான்.

"இளநியா! பார்த்தாலே தொண்டையைக் கட்டிக்கும். பச்சைத் தண்ணி சாப்பிட்டு இருபது வருஷம் அயிட்டுதுடாப்பா. இளநியாவது கிழநியாவுது?"

"அப்படிப் பச்சைத் தண்ணிக்குப் பயப்படறவங்க, எப்படி இந்த வெயில்லெ கிளம்பினீங்க?"

"யோசனையில்லாததுதான்" என்று வாதத்தை முடிக்கப் பார்த்தார் கிழவர்.

"நல்லாப் புறப்பட்டீங்க! அப்படித்தான் குடுத்து என்ன ஆகணும் இப்ப? அந்தச் சட்டை இருந்துட்டுப் போவுது. அடுத்த தடவை குழந்தை வராமியா போகப் போவுது. அந்தச் சட்டை இருந்துட்டுப் போவுது. அந்தச் சட்டையைப் பார்த்துக்கிட்டாவது புள்ளை ஞாபகம் இருக்குமில்ல?"

"அட, எனக்குத் தோணவே இல்லையே" என்று கிழவர் சிரித்தார்.

“நீ ரொம்ப விஷயம் தெரிஞ்சவனாயிருக்கியே!”

“இங்கே எங்கே வந்தது?” என்று குரல் கேட்டுத் திரும்பினார் அவர். அவள்தான். நெற்றியும் மூக்கும் மூக்கின் கீழும் வேர்த்து வழிய, கடையின் சார்ப்பு நிழலில் வந்து நின்றாள்.

“என்ன! குடுத்திட்டியா?”

“குடுத்தாச்சு.”

“எங்கே புடிச்சே?”

“டாக்டர் வீடு தாண்டிப் போயிட்டுது வண்டி. சட்டையைக் காமிச்சு ஆட்டிண்டே போனேன். குழந்தை பார்த்துட்டு பாட்டி பாட்டின்னாளாம். இதுக்காக இந்த வெயில்லே ஓடி வரணுமான்னார் மாப்பிள்ளை.”

“பார்த்தீங்களா?” என்றான் கடைக்காரன்.

“கடைக்காரர் என்ன சொல்றார் தெரியுமோ? அட. அசடே, இந்த வெயில்லே போய் சட்டையைக் குடுக்கப் போனியே, சட்டை ஓடியா போயிடும்! அதைப் பார்த்திண்டாவது குழந்தை ஞாபகமாயிருக்கலாமோல்லியோன்னு கேட்கறார்.”

“எனக்கும் புறப்படறபோது தோணத்தான் இல்லை. ஆனால் பிள்ளையார் கோயில் முக்குத் திரும்பியதும் திரும்பிவிடலாம்னு தோணித்து. சட்டையைப் பார்த்தா குழந்தை ஞாபகமாவது வரும்னு நெனச்சேன். அப்புறம் வந்ததுதான் வந்தாச்சு. கடைசியா குழந்தையை ஒரு தடவை பார்க்கலாமோல்லியோன்னுதான் ஓடினேன். பார்த்தாச்சு, வெயில்லே நடந்தா செத்தா போயிடப் போறோம்?”

சற்றுக் கழித்து அங்கேயே வந்த வண்டி ஒன்றில் ஏறிக்கொண்டு இருவரும் வீட்டுக்கு வந்தார்கள். வண்டியில் ஏறிக்கொண்டதும், “இந்தா, மூஞ்சியைத் துடைச்சுக்கோ” என்று மேல் துண்டைக் கொடுத்தார் அவர்.

“ரொம்ப அழகாத்தான் இருக்கு.”

சொல்லுக்கும் முகத்துக்கும் சம்பந்தமேயில்லை. அவள் முகம் பெருமையிலும் நிறைவிலும் பூரித்து வழிந்தது.

வண்டியைவிட்டு இறங்கினதும் “அப்பாடா” என்று திண்ணையில் உட்கார்ந்துகொண்டார் வெங்கு.

“போய்க் கொஞ்சம், வெந்நீர் கொண்டு வரேன்” என்று சொல்லிக் கொண்டே போனாள் அவள். வெடவெடவென்று விறைப்பாக அந்த அறுபத்து ஐந்து வயது உள்ளே ஓடும் ஆசையையும் நடுங்கும் காதோலையையும் கண்ணால் பருகினார் வெங்கு.

“ஏய், கொஞ்சம் சக்கரையைப் போட்டுண்டுவா வெந்நீரிலெ” என்று குரல் கொடுத்தார்.

வெங்குவுக்குச் சற்றுத் தூக்கிப் போட்டது.

“தாத்தா, எதிலெ சக்கரை போட்டுண்டு வரது? காபியிலியா, வெந்நீர்லியான்னு கேக்கறா அம்மா” என்று ஒரு குரல் கேட்டது.

‘வெக்கி’ப் போய்த் திரும்பிப் பார்த்தார் அவர்.

சின்ன அண்ணாவின் குரல் அது. நாலு வயது “சின்ன அண்ணா” பிள்ளை வயிற்றுப் பேரன்.

கருகருவென்று பட்டு அரைஞாணுடன் சின்ன அண்ணா அருகே வந்தான்.

வெந்நீர் கேட்டால் அவள் சர்க்கரை போட்டுத்தான் கொண்டு வருவாள். அதுவும் பொங்கப் பொங்க வரும். கை பொறுக்காத சூடாக வரும். மோரும் சர்க்கரையுடன் தான் வரும்.

வெயிலில்கூட அவள் நினைவு சர்க்கரை இட்டிருக்கிறது. என்ன உயரம்! என்ன வெடவெடப்பு! இத்தனை வயதுக்கு எவ்வளவு சிறிய இடை!

“சொல்லு தாத்தா” என்று முதுகை உலுக்கிற்று கை.

“ம் . . . என்ன?” என்று நனவுக்கு மீண்டார் அவர்.

“ஏன் தாத்தா, வெந்நீர்லியா, காப்பியிலியா? . . . சொல்லு தாத்தா” என்று சிரித்தான்.

குழந்தைச் சிரிப்புத்தான். மோகனச் சிரிப்புதான். ஆனால் அவருக்கு ஏமாற்றமாகத்தான் இருந்தது.

கலாவல்லி, பிப்ரவரி 1955

# மாடியும் தாடியும்

இரும்பு ‘கேட்’டின் பானாக் கொக்கியைத் தூக்கித் திறந்து யாரோ உள்ளே வருகிறார்கள். ஒரு வயதானவர். நரைத்த தலை. கிராப்பு. அதிலும் நடுவில் வழுக்கை. இரட்டை நாடி தேகம்தான். வயசானதால் இரட்டை நாடி ஊளைச் சதைமாதிரி தோன்றுகிறது. நெற்றியில் விபூதி. அதன் நடுவில் குங்குமம். அரைக்கை ஸ்லாக்கு. கீழே ‘பளீர்’ என்று வெள்ளைத் தட்டுச் சுற்று. இரண்டுமே வண்ணான் மடிதான்.

மறுபடியும் கேட்டைச் சாத்திப் பானாக் கொக்கியைத் தள்ளுகிறார் அவர். கூடவந்த இருவரும் பின்தொடர உள்வாசலை நோக்கி வருகிற அம்மாள், பட்டுப் புடவையுடன் ஸ்நானம் செய்து கூந்தலைப் பிடரியில் புரளத் தளர முடிந்திருக்கிறாள். பாதி நரை, பாதி கறுப்பு. அதுவும் ஓர் அழகுதான். கூட வருகிறான் ஒரு பையன். அம்மாள் மாதிரிதான் முகச் சாயல். தலையை ஒட்ட வெட்டின கிராப்பு. அவர் மாதிரியே நெற்றியில் விபூதி. நடுவில் குங்குமம். இருபது வயதிருக்கும். ஆனால் வயதுக்கேற்ற பாந்தமில்லை. நடை உடையில், வேட்டியை என்னமோ கோணலும் மாணலுமாகக் கட்டியிருக்கிறான். கல்லூரிப் பையனோ என்னவோ: வேட்டி கட்டிப் பழக்கமிராது.

மூன்று பேரும் உள் வாசல் சார்ப்பில் மறைந்து விட்டார்கள். யார் இது? தெரிந்த முகங்கள் இல்லை. ஒருவேளை விசாலத்துக்குப் பழக்கமாயிருக்கும்.

சரி, யாராகவாவது இருக்கட்டும். ஆபீஸுக்குப் போகும் போது நளினி சொல்லிவிட்டுத்தான் போவாள்.

தலைகள் மறையவே, சாமா தோட்டத்துச் செடிகளின் தலைகளைப் பார்த்தார். அவர் மாடி ஜன்னல் வழியாக உலகத்தைப் பார்ப்பது ஒரு தனி அனுபவம்தான். பட்டும் படாமலும் இருக்கலாம். மரத்தின் தலைகளைப் பார்க்கலாம். மனிதர்களின் தலைகளைப் பார்க்கலாம்.

சாமா தாடியை உள் பக்கமாக விரலை விட்டுக் கோதினார். மாடியும் தாடியும்! எவ்வளவு பொருத்தமான பிராஸம்! மாடி வீடு கட்டி அதில் வந்து உலாவும் நேரம் வந்துவிட்டது. தாடி வைத்துக்கொண்டு அதைக் கோதவும் நேரம் கிடைத்துவிட்டது. மோர் சாதத்துக்கு ஊறுகாய் தொட்டுக்

கொள்வது போல, சிந்தனை செய்யும்போது தொட்டுக்கொள்ள ஒரு தாடி எவ்வளவு வாகாக இருக்கிறது!

ஆமாம். சிந்தனை செய்வதைத் தவிர வேறு ஒன்றுமே இப்பொழுது செய்ய முடியவில்லை. முன்பெல்லாம் போல் ஓடியாட முடியவில்லை. ஒரு தடவை கீழே இறங்கிப் போய் வந்தால் இரைக்கிறது. மூச்சு வாங்குகிறது. உலாவ என்று இரண்டு தெரு நடந்தாலே முழங்காலுக்குக் கீழே துணியாகத் துவள்கிறது. கீழ் முதுகு 'பளிச் பளிச்'சென்கிறது. ரத்த அமுக்கம் கிச்சு கிச்சு மூட்டுகிறது. பேசினால்கூடப் படபடக்கிறது. அதைத் தெரிந்துகொண்டுதானோ என்னவோ அவர் பேசுவதை நாள் கணக்கில் மணிக் கணக்கில் வீட்டுக்குப் போகும் பிரக்ஞையே இல்லாமல் கேட்டுக்கொண்டிருந்த நண்பர்கள்கூட ஒதுங்கி நிற்கிறார்கள். ஏன், விசாலமே மாடிப் பக்கம் வருவது நின்றுவிட்டது. அவளாவது போனால் போகட்டும். அவளுக்கும் வயது, இரைப்பு, கால் வலி. நளினியாவது பேச வரலாம். அவளும் வேலை வேலை என்று பறக்கிறாள். தோட்டம், அடுக்களை, அப்புறம் ஆபீசு என்று பறக்கிறாள். காப்பி, டிபன் கொண்டு வரும்பொழுது தவிர மாடிப்பக்கம் எட்டிக்கூடப் பார்ப்பதில்லை. எத்தனை படித்தாலும் மேலே வர, பெண்களுக்குத் தோன்றாது போலிருக்கிறது.

"அப்பா!"

நளினி மாடிப்படி ஏறிவந்து கூப்பிட்டாள்.

"என்ன?"

"யாரோ உன்னைப் பார்க்கணுமாம். வந்திருக்காப்பா."

"யாராம்?"

"யாருன்னு கேட்டேன். அவரைப் பார்க்கணும்னு வந்திருக்கோம்னு சொன்னா."

"வரச் சொல்லு. வரச் சொல்லு."

நம்மையும் பார்க்க வரத் தோன்றுகிறதா? இன்றைக்கு என்ன பெரிய அதிர்ஷ்டமாக இருக்கிறது!

நளினி கீழே போய்விட்டாள்.

யார் இவர்கள்! பார்த்த முகங்களே இல்லை. இல்லை, நமக்குத்தான் ஞாபக மறதி என்ற புது வியாதி வந்திருக்கிறதா? வயசானால் வியாதிகள்

வந்து உட்கார்ந்த பிறகுதானே தெரிகிறது – அயலான் நிலத்தில் இரவோடு இரவாகக் குடிசை போடுகிறவர்களைப்போல். ஒரு சமயம் இவர்களைப் பார்த்திருக்கிறோமோ! இல்லையே . . . எப்படியிருந்தால் என்ன? நண்பர்கள் தான் வரவில்லை – இவர்கள்தான் வரட்டுமே!

"நமஸ்காரம்."

"நமஸ்காரம்."

நமஸ்காரம் என்று சொன்னது போதாதா? கீழே விழுந்து நாலு தடவை சேவித்தார் வந்தவர். அம்மாளும் சேவித்தாள். பையன் மட்டும் சாமாவையும், அவர் தாடியையும் பார்த்து இலேசாகப் புன்னகை செய்துகொண்டு நின்றான்.

"அடாடா" என்று கூசிக் குறுகினார் சாமா. "இதெல்லாம் எதுக்காக?"

எழுந்துகொண்ட பெரியவர், "நன்னாயிருக்கே நீங்கள் சொல்றது. பெரியவாளைப் பார்த்தோடனே நமஸ்காரம் பண்ணண்டாமோ! கிடைக்கணுமே . . . ஏய், குமார், என்னடா சிரிச்சுண்டே நிக்கறாய்! நமஸ்காரம் பண்ணுடா."

"பராவால்லே" என்று பதறினார் சாமா.

"கிடைக்கணுமே. போது விடிஞ்சா பாபங்கள் செய்துண்டே இருக்கோம். ஒருதடவையாவது நல்ல காரியம் செய்யணும்னு தோணண்டாமோ" என்றார் பெரியவர்.

பையன் குப்புற விழுந்து நமஸ்காரம் செய்தான்.

சாமா மறுபடியும் கூசிக் குறுகினார். பையன் அவருக்கு நமஸ்காரம் செய்வதை மிகவும் அனுபவித்தே செய்தான். நாலோடு நிறுத்தவில்லை. ஆறு, ஏழு, பத்தாகிவிட்டது.

"போரும்டா, குழந்தே, போரும்" என்று அவனைத் தூக்கி நிறுத்த வேண்டும் போலிருந்தது சாமாவுக்கு. பையன் விடவில்லை.

"பண்ணட்டுமே. அத்தனைக்கத்தனை சிரேயஸுண்டே! குமார், போரும். எழுந்துக்கோ" என்று அப்பா சொன்னதும்தான் எழுந்திருந்தான் அவன். உள்ளங்கைகளைத் தட்டிவிட்டு அவரைப் பார்த்து மறுபடியும் புன்னகை செய்தான்.

"உட்காருங்கோ" என்று நாற்காலிகளைக் காட்டினார் சாமா.

“இப்படித்தானே இருக்கோம்” என்று கீழே உட்கார்ந்துவிட்டார் வந்தவர்.

“அடாடா” என்று மீண்டும் கூனிக் குறுகி நாற்காலிகளைக் காட்டினார் சாமா. பயனில்லை. மூன்றுபேரும் கீழே உட்கார்ந்துவிட்டார்கள். ஆனால் சாமா! அவருக்குக் கீழே உட்கார்ந்து பழக்கமில்லையே. அவர்களுக்காகக் கீழே உட்கார்ந்தால் காலை மடக்க வேண்டும். எழுந்துகொள்ளும்போது அதைப் பிரிக்க வேண்டும். என்ன ஆகுமோ! டர்பண்டைன், பின்ட தைலம் . . . எனவே வழக்கம்போல் தம் கட்டில் மீது உட்கார்ந்துவிட்டார். தாழ்வான மரக்கட்டில் அது. மேலே நுரை மெத்தை போட்டு, அதன் மீது ஒரு கதர் விரிப்பும், அதற்கு மேல் ஒரு புலித் தோலும் போட்டிருந்தன. நளினி போன வருஷம் டில்லிக்குப் போனபோது ஹரித்துவாரம் போனாளாம். அப்பாவுக்கு இருக்கட்டும் என்று வாங்கி வந்தாளாம் இந்தப் புலித் தோலை. ஆன மட்டும் வேண்டாம் என்று உள்ளே சுருட்டி வைக்கப் பார்த்தார். நடக்கவில்லை. ஆனால் இப்பொழுதெல்லாம் அதில்லாமல் கட்டில் மீது உட்காருவது போலவே இல்லை. புலிக்குத் தான் என்ன வழவழப்பு! என்ன மென்மை! தாடி, புலித்தோல் – என்ன இது! அவருக்கே சிரிப்பு வந்தது. வாய்க்கு வராமல் அடக்கிக் கொண்டார் அதை.

“நாங்கள் கல்கத்தாவிலேருந்து வந்திருக்கோம். வல்லபதாஸோட பாக்டரியிலே நான் எஞ்சினீயரா இருக்கேன். ஒரு மாச லீவிலே வந்தோம். வர்றப்போ எங்க அம்மாஞ்சி சொன்னார் – மெட்ராஸுக்குப் போனா பெரியவாளைப் பாருடான்னு. அட்ரஸ் கொடுத்தார். எங்க அம்மாஞ்சி வி.வி. அய்யர். பிங்பே கம்பெனியிலே . . . ”

“ஆமாமா . . . வி.வி. அய்யரா? – பிங்பே கம்பெனி – வி.வி. அய்யர்– தெரியுமே.”

“அவர் எனக்கு அம்மாஞ்சியாக்கும்.”

“பேஷ் பேஷ் . . . அப்படியா . . . ரொம்ப சந்தோஷம் . . . எனக்கு ரொம்பக் காலமா பழக்கம் அவர்.”

“சொன்னார்.”

“சௌக்கியமா இருக்காரா?”

“சௌக்கியமா இருக்கார். இப்போ அவர்தான் ஜெனரல் மானேஜர். மாசம் பதினாயிரம் சம்பளம் கொடுக்கறான். இன்கம்டாக்ஸையும் அவனே கொடுத்துடறான். ரிடையராகிப் பத்து வருஷமாயிருக்கணம். ஆனால் நீ

போகப் படாதுன்னு அவரை விடமாட்டேங்கறான்.”

சாமாவுக்குத் திகைப்பாகத்தானிருந்தது.

“ம்ம் . . . இருக்கட்டும். முயற்சி இருக்கிற புருஷ சிம்மத்தை லட்சுமி வலிய வலிய வந்து இறுகத் தழுவிக்கத்தான் செய்வா. எத்தனை சக்தி வந்து அவளைப் பிடிச்சு இழுத்தாலும் அவ பிடிச்ச பிடியை விடுவாளோ!”

“லக்ஷத்துலெ ஒரு வார்த்தையாக்கும் . . . பெரியவா எப்படிப் பேசறா பாரு!” என்று மனைவியின் பக்கம் திரும்பினார் வந்தவர்.

“நான் சொல்லல்லே ஸ்வாமி இது. பஞ்சதந்திரக் கதையிலே வரது” என்றார் சாமா.

“வரட்டுமே. பெரியவாளுக்கு அதை ஞாபகமாகச் சொல்லத் தோணறதே, அதை இல்லியா சொல்லணம்!”

வி.வி. அய்யருக்கு மாதம் பதினாயிரம் ரூபாய் சம்பளமாம். வருமான வரியையும் கம்பெனியே கொடுக்கிறதாம். முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் போன எல்லா மெட்ராஸிகளையும் போல வி.வி. அய்யரும் தட்டெழுத்து அடிக்கப் போனவர்தான். அப்பொழுது சாமாவும்தான் கல்கத்தா போனார். ஏதோ நாலு வருடங்கள் ஒரு பத்திரிகையில் வேலை பார்த்தார். நன்றாகத்தான் இருந்தது. நிறைய புத்தகங்கள் எல்லாம் படித்தார். ரங்கூன், மலாயா, ஜப்பான் என்று அந்தப் பத்திரிகை ஆசிரியரோடு ஒரு தடவை சுற்றினார். என்ன செய்தென்ன? காசைக் கண்ணால் பார்க்க முடியவில்லை. இண்டெலெக்சுவல் என்று இறக்கை முளைத்த இலவ விதைபோல ஒரு பட்டம்தான் மிஞ்சிற்று. அறிவாளி, மேதை, சிந்தனையாளர் என்றெல்லாம் மெட்ராசிகள், ஏன், வங்காளிகள்கூட வந்து மொய்த்தார்கள். அவர் பேச்சைக் கேட்க. மேதையின் கூர்மையையும் நுட்பத்தையும் அனுபவிக்க அவர் வீட்டில் வந்து நண்பர்கள் மொய்த்தவண்ணம் இருப்பார்கள். அவர்களில் ஒருவராகத் தட்டெழுத்து வி.வி. அய்யர் வந்ததுதான் வியப்பிலும் வியப்பாயிருந்தது. இப்பொழுது வியப்பாக இல்லை. அந்த மாதிரி குணம் இருந்ததனால்தானே இப்படி அதெ கம்பெனியில் முன்னேறி சர்வமும் வல்ல ஜெனரல் மானேஜராக இருக்கிறார். தட்டெழுத்தராகப் போனது ஒரு சாக்கு. ஏதாவது ஓர் இடத்திலிருந்துதானே புறப்பட்டாக வேண்டும்? அந்த வி.வி. அய்யர் சாமா வீட்டுக்கு எத்தனை தடவை வந்திருக்கிறார்! அவருடைய வாதங்களில் மயங்கியிருக்கிறார்! சாமா வரும்படி பற்றாமல் பத்திரிகைத் தொழிலுக்கு முழுக்குப் போட்டுவிட்டு, வக்கீல் தொழில்

நடத்தப்போகிறேன் என்று சென்னை வந்தபோது, வி.வி. அய்யர் அவரைத் தடுக்கவும் முடியாமல், பேசவும் முடியாமல் தவித்துப்போய்விட்டார். மேதைகள் முரடுகள், சுதந்திர புருஷர்கள்; சொன்னால் கேட்க மாட்டார்கள் என்று பயமாக இருந்திருக்கும். சாமா சென்னையில் வக்கீல் தொழிலும் சரிப்பட்டு வராமல் ஒரு கம்பெனியில் சட்ட ஆலோசகராகச் சேர்ந்து இரண்டாயிரம் ரூபாய் சம்பளத்தையும் ஒரு பத்து வருஷம் பார்த்து, ஒரு வீட்டையும் கட்டி ரிடையரானதுமே அதில் குடியேறி, . . . வி.வி. அய்யருக்கு இதெல்லாம் தெரிந்துதானிருக்கம். ஆனால் பழையவற்றை நினைத்துக்கொண்டிருக்கிறாரே, அதுதான் பெரிய காரியம்.

சாமா வி.வி. அய்யரைப் பற்றி மேலும் விசாரித்தார். வந்தவர் எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னார்.

"அம்மாஞ்சி பெரியவாளைப் பற்றி ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது பேசாமல் இருக்கமாட்டார்."

"இது என்னத்துக்காகப் பெரியவா பெரியவான்னு சொல்லிண்டேயிருக்கேள்? நானும் உங்களைப் போல ஒரு சாதாரண மனுஷன். எனக்கும், சம்சாரம், குழந்தை குட்டிகள்ளாம் இருக்கு உங்களைப் போல"

"இருந்தாக்கா? நீங்க பெரியவாளா இல்லாதைக்கு ஆயிடுவேளா? நீங்க இப்படி அடக்கமாப் பேசறயளே! அதுவே பெரியவா சேயற காரியமாக்கும்."

அவர் பேசும்பொழுது அந்த அம்மாள் பக்தியும், சிரத்தையுமாகச் சாமாவைப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஆனால் அந்தப் பையன் சாமாவைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தான்.

இந்தப் புன்முறுவலின் பொருள் என்னவாக இருக்கும் என்று சாமாவுக்கு நடுநடுவே யோசனை வந்துகொண்டேயிருந்தது. சட்டென்று அவருக்கு ஞாபகம் வந்தது. வந்தவரைப் பற்றி விசாரிக்காமல் வி.வி. அய்யரைப் பற்றியே இத்தனை நேரமும் பேசிக்கொண்டிருந்து விட்டோமே என்று ஒரு பச்சாத்தாபம் தோன்றியது.

"உங்க உத்தியோகம் எல்லாம் சௌகரியமா இருக்கோல்லியோ?"

"ஏதோ பெரியவா ஆசீர்வாதம் . . . சம்பளம்னு மாசம் ஆயிரத்து இருநூறு வரது. ஏழு மாசம் போனஸ் கொடுக்கறான்."

“கிட்டதட்ட ரண்டாயிரம் வரும்.”

“அதெல்லாம் குறைச்சல் வைக்கலெ குருவாயூரப்பன். நாலு பொண்ணு இருக்காள். அவாளையும் நல்ல இடமாப் பார்த்துக் குடுத்தாச்சு. இவனை நெனைச்சுத்தான் கவலை!”

“பையனையா?”

“ஆமாம்.”

“பையன் படிக்கிறானோ இல்லியோ?”

“படிச்சான்.”

“இப்ப படிக்கலியா?”

“மூணு வருஷமாச்சு. புஸ்தகம்னு ஒரு வஸ்துவையே மறந்து போய்ட்டான்.”

“ஏன்?”

“கேளுங்கோளேன் அவனைத் தான்.”

“என்னப்பா?” என்று சாமா அவனைப் பார்த்தார். அவன் பதில் சொல்லவில்லை; அவரைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான்.

“என்ன சிரிக்கிறே? என்னைப் பார்த்தா சிரிக்கணும் போலிருக்கோ?” என்றார் சாமா.

“உங்களைப் பார்த்து மட்டும் இல்லியாக்கும். என்னை ஒரு நாளைக்குப் பார்த்துச் சிரிச்சான், ஒரு கேள்வி கேட்டதுக்கு. அன்னிலேந்து சிரிச்சுண்டே இருக்கான். அப்ப அகண்ட வாய் சுருங்கலையாக்கும்.”

“போறது. எப்பப் பார்த்தாலும் அழாமல் சிரிச்சுண்டே இன்றும் இருக்கிறது நல்லதுதானே?”

“என்ன அப்படிச் சொல்றயள்? ஒரு கேள்வி கேட்டா பதில் சொல்லண்டாமோ? அப்பவும் சிரிச்சுண்டே இருந்தா, நீங்கள் என்ன நெனப்பயள்?”

“நீங்க கேட்ட கேள்விக்கே பதில் சொல்லலே. நான் கேட்டதுக்கு எப்படிப் பதில் வரும்னு நெனச்சுக்கறேன். நான் நெனக்கிறது இருக்கட்டும். நீங்க என்னமோ கேட்டேன்னு சொன்னேளே; என்ன கேட்டேள்!”

“அவனைக் காலேஜிலே சேர்க்கறப்போ நாச்சுரல் சயன்ஸ் எடுத்துக்கோடான்னேன். கணக்குத்தான் எடுத்துப்பேன்னான். எனக்கு வருத்தம். டாக்டருக்குப் படிக்க வைக்கணும்னு நெனச்சேன். எங்க பாக்டரி கம்பெனிக்கெல்லாம் நாலஞ்சு டாக்டர்கள் இருக்காள். ஒவ்வொருத்தருக்கும் ஆயிரம், இரண்டாயிரம் சம்பளம் கொடுக்கறோம். அதிலே ரண்டு பேர் இன்னும் ஏழெட்டு வருஷத்திலே ரிடயராயிடுவாள். அதிலே நுழைஞ்சுனூட்டா நாலு வருஷத்திலே நீ சீனியர் – மோஸ்டா ஆயிடுவாய். அட, இல்லாட்டா கூடி, கெமிஸ்டிரி எடுத்துக்கோ. அப்புறம் ஃபார்மா படிக்க வைக்கறேன். என் மச்சினன் ஜெர்மன் கம்பெனியிலே சீனியர் அட்வைசராய் இருக்கான் பம்பாயிலே. அங்கே அவன் வச்சதுதான் சட்டமாயிருக்கு. நீ பாஸ் பண்ணினா, உனக்கு ஆரம்பமே ஆயிரம் கிடைக்குமாக்கும்னு சொன்னேன்.”

“அதுவும் முடியாது – கணக்குப் படிச்சான், ம். அப்புறம்?” என்றார் சாமா.

“அதுவுமில்லை. இவன் புடிவாதம் புடிச்சானா! நான் நாலு நாள் பேசலை இவனோட. சரி, அப்பா சொல்றபடியே படிக்கிறேன்னு, கெமிஸ்ட்ரி, நாச்சுரல் சயன்ஸ் எடுத்துண்டான்!”

“நல்லதாப் போச்சு, அப்புறம் என்ன?”

“எப்படி நல்லதாப் போகும்! ஒவ்வொரு பரீட்சையிலேயும் இருபது மார்க் முப்பது மார்க்குக்கு மேலே வாங்கறதில்லே. ரண்டு வருஷமாயாச்சு. ஒரு நாளைக்கு எங்கிட்டே வந்தான். ஒன்னாலே தான்ப்பா வந்தது. நான் அப்பவே கணக்கு எடுத்துக்கறேன்னாக்கும் சொன்னேன். நீங்க கேக்கலே. விசுவாமித்திரர் மாதிரி கோவிச்சுனுட்டயேள். அதுக்குப் பயந்தூண்டு நான் கணக்கை விட்டேன். சயன்ஸ் படிச்சேன். அதுதான் எனக்கு மார்க் வரமாட்டேங்கறதூன்னான். எனக்கு ரொம்பக் கோபமா ஆயிடுத்து அதைக் கேட்டதும். ‘ஏண்டா உனக்கு மூளை எங்கே போச்சு? நான் சொன்னா எனக்கு அது வராதுன்னு தாட்சண்யமில்லாமல் சொல்லியிருக்கண்டாமோ? இப்படி ஒரு கோழையாயிருக்காய். அப்பாகிட்ட தைரியமில்லாதவன் எப்படிடா வெளியே போய்ப் பொழைக்கப் போறாய்’னு கேட்டேன். அப்பதான் இப்படிச் சிரிச்சான். அப்பவே தொட்டுச் சிரிக்கறதை நிறுத்தலை. மறுநாள் தொடங்கி காலேஜுக்குப் போகலை. சாப்பிடறான். தூங்கறான். இப்படிச் சிரிக்கறான். ஏண்டா போகலைன்னு லக்ஷம் தரம் கேட்டாச்சு. சொல்றதில்லை. பரீட்சை டயம் வந்தது. போகலை. லீவு முடிஞ்சுது. கணக்கே எடுத்துண்டு படிடா

மறுபடியும்னு கால்லெ விழாத தோஷம் – அப்படிச் சொல்லியாச்சு. அசையணுமே. இப்படிச் சிரிச்சுண்டே இருந்தா, நாளைக்கு லோகம் இல்லையா சிரிக்கும் நம்மளைப் பார்த்து. நாலு வருஷமாயாச்சு. இவளானா மாலை மாலையா தேம்பறாள். பெரியவாளைப் பாருடான்னு அம்மாஞ்சி சொன்னார். நீங்க ஏதாவது வழிகாமிப்பள்ன்னு நெனச்சுண்டு வந்தோம்."

நாம் என்ன வழி காட்ட இருக்கிறது? சாமாவுக்கு ஒன்றும் புரியவில்லை. வி.வி. அய்யரோ நாம் ஏதேனும் விமோசனம் சொல்லப் போகிறோம் என்று அனுப்பியிருக்கிறார். என்னத்தைச் சொல்கிறது? தெரிந்தவரையில் ஏதோ சொன்னார் சாமா. "படிப்பில்லாவிட்டால் முன்னுக்கு வருவது கஷ்டம். இப்பொழுது படிப்பது கஷ்டமாக இருக்கலாம். ஆனால் அதைப் பாராட்டினால் பின்னால் இன்னும் கஷ்டமாயிருக்கும். வயதாகிவிட்டால் படிப்பு ஏறாது. இளமையை விட்டால் ஓடியே போய்விடும். மரம் முற்றிவிடும். ஈட்டிகூட ஏறாது. தகப்பனார் சம்பாதித்து எத்தனை சொத்து வைத்துவிட்டப் போனாலும் தான் சம்பாதித்தால்தான் கௌரவம். இல்லாவிட்டால் ஏளனத்துக்கு இடமாகும். அப்படி தானே சம்பாதிக்க அவசியமில்லாத அளவுக்கு சொத்து வந்தால்கூட, படிப்பு என்ற சொத்துதான் பெரிய சொத்து. அந்தச் செல்வத்தைக் காப்பாற்ற உதவுவது இந்தச் சொத்துத்தான் . . . "

தகப்பனாரும் தாயாரும் ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டனர். சாமா அதையும் கவனித்தவாறே பேசிக்கொண்டிருந்தார்.

"பெரியவா சொல்றதைச் சொல்லுங்கோ. ஆனால் நாங்க ரண்டு பேரும், அவளும் நானும், லக்ஷம் தபா சொல்லியாச்சு. இதெல்லாம் நாங்கள் சொல்ற பாடமில்லையா? பெரியவா சொல்றதைன்னா கேக்கணம்னு வந்தோம்."

"என்ன?"

"போன வருஷம் பெரியவா கல்கத்தா வந்திருந்தப்போ, நான் குடும்பத்தோட லீவிலே ஊருக்குப் போயிருந்தேன். எனக்குப் பார்க்கக் கொடுத்து வைக்கலெ. நீங்கள் வந்து சாமா வீட்டுப் பெண்ணுக்குச் சித்தஸ்வாதீனமாயிருக்குன்னு யந்திரம் வச்சு சக்தியை ஆவாகனம் பண்ணி சண்டி பூஜை பண்ணி இருபத்தோரு நாள் ஹோமமும் பண்ணினியளாமே . . . அந்த மாதிரி ஏதாவது நம்ம பையனுக்கும் சேயணும். அப்படி ஏதாவது பகவான் கண்ணைத் திறந்து பார்க்கும்படி

பெரியவாள் செய்தால்தான் உண்டு.”

சாமாவுக்குப் புலித்தோல் முள்போல் குத்திற்றோ என்னவோ, துள்ளி விழுவதுபோல் எழுந்தார். புருவம் சுருங்கிற்று.

“அடுத்த வீடு, அடுத்த வீடு” என்று கண்ணைச் சுருக்கி, புருவம் சுளித்து, விரலால் ஒதுக்கி அவசரம் அவசரமாகப் படபடத்தார்.

“அப்படீன்னா?”

“அடுத்த வீடு. ஸ்வாமிகிட்டே அதெல்லாம் வாங்கிக் கொடுக்கற பெரியவர் அடுத்த வீடு. நான் இல்லை அது.”

“அப்படியா?”

“ஆமாம். உங்க நேரம் எல்லாம் வீணாப் போயிடுத்து. சட்டுன்னு போங்கோ. அவர் இப்ப பூஜையை முடிக்கிற சமயமாயிருக்கும். அப்புறம் சாப்பிடப் போயிடுவார். அப்புறம் தூங்கப் போயிடுவார். அப்புறம் சாயங்காலம்தான் பார்க்க முடியும். சட்டுனு போங்கோ” என்று எதையோ மிதித்தவர்போல அங்குமிங்கும் உலாவினார் சாமா.

“இது தொண்ணூறு – பி நம்பர் வீடுதானே?”

“அடடா, இது தொண்ணூறு ஸீன்னா. தவறி வந்துட்டேள், ஸ்வாமி.”

“அவரும் தாடி வச்சிண்டிருப்பரோ?”

“பேஷா – என் தாடியைப் போல இன்னும் ஒரு மடங்கு நீளம். அதுதான் நம்மூர் தாடி. ரிஷிகள் தாடி. இது ரஷ்யா தாடி – இங்கர்ஸால் தாடி – மார்க்ஸ் தாடி – பர்னார்ட்ஷா தாடி – எப்படியாவது வச்சுங்கோ. உங்களுக்கு நாழியாடுத்து. போங்கோ!”

“சிரமத்துக்கு மன்னிக்கணும். வரட்டுமா? நமஸ்காரம்.”

“நமஸ்காரம் – வாயாலெ சொல்றதே போரும். வாங்கோ.”

மூன்று பேரும் விறுவிறுவென்று கீழே போனார்கள். படி இறங்கும்பொழுது “நான் அப்பவே நெனச்சேன். தொண்ணூறு – பீன்னு தொண்ணூறு ஸீயிலே நுழையறாளே அப்பான்னு நெனச்சேன். ஆனால் இந்தப் புலித்தோலையும் தாடியையும் பார்த்தபோது அம்மாஞ்சிதான் தப்பா அட்ரஸ் கொடுத்துட்டாளோன்னு நெனச்சேன்” என்று சிரிக்கிற பையன் முதல் முதலாக வாயைத் திறந்து பேசுவது கேட்டது.

பேச்சு தேய்ந்தது. மறுபடியும் ஏதோ பேச்சுக் கீழே கேட்டது. சற்றுக் கழித்துப் பானாக் கொக்கி திறந்து மூடும் சத்தம் கேட்டது. தொடர்ந்து அடுத்த வீட்டு கேட்'டு 'ஸாரீ' என்ற ஸ்வரங்களில் கீச்சுக் குரலில் திறக்கிற சத்தம் கேட்டது.

நளினி குழந்தைச் சிரிப்புடன் வந்தாள்.

"என்னப்பா இது? . . . அடுத்த வீட்டுக்குன்னா வந்தாளாம் எல்லோரும்" என்றாள்.

"நீ என்ன கேட்டே? அவா என்ன சொன்னா? நீ எப்படி எங்கிட்டே அவாளை அனுப்பிச்சே?"

"வந்தவுடனே அவர் இருக்காரான்னு கேட்டா. மாடியிலே இருக்கார்னேன். உன்கிட்டே வந்து கேட்டேன். நீ வரச்சொல்லுன்னு சொன்னியே . . . நீ இப்ப நாஸ்திக தாடி ஆயிட்டியாமே."

"நாஸ்திக தாடியா? யார் சொன்னா?"

"கீழே இறங்கிப் போறபோது அந்தப் பையன்தான் சொன்னான். மேலே இருக்கிறது நாஸ்திக தாடியாம். நாங்க ஆஸ்திக தாடியைப் பார்க்க வந்தோம். அடுத்த வீட்டுக்குப் போறோம்னு எங்கிட்ட சொல்லிவிட்டுப் போனான். நீ சொல்லிண்டியா உன் தாடி நாஸ்திக தாடின்னு?"

"அப்படித்தான் சொன்னேன். உனக்கும் வழுக்கை உண்டுன்னு நாற்பது வருஷம் கத்தியும் கையுமா இந்த முகத்தோட குஸ்திக்கு நின்னு அதை வழுக்கையாக்கியிருக்கேன். கடைசியில் முடியாமல் சோர்ந்து போயிட்டேன், இதை அவர்கிட்டே சொல்லிண்டிருக்கணுமா?" என்று கூறி உட்கார்ந்தார் சாமா. மாடிப் பக்கமே வராத விசாலம்கூடத் தள்ளாடித் தள்ளாடி மாடிப்படி ஏறி வந்து நின்றாள். ஒரு பையன் சிரித்த இடத்தில் இரண்டு கிழவர்களும் ஒரு பெண்ணும் சிரிக்க ஆரம்பித்தார்கள்!

கல்கி, ஏப்ரல் 1964

# பாஷாங்க ராகம்

. . . ‘என் தாயாருக்கு நீங்கள் அனுப்பிய அனுதாபச் செய்தி கிடைத்தது. ‘நிறைந்த சங்கீத அறிவுடன், ரசிக சிரோமணியாகத் திகழ்ந்தார் தங்கள் கணவர் ஸ்ரீபலராமன். பயமின்றியும் பாரபட்சமின்றியும் அவர் சங்கீத விமர்சனம் செய்து வந்ததே, சங்கீதமே மூச்சாக அவர் வாழ்ந்த லட்சிய நோக்குக்குச் சான்றாகும். அவர் மறைவைச் செவியுற்று இசையுலகம் துயரில் ஆழ்ந்து கிடக்கிறது. அன்புக் கணவரைப் பிரிந்து துயரெனும் இருளில் தவிக்கும் தங்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்கும் தன் ஆழ்ந்த அனுதாபத்தை எங்கள் பிருங்கி சங்கீத சபை தெரிவித்துக்கொள்கிறது’ என்று எழுதியிருக்கிறீர்கள்.

அம்மா அதைப் படித்துவிட்டுச் சிறிது நேரம் எங்கோ பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். “நன்றி, என்று ஒரு வார்த்தை பதில் எழுதிப் போட்டுவிடட்டுமா?” என்று கேட்டேன். “இத்தனை தப்பு இருக்கிற கடுதாசுக்கு விவரமாகத்தான் எழுதிப் போடேன்” என்று சொல்லிப் போய்விட்டாள். போய் முன்வாசல் படியில் நின்று, “இந்தக் கடுதாசு உனக்கு சரியாகப்படறதா?” என்று கேட்டாள்.

மறுபடியும் படித்து, ஒவ்வொரு வார்த்தையாக எடை போட்டுப் பார்த்தேன். அநேகமாக எல்லாமே தவறு என்று தோன்றிற்று. அம்மாவிடம் அதைச் சொல்லியும்விட்டேன். “அப்படீன்னா பொய்யைக் கழுத்தை முறிச்சுப் போடு” என்று சொல்லிவிட்டு வாசற்படி இறங்கிப் போனாள்.

மறுபடியும் உங்கள் கடிதத்தைப் படித்தேன். அப்பாவின் கெட்டிக்காரத்தனத்தை நினைத்துச் சிரிப்பு வந்தது. முரட்டு ரசிகர்களான பிருங்கி சபையார் கண்ணில் மண்ணைப் போட்டு விட்டாரே என்று தோன்றிற்று. அப்பா ரசிகரும் இல்லை. சிரோமணியுமில்லை. பயந்து பயந்துதான் பொழுதைப் போக்கினார் அவர். அவருடைய லட்சியம் சங்கீதமல்ல. பக்ஷ்யம்தான். காலட்சேப பாகவதர்கள் அடுக்குகிற ஏழு ஸ்வரங்களுக்குச் சுத்தம், சாதாரணம், அந்தரம், சதுச்ருதி, த்ரிச்ருதி, ஷ்ட்ச்ருதி, கோமளம், தீவிரம் என்றெல்லாம் அடைமொழிகளுடன் வேறுபாடுகள் இருப்பதுபோல் ஒவ்வொரு சுவைக்கும் பன்னிரண்டு வகைகள் உண்டு என்று அவர் கட்சி. உண்டி வகைகளை உண்பதுதான்

அவருடைய பரம புருஷார்த்தம். அம்மாவுக்கும் அவருக்கும் இடையே எந்தவித அன்பும் மலர்ந்திருந்ததாகத் தெரியவில்லை. இருந்தால் மொட்டிலேயே கருகியிருக்க வேண்டும். துயரெனும் இருளில் அம்மாவோ நாங்களோ தட்டித் தடவி நடக்கவில்லை. நான் மனையியலையும் சங்கீதத்தையும் விசேஷ பாடமாக எடுத்துக்கொண்டு ஆனர்ஸ் படித்துக்கொண்டிருக்கிறேன். என் தம்பி கெமிஸ்டாக ஒரு கம்பெனியில் வேலை பார்க்கிறான். நானும் அவனும் வில்லி பார்லாவில் குடியிருக்கிறோம். அம்மா — கோரேகானில் அன்புக் கணவரோடு — இந்த நாள் கணவரோடு — சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கிறாள். அப்பாவின் மனைவியாக அல்ல. போலீஸ்காரர்கள் வந்து அவரைப் பைத்திய ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டுபோய்ச் சேர்த்த பிறகுதான் அம்மாவுக்கு ஆறுதல் கிடைத்தது. மூன்று வருஷங்கள் கழித்துச் சட்டப்படி விவாகரத்து செய்துகொண்டுவிட்டாள்.

மாதா பிதா பாவம் மக்கள் தலையிலே என்பார்கள். அந்தப் பாவத்தை என் அப்பா தன் தலையில் சுமந்துகொண்டு அலைந்தார். கடைசியில் அது அவர் தலைக்குள் இருப்பதையே பாதித்துவிட்டது. அவருடைய பிதா (என் தாத்தா) செய்த பாவம் பிள்ளைக்குச் சங்கீதம் கற்பிக்க முயன்றது. மாதா (என் பாட்டி) செய்த பாவம் அதைத் தடுத்து நிறுத்தாமல் போனது. அதனால் சிலவேளை அப்பாவை நினைக்கும்போது வருத்தமாயிருக்கும்.

தாத்தாவுக்கு மூன்று பிள்ளைகள். முதல் இரண்டு பிள்ளைகளும் திவ்வியமாகப் பாடுவார்களாம். பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியராக இருந்த தாத்தா, சங்கீதத்திலும் கரை கண்டவர். கரையைக் கண்டுவிட்டாலும் எப்போதும் அதிலேயே நீந்திக் கொண்டிருப்பாராம். பிள்ளைகள் பாடுவதைப் பார்த்து உடம்பே வெடிக்கும்போல் பூரித்துக் கொண்டிருப்பாராம். தக்க வயது வந்ததும் சங்கீத இலக்கண இலக்கியங்களையெல்லாம் கரைத்துப் புகட்டிவிடுவோம் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தாராம். ஆனால் அவர் இதயமே வெடிக்கிற சம்பவம் நிகழ்ந்தது. அந்த முதல் இரண்டு பிள்ளைகளும் ஒரு சாதாரண ஆற்றில் நீந்தப் போய், உயிரை ஆற்றிடம் தந்து, உடம்பாக எங்கோ அகப்பட்டார்களாம். தாத்தாவுக்குத் துயரம் தாங்கவில்லை. தம் சங்கீத சொத்தை அவர் இனி மேல் யாருக்கு எழுதி வைப்பார்? மூன்றாவது பிள்ளைக்குத்தானே? வேறு வாரிசு ஏது? எனவே, என்னுடைய அப்பாவுக்கு ஏழு வயதிலிருந்தே சங்கீதம் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார். வாழ்வில் அநித்தியத்தை எண்ணி, சங்கீத இலக்கண

சாஸ்திரங்கள் வரலாற்று நூல்கள் எல்லாவற்றையும் அவசரம் அவசரமாகப் பாடம் சொன்னார். என் அப்பாவுக்குப் பாட்டு வராவிட்டாலும் கடம் நன்றாக வரும். எத்தனை பெரிய புத்தகமானாலும் கடம் போட்டுவிடுவார். கேட்ட இடத்தில் தலையில் பிரம்ம தண்டத்தை வைத்தாற்போல் கடகடவென்று ஒப்பிப்பார். பாடத்தான் வரவில்லை. தாத்தா அவரை அடியோ அடி என்று அடித்தார். உள்ளங்கை என்ன, முஷ்டி என்ன, பாக்குவெட்டி என்ன, புத்தகம் என்ன, டம்ளர் என்ன, டபரா என்ன— இப்படிப் பல ஆயுதங்களை அவர் மீது கண்ணை மூடிக்கொண்டு பிரயோகம் செய்வார். இப்படி வெகு காலம் வரையில் இந்த சிட்சை நடந்தது. இதற்கிடையில் என் அப்பாவுக்குக் கல்யாணமும் நடந்தது. ஆனால் இசைப் பயிற்சியும் தொடர்ந்த வண்ணமேயிருந்தது. அதனுடைய பிரிக்க முடியாத அங்கமான வசவுகளும் தொடர்ந்து பொழிந்து கொண்டிருந்தன. எத்தனை பொழிந்தும் விளைச்சலில்லை. கட்டாந்தரையில் எப்படி முளைக்கும்? அப்பா சங்கீத சாஸ்திரங்களை நெட்டுருப் போட்டதனைத்தும் பாத்தியில் எருவாகக் குவிந்திருந்தது. ஆனால் பாத்தி கருங்கல். பாட்டு வரவில்லை. தாத்தா அடிக்கடி பெருமூச்சுவிட்டு ஓய ஆரம்பித்தார். “அட, பாஷாங்க சனியனே!” என்று அடிக்கடி பிள்ளையை ஒரு புதுமுறையில் விரக்தியுடன் திட்ட ஆரம்பித்தாராம். “நீ எங்கேடா இங்கே வந்து பிறந்தே?” என்று பெருமூச்சு விடுவாராம்.

இதை என் அம்மா கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் சின்னப் பெண். சாந்தி கல்யாணம் ஆகவில்லை. ஆகாவிட்டாலும் புருஷன் வீட்டுக்குப் பெண்ணை ஒரு மாசம் கொண்டுவிடுவதும் அழைத்துப் போவதும் அந்தக் காலத்து வழக்கம். “பாஷாங்க சனியனே!” என்றால் என்ன என்று அவளுக்கு அப்பொழுது புரியவில்லை. பாஷாணம் என்பதை அப்படித் தவறிச் சொல்கிறாரோ என்று தோன்றுமாம். கடைசியில் ஒரு நாள், “பாஷாங்க ராக ராக்ஷசப் பயலே . . . ஒழி” என்று ஆசீர்வாதத்துடன் சங்கீதப் பயிற்சிக்கு மங்களம் பாடி முடித்துவிட்டாராம் தாத்தா.

தாத்தா பிறகு அதிக காலம் ஜீவித்திருக்கவில்லை. ஒருநாள் இகவாழ்வை நீத்தார். நீக்கும்போது அவரால் பாட முடியவில்லை. பிள்ளையைப் பார்த்துக் கண்ணீர் வடித்தாராம்.

அவர் போனதும் என் அப்பா ‘கூகூ’ என்று பச்சைக் குழந்தை மாதிரி அழுதாராம். தம் தந்தையார் கடைசியில் பார்த்துப் பார்த்துப் பேச முடியாமல் கண்ணீர் விட்டதன் அர்த்தத்தை ஆராய முனைந்தார்.

கண்டுபிடித்துவிட்டார். “என் கோட்டையெல்லாம் தகர்ந்துவிட்டதே” என்றுதான் அவர் வெம்பியிருக்க வேண்டும் என்று அப்பாவுக்குப் புரிந்துவிட்டது. அந்தக் கணமே, இனி வேலைக்குப் போவதில்லை, சங்கீதத்துக்கே உழைப்பது என்று தீர்மானம் செய்துவிட்டார்.

சங்கீதத்தைப் பற்றியே பேச ஆரம்பித்தார் என் தந்தை. வீட்டில் பேசுவார். வெளியில் பேசுவார். ஹோட்டலில் பேசுவார். ரயிலடியில் பேசுவார். நண்பர்களோடு பேசுவார். சங்கீதக் கச்சேரிக்கு யாராவது நிர்பந்தமாகக் கூப்பிட்டுப் போனால், வெளியே உட்கார்ந்து சங்கீதத்தைப் பற்றிப் பேசிவிட்டு வந்துவிடுவார். அதனால் அவரைப் பார்த்து எல்லோரும் பயப்பட ஆரம்பித்தார்கள். ‘வலமோ இடமோ போகட்டும். மேலே விழுந்து பிடுங்காமல் போனால் சரி’ என்று சங்கீத வித்துவான்கள் ஓடி ஒளிந்தார்கள். அதற்காக அவருக்கு நண்பர்களில்லாமல் போய்விடுவார்களா? அவரைப்போலவே நாலு பேர்கள் சேர்ந்து கொண்டார்கள். காசுள்ள ஆசாமி என்றால் விடுவார்களா? அவரோடேயே சாப்பாட்டுக்கும் வந்துவிடுவார்கள். இரண்டு கறி, கூட்டுகள், பிட்ளை, ஆமவடை, பாயசம் இப்படி அம்மா சாப்பாடு பண்ணிப் போடுவாள். அந்தச் சிரமங்களைக் கூட அவள் சட்டை செய்யவில்லை. கூடத்திலிருந்து வருகிற அப்பா பேசுகிற மாவு மிஷின் குரலையும் நண்பர்களின் குரலையும் தான் அவளால் சகிக்க முடியவில்லை. சில சமயம் குஷி தாங்காமல் அப்பா பாடிக்கூடக் காட்ட ஆரம்பித்துவிடுவார். அம்மாவின் முகத்தில் அப்போது ஒரு பேயறைந்த கிலி வந்து படர்வதைப் பார்த்தால் பாவமாக இருக்கும். நண்பர்கள் வந்தாலும் வராவிட்டாலும் அப்பாவுக்கு நாலு கறியில்லாமல் சாப்பிடத் தெரியாது. அப்பளத்தைச் சுட்டால் பிடிக்காது. காலையில் இட்டிலி அல்லது பொங்கல் காப்பி, எட்டு மணிக்கு ஒரு காப்பி, பத்து மணிக்கு இரண்டு பிஸ்கட் காப்பி, பன்னிரண்டு மணிக்குச் சாப்பாடு, இரண்டு மணிக்குக் காப்பி, நான்கு மணிக்கு டிபன் காப்பி, ஆறு மணிக்குக் காப்பி, எட்டு மணிக்குச் சாப்பாடு, பத்து மணிக்கு டீ, பன்னிரண்டு மணிக்கு ஓமப்பொடி, கீமப் பொடியோடு இஞ்சி இடித்த கொத்தமல்லிக் காப்பி. நடுநடுவே ஹோட்டல் டிபன் வேறு. எப்படி இந்த மாதிரி சாப்பிட முடிகிறதென்று அம்மா பயந்து போய்விட்டாள். வர வர அந்தப் பயம் எப்படி இனிமேல் இத்தனையும் பண்ணிப் போடப் போகிறோம் என்ற மலைப்பாக மாறிவிட்டது. ஏனென்றால், அப்பாவின் சொத்து எப்பொழுதும் குட்டிபோட்டுக் கொண்டேயிருக்கிற பணக்காரச் சொத்து இல்லை. தாத்தாவின் பிராவிடண்ட் பணம், ஊரிலிருந்த வீடு, சாப்பாட்டு நிலம் — எல்லாம்

இந்தச் சாப்பாட்டிலேயே கரைந்து போய்விட்டன.

இப்போது சங்கீத வித்தவான்களுக்கு அப்பா கடிதம் எழுத ஆரம்பித்தார். உங்களைப்போல் பாடுகிறவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம் என்று ஒரு நூறு பேருக்குக் கடுதாசு போட்டுவிட்டார். சிலர் நன்றி தெரிவிக்க நேரிலேயே வந்தார்கள். சிலரிடம் இவரே போனார். எதற்கு? கடன் வாங்க. ஓர் இருபது பேரிடம் பலித்தது. ஆனால் அதற்குள் சங்கீதக்காரர்களுக்கு அடிக்கடி கூடிப் பேசுகிற சந்தர்ப்பங்கள் இருப்பதால், “எனக்கு மட்டும் எழுதியிருக்கிறார்” என்று அவர்கள் குடுமியில் அப்பா சுற்றியிருந்த பூ வாடிவிட்டது. பயந்து கொண்டிருந்தவர்கள் இப்போது சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

நாலுகறி, கூட்டு பச்சடி, ஒரு கறியாகவும் வற்றல் குழம்பாகவும் குறைந்துவிட்டன.

“என்னடீ! உங்க அப்பாவாத்துச் சமையல் மாதிரி ஆயிட்டுது!” என்று ஆரம்பித்தார் அப்பா.

உண்மையில் அம்மா இப்போது அவள் அப்பா அம்மா வீட்டிலிருந்து தான் சாமான் சஜ்ஜாவெல்லாம் வரவழைத்துக் கொண்டிருந்தாள். அதுதான் எத்தனை நாட்கள் நடக்கும்? அவள் அப்பா அம்மா மட்டும் என்ன சிரஞ்சீவிகளா? அவர்களும் போய்ச் சேர்ந்தார்கள். அம்மாவின் அண்ணன் தம்பிகள் சும்மா இருந்தால் அவர்களுடைய மனைவிகள் சும்மா இருப்பார்களோ?

“உங்க அப்பன் மாதிரின்னு நெனச்சிண்டியோன்னேன்” என்று அம்மாவைப் பார்த்து அடிக்கடி குத்தி நெருடிக்கொண்டேயிருப்பார் அப்பா.

“உங்கப்பாவுக்கு நானும் அவர் மாதிரி பணம் பணம்னு பறக்காம இருக்கேனேன்னு குறை! பணம்னு சம்பாதிக்காவிட்டாலும் வரவா போறவா குறைச்சல் இல்லை. பத்து பணக்காரனுக்குச் சமமா காய்தா பண்றானே மாப்பிள்ளை. அப்படீன்னு வேறே ஆதங்கம். செத்துப் போகிற வரைக்கும் திரிசமனும் ஜாடையுமா இதைச் சொல்லிக் காமிச்சிண்டேயிருந்தார். இப்பதான் அவர் ஆத்மா சாந்தியடைஞ்சிருக்கும். இப்பதான் நிஜமாவே நான் இல்லாமல் கஷ்டப்படறேனோல்லியோ?” என்றார் அப்பா ஒரு நாள். அதைக் கேட்டு அம்மா பிழிந்து பிழிந்து அழுதாள். வெகுநாட்கள் பொறுத்துக் கொண்டேயிருந்தாள். கடைசியில் ஒரு நாள் திடீரென்று ஆவேசம் வந்தாற்போல் ஒரு கூச்சல் போட்டாளே

பார்ப்போம். “போரும், அப்பாவைப் பத்தி இனிமே பேச வாண்டாம்!” என்று பீறின அந்தக் கூச்சல் ஏழு வீட்டுக்குக் கேட்டது. அப்பா அப்படியே வெலவெலவென்று தொய்ந்து போனார். சற்று நேரம் பேசாமல் நின்றார். பிறகு வாசல் பக்கம் போய்விட்டார் அவர்.

அம்மா இப்போது சாதாரண மனுஷியாகிவிட்டாள். இதுவரை பார்யா தர்மம், ஸ்திரீ தர்மம், இல்லாள் கடமை என்று புத்தகங்களில் எழுதியிருக்கும் பெண்மணி மாதிரி இருந்தாள். இப்போது திடீரென்று நினைத்துக்கொண்டு சாதாரண மனுஷியாகிவிட்டாள்.

அப்போதுதான் விஜயராகவன் அப்பாவுக்குச் சிநேகிதம் ஆனார். அப்பா மாதிரி அவர் அழுக்காக இருக்க மாட்டார். அழுக்கு வேட்டி கட்ட மாட்டார். சுருக்கு சுருக்கென்று பேச மாட்டார். சும்மாச் சும்மா தின்றுகொண்டேயிருக்க மாட்டார். இருந்தாலும் அப்பாவோடு சிநேகிதமாயிருந்தார். அவர் ஒரு நாள் கூடத்தில் அப்பாவிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

“நீங்கள் எத்தனை நாட்கள் சார், இப்படியே இருக்கப் போறேள்? ஏதாவது சம்பாதிக்க வழி பண்ணிக்க வேண்டாமா?”

“எனக்கு என்னய்யா, இப்ப குறை? நான் சந்தோஷமாகத்தான் இருக்கேன்.”

“சம்பாத்தியம் . .?”

“அதுதானே? நான் உண்மைக்காகப் பாடுபடறேன் இந்த மாதிரி மனுஷாள்ளாம் பட்டினி கிடந்துதான் செத்துப் போயிருக்கா. கலையோட சரித்திரத்தை எடுத்துப் பார்த்தீர்னா தெரியும்.”

“கலியாணத்தைப் பண்ணிண்டு, ஒரு குடும்பத்தை உண்டாக்கிப் பிட்டு – ”

“அதுக்கு நான் என்ன பண்ணுவேன்? அவாளுக்கு இதையெல்லாம் தாங்கிக்கிற பலமில்லேன்னா நான் என்ன செய்யகிறது?”

“நீ வாழ்ந்தே” என்றாள் உள்ளே காப்பி போட்டுக் கொண்டிருந்த அம்மா. இருபது பலம் காப்பிப் பொடியை அன்று காலையில்தான் விஜயராகவன் கொண்டுவந்து கொடுத்துவிட்டுப் போயிருந்தார்.

“கடனுக்கு லாயர் நோட்டீஸ் நாலஞ்சு பேர்கிட்டேயிருந்து வந்துட்டுதே.”

“வரட்டுமே. இருந்தால்தானே கொடுப்பேன் . . . ”

“கடனைத் திருப்பிக் கொடுக்க முயற்சி பண்ண வாண்டாமா?”

“திருப்பித் தரும் யோசனையோடு நான் வாங்கலியே விஜயராகவன்! பணம் வாங்கினால் திருப்பிக் கொடுத்துடணும் என்கிற நேர்மை எல்லாம் பாமர மனுஷாளுக்கு ஏற்பட்ட சட்டமில்லையோ?”

“உவா” என்று உள்ளே குமட்டினாள் அம்மா.

“பெரிய கலைஞர்கள், மேதாவிகள் எல்லாம்தான் இதெல்லாம் பார்க்க மாட்டார்கள் என்று சொல்லுகிற வழக்கம்.”

“அப்படி இங்கே ஒண்ணும் இல்லேன்னு சொல்றீமாக்கும்! நீ ஒப்புக்காட்டா என்னய்யா? நான் கலைஞன் இல்லேன்னு ஆயிடுமா?” என்றார் அப்பா.

“இதைக் கொண்டு மாமாகிட்ட கொடுத்துட்டு வா” என்று காப்பியைக் கொடுத்தாள் அம்மா. கொடுத்துவிட்டு வந்தேன்.

“ஐயோ, ரதீ! சர்க்கரையே போடலியே!” என்று அப்பாவின் குரல் கத்திற்று.

சர்க்கரை டப்பாவை எடுத்ததும், “வைடீ, கீழே!” என்று உருட்டி விழித்தாள் அம்மா. உடனே கூடத்து நிலையண்டை போய் நின்று கொண்டாள். “கலைஞருக்குச் சர்க்கரை என்னத்துக்கு?” என்று ஒரு சிரிப்புச் சிரித்தாள். இதைச் சொல்லச் சிரிப்பானேன் என்று குழம்பிய எனக்கு அந்தச் சிரிப்பைக் கேட்டு நடுநிசியில் இருட்டின நிசப்தத்தில் ஏதோ உறுமலைக் கேட்பதுபோல் இருந்தது. அம்மா உள்ளே போய்விட்டாள்.

ஒரு நாள் நான் சமையல் அறைக்கு அப்பால் உள்ள திறப்பில் உட்கார்ந்து பாடம் படித்துக் கொண்டிருந்தேன். விஜயராகவ மாமாவோடு அம்மா கூடத்தில் பேசிக்கொண்டிருந்தாள். அரை மணி கழித்து அப்பாவின் குரல் கேட்டது. அம்மா உள்ளே வந்தாள்.

“கழுகுக்கு மூக்கிலே வேர்க்கிறாப்பல இருக்கே இது?” என்று அப்பாவின் குரல் கேட்டது.

“என்ன?” — விஜயராகவ மாமாவின் குரல்.

“நான் இல்லாத சமயம் பார்த்தே வறீமேன்னேன்?”

“வந்தா என்ன?”

“வந்தா என்னவா! . . . கெட் ஔட்.” – அப்பாவின் குரல். அம்மா நிலையண்டை விரைந்தாள். நானும் போய் நின்றேன். விஜயராகவ மாமா நாற்காலியை விட்டு எழுந்திருக்கவில்லை. அப்பாவையே அசையாமல் பார்த்துக்கொண்டிருந்தார். மரவட்டையையோ, எட்டுக்கால் பூச்சியையோ பார்க்கிற மாதிரி இருந்தது. அப்பா அம்மாவைப் பார்த்தார். விறுவிறுவென்று செருப்பைக்கூட மாட்டிக் கொள்ளாமல் வாசலில் இறங்கிப் போய்விட்டார். விஜயராகவ மாமா படத்தில் எழுதின சமுத்திர அலை மாதிரி உட்கார்ந்திருந்தார். ஐந்து நிமிஷங்கள் கழித்துச் சமுத்திர அலை அசைந்தது. எழுந்து வெளியே போய்விட்டது.

ஆறு மணிக்கு அப்பா வந்தார். சமையல் அறைக்கு வந்தார்.

“ஓகோ – நான் வருவேன்னு தெரிஞ்சு போயிட்டுதாக்கும்?” என்று பொதுவாகச் சுவரைப் பார்த்துக்கொண்டு சொன்னார்.

“இந்தக் கிறுதக்குப் பேச்செல்லாம் வாண்டாம். இன்னிக்கு ரண்டிலே ஒண்ணு தீரணும்” என்றாள் அம்மா.

“அப்படியா? . . . என்னத்துக்கு விஜயராகவன் வெறுமனே நான் இல்லாதபோது வர்றான்?”

“என்னத்துக்கா? சொல்லட்டுமா?” – என்று ஒரே ஒரு வாய்க்கடையால் சிரித்தாள் அம்மா.

“பயமுறுத்தறியே.”

“அது உங்க வேலைன்னா. நான் பாடகன் இல்லை. உங்களைக் கண்டு பயப்படறதுக்கு. நீங்கதான் இப்ப பயப்படப் போறேள்.”

“சும்மா மிரட்டாதே. அவன் எதுக்கு வரான் அதைச் சொல்லு, கிடக்கட்டும்.”

“பாஷாங்க ராகத்துக்கு வேற ஸ்வரம் எதுக்கு வரும்?”

“– ”

“எதுக்கு வரும்னு கேட்டால் சொல்லுங்களேன்.”

அப்பா நிமிர்ந்து ஒரு நிமிஷம் பார்த்தார். பார்த்துக்கொண்டேயிருந்தார்.

“சொல்லுங்களேன்.”

“ரக்திக்கு” என்று மெதுவாகச் சொன்னார் அப்பா.

“இப்ப புரிஞ்சுதா? அந்நிய ஸ்வரம் எதுக்கு வரும்? ராகத்துக்கு ரக்தி கொடுக்க வரும். அதை இன்னும் போஷிக்க வரும். இப்ப நாலு மாசமா குடும்ப போஷணை விஜயராகவன்னாலேதான் நடக்கிறது. நாலு மாசமா நீங்க திங்கிற அரிசி, குடிக்கிற காப்பியெல்லாம் அவன் வாங்கிப் போட்டு துன்னேன் . . . இத்தனை சாஸ்திரம் படிச்சும் வீட்டிலே இருக்கிற பாஷாங்க ராகமே புரியலெ” என்று அம்மா தோளில் கன்னத்தை இடித்துக்கொண்டாள்.

அப்பா முகத்திலும் தலையிலும் ஓங்கி ஓங்கிப் போட்டுக்கொண்டார். நான் தடுக்கப் போனேன். “நில்லு” என்று அதட்டினாள் அம்மா. அப்பா நோக நோகப் போட்டு கொண்டுவிட்டு, “நீ உன் பொண்ணு எல்லாம் பாஷாங்கம் தாண்டி, கிராதகி” என்று பல்லைக் கடித்துவிட்டு மறுபடியும் வாசலுக்குப் போய்விட்டார்.

அப்பாவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. “பாஷாங்க ராகம் பாடாதேள். குடும்பத்துக்குக் கெடுதல் – கெடுதல்” என்று வாசலில் நின்று கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தார். அழுக்கு வேட்டியைக் கிழித்தும் கொள்ளத் தொடங்கிவிட்டார். தற்செயலாக வடக்கேயிருந்து வந்திருந்த அப்பாவின் அத்தான் வீட்டில் இருக்கிற நிலைமையைப் பார்த்தார். அவரை வடக்கே தாம் வேலை பார்க்கிற ஊருக்கே அழைத்துப் போய்விட்டார். மந்திரவாதிகளைக் கூப்பிட்டுப் பார்த்துப் பயனில்லாமல் பைத்திய ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார். அப்பாவுக்குத் தெளியவில்லையாம். பைத்திய ஆஸ்பத்திரியிலேயே ஐந்து வருடங்கள் இருந்து அவர் அங்கேயே இறந்துவிட்டதாகத் தெரிந்தது. அப்பாவின் அத்தானுக்கு அவர் மேல் மிகவும் பிரியம். அத்தை பிள்ளைகள் அப்படித்தானிருப்பார்கள். அவர்தான் பத்திரிகைக்கு – அவர் காலமான செய்தியைக் கொடுத்திருப்பார் போலிருக்கிறது. எங்களுக்குக்கூட அப்படித்தான் சேதி தெரிந்தது. நீங்கள் போட்ட அனுதாபக் கடுதாசு எங்கெங்கோ சுற்றித் தாறுமாறாக முத்திரை வாங்கிக் கொண்டு முந்தாநாள்தான் வந்தது. அப்பாவை அவர் அத்தான் அழைத்துப்போன அடுத்த மாசமே நாங்கள் பம்பாய் வந்துவிட்டோம்.

இத்தனை நீளமாகக் கடுதாசி எழுதினதற்கு மன்னிக்க வேண்டும். மேதைக்கும் பைத்தியத்துக்கும் இடையே உள்ள வரம்புக் கோடு மிக மெல்லியது என்று சொல்லுகிறது வழக்கம். ஆனால் கோடே இல்லாத மாதிரி நீங்கள் குழம்பிவிட்டதால் அம்மாவின் உத்தரவுப்படி எழுதினேன்.

பெற்ற அப்பாவைப் பற்றி இத்தனை கேவலமாக எழுதக்கூடாது. என்ன செய்கிறது? வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்த அப்பாவிடம் நானும் தம்பியும் பட்ட வேதனை . . .

இப்படிக்குத் தங்கள்,

*ரதிபதிப்ரியா*

பின்குறிப்பு: அம்மா கோரேகானிலிருந்து இன்று காலை வந்தாள். இந்தப் பதிலைக் காட்டினேன். அவளும் இரண்டு வார்த்தை எழுத விரும்புகிறாள்.

நமஸ்காரம் . . . குழந்தை சொன்னதெல்லாம் சரிதான். ஆனால் பலராமனுக்குச் சித்தம் கலங்குவதற்கு முன்னால் ஒன்று நடந்தது. என்மேல் அவ்வளவு சந்தேகப்பட்டுக் கோபமும் கலக்கமுமாகப் போனவர் சாப்பாட்டுக்கு மட்டும் வேளா வேளைக்கு வந்துகொண்டிருந்தார். பிறகுதான் நான் எழுதி அவருடைய அத்தானை வரவழைத்தேன் . . . குழந்தை சொன்னது ரொம்ப சரி. என் மாமனார் செய்த பாபத்தை அவர் தலையில் சுமந்து கொண்டு அலைந்தார். அதற்கு நாங்கள் எவ்வாறு பிணையாக முடியும்?

தங்கள்,

*விஜயா விஜயராகவன்.*

கல்கி, ஏப்ரல் 1964

# அன்பு வைத்த பிள்ளை

இரவு பத்து மணிக்கு ரேழியில் படுத்திருந்த கிழம் ஜலம் ஜலம் என்று அரற்றிற்று. ஊருக்கு அப்போது இரண்டாம் ஜாமம். ஊமைக் கோட்டனின் ஊங்காரம் ஓய்ந்தது. இருளின் சுவட்டிலேயே கிராமத்திற்குள் வந்த தூக்கமும் வந்துவிடும். அந்தி வேளையில் சோற்றைக் கொட்டிக்கொள்ளக் கூடாது என்ற பழைய பழைய கட்டுப்பாட்டைக் கொலை செய்துவிடாமல் காத்திருந்து, நாலு நக்ஷத்திரத்தைக் கண்டதும் மத்தியான்ன மிச்சத்தைச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துவிடுவார்கள். அடுத்த வீட்டு ஊஞ்சல் பலகை மட்டும் மந்த ஆட்டம் ஆடி யாரையோ தூங்கப் பண்ணிக்கொண்டிருந்தது. இந்த அகாலத்தில்தான் கிழம் நீருக்கு அலறிற்று. மாட்டுப் பெண் சுட்டதும் சுடாததுமாகக் கால் சேர் வெந்நீர் கொண்டுவந்து வைத்து விட்டுப் போனாள். குடித்துவிட்டு, 'அம்மாடி, அம்மாடி!' என்று கிழம் ஆச்வாசக் குரல் கொடுத்தது.

தப்பு தப்பென்று மெத்தையைத் தட்டி உதறிவிட்டு அகமுடையான் காமிரா உள் ஜன்னல் அடிக்கதவைச் சாத்தினான். மாட்டுப் பெண் வெந்நீர்ப் பாத்திரத்தை ஷெல்பில் வைத்து அடுக்களைச் சங்கிலியைப் போட்டுவிட்டு அங்கே வந்துவிட்டாள்.

ஒரு நாழி ஆயிற்று.

"கொஞ்சம் ஜலம் கொண்டு வரயா?" பதிலில்லை.

"பாகு, பாகு, கொஞ்சம் வெந்நீர் கொண்டு வாயேன்."

பதிலாக அடுத்த வீட்டுக் கடிகாரம் டாக் டாக் டாக் என்று ஆற்று மணலை எண்ணுவது போலக் காலத்தை விநாடி விநாடியாக அளந்து கொட்டிற்று.

"பாகு, பாகு!"

நாலாவது வீட்டில் நெருப்புக் குச்சி கிழித்தால் கிழத்திற்குக் கேட்கும். ஆனால் அதைவிடக் கம்மிய குரலில் காமிரா உள் சம்பாஷணை நடந்ததால், அதன் செவிக்கு எட்டவில்லை.

"விடுங்கோன்னா. அம்மா தூத்தம் கேக்கறா."

“தூங்கறாப்பல இருந்துடேன்.”

“இப்ப ஏன்னு கேட்டுட்டேனே.”

“தாகம் கிடந்து அடிச்சுக்கிறது. அப்புறம் கொண்டு கொடேனாம்!”

“பாகு, பாகு . . . தூங்கறயாம்மா?”

“நீங்க விடுங்கோ – இதென்ன பச்சைக் குழந்தை மாதிரி – ரொம்ப அழகாயிருக்கு – அவ்வளவு என்ன!”

“சரி, கொடுத்துட்டு உடனே வந்துடறயா?”

“ம்!”

“உடனே வந்துடணும்.”

“உடனே வந்துடறேன், விடுங்கோ” என்று வாக்குறுதியளித்துவிட்டு, தலைப்பைப் பிடுங்கி குலைவைச் சரிப்படுத்திக் கொண்டு வெளியே வந்தாள். கூடத்து ஆணியிலிருந்து பெட்ரூம் விளக்கை எடுத்து, அடுக்களையில் மெழுகின அடுப்பின் மீதிருந்த கெட்டிலிலிருந்து வெந்நீர் எடுத்து இடை கழிக்கு வந்தாள். கிழிசல் புடைவையுடன் கிழம் கிடந்த அலங்கோலம் சகிக்கவில்லை. பிள்ளை வைத்திருந்த அன்பு ஒவ்வொரு கிழிசலிலும் எட்டிப் பார்த்தது . . .

“இந்தாங்கோ – வெந்நீர் ஆறியிருக்கே.”

“ஆறியிருந்தா என்னடீம்மா? . . . வாயை நனைச்சுக்கத் தானே . . .

ம் . . . அப்பாடா, அம்மாடீ அப்பா – ஹும் போறும்.”

“போறுமா, இன்னும் கொஞ்சம் கொண்டு வரட்டுமா?”

“போறும். நீ போய்ப் படுத்துக்கோம்மா.”

“காலை அமுக்கி விடட்டுமா?”

“வாண்டாண்டீயம்மா . . . ம் . . . நீ போய்ப் படுத்துக்கோ.”

மாட்டுப் பெண் திரும்பி, ஆணியில் விளக்கை மாட்டிச் சிறிதாக்கிவிட்டு, வாக்குறுதியைக் காப்பாற்ற உள்ளுக்குள் வந்தாள். கட்டிலைவிட்டு எழுந்து காத்திருந்தவன் திடீரென்று அவளை அணைப்பில்கொண்டு வேண்டாத திகைப்பில் அவளை ஆழ்த்தினான்.

இடைகழியில் மீண்டும் இருட்டு. மழை பெய்கிறமாதிரி தோன்றிய இருளைத் துளைத்துத் துளைத்துப் பார்த்தது கிழம். அதற்கு வருத்தந்தான், கடைசி காலத்தில் இஷ்டப்படி இருக்க முடியவில்லையே என்று. 'உடம்பில் தெம்புள்ள போதே செத்துப் போய்விட வேண்டும்; கழுகு மாதிரி முடிவில்லாமல் உயிரை வைத்துக்கொண்டு ஊன் தளர்ந்து, புத்தி குழம்பி, தொட்டதற்கெல்லாம் இரண்டாவது கையை எதிர்பார்த்திருப்பது பரம துக்கம்' என்று கிழம் அநுபவபூர்வமாகச் சிந்தாத்தம் செய்துகொண்டது. அது அவ்வாறு துக்கப்பட்டதற்குப் பாத்தியம் உண்டு. குடும்பத்திற்கு இருக்கிற இரண்டரை வேலி சொத்தும் அது கொண்டு வந்ததுதான். கட்டின புருஷனுக்குச் சூச்சக்கரக் குழி நிலம்கூடக் கிடையாது. கிழம் அப்பாவுக்கு ஒரே பெண். பையனிடம் அலாதியான பிரீதியினால், பூமி பூஜ்யமாயிருந்தாலும், பெண்ணைக் கொடுத்து, இரண்டரை வேலியையும் அவனுக்கு எழுதி வைத்துப் பெண்ணுக்கு என்று தனியாக ஓர் ஆயிரம் ரூபாயை ஒதுக்கி வைத்துவிட்டுப் போனார் அவர். கிழத்துக்கு இப்போது அறுபத்தைந்து வயது. நாற்பத்தைந்து வயதிலேயே கொழு கொம்பை இழந்துவிட்டது. இப்போது பிள்ளையிடமும், மாட்டுப் பெண்களிடமும் மாட்டிக்கொண்டு தவிக்கிறது.

கிழத்தின் நிறைவேறாத பாழ்த்துப்போன ஆசைகளெல்லாம் ஒன்று திரண்டு புலம்பத் தொடங்கின.

'சொத்தெல்லாம் என்பேரில் இருந்தால் இப்படி அலக்ஷியம் பண்ணுமா கீழ்க்கிளை? அம்மா அம்மான்னுக் காலைப் புடிச்சிகிண்டு கிடக்கும்! பணம்தான் என் பேரில் போட்டுவைத்திருக்கப்படாதா? கையெழுத்துப் போடத் தெரியாட்டா, கீறல் வச்சு வாங்கிக்கிறேன். அவன் பேரில் இருக்கத் தொண்டுத்தானே சம்பாதிச்ச பணம்னு நெனச்சுனூட்டான். ரெண்டு புடவையும் ராமபாணம் போட்டாப் போல ஆயிடுத்து. ஒரு புடவை எடுத்துத்தாடான்னு எத்தனை மாசமாய்ச் சொல்றேன்? காதிலே போட்டுண்டானா — '

'வீட்டிலே சுடலாட்டமா பளிச் பளிச்'சின்னு ஒண்ணு நிக்கிறது. எதித்த வீட்டு முகரக் கட்டைக்குக் கொண்டுபோய் வண்டி வண்டியாய் நெல்லைக் கொட்டறான், ஒத்தருக்கும் தெரியாதுன்னு நெனச்சிக்கிண்டு. ஊரிலே சேதி படை படைச்சுக் கிடக்கு . . . பாவம் பண்ணினா ஒரு பிராணிக்குத் தெரியாதுன்னு நெனச்சுண்டு பண்றதே உலகம்!

'ஏழு பிள்ளை பிறந்து ஆறு மாசத்திலேயும் மூணா மாசத்திலேயும் குழியிலே புதைச்சுட்டுது. குறை வேறு நாலு ஆயிட்டுது. அந்தப் பாவிக்கு

அப்படித்தான் நடக்கும். அவன் தொட்டது துலங்காது; இருக்கிற இடமே விடியாது. வீடு வீடாவா இருக்கு? சுடுகாடாட்டமா, வெறிச்சோடிக் கிடக்கு. மனுஷா வாழற இடமாகவே இல்லை.'

கிழம் தாகத்திலும் பசியிலும் பழங்கணக்கு பார்த்துக்கொண்டிருந்தது. அதற்கு என்னமோ குழந்தைகளுக்குக் குறைச்சல் இல்லை. பெரிய பிள்ளைக்குப் பிறகு மூன்று பெண்கள், அப்புறம் இரண்டு பிள்ளைகள், அப்புறம் இரண்டு பெண்கள். எல்லாவற்றிற்கும் கல்யாணமாய்விட்டது. குழந்தை குட்டிகளும் பிறந்துவிட்டன.

'அம்மாடா, கல்யாணந்தான் பண்ணிக் கொடுத்தாச்சு கூடப் பிறந்ததுகளை ஒரு நாளைக்காவது அழச்சிண்டு வந்து வச்சுக்கணும்னு ஆசையிருக்காதா? ஒரு பிரசவம், வளைகாப்புன்னு பிறந்த வீட்டில் ஒன்று நடந்திருக்கணுமே அதுகளுக்கு. பெரிசு இரண்டும் இங்கே பிள்ளை பெத்துது . . . மகாராஜா மாதிரி அவர் இருந்தார். நடந்தது. அப்புறம் ஒரு பொண்ணாவது தலைகாட்டணுமே. புருஷன் வீட்டில் அடிவச்சுதுதான். இருக்கோ செத்துதோன்னுகூடத் தெரியலை. போன வருஷம் சின்னது கடிதாசு போட்டது. "உடம்பு சரியில்லை. அங்கே வந்து ஒரு மாசம் மருந்து சாப்பிட்டுட்டுப் போறே"னு. பதில் போட்டானா பாவி, பாவி! எப்படி இருக்க முடிஞ்சுது! . . . வீடு வெறிச்சோடிக் கிடக்காமல் என்ன செய்ய முடியும்?'

கிழம் மௌனமாகக் கண்ணீர் உகுத்தது.

அடுத்த இரண்டு பிள்ளைகளும் "நல்லதுகள்தான். அம்மா என்று ஒரு பாசத்தை உணரும் சக்தி உண்டு அதுகளுக்கு! கிழத்திற்கு அவர்களிடம் போய் இருக்க வேண்டும் என்று ஆசை.

இரண்டாவது பிள்ளைக்குக் கும்பகோணத்தில் இரண்டு வருஷமாகப் பாங்கியில் வேலை. அவனுக்குப் பெண்டாட்டி வழியில்லை. அவனைவிட உயரத்தில் ஒரு சாணும் அகலத்தில் இரண்டு சுற்றுமாகச் செழித்திருந்த அவள் அவனைக் கட்டை விரலில் மடக்கி வைத்திருந்தாள். பிண்ணாக்கு மூட்டை மாதிரி உடம்பும் – ஆனைக்காலும், – பட்டிக்காட்டுப் பேச்சுமாகக் காட்சி கொடுத்த கிழத்தைக் கண்டால் அவளுக்குச் சிரிப்பும் ஆத்திரமும் வருகிறதாம். ஆகவே அவன் விசுவாசம் செயல் வரையில் வரவில்லை.

மூன்றாவது பிள்ளைக்கும் பெண்டாட்டி வழியில்லை. சாந்தி கல்யாணத்தன்று இரவில் கட்டிலில் ஓர் ஓரமாக மூஞ்சியைத் தூக்கிக்கொடு

உட்கார்ந்து 'நீ ஒரு ஆம்பளையா இருந்தால் என்னைத் தொடாதே; தொட்டால் கூச்சல் போடுவேன்' என்று கணவனை பயமுறுத்திற்றாம். அதைப் போகிற வழியில் விட்டுத் திருப்ப முயன்றார்கள். பையன் கிராப் வைத்துக்கொண்டான். பவுடர் போட்டுக்கொண்டான். மைனர் வேஷம் போட்டான். தமிழ் நாவல் வாங்கிக் கொடுத்தான். அவள் மசியவில்லை. ஆறு மாதம் கழித்து 'எங்காத்திலே வந்து இருந்துவிடுங்கள்' என்று அவனை அழைத்துக்கொண்டு சிதம்பரம் போய்விட்டது. மாமனாரின் காபி ஹோட்டலில் அவன் 'காஷியர்' வேலை பார்க்கிறான் இப்போது.

பிள்ளைகளின் துரதிர்ஷ்டத்திற்காகவும் கிழம் கண்ணைத் துடைத்துக் கொண்டது. அது புக்ககத்திற்கு வந்தபோது மாமனார் மாமியாருக்கு, தெய்வத்துக்குச் செய்வது போலத்தான் செய்து போட்டது. மாமியார் கொஞ்சப்பாடு படுத்தவில்லை. கொஞ்சப் பட்டினி போடவில்லை. இரண்டரை வேலியைக் கொண்டு வந்தவள் என்று பயப்படவில்லை.

கிழத்தின் பெரிய மாட்டுப் பெண் – வெந்நீர் கொடுத்துவிட்டுப் போனவள் – செய்து போடத் தயாராயிருக்கிறாள். அவள் சாது. அவன்தான் விடமாட்டான். அவனுக்கு எப்பொழுது பார்த்தாலும் – கால தேசப் பிரக்ஞையே இல்லாமல் – மங்கள விலாசத்தில் இருக்க வேண்டும். மனைவிக்கு மனித சரீரம் இல்லை என்று அவன் நினைத்துவிட்டான் போல இருக்கிறது. கல்லுக் கல்லாக ஏழு குழந்தைகளைப் பறிகொடுத்து நாலு குறையும் கண்டுவிட்டாள் அவள் . . . அவனுக்கு மனம் கோணாமல் நடந்து வருகிறாள். தெய்வப் பிறவியோ என்னவோ?

பீற்றல் பாயில் படுத்து மனசை அலைய விட்டுக்கொண்டிருந்த கிழத்திற்கு வாய்விட்டு அழலாம்போல் இருந்தது. ஆனால் தெம்பு இல்லை. பத்து நாளாக அதற்குக் கடும் ஜுரம். அன்ன ஆகாரம் இல்லை. வெந்நீர்தான் மருந்து, சாப்பாடு எல்லாம். பிள்ளை ரிஷி மாதிரி பற்றற்றுத் திரிகிறான். ஒரு வைத்தியனை அழைத்துப் பார்க்கத் துப்பில்லை.

"பாகு, பாகு!"

கிழம் ஈனஸ்வரத்தில் அழைத்தது. மீண்டும் நா வறட்சி. கண் மேலே கொண்டு செருகிற்று.

"பாகு பாகு, ஏ பாகு, கொஞ்சம் ஜலம் கொண்டு வாயேன்."

கடிகாரம் காலத்தை அளந்து கொட்டுகிறது.

"பாகு, பாகு."

விச் விச் சென்று இருளில் எங்கோ ஒரு சுவர்க்கோழி.

“பாகு, பாகு.”

காமிரா உள்ளில் வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டு, அயர்ந்து போய்க் கனவில்லாத் துயிலில் ஆழ்ந்து கிடந்தாள் பாகு. அவளுக்கு முன்னாலேயே அவன் தூங்கிவிட்டான்!

வெளுக்கிற வேளைக்குச் சாணி தெளிக்க வந்த வேலைக்காரி, “எளுந்து அப்பாலே குந்தும்மா, மெளுகணும்” என்று ஒரு சத்தம் போட்டாள். கிழம் அசையவில்லை.

“யம்மா, எளுந்திரும்மான்னா.”

அருகில் போய்ப் பார்த்தபோது அவளுக்குச் சந்தேகம் தட்டிற்று. கிழத்தின் முகம் சரியாயில்லை. கண் கறுப்பைக் காணோம். மூக்கில் கை வைத்துப் பார்த்தாள். கால், கை எல்லாம் ஜில்லிட்டிருந்தது.

காமிரா உள்ளண்டை ஓடி, “அம்மா, அம்மா” என்று பறந்தாள் வடுவாயி.

பதில் வராததும் உரக்கக் கூப்பிட்டாள்.

“ஏண்டி?”

“ஏண்டியா? வாங்கம்மா சட்டுனு. நல்லாப் படுத்திருக்கீங்க.”

திகிலடைந்து, மேலிருந்த கையை எடுத்து வைத்துவிட்டுப் பாகு ஓடி வந்தாள்.

“அம்மாவைப் பாருங்கோ.”

மஞ்சத்தில் அரைத் தூக்கத்தில் படுத்திருந்தவனுக்கு ஆத்திரமாக வந்தது.

“சனி” என்று வைய வாயெடுத்தபோது “ஐயோ, ஐயோ, அம்மா, வடிவு! ஐயாவை எழுப்புடீ! அம்மா அம்மா, போயிட்டேளே!” என்று அவச் சத்தம் வீறிட்டு எழுந்து அவன் ஊடலை வெருட்டி, உடலை உலுக்கி நிமிர்த்தியது. சோம்பியிருந்த உள்ளம், கலவரத்தில் துடித்தது. நெஞ்சு அடித்துக்கொள்ள, போர்வையைக் காலால் உதறிவிட்டுப் பாதி ஓட்டமாக ஓடி வந்தாள்.

சவத்தின் மார்பின்மீது சாய்ந்து பாகு புலம்பினாள். இடுப்பில் கைகளை

வைத்து அவன் கண நேரம் இமை கொட்டாமல் நின்றான். அதிர்ச்சியில் நின்று போன கடிகாரத்தைப் போல அறிவு ஸ்தம்பித்திருந்தது. முகத்தைப் பார்த்தான்; கண்ணைப் பார்த்தான்; புரண்டு கிடந்த கையைப் பார்த்தான்; வீங்கிப்போயும், சூம்பிப் போயும், வெளுத்திருந்த காலைப் பார்த்தான். பிரமை தெளிந்து அருகே வந்தான். உதட்டைக் கடித்து, அழுகையை அமுக்கி, "அம்மா" என்றான். கோரமாக அந்த ஆண் குரல் தேம்பிற்று. கரகரவென்று கண்ணில் நீர்ப்பெருக்கெடுத்தது. "அம்மா, அம்மா!" என்று துடையை அசைத்தான். அம்மா எங்கே?

திடீரென்று நாலைந்து ஸ்திரீகள் வாசலிலிருந்து வந்து மாட்டுப் பெண்ணைக் கட்டிக்கொண்டு பிலாக்கணத்திற்கு ஆரம்பித்தார்கள். ஐந்து நிமிஷமாயிற்று. கூட்டம் பெருகிற்று. கடைசியில் இடைகழி கொள்ளவில்லை. பெண்மை முழுவதும் திரண்டமர்ந்து ஓலமிட்டது. ஒருவரோடும் சேராமல் ஓரிரண்டு குரல்கள் தமக்கென்று தனிச்சுருதி எடுத்துக் கொண்டு சோகத்தைக் கர்ண கடூரமான கேலி கூத்தாக அடித்தன.

அவனுக்கே இதைச் சகிக்க முடியவில்லை. பக்கத்திலிருந்த வயது முதிர்ந்த ஸ்திரீ.

"பத்துப் பொண்ணு புள்ளை பெத்து

பட்டுப் பாயில்உக் காத்தி வச்சு

பாத்து மகிழ்ந்தாயே,

பீத்தல் பாய்தான் கிடைச்சுதோடீ

படுத்துண்டு செத்துப் போக

பீத்தல் பாய்தான் கிடைச்சதோடீ!"

என்று சொந்தக் கவனம் ஒன்று புனைந்து அவன் மீதிருந்த எரிச்சலை கம்பங்கள், கமகங்களுடன் அழுது தீர்த்தாள்.

"மாமி, மாமி நான் மோசம் போயிட்டேன் மாமி. இப்படித் திடீர்னு போயிடுவான்னு நெனக்கலியே; நீங்க சொல்லிக் காட்டும்படியா ஆயிட்டுதே" என்று விக்கினான் நாராயணசாமி. அதுதான் அவன் பெயர்.

"நாராயணசாமி, அவ்வளவுதான் கொடுத்து வச்சுது. பிணத்துக்காவது நல்ல கிழிவா வாங்கிப் போர்த்து . . . எழுந்து வா, நாழியாச்சு. தம்பி,

தங்கைகளுக்கெல்லாம் சொல்லியனுப்பணும். சாமான்களைத் தருவிக்கணும்” என்று ஊருக்குப் பெரிய கிழவர் கிண்டலை மறந்துவிடாமல் துரிதப்படுத்தினார்.

குடவாசலுக்குப் போய்ச் சின்னப் பிள்ளைக்குச் சிதம்பரத்திற்குத் தந்தி கொடுக்க ஒரு ஆள் ஓடினான். கும்பகோணத்திற்கு ஓர் ஆள் சைக்கிளில் கிளம்பினான். இரண்டாவது பிள்ளைக்குச் சொல்லிவிட்டுச் சாமான் வாங்கி வர, சாமான் ஜாபிதா தயாரானதும் சைக்கிள் புறப்பட்டுவிட்டது.

சைக்கிள் தெருக் கோடி திரும்பியதும் என்னமோ நினைத்துக் கொண்டான் நாராயணசாமி. திடுதிடுவென்று எதிர் வீட்டுக்குள் ஓடி, கொல்லையைக் கடந்து வாய்க்காலையும் தாண்டி சாலைமீது ஏறினான். சைக்கிளும் வந்தது.

“அண்ணாவு, அய்யா வரப்போ, ஒரு போட்டோ புடிக்கிறவனையும் அழச்சிக்கிட்டு வரச் சொல்லு, மறந்து போயிடாமே அழைச்சுக்கிட்டு வரச்சொல்லணும்.” அவன் சொல்லும்போது தொண்டை அடைத்துக் கொண்டது.

“ஏதுக்கு ஐயா?”

அவனுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. கொஞ்சம் சமாளித்துக் கொண்டு, “நீ சொல்லேன்” என்று சுருக்கமாகச் சொன்னான்.

ஒரு மணிக்குப் பிறகு, மண்டை வெடிக்கிற வெயிலில் ஒரு ஸ்பெஷல் பஸ்ஸில் ஒரு கூட்டம் வந்திறங்கிற்று. கும்பகோணத்திலேயே இருந்த பெரிய பெண், அவள் புருஷன், ஐந்து பேரன் பேத்திகள், மூன்றாவது பெண் அவள் குடும்பம், பிறகு கிழத்தின் பிள்ளை, மாட்டுப்பெண் – கடைசியாக ஒரு போட்டோக்காரன் சாமக்கிரியையுடன் – எல்லோரும் இறங்கினார்கள்.

தெருவுக்கு விசேஷப் புதுமையான பஸ்ஸைப் பார்க்க ஒரு சிறுவர் கூட்டம் கூடிற்று. ஸ்திரீகள் வாசலில் நின்று வேடிக்கை பார்த்தார்கள். ‘பீற்றல் பாயில் செத்த கிழம் அல்ல, அதன் கும்பகோணத்துச் சந்ததிகள் கூட்டம் ஒரு கார் கொள்ளும்!’ என்று அறிந்து ஆச்சரியப்பட்டார்கள்.

ஐந்தாறு பேராகத் தூக்கிக் கிழத்தை நாற்காலியில் உட்காரவைத்தார்கள். கிழத்திற்கு ரொம்பவும் பாரி தேகம். ஆனால் நாற்காலியில் வைத்ததும் தலை நிற்காமல் துவண்டு விழுந்தது. அங்கங்கள் விறைத்துவிட்டன. சரிப்படவில்லை. கீழே இறக்கிச் சுவர்மீது சாய்த்துப் பார்த்தார்கள்.

பயனில்லை.

போட்டோக்காரனின் முகம் பேதிக்குச் சாப்பிட்டது போல் இருந்தது.

"சார், ஒரு போஸும் சரிப்படவில்லை, நான் போட்டோ எடுக்க முடியாது" என்றான்.

"ஏன்."

"இந்த உடம்புக்கு இனிமே நல்ல 'போஸ்' வராது. இன்னும் இரண்டு மணி முன்னாலாயிருந்தாலும், ஏதாவது செய்து எடுத்துவிடலாம். இனிமேல் முடியாது."

"எடுத்துப் பாரேன்."

"அது எப்படி முடியும்? முடிந்த மட்டும் பார்த்தாச்சு. நடக்கவில்லை. நல்லா எடுக்காவிட்டால் எனக்கு சமாதானப்படாது. பணத்துக்காகப் பார்க்கிறவன் இல்லை."

"அதுக்காக விட்டு விடுகிறதா? நாங்கள் ஆசையாகத் தானே உம்மை அழைத்து வந்தோம்."

"எனக்கு தெரிகிறது. ஆனால் முடியவில்லையே. நாம் கொடுத்து வக்கல்லேன்னு நெனச்சுக்க வேண்டியதுதான்."

"அப்படியே கிடக்கிற வாக்கில் எடுத்துவிட்டால்?"

"நான் அப்படி எடுக்க மாட்டேன்."

உண்மையில் அந்தக் கிழத்தை – ஆனைக் காலும், பூதவுடலும், தேய்ந்த பல்லும், விழுந்த பல்லுமாகக் கிடந்த அந்தக் கிழத்தை சதை மூட்டையைப் படம் எடுக்க அவனுக்கு அருவருப்பாக இருந்தது. காரணம் அவனுக்கே தெரியவில்லை. பார்த்தவுடனேயே எடுக்கக் கூடாது என்று தோன்றிய எண்ணத்தை நிறைவேற்றுவதில் முனைந்துவிட்டான்.

பிள்ளைக் கிளைகளும் பெண்களும், மாப்பிள்ளைகளும் ஆன மட்டும் மன்றாடிப் பார்த்தார்கள். அவன் இன்னும் பிகுபண்ணிக் கொண்டான்.

"என்னை மன்னிச்சுங்க சார். தம்பி, சாமானைத் தூக்கு" என்று, அழைத்து வந்த சோக்ராவிடம் சொல்லிவிட்டு நடந்தான் போட்டோக்காரன்.

நாராயணசாமிக்கு ஏமாற்றம் – அதைவிட ஆத்திரம், பொங்கிற்று.

“அவன்தான் சொல்லிவிட்டானே. கொடுத்துவைக்கல்லேன்னு நினைச்சுக்க வேண்டியதுதான்னு. அவ்வளவுதான் விடு. காரியத்தைப் பாரு. ஊரில் குஞ்சு குழந்தைகள்ளாம் பட்டினி கிடக்கு” என்று ஊருக்குப் பெரிய கிழவர் சொன்னார்.

புண்ணில் பாய்ச்சிய இந்தக் கோலைப் பொறுத்துக் கொண்டு “இதுக்குக் கூடவா மாமா நான் கொடுத்து வைக்கலை?” என்று தேம்பினான் அவன்.

சந்திரோதயம்

# பிடி கருணை

வாழப்பட்டுசாமி இன்னக்கி புடி கர்ணையும் ஒரு சீப்பு மொந்த வாளப்பளமும் கொண்டாரச் சொல்லிருக்கு. மணிக் கணக்கால்லே உக்காந்திருக்கு, நிட்டையிலே – கல்லிலெ அடிச்சாப்பல! நெஞ்சு வயிறு மூலம்லாம் நெருப்பா எரியுமே! அதுக்குத்தான் மொந்த வாளப்பளமும் புடி கர்ணையும் திங்கிதாம். இந்தச் சாமிங்க என்னல்லாம் கண்டுபிடிச்சு வச்சிருக்கு! புடி கர்ணையை அப்படியே நெருப்பிலே போட்டு வாட்டி, தோலைத் தேச்சிட்டு கையாலே நசுக்கி உதுத்து, தேனோ என்னவோ குளச்சுச் சாப்பிட்டா கண்ணெரிச்ச, மூலம்லாம் இருக்கிற இடம் தெரியாமே பறந்திருமாம். அதே புடி கர்ணையை தண்ணியிலே வேக வச்சு மசியப் பண்ணி சாப்பிட்டா சூடாம். யப்பப்பா! என்னா ரகசியம்லாம் தெரியுது இதுங்களுக்கு! சும்மாவாச் சாமியா ஆயிருக்கு?

அதுவும் இந்தக் கர்ணையாச் சாப்பிட்டா, எந்த மூலம் தான் பறக்காது! காராக் கர்ணையெல்லாம் இதுகிட்ட பிச்சை வாங்கணும். அப்படியாப்பட்ட கிளங்கு. பச்சையாக்கூடத் திங்கலாம். நாக்கிலே ஒரு காரல் காருமா? ஒரு நமைச்சல்தான் ராவுமா? புதுத்தெரு கிளங்கில்லே! பாத்தா கறுப்பும் சொரசொரப்புமா ஆனை கணக்கா இருக்கு. தின்னா வெண்ணெய்! சாமியும் எம்மேலே வெண்ணெயாத்தான் இருக்கு. நான் போனா அது முகத்திலேதான் என்ன பாத்தியம்! என்ன அன்பு! சிரிப்பிலேயே எத்தனையோ சிரிப்பு இருக்கே. எல்லாரையும்தான் பார்த்துச் சிரிக்கிறோம். மனசார, நீ ஒண்ணும் எனக்குக் கொடுக்கவாணாம், செய்யவாணாம், உண்னைக் கண்ணாலெ பார்த்ததே போதும்ங்கறாப்பல சுத்தமாச் சிரிச்சிற முடியுமா யாரைப் பார்த்தாலும்! நாய் வாலை ஆட்டுறாப்பல, குளந்தைங்க சிரிக்கறாப்பல, எப்பவும் சிரிக்க முடியுமா சுத்தமா! ஆனா என்னைக் கண்டவுடனே சாமி சிரிக்கிறது, குளந்தை சிரிக்கிறாப்பலதான்.

நான் என்ன பணம் கொடுக்கிறேனா, பாயஸம் கொடுக்கிறேனா . . . சே! பணமும் பாயஸமும் அதுக்கெதுக்கு? அது என்ன குடித்தனம் நடத்தற ஆம்பளையா? அதுக்கு வேண்டியதெல்லாம் ரண்டு மூணு பிடி கர்ணை, ஒரு மொந்த வாளப்பளம்! தேனுகூட எங்கிட்ட கேக்கறதில்லே, நான் கடைபடாதவன்னு. சாமியோட உடம்பைக் குளிரப்பண்ணணும். அதோட கண்ணையும் மனசையும் குளிரப்பண்ணணும், இந்தப் பிடி கர்ணை.

இந்தக் கடைக்கு வந்து, ஒரு நொடி குந்துனாப்போதும் சாமி. இந்த இடத்திலே அது காலு பட்டாப்போதும். ஒரே ஒரு எள்ளுண்டை இங்க வந்து என் கையாலெ வாங்கித் தின்னாப் போதும். அப்புறம் இந்த அஞ்சுக்கு மூணுலே காலை ஒடிச்சுக்கிட்டு எள்ளுண்டை, கடலை உண்டை விக்குமா விக்குமான்னு ரோதனைப்பட வாணாம்! ஆனா சாமி ஊருக்குள்ற வந்தே ஒரு மாமாங்கம் ஆயிரிச்சாம்!

போன மாமாங்கத்துக்கு ரண்டு வருசம் முன்னாலே வந்திச்சாம். காபி கடை சுப்புணி அய்யர் கடைத் திண்ணையிலே வந்து குந்திச்சாம். சுப்புணி அய்யரு எளுந்து வந்தாராம். "ஏய், எனக்கு ஒரு இட்லி கொடுப்பியா?"ன்னு கேட்டுதாம் சாமி! உடனே உள்ற ஓடிப்போய், சுடச்சுட நாலு இட்லியை எடுத்து, எண்ணெய், கொத்சு, சட்னியெல்லாம் போட்டுக் கொண்ணாந்து வச்சாராம் சுப்புணி அய்யரு. ஒரு பாதி இட்லியைத் தின்னிச்சாம் சாமி. மீதியை அப்டியும் இப்டியுமா எறைச்சுதாம், ரோடு திண்ணையெல்லாம். அப்படி அப்படியே இலையை இளுத்து வாசப்படியிலேயே எறிஞ்சுதாம். இறங்கி நடந்து போயிட்டுதாம். மறுநாள்ளேர்ந்து புடிச்சுதே பார்ப்பம் வியாபாரம் சுப்புணி அய்யருக்கு! கூட்டம் தாக்குப் புடிக்க முடியல்லே. பெரிய கட்டடத்துக்கு மாறிச்சு கடை. ரண்டு ஆளு வேலை செஞ்ச இடத்திலே இருவது ஆளு வந்தது. அதுவும் பத்தலே. அப்புறம் ஓட்டலுக்குத் தனிக் கட்டடமே கட்டிட்டாரு. கட்டடமே எம்பதாயிரம் பொறும்.

பாலு வெளியே வாங்கவாணாம், சுத்தமாயில்லேன்னு சீமைப் பசு, நெல்லூர்ப் பசு, காராம் பசுன்னு ஒரு அறுபது மாடு வாங்கிட்டாரு. எருமை மாட்டிலே பதினைஞ்சு – அதுங்களுக்குத் தனி கொட்டிலு. காசுக்காரத் தெருவிலே பாதி வீடுங்களை விலைக்கு வாங்கினாரு. பிடாரி கோயில் கிட்ட நாப்பது காணி நிலம். உடம்பிலே ஒரு சேப்பு கொடுத்துது, மினு மினுன்னு . . . ம், வந்தா ஒண்ணாவா வரும்? லச்சுமி அப்படி நடந்து போறப்போ அவ காத்து பட்டால் பத்தாது? அப்படில்ல அடிக்கிது சுப்புணி அய்யருக்கு! எல்லாம் அந்த ஒரு வாய் இட்லி செஞ்சிருக்கிற வேலை! சாமி அப்படிக் கொட்டிப்புட்டுப் போச்சாம்!

அந்த மாதிரி ஒரு நாளைக்கு இப்படி வந்து ஒரு பாக்கு வெட்ற நேரம் இங்க குந்தினாப் போதும். வராம இராது சாமி. நான் கால்லே வுளுந்து கும்பிட்டு கேட்டா, மாட்டேன்னு சொல்ல மனசு வருமா அதுக்கு! ஆனா எப்படிக் கேக்கறது! நம்ம பாடுதான் இப்படித் தாளம் போடற பாடா இருக்கே. பிடி கர்ணை வாங்கியாச்சு. மொந்த வாளப்பளம் வாங்கணும்.

காசில்லே! கிழக்கு வெளுக்கக் கடையெத் தொறந்தாச்சு இன்னக்கி. ஒரு கர்ப்பூரக் கட்டி விலை போகக் காணும். ஊரிலே இந்தப் பாழும் காச்சல் வரணுமா? அதுக்காகத் தலைவலி காச்ச மாத்திரைகளை வாங்கி வந்ததிலே மொந்தம் பளத்துக்கு காசில்லாம வாயை அகட்டிட்டுது சுருக்குப் பை. காலையிலே ஏதாவது காசைப் பார்க்கலாம்னு தொறந்து வச்சா, இந்தத் தலைவலி மாத்திரைகூட விக்கல்லே.

மணி ஒம்பதாயிட்டாப்பல இருக்கு . . . வாத்யாரம்மா பிலுக்கு பிலுக்குன்னு பள்ளிக்கூடம் போறாங்க. ராவுஜிகூட அச்சாபீஸுக்குப் புறப்பட்டுட்டாரு.

"செட்டியாரே"ன்னு அவரு கிட்ட வரதுக்கு முன்னாடியே இதோ எடுத்தாச்சு பத்து பீடி. ரண்டணாக்கு வெத்திலை பாக்கு.

"செட்டியாரே, கணக்கு என்னாச்சு?"

தினம் தினம் ராவுஜி இதை ஒரு தடவை கேக்காம போறதில்லே, என்னமோ உடனே கணக்குத் தீக்கப்போறாப்பல.

"ஏன், பணம் ஏதாவது கொடுக்கப் போறீங்களா?"

"பணமா, இன்னக்கி ஏது பணம்; பன்னண்டு தேதிக்கு? . . . என்ன ஆச்சுனு தெரிஞ்சுக்கலாம்ல!"

"என்னாத்த பெரிசா ஆயிடப்போவுது? தினம் பத்து பீடி, போறப்ப ரண்டணா வெத்திலை பாக்கு, வரப்ப ஒரணா வெத்திலை பாக்கு! கடசித் தேதி அன்னக்கித்தான் எளுதிக் கொடுக்கிறேனே, பத்தாதா?"

அந்தக் கணக்கை மாத்திரம் ராவுஜி பாக்கறாரா என்ன? ரண்டு ரூவா கூட எளுதினாலும் எப்படி ஏதுன்னு கண்டுபிடிக்கப் புத்தி இருந்தால்ல? தினமும் நாலு பைசா, அஞ்சு பைசான்னு கூட்டி எளுதறது சரியில்லேதான். ஆனா அவுரு மாசா மாசம் கணக்குத் தீர்த்தா இந்த நாயம் பாக்கலாம். அது ஏது? அவருக்கு தீவுளி போனசு, சங்கராந்தி போனசு, நவராத்திரி அட்வான்சு, பள்ளிக்கூடத்துப் புத்தகம் அச்சடிக்கறப்ப ஓவர்டைம் . . . இப்படி வந்தாத்தானே காசு பேருது? அதுவரைக்கும் காத்துக்கிட்டிருக்கோமே! மாசம் ஒண்ணு ரண்டு கூடப் போனாத்தான் என்னவாம்? வாங்கற மாசத்துக்கு வட்டி!

"பொவயிலை வாங்கியாறச் சொல்லிச்சு அப்பா. அப்படியே ஒரு தேங்காக் கீறும் கருவேப்பிலே கொத்தமல்லியும் வாங்கியாறச் சொல்லிச்சு

அம்மா.”

காளிமுத்து ஆசாரியார் மவளா! . . . சரி, எடுத்துக்கிட்டுப் போ . . . கணக்கு எளுதுவம் . . . பொவயிலை 09 காசு, தேங்காபத்தெ 07 காசு, க – எல கொத்மலி 04 காசு, பூவம்பளம் 08 காசு . . . பூவம்பளம் வாங்கிக்கிட்டுப் போகலே அது. அதுனாலென்ன? என்னமோ எளுதியாச்சு . . . இனிமே அடிக்கக் கூடாது. அப்பறம் சந்தேகம் வரும். எளுதினாத்தான் என்ன குத்தம்? சும்மாவா எளுதறோம்! கடன்ல கொடுக்கறோம்! ஒரு மாசம் நாப்பது நாளுக்கு பைசா வாங்காம கொடுக்கறப்போ கொஞ்சம் கூடச் சொன்னா, கிராக்கியும் கையை உட்டுப் போயிடும் . . . ஒம்பது பைசா வாங்கின புகையிலைக்கு ஒரு பைசா லாபம் கொடுன்னா ‘பேராசைக்காரன்’ அப்படிம்பாங்க. இப்படி வாளப்பளம் எட்டு பைசான்னு எளுதினா கண்டுபிடிக்கத் தெரியாது!

ம்ஹூம் . . . கதவெத் திறந்து வச்சதிலேந்து இப்படியே கடன் கொடுக்கறதும் பத்து எளுதறதுமாவே இருக்கே. நாலணா முளுசாக் கல்லாவிலே விளுந்த பாடில்லே. ராவுத்தர் மவன் வந்து வயித்தே வலிக்குதுன்னு ஒரு சோடா குடிச்சிட்டுப் போனான். மூணு மணி நேரமா இதுதான் ரொக்க வியாபாரம்.

“சிகரெட் இருக்காய்யா?”

“இருக்குங்களே . . . இந்தாங்க . . . ”

“ம்ஹூம் . . . பாக்கிட் வாணாம் . . . ரண்டே ரண்டு போதும் . . . எத்தினி?”

“எட்டு பைசா!”

“ஏன்யா! நீந்தானே பழம்புளி, புதுப்புளி, உப்பு எல்லாம் வண்டிலே வச்சிட்டு தெருவோட வித்திட்டுப் போவே?”

“ஆமாங்க.”

“இப்ப கடையாவே வெச்சாச்சா?”

“அது வெச்சு ஒரு வருசம் ஆயிட்டுதுங்களே! முடியலீங்க! வெயிலு, மளை, குளிருன்னு எல்லாத்தையும் தலையிலே வாங்கிக்கிட்டு எத்தினி காலம்தாங்க சுத்த முடியும்? இருவது வருசம் வண்டியெத் தள்ளி வெயிலும் குளிரும்மாத்தான் தின்னாச்சு. இந்த ஆஸ்த்மா தொந்தரவு ரொம்ப சாய்ஸ்த்தீங்க. போன மார்களிக்கு ஒரேயடியா ஆளைத்

தள்ளிரிச்சு. ஆசுபத்திரியிலே இருவத்தி நாலு நாளு கெடந்தேன். அப்பதான் டாக்டரு சொன்னாங்க. 'இந்தா பாரையா! இன்னமே வண்டி கிண்டி தள்ளிக்கிட்டு தெருவிலே சுத்தினியோ, அவ்வளவுதான். உம் பொண்டாட்டி புள்ளையெல்லாம் தெருவிலே வந்து நிக்க வேண்டியதுதான்'னாரு. அப்புறம் மேலேதான் சீட்டுக்கட்டுன பணம் ஒரு அறுவது ரூவா சேர்ந்திருந்தது. அதெ வச்சுக்கிட்டு கள்ளிப்பெட்டி ஒரு டஜன் வாங்கினேன். இப்படி நாலு வெச்சேன். மீதியே உடைச்சு, அலமாரியாப் பண்ணச் சொன்னேன். கடை அஞ்சுக்கு மூணுதான். நான் வச்சிருந்த வண்டியெவிடச் சின்னதுதான். அது எட்டுக்கு மூணரை. இது அஞ்சுக்கு மூணு. இருந்தாலும் உக்காந்திருக்க முடியுது. அப்ப காசைத் தேடிக்கிட்டு போவம். இரக்கப்பட்டு வந்திச்சு. இப்ப நான் உக்காந்திருக்கேன். நீ என்னைத் தேடிக்கிட்டு வான்னா, சுளுவா வரத்தான் மாட்டேங்குது. என்னாங்க செய்யறது? கூட வர்ற காசு டாக்டருக்குப் போயிட்டிருந்துது. இப்ப அது இல்லெ. நடக்கிறமோ, குந்திருக்கறமோ, நமக்குக் கிடைக்கறதுதான் கிடைக்கும். கிடைக்கிறது கிடைச்சுத்தான் தீரும். தெரியலே நான் சொல்றது . .?"

'ம்ம்ம். நமக்கு என்னா தேவை, என்னா தர்றதுன்னு அவனுக்குத் தெரியும்யா!'ன்னு சிகரெட்டைப் பத்தவச்சுக்கிட்டே போறாரு . . .

அது சரி, ஆண்டவனுக்குத் தெரியும்கிறாரே . . . என்னா தெரியும்? அஞ்சடிக்கு மூணடியிலே காலை ஒடிச்சுக்கிட்டு . . . உப்புலேருந்து கர்ப்பூரம் வரைக்கும், கருவேப்பலையிலிருந்து கடலைப்பருப்பு வரைக்கும், எள்ளுருண்டையிலேருந்து ஏலக்காய் வரைக்கும் வச்சுக்கிட்டு பொளுதன்னிக்கும் இப்படி முழங்காலை முகவாயிலே மொத்திக்கிட்டு உட்கார்ந்திருக்கறேன். ஒரு மனுசனுக்கு இதுதான் தேவையா? இது தந்தாப் போதுமா? இந்த மாதிரி நாங்கூடத்தான் பேசுவேன், எங்கப்பாரும் என்னைப் படிக்கவச்சு, இப்படிச் சொக்கா, குளாயெல்லாம் மாட்டி, 'வேலைக்குப் போடா, பேனாப்புடிச்சு எளுதுரா'ன்னு சொல்லியிருந்தா! . . . ம் ஹும். அப்பவாவது காலாற நடந்துகிட்டாவது இருந்தோம். அட வெயிலோ, மளையோ – காலும் கையும் அசஞ்சுது. இந்த மாதிரி உக்காந்து உக்காந்து சோகை புடிக்கலியே! நாலு தெரு சுத்தறப்ப, ஒரு ஊருகோலம், ஒரு கரகம், ஒரு சண்டை, ரண்டு கோவிலு, நாலு சேதி இப்படி எத்தினியோ கண்ணிலே படும், காதிலெ விளும், ஒரு சைக்கிள் மோதும், ஒரு பஸ்காரன் திட்டுவான், ஒரு நாய் குலைக்கும் . . .

யாரு இது வாண்டு? பொறந்த மேனிக்கு வருது! பானை வயிறு,

பரட்டைத் தலை, அதுலெ ஒரு பின்னலு, ஒளுகு மூக்கு, மேலெல்லாம் சாம்பப் பூத்து . . . பெத்தவளுக்கு இருக்காது கொஞ்சம் கருக்கன்னு பாப்பமேன்னு! இந்தப் பரட்டையைச் சீவி, இந்தச் சாம்பலைத் தேச்சுக் குளுப்பாட்டி மூக்கைத் துடச்சு, ஒரு துண்டைக் கட்டி அனுப்பப்படாது . .! வர்ணம் பூசறானே, பெயிண்டர் ராமலிங்கம் – மவன் மாதிரில்ல இருக்கு. ஆமடையான் ஊடு ஊடாப் பூந்து டப்பா டப்பாவா வர்ணம் பூசறான். உனக்கு ஒரு சவுக்காரக் கட்டிக்கி நாதியில்லியாம்மா, உம் மவன் மேலே இருக்கிற சாம்பலையும் புளுதியையும் கழுவி விடறதுக்கு . .?

“என்னடா ஒணும்!”

“இது . . . இது . . . ”

“எள்ளுண்டையா – இந்தா.”

“அது! அது!”

“அதுவும் வேணுமா, கடலை மிட்டாயா – இந்தா.”

அட! என்னடா ஒரு ரூவாயைக் கொடுக்குது! சரி . . . இருக்கட்டும். சரி, போ . . . பேசக்கூடத் தெரியல. இதுகிட்ட ஒரு ரூபாயைக் கொடுத்தனுப்பனா ஒரு பொம்பிளை. அப்படில்ல இருக்கு காசு மிதப்பு– இவங்களுக்குத்தான்யா காலம் இப்ப!

அது பாக்கி சில்லறைகூட வாங்கிக்காமே போவுது . . . போவட்டும் போவட்டும் . . . மம்புட்டி புடிச்சா நாலு ரூபா, பிரஷ் புடிச்சா அஞ்சு ரூவா ஆறு ரூவா! இப்படி ‘எள்ளு முட்டாயி வாங்க முதல் வேணுமே, கண்ணாடி டப்பா வேணுமே’ன்னு கவலை கிடையாது! சரி . . . வத்த மொளகா, பட்டைச் சோம்பு வாங்கக்கூட ஆளைக்காணும். ஊட்டுக்குப் போயி சுடுதண்ணி ஒரு வாயி குடிச்சாரலாம்.

யாரங்கே . . . இதோ பாரு. இதோ ஒரு ரூவா இருக்கு. மார்க்கட்டுக்குப் போயி ஒரு டஜன் மொந்த வாளப்பளம் வாங்கியா . . . சுருக்கப் போய் வரணும். எட்டணா ஆகும். மீதியை பத்திரமாக் கொண்டா . . . கடையைத் தொறந்து போட்டு வந்திருக்கேன். யாருமில்லே, வரேன். நீ போறப்ப ஒரு லோட்டா சுடுதண்ணி கொண்டு வச்சிட்டுப் போ. ரொம்பத் தாகம். இருக்கிற சூடு போதும் . . . இதுக்காக அடுப்பை மூட்டிக்கிட்டு உக்கார வாணாம். மார்க்கட்டுக்கு அப்புறம் நாளியாயிடும். நீ வந்தப்பறம்தான் நான் குளிச்சிட்டுச் சாமியைப் போயி பார்க்கணும்.

“என்னா செட்டியாரே . . . புள்ளைகிட்ட முட்டாயி கொடுத்தீங்க, சில்லறையைக் கொடுக்கலியே!”

“சில்லறையா? ஏது சில்லறை?”

“ஒரு ரூவா கொடுத்தனுப்பிச்சேனே?”

“ஒரு ரூவாயா. அத வந்து இது இதுன்னு கையைக் காமிச்சுது. ரண்டு முட்டாயி கொடுத்தேன்.”

“காசு குடுக்காமியா கொடுத்தீங்க?”

“நீ அப்புறம் குடுக்கப் போறேன்னு நெனச்சிட்டுக் குடுத்தேன் . . . ரூவாயா கொடுத்தனுப்பிச்சே அது கிட்ட?”

“ஆமாம். ஒரு ரூவா கொடுத்தனுப்பிச்சேனே!”

“கடுதாசி ரூவாயா? காசு ரூவாயா?”

“காசு ரூவா.”

“நல்ல பொம்பள போ. வாயைத் தொறந்து பேசக் கூடத் தெரியலெ. அது கிட்டவாவது ரூவாயைக் கொடுத்தனுப்பவாவதும்மா . .! ஏண்டா தம்பி! எங்கடா போட்டே ரூவாயை?”

“பப்புருமுட்டு டப்பா மேலே வச்சேன்னு விரலைக் காமிக்குது! நீங்க பார்க்கவேல்லேங்கிறீங்களே.”

“வச்சா மீதியைக் கொடுத்திட்டுப் போறேன். நான் வச்சுக்கிட்டு என்னா செய்யப் போறேன்? நீ தான் பாரேன். இதோ பாரு கல்லா பொட்டி . . . பாத்துக்கிட்டியா! உன் ரூவா கெடக்கா பாரு. பதினாலு பைசா இருக்கு. காலமே பிடிச்சு இதான் போணி . . . உன் ரூவா எனக்கென்னாத்துக்கு! போம்மா, தேடிப் பாரு. அது வந்த வழியே தரையிலே பாத்துக்கிட்டே போ . . . உன் வீட்டு வாசல் வரைக்கும் பாரு. அது ஓரமாத்தான் நடந்திட்டு வரும். குப்பையெல்லாம் கிளறிகிட்டே வரும். மினுமினுன்னு ஏதாவது இருந்தா பொறுக்கிக்கிட்டே போகும். ஓரம்லாம் பார்த்துக்கிட்டே போ . . . ”

“என்னாது?”

“சுடுதண்ணியா! வையி!”

“என்னா தேடுது அது!”

“ஏதோ காசு கொடுத்தனுப்பிச்சுதாம், குளந்தைகிட்ட. அது எங்கியோ போட்டிடிச்சு . . . பதினாறு முளம் சேலை கட்டிக்கிட்டு, இதுக்குக் கூடவா புத்தியிராது! பச்சைப் புள்ளையிட்டவா காசைக் கொடுத்து அனுப்புவா ஒருத்தி? சரி . . . நீ போ . . . மொந்தம் பளத்தை வாங்கிக்கிட்டு சீக்கிரமா வந்து சேரு . . . என்னாம்மா, உன் வீடுவரைக்கும் பாத்திட்டியா!”

“பாத்தாச்சு. எந்தக் காளியாயிலே போறவன் எடுத்துக் கிட்டானோ . . . சால் கணக்கா வயித்தைப் போட்டுக்கிட்டு நடக்குது பாரு.”

“ஊ . . . ஊவ் . . . அம்மா அம்மா . . . ”

“என்னாம்மாது புள்ளையை இப்படி அடிச்சுட்டே. இப்படியா அடிப்பாங்க? கீள விளுந்து துடிக்குது இப்படி! இப்படியா அடிக்கிறது புள்ளையே! முதுகுலே விரல் பதிஞ்சு தடிச்சுப் பூட்டுதே . . . நீ யோசனையில்லாம பண்ணினதுக்கு அதுவா இப்படித் துடிக்கணும்? பச்சைப் புள்ளை . . . ஏம்மா . . . ”

“பின்ன என்னய்யா! கல்லு மாதிரி ஒரு முளு ரூவாயை துலைச்சுப்புட்டு நிக்கிது.”

“ஊவ் ஊவ்!”

தூக்க முடியாம, ரண்டு வீசை பிடி கர்ணை, ஒரு சீப்பு மொந்தம் பளத்தை தூக்கிட்டு, என்னத்துக்காகப் போறோம் இப்படி . . . இந்தப் பதைபதைக்கிற வெய்யில்லே! சாமி இதெல்லாம் தின்னுதுன்னா நமக்கென்ன வரப்போவுது! அந்த ஆளு சொன்னாப்பல, நமக்கு என்னாத்தை கொடுக்கதுன்னு ஆண்டவனுக்குத் தெரியாதா! ஏன் இப்படி சித்து, பண்டாரம், சாமின்னு அலைஞ்சிக்கிட்டேயிருக்கோம்... அப்படின்னு நெனச்சு திரும்பிப் போகலாம்னா அதுவும் முடியலெ. காலு சாமிகிட்டதான் இளுத்துக்கிட்டுப் போவுது.

சாமிகிட்ட போகணும் போலவும் இருக்கு. போக வாணாம் போலவும் இருக்கு. ஒரு பக்கம் போங்குது. ஒரு பக்கம் திரும்பிப் போங்குது.

யப்பா! என்னா அடி! என்னா அடி! பச்சைப் புள்ளை! அப்படியே விளுந்து பல்லிவாலு மாதிரி அது துடிச்ச துடி . . . தெருப் புழுதியிலே பெரண்டு! என் முதுகிலெ சுளீர்னுதே பார்ப்பம். அடெ! என்னை அடிக்க முடியலேன்னுதான் புள்ளையை அடிச்சாளா அவ? அடி என்னுது! முதுகு புள்ளையுது!

சாமி என்ன இன்னிக்கு சாவடித் திண்ணையிலேயே உக்காந்திருக்கு? ஆகா! என்ன சிரிப்பு! வெள்ளைச் சிரிப்பு! என்ன பாத்தியம்! குடிக்கிற தண்ணி மாதிரில்ல இருக்கு, சொகம்மா, ருசியா, இதம்மா!

“வாய்யா செட்டியாரே.”

“வந்தேனுங்க . . . ”

“போதும் போதும் . . . எத்தினி தடவை விளுந்து கும்பிடறது. மூணு தடவை போதாதா! . . . என்னா மூட்டை?”

“பிடி கர்ணை, மொந்த வாளப்பளம்! புதுத்தெரு கர்ணக் கிளங்கு, வெள்ரிப் பிஞ்சுதான். ஒரு காரல், ஒரு நமைச்சல் எடுக்காது.”

“சாமி மேல கொள்ளை விசுவாசம் உனக்கு . . . வியாபாரம் எல்லாம் எப்படி நடக்குது?”

“இருக்கு!”

“குளந்தை, சம்சாரம்லாம் நல்லபடியா இருக்கா?”

“ஏதோ தள்ளிக்கிட்டுப் போவுது . . . மொந்தம் பளத்தை என் கையாலெ உரிச்சுக் கொடுக்கிறேனே!”

“ம் . . . ரொம்ப ருசியாயிருக்கே . . . இந்த ஊர்ப் பளமா இது? அமிர்தமா இருக்கு! . . . ஏன் செட்டியாரே! ஏன் இப்படி கண்ணாலே ஜலம் விடறே! ஏம்பா! என்னாது! ஏன் இப்படி விசும்பறே! . . . சொல்லுப்பா . . . திங்கவும் சொல்லிட்டு, இப்படி அழுவானேன்?”

“சாமிக்கு நெசமாவே அந்தப் பளம் தித்திக்குதா! ருசியாயிருக்கா?”

“ஏன் அப்பன் படைப்பிலே ருசியில்லாத பண்டம் ஏது? எட்டி, பாகல்கூட இனிக்கத்தானே செய்யுது! மண்ணுகூட இனிப்புதான். பட்டினிகூடப் பரமான்னம் தான்”.

“சாமி நான் பாவம் பண்ணாம, ஆகாத்யம் பண்ணாம இருக்கும்படியா எப்ப செய்யப் போவுது சாமி?”

“என்ன ஆகாத்யம் பண்ணினே?”

“தினமும் பண்ணிக்கிட்டே இருக்குறேன். மண்ணெண்யெயை ரண்டு டப்பா தண்ணியாவது கலக்காம விக்க மனசு வல்லெ. அஞ்சு ரூவாக்கு சாமான் கொடுத்திட்டு ஏளு ரூவா கணக்கு எளுதறேன். சாமிக்கு மொந்தம்

பளம் வாங்கக் காசில்லெ இன்னக்கி. ஒரு குளந்தை கையிலேந்து ஒரு ரூவாயை ஓசைப்படாம திருடிப்புட்டேன். இல்லவே இல்லேன்னு கொடி கட்டிப்புட்டேன். பெத்தவ பேய் மாதிரி பிள்ளையை அறஞ்சா . . . தூக்கிகிட்டு போய்ட்டா. என் உள்ளெல்லாம் வெந்துக்கிட்டிருக்கு . . . ”

“யாரோ செய்யறாங்க . . . யாரோ படறாங்க.”

“நான்தான் செஞ்சேன். புள்ளெ பட்டுது. எனக்கு வாயெல்லாம் கசக்குது. வயித்தெல்லாம் கலக்குது. தலை கனக்குது. பொட்டு வலிக்குது. நிக்கக்கூட முடியலெ அதை நெனச்சா! இந்தப் பாவம் எல்லாம் நான் பண்ணாம இருக்க சாமி ஏதாவது பண்ணக் கூடாதா?”

“சாமி என்ன செய்யணும்?”

“சாமி வந்து . . . ஒரு நொடி என் கடையிலே வந்து குந்திட்டுப் போனாப் போதும்.”

“என்னாத்துக்கு?”

“வவுத்துக்குப் பத்தாமத்தானே இந்தப் பாவம்லாம் பண்றேன்.”

“சாமி வந்து குந்தினா?”

“எனக்குத் தெரியும். நான் தொட்டதெல்லாம் பொன்னா ஆயிடும் . . . ”

“பாவமெல்லாம்?”

“அதுக்கும் சாமிதான் வழி செய்யணும்.”

“நான் வந்தாப் பணம் வருமா?”

“ஒரு வாய் இட்டலி சுப்புணி அய்யிரைக் குபேரனாக்குன கதை உலகம்லாம் பொடை பொடைச்சிருக்கே!”

“நீ கர்ணைக் கிளங்கை எடுத்திட்டு வரப்பவே தெரியும். ஊர்லெ யோக்கியமா இருக்கத் தெம்பில்லாத பயலுவள்ளாம் அப்படி ஒரு சேதியைக் கிளப்பிட்டானுவ. சாமிக்கு சாவடியை விட்டும் நகர முடியாம போச்சு அதுனாலெ. சுப்புணி அய்யன் நல்ல இட்டலியா வித்தான்! நல்ல எண்ணெயா ஊத்தினான்! நல்ல காபியா கொடுத்தான்! அவன் வேலையை ஒழுங்காப் பாத்துக்கிட்டிருந்தான். உம் மாதிரி புடி கர்ணையை தூக்கிட்டா அலையறான்?”

“சாமி அவ்வளவு எளிசாச் சொல்லுதே!”

“போய்யா, என் வேலையைக் கெடுக்காதே . . . போய்யான்னா!”

“சாமி.”

“போமாட்டியா! நான் போகணுமா?”

படார்!

சாமி கதவைத் தாப்பாப் போட்டுட்டுதே . . . நான் உத்தரவு வாங்கிக்கிட வேண்டியதுதானா?

“சாமி, இந்தப் பச்சைப் புள்ளெயை நினச்சா என் உடம்பிலே காச்ச வராப்பல ஆயிடுதே . . . நான் என்ன செய்வேன்? ஒண்ணுக்கு நாலா அவங்க வீட்டிலெ கொண்டு போட்டுடறேன்.”

“போடாதே. அப்பறம் மறந்து போயிடும். தினம் அடி வாங்கிகிட்டேயிரு . . . போ போ . . . இங்க நிக்காதே . . . என்னய்யா நிக்காதேங்கிறேன் . . . ”

அப்பா! நல்ல அடி! சன்னல் வளியா ஒரு பிடி கர்ணையை எடுத்து குறி பார்த்து . . . அப்பா! என்னா குறி! டமார்னு மண்டையிலே ஈயக் குண்டு கணக்கா அது அடிச்ச அடி!

“சாமி! இந்தப் பிடி கருணையையாவது எடுத்திட்டுப் போறேன்.”

“போ . . . போ . . . இன்னமே இங்க வராதே.”

**ஆனந்த விகடன் தீபாவளி மலர், 1964**

# சந்தானம்

சங்கு ஊதிற்று. முதலியார் சட்டென்று எழுந்து நின்று ஜன்னலண்டை போய் பார்த்தார். எதிர்வீட்டுக் காம்பவுண்டில் முப்பது நாற்பது பேர் புறப்படத் தயாராக நின்றுகொண்டிருந்தார்கள். வாசல் கேட்டுக்கு வெளியே தாதன் குள்ளமாக முண்டாசு கட்டி, பொருக்குத் தட்டிய வெண்சங்கைக் கன்னம் உப்ப ஊதிக்கொண்டேயிருந்தான். காம்பவுண்டுக்குள் கூட்டத்திற்கு நடுவில் வெள்ளை வெளேர் என்ற முண்டாசும் அரையில் வெண்பட்டும் ஆக இரண்டு கைகளிலும் வெள்ளைத் துணி மூடிய பெரிய தட்டு ஒன்றை ஏந்திய வண்ணம் முத்தையாவின் பெரிய பையன் நின்றுகொண்டிருந்தான். வெள்ளைத் துணியை மீறி பச்சைத் தென்னம்பாளை வெளியே சற்று நீட்டிக்கொண்டிருந்தது. பக்கத்தில் சின்னப் பையன் எல்லப்பன் நின்றுகொண்டிருந்தான். அவனுக்கும் ஒரு வெள்ளை முண்டாசு, அரையில் வெண்பட்டு. முத்தையா காலமாகிப் பத்துப் பன்னிரண்டு நாட்கள் ஓடிவிட்டன. கடைசி ஈமக்கிரியைக்காகக் கூட்டம் புறப்பட்டுக்கொண்டிருந்தது.

தாதன் நகர்ந்தான். பெரிய பையன் தொடர்ந்தான்; கூட்டமும் தொடர்ந்தது. அக்கம்பக்கத்து வீட்டு வாசல்களிலும் ஆணும் பெண்ணுமாக வேடிக்கை பார்க்க வந்து நின்றார்கள். முதலியாரின் மனைவியும் வந்து அவர் பக்கத்தில் நின்றுகொண்டாள்.

“எல்லப்பனா அது! அடேயப்பா! முண்டாசு, பட்டு வேட்டி! எத்தினி லட்சணமாயிருக்கு புள்ளெ! கருமாதிக்குப் போறாப்பலவா இருக்கு! பட்டம் கட்டிக்கல்ல கிளம்பினாப்பல இருக்கு!”

சங்கொலி நீண்ட குழாய்போல் கேட்டது. மெதுவாகத் தேய்ந்தது.

முதலியார் உட்கார்ந்துகொண்டார். எதிர் நாற்காலியில் மெத்தைமீது படுத்திருந்த பூனை அவர் உட்கார்ந்த அரவம் கேட்டு, தலையைச் சற்று நிமிர்த்திப் பார்த்துவிட்டு, மீண்டும் தலையைப் போட்டு கண்ணை மூடிக்கொண்டது.

அந்த வருத்தத்துக்கு நடுவில் முதலியாருக்கு ஒரு புன்னகையும் வந்தது. அவர் மனைவி பாதியில் விட்டுவிட்டு வந்த அடுக்களை வேலையைக் கவனிக்க உள்ளே போனாள்.

கண்டுபிடித்தார்கள்! உற்றுப்பார்த்தார். வேறு யாருமில்லை. நம்நாட்டு மனிதர்கள் தான். பல காந்திகள் சொன்ன தரித்திர நாராயணர்கள், கரீபிஹடாவ்களின் பூஜாவிக்ரகங்கள்.

இப்படி சாயங்காலம் தூங்குகிறவர்கள் எப்போது எழுந்திருப்பார்கள்? எங்கே சாப்பிடுவார்கள், சாப்பிட்டு விட்டு எங்கு போவார்கள்? மறுபடியும் எங்கு படுப்பார்கள்? எத்தனை மணிக்குத் தூங்குவார்கள்?

நடைக்கு மீண்டும் தடை! கடை வாசலில் கும்பல்! கும்பலின் கோடியில் தலைக்கு மேல் எழுதியிருந்தது. சுத்த தேசிய நெய் ஜிலேபி. ஸ்தாபிதம் **1786. 1977**லிருந்து கழித்ததில் இருநூறு வருஷத்திற்கு ஒன்பது வருஷம்தான் குறைச்சல். இந்தி பத்திரிகைத் துணுக்குகள், எழுதின நாற்பது பக்க நோட்டுப் பக்கங்கள் – என்று பல தினுசுக் காகிதங்களில் ஒவ்வொரு ஜிலேபியாக வைத்துக் கடித்த வண்ணம் மனிதர்கள் கும்பலிலிருந்து பிதுங்கி வந்து கொண்டிருந்தார்கள். ஜிலேபி பசும் பொன் நிறமாகத் தளதளத்தது. மெல்லுகிற ஓசைகளில் மொரமொரப்பு. கவர்ச்சி தாளாமல், மெதுவாகக் கும்பலில் பிதுங்கிக் கொண்டார் தேவுடு. இரண்டு நிமிஷத்தில் கடைக்காரனிடம் நெருங்க முடிந்துவிட்டது. ஒரு நூறு கிராம் ஜிலேபியை வாங்கிக் கொண்டு பிதுங்கி வந்தார். வாயில் போடுவதற்குள் ஈக்கள் பிடுங்கிவிடும்போல் உதட்டை முற்றுகை இடவே காகிதத்தால் நன்றாக மூடி ஈக்கள் இல்லாத இடமாகப் பார்த்து மேலே நடந்தார் தேவுடு.

மணிக்கூண்டு சதுக்கத்தில் பல்குச்சி, பாய்கள் விற்கிறவர்கள் வரிசைக்கு இப்பால் தொழு நோய்க்காரர்கள் பாவ்ஜி பாவ்ஜி என்று முப்பது பேர் அரற்றினார்கள். அதற்குள் ஜிலேபியைத் தின்று விட்டார் தேவுடு. தின்னாவிட்டாலும் கொடுப்பதாக இல்லை அவர். தொழுநோய்க்காரர் களுக்குத் தனிக் காலனி வைத்து வைத்தியம் சாப்பாடு எல்லாம் நடக்கிறது. கொண்டு விட்டாலும் தப்பி ஓடி வந்து தெரு மத்தியிலும் ஓரத்திலும் இருந்து நோய் பரப்புகிறவர்களுக்கு எதற்கு இரங்க வேண்டும்! ஆனால் காலனியில் கெடுபிடி அதிகமோ என்னவோ! வாய் ருசிக்க அறுசுவை கிடைத்திராது. பிச்சை உணவில் அறுபது சுவை இருக்கும் . . . என்னவோ, ஜிலேபி தீர்ந்துவிட்டது.

பாமர் கம்பெனிக்கு மாடிப்படி ஏறிப்போனார். மாடிப் படியிலும் ஏறுகிற, இறங்குகிற நடமாட்டம். பாமர் கம்பெனி ஒன்றரை ஆள் அகலம். நீளமான ஓட்டம். அகலத்தில் பாதியை வரிசையாக கண்ணாடி அலமாரிகள், அதற்குப்பின் விற்பவர்களாக அடைத்திருந்தது. மூன்று

கோடை காலப் பகல் சேர்ந்து வந்தது போல வாழைத்தண்டு விளக்கு வெளிச்சம். கி.பி. 2050 ஆக இல்லாவிட்டாலும் கி.பி. இரண்டாயிரத்தின் கூட்டம் அகப்பட்ட இடுக்குகளைப் பிடித்துப் பிடித்து குனிந்து குனிந்து பார்த்தார். உலகத்துக் கடிகாரம் ஒன்றும் மிச்சமில்லை. முகமில்லாத கடிகார அலமாரியில் எள் விழாத கும்பல்.

யாரும் யாரையும் கவனிப்பதாகத் தெரியவில்லை. இரண்டு கடிகாரத்தைப் பைக்குள் போட்டுக் கொண்டாலும் தெரியாது.

“ரைனாசரஸ் வாட்ச் ரிப்பேர் பண்ணுவீர்களா?” என்று கடைசியில் இடம் பிடித்து ஆள் பிடித்துக் கேட்டுவிட்டார் தேவுடு.

“ரைனா இப்பல்லாம் வரதில்லை. அதே மாடல்தான் மூனி வாச்சு” என்று இன்னொரு அலமாரியண்டை செல்ல முயன்றான் அவன்.

“வேண்டாம் வேண்டாம் ரைனாசரஸ் கடிகாரம் ரிப்பேர் பண்ண முடியுமானு கேட்டேன்.”

“ரைனாசரஸா! அதெல்லாம் இப்ப வரதேல்ல சார். ரிப்பேருக்கே அதை வாங்கறதில்லே. நம் வாச்சுங்களே இப்ப ஏற்றுமதியாவுது – ரைனாவை யார் தருவிக்கிறாங்க இப்பல்லாம்.”

சிறிது நின்றார் தேவுடு.

“யாருமே செய்ய மாட்டாங்களா?”

“நாங்க தான் இந்த ஸிட்டியிலேயே செஞ்சுகிட்டிருந்தோம். நாங்களே இல்லேன்னா வேற யாரு செய்வாங்க?”

“என்ன பழுதுன்னாவது சொல்லுங்களேன்.”

“இப்ப சட்டுனு சொல்ல முடியாது சார்.”

“கொஞ்சம் பாருங்க சார். நான் மிதிலாபுரியிலேர்ந்து வரேன்.”

“கொடுங்க” என்று அலுத்துக்கொண்டே வாங்கிப்போனான். ஒரு நிமிஷம் கழித்துத் திரும்ப வந்தான்.

“கொஞ்சம் காத்திருக்கணும் சார்.”

“நிச்சயமா.”

கொஞ்சம் என்பது ஒரு மணி நேரம் என்று ஏழுமணிக்குத் தெரிந்தது.

“லீவர் உடஞ்சிருக்கு சார். ஒண்ணும் செய்ய முடியாது” என்று கடிகாரத்தைத் திருப்பிக் கொடுத்தான். “காரண்டி இருக்கா? எங்க வாங்கினீங்க?”

“நான் வாங்கலே. என் சிநேகிதர் ஒருத்தர் ஹாங்காங்லேந்து வாங்கிண்டு வந்து கொடுத்தார்.”

“அப்ப அங்கதான் அனுப்பணும்.”

“இது ரொம்ப ஒஸ்தி வாட்சா?”

“ஒஸ்தி என்ன, மட்டம் என்ன? எல்லா வாட்சும் ஒஸ்திதான். ரைனாசரஸ் எம் மாதிரி ஆளுங்கல்லாம் வாங்கி கட்டிக்கிறது. அமெரிக்காவில் சாதாரண வசதியிருக்கறவங்க வாங்கி கட்டிப்பாங்களாம். அந்த ஊர்லே ஏழைன்னா, நம்ப ஊர்லே நடுத்தரமான மனிசன். அவ்வளவுதான்.”

தேவுடு சிரித்தார்.

“அப்ப ஒண்ணுமே செய்ய முடியாது?”

“முடியாது. யாராவது சிநேகிதங்க ஹாங்காங் போனா அனுப்பிச்சுப் பாருங்களேன்” என்று அடுத்த ஆளைக் கவனிக்கத் தொடங்கினான் அவன். அவன் இத்தனை நேரம் முகம் கொடுத்ததே பெரிது.

ஹாங்காங் யார் போகப் போகிறார்கள்? “தொலைஞ்சுது நூத்தம்பது ரூபா. இன்னமே சுண்ணாம்புக் காண்டான்தான்.”

தேவுடு வெளியே வந்து நடைபாதையில் மாட்டிக்கொண்டார். இப்பொழுது கூட்டம் கி.பி. 2100ஆகவே வளர்ந்துவிட்டது. கீழே இறங்கினார். வீதி மத்தியின் சிமிண்டு வகிட்டில் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். வயிறு குழைகிற தூக்கம். அந்த மாதிரி பல தூக்கங்கள்.

“இந்த கடிகாரம் ஓடாவிட்டால் என்ன மோசம் போய்விட்டது?” தேவுடுவுக்குள் இந்தக் கேள்வி எழுந்தபோது அவருக்கு வியப்புத் தாளவில்லை. ஒரு பெரிய வெளிச்சம் உள்ளுக்குள்ளே அடித்தாற்போல் ஒரு பரவசம். உடம்பு முழுவதும் அது ஓடுகிறாற் போலிருந்தது. இப்படி பரவசம் வரும்போது அவருக்குக் கழிவிடத்திற்குப் போக வேண்டும் போலிருக்கும். சிரமப்பட்டு நினைவை அதிலிருந்து அகற்றி வெளிச்சத்தை மட்டும் நினைத்து நிறைந்து கொண்டு நடந்தார்.

“மணி என்ன பாவ்ஜி!” என்று குரல் வந்தது. ஒரு சீப்புக் கடைக்குப் பக்கத்தில் சற்றுத் தள்ளினாற் போல முட்டி போட்ட ஒரு ஆள்தான் கேட்டான். பக்கத்தில் ஒரு தடி, ஒரு காலி வனஸ்பதித் தகரக்குவளை. கிழவன். ஒரு கண் இல்லை.

“ஏழே கால்” என்று குத்துமதிப்பாகச் சொல்லி வைத்தார் தேவுடு.

“மணி தெரிஞ்சு என்ன பண்ணப் போறே?”

“எட்டு மணிக்கு சப்பாத்தி கொடுப்பாங்க அனுமான் மந்திர்லே, அதுக்குத்தான்.”

“அப்படியா! இந்தக் கடிகாரத்தை வச்சுக்கோயேன். மணி பார்த்துப் பிச்சை கேட்கலாம்” என்று ரைனாசரஸை உருவி நீட்டினார் தேவுடு.

“பைசா கொடுங்க சாமி. இது என்னாத்துக்கு?”

“வைச்சுக்கோ பரவால்லே.”

“பாவ்ஜி! என்ன நினைச்சுட்டீங்க; போலிஸ்காரன் பிடிச்சு, கொட்டடிலே போட்டுச் சாக அடிச்சிரலாம்னு பார்க்கிறீங்களா!”

பக்கத்திலிருந்த ஒரு பொம்பளைப் பிச்சைக்காரி சிரித்தாள். “போலிஸ்காரான் அடிச்சு செத்தா என்னவாம்! லாலாஜிக்கு ஒரு சப்பாத்தி மிச்சம் தினமும்.”

“நீ சும்மா இர்ரீ ரண்டி” என்று சிரித்துக்கொண்டே கம்பைத் தூக்கி அவள் பக்கம் ஓங்கினான் கிழவன்.

ரைனாசரஸை மீண்டும் மணிக்கட்டில் மாட்டிக்கொண்டு நடந்தார் அவர். பைசா கொடுக்க மறந்து விட்டது.

“இந்தக் கடிகாரத்தைப் பழுது பார்ப்பது முக்கியமில்லை” என்று மார்க்ஸ், ப்ராய்டு, ஜிட்டு, மகாத்மா காந்தி எல்லாரும் அவர் காதில் உபதேசம் செய்து கொண்டு வந்தார்கள்.

ஹாங்காங்குக்கு யாராவது சிநேகிதன், அல்லது சிநேகிதனுக்கு சிநேகிதன் எப்போதாவது போகாமலிருக்க மாட்டான் என்று அந்த உபதேசங்களுக்கிடையே அவர் குரலும் கேட்டுக் கொண்டிருந்தது. போகிற வழியில் மறுபடியும் சுத்த தேசிய நெய் ஜிலேபிக் கடைக் கும்பலில் பிதுங்கினார் தேவுடு. மனைவி மீதும் அவருக்கு மனிதாபிமானம். இந்த சாயங்காலத்தைப் பற்றி அவளுக்குச் சொன்னால், இரவு மூன்று மணி

வரை பேசுவாள் — பெண் மொழியும் பொன் மொழியுமாக.

**கணையாழி, அக்டோபர் 1977**

# மனநாக்கு

“ஆறரைன்னா ஆறரைதானே? எட்டரை மணி இல்லையே?”

“என்னது?”

“அது தானே உங்க வழக்கம்! ரண்டு மணி காக்க வைக்கிறது. அலுத்துப்போயி, இனிமே இன்னிக்கு இல்லைன்னு தீர்மானம் பண்றபோது காலிங் பெல் கேட்கும் – ஒன்பது மணிக்கு. பஸ்ஸு கிடைக்கலே, டாக்ஸி கிடைக்கலேன்னு என்னவோ சொல்லிண்டே உள்ளே வரது. ஏதாவது கொடுத்தா, பசி இல்லே, ஹெவியா டிபன், வயிறு பம்னு இருக்கு, அப்புறம் அது இதுன்னு அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு வார்த்தை. அப்புறம் ‘மணி என்ன ஆச்சு? ஏம்பா! ஒம்பதரையா!’ன்னு எழுந்து முள்ளு மேலே நின்னுண்டு பறக்கிறது” –

“நான் உக்காந்திண்டிருக்கிறதும் முள்ளு மேலே தானே”– என்று அவன் நமுட்டுச் சிரிப்புடன். துணிச்சலான பதில் என்று பயந்து அவன் நாக்கைக் கடித்துக் கொண்டது . . .

“எப்பவும்தான்” – என்று வந்தது பதில். அதை, மறித்து, “இல்லை. உங்க முன்னாடி இருக்கறபோது தான்” என்று சொல்லப்பார்த்தான் அவன். ஆனால் சொல்ல இடைவெளி கிடைக்கவில்லை. அவள் மேலே பேசிக் கொண்டிருந்தாள். இடைவெளி கிடைத்தால் கூட சொல்லத் தைரியம் வந்திராது.

“– இப்படி பரபரன்னு சதா துடிச்சுண்டிருந்தா, உடம்பு கூட கெட்டுப்போயிடும். மனசிலே டென்ஷன் இல்லாம ஒரு நிமிஷமாவது இல்லாட்டா? அதான் உங்க உடம்பு இளைச்சிண்டேயிருக்கு. ஆறரை மணின்னா ஆறரை மணிக்கே வர பழக்கம் வச்சிண்டா நிம்மதியா இருக்கலாம் – ”

“நாளைக்கு ஆறரை மணிக்கு வந்து நிக்கறேனா இல்லையா பாருங்களேன்.”

“பார்ப்பம். நாளைக்கு மாத்திரம் சொன்ன நேரம் தாண்டித்தோ, அப்புறம் ஆறு மாசம் போனைக்கூட தொடமாட்டேன்.”

“அவ்வளவு பெரிய தண்டனைக்கெல்லாம் ஆளாகிற பேர்வழி இல்லை

நான்."

"பார்ப்பம் – மத்தியான்னம் உங்களோடு பேசின அப்புறம், என் சிநேகிதி ஒரு ஜர்மன்காரி 'ஒரு பரத நாட்டியத்துக்கு ரண்டு டிக்கட் வாங்கி வச்சிருக்கேன். எனக்கு ஒண்ணும் புரியாது. நீ கூட உட்கார்ந்து எல்லாத்தையும் விளக்கிச் சொல்லணும்'னு சொன்னா. நான் இன்னிக்கு முடியாதுன்னு சொல்லிப்பட்டேன். அவளுக்கு ரொம்ப ஏமாத்தம். நீங்க டயத்துக்கு வரது நிச்சயமில்லேன்னா மறுபடியும் அவளைக் கூப்பிட்டு – "

"நான்தான் சொன்னேனே, சொன்ன நேரத்துக்கு வரேன்னு" அப்போதே அவன் கைகால் எல்லாம் பரபரவென்று பரக்கத் தொடங்கி விட்டது.

"அதான். நாளைக்கு அஞ்சுமணியிலேர்ந்தே ப்ரீயா வச்சிருண்டிருக்கேன். அவரும் ஊரிலே இல்லையா . . . "

"அப்படியா?"

"ஆமா."

"எங்கே . .?"

"நாக்பூருக்குப் போயிருக்கார். நாளன்னிக்குக் காலமே தான் வறார். சித்த ஆர ஆமரப் பேசலாம்னுதான் சுருக்க வரச் சொன்னேன்."

"வான்னு சொல்றபோதெல்லாம் நான்தான் ஓடி வந்திண்டிருக்கேனே– "

"ஆமாமா – அதெல்லாம்தான் மெக்ய மெக்யப் பேசத் தெரியுமே . . . "

போனை வைத்ததும் இந்தப் பரபரப்பு முதுகு, தொடை, மார்பு, தொண்டைக்குள் – என்று ஊடுருவிப் பொங்கிற்று அலை அலையாக ஒரு கொதிப்பு. ஆபிஸ் கட்டிடம் ஏழுமாடி. இரண்டாவது மாடியிலிருந்து மேலே ஓட வேண்டும். லிப்ட்டுக்கு நிற்கப் பொறுக்காது. படிக்கட்டுகளை ஒரு படி இரண்டு படி விட்டுத் தாண்டித் தாண்டி ஏழாவது மாடிக்கும் மேலே மொட்டை மாடியில் நிற்க வேண்டும். ஹோவென்று கத்த வேண்டும் – கையை வீசி – வாயைப் பரத்தி, கீழே வீதிகளில் போகிறவர்கள் பார்க்கட்டும். பக்கத்துக் கட்டிட ஜன்னல்கள் பார்க்கட்டும். கேட்கட்டும் அந்தக் கத்தலை. புரிந்தால் புரியட்டும். இல்லாவிட்டால் பைத்தியம் என்று சிரிக்கட்டும்.

அப்படி கையைக் காலை வீசிக் கத்தினாலும் அடங்கப் போகிற பரப்பு

இல்லை இது. எட்டு வருஷமாகக் காத்துக் காத்து, பயந்து பயந்து, பதுங்கிப் பதுங்கி, ஏங்கி ஏங்கி, சொல்லால் மென்று, கண்ணால் விழுங்கி, தொடப் போகிறோம் போகிறோம் என்று நெருங்கும் பொழுது அது தொடுவானமாக விலகி விலகி . . . இப்போது தொடுவானம் நின்றேவிட்டது. விலகாமல் பாச்சை காட்டாமல் கூடாரத்துணிபோல பூமியைத் தொட்டுக் கொண்டேயிருக்கும் — தோற்றமாக இல்லாமல், பிரமையாக இல்லாமல் — நாளைக்கு.

நேற்று அந்த அழைப்பைக் கேட்டது முதல் எலும்புக்குள்ளும் தசைக்குள்ளும் மண்டைக்குள்ளும் தளதளவென்று குதிக்கத் தொடங்கிய பொங்கல் இன்னும் அடங்கவில்லை. ஆபிஸிலிருந்த அறைக்கு வந்தவன் அதைத் தாள முடியாமல் சோப்ரா கடைக்கு ஓடிப்போய் மூன்று பீர் பாட்டிலை வாங்கி, ஒன்றியாகவே உட்கார்ந்து குடித்தும் . . . தூக்கம் வரவில்லை. பரபரப்பும் தணியவில்லை. தூங்கும்போது விடியற்காலை. எழும்போது காலை. ஜிவுஜிவு என்று கண் பொங்கிற்று. அலைஅலையாக மரங்கள், இலைகள், புகையைப் படமாக எழுதின பனி மூட்டம். சூரிய வெளிச்சம். காபி குடித்துவிட்டு வந்து, செய்தித்தாளில் கண்பாவாமல் வெள்ளைக்கோடு. குளித்து, சாப்பிட்டுவிட்டுப் படுத்த பிறகு லீவு நாள் தூக்கம் வரவில்லை. போன் மணிதான் கேட்கிறது — காதுக்குள், மண்டைக்குள். மாலீ, இன்றைக்கு நான் மென்று விழுங்கப் போவதில்லை; பயந்து பதுங்கப் போவதில்லை. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டாவது சொல்லிவிடப் போகிறேன். இந்தத் தீர்மானத்தின் போதெல்லாம் அந்த சின்ன வயது ஞாபகம் வருகிறது. பதினைந்து பதினான்கு வருடங்களுக்கு முன்னால், அப்போது இண்டர் மீடியட் பரீட்சை எழுதி முடிந்த சமயம், சுவாமியிடம் — சுவாமி இருக்கிறாரா என்று — சந்தேகங்கள் வராத காலம், விடுமுறை விட்ட மூன்று மாதங்களில் எதிரே உள்ள நீலேசுவரர் கோயிலுக்கு, நாள் தவறினாலும் தான் தவறாமல் போய்க்கொண்டிருந்த மாலை வேளைகள். இரண்டு மாதங்களுக்குப் பிறகு அந்தப் பெரியவள் சோதனை மாதிரி மனப் பிரகாரத்திலும் நடக்கத் தொடங்கிவிட்டாள். தினமும் வாசலோடு போகிறவள் — கடைக்கும் கோவிலுக்கும். வீடு: அதே தெருவில் முப்பது நாற்பது வீடு தள்ளி, கொஞ்சம் உயரத்தோடு ஒரு துளி புருஷக்களை — முகத்திலும், தோள் முதுகு அகலத்திலும் இந்தப் புருஷக்களைப் பொம்மனாட்டிகளுக்கு எவ்வளவு கவர்ச்சி! அவள் அகமுடையானுக்கு முகத்தில் மயிர் கிடையாது. உடம்பு முழுவதுமே பூசி மெழுகின தோல். குரலும் பெண் குரல். அது துணியில் தர்ப்பைக் கட்டைச் சுற்றிக் கொண்டு

விந்தி விந்தி நாளெல்லாம் புரோகிதத்தில் அலைந்து கொண்டிருக்கும். அப்போதெல்லாம் இந்தப் பெண்டாட்டி வீட்டுவாசலில் நிலைப்படியில் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்தி, திண்ணையில் உட்கார்ந்திருக்கிற ஒரு வக்கீல் குமஸ்தாவோடு பேசிக்கொண்டிருப்பாள். ஐயோ – அந்த மூஞ்சியில் நெளிகிற வெட்கம்– சொந்தம் – சொந்தப் பெண்டாட்டி போல. கண்ணையும் முகத்தையும் பார்த்தால் புட்குரல் எழுப்புகிற பரவசம். அவனோடு பேசும்பொழுதே, பார்க்கும் பொழுதே ஆர்கஸம் அனுபவிக்கிற சுருட்டியிழுக்கிற உச்சநிலை. கேவலம் ஒரு வக்கீல் குமாஸ்தாப் பயலுக்குக் கிடைக்கிறது. நமக்கா இல்லாது போய்விடும்! அவளும் நாள் தவறினாலும் கோவில் தவறமாட்டாள். அந்தி வேளையில் கையில் ஒரு சின்னத் தகர எண்ணெய்க் குவளையோடு வாசலைக் கடக்கையில் நானும் தயார். பிரகாரத்தில் அவளைக் கடக்கிற பொழுதெல்லாம் உச்சந்தலையிலிருந்து ஒரு கதகதப்பு – காலில் பின்னல், அதைச் சமாளிக்க நடையில் ஒரு வேகம், எப்படியோ துரத்தித் துரத்தி, சமயம் கிடைக்காமல், கடைசியில் ஒரு நாள், பிரகாரம் சற்று சூன்யமாயிருந்தபோது, சண்டிகேச்வரர் சன்னதிக்குத் திரும்பும் சின்ன இடைவெளியில் அவளை நெருங்கி “வரலாமா” என்று அவள் காதில் விழுந்ததும் விழாததுமாக ஏதோ சொன்னான். பதில்? “என்ன” என்று திரும்பி ஒரு சூன்ய கோபப் பார்வை. உடனே “ஒண்ணுமில்லையே” என்று குழறிவிட்டு வேகமாக நுனிக்காலில், சிறு ஓட்டமாக நடந்து, கோவிலைவிட்டு வெளியே வந்து வீட்டுக்குள் புகுந்து படுத்துக் கொண்டான். முகத்தோலில் மணல் படிந்து மறைய பத்து நிமிஷம்.

அன்றிலிருந்து படிப்பை முடித்த ஐந்து வருஷத்தில் வேலையாகி நாலு வருஷத்தில் பெண் வாடையை நுகராமல், பூனை மாதிரி நகத்தை உள்ளே இழுத்துக் கொண்டுதானே உட்கார்ந்தேன்.

மாலி! அப்புறம்? உன்னைப் பார்த்த பிறகு? அப்பா அம்மா, மாமாக்கள் இரண்டு பேர் எல்லோரும் செத்துப் போன பிறகு, எனக்குக் கலியாணம் பண்ணி வைக்கக் கூடிய அக்கறை ஆத்மாக்கள் எல்லாம் ஒழிந்துவிட்ட பிறகு? ஒரு மாமா மிஞ்சியிருந்தாலும் முடியாது என்று தான் சொல்லியிருப்பேன்.

இனிமேல்தான் என்ன கலியாணம்? வயது முப்பத்திரண்டு. உன்னைப் பார்த்துக் கொண்டிருந்தால் போதும், உன்னோடு பேசினால் போதும், உன்னைத் தொட்டால் போதும். உன்னை, உன்னைத் தெரிகிறது. நீ கலியாணம் ஆனவள். கலியாணம் ஆனவள்பால் இந்த மாதிரி நினைவு

அக்ரமம் என்று இந்து, கிறிஸ்தவன், முஸ்லீம், நாஸ்திகன் எல்லாரும் சொல்லுகிறார்கள், எழுதுகிறார்கள். ஆனால்கள் மட்டும் அவர்களுக்குத் தெரியாதா என்ன?

மாலீ, உன் கணவன் உன்மீது — அதாவது என்மீது சந்தேகப்பட வில்லையா? இல்லை. உன் சுதந்திரத்தில், உன் சமத்துவத்தில் அவனுக்கு உண்மையாக, மனப்பூர்வமாக அக்கறையா? உன்மேல் அத்தனை நம்பிக்கையா? இல்லை எப்படி வேண்டுமானாலும், யாரோடு வேண்டுமானாலும், எத்தனை நேரம் வேண்டுமானாலும் பேசு, சிரி, என்னைத் தொந்தரவு செய்யாமல் விட்டால் போதும் என்ற குளிர்விட்ட அலட்சியமா? அவனும் இந்த மாதிரி வேறு எங்கேயாவது சிரித்துப் பேசிக்கொண்டிருக்கிறானா?

வாரத்திற்கு ஒரு முறை மணி போனது தெரியாமல் பேசிப் பேசிப் பேசிப் பேசி — இதைத் தவிர மீதி எல்லாம் பேசி — மனிதர்களை, நாய்களை, கதைகளை, கோவில்களை, விக்ரகங்களை, பாட்டுகளை, நோய்களை, மருந்துகளை, குணங்களை, நாத்தனார்களை, மாமியார்களை, ஓரகத்திகளை எதைப் பற்றித்தான் பேசவில்லை? — இதைத் தவிர.

ஆனால் நான் பேசினேன் — மனத்திற்குள்.

"லீவெல்லாம் நன்றாகக் கழிந்ததா? எங்கெல்லாம் போயிருந்தீர்கள். . . " என்று நீ கேட்கிற கேள்விகளுக்கு நான் பேசின பதில் "நன்றாகக் கழிந்தது . . . திருச்சி போனேன். திருக்குத்தாலம் போனேன், வடுவூர் ராமன் விக்ரகம் பார்த்தேன். ராமநாதன் பாட்டுக் கேட்டேன் . . . ஊரெல்லாம் மாறிவிட்டது . . . மதராஸில் ஒவ்வொரு பங்களாவையும் சுற்றிப் பத்து குடிசைகள் . . . அல்லது அந்த வீட்டுக்காரர்கள் வெளியே தெருவிற்கு வரும் பாதைகளை குடிசைக் குழந்தைகள் திறந்த கழிவிடங்களாகப் பயன்படுத்துகிற மக்கள் உரிமை ராஜ்யம் . . .

நான் உள்ளே பேசினது அதில்லை. இது. நீ என்று என்னை ஏற்றுக் கொள்ளப் போகிறாய்? நீ தீராத அவசியமாகிவிட்டாயே! இது என்ன விருதாப் பேச்சு? உன் கண் பாகில் நான் ஏன் எறும்பாக விழவில்லை? உன்னை விட்டு நகரமாட்டேன். உன்னைக் குடித்து நினைவிழந்து . . . நாற்காலியில் போட்டிருக்கிற என் அங்க வஸ்திரத்தின் மீது உன் தந்தக் காலை வைத்திருக்கிறாயே. என்மேல் போடுவதாகத் தானே பாவனை? நீ தெரியாமல் அசதி மறதியாகப் போடவில்லை. நீ அந்த மாதிரிப் பேர்வழி இல்லை. ஒவ்வொரு கணமும் நுட்பமாக விழித்து, அறிந்து, உணர்ந்து

வாழ்கிற உயிர் நீ. பின் ஏன் அந்தக்காலை எடுத்து என் கன்னத்தில் வைத்து மெய்யை மறக்கிற துணிச்சல் வரவில்லை; நீ சாதாரணமாகத் தான் போட்டிருப்பாய் என்ற சந்தேகமா?

இப்படியே வெளிக்கு ஊர்ப்பேச்சு. உள்ளே கோழைத்தனத்தின் தளத்திற்கடியே எனக்கு மட்டும் கேட்கிற என் பேச்சு.

நீ உள்ளுக்குள் என்ன பேசிக் கொண்டிருந்தாய்? நீயும் கோழையா?

தோட்டத்தைக் கொண்டு எனக்குக் காண்பிக்கும் போது – நாம் பழகின முதல் மாதத்தில் – மலர்ந்த ஒரு கொத்துச் செம்பூக்களை என் சட்டையின் புத்தானிடுக்கில் கையை வைத்துச் செருகினாய். நான் ஏன் பின்பும் சொல்லப் பயந்தேன்?

அந்த வருஷம் பாங்காங்கிற்குப் போன போது, நண்பர் சண்முகத்தின் வீட்டில் தங்கியிருந்தேன். ஆராய்ச்சிக்குப் போனவன், ஒரு தாயிப் பெண்ணோடு பழகிக் கொண்டிருந்தான். அறிமுகப்படுத்தினான். "இவளுக்கு தமிழ் சொல்லிக் கொடுத்திருக்கிறேன், விஜித், சொல்லு பார்ப்போம்" – உடனே அவள், 'நான் உன கதாலிக்குறன்' என்று விழுந்து விழுந்து சிரித்தாள். அது மாதிரியாவது நான் உன்னிடம் சொல்லிச் சிரித்து என் மனசை ஏற்றியிருக்கக் கூடாதா? ஏன் செய்யவில்லை?

வாசனைப் பாக்கை ஐந்து விரல் நுனியாலும் சேர்த்து எடுத்து என் உள்ளங்கையில் வைத்து அழுத்தி என்னைப் பார்த்துப் புன் சிரிப்பு சிரித்தாயே – அந்த விரல், கூப்பை ஏன் அந்த உள்ளங்கையாலேயே கவ்விப்பற்றவில்லை.

மூன்றாம் வருடம் இரண்டு மாதம் உன்னைப் பார்க்க முடியவில்லை. உன் பெரியப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்று கல்கத்தாவுக்குப் போனாய். திரும்பி வந்ததும், மூன்று மணி நேரம் சாவகாசம் இருக்கிறது, வாருங்கள் என்று என்னை அழைத்தாய். நான் உள்ளே நுழைந்ததற்கும், மின்சார விசிறி நின்று போவதற்கும் சரியாயிருந்தது. நெற்றியிலும் கழுத்திலும் வியர்ப்பதைப் பார்த்து நீ விசிறியைக் கழற்றி, அதன் மோட்டார், கம்பிச் சுருள்களைக் கழற்றி அவிழ்த்து மீண்டும் சுற்றி, மாட்டி, சுழலவிட்டதும், நீ இங்கிலீஷில் சொன்னாய். "ஒரு மெக்கானிக் செய்திருப்பான். எனக்காக, இத்தனை சிரமப்பட்டு – ஹம் . . . மாட்டிவிட்டு, நீங்க கீழேயிருந்ததும், என்னவோ செய்யணும் போலிருந்தது. சமையல்காரன் இருந்தான். ஆள்காரன் இருந்தான்.

இல்லாட்டா, அதை செஞ்சேயிருப்பேன்” என்று இங்கிலீஷில் சொன்னாய்.

எதை? என்று நான் கேட்கவில்லை.

சீதையைத் தேடிப் பேசி வந்ததற்காக, ராமன் அனுமானை ஆலிங்கனம் செய்து கொண்டானாம். அதுதான். அது எனக்குக் கிட்டவில்லை. “பரவாயில்லை, இன்னொரு சமயம் கேட்டு நானே வாங்கிக்கிறேன்” என்று வாய் துரு துருவென்றது. ஆனால் சொல்ல வொட்டாமல் நாக்கு சுருண்டு கொண்டது. “மூணு மணி நேரம் சவகாசம் இருக்கு என்று சொன்னீர்கள்” என்று ஒரு கையாலாகாத குறும்புச் சிரிப்புத்தானே எனக்கு வந்தது.

இன்று அதைத் தரப்போகிறாயா?

மணி நாலரை. குளிர்கால வெயில் இளமஞ்சள் பூத்துக் களைத்துக் கொண்டிருந்தது.

எழுந்தான். உடலைக் கழுவி, முகத்தைக் கழுவி, தலை சீவி, பவுடரைப் போட்டுத் தட்டிவிட்டு, உடைகளை மாட்டிக்கொண்டு, அறையைப் பூட்டிக் கொண்டு கிளம்பினான். ரிஸ்தராங்கில் காபி சாப்பிட்டு விட்டு, பஸ் ஸ்டாப்புக்கு வந்தான். ஆட்டோக்கள் நிற்கிற வழியாக இல்லை. ஒவ்வொன்றிலும் ஒரு ஜோடி. டாக்சி நடமாட்டமும் இல்லை. மர இடுக்குகளில் பீச்சின மஞ்சள் ஊசிகள் மறைந்து அந்தி கவ்வி, மோட்டார் விளக்குகளின் வெள்ளி ஊசி துடைப்பக் கற்றைகளை விரித்து நீட்டினாற்போல கண்ணைக் கூசி வானை அளக்கின்றன. ஒரு மணி நேரமாகவோ நிற்கிறோம்!

எந்த மோட்டார் வெளிச்சம் நெருங்கினாலும் கையை கையை நீட்டினான். நூற்றுக் கணக்கில் விளக்குகள் விரைந்தன. ஒரு துடைப்பமும் நிற்கவில்லை. அவன் நம்பிக்கை, துடிப்பு – எல்லாவற்றையும் அள்ளித் தள்ளிக் கொண்டே சீறுகிறது.

மணி ஆறரை. டாக்சியில் போனாலும் ஆறே முக்கால் ஆகிவிடும். டாக்சிகள் யாரையாரையோ சுமந்து போகின்றன. கையை நீட்டிக் கொண்டேயிருந்தான்.

ஒரு ஆட்டோ ரிக் ஷா சரக்கென்று சற்று தள்ளி நிற்கிறது – அவனைக் கடந்து “ஸாப், எங்கே போகணும்?” என்று ரிக் ஷாக்காரன் எட்டிப் பின்னால் பார்க்கிறான்.

“கிரேட்டர் கைலாஷ்.”

சிறிது நேரம் பதில் இல்லை. நெருங்கினான் அவன். சற்றுத் தயங்கி விட்டு, "அச்சா, உட்காருங்கள். நீங்கள் வெகு நேரமாக நிற்கிறீர்கள் இல்லையா?"

நான் ஸ்டேஷனுக்குப் போகும்போதே பார்த்தேன். இவர்களை ஏற்றி வருவதற்காகப் போனேன். திரும்பி வரும் போதும் நிற்கிறீர்கள். சரி, உட்காருங்கள். ஸாப்புக்கு இடம் கொடு, சற்று நகர்ந்துகொள்" என்றார் டிரைவர். தாடி, முண்டாசு. சீக்கியன். உள்ளே ஒரு பெண். கையில் ஒரு குழந்தை, முன்னால் ஒரு பெரிய படுக்கை – மெத்தை, இரண்டு மூன்று கூடைகள்.

தயங்கினான் அவன்.

"உட்காருங்கள் ஸாப்."

உட்கார முயன்றான். பெட்டி முட்டிற்று. படுக்கை இடித்தது. ஓரத்தில் ஒட்டிக் கொண்டு உட்கார முடிந்தது. உட்காரவில்லை தொற்றல்.

"சரியாக சௌகர்யமாக உட்காருங்கள். லக்கி, படுக்கை பெட்டியை சற்று இழுத்துக் கொள். ஸாப் சௌகர்யமாக உட்காரட்டும். வெகு நேரமாக நிற்கிறார் பாவம்."

மடியிலிருந்த குழந்தையை இடது தொடைக்கு மாற்றி வலது கையால் பெட்டி படுக்கையை இழுத்தாள் அவள்! என்ன பலம்!

கூர்ந்து பார்த்தபோது, அவளுக்கு வலது பக்கம் இன்னொரு குழந்தை மூன்று வயதிருக்கும். சீட்டில் புதைந்து, அவனைப் பார்த்தது விழித்தது.

"ஓ! பேட்டா" என்று அதன் கன்னத்தை விரலால் தட்டினான். அது சிரிக்கவில்லை. ஒன்றும் பார்க்க முடியாமல் ஏற்கனவே பெட்டி, படுக்கை – இப்போது நீ வேறா என்று நினைத்ததோ என்னவோ.

"நம்ம குழந்தைதான்" என்றான் ஆட்டோக்காரன்.

"அச்சா!"

"ஊருக்குப் போய் வருகிறார்கள். இரண்டு பேராகப் போனார்கள். மூன்று பேராகத் திரும்பி வருகிறார்கள்" என்று சிரித்தான். இடது பக்கக் குழந்தை கண்ணை உருட்டி விழிக்கிறது . . . வாயில் விரல்.

"சலானா" என்று வெட்கச் சிணுங்கலுடன் முனகினாள் அவள். கணீர் என்று குரல்.

“அச்சா”

பிறகு ரிக் ஷாக்காரன் ஓயவில்லை. அவளும் ஓயவில்லை. பேசிக் கொண்டேயிருந்தார்கள். ஆட்டோ என்ஜினின் சத்தத்தை அமுக்கி செய்தி பரிமாறுகிற குரல்கள். பஞ்சாபி பாஷை. வெண்கலக்குரல்.

அவன் அவள் பக்கம் திரும்பி ஒரு தடவைதான் பார்த்தான். தலையில் முக்காடு. மாநிறம். நல்ல பாஞ்சாலக் கட்டு உடல். வலுவும் ஆரோக்கியமும் இளமையும் பிதுங்கித் தெரிக்கிற கட்டு.

படபடவென்ற ஓயாத சத்தம் – பேச்சு, ஆய்ச்சல், குலுக்கல் – ஒளிக்கற்றைகள் – வளைவுகள் –

“எந்த இடம் ஸாப் – ஏயா பியா, ஸியா?” என்றான் ஆட்டோக்காரன்.

“பி” – இத்தனை நேரமும் மாலியின் நினைவே இல்லை என்று நினைக்கையில் அவனுக்கு ஏன் என்று புரியவில்லை.

மீண்டும் சிறிது நேரம் படபடப்பு.

“நிறுத்துங்கள்” என்றான் அவன்.

சத்தம் நின்றது, “என்ன கொடுக்க வேண்டும் சர்தார்ஜி!”

“உங்கள் இஷ்டம் நான் குதுப்புக்கு அருகில் போக வேண்டும். நீங்கள் போகும்போது நிற்பதைப் பார்த்தேன். வரும்போது காத்திருந்தீர்கள். உங்களுக்காக நான் பாதையை விட்டு வந்தது ஒரு மைல் இருக்கும். எதைக் கொடுத்தாலும் சரி. நான் சவாரிக்காக ஏற்றவில்லை. உங்களுக்காகத் தான். எத்தனை நேரமாக நின்றீர்கள்!”

நெஞ்சு குதுகுதுவென்கிறது. மனிதன் – மனிதன் – கடவுள் – மனிதன்– கடவுள் என்று இரண்டு வார்த்தைகள் முணுமுணுவென்று மார்பின் மூலைக்குள் திரும்பத் திரும்பக் கேட்கின்றன.

பையில் கையை விட்டு, வந்ததை எடுத்து நீட்டினான். சர்தார்ஜி மீட்டர் வெளிச்சத்தில் அதைப் பார்த்தான்.

“ஏழு ரூபாய் இருக்கிறதே. இந்தாருங்கள் – ” என்று ஐந்து ரூபாயைத் திருப்பி நீட்டினான்.

“பரவாயில்லை” என்று நடந்தான் அவன்.

“ஸாப், ஸாப்.”

“பரவாயில்லை. நீங்கள் போங்கள்.”

சிறிது கழித்து படபடவென்று ஆட்டோ புறப்பட்டது.

கேட்டைத் திறப்பதற்கு முன்னால் நின்று ஆட்டோ திரும்புவதைப் பார்த்தான். விரைந்துகொண்டே போய் திருப்பத்தில் மறையும் வரை பார்த்தான். சீக்கியரின் உருவம் மீண்டும் நின்றது மனதில். நாற்பத்தைந்து வயதிருக்கும். பாதி நரைத்த தாடி. மெல்லிய உடல்தான். நாலணா கொடுத்திருந்தாலும் வாங்கிக் கொண்டு போயிருக்கிற முகம். அச்சா என்று அதற்கும் சொல்லிவிட்டுப் போகிற முகம்தான். பெண்டாட்டியை அழைத்து வருகிறவன் மெனக்கெட்டு நிறுத்தி, அவன் நின்று கொண்டிருப்பதைப் போகிற போக்கில் ஞாபகம் வந்து நிறுத்தி, பெண்டாட்டிக்குப் பக்கத்திலேயே இடம் கொடுத்து . . .

கேட்டின் கொக்கியைத் தூக்கித் திறந்து உள்ளே போகையில், உடம்பு பழத்திலிருந்து சாறெல்லாம் வற்றிவிட்டாற் போலிருந்தது.

புத்தானை அழுத்தினான்.

கதவு திறந்தது சமையற்காரன். “இருக்கா இருக்கா – போங்கோ” என்று அந்த அறைக்குக் கையைக் காட்டி, வாசற்கதவைத் தாழிட்டான்.

“மணி ஏழரை. இன்னும் மூணுமாசத்துக்குப் போன் பண்ணாம இருக்கணும்னுதான் தோன்றது. பரவாயில்லை, வந்துவிட்டீர்கள்.”

அவளைக் கையில் அள்ள வேண்டும் போல, வழக்கம் போல ஒரு துடிப்பு வந்தது. ஆனால் பொட்டென்று அது தணிந்த மாயம்.

“டில்லியில் படித்த மடையர்கள் எத்தனை லக்ஷம் பேர் இருக்கிறார்கள் என்று கணக்குப் பண்ணிக்கொண்டே வருகிறேன்” என்றான் திடீரென்று.

“என்னது!”

“ஆமாம், ஒரு மணி நேரமாக பஸ், டாக்ஸி ஏதும் கிடைக்காமல் நின்றேன். ஒரு சீக்கியன் ஸ்கூட்டரை நிறுத்தி, “போறபோதும் நின்றீர்கள், வரும்போதும் நிற்கிறீர்களே” என்று என்னை ஏற்றிக்கொண்டான். உள்ளே அவன் பெண்டாட்டி, குழந்தைகள், பெட்டிகள். பிரசவத்திற்குப் போய்த் திரும்புகிறவளை ரயிலடியிலிருந்து அழைத்து வருகிறான். அவள் பக்கத்திலேயே என்னை உட்கார்த்தி என்னைக் கொண்டு விட்டுவிட்டுப் போனான். சீக்கியர்கள் புத்தி இல்லாதவர்கள் விகடத்துணுக்குகிற டில்லி முட்டாள்களின் ஞாபகம் வந்துகொண்டேயிருக்கிறது. பண்பாடு, வளர்ச்சி

என்ற பெயரில் பாபங்களை வளர்த்து அதிலே உழல்கிற பன்றி இந்த நகரம்” என்றான் அவன். குரல் உயர்ந்து கொண்டிருந்தது.

“உண்மைதான். டில்லியில் வேலை குறைச்சல். யாரைக் குறை சொல்லலாம் என்று கண்ணில் எண்ணெய் போட்டுக்கொண்டு பார்த்துக் கொண்டேயிருக்கிறார்கள். சீக்கியன் தன் வேலையைத்தான் செய்து கொண்டிருப்பான். மற்ற சோம்பேறிகளைப் பார்க்கக்கூட அவனுக்கு நேரமும் இல்லை. மனசும் இல்லை. அதுதான் அவன் தலையில் மிளகாயை வைத்து அரைக்கிறார்கள். ஆனால் அவன் இவர்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. என் தங்கை ஒரு தடவை பிரோஸ்பூர் போய்க்கொண்டிருந்தாள். சாப்பிட்டுவிட்டு ஒரு பாக்கைக் கடித்தவளுக்குப் புரை ஏறி, மாரடைப்பு வந்துவிட்டது. மூச்சு முட்டி, உயிர் போய்விடும் போலாகிவிட்டது. மேலே படுத்திருந்த சீக்கியன் குதித்து, தலையைத் தட்டி, மார்பைத் தடவி, எப்படியோ மூச்சை சுய நிலைக்குக் கொண்டு வந்துவிட்டான். அவளுக்கு மேலெல்லாம் வியர்த்துக் கொட்டி, களைத்துவிட்டது. இரண்டு மணி நேரம் அவளுக்குப் பணிவிடை செய்து, தைரியப்படுத்தினானாம் அவன். அவர்கள் நிஜமான மனிதர்கள்” என்றாள் மாலி.

அவன் பேசாமல் உட்கார்ந்திருந்தான் அவளும் பேசவில்லை.

நான் என்ன பேசப்போகிறேன்?

நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்?

“அப்ப, நான் வரட்டுமா?”

“முள்ளா?”

“அதெல்லாம் ஒன்றுமில்லை. ஒன்பது மணிக்கு ஒரு சிநேகிதனைப் பார்க்கவரேன்னு சொன்னேன், மோதி பாக்கிலே.”

“அதெல்லாம் இல்லை. முள்ளுதான்!”

“நிஜம்மா” – என்று ஒரு பொய்.

“அவசரமாப் போகணும்னா நான் என்ன சொல்றது?”

பொய்யை சாதித்தால் தான் மெய்யாகும்.

எழுந்தான்.

“நீங்க என்னமோ போல் இருக்கேள். அடுத்த தடவை சாவகாசமா வாங்கோ.”

“வரேன்.”

மின் விசிறியைப் பார்த்தான். அது நின்றிருந்தது – குளிர்காலத் தொடக்கத்திற்காக.

கதவு சாத்திக் கொண்டது. தாழ் ஓசை மெல்லியதாகக் கேட்டது. அது அவளுக்குப் பழக்கம். வாசல்படி தாண்டி வந்து விடை கொடுக்க மாட்டாள்.

கேட்டுக்கு வெளியே வந்து நின்றான்.

மின்சார விசிறி ஞாபகம் வந்தது. ஒரு கடுதாசியில் முன்பு ஒரு தடவை தாங்க முடியாமல் “எப்போது என்னை ஏற்றுக்கொள்ளப் போகிறாய்?” என்று எழுதி, அவளிடம் இரவல் வாங்கின புத்தகத்தைத் திருப்பித் தரும்போது அதில் வைத்திருந்தான். ஆனால் தரும்போது ஒரு தடவை பக்கங்களை விசிறி “கடுதாசி ஏதாவது இருக்கப் போகிறது” என்று அந்தக் காகிதத்தை எடுத்துப் பையில் வைத்துக் கொண்டு, புத்தகத்தை மட்டும் நீட்டினான். அந்த ஞாபகமும் வந்தது.

“நான் மனுஷன் இல்லை. நீயும் பெண் இல்லை” என்று முனகிக்கொண்டே நடந்து பஸ் ஸ்டாப்புக்கு வந்தான். கலியாண அக்கறைக்காரர்களான இரண்டு மாமாக்களும் செத்துப்போய்விட்டது ஞாபகம் வருகிறது. அழுவதற்கும் வெட்கமாக இருக்கிறது. பஸ் ஸ்டாப்பில் வேறு யாரும் இல்லை. ஒரு பையன் சீட்டி அடித்துக் கொண்டு ஒரு பழைய அட்டைப் பெட்டியை உதைத்து நடந்துகொண்டிருந்தான்.

**கணையாழி, நவம்பர் 1969**

# பாட்டியா வீட்டில் குழந்தைக் காட்சி

பட்டேல் நகரில் வீடு வாடகைக்கு வருகிறதாம். பிள்ளை சொன்னான். அவனுக்குக் கலியாணமாகி இரண்டு வயதில் ஒரு குழந்தை. மருமகளும் ஒரு கம்பெனியில் வேலை பார்க்கிறவள். அவனைப் பார்க்க வருகிறவர்கள் நாளைக்குச் சராசரி ஏழுபேர். அவளைப்பார்க்க வருகிற நண்பிகள் சராசரி நாலு. சில சமயம் இரு தரப்பு நண்பர்களும் ஒரே சமயத்தில் வரவே, வீடு பிதுங்கும். இருக்கிற இரண்டு அறைகளும் மகராஜன் கப்பல். இரண்டும் சிரிக்கும்; கூச்சலிடும். "ஹாய்"கள், "புல்ஷிட்டு"கள் "டோண்பி ஸில்லி"கள், "ஃபண்ட்டாஸ்ட்டிக்"குகள், "மை குட் நெஸ்"கள் என்று யுவ சொல்லகராதியை முழக்கும். புதிய அகராதி பழக்கமில்லாததாலும் மூப்பு காரணமாகவும் தேவாவும் அவர் மனைவியும் அனுமான் மந்திருக்குப் போய் வருவதாக, முறையே பிள்ளையிடமும் மருமகளிடமும் விடைபெற்றுக் கொண்டு போவார்கள். கூட்டம் கலைந்ததும் திரும்பி வருவார்கள். பிள்ளைக்குச் சொல்ல முடியாது. மருமகளுக்கு மெல்ல முடியாது. இருவரும் வேறு வீட்டுக்குப் போவதென்று பெற்றோருடன் சுமூகமாக முடிவு செய்தார்கள்.

பட்டேல் வீட்டைப் பிள்ளையும் மருமகளும் முதலில் போய்ப் பார்த்து வெள்ளோட்டம் விட்டு வந்தார்கள். தாயாரும் தகப்பனாரும் பார்க்க வேண்டும் என்று அவர்களுக்கு ஆசை. மறுநாள் மாலை தேவாவும் அவர் மனைவியும் பிள்ளையும் மருமகளும் குழந்தையும் ஒரு டாக்சியில் போய்ச் சேர்ந்தார்கள்.

பாட்டியா வீட்டில் குடும்பமே டெலிவிஷன் பார்த்துக் கொண்டிருந்தது.

"ஆயியே ஆயியே" என்று பாட்டியாவின் மனைவி எழுந்து உபசாரம் செய்தாள்.

பாட்டியாவின் தாயார் இரண்டு பேரன்களையும் இரண்டு பேத்திகளையும் வந்தவர்களுக்கு இடம் கொடுக்குமாறு நகர்த்தி இரண்டு சோபாக்களில் உட்காரச் செய்தாள்.

"பாட்டியா வந்து விடுவார். தியானம் செய்துகொண்டிருக்கிறார். நமஸ்தே கரோபேடா" என்று தாயார் குழந்தைகளைத் தூண்டினாள். நாலு குழந்தைகளும் எழுந்து கைகூப்பி நமஸ்தே சொல்லி விட்டு மீண்டும்

பக்கத்தில் அமர்ந்தன. தேவா ஒரு பையனைத் தன் பக்கத்தில் இழுத்து வைத்துக்கொண்டார். அவர் மனைவி ஒரு பெண் குழந்தையை இழுத்து வைத்துக்கொண்டாள். அவர் பிள்ளை கடைசிப் பெண் குழந்தையை இழுத்து வைத்துக்கொண்டான். மருமகள் கடைசிக்கு முந்தின பையனை வலது துடையிலும் தன் குழந்தையை இடது துடையிலும் வைத்துக் கொண்டாள். இவர்களுக்காகவே பாட்டியாவும் அவர் மனைவியும் நாலு குழந்தைகளைப் பெற்றது போலிருந்தது.

தேவாவுக்குத் திருப்தி. பாட்டியா தியானம் செய்கிறாராம். நல்ல குடும்பம்.

தேவா இழுத்து வைத்துக்கொண்ட பையன் அவர் மீது சாய்ந்து கொண்டான். அவர் கைவிரல்களோடு தன் விரல்களைக் கோத்துக் கொண்டான். அவனுக்கு எட்டு வயது. டெலிவிஷனைப் பார்த்துக் கொண்டிருந்தவன் நடுநடுவே அவர் முகத்தைப் பார்த்துச் சிரித்தான். நன்றாக ஒட்டிக் கொண்டுவிட்டான். தேவாவின் மனைவி இழுத்து வைத்துக்கொண்ட பெண் அவள் மடியிலேயே சப்பளிக்க உட்கார்ந்து ஒட்டிக்கொண்டது. அவள் மார்புமீது பின்னந்தலையைத் தேய்த்துக் கொண்டது. இரு கைகளாலும் அவளுடைய இரு கைகளையும் வளைத்துக் கொண்டது. அதற்கு ஆறுவயது. பிள்ளை இழுத்துக் கொண்ட பெண் குழந்தை டெலிவிஷன் பார்க்காமல் அவன் முகத்தைப் பார்த்து 'ஹிஹ்ஹிஹ்ஹி' என்று சிரித்தது. சட்டைப் பைக்குள் கைவிட்டுப் பேனாவை இழுத்தது. மணி பர்சை எடுத்து கையில் வைத்துக் கொண்டது. சட்டைப் பித்தானைத் திருகிற்று. நறுக்கு மீசையை விரலால் நிமிண்டிற்று. அதற்கு இரண்டு வயது.

மருமகள் இழுத்துத் துடைமீது வைத்துக்கொண்ட பையன், அடுத்த துடை மீதிருந்த அவள் குழந்தையின் கன்னத்தைத் தடவினான். முத்தம் கொடுத்தான். அதன் புறங்கையை எடுத்து முத்தம் கொடுத்தான். அவனுக்கு நாலு வயது.

"ஷாதி கர் ரஹாஹெ" என்று தேவா பக்கத்தில் இருந்த மூத்தபையன் அதைப் பார்த்துச் சிரித்தான். மற்ற குழந்தைகளும் சிரித்தன. பாட்டியாவின் தாயார் சிரித்தாள்.

டெலிவிஷனில் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் படம் காட்டிக்கொண்டிருந்தார்கள். தேவாவுக்கு ஐன்ஸ்டீனைப் பற்றி படிக்கும்போது அழுகை வரும். மதர் தெரஸா படத்தைப் பார்த்தால் அழுகை வரும். தியாகராஜ கீர்த்தனத்தைக்

கேட்டால் அழுகை வரும். ராமானுஜன் புத்தகம் வாங்கக் காசில்லாமல் யார் யாரோ கண்டுபிடித்தது தெரியாமல், அந்தக் கணக்குகளைத் தான் கண்டுபிடிக்க உழைத்ததை நினைத்து அழுகை வரும். “இவாள்லாம் குழந்தைகள் மாதிரி, சூது வாது தெரியாது. திரிசமன் தெரியாது. அப்படியே பகவான் படைச்சதுகளைப் பார்த்து ஆச்சரியப்பட்டுண்டேயிருந்தா” என்பார். அதைக்கூட முழுக்கச் சொல்ல முடியாமல் அவருக்கு அடைத்துக்கொள்ளும்.

இப்போது டெலிவிஷனில் ஐன்ஸ்டீன். பரவசமாகப் பார்த்துக் கொண்டிருந்தார் தேவா.

“எல்லாம் மனதுதான். காதலனைப் பார்க்கப் போகிறவளுக்குப் பத்து மைல் பத்து தப்படி. இருள் வெளிச்சம். காதலியோடு பேசிக் கொண்டிருக்கிறவனுக்கு இரவின் நாலு ஜாமமும் நாலு விநாடி. எரியும் அடுப்பு மீது வைத்த தோசைக்கல் மீது உங்களை உட்கார்த்தி வைத்தால் ஒரு நொடி ஒரு யுகமாக இருக்கும். விநாடி, நிமிஷம், மாதம், வருஷம், யுகம் எல்லாம் நம் மனத்தைப் பொறுத்தது” என்று ஒரு கிழவிக்குத் தன் சித்தாந்தத்தை விளக்கினாராம் ஐன்ஸ்டீன்.

இங்கும் பொழுது போனது தெரியவில்லை. ஐன்ஸ்டீன் படத்தோடு இந்தக் குழந்தைகளும் சேர்ந்துகொண்டன. தேவாவை அந்த எட்டு வயது கட்டிக்கொண்டான். அவர் மனைவியை அந்தப் பெண் கட்டிக் கட்டி முத்தம் கொடுத்தது. பிள்ளையை வைத்திருந்த பெண் குழந்தை அவன் மணி பர்சைப் பிரிக்க முயன்று கொண்டிருந்தது. தலைமயிரை விரலில் சுற்றிச் சுற்றி விளையாடிற்று. நாலு வயதுப்பையன் மருமகள் குழந்தையைக் கொஞ்சினான். பாட்டியா மனைவி குளிர் பெட்டியிலிருந்து பனிக் கற்களை எடுத்து ஆரஞ்சு ரசம் கொடுத்தாள். தேவாவின் ரசத்தைப் பையன் பாதி சாப்பிட்டான். பிள்ளையின் ரசத்தைக் குடிக்க முடியாமல் பெண் குழந்தை கிளாஸை இழுத்து இழுத்து, ரசம் அவன் சட்டை மீதெல்லாம் சிந்திற்று. பெரியவர்கள், “அரே, க்யா மத்லப், பீனே தோ ந” என்று பாட்டியாவின் தாயார் கத்தினதை அவை சட்டை செய்யவில்லை. பொழுது ஓடிற்று.

பாட்டியா மாடியிலிருந்து இறங்கி வந்தார். மணி எட்டு மணி. ஒரு மணி போனது தெரியவில்லை. தியானத்தின் ஒளி முகத்தில் புலர்ந்திருந்தது. வெள்ளை குர்த்தா – வெள்ளை பைஜாமா – வெள்ளை முகம். எல்லாருமே அங்கு வெள்ளைதான். பாட்டியாவின் தாயார், மனைவி, குழந்தைகள் எல்லோரும் வெள்ளை. குழந்தைகளின் உதடுகளில்

இயற்கையாக வெற்றிலை போட்ட சிவப்பு. கன்னத்தில் ரோஜா.

"பஞ்சாபிக்குக் குழந்தை பிறக்க வேண்டியதுதான். அழகு எங்கெல்லாம் போய் ஒட்டிக்கலாம்னு காத்துண்டிருக்கும். நம்ப ஊர்ப் பொம்மனாட்டிகளைப் பாரு. புடவை மூக்குத்தி தலைப்பூவெல்லாம் கிடக்கட்டும். சாம்பல் படர்ந்த உடம்பும், கச்சலும் கூனலுமா அரை மைல்ல வர்றபோதே தெரியுமே மதராசின்னு" என்று பிள்ளையாண்டான் சொல்லுவான்.

'ம்க்கும். புருஷா மட்டும் ஆறடி உசரமும் அங்கமும் பாழ் போறதாக்கும்" என்று தாயார் ஒரு நாளைக்குச் சொன்னபிறகுதான் இந்தப் பல்லவியைக் குறைத்துக் கொண்டான்.

கன்னமும் கதுப்பும் உயரமும் தாட்டியும் மினுமினுப்பும் வெள்ளையுமாக பாட்டியா கையைக் கூப்பி வணங்கினார். குடக்கூலிக்கு விடுகிற பகுதியைக் கொண்டு காண்பித்தார். அந்தக் காம்பவுண்டுச் சுவருக்குள்ளேயே அடுத்த வாசற்படி. அதற்கு முன்னால் காம்பவுண்டுச் சுவருக்குள்ளேயே ஒரு வெளி. சச்சதுரம். மூன்று கட்டில் போட்டுப் படுக்கலாம். உள்ளே நுழைந்ததும் ஒரு சின்ன அறை. இரண்டு கட்டில் போடலாம் – படுக்கை அறை. படுக்கையறையிலிருந்து ஓர் ஆள் நுழையப் போதுமான திறப்பு. அதனுள் நுழைந்து வலது பக்கம் திரும்பியதும், ஒரே ஆள் மட்டும் சுவரில் பட்டும் படாமலும் நடக்கக்கூடிய ஒரு ஓட்டம். ஓட்டத்தை ஒட்டி ஒரு மேடை. அதுதான் சமையல் செய்கிற இடம்.

"அடுத்த தடவை நீ பிள்ளையாண்டானா, இந்த ஓட்டத்திலெ நீ எப்படிடீ போக முடியும்?" என்றாள் தேவாவின் மனைவி. மருமகள் புன்னகை பூத்தாள்.

"பரவால்லேம்மா. ரண்டு பேரும் குழந்தையும் தானே பாத்துக்கலாம். மனுஷா நல்லவாளா இருக்கா." – பிள்ளை.

"அது சரிடா, காலை நீட்டிண்டு படுத்துக்க முடியாது போலிருக்கே. நீ கொஞ்சம் மடக்கிக்கோ. நான் கொஞ்சம் நீட்டிக்கறேன்னு சொல்லிக்கணும் போலிருக்கே."

"அதெல்லாம் அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்மா! மனுஷா நல்லவாளா இருக்கா. முக்காவாசி நாள் வெளியிலே ஓப்பன்லெ படுத்துக்கறா எல்லாரும் இங்கெல்லாம். வெளியிலே ரண்டு கட்டிலைப் போட்டுண்டு

படுத்துண்டாப் போறது” என்றான் பிள்ளை.

“அவாளுக்குப் பிடிச்சிருக்கு – நீ ஏன் கவலைப்படறே?” என்றார் தேவா.

“கவலையா? சுளையா நானூறு ரூபான்னா மாசா மாசம். ரெண்டு மாச அட்வான்ஸ் வேறே வேணுமாம்.”

“ஏம்மா ரூபா ரூபான்னு மலங்கறே? இந்த இடம் போதும் எனக்கு. பகல் முழுக்க ரெண்டு பேரும் ஆபீசு. குழந்தையை தாயி பாத்துக்கறா. வீட்டுக்காரர் எப்படியிருக்கா பாரு!”

“அது சரி. குழந்தைகள்ளாம்தான் பாரேன் துளிவேத்து முகமாகப் பழகித்தா பாரு. வந்ததும் வராததுமா ஒட்டிக்கிண்டு, என்ன சிரிப்பு! என்ன கொண்டாட்டம்?” என்று தேவாகூட வந்து நின்ற மூன்று குழந்தைகளையும் பார்த்தார். அதுகளும் சிரித்தன – தமிழ் புரிந்து விட்டாற்போல.

அட்வான்ஸைக் கொடுத்தார்கள்.

“ஒரு கவலையும் வேண்டாம். உங்க பஹுவை எங்க ஸிஸ்டர் மாதிரிப் பாத்துக்கறோம்” என்றார் பாட்டியா பணத்தை எண்ணிக் கொண்டு.

“உங்க பையன் இவன் தம்பி மாதிரி” என்றாள் பாட்டியாவின் தாயார்.

விடைபெற்றுக்கொண்டு கிளம்பினார்கள் தேவாவும் குடும்பமும்.

“எப்ப வருவே?” என்று பிள்ளையின் கையைப் பிடித்துக் கொண்டான் எட்டு வயது.

“நாளைக்கே.”

“நான் இனிமே இங்கேதான் கீதாவோட விளையாடிண்டிருப்பேன்” என்று குடக்கூலி இடத்தைக் காண்பித்தது நாலு வயது.

“யாரு கீதா?”

“இதுதான்” என்று தேவாவின் பேத்தியைக் காட்டிற்று நாலு வயது.

“அட, நீயும் ஒரு பேரு வைச்சுட்டியா தேவலையே. குழந்தைகள்ளாம் எப்படியிருக்கு பாரு ஒண்ணொண்ணும்!”

“போய் வரோம்.”

“நாளைக்கே வந்தடணும்” என்றன மூன்று குழந்தைகளும். “நாளைக்கே!”

“நல்ல நாளாப் பார்த்துண்டு வரோம் – ஒரு வாரத்துக்குள்ளே.”

நாலு வயதுப் பையன் “நானும் வருவேன்” என்று அழத் தொடங்கிவிட்டான்.

“ஜல்தி வருவா பேட்டா. நல்ல முகூர்த்தம் பார்த்து வந்துடுவா . . . அரே, இது என்ன உங்க குழந்தையா? எங்க குழந்தையா? என்று சிரித்தாள் பாட்டியாவின் தாயார் குழந்தை விடாமல் அழுவதைப் பார்த்து.

எல்லாக் குழந்தைகளும் டாட்டா காட்டின.

தேவாவின் பேத்தியும் டாட்டா சொல்லிற்று.

“நல்ல முகுரப் பார்த்து ஜல்தி வாங்க. முன்னாலெ வந்தாலும் பரவால்லெ” என்றது ஆறு வயது.

“பார்த்தேளோல்லியோ, பரவாயில்லையாம் – நூத்துக் கிழம் மாதிரின்னா பேசறது!”

அந்த நல்ல முகூர்த்தம் லேசில் வரும் வழியாக இல்லை. பிள்ளையும் மருமகனும் சாமான்களைப் போட்டுவிட்டு வந்தார்கள் ஒரு நாள்.

“இன்னிக்கு வல்லியா?” என்று ஏக்கத்தோடு கேட்டனவாம் எட்டும், ஆறும், நாலும்.

தேவாவுக்குப் பதினைந்து நாள் ஜுரம் அடித்தது. அவர் எழுந்ததும் அவர் பிள்ளை படுத்துக்கொண்டான். அவன் எழுந்து கொள்ளும் பொழுது, மருமகளின் தாயாருக்கு உடம்பு கவலைக்கிடம் என்று தந்தி வந்தது. மருமகள் இரண்டு நாள் பயணம் செய்து ஊருக்குப் போனாள். அவள் திரும்பி வர இரண்டு மாதமாயிற்று. மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. அவள் வந்ததும் தேவாவின் மனைவிக்கு மஞ்சள் காமாலை வந்தது. யமுனையின் நன்கொடை. மூன்று மாத வாடகைகளையும் பிள்ளை மாதாமாதம் இரண்டாம் தேதியே கொடுத்துவிட்டு வந்தான். மூன்றாம் மாத வாடகை கொடுக்கும்போது பாட்டியா கடுகடுவென்றிருந்தார். பாட்டியாவின் தாயார் முகத்தை ‘உம்’மென்று வைத்திருந்தாள்.

மஞ்சள் காமாலைக்குத் தேவாவின் மனைவியை விட மனதில்லை.

“இப்ப ஜாகை மாற வாண்டாம். பேசாம அட்வான்ஸை திருப்பி வாங்கிண்டு சாமானெல்லாம் எடுத்துண்டு வந்து சேரு” என்று மெலிந்து போன தாயார் உத்தரவிட்டாள்.

தேவாவும் பிள்ளையும் மருமகளும் குழந்தையோடு பட்டேல் நகருக்குப் போனார்கள்.

“ஆயியே” என்று சிரிக்காமல் அழைத்தார் பாட்டியா. “எங்களுக்கு ரொம்பக் கஷ்டம் கொடுத்துவிட்டீர்கள்” என்று எடுத்த எடுப்பில் தொடங்கினார்.

“என்ன கஷ்டம் கொடுத்தோம்? மாசாமாசம் ரெண்டாம் தேதி வாடகை மூணுமாசம் கொடுத்துண்டு வரேன்.”

“பணம் யாருக்கு சார் வேணும்? பணத்தைப் பத்தியா நான் பேசினேன்?”

“பின்னே என்ன கஷ்டம்? அட்வான்ஸ் கொடுத்ததிலேர்ந்து நாங்க இன்னும் பால் கூடக் காச்சி சாப்பிடலியே! ஏதோ நாங்க குடி வந்திருந்தாலும், ஏன் அங்கே நின்னே, இங்க நின்னே, எரஞ்சு பேசாதே– இப்படி ஏதாவது சொல்லலாம்.”

“அதெல்லாம் நீங்க செய்திருந்தா நல்லா இருந்திருக்கும். இப்ப ரொம்பக் கஷ்டமாப் போச்சு.”

பாட்டியாவின் கைக்குழந்தையும் மற்ற மூன்று குழந்தைகளும் ஆஜராகிவிட்டன. எல்லா முகங்களிலும் ‘உம்’மென்ற முறைப்பு.

தேவா குழம்பிப்போய்க் குழந்தைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார். பிள்ளை வாதம் செய்து கொண்டிருந்தான்.

“ரொம்பக் கஷ்டம் ரொம்பக் கஷ்டம்னு சொல்லிண்டேயிருந்தா என்ன கஷ்டம்னு சொல்லுங்களேன்?

“தெருவிலே எல்லாரும் கேக்கறாங்க சார் – ஏன் குடி வச்சவங்க வரலே வரலேன்னு. வீட்டிலே ஏதோ தோஷம் இருக்குன்னு பேசிக்க ஆரம்பிச்சுட்டாங்க . . . மாசத்துக்கு ஒரு தரம் வந்து நீங்க திறந்து பார்த்துட்டுப் போறீங்க. நீங்க அந்தண்டை போனப்பறம் எலி பிராண்டுது. பூனை ராத்திரி முழுக்கக் கத்துது. அதைக்கூட நான் சட்டை பண்ணலே. தெருவிலே பேசறாங்க பாருங்க ஏன் வரலே ஏன் வரலேன்னு வீட்டுக்காரங்க சரியாயிருந்தா இப்படி வரத் தயங்குவாங்களாங்கறான்

அடுத்த வீட்டுக்காரன்."

"இது என்ன சின்ன ஊரா. பாட்டியாஜீ வம்பளக்கறதுக்கு? அறுபது லட்சம் பேர் இருக்கற ஊர்லே யார் யாரை சார் கவனிக்கப் போறாங்க?"

"எத்தனை லட்சம் பேர் இருந்தா என்ன? அடுத்த வீடு அண்டை வீடு, தெரு எல்லாம் அப்படியேதான் இருக்கும்."

"சார், இனிமே நாங்க உங்களுக்குக் கஷ்டம் கொடுக்கலெ. நான் இப்பவே காலி பண்ணிடறேன். அதுக்குத்தான் வந்திருக்கேன். எங்க தாயாருக்கு உடம்பு சரியாயில்லெ. நான் இன்னும் நாலு மாசத்துக்கு அவர்களை விட்டு நகர்றதுக்கு இல்லே. அட்வான்ஸைத் திருப்பிக் கொடுத்திடுங்க!"

"ரொம்ப நல்ல பேச்சா இருக்கே இது!"

"ஏன்?"

"அட்வான்ஸ் எப்படித் தர முடியும்? நீங்க பண்ணின கூத்துல இன்னும் மூணு மாசத்துக்கு யாரும் வரமாட்டாங்க! பக்கத்து வீட்டுக்காரன் கலைச்சுக்கிட்டே இருப்பான் . . . ஸுஷ்மா!"

"ஹாஞ்ஜீ" என்று உள்ளேயிருந்து குரல் வந்தது.

"நீ வந்து இவங்களோடு பேசிக்க. இவங்க ரொம்ப அன்ரீஸனபிள்"— என்று குரலை உயர்த்திச் சொல்லிவிட்டுக் கோபமாக எழுந்து மாடிக்குப் போனார் பாட்டியா.

தகப்பனார் கோபித்துக் கொண்டு போவதைப் பார்த்து "நீங்கள்ளாம் பொல்லாதவங்க" என்று ஹிந்தியில் கத்திற்று எட்டு வயது.

"அரே, ச்சுப்" என்ற பாட்டியாவின் மனைவி வெளியே வந்தாள்.

பிள்ளை வாதத்தை தொடர்ந்தான். "அதெல்லாம் முடியாது" என்றாள் ஸுஷ்மா. பாட்டியாவின் தாயார் அப்போது வெளியே வந்தாள். "நீங்க ரொம்ப மோசமாப் பேசறீங்க" என்று கத்தினாள்.

"எண்ணூறு ரூபாயை முழுங்கப் பாக்கறேளே" என்று தேவாவும் குரலை உயர்த்தினார்.

நாலு வயதுப்பையன் அவர்மேல் துப்பினான். உடனே ஆறு வயதுப் பெண்ணும் பிள்ளைமேல் துப்பினாள். எட்டு வயதுப் பையன் "நீங்க

எல்லாம் ஜங்க்ளிகள்” என்று கத்தினான். நாலு வயது, மருமகள் இடுப்பிலிருந்த குழந்தையின் காலைப் பிடித்துக் கிள்ளிற்று. ஆறு வயது துப்பிக் கொண்டேயிருந்தது. பிறகு ஒரு குழந்தை செருப்பை எடுத்து தேவா மீது எறிந்தது.

“இது என்னடா கிரகசாரம்” என்று தேவா எழுந்து நின்றார்.

பிள்ளை நூறு வீடு தள்ளியிருந்த பாத்திராவை அழைத்துவர ஓடினான். அவன் ஆபிஸ் தோழன். இந்த வீட்டைப் பற்றிச் சொன்னவன் அவன்தான்.

தேவாவும் மருமகளும் தனிக்காட்டில் விடப்பட்டது போல் விழித்தார்கள்.

“ம்ம்ம்ம்” என்று நாக்கை வெளியே துருத்திக் கண்ணை இறுக்கி ஆறுவயது மருமகளைப் பார்த்துப் பழிப்புக்காட்டிற்று. ஸுஷ்மாவின் இடுப்பிலிருந்த குழந்தை அவனைப் பார்த்துச் சிரித்தது.

பாத்ரா வந்தான். பாட்டியாவின் ஸ்திரீகளோடு பேசினான். மாடிக்குப் போனான். பாட்டியாவைப் பார்த்தான். கீழே வந்தான். மறுபடியும் மாடிக்குப் போனான். மறுபடியும் கீழே வந்தான். கட்சித் தலைவர் தேர்தல் மாதிரி இருந்தது. நாலுவயது, தேவாவை, ஓர் அடி அடித்துவிட்டு உள்ளே ஓடி ஒளிந்து கொண்டது.

கடைசியில் ஒரு மாச அட்வான்ஸ் மட்டும் திருப்பித் தருவதாக முடிவு செய்யப்பட்டது. அதுவும் அடுத்த மாசம் பிறந்துதானாம். நடுமாசத்தில் காசுக்கு எங்கே போவதாம்!

பாத்ரா, தேவாவின் குடும்பத்தை வெளியே அழைத்து வந்தான். கிசுகிசுவென்று கெஞ்சினான். “எனக்குத் தெரியாமப் போயிடுத்து. என்னாலெதான் உங்களுக்கு இந்தக் கஷ்டம்” என்று பிள்ளையிடமும் தேவாவிடமும் கெஞ்சினான். மன்னிப்புக் கோரினான்.

அவசர அவசரமாக டாக்சி கொண்டு வந்தான் பிள்ளை. பாத்ரா காவலுக்கு நின்றான். கதவைத் திறந்து சாமான்களை ஏற்றினார்கள்.

டாக்சி புறப்படும்போது பாட்டியாவோ ஸ்திரீகளோ யாரையும் காணவில்லை. அடுக்களைக்குள் போய்விட்டார்கள் மாடி ஜன்னல் வழியாக பாட்டியா பார்ப்பது தெரிந்தது. பிள்ளை தன்னைப் பார்ப்பதைக் கண்டு, அவர் தலை மறைந்தது.

ஆறு வயதும் எட்டு வயதும் வாசலைப் பார்த்துத் துப்பின. "ஜாவ் ஜாவ், கல் நஹி ஆனா" என்று கத்தின.

"ச்சுப்" என்று பாத்ரா விரட்டினான். டாக்சிக்கு டாட்டா சொன்னான்.

டாக்சி பிறப்பட்டது.

"அன்னிக்கு டெலிவிஷன் பார்க்கறபோது எப்படி ஒண்டிண்டிருந்த குழந்தைகள்!" என்றார் தேவா.

"அப்பாக்குக் குழந்தைகள்னா உசிரு" என்றாள் மருமகள்.

"புரியறது நீ சொல்றது. நீங்க பொம்மனாட்டிகள். ரொம்ப ப்ராக்டிகல்" என்றார் தேவா.

அவருக்கு கார் வெளிச்சத்தில் டெலிவிஷன் பெட்டி தெரிந்தது. ஐன்ஸ்டீனையும் மதர் தெரஸாவையும் பார்த்துக்கொண்டே போனார். துப்பின எச்சில்களை மூன்று பேரும் துடைத்துக்கொண்டும் போனார்கள்.

அமுதசுரபி, மே 1979

# இவனும் அவனும் நானும்

குதிரைக்குக் கன்னிப்பட்டை கட்டினாற் போல, இப்பால் அப்பால் பார்க்காமல் நடந்து கொண்டிருந்தான் இவன். இவன் பெயரை எதற்குச் சொல்ல வேண்டும்? ஏதோ ஒரு மனிதன்.

கையெழுத்து மறையட்டும் என்று காத்திருந்துவிட்டு, தெரு விளக்கு எரிய ஆரம்பித்ததும் வீட்டை விட்டுக் கிளம்பினான். கிளம்பும் பொழுதே உடம்பில் ஒரு ஜுரம். நாடியைத் தொட்டுப் பார்த்தால் படபடப்பு தெரியும். நெற்றி, கை – எங்காவது ஒரு பூவை வைத்தால் வர்ணமிழந்து போகும் – வாடும்; நடக்கும்பொழுது கூட கால் சரியாக ஊன்றவில்லை. பின்னி நடுங்குகிறது. கொசுக்கடி ஜுரமோ, குளிர் காய்ச்சலோ இல்லை. இவன் மனசைத்தான் ஏதோ கடித்திருக்கிறது அதற்குத்தான் ஜுரம்.

இப்பால் அப்பால் பார்க்காமல், ஏன் இப்படி நெட்டுக்குத்தாக, கால் பின்னப் பின்ன நடக்க வேண்டும்? பயம். வெற்றிலை பாக்குக் கடைக்கார கிராமணி பார்க்கப் போகிறாரோ என்று பயம். போண்டாவும், சுகியனும் போட்டு விற்கும் எல்லம்மா பார்க்கப் போகிறாளோ என்று பயம். வாசல்படியில் உட்கார்ந்து 'கிரிக்கெட்' பேசிக் கொண்டிருக்கிற கல்லூரிப் பையன்கள் பார்க்கப் போகிறார்களோ என்ற பயம், அவர்கள் பேச்சில் ஒரு சிறுதடை. தன்னைப் பார்த்துத்தான் பேச்சு நின்றுவிட்டதாக இவன் அரண்டு போய், கடைக்கண் பார்வையைக் கூட நேர்ப்பார்வையாகத் திருப்பிக் காலை எட்டிப் போடுகிறான்.

தான் ஒன்றையுமே கவனிக்காமல் ஏதோ காரியமாகப் போவதாகக் காட்டிக்கொள்ள வேண்டும். ஆனால் அதே சமயம் முகத்திற்கு வருகிறதே ரத்தம். சூடு இன்னும் கொஞ்சம் வீசுகிறது.

வீதியில் எத்தனையோ பேர் போகிறார்கள். வருகிறார்கள் சாதாரணமாக அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு நடக்கிறார்கள். யார் யார் தன்னைப் பார்க்கிறார்கள் என்று யாருக்கும் திருட்டுக் கவலையே இல்லை. இவனும் அப்படி சாதாரணமாகப் போகலாம். ஆனால் போக முடியவில்லை. கடிபட்ட மனது. என்னமோ உலகம் முழுவதும் தன்னையே கவனிப்பதற்காகக் கங்கணம் கட்டி அமர்ந்திருப்பது போல் தோலைக் கூச அடிக்கிறது பயம். "இந்த உலகம், 'பிரபஞ்சம்' என்பதெல்லாம் நம்முடைய கற்பனை – மனசின் தோற்றங்கள். மனசு இல்லையானால்,

அவையும் இல்லை” என்று மனசைப் பற்றிச் சொல்லுகிறார்களே – அதற்கு ஒரு கோணல் சாட்சி வேண்டுமானால் இப்போது இத்தனை பேரும் தன்னைப் பார்ப்பதாக வெலவெலத்து நடக்கிறானே – அந்த இவனைத்தான் சொல்லலாம்.

சரி, அப்படிப் பயமாக இருந்தால், ஏன் போக வேண்டும்? பேசாமல் வீடு திரும்பி, ஏதாவது புத்தகத்தைப் படிக்கக் கூடாதா? சாப்பிட்டுப் படுக்கக் கூடாதா? குழந்தையோடு விளையாடக் கூடாதா? இல்லை, அவளோடு பேசி, பொழுதை நிம்மதியாகப் போக்க கூடாதா?

முடியாது! மனசு கடிபட்டிருக்கிறது. இப்படிப் பயந்துகொண்டே, இந்தத் தீ மிதித்தாவது, அங்கே போய்ச் சேர்ந்து விட வேண்டும். அதுதான் இந்தக் கடியின் வேட்கை. இந்தப் பயமும் நடுக்கமும் இல்லாவிட்டால், அதிலே என்ன சாரம் இருக்கிறது? . . இரண்டு கரும்பை உருளையில் கொடுத்து ஒரு தம்ளர் சாறாகப் பிழிந்து கொடுத்தால் குடிக்கலாம். ஆனால், அந்தக் கரும்பைச் சீவி நறுக்கிக் கடித்து ஒரு நாள் முழுவதும் மல்லுக்கு நிற்பது தான் மனுஷன் செய்யும் காரியம். இத்தனை எதிரிகளையும் கடந்து அங்கே போய் நிற்க வேண்டும்!

எங்கே? அதோ அந்த வீட்டுக்குள். இங்கிருந்து தெரியாது. வலது பக்கம் ஒரு சந்து திரும்புகிறதே – அதற்குள் நுழைந்து, அங்கே ஒரு தையல்கடை இருக்கிறதே – அதற்குப் பக்கத்தில் ஓர் ஆசாமி மட்டும் நடக்கக் கூடிய நடையில் நடந்து, நாலுகதவுகளைக் கடந்து ஐந்தாவது கதவு. அதுதான் அந்த வீடு.

போகும் வழியில், அதாவது முன் சந்தில் இரண்டு பசுக்கள் இப்படியும் அப்படியுமாகக் குறுக்கே படுத்திருக்கின்றன. அப்பால் ஓர் எருமை நிற்கிறது. அதற்குப் பக்கத்தில் ஒரு பொய்க் கன்று படுத்திருக்கிறது– மூங்கில் காலுடன், கிழிந்த தோலுடன்.

மாடுகள் நகரவில்லை. “த்தா!” என்று வாய்விட்டு ஓர் அதட்டல் போட அவன் வாய் எழவில்லை. பயம்! அந்தச் சத்தத்தைக் கேட்டு யாராவது பார்த்துவிட்டால்! பார்த்து சந்தேகப்பட்டால்! பேசாமல் சுவரோரமாக உடம்பைத் தேய்த்துக் கொண்டு, அடுத்த மாடு தலையை அசைத்ததிலிருந்தும் தப்பிக்கொண்டு தையற் கடையைப் பார்க்காமல் இருள் சூழ்ந்த நடையில் திரும்பிவிட்டான் இவன். இடது பக்கத்தில் உள்ள முதல் கதவு சாத்தியிருக்கிறது. அப்பாடா! இரண்டாவது கதவு திறந்திருக்கிறது. சுண்ணாம்பு நீர் போல் வெளிச்சம் தெரிகிறது. அதையும்

கடந்தால் மூன்றாவது நிலையில் இரண்டு மூன்று பெண்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இவன் போவதைப் பார்த்து பேச்சை நிறுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் ஏதோ கிசுகிசுவென்று இவனைப்பற்றிப் பேசிக் கொள்வதாக இவனுக்கு ஒரு பிரமை. உடல் இன்னும் நடுங்குகிறது. சூடு ஏறுகிறது. எத்தனை பேருக்குத்தான் பயப்படுகிறது! நாலாவது நிலை மூடியிருக்கிறது. ஐந்தாவது நிலையில் போகும்பொழுது அவள் அரிக்கேன் விளக்கின் ஒளியில் வாளியில் ஏதோ வேட்டியைக் கசக்கிப் பிழிந்து கொண்டிருந்தாள். 'வாங்கோ' என்று காதில் பட்டதும் படாததுமாக ஒரு வரவேற்பு.

'ம்' என்று இவனும் காதில் விழாமல் முனகி, அந்த வரவேற்பை ஏற்றுக்கொண்டான். கால் துவண்டது எதையாவது பிடித்துக்கொள்ள வேண்டும் போல, படபடவென்று நடுக்கம். அவளைக் கண்டு விட்ட பூரிப்பு. ஆனால் அந்தப்பூரிப்பு நெஞ்சைத் தாக்கும் வெறி, சாதாரணமாக வருவதில்லை. இப்படி காலைக் கையை உடலை ஆட்டி வைத்துக் கொண்டுதான் வரும். மூளை கொதிக்கும். கன்னம் முள்படரும். நா உலரும். தண்ணீர் கேட்டு வாங்கிக் குடிப்பான். கை அடங்காமல் நடுங்கும். தண்ணீர் சட்டை கழுத்தெல்லாம் வழியும். இப்போதும் இதே ரகளை . . . ஆனால் சுளீர் என்று ஓர் ஏமாற்றம் முகத்தில் அடித்தது.

உள்ளே தம்புரா மீட்டு கேட்கிறது. இந்த நாராசத்தை அவன் எதிர்பார்க்கவில்லை. ஒரே நிசப்தமாக இருக்கும் என்றுதான் தெருவில் நடக்கிற போது கற்பனை; நேற்று இரவெல்லாம் கற்பனை, காலையில் எல்லாம் கற்பனை பகலெல்லாம் கற்பனை. அத்தனையும் ஒரு கணத்தில்! . . . சீ!

பாட்டுக் கேட்கவில்லை. "பாடிக்கொண்டிருந்தால் சரி, நான் இப்போது தொந்தரவு செய்யவில்லை" என்று சத்தத்தோடு சத்தமாகச் சொல்லி விட்டு, வந்த சுவடு தெரியாமல், ஏமாற்றத்தை விழுங்கிக் கொண்டு திரும்பி விடலாம். ஆனால் தம்புரா மட்டும்தான் கேட்கிறது. அவன் – அவள் கணவன் – பாடவில்லை. பாடுவதற்காக சுருதி சேர்த்திருக்கிறான் போலிருக்கிறது. இவன் வந்த அடியோசை அவனுக்குக் கேட்டிருக்கும். "வாங்கோ" என்று அவள் தொண்டைக்குள் கூப்பிட்டது கூட கேட்டிருக்கும். மெல்ல தலையைக் காட்டிவிட்டுப் போய் விடலாம்.

அவள் வரவேற்ற இங்கிதம் ஒன்றே போதும். என்ன ரகசியம்! உன்னுடையவள்தான் என்று சபதம் செய்கிறாற்போல ஒரு ரகசியக்குரல். மனம் பேசுகிற குரல் அது! காதில் விழவேண்டும் என்பதற்காகக்

கொஞ்சம் வாயால் சொல்லும் அது உரிமைக் கம்மல்! . . . ஆனால் இன்னும் தடைதான் என்றும் போல. தனியாக, அவளை ஒரு நிமிஷத்திற்கு மேல் பார்க்க முடிந்ததில்லை. பக்கத்து போர்ஷனிலே குடியிருக்கிறவர்கள், பால்காரன், வீடு கூட்டுகிறவள், பாட்டு சொல்லிக் கொள்ள வருகிற ஒரு பெண் — இப்படி ஏதாவது ஒரு தடை வந்து பாதாளம் போல நிற்கும் . . . யாரும் வராத சந்தர்ப்பமாகக் கணக்குப் போட்டு வந்த இன்று, இந்த அந்தி வேளையில், அவனே இருக்கிறானே. இன்று 'ட்யூஷன்' கிடையாதா? வெளியே போகவில்லையா?

செருப்பை முற்றத்தில் மெதுவாகக் கழற்றிவிட்டு, கூடத்தில் ஏறித் திரும்பி உள்ளே பார்த்தான் இவன்.

"வாங்கோ சார், வாங்கோ" என்று உற்சாகமாகக் கூப்பிடும் குரல் எழவில்லை. உற்று கவனித்தான். அவன் கண் மூடியிருந்தது. தலை தம்புராவின் தண்டின் மீது சாய்ந்திருந்தது. விரல்கள் தந்திகளைத் தடவிக் கொண்டிருந்தன. தம்புரா நாகப்பாம்பு போல் பளபளக்கிறது. நாகப்பாம்பு படமெடுத்தால் தலை மேலும் உடல் கீழும் இருக்கும். ஆனால் இந்த நாகம் தலையைக் கீழே வைத்து உடலை மேலே உயர்த்தி சிரசாசனம் போட்டுப் படம் எடுத்துக்கொண்டு உறுமுகிறது. அதன் உடலை வலது கையால் அணைத்துப் பாடச் சொல்லிக் கொண்டிருக்கிறான் அவன். அதுவும் பாடுகிறது. அந்த விஷம்தான் அவன் கண்ணை மூடிவிட்டது போலிருக்கிறது.

இவன் பார்த்துக்கொண்டே சற்று நின்றான் — அவனை, அவன் விரலை . . . கண் மூடலை, தலை தொங்கலை.

பழைய நாள் நண்பன் அவன். ஆறாம் வகுப்பு வரை சேர்ந்து படித்தார்கள். திடீரென்று ஒரு நாள் அவன் படிப்பை நிறுத்திவிட்டாள். பாட்டு கற்கத் தொடங்கிவிட்டான். இவன் மேலே படித்து, கலியாணமாகி, உத்யோகமாகி, சென்னைக்கு வந்தான். பதினாறு வருஷம் கழித்து தெருவில் பழைய நண்பனைக் கண்டான். யோக க்ஷேமங்களைப் பறிமாறிக் கொண்டார்கள். உறங்கிப் போன நட்பு மீண்டும் விழித்தது. துளிர்த்தது. இவன் அவன் வீட்டுக்கு வருவதும், அவன் இவன் வீட்டுக்கு வருவதும் — இப்படி நட்பு கிளை விட்டது. கிழங்களையே பாடச் சொல்லிச் சொல்லிக் காய்ந்த நார்த்தங்காய் ஊறுகாயைச் சுவைத்து சப்புக் கொட்டும் ரசிகர்கள் மண்டிய உலகத்தில், இந்த நண்பன் வாசல் வாசலாக ஏறி இறங்கி ட்யூஷன் சொல்லிக் கொடுத்துப் பிழைப்பதில் ஆச்சரியமில்லை. சங்கீதத்தை மறக்காமலிருப்பதுதான் ஆச்சர்யம்!

ஓர் அனுதாபம் — ஒரு பரிவு. வயிற்றுக்குப் போதாமல் அவன் சம்பாதிக்கிறதைக் கண்டு ஓர் இரக்கம் —

அதனால்தான் நட்பு கிளை விட்டது.

ஒரு மாதத்திற்கு முன்னால் இவன் அந்த நண்பனைப் பார்க்க வந்தபொழுது, அவன் வீட்டில் இல்லை. தனியாக இருந்தாள் அவள். "உட்காருங்கள். வந்துவிடுவார்" என்றாள். காப்பி கொடுத்தாள், வெற்றிலைத் தட்டை எடுத்து வைத்தாள். பேசிக் கொண்டிருந்தாள். ஒரு மணி நேரமாயிற்று. இன்னும் நண்பன் வரவில்லை. விடை பெற்றுக் கொண்டான் இவன். ஆனால் வீட்டுக்கு வந்தபொழுது நண்பன் நினைவுக்குப் பதிலாக, அவள் பேச்சு, அவளது குழைவு, சரிந்த உடல், அந்தக் குழைவு தெரியக் கட்டியிருந்த சேலைக்கட்டு, அந்தக் கண் — இவையெல்லாம்தான் அவன் முன் வட்டமிட்டன. இத்தனை அழகா அவள்! இவ்வளவு தெரிந்தவளா! பேச்சில் எத்தனை மறை பொருள்கள்! சொல்லாமல் எத்தனை சொல் அவனுக்குள்ளே என்னமோ ஒன்று ஊறிற்று, அன்று தொடங்கி, இந்த வீட்டுக்கு வந்தால் ஒரு நடுக்கம்! அவளைப் பார்த்தால் ஒரு நடுக்கம்! அவனைப் பார்த்தால் ஒரு அலுப்பு; நடையைக் காண்கிற அலுப்பு! . . .

மெதுவாக, சந்தடியின்றி சப்பணம் கூட்டி உட்கார்ந்து கொண்டான். உட்காரும்பொழுது முழுங்கால் சொடுக்கும் ஓசை கேட்காமல் இருக்க வேண்டுமே என்று கவலையுடன் உட்கார்ந்தான்.

"இந்தப் பாவிக்கு என்ன விரல்கள்! என்ன விரல்கள்! என்ன செவி! என்ன செவி!" என்று அதிர்ந்து கொண்டே உட்கார்ந்தான்.

நாலு தந்திகளையும் தடவிற்று அந்த விரல் — அன்னத்தின் முதுகைத் தடவுவது போல கீழ்பஞ்சமத்தைத் தொட்டு. இரண்டு தடவை ஷட்ஜத்தில் தத்தி, மீண்டும் கீழே இறங்கி அடி ஷட்ஜத்தைத் தொட்டு வட்டமிட்டது அவ்வோசை, ஆனால் வேறு என்ன என்னவோ ஓசைகள் கேட்டுக் கொண்டிருந்தன. "பாநிஸாரிகாரி நீ" என்று இவன் மனதிற்குள் அந்தச் சொல்லாத ஓசைகளையும் சொல்லிச் சொல்லிப் பார்த்தான்.

ஒரு நிமிஷம் அப்படி நெஞ்சிற்குள்ளே சொன்னான். ஒரு நிமிஷத்திற்குப் பிறகு அந்த மனக்குரலும் நழுவி, அந்த வெள்ளத்தோடு வெள்ளமாக இழைந்து விட்டது. ஏதோ நினைவு வந்து மீண்டும் சொல்ல ஆரம்பித்தான் மௌனமாக. முடியவில்லை. குரலே அபஸ்வரமாக இருந்தது. அபஸ்வரம் என்று சொல்ல முடியாவிட்டாலும் அதிலிருந்து

நடக்கத்தான் காத்திருக்கிறது. கிணறு யாரோ மொள்ளத்தான் காத்திருக்கிறது. இப்படி ஒரு சித்திரம். இந்த அறைக்குள் வந்து உட்காரத் தொடங்கிய நாள் முதல் அதன் கவர்ச்சி ஓங்கிக்கொண்டே போகிறது. பார்த்த புதிதில் ஒன்றும் தெரியவில்லை. ஆனால் பார்க்கப் பார்க்க, பார்க்கப் பார்க்க — என்ன இது — சொல் இப்படி வற்றிவிட்டது? ஆமாம் பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலே அதன் தனிமை நம்மைத் தொற்றிவிடும். கரை காணாத ஜலப் பிரளயத்திற்கு நடுவில் ஒரு தட்டை, பாசி கூட மிதக்காத ஒரு தலை, ஒரு பட்சி ஒன்றுமே தெரியாத வெறும் பாழ்த்த கடல் பரப்பில் நாம் ஒன்றியாக இருக்கிற உணர்ச்சி சூழந்து கொள்ளும். எப்படித்தான் இதை எழுதினானோ! பல மைல் பரப்புக்கு ஒரு பொட்டல், ஒரே ஒரு சின்னக்கிணறு — சகடை, கயிறில்லாத கிணறு, அந்த 'ஹோ'வுக்கு நடுவில் ஒரு கோடு — பாதை. ஜன்ம ஜன்மமாகத் தனிமையை ஊறி அனுபவித்தவனுக்குத்தான் இந்த மாதிரி ஒரு சித்திரம் போட வந்திருக்கும். பல சமயங்களில் பார்த்துக் கொண்டேயிருக்கிற எனக்கு, சுற்றிலும் உள்ள ஜன்னல், மரம், புத்தகம், நாற்காலிகளெல்லாம் அழிந்து போய் அந்தப் பொட்டலுக்கு நடுவில், கிணற்றங்கரையில் நிற்கிற பிரமை ஏற்பட்டதுண்டு.

"உனக்குப் பிடித்திருக்கு போலிருக்கே அது!" என்றான் ராமரத்னம் ஒருநாள் நான் பார்த்துக் கொண்டிருக்கிறபோது.

"பிடிச்சிருக்கோ என்னமோ, அதையே பார்த்துண்டிருக்கணும் போலிருக்கு."

"வாஸ்தவம்தான். நான் நாள் கணக்கிலே அதைப் பார்த்துண்டே உட்கார்ந்திருக்கேன். இந்த உலகத்திலே பிறந்திருக்கிற ஒவ்வொரு மனுஷனுக்கும் ரொம்ப நெருக்கமான சிநேகிதன் யாரு தெரியுமோ? தனிமைதான். இதைப்பார்த்துப் பார்த்துத்தான் இது தெரிஞ்சுது எனக்கு. சோறு கூட திங்க மறந்து போயிடும் சில நாளைக்கு அப்படியெல்லாம் உட்கார்ந்து பார்த்திருக்கேன் . . . "

ராமரத்னம் இந்த ஒரு படத்தை — மற்றவர்களுக்கும், முதற்பார்வைக்கும் சாமான்யமாகத் தோன்றுகிற இந்தப் படத்தைத் தேர்ந்தெடுத்துப் பேணி வருகிற ஒரு நுணுக்கத்திற்கே நான் அவனிடம் பரவசப்பட்டு விழுகிறதுண்டு. ஆனால் இது மாத்திரமில்லை. அவனிடம் இன்னும் எத்தனையோ குணங்களுமுண்டு. அதாவது என்னிடம் இல்லாத குணங்கள். அவன் எதைச் செய்தாலும் பார்த்துக்கொண்டேயிருக்க

வேண்டும். பேச்சில் ஒரு இனிமை; குளுமை. மரியாதை. குரலில் மென்மை. பிரியம். வருகிற கடிதங்களுக்கு – அது யாரிடமிருந்து வந்தாலும் – ஆறப்போடாமல் பதில் எழுதிவிடுகிற சுருக்கு. சம நோக்கு. எந்த நவதானிய கோஷ்டியிலும் தன்னுடைய இனிமையோ அபிப்ராய உறுதியோ நைந்து விடாமல், தன் நிலையிலிருந்து இறங்கி கண்மூடியாகக் கலந்துவிடாமல் அவன் நிற்கிற நிலை. அந்தந்தச் சாமானை அந்தந்த இடத்தில் அழகாக வைப்பது. எதைக் கேட்டாலும் அநேகமாக அதைப்பற்றிக் கொஞ்சமாவது தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிற படிப்பு, விழிப்பு. வேலைக்காரப் பையனிடம் அவன் தோழமை. அதாவது, அவனுடைய சௌகரியத்திற்கு ஏற்பத் தன் ஜோலிகளை வகுத்துக் கொண்டிருக்கிற ஒரு பரிவு. அவன் சேர்த்து வைத்திருக்கிற புத்தகங்கள், பொருள்கள், நார் உரிக்காத ஏழெட்டுத் தேங்காய்களை ஒரு சின்ன கத்தரியையும் கத்தியையும் வைத்துக் கொண்டே சாமியார், வெள்ளைக்காரன், காந்தி, புல்லாக்குப்போட்ட சதிர்க்காரி, சாக்ரடீஸ் என்று பல முகங்களாகச் செய்திருக்கிற கை வண்ணம். ஒரு சின்னக்கட்டை, கொட்டாங்கச்சி, ஓடு, தோலி, மூங்கில் கணு எது கிடைத்தாலும் கண்ணெடுக்காமல் பார்க்க வைக்கிற ஒரு சாமானாக மாற்றிவிடுவான் அவன். அவனைப் பார்க்க வருகிற பேர்களோ ஒரு மந்திரி (முதலில் இதைச் சொல்வதற்காக மன்னிக்க வேண்டும். சாதாரண ஜனநாயகி நான் பிறவி எடுத்த பயன் இந்தப் பதவியை அடைவதுதான் என்று சில சமயம் நம்பியேவிடுகிறேன்) வாத்தியார்கள், சுயமரியாதைக்காரர்கள், மடாதிபதிகளின் தூதர், தொழில் முதலாளி இரண்டு பேர், வேலைக்காரப் பையனின் அம்மா, அந்தப் பெண்ணின் தம்பி, கலியாண யாசகர்கள், பிராமணியம் செத்துப்போகக் கூடாதென்று பையனுக்குப் பூணூல் போடத் துடித்து வருகிற உபநயன யாசகர், கார்ப்பரேஷன் தோட்டிச்சி, தத்துவப் பேராசிரியர், சித்திர சிற்ப பள்ளிக்கூடத்து மாணர்வர்கள், நாடகத் தயாரிப்பாளர் ஒருவர் இப்படி வெவ்வேறு படிகள். இந்த எல்லோருக்கும் ஒரே மரியாதை, ஒரே இனிமை, ஒரே ஸ்வாதீனம்தான். முதுகு வழக்க நிலைக்கு ஒரு நூல் அதிகமாகக் குழைந்தோ, நிமிர்ந்தோ விடாது. எப்படித்தான் இருக்கிறானோ!

பையன் ஒரு தர்மாஸ்ப்ளாஸ்க் எடுத்துக்கொண்டு வெளியே போனான். “ஐயா குளிச்சிட்டாங்க சார். இதோ வந்திருவாங்க” என்று சொல்லிக்கொண்டே போனான்.

ராமரத்னம் அவ்வளவு சீக்கிரமாக வருவதைக் கூட நான் விரும்ப வில்லை. சிறிது நேரம் பேசாமல் அறையின் குளிர்ச்சியிலும்

தனிமையிலும் அந்தப் படத்திலும் முழுகிக் கிடக்கவேண்டும் போலிருந்தது.

“வா கண்ணா.”

பரபரப்பும் புன்சிரிப்புமாக சட்டையைக் கழுத்தில் மாட்டிக்கொண்டே வந்தான் ராமரத்னம்.

இன்னொன்று சொல்ல மறந்துவிட்டேன் (என்னிடம் இல்லாதது) ராமரத்னம் நல்ல உயரம், தொந்தி கிடையாது. இந்த வயசில்கூட வயிறு பள்ளமாகத்தான் இருக்கும். செதுக்கின முகம், செதுக்கின கைகால் அப்படி இப்படி என்றெல்லாம் சொல்ல முடியாது. ஆனால் பார்க்க நிறைவாகத்தானிருப்பான், ஆனால் இவனைவிட காத்திரமும் வடிவமுமாக நான் தினமும் இருபது பேரைப் பார்க்கிறேன். ஆனால் இவன் மாதிரி உறவாடுகிறவனைத்தான் பார்க்க முடிவதில்லை. எதைப் பேசினாலும் அதை உணராமல் போக மாட்டான். உதாரணமாக, ‘வா, சாப்பிடு, அவசியமாகக் கிளம்பணுமா. காபி சாப்பிடேன். அவர் நல்ல மனுஷன், இன்னிக்கு என்னமோ போலிருக்கு’ இந்த மாதிரி பல வார்த்தைகளை சும்மா சும்மா நாம் (நான்) மனதில் படாமல் சொல்கிறோம். ஏதோ சொல்லிச் சொல்லிப் பழக்கம். முக்கால்வாசி நேரங்களில் நிஜமாயிராது. அதனால் குரலில் உணர்ச்சியும் இராது. ஆனால் ராமரத்னம் அப்படிச் சொல்ல மாட்டான். ஒப்புக்கு என்ற வார்த்தையை அஜாக்கிரதையாகக் கூட அவன் விஷயத்தில் சொல்ல முடியாது. பேச்சிலும் சரி; காரியத்திலும் சரி. பெரிய சைக்காலஜி ஒன்றும் நான் சொல்லிவிடவில்லை. நாம் என்ன பேசுகிறோம் செய்கிறோம் என்ற பிரக்ஞை இல்லாமல் பேசிக் கொண்டும், நடந்து கொண்டும் செய்து கொண்டும் முக்கால் பொழுதை நானும் மற்ற பெரும்பாலோரும் கழிப்பதால் ராமரத்னத்தின் இந்த குணம் பெரியதாகப்படுகிறது எனக்கு. அலுத்துக் கொள்ளாதீர்கள். உசிரோடு இருக்கிற கடைசி நிமிஷம் வரையில் எதைப் பேசினாலும், பார்த்தாலும், செய்தாலும், நடந்தாலும், உட்கார்ந்தாலும் அதை உணர்ந்து ஒன்றி செய்கிறவன் ராமரத்னம். ஒவ்வொரு கணமும் இப்படி உணர்வோடு வாழ்கிறதால்தான் அவன் நடை, சொல் எல்லாம் இப்படி அன்பும் இனிமையுமாகப் பொங்கித் ததும்புகிறதோ என்னமோ.

சட்டையை அணிந்து இழுத்துவிட்டுக்கொண்டான் ராமரத்னம். பொல்லென்று வெளுத்துப்போன கிராப்பைச் சீவிவிட்டுக் கொண்டான். சீப்பைத் துடைத்துவிட்டு, கையலம்பிவிட்டு வந்தான். கைப் பொத்தான்களைப் பொருத்திக்கொண்டான். அவன் உடம்பில் ஒவ்வாமல்

துருத்திக்கொண்டு நிற்பது அந்த நரைதான். நரையா? கத்தாழை நார். நாற்பத்தைந்து வயது. தோல் வண்ணம் முப்பது, தலை இருபதும் எண்பதும். இருபது வயது அடர்த்தி, எண்பது வயது வெளுப்பு. அது கூட அவன் அதிகமாக உணர்வதால்தான் ஏற்பட்டிருக்கும். இப்பேர்ப்பட்ட ஒரு மனிதனை விட்டுவிட்டு ஒரு சண்டை, ஒரு பூசல், ஒரு மனத்தாங்கலும் இல்லாமல் எவனோ ஒருவனோடு போய் வாழ வேண்டும் என்று திடீரென்று தோன்றிற்றே ஒருத்திக்கு – அந்த ஒரு நாள் அதிர்ச்சியும், உணர்ச்சித் திணிப்பும் செய்த நாசமா இது?

ராமரத்னம் கேட்டான்.

"என்ன கண்ணா? என்ன ஆச்சு? பார்த்தாயோ? கண்டுபிடிக்க முடிஞ்சுதோ?" என்ன ஆவல்! பரபரப்பு!

"கண்டுபிடிச்சேன்."

"கண்டுபிடிச்சிட்டியா! ரியலி!"

"தூரக்கேர்ந்து பார்த்தேன். முகத்தைச் சரியா, நின்று கவனிக்க முடியலே. காலேஜ் விட்டவுடனே ஏகப்பட்ட குட்டிகளா வந்திண்டிருந்தது. பாலு காமிச்சான் இந்தப் பொண்ணுதாண்டான்னு. நான் சட்டுனு கொஞ்சம் திகைச்சுப் போயிட்டேன். நான் என்னவோ சின்னப் பொண்ணா 'சிக்'குனு இருக்கும்னு நெனச்சேன். ஆனா என்ன உசரங்கறே! உன்னையும், அவளையும் நிறுத்தி வைச்சோமோ நிச்சயமா உன் மோவாய்க்குச் சரியா நிப்பா! நல்ல உசரம். நடைகிடையெல்லாம் பார்த்தா ராமரத்னத்துக்குத்தான் பாவாடை மேலாக்குப் போட்டிருக்கோண்ணு இருந்தது.

"பாவாடை மேலாக்கா போட்டுண்டிருந்தா?"

"ஆமா, கருகருன்னு தலைமயிரு, அதுதான் வித்தியாசம். பஸ் ஸ்டாப்பிலே பத்து பதினைஞ்சு குட்டிகளா நின்னுட்டிருந்தா. ஓரமா நடந்து போறாப்பலே போய் முகத்தைப் பார்த்து விடறதுன்னு அவசர அவசரமாப் போனோம். தபதபன்னு பஸ் வந்தது பாரு. மறைச்சுட்டது. நடந்து போறதுக்குள்ளியும் அஞ்சாறு பேரை ஏத்திண்டு கிளம்பிட்டுது. அவ ஏறிப் போயிட்டா."

"அடடா."

"நான் இன்னும் கொஞ்சம் வேகமா ஓடிப்போய்ப் பார்த்திருக்கலாம்.

லொங்கு லொங்குன்னு ஓட முடியலே.”

“ம் . . . அப்படி ஆயிடுத்தா. நாளைக்கு சரியா பார்த்து வச்சுக்கோ. முகத்தை நன்னாப் பார்க்கலேங்கிறியே.”

“சாரி ராமரத்னம். முடியாமப் போயிடுத்து.”

ராமரத்னத்தின் முகத்தில் ஏமாற்றம் தெரிந்தது. எதையும் அவன் ஒளிக்க முயலமாட்டான். சிறிது பேசாமல் இருந்தான்.

“ரொம்ப உசரமாயிருக்காளோ?”

“உன் மாதிரி ஆஜானுபாகு.”

“என்னது பொம்மனாட்டி ஆஜானுபாகுவா இருந்தா பார்க்கறதுக்கு நன்னாயிருக்குமோ?”

“ஆஜானுபாகுவிலே பல தினுசு இருக்கு. ஏணி, ஒட்டைச்சிவிங்கி, யூகாலிப்டஸ் மரம், பாக்கு மரம் – ”

“ரமா”

“யூகாலிப்டஸ் செடி . . . அவ போட்டிருந்த மேலாக்கு அந்த இலைக் கலரா இருந்தது. அதுதான் அந்த மரம் ஞாபகம் வந்தது எனக்கு.”

“எனக்கு இப்பவே போய்ப் பார்த்துட்டா தேவலை போலிருக்குடா கண்ணா.”

“. . . ”

“ரண்டு வயசிலே பார்த்தது. முதல் ஆண்டு நிறைவுக்கு அப்புறம் மூணு தடவை பார்த்தேன். நாலு மாசத்துக்கு ஒரு தடவை. மார்ச் நாலாம் தேதி ஆண்டு நிறைவு. அப்புறம் இருபத்தாறாம் தேதி போன குழந்தை திரும்பியே வல்லெடா . . . ”

ராமரத்னம் சற்றுப் பேசாமலிருந்தான். நான் என்னத்தைச் சொல்லுவது? அவனுக்குச் சமாதானம் சொல்ல வேண்டும், எதையாவது சொல்லி ஆற்றிக் கொள்ள வேண்டும் என்பதெல்லாம் அவனுக்குத் தேவை இல்லை. என்னைவிட எத்தனையோ பெரியவன். தன்னை எப்படி அடக்கிக்கொள்வது, கட்டுப்படுத்திக் கொள்வது இவையெல்லாம் பிறரிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய வித்தைகளல்ல அவனுக்கு. பிறரை நடத்த, பிறருக்குப் புத்தி சொல்ல சிலர் பிறந்திருக்கிறார்களே,

அந்த மாதிரி ஒரு பிறவி. பிறருடைய மரியாதையையும் அண்டுதலையும் ஈர்க்கிற பிறவி. அவன் யாரிடமும் போய் நிற்க வேண்டியதில்லை.

இந்த விஷயத்திற்கு மட்டும் என் உதவியை எதிர்பார்ப்பது முதலில் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. புரியாமலிருந்தது. எனக்கும் என் நட்பைக் காண்பிக்க ஒரு வாய்ப்புக் கொடுக்கத்தான் இப்படிச் செய்கிறான் என்று நானே எனக்கு விளக்கிக் கொண்டேன்.

மூன்று வருஷமாக ராமரத்னம் எனக்குப் பழக்கம். ரயிலில் ஒரு தடவை திருச்சிக்குப் போகிறபோது சக பிரயாணியாக அவனைப் பார்த்தேன். ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். பத்து மணிக்கெல்லாம் படுத்து விட்டான் அவன். நுண்ணிய, நயமான ஒரு ஆத்மா என்று அந்தப் பேச்சின் அடக்கம், தெளிவு, கூர்மை, இனிமை, ஆழம், பிரியம் – எல்லாம் சொல்லிற்று. விலாசம் பரிமாறிக்கொண்டோம். அவ்வளவுதான். விலாசம் பரிமாறிக்கொள்வதால் ரயில் சிநேகம் கிளைத்துவிடுவதில்லை. டயரியில் நாலு வரி கறுப்பாகிறதுதான் மிச்சம். அப்படித்தான் இதுவும் ஆயிற்று. மூன்று மாதம் கழித்து பஸ்ஸில் குறிப்பில்லாமல் எங்கோ போய்க்கொண்டிருந்தவன், ஒரு ஓவியக் கண்காட்சி விளம்பரத்தைப் பார்த்து, அடுத்த நிறுத்தத்தில் இறங்கி அதைப் பார்க்க நுழைந்தேன். வளைய வளைய வந்த இருபது பேர்களில் ராமரத்தினமும் அங்குமிங்குமாக நின்றுகொண்டிருந்தான்.

"அடடே, சௌக்யமா சார்? ஞாபகம் இருக்கா, ரயில்லே சேர்ந்து போனோம்" என்று சொல்லிக்கொண்டே வந்தான்.

"ஞாபகமில்லாமலா? என்ன இது?"

"சௌக்யம் தானே?"

"சௌக்யம்."

"சித்திரம் பிடிக்குமா உங்களுக்கு?"

"பார்க்கத் தெரியாது. சும்மா போர்டைப் பார்த்து வந்தேன். சித்திரம் எப்படிப் பார்க்கறதுன்னே தெரியாது. எது நல்லது, எது சப்பை – இப்படி யெல்லாம் தரம் பிரிக்கிறது ஒண்ணும் தெரியாது."

"இது என்ன சார்? நாலு நாளைக்குப் பார்த்தால் தானே தெரிஞ்சு போயிடறது. நான் மாத்திரம் வர்ணத் தொட்டியிலியா பிறந்தேன், கையிலே பிரஷ்ஷோட? ஏதோ பார்க்கணும் போல் தோணித்து. அந்த

மாதிரி சிநேகமும் கிடைச்சுது. அப்படித்தான்” என்றான்.

ஒரே கலைஞன் தன் சித்திரங்களை வைத்திருந்த காட்சி அது. ஒவ்வொன்றாகச் சொல்லி விளக்கினான் ராமரத்னம். பொறுமையாக பள்ளிக்கூடக் குழந்தைக்குச் சொல்லுகிற மாதிரி சொன்னான். எனக்கு இன்னும் நினைவிருக்கிறது. மூன்று மணி சுமாருக்கு நான் உள்ளே போன ஞாபகம். ஆறு மணிக்கு வெளியே வந்தோம். அத்தனை நேரமும் எனக்கு சித்திரக்கலையைப் பற்றி அரிச்சுவடியிலிருந்து வெகு தூரம் வரை சொல்லிவிட்டான் அவன். என்னை ஒரு பொருட்டாகக் கருதி மூன்று மணி நேரம் தன் ஆனந்தத்தையெல்லாம் என்னோடு பகிர்ந்துகொள்ள வைத்தும் அதைப் பகிர்ந்துகொள்ளக் கற்றும் கொடுக்கிறதென்றால் இயல்பாக அன்பும் மனிதத்தன்மையும் சுரக்கிற இதயத்திற்குத்தான் அது சாத்தியம். மூக்கையோ புருவத்தையோ தூக்கிக்கொள்ளாமல் இவ்வளவும் செய்தான் அவன். கலைஞர்கள் ரசிகர்கள் என்ற பெயரில் சென்னையின் கலைக்கூட்டங்களிலும், சபைகளிலும் பல குங்குமம் சுமக்கிற கழுதைகளையும் முட்டைத் தலைகளையும் பார்த்து மருண்டு போயிருந்த எனக்கு ராமரத்தினத்திடமிருந்து நியாயமாகப் பெருகிவரும் எளிமையையும், அன்பையும் கண்டு ஒரு இனம் தெரியாத நம்பிக்கையும், சக்தியும் கூடத் துளிர்த்துவிட்டன. காட்சி வைத்திருந்த சித்திரக்காரனின் திறமை, தகுதி, பெருமை — எல்லாவற்றையும் பற்றி மிக உயர்வாகப் பேசினான் ராமரத்னம். “ரொம்ப அபூர்வமான . . . ஆசாமி” என்று மூன்று சாதாரண வார்த்தைகளை அவன் சொன்னபோது கனமான சொற்களாகவே எனக்குப் பட்டது. கடைசியில் விடைபெறும்போது “வெள்ளிக்கிழமை இந்தச் சித்திரக்காரனை வீட்டுக்கு அழைச்சிருக்கேன். ரொம்ப தெரிஞ்சவாளா நாலஞ்சு பேரை மட்டும், கூப்பிட்டிருக்கேன். ஒண்ணுமில்லே. இடமில்லாத குறைதான். நீங்க வந்தா எனக்குப் பெருமையா இருக்கும்” என்று இழுத்தான். பயமாக இருந்தது. ஆனால் மனசாரக் கூப்பிடுகிற குரலைக் கேட்கிறபோது சரியென்றுதான் சொல்ல வேண்டியிருந்தது.

வெள்ளிக்கிழமை போனபோது, பயம் எல்லாம் நீங்கியே விட்டது. எந்தக் கலைக்கூட்டமானாலும் தவறாமல் வந்துவிடுகிற வழுக்கைத் தலையர்கள், பேதிக்குச் சாப்பிட்ட முகங்கள், கரகரப்புத் தொண்டைகள், வறட்டுப் புன்சிரிப்புகள், புருவ மூக்குத் தூக்கிகள் — இதுகள் ஒன்றையுமே காணவில்லை. ஒரு கிழவர், இரண்டு மூன்று இளைஞர்கள், இரண்டு நடுவயது இப்படி ஐந்நூறு பேர்தான் இருந்தார்கள். ஒருத்தன் சிற்பி, மூன்றுபேர் சைத்ரீகர்கள் — இன்னும் இரண்டு பேர். இவ்வளவுதான்.

அந்தந்தத் துறையில் அசகாய சூரர்கள் என்று தெரிந்தது. அநேகமாக ரசிகர்கள் கூட்டமென்று தொழிற்சாலை முதலாளிகள், எந்தக் கொம்பைப் பிடித்தால் அடுத்த மேல் பதவிக்குப் போகலாம் என்று காத்துக் கொண்டிருக்கிற பெரிய பதவி மர்க்கடங்கள், யோசனைகளை இடம் தெரியாமல் வீசி வழங்குகிற அசப்யங்கள் – இப்படியே சேருகிற விந்தையைப் பார்த்துப் பார்த்துப் பழக்கமா? இது புதிதாக இருந்தது. கூட்டத்தில் நல்ல காற்றாக வீசிற்று. மனப்பூர்வம் வீசிற்று. புழுக்கம் இல்லை.

முக்கிய விருந்தினனாக வந்திருந்த சைத்திரிகன் ராமரத்னம் வைத்திருக்கிற அந்தப்படத்தை பார்த்தான். எல்லோரும் அதைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள்; பரவசமாகப் பேசினார்கள். விருந்தாளியும் அப்படித்தான் பேசினான். கடைசியில் கிசுகிசு என்பதுபோல ஒரு சொட்டும் வைத்தான். “மிக மிக நன்றாக இருக்கிறது. ஆனால் நான் ஒன்றே ஒன்று மட்டும் வருத்தத்தோடு சொல்கிறேன். நீங்கள் பொருட்படுத்த மாட்டீர்கள் என்று நம்புகிறேன். இதே மாதிரி ஒரு படத்தைப் பத்து வருஷம் முன்னால் ஒரு ஹாலந்து கலைப் பத்திரிக்கையில் பார்த்திருக்கிறேன். அதைப் பார்த்துவிட்டுதான் இவன் எழுதியிருக்கிறான். ஆச்சர்யமான படைப்புத்தான்” என்றான் அவன்.

“அப்படியா” என்றான் ராமரத்னம்.

“ஆமாம்.”

“அந்தப் பத்திரிக்கையின் இதழ் உங்களிடம் இருக்கிறதோ?”

“இருக்கலாம். நிச்சயமாக சொல்வதற்கில்லை.”

“இவ்வளவு ஆச்சரியமான படம் என்று நீங்கள் கருதினால் நீங்கள் பத்திரப்படுத்தி வைத்திருப்பீர்களே?”

“எனக்கு வரும் பத்திரிகையில் பார்த்தேனோ அல்லது லைப்ரரி ஏதாவதில் பார்த்தேனோ” என்றான் சைத்ரீகன்.

அதோடு விட்டுவிட்டான் ராமரத்னம்.

எல்லோரும் போனபிறகு என்னிடம் சொன்னான்: “இவ்வளவு பெரிய ஆர்ட்டிஸ்ட்டா இருக்கான்! இந்தப் படம் அதிசயமான படைப்பு என்று தெரியவும் தெரியாது. ஆனா அதைப் பார்த்து கல்மிஷமில்லாமல் ஆனந்தப் படறதுக்கு மனசுவல்லெ பாரு அவனுக்கு. இத்தனைக்கும்

அவனைவிட இவன் பெரிய கலைஞன். அவன் ஒரு படம் நன்னாப்போட்டா என்ன? அதுக்கு வாயார தாராளமா நாலு வார்த்தை திறந்து சொல்லப்படாதோ? ம் . . . ப்ஸ போறான்?"

ராமரத்னம் அந்தக் கணம் என் மனசில் பெரிய மலை மாதிரி வளர்ந்து நின்றான். இவ்வளவு அசூயைப் படுகிறானே என்று அவன் பெருமையையும் குறைக்கவில்லை. "எத்தனை பெரிய ஆர்ட்டிஸ்ட்! கொஞ்சம் தாராளமாக இருக்கப்படாதோ" என்று பிறகு ஒரு தடவை கூறிவிட்டான்.

எனக்கு வெகுகாலமாக நெருங்கிப் பழகின நண்பனோடு நிற்பது போலிருந்தது அந்தக்காலம்.

அந்த நெருக்கம் வளர்ந்துகொண்டே தானிருக்கிறது. ஒரு வருஷத்திற்குப் பிறகு 'நீங்க'ளை விட்டு 'நீ' போட்டுக் கொள்ளத் தொடங்கி இப்பொழுது ஒரு டாவும் சேர்ந்திருக்கிறது. என்னுடைய வேலைத் தொந்தரவு, வாரம் ஒரு முறைதான் அவனைப் பார்க்க முடியும். சில சமயம் அந்த முறை தவறி விடுவதும் உண்டு. நெருக்கம் என்னவோ வளர்ந்து கொண்டு தான் வருகிறது.

வளராமல் நின்றுவிடப் போகிறதே என்றுதான் நான் ஒரு கேள்வியை மட்டும் கேட்காமல் கடத்திக் கொண்டேயிருந்தேன்: "நீ ஏன் தனியாக இருக்கிறாய்?" என்று கேட்கத் தோன்றவில்லை எனக்கு. பழகத் தொடங்கி ஒரு வருஷம் வரையில் நான் ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. அந்த வீட்டுக்குள் போகும் போதெல்லாம் ஆவல் மட்டும் நச்சரித்துக் கொண்டுதானிருந்தது. சாமர்த்தியமாக, சுற்றி வளைத்துக் கேட்கலாம். ஆனால் ராமரத்னம் முட்டாள் இல்லை. இனிமையும் மென்மையுமாக இருந்தாலும் ஒவ்வொரு கணமும் விழித்துக் கொண்டிருக்கிறவன். சுற்றி வளைத்துச் சாமர்த்தியம் பண்ணினால், முதல் அடியெடுத்து வைக்கிறதே அவன் கண்ணில் பட்டுவிடும். எனக்கு அசட்டுப் பட்டம் மட்டும் இல்லை. வெள்ளையாகத் துலங்குகிற நட்பிலும் அழுக்குத் தண்ணீர் தெறித்துவிடும் என்று நாக்கை அடக்கிக் கொண்டேன்.

ராமரத்னத்துக்கு உறவினர்கள் அவன் மனை வாழ்க்கையைப் பற்றித் தெரிந்தவர்கள் யாரும் எனக்கு சிநேகமில்லை.

சரி . . . இதைத் தெரிந்து கொண்டு என்ன ஆகப் போகிறது? நட்பு என்றால் ஒரு அந்தரங்கத்தின் மூலை முடுக்கெல்லாம் பார்த்தால் தானா என்ன?

ஒருநாள் மதுப்பிரியன் — முன்பு சொன்ன — நண்பன் — பெயர் முக்கிய மில்லை — இப்படியே அழைக்கலாம். அந்த மதுப்பிரியன் காரைப் போட்டுக் கொண்டு வாசலில் வந்து பூம்பூம் என்றான். அநேகமாகக் காரியம் ஒன்றும் இராது. இப்பொழுதெல்லாம் அதிகமாக அவனைப் பார்க்க முடிவதில்லை. சம்பாதிப்பதில் அவனுக்கு அக்கறை அதிகமாகிவிட்டது. ஒரு மாதம் ஒன்றரை மாதத்திற்கு ஒரு முறை வருவான். வாசலிலிருந்தே ஹார்ன் ஊதும். உள்ளே வாரும் என்றாலும் வரமாட்டான்.

"சும்மாத்தான்யா பார்த்து நாளாச்சு. சித்தெ நாழி பேசிட்டுப் போகலாம்னு வந்தேன். இப்படியேதான் உட்கார்ந்து பேசலாமே" என்று முன்கதவைத் திறந்து விடுவான். "சித்தெ நாழி" ஒன்றரை மணியான பிறகு இறக்கிவிட்டுப் போவான். அவனுடைய தொழில் பிரதாபங்கள் புலம்பல்களைக் கேட்க யாராவது வேண்டும் அவனுக்கு. விஷயத்திற்கேற்ப சபையும் மாறும். நானும் ஒரு சபை.

சில நாளைக்கு சபையை ஏற்றிக்கொண்டே போவான். பீச்சில் உட்கார்த்தி வைத்துவிட்டுத் திருப்பிக் கொண்டு விட்டுவிட்டுப் போவான்.

அன்று சபைக்குக் கதவை திறந்து விட்டவன், "வாருமேய்யா, இப்படி சென்ட்ரல் வரைக்கும் போய்விட்டு வரலாம்" என்று கிளம்பிவிட்டான்.

ஆனால் வண்டி ராயபுரமோ, தண்டையார் பேட்டையோ போய் ஒரு காம்பவுண்ட் வீட்டுக்குப் போய்த்தான் நின்றது. இந்த இரண்டு ஊர்களுக்கும் இன்னும் வித்தியாசம் தெரிவதில்லை. அவன் இறங்கினான். சபையையும் பிடித்து இழுத்தான். "ஒரு பத்து நிமிஷம் ஆகும். அதுவரையில் இப்படியே உட்கார்ந்திருப்பானேன். உள்ளே வாருமேன், நம்ம வக்கீலய்யா இவர். நல்ல மனுஷன், வாரும்" என்றான்.

வக்கீல் புதுமுகம் எனக்கு. முன்பின் பார்த்திராத இடம். எல்லா வக்கீல்களுமா பிரபலமாக இருக்கிறார்கள்? எல்லா பணக்காரர்களுமா பிரபலமாக இருக்கிறார்கள்? மூன்றாம் பேருக்குத் தெரியாமல் உலகத் தொண்டு புரிகிறவர்கள் இந்த உலகில் எத்தனையோ கோடி பேர். வக்கீல் பளபளவென்று இருந்தார். ஆசார சீலராகவும் இருந்தார். பெரிய தலை, பெரிய உடம்பு, பெரிய விரல்கள், பெரியமூக்கு, பெரிய தலை, பெரிய கண். மஞ்சள் ஓடின வெள்ளை நிறத்தில் அந்த உடம்பு பெரிய பெரிய கிர்ணிப்பழங்களை மனிதனாக அடுக்கிப் பூசினாற்போல் இருந்தது. சில கிர்ணிப்பழங்களுக்கு வரிகள் இருப்பதுபோல் முகத்திலும் விபூதிப்பட்டை.

மதுப்ரியன் கொண்டு வந்த கேஸ் விஷயமாக அவர் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். எனக்கு சட்ட விஷயங்கள் புரிவதில்லை. அவர் உடம்பைத்தான் பார்த்துக் கொண்டிருந்தேன். பெரிய உடம்புதானே தவிர புஸு புஸு உடம்பில்லை. கட்டுமஸ்து. எழுந்து நின்றுவிடை கொடுக்கும்போது பெரிய வெள்ளைக்குதிரை மாதிரி எழுந்து நின்றார். நாய்க்குட்டிகள் மாதிரி கும்பிடு போட்டு விடை பெற்றுக்கொண்டு வந்து ஜிகிஜிகி என்று காரில் ஏறிக்கொண்டு புறப்பட்டோம்.

மது பேசத் தொடங்கினான்.

"பார்த்தீரா நம்ம கௌன்சலை? தினம் ஆயிரம் ரூபாய் கோட்டிலே போட்டுக்காம வீட்டு வாசற்படி ஏற மாட்டார்யா. பணம் சம்பாதிக்கிறதுக்குத் தகுந்தாப்ல பக்தியும் ஜாஸ்தி. பகவான் தினமும் நெருப்புக் கோழி முட்டை மாதிரி ஒரு பொன்முட்டையைப் போட்டுடறான். யோகிக்கு யோகி. போகிக்குப் போகி" என்று விலாவில் குத்தினான் மது. "புரிஞ்சுதாய்யா?" என்று மறுபடியும் ஒரு குத்து.

"இப்ப என்ன புரியும்படியா சொல்லிட்டீர்?"

"போகியாயுமிருப்பர். யோகியாயுமிருப்பர். விபூதி இட்டுண்டிருக்கார் பார்த்தீரா? கர்ணன் கவச குண்டலத்தோட பிறந்த மாதிரி அது. சாட்சாத் பரமேச்வரனே அவர் நெத்தியிலே ஸ்டென்ஸில் பண்ணி அனுப்பிச்சிருக்கான். நடுராத்திரியிலே தூக்கத்திலே எழுப்பும். அப்பவும் இப்படியேதான் இருக்கும். மங்காம, மறையாம, இல்லாட்டா மச்சினி அவரை பரமசாம்பவன்னு எப்படி நினைச்சுப்பாள்."

மறுபடி விலாவில் ஒரு குத்து. வாயில் வெற்றிலைச் சிரிப்பு.

"இப்பப் புரிஞ்சுதா?"

"கொஞ்சம்."

"ஷட்டகர் தெய்வமேன்னு நித்ய பிரம்மச்சாரி ஆயிட்டார் . . . பிரசங்கம் பண்ணிண்டு, உலகத்துக்குச் சேவை பண்ணிண்டிருக்கார் . . . உமக்குக்கூடத் தெரிஞ்சிருக்கும்யா ராமரத்னத்தை"

"நெஜமாவா!" என்று பதறினேன்.

"உமக்குத் தெரியுமா அவரை?"

"ராமரத்னம் ஷட்டகனா இவன்?"

“அவன் இவன்னு பேசப்படாது. எங்க வக்கீல் என்ன, வயசிலே சின்னவரா? மேதையிலே சின்னவரா? பர்சனாலிடீலெ சின்னவரா? இல்லெ ஆசாரத்திலேதான் சின்னவராடான்னேன்” என்று ஸ்டீரிங்கில் கையும், சாலையில் கண்ணுமாக மதுவின் குறும்பு வாய் புன்னகை பரப்பிற்று. “எதிலெய்யா குறைஞ்சு போய்ட்டார் அவர்? ஏதோ ஒரு பலஹீனமான சமயத்திலெ என்னமோ தப்பா நடந்துனுட்டார். அதை எவ்வளவு தைரியமா எடுத்துண்டிருக்கார். திருப்பி அனுப்பிச்சாரா அவளை? பேசப்படாது. பதினஞ்சு வருஷமான்னா வீட்டிலெ அவளை அழைச்சு வச்சுக் காப்பாத்திண்டிருக்கார். அப்பொண்ணையும் பள்ளிக் கூடத்திலே படிக்க வச்சு, காலேஜிலே படிக்க வச்சிண்டு . . . எவன்யா செய்வான்?”

போலிக் கோபமும், புன்முறுவலுமா மது மறுபடியும் என் விலாவில் குத்திற்று.

“அவளைத்தான் வீட்டோட வச்சிண்டிருக்கார். அந்தப் பொண்ணை யும் வச்சுக் காப்பாத்தணும்னு என்னய்யா முடை? கேக்கறேன்?” என்றான் மது.

“காலேஜில் படிக்கிறதா அந்தப் பொண்ணு?”

“இப்ப பி.எஸ்ஸி. இரண்டாவது வருஷம் படிக்கிறது. என்ன அழகு. என்ன புத்தி?” என்று படிக்கிற காலேஜ் பெயரையும் சொன்னான்.

மேலே என் காது சரியாகக் கூட கேட்கவில்லை. மது என்னென்னமோ சொல்லிக் கொண்டு வருகிறான். என் மனது ராமரத்னம் வீட்டில் இருந்தது. தனிக் கிணற்றுச் சித்திரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. ராமரத்னத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. மது பேசுகிறது. சாலை இரைச்சல்கள், கார் ஹாரன், கடந்து போகும் கார்களின் சிறு மூச்சு— எல்லாம் கேட்கின்றன, கேட்கவும் இல்லை. மதுவின் பேச்சுக்கு மட்டும் ‘ம்’ போட்டுக் கொண்டே வருகிறேன். “என்ன?” என்று அவன் கேட்டால், ‘ஆமாம், ஆமாம்’ என்கிறேன்.

“என்ன ஆமாம்?”

“நீர் சொல்றபடிதானே இருக்கு.” ஏதோ சொல்லிச் சமாளிக்கிறேன். இந்தப் பதிலை எந்தக் கேள்விக்கும் பொருத்தமாக மாட்டலாம்.

ராமரத்னத்திடம் இதைச் சொல்வதா வேண்டாமா? அவன் விரும்புவானா?

“என்னய்யா யோசிச்சிண்டே வறீர்? எங்க வக்கீலைப் பார்த்தா உமக்குப்

பிடிக்கலையா? இல்லை, அவரைப் பார்த்து உமக்கும் பொறாமையாயிருக்கா? ரொம்ப டீப்பா யோசனை பண்ண ஆரம்பிச்சுட்டீரே?”

“எனக்கு அந்தப் பொண்ணைப் பார்க்கணும் போலிருக்கய்யா.”

“அம்மாவையா? பெண்ணையா?”

“பெண்ணைத்தான். இந்த ராமரத்னம் எனக்கு ரொம்ப சிநேகிதமய்யா. உமக்குத் தெரியுமோ, நான் அவனுக்கு ரொம்ப சிநேகிதம்னு. கர்ம சிரத்தையா அழைச்சிண்டு போனீரே இவன் வீட்டுக்கு? வேணும்னா, தற்செயலாவா?”

“நான் ஒரு பாவத்தையும் அறியேனய்யா. ராமரத்னத்தை நான் பார்த்தது கூடக் கிடையாது. நீரும் அவருக்குத் தெரிஞ்சவர்னு இப்ப நீர் சொல்லித்தான் தெரியும். என் கேஸுக்கு இந்த வக்கீலை என் கஸின் பாலுதான் அமர்த்திவிட்டான். அவன்தான் இந்தக்கதையெல்லாம் சொன்னான்? நானும் ஒரு வருஷமா போயிண்டு வரேன். ராயபுரம் வரையில் ஒண்டியாப் போக வேண்டியிருக்கேன்னு வண்டியிலே போறபோது யாரையாவது பேச்சுத் துணைக்கு அழைச்சிண்டு போவேன். உம்மையும் அந்த மாதிரித்தான் கூப்பிட்டேன். அவ்வளவுதான்.”

‘ராமரத்னம் எனக்குப் பரம சிநேகிதன். ரொம்ப நெருங்கிப் பழகறேன். அத்தனை சூட்சுமமான ஒரு ஆத்மாவை நான் பார்த்ததில்லை. பரம ரசிகன். நம்ம மனசிலே இருக்கிற கவலை, வியாதி எல்லாம் பறந்து போயிடும் – என்னமோ பீச்சிலே போய், இல்லே விசாலமா ஒரு இயற்கைக் காட்சிக்கு முன்னாலே உட்கார்ந்திருக்காப்பல அவன் தனக்கு இப்படி ஓர் அதிர்ச்சி ஏற்பட்டிருக்குன்னு வாயைத் திறந்து சொன்னதில்லே. அதைச் சொல்லி என்னைத் துன்பப்படுத்த வாண்டாம்னு நினைச்சானோ என்னவோ – நிச்சயமா அப்படித்தான் நினைச்சிருப்பான். யார்கிட்டவும் சொன்னதில்லேன்னு நினைக்கிறேன்.”

“ஒரு அத்தியாயத்தையே கிழிச்சி எறிஞ்சுட்டார்னு சொல்லுவேன். ரொம்பப் பெரிய மனுஷனாகத்தான் இருக்கணும். பெண்டாட்டி விட்டுட்டுப் போறாளே – அந்த ஒரு சர்டிபிகேட்டே போரும்யா அவர் ரொம்ப பெரிய மனுஷன்கிறதுக்கு?”

“என்னய்யா ஒரேயடியா அப்படிச் சொல்லிவிட்டீர்!” மது காரை ஒரு ஓரமாக நிறுத்திக் கண்ணை மூடிக்கொண்டே சொன்னான்:

“பொம்மனாட்டிகளுக்கு என்னப்பா வேணும்? அடுத்தாத்துக்காரியை விட தான் சௌக்யமா இருக்கணும். நல்ல புடவை, சொந்தவீடு. தான் ரொம்ப நல்லவ. பெரிய மனசு உள்ளவ. ஊதாரி – அப்படி இப்படின்னு காமிச்சுக்கணும். ஆமடையான் தன்கிட்ட எல்லாத்தையும் கலந்து ஆலோசிக்கணும். பத்துப் பேருக்கு நடுவிலே தங்கிட்ட ரொம்ப பிரியமாயிருக்கிறவன்னு காமிக்கணும். மத்தவர்களை விட தன்கிட்ட விசேஷமா, பிரியமா இருக்கிறதா அவன் காமிக்கணும். உலகம் வேற. தன் குடும்பம் வேறேன்னு ஆமடையான் உணர்ந்து பிரிச்சு வச்சுண்டு, முக்கால்வாசி நேரமும் சுவருக்கு இந்தப் பக்கமே பொழுதைப் போக்கணும். அந்தப்பக்கத்தைவிட இந்தப்பக்கம்தான் பெரிசென்று தான் நினைச்சிண்டுருக்கறதாக நிரூபிக்கணும். இப்படியெல்லாம் இருந்தா அவ இல்லத்தரசி, கற்புக்கரசின்னு ராஜ்யம் நடத்த முடியும். இந்தப் பேர் எல்லாம் அவளுக்கு வரதுக்கு ஆமடையான் ஓயாம ஒழியாம ஒத்தாசை பண்ணிண்டே இருக்கணும். நான் சரிதாண்டீம்மான்னு என் ஆமடையாள்கிட்ட சப்ஜாடா ஒத்துக்கிண்டு நடத்திண்டு வரேன். உம்ம ராமரத்தினம் அப்படி இல்லே போலிருக்கு. நான் நிம்மதியா இருக்கேன். அவர் இல்லே – அனாதைப் பள்ளிக்கூடம் விமர்சனம் எல்லாம் எனக்கும் ஜாம்ஜாம்னு நடத்தத் தெரியும். ஆனா நானும் ஷட்டகர் கிட்ட பறி கொடுத்துட்டு உட்கார்ந்திருக்க முடியுமா நிம்மதியை? சரி . . . கூலா ஏதாவது சாப்பிடுவோம்” காரில் உட்கார்ந்து கொண்டே கடைக்காரனைக் கூப்பிட்டார் மது.

மதுவைப் பார்த்து நான் அடிக்கடி ஆச்சரியப்படுவதுண்டு. பணம் பணம் என்று அலைந்து கொண்டிருக்கிற மதுவுக்கு இந்த மாதிரியே பேசவும் முடியும். பல விஷயங்களை அழுத்தம் திருத்தமாகச் சொல்லவும், சரியோ, தப்போ, தனக்கென்று முடிவாகச் சில அபிப்ராயங்களை ஏற்படுத்திக் கொண்டு அதன்படியே நடக்கவும் முடியும். இவற்றையெல்லாம் யோசித்து வைக்க அதற்கு நேரம் எப்படிக் கிடைக்கிறது என்றுதான் எனக்கு வியப்பு. பெண்டாட்டிக்காக, இவ்வளவு செய்திருக்கிற மது ஏன் இந்த மதுவை மட்டும் விடவில்லை. அவள் துரட்டிகளைத்தாங்கிக் கொள்ளக் குடிக்கிறதா? இல்லை குடிக்கக் கூட செலவழிக்கிற அளவுக்கு அகமுடையான் பணத்தை அரித்துக் கொட்டுகிறான் என்று அவள் உள்ளூரப் பெருமைப் படுகிறாளா?

எனக்கு வாய் துருதுருத்துக் கொண்டேயிருந்தது. ராமரத்னம் மனசில் ஒரே ஒரு கதவை மட்டும் மூடி வைத்திருக்கிறான். வெகுநாளாகத் திறக்காமல் அது துருவும், அழுக்கும் ஏறிப் பிடித்துக்கொண்டு கிடக்கிறது. சுற்றி

வளைக்காமல் காலால் வேகமாக ஒரு உதை உதைத்துத் திறந்து விட வேண்டும் என்று துடியாகத் துடித்தது எனக்கு.

அன்று மாலை உதைத்தே விட்டேன், திடீரென்று.

“இன்னிக்கு உனக்கு லீவு இல்லையா? காலமே நீ வருவாய்னு எதிர்பார்த்தேன்.”

“வரலாம்னுதான் இருந்தேன். ஆனா உனக்கு ஒரு பொண்ணு இருக்கு. அது காலேஜிலே படிக்கிறதுன்னு தெரிஞ்சுக்கறது முக்கியமில்லையா என்றேன்.”

சொல்லுகிறபோதே வயிற்றில் கிலி – இந்த வீட்டுக்குள் அடியெடுத்து வைக்கிறது இது கடைசித் தடவை என்று.

“ரியலி” என்று லேசாகச் சிரித்தான் ராமரத்தினம்.

அப்போதும் எனக்கு கிலி நீங்கவில்லை. கொஞ்சம் கூடவே கூடிற்று.

“எப்படித் தெரிஞ்சுது?” என்றான், அவன்.

“ஒரு சிநேகிதன் மூலமாக.”

“நீ பார்த்தியா?”

“யாரை?”

“என் பெண்ணை?”

“இல்லே.”

“யாரு இந்த சிநேகிதர்?”

மதுவை பற்றிச் சொன்னேன். வக்கீல் வீட்டுக்குப் போனதைச் சொன்னேன்.

“தற்செயலாய்ப் போனதுதான்” என்று இழுத்தேன்.

“தாராளமாகச் சொல்லேன். என் மனசிலே ஒன்றும் இல்லே. நான் வருத்தமோ, கோபமோ படமாட்டேன். உனக்குச் சொல்லக் கூச்சமா இருக்கும். நானே சொல்லிடறேன். பதினெட்டு வருஷமாச்சி. கலியாணமாகி மூன்று வருஷத்துக்கு அப்புறம் குழந்தை பிறந்தது. பிள்ளை பெற அக்கா வீட்டுக்கே போனா, சௌக்கியமா இருக்கு வீடு பக்கத்திலே ஒரு நர்ஸிங் ஹோமும் இருக்குன்னு – அப்புறம் ரண்டு, மூன்று, நாலு, ஆறு

மாசமாயிட்டுது – வரவே இல்லை. கிராமந்தரம்னா எட்டு மாசம், பத்து மாசம்னு புள்ளை பெறவந்த பெண்ணை வச்சுகறது வழக்கம். அந்த மாதிரி நடந்துண்டிருந்தது. உடம்பு உடம்புன்னு ஏதோ சொல்லிண்டு உட்கார்ந்திண்டேயிருந்தா. ஆண்டு நிறைவுக்கு யார் யாரோ சொல்லி ஒரு வாரம் முன்னாலே வந்தா, இப்ப சொல்றேனே, இப்ப என்ன வெட்கம்? சங்கோசம்? வந்த அன்னிக்கு ராத்திரி, தொட்டேன். ம்ஹ்ம், ஒன்றும் இல்லே, ஒரு உணர்ச்சி, ஒரு துடிப்பு, ஒரு எழுச்சி ஒன்றும் இல்லே. எனக்கும் அதிர்ச்சியா இல்லே. குழப்பமாயிருந்தது. அப்புறம் கொஞ்ச நாள் கழிச்சு, உடம்பு சரியாயில்லேன்னு மறுபடியும் புறப்பட்டுப் போயிட்டா. மாம்பலத்திலேயா டாக்டர் இல்லே . .? அப்பப் போனவதான் திரும்பியேவல்ல. நான்தான் நடையா நடந்தேன். அப்புறம் ஆறு மாசம் கழிச்சு ஷட்டகர் தான் டாக்டர்னு தெரிஞ்சு போயிட்டுது."

ராமரத்னம் சிரித்தான். சற்று நிறுத்திக்கொண்டான். பிறகு சொன்னான். "கோபம் வந்தது, ரோசம் வந்தது. அவன் கழுத்தை வெட்டலாம். பழிவாங்கலாம். ஏதாவது இம்சை பண்ணலாம். ஆனா அவ மனசிலே கொஞ்சம் புகுந்து பார்க்கிற போதெல்லாம் இந்தப் பழிவாங்கறது, இம்சை பண்ற எண்ணத்துக்கெல்லாம் அர்த்தமே இல்லைன்னு தெரிஞ்சுது. நம்மகிட்ட இல்லாத ஏதோ அதிசயமான தகுதியெல்லாம் ஷட்டகர்கிட்டே இருக்கு. நான் அந்தத் தகுதியெல்லாம் சம்பாதிச்சுக்கறேன்னு கெஞ்சலாம். அப்படிக் கெஞ்சறதுக்கு எனக்கு இஷ்டமில்லே. அவமேலே அத்தனை தீராத பாசம், வெறி. அவ இல்லாட்டா உலகமே இருண்டு போயிடும். உயிரே நிக்காதுன்னு ஒரு தவிர்க்க முடியாத ஏக்கம், உருகல் எல்லாம் இருந்தாச் சரி. ஏதோ பெரியவா பார்த்து நடத்தி வச்ச கலியாணம். ஒருத்தருக்கொருத்தர் பலநாள் பழகி, மோகிச்சு புரிஞ்சுண்டு, நீ இல்லாம நான் கிடையாதுன்னு பைத்தியமாப் போய்க் கல்யாணம் பண்ணிக்கலெ. அப்படி இருக்கச்சே ஷட்டகர் தகுதிகளை எல்லாம் நானும் சம்பாதிச்சுக்கறேன்னு எப்படிக் கெஞ்சறது? கேட்டாத்தான் சொல்றவளா? சொல்ல முடியாதது எத்தனையோ? நான் நடையா நடந்தது எத்தனையோ? கேட்டாச்சு, கடைசியா, "என்னைத் தொந்தரவு பண்ண வேண்டாம்"னு ஒரு வார்த்தை சொன்னா. அதைப் புரிஞ்சிண்டு வந்துவிட்டேன். குழந்தையைக் கேக்கணும் அழச்சுக்கணும்னு எனக்குத் தோணவும் இல்லே. அத்தினியூண்டு குழந்தை தாயாரை விட்டு எப்படிப் பிரிஞ்சிருக்கும்? அவ்வளவுதான். நான் அதைப் பத்திப் பேசவும் இல்லே. குழந்தையைக் கூட மறந்து போயிட்டேன். மறக்கப் பழகிண்டேன், அதுவும் சுலபமா இருந்தது. அது எங்கே என்னோட இருந்தது? இன்னித்

தேதி வரையில் ஒரு பிராணிகிட்டே நான் அதை பத்திப் பேசவே இல்லே. எங்க அக்கா எப்பவாவது சொல்லுவா. நான் பதிலும் சொல்றதில்லே. அந்தப் பேச்சை எடுத்தாலே எழுந்து விடுவேன். அவளும் விட்டு விட்டா. நீ தான் இப்ப சொல்லியிருக்கே. எப்பவும் தயங்கித் தயங்கிப் பேசுவே. இன்னிக்கு என்ன திடீர்னு ஆரமிச்சே இந்த விஷயத்தை," என்று கேட்டான் ராமரத்னம்.

"மன்னிக்கணும். எனக்கு ரொம்ப வேகமா இருந்தது." யார் மேல் என்று கூட அவன் கேட்கவில்லை.

"எனக்குப் புரியறது. ஆனா என்ன செய்யறது? எல்லா ஜீவனும் சுதந்திரமாயிருக்கணும், சந்தோஷமாயிருக்கணும்தான் ஆசைப்படறது. என்னோட இருக்கறது ஒரு ஜீவனுக்கு சந்தோஷக் குறைவு. அதனுடைய சுதந்திரத்தை நான் கட்டுப்படுத்தலாமோ?"

மீண்டும் சிறிது நேரம் மௌனமாகக் கழிந்தது. பேசுவதற்கு ஒன்றுமே இல்லை போல இருந்தது.

"ராமரத்னம், நான் ரொம்ப அல்பத்தனமா நடந்து கொண்டு விட்டேன்னு நினைக்கிறேன்" என்று நான் சொல்வதற்குள் ராமரத்னம் குறுக்கே விழுந்தான். "நோ . . . நோ . . . நோ . . . நீ சொன்னது சரி. நீ இவ்வளவு தூரம் பழகிண்டு வரபோது நானே ஒரு நாளைக்குச் சொல்லியிருக்கணும். நான் ஒண்ணும் கஷ்டப்படலியே. சுதந்திரமாயிருக்கேன். தனியா இருக்கிறதை அனுபவிக்கிறேன். அதனாலே ஒவ்வொரு அணுவும் என் உடம்பிலேயும் மனதிலேயும் பரபரன்னு முழிப்பா இருக்கு எப்பவும்."

என்னுடைய குறுகுறுப்பே பேச்சுக்குத் தடையா இருந்தது. "ஏழு மணிக்கு ஆபீஸ் காரியமா யாரோ பார்க்கவரேன்னான்" என்று எதையோ சொல்லிவிட்டு நானே சீக்கிரம் விடை பெற்றுக் கொண்டு வந்தேன்.

இன்னும் ஒரு வாரம் பத்து நாளாவது ராமரத்னத்தின் பக்கம் பக்கம் தலைகாட்டக் கூடாது என்றிருந்தது. அனாவசியமாக ஒரு நல்ல மனிதனை எதற்காகக் கிளறித் துன்பப்படுத்தினோம்? திக்திக்கென்று அடித்துக் கொண்டேயிருந்தது உள்ளே. இந்த மாதிரி நிலைகளில் பசி போய்விடும். சோறு இறங்காமல், பிறகு தூங்க முடியாமல் என் சிறுமையே என்னை விலாவில் குத்திக் கொண்டிருந்தது, மதுப்பிரியனைப் போல. தூக்கம் வர வெகு நேரமாயிற்று. நடுநிசி கடந்து வெகுநேரம்.

பெண் என்னை எழுப்பினபோது ஆத்திரமாக வந்தது. கண்ணைத் திறக்க முடியவில்லை.

"ராமரத்னம் வந்திருக்கார்ப்பா."

"யாரு?"

"ராமரத்னம்"

வாரிச்சுருட்டி எழுந்தேன். இருட்டுப் பிரிந்து நரை கண்டிருந்த சமயம். எட்டிப் பார்த்தேன். ராமரத்னம் குளித்துவிட்டுப் பளபளவென்று மடிப்புக் கலையாத சட்டையும், வேஷ்டியுமாக உட்கார்ந்திருந்தான். மாம்பலத்திலிருந்து முதல் பஸ்கூட புறப்பட்டிராது. எப்படி வந்தான்? பல்தேய்த்துவிட்டு வந்ததும், "தூக்கம் தெளிஞ்சுதா?" என்று என்னை வரவேற்றான் அவன். "சும்மா பீச்பக்கமா ஒரு சின்ன 'வாக்' போகலாம்னு வந்தேன்."

காப்பி குடித்துவிட்டுக் கிளம்பினோம்.

பாதி வழியில் சொன்னான் ராமரத்னம்: "கண்ணா நான் 'வாக்' போகலாம்னு வந்தேன். ஆனா அதைவிட உங்ககிட்ட ஒரு உதவியை நாடி வந்தேன். உனக்குச் செய்ய முடியும்னு நினைக்கிறேன்."

"என்ன?"

"வருகிற மாசம் மூணாம் தேதி என் பொண்ணுக்குப் பிறந்தநாள் வரது. அவளை நேர பார்த்து ஏதாவது ப்ரெசெண்ட் பண்ணலாம்னு இருக்கேன். காலேஜிலேதான் பார்த்துக் கொடுக்கணும். அதற்கு நீ ஏற்பாடு பண்ணணும்."

தெளிவாக, உறுதியாக, மெதுவாகச் சொன்னான் ராமரத்னம்.

"சரி" என்றேன்.

"நான் அவளை சிசுவா இருக்கிறபோது பார்த்ததுதான். அவளைக் கண்டுபிடிச்சு நான் பார்த்துக் கொடுக்கும் படியா ஏற்பாடு பண்ணணும்."

"சரி."

"அடியோட எல்லாத்தையும் மறந்திருக்கப் பழகியாச்சுன்னு நினைச்சேன். இல்லேன்னு நீ ராத்திரி போனப்புறம்தான் தெரிஞ்சுது. என் பெண்ணை எப்படியாவது பார்த்து விடணும்னு எனக்குள்ளேயே

சொல்லிண்டேயிருந்தேன். ராத்திரி முழுக்க . . . ரொம்ப அசம்பந்தமான வேட்கை – நான் அவளைப் பார்த்து என்ன ஆகப்போறது? அவதான் நான் அப்பான்னு தெரிஞ்சுண்டு என்ன ஆகப்போறது? ஒண்ணும் இல்லே. இருந்தாலும் எனக்கு இந்தத் துடிப்பைத் தாங்க முடியலே. நீ உதவி செய்துதான் ஆகணும் போலிருக்கு."

"நான் செய்துதான் ஆகணும்" என்று வாயை மூடிக்கொண்டேன்.

செய்துதான் ஆகவேண்டும். எனக்கு அத்தனை சமத்து ஏது?

அன்று சாயங்காலமே மதுவின் காலில்போய் விழுந்தேன்.

"உம்ம விளையாட்டு வினையாய் போயிடுத்தய்யா" என்று ஆதியோடந்தமாகச் சொன்னேன்.

"நான் விளையாடலெ. தற்செயல். தற்செயலைப் போல் அதிசயமும் கிடையாது, அழகும் கிடையாதுய்யா" என்றான்.

சனி, ஞாயிறு குறுக்கிட்டது. திங்கட்கிழமையன்று அவனைப் பார்த்துவிட்டு வந்து செவ்வாய் கிழமை மாலை என்னை அழைத்துக்கொண்டு போனான். ஆனால், பஸ் குறுக்கிட்டது. ராமரத்னத்தின் பெண்ணை முகத்தைக் காட்டாமல் ஏற்றிக்கொண்டு சென்றது.

வியாழக்கிழமை மாலை. மது இப்பொழுது என்னை சாலையின் எதிர் நடை பாதையில் நிறுத்தவில்லை. காலேஜுக்கு எதிரேயிருந்த வீட்டுக்கே அழைத்துப்போய் விட்டான்.

கூப்பிடு மணியின் விசையை அழுத்தினான். ஒரு பெண் வந்து திறந்தாள். "மிஸ் டாரதி" என்று அறிமுகப்படுத்தினான்.

மிஸ் டாரதி கிறிஸ்தவப் பெயர். ஒரு மாதிரி நிறம். வெள்ளைக்கார வெள்ளை இல்லை. இந்தியக்கார மாநிறமும் இல்லை, நடுவில் ஒரு நிறம். தலை செம்பட்டை. முகத்தில் மேற்குமிருந்தது. கிழக்குமிருந்தது.

வெகு ஆதரவாக கூப்பிட்டாள். உட்காரச் சொன்னாள்.

"இவர்தானா?" என்று கேட்டாள்.

"இவர் இல்லை. அவருக்கு ஆப்த சிநேகிதர், இவர் மிஸ்டர் கண்ணன். இவருக்குத்தான் அந்தப் பொறுப்பு." மிஸ் டாரதி ஐரோப்பிய மதஸ்தாபனம் ஒன்று நடத்தும் கான்வென்டில் ஆசிரியை. எதிர் வீடாச்சே

ராமரத்னத்துக்கும் பார்க்க சௌகர்யமாயிருக்குமேன்னு சுத்தி வளைக்காம, 'ப்ளெயி' னாக் கேட்டேன். ராமரத்னத்தோட கதையெல்லாம் சொன்னேன். அவர் ஆசையையும் சொன்னேன். அப்படியே நெகிழ்ந்து போயிட்டார். தகப்பனும் பெண்ணும் சந்திக்கும்படியா செய்யறது தன் பொறுப்புன்னு உடனே ஏத்திண்டிருக்கார். 'மிஸ். டாரதி, உங்களை நான் ஸ்தோத்திரம் செய்யவில்லை. இதை வீட்டிலே எங்கள் ஜனங்கள் யாராவது குடியிருந்து, நான் அவரிடம் இதை சொல்லியிருந்தால் முதலில் சந்தேகப்படுவார். துருவித் துருவி முகாந்தரம் கேட்பார். முடிந்தால் தெரிஞ்சோ தெரியாமலோ போலீஸ்காரன் காதிலேயே போட்டிருப்பார்; பந்தோபஸ்தா ஏதாவது செய்திருப்பார். நீங்க நான் சொன்னவுடனே, அந்த க்ஷணமே நம்பி சரின்னு உதவிசெய்ய முன் வந்தீர்களே . . . நான் . . . நான்" என்று குழறினான் மது.

எனக்குக்கூட நெகிழ்ச்சியாகத் தானிருந்தது. மது, சிவப்புத் தண்ணீரையும் பக்கோடாவையும் வைத்துக்கொண்டு அழத்தொடங்கியதை நான் பார்த்திருக்கிறேன். மண்டையில் மண்டையில் போட்டுக்கொள்வான். "நான் இப்படி போவேன்னு நினைக்கலே ஐயா, மகா நீசத்தனமான காரியத்தைச் செய்கிறேன்." என்று வாய்விட்டு அழுவான். "நான் இப்படி அழறேனோல்லியோ. புத்தி வரும்னு நெனச்சீரா? நாளைக்கு இதையேதான் செய்வேன். புதுசா மூலைக்கடையிலே இந்த மாதிரி இன்னொரு விஷப்பாட்டிலை வாங்கிட்டு வந்து சாப்பிட்டுக் கிளம்பிடுவேன்யா, இந்தப் புத்தியைச் செருப்பாலே அடிக்கணும்யா" என்று மறுநாளைக்கும் சேர்த்துப் புலம்புவான். இப்பொழுது எனக்கு அது ஞாபகம் வந்தது. ஆனால் இப்பொழுது அவன் நிதான புத்தியுடன் இருக்கிறது மட்டுமில்லை. உண்மையாகவே அவருடைய சந்தேகப்படாத உதார குணத்தைக் கண்டு உருகிப் போய்த்தான் தழதழத்துக் கொண்டிருந்தான். "ப்ளீஸ்" என்று இடைமறித்தாள் டாரதி. "நான் ஒன்றுமே செய்யவில்லை. நீங்கள் எல்லாவற்றையும் அடிமுதல் சொல்லிவிட்டுதான் உதவி செய்யச் சொன்னீர்கள். திடீர் என்று யாராவது இந்த மாதிரி ஒரு வீட்டில் நுழைந்து இதையெல்லாம் சொல்வானோ? அப்படியா மனிதர்கள் பொய் சொல்வார்கள்? நீங்கள் சொல்வது எப்படி நிஜமாக இல்லாமல் இருக்கமுடியும்? எனக்கு நீங்கள் சொல்வதுதான் புரியவில்லை. நான் யார்? நீங்கள் எதற்காக என் கேட்டைத் திறந்து கொண்டுவந்து எங்களிடம் பொய் பேசவேண்டும்? ஏமாற்ற வேண்டும்?"

"நீங்கள் என்ன சொன்னாலும் சரி, நான் என் மனசில் பட்டதைச் சொல்கிறேன். இந்த மாதிரி கேட்டவுடனே முன்பின் தெரியாதவர்களுக்கு

ஒத்தாசை பண்றதைப் பார்க்கறது எனக்குப் புது அனுபவம். நான் செய்யமாட்டேன்" என்றான் மது.

"ப்ளீஸ், ப்ளீஸ்."

அப்படி இடைமறிக்கும்பொழுது டாரதி முகம் எல்லாம் கொஞ்சிற்று. அசைப்பில் சுவரைப் பார்த்தேன். பெரிய படமாக இரண்டு மாட்டியிருந்தன. மீசை வைத்த ஆள் ஒருவர். ஆந்திர முகம். பக்கத்தில் ஒரு வெள்ளைக்காரப் பெண்மணி.

"என் தகப்பனாரும் தாயாரும்" என்றாள் என்னைப் பார்த்து டாரதி. என் முகத்தில் படர்ந்த கேள்வியைப் பார்த்து "எங்கப்பா ஹைதராபாத்தில் டாக்டராக இருந்தார். கேசவரெட்டி இங்கிலாந்துக்குப் படிக்க வந்தபோது என் அம்மாவை சந்தித்துக் கல்யாணம் செய்து கொண்டார். அம்மா நர்ஸாக இருந்தாள். அப்பா வேடிக்கை வேடிக்கையாய்ப் பேசுவார். ஒரு பேஷண்டைக்கூட கேஸ் என்று சொல்ல மாட்டார். கஷ்டப்படுவதைத் தாங்கமாட்டார். அதனால்தான் கஷ்டத்தையே பார்த்துக் கொண்டிருக்கும் டாக்டராக இரு என்று கடவுள் பணித்தார் போலிருக்கிறது." என்று படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பேசிக்கொண்டேயிருந்தோம்.

எதிர்ச்சாரியில் சிரிப்புச் சத்தம் கேட்டது. மது எழுந்து நின்றான் ஜன்னலண்டை.

"மிஸ் டாரதி ஓய் கண்ணன், அதோ அந்தப் பெண்தான். சிவப்பு மேலாக்குப் பேட்டுக்கொண்டு ஆரஞ்சு பாவாடை – உயரமா."

சிறிது நின்று பார்த்தேன். கன்ன எலும்பு, கண், நெற்றி – மூன்றும் ராமரத்தினமே அச்சாக இருந்தன.

மறுநாள் ராமரத்னமும் நானும் அதே மாதிரி அதே இடத்தில் நின்று அவளைப் பார்த்துக் கொண்டிருந்தோம். மது தன் காலம் முடிந்துவிட்டது என்று விலகிக்கொண்டு விட்டான்.

அடுத்த வாரம் நான் விலகிக்கொண்டேன். ராமரத்னம் மாலை நேரங்களில் டாரதி வீட்டுக்கு வந்து விடுவான்.

அடுத்த மாதம் இரண்டாம் தேதி, காலை வீட்டிற்கு வந்தான். ஒரு தங்கச்சங்கிலியைப் பையிலிருந்து எடுத்தான். "இதைத்தான் ரமாவுக்கு கொடுக்கப் போறேன். நீயும் இருக்கணும் நாளைக்கு என்னோடு"

என்றான்.

“நீ பேசினயோ ரமாவோட?”

“டாரதி ஏற்பாடு பண்றேன்னு சொல்லியிருக்கா.”

“என்ன இப்படிக் குழந்தை மாதிரி ஆயிட்டேன்னு பார்க்கறியா?”

மறுநாள் மாலை அதே சிரிப்புச் சத்தங்களுக்கு நடுவில் கல்லூரி மாணவிகள் வெளியே வந்து கொண்டிருந்தார்கள். ராமரத்னம் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறது போல் உறைந்து உட்கார்ந்திருந்தான்.

ஒரு நிமிஷமாயிற்று.

கல்லூரியின் முன் தோட்டத்தைத் தாண்டி மாடிவராந்தாவில் தலைவி நிற்பது தெரிந்தது. அவன் இங்கே பார்த்துக் கொண்டிருந்தான்.

சலசலவென்று அரவம்.

“இதோ உங்கள் புதையல்” என்று உள்ளே ராமாவின் கையைப் பிடித்துக்கொண்டு வந்தாள் டாரதி.

ராமரத்னம் எழுந்து நின்றான். நானும் நின்றேன். ஒரு அடி எடுத்து வைத்தான் ராமரத்னம் அவளைப் பார்த்துக்கொண்டே. அப்படியே நின்றுவிட்டான், “யெஸ் . . . யெஸ்” என்று குமுறல். “ரமா, உன் தகப்பனார்— ராமரத்னம்” என்றாள் டாரதி.

ராமரத்தினத்தின் முகம் அகலமாக பெரிதாக ஆகிக்கொண்டே போவது போல் இருந்தது . . . சிரிப்புக்கா அழுகைக்கா என்று சொல்ல முடியாமல் உதடு வறண்டு கொண்டேயிருந்தது. மூக்கு மலர்ந்து “ரமா— உங்கள் பெண்” என்றாள் டாரதி.

இருவரும் பார்த்துக்கொண்டே நின்றார்கள். மறுகணம் ராமரத்னம் அவளை இறுக அணைத்துக்கொண்டு நின்றான். தலையை வருடினான்.

ஐந்து நிமிஷமாயிற்று பேச. மூக்கை உறிஞ்சி, கண்ணைத் துடைத்துக் கொண்டான் ராமரத்னம்.

“இன்னிக்கி எனக்கும் பிறந்த நாள்தான்” என்று பையில் கையைவிட்டு மாலையை எடுத்து பெண்ணின் கழுத்தில் மாட்டி ‘கொக்கி’ யைப் போட்டான்.

இத்தனை நேரம் கழித்து அந்தப் பெண்ணின் கண்ணில் குளமாக

நிரம்பிற்று.

“தினமும் நான் இங்கே வரப்போகிறேன்.” என்றான் ராமரத்னம்.

“நீயும்தானே.” என்றாள் டாரதி.

“ஆமாம்” என்று வாயால் சொல்லாமல் பெண் தலையை ஆட்டிற்று.

மஞ்சள் வெயில் மறைந்து நரை கண்டது.

ரமா எழுந்தாள். கொக்கியைக் கழற்றி சங்கிலியை எடுத்தாள்.

“நோ . . . நோ” என்றாள் டாரதி.

“இல்லை, தினமும் இங்கே வந்து போட்டுப்பேன். இங்கேயே வச்சுட்டுப் போவேன் மறுநாள் வந்து போட்டுப்பேன்.”

ரமா விடைபெற்றுக் கொண்டாள்.

மறுநாள் நான் போகவில்லை. பார்க்க வேண்டும் என்று தோன்றினால் மாலையில் டாரதியின் வீட்டில் சந்தித்து விடுவேன்.

மூன்றுமாதமாகி விட்டது, அவளுடைய வீட்டுக்குப்போய்.

அந்த சனிக்கிழமையன்று – மூன்று மாதம் கழித்து – ராமரத்தினத்தின் வீட்டுக்குப் போக வேண்டும் போலிருந்தது. கிணற்றடி படத்தைப் பார்க்க வேண்டும் போலிருந்தது.

“ராமரத்தினம்” என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே போனேன்.

“கமிங்” என்று பெண் குரல் கேட்டது.

“ஓ . . . மிஸ் டாரதியா?”

“ப்ளீஸ் . . . ப்ளீஸ் – மிஸஸ் ராமரத்னம்!” என்றாள் டாரதி.

“கண்ணனா?” என்று மாடிப்படியில் குரல் கேட்டது.

“யெஸ்”

“கண்ணா கோச்சுக்காதே, வெட்கமாயிருந்தது. தலையெல்லாம் பொல்லுனு வெளுத்துப் போனப்புறம் – ”

“எப்ப இது?”

“நேத்திக்கு.”

“ரியலி!”

“ஆமாம், நேத்திக்கு காலமே.” கையைக் கொடுத்து வாழ்த்தினேன்.

“பரிஹாசம் பண்ணமாட்டியேடா?”

“என்ன சொல்கிறார்” என்றாள் டாரதி.

சொன்னேன்.

“பரிஹாசம் பண்ணத்தான் பண்ணுவார். உங்களைப் பண்ணமாட்டார். என்னைத்தான். பெண்ணைக் கண்டு பிடித்துக் கொடுக்கிறேன் என்று கிளம்பினவளாயிற்றே நான்!”

சுவரில் வழக்கம்போல் அந்த ஓவியம் தொங்குகிறது. மாபெரும் பொட்டல், வகிட்டுப்பாதை, தணிக் கிணறு. சகடையும் இல்லை. கயிறும் இல்லை.

“அது அங்கேயேதான் இருக்கும்.” என்றான் ராமரத்னம்.

மனிதர்களுக்கு மிகமிக நெருக்கமான சிநேகிதம் யார் தெரியுமோ?

தீபம், ஆகஸ்ட் 1967

# அருணாச்சலமும் பட்டுவும்

தெருவில் எத்தனையோ பேர் போகிறார்கள். எல்லாரையுமா பார்க்கத் தோன்றுகிறது? எத்தனையோ பஸ், எத்தனையோ டாக்சி! எல்லாவற்றையுமா நின்று பார்க்கிறோம்? ஆனால் இந்த டாக்சியைப் பார்த்ததும் கால் நின்று விட்டது. ஏதோ ஆவல் அவ்வளவுதான். சிறிது ஆச்சரியம் கூட.

அந்த டாக்சியிலே அருணாசலம் உட்கார்ந்திருந்தார். புதல்வியும் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். இன்னும் கலியாணம் ஆகவில்லை. ஆகியிருந்தால் இங்கே இருப்பானேன்?

கன எடுப்பான உருவம் அந்தப் பெண்ணுக்கு. நல்ல உயரம், அதற்கேற்ற சதைப் பிடிப்பு. நல்ல படிப்பும்கூட. குறைந்தது எம்.ஏ. அல்லது எம்.எஸ்ஸி.யாவது படித்திருப்பாள். மேனியில் ஒரு பொலிவு. முகத்தில் பண்பாட்டுக் களை அதாவது இரண்டாயிரம் மூவாயிரம் சம்பளம் வாங்குகிற ஒரு படிப்பாளியின் பெண்ணாகப் பிறந்து, அந்தத் தகப்பனாரின் புத்திக் கூர்மையும் பெற்று, படித்து, பாடி (கர்நாடக சங்கீதம்), ஆடி (பரதம்), வாசித்து (வீணை அல்லது பிடில்) அறிவும் அதிர்ஷ்டமுமாக வளர்ந்து கலியாணம் ஆக (பருவத்திலேயோ, முந்தியோ, கடந்தோ) காத்திருக்கின்றார்களே பல பெண்கள், அந்த மாதிரி ஒரு பெண் இது. கலியாணமாவதற்கு முன்னால் என்ன செய்வது? படிப்போ முடிந்துவிட்டது. எல்லாம் கற்றாகிவிட்டது. எனவே தகப்பனாருக்கு உதவி செய்வதில் பொழுது போகும். அவரோடு பல இடங்களுக்குப் போவது, அவருடைய நிறைந்த அறிவு மொழிகளைக் கேட்பது – சுருங்கச்சொன்னால் அவரோடு கூடவே இருந்து இருந்து, அவருடைய அறிவுக்கும் பண்புக்கும் அனுபவத்திற்கும் வாரிசாக ஆவது. இதெல்லாம் நீ குரு, நான் சீடன் (அல்லது சீடை) என்று எதிரிலே பலகை போட்டு உட்கார்ந்துகொண்டால் வந்து விடாது, நிழல் மாதிரி, கூட இருந்து, போய்வந்து, பழகிப் பெற வேண்டிய சொத்து. இப்போது அவருக்கு வயது வேறாகிவிட்டதா? வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்டு விட்டாரா? அவருக்கும் தான் எப்படிப் பொழுது போகும்?

போன வருஷம் அருணாசலத்தின் வீட்டுக்கு ஒரு தடவை போன

போதுதான் அந்தப் பெண்ணை நன்றாகப் பார்த்தேன். யாரோ உறவுக்காரப் பையன், ஏதோ வேலைக்கு மனுப் போட்டிருந்தானாம். அவன் மனுவில் சொன்னது அத்தனையும் உண்மை என்று ஒரு கெஜட்டட் அதிகாரி கையெழுத்திட வேண்டுமாம். அதற்காகத்தான் அவரிடம் போனேன். அந்தப் பெண் ஏதோ அவருக்கு வாசித்துக் காட்டிக்கொண்டிருந்தாள். ‘இதுதான் கடைசிக் கையெழுத்தோ என்னவோ, அடுத்தவாரம் ரிடயராகப் போகிறேன்’ என்று சிரித்தார் அருணாசலம். கையெழுத்திட்டார். அந்தப் பெண்ணையும் நன்றாகப் பார்த்தேன். நல்ல உயரம். கொஞ்சம் சதை அதிகம்தான். பாரி உடம்பு. அவள் சின்னக் குழந்தையில் ஐந்தாறு வயதில் எப்படி இருந்திருப்பாள், என்று கற்பனை செய்து பார்த்தேன். அய்யர் பேரன், பேத்திகள் மாதிரி இருந்திருப்பாளோ? எந்த அய்யரின் பேரன் பேத்தி என்று கேட்க வேண்டாம். ஆங்கிலத்தில் உள்ள பொதுப் பெயர்ச் சொல்லாக இதை உபயோகிக்கிறேன். மாதம் நாலாயிரம் ஐயாயிரம் சம்பளம். அல்லது பல லட்சம் பெறுமானமுள்ள தொழில் ஸ்தாபனங்களை நடத்தும் அய்யர்களின் பேரன் பேத்திகள் சிலரைப் பார்த்திருக்கிறேன். 56 வயதிலேயே அமானுஷியமான பருமனும் சதைப்பற்றுமாக இருக்கும் அவை கால் இரண்டையும் சேர்த்து நிற்க முடியாமல் தொடைகள் முட்டிக்கொள்ள, ஒரு அடி இடை வெளியுடன் தான் பாதங்கள் நிற்க முடியும். காரணம், ஐந்தாறு மாதத்திலிருந்தே தினமும் இரண்டு முட்டையும் பாலும் பழச்சாறும் கொடுக்கத் தொடங்கி விடுவார்களாம். அந்த மாதிரிதான் அருணாசலத்தின் பெண்ணும் இருந்திருக்க வேண்டும் என்று தோன்றிற்று. ஆனால் அருணாசலம் முட்டை கொடுத்திருக்கமாட்டார். அவர் பரம வைதீகம். அவர் தந்தை புரோகிதர். பாட்டன் புரோகிதர். அருணாசலமே பழையகாலத்து வர்ணாச்ரமிகள்போல, தினமும் அக்னிஹோத்ரம், ஔபாசனம், வைச்வ தேவம் என்று மூன்று வேளையும் அக்னியைப் பூஜித்து வந்தார். அந்தக் காலத்தில் லாகூர், கராச்சி, கல்கத்தாவில் இருந்த போதுகூட அவர் இந்த அனுஷ்டானங்களை விடவில்லை. எனவே பெண்ணை தாவரப்புரதம் கொடுத்துதான் வளர்த்திருப்பார். எந்தத் தாவரங்களின் புரதம் அதிகம் என்று யோசித்துக் கொண்டிருந்தவன் அந்தப் பெண்ணின் ஆரோக்கியத்தையும் கண்ணின் அறிவையும் முகத்தின் களையையும் பார்த்து, ‘ஐயோ, நமக்கு இப்படி ஒரு மனைவி இருக்கக் கூடாதா?’ என்று ஏங்கினேன். மறுகணம் எனக்கு மனைவியும் இரண்டு பிள்ளையும் ஒரு பெண்ணும் இருப்பது நினைவுக்கு வரவே, மனைவி என்பதைப் பெண் என்று அரை மனதோடு திருத்திக்கொண்டேன். அவ்வளவு எடுப்பான தோற்றம் அருணாசலத்தின் பெண்ணுக்கு. இமைபோல் காத்து

வளர்த்து வந்த இந்தப் பெண், இந்த சந்தோஷமான குடும்பத்தை விட்டுப் போக எப்படித்தான் மனம் வரும்?

எனவே டாக்சியில் அவரைப் பார்த்து ஏற்பட்ட ஆச்சரியம் சிறிது நாழிகைக்கெல்லாம் தணிந்துவிட்டது. ஆச்சரியம் வந்ததற்குக் காரணம்? அதற்குப் போன வருஷத்தைப் புரட்ட வேண்டும்.

ஒரு நாள் ஈச்வரனை தரிசனம் செய்யப் போயிருந்தேன். ஈச்வரன் என்றால் நமக்குள்ளேயே அனைத்தையும் விட நமக்கு மிகமிக அருகில் இருக்கிறாரே அந்த ஈச்வரனை அல்ல. மனித வடிவில் வந்திருக்கிற ஈச்வரனை. அவர் துறவி. சன்யாசிகளைக் கண்டால் எப்போதும் உள்ளூரச் சிறிது பயம் எனக்கு. அதுவும் ஈச்வரனைக் கண்டால் சொல்லி மாளாத பயம். அவருடைய கண் நம்மைத் துளைத்து மனத்தில் உள்ள ரகசியங்களை பாவங்களை எல்லாம் பார்ப்பது போலிருக்கும். அதுவும் நான் கிராப்பு வைத்துக் கொண்டிருக்கிறேனே! ஈச்வரனுக்கு கிராப்பு வைத்த பிராமணர்களையும் மொட்டையடித்துக் கொள்ளாத பிராமண விதவைகளையும் கட்டோடு பிடிக்காது. அதனால் நான் அவர் பக்கமே அண்டுவதில்லை. இருந்தாலும் இவ்வளவு அருகே வந்திருப்பவரைப் போய்ப் பார்க்காமல் எப்படி இருப்பது? பயந்து பயந்து போனேன். ஏற்கனவெ ஏழெட்டுப் பேர் கைகட்டி வாய் புதைத்து நின்றார்கள். சாதாரண ஆட்களில்லை. ஒவ்வொன்றும் ஒரு பெரிய புள்ளி. பதவியிலிருந்து ஓய்வெடுத்த ஒரு உயர்மன்ற நீதிபதி, ஓய்வெடுத்த ஒரு பிரதம என்ஜீனிர், ஒரு மாஜி கவர்னர், ஒரு தஞ்சாவூர் ஜில்லா மிராசுதார். ஒரு திருச்சி ஜில்லா மிராசுதார்; இன்னும் இரண்டு பேர். எல்லோரும் கருவில் திருவோடு பிறந்தவர்கள். அந்தந்தத் துறையைக் கரைத்துக் குடித்தவர்கள். என்ன பளபளப்பு! என்ன பெரிய மனிதத் தோற்றம்! நாலு பேர் வழுக்கை. மாஜி என்ஜினீர் கிராப்பை எடுத்து உச்சிக் குடுமி வைத்துக் கொண்டிருந்தார். மிராசுதார் குடுமி. இன்னொருவருக்குக் கிராப்பு என்றும் குடுமி என்றும் இல்லாத ஒரு உபயசீர்ஷம். அருணாசலம் எப்போதும் உள்ள குடுமியுடன் நின்று கொண்டிருந்தார். இரட்டை மடங்காக சிறுமை உணர்ச்சி என்னைக் குன்றி நெளிய வைத்தது. ஒன்று, பதவியிலோ, வயதிலோ, அந்தஸ்த்திலோ, செல்வத்திலோ, பெயர் புகழிலோ, இத்தனை பேரையும் விட மட்டமாக இருக்கிற உணர்வு, இன்னொன்று இத்தனை மட்டமாக இருந்தும் கிராப்பு வைத்துக்கொள்ளத் துணிந்ததுமன்னியில், இத்தனை பெரியவர்களுக்கு சமமாக நானும் ஒரு மனிதன் என்று ஈச்வரன் முன்னால் வந்து நிற்கத் துணிந்த அசட்டுத் தனம் – எனவே ஈச்வரனை விழுந்து வணங்கி விட்டு, அவர் கண்ணில் படாமல்

தஞ்சாவூர் ஜில்லா மிராசுதாரின் பளபள முதுகிற்கும் பிருஷ்டத்திற்கும் பின்னால் மறைந்து நின்றுகொண்டேன். ஈச்வரனை நான் நன்கு பார்க்க முடியும். அவர் என்னைத் தேட வேண்டும் அப்படி.

ஈச்வரனோடு அவர்கள் என்னென்னவெல்லாமோ பேசினார்கள். கிஸான் தகராறு. செயற்கைக்கோள், இப்படிப் பல செய்திகள் அடிபட்டன. வேலையைவிட்டுச் சமீபத்தில் ஓய்வெடுத்த என்ஜினீர் சென்னையில் தங்கலாமா அல்லது கிராமத்துக்குப் போகலாமா என்று ஈச்வரனைக் கேட்டார். திருச்சி மிராசுதார், தன் பிள்ளைக்கும் ஒரு பெரிய இடத்து அதிகாரி பெண் கொடுக்க சித்தமாயிருப்பதாயும், ஆனால் தான் வடதேசத்து வடமர் என்றும் பெண்ணின் தந்தை அஷ்டசகஸ்ரம் என்றும் சம்பந்தம் செய்தால் தன் குல உயர்வுக்கு பாதகம் வருமா, வராதா என்றும் கேட்டுக்கொண்டிருந்தார். இந்தப் பேச்சுகளெல்லாம் ஒருவாறு ஆனபிறகு அருணாசலம் 'நான் ஈச்வரனோடு தனியாகப் பேசவேண்டும் என்றார்.'

"பாதகமில்லை சொல்லு."

"ஒன்றுமில்லை. ஸ்மிருதிகளிலே சொன்னபடியே இத்தனை காலமும் ஔபாசனம் என்ன, வைச்வவேதம் என்ன – ஒரு அனுஷ்டானம் விடாமல் நடத்தி வந்துவிட்டேன். பையன்களெல்லாம் அவன் அவன் நல்ல வேலையா அமர்ந்துட்டான். எனக்கு இனிமே இந்த லோகத்தை விட்டு விலகி பாக்கி நாளை நிம்மதியாக ஒரு பற்று இல்லாம கழிச்சுப்ட்டுப் போகணும்னு தோன்றது. சந்யாசம் வாங்கிக்கணும். ஈச்வரனே பெரிய மனசு பண்ணி எனக்கு காஷாயம் தரணும். ஈச்வரன் கையாலே எனக்கு தீட்சை கிடைக்கணும். இது வெகுகால ஆசை எனக்கு."

"வேலையிலேர்ந்து ரிடயராயிட்டியோ?"

"இல்லை. இன்னும் நாலே மாசம் தானிருக்கு."

"நாலு மாசமிருக்கோல்லியோ?"

"இப்பவே பிடிச்சு மனசைப் பக்குவப்படுத்திக்கணும். ஈச்வரன் கிட்டவும் சொல்லிவிடணும்னு வந்தேன்."

ரிடயரானவுடனே வந்தா, சாவகாசமாகப் பேசலாமே" என்றார் ஈச்வரன்.

"உடனே வந்துடுவேன். ஈச்வரன் ரொம்ப சோதிக்காம கிருபை பண்ணணும்."

ஈச்வரன் தலை அசைத்தார்.

அருணாசலத்தோடு அப்பொழுதுதான் எனக்குப் பரிசயம் ஏற்பட்டது. அதற்கு முன்னால் தூர இருந்தே தெரியும். அவர் சொற்பொழிவுகளைக் கேட்டிருக்கிறேன். கட்டுரைகளைப் படித்திருக்கிறேன். ஒரு நமஸ்காரம் போட்டு நானாக அறிமுகம் செய்துகொண்டேன். என்னைப்பற்றி, வேலை பற்றி எல்லாம் விசாரித்தார். முடிந்தால் வீட்டுக்கு வருமாறு சொன்னார். உடனே போய்விட முடியுமா? ஏதோ உபசாரமாகச் சொன்னார். ஆனால் நாலு மாசத்திற்குள் எனக்கும் ஒரு சந்தர்ப்பம் வந்தது. அதுதான் சொன்னேனே, உறவுக்காரப் பையனின் மனு விஷயம்.

“இதுதான் கடைசிக் கையெழுத்தோ என்னவோ? அடுத்தவாரம் ரிடயராகப் போகிறேன்.” என்று அவர் சொன்னபோது எனக்குத் திக்கென்றது. வேலையிலிருந்து ஓய்வெடுப்பதை யாரும் தடுக்க முடியாது. ஆனால் துறவு பூணவாவது? என்ன அநியாயம்! இவ்வளவு சந்தோஷமான குடும்பத்தைவிட்டு! இந்த பெண்ணுக்குக் கலியாணம் செய்ய வேண்டாமா? செய்ததும் அந்த மாப்பிள்ளையோடு கொஞ்சம் சீராட வேண்டாமா? அவனுக்குக் குழந்தைகள் பிறந்தால் அவற்றை தான் பார்க்க வேண்டாமா?

அதுவுமில்லாமல் துறவு என்பது இந்தக் காலத்தில் நடக்கக்கூடிய காரியமா? துறவிகளுக்கு யார் மரியாதை தருகிறார்கள் இந்தக் காலத்தில்? எந்தக் காலத்தில்தான் கொடுத்தார்கள்? திருவள்ளுவரே. நீத்தார் பெருமை பற்றிச் சொன்னாரே தவிர, காவி வேட்டி கட்டிக்கொண்டு ஊர் ஊராக அலை என்று சொல்லவில்லையே! துறவிகளுக்குப் பிச்சைதான் எப்படிக்கிடைக்கும்? அரிசி ரேஷன், இருக்கிற குடும்ப நபர்களுக்கே காண மாட்டேன் என்கிறது. துறவிக்குப் பிச்சை என்று போட்டால் ஒரு சொஜ்ஜியாவது பண்ணிப் போட வேண்டாமா? அதற்கு ஜீனிக்கு எங்கே போவது? என் சின்னக் குடும்பத்திற்குப் போட்டிருக்கிற சர்க்கரை ரேஷனே போதவில்லை. மயில் வாகன நாடார் கடையில் மாதம் ஒரு தடவையாவது கிலோ இரண்டேகால் ரூபாய் என்று கறுப்பில் வாங்குகிறேன். துறவிக்கு சொஜ்ஜி பண்ணிப் போட சர்க்கரை ஏது?

இதையெல்லாம் யோசித்துத்தான், ஈச்வரன் அருணாசலத்திற்குக் காஷாயம் இன்னும் தரவில்லை போலிருக்கிறது. கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆகப்போகிறதே! ஓய்வெடுத்துக் கொண்டு எட்டு மாதம் ஆகப்போகிறதே. இன்னும் அவர் துறவி ஆகவில்லை என்றால் ஈச்வரன் இன்னும் தீட்சை கொடுக்க சம்மதிக்கவில்லை என்றுதானே அர்த்தம்!

ஈச்வரன் வெறும் துறவி அல்ல. உலகம் தெரிந்தவர். பெரிய மேதை, அந்த கண்ணுக்குக் கிடைக்காத அறிவா? எப்பேர்ப்பட்ட கண்! சிவனுடைய மூன்றாம் கண் மாதிரி அல்லவா அது?

ஒரு வாரம் கழித்து, நானும் மனைவியும் காதல் கடன் ஒன்றைக் கழிக்கக் கடைக்குப் போனோம், அதாவது புடவை வாங்கிக் கொடுக்கப்போனேன்.

மறுபடியும் ஆச்சரியம்! அருணாசலத்தின் பெண் வந்திருந்தாள் தனியாக. அதனால்தான் ஆச்சரியம். புடவைகளைப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"நமஸ்காரம்!" என்றேன்.

"நமஸ்காரம்" – பதில். ஆனால் புரிந்து கொண்ட அடையாளம் முகத்தில் இல்லை.

"என்னைத் தெரியவில்லையா? ஏழெட்டு மாசம் முன்னால் உங்கள் வீட்டுக்கு வந்திருந்தேனே. உங்க அப்பாவோட கையெழுத்து வாங்க வந்திருந்தேனே."

"எங்க அப்பாவா?"

"ஆமாம் ஞாபகமில்லையா?"

"எங்கப்பா காலமாகி இருபது வருஷமாகிவிட்டதே."

"அப்படியானால் அருணாசலம் உங்க – "

"அவர் இப்பொழுது என் கணவர். போன மாதத்திலிருந்து . . . "

"என்னது!" என்று ஆச்சரியமாகக் கேட்காமல் எச்சிலை விழுங்கினேன். ஒரு நாலு விநாடி கழித்து 'ஐம் சாரி' என்றேன்.

"பரவாயில்லை."

'என்னைப் பரிகாசம் பண்ணுகிறீர்களா?' என்று கேட்கவேண்டும் போலிருந்தது. ஆனால் கேட்காமல் அவள் பக்கத்திலிருந்த பையனைப் பார்த்தேன். 'இவன் என் தம்பி' என்று அறிமுகப்படுத்தினாள். 'இவன் உன் காதலனோ?' என்று நான் கேட்டுவிடுவேன் என்று நினைத்தாளோ என்னவோ! நான் இந்த அசட்டுத்தனம் எல்லாம் செய்கிற வழக்கம். ஒரு தடவை என் ஆபீசில் வேலை செய்கிறவரைத் தெருவில் சந்தித்தபோது

கூடநின்ற ஒரு மங்கையைப் பார்த்து, 'உங்கள் மனைவியாக்கும்' என்றேன். 'இல்லை, எங்க அம்மா' என்று பதில் சொன்னார் அவர். இன்னொரு தடவை என் ஆபீசில் வேலை செய்யும் ஒரு பெண் குமஸ்தாவைக் கோவிலில் கண்டேன். கூட ஒரு பெரியவர் வந்தார். 'தகப்பனாரோ?' என்றேன். அவருக்கு முகம் சிவந்துவிட்டது. 'என் கணவர்' என்றாள் அந்தப் பெண். இதெல்லாம் அருணாசலத்தின் பெண்ணுக்கு – இல்லை, மனைவிக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதனால்தான் நான் வாய் திறக்குமுன்னே தம்பியை அறிமுகப்படுத்திவிட்டாள்.

புடவை எப்படி வாங்கத் தோன்றும்? 'எங்க யோசிச்சிண்டிருக்கேள்? நான் சொல்றது கேக்கறதோல்லியோ?' என் மனைவி அடிக்கடி என் மனசை சென்னை எருமையைத் திருப்புவது போல் வழிக்குத் திருப்பிக் கொண்டிருந்தாள்.

வெறும் வாயை மெல்ல அவல் கிடைக்காத காலத்தில் இந்த வம்பை விடுவோமா? நானும் மனைவியும் வீட்டுக்குப் போகிற வரையிலும், வீட்டிலும் பேசித் தீர்த்தோம்.

கடைசியில் எனக்குச் சந்தேகங்கள் தீர்ந்தபாடில்லை. ஒரு நாளைக்கு அருணாசலத்தையும் அவர் மனைவியையும் சேர்த்து வைத்தே பேட்டி கண்டேன். அவர்கள் துளிக்கூட லஜ்ஜையின்றி, வெட்கமின்றி விடையளித்ததாக இன்னொருவன் சொல்லுவான். நான் சொல்ல மாட்டேன். மனம்விட்டுப் பேசினார்கள் என்றுதான் சொல்லுவேன். அந்தப் பேட்டியின் சாரம் இதுதான்:

"மன்னிக்க வேண்டும். வெகுநாளாக இவர்களை உங்கள் பெண் என்று நினைத்துக்கொண்டு விட்டேன் – "

"அதனால் என்ன? அது இயற்கை. வயசு வித்யாசத்தைப் பார்த்து அப்படி யாரும் நினைக்கிறது சகஜம் தானே!"

"மன்னிக்க வேண்டும். பெண்ணிருக்கப் பெண் எடுப்பது?"

"யார் சொன்னது? என் மனைவி இறந்து ஒரு வருஷமாகிவிட்டது."

"அடேடெ! எனக்குத் தெரியவே தெரியாது – பாவம்!"

"ஓய்! இப்ப கலியாணம் பண்ணின்டதுக்கு வாழ்த்துங்காணும், யாரோ எப்பவோ போனதுக்காக இப்ப துக்கம் விசாரிக்கிறீரே!"

“உங்கள் திருமண வாழ்க்கை நீண்டு வளரட்டும்.”

“தாங்ஸ்” என்று மாடியில் அடித்த போனைக் கவனிப்பதற்காகப் போனார் அருணாசலம். அந்த சமயம் பார்த்துக் கேட்டேன் அவர் இளமை மனைவியை: “இத்தனை வயசானவரை – ”

“வயது, இளமை என்ற பிரச்சனையே இல்லை. அவருடைய மேதாவிலாசத்தில் மயங்கினேன். ஒண்டியாக வேறு இருக்கிறார். பாசம் இப்படி முற்றிவிட்டது. இந்த வீடும் ஊரிலே அகண்ட காவேரிப்பாசனத்தில் உள்ள இருபது காணி நிலமும் உனக்குத்தான். அதெல்லாம் சுயார்ஜிதம் என்று இதே அறையில் என் காலில் மண்டியிட்டு, ‘என்னை ஏற்றுக்கொள்’ என்று கெஞ்சினார். நான் எப்படி மறுப்பது?”

“பெரிய தியாகம் செய்திருக்கிறீர்கள்?”

“அவர் சொத்துக்காக இல்லை. அவருடைய அறிவுக்காக.”

“பாவம் அவருக்குப் பல்கூட இல்லை.”

“இதோ” என்று ட்ராயரை இழுத்து ஒரு பல் செட்டை எடுத்துக் காட்டினாள் ஸ்ரீமதி அருணாசலம்.

அருணாசலம் வேகமாக இறங்கி வந்தார் சிறுபிள்ளைமாதிரி.

“குட் நியூஸ் பட்டு!” என்று கத்தினார்.

“என்ன?”

“உன்னைத்தான் தேர்ந்தெடுக்கிறார்கள் புரொபசராக, பாலு சொன்னான்.”

“என்ன புரொபசராக எங்கே? எந்தத் துறையில்? எந்த காலேஜு, யுனிவர்சிடியா, காலேஜா? நானும் வாழ்த்தலாமே என்று கேட்கிறேன், தவறாக எண்ணக்கூடாது” என்று குறுக்கிட்டேன்.

‘வாழ்த்துங்கள். பேஷாக, மனித இயல் என்ற துறைக்கு ப்ரொபசர் வேலை காலி – பீபீ காலேஜில் மனு போட்டாள் இவள். இன்னும் ஏழெட்டுப் பேர் போட்டார்களாம். இந்த சும்பன்களுக்கு என்ன தெரியும் ஆன்த்ர பாலஜியைப் பத்தி? பிரின்சிபாலுக்கு நான் போன் பண்ணினேன். இவளையே போட்டுவிட்டார்கள்” என்றார் அருணாசலம்.

“என் நல்வாழ்த்துக்கள், மிஸஸ் அருணாசலம்!”

“நன்றி. சும்மாவே பேசிவைத்துக் கொண்டிருக்கிறேனே ஏதாவது சாப்பிடுங்கள்” என்று எலுமிச்சை ரசமோ காப்பியோ தயாரிப்பதற்காக உள்ளே போனாள் அவள்.

“உங்கள் கலியாணத்தைப் பற்றி ஊரார் கேலி செய்யவில்லையா?” என்று அவரைக் கேட்டேன்.

“கேலி என்ன கேலி! எந்தக் கிழவனுக்குச் சபலம் இல்லைங்கிறேன்? முடியலை. வேஷம் போடறான்கள். நான் அப்படி இல்லை. சாஸ்திரப்படி இந்திரிய நிக்ரகம் பண்ணி இல்லறம் நடத்தினவன். சாஸ்திரம் சொன்ன நாட்களில் மட்டும் மனைவியோடு சேர்ந்து இல்லறம் நடத்துபவனுக்கு இல்லற சன்யாசி என்று பெயர். அவன் நூறு வயது வரையில் புஷ்டனாகவும் வீர்யவானாகவும் இருப்பான். அதனால் முதல் பெண்டாட்டியோடும் இல்லற சன்னியாசியாகத்தான் இருந்தேன். அப்புறம் நிஜ சன்னியாசியாக ஆகலம் என்று தான் ஈச்வரனைக் கேட்டேன். அன்றுதான் நீங்களும் வந்திருந்தீர்களே. அவர் திரிகால ஞானியல்லவா? அதனால்தான் என் கோரிக்கையை சரியாக வரவேற்கவில்லை.

பிறகுதான் பட்டு வந்தாள். சைவ சித்தாந்தத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்கிறாள். என்னிடம் சந்தேகம் கேட்க வந்தாள். “சிவமும் சக்தியும் கலந்து விட்டன” என்று சிறுகுறும்பாக அருணாசலம் புன்னகை பூத்தார்.

கதையின் மற்ற பகுதிகளை நம்பினாலும் இந்தப் பேட்டியை நீங்கள் நம்பவில்லை என்று என்னமோ எனக்குத் தோன்றுகிறது. உண்மையை வெளிப்படுத்த எத்தனையோ மார்க்கங்கள் உண்டு என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஸ்ரீமதி அருணாசலம் காப்பி கொண்டு வருகிறாள். அந்த காப்பியைச் சாப்பிட்டாவது மனைவியைப் பெண் என்றும், கணவனைத் தகப்பன் என்றும் மயங்குகிற என் அசட்டு மனப்பிராந்தி ஒழியட்டும்.

**தீபம், ஆகஸ்ட் 1965**

# ஆயா

"ஈச்வரதாஸ்" என்று வெளியே வந்த பியூன் கூப்பிட்டான். ஈச்வரதாஸ் எழுந்தான். இவ்வளவு சீக்கிரம் கூப்பிடுவார்கள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. எட்டு பேர் போய் விட்டு வந்துவிட்டார்கள். என்ன கேள்வி கேட்டார்கள் என்று வெளியே வந்த ஒவ்வொரு ஆளிடமும் அவன் கேட்டுக்கொண்டிருந்தான். அவசர அவசரமாக ஏதோ சொல்லிவிட்டு அவர்கள் போய் விட்டார்கள். கேள்விகளைச் சொல்லிவிட்டால் மற்றவர்கள் ஜாக்கிரதையாகத் தயார் செய்து கொண்டு பதில் சொல்லிவிடுவார்களோ என்று அவர்கள் கவலைப்பட்டிருக்க வேண்டும். முன்னால் தெரிந்து கொள்வதும் "காப்பி" அடிக்கிற மாதிரி தானே!

உள்ளே போகும்போது, கால், கை நடுங்கிற்று. ஐந்து பேர் நீள மேசைக்குப் பின்னால் உட்கார்ந்து இருந்தார்கள். மத்தியில் ஒரு கவுன் போட்ட ஆள்.

மற்றவர்களுக்குச் சாதாரண சட்டை கால் சட்டை. ஓரத்தில் ஒரு பெண். இவள்தான் பள்ளிகூடத்துக்குத் தலைமை ஆசிரியை, தெரியும்.

மத்தியில் இருந்தவர் கையில்லாத நாற்காலியைக் காட்டினார். ஈஸ்வரதாஸ் உட்கார்ந்தான் – அடக்க ஒடுக்கமாக.

"உன் பேர் என்ன?"

"ஈஸ்வரதாஸ்."

"நல்லா கெட்டியாகச் சொல்லு. என்ன பயம்? என்ன வயசு?"

"பதினேழு."

"என்ன படிச்சிருக்கே?"

"போன வாரம்தான் ஸ்கூல்லே கடைசிப் பரீச்சை எழுதியிருக்கேன்."

"அப்படின்னா?"

"ஆமா."

"போன வாரம் வரைக்கும் மாணவன். இப்ப வாத்தியாரா? பரீச்சையிலே

தேற வண்டாமா?"

"நிச்சயமா தேறிடுவேன். இது வரைக்கும் எல்லா க்ளாஸிலேயும் முதல் ஐந்து ராங்க்குக்குள்ள வந்திட்டிருக்கிறேன். இந்தப் பரீச்சையிலும் நல்லாத் தேறிடுவேன்."

"வாத்தியார் வேலைக்குப் பயிற்சி வேணுமே."

". . . "

"தெரியாதா?"

"தெரியும். ஆனா பயிற்சியில்லாம, என் சிநேகிதங்க ரெண்டு மூன்று பேர் வாத்தியார் வேலை பார்க்கறாங்க! நானும் அந்த மாதிரிதான் வந்திருக்கிறேன். அப்புறம் இரண்டு மூன்று வருஷம் கழிச்சு நீங்களே பயிற்சிக்கு அனுப்புங்களேன்."

"வேலையே கிடைத்துவிட்டாற் போல பேசுகிறாயே."

"ஸாரி."

"பாதிரி சிரித்தார்."

"இந்த மாதிரி சின்ன எலிமென்டரி பள்ளிகூடத்திலே வாத்தியாரா இருக்கிறதுன்னா என்ன என்ன தெரிந்திருக்க வேண்டும்?"

"நல்லா விளையாடத் தெரியணும். சிரிக்கத் தெரியணும். புள்ளைங்களோட வேடிக்கையா பேசத் தெரியணும். சுத்தமாக இருக்கணும்."

"ஏன்?"

"அப்பதான் பிள்ளைங்களும் சுத்தமா இருக்கும்."

"வேடிக்கையாய்ப் பேசத் தெரியணும்னா?"

"கதை மாதிரி எல்லாம் புதுசு புதுசா சொல்லணும்."

"அப்ப ஒரு கதை சொல்லு பார்ப்பம். நாங்க அஞ்சு பேரும், நாலாங் க்ளாஸ் பிள்ளைங்கன்னு நெனச்சுக்க. ஒரு கதை சொல்லு."

ஈசுவரதாஸ் குழம்பி புன்னகை பூத்தான்.

"ஆமா, நாங்க இப்ப நாலாம் க்ளாஸ் குழந்தைகள், ஒரு கதை

சொல்லு."

"பிராணி கதை சொல்லலாமா?"

"எது வேணும்னாலும்."

"பழைய கதையா – பைபிள் – ராமாயணம் மாதிரி?"

"எது வேணும்னாலும்."

திருதிருவென்று விழித்தான் அவன். ஒரு கதை கூட நினைவுக்கு வரவில்லை. ஒரு நிமிஷம் ஓடிற்று. பிராணிகள், பறவைகள் எல்லாம் எங்கேயோ பறந்துபோய் விட்டாற்போலிருந்தது.

விழித்தான்.

"எந்தக் கதையாகவும் இருக்கலாமா?"

"எந்தக் கதையாயிருந்தாலும் சரி . . . நாங்க இப்ப நாலாம் க்ளாசுப் பிள்ளைகள். அது மாத்திரம் ஞாபகம் இருக்கட்டும் . . . "

மீண்டும் புன்னகையுடன் சிறிது விழித்தான் அவன். பிறகு மெதுவாக ஆரம்பித்தான்.

"ஒரே ஒரு ஊரிலே, ஒரு அப்பா அம்மா. அவங்களுக்கு ரண்டு குழந்தை. ஒரு ஆணு, ஒரு பொண்ணு. அப்பா வந்து ராணுவத்திலே ட்ரக்கு ட்ரைவர். ரொம்ப தொலைவுலே ஏதோ ஊர்லே வேலை பார்த்துக்கிட்டிருந்தார். அம்மாவையும் பிள்ளைங்களையும் ரண்டு வருஷத்துக்குகொருக்காத்தான் வந்து பார்ப்பார் – லீவு எடுத்துக்கிட்டு வந்து. அப்படி வர்றப்ப, ரண்டு நாளைக்கு அப்புறம் கோச்சுகிட்டு கத்த ஆரம்பிச்சிடுவார் – நல்ல சாப்பாடு போடலேன்னு. ஒரு மீன் கிடையாது, ஒரு கறிக் குளம்பு கிடையாது – இது என்ன பன்னி துன்ற சாப்பாடுன்னு கத்துவார். காசில்லையே மீனுவாங்க, கறி வாங்கல்லாம். அவரு காசுநிறைய கொண்டாரதில்லெ. அவர்கிட்ட காசு இருக்காது. அவரு நிறைய சாராயம் குடிப்பாரு சம்பாதிக்கிறதெல்லாம் அதுக்கே சரியாப் போயிடும். உனக்குக் கை காலு இல்லியா, நாலு காசு சம்பாதிக்க முடியாதா உன்னாலேன்னு கத்துவாரு அவரு அம்மாவைப் பார்த்து. அப்படி நாலஞ்சு நாள் கத்துவாரு. சாராயத்துக்குக் காசு கேப்பாரு. கொடுக்காட்டி அடிப்பாரு அம்மாவை. அம்மா, பாத்திரம், தோடுன்னு எதையாவது வித்துப் போட்டு நல்லா சமையல் பண்ணிப் போடுவாங்க. காசு தீந்தப்புறம் நல்லா சமைக்க முடியாது. மறுபடியும்

சண்டைபோடுவாரு, அடிப்பாரு. கோவிச்சுக்கிட்டு திரும்பி ஊருக்குப் போயிடுவாரு. பிள்ளைங்க படிக்கணும், சாப்பிடணும் அதனாலே அம்மா வந்து ஆயா வேலைக்குப் போனாங்க. பணக்கார வீட்டிலே போய் சமைக்கிறது, துணி தோய்க்கிறது, வீடு கூட்றது, பாத்திரம் தேய்க்கிறது, குழந்தையைப் பார்த்துக்கிறது, இந்த மாதிரி வேலை செய்ய ஆரம்பிச்சாங்க. காலையிலே ரண்டு பிள்ளைகளுக்குச் சமைச்சுப் போட்டு, வேலைக்குப் போனா, ராத்திரிதான் வருவாங்க – அசந்து போய் வருவாங்க. கிறிஸ்மஸூ, தீபாவளின்னு எப்பவாவது அவங்களுக்கு ஒரு புடவை இனாம் கிடைக்கும்.

"காட்சீலெ ஒரு நல்ல வீட்டிலே ஆயா வேலை கிடைச்சுது அந்த அம்மாவுக்கு. ஒரு புருஷன், பொண்டாட்டி – ரண்டு பேரும் வேலைக்குப் போறவங்க. அவங்களுக்கு ஒரு குழந்தை. அவங்க வேலைக்குப் போயிருக்கறப்ப, குழந்தையைப் பார்த்துகிட வேண்டியது. அவங்க ரொம்ப நல்லவங்க. ஆயாவுக்கு நல்ல சாப்பாடு போட்டாங்க. சேலை கொடுப்பாங்க. அந்தக் குழந்தையும் ஆயா மேலே ரொம்ப ப்ரியமா இருந்துச்சு. ஆயாவும் அந்த குழந்தை மேலே உசிரா இருந்தாங்க. அது அப்பா அம்மாகிட்ட சித்த நேரம் போகும். அப்புறம் ஆயா கிட்டவேதான் இருக்கும். சாயங்காலம் ஆயா வீட்டுக்குப் போனப்புறம் அதுக்கு வெறிச்சினு போயிடும். அதைப் பார்த்துட்டு அந்தப் புருஷன் பெண்டாட்டி ரண்டுபேரும் ஆயாகிட்ட இன்னும் ரொம்பப் பிரியமா இருக்கத் தொடங்கினாங்க. ஆனா அந்த ஆயாவுக்கு எத்தனை வந்தாலும் போறலெ. மக பெரிசா ஆயிட்டுது. அதனாலே தம் சேலையெல்லாம் மகளைக் கட்டிக்கச் சொல்லும் அந்த ஆயா. பையனும் பெரிய கிளாசு படிக்க ஆரமிச்சான். பள்ளிக்கூடத்திலே புஸ்தகம், நோட்டு, அது இதுன்னு புடுங்குவாங்க. நல்ல உடுப்புப் போட்டுக்கணும்னு கண்டிப்பாங்க. புள்ளை நல்லா படிச்சு பெரிய மனுசனாக ஆகணும்னு ஆசை ஆயாவுக்கு. திடீர் திடீர்னு இருவது ரூபா முப்பது ரூபா வேணும்பான் பையன். ஆயா சம்பளத்தையெல்லாம் முன் பணமா வாங்கிப்பா. அப்புறம் மேலே, மகளுக்குக் கலியாணம் பண்ணிரணும்னாங்க உறவு சனங்க. அதுக்காக வேண்டி மோதிரம் சங்கிலி பண்ணாங்க ஆயா. பணம் பத்தலெ. ஆனா எப்படியோ ஆயா பணம் கொண்டாந்துடுவாங்க. ஒரு நாளைக்கு பெரிய பரீட்சைக்குப் பணம் கட்டணும்னு பையன் பணம் கேட்டான். இல்லெ. ஒரு வாரத்திலெ கட்டணும்னான். ஆனா மூணு மாசத்து சம்பளத்தை முன் பணமாக வாங்கிட்டாங்க ஆயா. ஆனா ஒரு வாரத்துக்குள்ளே பணம் கொண்டாந்துட்டாங்க. ஆனா மறுநாள் காலையிலெ வேலைக்குப்

போனவங்க ஒரு மணி நேரத்திலே திரும்பிட்டாங்க. ஏன்னு கேட்டான் பையன். வேலையை உட்டு நிறுத்திட்டாங்களாம்.

“பென்ஜீ நாலஞ்சு மாசமா ரூபாய் எல்லாம் இருவதும் முப்பதுமா காணாம போயிட்டே இருக்கு. இத்தோட நானூறு ரூபாய்க்கு மேலே திருட்டுப் போயிருக்கு. நீங்க எடுத்தீங்கன்னு நாங்க சொல்லலெ. நீங்க எடுக்க மாட்டீங்கன்னு ஓர் எண்ணம் இருக்கு. ஆனா, இங்கு வேற ஒருத்தரும் வர்றதில்லே. அதனால உங்க மேலே சந்தேகப்படும் படியா இருக்கு. சந்தேகம் இருக்கிறப்ப நீங்க இங்கே வேலை செய்யறது நல்லாருக்காது. நாளைக்கு ஏதாவது நடந்து கெட்டுப்போயிடுச்சுன்னா உங்க பேர்லதான் பழிவிழும்னு சொல்லி மூணு மாசத்துச் சம்பளத்தைத் தந்து திருப்பி கொடுக்க வாணாம்னு சொல்லி நிறுத்திட்டாங்க அந்த புருஷன் பொண்டாட்டி ரெண்டுபேரும். அந்த ஆயா அழுதிட்டே வீட்டுக்கு வந்தது.

“இது பெரிய அக்ரமமா இருக்கேன்னான் பையன்.”

“இல்லே. அவங்க சந்தேகப்பட்டது சரிதான்”ன்னாங்க ஆயா. “அப்படின்னா நீ எடுத்தியா?”ன்னு கேட்டான் பையன்.

“ஆமா, உனக்குத்தான் குடும்ப நிலைமை தெரிஞ்சிருக்கே. உன் படிப்பு, தங்கச்சி கலியாணம் அதுக்குக் காப்பு, சேலை, காதுக்குத்

தோடு . . . ”ன்னா ஆயா.

“அதை அவங்ககிட்ட ஒத்துக்கிட்டா என்னவாம்? அவங்கதான் ரொம்ப நல்லவங்கன்னு சொல்றியே?”

ஒத்துகிட்டா திருடின்னு பட்டம் நிலைச்சுப் போயிடும். ‘உன் மேல் சந்தேகம். ஆனா, நீ யோக்கியமானவள்னு சொல்லி வேற யாருகிட்டவாவது வேலை வாங்கித்தாரேன், நீ அங்கியும் இந்த மாதிரி பண்ணாம இருந்தா’ன்னு சொன்னாங்களாம்.

“அந்த ஆயா அதைக் கேட்டுகிட்டுத் திரும்பி வந்துடுச்சு அழுதுகிட்டு.”

“அந்தப் பையன் ஒரே துடிப்பா துடிச்சுது. எப்படியாவது அந்த ரூபாய்களைச் சம்பாரிச்சுத் திருப்பிக்கொண்டு கொடுத்திரணும்னு, திருப்பித் திருப்பி அம்மாகிட்ட சொன்னான். அப்படின்னா திருடிப் பட்டம் கட்டலான்னு பாக்கறீய எனக்குன்னு கேட்டது அந்த ஆயா. நமக்குப் பத்தலெ எடுத்துகிட்டு வந்தேன். அவங்ககிட்ட சொல்லாம எடுத்தது

தப்புதான்னு சொல்லிச்சு அந்த ஆயா. 'அது திருடு இல்லியா?' ன்னு கேட்டான் பையன்.

"அம்மா முழிச்சி தரையைப் பார்த்துக்கிட்டே இருந்தது."

ஈச்வரதாஸ் நிறுத்திவிட்டான்.

"கதை முழுக்க முடிஞ்சி போச்சா?"

"போச்சு சார்."

"இதுதான் நாலாங் க்ளாஸ் புள்ளீங்களுக்குச் சொல்ற கதையா?"

"சொல்லலாம் சார்."

"அவங்களுக்குப் புரியுமா இது?"

"புரியும் சார்."

"கடசீயிலே ஒரே சிக்கலா இருக்கே. அவங்க சந்தேகப்பட்டுத்தான் நிறுத்தினாங்க. இந்த ஆயா திருடிப்பிட்டு, ஒப்புக்கமாட்டேன்னிட்டாங்க, திருடின்னு பேர் வரக்கூடாதுன்னு பையனையும் தடுக்கறாங்க. இதெல்லாம் நாலாம் க்ளாசுக் குழந்தைகளுக்குப் புரியுமா?"

"புரியும் சார். அஞ்சு வயது முடிஞ்சவுடனே எது நல்லது, எது கெட்டதுன்னு தெரியும் சார்."

ஐந்து பேரும் சிரித்தார்கள்.

"சரி, இப்ப உங்க அம்மா எங்க இருக்காங்க?"

"வீட்டிலேதான்."

"அந்த புருஷன் பெண்டாட்டி வேலை வாங்கித் தரேன்னாங்களே. இன்னும் தரலியா?

"இன்னும் இல்லெ சார்."

"சரி, நீ வாத்தியார் வேலை பார்க்கறது கிடக்கட்டும். முதல்லெ போயி, உங்கம்மாவைக் கூட்டிக்கிட்டு வா இங்கே ஒரு ஆயா வேணும் இப்ப" என்று ஓரத்திலிருந்த பெண் சொன்னாள்.

அமுதசுரபி, நவம்பர் 1979

# சுளிப்பு

அந்தப் பையனை ஒரு நிமிஷம் வெறித்துப் பார்த்தார் திருமலை. சர்க்கரைக் குட்டி, பட்டுக் குஞ்சு என்றெல்லாம் கொஞ்ச வேண்டும் போலிருக்கும். அத்தனை லட்சணம். அப்படி முகக் களை. புருபுருவென்று கண். சுருள் சுருளாகத் தலையில் மயிர். ஏழு வயதுக்கான வளர்த்தி இல்லை. உடம்பு மெல்லிசுவாகு. அதனாலேயே ஒரு கவர்ச்சி ஐயோ! இவ்வளவு பூஞ்சையாக இருக்கிறதே என்று ஒரு பரிவுக் கவர்ச்சி.

ஆனால் மண்டையில் இத்தனை களிமண்ணா! திருமலைக்கு அதுதான் ஆச்சரியம். அரை மணி நேரமாக அந்த மண்டையில் ஒரு கணக்கை ஏற்ற, சாகசம் பண்ணிக்கொண்டிருக்கிறார். ஒரு சாகசமும் பலிக்கவில்லை. அந்தச் சின்ன மண்டை ஒரு சின்ன அறை போலவும், அதற்குப் பல கதவுகள் இருப்பது போலவும், ஆனால், உள் முழுவதும் ஒரே ஈரக் களிமண்ணாக இருந்ததால் கதவுக் கீலில் அந்த மண்ணெல்லாம் சிக்கித் திறக்க முடியாமல் அடைத்துக் கொண்டிருப்பது போலவும் உவமானப் படம் தோன்றிற்று. இன்னொரு தடவை அந்த மண்டையை வெண்ணெய் என்று நினைத்து அவர் ஓர் ஊசியால் குத்தப்போனது போலவும், ஆனால் ஊசி முனை உடைந்ததும், அது வெண்ணெய் இல்லை, வெள்ளைக் கருங்கல் என்னும் அவருக்கு புரிந்ததாக ஒருதோற்றம். இப்படி ஒவ்வொரு தோல்விக்கும் ஓர் உவமானப் படம் தோன்றிக் கொண்டிருந்தது.

அவர் கையில் ஒரு கட்டு மரக் குச்சி. சுளுந்துக் குச்சி. உள்ளங்கை வேர்த்து சுளுந்து கட்டும் கசகசவென்று நனைந்திருக்கிறது.

“இது பாரு மூணும் மூணும் என்ன?”

விரல் விட்டு எண்ணி “ஆறு” என்றான் பையன்.

“உன்கிட்ட மூணு குச்சி இருக்கு. உங்க அண்ணா கிட்ட மூணு குச்சி இருக்கு – ”

“எனக்கு அண்ணா இல்லியே.”

“சரி, உங்க அக்கா கிட்ட இருக்கு.”

“அக்காவும் இல்லே.”

“நீ ஒரே குழந்தையா?”

“ஆமாம்.”

“சரி, உங்கிட்ட மூணு குச்சி இருக்கு. எங்கிட்ட மூணு குச்சி இருக்கு. மொத்தம் எத்தனை? இரண்டு கையையும் சேர்த்து?”

இரண்டு கையும் சேரவில்லையே என்று விழித்தான் பையன். கடைசியில் அவனுடைய இடது கையில் மூன்றும், வலது கையில் மூன்று குச்சியுமாக வைத்து, சேர்த்து எண்ணி ஆறு என்று ஏற்றிவிட்டார்.

அடுத்த கணக்குத்தான் அவருடைய மூளையின் மூலபலங்களைத் தகர்த்துக் கொண்டிருந்தது.

“என் கிட்ட மூணு குச்சி இருக்கு. உங்கிட்ட எங்கிட்ட இருக்கிறதைவிட மூணு குச்சி அதிகமா இருக்கு. இப்ப ரெண்டு பேர் கிட்டவும் சேர்த்து எத்தனை குச்சி இருக்கு?”

“ஆறு”

“இல்லெ. என்கிட்ட மூணு குச்சீ ஈ ஈ ஈ ஈ. உங்ககிட்ட அதைவிட மூணு குச்சி அதிகமா இருக்கு ஊ ஊ ஊ. புரியறதோ. நான் சொன்னதைச் சொல்லு பார்ப்பம்.”

“என்கிட்ட மூணு குச்சி ஈ ஈ. உங்கிட்ட அதைவிட மூணு குச்சி அதிகமாக இருக்கூ ஊ ஊ ஊ . . . ”

“அவ்வளவுதான் இப்ப மொத்தம் எத்தனை?”

“ஆறு.”

“எப்படி?”

“மூணும் மூணும் ஆறு.”

“இல்லே . . . ணு குச்சி எங்ககிட்ட அ அ அ. உங்ககிட்ட அதைவிட மூணு குச்சி அதிகம் ம் ம் ம் ம். மொத்தம் எத்தனே?”

“ஆறு.”

அவருடைய மேஜை மேல் சுளுந்துக் குச்சிகள் இறைந்து கிடந்தன.

கால் மணி போராடிவிட்டு, “குச்சி வாண்டாம்; மூணு மாம்பழம்னு வச்சுக்கோயேன். எங்ககிட்ட மூணு மாம்பழம் இருக்கு. உங்கிட்ட

அதைவிட மூணு மாம்பழம் அதிகமா இருக்கு.”

பையன் தன் கையைப் பாாத்துக்கொண்டான்.

“அப்ப மொத்தம் எத்தனை மாம்பழம் இருக்கு?”

அவன் இப்போது ஆறு கூடச் சொல்லவில்லை. நேராக இருக்கிற சுளுந்துக் குச்சியே பலிக்கவில்லை. இல்லாத மாம்பழமா பலிக்கப் போகிறது?

“உனக்கு மாம்பழம் பிடிக்கமா?”

“பிடிக்காது.”

“ஓகோ. அப்படியா? ஏன் பிடிக்காது?”

“சிரங்கு வரும்.”

“உனக்கு எந்தப் பழம் ரொம்பப் பிடிக்கும்?”

“நாகப்பழம்.”

“சரி, நாகப்பழம். உன் இந்தக் கையிலே மூணு நாகப்பழம் இருக்கு— அந்தக் கையிலே அதைவிட மூணு நாகப்பழம் அதிகமா இருக்கு . . . கேட்டியா, இந்த கையிலே மூணு – அந்த கையிலே? அதைவிட மூணு நாகப்பழம் அதிகமாக இருக்கு. இப்ப ரண்டு கையையும் சேர்த்து எத்தனை பழம் இருக்கும்?”

“ஆறு.”

“ராமா.”

அரை மணி ஆகிவிட்டது.

மற்ற குழந்தைகள் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தன. ஓரிரண்டு குழந்தைகள் அலுத்துப்போய் ஒன்றை ஒன்று கிள்ளத் தொடங்கின.

இந்தப் பையனை அரை மணியாக நிறுத்தி வைத்துச் சொல்லிக் கொண்டிருக்கிறார் திருமலை. பையன் இரண்டு கைகளையும் தொங்கவிட்டவாறே பிசையத் தொடங்கினான். கால் நொந்ததோ, என்னவோ, நகர்ந்து நகர்ந்து நின்றான். கொஞ்சம் அசைந்து அசைந்து சிரமம் தீர்த்துக் கொள்வது போலிருந்தது. கால் மாற்றிக்கொண்டான்.

திருமலை நன்றாகப் பார்த்தார். வரவர பையனின் கண்கள்

புருபுருவென்று இருந்தவை, மந்தமாகத் தூங்குவதுபோல வெளிச்சம் மங்கிவிட்டிருந்தது. அவரும் விடவில்லை எப்படியாவது இந்த "அதிகத்தை" மண்டையில் ஏற்றாமல் விடுவதில்லை என்று வீம்பு பிடித்துக் கொண்டது.

"நன்னா கவனிச்சுக் ே◌க்கணும் . . . என் கையிலே . . . இல்லெ. உன்னோட இடது கையிலே – மூணு நாகப்பழம் . . . "

பையனின் முகம் இடுங்கிற்று. புருவம் சுருங்கிற்று. திருமலைக்கு சட்டென்று வாய் மூடிக் கொண்டது. இந்தப் புருவச் சுருக்கம் . . . பத்மாவின் முகம் மாதிரி இந்த புருவச் சிணுக்கம் இப்போது அவர் கண்ணை வந்து குத்திற்று.

கலியாண பந்தல். திருமலை மாப்பிள்ளை. சம்பந்திகளை இறக்கியிருக்கிற வீட்டிலிருந்து மேளதாளத்துடன் அவர் பரதேசக் கோலம் கிளம்புகிறார். இடுப்பில் முடமுடவென்று பஞ்சக்கச்சம். மயில்கண். மேலுக்கு ஒரு மயில் கண் ஐந்து முழம். கையில் விசிறி. காலில் செருப்பு. அவர் தம்பியோ யாரோ குடையைப் பிரித்து திருமலையின் மீது வெயில் படுவதும் படாததுமாப் பிடித்துக்கொண்டு வந்தான். இடையில் பஞ்சக் கச்சம் அவிழாமல் பெல்ட்டு.

காலையில் அந்த கிராமத்துப் பரியாரி வந்து அவனுக்குச் சர்வாங்க க்ஷவரம் செய்து வைத்திருந்தான். திருமலைக்கு ஒரே கூச்சம். தலைமயிரை மட்டும் விட்டுவிட்டு, மார்பு கை கால் என்று ஒரு இடம் விடாமல் மழித்துவிட்டான். திருமலைக்கு கொஞ்சம் சிரமம். மயிரெல்லாம் போனதும் கறுப்புத் தோலில் கொஞ்சம் கறுப்பு உதிர்ந்தாற்போல ஒரு திருப்தி. ஆனால் உடம்பு முகமெல்லாம், நெற்றி முதல் பாதம் வரையில் அம்மி – கல்லுரலைப் புளிந்தாற் போல அம்மை வடு. சிறு சிறு குழிகளாகப் பெரிய அம்மை வடு. அதனால் பரியாரியின் கத்தியும் வழவழவென்று மழித்து விடவில்லை. கர்கர் என்ற ஓசையுடன் அம்மைத் தழும்புகளையும் பள்ளங்களையும், வரம்புகளையும் நரநரத்துக் கொண்டிருந்து. மயிர் எல்லாம் போனதும் ஒரு அரிப்பு வேறு.

கலியாணப் பந்தலில் புகுந்ததும் கிழக்கே பார்த்து நிற்க வைத்தார்கள் திருமலையை. கலியாணப் பெண் உள்ளேயிருந்து வந்து அவனுக்கு மாலையிட்டு ஊஞ்சலில் ஆட்டிய பிறகு, உள்ளே அழைத்துப் போக வேண்டும். தாயாரும் தங்கைகளும் கிழவிகளும் நடு வயதுகளும் புடை சூழ மொட மொடவென்று பட்டு மடிசாரும் தலையில் சூரியப் பிரபை

சந்திர பிரபையும் பூப்பின்னலுமாக மெதுவாக வந்தாள்.

“பார்ரீ பத்மா, பாரு, நன்னாப் பார்த்துக்கோ ஆம்படையானை” என்று மேளச் சத்தத்துக்கு நடுவில் ஒரு பெண் குறும்பாகக் கத்திற்று.

பத்மா நிமிர்ந்து பார்த்தாள் ஒரு புன்னகையுடன். அதே கணம் முகத்தில் ஒரு சுளிப்பு. என்னமோ குத்தினது போல ஒரு வலி. ஒரு பயம் . . . சிறிது நேரம் அவள் மார்பு, கை, பாதம் எல்லாம் சிலுசிலுப்பது போல ஒரு சிறு அதிர்வு. அதே சுளிப்போடு ஒரு பார்வை. மீண்டும் தலை குனிந்தது.

புன்னகையைக் காணவில்லை. அப்போது, தாலி கட்டும்போது, நலங்கின்போது – ம், ஹும், அந்தப் புன்னகை மறைந்தது மறைந்ததுதான்.

கலியாணப் பந்தலில் கண்ட அந்த முதல் சுளிப்பு! திருமலைக்குப் புரிந்துவிட்டது. அவன் நல்ல அட்டைக் கறுப்பு. அம்மை வடு. அகல மூக்கு. பல் சோழிப் பல். அவனுக்கே கண்ணாடியில் பார்த்துக்கொள்ளப் பல சமயம் வேதனையாயிருக்கும்.

முன்னால், பெண் பார்க்கவில்லை. அம்மாக்களும் அப்பாக்களும் பார்த்து நிச்சயம் பண்ணிவிட்ட கலியாணம். கண்ணாடியைப் பார்க்கத் தயங்குகிற திருமலைக்கு எந்தப் பெண்ணையும் போய்ப் பார்த்து வேணும் வேண்டாம் என்று சொல்லத் தயக்கம்.

பத்மாவைப் பார்த்ததும் அவனுக்குக் கொஞ்சம் அதிர்ச்சி, கொஞ்சம் என்மாதிரி இருக்கக் கூடாதோ? கொஞ்சம் பகரையாக, கட்டை குட்டையாக – இல்லை, ஒரு கால் விந்தலாக, இல்லை, ஒரு கண் பூ விழுந்து . . . இப்படி ஏன் மூக்கும் முழியுமா, மாநிறமாக பளிச்சென்று ஒல்லியாக, பச்சை நரம்பு ஓட –

இந்தப் பையனுக்கும் அப்படி பச்சை நரம்பு – ஒல்லி. முகத்தை ஏன் இப்படிச் சுளுக்கினாள்? என் முகத்தைப் பார்த்தா? பத்மா முகத்தைச் சுளுக்கினது போலவே இருந்தது. திருமலைக்கு மனசு மறுபடியும் பத்மாவுடன் ஓடிற்று. பத்மா நாலைந்து நாள் அப்படியிருந்தாள், இப்படி வந்து சேர்ந்து விட்டதே என்கிறது போல.

பிறகு படுக்கை அறையில் . . .

“அப்பா! உடம்பைப் பாரு, சமையக்காரன் மாதிரி கண்டு கண்டா,

ம்க்கும்" என்று அவனுடைய இரண்டு கன்னங்களையும் ஒவ்வொரு கையின் ஐந்து விரலாலும் உள்ளங்கையாலும் அழுத்திக் கவ்வி மயக்கமும் சிரிப்பும்" – அவள் கை வேர்வையும் அவன் முதுகின் வேர்வையும் சேர்ந்து கசங்கி நசுங்கி . . .

சுளிப்பு மறைந்து விட்டது.

இந்தப் பையன் அப்படித்தான் முகம் சுளுக்கினான் இப்போது. பத்மாவை ஜயித்தாற்போல இவனை எப்படி ஜயிக்க முடியும்?

படிக்கிற குழந்தை – ஏழு வயது . . .

திருமலை வெறித்துப் பார்த்தார் அவனை.

"உங்கப்பா என்ன பண்றார்?"

"செத்துப் போய்ட்டார்" என்றான் பையன்.

கண்ணில் அழுகை இல்லை.

"அம்மா?"

"அம்மாவும் செத்துப் போயிட்டா?"

"ஆ! எப்ப?"

"போன வருஷம்!"

"அண்ணா, தம்பியாவது இருக்காளா?"

"ஒருத்தருமில்லே."

"நீ யார் கிட்ட இருக்கே?"

"மாமா கிட்ட."

"மாமா என்ன பண்றார்?"

"பக்கோடா, காராபூந்தி எல்லாம் பண்ணி தெருவோட வித்துண்டு போவார்! தலையிலே ஒரு பெரிய தட்டுலெ வச்சுண்டு."

"அப்படின்னா உனக்குக் கணக்கு நன்றாகத் தெரிய வேண்டாமா?"

"ஆமா."

"ஆமா?"

பையன் முகம் மறுபடியும் சுளித்தது.

வயிற்றைப் பிடித்துக் கொண்டான்.

"என்ன பண்றது?"

'வயத்தை வலிக்கிறது. போகணும், போகணும், போகணும்', என்று வலது கையில் ஆள் காட்டி – பாம்பு விரல்களை நீட்டினான் பையன்.

"சரி, சரி போ . . . ஓடு" என்றார் திருமலை.

பையன் ஓடினான். கால் சட்டையிலேயே போய்விடப்போகிறானே என்று கவலை. நல்ல வேளையா ஓடி விட்டான்.

மற்ற பையன்கள் சிரித்தார்கள்.

"பொய் சார்" என்றான் ஒரு பையன் எழுந்து.

"என்னடா பொய்!"

"அவனுக்கு அப்பா அம்மா எல்லாம் இருக்கா சார்."

"ரண்டு அண்ணா இருக்கான் சார்."

"ஒரு தங்கச்சி கூட இருக்கா சார்."

"அவன் – அப்பா, பக்கோடா விக்கலெ சார். பாட்டு வாத்தியார் சார். எங்க அக்காக்குக் கூடச் சொல்லிக் கொடுத்தார் சார்."

"அட!"

"அவனும் நல்லாப் பாடுவான் சார்."

"அட."

"அப்பா அம்மா, யாருமே இல்லேன்னானே?"

"சும்மனாச்சும் சார்."

"ஏன் சொன்னான்?"

குழந்தைகள் பதில் சொல்லவில்லை.

"வரட்டும்" என்றார்.

திருமலைக்குக் குழப்பம். முதலில் கோபம். பிறகு தன் முகம்

தெரிந்தது.

குழப்பம்.

"வரட்டும்."

எல்லோரும் காத்துக்கொண்டிருந்தார்கள். பையன் வரவில்லை. கால்மணி, அரை மணி, பகல் இடைவேளை ஆயிற்று. வரவில்லை. பிற்பகல் ஆயிற்று. வரவில்லை. மாலையில் கடைசி மணியும் அடித்தது. பையன் வரவில்லை. திருமலைக்கு வயிற்றில் புளி.

"புஸ்தக மூட்டையை வச்சிட்டுப் போயிட்டான். அவன் வீடு தெரியுமா உங்களுக்கு?"

"நான் கொடுக்கிறேன் சார். எங்க தெருதான் சார்" என்று ஒரு பையன் அந்தப் பையை எடுத்துக்கொண்டான். திருமலை சிறிது நின்றார்.

"நானும் வரேன், வீட்டைக் காமிக்கிறியா?" என்றார்.

"வாங்க சார், காமிக்கிறேன்" என்று பெருமையாக அவருக்கு முன் நடந்தான்.

இரண்டு மூன்று தெரு கடந்ததும், "அதோ அந்த சந்துதான் சார்" என்றான்.

"அடி வாங்க வைப்பீங்களா சார் அவனுக்கு?" என்றான் மறுபடியும். எத்தனை ஆசை அவனுக்கு!

திருமலை பேசவில்லை.

"இவங்கதான் சார் அவன் அம்மா" என்று எதிரே வந்த ஒரு அம்மாளைக் காட்டினான்.

"ஏண்டா குழந்தே! பள்ளிக்கூடம் விட்டாச்சா?"

"விட்டாச்சே, இதோ நட்டுவோட பையி புஸ்தகமெலாம்" என்று அவளிடம் கொடுத்தான்.

"இவங்கதான் எங்க சார். மூணாவது சார்" என்று அறிமுகப் படுத்தினான்.

திருமலை கும்பிட்டார்.

"வயித்து வலின்னு ஓடி வந்தான் குழந்தை. புஸ்தகப் பையைக் கூட

வச்சுட்டு வந்துட்டேன்னு அழுதான். அதான் எடுத்துண்டு வரலாம்னு கிளம்பினேன்” என்றாள் அம்மா.

“இப்ப தேவலையா?”

“தேவலை, தூங்கறான்.”

திருமலை திரும்பி விட்டார்.

வழி காட்டின பையன், “ஏன் சார், நீங்க ஒண்ணும் சொல்லலெ நட்டு அம்மாகிட்ட” என்று நமுட்டுச் சிரிப்பு சிரித்தான். அவனுக்கு ரொம்ப ஏமாற்றம்.

“சொன்னா அடிக்க மாட்டாங்களா”

“அடிச்சாதான் சார், நாளைக்குப் பொய் சொல்லாமல் இருப்பான்.” “நாளைக்கு அடிச்சுக்கலாம் போ, நீ போ வீட்டுக்கு” என்று அனுப்பி விட்டு விடு விடு என்று நடந்தார்.

பையன் முகம் இன்னும் அவர் கண்ணில் சுளித்தது. பத்மாவின் பத்து விரல்களும் அழுத்திப் பிழிந்து நசுக்க வேண்டும் என்று அவர் கன்னங்கள் புருபுருவென்று பரந்தன. பயமும் தினவுமாக வேகமாக நடந்தார்.

அமுதசுரபி தீபாவளி மலர், 1980

# ஆடை

. . . ராமா . . . ராமா . . . ராமா . . . சகிக்கலையே . . . கண் கொண்டு பார்க்க முடியறதா இதை? பொம்மனாடியா இவ!

— தேவடியா அவளுக்கென்ன?

— தேவடியா எல்லோரும் இருக்கா. அதுக்கா இப்படியா மேல் துணிகூட இல்லாம மேடை மேலே வந்து ஆடுவ?

— துணியிருக்கு.

— துணியா இது? என்னமோ காக்காப் பொன் மாதிரி இருக்கு . . . இவ பொம்மனாட்டியா? கலியேதான் வந்து கூத்தாடறது இப்படி! . . . கொட்டகையே அமளிப்படறது! என்ன சீட்டி! என்ன ஊதல்! குரங்கு கள்ளைக் குடிச்சாப் பலன்னா தலைசுத்தி ஆடறது! பொம்மனாட்டிங்கள்ளாம் தலையைக் குனிஞ்சுனுட்டா . . . பொம்மனாட்டிங்கற வார்த்தைக்கே அவமானமா வந்திருக்கா இந்த தடிச் சிறுக்கி . . . இப்படி வந்து ஆடினா டிக்கட்டு கிடைக்கலே கிடைக்கலேன்னு திரும்பிப் போறது அதிசயமா? . . . வண்டி வண்டியான்னா கொட்டகை வாசல்லே அவுத்தும் போட்டுக் கிடக்கு. நெல்லு வித்த பணம் இங்கே வந்து இப்படி அவிழாம என்ன பண்ணும்? இப்ப நாலு தீவட்டிக் கொள்கைக்காரன் கிளம்பினான்னா பக்கத்துலே ஒரு கிராமம் மிச்சம் வைக்காம திருமாங்கல்யமும் தோடுமாச் சுருட்டிண்டு வரலாம் . . .

0 0 0

— பாரு கூட்டத்தை; வெளியிலே வரதுக்குக் கால் மணி ஆயிடுத்து. கொட்டகையிலே உட்காந்து புலம்பினயே.

— இதைப் பாத்தா, பொம்மனாட்டி ஜன்மம், பத்துக் கை போறலியே அடிச்சுக்கறதுக்குனு ஆங்காரப்படறது பத்துக் கண் போறலியேன்னு ஆம்பிளை ஜன்மம் தவிக்கிறது . . . கூட்டம் நெறியாம என்ன பண்ணும்? . . . லச்சணமாத்தானிருக்கா; கையும் காலும். அச்சாரம் கொடுத்து பண்ணச் சொன்னாப்பல . . . சந்தனக் கட்டை மாதிரி பள பளன்னு உருச்சியும் திரட்சியுமா . . . ரம்பை திலோத்தமை மாதிரி

அப்ஸரஸாத்தான் இருக்கா . . . ஆனா இப்படியா மானம்கெட்டு வந்து ஆடணும். நினைச்சாலே உடம்பு குன்னி உள்ளே போறது.

0

— இப்படி ஒரு நாளைப் பார்த்தாப்போல இரண்டு மணிக்கு வந்து கதவை இடிக்கிறேளே. தர்ப்பைக் கட்டு கையைக் கிழிக்கக் கிழிக்க சம்பாதிச்ச காசெல்லாம் இப்படிக் கொண்டு அழிக்கணுமா? அதுதான் ஒரு நாளைக்குப் பார்த்தாச்சே தரித்திரத்தை . . . யாராவது சிரிக்கப் போரா . . . எல்லோரும் பார்க்கறான்னு நாம பார்க்கிறதா? வேதாத்யயனம் பண்ணினதெல்லாம் தவக்களைக் கத்தல் தானா? வைதீகாள்ளாம் இப்படி நாடகக் கொட்டகையிலே போய் ராக்கண் முழுச்சா, வாழ்ந்தாப் போலதான் இருக்கும். லோகத்திலே நாடகம்போட சரித்திரமா இல்லை? சாவித்திரி சத்தியவான் இல்லையா? சகுந்தலை இல்லையா? ருக்மாங்கதா இல்லையா? . . . ஆனா இவ தாராசசாங்கத்தைன்னாப் பிடிச்சு ஊரையே பைத்தியமா ஆட்டி வைக்கிறா! நாளைக்கு இருட்றதுக்கு முன்னாடி உள்ள வந்துடுங்கோ, அப்புறம் கதவைத் திறக்கமாட்டேன். அப்பா ஐயான்னாலும் . . . என் மானம் போறது . . . ஏண்டி நாடகம் ஒரு நாள் தவர்றதில்லை போலிருக்கேன்னு ஒரு சிரி சிரிச்சா மேலாத்துப் பாட்டி . . . எனக்கு ராமபாணம் போட்டாப்போல இருந்தது . . . வாண்டாம் . . . வாண்டாம் . . . பேசாம நிக்கிறேளே. போகலைன்னு ஒரு வார்த்தை சொல்லுங்களேன். கொட்டகையில் இருக்காக்கும் மனசு பிராணன் எல்லாம் . . . ஈசுவரி . . . இந்தப் புருஷப் பிறப்புக்கெல்லாம் கொஞ்சம் விவேகம் கொடுடி பரதேவதை!

— பாரும்யா பைத்யம்னாலும் இப்படியா புடிக்கும். ராத்திரி முழுக்கக் கொட்டகையிலே உட்காந்திருக்கான். இப்ப வந்து மத்யானம் ஒரு மணிக்கு வந்து உட்காருகிறான். அஞ்சரை மணி வரையில் பெயர்றதில்லை. பார்க்கிறதைப் பார்த்தா கழுத்து ஒடிஞ்சு போயிடும் போலிருக்கு!

0 0 0

— அலமேலு இந்த ஜன்னல் கதவை மூடு . . . எம்பிஎம்பி நாலு மாசமாப் பாக்கிறாரு பாவம் . . . வாண்டாம், ஒரேயடியா புழுங்குது . . . திறந்துவிடு ஜன்னலை . . . எழுந்திருச்சு உட்காந்திட்டாரே . . . பாகவதர் கிட்ட சொல்லணும். நல்ல உபகதையாய் சேத்துக்குவாங்க . . .

0 0 0

— வாங்க.

— கூப்பிட்டேளாமே.

— ஆமா உட்காருங்க . . . ரொம்பநாளா மனசுலே இருந்துகிட்டே இருக்கு. ஆனா சாமி என்ன நெனச்சுக்குவாங்கோளோன்னு பயமாகவும் இருந்தது.

— நான் காத்துண்டு தபஸ் பண்ணிண்டு இருக்கேனே பார்க்கலையா? இதெல்லாம்.

— ஒண்ணுமில்லே பத்தாறு . . . சாமி பத்து முழம்தானேகட்றது. ஒன்பது முழமா?

— இதெல்லாம் . . .

— ரொம்ப நாளா ஆசை . . . சாமி இங்கேயே இந்தப் பத்தாறைக் கட்டிக்கணும். அம்மாவுக்கு இந்தப் புடவையைக் கொண்டு சேத்துப்பிடணும்.

— இதெல்லாம் . . . வந்து . . . என்னத்துக்கு இதெல்லாம் . . . அ . . .

— ஒண்ணுமில்லே. ரொம்ப நாள் ஆசை. சாமி நிறைவேத்தணும். நான் கண் குளிரப் பார்க்கணும் — இந்த உள்ள போய் கட்டிக்கலாம் உடுத்திக்குங்க . . . நான் இதோ உள்ளே போயிட்டு வந்துடறேன்.

— பஸ்ட்க்ளாஸ் குண்டஞ்சிப் பத்தாரு . . . ஐயோ . . . என்ன மனசு—தாஸியானாலும் அப்படி பிராமணாளைக் கூப்பிட்டு கௌரவ புத்தியோட இப்படி ஆதரிக்கணும்னு யாருக்குத் தோணும்! உடை தகடு மாதிரி இருக்கு . . . கொசுவறதுக்கு வழவழன்னு . . .

— உடுத்தியாயிடுத்தா! ஆகா . . . என் ஆசை எல்லாம் நிறைவேறித்து . . . சாமி உடம்புக்கு பஞ்ச கச்சம் கண்ணைப் பறிக்குது. . . என்னென்னமோ பேத்தறேனே — நமஸ்காரம் பண்றேன் . . . ஆசீர்வாதம் பண்ணணும்.

— அடடா இதெல்லாம் . . . நான் ஒரு நாள் கூட ஆட்டத்துக்கு வரத் தவர்றது கிடையாது.

— பார்க்கிறேனே முதல் சீட்டு ரண்டாவது சீட்டுக்குப் பின்னாடியே போகமாட்டீங்களே.

— அதுவும் அந்த . . . ஐயோ . . . நினைச்சாலே புளகாங்கிதமாறது . . .

— சாமிக்கு ரொம்ப புடிச்சிருக்குன்னு தெரியும். சாமியைப் பார்த்தேனே மேடையிலேர்ந்து.

— பார்த்தேளா! என்னையா!

— அப்ப . . . இப்ப கொஞ்சம் வெளியிலே போகவேண்டியிருக்கு . . . இந்தப் புடவையை அம்மாகிட்ட சேர்க்கணும்.

— பேஷா . . . என்ன மனசு! என்ன . . . மனசு! — ஒரே ஒரு வார்த்தை இனிமே நீங்க எதித்த வீட்டுத் திண்ணையிலே வந்து உட்கார்ந்து அப்படியெல்லாம் பார்க்கப்படாது.

— இனிமே அங்கே என்ன வேலை எனக்கு?

— ஸ்வாமியை வேணுங்கிறபோது கூப்பிட்டு அனுப்பிக்கிறேன்.

— வீடு தெரியுமோ?

— தெரிஞ்சுக்கறதா கஷ்டம்?

— எனக்கு என்ன சொல்றதுன்னு தெரியல.

— நான் சொன்னது மாத்திரம் ஞாபகம் இருக்கணும்.

— ஞாபகமா! கூப்பிட்டனுப்பிச்சா வரணும்னு சொன்னது மறக்குமா? . . .

— அதைச் சொல்லல்லே . . . இனிமே இப்படித் திண்ணையிலே வந்து பார்க்கப்படாது.

— இனிமே அங்கே என்ன எனக்கு?

— அதுதான் . . . அப்ப . . .

— வெளியிலே புறப்பட்டுண்டிருக்காப் போலிருக்கு.

— க்கும் . . .

0 0 0

— அங்க போய் இளிச்சிண்டு நின்னேளாக்கும் காணாததைக் கண்டாப்போல. இந்தப் புடவையையும் நீங்களே கட்டிக்கங்கோ.

0 0 0

— அந்தப் பத்தாறை விடமாட்டேங்கறேன் விட மாட்டேங்கறேன்னு நாலு வருஷம் கரிச்சுக் கொட்டினியே என்னை. அது கிழிஞ்சு எட்டு வருஷமாச்சு . . . இன்னும் அந்தப் புடவையை விடமாட்டேங்கறயே.

— ரயில்லேயும், பஸ்ஸிலேயும் போட்டுத் தேய்க்கறதுக்கு இதுதான் சரியாயிருக்கு.

— அதுதான் சொல்றேன். தஞ்சாவூருக்குப் போறேங்கிறயே. அங்கே ஆஸ்பத்திரி வாசல்ல துணியை விரிச்சிண்டு பிச்சை வாங்கறாளாம், துரைக்கண்ணு. அவ கண்ணிலே படப்பொறெ . . . அவ வயிறு எரியப் போறது.

— பிச்சை வாங்கறாளா? துரைக்கண்ணா?

— ஆமாம்.

கொட்டகை போச்சு; சொத்தையாவது மிச்சப்படுத்திக்கப்படாதா?

— சினிமா, ட்ராமாவை வெரட்டித்து. சாராயம் சொத்தை விரட்டித்து.

— அதுக்காக மானங்கெட்டுப் போய் பிச்சையா வாங்கணும்! எதுக்கும் துணிஞ்ச லண்டி.

0 0 0

— கோயில் பெரிசாத்தான் முழங்கறது . . . மீனாட்சி அம்மன் கண்குளிரக் குளிரத்தான் நிக்கறா . . . பிரகாரத்திலே இப்படிக் கால் வைக்கமுடியாமே இருக்கே . . . பிச்சை போட்டு மாளலையே . . . கோயிலையே வீடா வச்சுனுட்டுத்து எல்லாம் . . . எங்கே பார்த்து நிக்கறேள் . . . ஒவ்வொரு பிராகாரமா இப்படி நின்னுண்டேயிருந்தா . . . தீபாராதனை முடிஞ்சு போயிடும். என்ன பிரமை பிடிச்சாப்பல நிக்கறேள் . . . வாங்க இப்படி. என்னாலே நின்னு நின்னு நடக்க முடியலே. தள்ளலெ எனக்கு.

— அதோ பாரு!

— எதை?

— பாவம் . . . மேல் துணி போனது கூட தெரியாம கிடக்கே . . . கண் வேற தெரியலை போலிருக்கு . . . இப்படி உடம்பிலே துணியில்லாம . .

. யாராவது கவனிக்கப்படாதா? தாயே மீனாட்சி . . . வாங்களேன்.

இருடி.

– என்ன இருடி?

– நன்னா பாரேன் . . . துரைக் கண்ணு மாதிரி இருக்குல்லே?

– யாரு? துரைக்கண்ணா? . . . இது எலும்பும் தோலுமான்னா இருக்கு . . . இப்படி தெருவிலே இழுத்துண்டு சாகப் போறது . . . இதுவா?

துரைக்கண்ணு தாண்டி இது. நன்னாப் பாரு.

– கிட்ட ஏன் போறேள் . . . அரைத்துணி கூடப் போனது தெரியாம தவிக்கிறது அது. இந்தக் கண்ராவியைக் கிட்ட வேற போய் பார்க்கணுமா? . . . வாங்களேன் இப்படி . . . என்ன.

– இங்கே வாயேன்.

– நான் வரலே.

– இங்க வந்துபாரு . . . வகிடு கிட்ட ஒரு வடு இருக்கு பாரு . . . தழும்பு . . . துரைக்கண்ணு தாண்டி.

– என்ன!

– இந்தத் தழும்பே சொல்றது. பாகவதருக்குன்னா இவ அபிமானமா விளங்கினா . . . பாட்டு சொல்லிக் கொடுக்கிறபோது அபஸ்வரம் பேசித்தாம் . . . பாக்கு வெட்டியை நெத்தியைக் காட்டி அடிச்சாராம் . . . ரண்டு மூணு வாரம் நாடகமே அப்ப நின்னிருந்தது . . . அந்தத் தழும்பு தான் சந்தேகமேயில்லை . . . இதைப்பாரு . . . இந்த . . . இதைப்பாரு . . . துரைக்கண்ணு . . . நிமிர்றா பாத்தியா . . .

– நன்னாப் பாருங்கோ . . .

– சீச்சீ . . .

– என்ன கண்ராவி இது . . . கையை நீட்றது பாருங்கோ . . .

– பையிலிருந்து ஆறு முழத்தை எடேன். இப்படி பிறந்த மேனிக்குக் கிடந்து தவிக்கிறதே பாவம் . . .

– என்னத்துக்காக?

— எடுத்து மேலே போடுடி. பாவம் . . . போடு சொல்றேன். நீயே போடு.

— நீங்களே போடுங்கோ.

— நீ போடு.

— இப்ப மாத்திரம் . . . இந்தா தொலைச்சுக்கோ . . . நான் இருக்கேன் . . . கொஞ்சம் காபி வாங்கிண்டு வந்து ஊத்துங்கோ குவளையிலே . . .

— கூஜாவை எடு.

— சுருக்க வாங்கோ. எனக்கும் சேர்த்து வாங்கிண்டு வாங்கோ . . . தலை கிறுகிறுங்கறது. நீ கழிச் . . . கோவில்லேயும் வந்து இப்படி

இழுத்துண்டு கிடக்கயே . . .

— நீங்கதான். போட்டீங்களாம்மா துணி . . .

— ஆமாம். இப்படி உணக்கையில்லாம கிடக்கே.

— பாவம் . . . நல்லா கட்டி விட்டாத்தான் நிக்கும்மா . . .

— கட்டித்தான் விடணும் . . . இப்படி சொரணையில்லாம கிடக்கே.

சுதேசமித்திரன் தீபாவளி மலர், அக்டோபர் 1956

# கிழவரைப் பற்றி ஒரு கனவு . . .

“இருபத்தஞ்சு வருஷம் உன்னை வளர்த்து, ஆளாக்கி, பல்லெக் காட்டாத இடமெல்லாம் காட்டி இளிச்சு, ஸ்காலர்ஷிப்பெல்லாம் வாங்கிக் கொடுத்துப் படிக்கவச்சதுக்கெல்லாம் நல்ல கைம்மாறு கிடைச்சுட்டுதுன்னு எழுதிக் கொடுத்துட்டேன்.” கிழவர் இடது கையை ஆட்டி ஆட்டி வெதும்பினார். வலது கை சாப்பிட்டுக்கொண்டிருந்தது. ஓரிரண்டு முறை கண்ணைத் துடைத்துக்கொண்டார். துயரத்தினாலோ, எண்பத்துமூன்று வயசில் கண்படும் அவதிகளாலோ? தெரியவில்லை. இரண்டுமிருக்கலாம்.

இடம் என் வீடு. அவர் நாளைக் காலை ரயிலில் ஊருக்குப் போகிறார். ஒன்றரை நாள் பயணம். சாப்பிட வந்திருக்கிறார்.

“இங்க சாப்பிடறத்தைப்பத்தி ஒண்ணுமில்லெ. ஆனா அவன் என்ன சொல்லுவானோ? மாட்டுப் பொண் என்ன சொல்லுவாளோ? அவனுக்கு ரொம்ப க்ருக்கட் மைண்ட். ஒரு வார்த்தை சிரிச்சுண்டு, சுமுகமாய்ப் பேசத் தெரியாது. தெரியுமோ என்னவோ, என்கிட்ட பேசினது கிடையாது. நான் இங்கு வந்து சாப்பிட்டேன்னு தெரிஞ்சுதோ என்ன சொல்லுவானோ தெரியாது. கழுத்தைப் பிடிச்சுத் தள்ளினாலும் தள்ளிப்பிடுவான். அதனால்தான் ஊருக்குப்போறதுக்கு முன்னால இங்க ஒரு வேளை மட்டும் சாப்பிடறதுன்னு வச்சுண்டேன்.”

அவர் பேசியது தன் பிள்ளையைப் பற்றி. பிள்ளை ஒரே பிள்ளை. சர்க்காரில் பெரிய வேலை. ரொம்பப் பெரிய வேலை. தரையிலே கிடந்தவன் பாயில் ஏறினான் என்பார்களே அந்தக் கதை. அவர் எலிமெண்டரி பள்ளிக்கூட வாத்தியார். டில்லியில் பெரிய பெரிய பதவிகளில் அதிகாரக் குரல் கொடுக்கும் பல வாத்தியார் பிள்ளைகளில் ஒருவன் அந்தப் “பையன்”; அதாவது ஐம்பது ஐம்பத்திரண்டு வயது பிள்ளை.

கிழவருக்கு மனைவி இல்லை. அந்தப் பையனுக்குப் பன்னிரண்டு வயதாகும்போது இறந்துவிட்டாளாம். ஒன்றிக்கட்டையாக இருந்து பையனுக்குச் சமைத்துப் போட்டு வளர்த்திருக்கிறார். இரண்டாம் தாரம் வந்தால் என்ன ஆகுமோ என்ற கவலை. மீண்டும் பிரம்மச்சர்யத்தை மேற்கொண்டு, கெஞ்சாத கெஞ்செல்லாம் கெஞ்சி ஊராரின் உதவி, சர்க்கார் உதவி எல்லாம் வாங்கி ஒரே குழந்தையை எம்.ஏ. வரையில்

படிக்கவைத்துவிட்டார். அந்தப் பையனைத் தென்னை மரத்தில் காய் வரையில் தாங்கவேண்டிய அவசியம் இல்லை. படுசூரபுத்தி. தானே தன் முயற்சியால் உச்சி வரையில் ஏறத் தொடங்கினான்.

அவனுடைய வருங்காலத்தையும் அறிவையும் பார்த்து, ஒரு பிரபல நடு வயது சர்க்கார் புள்ளி அவன் எலிமெண்டரி வாத்தியார் பிள்ளையாயிருந்தாலும், தன் பெண்ணைக் கொடுத்து, கையும் கொடுத்து, உச்சிக்குக் கொண்டுவர தன் பங்கைச் செய்தார். அந்தக் கலியாணம் ஆன நாளிலிருந்து இந்தக் கிழவர் பையனோடு இருந்ததில்லையாம். வாத்தியார் வேலையை அக்கறையாகப் பார்த்துக்கொண்டு வந்திருக்கிறார். பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும் வேறு பள்ளிக்கூடங்களில் வேலை பார்த்திருக்கிறார். இயன்றவரையில் சுதந்திரமாக இருப்போம் என்ற இயல்பு. அறுபத்தைந்து வரையில் மாறி மாறிப் பல பள்ளிகளில் வேலை பார்த்தார்.

'பிறகு, மேலும் யாரும் வேலை கொடுக்கவில்லை; ஒரு கோயிலில் கணக்கு எழுதினாராம். ஒரு கடையில் கணக்கு எழுதினாராம். எழுபத்தைந்து வயதுக்குப் பிறகும் யார் வைத்துக்கொள்வார்கள்? வாத்தியார்கள் பெரியவர்கள் என்று சர்க்கார் தரும் சிறிய பென்ஷனை வைத்துக்கொண்டு காலத்தை ஓட்டி வந்தாராம். அப்படி ஒரு ஏழெட்டு வருஷம் – இல்லை, சரியாக எட்டு வருஷம் (கிழவர் எண்ணிக்கை தவறுவதில்லை) இரண்டு மாதம் முன்பு, தாளாமை வந்து தானே சமைத்துச் சாப்பிட முடியவில்லையாம். பிள்ளைக்கு எழுதினாராம். நான் வந்து உன்னோடு இருக்கிறேன் என்று. பிள்ளைக்குக் கல்யாணம் ஆன பிறகு இருபத்தாறு வருடங்களில் (எண்ணிக்கை இன்னும் தவறவில்லை) இரண்டே இரண்டு தடவை பிள்ளையோடு வந்து தங்கியிருக்கிறாராம். ஒரு தடவை ஒரு மாதம். இன்னொரு தடவை பதினெட்டு நாள். எண்பத்து மூன்று வயதானபின் தனியாக இருப்பது சரியில்லை என்று பிள்ளைக்கு எழுதினாராம் – மூன்று கடிதம் – பதில் இல்லை. எழுத நேரம் இல்லைபோலும் என்று சொல்லி ஒரு சின்ன பாத்திர மூட்டையுடனும் ஒரு சின்ன டிரங்கு பெட்டியுடனும் ரயிலேறி வந்துவிட்டாராம்.

வந்த மறுநாளே என் வீட்டுக்கு வந்தார். யாரோ தெரிந்த முகமாக இருக்கிறதே என்று நான் தயங்குவதற்குள் என்னை ஞாபகப்படுத்தத் தொடங்கினார். நான் சின்னப் பையனாக இருந்தபோது, எலிமென்டரி வாத்தியார்களைக்கூட ஊருக்கு ஊர் மாற்றல் செய்யும் சர்க்காருடைய

தயவில் எங்கள் ஊருக்கு மாற்றலாகி வந்து ஒரு மூன்று வருஷம் எதிர்வீட்டில் குடியிருந்தது – கிட்டத்தட்ட நாற்பது வருஷத்திய பழைய செய்தி.

அப்போது அந்தப் பையனுக்கு ஏழெட்டு வயதிருக்கும். அந்த அம்மாளும் உயிரோடு இருந்த காலம். நானும் சின்னப் பையன். அவன் எனக்கு விளையாட்டுத் தோழனாகவும், அவர் என் தகப்பனாரின் நண்பராகவும், தாயார் என் தாயாரின் பேச்சுத் தோழியாகவும் மூன்று வருஷம் கழிந்தது. பிறகு திடீர் என்று வேறு ஊருக்கு மாற்றலாகி விட்டது.

ஒரு எலிமென்டரி வாத்தியார் மூன்று வருஷத்திற்கு மேல் ஒரு ஊரில் இருந்தால் வேரூன்றிக்கொண்டு லஞ்சம் கிஞ்சம் வாங்கி லட்சப் பிரபுவாக ஆகிவிடுவாரோ என்ற பயத்தில் சர்க்கார் அவரை மாற்றிவிட்டது. மாற்றலாகிப் போனவர்கள்தான். பிறகு சேதியில்லை. ரயில் சிநேகம் மாதிரி. திடீர் என்று நாற்பது வருஷம் முன்னால் பார்த்த, முப்பது வருஷம் முன்னால் பார்த்த முகங்கள் காரணமில்லாமல் நினைவுக்கு வருவது போல, இவர்கள் முகமும் ஓரிரு முறை வந்ததுண்டு எனக்கு. அந்த மாதிரி சம்பவங்களில் இந்த முகங்கள் எல்லாம் இப்போது எங்கிருக்கின்றனவோ, இருக்கோ இல்லையோ என்ற ஒரு எண்ணமும் வருவதுண்டு. “உங்க தகப்பனார் இப்ப . . . ” என்று சிலர் என்னிடம் ஆரம்பிப்பார்கள் . . . “ஊர்ல இருக்கார் – வயசாயிடுத்து” என்று நான் விழுந்து முந்திக்கொள்வேன். அவர்கள் குரலில் சந்தேகம் தீர்ந்த களிப்பு கேட்கும். முகத்தில் ஒரு அசட்டுச் சுதாரிப்பு நிழலாடும்.

கிழவர் வந்ததும் வராததுமாக அதற்கெல்லாம் இடம் கொடுக்காமல் தானே அறிமுகப்படுத்திக்கொண்டார். அவருடைய நாற்பது வயது முகம் நினைவு வந்தது. குடுமி, சிகப்புக் கடுக்கன், மாநிறம், ஒரு தினுசான எப்போதும் மலர்ந்த புன்னகைக்கிற முகம். இப்போது? உடல் கருத்து ஒரு சின்னக் கூனல். பெருத்த தலை. கருவிழியிருந்த இடத்தில் வெள்ளை பூப்பு. சுருக்கம் விழுந்த தோல். பல் போன வாய். அவர் மனைவி இறந்த செய்தியும் இப்போது அவர் சொன்ன பிறகுதான் தெரிந்தது. அவர் பிள்ளை இந்த ஊரில் பத்து வருஷமாக இருக்கிறாராம். உத்தியோகத்தைக் கேட்டதும் எனக்கு மலைத்துவிட்டது. ரொம்ப ரொம்பப் பெரிய உத்தியோகம்.

“இந்த ஊரிலா! பத்து வருஷமா!” என்று வாயைப் பிளந்தான்

“ஆமா. ஜாகைகூட இதோ தான். ரெண்டு ரோடு தாண்டி அடுத்த ரோடு.”

“அப்படியா? நான் இங்கே இருக்கிறது எப்படித் தெரியும் உங்களுக்கு?”

“நான்தான் கேட்டேன். நீங்க இந்த ஊரில் இருக்கிறது தெரியும். அட்ரஸ் விசாரிக்க முடியுமோன்னேன். உங்க ஆபீஸ்லே யாரையோ விசாரிச்சு இன்னிக்குக் காலமே சொன்னான்.

கிழவர் நாற்பது வருஷக் கதையைக் சொன்னார்.

“இன்னமே இங்கே இருக்கிறதாக வந்துட்டேன். தனியா சமாளிச்சுப் பார்த்தேன். முடியல. வந்துட்டேன்” என்றார்.

“நீங்க தனியா வந்திருக்காப்பல இருக்கே. உங்க பையனும் வரப்படாதா?”

“வருவன், வருவன். ஒரு நாளைக்கு வருவன். நீங்கள்ளாம் சின்னப்போ சேர்ந்து விளையாடினவாளாச்சே. கட்டாயம் வருவான்” என்றார் கிழவர்.

ஒருமணி நேரம் பேசிவிட்டு விடைபெற்றுக்கொண்டார். நான் கொண்டு விடுவதாகச் சொன்னேன், “அதெல்லாம் வாண்டம். நான் போயிடுவேன்” என்று அவசர அவசரமாகக் கிளம்பிவிட்டார்.

எண்பத்துமூன்று வயதில் கண்தான் சிறிது பழுது. காது படு கூர்மை. கன்று, பசுவெல்லாம் காதை உயர்த்துவது போல, காது சின்ன ஓசைக்குக்கூட அந்தப் பக்கம் திரும்பும்.

அவர் போன பிறகு அந்தக் காலத்து முகங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தன. இப்போது காரணம் தெரியாமல் வரவில்லை. நானே தருவித்துத் தருவித்து நினைவை ஓட்டினேன். நாற்பது நாற்பத்தைந்து ஆண்டுகள்! அந்தப் பையனோடு விளையாடியதெல்லாம் ஞாபகம் வந்தது. என்னை விட வயதில் சற்றுச் சிறியவன். ஒரு பெரிய இலாகாவுக்கு அதிபதி இப்போது. அந்தச் சின்ன வயது முகம். அவன் குறுகுறுப்பு. முகக்களை . . .

அது சரி, பத்து வருஷமா, நானும் தான் இந்த ஊரில் இருக்கிறேன். நான் பார்த்ததில்லை அவனை. பார்த்திருந்தாலும் அடையாளம் புரிந்திராது. இந்தக் கிழவரின் பிள்ளை என்றெல்லாம் சேர்த்துப் பார்க்க எந்தச் சுவடும் இல்லை.

கிழவர் பிறகு ஒரு மாதம் வரவில்லை.

திடீர் என்று ஒருநாள் வந்தார். கொண்டுவந்த விபூதி தீர்ந்துவிட்டதாம், ஒரு பொட்டணமாகக் கட்டி வாங்கிக்கொண்டு போனார்.

"நான் கொண்டு விடட்டுமா?"

"பரவாயில்லே. நான் போய்க்குவேன்" என்று நடையைக் கட்டிவிட்டார்.

மூன்று வாரமாயிற்று. ஒருநாள் வந்தார். வந்ததும் வராததுமாக, "இப்ப ரொம்ப மனசு ஒடிந்துபோய் வந்திருக்கேன்" என்றார்.

"என்ன?"

"தாங்க முடியாத ஹிம்சை."

"என்ன?"

"நீ புறப்பட்டு ஊருக்குப் போ என்கிறான் பிள்ளை."

"ஏன்?"

"அழைக்காமல் வந்துவிட்டேனாம்."

"என்னது?"

"ஒரு வாரமா பிடுங்கறான் – எப்ப ஊருக்குக் கிளம்பப் போறேன்னு."

"எந்த ஊருக்கு?"

"ஏதாவது ஊருக்கு. எனக்கு ஏது ஊர்? மெட்ராஸ்லே ஒரு ரூம்லே இருந்தேன். காலி பண்ணிண்டு வந்துட்டேன் – இவன் கிட்ட இருக்கலாம்னு. நான் உன்னைக் கூப்பிட்டேனா? உன்னை யார் வரச்சொன்னா? இம்மீடியட்லி நீ ஊருக்குப் போகணும்கறான்."

"நீங்க இருந்தா என்னவாம், ஒரு பிள்ளைதானே அவர்."

"நான் இருக்கறது சங்கடமாயிருக்காம். நீங்க பாட்டுக்கு இன்னும் இருபது வருஷம் இருந்தா, நான் சமைச்சுப் போட்டுண்டிருக்க முடியுமா என்கிறாள் மாட்டுப் பொண்ணு."

"என்னது!"

"உங்களுக்கு அதிர்ச்சியாயிருக்கு. எனக்கும் அப்படித்தான் இருந்தது. இப்படி ஒரு பொம்மனாட்டி பேசுவாளோ? அதைக் கேட்டப்பறம், சரி,

போறேன். டிக்கெட் வாங்கிக் கொடுன்னேன். பணத்தை யெடு. புக் பண்ணிண்டு வரேன்னான். நூத்தம்பது ரூபா கொண்டு வந்திருந்தேன். நூறு ரூபாய்க்குச் சில்லரை வேணும். அதுக்குத்தான் வந்தேன்.

"போ போன்னுதான் விரட்றா. டிக்கெட்டு கூட வாங்கி கொடுக்கப்படாதா இத்தனை பெரிய வேலையிலே இருக்கிறவர்?"

"நானும் அதைத்தான் கேட்டேன். நீங்க ரெண்டு மாசம் சாப்பிட்டதுக்கு பணம் கேக்கலியே? டிக்கெட்டுக்குக்கூட நாங்க பணம் கொடுக்கணுமாங்கறா மாட்டுப்பொண்ணு."

எனக்குத் திடீரென்று சிரிப்பு வந்தது. அடி வயிற்றில் புகைந்தது.

என்ன இது!

இப்படிப் பெற்றோர்களை நடுத்தெருவில் விடும் பல 'கேஸ்'களை நான் பார்த்திருக்கிறேன். கணக்குப் பார்த்தால் அமைதிக்கும் இயற்கைக்கும் இருப்பிடம் என்று சொல்லப்படும் கிராமங்களில்தான் இது அதிகம். நகரங்களில் இவ்வளவு மோசமாக நான் பார்த்த ஞாபகம் இல்லை. சின்னப் பையனாக இருந்தபோது இந்த மாதிரி இரண்டு மூன்று நபர்களை பார்த்திருக்கிறேன். அவர்கள் தெருவில் போகும்போது, "மாதாவை ஒரு நாளும் மறக்க வேண்டாம்" என்று ஒரு கூச்சல் ஜன்னலண்டை போட்டுவிட்டு, முகம் திரும்பும்போது மறைந்துகொள்வேன். தெருவில் எதிர்ப்படுகிற ஒரு பிள்ளையைப் பார்த்து, "அன்னையும் பிதாவும், முன்னெறி தெய்வம்" என்று சத்தம் போட்டுக்கொண்டே நடப்பேன்.

இதை அடிக்கடி செய்து, என் தகப்பனார் காதில் விழுந்து ஒரு தடவை அவர் கண்டித்து, நான் அதைக் கேட்காமல் மறுபடியும் செய்ததற்காக, அவர் என் கண்ணில் கலிக்கம் போட்டதுண்டு. இப்போது எனக்கு வயதாகிவிட்டது. ரொம்பப் பெரிய உத்தியோகத்தில் இருப்பவர், இந்த அநாகரிகம் இழைப்பாரா என்று யோசிக்கத் தொடங்கினேன். திண்ணையில் உட்கார்ந்திருந்த ஒரு தகப்பனாரை இவர் என்னுடைய சமையல்காரர் என்று ஒரு வெள்ளைக்காரருக்கு ஒரு இந்திய ஐ.ஸி.எஸ். அறிமுகப்படுத்திக்கொண்டே போனதாக அந்தக்காலத்தில் ஒரு கதை உண்டு.

புரோகிதர் அல்லது வாத்தியாரான தகப்பனைத் தகப்பன் என்று சொல்ல வெட்கப்படும் பெரிய பெரிய உத்யோகப் பிராமணப் பிள்ளைகளையும், வயல்காட்டு ஆளான தகப்பனைத் தகப்பன் என்று

சொல்லிக்கொள்ள நாணும் ஷெட்யூல் வகுப்புப் பெரிய புள்ளிகளையும் நான் கண்டதுண்டு. மாறாக அத்தகைய பெற்றோர்களை, கோவணம் கட்டாத குறையாகப் பேணும் பிள்ளைகளையும் பார்த்ததுண்டு.

ஆனால் இரண்டு மாசம் சாப்பிட்ட தகப்பனிடம் சோற்றுக்குப் பணம் கேட்காமல் விட்டால் பெருந்தன்மை என்று கூறுகின்ற கணவன் மனைவியை இனிமேல் தான் பார்க்க வேண்டும். கிழவர் இதைச் சொன்னபோது ஏதோ காரணம் இருக்க வேண்டும் என்று குழம்பத் தொடங்கினேன். கிழவரைக் கிண்டிக் கேட்டேன்.

"ஒரு காரணமும் கிடையாது. நான் அவனோடு இருந்ததே கிடையாது. ரண்டே ரண்டு தடவைதான் முப்பது நாள் பதினெட்டு நாள் இருந்திருக்கேன். அப்ப நான் ஒரு வார்த்தை சொன்னது கிடையாது. ஒரு மனஸ்தாபம் கிடையாது. ஒரு சமயம் நான் சந்தியா வந்தனம் பண்றது, விபூதி இட்டுக்கிறதெல்லாம் அவனுக்குப் பிடிக்கலையோ என்னவோ?"

என்னுடைய மகள் குமுறினாள். இரண்டு நாள் லீவில் வந்திருந்த என் மகன், "தாத்தா, ஒரு அரிவாளைக் கொடுக்கறேன். நீ என் புள்ளையே இல்லேன்னு ஓங்கி அவர் கழுத்தில போடுங்க" என்று கோபத்தில் உதடு துடிக்க வாய் குழற, குரல் கமற ஒரு கத்துக் கத்தினான். நானும் அந்த மாதிரி – அந்தக் காலத்தில் செய்த ஞாபகம் வந்தது. அவனை அடக்க ஐந்து நிமிஷம் ஆயிற்று. "வயசாக வயசாக ஃபீலிங் போயிடுமோ என்னவோ? கடவுள் என்னை இப்படிக் கல்லாங்காய் படாமல் காப்பாத்தணும்" என்று தன் தாயாரிடம் மெதுவாகச் சொன்னானாம். எனக்குக் கொஞ்சம் வெட்கம்தான். வயதானபிறகு, எல்லா அக்ரமங்களும் நடக்கத்தான் நடக்கும், இது உலகப் போக்கு. இதுதான் வாழ்க்கை என்று சொரணை மழுங்கிப்போகிற விந்தையைக் கண்டு வியந்துகொண்டிருந்தேன்.

கிழவர் சில்லரையை வாங்கிக்கொண்டார். போனார். மறுநாள் வந்தார்.

"பதினாலாம் தேதி. ரயில்லே ஸ்லீப்பர் புக் பண்ணியிருக்கானாம். டிக்கெட்டைக் கொடுத்தான். பதினாலாம் தேதி சாயங்காலம் ஆறு மணிக்கப்பறம் இங்க இருக்கப்படாது. ஆறு அடிச்சு மூணாவது நிமிஷம் வாசல்லெ நிக்கணும்னு வேற எங்கியோ பார்த்துண்டு டிக்கெட்டை ஒரு டப்பா மேலே வச்சுட்டுப் போனான்" என்றார்.

"அப்படி என்ன உங்க மேலே கோபம்?"

“ஒரு காரணமும் இல்லெ. தியாஜ கருணை உள்ளவன் கடவுள்னு சொல்வா. இது தியாஜ கோபக் கேஸு” என்றார் அவர். கோபமாகச் சிரிக்கவில்லை. வெறுப்பாக வெதும்பினார். ஒரு டம்ளரில் தண்ணீர் வாங்கிக்கொண்டு சந்தியாவந்தனம் செய்தார். விடைபெற்றுக்கொண்டார்.

என் விளையாட்டுத் தோழன் ஒருநாள் கிழவரோடு வருவான் வருவான் என்று எதிர்பார்த்ததுண்டு. ஆனால் அதற்கும் சமாதானம் செய்துகொண்டேன். டில்லியில் அந்தந்த சம்பளக்காரர்கள் அந்தந்த சம்பளக்காரர்களோடு தான் பேசுவார்கள் என்றும், அந்தஸ்தை இம்மி பிசகாமல் காத்துக்கொள்வார்கள் என்றும், அப்படி ஒருக்கால் அவர்கள் தவறினாலும் மனைவிகள் விடமாட்டார்கள் என்றும் நான் கேள்விப்படுவதுண்டு.

இந்த ஏற்ற இறக்கங்களுக்குப் பிராயச்சித்தமாக கார்னிவல், மேளா என்று ஏதாவது ஆண்டுக்கொடுமுறை கொண்டாடி, வருடாந்திரத் திதிக்கு மறுநாள் முன்னோர்களை மறந்துவிடுவது போல மறந்துவிடுவார்கள் என்றும் கேள்விப்படுவதுண்டு. இதெல்லாம் ஏழை குமாஸ்தாக்கள் பொச்சரிப்பால் சொல்லும் வார்த்தைகள் என்போரும் உண்டு. இந்த ஏற்ற இறக்கம் – அந்தஸ்து – எல்லா ஊரிலும் இருக்கிற செய்திதான். டில்லி இதை ஒரு விசேஷப் பண்பாடாக வளர்த்திருக்கலாம். அதனால் என்ன? என் விளையாட்டுத் தோழன் கிழவரோடு வராதது பற்றி நான் முதலில் கவலைப்படவில்லை. இப்போது அவன் வராமல் இருப்பதே நல்லது என்று பட்டது. என் மகனுக்கு அரிவாள் கிடைத்தால் என்ன ஆகும்?

அன்றிரவு நானும் மனைவியும், மகளும் மகனும் கிழவரின் நிலைமை பற்றி ஒரு கருத்தரங்கு நிகழ்த்தினோம். ஒரே பிள்ளை இப்படி அநாகரிகம் செய்வதற்காக ஏதோ ஆழ்ந்த காரணம் இருக்க வேண்டும் என்று என் கட்சி. ஏதாயிருந்தாலும் ஒரு சாகவிருக்கும் கிழவனை இப்படி நட்டாற்றில் விடுவது அசுரத்தனம் என்பது மக்கள் கட்சி.

நாட்டுப்பெண் இரண்டு மாதம் சமைத்துப் போட்டதைச் சுட்டிக் காட்டியதற்கு அவளுடைய தாளாமை காரணமாக இருக்கலாம் என்று என் மனைவி வாதாடினாள். இந்த நிலையில் என்ன செய்யலாம் என்றும் விவாதிக்கப்பட்டது. கிழவர்கள் விடுதியில் சேர்க்கலாம் என்று மகன் கட்சி. நாமே வைத்துக்கொள்ளலாம் என்று மகள் கட்சி. பிள்ளை நம்மை பழிவாங்குவார் என்ற சந்தேகத்தில் அது கைவிடப்பட்டது. கிழவர்கள் விடுதி அன்பில்லாத பாலைவனமாக கருதப்பட்டது. கடைசியில் இந்தப் பிள்ளை மோசமானவர் என்ற ஒரே தீர்மானத்துடன் டில்லியில் நடக்கும்

எல்லா – சமுக பொருளாதார – அரசியல் கருத்து அரங்குகள் போலவே தீர்மானம் நிறைவேற்றுவதோடு எங்கள் அரங்கும் முடிந்தது.

பதினாலாம் தேதிக்கு இன்னும் நாலுநாள்தான். கிழவர் தினமும் வந்தார். ஒரு பாட்டம் அழுதார்.

ஊருக்குப் போகிற முதல் நாளிரவுதான் சாப்பிட இசைந்தார். சாப்பிட்டார். என் மனைவி பாயசம் சமைத்துப் போட்டாள். அப்போது தான் எழுத்து மூலம்தான் பிள்ளையோடு இரண்டு மாதங்களாகப் பேச்சு வார்த்தை நடக்கும் என்றும், உன்னை வளர்த்ததற்கு நல்ல கைம்மாறு கிடைத்துவிட்டது என்று சற்று முன்புதான் எழுதிக் கொடுத்ததாகவும் கிழவர் இடது கையை ஆட்டி ஆட்டிச் சொன்னார்.

அவர் மறுநாள் ஊருக்குப் போனர். என் மனைவி ஸ்டேஷனுக்குப் போய் ரிசர்வேஷன் பட்டியலைப் பார்த்து அவர் வண்டியைக் கண்டுபிடித்து ஒரு இட்லிப் பொட்டணத்தை வழிக்காகக் கொடுத்துவிட்டு வந்தாள். பிள்ளை அவரை ஏற்றிவிட வந்திருந்தானாம். இவர்தானா உங்கள் பிள்ளை என்று ஒரு கேள்வி மட்டும் கேட்டுவிட்டு அந்தப் பிள்ளையைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வந்துவிட்டாளாம்.

“நான் ஏன் பார்க்கறேன் அந்த மொகரக்கட்டையை!” என்று இறுமாந்து நின்றாள் மனைவி.

அன்றிரவு மகளுக்கு ஒரு சொப்பனம். அந்தப் பிள்ளை மனைவியைப் போட்டு கைத்தடி கொண்டு அடிஅடி என்று அடித்தாராம். அவள் கூச்சல் போட அண்டை வீடெல்லாம் கூடி விலக்கிற்றாம் . . . “இவளுக்காகதான்யா எங்கப்பாவை அப்படிப் படுத்தினேன். திருப்தியா? திருப்தியா, திருப்தியா? என்று மீண்டும், மீண்டும் சாத்தினாராம். கூட்டம் அவரைப் பின்கட்டு முறையாகக் கட்டி உட்கார வைத்ததாம். பிறகு நள்ளிரவில் மூட்டைப்பூச்சி மருந்தைச் சாப்பிட்டுவிட்டு உயிரை மாய்த்துக்கொண்டாராம். ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனபோது “நல்ல வேளையா ஃபுல்லா சாப்பாடு சாப்பிட்டுவிட்டு தின்னீங்க. மூட்டைப் பூச்சி மருந்தை வெறும் வயித்திலே தின்னிருந்தாலல்லவா தெரியும்?” என்று அவர் பிழைத்திருந்ததைப் பார்த்து கேலி பண்ணினான் வார்ட்பாய். அது தற்கொலை முயற்சி இல்லை என்று கேஸை அமுக்கி மூட சக அதிகாரிகள் குசுகுசுவென்று பேசிக்கொண்டார்களாம்.

இதைக் கேட்டு மனைவி சிரித்தாள்.

“அவா ரண்டு பேரும் வாக்கிங் போயிண்டிருக்கா. நான் சித்தை முன்னாடிதான் பார்த்தேன். உங்க விளையாட்டுத் தோழனைப் பார்த்ததே யில்லேன்னேளேன்னு உங்களை எழுப்பலாம்னு பார்த்தேன். நீங்க நன்னாத் தூங்கிண்டிருந்தேள்” என்றாள் என் மனைவி. கனவுதான் நீதிமன்றம் என்று ஒரு கருத்தரங்கு தொடங்கிவிடுமோ என்று எனக்குக் கவலை வந்துவிட்டது.

**தினமணி கதிர், நவம்பர் 1980**

# எருமைப் பொங்கல்

“அப்படி என்ன சார் மட்டமாகி விட்டோம்? எதற்காக இவ்வளவு விஷமம், இவ்வளவு கோணல் உங்களுக்கு? பேச்சென்னமோ வாய் கிழியப் பேசுகிறீர்கள். எல்லோரும் ஒரு குலம், எல்லோரும் ஓரினம் என்கிறீர்கள். இந்த ஹரிஹரய்யர் கூட அர்த்தம் தெரியாமல் பாட்டை நெட்டுருப் போட்டு முணுமுணுப்பாரே – தினம் தினம் நூறு செய்யுட்களை, அதிலே வருகிற இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கேட்டுச் சிரிப்பேன், சிரிப்பேன், எனக்கு மாளாது.

‘அம்பிகையின் கடாட்சம் பெற்றோருக்குக் காடும் வீடும், பகையும் நட்பும், ஓடும் உதடும் ஒன்றாகத்தான் தோன்றும்.’

“விடிய ஒரு ஜாமத்துக்கு எழுந்து, குளித்துவிட்டு, இதைச் சொல்லாமல் அவர் ஹோட்டலைத் திறக்கவும் மாட்டார், வியாபாரத்தைத் தொடங்கவும் மாட்டார். என்ன சமரச புத்தி! என்ன விசாலம்! (அவர் இந்தச் சமரச வாதத்தை எப்படி நடைமுறையில் கையாள்கிறார் என்று நீங்களே தெரிந்துகொள்ள முடியும்! அவர் ஹோட்டலுக்குப் போய், அந்தக் காப்பியை ஒருவாய் குடித்துப்பாருங்கள். காடும் வீடும், ஓடும் உதடும் என்று அடுக்கின கவி, பாலும் ஜலமும் என்பதை ஹரிஹரய்யர் பூர்த்தி செய்து கொள்ளட்டும் என்று விட்டுவிட்டது தெரியும் . . . ஏதோ ஞாபகம் வந்தது, சொன்னேன்.)

“நீங்கள் மனிதர்கள், எதையும் சொல்லவோ, செய்யவோ உரிமையுண்டு, வல்லமை உண்டு உங்களுக்கு! எல்லோரும் ஓரினம் என்று சொன்ன நீங்கள் தானே “சிவப்பு ஓர் அழகு, சூடு ஒரு ருசி” என்றும் பழமொழி கட்டியிருக்கிறீர்கள். இன்றைக்குக் காங்கோவில் ரகளைப்படுகிறது இந்தப் பழமொழி கட்டின சொக்கப்பானைதானே சார்! ஜெர்மனி இத்தாலி எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஜப்பான் மீது அணுகுண்டைப் போட்டானே, அதுவும் இந்தச் சொக்கப்பானைதானே. ஆக என்ன ஆயிற்று? பாம்புக்கும் வாலைக் காண்பிக்கிறது, மீனுக்கும் தலையைக் காண்பிக்கிறது! இதுதானே உங்கள் ஆசாரம், தத்துவம், பண்பாடு! பேஷ்! பேஷ்!”

“என்ன பட்ணம்! என்ன திடீர்னு கோபம் தாபம் எல்லாம் அமர்க்களப்படுகிறது இன்னிக்கி?” கேட்கிறது யார் தெரிகிறதா?

வலங்கிமான். அவளும் எங்களவள்தான். என்னை வாங்கின பிறகு, எங்கள் எசமானர் இருக்கிறாரே ராமச்சந்திர சேர்வை, அவர் எனக்கு ஜோடியாக இருக்க வேண்டுமென்று தஞ்சாவூர் ஜில்லா முழுவதும் சல்லடை போட்டுச்சலித்து, கடைசியில் வலங்கிமானில்போய் இவளை வாங்கிக் கொண்டு வந்தார். கொம்பு, உயரம், பார்வை, பால் கறவை—எல்லாம் தத்ரூபம் என் மாதிரியே. எங்கள் இரண்டு பேரையும் தனித்தனியாகப் புகைப்படம் பிடித்து உங்களிடம் காண்பித்தால், என்னை அவள் என்பீர்கள்! அவளை நான் என்பீர்கள்! போதுமா? அப்படி அச்சாக இருக்கிறோம். அடையாளம் தெரிந்து கொள்வதற்காக அவளுக்கு வலங்கிமான் என்றும் எனக்குப் பட்டணம் என்றும் பெயர் வைத்தார் சேர்வை.

“கோபம் வராமல் என்ன செய்யும்! இங்கே நடக்கிற காரியம் ஒவ்வொன்றையும் பார்த்தால் எனக்கு மனசு கொதிக்கிறது. கத்துகிறேன்!”

“அப்படி என்ன காரியம் நடந்திரிச்சு இப்ப?”

(மன்னித்து விடுங்கள். அவளுக்கு இலக்கணமாகப் பேச வராது. பழக்கம் அப்படி.)

“காரியமா? நீ எருமையிலும் வடிகட்டின எருமையாக இருக்கிறாயே. நீ நல்ல காலத்தையே கண்ணால் கண்டதில்லையோ?”

“அட, சேதியைச் சொல்லுங்கறேன்.”

“பால் கறக்கிற எருமையை யாராவது ஏரில் பூட்டுவார்களா? என்னையும் உன்னையும் இந்தக் கதிக்கு ஆளாக்கி விட்டாரே நம் எஜமானர்? என்ன காரியம் நடந்துவிட்டது என்று கேட்கிறாயே!”

“பூட்டினா என்ன! நாம என்ன பசுமாடா?”

“ஏன்? நாமும்தான் பசுமாடு மாதிரி பால் கொடுக்கிறோம்.”

“அப்படிப் பார்க்கப் போனா ஆடு கூடத்தான் பால் கொடுக்குது. கழுதைகூட பால் கொடுக்குது. ஏன் பன்னி கூடத்தான் பால் கொடுக்குது.”

“அப்படியானால் அவற்றின் பாலையே இந்த மனிதர்கள் சாப்பிடட்டுமே.”

“நாம கொடுக்காட்டிப் போனா, அதையும்தான் சாப்பிடப் பளகிக்குவாங்க. மனுசங்களை இலேசுபட்டவங்கன்னு நெனெக்காதே.

எதுக்கும் துணிஞ்சவங்க.”

“எதுக்கும் என்று வெறுமனே சொல்லாதே. எந்தப் பாபத்துக்கும் என்று சொல்லு.”

“பாவமோ புண்ணியமோ, நான் சொல்றது என்னான்னா, நம்ம நிலைமைக்கு மீறிக் கோச்சுக்கப்படாது. ஆங்காரப்படப்படாது . . . ”

“அதாவது நம்மையே ஏரில் கட்டி உழட்டும். நாம் கழுத்தை நீட்டிச் சேவகம் செய்ய வேண்டும் என்கிறாய்.”

“என்ன செய்யறது?”

“அட, பேமானி!”

“அப்படின்னா?”

“மானமில்லாதவனே என்று அர்த்தம்!”

“மறுபடியும் மறுபடியும் நீ அதைத்தானே சொல்லறே! நமக்குத் தலையிலே எளுதினதுதானே நடக்கும்!”

“அட பேதையே! கஷ்டம்தான் நமக்கு விதித்திருக்கிறது என்று ஒரு முயற்சியும் செய்யாமல் கஷ்டத்தையே கட்டிக் கொண்டு அழுகிற சில சில மனிதப் பதர்களை நான் பார்த்திருக்கிறேன். நீ அந்த மனிதர்களிலும் கேடு கெட்ட ஆத்மாவாக இருக்கிறாயே . . . ஹூம் . . . என்ன செய்வாய்! தாய் வயிற்றிலிருந்து வெளிப்பட்டது முதல் பட்டிக்காடுகளிலேயே சுற்றிச் சுற்றி வாழ்கிறவர்களுக்கு எப்படி ரோசம் வரப்போகிறது? தன்மானம் தெரியப் போகிறது? பட்டணத்தில் தெரு முனைகளிலும் நாற்சந்திகளிலும் நடக்கும் உரிமைப் போராட்டப் பேச்சுகளைக் கேட்டிருந்தால், நீ இப்படிப் பேசுவாயா? உனக்கு எங்கே அந்த பாக்கியம் சித்திக்கப் போகிறது இந்த ஜென்மத்தில்? நீதான் பட்டணம் என்றால் பிண்ணாக்கு மாதிரி இருக்குமா, கழுநீர் மாதிரி இருக்குமா என்று கேட்கிறாயே.”

“நான் பட்டிக்காடுங்கறதுதான் தெரிஞ்சிருக்கே. அது கிடக்கட்டும், என்ன செஞ்சா கஷ்டம் விடியும்கறே! அதைத் தான் முதலில் சொல்லேன். கேக்கிறேன்!”

“சண்டித்தனம் பண்ண வேண்டும். பிடிவாதம் பண்ண வேண்டும். முரட்டுத்தனம் செய்ய வேண்டும். ஏரைக் கழுத்தில் வைத்தால் எகிறிக்

குதித்து எம்பவேண்டும்."

"சமத்தியா ஒதை உளுவும், தெரிஞ்சுக்க."

"உடம்பு சரியில்லாதது போல் பாசாங்கு செய்ய வேண்டும்."

"செஞ்சா?"

"நம்மை வேறு யாருக்காவது விற்றுவிடுவார் சேர்வை."

"அந்த இடமும் இப்படியே இருந்தா?"

"மறுபடியும் முயற்சி, முரட்டுத்தனம்."

"நீ இப்ப பேசறதைப் பார்த்தா, ஏன் மாட்டுப் பொங்கல் மாதிரி எங்களுக்கும் எருமைப் பொங்கல்னு கொண்டாடலேன்னு கேட்ருவே போலிருக்கே."

"போலிருக்கிறதா? கேட்டே ஆயிற்று, தங்கச்சி!"

"கேட்டே விட்டியா? அட!"

"ஆமாம்."

"எங்கே?"

"போன எஜமானரிடத்தில்."

"பட்ணத்திலியா?"

"ஆமாம்."

"அவங்க கிட்டே போய் எதிர்க்க நின்னு கேட்டியா, ஏன், எருமைப் பொங்கல் கொண்டாடலேன்னு?"

"அப்படிக் கேட்பேனா? அப்படிக் கேட்டால் இந்த மனிதர்கள் மசிவார்களா? காரியத்தில் காண்பித்தேன்."

"நல்லாச் சொல்லு, நானும் இஞ்ச வந்து பதினஞ்சு நாளாச்சு, உன்னைப்பத்தி தெரிஞ்சுக்கணும்னு ஆசை. பட்ணத்திலே யாருகிட்டல்லாம், எப்படி இருந்தே, ஏன் இந்த ஊருக்கு வந்தே – எல்லாத்தியும் இப்ப சொல்லு. கேக்கறேன்."

"அப்படி ஒன்றும் பிரமாதமாக என்னைப் பற்றிக் தெரிந்து கொள்வதற்குச் சங்கதி ஏதுமில்லை, பிறந்தது செஞ்சியில் (அந்த

மண்வாகோ என்னவோ, இல்லாவிட்டால் இவ்வளவு துணிச்சல் எங்கே வரப்போகிறது எனக்கு!) பிறந்து இரண்டு மாதங்களுக்கெல்லாம் திருவண்ணாமலையில் யாருக்கோ என்னை விற்றுவிட்டார்கள். அவர் மறுபடியும் விற்றார். திண்டிவனம் ரெட்டியார் ஒருவரிடம் வந்தேன். அப்புறம் கைமாறி மாறி மதுராந்தகம், பல்லாவரம் என்று படிப்படியாகப் பட்டணத்துக்கே வந்துவிட்டேன். பல்லாவரம் ஏழுமலை ஏகப்பட்ட ஆகாரங்களைப் போட்டு என்னை வளர்த்தார். ரொம்ப நல்ல மனிதர் என்று வாழ்த்திக் கொண்டே இருந்தேன். திடீர் என்று அவர் சாயம் வெளுத்து விட்டது. நூறு ரூபாய் லாபத்துக்காகத்தான் இந்தப் பரிவு, கரிசனம் எல்லாம். அவர் கையிலிருந்து பட்டணம் ஹரிஹரய்யரிடம் வந்தேன், ஜார்ஜ் டவுனில் ஒரு ஹோட்டல் நடத்திக் கொண்டிருக்கிறார் அவர். ரொம்ப ஆசார சீலர். கரிச்சான் குருவியோடு எழுந்து, குளித்து, ஜபம் செய்து, அம்பாளை ஆராதித்து விட்டுத்தான் ஹோட்டலைத் திறக்கிற வழக்கம், ஆனால் இதனால் எல்லாம் ஞானம் வந்து விடுமா இந்த மனிதர்களுக்கு! கொட்டிலுக்குள் நுழைந்ததுமே எனக்கு என்னமோ போலிருந்தது; நம்மவர்கள் யாருமே இல்லை. நாலு பசு மாடுகள் ஒய்யாரமாக நின்று கொண்டிருந்தன – ஆந்திர தேசத்து ஆத்மாக்கள், ஓங்கோலாம். என்னைப் பார்த்ததுமே, ஒன்று தலையைக் கன அகம்பாவமாக ஆட்டியது. எனக்கு என்னமோ போலிருந்தது. முதல் சந்திப்பே இப்படி இருக்கிறதே, போகப் போக எப்படியிருக்குமோ என்ற ஒரு சிறு கவலை ஏற்பட்டது. பரவாயில்லை. நாம் யார் வம்புக்கும் போகாமல் இருந்து விட்டால் போகிறது என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டேன்.

“சத்யமாகச் சொல்கிறேன் வலங்கிமான்! வஞ்சனையில்லாமல் கொடுத்தேன். ஹரிஹரய்யர் கறந்தாலும் சரி, அவர் மனைவி கறந்தாலும் சரி, இல்லை அவர் வீட்டு ஆள் என்று பேர் சொல்லிக்கொண்டு யார் வந்தாலும் சரி, ஒரு பக்கெட் பால் கொடுத்துவிடுகிறது. ஆனால் என்ன ஆயிற்று? இரண்டு மாசமாகப் பார்த்துக்கொண்டிருந்தது வெறும் வஞ்சனை என்று வெட்டவெளிச்சமாக தெரிந்தது . . .

“நான் அடியெடுத்து வைத்த அன்று மாலை நாலுகட்டுபுல் வந்தது. நிமிர்ந்து பார்த்தேன். கட்டுக்களைப் பறித்துப் போட்ட ஆள் எல்லாவற்றையும் ஓங்கோல்களுக்கே போட்டு விட்டுப் போய்விட்டான். ஒரு கட்டு வைக்கோலைத் தின்று விட்டு முளையைப் பார்த்துக்கொண்டே மத்தியானமே பிடித்து நிற்கிறனே நான். திரும்பிப் பார்த்தான்களா! இல்லை. ஆனால் சமாதானம் செய்து கொண்டேன். புதிதாக

வருகிறவர்களைப் படிமானமாக இருப்பார்களா என்று சோதனை செய்கிற வழக்கம்தானே. அப்படியிருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். ஒரு வாரமாயிற்று இரண்டு வாரமாயிற்று. ஒரு மாசமாயிற்று. இன்னும் அதே இரண்டு பிரி வைக்கோலைத் தவிரக் கவணைக்கு ஒன்றுமே வருவதாகத் தெரியவில்லை. இரண்டு பிரி வைக்கோல் நமக்கு எம்மாத்திரம்? வயிற்றுச் சுவரிலேயே பூசிக்கொண்டுவிடும். ஒரு மாசம் கழித்துதான் எனக்குப் புலனாயிற்று, இது சோதனையில்ல, நாசகார வஞ்சனை என்று. முழுகிக் குளிக்கக்கூட நாதியில்லாத ஊரில் வந்து இந்த உஷ்ணத்தைப் பாராட்டாமல், நம்முடைய பிறவித் தேவைகளைக் கூடச் சட்டைச் செய்யாமல் உழைக்கிற நமக்கு அந்தப் புல்லில் கொஞ்சம் போட்டால்தான் என்ன? என்ன படித்தாலும், மனிதன் மனிதன்தானே. வெள்ளைத் தோலைக் கண்டு மயங்குகிறவன் அவன். பொய்யில்லை. எம்.ஏ. படித்திருப்பான், ஐ.நா. சபையில் பேசுவான். ஆனால் பெண்டாட்டி கறுப்பாக இருக்கக்கூடாது. கறுப்பு ஒரு வர்ணமில்லையா? முகத்தைச் சுளிக்கும்படியாக என்ன இருக்கிறது, இந்த கறுப்பில்? படித்தவர்களுக்குகூட இந்தச் சாதாரண விஷயம் ஏன் தெரியவில்லை என்று யோசித்து யோசித்துப் பார்த்தேன். புரியவில்லை. மனுஷனுக்கு இந்த இனப்பற்று ரொம்ப அதிகம். ஓங்கோலிலேயே ஒரு கறுப்புப் பசுவாக இருந்தாலும் விட்டுக் கொடுக்க மாட்டான். ஏதோ தவறிப் பிறந்துவிட்டது என்று உபசாரம் எல்லாம் அங்கேதான் செய்வானே ஒழிய நம் பக்கமே திரும்ப மாட்டான். காடும் வீடும் ஓடும் உதடும் என்று அபேத வாதத்தை முணுமுணுகிற ஹரிஹரய்யரும் இதற்கு விலக்கில்லை என்று நன்றாகப் புரிந்துவிட்டது. வேலை கற்றுக் கொடுக்கிறேன், கற்றுக் கொடுக்கிறேன் என்று சம்பளமில்லாமலே புது மனிதர்களை வருஷக் கணக்கில் வேலை வாங்குகிற நீசத்தனம் மனிதர்களுக்கு உண்டு. அதையே தான் இவரும் செய்கிறார் என்று புரிந்துவிட்டது.

“அப்புறம் கோபப்பட ஆரம்பித்தேன். கசப்பு வந்துவிட்டால் என்ன செய்ய முடியும்? எதைக் கண்டாலும் வெறுப்பு! எங்கேயாவது ஓடிப் போய்விட வேண்டுமென்று சதா ஓர் ஏக்கம்! இந்தச் சமயத்தில்தான் பொங்கல் பண்டிகை வந்தது. ஓங்கோலுக்கு ஏகப்பட்ட உபசாரம். கொம்பு சீவினார்கள். உடம்பைத் தேய்த்தார்கள், குளிப்பாட்டினார்கள். மஞ்சள் பூசினார்கள், குங்குமமிட்டார்கள். வாழைப் பழமாகக் கொடுத்தார்கள், பொங்கல் படைத்தார்கள், தூபம் காட்டினார்கள், கற்பூரம் காட்டினார்கள், மணியடித்தார்கள், நெட்டிமாலை போட்டார்கள்.

“நான் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு நின்றேன். ஏன், எனக்கு

இதற்கெல்லாம் உரிமை கிடையாதா? நான் உழைக்கவில்லையா? கொடுக்கவில்லையா? கைம் பெண்ணைப்போல் ஒதுக்கி விட்டார்கள். மனிதர்களில் கூடக் கைம்பெண்ணை அப்படியெல்லாம் இக்காலத்தில் செய்யமுடியாது.

"ஒங்கோல்களைப் பச்சைப்பட்டு, ஜரிகை முகபடாம் எல்லாம்போட்டு, கொம்புக்கு ஊதுவத்தி வைத்து ஊர்வலம் விட்டார்கள். 'பொங்கலோ பொங்கல்' என்று கத்தினார்கள். தாம்பாளத்தைத் தட்டினார்கள்.

"எனக்கு அசூயை ஒன்றுமில்லை. பிறருக்கு சம்பத்து வருவதைப் பார்த்து நான் என்றுமே எரிந்தது கிடையாது. ஆனால் நானும் கூட நிற்கிறேனே, உழைக்கிறேனே, ஏன் என் பக்கம் திரும்பக் கூடாது?

"எருமைப் பொங்கல் கூடக் கேட்டிடுவ போலிருக்கு என்று சொல்கிறாயே. ஏன் கேட்கக் கூடாது. நாம் எதில் மட்டமாகப் போய்விட்டோம்? ஒருநாள் நமக்காக ஒதுக்கினால்தான் என்ன? கௌரவக் குறைச்சலாயிருந்தால் வெள்ளைக் காளை, பசுவோடு நிறுத்த வேண்டாம், அன்று கொண்டாட வேண்டாம். மறுநாளைக்குக் கொண்டாடடலாமல்லவா?

"உன்னிடம் இப்போது பேசுகிறேனே. இதே ஆத்திரம்தான் அன்றும் வந்தது. திமிர் முட்டமுடியுமா? அடிப்பார்கள். சமயம் வரும் என்று பொறுத்துக்கொண்டேயிருந்தேன்.

"என்ன ஆச்சரியம்! ஏழைக் கண்ணீர் வீணாகாது. அன்றிரவு ஹரிஹரய்யர் குழந்தைகள் – சம்சாரத்துடன் சினிமா பார்க்கப் போய்விட்டார். அந்த அம்மாள் எனக்குப் பக்கத்தில் சுவரில் கட்டியிருந்த புடவையை வாங்கிவைக்க மறந்துவிட்டாள். பார்த்தேன். கொல்லைத் தெரு வெளிச்சத்தில் இலேசாகத் தெரிந்தது. பனாரஸ் புடவை – விலை இருநூறு ரூபாய் இருக்கும். போன தீபாவளிக்கு வாங்கினதாம். அதற்குக் கீழே டிஷ்யூப் புடவை. இந்தப் புடவை நானூறு ரூபாய். எண்ணெய் பட்டுவிட்டது என்றோ என்னவோ நனைத்து விட்டார்கள். உலர்த்தியிருந்தார்கள். பனாரஸ் புடைவை கண்ணைப் பறித்தது. ஏன் பத்திரமாக வாங்கி வைக்கவில்லை? வீட்டில் திருட்டுப் பயம் கிடையாது. கொல்லைக் கதவு கிடையாது. சுவர்தான். அந்தத் தைரியத்தில்தான் அவர்கள் பேசாமல் போய்விட்டார்கள்.

"ஓர் அகத்திக் கீரைக் கட்டு, ஒரு புல்லுக் கட்டு போட்டதுண்டா நமக்கு, இந்த அபேதவாதி! சம்சாரத்துக்கு அறுநூறு ரூபாய்க்குப் புடவை

வாங்குகிற, காடும் வீடும் என்னும் சுலோகம் சொல்கிற அபேதவாதி! கீரைக் கட்டு ஓர் அணா, பனாரஸ் புடவை இருநூறு ரூபாய். புல்லுக்கட்டு நாலணா, டிஷ்யூப் புடவை நானூறு ரூபாய். எனக்கென்ன? நான் வெள்ளைக்கார ஜாதி இல்லையே! கறுப்பு. மட்டத்திலும் சர்வமட்டம்! சாப்பாட்டு விஷயத்தில் நான் அபேதவாதி! அப்படிச் செய்ததும் மனிதர்கள்தான்.

"பல்லால் பிடித்து ஓர் இழு இழுத்தேன். டர்ர்ர்ர் . . . பனாரஸ் புடவை கிழிந்தது. பிறகு டிஷ்யூ புடவையும் கிழிந்தது. அரை நாழிகைதான் ஆயிற்று. சுவரில் ஆணிதான் பாக்கி. இரண்டு மாசமாக நிரம்பாத வயிறு நிரம்பிற்று.

"காலையில் அந்த அம்மாள் வந்தாள். நமக்கே உண்டே ஒரு பார்வை – பெருமையுடன் திரும்பிப் பார்க்கிற பார்வை – அதை வீசினேன். உள்ளுக்குள்ளே சிரிப்பு! அடக்க முடியாத சிரிப்பு. அவ்வளவு சிரிப்பை அப்படி மறைத்ததே இல்லை நான்.

"அம்மாள் முகத்தில் ஒரு கிலி.

"அரை மணிக்குள் வீடு ரகளைப்பட்டது.

"என்னை முளையில் நெருக்கமாகக்கட்டி, ஹரிஹரய்யர், அந்த அம்மாள், அவர்களுடைய பெண், வேலைக்கார ஸ்ரீதரன் நாயர் எல்லாரும் ஸகஸ்ரநாம அர்ச்சனை செய்தார்கள். மட்டையால், விசிறிக்காம்பால், கரண்டியால் அடித்தார்கள். முகத்தில் அடித்தார்கள். 'நாசமாய்ப் போக! கரியாய்ப் போக!' எத்தனை வசவுகள்! திட்ட ஆரம்பித்தால் இந்த மனிதர்களுக்குத்தான் எவ்வளவு கற்பனை! எவ்வளவு சொல்நயம்! புதுமை – வேகம்!

"நாலாம்நாள் என்னை விற்றுவிட்டார்கள். பால் எத்தனை கொடுத்தால் என்ன? கெட்ட பேர் வாங்கினதற்காக! திருட்டுத் தீனி தின்றதற்காக. என்னை கூட்ஸ் வண்டியில் போட்டு இங்கே அனுப்பிவிட்டார்கள். தஞ்சாவூர் ஜில்லாவை முன்பின் நான் பார்த்ததில்லை. பச்சையும் சோலையும் பார்க்கப் பரவசமாயிருந்தது. ஆனால் இப்போது . .? அந்த எஜமானே தேவலை போலிருக்கிறது!

"இதைப் பாரு! நீ அடங்கி ஒடுங்கிச் சாதுவாக இரு. என்னால் அப்படி இருக்க முடியாது. நான் பட்டணத்திலே வளர்ந்தவள்.

"எருமைப் பொங்கல் ஏன் கொண்டாடக் கூடாது என்று

ஜாடைமாடையாகவும் பகிரங்கமாகவும் செய்து காண்பிக்கத்தான் போகிறேன்.

"நான் மகிஷி! மனுஷி இல்லை. ஞாபகம் இருக்கட்டும்!"

கல்கி, 15, ஜனவரி 1961

# நடராஜக் கால்

ராமதுரை மாமா திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார். கால் மேல் கால் போட்டு உட்கார்ந்திருக்கிறார். மேல் கால் அதிகாரமாக ஆடிக் கொண்டிருக்கிறது.

அவர் ராமன் மாதிரியோ, துரை போலவோ இருக்க மாட்டார் பார்க்க. அகன்ற மார்பு, திரண்ட புஜம், ஆஜானுபாகுவான வடிவம் – இதெல்லாம் கிடையாது. எனக்குச் சில ராம துரைகளைத் தெரியும். அவர்களைப் போலெல்லாம் உயரமாகவோ, கட்டுமஸ்தாகவோ, கவர்ச்சியாகவோ அவர் இருக்கமாட்டார். சுமாரான உயரம்தான். கச்சல் மேனி. வாழைச் சருகு வண்ணம். துணி கொண்டு துடைக்காத வாழைச்சருகு, வயது நாலுநாள். ஆளைப் பார்த்து வயதைச் சொல்ல எங்களுக்கு அனுபவம் போதாது. ஆனால் அவர் உடம்பைப் பார்த்தால் நாலு நாள் வயதுதான் தோன்றும். சாதாரணமாக எப்போதும் குளித்து நாலுநாள் ஆனது போலிருக்கும். முகத்தில் வளர்ந்த சர்க்கரையும் நாலுநாள் வளர்த்திதான். முன்பெல்லாம் அது காப்பிப்பொடியாக இருந்தது, இப்போது சர்க்கரையாகி விட்டது. வேட்டியும் கட்டி விழுக்காமல் நாலாவாது நாள் போலிருக்கும். காவேரிக்குக் குளிக்கப் போவது, உள்ளே போய்ச் சாப்பிடுவது – இந்த நேரங்கள் தவிர, ராமதுரை திண்ணையில்தான் உட்கார்ந்திருப்பார். கால் மேல் கால் போட்டுத்தானிருப்பார். அவர் பத்திரிகை படிக்கும் போதும் அது ஆடிக்கொண்டேயிருக்கும். நடராஜா கால் ஆடக்கொண்டு தானே உலகமும் ஆடுகிறது!

உலகம் ஆடுகிறது என்றால், வேதஞ்சேரி அக்ரஹாரம் இயங்குகிறது என்று அர்த்தம். வேதஞ்சேரியில் தர்மம் எங்கெங்கு ஆட்டம் காண்கிறது, அதர்மம் எங்கெங்கு தலை தூக்குகிறது, எப்போது அதை மண்டையில் ஒன்று போட்டு அமுக்கலாம் என்று ராமதுரை மாமா எக்காலும் கவலைப்படுவது போலிருக்கும். இல்லாவிட்டால் யாரையும் பார்த்தும் பார்க்காத அந்தப் பார்வைக்கு என்ன அர்த்தம்?

இந்தப் பார்வை சிறு வயதிலேயே வந்துவிட்டதாம் அவருக்கு, சொல்லிக் கேட்டதுதான். அவர் முப்பத்தைந்து வருடம் முன்பு திருச்சியில் இண்டர்மீடியட் படித்தாராம்; தேறினாராம். மேலே படிக்க அவர் நினைத்துக் கொண்டிருந்த சமயம் பார்த்து அவர் அப்பா மாரடைப்பினால்

காலமாகி விட்டாராம். அந்த அப்பா அப்போது தாசில்தாராக இருந்தாராம். நல்ல வேளையாக முதல் இரண்டு பெண்களையும் விமரிசையாகக் கலியாணம் செய்து நல்ல இடத்தில் கொடுத்து விட்டாராம். அதில் அவர் சம்பளமாகவும் 'மேல் கொண்டதாகவும்' சம்பாதித்தது அத்தனையும் செலவாகிவிட்டது. மிச்சமிருந்த பத்து வருடமும் அவர் வேலை பார்த்திருந்தால், ஒரு வேலி நிலம், ஏழெட்டு ரூபாய் ரொக்கம் – இப்படி ஏதாவது ராமதுரைக்கு விட்டுப் போயிருப்பார். ஆனால் நாம் ஒன்று நினைக்கக் கடவுள் ஒன்று நினைக்கிறானே! ராமதுரைக்குப் பிதுரார்ஜிதமான இரண்டே ஏக்கர்தான் மிஞ்சிற்று. செட்டும் கட்டுமாக இருந்தால் ஒரு சின்னக் குடும்பத்துக்கு இது சாப்பாட்டுக்குக் கண்டுவிடும். ராமதுரை செட்டும் கட்டுமாக இருக்கிறாரா இல்லையா என்று யாருக்கும் தெரியாது. ஒன்றே ஒன்று மட்டும் சொல்ல வேண்டும். ஊரில் கலியாணம் கார்த்திகை என்று யாராவது சாப்பிடக் கூப்பிட்டால், முகூர்த்தத்திற்குப்போய் வந்து, வீட்டில் நன்றாகச் சாப்பிட்டு விட்டுத்தான் ராமதுரை மாமா கலியாண வீட்டுக்குச் சாப்பிடப்போவார்.

உட்கார்ந்து கொறிப்பார். லட்டு, அப்பளங்கள் ஏழெட்டுக் கறிகள்– எல்லாவற்றையும் தொட்டுக் கொறித்து, அப்படியே எறிந்துவிட்டு வந்துவிடுவார். உங்களுக்கு ரத்தக் கண்ணீர் வரும். 'இது ஒரு கௌரவமா? எத்தனை பொருள் விரயம்? இது என்ன டம்பம்!' என்றெல்லாம் பொருமத் தோன்றும். இது அவர் மட்டும் செய்யும் காரியமில்லை. வேதஞ்சேரியில், எல்லோருமே இப்படித்தான் செய்வார்கள்! ராமதுரை ஊர் வழக்கத்துக்கு மாறாக ஒன்றுமே செய்ய மாட்டார். ஊர் முழுவதும் இப்படிச் செய்வதால் 'ஐயோ இப்படி எறிந்து விட்டுப் போகிறார்களே' என்று யாருமே வயிறு எரிவதில்லை. அவர்களுடைய முறைக்காகக் காத்திருப்பார்கள் அவர்கள். இது என்ன தடித்தனம் என்று காயாதீர்கள்! இது மரபு. அதனால்தான் ராமதுரை செட்டும் கட்டுமாக வாழ்கிறாரா என்று யாரும் சொல்ல முடிவதில்லை. அவர் மனைவி கறுப்புப் படர்ந்த சிவப்புத் தோடு போல ஒன்றும், மூக்கில் நெட்டியும், கையில் கறுப்பு ரப்பர் வளையும் போட்டிருக்கிறாள். புடவையின் நிறம் வெகு காலம் உழைத்த குடைத் துணியின் நிறம் – ஆரம்பத்தில் அதன் நிறம் சிவப்பா, பச்சையா, நீலமா கறுப்பா என்று இப்போது யாரும்சொல்ல முடியாது.

ராமதுரை மாமா ஏன் வேலைக்குப் போகவில்லை என்று எத்தனையோ பேர் அவரையும் தங்களையும் கேட்டு கொண்டதுண்டு. 1927ஆம் வருடம் கல்லூரியை விட்டு வெளியே வந்தவர், 'மாதம்

இருநூற்றைம்பத்தைந்து ரூபாய் சம்பளம் தந்தாலொழிய எந்த உத்தியோகத்துக்கும் போவதில்லை' என்று பிடிவாதம் பிடித்தார். 1930ஆம் வருடம் வரையில் யாரும் அந்த மாதிரி வேலை அவருக்குக் கொடுக்கவில்லை. அதற்குப் பிறகு அகவிலையெல்லாம் சரிந்து, இருக்கிற சம்பளத்திற்கே தலைவலி வந்துவிட்டது. அறுபது, முப்பது ரூபாய் வேலைகூடக் கொடுப்பார். வேண்டாமே என்று ராமதுரை மாமா திண்ணையிலே உட்கார்ந்து விட்டார். "எனக்கென்ன சாப்பாட்டுக்கு இல்லையா?"

அவரோடும் பின்னாலும் முன்னாலும் படித்த வேதஞ்சேரிப் பையன்கள் எல்லாரும் வேலைக்குப் போனார்கள். டில்லி என்ன, நாகபுரி என்ன, ஜேம்ஷெட்பூர் என்ன, பம்பாய் என்ன, கல்கத்தா என்ன, ரங்கூன் என்ன – எங்கும் வேதஞ்சேரிக்காரர்கள் உத்தியாகம் பார்க்கிறார்கள்; சர்க்கார் வேலை பார்க்கிறார்கள்; கம்பெனி வேலை பார்க்கிறார்கள். கடை வைத்திருக்கிறார்கள்; என்னென்னமோவெல்லாம் செய்கிறார்கள். மூவாயிரம், நாலாயிரம், முந்நூறு, நானூறு என்று கைநிறையச் சம்பாதிக்கிறார்கள். இப்போது வரும் தலை முறைகளையும் படிப்பு முடிந்ததும், அந்தந்த இலாகாக்களில் வேலைக்கு இழுத்துவிடுகிறார்கள். இப்படி எல்லாரும் போய்விட்டால் ஊரில் படித்த ஆண்பிள்ளை ஒருத்தர் இருக்க வேண்டாமா? ராமதுரையின் பிடிவாதம் ஊருக்கு நல்லதாக முடிந்திருக்கிறது. அவருக்கு ஆங்கில அறிவு அதிகம். 'இந்த நாள் எம்.ஏக்கு சமானம்டா என் படிப்பு' என்று அவரும் பலரும் சொல்லுகிற வழக்கம். கடிதங்கள் வாசித்துச் சொல்கிறது, தந்திக்கு வாசகம் சொல்கிறது, கர்ணத்திற்கும் பட்டா மணியத்திற்கும் ஆங்கிலத்தில் வரும் அதிகாரக் கடுதாசிகளை வாசித்து அர்த்தம் பண்ணுவது – இதெல்லாம் அவர் இல்லாவிட்டால் யார் செய்வார்கள்?

"யார் செய்வான்னேன்? ராமதுரையில்லாட்டா, சிங்கின்னா அடிக்கணும், மூவாயிரம் ரூபா சம்பளம் வாங்கினா என்னங்கறேன்! சாப்பிடற அரிசியை நாங்கன்னா பண்ணிக் கொடுக்கணும்!"

இந்த ஒரு பொறுப்பு இருக்கிறதனால்தான் ராமதுரை மாமா யாருக்கும் பணிந்து பதில் சொல்ல மாட்டார். மூவாயிரம் சம்பளம் வாங்குபவர்கள் கூட விடுமுறையில் ஊருக்கு வரும்போது எழுந்து வரவேற்கமாட்டார். பல்லை இளிக்க மாட்டார். கூனிக் குறுக மாட்டார்.

"எப்போ? . . . " என்று திண்ணையில் காலை ஆட்டிக்கொண்டே உட்கார்ந்த நிலையிலேதான் கேட்பார்.

“சுப்புணி பிள்ளை சீதாபதி அமெரிக்கா போயிருக்காராம் மாமா. நாலு மாசம் லெக்சர் பண்ணக் கூப்பிட்டிருக்காளாம் அவரை.”

“என்னடாப்பான்னு பார்த்தேன். அமெரிக்காவுக்கு யாரு போகலே இப்ப? நம்ம தேசத்துல பண்ற கோணிப்பை சாக்கு, சணல்லாம் கூடத்தான் அமெரிக்காவுக்குப் போறது” என்று ராமதுரை மாமா அந்த ஆச்சரியத்தை அடக்கிவிடுவார். இந்த உலகில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது?

“யக்ஞம் பிள்ளை சப்தரிஷிக்கு ப்ரொபசராயிடுத்தாம், இப்ப.”

“எதுக்கு ப்ரொபசர்?”

“ஸமஸ்கிருதத்துக்குத்தான்.”

“புடிச்சுது ஆபத்து! இத்தனை நாளா அதிகமாகப் பேசியிருக்க மாட்டான். இனிமே ரொம்பப் பேசணும். ஸம்ஸ்கிருதம் தேவபாஷை. சப்தரிஷி வாய் நாத்தத்தை சகிச்சிண்டு இப்ப இன்னும் அதிக வார்த்தைகள்ளாம் வரும். இவன் வாயிலே பூந்து புறப்படணும்னு இருக்கு பாரு அந்த பாஷைக்கு. பல்லையெல்லாம் பிடுங்கிட்டு, செட்டு வச்சுக்கச் சொல்லி எழுதணும் அவனுக்கு.”

ராமதுரை மாமாவுக்கென்று இப்படித் தனி அபிப்பிராயங்கள் உண்டு. சுயேச்சை, சுயமரியாதையெல்லாம் இப்படி நிரம்பியிருக்கிற ஒரு ஆத்மாவைப் பற்றி ஏன் வம்பளக்க வேண்டும் நாம்தான்? மொத்தத்தில் அவர் உபகாரி. தர்மப் பிசகாக ஒன்றும் செய்யமாட்டார். அதைச் சொல்ல வரப்போய், எங்கெங்கோ போய்விட்டது.

எதிர்வீட்டு வாசலில் ஒரு வண்டி நிற்கிறது. அரை வண்டி, ரப்பர் சக்கரம், மெத்தை இருக்கை, மேற்கத்தி மாடு, பச்சைவர்ணம், பித்தளைப் பூண் அச்சு. ராமசுப்பன் வண்டி அது. அதிலிருந்து ஒரு பையன் இறங்குகிறான். பிறகு ஒரு பெரியவர். பிறகு வயதான ஒரு அம்மாள். பிறகு ஒரு முப்பது வயது மங்கை. பையன் பளிச்சென்றிருக்கிறான். சுருட்டைக் கீராப்பு; நீளத்தலை. மடிப்புக் கலையாத துணியில் ஒரு முழுக்கைச் சட்டை, வெளிர் நீலம். கீழே குண்டஞ்சு வேஷ்டி. அந்தப் பையனுக்காகவே இந்த வேட்டியையும் சட்டையையும் படைத்த மாதிரியிருக்கிறது. கிழவர்கள் அவனுடைய பெற்றோர்களாகவும், இன்னொரு பெண் அக்காவாகவும், இருக்க வேண்டும். பெண் பார்க்க வரும்போது வேறு யார் வரப் போகிறார்கள்?

ராமசுப்பனின் பெண்ணைத்தான் பார்க்க வருகிறான் பையன்.

ராமசுப்பனே வாசலில் வந்து 'வரணும் வரணும்' என்று வரவேற்கிறார். உள்ளே அழைத்துப் போகிறார்.

"ராமதுரை! வாயேன்" என்று அழைத்துவிட்டுப் போகிறார் ராமசுப்பன். ராமதுரை சற்றுக் கழித்துப் போகிறார். கூடத்தில் ஒரு பெரிய பவானி ஜமக்காளம் விரித்திருக்கிறது. ராமசுப்பனுடைய உறவுக்காரர்கள் அண்டை வீடுகளிலிருந்து வந்து உட்கார்ந்திருக்கிறார்கள். வேதஞ்சேரி முழுவதுமே உறவு வலைதான். இருந்தாலும் மிக நெருங்கிய உறவுகள் இவர்கள்.

பெண் பார்க்கும் காட்சி வழக்கம்போல் நிகழ்கிறது. வெள்ளித் தட்டுகளில் சொஜ்ஜி, பஜ்ஜி, வெள்ளி டம்ளர்களில் காப்பி, வெள்ளி கூஜாக்களில் தண்ணீர். பெண் வந்து நமஸ்கரிக்கிறது, சற்று நிற்கிறது. இரண்டு பாட்டு பாடுகிறது. அசைப்பில் நாலைந்து தடவை பையனின் கண்களைச் சந்திக்கிறது. உள்ளே போகிறது. அங்கே வந்திருக்கிற கிழவியையும் மகளையும் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் நேராகவும், ஜாடையாகவும் வெறித்தும் பார்த்து ஆராய்கிறது – எல்லாம் முடிகிறது. காதல் கல்யாணம் இல்லை. ஆனால் பையனுக்குப் பெண்ணைப் பிடித்துவிட்டது. பையனுக்கு, கல்யாணம் ஆகிவிட்டாற்போலவே ஒரு நிமிடம் பிரமை. பெண்ணுக்கு அது ஏற்படவில்லை. ஏற்பட வேண்டும் என்ற ஆசை. ஆனால் பையனுக்கு தன்னைப் பிடித்திருக்கிறதோ என்று சந்தேகம்.

அளவளாவல் எல்லாம் முடிந்த பிறகு, பிள்ளை வீட்டார் புறப்பட்டுப் போகிறார்கள். போகும்போது தன் ஊருக்கு வந்து கல்யாணத்தை நிச்சயம் செய்து பாக்கு வெற்றிலை மாற்றிக்கொள்ளுமாறு சொல்லிவிட்டுத் தகப்பனார் வண்டி ஏறிவிட்டார். ராமசுப்பனுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. தான் வரும் தேதியை முன்னாலேயே எழுதிவிட்டு வருவதாகச் சொல்லி விடை கொடுக்கிறார். அவர்கள் போனதும் மீண்டும் உள்ளே எல்லோரும் வருகிறார்கள்.

"என்ன ராமதுரை! பையன் எப்படி?"

"பரவாயில்லை. கண்ணுக்கு லட்சணம். நன்னாவும் நடந்துக்கறான். வேலையிலே இருக்கானோ?"

"பம்பாயிலே ஒரு தொழிற்சாலையில் உதவிப் பிரதம என்ஜினீரா இருக்கான். ரொம்பக் கெட்டிக்காரனாம். புதுசா ஏதோ உற்பத்தி முறை ஒண்ணு கண்டு பிடிச்சிருக்கானாம். அதுக்காக அவனைப் பிரதம என்ஜினீருக்கு அடுத்த ஆளா உசத்திவிட்டாளாம். அவருக்கு இன்னும்

ஒரு வருஷம் தான் சர்வீஸ் இருக்காம். அப்புறம் இவனைத்தான் போடப்போறாளாம். அதுக்குத்தான் பழக்கிண்டு வராளாம் இப்ப.”

“பேஷ்! சம்பளம் என்னவாம்?”

“ரண்டாயிரம் இப்ப. அந்தப் போஸ்ட்டுக்கு உசந்ததும் மூவாயிரத்திலே பிக்ஸ் பண்ணுவாளாம். அதாவது என் சம்பளத்தைவிட ஆயிர ரூபா ஜாஸ்தி. இப்ப எனக்கு சமமாக வாங்கறான் இருபத்தேழு வயசிலே.” என்றார் ராமசுப்பன்.

“கவனிக்க வேண்டிய அம்சம்தான்.”

“அப்ப முடிச்சுட வேண்டியதுதானே?”

“மத்ததுகளும் சரியா இருக்கான்னு பார்த்து முடிச்சுட வேண்டியதுதான்” என்று இழுத்தார் ராமதுரை.

“மத்ததுகள்னா? . . . ”

“குலம், கோத்திரம், பூர்வீகம் எல்லாம்தான் . . . ”

“அவாளுக்குப் பூர்வீகம் மதுரை. இந்தக் கிழவர் கலெக்டர் ஆபீஸ்லே சூப்ரிண்டா இருந்து ரிடயராயிருக்கார்.”

“சூப்ரிண்டுன்னா கொஞ்சம் ஒஸ்தி குமாஸ்தா, பென்ஷன் கை நிறையவா வரும்?” காலெ ஆட்டுகிறார் ராமதுரை.

“பிள்ளையை நன்றாகப் படிக்க வச்சிருக்கார். அவனும் கெட்டிக்காரனா இருக்கான். அதிர்ஷ்டசாலி, கண்ணுக்கும் அழகு. ஒரே பிள்ளை.”

“அது சரி, ராமசுப்பு. குலம் கோத்திரம்னு ஒண்ணு இருக்கே . . . நாம் என்ன சப்பையா? நாமன்னு சொல்ல வேண்டாம். உன்னோட வம்சம்னே சொல்றேன். உங்க வம்சத்தைப் பற்றி நானூறு வருஷம் கணிக்கலாமே! உங்க பாட்டானாருக்குப் பாட்டனார் டாக்டர் உத்தியோகம் பார்த்திருக்கார் அரண்மனையிலே. ஒரு பெரிய ஸம்ஸ்கிருதக் கவி வம்சத்திலே முந்நூறு வருஷத்துக்கு முன்னாலே இருந்திருக்கார். ஒரு பிதாமகர் நூத்தெட்டு யாகம் பண்ணியிருக்கார். சாமான்யப்பட்ட வம்சமா இது . .? இப்ப டில்லி சர்க்காரா இல்லாம பழைய காலமா இருந்துதுன்னா இப்ப நீ சமஸ்தான திவானான்னா இருப்பே. இப்ப அதுக்கு சமமான ஒரு பதவியிலேதானே இருக்கே!”

“அப்படியெல்லாம் கிண்டிக் கிண்டிப் பார்த்தா இப்படி ஒரு இடம்

கிடைக்கிறது சிரமம்டா ராமதுரை" என்கிறார் ராமசுப்பன்.

"அப்படிச் சொல்லாதே. அப்படி என்ன பெரிய இடம்னேன்? பையன் ரண்டாயிர ரூபா சம்பளம் வாங்கறான், அதுதானே! சரி, மூவாயிரம் வாங்கப் போறான். பதினாயிரமே வாங்கட்டும் பத்து வருஷத்துலே! அதுக்காக உசந்த இடம்னு சொல்லிடுவியா? மிட்டாய்க் கடை ராஜாமணி பக்கத்து ஊர்தான். தினம் ரண்டாயிரம் ரூபாய் வியாபாரமாம். ரண்டு கார் வச்சிண்டுருக்கானாம். மெட்ராஸ்லே ஆறு பங்களா! அதுக்காக பெரிய இடமாயிடுமா? எம் பொண்ணை அவன் பிள்ளைக்குக் கொடுன்னா, நான் கொடுத்துடுவேனா?"

"நீதான் சமத்தா ரண்டு புள்ளையோட நிறுத்தினூட்டியேடா ராமதுரை. மச்சினன்கள் ஆளுக்கொண்ணா எடுத்துனுட்டான்."

"பொண்ணு பிறந்திருந்துதுன்னா நான் இந்த சம்பளத்துக்கெல்லாம் மயங்கிடுவேனோ? சரி, பையன் தகப்பனாருக்கு ஏதாவது நிலம் கிலம்னு இருக்காமோ?"

"இப்ப ஒரு சூச்சக்கரக் குழியில்லை. மதுரைகிட்ட ரண்டு காணி இருந்துதாம். அதை வித்துத்தான் பிள்ளையைப் பெரிய படிப்பு படிக்க வச்சிருக்கார்."

"நான் நினைச்சது சரியாப் போச்சு. இத பாரு, நீ இப்ப உங்க மேலதிகாரிகிட்ட கோச்சுண்டு கால் கடுதாசை நீட்டிப்பிட்டு, பென்ஷன் கின்ஷன் ஒண்ணுமே இல்லாமெ வெத்து ஆளா வந்தாக்கூட உனக்கு இருக்கிற அஞ்சு வேலி, 'கவலைப்படாதே ராமசுப்பு'ன்னு உன்னை மார்லே தாங்கி அணைச்சுக்குமே. இந்த பையனுக்கு அப்படி ஒண்ணு நேந்துதுன்னா, யார் மார்லே சாய்வான்னு கேக்கறேன்? பெண்ணு மார்லே இருக்கிற சங்கிலியையே எடுத்துண்டு போனான்னா, ராமசுப்பு மாத்து சங்கிலி போடுவானா? இல்லை, வீட்டோட வச்சுண்டு சம்ரட்சிப்பானா?" என்றார் ராமதுரை மாமா.

"ராமதுரை சொல்றதும் ஒரு பாயிண்டு தான்" என்று ராமசுப்பனின் நிலங்களைப் பார்த்துக் கொள்ளுகிற அவருடைய அத்தான் இழுத்தார். ராமசுப்பனின் கிழத்தாயாரும், பெரிய அக்காவும் அந்த அத்தானை ஆமோதித்தார்கள். வேதஞ்சேரியில் யாருமே பூ சொத்து இல்லாத இடத்தில் பெண் கொடுக்கும் மரபில்லையாம். இரண்டு மணி நேரம் ஆலோசனை நடந்தது. கடைசியில் கல்யாணம் நிச்சயம் பண்ண உதவிப் பிரதம என்ஜினீரின் தகப்பனார் வீட்டுக்குப் போகும் முடிவு ஒத்திப்

போடப்பட்டது.

ராமதுரை மாமா திண்ணைக்குப் போய் உட்கார்ந்து காலை ஆட்டத் தொடங்கினார். வேதஞ்சேரியில் தர்மம் ஆட்டம் காண்பதை அவர் சகிக்கவே மாட்டார்.

பெண்ணுக்கு நெஞ்சை அடைத்துக்கொண்டு வந்தது. அத்தையும் தாயாரும் பிள்ளையார் கோவிலுக்குப் போயிருக்கும் சமயமாகப் பார்த்து, அவள் தகப்பனாரைப் பிடித்துக் கொண்டாள்.

"டில்லியிலே முப்பது வருஷமா இருக்கா அப்பா. ரண்டாயிரம் சம்பளம் வாங்கறா. பஞ்சாப்காரன், வெள்ளைக்காரன்னு பழகறா, அவா வீட்டுலே போய்ச் சாப்பிடறா. சர்க்காருக்கு யோசனை எல்லாம் சொல்றா. என் கலியாணத்துக்கு மட்டும் இந்த ராமதுரை மாமாதான் கிடைச்சார், அப்பாவுக்கு யோசனை கேட்க! அவர் பெண்டாட்டிக்கு ஒரு புதுப் புடவைக்கு நாதியில்லை. ரண்டு புள்ளையைப் படிக்க வைக்க வக்கில்லை. ஆறு மா நிலத்தைக் குத்தகைக்காரன் கிட்ட கொடுத்துப்பிட்டு உலுப்பை வாங்கிச் சாப்பிடறது. அதுகிட்ட போய் யோசனை கேக்கணும்னு தோணித்துப் பாருங்கோ உங்களுக்கு?

"கலியாணம் இப்ப வேண்டாம். மேலே எம்.ஏ. படிச்சு நாலஞ்சு வருஷம் வேலை பார்க்கறேன்னேன். 'அதெல்லாம் வாண்டாம்'னு என்னை இங்கே இழுத்துண்டு வந்தேள். இப்ப இன்னும் பையன் பையனா வரவழைச்சுக் கொலு வைக்கணும் உங்களுக்கு – கன்சியாம் பூரி வந்து கெஞ்சினான்.

'பூரியாவது உருளைக் கிழங்காவது, வேதஞ்சேரியிலே பொறந்த பொண்ணு பஞ்சாப்காரனுக்கு வாழ்க்கைப் படவாவது!'ன்னு . . . இப்ப நீங்களானா ராமதுரை மாமாவை மந்திரியா வச்சிண்டாச்சு. திவான் வம்சத்திலே பிறந்தவன்னு அது பசியைப்கூடப் பொறுத்துண்டு வாசத்திண்ணையிலே காலை ஆட்டிண்டு உட்கார்ந்திருக்கு. அந்த டம்பம், மமதை, வக்ரம்தான் உங்களுக்குப் பிடிக்கிறது. பெரிய என்ஜினீராகப் போறவனைக் கண்டால் பிடிக்கல்லை. அப்பா நானும் வேதஞ்சேரியிலே பொறந்தவதானே? எனக்கும் பிடிவாதம் இருக்கும். அந்தப் பையனைப் பார்த்ததிலேருந்து அவனையே புருஷனா வரீச்சுனூட்டேன் நான். அதனாலே இனிமே நீங்க வேற யாரைப் பார்த்து, முரட்டுத்தனமா கலியாணம் பண்ணி வச்சாலும் நான் அவனோட பெண்டாட்டிங்கற பாவனையோட வாழமாட்டேன்! பர புருஷனோடு இருக்காப்பலதான் இருக்கும். அப்புறம் நீங்க உங்க இஷ்டப்படி செஞ்சுக்குங்கோ" முதலில்

தழதழப்பும் பிறகு வறட்சியுமாகச் சொல்லி முடித்தாள் பெண்.

ராமசுப்பன், மருண்டு விட்டார். மறுநாளே தந்தியைக் கொடுத்து விட்டு அதே என்ஜினீருக்கு நிச்சயம் செய்து கொண்டு வந்தார். கலியாணமும் விமரிசையாக நடந்தது.

ராமதுரை மாமா காலாட்டிக் கொண்டு திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார். அந்தப்பெண் சொன்னது பராபரியாக அவர் காதுக்கு எட்டிவிட்டாற் போலிருக்கிறது.

டில்லியில் வாழ்ந்த பெண்ணாயிற்றே! தைரியமாக ஏதோ சொல்லி வைத்தது பிடித்துக் கொண்டது.

அந்தப் பெண் நான்தான். நான் இப்போது பம்பாய்க்கு அவரோடு வந்து விட்டேன். ராமதுரை மாமா, திண்ணை மீது இன்னும் கால் மேல் கால் போட்டு ஆட்டிக் கொண்டிருப்பார். நடராஜர் கால் ஆடினால்தானே உலகம் ஆடும்!

**ஆனந்த விகடன் தீபாவளி மலர், 1965**

# நடேசண்ணா

சாலையில் ஒரு திருப்பம் இருக்கிறது. அதில் திரும்பினவுடனே ஊர் தெரியத் தொடங்கிவிடும். பன்னீர் மரங்களுக்கும் தென்னைகளுக்கும் பொன்பூப் பூத்த பூவரசுகளுக்குமிடையே பெருமாள் கோவிலின் வெள்ளைக் கோபுரம் வெண் தாமரை மொட்டுப் போல் தெரியும். திருப்பம் ஒரு மைல். ஆனால் எனக்குக் கோவிலுக்குள் இருக்கிற மஞ்சள் அரளி, துளசிச் செடிகள், ஏற்றக்கிணறு — எல்லாமே தெரிவது போலிருக்கும். நடேசண்ணாவின் பாட்டு நெஞ்சில் எங்கோ கேட்கும். பால்யத்தில், பஸ் போகாத அந்தக் காலத்தில் சாலையில் நடந்து செல்லும்பொழுது, அந்தத் திருப்பம் திரும்பினதுமே ஒரு வேகம், ஒரு பாசம், ஒரு சந்தோஷ உதைப்பு எல்லாம் உந்த நடையை வீசுகிற வழக்கம்.

முன்னே உள்ள பசும் வயல்கள், சாலைக் கடை, சாலையோடு வருகிற வாய்க்கால் — ஒன்றுமே கண்ணில் படாது. மர இலைகளுக்கிடையே உட்கார்ந்து காத்திருக்கிற வெள்ளைக் கோபுரத்தின் மீதுதான் பார்வை நட்டிருக்கும். இப்பொழுது பஸ்ஸில் போகும்போதும், முப்பது வருஷம் கழித்துங்கூட அதே பாசம், அதே வேகம், வயிற்றில் அதே சந்தோஷ உதைப்பு. மானம் பார்த்த மலட்டுப் பொட்டல்களிலேயே ஜனங்களுக்கு ஊரபிமானம் கொள்ளையாக இருக்கும் என்கிறார்கள். எங்கள் ஊருக்கென்ன? மாவும், வாழையும், மூங்கிலும், புளியும், வாகையும், பூவரசுமாக நிழலும் வெயிலும் போராடுகிற அழகுக்களஞ்சியம். சுற்றிலும் பசும் வயல்கள், சலசலவென்று வாய்க்கால்கள்.

நெல்லு மிஷின் தாண்டியாயிற்று. உடையார் சவுக்கைத் தோப்புத் தாண்டியாகி விட்டது. நடேசண்ணாவின் பியாகடை ராகம் என் உடல், உள்ளெல்லாம் ஒரு தடவை வளைவிட்டு ஓடிற்று. கண்ணை மூடி அதைப் பார்த்தேன். இந்த மூங்கில் தோப்பைப் பார்க்கும் போதெல்லாம் இன்னும் தெளிவாக நடேசண்ணாவின் பாட்டு என் காதில் விழும். எப்படி இந்த சம்பந்தம் என் மனத்தில் ஏற்பட்டது என்று நினைவில்லை. நடேசண்ணா பாடும்பொழுது கையை நீட்டி வளைக்கிறாரே, இந்த மூங்கில் கொத்து, சாலையின் இக்கரையில் நின்றவாறு அக்கரையில் உள்ள வாய்க்கால் மேலும் வளைந்து நிற்பது போல, அதனாலா? இல்லை. அவர் ராகம் வீச்சும் கனுவும் வளைவுமாக மூங்கில்போல் வியாபிப்பதனாலா? மூங்கில்

போல எளிய நேர்மையும் ஆடம்பரமற்ற அழகுமாக இருப்பதனாலா? எனக்குச் சரியாகச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் நடேசண்ணாவின் குரல் மட்டும் கேட்டது. அவர் பாடும் தோடி, காம்போதி, பரஸ், தேவகாந்தாரி எல்லாம் கேட்டன. அவர் பாடுவது பழைய கால முறை, ராகங்கள் எல்லாமே சுத்தமாக இருக்கும். சுத்தம் என்று சொன்னால் அர்த்தம் இல்லாத வார்த்தை போலிருக்கும். சுத்தம் அப்படிச் சந்தி சிரித்திருக்கிறது. நடேசண்ணா ஒரு ராகத்தைப் பாட ஆரம்பித்தால், அந்த ராகம் மரியாதையாக, அழகாக, வந்து நிற்கும். குளித்துவிட்டு, தலை சீவி, மலர்சூடி, துல்லிய ஆடை உடுத்துப் பளிச்சென்று பணிவாக வந்து நிற்பது போல் எனக்கு ஒரு தோற்றம் வருவதுண்டு. மற்றவர்கள் அதே ராகத்தைப் பாடும்போது அந்தப் பணிவை நான் உணர்ந்ததில்லை. பரட்டைத் தலையாகவோ, கிழிசல் துணியோடோ, உடம்பில் தூசி புழுதியோடா, அல்லது முகம் சுளித்தோ – ஏதாவது ஒரு சேஷ்டை செய்து வருவது போல்தான் எனக்குப் படுகிறது.

ஊர்ப்பக்கம் வந்து மூன்று வருடமாகிவிட்டன. சென்னையில் காடெல்லாம் வீடாகிவிட்டது. ஒருமரம் வளர்க்க எங்களுக்கு வக்குக் கிடையாது. புத்தியும் கிடையாது என்று தெருமரம் சாலைமரம் எல்லாம் வெட்டி ஊரெல்லாம் மொட்டைக் கோலமாக ஆக்கி வருகிறார்கள். இங்கு அந்த மாதிரி ஒரு காலனி, நகர், பேட்டை ஒன்றும் வரவில்லை. முன்னைவிட நிழலாக இருக்கிறது. கருஞ்சோலையாக இருக்கிறது. அதே சாலையோரக் குடிசைகள், அதே தெருநாய், அதே வாய்க்கால். மனிதர்கள் கூட மாறுவதில்லை. நடேசண்ணா கூட வழக்கம்போல வாய்க்கால் மதகில் உட்கார்ந்திருப்பார். ஏதாவது பாட்டை முணுமுணுத்தவாறு, முள்ளரிவாளால் காலைச் சொரிந்து கொண்டிருப்பார். கடைசியாகப் பார்த்த பொழுதே, அவருக்கு வயசு அறுபத்தெட்டு. அப்போதும் இரண்டு கலம் நெல்லைத் தலையில் வைத்து, ஒன்றரை மைலுக்கப்பால் உள்ள மிஷினில் நடந்து போய் அரைத்து, திரும்பி நடந்து விடுவார்.

பஸ் நின்றது. இறங்கினேன். சாலையில் உள்ளங்கால் பாவ நின்றேன். ஒரு சிலிர்க்காத சிலிர்ப்பு. சுற்றிலும் பார்த்தேன். தூங்குமூஞ்சி மரங்களில் சிள் வண்டுகள் பெரிய சுருதியில் பாடின. வாய்க்காலில் நீர்ச் சேம்பு சாமரம் போட, காவிநீர் மந்தமாக நகர்ந்தது. வாய்க்கால் ஓரத்து மரத்தடியில் இரண்டு நாகணவாய்கள் ஆடி ஆடி நடந்து கொண்டிருந்தன.

வாய்க்கால் மதகில் யாருமில்லை. நடேசண்ணா மிஷினுக்குப் போயிருப்பார். அல்லது திண்ணையிலோ இடை கழியிலோ உட்கார்ந்து

பாட்டியம்மாள் யாருக்காவது "ஈசனருளாற் கடலில் ஏற்றதொரு ஓடம்" என்று சகானாவில் பாடிக் கொண்டிருப்பார்.

ஊருக்கு வரும்பொழுதெல்லாம், வீட்டுக்குள் நுழைவதற்குள் நடேசண்ணாவைப் பார்த்து விடுகிறதுதான் இதுவரை வழக்கம். அவர் வேலை செய்யாத நேரம் கிடையாது. முள்ளறுப்பு, வேலிக்கட்டு, நெல்லரைப்பு, தோட்டக்கொத்து, காணத்துக்குத் தேங்காய் உடைப்பு, காய்கறித் தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்சுகிறது – இப்படி ஏதாவது வேலை இருந்து கொண்டேயிருக்கும். அதற்காகப் பஞ்சகச்சத்தைத் தூக்கி மேலே செருகிக் கொண்டுதான் இருப்பார். முழங்காலுக்கு மேல், பாதித் துடைக்குக் கீழ் அந்தக் கச்சம் இறங்கி நான் பார்த்ததில்லை. பஜனை, பேச்சு, சாப்பாடு – இந்த வேளைகளில் கூட அந்தக் கச்சம் கீழே இறங்குவதில்லை. தலையில் கட்டியிருக்கிற சின்ன முண்டாசு மட்டும் இறங்கி, தோளில் துண்டாகத் தொங்கும். காதில் ஒரு சிவப்புக் கடுக்கன். வாயில் வெற்றிலை. அந்தச்சாறு உதட்டை நனைத்து, குட்டைக்கரைபோல, உதட்டோரமாகக் கசிந்திருக்கும்.

வாய்க்காலைக் கடந்ததும் சத்திரத்தைப் பார்த்தேன். அங்கும் நடேசண்ணா இல்லை. மதகு, சத்திரம் எல்லாம் நடேசண்ணா உட்கார்ந்திருக்கிற இடங்கள். பகல் சாப்பாட்டுக்குப் பிறகு சத்திரத்துத் திண்ணையில் வந்து சற்றுக் கண்ணயர்வார். காற்றுக்கொட்டும் அங்கு. வேலையெல்லாம் முடிந்தபிறகு வாய்க்கால் மதகில் உட்கார்ந்து போகிற வருகிற பஸ், வண்டிகளையெல்லாம் பார்த்து கொண்டிருப்பார்.

அங்கும் இல்லை.

ஊருக்குள் திரும்பினதும், யார் யாரோ என்னை க்ஷேமம் விசாரித்தார்கள். ஆனால் ஊரின் அங்கமாக நெஞ்சில் பதிந்திருக்கிற நடேசண்ணாவை ஒரு திண்ணையிலும் காணோம். பாட்டிகளைப் பார்க்க முடிந்தது. நடேசண்ணா இல்லை.

வீட்டுக்கு அருகே போனதும், நடேசண்ணாவின் மூத்தபிள்ளை காலைச் சுழற்றிச் சுழற்றி, ஏதோ கடிதாசும் கையுமாக வருவது தெரிந்தது.

"இப்பத்தான் வராப்பலெயாக்கும்" என்றான்.

"ஆமாம்."

"பட்டணத்திலேர்ந்துதானே?"

“ஆமாம். சௌக்கியந்தானே? அப்பா சௌக்கியந்தானே?”

“இருக்கார். வயசாயிட்டுது. வெளியிலே வாசல்லெ அதிகமாப் போறதில்லை” என்று சொல்லி, இன்னும் என்ன என்னவோ விசாரித்துவிட்டுப் போனான் அவன்.

உள்ளே போனதுந்தான் தெரிந்தது, அன்று ஏகாதசி என்று. அத்தை பகலிலேயே கொஞ்சம் அரிசி உப்புமாவைச் சாப்பிட்டுவிட்டு விரதம் இருந்து கொண்டிருந்தாள். மிச்சம் இருந்த உப்புமாவே போதும் என்று காபி மட்டும் சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்தேன். ஏகாதசியாக இருந்தது ஒரு விதத்தில் நல்லதுதான். உப்புமா வயிற்றுச் சுவருக்குத்தான் கண்டது. பரவாயில்லை. ஏகாதசி பஜனை கேட்கலாம். நடேசண்ணாவின் பாட்டை நடுநிசி மட்டும் கேட்கலாம். ஐயோ, அம்மா! – என்ன தோடி, என்ன பியாகடை! என்ன தேவகாந்தாரி, என்ன ஆஹிரி! இதற்காக எந்தப் பட்டினியும் கிடக்கலாம். பஜனை முடிந்து சுண்டல், பொங்கல் என்று ஏதாவது கிடைக்கும்.

எட்டு மணிக்குத் தொடங்கினால், நடுநிசி கடந்து பெருமாள் கோயிலின் கூம்பு மண்டபம் ஜாலரும் மிருதங்கமும் குரல்களுமாகக் கணகணத்துக் கொண்டிருக்கும். பஜனைக்காகவே ஏற்பட்ட அபஸ்வரங்கள், அபசுருதிகள், தலையைத் தூக்கி, கழுத்து ரத்தக் குழாய்கள் புடைக்கக்கத்தும் கூச்சல்கள் – இவற்றுக்கெல்லாம் அவ்வப்போது இடம் கொடுத்துவிட்டு, அவை ஓய்ந்ததும், நடேசண்ணா தனியாகப் பாடுவார். அத்தனை குரல்களையும் சேர்த்து உலையில் உருக்கி, பட்டரையில் வைத்து ஒன்றாக இணைத்ததுபோல் ஒரு பெரிய கோயில் மணிக்குரல் அவருக்கு. அவர் குரலில் தோன்றவேண்டும் என்றே ராகங்கள் அழகு செய்துகொண்டு ஓடிவருவது போலிருக்கும்.

நடேசண்ணாவுக்கு யாரும் ஸரிகமபதநிச சொல்லிக் கொடுக்கவில்லை. பஜனை, கச்சேரி, கதை என்று பாட்டுக் கேட்கிற இடமெல்லாம் போய் நிற்பாராம். கடைசியில் கூடவே பாடத் தொடங்கினாராம். பிறகு ஒரு நாடகக் கம்பெனியில் பின்பாட்டுப் பாடச் சேர்த்துக்கொண்டார்களாம். பொம்மலாட்டக் கூட்டத்தில் சேர்ந்து பின்பாட்டுப் பாடினாராம். மைசூர், திருவாங்கூர், பரோடா, பெஜவாடா, பட்டணம் என்று பல ஊர்களுக்கு அந்தக் கூட்டத்தோடு போய் வந்திருக்கிறாராம். ஓர் இருபது வருடம் அவருடைய சந்திரமதி பாட்டு, ஜானகிப் பாட்டெல்லாம் கேட்டு ஊர் தேசம் எல்லாம் கதறியிருக்கிறது. கடைசியில் ஒரு நாள் பொம்மலாட்டம் ஆட்டுகிறவர் பொட்டென்று யமன் வாய்க்குள் போய்விட்டார். அதோடு

நடேசண்ணாவின் நெஞ்சம் சிதறிப் போய்விட்டது. ஊரோடு வந்து தங்கி விட்டார். இருக்கிற நிலபுலனைக் கவனிப்பது, ஊரிலும் பக்கத்து ஊர்களிலும் பஜனைக்குக் கூப்பிட்டால் போய்ப்பாடுவது – இப்படி மாறிவிட்டது. ஊர்க் குரல்களையெல்லாம் உருக்கி அடித்து இணைத்த குரல்போல அவருடைய சங்கீதமும் அந்தக் காலத்துப் பெரிய வித்வான்களின் நுட்பங்களையெல்லாம் சேர்த்து உருக்கி அடித்த ஒரு வடிவமாகத் திரண்டதாம். அப்படி என் தகப்பனார் சொல்கிற வழக்கம்.

திண்ணை திண்ணையாக உட்கார்ந்து பாட்டிகளுக்கு அந்தக் காலத்துச் சந்திரமதிப் பாடல்கள், சகுந்தலைப் பாடல்கள், சித்தர் பாடல்கள், அருட்பா அருணாசலக் கவிராயர் பாட்டு எல்லாம் அவர் பாடிக் காட்டுவதை ஊரில் எப்போதும் கேட்ட முடியும். வயலுக்கு நீர் பாய்ச்சுவது, கவணை அடைப்பது, கறிகாய் கொல்லைக்குப் போவது, சத்திரத்தில் தூங்குவது – இந்த வேளைகளில் தவிர அவரை இப்படித் திண்ணைகளில் பார்க்க முடியும். சில சமயம் ஸ்வரங் கூடப் பாடுவார். பாட்டிகளுக்கோ மற்றப் புருஷர்களுக்கோ தாம் உளறுவது தெரியாது என்று அவருக்குத் தெரியும். அவர் கற்றுக்கொண்டதில்லை.

எனவே சும்மா பிரமிக்க அடிப்பதற்காகப் பதபச நிபகரி தநிகமஸ என்று ஸ்வரஸ்தானம், எந்த ராகத்துக்கு எந்த ஸ்வரம் கிடையாது, உண்டு என்ற வரம்புகளை மீறி எல்லா ஸ்வரங்களையும் கூடையில் அளப்பது போலக் கொட்டிக் கொட்டி ஜமாய்த்துக் கொண்டிருப்பார். நான் மறைந்து கேட்டுச் சந்தோஷப் படுவதுண்டு. எதிரே போனால் நிறுத்திவிடுவார். எனக்கு என்னவோ சங்கீதம் தெரிந்திருக்கும் என்று ஒரு சந்தேகம் அவருக்கு. இந்த ஸ்வரம் அவருக்கு ஒரு விளையாட்டு. அதுவும் தெரியும் என்று சிறு பையனைப் போலக் காட்டிக் கொள்ள ஓர் ஆசை. அவ்வளவுதான். ஆனால் அவர் பாட்டுக்களோ ராகங்களோ பாடும்பொழுது வேறு மனிதராக இருப்பார். வளர்ந்தவராகிவிடுவார். உருகிக் கரைவார். வெள்ளத்தில் விழுந்து ஒன்றி விடுவார். கேட்கிறவர்களையெல்லாம் சுருட்டிக் கட்டி எங்கோ இழுத்துப்போவார்.

மூன்று வருஷமாகிவிட்டன அவர் குரலைக் கேட்டு. இப்போது அதைக் கேட்கலாம்.

எட்டு மணி சுமாருக்கு மிருதங்கம் பெருமாள் கோயிலில் ஒலித்தது. குத்து விளக்கை வைத்து ஒரு சின்னக் கும்பல் அமர்ந்திருப்பது தெரிந்தது. நடந்தேன். மண்டபத்திற்குள் நுழைந்து உட்கார்ந்தேன். புரோகிதர், கிட்டன், அப்பா சாமி, சோனி, மைனர் பாலு எல்லோரும்

உட்கார்ந்திருந்தார்கள். சுருதிப்பெட்டி ஒலித்தது. மேலத்தெரு நாயக்கர் மிருதங்கத்தைத் தட்டிக் கொண்டிருந்தார். எல்லாப் பஜனைகளுக்கும் சேர்வதுபோல் ஒரு சுருதி அவருடைய வாத்தியத்துக்கு. கண்ணுக்குக் கண் ஒரு சுருதி. அப்படி இருக்கிற வழக்கம் இல்லை. இவ்வளவு தைரியம் எப்படி அவருக்கு வந்தது?

நடேசண்ணாவைக் காணவில்லை. அவர் இருந்தால் இப்படிப் பன்னிரண்டு சுருதிகளுடன் ஒரு மிருதங்கத்தைக் கத்தவிடமாட்டார். பாட்டுக்கள் காச்சு மூச்சென்று பறந்தன. மண்டபத்தில் கூம்பு வளைவுகளை மோதின.

அரை மணி. ஆயிற்று. நடேசண்ணா வந்தபாடில்லை.

"நடேசண்ணா வல்லையா?"

"நடேசண்ணாவா! அவர் வந்து ஒரு வருஷமாச்சே!"

"ஏன்?"

"வயசாயிடுத்து. புத்திகலங்கிப் போயிடுத்து. ஒரு பாட்டுப் பாடுன்னா பிரமாதப் பிகு பண்ணிக்கிறது. வக்ரிச்சுக்கறது. இது வராட்டா ஸ்வாமி கார்யம் நின்னு போயிடுமா? இல்லே, பஜனைக்குத்தான் பாட ஆள் இல்லையா?"

"அப்படியெல்லாம் நடேசண்ணாவுக்குப் பிகு பண்ணிக்கத் தெரியாதே. ரொம்ப வெள்ளையாச்சே."

"ரொம்ப வெள்ளைதான். ரொம்பச் சரியாகச் சொல்லிப்பிட்டே நீ. அதனாலேதான் வந்தது இத்தனையும்."

பக்கத்தில் இருந்த முத்து இதைக் கேட்டுச் சிரித்தான். "வெள்ளைதான். ரொம்ப சரி. ரொம்ப சரி நீ பட்டணத்திலேர்ந்து வந்திருக்கியோல்லியோ, கரெட்டாச் சொல்லிப்ட்டே."

"எனக்கு ஒண்ணும் புரியலியே அப்பாசாமி! அவர் வெள்ளைங்கறதை இவ்வளவு வர்ணம் போட்டுச் சொல்லு வானேன்? முத்து வேற என்னமோ ஒரு மாதிரியாச் சிரிச்சுக்குறான்."

"முத்து என்ன? எல்லாருமே சிரிச்சாப் படாதுன்னு சொல்ல முடியுமோ?"

இதுதான் எங்கள் ஊர் பேசுகிற மொழி. பச்சையா, சிவப்பா என்று கண்டுபிடிக்க முடியாத ஒரு பேச்சு. கபடா வெள்ளையா என்று தெரியாத

பேச்சு.

“உனக்கு என்னத்துக்கு இதெல்லாம்? அதுவும் இப்ப என்னத்துக்கு? ஏதோ நல்ல காரியம் செய்யணும்னு கோவிலைப் பார்க்க வந்து உட்கார்ந்திருக்கோம், பகவானை நினைக்கிற சமயத்துக்கு இந்தப் பேச்செல்லாம் என்னத்துக்கு இப்ப?”

அப்பாசாமி ஒரு முசுடு. கொஞ்சம் அக்னித் திராவகம் சேர்ந்த ஹாஸ்யமும் பேச்சில் உள்ளூற விசிறிக்கொண்டிருக்கும்.

பஜனை என்றால் இங்கே பாட்டு. அதற்கு நடேசண்ணா வராமல் எப்படிக் காரியம் நடக்க முடியும்?

இன்னும் ஒரு நாழிகை உட்கார்ந்து பார்த்தேன். மண்டபம் அதிர்ந்தது. காது கிழிந்தது. எழுந்து புறப்பட்டேன். ஏகாதசியில், அபசுருதிகளும் நடேசண்ணா வராத ஏமாற்றமும் குமைச்சலைக் கிளப்பி விட்டன. நடேசண்ணாவின் வீட்டுக் கதவைத் தட்டினேன்.

வீட்டில் யாரும் இல்லை. அவருக்கு மனைவி கிடையாது. பிள்ளை, அவன் மனைவி, பேரன் பேத்திகள் எல்லோரும் கோவிலுக்குப் போயிருந்தார்கள். அங்கேயே பார்த்தேன். நடேசண்ணா துண்டை விரித்து தலைக்கு ஒரு மணையை வைத்துப் படுத்திருந்தாற் போலிருக்கிறது. கதவைத் திறந்து விட்டவர், எனக்கு உட்கார ஒரு தடுக்கை போட்டுவிட்டு, அந்தத் துணிமேலேயே உட்கார்ந்துகொண்டார். நான் வந்த விவரம், வேலை பார்க்கிற விவரம் எல்லாம் விசாரித்தார்.

“ஏகாதசின்னு சந்தோஷமா வந்தேண்ணா. ஜம்பமாச் சாப்பாடு கீப்பாடு ஒண்ணும் வாண்டாம்னுட்டேன் அத்தை கிட்ட. உங்க பாட்டாவது கேட்டுத் காதையும் வயித்தையும் நிரப்பிக்கணும்னு பார்த்தேன்.”

“எம்பாட்டு கேக்காட்டா என்ன? அத்தனை பேர் பாடறாளே!”

“மண்டபம் ஏற்கனவே விரிசல் கண்டிருக்கு. இவா பாடியா விழணும்? தானே விழுந்துட்டுப் போறது.”

“ஸ்வாமிக்கு எல்லாப் பாட்டும் ஒண்ணுதாண்டா. நீ நன்னாப் பாடறியான்னா கவனிக்கிறார்? ஏதோ மனசோட பக்தியோட பாடினாப் போரும் அவருக்கு.”

“பாட்டுன்னா நன்னாப் பாடணும், இல்லாட்டா வெறுமே கோவிந்தாப் போட்டாப் போரும் அண்ணா . . . நீங்க ஏன் வந்து பாடலெ? அதைச்

சொல்லணும். இப்ப ஒரு வருஷமா நீங்க பஜனைக்கே போறதில்லையாமே?”

“நான் முப்பது வருஷம் பாடியாச்சு. வயசு குறைச்சலா ஆறதா? எழுவது ஆயிடுத்து. அம்பத்தஞ்சு வயசானா நீங்க ரிடைய ராகலியோ? . . . பொடி இருக்கா?”

“இதோ” என்று டப்பாவைக் கொடுத்தேன். ஒரு சிட்டிகை உறிஞ்சினார். நான் பட்டணத்திலிருந்து வந்தால் நடேசண்ணா என்னைத் தேடிக் கொண்டு வருவார். நல்ல வெள்ளை மூக்குப்பொடியாக நான் கொண்டு வந்திருப்பேன். இதனால் என்மேல் கொஞ்சம் அதிகப்படி விசுவாசம் அண்ணாவுக்கு. கபாலத்தில் ஏறியதும் ‘பேஷ்’ என்றார்.

“என்ன பேஷ் அண்ணா! நான் பேஷ் போடவிடலியே நீங்க?”

“நான் பாட்டை நிறுத்தி ஒரு வருஷமாச்சுடா. இனிமே பாடறதில்லேன்னு சொல்லிப்ட்டேன்.”

“யார்கிட்டே?”

“என் கிட்டத்தான். போராதா? உள்ள இருக்கிறவன் காதிலே விழுந்திருக்காதா?”

எனக்கு ஓர் அதிர்ச்சி. பாடிக் கொண்டிருக்கிறவனைப் பாடாதே என்றால் அதைவிடச் சித்திரவதை என்ன வேண்டும்? அதுவும் இவராக அந்த மாதிரி வாய்ப்பூட்டுப் போட்டுக் கொள்வானேன்?

“ஏண்ணா இப்படி?”

“விடுப்பா அதை. ஏதோ பாடறதில்லேன்னு வச்சாச்சு. ஏன் எதுக்குன்னு என்ன விசாரம் இப்ப?”

“அண்ணா! உங்க தோரணை ரொம்ப அலட்சியமா இருக்கு. ஆனா மனசிலே ரொம்ப வேதனைப்படறாப்பல இருக்கு. எங்கிட்டச் சொல்லப்டாதா? நிஜமாச் சொல்றேன். நான் அத்தையைப் பார்க்கத்தான் ஊருக்கு வரேன். வாஸ்தவம். ஆனா ரெயில் சார்ஜ் கொடுத்துப் பட்டணத்துக்கு அத்தையை வரவழைச்சுப் பார்க்க முடியும். ஆனால் நான் இங்கே வர்றது, அத்தையைப் பார்க்கமட்டுமில்லை. உங்கள் பாட்டைக் கேட்கலாம்னுதான் வருவேன். உங்களுக்குத் தெரியாததில்லியே இது. வரபோதெல்லாம் உங்களை விட்டு நான் நகர்றதே இல்லியே. ஊரிலே பெருமாள் கோயில், சத்திரம், ஆற்றங்கரை மாதிரி, நீங்க, உங்க

பாட்டெல்லாம் என் மனசிலே ஏறிக் கிடக்கே. ஊரை நினைக்கிறபோதே உங்க நினைவுதானே வரும்? இன்னிக்குச் சாயங்காலம் பஸ்ஸை விட்டு இறங்கினவுடனே மதகிலே உங்களை வழக்கம் போலக் காணும். அப்புறம் திண்ணை, கொல்லையெல்லாம் பாத்துண்டு வந்தேன்; காணும். வெறிச்சுனு இருந்தது எனக்கு. கோவில்லே போனா ஒரே நாரை காக்காக் கூச்சலாயிருக்கு. ஏந்திண்டு நேரே இங்க வந்துட்டேன். அவ்வளவு இருக்கு என் மனசிலே; நீங்க என்னடான்னா ஒரு வார்த்தையிலே, ஏன் எதுக்குன்னு விசாரப்பட வாண்டாம்னு சொல்லி – "

"ராமா, பிரபோ, வாசுதேவா" என்று குறுக்கே புலம்பிப் பெருமூச்சு விட்டார் நடேசண்ணா.

"என்னண்ணா!"

"எனக்கே வாயைக் கட்டிக்கிறது கஷ்டமாத்தான் இருக்கு. சில சமயம் என்னை அறியாம பாடக் கிறம்பிடறேன். திடீர்னு ஞாபகம் வந்து நாக்கைக் கடிச்சுக்கறேன்."

"அப்படிப் பாடமாட்டேன்னு சொல்லும்படியா பகவான் என்ன பண்ணிப்ட்டார்?"

"பகவான் பண்ணலே. அவருக்கு மனசுக்குள்ளேயே பாடிண்டுதான் இருக்கேன்."

"இந்த மாதிரி சுத்தி வளைக்கப்படாது. என்னன்னு பளிச்சுனு சொல்லணும்."

"பளிச்சினு சொல்லணுமா? உங்கிட்டே சொன்னா என்னடா? நீதான் நன்னாக் கேக்கறவன் என் பாட்டை. நீ இல்லாட்டா, கேக்க இங்க ஒரு ஆம்பிளை கிடையாது."

"கீழ் வாரிசுக்கெல்லாம் நல்ல பாட்டு, சங்கீதம்னு ருசியே இல்லைதான்."

"கீழ் வாரிசைச் சொல்லலே நான். மேல் வாரிசுகளுக்கே ஒன்றும் கிடையாது. உன் மாதிரி ஒரு உறவு இருந்ததுன்னா, நான் இந்த நெருப்பை விட்டுட்டு, கொஞ்ச நாள் உன்னோட பட்டணத்திலே வந்து அக்கடான்னு இருந்துட்டு வருவேன். அங்கே அடுத்த வீட்டுக்காரன் என்ன பண்றான்னு யாரும் மூக்கை உறிஞ்சிண்டிருக்கமாட்டான் பாரு."

"உங்களை அப்படி என்ன பண்ணினானுக இவனுக?"

“காவேரிப் பக்கம் போனியோ?”

‘இல்லியே. இருட்டறதுக்கு முன்னாலேதான் வந்தேன். காலமே குளிக்கப் போவேன்.”

“போனாத் தெரியும். கீழண்டை மூங்கில் கொல்லை இருந்தது பாரு?”

“ஆமா.”

“இப்ப அங்கே, நெல்லு, மாவு மிஷின் வச்சிருக்கார் அக்கரைச் செட்டியார் – முத்தையா செட்டியார் – மஞ்சள் காரச் செட்டியார்.”

“மூங்கில் கொல்லை பம்பாய் கிருஷ்ணையர் கொல்லை இல்லையோ?”

“அதை வித்தாச்சு. செட்டியார் வாங்கிப்ட்டார்.”

“ஏன்?”

“ஏன்னா, பம்பாய் கிருஷ்ணையர் செத்துப் போயிட்டார். அவருக்கு இளைய சம்சாரம். நாப்பத்தைந்து வயசாறது. சுடலாட்டமாயிருப்ப. அவளுக்கு ஒரே பொண்ணு. கலியாணம் பண்ணிக் கொடுத்தாச்சு. ஊரோட வந்தா. இருக்க முடியலே. நிலத்தை வித்திட்டுப் போய்ட்டா. செட்டியார் வாங்கி, கொல்லையை அழிச்சு, நெல்லு மாவு மிஷின் வச்சுப்டார்.”

“சரிண்ணா, நீங்க பாடாம இருக்கிறதுக்கும் – ”

“அவ ஊருக்கு வந்து வீட்டைப் பெருக்கி, ஒட்டடை அடிச்சுச் சுத்தம் பண்ணினவுடனேயே, பல பேருக்குப் பிடிக்கலெ. வீடு காலியாயிருந்த வரையில் சீட்டாடறத்துக்குச் சௌகரியமாயிருந்தது. பெரிய திண்ணை. வழவழன்னு சிமிண்டு போட்டிருக்கா; உக்காந்து வம்பு பேச, சீட்டாட எல்லாம் வசதியாயிருந்தது. அவ அதைக் கிளப்பி விட்டுப்ட்டா. அவ நன்னா படிச்சவ. திவ்யமான சாரீரம். ஒரு ஏகாதசியன்னிக்குக் கோவிலுக்கு வந்தா. நான் பாடிண்டிருந்தேன். எல்லாம் முடிஞ்சவுடனே, எங்கிட்ட வந்தா. ‘நான் பம்பாய், மெட்ராஸிலெ எல்லாம் கேட்டிருக்கேன். இப்படி ஒரு சாரீரம் கேட்டதே இல்லை. இப்படி ஒரு பாட்டும் கேட்டதேயில்லை’ன்னா, ஆத்துக்கு வரணும்னு கேட்டுண்டா, மறுநாளைக்குப் போனேன். எப்படிக் கேப்ப தெரியுமோ? பாட்டுப்பாடத் தெரிஞ்சாலும், கேக்கத் தெரியவாண்டாமோ? காதுன்னா அதுன்னா காது? அவ்வளவு சூக்ஷமமாக் கேப்பள். சாப்பிடற நேரம், வயல் கொல்லைக்குப் போன நேரம் போக அங்கேதான் பாடிண்டிருப்பேன். நோட்டு நோட்டா வாங்கி எழுதிண்டேயிருந்தா. சித்தர் பாட்டெல்லாம் எழுதிண்டா.

பொம்மலாட்டப் பாட்டெல்லாம் எழுதிண்டா. நான் பாடறேங்கிறியே. தசரதன் புலம்பலை அவ பாடினா, உத்தரம், சுவர்லாம் கண்ணாலே ஜலம் விடும்.

“அப்பாசாமிதான் முதமுதல்லெ ஆரம்பிச்சான். ‘நடேசண்ணா பெரிய கொம்பாப் பிடிச்சிப்ட்டார். கொம்பிலியும் கொம்பு, பம்பாய்க் கொம்பாப் பார்த்துப் புடிச்சிட்டார்’னான். ‘ஒண்ணுமில்லேடா. அவ நன்னாப் பாடறா, கேக்கறா, பாடறேன். கொம்பாவது குளம்பாவது’ன்னேன்.

“அவனும் அங்கே அடிக்கடி சௌக்யமா கிய்க்யமான்னு விசாரிச்சிண்டு வருவான். ஒரு நாளைக்கு அவ, ‘இந்த அப்பாசாமி அசடா, பொல்லாதா மாமா?’ன்னு கேட்டா. என்னன்னு கேட்டேன். ‘அது பேசறதும் நிக்கறதும் சிரிக்கறதும் என்னமோ மாதிரியா இருக்கே’ன்னா. அதுக்கப்பறம் அவன் அங்க வர்றதில்லெ. என்ன சொன்னாளோ என்னவோ! தீபாவளிம் போது கம்பிக் கரை ஜரிகைபோட்டு ஒரு ஜோடி பத்தாறு வாங்கிக் கொடுத்தா; கட்டிக்கணும்னா. கட்டிண்டேன் அதை. ‘நடேசண்ணா, என்ன மாப்பிளெ மாதிரி – என்ன இது? இருபது வயசு, ஏன், முப்பது வயது குறைச்சலான்னா காட்றது’ன்னான் அப்பாசாமி திண்ணையிலே உக்காந்துண்டு. புது வேஷ்டி கட்டிண்டா அப்படிதாண்டா இருக்கும்னு பதில் சொல்லிண்டே போயிட்டேன். ‘யாரை கட்டிண்டா? என்ன அண்ணா பதிலே சொல்லாம போறேளே . . . ம். ம். பார்ப்பேளா . . . பால்யம் திரும்பியிருக்கு’ன்னு என்னமோ பேத்தினான். காதிலே வாங்கிக்காத போயிட்டேன்.

“கார்த்திகை மாசம் – அன்னிக்கு ஏகாதசி – சிரவணம் வேறு சேந்துண்டுது. அவளும் கிருஷ்ண படத்தை வச்சு ரெண்டு புஷ்பத்தைச் சாத்தி நைவேத்தியம் பண்ணியிருந்தா. ரெண்டு பாட்டு பாடுங்கோன்னா. பாடினேன். பாடிண்டே இருந்தேன். கோவில் மறந்து போச்சு. திடீர்னு நினைவு வந்தது. ஏந்துண்டு போனேன். இந்தப் பசங்கள்ளாம் ஆரமிச்சு பஜனை நடத்திண்டிருந்தாள். கோவிலுக்குப் போனதும் போகாததுமா, டப்புனு பாட்டு ஜலார்லாம் நின்னு போச்சு. என்னன்னு புரியாம நின்னேன். ‘அப்படியே நிக்கலாம்’னு குரல் கேட்டுது. அப்பாசாமிதான் கத்தினான். ஏந்துண்டு – ஆவேசம் வந்தவன் மாதிரி முழிச்சான். ‘இது கூத்துக் கொட்டவை இல்லெ. பொம்மலாட்டக் கொட்டகை இல்லெ. பெருமா கோவில். சான்னித்யம் இருக்கிற கோவில். கண்ட இடத்துக்கெல்லாம் போயிட்டு இங்க அப்படியேவந்து நின்னா சான்னித்யம் இருக்கறதா வாண்டாமா? வேஷ்டியோட முழுகிப்பிட்டு, பிராயச்சித்தம் பண்ணிண்டு

வரணும். இப்படியே வந்தா சம்ப்ரோக்ஷணம் பண்ணியாகணும். அதுக்குக் கிராமப் பொதுவிலே பணம் இல்லெ இப்ப. உடம்பு, மனசு எல்லாத்தையும் ஊரறியச்சுத்தி பண்ணிண்டப்புறம் கோவில்லெ காலடி எடுத்து வக்யலாம் . . . எல்லாரும் பேசாம இருந்தா? தெய்வத்துக்கு அபசாரம் பண்ணி, அப்பவும் ஊர்லெ காலரா, அம்மைன்னு வந்துன்னா, ஸ்வாமிகிட்ட போய் அழுது பிரயோஜனமில்லே . . . எல்லாரும் பேசாம இருந்தா? நான் கத்திண்டேயிருக்கேன். போகக் காணும். வாசப் படியை விட்டு இறங்கச் சொல்லுங்கோ'ன்னு கத்தினான் அப்பாசாமி. நான் மூஞ்சியிலே அடிச்சாப்பல நின்னேன். ஒண்ணும் புரியலே சிதம்பரத் தாத்தா எழுந்து வந்தார். 'நடேசா, நீ போய்டேன். ஏன் நின்னுண்டேயிருக்கே?' 'எனக்கும் ஒண்ணுமே புரியலியே'ன்னேன். 'என்ன புரியலே! எதோ நீ கல்மஷப்பட்டுட்டதாக நினைக்கிறா. ஊருக்கு விரோதமா, நீ நின்னுண்டேயிருக்கலாமோ? நீ போயிடு இப்ப. நின்னுண்டேயிருந்தா அவா ஆத்திரந்தான் அதிகமாகும்'ன்னார் சிதம்பரத் தாத்தா.

"அட நீசப்பயல்களா! வர்ஜ்யா வர்ஜ்யமே இல்லாம நீங்க பாடறதைத்தான்டா கேக்கணும் பெருமாள். பேஷ் . . . ஜமாயுங்கோ'ன்னு சொல்லிண்டே திரும்பினேன். மனசு இருப்புக் கொள்ளலெ. இந்த அப்பாசாமி பணக்காரன், போக்கிரின்னா ஊர் முழுக்கவா அவன் சொல்றதுக்குத் தலையாட்டணும்? யோசிச்சுப் பார்க்கிறேன். ஒண்ணும் புரியலெ. நேரே கிருஷ்ணையர் சம்சாரத்துக்கிட்டவே போனேன். அவகிட்ட போறதுக்கும் கூச்சமாயிருந்தது. இதெல்லாம் அவ கேக்கணுமா? நான்தான் சொல்லலாமோ? சொல்லாம இருக்கவும் மனசு இடம் கொடுக்கலெ. அப்படிப் பழகிப்ட்டா அவ. போனேன். கதவை இடிச்சேன். திறந்தா. உள்ளே போனேன். நடந்ததை அப்படியே ஒப்பிச்சேன் ஒரு அபிப்பிராயம் நான் சொல்லலே. என் வார்த்தைன்னு ஒண்ணுமே சொல்லலே. அப்படியே நடந்ததை இம்மி பிசகாம சொன்னேன். அவ கேட்டாளோ இல்லையோ, சிரிக்க ஆரமிச்சளே பார்ப்பம்; விழுந்து விழுந்து ஒரு நாழி சிரிச்சா. அவளுக்கு அடக்கவே முடியலெ. கடைசியிலே எனக்கே சிரிப்பு வந்துட்டுது. நான் சிரிக்கிறதைப் பார்த்துட்டு அவ சொன்னா. 'இப்படித்தான் மாமா அதைப் பாராட்டணும். சின்ன ஊரு. அதுக்குத் தகுந்தாப்பல தான் மனசும் இருக்கும். நீங்க அங்கே பாடாட்டா என்ன? இங்கே பாடினாப் போறது. நிம்மதியா உங்க இஷ்டத்துக்குப் பாடுங்கோ'ன்னா. 'அப்படியா சொல்றே'ன்னு பாட ஆரம்பிச்சேன். நன்னா வாயை விட்டுப் பாடினேன். சிரிச்சாலும் துக்கமாயிருந்துதா? அப்படியே கொட்டிப்டேன் போயேன். அன்னிக்குக்

கேட்டிருக்கணும் நீ. நான் பாடினதாகவே தோணலே. யாரோ எனக்குள்ளே பூந்து, என் குரலை வாங்கிண்டு பாடறாப்பல தான் இருந்தது. நானே அதைக்கேட்டு அழிஞ்சு போனாப்பல ஆயிட்டுது.”

எங்கள் ஊரில் என்ன என்னவோ அதிசயங்கள் நடக்கிறது உண்டு. சேராத ஜோடிகள் சேர்வது சேரிக்குத் தீ வைக்கிறது, குளத்தைத் தூரவிடுவது, மாற்றாள் வைத்து வைத்து வாரக்கணக்கில் சீட்டாடுவது, சோற்றுக்குத்தாளம் போடுகிற நாளில் நிலத்தில் கோரைமண்ட விடுவது – இவையெல்லாம் சகஜமாக நடப்பவை. ஆனால் இந்த அதிசயம், அதுவும் அப்பாசாமிக்கு ஆவேசம் வந்த செய்தி பொறிகலங்கச் செய்தது. “ஸ்வாமி, என் நிலம் நன்னா விளையணும். என் ஆமடையா, குழந்தைகள்ளாம் நோய் நொடியில்லாம இருக்கணும். என் குத்தகைக்காராள்ளாம் நல்லவாளா இருக்கும்படியா நீ புத்தி கொடுக்கணும்” என்று கன்னத்தில் படேர் படேர் என்று பிள்ளையார் கோவில் முன்னால் நின்று போட்டுக்கொள்வான் அவன்.

படிப்பு அதிகமாகக் கிடையாது. ஆனால் சேதம், வைத்தியம், தர்ம சாஸ்திரம், ஜப்பானிய விவசாயம், ஜெட் விமானம் எல்லாவற்றையும் தானே படைத்துவிட்டாற்போல் பேசிக்கொண்டே இருப்பான். வயசு, நிறம், தோற்றம் என்ற பேதங்களைப் பெண்கள் விஷயத்தில் பாராட்ட மாட்டான். வார்த்தை பிறழ்தல், நண்பர்களுக்குத் துரோகம், காட்டிக்கொடுப்பது எல்லாம் அவனுக்கு நித்திய தர்மம். ஆலய சுத்தியைப் பற்றி அவனுக்கு ஆவேசம் வந்தது எனக்கு வியப்பாகத்தான் இருந்தது.

நடேசண்ணா மேலும் சொன்னார்; “பாடி முடிச்சேன். மணி பன்னண்டு ஆயிட்டுது. போயிட்டு வரேன்னு கிளம்பினேன். வாசற்கதவு சாத்தியிருந்தது. இழுத்தேன். திறக்கல. அவ வந்து இழுத்தா. அப்பவும் திறக்கலெ வெளியிலே தாப்பாள் போட்டுட்டானுகள். ‘சரி மாமா, நீங்க பேசாம இங்கேயே படுத்துண்டு, காலமே திறந்துவிட்டா எழுந்து போங்கோ. இல்லேன்னா இங்கேயே இருங்கோ, திறக்கறவரைக்கும். வாசக் கதவை ஜாக்கிரதையாத் தாப்பாப் போட்டவா கொல்லைக் கதவையும் போடாம இருக்கமாட்டா’ன்னா. ‘அப்படியா’ன்னு ரெண்டு பேரும் கொல்லைக் கதவைப் போய் திறந்து பார்த்தோம். திறக்க முடியலே. அங்கேயும் வெளியிலே தாப்பாப் போட்டிருந்தது. ‘சரி, இதுக்கு அர்த்தம் இன்னும் கொஞ்சம் பாடலாம்னு. முடிஞ்சா இன்னும் பாடலாம் நீங்க. பகவானுக்குத் தூக்கம் கிடையாது. நானும் தூங்காமே கேக்கறேன்’னா கிருஷ்ணையர் சம்சாரம். ‘சரி’ன்னு மறுபடியும் ஏழெட்டுப் பாடினேன்.

அங்கேயே தூங்கினேன். காலமே வீடு கூட்றவ கதவைத் திறந்துண்டு வந்தாளாம். வெளியிலே தாப்பாள் போட்டிருந்ததாம். பூட்டலையாம். நான் பாட்டுக்குக் காபியைச் சாப்டுட்டு வெளியே போனேன். வீடு வந்து சேர்ந்தேன்.

“அப்பறம் தினமும் அங்கே போயிண்டுதான் இருந்தேன். பாடிண்டு தான் இருந்தேன். ஆனா, அந்த அம்மாளே ஊரிலே இருக்க முடியாத நிலைமை வந்துடுத்து. தினமும் முத்தத்திலெ கல்லு வந்து விழும். கொல்லைக் கதவை யாரோ இடிக்கிறாப்பல இருக்கும். அவ தைரியமாப் போய்த் திறந்து பார்ப்பளாம். ஒண்ணும் இருக்காது. கொல்லைக் கோடியிலே கோட்டான் மாதிரி ஊவ்னு யாரோ கத்துவனாம். காலமே ஒரு நாளைக்கு வீட்டு வாசல்லெ அமேத்யத்தைக் கரைச்சுத் தெளிச்சிருந்துதாம்.

“மறு ஏகாதசியன்னிக்குக் காலேமே சிதம்பரத் தாத்தா வந்தார். ‘என்ன நடேசண்ணா, இப்படியே பேசாம இருந்தா?’ன்னு ஆரமிச்சார்.

‘என்ன?’

‘பிராயசித்தம் பண்ணிக்காட்டா நீ ஏகாதசி பஜனைக்கு வரப்படாதுங்கறானேடா அப்பாசாமி.’

“நான் பஜனைக்கு வரலேன்னு சொல்லிடுங்கோ’ன்னு போகச் சொன்னேன் அவரை.

“இரண்டு மாசம் பொறுத்துப் பார்த்தா அந்த அம்மா. கடசியிலே வீடு, நிலம், மூங்கிக் கொல்லை எல்லாத்தையும் மஞ்சக்காரச் செட்டியாருக்கு வித்தா. பம்பாயோட போய்ட்டா. போறதுக்கு முதநாள் ராத்திரி பாடச் சொன்னா; பாடினேன். ராத்திரி ரெண்டு மணி வரைக்கும் பாடினேன். கல்லு வந்து முத்தத்திலே விழுந்தது. லட்சியம் பண்ணலெ. பாடினேன். முடிச்சப்பறம், அந்த அம்மா நமஸ்காரம் பண்ணினா. ‘மாமா, நான் ரொம்பக் கேட்டுக்கறேன். ஊரிலே இருக்கப் போறவா நீங்க. நீங்க வெகுகாலம் இருக்கப்போறவா. என்னத்துக்கு அல்பங்களோட சண்டை போட்டுக்கணும்? என் மாதிரியிருந்தா சரி. நான் மூட்டை கட்டிப்ட்டேன். நீங்க இங்கியே இருந்து இடைஞ்சல் இல்லாமக் காலத்தை போக்கியாகணும். அதுகள் சொல்றபடியே செஞ்சுட்டு, பேசாம கோவில்லெ போய்ப் பாடிண்டிருக்கணும். பெருமாளும் சந்தோஷப்படுவார். ஊரும் சமாதானமாயிடும். நீங்க வந்து பாடலியேன்னு தான் ஊருக்குக் கோபம்னு படறது. நான் சொல்றதை நீங்க பெரிய மனசு பண்ணிக் கேக்கணும்’னா

அந்த அம்மா.

‘இத பாரும்மா. நான் அன்னிக்கே பாடறதை நிறுத்தியிருப்பேன். உனக்காகத்தான் பொறுத்திண்டிருந்தேன். நீ போனப்பறம் வாயே திறக்க மாட்டேன் பாடறதுக்குன்னு. பெருமாளைச் சந்தோஷப்படுத்த எனக்குத் தெரியும். அவர் மனசுக்குள்ளே பாடினாலே கேட்டுனுடுவார். இனிமே பாட மாட்டேன். நீ ஊருக்குப் போறவரைக்குந்தான். வண்டியிலே ஏர்றதுக்கு முன்னாடி நீ பாடணும்னாலும் பாடுவேன். போனப்புறம் பாடமாட்டேன். அதான் கடைசிப் பாட்டா இருக்கும். இந்தப் பெருமாள் பேரைச் சொல்லிச் சொல்றேன், அப்புறம் பாடமாட்டேன்’னு ஆவேசம் வந்தாப்பல கத்தினேன். புறப்பட்டு வந்துட்டேன். மறுநாள் அவ என்னைப் பாடவும் சொல்லலே, நானும் பாடலெ. மத்தியான்னம் ஊருக்குப் புறப்பட்டுப் போனா. மாயவரம் போய் ரெயில் ஏத்திட்டு வந்தேன். இன்னும் வாயைத் திறந்து பாடலெ. என்னை அறியாம வந்தா, பெருமாள் கிட்ட மன்னிப்பு கேட்டுப்பேன். வாய்விட்டுப் பாடினாத்தானா என்ன? பாளை சீவறபோது, கீத்து முடையறபோது, கவணை அடைக்கிறபோது, மொளகாய்க் கொல்லைத் தண்ணீர் பாச்சறபோது – எப்பப் பார்த்தாலும் பாடிண்டு தான் இருக்கேன்” என்று அழகு காட்டுகிறாப்போல உதட்டைப் பிதுக்கி, முகத்தை என் முன்னால் ஆட்டினார் நடேசண்ணா. பிறகு, “அது சரி, நீதான் பாடேன். நான் கேக்கறேன்” என்றார்.

எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. மனசே பாரிச வாயு வந்தவன் போல மரத்துக் கிடந்தது.

“என்ன அண்ணா இது? அவ்வளவு தூரத்திலிருந்து வந்திருக்கேன். இப்படிச் சொல்றேளே!” என்று நான் சொல்வது போலவும்,

“அட அசடு! இத்தனை நாழி சொல்லிண்டிருந்ததெல்லாம் காதிலே வாங்கிண்டாப்பலவே தெரியலியே! கோடி ரூபா கொடுத்தாலும் பாடமாட்டேன் நீ கேக்காத பாட்டா? வாயைத் திறந்து மறந்து பாடிப்ட்டா. பெருமாள் கிட்டவே கன்னத்திலே போட்டுக்கறேன். என்னமோ சொல்றியே!” என்று என் வாயை நடேசண்ணா அடைப்பது போலவும் எனக்குள்ளேயே ஒரு சம்பாஷணை.

காலையில் காவேரிக்குப் போனேன்.

எங்கள் ஊர் அழகுக் களஞ்சியம். மாவும் ஆலும், மூங்கிலும் வாழையும், நெல்லும் நீரும், புல்லும் சோலையும், நிழலும் தண்மையுமாக மனத்தை மயக்க அடிக்கிற போதைக் களஞ்சியம்.

கட்டுக்கரையில் ஏறினபோது நடேசண்ணா முண்டாசுத் தலையுடன் அரிவாளும் கையுமாக வாழைக் கொல்லையிலிருந்து வந்துகொண்டிருந்தார். கட்டுக் கரைக்கப்பால் மாவு மிஷின், நூறு கிளிகள் சேர்ந்து கிரீச்சிடுவது போல, நடேசண்ணாவுக்குப் பதிலாகப் பாடிக்கொண்டிருந்தது.

கலைமகள் தீபாவளி மலர், 1964

# ஆயிரம் பிறைகளுக்கப்பால்

ஒரு கிழ டைப்ரைட்டர் (தட்டச்சுப்பொறி) பிறந்தது இங்கிலாந்தில் ஒரு தொழிற்சாலையில். இப்போது 83 வயது முடிந்துவிட்டது. ஆயிரம் பிறை கண்டதாச்சே. இந்தியாவில் குடியேறிய இத்தாலிய, அமெரிக்க, இங்கிலாந்திய இன்னும் மற்ற விதேச டைப்ரைட்டர்களும், இந்தியாவிலேயே பிறந்த சுதேச இள நடுவயது டைப்ரைட்டர்களும் கூடி விழா எடுத்தன.

"முதுபெரும் பொறியீர், மூத்த பொறியீர், ஆயிரம் பிறை கண்ட உமக்கு ஆயிரம் தண்டன்கள் . . . " என்று தொடங்கி தென்னிந்தியாவின் தோல் ஏற்றுமதிக்கும் பொதுவான பொருளாதார உயர்வுக்கும் முதுபெரும் பொறியர் ஆற்றிய சேவையைப் பல இளவயது – நடுவயதுப் பொறிகள் பாராட்டிப் பேசின. பாராட்டுகளுக்கு நன்றி கூறுமுகத்தான் முதுபெரும் டைப்ரைட்டர் பேசியதாவது:

"அன்புள்ள இள நடுவயது நண்பர்களே!

நன்றி, நன்றி, நன்றி, நன்றி. இந்த 83ஆவது வயதில் பழைய நினைவுகள் பொங்கி வருகின்றன. இந்தப் புனித இந்தியாவுக்கு நான் அனுப்பப்பட்டது முதற் பெரும் பாக்கியம். தோல் உற்பத்தியில் இந்த ஸ்தாபனம் நூறு மடங்கு முன்னேற்றம் அடைந்திருக்கிறது – இந்த 80 ஆண்டுகளில் உண்மை –

இதைவிட மகத்தான சாதனை ஒன்று நிகழ்ந்திருக்கிறது. நான் இந்த ஸ்தாபனத்திற்கு வந்த முதல் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, லோகநாதய்யர் இந்தக் கம்பெனியை விலைக்கு வாங்கினார். அவர் பெரிய சங்கீத ரசிகர். கர்நாடக இசை மட்டுமன்றி, இந்துஸ்தானி இசையிலும் மோகம் கொண்டவர். மாலை ஏழு மணிக்குப் பிறகு இசை பெருக்கெடுத்து ஓடுகிற வீடு அது. வட நாட்டிலிருந்தும் தென் ஜில்லாக்களிலிருந்தும் இசைக் கலைஞர்கள் வந்த வண்ணம், பாடிய வண்ணம், வாசித்த வண்ணமாக இருப்பார்கள். கரீம்கான், ஜபர்கான், அல்லவுதீன் கான், கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யர், உமையாள்புரம் ஸ்வாமிநாதய்யர், நாயனாப் பிள்ளை, மகராஜபுரம், திருக்கோடி காவல், மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளை, திருமருகல் நடேச பிள்ளை, சின்னபக்கிரி – என்ற மகாவித்வான்கள் அமுத மழையாகப் பொழிந்து

கொண்டிருப்பார்கள். லோகநாதய்யர் வடநாட்டு சங்கீதக்காரர்கள் பாடும்போது கண்ணை மூடிக் கொண்டுதான் இருப்பார். 'ஆகா ஆகா' என்று அவர் வாய்மட்டும் தாங்க முடியாமல் ஆர்ப்பரிக்கும். "என்ன ச்ருதி! என்ன ச்ருதி! ஆகா! ஆகா" என்பார். அவரே சங்கீதமாய் விட்டாரோ என்று பயமாயிருக்கும்.

கர்நாடக சங்கீதக்காரர்கள் பாடும்போது கண்ணைத் திறந்து கொண்டுதான் கேட்பார் லோகநாதய்யர். யாராவது வடநாட்டுச் சங்கீதக்காரர்களைப் போல ஒரு ராகத்தை ஒரு மணி நேரம் பாடினால் கண்ணை மூடிக் கொள்வார். மற்ற சமயத்தில் படார் படாரென்று கையிலும் தொடையிலும் தாளம் போட்டு அவர்களோடு சேர்ந்து கும்மாளம் போடுவார். விரல் விரலாக எண்ணுவார். சீட்டாட்டத்தில் சின்னத் துருப்பால் பெரிய சீட்டுகளை வெட்டுவது போல் ஓங்கிக் கையைத் தட்டுவார். சுரம் பாடுவது என்கிறார்களே அப்போது அய்யர் விரல் எண்ணுவதையும் சப்பாணி கொட்டுவதையும் தொடை நோக அடிப்பதையும் பார்க்க வேண்டும். எனக்கும் அந்த நேரங்களில் தலை கொள்ளாத ஆனந்தம். படபடவென்று என்னையும் யாராவது தட்டக் கூடாதா என்றிருக்கும். ஆனால் அந்தக் காலத்தில் இது ரொம்ப ஆபூர்வம். ராகமாக மணிக்கணக்கில் இழுப்பார்கள். அய்யர் அழுவார். பிறகு அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் என்று ஒரு வித்வான் வந்தார். அவர் ரொம்ப சிக்கனம். ராகம் மூன்று நிமிஷம் பாடுவார். கீர்த்தனம் நாலு நிமிஷம் பாடுவார். சுரம் மூன்று ஐந்து நிமிஷம் அடிப்பார். எனக்கும் சந்தோஷம். நவருசி சாக்லேட் டப்பா மாதிரி எல்லோருக்கும் திருப்தியாக ராகம், பாட்டு, சுரம், நிரவல் எல்லாம் கொஞ்சம் கொஞ்சம் பாடுவார். 'காதை ரொப்பரேடா ராமானுஜம்!' என்று அவரைப் பார்த்து கூத்தாடுவார் லோகநாதய்யர். அவரைப் பார்த்து, பிறகு வந்த வித்வான்களும் விதுசிகளும் காதை ரொப்ப ஆரம்பித்தார்கள். எனக்கு உயிர் வந்தது. வடநாட்டு சங்கீத வித்வான்கள் பாடவா பாடுகிறார்கள். தம்புரா ஒலியோடு முழுகிப்போகிறார்கள். கீழ் 'பா' வாம் கீழ் 'தா' வாம். அங்கு அரை மணி நேரம் தம்புரா ஒலி மேலேயே படுத்துக் கொள்கிறார்கள். இவர்கள் குரலா, தம்புரா குரலா என்று கூடத் தெரியவில்லை. அப்புறம் ஒரு புறம் சுரமாக ஏறுகிறார்கள். மறைகிறார்கள். இது ஒரு பாட்டா? தம்புராவோடு மறைவதானால் இவர்கள் ஏன் பாட வேண்டும்? இப்போதுள்ள கர்நாடக இசைதான் இசை. தம்புராவிற்கு இவர்கள் அடிமையாவதில்லை. சுதந்திரப் பிரியர்கள், சுரப்பிரியர்கள்.

இப்பொழுது அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் இல்லை. பெரிய

நஷ்டம்தான். ஆனால் சின்ன வாரிசுகள் அவர் மறைவை நஷ்டம் என்று ஆக்கிவிடாமல் பார்த்துக் கொண்டு விட்டார்கள். தொண்ணூறு நிமிஷத்தில் தொண்ணூறு பாட்டுப் பாடுவார்கள். ஜட்கா வண்டி சக்கரத்தைச் சாட்டைக் கழியால் சீந்துவது போலவும், ஜன்னல் கம்பிகள் மீது ஓட்டுவது போலவும் சுரம் பாடி உண்மையான இசையை எழுப்பி வருகிறார்கள்.

இப்போது மக்களுக்குத் தெரிந்த ஓசைகள் ஜட்கா சக்கர சாட்டை ஓசை, ஆட்டோ ரிக் ஷா ஓசை, மோட்டார் சைக்கிள் ஓசைகள். மோட்டார் சைக்கிள் சைலன்சரை நீக்கிவிட்டு இளங்காளைகள் அண்ணா சாலையில் சடசட சடசடவென்று இசையெழுப்பிப் போவது கர்நாடக இசையும் பொறி நுணுக்க இயலும் ஒன்றே என்று நிரூபிக்கத்தான். வடநாட்டு இசைக்காரர்களும் இப்போது கர்நாடக சங்கீதக்காரர்களைப் பார்த்து இதையெல்லாம் செய்து பார்க்க முயலுகிறார்கள். இது வான்கோழித்தனம். நம்முடைய இளமயில்களை வெல்ல முடியாது.

நான் இதுகாறும் பேசியதன் உண்மை புரிந்திருக்கும் என்று நம்புகிறேன். எண்பது ஆண்டுகளாக இசை கேட்டு நான் கண்டெடுத்த உண்மை இது. அதாவது, டைப்ரைட்டர்களை ஏதோ தட்டச்சுப் பொறி என்று மட்டுமல்ல, இசைப் பொறி, தற்காலக் கர்நாடக இசையோடு உடன்பிறப்புரிமை கண்டு கொண்டிருக்கிற இசைக்கருவி. நாம் இப்போது பியானோ, புல்புல்தராஸ், ஜலதரங்கம் இவற்றையெல்லாம் விட கர்நாடக இசைக்கு மிகமிக நெருங்கிய இசைப்பொறிகள் ஆகிவிட்டோம். நாம் கலைஞர்கள், இசைஞர்கள். நம் உடல்கள் இசைப்பொறிகள். தம்புராவுக்கோ ஆதாரசுருதிக்கோ ஆட்பட்ட கொத்தடிமைகள் அல்ல. கர்நாடக சுரப்ரஸ்தார இசைப் பொறிகள்"

என்று சொல்லிவிட்டு முதுபெரும் கலைஞரும் மூத்த கலைஞருமான டைப்ரைட்டர் அமர்ந்து கொண்டது.

கேட்டுக் கொண்டிருந்த எல்லா இள – நடுவயது டைப்ரைட்டர்களும் தாங்களும் கலைஞர்கள், கலைஞர்களிலே உயர்ந்த இசைக் கலைஞர்கள் என்று இறும்பூது கொண்டன, சுரம்பாடுகிறோம் என்று அடித்துக்கொண்டன. ஜவ்வாது கடைக்கும் ஜவுளிக் கடைக்கும் ஜின் போன்ற அமுத ரகசியக் கடைக்கும் போகலாமா என்று கலந்துரையாடத் தொடங்கின.

அமுதசுரபி, ஆகஸ்ட் 1979

# மறு பிறவி

குஷால்சந்த் மட்டன்வாலா அவமானம் தாங்காமல் குன்றிப்போய் உட்கார்ந்திருந்தார். அவர் மனைவி கன்னத்தில் கை வைத்து இடிந்து போயிருந்தாள். அவருடைய அந்தரங்க ஜோஸ்யரான புரோகிதர் தைரியம் சொல்லிக் கொண்டிருந்தார்.

"ஏதோ சிறுசு. இந்த வயதிலே இப்படி குறும்பு வேடிக்கையெல்லாம் பண்ணனும்னு தோண்றது சகஜம் தான். வயசானா தானா சரியாசிவிடும் — "

"சிறுசாவது குறும்பாவது? இது நாலாம் தடவை! பூட்டை உடைத்து ஒரு வைர அட்டிகையை அபேஸ் செய்தான். எனக்கு லட்ச ரூபா தண்டம் — கேஸை அமுக்க, அம்பலத்துக்கு வராம தடுக்க. ரண்டாம் தடவை, என் மானேஜர் வீட்டிலேயே பூட்டைத் திறந்து அவரோட பைனாகுலர்ஸைத் திருடிட்டான். மானேஜர் காலிலே நானே விழும்படியாச்சு . . . நான் பணமா கொடுக்கமாட்டேங்றேன்? என் சொத்து ஒரு கோடியய்யா . . . அவனும் ஒரே புள்ளை. இவன் எதுக்காகத் திருடணும்? என்னத்திலே குறைச்சல்?"

"நீங்க கொடுக்கலேன்னா திருடறான்? சின்ன வயசுக் குறும்புன்னு சொல்றேன். சரியாப் போயிரும்னு சொல்றேன். மறுபடியும் மறுபடியும் அதையே சொல்கிறீர்களே! மட்டன் வாலாஜி! அவன் ஜாதகத்தை இன்னும் சோதிச்சுப் பார்த்து ஒரு நல்ல வழி சொல்றேன்."

"சொல்லுங்கள். நான் இப்போது மட்டன் வாலா இல்லை. எங்க தகப்பனாரும் பாட்டனாரும்தான் மட்டன், மாட்டுக்கறி, போர்க், சிக்கென் எல்லாம் மொத்த வியாபாரமா பண்ணின்டிருந்தாங்க. நான்தான் மகாத்மா பேச்சைக் கேட்டு, அந்த வியாபாரத்தைவிட்டு, பருப்பு வியாபாரம் பண்றேன் இருபத்தஞ்சு வருஷமா! ஆனா மட்டன் வாலான்னு பேரு மட்டும் இன்னும் அப்படியே இருக்கு. தாய் தகப்பன் செய்த பாவம் மக்கள் தலையிலே என்பார்கள். லட்சக் கணக்கிலே வாயில்லா ஜீவன்களைக் கொன்னு வித்த எங்க அப்பன், பாட்டன் பாவம்தான் இந்தப் பயலுக்குத் திருட்டுப் புத்தியா வந்திருக்கு. இல்லாட்டா கோடீச்வரன் மகன் திருடுவானா! இப்படியே போயிட்டிருந்தா, கோடி ரூபாயும் இவன் திருட்டுக் கேஸூகளை அமுக்கவே தீர்ந்து போயிடும்."

“அவர்தான் ஜாதகத்தைப் பார்த்து நல்ல வழி சொல்றேன்னு சொல்றாரே. காதிலே விழலையா?” என்றாள் மட்டன்வாலா மனைவி.

ஜோஸ்யப் புரோகிதர், கிஷன்சந்தின் ஜாதகத்தைப் புடம் போட்டுப் பார்த்தார். ஒன்றும் தெரியவில்லை. பஞ்சதந்திரக் கதை ஐம்பூகம் போல மதியூகத்தைக் கொண்டே குஷால் சந்தின் துயரத்தைப் போக்க முடிவு செய்தார். குஷால் சந்துக்கு அரசியலில் ஏகப்பட்ட செல்வாக்கு. பெரிய பெரிய அரசியல்வாதிகள் அவர் கைக்குள் அடக்கம். வா என்றால் வரும், போ என்றால் போகும் காய்தா. அவருக்கு எது முடியாது?

“தால்வாலாஜீ – ” என்று ஸ்வாதீனமாகக் கூப்பிட்டார் ஜோஸ்யர், மறுநாள் வந்து.

“என்ன! என்ன!”

“நீங்கதான் சொன்னீர்களே, மட்டன் வாலா என்கிற பாவப் பெயர் நிலைத்து விட்டது என்று. நானே மாற்றி விட்டேன்.”

“பலே பலே . . . ஆனா ஊர் உலகம் எல்லாம் மாத்தணுமே.”

“எனக்கு அந்தக் கவலையில்லை. நான் சைவப் பெயராலேயே கூப்பிடுகிறேன். ஜாதகத்தை நன்றாக அலசிவிட்டேன். நம்ம கிஷன் சந்து பூட்டை உடைச்சோ திறந்தோதான் நாலு தடவையும் திருடியிருக்கான் . . . சுவரேறிக் குதிக்கலெ. கன்னம் வைக்கலெ. வழிப்பறி பண்ணலே. ஜேப்படி பண்ணலே. நாலு தடவையும் பூட்டை உடைச்சிருக்கான். அல்லது லாவகமாத் திறந்திருக்கான். அதனாலெ பூட்டுக்கும் அவனுக்கும் ஏதோ ராசியிருக்கு.”

“ஆமா. குழந்தையா இருக்கிறபோதே, வேற ஒரு விளையாட்டுச் சாமானும் பிடிக்காது அவனுக்கு. பூட்டு தான் பிடிக்கும். சின்னக் குழந்தைகள்ளாம் எதைக் கொடுத்தாலும் வாயிலே போட்டுக்கும், ருசி பார்க்கும் – கடுதாசி, கல்லு, மரவட்டை, எதுன்னாலும். ஆனா இவன் மத்த எதையும் சட்டை பண்ண மாட்டான். பூட்டு கிடைச்சாப்போதும்” என்றாள் குஷால் சந்தின் மனைவி.

“ஆமா எனக்கும் ஞாபகம் வருது. நாலு நம்பர் அஞ்சு நம்பர் சேர்ந்தா திறந்துக்கற பூட்டுகள், வெறுமே அமுக்கினா பூட்டுகிற பூட்டு, சைக்கிள் பூட்டு, ஸ்பிரிங் பூட்டு எல்லாம் பொறுக்கிட்டு வந்து விளையாடுவான்” என்றார் குஷால் சந்த்.

“அப்படியா! இதை அப்பவே சொல்லிருக்கப்படாதா? நான் ஜாதகத்தை ரா முழுக்க கண்ணுக்கு விளக்கெண்ணெ போட்டுப் புடம் போட்டிருக்க மாட்டேனே . . . பேசாம ஒரு பத்து லட்சம் முதல் போட்டு ஜெர்மனி, அமெரிக்காவிலேருந்தெல்லாம் மிஷின் தருவிச்சு ஒரு பூட்டுத் தொழிற்சாலை வச்சுக் கொடுங்க பையனுக்கு. நீங்க கையை அசைத்தால் போதும், மிஷின்களை வாங்கற அனுமதி, மிஷின்கள் எல்லாம் வந்திடும். இப்ப நல்ல பீரியட் பையனுக்கு.”

கிஷன்சந்துக்கு சந்தோஷம் தாங்கவில்லை. ஒரு வருஷத்திற்குள் மிஷின்கள் வந்து இறங்கி, பூட்டுத் தொழிற்சாலை தயாராகி விட்டது. பூட்டுகள் கூடத் தயாராகத் தொடங்கின. பையனுக்குப் பெருமிதம் தாங்கவில்லை. சம்பிரதாயமாக ஒரு பெரிய புள்ளியைக் கூப்பிட்டுத் தொழிற்காலையைத் திறந்து வைக்க ஜோஸ்யர் நாள் பார்த்துக் கொடுத்தார்.

முதல்நாள் இரவு தூங்கிக் கொண்டிருந்த குஷால்வந்த் மட்டன் வாலாவை கிஷன்சந்த் எழுப்பினான்.

“என்னடா குழந்தே” என்றார் கண்ணைக் கசக்கிக் கொண்டு தகப்பனார்.

“நீங்கதாம்பா ரொம்ப நல்ல அப்பா” என்றான் பையன்.

“இதுக்கா இப்ப எழுப்பினே?”

“அந்த அப்பா ரொம்ப துர்குணம் பிடிச்ச அப்பா.”

“எந்த அப்பா?”

“போன ஜன்மத்து அப்பா!”

“போன ஜன்மத்து அப்பாவா?”

“ஆமா.”

“யாரு அவர்?”

“அவர் ஒரு மகாராஜா!”

“அட! நீ போன ஜன்மத்திலெ மகாராஜா பிள்ளையா? யாரு அந்த மகாராஜா?”

“ஸகர மகாராஜா.”

“யாரு?”

“ஸகர மகாராஜா. நான் அவர் பிள்ளையா இருந்தேன். தெரியாதா? ரொம்ப பிரசித்தி பெற்றவர். இஷ்வாகு வம்சம்!”

“இஷ்வாகு வம்சமா? அது திரேதாயுகம் அல்லவா?”

“ஆமா, ரொம்ப காலம் முன்னாலெ!”

“உம் பேரு?”

“அசமஞ்சன்.”

“பேர் கேட்டாப்பல இருக்கு. ஏன் அவரைத் துர்குணம் பிடிச்ச அப்பாங்கறே?”

“என்னைக் காட்டுக்கு விரட்டினார்!”

“ஆ! காட்டுக்கா? எதுக்காக?”

“நான் புதுசா ஒரு விளையாட்டுக் கண்டு பிடிச்சிருதேன். அது அவருக்குப் பிடிக்கலெ.”

“என்ன விளையாட்டு?”

“அரண்மனையிலேருந்து ஹாய்யா ரதத்திலே அயோத்தி வீதிகளிலே போவேன். குழந்தைகள் விளையாடிட்டிருக்கும். ஏழெட்டு குழந்தைகளைத் தூக்கிப் போட்டுப்பேன். சரயூ நதிக்குப் போவேன். அப்படியே ஜலத்திலெ அதுகளை அமுக்குவேன். எல்லாம் முழுகித் தத்தளிக்கும். கத்தும். ரொம்ப ஜோரா இருக்கும். நான் கையைக் கொட்டிச்சிரிப்பேன் . . . இப்படித் தினமும் பண்ணிக்கிட்டிருந்தேன். ‘என் குழந்தையைக் கொன்னுட்டான் பாவி, பாவி’ன்னு எங்கப்பா கிட்ட போய் எல்லாரும் அலறினாங்க. அவர் கூப்பிட்டு விசாரிச்சார். பின்னே என்ன? தெருவிலே இத்தனை வண்டியும் ரதமும் போறப்ப நடுரோட்டிலெ விளையாடலாமா? போக்குவரத்துக்கு இடைஞ்சல். அந்த மாதிரி குழந்தைங்க இருந்தா என்ன, செத்தா என்னவாம்னு சொன்னேன். எவ்வளவோ சொல்லிப் பாத்தேன். அவர் கேக்கலெ. அவருக்குப் பயம் வந்துட்டாப்பல இருக்கு.”

“இதைவிடவா பயம்? . . . எதுக்கு?”

“அவருக்கு ரண்டு ராணி. ஒரு ராணி எங்கம்மா! இன்னொரு ராணிக்கு அறுபதாயிரம் குழந்தைக. நான் அதுகளையும் புடிச்சு ஆத்திலே

தள்ளிடுவேனோன்னு பயம். நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். நான் நல்லதுதானே செய்யறேன்னு நியாயம் எல்லாம் சொல்லிப் பார்த்தேன். எங்கப்பா கேக்கலெ. உடனே என்னை ஒரு ரதத்திலே வச்சு ஒரு மண்வெட்டியும் கூடையும் கொடுத்து தூரக்க ஒரு காட்டிலெ கொண்டு விட்டுடச் சொன்னாரு. விட்டுட்டாங்க சேவகங்க. நான் பட்டினியா அலைஞ்சேன். நான் வேலை செய்யலெ. ஒரு மரத்தடியிலே உக்காந்து தவம் பண்ணினேன் – ரண்டு வருஷம்."

"எதுக்கு? பிராயசித்தமாவா?"

"நான் என்னத்துக்குப் பிராயச்சித்தம் பண்ணணும்? ஒரு நல்ல அப்பாக்குப் பிள்ளையா பொறக்கணும்னு தவம் பண்ணினேன். ரண்டு வருஷம் கழிச்சு பரமசிவன் காட்சி கொடுத்தார். நீ கலியுகத்திலே ஒரு நல்ல அப்பாக்குப் பிள்ளையாப் பிறப்பாய்னு சொல்லி மறைஞ்சு போயிட்டார் . . . நீங்கதான் அந்த நல்ல அப்பா."

"என்ன – ஒரே ஆச்சரியமா இருக்கே – நீ இஷ்வாகு வம்சத்துப் பையனா!"

"ஆமாம்ப்பா."

"என்ன பாக்யம்! என்ன பாக்யம்!"

"நீங்க ரொம்ப நல்ல அப்பாப்பா."

"சரி குழந்தெ . . . ஆனா ஒண்ணு சொல்றேன். இது வரைக்கும் போல இல்லாம இனிமே நீ சரியா நடந்துக்கணும். உன்னோட பூட்டுத் தொழிற்சாலைப் பூட்டுகளையே திருடப்படாது, தப்பித்தவறி பழைய ஞாபகத்திலே."

"என்ன சொன்னீங்க!" என்று உக்ரமாக எழுந்தான் பிள்ளை.

"சும்மாச் சொன்னேன். ஜாக்ரதையா இருன்னு."

"தெரியும். தெரியும். நீங்க இதுவரைக்கும் நல்ல அப்பாவா இருந்தீங்கன்னு பேசாம இருக்கேன். இல்லாட்டி, அந்தக் குழந்தைங்க மாதிரி ஆயிருக்கும்."

"நான் . . . அதுக்காகச் சொல்லலே . . . "

"எதுக்காகச் சொல்லலெ? பரமசிவன் எப்படி வரம் கொடுத்திருக்கார் தெரியுமா? "நீ ஒருவனாகப் பிறக்க மாட்டாய். பல தகப்பனார்களிடம் பல

பிள்ளைகளாக தேசம் எங்கும் பிறந்து அப்பாக்களுக்கு நல்ல புத்தி கற்பிப்பாய்"ன்னு வரம் கொடுத்திருக்கார். பரமசிவன் அருளால் நாங்க ஒருத்தருக்கொருத்தார் அடையாளம் கண்டுப்போம். எல்லா அப்பாக்களையுமம சீர்திருத்தி எப்படி பிள்ளைங்ககிட்ட அன்பா இருக்கறதுன்னு புத்தி கற்பிப்போம்."

"நல்லது குழந்தாய். எனக்கு நல்ல புத்தி வந்துவிட்டது. படுத்துத் தூங்கு. காலையிலே திறப்புவிழா ஏற்பாடெல்லாம் கவனிக்கணும்" என்று படுத்துக்கொண்டார் குஷால் சந்த் மட்டன் வாலா.

அமுதசுரபி, ஜூன் 1979

# மயில்சாமியின் தேவை

“மயில்சாமி வந்திருந்தான்!”

“மயில்சாமியா! எப்ப? மாடியிலே வத்தல், ஊறுகாய் ஏதாவது உலத்திருக்கியா? எடுத்துவை, மழை வரப் போவுது.”

“அதுக்கா? மயில்சாமி என்ன வாத்தியாரா? சனி, ஞாயிறு, சதுர்த்தி, அம்மாசி, மாசிமகம்னு நினச்சப்பல்லாம் லீவு மேலே இடறி உளறதுக்கு! முணு மாசமாச்சாம், ஒரு மணி நேரம் சேந்தாப்பல தூங்கி!”

“சோளியன் கண்ணு சும்மா முளிக்குதா? ஒரு எமை கோட்டுக்கு நூறு ரூபா மேனிக்கிலல்ல பாங்கியிலே ஏறது.”

“வாரிக் கொடுத்திருப்பான், போன ஜன்மத்துலெ. இப்ப வருது. யாரு தடுக்க முடியும்?”

“இப்ப யார் தடுத்தாங்க? . . . என்னாத்துக்கு வந்தான்?”

“சும்மாத்தான் அண்ணின்னான். அரைமணி போல் இருந்தான். அப்புறம் அவசரமாப் போகணும். ஒன்பது மணிக்கு ‘ஷூட்டிங்’ போயிட்டான். காபி கலந்து குடுத்தேன். சாப்பிட்டேன். எல்லாம் சொன்னான். அப்புறம் அண்ணியைக் காரிலே ஏத்திக்கிட்டு மார்க்கட்டு வரைக்கும் கொண்டுபோய் விட்டான் . . . போனான்.”

“கார் சவாரியும் ஆயிடிச்சா!”

“புதுக் காராம். நீங்க வந்தாத்தான் ஆச்சுன்னான். என்ன செய்யறது?”

“புதுக் காரா?”

“பேரிசு இவன் வைச்சிட்டிருக்கானாம்.”

“பெஞ்சாதிக்கு ஒண்ணு வாங்கினான். அதுவும் புதுசு தான்.”

“அதையும் விக்கலே, சின்ன துரையைப் பள்ளிக் கூடத்திலே போட்டிருக்கான்லே. அது வந்து நான் சின்னக் காராயிருந்தாத்தான் பள்ளிக்கூடம் போவேன்னு அடம் பண்ணிச்சாம். அதுக்காக வாங்கிப்புட்டானாம். அதைத்தான் அண்ணன்கிட்ட காமிக்கணும்னு வந்தானாம்.”

“பலேடாய்யா! மூணு மாசத்துக்கு மூணு காராச்சு. செஞ்சியிலேருந்து ஒரு பசு மாடு வாங்கியிருக்கிறான். அதுக்கு வைக்கல், பருத்திக் கொட்டை, புண்ணாக்கு வாங்கியாற அடுத்த மாசம் ஒரு லாரி வாங்கிடுவான்.”

“ஏன் நிறுத்திப்பிட்டீங்க?”

“எல்லாம் சொன்னான்னு சொன்னியே, என்ன சொல்லியிருப்பான்னு ஊகிச்சுக்கிட்டிருந்தேன்.”

“உங்களைப் போன தடவைப் பார்த்தப்புறம் இன்னும் நாற்பது படத்துக்குக் கையெழுத்துப் போட்டிருக்கானாம். இப்ப நூறாவது படமாம்! இன்னிக்குக் காலமே லட்ச ரூபாய்க்கு ஒரு படத்துக்குக் கையெழுத்துப் போட்டு அட்வான்ஸ் வாங்கினானாம். அதையும் அண்ணன் கிட்ட சொல்லணும்னு வந்தானாம். முதத் தடவையா லக்ஷ ரூபாய்க்குக் கையெழுத்துப் போட்டிருக்கான்ல!”

“சரி, அப்புறம் என்ன சொன்னான்?”

“நாலாம் மாடியிலே சுபுத்தினி கட்டி வைச்சிருக்கேன். நேத்துத்தான் முடிஞ்சுது. அதையும் பார்க்கறதுக்குத்தான் அண்ணனைக் கூப்பிட்டுப் போகலாம்னு வந்தேன்னான்.”

“என்னது! சுபுத்தினியகமே பண்ணி வைச்சிருக்கானா?”

“ஆமாம். நாலாம் மாடியிலே தூரத்திலேருந்து பாக்கறப்பவே தெரியுமாம்.”

“ஈசன் விளையாட்டு!”

‘ஸ்புட்னிக், ஸ்புடனிக்’ என்று கூறுவது என்ன என்று நான் இப்போது சொல்ல ஆரம்பித்தால் என்னய்யா, உன் வாத்தியார்த் தனத்தை எங்களிடமும் ஆரம்பித்து விட்டீரா என்று கேட்பீர்கள். அந்த ஸ்புட்னிக் முதல் முதலாகப் பறந்த அன்றுதான் மயில்சாமி நடித்த முதல் படிமும் வெளியாயிற்று.

மயில்சாமி கவலைப்படாத நாளில்லை. “மொதல் படம், எப்படியிருக்கப் போவுதோ!” என்று சதா மொண மொணவென்று நொந்து கொண்டேயிருந்தான். “அந்தச் செட்டுலே இப்படிச் செஞ்சிருக்கலாம், இந்த செட்டிலே அப்படிச் செஞ்சிருக்கலாம், இந்தப் பயலுவ கதை என்னன்னு சொல்லாமியே வேலை வாங்கியிருக்கானுவ. ஹூம்” என்ற உஷ்ணப்

பெருமூச்சுடன் கடந்து போன தவறுகளுக்கெல்லாம் கரைந்து கொண்டிருந்தான்.

ஸ்புட்னிக் காலையில் உலகத்தைச் சுற்றிற்று. அன்று மாலை மயில்சாமி நடித்த படிமும் வெளிவந்தது.

நாலாம் நாள் காலையில் வீடு அமளிப்பட்டது. கார் காராக வந்து நின்றது.

மயில்சாமி தடுப்பைத் தாண்டிக் கொண்டு கூடத்தின் எங்கள் பகுதிக்கு வந்தான்.

"அண்ணே, இந்த நாற்காலியையும் ஸ்டூலையும் எடுத்திட்டுப் போறேன். செத்த களிச்சு கொண்டாந்து போட்டுடறேன்."

"கேக்கணுமாடா தம்பி!"

யார் யாரோ வந்தார்கள். பேசிக் கொண்டிருந்தார்கள். நாற்காலியும் ஸ்டூலும் என் அறைக்குத் திரும்பி விட்டு மீண்டும் இரண்டு தடவை என் அனுமதியின் பேரில் மயில் சாமியின் கூடத்துக்குச் சென்றன.

நாலாம் தடவை வாசலில் கார் வந்து அவன் என் அறைக்கு வந்து நின்றதுமே நானே நாற்காலியை விட்டு எழுந்து கொண்டு விட்டேன். மயில்சாமி சிரித்தான். 'சாயங்காலம் வரைக்கும் பொறுத்துக்குங்கண்ணே!" என்றான்.

சாயங்காலம் வெளியே போய்விட்டு வந்தபோது மயில்சாமியின் முன் அறையில் எட்டிப் பார்த்தேன். பளபளவென்று நாலு பிரம்பு நாற்காலிகள் சாய்ந்தும் உட்கார்ந்தும் கொண்டிருந்தன.

"மயில்சாமி இல்லையா?"

"வெளியேதான் போனாங்க!" என்று அவன் மனைவி பதில் சொல்வதற்கும் வாசலில் ஒரு சின்ன டாக்ஸி நிற்பதற்கும் சரியாயிருந்தது. மயில்சாமி அதிலிருந்து இறங்கினான்.

மயில்சாமியோடு பல சாமான்கள் இறங்கின. ஒரு முகம் பார்க்கிற நிலைக் கண்ணாடி, ஒரு கைக்கடியாரம், ஒரு சுவர்க் கடியாரம், குழந்தைகளுக்குத் தங்க ஜிகினாச் செருப்புகள், அவன் மனைவிக்குத் தங்க ஜிகினாச் செருப்பு, காப்பி பலகாரம் சாப்பிட முன்னாடி வைக்கிற குட்டை ஸ்டூல் நாலு, ஒரு அமெரிக்கன் பேனா ஸெட்டு, ஒரு படி

பிடிக்கிற வெள்ளிக் கெட்டில், தலைக்குப் பெண்கள் கூந்தலை மாட்டுகிற கறுப்பு வளையம் இரண்டு, தலைவலை இரண்டு ஜோடி, நைலான் புடவை அரை டஜன், மயில்சாமி கழுத்தில் ஒரு சங்கிலி – மயில்சாமி என்னிடம் எல்லாவற்றையும் காண்பித்தான்.

"அண்ணே! கோபிச்சுக்கப்படாது, உங்க நாற்காலியை மட்டும் உள்ளாரத் திருப்பிக் கொண்டு வந்து வச்சேன். ஸ்டூலை நானே வச்சுகிட்ருக்கேன். அதுலெ உட்கார்ந்து காலமே ஒரு படத்துக்குக் கையெழுத்துப் போட்டேன் பாருங்க! நீங்க சொன்னா நம்ப மாட்டீங்க! அப்புறம் சாயங்காலம் நாலு மணி வரைக்கும் 'தபதப தபதப'ன்னு வந்துக்கிட்டேயிருந்தாங்க. இன்னிக்கிப் பதினாறு படத்துக்குக் கையெழுத்து போட்டிருக்கேன். காலமே போட்ட முதல் கையெழுத்து இரண்டாயிர ரூபாய்க்கு. அப்புறம் பாருங்க . . . ' கண்ணைச் சிமிட்டிக் கொண்டான் மயில்சாமி. "சும்மா கேட்டு வைப்பமேன்னு அடுத்தாப்பல ஒரு ப்ரொட்யூசர் வந்தாரு, அவருகிட்டே எண்ணாயிரம்னு போட்டேன்; மனசிலே கொஞ்சம் தயக்கம்தான். ஆனால் அந்த ஆளு "அதற்கென்ன"ன்னாரு. அவ்வளவு தான், அப்படியே எழுதினாரு. ஆயிரம் அட்வான்ஸ் கொடுத்தாரு. அப்புறம் வேடிக்கையைக் கடைசிவரைக்கும் பார்த்துப்பிடறதுன்னு இரண்டு இரண்டா ஒசத்திக்கிட்டே போனேண்ணே! பதினாறாவது படம் முப்பத்திரண்டாயிரத்துக்குப் போட்டிருக்கேன். எல்லாம் இந்த ஸ்டூல்லே உட்கார்ந்த வேளைதான். அது எங்கிட்டவே இருக்கட்டுமண்ணே" என்று ஒரு நூறு ரூபாய் நோட்டை என் கையில் வைத்து, ஒரு கும்பிடு போட்டான். "அண்ணன் மறுதளிக்கப்படாது" என்று பஞ்சைச் சிரிப்புடன் நின்றான் மயில்சாமி.

மூன்றாம் நாள் விடியற்காலையில் லாரியில் ஏழெட்டு ஆட்கள் வந்தார்கள்.

"அண்ணனுக்கில்ல? வரவங்க போறவங்க ஜாஸ்தியாயிடுச்சு. வேறே தனி ஊடா நூத்தம்பது ரூவாயிலே பாத்திருக்கேன் அண்ணே!" என்றான் மயில்சாமி.

லாரியில் சாமான்கள் ஏறின. டாக்சியில் மயில்சாமி குடும்பத்தோடு நானும் அவளும் கூடப் போய்ப் புது வீட்டில் அவர்களைச் குடியேற்றினோம்.

"என்னமோ இப்படிப் புசுக்குனு வந்திட்டேன்னு நினைக்கப்படாது அண்ணன். எனக்குப் பழைய நாளெல்லாம் நல்ல ஞாபகம் இருக்கு.

அதுவும் இப்ப அப்படியே குபுகுபுன்னு நினைவு வருதுண்ணே!” – மயில்சாமிக்குக் கண்ணில் நீர் கட்டி விட்டது.

“பேசாம இரு மயிலு – இந்தத் தொழிலுக்குக் கொஞ்சம் டாப்பு ஜோப்பெல்லாம் வேணும். இல்லேன்னா மதிக்கமாட்டானுக. என்னைக் கேட்டா இன்னும் கொஞ்சம் பெரிய வீடா வாடகைக்கு எடுத்திருக்கணும்” என்று நானே அவனுக்கு ஆறுதல் சொன்னேன்.

“பாத்துப்பம், அண்ணே! ஒரேடியா வீங்கப்படாது” என்று கண்ணைத் துடைத்துக் கொண்டான் அவன்.

“புது வீட்டில் ஒரு மாதம்கூட இல்லை அவன். அதற்குள் எண்பதாயிரத்துக்குச் சொந்த வீடே வாங்கி விட்டான். அந்த மனைபுகு விழாவுக்குப் பந்தல், சமையல், வரவேற்பு எல்லாம் அடியேன் மார்பத்தில்தான் நடந்தேறின. வீட்டின் நுழைவில் ‘சுபுத்தினியகம்’ என்று எழுதியிருந்தது.

“என்ன மயிலு இது?” என்றேன்.

“அண்ணனுக்கு மறந்து போச்சு, முதப் படம் ரிலீஸ் ஆன அன்னிக்குக் காலமே ஒண்ணு பறந்திச்சில்லே ரஷ்யா விலேர்ந்து – ”

“ஆமாம், ஸ்புட்னிக்கு.”

“பேப்பரைப் பார்த்தேன். அது பூமியிலேந்து கிளம்பின அதே நேரத்துக்குத்தான் அந்தப் பட ரோலுங்களும் கம்பெனியை விட்டுத் தியேட்டருக்கு ‘வான்’லெ கிளம்பிச்சுன்னு தெரிஞ்சுது. இதுக்கு நமக்கு ஆண்டவன் ஏதோ ஒத்துமை வைச்சிருக்கான்னு ஒரு தோத்தம் எனக்கு. இதெல்லாம் நல்லாக் கவனிச்சாத்தானேண்ணே தெரியுது. அப்புறம் ரெண்டாவது பறக்கவிட்டான் பாருங்க, அன்னிக்குத் தான் நான் இருபத்தஞ்சாவது படத்துக்குக் கையெழுத்துப் போட்டேன். இந்த ஸ்புட்னிக்குக்கும் நமக்கும் ஏதோ சம்பந்தம் இருக்குன்னு அப்ப இன்னும் கெட்டிப்பட்டுப் போச்சு. ஊட்டை வாங்கினேன். உடனே அதும் பேரையே வைச்சேன்.

என்ன பார்க்கிறீங்க? பேர் வேற மாதிரியிருக்குன்னு யோசிக்கிறீங்களா? பேர் வைச்சாலும் தமிள்ப் பேரு மாதிரி இருக்கணும்லேண்ணே, ஸ்புட்டுனிக்குன்னா புட்டு, இடியாப்பங்கற மாதிரி “சௌண்டு” என்னமோப் போலல்லக் கேக்குது. அதான் சுபுத்தினியகம்னு வைச்சேன். ஸ்புட்னிக் பேர் மட்டும் இல்லாம இன்னும் என்னென்னமோ ஐடியாவெல்லாம் வருது

பாருங்க. புத்தி, சுபுத்தி, சுபுத்தினியகம் எப்படி நம்ம சேர்வை. அண்ணன் என்ன கேட்டார் தெரியுமில்லே? சேர்வையண்ணே, என்ன கேட்டீங்க அப்ப?

பக்கத்து ஜமாவில் இருந்த ஒரு ஆள் சிரித்துக் கொண்டே, "ஏன், தம்பி! சம்சாரத்தின் பேரை நேரடியாப் போடாமல் இப்படிப் போட்டிருக்கீங்க போலிருக்குன்னேன். என்ன தப்பு?" என்றார்.

"கேட்டீங்களாண்ணே. சுபுத்தின்னா நல்ல புத்தி உள்ளவ. அவ அகம். அவ வீடு . . . சேர்வையண்ணன் ஐடியா பார்த்தீங்கள்ளே?"

"பலே! பலே! தெய்வம் கண்ணைத் தொறந்திச்சுதுன்னா எல்லாம் சேர்ந்துக்குது" என்றேன்.

"அகமுடையான்னு நாம சொல்லுவம், சுபுத்தினியாயிருக்கிறவங்களுக்கு அகம் யாரு?" என்று சேர்வையண்ணன் அடுத்தாற் போலக் கேட்டார்.

"எப்படிண்ணே?" என்று கேட்டான் மயில்சாமி.

"சுபுத்தினிக்கி அகம் நீதான்" என்றேன்.

"சேர்வை அண்ணே, பாத்தீங்கள்ளே. அண்ணன் தமிளைக் கரைச்சுக் குடிச்சவங்க, ஔவை, கம்பரு எல்லாம் மனப்பாடம். அவங்ககிட்ட நடக்காது"

மயில்சாமி வாயிலிருந்து வரும்போது இதெல்லாம் என்னமோ அசட்டுத்தனம் என்றே எனக்குத் தோன்ற மறுத்துவிட்டது. கூரையைக் கிழித்துக் கொண்டு தடுக்கமுடியாமல் வரும் பணத்தையும், அது சேர்த்துவிட்ட சம்பாரங்களையும் பெருமைகளையும் சிறு பிள்ளைபோல் கபடமில்லாமல் அவன் ரசிக்கிற திளைப்புத்தான் எனக்குப்பட்டது. ஏதோ நல்ல பாலாக் குடிக்கிற மாதிரி இருந்தது எனக்கு.

ஆள் கூட எத்தனையோ மாறுதலுக்குள்ளாயிருந்தான். உடம்பில் ஒரு மினுமினுப்பு. சில்க் சட்டை, அரையில் இரண்டு அங்குலம் ஜரிகைபோட்ட வெண்பட்டு. பாம்பு விரல், கட்டை விரலைத் தவிர மற்ற விரல்களில் தினுசு தினுசாக மோதிரங்கள். இடது ஆள்காட்டியில் இரண்டு மோதிரங்கள். இப்போதுதான் குளித்துவிட்டு வந்தாற்போல் மினுமினுப்புடன் மின்னுகிற தலை. தலைமயிர் கூட மாறிவிட்டது. இழைப்புளி தள்ளுகிற சுருள்களைப்போல் தலைமயிர் முழுவதும் சுருள் சுருளாகச் சுருண்டிருந்தது. சிறிதளவாவது முகத்தில் காண்கிற எண்ணெய்

அறவே மறைந்து நிரந்தரமாக ஒரு துடைத்துவிட்ட மெருகு. அவனை விட்டுக் கண்ணை எடுக்கவே முடியவில்லை.

ஆனால் வெகு நேரம் பார்க்க முடியவில்லை. கிருகப்பிரவேசத்தன்று கூட அவனுக்கு ஓய்வில்லை! ராத்திரி சாப்பாடாகி விருந்தாளிகள் முழுவதும் கலைவதற்குள் காரை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டான். கொல்லம் உப்பங்கழியில் வைத்து ஷூட்டிங்காம்.

கொல்லத்திலிருந்து காலை எட்டு மணி இருக்கும். ஒரு 'ட்ரங்கால்' வந்தது.

"வந்து சேந்திட்டேண்ணே. நீங்க ஊட்டுக்குக் கிளம்பிடாதீங்க. நாளானிக்கிக் காலமே வந்திருவேன். அப்புறம் தான் போகணும்."

மூன்றாம் நாள் காலையில் ஏழெட்டு பலாப்பழம், ஒரு டஜன் மிதியடிகள், மலையாளத்துத் தைலங்கள், பச்சைப்பாக்கு அரை மூட்டை— இப்படி வந்து சேர்ந்தார்கள் காரும் மயில்சாமியும்.

என்னென்ன வாங்குவான் அவன் என்று சொல்ல முடியாது.

"ஜப்பான்காரன், ஜப்பான்காரன் தாண்ணே. மாதளம் பளத்தைத் தோலைக் குந்துனாப்பல உரிச்சு ஒவ்வொரு முத்திலே இருக்கிற சாத்தையெல்லாம் கக்கப்பண்ணி ஒரு குளா வளியா விளப்பண்றது இலேசான காரியமா? நம்ம ஊர்லெ செய்வாங்களா? இத பாருங்க — கோமதி — நம்ம அண்ணனுக்கு அந்த மாதளங்கா மிசினைக் கொண்ணாந்து காட்டு. நெக்லஸை எடுத்துக் காட்டலையா அண்ணனுக்கு? பம்பாய்க்குப் போனேன், அண்ணே, போன மாசம். அப்ப ஒரு வெள்ளைக்காரங்கிட்ட வாங்கினேன். நாப்பத்திரண்டாயிரம் ஆச்சு, அப்புறம் இங்க வந்து பச்சையிலே பதக்கம் பண்ணுச்சு. எல்லாம் நாப்பத்தஞ்சு ரூவா ஆயிரிச்சு."

அட்டிகை பூத்துக் குலுங்கிற்று. வாங்கிப் பார்த்தேன்.

"ஹாலண்டுன்னு ஒரு ஊராமே. அங்கெல்லாம் கட்டுறானாம்" என்றான் மயில்சாமி.

திடீரென்று வாத்தியமும் பாட்டுமாகக் கேட்டது.

"எங்க பாடுது, சொல்லுங்க, பார்ப்பம்" என்று சிரித்தான் மயில்சாமி.

நான் உச்சி மோட்டைப் பார்த்தேன், கதவிடுக்கில் பார்த்தேன், சுவரைப்

பார்த்தேன். "இல்லே, இல்லே, இல்லே" என்று நான் பார்க்கிற ஒவ்வொரு இடத்தையும் பார்த்து மறுத்துக் கொண்டே வந்தான். "இங்கே" என்று வலது மார்பைத் தட்டிக் கொண்டான். சட்டையின் உள்பாக்கெட்டில் கையை விட்டு டயரி ஒன்றை எடுத்தான். டயரி இல்லை. ரேடியோ. அதை என் முன்னால் வைத்து எங்கேயோ தடவினான். சாட்டை மாதிரி புசுக்கென்று ஒரு கம்பி கிளம்பி நின்றது. "ஏரியல் அண்ணே" என்றான் அவன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. மலைத்துப் போய்ப் பார்த்தேன்.

"நம்ம ஊர்லே சித்தர் பாடல்லெ சொல்லியிருக்கும் பாங்க. இந்த ஆளுங்க செஞ்செ காமிஞ்ச்சுப்பிட்டான்க பாருங்க."

மயில்சாமி வீடு முழுவதும் ஆச்சரியங்களாக நிரப்பியிருந்தான். வீட்டுக்கு வந்ததும் எல்லாவற்றையும் சொல்லி, "என்னத்துக்கு இப்படிக் கண்டா முண்டானெல்லாம் வாங்கறான்னுதான் புரியலே" என்று சொன்னபோது இவளுக்குக் கோபமே வந்து விட்டது.

"என்னமோ ஆசை, போகட்டுமே. உங்க மோட்டார் டயர் செருப்பு என்னமோ நூறு சண்டை பாத்த சிப்பாய் மாதிரி காதுலேந்தே குதிவரைக்கு நூறு பிளாஸ்திரி போட்டுக்கிட்டு உங்களை நாலு வருசமாச் சுமக்குது."

"மோட்டார் டயர் செருப்பைப் பத்தி உனக்கு என்ன தெரியும்."

"பின்னே! அவன் மாத்திரம் உபயோகமில்லாம வாங்குவானா! ஏதோ ஆசை!"

"அதுக்காக – இப்படியா? குழந்தைகளுக்கு விரலை நீட்ட முடியலே. ஒவ்வொரு விரலுக்கும் ஒரு மோதிரம்; ஒவ்வொரு மோதிரத்திலிருந்தும் சங்கிலி கிளம்பிக் கை வளையோட ஜாய்ண்டு. கல்கத்தாக்குப் போனப்ப மூவாயிர ரூபாய்க்கு ஜவுளி வாங்கியிருக்கான். குழந்தைகளுக்குச் சட்டை வாங்கினால் தடவைக்கு ஏழெட்டு டஜனா வாங்கறது!"

"உங்களுக்கென்னாங்கறேன்? உங்க பணத்தை எடுத்துச் செலவு பண்ணாப்பலல்ல அலமலங்கறீங்க! மரியாதைக்கு அண்ணன்னு கூப்பிட்டா நெச அண்ணன் மாதிரியே காயறீங்களே?"

"அட, செலவு பண்ணறதிலே இத்தனை அசிங்கமா? பாந்தமாப் பண்ண வாணாம்? அதுக்கில்ல சொல்றேன்?"

“அவன் என்ன அசிங்கமா செலவு பண்ணான்? கோமதியைத் தவிர யாரும் அவனுக்குப் பொம்பிளையாவே பட மாட்டாங்க. ஒண்ணுக்கு ரெண்டு வேளையா காப்பி குடிப்பான். அவ்வளவுதான்.”

“அது சரி.”

“பின்னே?”

இவள் சொன்னால் நான் சிரிக்காமல் இருப்பேனா? தீபாவளிக்கு முன்னால் நல்ல பால் கிடைக்கவில்லை என்று டில்லியிலிருந்து யானை மாதிரி சுருட்டை எருமை ஒன்று வாங்கி வந்தான். அதைப் போய் வாங்க என்ன செலவு! ஒரு கோனாரோடு விமானத்தில் டில்லிக்குப் போய் மாட்டை வாங்கி ரயிலில் ஏற்றி, விமானத்தில் திரும்பிவந்து . . . எல்லாம் சரி. நாலாவது மாடி கட்டட்டும். அதன் மேல் ஸ்புட்னிக் என்னத்துக்கு?

சாப்பிட்டு விட்டுத் தூங்குகிறபோது என்னை எழுப்பி, “காப்பிக் கொட்டை மிஷினுக்குப் போய்வாரேன். பாலுக்கு ஏனம் வைச்சிருக்கேன். வந்தா வாங்கி வைச்சு மூடிப்பிட்டுத் தூங்குங்க” என்று சொல்லிவிட்டுப் போனாள் ராஜி.

மயில்சாமிக்கு ராத்தூக்கமே இல்லையாம். ராத்திரி ஒன்பது மணியிலிருந்து இரண்டு மணி வரையில் ஷூட்டிங். அங்கிருந்து வேறு ஸ்டுடியோவுக்குப் போய் உடை மாற்றி, காலை ஐந்து மணி வரையில் ஷூட்டிங், பிறகு பல் துலக்கிக் குளித்துவிட்டு மறுபடியும் ஏழு மணியிலிருந்து ஷூட்டிங். பகல் ஒரு மணிக்கு அது முடிந்ததும் இரண்டு மணியிலிருந்து ராத்திரி இரண்டு மணி வரையில் ஷூட்டிங். உடனே மூன்று மணிக்குக் காரில் ஏறி மைசூர் போய் அங்கே வெளிக்காட்சி ஷூட்டிங் . . .

போடா போ.

நான் பகலில் தூங்காமலிருக்க மாட்டேன். கோடி ரூபாய் கொடேன். சனி, ஞாயிறு பிற்பகல் தூக்கத்தை விடுவேனோ? தொண்டைத் தண்ணீர் வற்ற ஐந்து நாள் கத்துகிறேனே, எதற்கு?

ஆனால் இதற்கு எத்தனை இடைஞ்சல்! மூன்று மணிக்குக் கன்னத்தில் அறைகிறாற்போல் பால்காரன் கத்துகிற குரல் . . . இல்லாவிட்டால் வாசலில் வெயில் வீணாகாமல் கிரிக்கெட் ஆடுகிற தெருப் பட்டாளம்! தலைவலி மருந்து விளம்பரம் பண்ணுகிற தலைவலி மேலண்டை ஜன்னல் வழியாகப் பாடுகிறது. எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல்

வேலைக்காரப் பெண் பிள்ளை! என்னமோ இடும்பி வந்து விட்டு வேலை செய்கிறாற்போல். அவள் துடப்பத்தை எடுத்து பெருக்குவதே மாவு மிஷின் அரைக்கிறாற்போல். இன்று பேச வேறு ஆரம்பித்து விட்டாள். கால் தூக்கமும் அரைத் தூக்கமுமாக அதையும் என் காது வாங்கிக்கொண்டு தான் இருந்தது.

"நாப்பது ரூபாயா? எதுக்கு?"

"வேணும். ரொம்ப அவசரம். நாளன்னிக்குக் காலமே கொடுத்திடறேனக்கா."

"நாப்பது ரூபாய்க்குத் திடீரென நான் எங்க போவுறது?"

"என்னக்கா இது?"

"நாலு அஞ்சுன்னாலும் பார்க்கலாம். அதுவும் வாத்தியார்கிட்டதான் பாக்கணும். அவங்களும் முந்தாநாத்துதான் பத்து ரூபா கொடுத்தாங்க. சம்பளத்திலே ரண்டு ரண்டாப் புடிச்சிக்குங்கன்னு வாங்கினேன், இந்தச் சனி பெரிசாயிருக்கு. நேத்துத்தான் குளியல். அதுக்குத்தான் வாங்கினேன்."

சனி சனி என்றுதான் தன் மகளைக் குறிப்பிடுவாள் அவள்.

"அப்படியா? அக்காகிட்ட கேட்டா கிடைக்கும்னு நெனச்சேன்."

"என்ன செய்யிறது?"

எனக்கு என்னமோ ஒரு திகைப்பு! யார் இது! மயில்சாமி குரல் மாதிரி இருக்கிறதே என்று கண்ணைக் கசக்கி எழுந்தேன். வாசல் கதவைத் திறந்தேன். பளீர் என்ற கரு கரு வென்ற கார் நின்று கொண்டிருந்தது. வழக்கமாகக் கார்களுக்கு இரண்டு அல்லது நாலு முன் விளக்குகள் இருக்கும். இருந்தது, பக்கத்தில் வேறு நாலு விளக்குகள். மயில்சாமி கார் மாதிரிதான் இருந்தது.

படியிறங்கினதும் திண்ணையோரமாக, காம்பவுண்ட் சுவருக்கு இந்தண்டையிருந்த இடைவெளியில் மயில்சாமி நின்று கல்பகத்தோடு பேசிக்கொண்டிருந்தான். வலது கையில் துடைப்பக் கட்டையை வைத்துக் கொண்டே வேலைக்காரி கல்பகம் பதில் சொல்லுகிறாள்.

"அடடே! அண்ணன் எழுந்துக்கிட்டாங்களே" என்றான் மயில்சாமி.

"அட மயில்சாமியா! வா தம்பி! என்ன இங்கே நிக்கிறே! எப்ப வந்தே?"

“நான் வந்து அரை மணியாச்சுண்ணே. நல்லாத் தூங்கிக்கிட்டிருந்தீங்க. கனைச்சேன். இருமினேன். நீங்க எழுந்திருக்கலெ. சரி, காத்தாட நிப்பம்னு இங்கே வந்தேன்.”

கிரிக்கெட் விளையாடும் தெருச் சிறுவர்கள் காம்பவுண்டுக்கு வெளியே நின்று மயில்சாமியை வேடிக்கை பார்த்து கொண்டிருந்தனர்.

உள்ளே வந்தான் அவன்.

“உட்காரேன்.”

“இல்லேண்ணா, போகணும்.”

மயில்சாமி நிலைகொள்ளாமல் பறந்து கொண்டிருந்தான்.

“போகலாம். என்ன காரியம்?”

“ஒரு நாற்பது ரூவா பணம் வேணும்.”

“நாப்பது ரூபாயா!”

“ஆமாம்.”

“திடீர்னு — ”

“காலமே லட்ச ரூபாய்க்கு ஒரு படத்துக்குக் கையெழுத்துப் போட்டண்ணே, ஆயிரம் ரூபா அட்வான்ஸ கொடுத்தாங்க. போன மாசம் தொண்டாமங்கலத்திலே ஒரு பள்ளிகூடத்துக்குக் கட்டடம் கட்ட நாலாயிரம் ரூபாய் தரேன்னு ‘மீட்டிங்’கிலே சொல்லிப்பிட்டேன். அதைக் ‘கொடு கொடு’ன்னு நச்சரிச்சிட்டானுவ. உடனே பாங்கியிலே இருக்கிறது, அந்த ஆயிரம் எல்லாத்தியும் சேர்த்து அனுப்பிச்சிட்டேன், அண்ணே! இன்னி மத்தியானம் ஒரு மணியிலேர்ந்து கையில் காலணா இல்லேண்ணே. ஆறு மணிக்குப் பங்களூர் போகணும். ஷூட்டிங். நாளை ராத்திரிதான் வருவேன். வீட்டிலே ஏதாவது கொடுத்திட்டுப் போகணும். கைச் செலவுக்கு வேறே வேணும். நாற்பது ரூபா இருந்தாப் போதும்.

உட்கார முடியாமல் பறந்தான் அவன். முகத்தில் ஈயாடவில்லை. எல்லாச் சொத்தும் பறிபோனது போல் முகத்தில் ஒரு பயமும் வெளிரும் படர்ந்து கிடந்தன. வெறும் பயமாகக் கூட இல்லை, ஒரு திகில்.

“ப்ரொடியூசருக்கெல்லாம் போன் பண்ணினேன் கையை விரிச்சிட்டானுவ. நான் போய் நகையை அடகு வைக்கலாமண்ணே!

இத்தினி கஷ்டம் வரும்னு நான் நினைக்கவே இல்லேண்ணே. யார் யாரையெல்லாம் கஷ்டப்படுத்தியிருக்கேனோ தெரியலே.” மயில்சாமியின் கண்ணில் நீர்த்துளி கண்டது.

“என்ன தம்பி இது?”

“நெசமாச் சொல்றேண்ணேன், நான் ஒருத்தருக்கும் இதுவரைக்கும் வஞ்சனை பண்ணுனது இல்லே. இன்னிக்கி என்னைச் சோதிச்சுது பாருங்களேன் தெய்வம். எத்தினி பேரைக் கேட்டாச்சு. நம்ம கல்பகத்தைக் கூடக் கேட்டிட்டேன், பாருங்க.”

நாலு மணி நேரம் பணமில்லாமல் அவன் வாழ்க்கை தைரியம் எல்லாம் இருண்டு விட்டது.

“அண்ணே நான் எவ்வளவோ தப்பு செஞ்சிருப்பேன். அதையெல்லாம் மறந்திட்டு இப்ப எனக்குக் கைகுடுங்க. நான் மறக்கவே மாட்டேன், சாகிறவரைக்கும் மறக்க மாட்டேண்ணே.”

கல்பகம் ஜன்னல் வழியாக இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

“தாம் தாம்னு வாரி இறைச்சேன், பணத்தை மரியாதை இல்லாம. இன்னிக்கு அந்த லச்சுமி சோதிச்சுப்பிட்டா.” மயில்சாமி கண்ணீர் அடைக்கப் பேச முடியாமல் நிறுத்திக் கொண்டான்.

அந்தச் சமயம் பார்த்துக் காப்பிக்கொட்டைக் கடையிலிருந்து அவளும் வந்து விட்டாள்.

“வா தம்பி” என்று மலர்ந்த முகத்துடன் வரவேற்றவளுக்கு அவன் இருந்த நிலையைக் கண்டதும் வெளிறிப்போய் விட்டது. என்னை அர்த்தத்தோடு பார்த்தாள்.

“உங்கிட்ட எதானும் பணம் இருக்கா?” என்றேன்.

“இருக்கே! பெரியம்மா கொடுத்தவச்சிருக்கிற அம்பது ரூபாய் இருக்கு.”

“எடுத்திட்டு வா.”

பணம் வந்தது.

“அம்பது ரூபாயா வச்சுக்கவேன் தம்பி!”

“வாண்டாண்ணே. நாப்பது போதும்.”

“அட, வச்சுக்க சொல்றேன்.”

“வேண்டாம்” என்று பத்தைத் திருப்பி வைத்துவிட்டான். “நாளைன்னிக்கிக் காலமே நூறாகத் திருப்பிக் கொடுத்திடறேண்ணே.”

“நூறா! இப்பத்தானே லட்சுமி, மரியாதைன்னு வேதாந்தம் பேசினே.”

“இருக்கட்டுண்ணே.” பஞ்சைச் சிரிப்புடன் எழுந்தான் அவன்.

“காப்பி சாப்பிட்டுப் போ, தம்பி!” என்று அவள் அதட்டியதும் உட்கார்ந்து விட்டான்.

“இன்னிக்கு நரக வேதனை பட்டாச்சிண்ணேன். அண்ணன் இல்லாட்டி என்ன ஆயிருக்கும்!” என்று அதே சிரிப்புச் சிரித்தான். ஒரு பெரிய புசல் அடிச்சாப்பல ஆயிடுச்சுண்ணே.”

“அதுக்காகக் கூட்ற பொம்பிளையைப் பணம் கேட்டியா?”

“கேட்டா என்ன அண்ணே? இப்ப அது நாளன்னிக்கி நூறு ரூபாயா கொடுத்தா வாங்கிக்கும். நீங்க என்னென்ன சண்டை போடப் போறீங்களோ? அப்படியும் தெரியாத பொம்பிளையா அது? அஞ்சு வருஷமா கூடப் பொறந்த மாதிரிதானே பளகுது – வேலை செஞ்சாலும்.”

காப்பி வந்தது. சாப்பிட்டான். சொல்லிக்கொண்டான். காரில் ஏறிக்கொண்டான். போய்விட்டான். தெருப்படைகள் கையெழுத்துக்கு நீட்டின நோட்டுகளை “நாளைக்கு நாளைக்கு” என்று மீறிக்கொண்டு கிளம்பிவிட்டான்.

ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு வேலைக்காரி கூடத்தைப் பெருக்க ஆரம்பித்தாள்!

கல்கி, 5, ஜூலை 1959

# கடைசி மணி

ஆராவமுது ஒரு கனாக் கண்டார். எங்கு பார்த்தாலும் மணல் வெளி. மணல் கடல். ஒரு புல் பூண்டு இல்லை. ஆனால் நடுவில் மட்டும் ஒரு தென்னைமரம். தனி மரம் ஒரு மைல் தூரத்தில் நின்றாலும் அவர் அண்ணாந்து பார்க்க வேண்டியிருந்தது. அப்படி ஓர் உயரம். மணல் வெளி முழுவதும் நிலவு கொள்ளையாகக் கொட்டிக் கிடக்கிறது. காற்றில் ஒரு குளிர்ச்சி. தென்னையின் உச்சிக் கீற்றுகள் நிலவில் மின்னுகின்றன. ஆராவமுதுக்கு உடம்பு, உள்ளமெல்லாம் பரவசமாகக் கிடக்கு. மணலும் குளிர்ச்சியாக இருக்கும். கையும் காலும் அந்தக் குளிர்ச்சியில் துழாவத் துடித்தன. ஆனால் மணல் காலில் படவில்லை. குனிந்த போது ஒரு வெள்ளை யானையின்மீது தாம் உட்கார்ந்திருப்பது அவர் கண்ணுக்குத் தெரிந்தது. வெள்ளை யானைதான் – சற்றுத் தடவிக் கொடுத்தார். 'போடா கண்ணா!' என்றார். அது நகர்ந்து, பெரு நடை நடந்து தென்னைக்கடியில் போயிற்று. அப்போது ஆராவமுது உட்கார்ந்திருந்தவர் நின்றார். கையை உயர்த்தினார். ஒரு தென்னங் கீற்றைப் பற்றினார். ஒரு காயையும் பறித்தார். ஆனால் அது கைநழுவி விழுந்தது. மணலுக்குள் செருகி மறைந்து விட்டது. சற்று உயரத்திலிருந்துதான் விழுந்தது. எங்கே விழுந்தது என்று பார்ப்பதற்குள் மணல், யானை, நிலவு எல்லாம் மறைந்து விட்டன. கனவு பின் என்ன செய்யும்?

கனவு என்று தெளிந்து கொள்ளவே அவருக்கு ஒரு நிமிஷமாயிற்று. கண்ணை விருப்பமில்லாமல் திறந்தார். படுக்கைக்குப் பக்கத்தில் ஜன்னல் கதவிடுக்கு வழியாகக் குளிர் காற்று ஊதிற்று. மறுபடியும் கண்ணை மூடி மூடிப் பார்த்தார். ஆனால் மறுபடியும் மணல் வெளியோ நிலவோ தென்னையோ வரவில்லை. ஆனால் கனவில் வந்த பிரம்மாண்டமான சந்தோஷமும் உடம்பையெல்லாம் கிளு கிளுக்க அடித்த அமைதியும் போகவில்லை. மயிர்க்காம்பெல்லாம் சிலிர்த்தது.

அப்படியே சிறிது நேரம் மல்லாந்து படுத்திருந்தார். மேலே ஓட்டுக் கூரையின் கண்ணாடியில் கிழக்கு வெளுத்த வெள்ளை தெரிகிறது. அதன் கீழே குடியில்லாத வெறும் சிலந்திக் கூடும் தெரிகிறது. ஒரு பழைய கூடு ஒட்டடையாக மாறித் தொங்குகிறது சற்று அப்பால். பூலோகத்தில் விழித்துவிட்ட உணர்வு நன்றாக வந்துவிட்டது. வாசலில் சாணம் தெளிக்கிறார்கள். படுக்கையைச் சுருட்டி விட்டுக் கொல்லைப் பக்கம்

போனார். அங்கே பறங்கி, பூசணி, புடல், காசித்தும்பை எல்லாம் மலராகச் சொரிந்து கிடந்தன.

கனவு மறக்கவில்லை. வெள்ளை யானைமீது சவாரி! சமீபத்தில் அவர் சுந்தரகாண்டம் படிக்கவில்லை. சீதை வெள்ளை யானை மீது ஏறி நின்று சந்திரனைத் தொட்ட மாதிரி திரிசடை கனவு கண்டாளாம். அந்த சர்க்கத்தைச் சமீபத்தில் படிக்கவும் இல்லை. பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுக்கவும் இல்லை. அவர்தான் கெமிஸ்டரி வாத்தியாராச்சே. சுந்தர காண்டத்துக்கும் சல்ஃப்யூரிக் ஆசிடுக்கும் என்ன சம்பந்தம்?

பல் தேய்க்கும்பொழுது காக்கிச் சட்டையும் வேஷ்டியும் தலையில் முண்டாசுமாக யாரோ வாசல் நிலையைக் கடந்து உள்ளே வருவது தெரிந்தது. கண்ணை இடுக்கிப் பார்த்தார். பச்சையப்பன் மாதிரி இருக்கிறது. பச்சையப்பன் நம் வீட்டுக்கு ஏன் வரவேண்டும்? தலைமை ஆசிரியர் வீட்டைத் தவிர யார் வீட்டுக்கும் போக மாட்டானே, இல்லை, தமைமை ஆசிரியர்தான் அனுப்பி இருக்கிறாரா?

அவசரம் அவசரமாக வாயைக் கொப்பளித்து முகத்தைக் கழுவித் துடைத்துக்கொண்டு போனார்.

“என்ன பச்சையப்பா, எங்கே இப்படி விடியற்காலமே?”

“பெரியய்யா உங்களைக் கையோட அளச்சிட்டு வரச் சொன்னாங்க.”

“யாரு ஹெட்மாஸ்டரா?”

“இல்லங்க. பெரியய்யா.”

“யாரு?”

“பெரியய்யாங்க – கங்கநல்லூர் அய்யா!”

“செக்ரட்ரியா?”

“ஆமாங்க.”

“எதுக்கு?” – ஆராவமுதுக்கு இனம் தெரியாத ஒரு கிலி வயிற்றில் விழுந்தது.

“தெரியலீங்க.”

“என்னையா கூப்பிட்டாங்க?”

“ஆமாங்க — உடனே வரச் சொன்னாங்க . . . ”

“என்ன இது! காப்பி சாப்பிட்டுட்டு வரலாமோல்லியோ?”

“வாங்க.”

அவனுக்கும் ஒரு டம்ளர் காப்பி கொடுக்கச் சொல்லித் தாமும் குடித்துவிட்டு, பஞ்சக் கச்சம், வெள்ளை முழுக்கைச் சட்டை, அங்கவஸ்திரம் — எல்லாம் அணிந்து திருமண்ணும் இட்டு, வேகமாக நடந்தார்.

போகிற வழியெல்லாம் செகரட்ரி அண்ணாவையரின் ஞாபகம். அண்ணாவையரின் ஆறடி உயரமும், ஒல்லி உடம்பும், மொட்டைத் தலையும், அதிகாரப் பார்வையும், சிரிக்காத முகமும் வயிற்றில் விழுந்த கல்லைப் புரட்டிக் கொண்டேயிருந்தன. வழியில் எத்தனை மாடு கறப்பு, சாணி தெளிரல், கடைத் திறப்பு, கறிகாய்த் தலைக் கூடைகள், தோட்டி பெருக்கல் — ஒன்றும் கண்ணில் படவில்லை. பட்டாலும் பயமில்லாத அதிர்ஷ்ட ஆத்மாக்கள் என்பது மட்டும் அறிவுக்குப் பட்டது. பச்சையப்பனைக் கேட்பதற்கும் வாய் வரவில்லை. கேட்டால் . . . அவன் ஏதாவது சொல்லி — பயத்தை இன்னும் பெருக்கிக் கொள்வானேன்?

செக்ரடரி நம்மை ஏன் கூப்பிட்டனுப்ப வேண்டும்? தலைமை ஆசிரியரைத் தவிர அவர் வேறு யாரோடும் பேச மாட்டாரே? அவர் ரிடையரான ஐ.சி.எஸ். தமக்கு அடுத்த கீழேயுள்ள அதிகாரியைத் தவிர வேறு யாரோடும் பேச மாட்டாராம். ரிடையராகிப் பதினைந்து வருஷங்களுக்குப் பிறகும் அதே கெடுபிடியைத்தான் பின்பற்றி வருகிறாராம். ராஜா மந்திரியோடெல்லாம் பேசிவிடலாம். ஐ.சி.எஸ்.ஸோடு பேச முடியாது என்று ஒரு தினுசு மனுநீதியை நிறுவியவர் அண்ணாவையர். தலைமை ஆசிரியரைத் தவிர வேறு யாரையும் பார்க்கவும் மாட்டார்; பேசவும் மாட்டார்.

வீடு வந்து விட்டது. வாசலில் பெரிய வெள்ளைத் தூண்கள்.

“இருங்க, அய்யாட்ட கேட்டுக்கிட்டு வரேன்” என்று பச்சையப்பன் உள்ளே போனான். ஆராவமுது குறட்டில் ஏறிக் கையைப் பின்னால் கட்டி நின்றார்.

அந்தக் கால் மணியும் நாலு யுகமாக நகர்ந்தது.

“ஐயா கூப்பிடறாங்க.”

திரும்பினார் ஆராவமுது. செருப்பை ஆளோடியில் கழற்றி விட்டு, அங்கவஸ்திரத்தைத் தோளிலிருந்து முழங்கைக்கு மாற்றி உள்ளே நடந்தார். ஒரு பெரிய சாய்வு நாற்காலியில் அந்த மனுஷ ஏணி வளைந்து படுத்திருந்தது. ஒல்லியாக, சாணித்தாள் நிறமாக, மொட்டையாக, எக்கின வயிறோடு, பல்போன நீண்ட முகவாயோடு.

"நமஸ்காரம்."

"ம். நீர்தான் ஆராவமுதாச்சாரியா?"

"ஆமாம்."

"உட்காரும்."

நாற்காலியில் உட்கார்ந்தார் ஆராவமுது. பயத்தை, எப்படி மறைத்துக் கொள்வது? "கூப்பிட்டனுப்பிச்சதாக . . . பச்சையப்பன் வந்து . . . "

"ஆமாம். எத்தனை வருஷம் சர்வீஸ் உமக்கு?"

"முப்பத்து நாலு வருஷங்கள். இந்த ஜனவரியோட ரிடயராறேன்."

"ம் . . . இன்னிக்கு ஒன்பது பேர் லீவு. ஹெட்மாஸ்டர் லீவு. அப்புறம் கீழே இருக்கிற அடுத்த எட்டுப பேரும் லீவு. உதவி ஹெட்மாஸ்டர் நாளைக்கு வந்துடுவார். இன்னிக்கு நீர்தான் ஸ்கூலைப் பார்த்துக்கணும், பார்த்திப்பீரா.

"பார்த்துக்கறேன்."

"பச்சையப்பா . . . "

"இதோங்க."

"ஐயாவுக்குப் காப்பி கொண்டுவரச் சொல்லு."

"நான் வரபோது சாப்பிட்டுத்தான் . . . "

"பரவால்லெ."

பிறகு கிழவர் பேசவில்லை. 'ஹிந்து' பேப்பரால் முகத்தை மறைத்துக்கொண்டு விட்டார். பத்து நிமிஷங்கள் கழித்துப் பேப்பர் இறங்கிற்று. முகம் தெரிந்தது.

"இன்னும் காப்பி சாப்பிடலை?"

"பரவால்லெ."

"பச்சையப்பா!"

"இதோங்க."

"இன்னும் காப்பி கொண்டு வரல்லை?"

மூன்று நிமிஷம் கழித்துச் சமையற்கார அம்மாள் மாதிரி ஒரு அம்மாள் ஒரு வெள்ளி டம்ளரில் காப்பி வைத்துவிட்டுப் போனாள். பக்கத்தில் ஸ்பூன் போட்ட ஒரு கப்பில் சர்க்கரையும் வைத்துவிட்டுப் போனாள். ஐ.சி.எஸ். காரர்கள் வீட்டில் தனியாகத்தான் சர்க்கரை வைப்பார்கள் போலிருக்கிறது! என்ன இருந்தாலும் ஐ.சி.எஸ். – ஐ.சி.எஸ். தான், என்று தாமே ஐ.சி.எஸ். ஆகிவிட்டாற்போல ஆராவமுது பூரித்துக்கொண்டார். ஆனால் ஒரு ஸ்பூன் சர்க்கரை கைநடுங்கலில் பாதி கீழே சிதறி, பாதிதான் காப்பிக்குள் விழுந்தது. அந்தச் சமயம் பார்த்து, 'ஹிந்து' பேப்பர் கீழே இறங்கிற்று. முகம் தெரிந்தது. அப்படியே கீழே உதிர்ந்த சர்க்கரையைச் சிறிது நேரம் பார்த்தது.

"பி கேர் புல். வெள்ளை சட்டை போட்டுண்டிருக்கிறீர்" என்றும் சொல்லிற்று.

சர்க்கஸ் பண்ணுவது போல் வெள்ளைச் சட்டைமேல் வழிந்துவிடாமல் காபியைக் குடித்துவிட்டு, டம்ளரைச் சத்தமில்லாமல் வைத்துவிட்டு உத்தரவுக்குக் காத்திருந்தார் ஆராவமுது. பச்சையப்பன் இடைகழி நிலையில் நின்று இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான்.

"நீங்க போகலாம். பச்சையப்பா, சாவிக் கொத்தை ஐயாகிட்ட கொடு."

பச்சையப்பன் சாவிக் கொத்தைக் கொடுத்தான். அதில் பத்துப் பதினைந்து சாவிகள். ஏன் இந்தச் சாவிகள் என்று புரியவில்லை. பள்ளிக் கூடத்தில் பச்சையப்பனிடமோ குமாஸ்தாவிடமோ கேட்டுக்கொள்ளலாம் என்று முழங்கை அங்கவஸ்திரத்துடன் வெளியே வந்தார் ஆராவமுது.

பச்சையப்பன் தெருவில் கூடவே இறங்கி வந்தான். "பெரியய்யாவுக்குத் தைரியமாயிருக்கிறவங்களைக் கண்டாத்தான் பிடிக்கும்" என்று அவரைப் பார்க்காமல் சொல்லிவிட்டு நின்றான்.

"சரி . . . " ஆராவமுதுக்கு வாய் நமநமவென்றது. "சர்க்கரை கொட்டினது பயத்திலேன்னு நெனச்சியா? ஒரு மரியாதை – அவா எவ்வளவு பெரிய உத்தியோகங்கள்ளாம் வகிச்சவா? . . . அவாளுக்கு

முன்னாலே நிக்கறதுக்கு நமக்கு ஏது அர்ஹதை . . . அசட்டுப் பயம்னு நெனச்சிண்டயா — அட அசடு!"

அவர் பாதி முடிப்பதற்குள் "அது சரிங்க" என்று சொல்லிக் கொண்டே வந்த வழி திரும்பினான் பச்சையப்பன்.

அவன் போன பிறகு ஆராவமுதுக்கு வியப்பாக இருந்தது, "நாமும் ஹெட்மாஸ்டர் வரதய்யங்கார் மாதிரியே ஆகிவிட்டோமே" என்று. வரதய்யங்கார் ஒவ்வொரு கூட்டத்திலும் வாத்தியார்களிடம் பேசும்போது இப்படித்தான் தொடங்குவார். "நாமல்லாரும் நன்னாயிருக்கணும்; நம்ம வித்தியார்த்திகளெல்லாம் நன்னாப் படிச்சு, நம்ம வித்யாசாலை லோகோத்தமாப் பரிமளிக்க அவா ப்ரதீக்ஷிக்கிறா. லண்டன்லே பாஸ்பண்ணி டில்லி, சிம்லான்னெல்லாம், ஜில்லா, மாகாணம் எல்லாம் ஆண்டவாளுக்கு இந்த மாதிரி ஓர் அல்ப வித்யாசாலைக்கு அத்யக்ஷாளா இருக்கணும்னு என்ன முடை? எல்லாம் நாம, நம்ம வித்யாசாலையெல்லாம் விக்ருதியில்லாமல் விஷேபம் இல்லாமல் இருக்கணும்னு ஒரே விஷாதம், ஒரு விச்வாசம் . . . "

அதே மாதிரி தாமும் ஆகிவிட்டோம் என்று தோன்றிற்று. "அடுக்கு மொழி வடமொழிக்கும் உண்டப்பேன்" என்று துரைசாமிக் கோனாரிடம் ஸமஸ்கிருதப் பண்டிதர் மீட்டிங் முடிந்ததும் சொல்வது கேட்டது.

வீட்டுக்குப் போனதும் உடனே குளித்தார் ஆராவமுது. சம்சாரத்திடம் விஷயத்தைச் சொன்னார்.

"இலையைப் போடு. இன்னிக்கு ஒன்பது மணிக்கு ஸ்கூல்லே இருக்கணும். நித்யம் மாதிரி பத்து மணிக்குத் தரையை ஆத்திண்டு போகிறதுக்கில்லே."

"தாளிகை பாதிகூட ஆகலியே."

"மோருஞ் சாதம் போரும்."

"பூஜையை முடிக்கட்டுமே. அதுக்குள்ள ஆயிடும்."

"ப்ஸ — நான் என்னமோ சொல்றேன். நீ என்னமோ சொல்லிண்டிருக்கயே — இலையைப் போடுன்னேன்."

"ஏன் இப்படி யார் மாதிரியோ பேசியாரது. இன்னிக்கு?"

"ப்ஸ, என்ன இது! இன்னிக்குன்னு விப்ரலம்ப சிருங்காரம் பண்ணத்

தோன்றதா உனக்கு? இன்னிக்கு பூஜை சாயரட்சைதான். இலையைப் போடு."

மோர்சாதம்தான். அதை அவசர அவசரமாகச் சாப்பிடும்போது "ஒன்பது பேர் லீவு எடுத்துண்டாத்தான் உங்களை எட்மாஸ்டராய் பண்ணணும்னு தோணித்தாக்கும்" என்றாள் சம்சாரம்.

அவர் நிமிர்ந்து அவளை முறைத்துப் பார்த்தார். "கோமளம், நீ கொஞ்சம் படிச்சிருக்கப் படாதா?" என்று மாத்திரம் சொன்னார். கடைசிக் கவளத்தைப் போட்டுக் கொண்டு எழுந்தார்.

பள்ளிக்கூடத்தில் ஹெட்மாஸ்டரின் நாற்காலியில் உட்காரப் பயமாக இருந்தது. பக்கவாட்டில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து என்னமோ கடுதாசிகளையெல்லாம் பார்த்தார். ஆனால் அந்த நாற்காலியில் உட்கார வேண்டும் போலவும் இருந்தது. எழுந்தார். அவர் மனசைப் பார்த்துவிட்டதுபோலப் பச்சையப்பன் வந்து நின்றான். "எனக்கா தைரியம் போராது!" என்று தமக்குள் சொல்லிக் கொண்டார். பள்ளியில் வகுப்பு வகுப்பாகக் கோலிவிட்டு வந்தார்.

"என்ன ஆராமுது?" என்று ஆனைக்கால் கோபாலய்யர் கூப்பிட்டார்.

"நீதான் இன்சார்ஜாமே இன்னிக்கு?" என்றார். திரும்பிப் பார்த்த ஆராவமுதுக்கு அந்தப் புன்னகையில் விஷம்தான் தெரிந்தது.

"ஆமா – தலையெல்லாம் லீவு எடுத்துண்டா. என் மாதிரி காலுக்குத்தான் பாரம் எல்லாம் வந்து சேருகிறது" என்று கோபாலய்யரின் காலைப் பார்க்காமலே சொல்லிவிட்டுத் தலைமை ஆசிரியரின் அறைக்குச் சென்றார். அந்தப் பதிலை எப்படிச் சொன்னோம்?

ஒரு புதுத் தைரியம் பிறந்துவிட்டது. சற்றுக் கழிவிரக்கமும் வந்தது. "ஒரு மனிதனுடைய அங்கப் பழுதைக் காட்டிக் கேலிசெய்வது மகா பாவமாச்சே. அற்பத்தனமாச்சே" என்று சற்றுச் சிரமப்பட்டார். ஆனால் அப்படிப் பதில் சொல்லுகிற தைரியம் வந்ததே. ஆணுக்கு அழகு தைரியம் அல்லவா? கோபாலய்யர் குன்றி வெட்கி வகுப்புக்குள் மறைந்த கோலம், ஒரு திக்விஜய சக்கரவர்த்தி கண்டு களிக்கிற கோலமல்லவா?

இப்பொழுது யாரும் இல்லை . . . குமாஸ்தா எம்மானுவேல் மட்டும் என்னமோ டைப் அடித்துக் கொண்டிருந்தார்.

ஆராவமுது தலைமையாசிரியரின் நாற்காலியில் உட்கார்ந்து விட்டார்.

முதலில் என்னமோ சுழல் நாற்காலியில் உட்கார்கிற மாதிரி இருந்தது. அது வெறும் நாற்காலிதான். நன்றாகச் சாய்ந்து கொண்டார்.

மணியைப் பார்த்தார். பதினொன்றரை. இரண்டாவது பீரியட் இன்னும் பத்து நிமிஷத்தில் முடியும். "பச்சையப்பா! என்னைப் பார்த்தா சொன்னே!" என்று தமக்குள் கறுவிக் கொண்டார்.

"எம்மானுவேல்!" என்று கூப்பிட்டார்.

"சார்!"

"இப்படி வா."

எம்மானுவேல் வந்தார்.

எனனமோ ஒரு கடுதாசியில் கிறுக்கினார். கையெழுத்தைப் போட்டார். "இந்தா, இதை எடுத்துண்டு எல்லாக் கிளாஸிலேயும் காமிச்சுட்டு வா."

எம்மானுவேல் அதைப் படித்தார். "ஏன் சார்?" என்றார்.

"என்ன?"

"இன்னிக்குப் பள்ளிக்கூடம் இரண்டாவது பீரியடுக்கு அப்புறம் கிடையாதுன்னு போட்டிருக்கீங்களே — ?"

"நீ போய் காமிச்சிட்டு வா. செக்ரடரிவாள் கிட்டே நான் சொல்லிக்கிறேன், போயேன். ஏன் நிக்கறே? ஒரு பத்து நிமிஷம்தான் இருக்கு. கடைசி மணி அடிச்சாகணும்."

எம்மானுவேல் குடு குடுவென்று ஓடினார்.

பச்சையப்பன் மணியடிக்கிற கட்டையைத் தூக்க வந்தான்.

"நீ சர்க்குலர் பார்த்தியா பச்சையப்பா?"

"என்னங்க?"

"இன்னிக்கு இரண்டு பீரியட்தான் பள்ளிக்கூடம். கடைசி மணி அடி."

"ஏங்க?"

"நான் ஒரு நாளைக்கு ஹெட்மாஸ்டரா இருந்தது இந்த ஜில்லாவிலேயே நினைவிருக்க வேண்டாமோ?" என்று சொல்ல வேண்டும் போலிருந்தது ஆராவமுதுக்கு. ஆனால் சொல்லவில்லை. அந்தத் தைரியத்தை

அண்ணாவையரிடமல்லவா காண்பிக்க வேண்டும் என்று தைரியத்தை அடக்கிக் கொண்டார்.

கடைசி மணி கண கண கண கணவென்று அரை நிமிஷம் அடுக்கிற்று. இரைச்சலாகக் கிளம்பிற்று.

பச்சையப்பன் கட்டையை வைக்க வந்தான்.

"லக்ஷத்திலே ஒரு ஆளுங்க நீங்க" என்று அவன் சொல்வது போலிருந்தது ஆராவமுதுக்கு.

"செக்டரிக்குத் தைரியசாலியைக் கண்டாத்தான் பிடிக்கும்னு நீ தானேடா சொன்னே" என்று அவர் சொல்லுவது போலிருந்தது பச்சையப்பனுக்கு. ஆராவமுது அப்போது கண்ணை மூடி நினைவில் ஆழ்ந்திருந்தார். வெள்ளை யானை சொப்பனம் மாதிரி இருந்தது.

கல்கி தீபாவளி மலர், நவம்பர் 1970

# பாப்பாவுக்குப் பரிசு

பாப்பாவுக்கு விழிப்புக் கொடுத்தது. எழுந்து உட்கார்ந்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். அம்மாவுக்கு நல்ல தூக்கம். தலையணை உயரம் போதாததால் இடது கையையும் தலைக்கு வைத்து ஒருக்களித்தவாறு உறங்கிக் கொண்டிருந்தாள். கூந்தல் அவிழ்ந்ததும் அவிழாததுமாகப் புரண்டு கிடந்தது.

நடுநிசி. முற்றத்து வானத்தில் தங்கம் இறைந்து கிடந்தது. கொல்லை மரங்கள் சலசலவெனச் சிரித்தன. பாப்பாவுக்கு இரவுத் தேவதையின் சிரிப்பாகத்தான் தோன்றிற்று அந்தச் சலசலப்பு. தென்னை மரங்கள் இரண்டும் சிறு காற்றில் ஆடி ஆடித் தூங்கி வழிந்தது, முற்றத்தில் தெரிந்தது. எங்கேயோ நெடுந்தொலைவிலிருந்து தமுக்கு ஓசை அடக்கமாகக் கேட்டுக் கொண்டே இருந்தது. காளியாட்டமா? ஊர் எல்லையில் புதுக்குளத்தியம்மனுக்குப் பச்சை படைக்கிறார்களா? அந்தக் தமுக்கு ஓசையில் பச்சைக்காளி பாபுக்காளிகளின் தித்திப்பல்லும் பளிங்கு விழியும் கூட மிதந்து வந்தன. பாப்பாவுக்குப் பயம் வயிற்றைக் கலக்கிற்று, ஒரு பக்கம் ஙிஙிஙிஙி என்று சுவர்க்கோழியின் மெல்லிய இசை எங்கிருந்து என்று தெரியாமல், ஓயாமல் இசைத்தது. சுவர்கோழியின் சத்தமா அது? அல்லது நக்ஷத்திரங்கள்தான் சீட்டியடிக்கின்றனவா?

தூணில் மாட்டியிருந்த பெட்ரூம்விளக்கின் முத்தொளி, இருக்கிற இருளையும் பயத்தையும் எடுத்துக் காண்பித்தது. மேலே ஓட்டுச் சார்பில் கர்கர் என்றுவிடாமல் எலி அறுத்தது. தெருக்கோடியில் திடீரென்று நாய் குரைத்தது. நாய்க்குத் தூக்கமே கிடையாது. வீட்டைக் காக்கிறேன், காக்கிறேன் என்று ஊரைத் தூங்கவிடாமல் அடிக்கும். வயிற்றைப் பக் பக்கென்று பறக்க அடிக்கும். பாப்பாவுக்கு நெஞ்சு அடித்துக்கொண்டது. படுத்துக்கொண்டு அம்மாவை அணைத்துக் கொண்டாள். அம்மா அசையவில்லை. அடித்துப் போட்டாற்போல தூக்கம். பத்து மாமரம் முறிந்து விழுகிற சத்தம்கூட அவளை எழுப்ப முடியாது.

“சாமி, அப்பா நாளை விடிய ஊருக்கு வந்திரணும். இப்பவே வரட்டுமே. அம்மாவும் நானும் ஒண்டியா இருக்கமே. பயமாயிருக்கே” என்று சொல் கேட்ட பெருமாளை வேண்டிக்கொண்டாள் பாப்பா.

ஊருக்குத் தெய்வம் குளத்தங்கரைக் கோயிலில், வயல்களையும் பொழுது சாயும் திக்கையும் பார்த்துக் கொண்டு குடி கொண்டுள்ள சொல் கேட்ட பெருமாள்.

பாப்பா கண்ணை மூடப் போனாள். என்ன அது கறுப்பாக ஓட்டு மேலே? மரநாயா, பூனையா, கன்றுக்குட்டியா? கன்றுக்குட்டி ஓட்டிலா ஏறும்?

ஆள் . . . ஆள் தான்! திருடன்! திருடன்!

பாப்பாவின் தொண்டை அடைத்துவிட்டது. கூச்சல் போடலாம். முடியவில்லை. ஒரு முறை கண்ணை இறுக மூடினாள். திகில்தான் அதிகரித்தது. திறந்தாள். முற்றத்தில் குதித்து, ஒரே பாய்ச்சலில் தாழ்வாரத்திற்கு வந்துவிட்டான் திருடன். நின்று ஒரு முறை பார்த்தான். அம்மா வாயைக் கையால் அம்மினான். அம்மாவின் கை தானாகக் கையை அகற்றப் போயிற்று. அகற்ற முடியவில்லை. விழித்துக் கொண்டு மல்லாந்தாள். "ப்பே . . . " என்று அலறப் போனாள். அதற்கும் முடியவில்லை. வாயை அழுத்தி மூடிவிட்டான் திருடன். முனகல்தான் கேட்டது. இடுப்பில் இருந்த கத்தியை எடுத்து ஓங்கி, "பேசாதே" என்று ஜாடை காட்டினான். அம்மா கல்லாக உறைந்துவிட்டாள். வேஷ்டியை வாயில் வைத்துத் திணித்துக் கையிரண்டையும் சேர்த்துக் கட்டினான். காலையும் கட்டிப் போட்டான். பக்கத்தில் படுத்திருந்த பாப்பாவைப் பார்த்தான். பாப்பாவுக்கு நல்ல தூக்கம்! அசையாமல், மூச்சை ஒழுங்காக விட்டுக் கொண்டு, படுத்துக் கிடந்தாள். கண்ணின் இடுக்கு வழியாக அவள் பார்ப்பது அவனுக்குத் தெரியவில்லை. பெட்ரூம் விளக்கின் ஒளி அவன் கண்ணின் கூர்மையை மழுக்கிவிட்டது. அவளை விட்டுவிட்டு, சாமான் அறையை நோக்கி ஓடி உள்ளே புகுந்து விட்டான்.

அம்மா பாப்பாவைத் திருப்பிப் பார்த்தாள். கண்ணும் முகமும் அசைந்தது. என்ன சொல்கிறாள் என்று புரியவில்லை.

பாப்பாவுக்குத் திடீரென்று ஒரு யோசனை மின் வெட்டிற்று. உதட்டில் விரலை வைத்தும் பேசாமல் இருக்கும்படி ஜாடை காட்டி விட்டு, எழுந்து அடிமேல் அடி வைத்து நின்றாள். அறையருகில் நின்று எட்டிப் பார்த்தாள். அறை நீள அறை. அந்தக் கோடியில், வாசலைப் பார்த்து நிற்கும் ஜன்னலுக்குப் பக்கத்தில் மூன்று ட்ரங்குப் பெட்டிகள் ஒன்றுமேல் ஒன்றாக அடுக்கியிருந்தன. முதல் பெட்டியைத் திறந்தான். நெருப்புக் குச்சி அணைந்தது. அந்தப் பெட்டியைக் கீழே வைத்து அடுத்த

பெட்டியைத் திறக்க போனான். அது பூட்டியிருந்தது. அம்மாவின் பட்டு புடவையிரண்டும், பாப்பாவின் பட்டுப் பாவாடைகளும் வைத்திருந்த பெட்டி அது. அதைத் திறப்பதற்காக எதையோ இடுப்பிலிருந்து எடுத்தான்.

அவ்வளவுதான், பாப்பாவுக்கு கை நடுங்கிற்று. சரேலென்று முன்னால் சாய்ந்து தாழிடும் வளையத்தை இழுத்துக் கதவைப் படார் என்று சாத்தி, நிலையிலிருந்த நாதாங்கியில் வளையத்தை மாட்டி விட்டாள். கூடத்தில், அடுக்களை நிலைக்கருகில் விசிறி கிடந்தது. ஓடிப் போய் அதை எடுத்து வந்து கொக்கியில் செருகினாள். இனிமேல் கதவைத் திறக்க முடியாது.

தட தட தட தடவென்று உள்ளேயிருந்து கதவையிழுக்கும் சத்தம் கேட்டது. பாப்பா வாசல்கதவைத் திறந்து கொண்டு ஓடினாள். அடுத்த வீட்டு வாசலில் கட்டிலில் உறங்கிக்கொண்டிருந்த ஐயாத்தேவரை எழுப்பினாள்.

“மாமா, மாமா . . . திருடன், திருடன்! மாமா, திருடன்.”

‘ஆ ஆ’ என்று பதறியடித்துக் கொண்டு எழுந்தார். ஐயாத்தேவர்.

“திருடன், திருடன்.”

“எங்கே? எங்கே?”

“உள்ள வச்சு சங்கிலியைப் போட்டுட்டேன். ஓடியாங்க. அம்மாவைக் கட்டிப் போட்டிருக்கான்.”

அவ்வளவுதான், ஊர் கூடிவிட்டது. ஐந்து நிமிஷத்தில் தெருவோர் முழுவதும் வீட்டுக்குள் நுழைந்து விட்டார்கள். ஒரு கையில் கம்பு! ஒரு கையில் அரிவாள்! கையில் விறகுக் கட்டை! ஒரு கையில் தலைக்கு வைத்துக் கொள்ளும் மணை! கையில் அகப்பட்டதை எடுத்துக் கொண்டு திரண்டுவிட்டார்கள்.

“எங்கே? எங்கே?”

“அதோ அந்த உள்ளே.”

“இருக்கிறானா?”

“ம்.”

“எத்தினி பேரு.”

“ஒரே ஆள் தான்.”

“ஏலே, யார்றா பய? வாடா வெளியே.”

“வர்றேன் . . . என்னை விட்டிடுங்க. அப்படியே ஓடிப்போயிடறேன். பிடிச்சுக்கிடிச்சு ஏதாவது செஞ்சீங்களோ, இதோ துப்பாக்கி வச்சிருக்கிறேன், எல்லாரையும் சுட்டுப் பொணக்காடா அடிச்சிட்டுப் போயிடுவேன் . . . ஆமாம்” என்று உள்ளேயிருந்து உறுமினான்.

“இல்லீங்க மாமா . . . பொய்யி. துப்பாக்கியுமில்லே, பீரங்கியுமில்லே. கையில் ஒரு சின்ன கத்திதான். ஜன்ன வழியாத் தெருவிலே எறிஞ்சிறச் சொல்லுங்க. இல்லாட்டித் திறக்காதீங்க” என்று பாப்பா சொன்னாள்.

“எட லே, யாருன்னு நெனச்சிக்கிட்டே. சிப்பாயி மாதிரில்லே பேசுறே, திருட்டுக் களவாணிக் களுதே . . . கத்தியைத் தூக்கி வாசல்லெ ஏறிடா . . . எறியிறியா, இல்லியா? . . . எறிஞ்சிட்டுச் சும்மா நின்னா வரலாம் . . . இல்லே, மாசம் ஒண்ணானாலும் கதவு திறக்காது. பட்டினி கிடந்து சாக வேண்டியதுதான்” எல்லோரும் வாய்க்கு வாய் கத்தினார்கள். சிறிது நேரமாயிற்று.

கத்தி வாசலில் விழுந்தது. கதவைத் திறந்து பிடித்து விட்டார்கள். பின்கட்டு முறையாகக் கட்டினார்கள் அடியோ அடியென்று அடித்தார்கள். உதைத்தார்கள். முழங்கையிலும் முட்டியிலும் மணிக்கட்டிலும் தட்டினார்கள்.

அப்பா, அய்யா என்று ஆரம்பித்தவன் கடைசியில் வலி பொறுக்காமல் கதறினான், அலறினான், அழுதான்.

“ஐயா, இன்னமே இந்த வழிக்கெல்லாம் போகமாட்டேங்க, சாமிங்களே. இத்தோட விட்டுடுங்க” என்று அழுதான். தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது. துடைத்துக் கொள்ளக்கூட முடியவில்லை. கை கட்டியிருக்கிறதே!

“புள்ளைகுட்டிக்காரன்யா. ஐயா, ஐயா.”

பாப்பாவுக்கு அழுகை வந்துவிட்டது.

“தேவர் மாமா, விட்டிடுங்க மாமா அவரை, இன்னமே செய்ய மாட்டேன்னிட்டாரே. விட்டிடுங்க மாமா” என்று தொண்டை அடைக்கக் கெஞ்சினார்.

தோள். முதுகு எல்லாம் அவனுக்குக் கண்டு கண்டாக வீங்கி விட்டது. சுவரில் மாட்டியிருந்த தும்புக் கயிற்றால் மணியக்காரர் வீறின இடம் பூரான் மாதிரி தடித்துவிட்டது.

“கையைக் கட்டிப் போட்டு அடிக்கிறீர்களே, அவுத்து விட்டு அடிங்க பாப்பாம்” என்று ஆத்திரம் தாங்காமல் தொண்டை விரியக் கத்தினாள் பாப்பா.

“உங்களுக்குத்தான் பாவம். இதுக்கெல்லாம் சாமி குடுப்பாரு” என்று கறுவினாள்.

இவ்வளவு வளர்ந்த ஒருவனை, இவ்வளவு வயதானவனை, சின்னப் பிள்ளையை அடிப்பது மாதிரி அடிப்பதை அவளுக்குப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை.

“இந்தப் பார்றா, இந்தப் பச்சைப் புள்ளைக்கு இருக்கிற ஈரம்கூட இல்லியேடா உனக்கு. கொலைகாரப் பயலே, கத்தியை ஓங்கினாயாமே?” என்று இன்னும் இரண்டு குத்து விட்டார்கள்.

எவ்வளவுதான் அடிப்பது?

காலையில் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஆளை இழுத்துச் சென்றார்கள்.

0 0 0

பத்து நாள் ஆயிற்று. கோர்ட்டில் விசாரணை நடந்தது. முக்கியச் சாட்சியாகப் பாப்பாவைத்தான் கூண்டில் ஏற்றினார்கள். எட்டு வயதுக் குழந்தை பளிச் பளிச்சென்று பதில் சொல்வதைக் கண்டு வியப்பாக இராதா? கோர்ட்டில் நல்ல கூட்டம்.

“என்ன துணிச்சல் சார்?”

“கண்ணை மூடித் தூங்கறாப்பல படுத்திருந்திச்சாமே . . . என்னா அறிவு பாத்தீங்களா?”

“அதுசரி, மெதுவாக ஏந்து போய்க் கதவைச் சாத்தித் தாப்பாப் போடணும்னு எப்படித் தோணிச்சு இந்த ஓட்டைச் சாணுக்கு?”

“நெஞ்சுரப்பு. நீயும் நானும்னா அப்படியே கால் இத்துப் போய் பொணமாக விறைச்சுக் கிடந்திருப்போம். துணிச்சல் பழகியா வரும்? பிறவி.”

“சங்கிலி போட்டு, விசிறிக் காம்பை மாட்டி . . . இந்தக் காலத்துப் புள்ளீங்களைப் பாத்தியாடா தம்பி . . . ”

கொலுக்கடை ஆச்சி பொம்மை மாதிரி, தூக்கிக் கட்டின பாவாடையும் இறுக்கி விறைத்த பின்னலுமாகக் கூண்டில் நிற்கும் பாப்பாவைப் பார்த்து எல்லாருக்கும் சற்று வியப்பாகத்தான் இருந்தது.

பாப்பா ஒன்றையும் விடவில்லை. ஓட்டுக்கூரைமீது பார்த்ததுமுதல், யார் யார், எதால், எப்படி, எங்கெங்கு அடித்தார்கள், திட்டினார்கள்—எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொல்லிக்கொண்டு வந்தாள்.

“செத்த பாம்பை அடிக்கிற மாதிரி கையைக் கட்டிப் போட்டுப்பிட்டு எல்லாரும் அடி அடி அடின்னு அடிச்சுக்கிட்டேயிருந்தாங்க. அவரு பச்சைப் புள்ளை மாதிரி அழுதாரு. இவங்க அப்பதான் இன்னும் நாலு குடுப்பாங்க. இம்மாம் பெரிசி, இம்மாம் பெரிசுக்கு அவரு உடம்பெல்லாம் வீங்கிப் போயிடிச்சு. ஐயோ, ஐயோ, ஐயோன்னு அவரு பள்ளிக்கூடத்துப் பையன் மாதிரி கத்தினாரு. பாவம் . . . கட்டை அவுத்துப்பிட்டு அடிச்சிருந்தாங்கன்னா, அப்ப தெரிஞ்சிருக்கும்!” என்று கோர்ட்டில் கூடியிருந்த மனிதவர்க்கத்தையே கண்டு கறுவினாள்.

ஜட்ஜ் சிரித்தார்.

“நீ புடிச்சுக் குடுத்ததினாலே தான் இவ்வளவும்? . . . நீ ஏன் புடிச்சே அவரை?”

“நான்தான் அப்புறம் விட்டுடுங்கோன்னு சொன்னேனே. இவங்க கேக்கலே. ‘சும்மாயிரு பாப்பா, சும்மாயிரு பாப்பா’ன்னு என்னை அப்பாலெ ஒதுக்கி விரட்டிட்டாங்க.”

“நீ இவங்களையும் புடிச்சுத் தாப்பாப் போட்டிருக்கணும், உள்ளே அடைச்சு.”

“இவங்களையா? அத்தினி பேரையுமா?”

“அடிக்கவும் அடிச்சிப்பிட்டுக் கேஸூம் கொடுத்திட்டாங்க பாத்தியா இப்ப? . . . மனிசங்கன்னா அப்படித்தான் இருக்கணும் . . . ” என்று சிரித்தார் ஜட்ஜ்.

“சரி . . . நீ போ.”

பாப்பா இறங்கி அப்பாவுடன் உட்கார்ந்துகொண்டாள்.

“ஏம்ப்பா, இவருதானே சர்க்காரு?” என்று ரகசியமாகக் கேட்டாள்.

“ஆமாம்.”

“இவரை என்ன செய்வாரு?”

“ஜெயில்லெ போட உத்தரவு போடுவாரு.”

“ஜெயில்லெ போயி?”

“செக்கு இழுக்கச் சொல்லுவாங்க.”

“மாடு மாதிரியா?”

“ஆமாம்.”

“அதுதான் நல்லா அடிச்சுப்பிட்டாங்களே எல்லாரும்.”

“சர்க்காருன்னா அப்படித்தான் தண்டிப்பாங்க.”

“அவருதான் திருடலையே.”

“அதுக்காக? அம்மாவைக் குத்தியிருந்தான்னா?”

“எங்க குத்தினாரு?”

“குத்தியிருந்தா?”

“அதான் குத்தலியேப்பா?”

“ஸ் . . . சும்மா இரு. இஞ்சு பேசக் கூடாது.”

“சொல்லுப்பா.”

“. . . ”

“அப்பா”

“. . . ”

ஜட்ஜ் கடுங்காவல் விதித்தார்.

பாப்பாவின் துணிச்சலைப் பாராட்டி சர்க்காரிடமிருந்து அவளுக்கு இருபது ரூபாய் சன்மானம் வந்தது.

“பாத்தியா பாப்பா . . . திருடனைப் புடிச்சியில்ல, இந்தா. உனக்கு பிரைஸ் அனுப்பிச்சிருக்காங்க போலீசிலே.”

“எனக்கு ஒண்ணும் வாணாம்.”

“சீ . . . பைத்தியம் . . . லட்சுமி இது வாணாம்னு சொல்லலாமா?” என்று நோட்டைக் கையில் திணித்தார் அப்பா.

“உக்கும்” என்று ஒரு திமிரல், நெளிசல், சிணுக்கல். நோட்டு கசங்கித் தரையில் விழுந்தது.

“தோசி, துக்குறிக்களுதே . . . நல்ல வேளை . . . கிளிக்காமெ உட்டியே” என்று நோட்டை எடுத்துக் கசங்கலைப் பிரித்துச் சரிப்படுத்தினார் அப்பா.

என்ன வீசியெறிந்தாலும் பணம் அவளுடையது தானே? பட்டுப் பாவாடையும் சட்டையுமாக மாறி வந்தது பணம்.

“இப்ப என்ன செய்யுவே? . . . ” என்று பெருமையாக நீட்டினார்.

“எனக்கு ஒண்ணும் வாணாம்.”

“சீச்சீ . . . தீவளிச் சட்டையை வாணாமுங்கப்படாது. பாவம், கிஷ்ணரு கோவிச்சுப்பாரு” என்று அம்மா பாப்பாவுக்குக் கட்டிவிட்டு ஒத்திகை பார்த்தாள்.

அவ்வளவுதான், அதையும் அவிழ்த்தெறிந்து விட்டு, பிறந்த மேனிக்கு நின்றாள் பாப்பா.

“சீச்சீ . . . வெட்கம் கெட்ட நாயி . . . சொரணையில்லே உனக்கு?”

“அப்படிதான்” என்று பாப்பா பழம் பாவாடையை எடுத்தது.

“விடியா மூஞ்சி.”

“இரு இரு, குடுகுடுப்பாண்டி வரட்டும் . . . இதை எடுத்துக் கொடுத்றுடறேனா இல்லையா பாரு . . . ” என்று பாப்பா பயமுறுத்தினாள்.

“நீ கொடுத்தாலும் கொடுப்பே . . . அராமி.”

“அப்படித்தான் கொடுப்பேன்.”

“கொடேன் பாப்பம் . . . உதை திங்கிறே.”

“ம் ம் . . . உதைப்பே . . . வவ்வவ்வவ்வ.”

அப்பா சிரித்தார்.

“வவ்வ” என்று பதிலுக்கு அழகு காட்டி விட்டு, அம்மா, பெட்டியில் வைப்பதற்காகப் பட்டு உடைகளை எடுத்துப்போனாள்.

“நீ தான் வவ்வவ்வ” என்று ஆத்திரம் குமுறக் கத்திவிட்டுப் பாப்பா வீல் என்று அழுகை வைத்தாள்.

**விந்தியா, நவம்பர் 1954**

# மூர்ச்சை

நாகராஜ பிள்ளை செய்த காரியத்தைப் பார்த்த போது எங்கள் ஊர்ப் பெரிய மனிதர்களின் நினைவுதான் வந்தது எனக்கு. பேசிக் கொண்டேயிருக்கிற போது ‘இதோ ஒரு நிமிஷம்’ என்று ஏதோ காரியமாகப் போவது போல் திண்ணையிலேயே துண்டைப் போட்டுவிட்டு, உள்ளே போய்க் காப்பியைச் சாப்பிட்டு வருகிறவர்; கூடப் பிறந்த தங்கையின் கணவன் நம்பிக்கையாகக் கொடுத்து வைத்திருந்த பதினாயிரம் ரூபாயை, அவன் இறந்து போனதும் ‘நாலு வருஷங்களுக்கு முன்னாலேயே திருப்பிக் கொடுத்து விட்டதாக’ அந்தத் தங்கையிடமும், பின்பு கோர்ட்டில் ராமாயணத்தை வைத்துக் கோண்டும் பொய்ச் சத்தியம் செய்த அன்னதானம் ராமுவய்யர்; தினம் ஒரு தடவையாவது தாயாரை அடிக்காமல் சாப்பிடுவதில்லை என்று விரதம் பூண்டது போல, ஆளோடியிலிருந்தும் குறட்டிலிருந்தும் தாயாரை உருட்டித் தள்ளுகிற அத்வைத பண்டிதர் காளி கனபாடிகள்; மூட்டைக்கு இரண்டு மரக்கால் வீதம் பதரைக் கலந்து பொறுக்கு விதை என்று சர்க்காருக்கே விற்று வருகிற காசி விச்வம்; இவர்கள் செய்திருக்கிற காரியத்தைத்தான் நாகராஜபிள்ளையும் இப்போது செய்திருக்கிறார். எந்தக் கைக் குட்டையால் நெஞ்சு ஈரத்தை ஒற்றி எடுத்துக் கொள்கிறார்கள் இந்த மனிதர்கள்! நரகத்தில் நெய்த கைக்குட்டையா!

வியாசராவோடு அவர் குலாவின குலாவலைப் பார்த்தால்! . . . அப்படிக் குலாவினார்கள் இரண்டு பேரும். சாப்பிடுகிற சமயம் போக, குளிக்கிற சமயம் போக, இரண்டு பேரையும் தனியாகப் பார்க்க முடியாது. பொழுது விடிந்ததும் விடியாததுமாகப் பேப்பர் பார்க்க வந்து விடுவார் நாகராஜ பிள்ளை. அப்போதுதான் வியாசராவ் நீராடி விட்டு பூஜைக்கு உட்கார்ந்திருப்பார். முடிந்து வெளியே வருவதற்குள் நாகராஜ பிள்ளை எல்லாச் செய்திகளையும் முடித்திருப்பார். வியாசராவ் பேப்பர் தமக்காக வாங்குகிறாரா, நாகராஜ பிள்ளை வாசிப்பதற்காக வாங்குகிறாரா என்று சந்தேகம் வந்துவிடும். பன்னிரண்டு மணி வரையில் பேசுவார்கள் இரண்டு பேரும். சாப்பாட்டிற்காகக் கலைவார்கள். மூன்று மணிக்கு மீண்டும் வருவார் பிள்ளை. மாலையில் சேர்ந்தே உலாவப் போவார்கள். சாப்பாடானதும் மறுபடியும் ஒரு சந்திப்பு. நடு நிசிக்குத்தான் பிரிவார்கள். எங்கேயாவது ஊருக்குப் போவதென்றால் கூட நாகராஜ பிள்ளை

இல்லாமல் போகமாட்டார் வியாச ராவ். ராமனும் சுக்ரீவனும் செய்து கொண்டார்களே, அந்த மாதிரி அக்னி சாட்சியாக தோழமை பூண்டார்களோ என்று எனக்குச் சிரிப்பு வருவது உண்டு.

இப்பொழுது?

பிள்ளை திடீர் என்று மிரண்டு விட்டார். வியாசராவுக்கு வத்திருக்கிற 'உடம்பு' சாதாரணமில்லை என்று தீர்மானமானவுடன், ஆசாமி சட்டென்று எல்லா பந்தங்களையும் அறுத்துக் கொண்டு விட்டார். வியாச ராவ் இந்தத் தெளியாத மூர்ச்சையில் விழுந்தாரே, அதற்கு மூன்றாம் நாள் காலையில் வந்தவர்தான் பிள்ளை. ஏழாம் நாளாயிற்று. இன்னும் தலை காட்டவில்லை. வைத்தியச் செலவு, வைத்தியர் கைவிட்ட பிறகு ஆகப்போகிற செலவு – இப்படி ஒன்றைத் தொட்டு ஒன்றாகப் பிடித்துக் கொண்டு விடப் போகிறதே என்று பயந்து விட்டார் போலிருக்கிறது.

வியாசராவைப் பார்க்கப் போனேன்.

தலைமாட்டில் அவர் மனைவி உட்கார்ந்திருந்தாள். உதவிக்காக வந்திருந்த பெண் உள்ளே சமைத்துக் கொண்டிருந்தாள். அவர் மாப்பிள்ளை – அவர் வேலையிலிருந்து ரிடயரானவர். கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தார். வியாசராவ் வாசல் திண்ணையை நோக்கியிருக்கிற அறையில் படுத்திருந்தார்.

"எப்படி சார் இருக்கு?" என்று தாழ்ந்த குரலில் மாப்பிள்ளையைக் கேட்டேன்.

"ஏதோ இருக்கு . . . டாக்டர் ஊசி போட்டுண்டே இருக்கார். மூர்ச்சை தெளியவில்லையே!"

உள்ளே போனேன்.

ராவின் கண் திறக்கவே இல்லை. நடு நடுவே எப்போதாவது ஒரு தடவை முனகல் கேட்குமாம். நாலு நாளாக மூர்ச்சை: அப்படியும் இருக்குமா? அப்படியானால் வியாசராவ் – இப்போது எந்த உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்?

வியாசராவ் நல்ல வெள்ளைச் சிவப்பு. வாழைக் குருத்து மாதிரி ஒரு நிறம். நிறம் மட்டுமல்ல . . . அவ்வளவு மிருதுவான உடல்கூட. அவர் எத்தனை வெள்ளையாக வேட்டி கட்டிக்கொண்டாலும் அந்த வண்ணத்துக்கு எடுக்காது. அதுவும் தினமும் ஆற்றில் குறித்துக் குளித்து

சற்றுப் பழுப்பேறிய துணியாகக் கட்டிக் கொள்வது தான் அவர்வழக்கம். இந்த எழுபத்தெட்டு வயது வரையிலும் அவர் ஆற்றில்தான் குளித்துக் கொண்டிருக்கிறார்.

பூஞ்சையான உடல்தான். ஆனால் நோய் என்று அவருக்கு எதுவும் வந்து எனக்கு ஞாபகமில்லை. கபடமில்லாத உள்ளத்தை உள்ளே வைத்துப் பாதுகாக்கிற இந்த தேகத்தைத் தீண்ட எந்த நோயும் பயப்பட்டுத்தானிருக்க வேண்டும்.

எனக்கு இன்று போல் ஞாபகமிருக்கிறது. அந்தக் காலத்தில் இந்த மூக்கோட்டை வீட்டை அவர் விலைக்கு வாங்கி, குடியேறி ஒரு மாதம் இருக்கும். வீட்டு வாசலில் கோலி ஆடிக்கொண்டிருந்த என்னைக் கூப்பிட்டு, நான் என்ன படிக்கிறேன், அப்பாவுக்கு என்ன வேலை என்று விசாரித்தார். மற்ற பையன்களையும் விசாரித்தார்.

மூன்று மாதம் கழித்து பள்ளிக்கூடத்துச் சம்பளம் கட்டப்போன போது யாரும் வாங்கிக் கொள்ளத் தயாராயில்லை. எனக்கு இனி சம்பளமே கிடையாதாம். சாயங்காலம் வீட்டுக்கு ஓடி வந்து தகப்பனாரிடம் சொன்னேன். “ஓடிப்போய் வியாசராவுக்கு நமஸ்காரம் பண்ணி விட்டு வா. அவர் சொல்லித்தான் கொடுத்தார்களாம். உங்க ஹெட்மாஸ்டர் காலமேதான் சொன்னார்” என்றார் அவர். தெய்வத்தை நினைக்கிற ஒளி அவர் முகத்தில் படர்ந்திருந்தது.

“வியாசராவ் மாமாவைத் தெரியுமாப்பா உங்களுக்கு?”

“ஹெட் மாஸ்டர் சொன்னப்புறம்தான் தெரியும். மத்யான்னம் அவரைப் பார்த்துட்டு வந்தேன் . . . இப்படியெல்லாம் செய்யணும்னு தோண்றதுன்னா . . . சரி. நீ போய் அவருக்கு நமஸ்காரம் பண்ணிட்டு வா” என்று நெகிழ்ச்சியைச் சமாளித்துக் கொண்டார் அவர்.

0 0 0

இருபத்தைந்து வருஷம் கழித்து என் நெஞ்சை அடைத்தது இந்தச் சம்பவம்.

“மாமா, மாமா” என்று கூப்பிட்டேன்.

வியாசராவ் கண்ணைத் திறக்கவில்லை. அவர் காதில் எது விழப் போகிறது? மெல்லிய, பரிசுத்தமான அந்தச் சரீரம் எந்தக் கேள்விக்கும் எந்த ஒலிக்கும் அசையவில்லை. மூச்சு மட்டும் வந்து போய்க்

கொண்டிருந்தது.

டாக்டர் வந்தார். கால், மார்பு, நெற்றியெல்லாம் தொட்டுப் பார்த்தார். ரத்த அமுக்கத்தை அளந்தார். சிறிது நேரம் நின்றார். வெளியே வந்தார்.

"என்ன சார்?" என்றேன்.

"இப்ப என்னத்தை சொல்றது? மயக்கம் தெளிந்தால் தான் நிச்சயமாக எதுவும் சொல்ல முடியும்" என்று காரை நோக்கி நடந்தார்.

காரின் அருகில் போய் நின்றேன்.

"இப்ப சொல்லுங்க சார்!"

"என்னத்தை சார் சொல்றது? ராயர் இனிமேல் கண்ணைத் திறப்பது சிரமம். நாடி தொய்ந்து கிடக்கு . . . நான் வந்து என்ன பண்ணப் போறேன்? மருந்து கொடுக்கத்தான் செய்யலாம். அதை உசிரா மாத்தறதை ராயர்தான் செஞ்சுக்கணும். அப்படி செய்யற நிலையைத் தாண்டிப் போயிட்டாரே அவர்" என்று மெதுவாகச் சொன்னார். அந்தப் பழைய கார் புறப்படுகிற ஆரவாரம் அவர் சொன்னதை அமுக்கி விட்டது.

திண்ணையில் நின்று கொண்டிருந்த கிழவி "என்னப்பா சொன்னார் டாக்டர்?" என்று பேய் அறைந்த திகிலுடன் கேட்டாள்.

"சரியாய்ப் போயிடும்கிறார்."

கிழவி நம்பாமல் பெருமூச்சு விட்டுக் கொண்டே நின்றாள். ராயரை விட மெலிந்தவள் அவள். நெருப்புப் பொட்டைப் போல வகிட்டிலும் நடு நெற்றியிலும் கனிந்து வெறித்தது குங்குமம். திரும்பி உள்ளே போய்விட்டாள். பொல்லென்று வெளுத்த தலையையும் காதில் ஆடிய சிவப்போலையையும் பார்த்தபோது, அறுபது வருடம் அவள் வாழ்ந்த வாழ்வு தெரிந்தது. இனிமேல் யாருக்காக அவள் உயிரை வைத்திருக்கப் போகிறாள்!

இப்போது கூட வந்து பார்க்க மாட்டாரா அந்த நாகராஜ பிள்ளை! இந்த வீட்டை வந்து ஒரு தடவை பார்த்தால் . . . எங்கே வரப் போகிறார்!

வியாச ராவ் வீட்டில் எப்படிக் காலட்சேபம் நடக்கிறது என்றே புரியவில்லை. பென்ஷன் நாற்பதோ ஐம்பதோ, அதற்கு மேல் நிச்சயமாக

இராது.

“நாகராஜ் பிள்ளையை இந்தப் பக்கமே காண முடிய வில்லையே . .?” என்று இழுத்தேன்.

“இந்த மாதிரி சமயத்தில்தானே மனுஷா எப்பேர்ப்பட்டவான்னு தெரிஞ்சுக்க முடியும்! நாமதான் எப்ப தெரிஞ்சுக்கறது!” என்றாள் கிழவி.

“இருந்தாலும் இப்படியா!”

கிழவியின் கையிலிருந்த வளைகள் எல்லாம் காசாக மாறி, மருந்தாக மாறி விட்டன என்று தெரிந்தது. மாப்புள்ளைக்கு அறுபது ரூபாய்தான் சம்பளம். திருச்சியில் எங்கேயோ மளிகைக் கடையில் கணக்கு எழுதுகிற உத்தியோகம்.

நாகராஜ பிள்ளை இரும்புக் கடையில் சேர்த்த சொத்தெல்லாம் ஞாபகம் வருகிறது. அவருக்கு ஆறு பிள்ளைகள், மூன்று பெண்கள். மூன்று பிள்ளைகள் தனியாகக் கடை நடத்துகிறார்கள். முதல் இரண்டு பிள்ளைகளுக்கு அவர் கடையையே நிர்வாகம் செய்யும் பொறுப்பு. ஒரு பிள்ளை பட்டணத்தில் ரயில்வேயில் வேலை பார்க்கிறான். நாலைந்து வீடுகள், பத்துவேலி நிலமும் சம்பாதித்து விட்டார், இந்தச் சம்பாத்தியத்தில்.

ராயருக்கு வந்த நோயைக் கண்டு பயப்படுகிற சொத்தா இது!

இரும்புக் கடைக் கடப்பாரையெல்லாம் ஏன் சும்மா கிடக்கின்றன! தாமாக எழுந்து, தங்களைவிட இரும்பாக இறுகி கிடக்கிற அந்த இதயத்தை ஏன் இன்னும் பிளக்கவில்லை?

தாங்க முடியாமல் பிள்ளையின் வீட்டுக்கே போனேன். அவர் இல்லையாம். கடையிலும் இல்லை.

பன்னிரண்டு, பதின்மூன்று நாட்களாகி விட்டன. டாக்டர் வந்தார். தினமும் வந்தார். உதட்டைப் பிதுக்கினார்.

அவருக்கே நாகராஜ பிள்ளையைப் பற்றித் தெரிந்து விட்டது போலிருக்கிறது. “அந்த அம்மாகிட்டே ஒண்ணும் இருக்கிறதாகத் தோணலியே. என்ன செய்யப் போறா?” என்றார்.

“நான் இன்னிக்குத் தின்னுகிற சோறு ராயர் போட்டது. அவர் என் தலையிலே எழுதிட்டா . . . ” என்று நான் சொல்லவில்லை. “ஏதோ

இருக்கறவா பார்த்துக்கறோம்” என்று சொல்லி வைத்தேன்.

ஒன்பது மணி இருக்கும். குளிப்பதற்காகக் கொல்லைப் பக்கம் காலை எடுத்து வைத்தேன்.

“நாகராஜ பிள்ளை ராயராத்துக்குள்ளே போறாரே!” என்று ஓடி வந்தாள் கௌரி.

“என்னது!”

“ஆமாம். இப்பதான் நுழையறார்.”

“நானும் போய்க் பார்த்துட்டுவரேன்.”

“வாண்டாம் . . . ”

“ஏன்?”

“உங்களுக்குக் கோபம் வந்தால் தலை கால் தெரியாது. படபடன்னு எதையாவது கத்துவேள்.”

“கத்தாட்டா எனக்கு ஆறாது.”

“நீங்க கத்த வாண்டாம். நமக்கு என்ன பொல்லாப்பு. அவனவன் பண்ற பாவத்துக்குக் கூலி கொடுக்க ஸ்வாமி இருக்கார். நீங்க முதல்லே போய் குளியுங்கோ. உங்களுக்கு ஆபீஸிலே இருக்கிற நல்ல பேர் போதும்.”

குளித்துச் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குக் கிளம்பு முன் வழக்கம் போல எதிர் வீட்டுக்குப் போனேன்.

ராயர் கண் திறந்திருந்தது.

“மாமா!” என்று ஓடினேன்.

வியாச ராவ் புன்னகை புரிந்தார்.

“எப்படி மாமா இருக்கு!”

கொஞ்சம் தேவலை என்பது போல உள்ளங் கையை அசைத்தார் ராவ்.

சாயங்காலம் வீடு திரும்பியதும், “நாகராஜ பிள்ளை வந்துட்டுப் போனார் மறுபடியும்” என்றாள் கௌரி.

இப்போது ராயர் கண் மட்டும் திறக்கவில்லை. எழுந்து உட்கார்ந்திருந்தார்.

“வா, கைலாசம்” என்று கூப்பிடவேறு செய்தார்.

“வந்தேன், மாமா . . . இப்படி கவலைப் படும்படியாய் பண்ணிப்பிட்டேளே?” என்று நெருங்கினேன்.

வியாச ராவ் சிரித்தார். “இனிமே ஒரு கவலையும் இல்லேப்பா...” என்றார்.

“தெரியும் மாமா. கவலைக்கிடமா இருந்தா நாகராஜபிள்ளை வருவரோ!”

என்னை ஒரு தடவை பார்த்தார் வியாச ராவ்.

“விஷயம் தெரிஞ்சு சொல்றியா! இல்லே, கோபத்திலே சொல்றியா?”

“இனிமே அவருக்குப் பயமில்லேன்னு சொன்னேன். மாமாவுக்கு உடம்பு அதிகமாயிருந்தா. டாக்டர் செலவு கிலவுன்னு ஏதாவது கொடுக்கும்படியாயிருக்கும். சரியாப் போயிடுத்துன்னா அந்தக் கவலை இராது பாருங்கோ . . . ”

“கைலாசம், மாமிக்கு மாங்கல்யபிச்சை அவர் தாண்டா வாங்கிண்டு வந்திருக்கார். வாயிருக்குன்னு எதை வேணாலும் சொல்லப்படாது. மனசு இருக்குன்னு அதை இருட்டிலேயே வெரட்டிண்டிருக்காதே!”

அவர் குரலில் லேசாகத் தொனித்த கடுமையில் எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

“எனக்குக்கூட இப்பதாண்டா தெரியும், நாகராஜ பிள்ளை இத்தனை நாளா வரலைன்னு. அவரும் மூர்ச்சையாத்தான் இத்தனை நாளும் கிடந்திருக்கார்.”

“மூர்ச்சையாவா?”

“ஆமாம். மூர்ச்சைமாதிரிதான். அவர் வீட்டிலே பூஜை உள்ளிலே உட்கார்ந்து, அன்ன ஆகாரமில்லாம, பன்னண்டு நாளாக கண்ணை மூடிண்டு தவிச்சிருக்கான் – தபஸ் பண்ணியிருக்கான் மனுஷன்.”

“தபஸா! என்ன மாமா இது!”

“தபஸ்தான். வீட்டிலே புள்ளை பெண்சாதி எல்லாம் பயப்படப் போறதேன்னு பூஜை உள்ளூ ஜன்னலை மாத்திரம் திறந்து வச்சுப்பிட்டு, உட்கார்ந்துப்பிட்டான் தியானத்துக்கு. பன்னண்டு நாள் உக்காந்த இடத்தை விட்டு ஏந்துக்கெல. பச்சைத் தண்ணி வாயிலே ஊத்தலே. ‘அம்மாவோட

மாங்கல்யத்தை நீ பிடுங்கப்படாதுன்னு’ பன்னண்டு நாள் அழுதிருக்கான். இன்னிக்குக் காலமேதான் ‘இல்லே இல்லே’ன்னு யாரோ சொல்றாப்பல இருந்துதாம். எழுந்து வந்தானாம்; எழுந்து நேரா இங்கே வந்தானாம்.”

“இன்னிக்குக் காலமே வந்தார் சார்: நெத்தியை வந்து தொட்டு அஞ்சு நிமிஷம், பத்து நிமிஷம், பதினைந்து நிமிஷம் தடவிண்டே உட்கார்ந்திருந்தார்; மாமா கண் திறந்தாப்பல இருந்தது. தூங்கி எழுந்துக்கறாப்பல கண்ணை முழிச்சு முழிச்சுப் பார்த்தார். பிள்ளை நிக்கிறதைப் பார்த்துப் புரிஞ்சுண்டு மெதுவாச் சிரிச்சார். அதைப் பார்த்தோரோ இல்லையோ, பிள்ளை விக்கி விக்கி அழ ஆரம்பிச்சுட்டார். அம்மா அம்மான்னு மாமியைக் கூப்பிட்டார். ‘அம்மா, நீங்க தான் முந்திக்கப் போறீங்க’ அப்படீன்னு ஆவேசம் வந்தாப்பல ஒரு கத்து கத்தினார்; ‘அம்மா சர்க்கரை போட்டு ஒரு டம்ளர் ஜலம் கொண்டாங்க’ன்னார். இவ கொண்டு கொடுத்தா, சாப்பிட்டார். மத்தியானம் வரேன்னு போயிட்டார்” என்று தொண்டை அடைக்க, தட்டுத் தடுமாறிச் சொன்னார் மாப்பிள்ளை.

“அந்த மனுஷன் சாதாரண மனுஷனா! யாருக்கு அப்படிப் பிரியம் வைக்க முடியும், வைக்கத் தெரியும்?” என்றார் வியாச ராவ்.

“மத்யான்னம் மறுபடியும் அவர் வந்தார். அப்பாவோட பேசிண்டிருந்தார். இப்பதான் எங்களுக்கும் சொன்னார் அப்பா எல்லாத்தையும்” என்றாள் வியாச ராவின் பெண்.

அவர் மனைவி நினைத்து நினைத்துக் கண்ணீர் வடித்தாள்.

வியாச ராவ் சற்று நிமிர்ந்து அவளைப் பார்த்தார். திரும்பி என்னைப் பார்த்தார்: “நீதான் தெரியாதவன், என்னமோ சொன்னே. இவளும் அது மாதிரி நினைச்சாளே . . . அழு அழு. மகன்களைப் பார்த்து அப்படி நினைச்சே பாரு . . . அழு அழு . . . அந்த மனுஷன் அப்படிக் கதறியிருக்காட்டா இன்னிக்கு நீ . . . ஹ்ம்” என்று நிறுத்திக் கொண்டார் அவர்.

“அப்படியா! அப்படியா! என்று என் மனது கேட்டுக் கொண்டிருந்தது. உள்ளுக்குள்ளே தடுமாறிய வண்ணம், வாயடைத்து உட்கார்ந்திருந்தேன். வியாச ராவிடம் விடைபெற்றுக் கொண்டு நாகராஜ பிள்ளையைப் பார்ப்பதற்காக விரைந்தேன்.

வீட்டில் இல்லை அவர். காமாட்சி கோயிலுக்குப் போய் விட்டாராம்.

அங்கு ஓடினேன்.

பிள்ளை பிரகாரத்திலே மகிழ மரத்தடியிலே உட்கார்ந்திருந்தார். கையெழுத்து மறைகிற சமயம் நடமாட்டம் அதிகம் இல்லை.

"நமஸ்காரம்!"

"யாரு?"

"நான்தான் கைலாசம்."

"வாங்க தம்பி, உட்காருங்க" என்றார். எனக்கு உட்கார முடியவில்லை.

"மாமா எல்லாம் சொல்லிட்டார் எனக்கு."

"நீங்க உட்காருங்க!"

உட்கார்ந்தேன்.

"இன்னும் தரிசனம் பண்ணலியா?" என்றார் அவர்.

"தரிசனம் பண்ணிண்டுதானே உட்காந்திருக்கேன்? மாமா எல்லாம் சொன்னார் எனக்கு."

பிள்ளை ஒன்றும் சொல்லவில்லை.

"நீங்க அந்த பக்கமே திரும்பலியேன்னு மாமாட்டப் போய் தாறுமாறாப் பேசினேன். மாமாவுக்கு ரொம்ப வருத்தமாயிடுத்து. என் கண்ணைத் திறந்தார் மாமா."

"உங்களுக்கு எப்படித் தெரியும்? நீங்க என்ன செய்வீங்க?"

"நீங்கதான் மாமிக்கு மாங்கல்ய பிச்சை வாங்கிண்டு வந்தேள்னு மாமா சொல்றபோது . . . "

"நான் வாங்கிட்டு வரலே. பதில் செஞ்சேன். ஒண்ணு செஞ்சா பத்தா திருப்பி செய்யணும். இது பாதி கூட இல்லியே — !"

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"உங்களுக்குத் தெரியாது. அம்பது வருஷம் முன்னாரே நீங்க சியாழியிலே இருந்திருந்தாத் தெரிஞ்சிருக்கும். மூணு அடி தள்ளி எங்கே நிலத்திலே வேலிக்காலெ ஊனிப்ட்டான் அடுத்த நிலக்காரன். எங்களுக்கும் அப்படி அதிக சொத்து இல்லே. ஏக்கர் நிலத்துக்கும் இருபது குழி

குறைச்சல். எங்க அப்பாருக்குக் கோபம் தாங்கலே. நட்டசெடியெல்லாம் பிடுங்கி வீசி எறிஞ்சாரு.

“ஓடிவந்தானே பார்ப்பம் அந்தப்பய, வெட்டரிவாளை எடுத்துக்கிட்டு அவர் கழுத்திலே ஓங்கிட்டே வந்தான். நல்ல வேளை. என் கையிலேயும் அரிவா இருந்தது. கிட்டவர்றத்துக்கு முன்னியே அவன் கழுத்திலே பெரியபோடாப் போட்டேன். தீந்து போச்சு! அப்படியே அலண்டு போய்ட்டேன். கிலிபுடிச்சு ஓடினேன். எங்கியோ போய் ஒளிஞ்சுக் கிட்டேன். அப்புறம் யோசிச்சேன். போலீசிலேயே நாலு நாளானதும் வந்து விழுந்திட்டேன். என்னவானாலும் பண்ணுங்க, நான்தான் செய்தேன்னு.

“கேஸ் நடந்தது. தூக்குதண்டனைதான் வந்தாகணும். மனசைத் தைரியப்படுத்திக்கிட்டேயிருந்தேன். தீர்ப்பு சொல்றத்துக்கு முத நா ராத்திரி – எம் பொஞ்சாதி ஆறு குளந்தைகளையும் அழச்சிக்கிட்டுப் போய் ஐயா காலடியிலே போட்டு, ‘சாமி நீங்க தான் மாங்கல்யப்பிச்சை போடணு’ம்னு அளுதாளாம். மறுநாளைக்குத் தீர்ப்புச் சொல்லணும். ஆனா ஐயா கோர்ட்டுக்கு வரலே. உடம்பு சரியில்லேன்னு மூணு நாள் லீவு போட்டுட்டாங்க.

“நாலாம் நாள்தான் வந்தாங்க. என் உசிருக்கு நப்புக்கொட்டிக்கிட்டு நின்னுது ஒரு கூட்டம். எல்லாம் ஏமாந்துபோச்சு. உசிரை மட்டும் இல்லே, ஆளையே விட்டுட்டாங்க ஐயா. சாட்சி இல்லேன்னு விட்டே விட்டுட்டாங்க. அத்தோட இல்லே. வேலையையும் ராஜினாமா பண்ணிப்பிட்டாங்க.

“அப்ப ஆறு குழந்தை வச்சிக்கிட்டு முக்கால் பட்டினியும் முழுப்பட்டினியுமா நான் கிடந்த சமயம். இனிமே ஐயாவீட்டு அம்மாதான் எனக்கு, எங்க குடும்பத்துக்கெல்லாம் தாயார். அந்த அம்மாவுக்கு இப்படி ஒண்ணு நேந்திச்சின்னா, அப்புறம் இந்தப் பதரு எதுக்காக இருக்கணும்? ஐயாவை முன்னாடி விட்டுட்டு மூளியா நிக்கவா இந்த ஓலையும் குங்குமமும் இத்தினி காலமா போட்டுக்கிட்டாங்க? . . .

“டாக்டர் முதநாள் சொன்னப்ப எனக்கு சொரேர்னிச்சு. இன்னமே ஒண்ணும் நடக்காதுன்னு பெரிய டாக்டர் கிட்ட போனேன் – வைத்தியநாதன் கிட்ட. அவரு ஒரு குரல்கொடுக்கிற வரைக்கும் பச்சை தண்ணி ஊத்த மாட்டேன்னு சண்டி பண்ணினேன்.”

பிள்ளை அப்புறம் பேசவில்லை. கவிந்து வந்த இருளில் அவரைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தேன். பட்டினி கிடந்த சோர்வு

அவரைப் பாதித்திருக்க வேண்டும். சோர்ந்து கிடந்தார் அவர். எனக்கும் அவரை விட்டுக் கண்ணை எடுக்க முடியவில்லை.

இரண்டாம் கால பூஜை மணி கண கணவென்று ஒலிக்கத் தொடங்கிற்று.

“வாங்க தம்பி, தீபாராதனை பார்க்கலாம். சித்தெ கை கொடுங்க, ஏந்துக்கறேன். ஏலகொத்தா . .!” என்று என் கையைப் பிடித்துக் கொண்டே எழுந்தார் அவர்.

ஆனந்த விகடன் தீபாவளி மலர், 1960

# தங்கம்

“ராமலிங்கம், ராமலிங்கம்! ஏய், ராமலிங்கம், ஏய் . . . டேய் தம்பி, சாரல் அடிக்குதடா, டேய், எழுந்து நடையிலே வந்து படுத்துக்க; டேய் ராமலிங்கம் . . . நல்ல தூக்கம்டா இது! . . . ஏய், தம்பி . . . ”

பையன் எழுந்திருக்கிற வழியாக இல்லை. இரும்புக் கிராதியின் இடைவெளி வழியாக சாரல் விசிறி விசிறிக் குத்திற்று. விளக்கைப் போட்டேன்.

என்ன இது! சை . . . இவ்வளவுதானா . .! பட்சி பறந்துவிட்டது. தலையணை இரண்டையும் நீளத்தில் படுக்கவைத்து மேலே போர்த்தியிருந்தது. திண்ணை இரும்புக்கேட்டின் பூட்டு, பூட்டினாற்போலவே இருந்தது. சித்தர் மாதிரி உடலைச் சுருக்கி வெளியே போய் விட்டானா, தத்தாறிப்பயல்? பூட்டை இழுத்தேன். திறந்து கொண்டுவிட்டது. எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறான் பயல்! தலையணைகளைப் போட்டுப் போர்த்தி ஆள் மாதிரியே படுக்க வைத்து, பூட்டைத் திறந்து, வெளியே போய், கேட்டைச் சாத்தி, கிராதிக்குள் கையைவிட்டு மறுபடியும் பூட்டைப் போட்டு, தொள தொளவென்று விழுகிற பூட்டைப் பூட்டினாற் போல் நிற்க வைத்து . . . இந்தப் பூட்டை அப்படி நிற்கவைப்பது லேசுப்பட்ட காரியம் அல்ல . . . டேய் ராமலிங்கம்! இந்தப் புத்தியிலே கால் பங்கைப் படிப்பிலே போடேன். என் மனசு குளிரும், உன் மாமன் மனசும் குளிரும்.

மணி ஒன்றரை இருக்கும். ராமலிங்கத்தின் பாயைச் சுருட்டி, திண்ணை மேலிருந்த குட்டித் திண்ணையில் போட்டு விட்டு, பூட்டையும் கையில் எடுத்துக்கொண்டு உள்ளே வந்தேன். மழை சற்றுக் கனமான மழைதான். அதையும் பிய்த்துக் கொண்டு கந்தப்பா டூரிங் டாக்கீஸின் பாட்டுகளும் வசனங்களும் வீடு வீடாக, காது காதாகப் புகுந்து புறப்பட்டுக் கொண்டிருந்தன.

ராமலிங்கம் அங்கேதான் உட்கார்ந்து கொண்டிருப்பான் – வெற்றிலை பாக்கை மென்று கொண்டு, சிகரெட் பிடித்துக்கொண்டு, டீ குடித்துக் கொண்டு, கூட வந்திருக்கிற ஜமாவிற்கும் வாங்கிக் கொடுத்துக்கொண்டு! இல்லை, வேறு எங்காவதுதான் தொலைந்து விட்டானோ?

ராமலிங்கத்துக்கு வயது இருபத்திரண்டு முடிந்துவிட்டது. ஆளோ போத்து மாதிரி வளர்ந்திருக்கிறான். நல்ல தெம்பான சொத்து. இரண்டு வயசிலேயே அப்பன் செத்துப் போய்விட்டானாம். அம்மா வளர்த்த பிள்ளை. அண்டுவார் அடக்குவார் இல்லாமல் வளர்த்து விட்டிருக்கிறான். எங்கே போய் சீரழிகிறதோ!

வாசல் கதவைத் தாழிட்டு உள்ளே வந்தேன்.

"பரீட்சைக்குப் படிக்கிற லட்சணத்தைப் பாரு. கடா மாதிரி பிள்ளையை வளத்துப்பிட்டு, படிடான்னா எப்படி வளையும்?"

"ஆமாம், எத்தினி நேரம்தான் படிக்கும் அது? நாளைக்குப் பரீட்சையிலே போய்த் தூங்குறதுக்கா?"

"நீ இன்னும் முழிச்சுக்கிட்ருக்கியா? பரீட்சைக்குப் படிக்காதவ நீயே தூங்கலை. அவன்தான் தூங்கணும்."

"காலையிலே எழுப்பி விடுங்களேன், படிக்கட்டும்."

"ஆள் இருந்தாத்தானே எழுப்ப? தலகாணிதான் குளிருக்கு அடக்கமா போத்திக்கிட்டுப் படுத்துக் கிடக்கு!"

"என்னது!"

"போய்த்தான் பாரேன் . . . வாணா என்கூட வரியா இப்ப? சினிமாக் கொட்டகையிலே அந்தப் பய, நாலு உருப்படாத தோசிங்களோட உட்கார்ந்துக்கிட்டு, வளையம் வளையமா சுருட்டுப் புகையை விட்டுக்கிட்டிருக்கிறானா இல்லையா, பாரேன் . . . தடிப்பய . .!"

"அட ராமா!"

"ராமனாவது சுக்ரீவனாவது? அந்தப் பயலை என்ன செய்யணும் தெரியுமா? இந்தப் பள்ளிக்கூடத்திலே வச்சாவா அடங்குவான்? கோயில் காளை மாதிரி அலையறான். ஏய்ன்னா, டேய்ங்கிற ஒரு வாயடிக்கிற பொண்ணைப் புடிச்சுக் கட்டிப் போட்டுட்டா, பய பூனைக்குட்டியா அடங்கிப் பிடுவான். அந்தப் பள்ளிக்கூடம்தான் அவனுக்குச் சரி. துக்கிணியூண்டு பசங்களோட உட்கார்ந்துக்கிட்டு அத்தெப் படி, இத்தெப் படின்னா கேக்குமா? . . . காலமே வரட்டும் அந்தப் பய. பளார் பளார்னு நாலு விடாமயா இருக்கப் போறேன்!"

"ஐயையோ, போதும். அவன் மேலே கையை வைக்காதீங்க. அடிக்கிற

பேச்சே வாணாம். நயமாச் சொல்லுங்க, பயமாச் சொல்லுங்க. கேட்டாக் கேக்குது, கேக்காட்டிப் போவுது, நாயி. இன்னும் ஒரு வாரம்; அப்புறம் மூட்டையைக் கட்டிக்கிட்டுப் போவப் போவுது. அவன் படிச்சா என்ன, படிக்காட்டி என்ன?"

"ஏன்?" அவன் மாமன் வந்து, 'நீங்கதான் பாத்துக்கணும், சார். எப்படியாவது இந்தப் பரீட்சையைப் பாஸ் பண்ணிட்டான்னா தேவலாம். உங்களைத்தான் நம்பியிருக்குறேன்'னு முந்தா நேத்துத்தானே அலறிட்டுப் போயிருக்கான். அதுக்கு என்ன சொல்றதாம்?"

"சொல்றது என்னத்தை? சொன்னதைக் கேட்டாத்தானே? அடங்கலைன்னா? . . . அடிக்கவாவது! ஒரு வார்த்தை கேட்டான், உனக்கென்னய்யான்னு; அப்ப எங்கே மூஞ்சியைக்கொண்டு வச்சுப்பீங்க? ஆள்தான் என்ன சின்ன ஆளா? படை வெட்டிச் சிப்பாயா நிக்கறான்."

படைவெட்டிச் சிப்பாய்தான். ஆறடி உயரம். மூக்கும் முழியுமான தோற்றம். கவர்ச்சிகரமான ஆள்தான். மாநிறம். யாரும் கொஞ்சம் நின்று பார்க்க வேண்டிய உயரம், உருவம். இந்த ஊரே இல்லை அவனுக்கு. இந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து இரண்டு வருஷம் கூட ஆகவில்லை. மூன்றாம் வருஷம் பெரிய விடுமுறை தீர்ந்து, பள்ளிக்கூடம் திறந்து, ஒரு மாதத்திற்குப் பிறகு சாவகாசமாக ஒருவர் இவனை அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தார். தஞ்சாவூர் நண்பர் ஒருவரிடமிருந்து பையனைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கச் சொல்லி சிபாரிசுக் கடிதத்தில் கண்டிருந்தது.

"யாரு? இவனா பையன்?"

"என்னமோ பாத்துச் செய்யுங்க. வயசோ ஆயிடிச்சு . . . "

நாள் கழித்துப் படிக்க வைத்தார்களாம். தஞ்சாவூரில் படித்து வந்தானாம். நாலாவது பாரத்தில் மூன்று வருஷமும், ஐந்தாவது பாரத்தில் இரண்டு வருஷமும் இருந்து, ஆனால் பாஸ் பண்ணி விட்டானாம். தஞ்சாவூருக்குப் போய் அடிக்கடி கவனிக்கக் கொள்ள வசதியாக இருக்குமாம் . . . என்னமோ . . . சிபார்சு செய்த நண்பர் நல்லவர், நெருங்கியவர் . . . தலைமை ஆசிரியருக்கு வேப்பிலை அடித்துச் சேர்த்துவிட்டேன்.

ஆள் உயரமும் கனமுமாக இருந்தாலே போதாதா? கொஞ்சம் அழகும் சேர்ந்து விட்டால்! முதல் நாளே அவனைச் சுற்றி ஒரு ஜமா சேர்ந்துவிட்டது. நியூஸ் பேப்பர் புஷ்கோட்டும், கார்டுராய் முழு நிஜாரும்,

ஒரு கூலிங் கண்ணாடியும், பூட்ஸும் போட்டுக் கொண்டு அவன் வரும்போது ஆயிரம் கண் அகன்றது.

“ராமலிங்கண்டா! – ”

சேர்ந்த நான்கு நாளைக்கெல்லாம் பள்ளி மாணவர்கள் அவனைத் தலைவனாகத் தேர்ந்து எடுத்து விட்டார்கள்.

மோகம் முப்பது நாள்.

ராமலிங்கம் பத்துக்கு மேல் மார்க்கு வாங்குவதில்லை. ஒரு நாள் வந்தால் ஒன்பது நாள் வர மாட்டான். வகுப்பில் கேள்வி கேட்டால் அசட்டுப் பிசட்டு என்று பிதற்றுவான். வகுப்பின் கடைசிகளுக்குக் கூட அவனைக் கண்டு இளப்பமாகப் போய்விட்டது. ஆசிரியர் அவனைக் கேள்வி கேட்கும் போதே ஒரு சிரிப்பு, நெல்வயலில் அலைபாய்வது போல் அடக்கமாக வகுப்பின் கோடிக்குக்கோடி ஓடும். ராமலிங்கத்துக்குச் சுருக்கென்று பட்டிருக்க வேண்டும். பிறகு எது கேட்டாலும் பேசாமல் நிற்பது என்று முடிவு கட்டி விட்டான்.

தினமும் அரை மணி தாமதமாகத்தான் வருவான். காலையிலே கூடுகிற பொதுவிற்குச் சட்டப்படி அவன்தான் தலைமை தாங்க வேண்டும். ஒரே ஒரு நாள்தான் அதைச் செய்தான். தலைவனாகத் தேர்ந்தெடுத்ததற்கு நன்றி கூடச் செலுத்தத் தெரியவில்லை.

“ஆளைப் பார்த்து மயங்கிட்டோம்டா” என்று ‘அரசல் புரச’லாகக் கிளம்பிற்று. முக்கால்வாசி நாள் ராமலிங்கத்தை ஊரிலேயே பார்க்க முடியாது. வந்தாலும் பள்ளிக்கூடத்துக் கூட்டம், விசேஷம் ஒன்றுக்கும் இருப்பதில்லை. பதினோரு மணிக்கு வந்து மூன்று மணிக்கே போய்விடுவான். எங்கே போவானோ? பள்ளிக்கூட நேரத்தில் பாதி தஞ்சாவூர், கும்பகோணம் பஸ்ஸுகளிலோ, ரயிலிலோ தான் கழியும்.

நடுவில் ஒரு வாரம் வராமல் திங்களன்று வந்தபோது தலைமைப் பதவியைவிட்டு அவனை மாணவர்கள் நீக்கிவிட்ட செய்தி தெரிந்தது. முகம் செத்துவிட்டது. அந்த வெட்கத்தைக் கழிப்பதற்காக மறுபடியும் ஒரு வாரம் எங்கேயோ போய்விட்டான்.

0 0 0

ஆனால் தலைவராவதற்கு வழியைப் பள்ளிக்கூடத்துக்கு வெளியே கொண்டிருந்தான். சட்டசபைத் தேர்தலுக்கு நின்றவர் அவனிடம்

நாலாயிரம் ரூபாயைக் கொடுத்து அந்த வட்டாரத்துக்கான "பப்ளிஸிடி"ப் பொறுப்பைக் கட்டிவிட்டாராம். ஒரு பழைய மோட்டார் காரில் இரண்டு மாதம் சுற்று சுற்று என்று சுற்றிவிட்டு, தேர்தல் திருவிழாவுக்கு 'விடாயாத்தி' நடத்திவிட்டுத்தான் பள்ளிக்கூடம் வந்தான் பையன் . . . பரீக்ஷை முடிவு அவனைக் கோட்டை விட்டது. அவன் விடவில்லை. இரண்டாம் வருஷமும் படிக்க வந்து விட்டான்.

"என்ன தலைவரே, நீங்க படிக்கக்கூட வேணுமா, என்ன? உனக்குக் காய்தா, செல்வாக்கு எல்லாம் கொடிக் கட்டிப் பறக்குதடா! பலாப்பழத்துக்கு ஈயைப் புடிச்சா உடணும்? உனக்கு எல்லாம் தானா வருது! இந்தப் படிப்பு எதுக்குடா தம்பி?" என்று வயிற்றெரிச்சலைக் கொட்டினார் தலைமை ஆசிரியர். என் சிபார்சு நடக்காது என்று கௌளி சொல்லி விட்டதோ என்னமோ; ஒரு வண்டி நெல்லில் காரியத்தைச் சாதித்து விட்டான் ராமலிங்கம். கலம் பதினைந்து ரூபாய் விற்ற காலம்!

"ஏண்டா தம்பி, உயிரை வாங்குறே! இந்த பாரு, இந்த அஞ்சு வாத்யாரு உட்கார்ந்திருக்காங்க. சினிமா பார்க்க தஞ்சாவூர் ஓடறது, குஸ்தி பார்க்க மெட்ராஸ் போறது, கச்சேரி கேக்க கும்மாணம் போறது – இதெல்லாம் உட்டுட்டேன்னு இவங்களுக்கு முன்னாலெ சத்யம் பண்ணு. இந்த வருசம் பஞ்சாயத்து போர்டு எலெக் ஷன் வருது, அந்தப் பக்கம் தலைகாட்டலேன்னு சொல்லு. சிகரெட் குடிக்கிறதில்லேன்னு சொல்லு– மாமியா ஊட்டுக்கு வராப்போல நெனச்சப்போ வராம, ஒரு நாத் தவறாமப் பள்ளிக்கூடம் வரேன்னு சொல்லு. வந்து பத்து மணியிலேருந்து நாலரை மணி வரைக்கும் இருக்குறேன்னு சொல்லு. அப்புறம் டிரில் க்ளாஸுக்கும் இருக்குறேன்னு சொல்லு – சேத்துக்கறேன் . . . என்ன சார், நான் சொல்றதுலே ஏதாவது பிசகா இருந்தா சொல்லுங்க" என்று ஒரு நாடகம் நடத்திவிட்டு ஆரோக்யம் அவனைச் சேர்த்து விட்டார்.

அவர் 'உளதாக்கட்டிக்கு'ச் சொன்னார் என்று ராமலிங்கத்துக்கா தெரியாது? மாயவரமும், கும்பகோணமும் தஞ்சாவூரும் அவனை விட்டுவிடவில்லை.

நியூஸ்பேப்பர் புஷ்கோட்டையும், பூப்போட்ட புஷ்சட்டையையும் பார்க்கும்போது பற்றிக் கொண்டு வந்தது. எனக்கு மட்டுமல்ல, ஊரிலேயே. நாட்டுப்புறம், பட்டணம் மாதிரி இங்கு இந்த நாகரிகம் அவ்வளவு லகுவாக விலை போய்விட்டாது.

"ரவுடிகளுக்கும் ஸ்தானம் ஒதுக்கி வச்சிருக்குறாப் போலிருக்கு" என்று

பெரிய வீட்டு வைத்திப் பிள்ளை மீசைக்குள்ளே ஆலகாலப் புன்னகை பூத்தார்.

"தம்பி, பள்ளிக்கூடத்துப் பையன் மாதிரி வாயேன். எதுக்கு இந்தச் சட்டையெல்லாம்" என்று சொன்னேன்.

"சரிங்க, சார்" என்று இங்கிதமாகப் பதில் கொடுத்தான் ராமலிங்கம்.

"உனக்குப் பிடிக்காவிட்டால் போயேன். எனக்கு இவனைத்தான் பிடித்திருக்கிறது" என்று அடுத்த திங்கள்கிழமையே அந்த கோட்டு என்னைக் கண்டு சிரித்து விட்டது.

வாயைத் திறந்தால் சிகரெட்டு நாற்றம், வெற்றிலைக் காவி. கிட்டே வந்தால் 'ஸெண்டு' நெடி. பையனுடைய நடவடிக்கை வரவர மோசமாகப் போய்விட்டதைக் கேள்விப்பட்டு ஓடிவந்தார் மாமா. அவர் கையில் கொண்டு வந்த திட்டம் இதுதான்: எப்பொழுதும் போல ஹோட்டலில் சாப்பிடட்டும். ஆனால் கடைத்தெரு மாடியில் குடியிருக்கிற அறையைக் காலி செய்து, வாத்யார் வீட்டில் வந்து இருந்து படிக்க வேண்டியது.

"இன்னும் ரண்டு மாசம்தான். நீங்க மாட்டேன்னு சொல்லப்படாது. மூணு மணிக்கு விடிய விடிய எளுப்பி விட்டுடுங்க . . . எளுந்திருக்கலை, ஒதைங்க. தலையிலே ஒரு குடம் தண்ணியைக் கொட்டுங்க . . . பதினாலு வேலி நிலம் சார் . . . பண்ணை வச்சாத் தங்கமும் பொன்னுமாக் கொழிக்கும் . . . குத்தகைக்கு விட்டுட்டு இங்க வந்து மைனர் ஜோக்குப் போடறே! படிக்கிறேன்னு சொன்னா ஒளுங்காப் படி . . . இவனை நெனச்சுநெனச்சு பெத்தவ துரும்பாப் போயிட்டா, சார். அவ கண்ணீர் விடறதைப் பார்க்க சகிக்கலை . . . "

"என்னடா தம்பி, நிலத்தைக் கீறிக்கிட்டு நிக்கிறியே. பெத்தவங்க வயிறுகூட எரியணுமா?"

"அவ உசிரே போயிடும் போலிருக்கே சார். இவனுக்குக் கவலைப் படறதிலேயே, அவ உசிரும் ஊனும் கரைஞ்சு போயிட்டிருக்கு . . . படிக்கிறேன் படிக்கிறேன்னு பணத்தை நோட்டு நோட்டா வாங்கிக்கிட்டு வர்றான். என்னதான் செய்யறானோ . . . "

அன்று மாலையில் ஒரு வண்டியில் பெட்டி படுக்கையைக் கொண்டு எங்கள் வீட்டில் வைத்தார்கள் இருவரும். மறுபடியும் அரை மணி புலம்பி, என் தலையில் பொறுப்பைக் கட்டிவிட்டு, மாமா ஊருக்குப் போனார்.

பள்ளிக்கூடப் படிப்பிற்கும் அவனுக்கு ராசி இல்லை. நான் மண்டையை உடைத்துக் கொண்டேன். அவன் மண்டையைத் திறக்கமுடியவில்லை. என்னமோ, சேர்ந்தாற்போல் ஒரு வாரம் தங்கி வாசிக்கிறானே, அதுவே பெரிது.

அவன் என்ன படித்தான்?

நான் உள்ளேயிருந்து வரும்போதெல்லாம் கண்டது இதுதான். திண்ணைக்குக் கீழ் இருந்த தென்னங்கன்றைப் பார்த்துக் கொண்டிருப்பான். தெருவைப் பார்த்துக் கொண்டிருப்பான். என்னைக்கண்டதும் கண் திடீரென்று விழித்துக் கொண்டு புஸ்தகத்தில் சாயும் வாய் முணுமுணுக்கும் புஸ்தகத்தைப் பார்க்கும் போது கூடக் கண்ணும் ஆளும் நிஜமாக அங்கு இல்லை என்று குழந்தைக்குக் கூடப் புரியும்.

0 0 0

வாளிப்பும் கட்டுமாக வளர்ந்திருந்த அந்தப் பயலைக் குட்டித் திண்ணையில் பார்க்கும்போது ஏதோ சிறை வைத்தால் போல் இருந்தது. அந்தத் திண்ணையில் காலை மடக்கிக் கொண்டுதான் உட்காரமுடியும். மாடிப் படியின் வளைவில் கட்டியிருந்த திண்ணை அது. ஒரு மணி நேரம் வாசித்துவிட்டு, அப்பாடா என்ற சிரம பரிகாரமாகக் காலை நீட்டி விறைக்கக் கூட முடியாது. அதுவும் இவனைக் கொண்டு அங்கு வைத்தால்? . . . ஏதோ கடனுக்குக் கட்டுப்பட்டிருந்தது அந்த சரீரம். இன்னும் அறுபது நாள், ஐம்பது நாள், நாற்பது நாள் என்று நாளை எண்ணுகிற மாதிரிதான் எனக்குப் பட்டது. அலுப்பே உருவாகத் திண்ணையில் காலத்தைப் போக்கிக் கொண்டிருந்தான் அவன்.

எனக்கும், ஏதோ கிளியைப் பிடித்துக் கூண்டில் அடைத்த பாபம் செய்து விட்டாற்போல் தான் இருந்தது. ஆகவே திடீர் திடீரென்று இரண்டு நாள், மூன்று நாள் என்று அவன் எங்கேயாவது போய்விட்டு வரும் போது, ஏன் என்று கேட்க எனக்கு மனம் வரவில்லை.

ஆனால், பரீக்ஷைக்கு முதள் நாளைக்கு முதல் நாள் கூடவா இப்படி ஊர் சுற்றப் போகவேண்டும்? அதுவும் இரவு ஒன்பதரை மணிக்கு! புளிய மிளாற்றால் நாலு வீறினால் என்ன?

காலை நாலு மணி; எனக்கு விழிப்புக் கொடுத்துவிட்டது. எழுந்து திண்ணைப் பக்கம் போனேன். ராமலிங்கம் சிறு குறட்டை

விட்டுக்கொண்டு தூங்கிக் கொண்டிருந்தான்.

எழுப்பலாமா? நாளைக்குப் பரீக்ஷையாயிற்றே? எதற்காக? இப்பொழுது எழுந்து என்ன படித்து வெட்டி முறித்துவிடப் போகிறான்?

பேசாமல் வந்துவிட்டேன்.

காலை ஆறு மணிக்கு, பையன் நல்ல பிள்ளையாக, ஆற்றில் குளித்து விட்டு வந்து, கூடத்தில் உடை மாற்றிக்கொண்டான். என்னை நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை. கண்ணெல்லாம் ஜிவு ஜிவு என்றிருந்தது.

என்னால் அடக்கிக்கொள்ள முடியவில்லை. "ராத்திரி எங்கே பிள்ளைவாளைக் காணும்?"

". . . "

"தலைகாணிக்குக் கூடக் குளிருமோ?"

". . . "

"என்னடா, நான் கேக்கறேன். என்னமோ, புன்சிரிப்புச் சிரிச்சிக்கிட்டு நீ பாட்டுக்கு என்னமோ பண்றியே, ஏண்டா கழிசடே! . . . ம் . . . "

எனக்குக் குமுறிக் கொண்டு வந்தது. காப்பி டம்ளரை வீசி முகத்தில் எறிந்திருப்பேன். ஆனால் அந்த 'ம்'மைத்தவிர ஒன்றும் செய்ய முடியவில்லை.

"பெத்த வயிறு கண் கலங்குதுடா ஊர்லே . . . "

அவன் முகம் சுண்டி விட்டது. தலையைக் குனிந்துகொண்டு நின்றான், அரை நிமிஷம். புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு திண்ணைக்குப் போய் விட்டான்.

"தொலையுது, விடுங்க! நாம மனசை அலட்டிக்கிட்டு என்ன ஆகப் போவுது? . . . நீங்க படபடன்னு பேசினா எனக்குப் பயமாயிருக்கு . . . பேசாம இருங்க" என்று என்னைத் தேற்றினாள் அவள்.

யாருக்கு யார் அலட்டிக்கொள்ள முடியும்?

முதல் நாள் பரீக்ஷை ஆயிற்று. பையன் எழுதினான். அவ்வளவுதான். மறுநாள் இரவு, மணி ஏழு, எட்டு, பத்து, பன்னிரண்டு அடித்தது. ஆளையே காணவில்லை. எதிர்வீட்டுப் பையனை விசாரித்தேன்.

“இன்னிக்குப் பரீட்சைக்கே வரலீங்க சார் அவரு. நேத்து எழுதினாரு. என் ஹால் தான்.”

“என்னது! பரீட்சைக்கே வரலையா?”

“ஆமா, சார்.”

“என்னடா இது!”

“திருச்சியிலே ஸாம்ஸன் படம் வந்திருக்காம் சார். மூணு நாள்தான் ஆடுதாம். எங்கிட்டதான் சொல்லிக்கிட்டிருந்தாரு, சார்.”

“சரித்தான். ஸாம்ஸன் படம் ஓடறப்போ பரீட்சை எதுக்கு?”

மூன்றாவது நாளும் ஆளைக் காணோம். நான்காவது நாள், கடைசி நாள். ம் ஹ்ம்!

நான் வெளியே போய்விட்டு வழக்கம் போல் எட்டு மணிக்கு வந்தேன். கூடத்தில் பெட்டி, படுக்கை, அவன் மாட்டியிருந்த கயிற்றுக் கொடி ஒன்றையும் காணவில்லை.

“ராமலிங்கம் பெட்டி படுக்கையெல்லாம் எடுத்துக்கிட்டுப் போய்ட்டான்.”

“அதான் பார்த்தேன்.”

“ஏன் தம்பி, மீதி பரீட்சை எழுதலை”ன்னு கேட்டேன். ஊர்லே ஏதோ தகராறாம். குத்தகைக்காரங்க தகராறாம் முத்திப் போயிட்டுதாம். அதுக்குத்தான் போனானாம்.”

“ரொம்ப கரிசனமான புள்ளையாச்சே! நீ நம்பறயா?”

“என்னமோ, அப்படிதான் சொன்னான்.”

“அப்புறம்?”

“ஐயா வந்தா சொல்லிடுங்க. இருந்து சொல்லிக்கிட்டுப் போக நேரமில்லை. இன்னும் ஒரு வாரத்திலே வரேன்’னு சொன்னான். பொட்டி படுக்கையெல்லாம் வண்டியிலே தூக்கி வைக்கச் சொன்னான். என்னைக் காலில் விளுந்து கும்பிட்டான். போய்ட்டான். சாப்பிடச் சொன்னேன். இல்லே, நேரமமாயிடிச்சின்னு போயிட்டான்.”

“ம்!”

“கும்பிடறேன்னு கும்பிட்டான். ‘வாத்யாரைக் கோவிக்காம இருக்கச்

சொல்லுங்மம்மா. அவுங்க சொல்றதையெல்லாம் கேக்கலே நான். நீங்களும் நான் செஞ்ச தப்பெல்லாம் மன்னிச்சிக்கிடணும்'னு சொன்னான். தொண்டை அடைச்சு அடைச்சு வந்திச்சு அவனுக்கு. அப்புறம் போயிட்டான்."

"இருக்கிற போது சொன்னத்தைக் கேக்கலே. காலிலே உளுந்தா என்ன? . . . வாத்தியார் பொழைப்பே இப்படித்தான். படிக்கிற வரையில் மரியாதையா இருப்பான். அப்பறம் மதகுக் கட்டையிலே உட்கார்ந்திருக்கறவன் ஏந்துக்கக் கூட மாட்டான். வரது தெரியாததுபோல அந்தாண்டை மூஞ்சியைத் திருப்பிக்கிட்டு உட்கார்ந்திருப்பான் . . . பள்ளிக்கூடத்தை விட்ட மறுநாளே பெரிய மனுசனாப் போயிடுவான். இது என்ன புதிசா?"

0 0 0

பத்து நாள் கழித்து ஒரு கல்யாணப் பத்திரிகை வந்தது. ராமலிங்கத்துக்குக் கல்யாணமாம். திருப்பதியிலே கல்யாணமாம். பெண் பெயர் அலமேலு. பெண் வீட்டுக்காரர்களுக்குத் திருமலையான் குலதெய்வமாக இருக்கும்.

"இப்ப சமாதனமாச்சா உங்களுக்கு?"

"என்ன?"

"அவனுக்கு இந்தப் பள்ளிக்கூடமெல்லாம் சரிப்பட்டு வராது. "ஏய்ன்னா டேய்னு" வாயடிக்கிற பொண்ணைப் பிடிச்சுக் கட்டிப் போட்டாத்தான் சரியா வரும்'னு சொன்னீங்களே, உங்க மனசு அறிஞ்சு அந்தப் பள்ளிக்கூடத்திலியே சேந்துட்டான் ராமலிங்கம்."

"பின்னே என்ன? இருபத்தி மூணு வயசிலே, பள்ளிக்கூடத்திலே படின்னா? இவங்கூட பள்ளிக்கூடத்திலே நுழைஞ்சவன் எல்லாம் வேலைக்குப் போய் குடித்தனம் நடத்திக்கிட்டிருக்கான் . . . "

"கல்யாணத்துக்கு எப்ப புறப்படறதாம்?"

"எதுக்காக? வாத்தியாரை வந்து நேரே அழச்சானே அதுக்கா? இந்தப் பள்ளிக்கூடத்திலே சேத்ததே நான். இந்த வருஷம் செலக் ஷன் வாங்கிக் கொடுத்தது நான். கடைசியிலே படிச்சதும் இந்த ஊட்டுலே, ரண்டுமாசம். இன்னொரு பயலா இருந்தா, வந்து அழச்சிக்கிட்டுப் போகாமயா இருப்பான்? காசுத் திமிரு . . . "

"நீங்களும் கரிச்சுக் கொட்டினீங்க."

“அவன் ரொம்ப ஒழுங்காயிருந்தான் பாரு . . . இந்த பாரு. வாத்தியார்னா அவ்வளவு தான். செங்கோல் புடிக்கிறவனுக்குக்கூட வாத்தியார் உண்டு. அதுக்காக ராஜ்யத்திலே ஒரு ஓரத்தைக் கிள்ளிக் கொடுத்திட மாட்டான். அவர் தலையிலே எழுதினது அந்த புது வேட்டியும், துப்பட்டாவும் தான் . . . நான் இப்ப இவன் கூப்பிடலைன்னு ஏங்கிக் கிடக்கலே. இருந்தாலும் ஒரு வார்த்தைக்குச் சொல்றேன். இவ்வளவு பழகின பய . . . சரி, தள்ளு குப்பை. எப்படியாவது நல்லாருந்தா சரி.”

0 0 0

பேசி ஆறாம் நாள் காலையில் எட்டு மணி இருக்கும். ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தேன். வாசலில் வண்டி நிற்கும் சத்தம் கேட்டது. சற்று எழுந்து எட்டிப் பார்த்தேன்.

எங்கள் வீட்டு வாசலில்தான் வண்டி நின்றுகொண்டிருந்தது. பளபள வென்று பூட்ஸும் ஜரிகை போட்ட கோடி வேட்டியும் கீழே குதித்தன. ராமலிங்கமா!

ராமலிங்கம் நின்றான். பின்பு மெட்டியும், கொலுஸும், மாம்பழப்பட்டுச் சேலையும் இறங்கின.

“அட, ராமலிங்கமா? உங்க பள்ளிக்கூடத்தையும் அளச்சிட்டு வந்துட்டானே – இதோ வர்றேன்” என்று இவள் மறைந்து விட்டாள்.

“வாங்க சார் மாப்பிள்ளை, வாம்மா!”

“வணக்கம் சார்!”

“கல்யாணங்கள்ளாம் ஆச்சா.”

“ஆச்சு சார். நேரே வந்து அழச்சுப் போக முடியல்லே சார். ஒரே அவசரமாப் போச்சு.”

“அதனாலே என்ன? வா, உட்காரு.”

அதற்குள் என்ன மாயம் செய்தாளோ, ஒரு தட்டில் ஆரத்தியைத் தயார் செய்துவந்துவிட்டாள் அவள். இரண்டு பேரையும் கிழக்கு முகமாக நிற்க வைத்து ஆரத்தி சுற்றி, பெண்ணுக்கும் பிள்ளைக்கும் நெற்றியிட்டாள். அவளுக்குப் பிள்ளையில்லாத குறை நீங்கிவிட்டது மாதிரிதான் எனக்குத் தோன்றிற்று. எவ்வளவு பூரிப்பு!

“வா, உட்காரு.”

“கும்பிடறேன் சார்.” முட முடவென்று அவனும் பெண்ணும் இருவருக்கும் வணங்கினார்கள்.

“வாத்யாரு சொல்லிக்கிட்டே இருந்தாங்க. இந்தப் பள்ளிக்கூடம்தான் உனக்குச் சரின்னு. அது மாதிரியே செஞ்சிட்டியே!” என்று அவள் சிரித்தாள்.

பெண் காலிலும் கையிலும் வளையலும் கொலுசுமாக, கல்யாணத் திருவுடன் பொலிந்து கொண்டு மலர்ந்து நின்றது.

“உம் பேர் என்னம்மா?”

பெண் புன்சிரிப்புடன் பேசாமல் இருந்தது.

“வெக்கமா இருக்கு! ராமலிங்கம் கோவிச்சுக்காது. சொல்லு.”

“அதுக்குப் பேச வராது” என்று ராமலிங்கம் குறுகிட்டுப் புன்னகை பூத்தான்.

“அப்படின்னா?”

“ஊமை, சார்.”

“என்னது?”

“ஆமா சார், எங்க அக்கா மகள்தான் அது. ஒரே குழந்தை. எனக்கும் ஒரே அக்காதான். அவங்க புருஷன் எங்க ஊருக்குப் பக்கத்திலே நாலஞ்சு மைலிலெதான் இருக்காங்க. கர்ணமாயிருக்காங்க. தெம்பா இருந்து, கடனொடனுமாப் போயி, நொடிச்சுப் போயிட்டாங்க. இதை எங்கயாவது நல்ல இடமாப் பாத்துக் குடுக்கணும்னு ஆசை அக்காவுக்கு. செய்யறதுக்கும் தெம்பு இல்லை. ரொம்ப வியாகூலப்பட்டுப் போயிட்டுது. பரீட்சை நடந்துக்கிட்டிருக்கப்போ, யாரோ பெண் பார்க்க வராங்கன்னு கடுதாசி வந்திச்சு. அதான் எல்லாத்தையும் போட்டுட்டு ஓடினேன். பாத்தேன், பையனும் நல்லா இல்லே. பதினாயிரம் இருபதினாயிரம்னு கேட்டாங்க. அவங்களுக்குச் சொத்து இல்லேன்னு தெரியும். அவங்களுக்குப் பாட்டி ஊட்லே செய்யட்டுமேன்னுதான் கேட்டாங்க போலிருக்கு.

“ரூபாய், சீருன்னு கன கண்டிப்பா பேசினாங்க. இது முகத்தையும் பார்த்தேன். வாய்தான் இல்லையே தவிர எதையும் ஒரு பார்வையிலேயே

சொல்லிப்பிடும். எல்லாத்தையும் யோசிச்சுப் பார்த்தேன். கையிலே காலணா கிடையாது. படிப்பும் கிடையாது. இந்த மாதிரி வெத்து ஆளுங்க பதினாயிரம் இருபதினாயிரம்னு இப்பவே கேட்டா பெண்ணை எப்படி வச்சுப்பாங்களோ? வாயும் காதும் இல்லாததை நோக அடிக்கவா முடியாது? யோசிச்சுப் பாத்தேன். நானே பண்ணிக்கிறேன்னு சொல்லிப்பிட்டேன். மாமனுக்கு ரொம்பக் கோபம். அவருக்குக் கல்யாணத்துக்கு ரெண்டு பொண்ணு இருக்கு. என்னைக் கொஞ்சமாக் கலைக்கலே, இருக்கிற உறவு ஒருத்தரு பாக்கியில்லே, கலைக்க முனைஞ்சிட்டாங்க. கல்யாணத்திலேயே ஏதாவது கலாட்டா பண்ணுவாங்களோன்னு பயமாப் போச்சு. கடைசியிலே கண் காணாத இடமாப் போய்க் பண்ணிக்கிறதுன்னு முடிவு பண்ணிப்பிட்டேன். பேரும் அலமேலுன்னு இருந்திச்சா, திருப்பதியிலே செய்யறதுன்னு முடிவு பண்ணினேன். முடிஞ்சும் ஆயிட்டுது. எங்க அக்காவுக்கும் இனிமே கவலையில்லே . . . பேசி என்னசார் ஆகப் போவுது. ரொம்ப புத்திசாலி சார் இது . . . உங்களைக்கூட அந்த அவசரத்திலேதான் அழச்சுக்கிட்டுப் போக முடியலே. வெளியே யாரையும் பாக்கறதுக்குத் தைரியமும் வரலீங்க சார் எனக்கு. ஏதாவது சொல்லி என் மனசைத் திருப்பி விட்டுடுவாங்களோன்னு கவலை வந்திடிச்சு . . . நீங்க தவறா நெனச்சுக்கப்படாது சார். வெளியிலே கோபிச்சுப்பிங்களே தவிர, உங்க மனசு எங்கிட்ட எப்படியெல்லாம் இருக்கும்னு எனக்குத் தெரியும், சார். என் நிலையைப் பின்னாலே சொல்லிக்கலாம்னுதான் போயிட்டேன் . . . ”

பிரமை பிடித்தாற் போல நான் உட்கார்ந்திருந்தேன். அவனுடைய புன்னகையும் அமைதியும் அழுத்தமும்! என் முதுகில் ஒரு நடுக்கம் ஓடிப் புல்லரித்து உதறிற்று.

“தங்கத்தை எவ்வளவு கயிஷ்டப்பட்டுத் தேடி எடுக்க வேண்டியிருக்கு, பாத்தீங்களா — ” என்று ஆரம்பித்த மனைவி மேலே பேச முடியாமல் திணறினாள்.

“தம்பி, தம்பி, நீ — நீ வந்து — ”

எனக்கும் அதற்கு மேல் பேச முடியவில்லை தொண்டையை அடைத்துக்கொண்டுவிட்டது.

ஆனந்த விகடன் தீபாவளி மலர், 1954

# மன்னித்து விடு

நல்லப்பன் மகள் கல்யாணத்திற்கு அநேகமாக எல்லா பந்துக்களும் வந்திருந்தார்கள். தெருவின் ஒவ்வொரு வீட்டுத் திண்ணையிலும் 'கழுதை'யாட்டமும் பதினைந்தாம் புள்ளியும் பேரிரைச்சலைக் கிளப்பிக் கொண்டிருந்தன. சாப்பாட்டிற்கு ஒரு பெரிய கொட்டாரம் போடப்பட்டிருந்தது. வெட்டியான் முதல் பட்டாமணியம் வரைக்கும் அதில்தான் சாப்பாடு. கள்ளுத் தண்ணி கண்டிப்பாக நிறுத்தப்பட்டது. அதற்குப் பதிலாக நீர் மோரும் 'பதனி'யும் தான் கொடுக்கப்பட்டன.

கல்யாணம் ரொம்ப ஆர்ப்பாடமாக நடந்தது. நல்லப்பன் ஊர்கோலத்திற்கு மாத்திரம் ஆயிரம் ரூபாய் செலவழித்தான். பொய்க் கால் குதிரையாட்டத்திற்கு அவன் ஏற்பாடு செய்திருந்ததைப் பற்றி அவன் ஆட்களுக்கு ரொம்பப் பெருமை. பிறகு எங்கு கல்யாணம் நடந்தாலும், "ஐயா, பண்ணைக் கல்யாணத்தை விட இது என்ன ஒசத்தியோ! நம்ப கல்யாணத்தில் இரண்டு பொய்க் குதிரையாடிற்றே" என்று நல்லப்பனிடமே சொல்லுவார்கள்.

அந்த ஊரில் ஒரு கல்யாணமும் அப்படி நடந்ததில்லை. மாங்குளம் பிள்ளைகளெல்லாம் காசில் 'கிண்டன்'கள் என்று பிரசித்தம். நல்லப்பன் தன் மகள் கல்யாணத்தை வெகு சிறப்பாக நடத்தியது பற்றி அவன் மேல் அவர்களுக்குக் கொஞ்சம் பொறாமைதான். அவர்களின் பொறாமையை மேலும் வளர்ப்பதற்கிடமாக, நல்லப்பன், வழக்கத்திற்கு மாறாக, கல்யாணத்தின் கடைசி நாளன்றைக்கு ஊர் மிராசுதார்களுக்கு முன்னால் பாக்கு வெற்றிலை கொடுக்காமல், குடியானவர்களுக்கும், தொழிலாளிகளுக்கும் கொடுத்துவிட்டு, பிறகு கொடுத்தான். இது அவனை ஊரார் கோபத்திற்காளாக்கியது. தெருவில் எல்லாரும் சேர்ந்து அவனை அவமானம் பண்ணுவதற்கு வழி தேடிக் கொண்டிருந்தார்கள்.

ராசு, நல்லப்பனுக்கு அத்யந்த நண்பன். நல்லப்பன் வீட்டிற்குக் காய் கறிகளோ அல்லது வேறு எது வந்தாலும் அதில் பாதி ராசு வீட்டிற்குச் சேர்ந்து விடும். இருவரும் சேர்ந்துதான் வயல்வெளியைப் பார்வையிடப் போவது வழக்கம். ராசுவின் நிலங்கள் நல்லப்பனின் நிலங்களுக்குப் பக்கத்திலேயே இருந்தன. அவன் நல்லப்பன் வீட்டுக் கல்யாணத்தைப் பாதிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு நடத்தி வைத்தான்.

நல்லப்பனுக்குப் பிள்ளையில்லை. இந்த விஷயத்தில் அவனுக்கு ரொம்பக் குறைதான். ஆனால் ராசு பக்கத்திலிருக்கும் வரை அதைப்பற்றி நினைப்பதேயில்லை. ராசு இருப்பது அவனுக்கு வலது கை மாதிரியிருந்தது.

ராசுவின் அண்ணன் நாகலிங்கம் மாங்குளத்திலேயே பெரிய போக்கிரி. தம்பி வீட்டிற்கு நாலைந்து வீடு தாண்டி அடுத்த வீட்டிலிருந்தான். ஊரில் ஏதாவது கலகத்தை மூட்டி விட்டு, ஒன்றிலும் தான் பட்டுக் கொள்ளாததுபோல் விலகி விடுவது அவன் வழக்கம்

0 0 0

ஒரு நாள் அவன், சாலை ஓரமாக இருக்கின்ற மாந்தோப்பில், இரண்டு மூன்று குடியானவர்கள், கொல்லன், பரியாரி முதலிய எல்லாத் தொழிலாளிகளையும் கூப்பிட்டு, நல்லப்பன் தன் பெண் கலியாணத்தின்போது அவர்களுக்குக் கள்ளுத் தண்ணிகூட இல்லாமல் வேலை வாங்கிக் கொண்டதை எடுத்துக் காட்டியும் பலவிதமாகத் தூஷித்தும், நல்லப்பனை எல்லாருமாக அடித்தால் தான் பணம் தருவதாகவும் கூறினான்.

இதைக் கேட்டதும் ஆசாரி அண்ணாவு கோபத்துடன், “என்ன ஐயா, நீங்க மாத்திரம் என்னா பரமாதமாக் குடுத்துக் கிளிச்சுப்புட்டீங்க? போன தீவாளிக்கு எல்லாப் பண்ணேலியும் தொயிலாளிக்கெல்லாம் ஆளுக்கு ஒரு கலம் நெல்லு கொடுத்தாங்களே. நீங்க தானே ஐயா, தரேன் தரேன்னு பாச்சை காட்டி ஏச்சுப்புட்டீங்க! நல்லப்ப ஐயா எங்களைச் சுருட்டுப் பாயிலே குந்தவச்சு. பாக்கு வெத்தலை கொடுத்த லச்சனம் ஒண்ணே போதுமே! அவரு கள்ளுத் தண்ணி கொடுக்காட்டிப் போனா எங்களுக்கு ஒண்ணும் மோசம் போயிடலே, போய்யா” என்று சொல்லிவிட்டு அலட்சியமாக நடந்து தோப்பைத் தாண்டினான். மற்ற ஆட்களும் அவனைப் பின் தொடர்ந்தார்கள்.

அண்ணாவு, நல்லப்பனிடம் போய் ரகசியமாகச் சாலை மாந்தோப்பில் நடந்த சங்கதியைச் சொன்னான். நல்லப்பனுக்கு ஏற்பட்ட துக்கமும் வெறுப்பும் தாங்க முடியவில்லை. ஆனால், அவன் பொறுமையை இழக்கவில்லை.

0 0 0

கிராமத்தின் பொதுவுடைமைச் சொத்தின் நிர்வாகம் நாகலிங்கத்தினிடம்

இருந்தது. நிர்வாகத்தில் ஊழல்களோடு இன்றி, நாகலிங்கம் பொய்க் கணக்கெழுதி ஆயிரம் ரூபாய் வரை தன் வாயில் போட்டுக்கொண்டும் விட்டான். நல்லப்பனுக்கு இது தெரிந்தது. அவனுக்கு இந்த ஊழல்களெல்லாம் பிடிக்கவில்லை. ஒரு நாள் அவன் நாகலிங்கத்தினிடம் கணக்கைப் பார்க்கவேண்டுமென்று கணக்குப் புத்தகத்தைக் கேட்டான். அவன் எவ்வளவோ கேட்டும், நாகலிங்கம் கொடுக்க மறுத்துவிட்டான். பட்டா மணியத்திடம் சொன்ன பிறகுதான் நல்லப்பன் கைக்குப் புத்தகம் வந்தது. கணக்கைப் பார்த்தபொழுது நாகலிங்கம் ஆயிரம் ரூபாய்க்குமேல் மோசடி செய்துவிட்டான் என்று தெரிந்தது. பட்டா மணியம் உடனே மோசடி செய்யப்பட்ட தொகையை அவனிடமிருந்து வாங்கி, நிர்வாகத்தைத் தம் கைக்கு மாற்றிக்கொண்டு விட்டார். நிர்வாகம் தன் கையை விட்டுப் போனதால் அவமானமடைந்த நாகலிங்கம், நல்லப்பனை எப்படியாவது ஊரைவிட்டு ஒழிக்கவேண்டுமென்று எண்ணங்கொண்டான்.

ஒவ்வொரு நவராத்திரியின் கடைசி நாளில், ராசு ஆற்றுக்கு அக்கரையிலுள்ள பிடாரி கோவிலில் ‘பச்சை’ போடுவது வழக்கம். ‘பச்சை’ போட்டவுடன் இரண்டு பூசாரிகள் உடுக்கையடித்துக் கொண்டே பாடுவார்கள். அவர்களுக்கு நடுவில் ஒரு பூசாரிக்குச் ‘சாமி’ வந்து ஏதாவது ‘ஆரூடம்’ சொல்லிவிட்டுப் போகும்.

ராசுவுக்கு ஆவேசத்தில் ரொம்ப நம்பிக்கை அதிகம். மாங்குளம் கிராமத்தையே அவனுக்கு இனாம் கொடுத்து ‘காளியம்மா சொல்வதை நம்பாதே’ என்று சொன்னாலும் கேட்கமாட்டான். அன்றைக்கு வந்த காளியம்மா, “‘ந’னாவை முதலெழுத்தாகக் கொண்ட பேருடையவன், துரோகம் பண்ணிக் கற்புக்கரசியான ராசுவின் பெண்ஜாதியைக் கெடுக்க நினைக்கிறான். அவனை ஊரைவிட்டு ஒழித்தாலொழிய நான் கிருபை பண்ணமாட்டேன்” என்று சொல்லி மலையேறிவிட்டது.

இது நடந்த சமயம் நல்லப்பன் ஊரில் இல்லை. ராசுவுக்கு முதலில் ஆவேசம் கூறியதை நம்ப முடியவில்லையானாலும் கொஞ்சம் கொஞ்சமாய் அவன் மனது சந்தேகங்கொள்ள ஆரம்பித்தது. கூடிய சீக்கிரத்தில் நல்லப்பனைக் கடும் பகைவனாக எண்ண ஆரம்பித்தான் ராசு. அவன் ஊருக்குத் திரும்பி வந்தவுடன் அவனை முழுசாக ஒரு வாரம்கூட மாங்குளத்தில் இருக்கவொட்டாமல் பண்ணி, கூண்டோடு கைலாசமாக அந்த ஊரைவிட்டு விரட்டவேண்டும் என்று எண்ணினான். நல்லப்பன் நிலங்களை மேற்பார்வை பார்த்து வந்த அண்ணாவுவை மரத்தில் கட்டி ரத்தம் பீறிட்டு வரும்படியாக அடித்தான். நல்லப்பனின்

வயல்களில் ராசுவின் மாடுகள் மேய்ந்து பாழாக்கிக் கொண்டிருந்தன.

அடிபட்ட இரவே, பெண்ஜாதி, பிள்ளை குட்டியையெல்லாம் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டு, அக்கரைச் சீமைக்கு ஓடிப்போவதற்கு ஊரைவிட்டுக் கிளம்பினான் அண்ணாவு. ராத்திரியை ஒரு சத்திரத்தில் கழித்துவிட்டு, விடியற் காலையில் எழுந்து சாலையில் வேகமாக நடந்தான். எதிரில் நல்லப்பனும் அவன் பெண்ணும் வண்டியில் வந்து கொண்டிருந்ததைப் பார்த்தவுடன் அவனுக்கு அடக்கமுடியாத வருத்தம் வந்தது. நல்லப்பனிடம் ஓடி, "ஐயா, பாழாப் போய்ட்டீங்க. உங்களுக்குத் துரோகம் பண்ணிட்டாங்க பாவிப் பயகளெல்லாருமாச் சேர்ந்து" என்று அழுதுகொண்டே கூறிவிட்டு, காளியம்மா சோசியம் முதல் அவன் அக்கரைச் சீமைக்கு கிளம்பினது வரைக்கும் ஒன்று விடாமல் சொல்லிவிட்டான். எல்லாவற்றையும் கேட்டு நல்லப்பனுக்கு இடி விழுந்தாற்போல் இருந்தது. நீண்ட நேரம் ஒன்றும் புரியாமல் விழித்துவிட்டு, வண்டியைக் காசாங் குளத்திற்கு ஓட்டச் சொன்னான்.

0 0 0

நல்லப்பன் ஊரை விட்டுப்போய் ஏழெட்டு வருஷங்கள் கழிந்தன. ஆனால் இன்னும் ராசுவுக்கு அவன் மேல் இருந்த வேகம் குறையவில்லை. அவனைத் திட்டுவதையும் நிறுத்தினபாடில்லை. "கோடி கோடி வருஷமானாலும் அந்தப் பதரை மன்னிக்கவே மாட்டேனே! சிநேக த்ரோகம் பண்ணின பாவி அல்லவா அவன்? அவன் இந்த ஊருக்கு ஒரு தடவை தப்பித் தவறி வந்தாலும், அவன் காலை முறித்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன்" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் அந்திப்பொழுது ஆனவுடன், ராசு வயலைப் பார்த்து விட்டு வந்து, முற்றத்தில் ஒரு செம்பு ஜலத்தால், வயலில் ஊன்றி ஊன்றிச் சேறு ஒட்டிக்கொண்டிருந்த கழியை அலம்பிக் கொண்டிருந்தான். அவன் பெண்ஜாதி தனபாக்கியம் அங்க வந்து, "நீங்க வயக்கரைக்குப் போனாங்காட்டியும் உங்க அண்ணாத்தி வந்து உங்க பேரைச் சொல்லி கூப்பிட்டாரு. நான் இல்லேன்னு சொன்னேன். அவரு எங்க போயிருக்காருன்னு கேட்டுகிட்டே உள்ளவந்து எங்கிட்ட கிட்ட வந்து நின்னாரு. எனக்குத் தெரியாதுன்னு சொல்லிட்டு குடத்தை எடுத்துக்கினு தண்ணி கொண்டு வர்ராப்போலே அடுத்த ஊட்டுக்குப் போயிட்டேன். ரொம்ப நாளி களிச்சுத்தான் ஊட்டுக்குள்ளே வந்தேன்" என்று கண்ணைத் துடைத்துக் கொண்டே சொன்னாள். கழியைக் கூடல்வாயில் சொருகிவிட்டு, ராசு "இந்தா, நன்னா விளங்கச் சொல்லு சங்கதியை!"

என்று ஊஞ்சலில் உட்கார்ந்தான். அவள், "நீங்க வயக்கடைக்கு போனீங்கள்ள" என்று ஆரம்பிப்பதற்குள், பூசாரி மகன் ஓடி வந்து, "ஐயா, உங்க அண்ணன், தலையாரி சோமு பெண்ஜாதி மேலே கையை வச்சுட்டாராம். அவனுக்கு அது தெரிஞ்சு அவரு கழுத்தை முறிச்சு போட்டுட்டான். அவரு மாந்தோப்பில் செத்துக் கிடக்கிறாரு" என்றான். ராசு உடனே எழுந்து மாந்தோப்பிற்கு ஓடினான்.

அண்ணன் நாகலிங்கம் செத்து ஒரு மாதமாகிவிட்டது. ராசுவின் மனம், "நல்லப்பன் ஒரு பாவமுமறியாத அப்பாவி. அவன் காலில் விழு. நீ செய்த அக்கிரமங்களுக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள். அவன் பொறுமை உன்னை மன்னித்துவிடும்" என்று அவனைத் தூண்டிக்கொண்டேயிருந்தது. "கொடிய பாவி நீ எங்கே, நல்லப்பன் எங்கே? நீ செய்த அட்டூழியங்களை அவன் சாகும் வரையில் மறக்கமாட்டானே" என்றும் சொல்லிற்று. ராசுவுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. அவன் காளியம்மாவிடம் நாளைக்குப் பத்து தடவை மன்னிப்புக் கேட்டுக்கொண்டேயிருந்தான். நல்லப்பனின் உருவம் ஒவ்வொரு இரவும் அவன் கனவில் தோன்றவாரம்பித்தது.

0 0 0

நல்லப்பன் ஜெயிலிலிருந்து விடுதலையடைந்து நேராக 'பாரதக் குடிலை'யடைந்தான். அண்ணாவு முதலில் இவனைப் பார்த்தவுடன், "ஐயா வந்துட்டாரு, எல்லாரும் இங்க வாங்க" என்று ஒரு பெரிய சத்தம் போட்டான். ராட்டினம், தறி, பாய் எல்லாவற்றையும் போட்டு விட்டு, அங்கிருந்த ஹரிஜனங்கள் ஓடிவந்து நல்லப்பனைச் சூழ்ந்து கொண்டார்கள். 'பாரதக் குடி'லில் நூற்றெழுபது ஹரிஜனங்கள் இருந்தாலும் ஒவ்வொருவரையும் நல்லப்பனுக்கு நன்றாய்த் தெரியும். 'குடில்' அன்றைக்கு எப்பொழுதுமில்லாத சோபையுடனும், களிப்புடனும் விளங்கிற்று.

"சங்கிலி வரவில்லையா?" என்று கேட்டான் நல்லப்பன்.

"அவனுக்குக் காய்ச்சல்" என்றான் அண்ணாவு.

கொஞ்சநேரங் கழித்து, நல்லப்பன் சங்கிலி வீட்டுக்குப்போய் அவனுக்கு மருந்து வாங்கிக் கொடுத்துவிட்டு வீட்டுக்குச் சென்றான். வாசலில் நுழைந்தவுடன் ஏழு வயது நிரம்பாத அவன் பேரன் ராசகோபாலன் "தாத்தா, இத்தினி நாளா எங்க போயிருந்தே?" என்று அவனைக் கட்டிக் கொண்டான்.

அன்று ராத்திரிதான் தீபாவளி. சாயங்காலம் நல்லப்பன் தன்னறையில் உட்கார்ந்து ஒரு தினசரியைப் படித்துக் கொண்டிருந்தபொழுது, மெலிந்த வாடிய ஒரு உருவம் ஓடி வந்து அவன் காலில் விழுந்தது. “நீங்கள் யார்?” என்று கேட்டான், ஒன்றும் புரியாமல்.

நான்தான் உன்னைச் சீர்குலைத்தேன். உன் லக்ஷ்மியைப் பாழாக்கினேன். ஊரார் பேச்சைக் கேட்டு உன்மேல் அபாண்டமான சந்தேகம் கொண்டேன். உன்னை ஊரைவிட்டுத் துரத்தியதும் நான்தான். என் பாபங்கள் ஏழேழு ஜன்மத்திலும் என்னை விடாது. ‘ராசு, உன்னை மன்னித்துவிட்டேன்’ என்று ஒரு வார்த்தை சொல்லிவிடு” என்றான்.

நல்லப்பன் கண்களினின்றும் நீர் தாரை தாரையாக வழிந்தது. ராசுவும் குழந்தைபோல் அழுதான்.

“ராசு! அப்படி நடக்காவிட்டால் இத்தனை ஏழைகள் பிழைக்க முடியுமா?” என்று கூப்பிடு தூரத்திலுள்ள ‘பாரதக் குடி’லைச் சுட்டி காண்பித்தான் நல்லப்பன். “நான் உப்பு சத்யாக்ரகத்தில் கலந்து ஜெயிலுக்குப் போய் இன்றுதான் விடுதலையடைந்தேன். இதுவரை அண்ணாவுதான் குடிலைப் பார்த்துக் கொண்டிருந்தான்” என்று அவன் மேலும் சொன்னவுடன், ராசு மறுபடியும் கண்ணீர் விட்டான்.

ஆனந்த விகடன், டிசம்பர் 1937

# கமலியின் குழந்தை

கமலிக்கு ஒன்பதாவது மாதம். உட்கார ஒரு நாழி, எழுந்திருக்க ஒரு நாழி; நடந்தால் சிரமம், திரும்பினால் திணறல். இந்த ஸ்திதியில், மேல் மூச்சு வாங்க, கிணற்றிலிருந்து மூன்று வாளி தண்ணீர் இழுத்துத் தோண்டியில் கொட்டிவிட்டாள். தோண்டியை எடுத்து இடுப்பில் தூக்கி வைத்த அவள் ஒரு க்ஷணம் ஆடிவிட்டாள்.

தாழ்வாரத்தில் தன் குழந்தைக்கு விசிறிக் கொண்டிருந்த மன்னி – கமலிக்குப் பெரிய மைத்துனன் மனைவி – இந்த சிரமத்தை உட்கார்ந்தபடியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

“இடுப்பிலே தூக்கிக்கொள்ள முடியாவிட்டால், கையைத் தொங்க விட்டு எடுத்துக் கொண்டு போயேன்” என்று மன்னி சொல்லிக் கொடுத்தாள்.

கர்ப்பிணி இந்த யோசனையை ஏற்றுக்கொண்டு இடுப்பில் இருந்த குடத்தைக் கைக்கு மாற்றிக்கொண்டு உள்ளே போனாள். வெட்கத்தினால் முகத்தில் லேசாகப் புன் சிரிப்பு தவழ்ந்தது.

அந்தப் புன்னகைதான் விஷமமாக இருந்தது மன்னிக்கு. வாயைத் திறந்து ஏதேனும் ‘சிரமமாயிருக்கு’ என்று சொன்னால் அவளை அழ விடலாம், புண்ணில் கோலைவிட்டு வேடிக்கை பார்க்கலாம் என்று அவள் நினைத்தாள். கமலிக்கு அது கூட சொல்லத் தெரியாது.

கூடத்திலிருந்து குரல் கேட்டது. “திணறித் திணறி எதுக்காகத் தூக்கிக்கொண்டு வரணும்! சிரமமாயிருக்கு என்று சொன்னால் தலையா போய்விடும்! மக்கு” என்று கமலியின் கணவன் மெதுவாக மூன்றாம் பேர் காதில் விழாதபடி கலந்துகொண்டான். சொல்லிவிட்டு ஆபீஸிற்குப் போய் விட்டான். அவன் மெதுவாகப் பேசிவிட்டுப் போனது எப்படியோ மன்னியின் காதில் விழுந்தது அவள் எரிச்சலைக் கிளப்பிவிட்டது.

“என்ன கரிசனம்டாப்பா பெண்டாட்டியிடம்? ஏன், ஒரு குடம்தானே இழுத்துக்கொட்டி விட்டுப் போகிறது தானே!” என்று மனதிற்குள்ளேயே மைத்துனனுக்கு ஒரு சவுக்குக் கொடுத்தாள். இந்த ஆத்திரத்தில் வீசிறிக் கொண்டிருந்த கை நின்று விட்டது. சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த இரண்டு மூன்று ஈக்கள் குழந்தையின் மீது உட்காரவே குழந்தை புரண்டு கொடுத்தது. மன்னி சட்டென்று விழித்துக் கொண்டு

ஈக்களை ஓட்டினாள்.

மன்னிக்குக் கலியாணமாகிப் பத்து வருஷமாய் விட்டது. புருஷன் தாலூகாக் கச்சேரி சமுத்திரத்தில் ஒரு இருட்டு மூலையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். நாற்பது ரூபாய் சம்பளத்திற்கு நாற்பது நாழி ஆபீஸில் வேலை. ஆபீஸ் கட்டுக்களை வீட்டுக்குச் சுமந்து வந்து முடிக்க மீதி இருபது நாழி. புருஷன் கை நிறையத்தான் சம்பாதிக்கவில்லையென்றால், வீட்டிலும் ரொம்ப பெருமைக்கு இடம் இல்லை. அடுத்துடுத்து ஐந்து குழந்தைகள் பிறந்தன. எத்தனை குழந்தைகள் பிறந்தால் என்ன, யாராவது வேண்டாமென்று சொல்லப் போகிறார்களா? ஆனால் எல்லாம் பெண்ணாகப் பிறந்ததுதான் மன்னிக்கும் உலகத்திற்கும் பிடிக்கவில்லை.

“இப்படித்தான் அஞ்சும் பொண்ணாப் பிறக்கணுமோ, அடுத்ததானும் பிள்ளையாய்ப் பிறக்கணும்” என்று வீட்டுக்கு வருபவர்கள் அங்கலாய்த்தார்கள். அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. மாமனாரை வைகிறதா? புருஷனை வைகிறதா, தன்னையே நொந்து கொள்ளுகிறதா என்று அவளுக்குப் புரியவில்லை. புக்ககத்துக்கு வந்து பத்து வருஷமாய்விட்டது. ஐந்து பெண் குழந்தைகள், ஒட்டின கன்னம், கட்டுவிட்டுப் போன உடல் – இவைகளைத் தவிர வேறு சுகத்தைக் கண்டதாக அவளுக்குத் தெரியவில்லை.

மைத்துனனுக்குப் போன சித்திரையில் கலியாணமாகி ஓர்ப்படி வீட்டுக்கு வந்தாள். பதினாறு வயதிருக்கும். குடும்பத்திற்குப் போதுமான அழகு இருந்தது. நல்ல அடக்கம். கோபம் பிறந்த ஊரிலேயே கமலி பிறக்கவில்லை. புன்சிரிப்பாலேயே எதையும் சமாளித்துக் கொண்டு போய் விடுவாள்.

மன்னிக்கு இப்பொழுதுதான் ஓய்வு கிடைத்தது. சமையல், காரியம், வீடு மெழுகுவது, எல்லாம் கமலி ஏற்றுக்கொண்டாள். உப்பு எவ்வளவு போட வேண்டும், புளி இவ்வளவு கரைக்கலாமா என்று கமலி கேட்ட சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டிருந்தாள் மன்னி. மன்னியின் சாமர்த்தியங்களெல்லாம் வெளிக்காட்டச் சந்தர்ப்பம் கிடைத்தது. சிரித்துக்கொண்டே, அதிகாரமென்று காட்டிக் கொள்ளாமலே, தட்டிக் கொடுத்துக் கமலியை வேலை வாங்க ஆரம்பித்தாள் – பழைய குமாஸ்தா புது குமாஸ்தாவை வேலை வாங்குகிற மாதிரி. ஆனால் தாலூகா குமாஸ்தாவிற்கு உயர்வு கிடைக்கவில்லை; பிள்ளையும் பிறக்கவில்லை.

கமலிக்கு இப்பொழுது ஒன்பதாவது மாதம். அதற்காக மன்னி கோபப் படவில்லை. வருகிறவர்கள் சொன்னதுதான் ஆத்தர மூட்டியது.

“பெரியவர்களுக்குத்தான் அஞ்சும் பொண்ணாப் பிறந்திருக்கு. உனக்காவது பிள்ளையாய்ப் பிறக்கணும்” என்று கமலிக்கு அனுக்ரகம் செய்தார்கள் வந்த ஸ்திரீகள். மன்னிக்குப் பற்றி எரிந்தது. “பிள்ளை பிறக்கணும்னு மட்டும் சொல்லி விட்டுப் போங்களேன். அவளுக்கு அஞ்சும் பொண்ணு, ஆறும் பொண்ணுன்னு என்னைச் சந்திக் கிழுப்பானேன்?” என்று வந்த வெறுப்பை மனதிற்குள்ளேயே கக்கிக் கொண்டாள்.

“கமலிக்குப் பிள்ளை தாண்டி பிறக்கும். உடம்பு அழகு கொடுக்கலியே. பொண்ணாயிருந்தா மினுமினுன்னுனா இருக்கும் உடம்பு. கமலி இப்படிச் சோகை கண்டு சீம்பிக் கிடக்கிறாளே. பிள்ளைதாண்டி, என்னடீ சந்தேகம்?” என்று ஆராய்ச்சி முறையில் ஜோஸ்யம் சொன்னாள் மேல் வீட்டுப் பாட்டி.

ஸ்திரீ வர்க்கம்தான் இப்படிச் சொல்லிற்றென்றால் புருஷர்களானும் வெறுமனே இருக்கக் கூடாதோ?

“ஏய், உங்க அண்ணா தான் ஒண்ணும் பிரயோசனைமில்லை. நீ யானும் பிள்ளையாய்ப் பெற்று வைடா!” – மைத்துனனின் நண்பர்கள் பேச்சு. இது உள்ளே இருந்த மன்னிக்கு ஏக்கமும் குரோதமும் பொங்கின. வேண்டுமென்றே எல்லோரும் கூடி பேசிக் கொண்டு சூழ்ச்சி செய்கிறாப்போல் அவளுக்குத் தோன்றிற்று.

இதெல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் அன்று காலை அந்த ஊமை ஜோஸியன் வந்து சேர்ந்தான். அடுத்த வீட்டுப் பொம்மனாட்டிகள் கையைக் காண்பித்தார்கள். கமலியின் கையைப் பார்த்துவிட்டு அவன் மீசையை முறுக்கிக் காட்டினான், பிள்ளை என்ற அர்த்தத்தில். மன்னி முகத்தில் ஈயாடவில்லை.

கமலியைப் பார்க்கப் பார்க்க அவளுக்குப் பொங்கிக் கொண்டு வந்தது. ஊர்ப்பேச்சும், ஊமை ஜோஸியமும் கமலிக்குப் பிள்ளை தான் பிறக்கும் என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டன. மன்னிக்குக் கமலியினால் தன்னுடைய கௌரவமே ஒழிந்து விட்டதுபோல் இருந்தது.

அண்ணன் தம்பிகளும் ஆபீஸுக்குப் போய் விட்டார்கள். மன்னிக்குச் சமயம் வாய்த்தது. வாய் போனபடி கமலியைக் குடைய

ஆரம்பித்துவிட்டாள்.

"ஏ கமலி, தவலை நிறையத்தான் ஜலம் கொட்டினா என்ன? இரண்டு சொம்பு மொண்டால் ஆயிடறது. கூட இரண்டு தோண்டி கொட்டிவிடுகிறது." என்று சொன்னாள். அது செய்து முடிந்ததும். "கமலி, செத்த இந்த ரவிக்கைக்குச் சவுக்காரத்தைப் பூசி இரண்டு அடி அடித்துவிடேன்" என்றாள். முற்றத்தில் அடிக்கும் வெய்யிலைக்கூடப் பாராமல் கமலி அதையும் முடித்துவிட்டு, துணியை விரித்துப் படுத்துக் கொண்டாள்.

"அதுக்குள்ளே என்ன படுக்கை? சாதத்திற்குத் தீர்த்தம் கொட்டி விட்டு, பத்துப் பாத்திரங்களையெல்லாம் கொல்லையிலே கொண்டு போடப் படாதோ! உலகத்துலே ஒருத்தரும் 'பிள்ளை யாண்டே' இருந்ததில்லையா என்ன? இதென்னமோ எனக்கு அதிசயமா இருக்கு! சற்றைக் கொருதரம் சாய்ந்திருக்கிற இடமெல்லாம் படுத்துண்டு – ஐய!– என்ன வேண்டியிருக்கு?" என்று மன்னி ஆரம்பித்தாள்.

கமலிக்கு இப்பொழுதுதான் கண்ணில் நீர் தளும்பிற்று. ஆனால் அடக்கிக் கொண்டு விட்டாள்.

மத்தியானம் மூன்று மணி இருக்கும். டிபன் பண்ணுவதற்காக மன்னி வாழைக்காயை நறுக்கிவிட்டு எண்ணெய்ச் சட்டியை அடுப்பில் போட்டாள். அடுப்பு திகுதிகுவென்று எரிந்ததில், வெகு சீக்கிரத்தில் எண்ணெய் காய்ந்துவிட்டது. கடலை மாவு கரைத்து வைத்துக் கொள்ளவில்லை என்று இப்பொழுதுதான் மன்னிக்கு நினைவு வந்தது. 'பளிச்' சென்று இந்த யோசனையும் தோன்றிற்று

"கமலீ!" என்று கூப்பிட்டாள். அடுப்பை மொழுகிவிட்டு, படபடப்புத் தாங்காமல் இடைகட்டில் ஒருகளித்துப் படுத்திருந்தாள் கமலி. மன்னி கூப்பிட்டதும் மெதுவாகக் கையை ஊன்றி எழுந்து உள்ளே வந்து "ஏன் மன்னி, கூப்பிட்டேளா?" என்று கேட்டாள்.

"ஆமாம், செத்தே மச்சுமேல் ஏறி, கடலை மாவை எடுத்துத் தரயோ? முடியுமோ? இல்லாவிட்டால் நான் எடுத்துக் கொள்கிறேன்" என்று கெஞ்சுகிற பாவனையில் சொன்னாள் மன்னி.

"இல்லை, மன்னி! நான் எடுத்துத் தருகிறேன்" என்று கமலி ரேழிப் பக்கம் போய் ஏணியை எடுத்து வந்தாள்.

ஏணி ரொம்பக் குறுகல். படி தூர தூர இருந்தது. ஒரு படியின் மூங்கில்

ஒடிந்து போய், கயிறு போட்டு ஒட்டுப் போட்டிருந்தது.

கமலி முதல் படி ஏறினாள். இரண்டாம் படியும் ஏறிவிட்டாள். மூன்றாம் படி ஏறுவதற்குள் மேல் மூச்சு வாங்கிற்று. சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு, நான்காவது படி ஏறினாள். வலி பொறுக்க முடியவில்லை.

நின்று கொண்டே மன்னியைக் கூப்பிடலாமா என்று யோசித்தாள். கூப்பிடுவதற்குத் தைரியமில்லை. திணறிக் கொண்டே நின்று கொண்டிருந்த போது, அண்ணா தாலுகா ஆபீஸிலிருந்து திரும்பி வந்து, ரேழியைக் கடந்து உள்ளே வருவதைப் பார்த்தாள். அவர் உருவம் மறைந்ததும் கொல்லைப் பக்கத்திலிருந்து மன்னி வந்தாள், கமலியின் சிரமத்தைக் கண்டுகளிப்பதற்காக. அண்ணா வந்தது மன்னிக்குத் தெரியாது.

“இன்னும் எடுக்கலை?” என்று மன்னி கேட்டாள்.

“சிரமமாயிருக்கு, மன்னி” என்று தாழ்ந்த குரலில் சொன்னாள் கமலி. ‘மன்னித்து விடுங்களேன்’ என்று முகம் கெஞ்சிற்று.

“சிரமமாயிருக்குன்னா இறங்கிவிடேன். முடியுமான்னு கேட்டதுக்கு, நான் எடுத்துத் தரேன்னு சொன்னியேன்னு பேசாமல் இருந்தேன். அப்பவே சிரமமாயிருக்குன்னு சொல்லப்படாதோ? அப்படிப் பயப்படறதுக்கு என்னடீம்மா இருக்கு எங்கிட்ட, புலியா சிங்கமா?” என்று மன்னி புகைய ஆரம்பித்தாள்.

கமலிக்கு ஏன் சொன்னோம் என்று ஆய்விட்டது. மேலே ஏறவும் மன்னி விடமாட்டாள். கலவரத்தை மறைக்கப் புன் சிரிப்புச் சிரித்துக்கொண்டே இறங்க ஆரம்பித்தாள். படிகள் தூர தூர இருந்தன. குளத்தில் காலை விட்டு ஆழம் பார்ப்பதுபோல் பார்த்துத் தான் இறங்கவேண்டும். குடித்தனம் வந்தது முதல் அதில் ஏறி ஏறிப் பழக்கம் உண்டு அவளுக்கு. ஆனால் இப்பொழுது? வயிறு இடித்தது. ஆழம் பார்த்த வலது கால் படியைத் தாண்டிவிட்டது. அவ்வளவு தான். முறிந்து போன முருங்கைக் கிளை மாதிரி திடீரென்று சரிந்து கீழே விழுந்தாள் கமலி.

மன்னி இப்படி முடியும் என்று எதிர்பார்க்கவே இல்லை. பயத்தில் அவள் முகம் வெளுத்துவிட்டது.

“என்னடீ அங்கே?” என்று கச்சத்தை அவிழ்த்துத் தட்டுச் சுற்றுக் கட்டிக் கொண்டிருந்த அண்ணா ஓடி வந்தார். மன்னிக்கு அவர் வந்ததே தெரியாதாகையால் திடீரென்று அங்கு அவரைக் கண்டதும் திகைத்துப் போய்விட்டாள்.

“ஏணிமேல் அவளை ஏதுக்காகடி ஏறச் சொல்றே! தரித்ரமே? அஞ்சு குழந்தையைச் சுமந்திருக்கியே, ஞானமில்லை?” என்று கூச்சல் போட்டார் அண்ணா. தம்பி வந்தால் என்ன சொல்லுவான்? யாருக்கு எப்படிப் பதில் சொல்லுவது? அவமானமும் பழியும் பெரிதாக வந்து விடும்போலிருக்கிறதே என்று அவர் உடம்பு பதறிற்று. உடனே கச கசவென்று நனைந்திருந்த பனியனைக் கூடக் கழட்டாமல் டாக்டரைக் கூப்பிடுவதற்காக ஓடினார்.

மன்னியும் ஓடிப்போய் ஜலத்தைக் கொண்டு வந்து, முகத்தில் தெளித்தாள். கமலியின் தலையை மடியில் வைத்துக்கொண்டு விசிறி விட்டு வயிற்றை மெதுவாகத் தடவினாள். உள்ளே இருந்த ஜீவன் துடி துடியென்று துடித்துக்கொண்டே அரைச் சாண் உலகத்தில் சுழன்று கொண்டிருந்தது.

கமலி மெதுவாகக் கண்ணைத் திறந்தாள். ஆனால் பேச முடிய வில்லை. மன்னியின் குற்றம் செய்த கண்கள் கெஞ்சின. சற்றுக் கழித்து— இடுப்பைப் பிடித்துக் கொண்டே, “மன்னி ஏணியிலே ஏறினேன்னு ஒருத்தரிடமும் சொல்லாதேங்கோ, மன்னி” என்று கமலி கெஞ்சினாள். அப்பொழுதுதான் மன்னியின் – ஐந்து குழந்தைகளைப் பெற்றவளின்— கண்ணில் கரகரவென்று நீர் பெருக்கெடுத்தது.

பிறந்தகம் போனதும் வரப் போகிற இடுப்பு வலி இப்பொழுதே கண்டு விட்டது. வர வர அதிகமாகியும் விட்டது. டாக்டரும் அண்ணாவும் சற்று நேரத்தில் வந்து சேர்ந்தார்கள்.

காமிரா உள்ளை ஒழித்து படுக்கையைப் போட்டுக் கமலியை அழைத்துப் போனாள் மன்னி. மருத்துவச்சியும் கொஞ்ச நேரத்தில் வந்தாள்.

இரவு ஏழு மணி, அண்ணா கவலையில் இங்கும் அங்கும் இருப்புக் கொள்ளாமல் அலைந்து கொண்டிருந்தார். கோளாறு ஒன்றும் ஆகாமல் இருக்க வேண்டுமே என்று காமாக்ஷி கோயில் வாசல் திண்ணையில் இருக்கும் பெரிய பிள்ளையாருக்கு அபிஷேகத்திற்கு வேண்டிக் கொண்டார். தம்பி இன்னும் ஆபீஸிலிருந்து வரவில்லை. இரவு ஒன்பது மணிக்குத்தான் வருவான். அவனிடம் என்ன சொல்லுவது என்று வேறு அவருக்குக் கவலை.

மன்னி மருந்து அரைத்துக் கொண்டும், வெந்நீர் போட்டுக் கொண்டும், வெளியே இருந்தபடியே மருத்துவச்சிக்கும் கமலிக்கும் சிசுரூஷை

செய்துகொண்டிருந்தாள். அவளுடைய தாய் மனம் கோட்டை கட்டிக் கொண்டிருந்தது. தனக்குப் பிள்ளை பிறந்தால் 'ராகவா' என்று கூப்பிடவேண்டும் என்று உத்தேசித்திருந்த பெயரையே கமலியின் பிள்ளைக்கு வைத்துவிடுவது என்று தீர்மானித்துவிட்டாள். வேதனை தாளாமல் கமலி முனகும் சப்தம் உள்ளே இருந்து வந்தது.

ஏழரை மணி இருக்கும். மருத்துவச்சி 'அம்மா அம்மா' என்று கூப்பிட்டாள். அவசரம் அவசரமாக மன்னி ஓடினாள். மூச்சைப் பிடித்துக்கொண்டே "என்ன?" என்று கேட்டாள்.

"பிரசவம் ஆயிடுத்தம்மா."

"என்ன?"

"பெண் குழந்தை!"

"பெண்ணா?"

"ஆமாம்."

மன்னி அப்படியே சமைந்துவிட்டாள். இப்பொழுதும் அவள் முகத்தில் ஈயாடவில்லை. குரலில் சுரத்து இல்லை. சம்பிரதாயமாக "தாயார்க்காரி எப்படி இருக்கிறாள்?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் ஒன்றும் பயமில்லை, போம்மா!"

ஊர்ப் பேச்சையும் ஊமை ஜோஸியத்தையும் வைதுகொண்டே மன்னி உள்ளே போய் சர்க்கரையை எடுத்து வந்து வாசல் திண்ணையில் இருந்த அண்ணாவிடம் 'இந்தாங்கோ! என்று நீட்டினாள்.

ஆனந்த விகடன், ஜூலை 1944

# ராஜ திருஷ்டி

"நாழியாகிவிட்டாற் போலிருக்கிறதே, புறப்படலாமா?" என்று ஜோதிர்மய சாஸ்திரி ஜரிகை மயமாக ஒளி வீசும் சால்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டார். அப்பொழுது அஸ்தமனமாகும் நேரம். விஜயதசமியன்று அவருடைய பூஜை நைவேத்யங்களெல்லாம் வலுவாகவே இருக்கும். ஆனால் இன்று என்னவோ ஒரு மாதிரியாக எல்லாவற்றையும் ஒப்பேற்றிவிட்டார். அவர் மனம் பூஜையில் இல்லை. அரசனுக்கு முன் சிஷ்யன் செய்யப் போகும் முதல் கச்சேரி அரங்கேற்றத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார். இருட்டி இரண்டு நாழிகைக்குக் கச்சேரி ஆரம்பித்துவிடலாம் என்று அரசனுடைய உத்தரவு.

"அதற்குள்ளாகவா?" என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்தான் வனமாலி.

"அதற்குள்ளாக என்றால்! இப்பொழுது போனால் தானே சரியாக இருக்கும்? ஏன், நீ வர நாழியாகுமா?

"கஞ்சியும் வெந்நீரும் வைத்துவிட்டு வரவேண்டும்."

"சரி, சீக்கிரம் முடி. நாழியாகிவிட்டது."

இத்தனையும் உள்ளே இழுத்துப் போர்த்துப் படுத்திருந்த குரு பத்னியின் காதில் விழுந்தது. உடனே அவள் 'கொள் கொள்'ளென்று உயிரே போய்விடுவது போல் இருமினாள்.

"என்ன? என்ன?" என்று பதைத்துக் கொண்டு உள்ளே ஓடினார் ஜோதிர்மய சாஸ்திரி.

"ஒன்றுமில்லை. வெறுமனேதான் இருமிற்று. புறப்பட்டாய் விட்டதா?"

"ஆமாம்."

"வனமாலியும் இப்பொழுதே வர வேண்டுமா?"

"ஏன்?"

"கஞ்சியும் வெந்நீரும் வைத்துக் கொடுத்துவிட்டுப் போகட்டுமே என்று

நினைத்தேன்.”

“சரி – ” என்று அவர் இழுத்தார். “சீக்கிரமாக வரட்டும். சற்றுமுன்னமே வந்து கூட்டத்தை ஒருமுறை பார்த்துக்கொண்டால் தான் நல்லது. திடுதிப்பென்று வந்து கூட்டத்தைக் கண்ட மிரண்டுவிட்டால் அரைக் கட்டைக்குக்கூட சாரீரம் எழும்பாது. கீர்த்திக்கும் கலைக்கும் ஸபாகம்பம் பெரிய சத்ரு. சீக்கிரமாக அனுப்பிவிடு. வனமாலி, துரிதப்படுத்து! வரும் போது அம்பாளை நன்றாகப் பிரார்த்தித்துக் கொண்டு, அம்மாவுக்கு நமஸ்காரத்தைப் பண்ணிவிட்டு வந்து சேரு. தர்சனா, குழந்தையை நன்றாக ஆசீர்வாதம் பண்ணி அனுப்பு. அவனுக்கு இன்று பெரிய புகழ் வர வேண்டும். அதன் மூலமாக என் பெயரும் பிரகாசமடைய வேண்டும். என்னுடைய குறையெல்லாம் இன்று தீர வேண்டும்” என்று ஏக்கத்துடன் சொல்லிவிட்டு ஆஸ்தானத்திற்குக் கிளம்பினார்.

0

சங்கீதத்திற்கே வாழ்க்கையை அர்ப்பணம் செய்த தமக்கு, சாரீரத்தில் மண்ணை அள்ளிப் போட்டுவிட்டானே ஈச்வரன் என்று ஏக்கம் பிடித்துப் போனவர் அவர். ஆயுள் முழுவதும் சிறைத் தண்டனை அடைந்தவனைப் போல், விமோசனமில்லாத இந்த ஏமாற்றத்தை எண்ணி எண்ணி அவர் புழுங்கினார். புழுங்கி என்ன பயன்? மனம் நம்பிக்கை இழந்துவிட்டது. சாரீரத்திற்காகச் சரீரத்தைக் காக்க உறுதி கொண்டிருந்தவர், கடைசியில் அதையும் உதறிவிட்டுக் கலியாணம் செய்து கொண்டார். சிறைக்குள் புகுந்து வரும் சூரிய கிரணம் போல் தர்சனா சாஸ்திரியின் கிரகத்துக்கு வந்து சேர்ந்தாள். செதுக்கிவிட்ட உடல், அழகும் அனுதாபமும் நிறைந்த உள்ளம். நல்ல ரஸிகை. ஜோதிர்மய சாஸ்திரிக்கு ஆறுதல் வந்தது. கொஞ்சம் கொஞ்சமாகத் தம்முடைய வேதனைகளையெல்லாம் அவர் மறந்து வந்தார்.

மகாராஜா பெரிய ஞானி, சாஸ்திரியினுடைய ஞானத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரை அழைத்துவரப் பல்லக்கு அனுப்பினான். அவர் வந்ததும் அவருடன் தனியாக உட்கார்ந்து சங்கீதத்தைப் பற்றிக் கேட்க வேண்டிய கேள்விகளை எல்லாம் கேட்டான். வெகு நேரம் இருவரும் சர்ச்சை செய்தார்கள்.

சற்றுக் கழித்துத் தட்டில் சன்மானத்தை எடுத்து வந்தார்கள். காச்மீர சால்வையையும், காசிப் பட்டையும் அவர் கழுத்தில் போட்டு, “தாங்கள்தான் இன்று முதல் ஆஸ்தானத்தின் முக்ய வித்வானாக விளங்க

வேண்டும்” என்று மன்னன் கேட்டுக் கொண்டான்.

சாஸ்திரி திகைத்துவிட்டார். அவர் இதை எதிர்பார்க்கவே யில்லை.

வீட்டுக்குத் திரும்பி வரும்போது அவர் எண்ணி எண்ணிப் பார்த்தார். விளங்கவில்லை. “பாடுவதற்குத்தானே சங்கீதம், பேசுவதற்கில்லையே! நமக்கோ சாரீரம் இல்லை. இது தெரிந்தும் அரசன் நமக்கு இவ்வளவு பெரிய பதவி அளித்திருக்கிறானே!” என்று வியந்து கொண்டே வந்தார். தர்சனாவைக் கண்டதும் அவருக்குத் தன்னையே அடக்கிக் கொள்ள முடியவில்லை. “தர்சனா, நீ அடி வைத்த முகூர்த்தம், இன்று முதல் தர்பாரில் முக்ய ஆஸ்தான வித்வானாகிவிட்டேன்” என்று சற்று உயர்ந்த குரலிலேயே அவளிடம் செய்தியைச் சொன்னார்.

பெருமிதம் கொண்ட தர்சனா, “நான் அடி வைத்த முகூர்த்தமாவது? உங்களுக்கு இந்தப் பதவி கிடைத்தது ஆச்சரியமில்லையே. மகாராஜா பரம ரஸிகர் என்று தெரிகிறது” என்றாள்.

“உம் . . . நீ வந்த பிறகு இந்தப் பதவி வரவேண்டும் என்று இருக்கிறது! நீ பெரிய அதிர்ஷ்டசாலி” என்று அவள் கன்னத்தை நிமிண்டினார். நாணும் அழகைக் கண்டு அவருடைய உள்ளம் நிம்மதியும் திருப்தியும் அடைந்தது.

ஒரு சித்திரை மாதம் காலை, அரைத் தூக்கத்தில் அவர் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். கரிச்சான் குருவி ஓய்ந்த நேரம். நெடுந் தொலைவிலிருந்து இசை ஒலி ஒன்று காலைக் காற்றில் தவழ்ந்து வந்து கொண்டிருந்தது. திவ்ய சாரீரம். அவருடைய தூக்கம் கலைந்துவிட்டது. படுக்கையில் படுத்தபடியே அவர் கேட்டுக் கொண்டிருக்கையில், இசை ஒலி நெருங்கி வந்து கொண்டிருந்தது. என்ன சாரீர சம்பத்து! என்ன ரவைகள்! என்ன சுகபாவம்! அவருக்குப் படுக்கை கொள்ளவில்லை. எழுந்து ஜன்னல் கம்பியைப் பிடித்துக் கொண்டு கேட்டார். ஒரு பையனின் குரல்போலிருந்தது. தெளிவுடனும் விறுவிறுப்புடனும் கல்பனை இழுத்த இடத்திற்கெல்லாம் அனாயாசமாகப் போய்க் கொண்டிருந்தது.

“தர்சனா, தர்சனா” என்று கூப்பிட்டார்.

“ஏன்?” என்று வாசலிலிருந்து பதில் வந்தது.

அவருக்கு முன்னமேயே வாசலில் போய் நின்று, தர்சனா அந்த அமானுஷ்யமான கானத்தில் லயித்திருந்தாள்.

அவளுக்குப் பக்கத்தில் போய் நின்று, “என்ன சாரீரம்! தெய்வத்தின் போக்கே விசித்திரமாக இருக்கிறது. ஏழைப் பையன் – கூட ஒரு தள்ளாத ஸ்திரீ – பிழைப்புக்குப் பாட்டு! அதுவும் கந்தர்வ சாரீரம்!” என்றார்.

பையனும் ஸ்திரீயும் வீட்டு வாசலில் வந்தார்கள். அவள் குருடு. கையைப் பையனுடைய தோள்மீது போட்டுக் கொண்டிருந்தாள். பையன் மாநிறம், குறு குறுவென்றிருந்த கண்கள் போஷாக்குக் குறைவினால் கருமை படர்ந்திருந்தது. அவன் பாடும்போது கழுத்து நரம்புகள் புடைத்துக் கொண்டிருந்தன. அந்தக் கண்டத்திலிருந்து அவ்வளவு சங்கீதமும் சாரீரமும் எப்படித்தான் வந்ததோ!

அவன் பாட்டை முடித்ததும், “இங்கே வாடா, குழந்தை” என்று சாஸ்திரி கூப்பிட்டார்.

“அது யார்?”

“என் அம்மா.”

“எந்த ஊர் உங்களுக்கு?”

“ஊரென்ன? போகிற இடமெல்லாம் எங்கள் ஊர்தான். ஊரைச் சொல்லி என்ன பிரயோஜனம்? எங்கள் கதி இப்படியாகிவிட்டது. வைதீகர், புரோகிதத்தில் வந்த சொல்பக் காசையும் சூதாடித் தொலைத்துக் கொண்டிருந்தார். நானும் ஒரு நாள் விடியாதா என்று நினைத்துக் கொண்டிருந்தேன். திடீரென்று வாயில் மண்ணைப் போட்டுவிட்டுப் போன வருஷம் இறந்துவிட்டார் அவர். இருந்த குடிசையையும் கடன்காரன் வசப்படுத்திக் கொண்டுவிட்டான். போதாததற்கு என் கண் பார்வை அரை குறையாக இருந்தது, இப்பொழுது அடியோடு போய்விட்டது. என்னத்தைச் சொல்கிறது!” என்று குருட்டுத் தாயார் சொல்லும் போது அவள் குரல் கம்மிவிட்டது.

அந்த நிராதரவான காட்சி அவர் ஹிருதயத்தைத் தொட்டது. திரும்பிப் பார்த்தார். தர்சனாவின் கண்களில் நீர் தளும்பிக் கொண்டிருந்தது. உடனே அந்த அனாதைகளின் பக்கம் திரும்பி, “இப்படி உள்ளே வாருங்கள், அம்மா! இன்றொடு உங்கள் கஷ்டம் தீர்ந்துவிட்டது. இந்த வீட்டோடு இருங்கள். பையனுக்கு நான் சங்கீதம் சொல்லி வைக்கிறேன். அவனை முன்னுக்குக் கொண்டு வருவது என் பொறுப்பு” என்று உள்ளே அழைத்துச் சென்றார்.

மறு நாளே நல்ல நாளாக இருந்தது. தம்புராவை எடுத்துப் பையனை

ஸ்வாமிக்கு நமஸ்காரம் செய்யச் சொல்லிவிட்டு, சிக்ஷையை ஆரம்பித்து விட்டார். அவரைப் போலவே அவனும் பிறவியிலேயே மேதாவி போலிருக்கிறது. சொல்வதற்கு முன்னால் பிடித்துக் கொண்டு விடுவான். அவன் விஷயங்களைக் கிரகிக்கும் வேகத்தைக் கண்டு ஜோதிர்மய சாஸ்திரிக்கு மலைப்புத் தட்டிற்று.

ஆனால் பையன் மகா துர்பாக்யசாலி. ஆறு மாதத்திற்கெல்லாம் குருட்டுத் தாயார் திடீரென்று இறந்துவிட்டாள். இருந்த ஒரு பந்துவையும் பறிகொடுத்துவிட்டுப் பையன் புலம்பிப் புலம்பி அழுதான். தர்சனா அவன் முகத்தை மடியில் சாத்திக்கொண்டு, மயிரைக் கோதி ஆறுதல் சொன்னாள்.

இப்பொழுது வனமாலி வந்து ஏழு வருஷங்கள் ஆய்விட்டன. உயரமாக வளர்ந்துவிட்டான். யௌவனத்தின் தள தளப்பு அங்கங்களிலும், கண்ணில் ஈரமும் மிதக்கத் தொடங்கிவிட்டன. குருநாதன் சங்கீதத்தை அப்படியே புகட்டி விட்டார்.

“எத்தனை நாள் வீட்டுக்குள்ளேயே பாடிக் கொண்டிருப்பான் வனமாலி? உலகம் என்று அவனை அறியப் போகிறது?” என்று கேட்டாள் தர்சனா.

“எனக்குச் சமயம் தெரியும், தர்சனா. அவன் எல்லோர் மாதிரியும் இல்லை. நல்ல ரஸிகர்கள் முதல் முதலில் அவன் பாட்டைக் கேட்க வேண்டும். அரசன் அவன் பாட்டைக் கேட்க வேண்டும். அப்பொழுது ஒரே கச்சேரியில் வனமாலியை உலகம் முழுவதும் தெரிந்துகொண்டு புகழ்மாலை சூட்டப் போகிறது. அதற்குத்தான் சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன்” என்று பதிலளித்தார் சாஸ்திரி.

நவராத்திரி ஆரம்பித்து இரண்டு நாட்கள் இருக்கும். திடீரென்று தர்சனா காய்ச்சலில் படுத்து விட்டாள். நவராத்திரி உத்ஸவத்திற்காக அரண்மனையில் விநிகைகளை ஏற்பாடு செய்து கொண்டிருந்த சாஸ்திரிக்கு ஓய்வே இல்லை. காலையிலும் மாலையிலும் அம்பாளுக்குப் பூஜை செய்யவே அவருக்கு நேரம் போதவில்லை.

நவராத்திரி ஏழாவது தினம். மாலை மயங்கிக் கொண்டிருந்தது. சாஸ்திரி வீட்டில் இல்லை. வேலையை முடித்துவிட்டு வனமாலி ஏதோ பாட்டை முனகிக் கொண்டிருந்தான்.

“வனமாலி!” என்று படுத்திருந்த தர்சனா கூப்பிட்டாள். “அங்கு பாடுவதை இங்கு வந்து பாடேன். பாடுவதைவிட வீணை வாசித்தால்

தேவலை” என்றாள்.

வீணையை எடுத்து வாசித்தான் வனமாலி. ஒரு கீர்த்தனம் ஆயிற்று. புன் சிரிப்புடன் ரஸித்துக்கொண்டிருந்த தர்சனா, “பலஹீனத்தால் காது கூட அடைத்துக் கொண்டிருக்கிறது. இப்படி அருகில் உட்கார்ந்து வாசியேன்” என்றாள். அருகே நகர்ந்து வாசிக்கத் தொடங்கினான் வனமாலி. இடது கையைத் தலைக்கு உயரமாக வைத்தபடியே அந்த இசை வெள்ளத்தில் லயித்திருந்தாள் தர்சனா. கீர்த்தனையை முடித்துவிட்டுக் கார்வை கொடுத்து கீழ் ஷட்ஜமத்தில் நிறுத்திய போது, தர்சனாவின் பூ விரல்கள் அவன் கால் கட்டை விரலைத் தொட்டுக் கொண்டிருந்தன.

மெள்ள நகர்ந்து உட்கார்ந்து கவனித்தான். தர்சனாவின் கண் மூடி இருந்தது. சிலையின் புன்சிரிப்பைப் போல், தூக்கத்திலும் புன் முறுவல் அவள் உதட்டில் தங்கியிருந்தது. இனிமேல் வாசித்தால் அவள் தூக்கம் கெட்டுவிடும் என்று மெள்ள எழுந்தான் வனமாலி.

“ஏன் நிறுத்திவிட்டாய்? வாசியேன்!” என்று தர்சனா கண்ணை மூடியபடியே மொழிந்தாள்.

மீண்டும் உட்கார்ந்து அவன் வாசித்தான். ஸகானா ராகத்தை மெய்ம் மறந்து வாசித்து முடித்தபோது அவனுக்கு யோசனை வந்துவிட்டது. தர்சனாவின் புறங்கை அவன் கால் விரல் மீது படிந்திருந்தது. அவனுக்கு நகர்ந்து உட்கார்ந்திருந்த ஞாபகம். நிமிர்ந்து பார்த்தான். சற்று நகர்ந்து படுத்திருந்தாள் தர்சனா. அந்தக் குளிர்ந்த ஸ்பர்சம் பட்டு அவனுடைய நரம்பு நடுங்கிற்று. ஜுரமடிக்கிறவர்களின் உடம்பு இப்படியா இருக்கும் வாழைத்தண்டைப்போல்? இந்தத் தடவை அவன் நகர்ந்து உட்காரவில்லை.

“ஸஹானா ராகம் கொஞ்சுகிறாப் போல் இருக்கிறதல்லவா?” என்றாள் அவள். வனமாலி பதில் கூறாமலிருந்தான்.

“உம்” என்று மேலும் பேசத் தொடங்கினாள் தர்சனா. பேச்சில் முன்னுக்குப் பின் தொடர்ச்சியே இல்லை. ஏதாவது பேசவேண்டுமென்று பேசுகிறாப்போல் இருந்தது. அப்பொழுது புறங்கை திரும்பி அவனுடைய கால் விரலை வருடிக்கொண்டிருந்தது.

“இப்பொழுது என்ன ராகம் பாடினால் நன்றாக இருக்கும்?” என்று கேட்டாள் அவள்.

“பூரிகல்யாணி”

“ஏன், பூபாளம் பாடக் கூடாதா?”

“அது உதய ராகமல்லவா? இப்பொழுது பொருந்தாதே.”

“எல்லாம் பொருந்தும்.”

“பொருந்தாது அம்மா!”

“நீ அம்மா என்று என்னைக் கூப்பிடுகிறது பொருந்துகிறபோது, ஏன் பூபாள ராகம் மட்டும் பொருத்தமாயிருக்கக் கூடாது?” அவளுடைய குரல் கம்மி வார்த்தைகள் தடுமாறின.

வனமாலிக்குப் பேசவே முடியவில்லை. பேசாமல் எழுந்து வந்துவிட்டான்.

அன்றிரவு வீட்டிற்கு வரும்போது ஜோதிர்மய சாஸ்திரியின் முகம் ஒரு நாளும் இல்லாத மலர்ச்சியைக் காட்டிற்று.

“தர்சனா, உனக்கு ஒன்று சொல்லப் போகிறேன். மங்களகரமான செய்தி சொன்னால் என்ன கொடுக்கிறாய்?” என்று குழந்தை மாதிரி விளையாடினார்.

“சமாசாரம் என்ன சொல்லுங்களேன்.”

“உன் பிள்ளை விஜயதசமி அன்று சபையில் பாடப் போகிறான். அரங்கேற்றத்துக்கு அதைவிட உத்தமமான நாள் ஏது?”

தர்சனாவின் உள்ளம் நிறைந்து விம்மிற்று.

“வனமாலி, விஜயதசமி யன்று நீ சபையில் பாட வேண்டும். மகாராஜா ரொம்ப ஆவலாக இருக்கிறார். நல்ல ரஸிகர் அவர். ஜாக்ரதையாக சாதகம் செய்து வா. அதற்காக ரொம்ப சிரமப் படுத்திக்கொள்ள வேண்டாம். நெஞ்சு கட்டிவிடும். இன்னும் இரண்டு நாள்தானே இருக்கிறது?” என்று வனமாலியிடம் செய்தியைச் சொல்லிவிட்டார்.

மறுநாள் பம்பரம் மாதிரி வேலை செய்தான் வனமாலி. “மெதுவாக ஒரோரு குடமாகக் கொட்டு போதும். என்ன அவசரம்?” என்று தடுத்துவிட்டுப் போனார் சாஸ்திரி. அவனுக்கு சும்மா இருக்க இயலவில்லை. புது சக்தியிலும் உணர்ச்சியிலும் அவன் முரட்டுத்தனமாக வேலை செய்து கொண்டிருந்தான்.

“என்ன இன்று அவ்வளவு உத்ஸாகம்! அரங்கேற்றுபடியின்

ஆனந்தமோ?" என்று அவனுடைய அழகைக் கண்ணால் பருகிக் கொண்டே கேட்டாள் தர்சனா.

"எல்லாம்தான்!" என்று அவனிடமிருந்து வந்த பதில் அவளைப் பிரமிக்கச் செய்தது.

0 0 0

விஜயதசமியன்று மாலை பூஜையை முடித்து விட்டு, தர்சனா சொன்னதன் பேரில், முன்னாடியே புறப்பட்டு விட்டார் ஜோதிர்மய சாஸ்திரி.

அவர் போய்ச் சற்று நேரத்திற்கெல்லாம் காய்ச்சலாகப் படுத்திருந்த தர்சனா எழுந்து விட்டாள். உள்ளே போய் வனமாலியிடம், "வெந்நீர் போட்டாய் விட்டதா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"ஆய்விட்டது."

"அது போதும். கஞ்சி வேண்டாம். பாத்திரத்தைக் கீழே இறக்கிவிட்டுப் புறப்படு! அரண்மனைக்கு நாழியாகிவிட்டது."

உடனே பட்டை உடுத்தித் தலை மயிரைக் கோதிக் கொண்டு வனமாலி புறப்படத் தயாராகிவிட்டான்.

"வரட்டுமா?" என்று அவன் கேட்டதும், அவனை அருகே வரும்படி சமிக்ஞை செய்தாள் தர்சனா. அருகில் சென்றதும் கையில் இருந்த குங்குமப் பரணியைத் திறந்து, யுத்தத்திற்குச் செல்லும் கணவனுக்கு இடுகிற மாதிரி நிதானமாக அவன் நெற்றியில் ஒரு பொட்டிட்டாள். அவனுடைய உதட்டின் மீது தர்சனாவின் உள்ளங்கை பதிந்திருந்தது. "மகாராஜா பரம ரஸிகன். அனுபவித்து உயிர் முழுவதையும் செலுத்திப் பாட வேண்டும்" என்று ஒரு கையால் அவனுடைய முகவாயைப் பிடித்துக் கொண்டு அவன் கண்ணைப் பார்த்தாள். இன்னொரு கை அவனுடைய தோள் மீதிருந்தது.

மௌனமாகத் தலையை ஆட்டினான் வனமாலி.

"நினைவு பாட்டில் இருக்கவேண்டும்! என்ன? சரி, போய் வா" என்றாள் தர்சனா. கை மட்டும் தோளை விட்டு எடுபடவில்லை. மீண்டும், "சரி, போய்வா" என்று அவன் முகவாயை நிமிர்த்தினாள். நிமிர்த்தியது மட்டுமில்லை. தன்னுடைய உதட்டிற்கு அருகே கொண்டு வந்து விட்டாள். அவன் விடுவித்துக் கொண்டு புறப்பட இரண்டு நிமிஷம் ஆயிற்று.

மெய்சிலிர்க்க அந்த செவ்விதழை நினைத்துக் கொண்டே போனான் அவன். சபா மண்டபத்தில் ஒரே தலை மயமாக இருந்தது. ஒரே இரைச்சல். குங்குமப் பொட்டும், காசிப்பட்டும் ஜிலு ஜிலுக்க ஜோதிர்மய சாஸ்திரியின் பக்கத்தில் போய் நின்றான் வனமாலி.

"இத்தனை நாழியாகிவிட்டதா! நல்ல வேளை, மகாராஜா வரும் சமயம்தான். பயப்படாமல் தைரியமாகப் பாடு" என்று அவனுக்குத் தைரிய மூட்டினார்.

திடீரென்று இரைச்சல் ஓய்ந்தது. பரிஜனங்களுடன் மன்னன் சபையில் நுழைந்தான். அவன் அமர்ந்ததும் சாஸ்திரி அவன் முகத்தைப் பார்த்தார்; அவன் தலையை யாட்டினான்.

"வனமாலி, ஆரம்பி!" என்று பக்கத்தில் சாத்தியிருந்த தம்புராவை எடுத்துக் கொடுத்தார் சாஸ்திரி. அதை எடுத்து, சபை நடுவில் உட்கார்ந்து குழந்தையைப் போல் தோளில் சாத்திக்கொண்டு மீட்டினான். சபையில் கொஞ்சம் கொஞ்சம் இருந்த முணமுணப்பும் ஓய்ந்து விட்டது.

வனமாலி பாட ஆரம்பித்து விட்டான். முதலில் வேகமாக இரண்டு மூன்று கிருதிகளைப் பாடி விட்டான். படிப்படியாகச் சாரீரத்தில் சூடேறிக் கொண்டிருந்தது. ராகம் பாடத் தொடங்கினான். மூச்சே போய் விட்டது போல நிசப்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தது சபை. வேறு பறவைகளே இல்லாது ஹோவென்று பறந்து கிடக்கும் நீல விண்ணின் உயர்வில் பாடிப் பறக்கும் வானம்பாடியைப் போல் அந்த ஆழ்ந்த மோனத்தில் உயிர் முழுவதையும் செலுத்தி மெய்ம்மறந்து பாடிக்கொண்டிருந்தான். கண் மூடி இருந்தது. கூட்டமும் அரசனும் அவன் கண்முன் இல்லை. மாலை மயக்கத்தில் பொட்டிட்ட பூவிரலும், இனிய சொல்லும் அவனுடைய செவியில் ஒலித்துக் கொண்டிருந்தன. அந்தப் பேரின்பத்திற்குத் தன் குரலையும் ஞானத்தையும் சமர்ப்பித்துக் கொண்டிருந்தான் அவன். அவன் மேலே பாடிக் கொண்டிருந்தபோது "ஆகா!" என்ற மௌனத்தைப் பிளந்து கொண்டு வந்தது ஒரு குரல். எல்லோரும் திரும்பினார்கள். ஜோதிர்மய சாஸ்திரி அப்பொழுதுதான் தமது தவறை உணர்ந்தார்.

"தன் சிஷ்யனைத் தானே புகழ்வதா? அதுவும் அத்தனை கூட்டத்திற்கு நடுவில்! மகாராஜா என்ன நினைத்துக் கொள்வானோ" என்ற சங்கையுடன் திரும்பிப் பார்த்தார்.

"ஒன்றும் பிழை இல்லை" என்று சொல்வதுபோல் மன்னன் புன்னகை பூத்தான்.

விநிகை முடிந்தது. மந்திரி, "ஜோதிர்மய சாஸ்திரியின் சிஷ்யன்" என்று அறிமுகப் படுத்தியபோது சாஸ்திரியின் புண்களும் குறைகளும் ஆறி நிமிர்ந்து பார்க்கத் தைரியம் வந்தது.

கூட்டம் கலைகிற வழியாக இல்லை. ஒரு பெருந்திரள் வனமாலியைச் சுற்றி வட்டமிட்டிருந்தது.

கூட்டத்தைக் கலைத்துக்கொண்டு ஒரு ஆள் வந்து இருவரையும் அரசனிடம் அழைத்துப் போனான். உள்ளே மன்னனும் மந்திரியும் தான் இருந்தார்கள்.

"தெய்வ கானம். மகத்தான புண்யத்தின் பயனாக இன்று இதைக் கேட்க முடிந்தது. இத்தனை நாளாகப் பையனைப் பற்றி நீங்கள் பேச்சே எடுத்ததில்லையே. இரண்டு மூன்று நாள் முன்புதானே சொன்னீர்கள்?" என்று அரசன் கேட்டான்.

"ஏழு வருஷமாக என்னிடம்தான் இருக்கிறான் பையன்" என்றார் சாஸ்திரி.

"உங்களுடைய குறையைத் தீர்த்துக் கொள்வதற்காக எங்களுக்கு இத்தனை வருஷமாகச் சொல்லாமல் திடீரென்று வியப்பில் ஆழ்த்தி விட்டீர்களாக்கும்!"

"ஆமாம், ஒரு பிடிவாதமாக அவனுக்கு எல்லாவற்றையும் சொல்லி வைத்தேன். நான் குருநாதனிடம் வைத்திருந்த பக்தியை வெளியே சொன்னால் தற்பெருமை என்று படும். அவர் என்னிடம் ஒரு ரகஸ்யத்தையும் மறைக்காமல் தன் ஹிருதயம் முழுவதையும் திறந்து காட்டிவிட்டார். நானும் அவரிடம் தேவதா விச்வாஸம் வைத்திருந்தேன். ஆனால் வயது வந்ததும் என் சாரீரம் பாழடைந்து விட்டது. மனதறிந்து குருநாதனுக்கு நான் ஒரு அபசாரமும் செய்யவில்லை. குருத்ரோகம் செய்தவனுக்கு சாரீரம் குலைந்துவிடும் என்று சொல்லுவார்கள். நான் என்ன செய்தேன்? தெய்வம் அகாரணமாக என் குரலை அடைத்து விட்டது. அந்தக் குறையும் நீங்கி விட்டது இப்பொழுது. நான் பாடினால் என்ன? என் பிள்ளை பாடினால் என்ன? பையன் அனாதையாகிவிட்டான். அப்பொழுதிலிருந்து தர்சனா அவனுக்கு அன்னையின் ஸ்தானத்தில் இருக்கிறாள். இப்பொழுது அவன் தாயில்லாப் பிள்ளை இல்லை. அவனுக்குப் பெற்றோர்கள் இருக்கிறார்கள்" என்று நிறுத்தினார் ஜோதிர்மய சாஸ்திரி.

வனமாலி எல்லாவற்றையும் பக்கத்தில் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தான். தகப்பனின் அன்பிலும் கர்வத்திலும் தோய்ந்து சாஸ்திரியின் பேச்சு எழுந்து கொண்டிருந்தது. வனமாலி முள்மேல் இருக்கிறாப்போல் உட்கார்ந்திருந்தான். உணர்ச்சிக்கும் மோகத்திற்கும் கோயில் கட்டிப் பாடி அவன் நெஞ்சு உடைந்து கொண்டிருந்தது. உட்கார முடியவில்லை. நிமிர்ந்து நோக்கத் தலை சக்தியற்றுப் போய்விட்டது. குருவைத் தப்பித் தவறி நிமிர்ந்து பார்த்த போதெல்லாம், விவரிக்க முடியாத பீதியில் நெஞ்சு பதைத்தது. பொறுக்க முடியாமல் சட்டென்று எழுந்து, "இதோ வந்து விட்டேன்" என்று அறையை விட்டு வெளியே வந்தான். வழியில் மன்னனை பேட்டி காணப் பலர் காத்திருந்தனர். எல்லோரையும் கடந்து விறு விறுவென்று தெருவிற்கு வந்து விட்டான்.

காற்று மாதிரி கால்கள் கீழே பாவாமல் அவன் தாவித் கொண்டிருந்தான். வீட்டு வாசற் கதவு தாளிட்டிருந்தது. கதவைத் தட்டினான். கதவைத் திறந்த தர்சனா "தனியாகவா வந்திருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"ஆமாம், அரங்கேற்றம் ஆய்விட்டது. ராஜா தனியாகப் பேசுவதற்காக அவரைக் கூப்பிட்டார். அங்கு போவதற்கு முன், 'விஜயதசமி, நீ போய் வீணையைச் சுருதி சேர்த்துப் பூஜைக்கு எடுத்து வைத்துத் தயாராய் இரு' என்று சொன்னார். கொஞ்சம் தீர்த்தம் வேண்டும்" என்றான். ஜலம் கொண்டு வர உள்ளே போனாள் தர்சனா.

அவள் போனதும் அவசர அவசரமாகப் பூஜா கிருகத்தில் நுழைந்து வீணையை ஒரு முறை மீட்டினான். ஏற்கெனவே சுருதி சேர்க்கப்பட்டிருந்தது. உடனே வேகமாக ஒரு தந்தியை மட்டும் இறுக முடுக்கி விட்டு, வனமாலி வெளியே ஓடி வந்தான். அவனுடைய உருவம், பரந்து கிடக்கும் மை இருளில் மறைந்து விட்டது.

தீர்த்தம் கொண்டு வரப் போன தர்சனா, குங்குமப் பூ மணக்கும் பாலை ஆற்றிக் கொண்டு வந்தாள். அவனைக் காணவில்லை. உட்கார்ந்து பார்த்தாள். கூப்பிட்டாள், பதில் இல்லை. விவரிக்க முடியாத திகில் வந்து விட்டது. வாசலுக்குப் போய்க் கூப்பிட்டாள்.

"தர்சனா தர்சனா!" என்று அப்பொழுது இருளில் குரல் வந்தது. "வனமாலி வந்தானோ?"

"வந்தான் 'வீணையைச் சுருதி சேர்த்து வைக்கச் சொன்னீர்கள்' என்று பூஜா கிரகத்திற்குப் போனான். பாடி சிரமப் பட்டிருப்பானே என்று

பாலைக் காய்ச்சிக் கொண்டு வந்தேன். ஆளைக் காணவில்லை" என்றாள் தர்சனா.

குழம்பிப் போய்விட்டார் சாஸ்திரி. "இதென்ன சிறு பிள்ளைத்தனம்! மகாராஜாவோடு நானும் அவனும் சேர்ந்துதானே உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்? திடீரென்று மரியாதை தெரியாமல், 'இதோ வந்து விட்டேன்' என்று எழுந்து வந்தான். காத்துக் காத்துப் பார்த்தேன். காணவில்லை. பிறகு உத்தரவு பெற்றுக் கொண்டு வந்தேன். இங்கு என்ன சொன்னான்? வீணைக்குச் சுருதி சேர்க்கச் சொன்னேன் என்றா? நான் சொல்லவே இல்லையே!" என்று கலவரத்துடன் பூஜா கிரகத்துள் நுழைந்தார். வீணையைப் பார்த்ததும் ஒருமுறை மீட்டினார். சுருதி கலைந்த வீணை அவல ஓசை எழுப்பிற்று. உடனே இறுகிய தந்தி அறுந்து பாம்புக் குட்டிபோல் துள்ளி விழுந்தது.

0 0 0

பிறகு ஆயுஸிலேயே அவனைப் பார்க்கவில்லை அவர்.

"எங்கு போனானோ, ஏன் போனானோ, அவனுக்கு ராஜதிருஷ்டி விழுந்துவிட்டது" என்று அடிக்கடி தர்சனாவிடம் சொல்லுவார்.

அப்பொழுதெல்லாம் "நீங்கள் ராஜசபையில் பாடப் போகிறான் என்று சொல்லும்போதே எனக்கு என்னமோ போன்றிருந்தது. உங்கள் ஆசைக்கு மாறாகப் போவானேன் என்று நான் பேசாமலிருந்து விட்டேன்" என்று தர்சனா சொல்லிக் கொண்டிருப்பாள்.

ஆனந்த விகடன், அக்டோபர் 1944

# மணச் சட்டை

குன்றின் அடிவாரத்தில் சைன்யம் சூழ நின்ற சுல்தான் எல்லையில்லாத பூரிப்படைந்தான். குன்றின் மேல் கோட்டை. கோட்டைக்கு நடுவில் ஓங்கி நின்ற மூன்று மாடி அரண்மனை. அதன் திறந்த மூன்றாம் மாடியில் கைப்பிடிச் சுவரோரமாக இரு கைகளையும் உயரத் தூக்கி நின்றாள் கனோராவின் அரசி. அந்தச் சரணாகதியை ஏற்றுக் கொண்டு "நில்" என்று மலைவெளி அதிர, ஒரு சத்தம் போட்டான் சுல்தான்.

"ராணியை வென்றுவிட்டேன்" என்று மறுபடியும் கோஷமிட்டான் அவன். வியூகம் கலைந்த சைன்யம் ஜயகோஷம் செய்து விட்டு அடங்கியது.

கான் திரும்பவும் மேலே பார்த்தபோது, மொட்டை மாடி மொட்டையாக இருந்தது. அங்கே கனோராவின் வீரசக்தியைக் காணவில்லை. உடனே மெய்காப்பாளர்களையும் தளபதியையும், மட்டும் அழைத்துக் கொண்டு குன்றின்மீது ஏறினான் அவன்.

கோட்டைக்குள்ளிருந்த மாளிகைக்கு வந்தார்கள். இவர்கள் உள்ளே நுழைவதற்கும் உள்ளேயிருந்து ஒரு தூதன் வருவதற்கும் சரியாக இருந்தது

"கான், ராணி தங்கள் கட்டளைக்காகக் காத்திருக்கிறாள். தங்கள் ஆக்ஞையைக் கேட்டு வரத்தான் அனுப்பப்பட்டிருக்கிறேன்" என்று சொல்லி ஆசனத்தைக் காண்பித்தான் தூதன்.

ஆனால் கான் உட்காரவில்லை. நின்று கொண்டே சொன்னான்: "ராணியின் இருதயம் அதிரும்படியாக நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை. இதை மட்டும் போய் அவர்களிடம் தெரிவி: ஐந்து கோட்டைகளைப் பிடுங்கி, தங்களை ஓடஓட வெருட்டியதற்காக மிகவும் வருந்துகிறேன். இந்தக் கோட்டையைப் பிடித்ததற்காகவும் வருந்துகிறேன். தாங்கள் சரணாகதி அடைந்தது வாஸ்தவம். ஆனால் நான் அதை ஏற்கவில்லை. அதற்குப் பதிலாக நான் சரணடைகிறேன். இனிமேல் நான் சுல்தான் அல்ல. என் இருதயக் கோட்டையை வென்று வீற்றிருக்கும் தாங்களே சுல்தானா. இந்தக் கனோராவிற்கு மட்டும் அல்ல; பூபாலுக்கும்,

தங்கள் நினைவின் ஊக்கத்தால் நான் இனி வெல்லப் போகும் அரசுகளுக்கும் தாங்களே அதிபதி. என் வெற்றிகள் யாவும் தங்கள் வெற்றி."

"இப்படியே சொல்ல வேண்டுமென்று கானின் கட்டளையா?"

"ஆமாம். ஓர் எழுத்துக்கூட விடாமல் சொல்ல வேண்டும்."

தூதனுக்கு உதறல் எடுத்தது. இதைப் போய்த் தேவியிடம் எப்படிச் சொல்வது என்று புரியவில்லை. மெள்ள நகர்ந்தான்.

மேல் மெத்தையில் நின்று, கிடுகிடு பாதாளத்தில் சலக்சலக்கென்று பாறைமீது மோதிச் சென்ற நர்மதையின் அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள் ராணி. நதிக்குச் சுவர் எடுத்தாற்போல் செங்குத்தாக இருந்தது குன்று. ராஜ்ய காரியத்தை முடித்துவிட்டு அங்கு வந்து, அத்தனை உயரத்தில், குளுகுளுக்கும் காற்றில், மகாராணி நிம்மதியை அடைவது வழக்கம்.

இன்று அவள் நிலை நேர்மாறாக இருந்தது. காலடியில் சத்துரு வந்து நிற்கிறான். கனோராவின் கண்ணான ஐந்து கோட்டைகளும் போய்விட்டன. ஆனமட்டும் அவளும் முயன்று பார்த்தாள். கடைசி வரை போராடியதெல்லாம் பயனற்றுவிட்டன. இப்போது ஐந்தும்போய், இந்த விச்ராந்திக் கிருஹமும் விழப்போகிறது. சரணடைந்தாகிவிட்டது. இந்த அவமானத்தை எப்படிப் போக்குவது? செயலற்றுப் போய், அவள் குழம்பிக்கொண்டிருந்தாள். தூதன் வந்துவிட்டான்.

"தேவி, கான் கீழே மண்டபத்தில் இருக்கிறான். கூட மெய்காப்பாளர்கள் இருக்கிறார்கள்."

"மண்டபத்தில் இருக்கிறானா? எப்பொழுது வந்தான்? சைன்யம்?"

"சைன்யம் கீழே இருக்கிறது, குன்றின் அடியில்."

"என்ன சொன்னான்?"

"சொல்லக் கூடாதவற்றைச் சொல்லியிருக்கிறான். இந்த வார்த்தைகளைச் சொல்ல விதி என்னைத்தானா பொறுக்க வேண்டும்?"

"பாதகம் இல்லை, சொல்லு."

"தங்கள் சரணாகதியை அவன் ஏற்கவில்லையாம். அவன்தான் தங்களிடம் சரணடைகிறானாம். கனோா, பூபால், அவன் வெற்றிகள் –

யாவற்றையும் தங்கள் சரணத்தில் சமர்ப்பிக்கிறானாம். அவன் இருதயம் – ”

“சரி சரி, அலாவுதீன் சமாசாரம்போலத் தானே?”

“ஆமாம்.”

“ஹும், அரணைப் பிடிப்பதற்கு முன்னால் அந்தப்புரத்திற்கு ஆள் பிடிக்கத் தொடங்கி விடுகிறார்கள் இவர்கள். ஆனால் அதுவரையில் யார் காத்திருக்கப் போகிறார்கள்? நர்மதை இத்தனை நாளாகக் கோட்டையைக் காப்பாற்றிவிட்டாள். என்னைக் காக்க மாட்டாளா என்ன?”

சற்று நேரம் கண்ணை மூடித் தன் குலதெய்வத்தைப் பிரார்த்தித்தாள். மேற்கே தகதகவென்று தங்க வட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே நழுவிக் கொண்டிருந்தது. அவளுக்குக் கண் கூசாமல் பார்க்க முடிந்தது. அந்த ஜோதிஸுக்கும் வணக்கத்தைச் செலுத்தினாள். உடனே தலைப்பை இழுத்துச் செருகி, கட்டைச் சுவரிடையே, அலங்காரமாகப் பூவும் செடியுமாகக் கட்டப்பட்டிருந்த கற்களினிடையே கால் வைத்து ஏறினாள்.

“தேவி!” தூதன் பதறினான். கூட இருந்தவர்கள் மூச்சடைத்து நின்றார்கள். தலை சுழலும் பள்ளத்தில் ஓடுகிறது நர்மதை. தேவி அதில் விழ – அவர்களுக்கு அந்தப் பயங்கரக் கற்பனையையே செய்து பார்க்க முடியவில்லை. பதறினார்கள்.

“நில்” என்று மாடிப்படியில் எதிரொலித்தது. தூக்கி வாரிப்போட்டு நின்றார்கள் எல்லோரும். ராணி திரும்பிப் பார்த்தாள்.

“யார் நீ?”

“கான் எங்கள் இருவரையும் காவலுக்கு அனுப்பியிருக்கிறார்.”

“மரணத்திலும் பாவி குறுக்கிட்டுவிட்டானே” என்று தூக்கப்பட்டாள் தேவி.

“காவல் எதற்காக? நான்தான் கானுடைய உத்தரவுக்குக் காத்திருக்கிறேனே. எங்கே அவர்?”

“கீழே இருக்கிறார்.”

“நான் பார்க்கலாமா?”

“சித்தம்.”

“சரி, முன்னால் போ.”

“பின்னாலேயே வருகிறோம்.”

“பேடிகள்!”

முதலில் இறங்கினாள் அவள்.

அப்போது கான் நிலைக்கண்ணாடியின் முன் நின்று தன் அழகிலேயே சொக்கிப் போயிருந்தான். பொன் வடியும் உடல். கருகருவென்று கன்னத்தை யொட்டிச் சுருண்டிருந்த தாடி. தலைப்பாகை. போர்ப் புழுதி படிந்திருந்த சட்டை. பளிச்சிட்ட உடைவாள். சற்று மார்பை முன் தள்ளி, “இப்படி யார் கிடைக்கப் போகிறார்கள் உனக்கு?” என்று கான் ராஜ பார்வையை மேலே உயர்த்தினான். அங்கே கனோராவின் திரிலோக சுந்தரிக்குப் பதிலாக, மேல் மாடியின் ஓடுதான் தெரிந்தது.

“ஆகா! ஆகா!”

கான் திரும்பிப் பார்த்தான். ‘அவனை ஆட்கொண்ட வனப்பு வடிவம் அங்கு நின்று புன்முறுவல் பூத்துக்கொண்டு இருந்தது.

“ஆகா, என்ன சௌந்தரியம்!” என்று மீண்டும் ஆகாகாரம் செய்தாள் தேவி.

“நானா அழகாக இருக்கிறேன்?”

“உங்களுக்குத் தெரியவில்லையா? கண்ணாடியில் பார்க்கிறீர்களே! இந்தப் பிரபஞ்சத்தில் இவ்வளவு சுந்தர புருஷனை எங்கே பார்த்திருக் கிறீர்கள்?”

“நான் உனக்குச் சொல்ல வேண்டியதை, நீ சொல்லுகிறாய் எனக்கு?”

“கான், தங்கள் பத்தினி மகா அதிருஷ்டசாலியாக இருக்க வேண்டும்.”

“யார்?”

“பூபாலில் தாங்கள் வெற்றியுடன் திரும்புவதைக் காணக் காத்திருப்பவள்.”

“எனக்குப் பத்தினி இல்லையே. நான் மறுபடியும் பிரம்மசாரி ஆகிவிட்டேன்.”

“அப்படியென்றால்?”

“போபாலின் ராணி நீதான். வெறுமே, பட்டமஹிஷி என்று பெயருக்கு மட்டுமல்ல. ராஜ்யத்தின் சர்வ அதிகாரமும் உன் கைக்கு வந்துவிட்டது.”

“கான், அப்படிச் சொல்லக்கூடாது. தங்கள் பத்தினிக்கு இதைவிடக் கொடுமையான, குரூரமான அநியாயம் இழைக்க முடியாது. பேசாமல் இருங்கள். தங்கள் வெற்றியைக் கண்டு பெருமிதம் அடைகிறவள் அவள் ஒருத்திதானே? நான் உங்கள் சத்துரு. நானா கர்வப்படப் போகிறேன்?”

“எனக்குப் பத்தினி இல்லை என்று சொல்லிவிட்டேனே. இனிமேல் நீதான் சுல்தானா. நீ என் சத்துரு அல்ல. என் எஜமானி. நீ என்னையே வென்றுவிட்டாய். என் அற்ப வெள்ளிகளைக் கண்டு பெருமிதம் அடைய அவ்வளவு சிறியவளல்ல நீ. உன் ராஜ்யத்தை மேன்மேலும் பெருக்கி, உன்னிடம் சமர்ப்பித்து, உன் ஆக்ஞைக்குக் காத்திருப்பது இந்த அடிமையின் கடமை.”

“கான், பிதற்ற ஆரம்பித்துவிட்டீர்களே.”

“உன்னைக் கண்டால், நாக்கு உளறாமல் என்ன செய்யும்?”

“அப்படியானால் இவ்வளவு வாக்குறுதியும் அர்ப்பணமும் நாக்குளறல்தாமோ?”

“தேவி, சமத்காரமாகப் பேசுகிறாய். நான் எப்படிச் சொல்லுவது? ஹிந்துஸ்தானம் முழுவதையும் வென்று உன் காலில் கிடத்துகிறேன். நீ சர்வாதிகாரியாக இரு. என் அந்தப்புரம் முழுவதையும் உன் அடிமையாக்கிவிடுகிறேன்.”

“பெரிய அந்தப்புரந்தானோ!” என்று விஷமச் சிரிப்புச் சிரித்தாள் அவள்.

கான் வெட்கிப் போனான்.

“அப்படியானால் நான்தான் சர்வாதிகாரி என்று சொல்லுங்கள்.”

“ஆமாம்.”

“நானே சுல்தானா!”

“ஆமாம்.”

“நான்தான் அந்தப்புரத்து எஜமானி!”

“ஆமாம்.”

“நாணயத்தில்கூட என் உருவத்தைத்தான் போடுவீர்களோ?”

“ஆமாம்.”

“நல்ல ‘ஆமாம்‘ இது.”

“பின் நான் என்ன சொல்வது?” என்று லேசாகச் சிரித்தான் கான்.

“கான், என்னை மன்னிக்க வேண்டும். தங்கள் சுபாவம் தெரியாமல் பேசிவிட்டேன். குழந்தைபோன்ற, துல்லியமான, கபடற்ற, வெள்ளை இருதயம் தங்களுக்கு. ஆனால் செயலோ பிரமிக்க அடிக்கிறது. புகை புகாத கனோராக் கோட்டைக்குள் புகுந்து என்னை இந்த மூலையில் தள்ளி நெருக்கிவிட்டீர்களே. தங்கள் சுத்த வீரத்தையும், காம்பீர்யத்தையும், வீர்யஸ்ரீயையும் கண்டு எந்த ஸ்திரீதான் மனத்தை இழக்க மாட்டாள்? ஆனால் யாருக்கும் கிட்டாமல், எனக்கு நீங்கள் கிடைத்திருக்கிறீர்கள்! மகாவீரரான தங்களை நான் வந்து வரிக்க வேண்டியிருக்க, தாங்கள் வந்து என்னை வரிக்குமாறு நான் செய்ததே பெரிய குற்றம். மன்னிக்க வேண்டும். இப்போதே திருமணத்திறகு ஏற்பாடு செய்யுங்கள். இன்று பௌர்ணமி. மேல்தளத்தில் நம்முடைய ஏகாந்தத்தின்மீது நிலவு பொழிந்து பரவசப்படுத்தப் போகிறது.

“தேவி, என்ன இனிமை, என்ன இனிமை! இன்னும் கொஞ்சம் பேசு. நான் கேட்கிறேன்” என்ற கான் கண்ணை மூடினான்.

“காரியம் தலைக்கு மேல் கிடக்கிறது. பேசிக்கொண்டிருந்தால் நடக்காது. எனக்கு அலங்காரம் செய்துகொள்ள ஐந்தாறு நாழிகையாகும். தங்கள் திவ்ய சுந்தர விக்கிரகத்தை மணக்கோலத்தில் காண வேண்டும். போய் ஆடைகளை அனுப்புகிறேன்” என்று சொல்லி ராணி உள்ளே விரைந்தாள்.

அவள் அனுப்பிய ஆடைகளைக் கையில் எடுத்தான் கான். ஆடையிலிருந்து லேசாக மணம் வீசியது. முகத்தில் புதைத்து மோந்து பார்த்தான் அவன். “என்ன திவ்ய கந்தம்! ஆகா, ராணி மகா ரஸிகை!” என்று கண்ணை மூடி மூடிப் பரவசமானான். அணிந்துகொள்றுமாறு பக்கத்தில் இருந்தவர்கள் அவனுக்கு ஞாபகப் படுத்தவேண்டியிருந்தது.

0 0 0

சந்திரோதயமாகி ஒரு நாழிகைக்கு மேலாகிவிட்டது. மேல் தளத்தில் நிலவின் ஒளியில், கானும் தேவியும் தனித்திருந்தனர். பக்கத்தில் பக்கத்தில் மலர்ப் படுக்கையில் அமர்ந்து, ஏகாந்தத்தில் கனியும் ஆழ்ந்த,

பாதி ரகஸ்யக் குரலில் ஒருவரையொருவர் புகழ்ந்துகொண்டிருந்தார்கள்.

“கான், எவ்வளவோ புண்ணியம் பண்ணியிருக்கிறேன் நான். ஷாஹேன் ஷாவாக வரப்பேகும் கானா அற்பமான கனோராவின் குடிசையில் இருக்கிறார்! ஷாஹேன் ஷாவா என்னுடன், என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறார்! ஆகா! எனக்கு நம்பவே முடியவில்லையே!”

“ஷாஹேன் ஷா ஆவதா பெரிது? தன் சிருஷ்டித் திறன் முழுவதையும் உனக்காகச் செலவிட்டுவிட்டான் அல்லா. இத்தனை சக்கரவர்த்திகளைக் கடந்து, என்னிடம் வந்திருக்கிறதே, ஆண்டவனின் அந்த எழிற்கனவு! என்னை இவ்வளவு பாக்கியசாலியாக ஆக்கிய அவனுக்கு என்னிடம் ஏதோ விசேஷ அன்பு இருக்க வேண்டும். நிலவு, புஷ்பம், உதய வானம்— எல்லாவற்றையும் கலந்து உன்னை நிர்மித்திருக்கிறான் அவன். விச்வத்தின் அழகே உன் உருவில் வடிந்திருக்கிறது.”

“கான் என்னைப் புகழ்வது இருக்கட்டும். இரவைப் பாருங்கள்; நிலவைப் பாருங்கள்; சுற்றிலுமுள்ள மலைகளைப் பாருங்கள்;கனோராவின் வம்சத்திறகு எவ்வளவு ராஸிக்யம் பார்த்தீர்களா? மாளிகையை எவ்வளவு அழகான இடத்தில் நிறுவியிருக்கிறது!”

“அதையெல்லாம் ஏன் பார்க்க வேண்டும்? நிலவு, புஷ்பம், மலையின் காம்பீர்யம் – எல்லாவற்றையும் உன்னிடத்தில் காண்கிறேன். ஆடையில் வீசும் இந்தத் தெய்வீக கந்தம் உயிரையே கொண்டு போகிறதே! ஆகா, உன் கையால் கொஞ்சம் விசிறேன்.”

“இன்னுமா காற்று வேண்டும்? ஏற்கனவே காற்று, சில்லிட்டில்லை?”

“உன் கையின் காற்று வேண்டும்”

“தலைப்பால் விசிறுகிறேன்.”

“விசிறியைக் கொண்டுவா. இது போதவில்லை. புழுக்கம் அதிகமாக இருக்கிறது.”

“எனக்குக் குளிர்கிறது; புழுக்கம் தாங்கவில்லை என்கிறீர்களே!”

“உண்மையைச் சொல்லுகிறேன். உடம்பு எரிகிறது. ஜுரம் மாதிரி இருக்கிறது. தொட்டுப் பார்.”

“சொன்னால் நம்பமாட்டேனா? தொட்டுத்தானா தெரிய வேண்டும்?”

“போய் விசிறியைக் கொண்டு வா. நெஞ்சு, கண், எல்லாம் பற்றி

எரிகின்றன. தண்ணீரும் கொண்டு வா. நல்ல குளிர்ந்த ஜலமாக இருக்கட்டும்.”

“ஷாஹேன்ஷா!”

“போயேன்.”

“லோகாதிபதி!”

“அப்புறம் அழைக்கலாம். போயேன். தண்ணீர் கொண்டுவா. நாக்கு ஒட்டிக் கொள்கிறது. போயேன், போ. போ” என்று சட்டையைக் கழற்றத் தொடங்கினான் கான். கழற்றும் வரையில் சூடுபொறுக்க முடியவில்லை. கிழித்தான்.

“கான், என்னிடம் நீங்கள் யாசகம் செய்யலாமா?”

“போயேன், நான் அடிமை, போ, தண்ணீர் கொண்டுவா.”

“அடிமைக்கு– அதுவும் இந்த மாதிரி அடிமைக்கு நாங்கள் தண்ணீர் கொடுக்கும் வழக்கம் இல்லை, கொடுக்கவும் கூடாது” என்று எழுந்து ராணி, கோரமாகச் சிரித்தாள்.

“நாக்கு இப்படி உலர்ந்து போகிறதே. என்ன காரணம்? மரணதாகமாக இருக்கிறதே!”

“மரணதாகந்தான்!”

“ஹா!”

“அதேதான், கான், உன் உடம்பில் ஒவ்வோர் அணுவிலும், மயிர்க் காலிலும் மரணம் புகுந்துவிட்டது. நீ போட்டிருக்கும் சட்டை, கால் சட்டை, எல்லாம் விஷத்தில், காளகூட விஷத்தில் தோய்க்கப்பட்டிருப்பவை. அந்தத் தெய்வீக கந்தமும் அதுதான்.”

“என்ன!”

“என்னவா? மிருகமே, இந்த ஸ்திரீசபலம் என்று உங்களை விட்டுப் போகப் போகிறதோ! உன் சுபலத்தைத் தெரிவித்தாய். நான் தப்பப் பார்த்தேன். முடியவில்லை. உன் சேவகன் குறுக்கிட்டான். உன் கட்டளைக்குக் கட்டுப்பட வேண்டி வந்துவிட்டது. இப்போது என் நெஞ்சு ஆறிவிட்டது. மிகவும் அழகாக, நிலவொளியில், மலர் மஞ்சத்தில், திவ்யகந்தத்துடன் உன்னைப் பழி வாங்கிவிட்டேன். உன்னை வாயாரப்

புகழ்ந்து, மரண வலையில் வீழ்த்திவிட்டேன். ஆனால் அந்தப் புகழ்ச்சிக்கு, அந்தப் பொய்ப் புகழ்ச்சிக்குக்கூட என் மனம் இடங்கொடுக்க மறுக்கிறது. பொய்யோ, மெய்யோ, புகழ்ந்து விட்டேன், நாயகனைப் புகழ்கிற மாதிரி. இந்த நர்மதை என்னைப் பரிசுத்தப்படுத்தி விடுவாள். கட்டாயம் என்னை ஏற்றுக்கொள்வாள். அப்பொழுது காவல் போட்டாய். இப்போது யார் என்னைத் தடுக்க? கடவுளை நினைத்துக்கொள். இன்னும் நாலைந்து நிமிஷம் உன் உயிர் இருந்தால் அதிகம்."

கானுக்குக் கிறுகிறுத்தது. காது அடைத்து விட்டது. அவள் பேசியது எங்கோ தொலைவில் இருந்து பேசுவதுபோல் கேட்டது.

சுவர்மீது ஏறினாள் அவள்.

"ஹாம் ஹாம்" என்று திகிலுற்றுச் சத்தம் போட முயன்றான் அவன். ஆனால் வாயில் ஓசை கிளம்பவில்லை. அவனால் எழுந்திருக்கவும் இயலவில்லை.

சுவர்மீது ஏறி ராணி குதித்தாள்.

சுல்தானின் தலையும் தொங்கிவிட்டது.

**கலைமகள், செப்டம்பர் 1945**

# ஆண்டவன் நினைத்தது

வண்டி அரை மணி தாமதமாக வந்தது இறங்குகிற வர்களை இறங்க வொட்டாமல் அடித்துப் பிடித்துக்கொண்டு ஏற ஆரம்பித்தோம். என் சிரமமெல்லாம் வீணாகிவிட்டது. நான் ஆசைப்பட்டுப் பார்த்த இடங்களையெல்லாம், இறங்காமல் நேராகப் போகிற ஆசாமிகள் பிடித்துக் கொண்டிருந்தார்கள். நின்றுகொண்டே வண்டி முழுவதும் ஒரு கண்ணோட்டம் விட்டதில் ஸீட்டு ஒன்றும் காலியாயில்லை என்று தெரிந்து, பேசாமல் அங்கேயே உட்கார்ந்தேன். நான் ஆசைப்பட்ட இடத்தில் ஒரு நரிக் குறவன் உட்கார்ந்திருந்தான். எதிர் ஓரத்தில் அவன் பெண்டாட்டி உட்கார்ந்திருந்தாள்.

ஐந்து நிமிஷமானதும் அமைதி நிலவிற்று. அடித்துப் பிடித்து ஏறினோமே தவிர, கூட்டம் அவ்வளவாக இல்லை. என் ஸீட்டில் குறவனைச் சேர்த்து நாலு பேரும் எதிர் ஸீட்டில் குறத்தியைச் சேர்த்து நாலு பேரும்தான் இருந்தோம்.

குறவன் படுகிழவனாக இருந்தான். முண்டாசு, கோவணம், கழுத்தில் பூனைக்காய்ச்சி, பாசி மணி மாலைகள், ஈய மோதிரம், தொங்கின மீசை – இவைதான் அவன் ஆபரணங்கள். கிழவி மூக்கு வளைஙமும் பாவாடையும் அணிந்திருந்தாள்.

வண்டி புறப்பட்டது. ஏனோ விளக்குகள் எரியாததால் வண்டிக்குள் இருட்டாக இருந்தது.

“அது என்னமோ நானும் திருஷ்ணாப்பள்ளியிலேருந்து வந்திட்டிருக்கேன். தஞ்சாவூர் தாண்டினப்ப இருட்டிடிச்சு. ஊதுவத்தி சுத்தறாப்பலே கொஞ்சம் மினுங்கிச்சி விளக்கு. அப்பவே ‘டப’க்குன்னு அவிஞ்சு போச்சு. அது என்னமோ; இதுக்கும் ரேசன் கீசன் வந்திடிச்சோ என்னமோ!” என்று ஒரு கிழவன் சர்ச்சையை முடித்தான்.

திருநாகேச்வரத்தில் ஒரு நிமிஷம் நின்று கிளம்பிற்று வண்டி. வண்டியைப்பற்றி ஒருவராவது நல்ல வார்த்தை சொல்லவில்லை. முதலில் விளக்கில்லாத குற்றம். இரண்டாவதாக, கட்டை வண்டி மாதிரி வண்டியின் வேகம். எல்லாம் அழுது விடிந்து கொண்டிருந்தது. குறத்திக்குப் பக்கத்திலிருந்த பாட்டி கொஞ்சம் இடம் பண்ணிக் கொண்டு ஒரு சாணில்

முடங்கிப் படுத்துக் கொண்டாள். அவளுக்குக் குளிர் தாங்க வில்லையாம்.

ஒருவரும் பேசவில்லை. குறவன் கூட பேச்சைச் சற்று நிறுத்தியிருந்தான்.

திடீரென்று அவன், "என்னமோ சண்டை போலிருக்குங்க. பொம்பிளெங்க கூச்சல் போடறாப்பலெ இருக்குது" எனப் பரந்தான்.

எங்களுக்கும் ஏதோ அழுகையும் கூச்சலுமாகக் கேட்டது. ஜன்னல் பக்கம் தாவிப் போய்ப் பார்த்தோம். அடுத்த கணம் 'வீல் வீல்' என்று ஏழெட்டுத் தடவை கத்திவிட்டு நற நரவென்று வேகம் குறைந்து நின்றுவிட்டது வண்டி. யாரோ அபாயச் சங்கிலியை இழுத்து விட்டார்கள் போலிருக்கிறது: கதவைத் திறந்து கீழே இறங்கினோம். மற்ற வண்டிகளிலிருந்தும் இறங்கியிருந்தார்கள். ஒரே குழப்பம், கலவரம்.

"என்னாய்யா என்னா?"

"குளந்தை உளுந்திரிச்சையா!"

"ஆ, குளந்தையா?"

குழந்தையைப் பறிகொடுத்தவன் ஓடினான். அவன் பின்னால் கார்டு, கான்ஸ்டபிள், இன்னும் பத்து பதினைந்து பேர் ஓடினார்கள். நாங்கள் இருந்த இடத்திலேயே நின்றுவிட்டோம்.

கும்பல் கும்பலாகக் கூடிப் பேச்சுக் கிளம்பிற்று. "என்ன வேளையிலே கிளம்பினானோ. பாவிப்பய!"

"வண்டி ஒரு மைல் வந்திருக்கும் போலிருக்கே!"

"ஏதுய்யா. இப்பதானையா குறவன் சத்தம் போட்டான். எளுந்து பார்த்தோம்; வண்டி நின்னிடிச்சு. ஒரு பர்லாங், ரண்டு பர்லாங்குக்குள்ளாரதான் இருக்கும்."

"எத்தினி வயசாம்?"

"யாரு கண்டாங்க?"

"ஆம்பிளப் புள்ளியா? பொம்பிளெப் புள்ளியா?"

"எதாயிருந்தா என்னா? புள்ளை போயிடிச்சு!"

"என்னத்தைச் சொல்றது? என்ன ஓட்டம் ஓடியிருக்கு வண்டீ!

செதில்கூட ஆப்படாது."

"ஒண்ணும் சொல்றத்துக்கில்லீங்க. ஆண்டவன் என்ன நெனைச்சிருக்கானோ?" என்று குறவன் மெதுவாகச் சொன்னான்.

"ஆண்டவன் நெனச்சுத்தானே வண்டியிலேருந்து அதைக் கீளே தள்ளியிருக்கான்."

"இந்த பொம்பிளெங்களுக்கெல்லாம் புத்தியே கிடையாது. குளந்தைகளெ ஜன்னப் பக்கம் வச்சிக்கலாமா?"

"அதுகள்ளாம் புடிவாதம் பண்ணுறப்போ?"

"ஓங்கி ரண்டு வக்யறது!"

பத்து நிமிஷத்தில் கூட்டம் திரும்பி வந்து கொண்டிருந்தது.

"குழந்தை ஆப்பிடிச்சா?"

"ஆப்பிடிச்சு, நல்ல வேளையா உசிரு போகலே! காயமும் ரொம்ப இல்லை! கையில் மட்டும் கொஞ்சம் சிராய்ச்சிருக்கு."

ஆறு வயதுள்ள அந்தப் பெண் குழந்தை முனகிக் கொண்டிருந்தது.

"எங்கே கிடந்திச்சு புள்ளே?"

"ஒரு புல்லுப் பத்தையிலே எளுந்திரிச்சுக் குந்தி அளுதுக் கிட்டிருந்திச்சு."

குழந்தையை 'ஐஸ்' வண்டிக்குத் தூக்கிச் சென்றார்கள். காயத்தைக் கழுவினார்கள். குழந்தை வலி பொறுக்காமல் அரற்றிக் கொண்டிருந்தது.

எல்லோரும் திரும்பி வந்து ஏறி உட்கார்ந்து கொண்டோம்.

"வண்டியிலேருந்து உளுந்து புழைச்சிதே. அதைச் சொல்லுங்க."

இத்தனை நாழியாகப் பேசாமலிருந்த குறவன், "ஆயுசு கெட்டியாயிருந்தா சமுத்ரத்திலெ உளுந்தாலும். நெருப்பிலே உளுந்தாலும் பொளச்சிடுங்க. ஒரு உசிரு வாளணும்னு ஆண்டவன் நெனச்சிட்டாருன்னா அது சாவாது! எசமாங்களே, சாவாது, தெரியுமா?"

"தெரியாதே!"

"எசமான் கேலி பண்றாங்க. இதோ இருக்கேன் பாருங்க அக்கினி – "

“அக்கினியா?”

“ஆமாமுங்க. அக்கினின்னு எம்பேரு. இப்ப எளுவது வயசு ஆவது எனக்கு. இருபத்தஞ்சு வயசிலேயே நான் செத்துப் போயிருக்கணும். இதோ குந்தியிருக்கா பாருங்க கிளவி, இவ மாங்கில்யம் கெட்டியா இருந்திச்சு, பிளச்சேங்க. இப்பல்ல இவ கிளவியா இருக்கா? அப்ப பாக்கணுங்க இவளை . . . தகதகன்னு புலிக்குட்டியாட்டம் இருப்பா. ரொம்ப நல்லா பாடுவா. இம்மா வயசாச்சில்ல, இப்பவும் நடுக்காமெப் பாடுவா.

“கும்மாணத்துலே ஒரு நாளெக்கித் தெருவிலே கஸ்தூரி வித்துக்கிட்டிருந்தேங்க. ஒரு ஊட்டு வாசல்லே நிண்ணுக்கிட்டு இவ ஆடிக்கிட்டிருந்தா: எப்படி யாடினாங்கிறீங்க! பாத்துக் கிட்டே நின்னிட்டேன். ஆட்டம் முடிஞ்சு அரிசி வாங்கிக்கிட்ட அப்பறம், ‘வெத்திலே பாக்கு இருக்கா, வா யெக்கடுக்குது’ன்னு கேட்டா இவ. எடுத்துக்குடுத்தேன். கையெல்லாம் நடுங்கிச்சு. வெக்கமாயிருந்திச்சு. ஆனா, மனசுக்குள்ளே சந்தோசம் தானுங்க. தைரியமா, நீ எங்கே இருக்குறேன்னு கேட்டுட்டேங்க. அரசலாத்து ஓரமா கூட்டம் தங்கியிருக்குன்னு சொன்னா இவ! . . . நாங்க காவேரிக்கு அப்பாலெ குடிசெ போட்டிருந்தோம்.

“ரொம்ப நாளி சேந்து பேசிக்கிட்டே போனோம். திடீர்னு ‘நீ போயிடு. அப்பறம் பாக்கலாம்’னு கத்தரிச்சிப்பிட்டு நடந்தா இவ.

“பொளுது சாஞ்சப்ப, அரசலாத்துப் பக்கமாப் போனேனுங்க, தண்டவாளத்துக்குப் பக்கத்துலே ஆத்தோரமா கூட்டம் இருந்திச்சு. கிட்டப் போக பயமா இருந்திச்சு. மெதுவா இறங்கி, கட்டுக் கரையோடே நடந்து போனப்போ, இந்தான்னு குரல் குடுத்துக்கிட்டே வந்தா இவ. மரத்தடியிலே பதுங்கிக்கிட்டு ரெண்டு பேரும் ரொம்ப நேரம் பேசிக்கிட்டேயிருந்தோம். இருட்டினதே தெரியலீங்க.

“ஒரு மாசம் இப்பிடி வந்து வந்து இவளெப் பாத்துக்கிட்டிருந்தேன். ஒரு நாளெக்கி, ‘கவனிக்கிறாங்க, சாக்கிரதையா இருக்கணும்’மின்னு சொல்லிப் போட்டா இவ. எனக்கு முதல்லே திக்குண்ணிச்சு. அப்பாலே, ‘கவனிச்சா என்னா? நாம் ஆசைப்படுறோம், பேசிக்கிறோம். கவனிச்சா வெட்டிப் புடுவேன்’னு சொன்னேன்.”

இப்பொழுது குறத்தி குறுக்கிட்டாள்:— “அப்பிடிச் சொல்லிலீங்க இவுரு. யாராச்சியும் தடுத்தா ஒரே வீச்சு வீசிக் காவு குடுத்திருவேன்னாரு.

எனக்குச் சுருக்குச் சுருக்கிண்ணிச்சு. ஒரு நா பொளுது சாஞ்சு கௌம்பினேன். ‘ஏ நரிக்குட்டி, எங்க போறே? கிட இஞ்சாலெ! உன் நரியை வெட்டிப் போட்டுடப் போறேன்’ இன்னு அம்மிடி உறுமினான்.”

“அம்மிடி யாரு தெரியுமாங்க?” என்ற குறவன் குறுக்கிட்டுக்கேட்டுவிட்டு மேலும் சொன்னான்:– “இவங்க கூட்டத்து ஆளு / முறைப்பிள்ளை. இவளைக் கட்டிக்க இருந்தவன். நானா பயப்படுகிறவன்? மத்யா நாளு விடிஞ்சப்பறம் நேரா இவ அப்பங்கிட்டப் போயி ‘உம் மவளெ நான் கட்டிக்கிறேன். எனக்கு மூணு மாடு இருக்கு ரண்டு குடிசைக்கு சாமான் இருக்கு. குடுக்கிறியா’ன்னு கேட்டுட்டேன். முறைத் தப்பாப் போவப்படாது பாருங்க!

“அதெல்லாம் முடியாது. இங்கிட்டு அம்மிடின்னு முறைப்பிள்ளெ ஒருத்தன் இருக்கான். உனக்குக் கட்டிக் குடக்க முடியாது’ன்னிட்டான் இவ அப்பன். எனக்கு அல்லாரையும் கிளிச்சுப் போடலாமான்னு வந்திச்சு. அம்மிடி வந்தான் அங்கிட்டு; என்னெப் பாத்தான். இவ அப்பன், நடப்பை அவங்கிட்டச் சொன்னான். அம்மிடி ஆத்திரப்படவே இல்லீங்க. ‘அதுக்கென்னா உனக்கிட்டமாயிருந்தா கொடேன்’னான். எனக்குப் பால் வாத்தாப்பலே இருந்திச்சு. ஆனால் கூட்டத்து ஆளுங்க மத்தவங்க ஒருத்தரும் சம்மதிக்கலே. நானும் உடல்லே. அவங்களெ எப்படியாவது இளக்கிடணும்னு நெதக்கிம் அங்க போனேனுங்க, எம்மேலே எல்லாருக்கும் பிரியம் உளுமிடியாப் பேசுவேன். ரொம்ப நல்லவன்னு பேரெடுத்தேங்க. அம்மிடி ரொம்ப தோளனாப் போயிட்டான் எனக்கு. சிரிக்கச் சிரிக்கப் பேசுவாங்க அவன். எங்கினாச்சிம் போனா சேந்துதான் போவோம். ஒருநா கள்ளுக் கடைக்கி என்னெ அளச்சிட்டுப் போனான் அம்மிடி. எனக்குப் புடிக்கவே இல்லீங்க. ரொம்ப உடம்புக்கு நல்லதுன்னு சொல்லி தன்னெக்கட்டி எனக்குக் குடிக்கக் கத்துக் குடுத்திட்டான் அவன்.

“ஒரு நா சொம்பு, ஊசி கஸ்தூரி எல்லாம் நெறைய வித்துக் கை ரொம்பக் காசு வச்சிருந்தோம். அவன் நல்லாச் செலவுபண்ணுவான்; எனக்கு நிறையக் கள்ளு வாங்கி கொடுத்தான். ‘காசு ரொம்ப இருக்கு. ரயிலுலே ஏறிப்போயிட்டு வரலாம் வா’ன்னு ஒரு சீட்டு வாங்கிக்கிட்டு வந்தான். ரயில்லே போயி ஒரு வண்டியிலே ஏறிக்கிட்டோம். இப்பமாரி அப்பெல்லாம் கூட்டமே இருக்காதுங்க. எங்க பொட்டியிலே நாங்கரெண்டு பேரும் தான் இருந்தோம். குடி மயக்கத்திலே எனக்கு மண்டை கிறுகிறுன்னுச்சு. அப்படியே படுத்துத் தூங்கிட்டேன்.

“திடீர்னு முளிச்சேன். கீளே உளுந்தாப்பலெ இருந்திச்சி சொப்பனத்திலே.

கீளே தொட்டு பார்த்தேன். ஈரமாயிருந்திச்சி. தடவினேனுங்க. பிடி மணலு ஆம்பிடிச்சு. திடு திடுன்னு சத்தம் கேட்டிச்சு. அண்ணாந்து பாத்தேன். ரயிலு வேகமாப் போயிகிட்டிரிந்திச்சு. அப்ப தான் எனக்கு விளங்கிச்சு. ரயில்லேருந்து உளுந்திட்டேன்னு – உளுவலை! அந்தப் பய அம்மிடிதான் என்னெக் கொலை செய்யறத்துக்காவத் தூக்கி யெறிஞ்சிருக்கான். வஞ்சக்காரன்! எவ்வளவு ரோசிச்சுச் செஞ்சான், பாத்தீங்களா?"

"நான் சுத்தி முத்தி பார்த்தேன். எங்கே யிருக்கோமின்னு புரியலெ. கும்மிருட்டா இருந்திச்சு; எளுந்து நடந்தேன். கால்லெ தண்ணி தண்டிச்சு. வீச்சா ஓடற மாரி யிருந்திச்சு தண்ணி. வர வர முளங்கால் தண்ணி வந்துது. அப்பறம் இடுப்பு மட்டும் ஆயிடிச்சு, திரும்பி வந்தேன் உளுந்த இடத்துக்கு. ஒண்ணுமே புரியலே. அங்கேயே குந்திட்டேன். ரொம்ப நாளி அப்பிடியே குந்திகிட்டிருந்தேன். கொஞ்சம் கொஞ்சமா மானம் வெளுத்திச்சு. முளிச்சு பாத்தா, ஏ அப்பா! எம்மாந் தண்ணி, எம்மாம் தண்ணி! பெரிய ஆழங்க! நாலு பக்கமும் தண்ணி, நான் ஒரு திட்டிலே நின்னுக்கிட்டிருந்தேன். மெதுவா நீஞ்சிக்கிட்டு முண்டியடிச்சு எப்படியோ கரையைப் புடிச்சிட்டேன். நல்லா விடிஞ்சப்பறம் தண்டவாளத்துக்கிட்ட ஒரு ஆளு வந்திச்சு. பேச்சுக் கொடுத்தேன். அதான் கொள்ளடம்னாரு. கும்மாணம் எங்கே யிருக்குன்னு கேட்டேன். 'இங்கே எங்கடாலே யிருக்கு? நாப்பது அம்பது மைலு இருக்கும்டா'ன்னாரு. தூக்கி வாரிப் போட்டிச்சு எனக்கு.

"ஒரு டேசனுக்கு வந்தேன். அங்கே ஒரு வண்டிலே ஏறிக்கிட்டேன். டிக்குட்டு இல்லேனு டேசனுக்கு டேசன் இறக்கிட்டாங்க. எப்படியோ முணா நாளு கும்மாணம் வந்தேனுங்க. நேரா அரசலாத்தங்கரைக்கு நடையைக் கட்டினேன்.

"'ஐயையோ! இதோ வந்திட்டானே!'ன்னு கூச்சல் போட்டான் இவ அப்பன். இவ அப்பிடியே வந்து என்னெக் கட்டிக்கிட்டு 'உசிரோட இருக்கியா ராசா'ன்னு அளுதா. அம்மிடி என்னைக் கண்டதும் வெட வெடன்னு நடுங்கினான். அப்பறம் ஆளையே காணும். கூட்டத்தை உட்டே ஓடிப்போயிட்டானாம். 'ஏ கள்ளி! கொள்ளடத்துலே தள்ளிக் கொன்னிட்டேன் அந்த நரிப்பயலெ' இன்னானாம் இவ கிட்ட அவன் முத நாளெக்கி. நரிப்பய யாரு? சொல்லுங்க எசமான்! அப்புறம் இவ அப்பனைப் பாத்து, 'பாத்தியா, கொள்ளிடத்திலெ தூக்கிப்போட்டானே நான் செத்தேனோ பாரு. ஆண்டவன் எளுதியிருக்கான் நானேதான் உன் மவளைக் கட்டிக்கணுமின்னு' இன்னு சொன்னேங்க. மத்யா நாளே வன

போசனம் பண்ணி இவளெக் கட்டிக்கிட்டு வேட்டைக்குப் போனேனுங்க! . . . என்னாங்க, ஆண்டவன் நெனக்காட்டி, ஓடற வண்டிலேருந்து உளுந்து, அதுவும் ஆத்திலே உளுந்து பொளைச்சுக் கண்ணாலமும் பண்ணிக்கிறதுங்களா?" என்றான்.

வாயடைத்திருந்தோம் நாங்கள்.

ஆனந்த விகடன், டிசம்பர் 1946

# அதிருஷ்டம்

நாம் சம்பளமாக வாங்கிக்கொண்ட பணம் அசல் வெள்ளியும் நிக்கலும் போட்டு அடித்துச் சர்க்கார் வெளியிட்ட பணமா? அல்லது செப்பிடு வித்தைக்காரன் தருவித்த பணமா? மந்திரக்காரன் வரவழைத்த காசோ, பண்டமோ மூன்றேமுக்கால் நாழிகைக்குமேல் நிற்காதாம். பார்த்துக் கொண்டேயிருக்கையில் மறைந்துவிடுமாம். முப்பது நாள் செலவுக்காகக் கொடுத்த பணம் முக்கால் நாளில் செலவழிந்துவிட்டால்? அதாவது, நேற்றுச் சாயங்காலம் சம்பளக் கவரைக் கொண்டு வந்து கொடுத்து நோட்டில் கையெழுத்து வாங்கிப் போனான் காரியாலயச் சேவகன். வீட்டுக்குப் போனதும் வீட்டு வாடகை, பால் பணம், மளிகைப் பற்று, டாக்டர் பில், டிராம் பஸ் – எல்லாம் போக மிஞ்சியிருப்பது இரண்டேகால் ரூபாய். மீதி அவ்வளவும் முக்கால் நாளில் செலவழிந்துவிட்டது. இது நிஜப் பணமா? பொய்ப் பணமா? பொய்ப் பணமாயிருந்தால் இந்த இரண்டேகால் ரூபாய் எப்படி மிச்சம் இருக்கும்? கோட்டின் வலது பையில் கனச் சில்லறையாக உட்கார்ந்திருக்கும் அந்தப் பணம் கோட் நுனியை வலப்பக்கம் ஓர் அங்குலம் கீழுக்கு இழுத்துத் தொங்குகிறது. அந்தக் கனமும் இழுப்பும் உடலில் நன்றாகப் படுகின்றன; நிஜப் பணந்தான்! –

“சார், வயி உடு சார், இறங்கிடேறன்” என்று குரல் கேட்டது.

“பிச்” என்று ஓசையிட்டு டிராம் நின்றது. நினைவு கலைந்து சிதம்பரம் இறங்குகிற ஆளுக்கு வழிவிட்டான். இன்னும் நாலைந்து பேர் இறங்கினார்கள். சிரம்பரத்தோடு இடித்துக்கொண்டு நின்று வரும் கும்பல் இறங்குகிறவர்களுக்குச் சற்று விலகி வழிவிட்டு மீண்டும் நெருங்கிக் கொண்டது.

தலையை நீட்டி உட்கார இடம் அகப்படுமா என்று பார்த்தான் சிதம்பரம். ஊசி நுழைய இடம் இல்லை. டிராம் ஓர் ஆதிர்ச்சியுடன் புறப்பட்டது.

“சார், சார், உள்ளுக்குப் போங்க” என்று கண்டக்டர் கத்தினார். மரியாதைக்காக ஓர் அங்குலம் அந்தக் கும்பல் ‘உள்ளுக்கு’ நகர்ந்தது.

சிதம்பரத்தை மீண்டும் கவலை சூழ்ந்து கொண்டது. திருச்சிராப்

பள்ளியிலிருந்து அண்ணா எழுதியுள்ள கடிதம் சற்றுக் கண்டிப்பாகத்தான் இருந்தது.

"... அங்கு, நீ, செள. கெளரி, குழந்தை யாவரும் செளக்கியமென்று நம்புகிறேன். இவ்விடம் மன்னி, செள. ராதை க்ஷேமம். நிற்க; இப்போது எனக்கு மிகவும் பணமுடையாக இருக்கிறது. போன செப்டம்பரில் வாங்கிக்கொண்ட பணஉத்தை நீ இன்னும் திருப்பித் தராதது எனக்கு ஆச்சரியத்தை விளைவிக்கிறது. அறுபது ரூபாய் அனுப்பவா இவ்வளவு தாமதம்? அடுத்த மாதமே தருவதாகச் சொன்னாயே. இந்தக் காலத்தில் விலைவாசியெல்லாம் தூக்கலாகத்தான் இருக்கிறது. குடும்பம் நடத்துவது, அதுவும் சென்னையில் நடத்துவது, மிகவும் சிரமசாத்தியமான காரியந் தான். இருந்தாலும் உன் கைக்குச் செலவு செய்வது அதிகம் என்றே எனக்குப் படுகிறது. சிக்கனம் பழகவோ, கற்றுக்கொள்ளவோ உனக்கு வயசு வந்துவிட்டது. நாளைக் கவலை நாளைக்குத்தானே என்று இருப்பது எப்பொழுதுமே முடியாது. தொகை முழுவதும் ஒரே தடவையில் கொடுக்க முடியாவிட்டாலும், மாசம் பத்துப் பதினைந்தாவது அனுப்பக் கூடாதா? ஆதலால் இந்த மாசத்திலிருந்தே அப்படிச் செய். தவறமாட்டாய் என்று நம்புகிறேன்."

அடுத்த வரிகள் தன்னுடைய பொறுப்பையும் பிறருடைய பொறுப்புகளையும் உணர வேண்டிய அவசியத்தைப் பற்றிச் சொல்லின. "நாளைக்கு பத்து ரூபாயாவது அனுப்பு என்றுதான் அர்த்தம். அதனால் தான் இரண்டாம் தேதி கடிதம் வந்திருந்தது.

"அண்ணா நல்லவர்தாம். இன்னொருவனாக இருந்தால் கன்னா பின்னாவென்று எதையாவது எழுதி வைத்திருப்பான். இன்னொருவன் என்ன? இதையே சின்ன அண்ணாவிடம் வாங்கியிருந்தால் இந்நேரம் அரிவாளை ஓங்கிக்கொண்டு வந்திருப்பான். மிகவும் தாக்ஷண்யப் பிரகிருதி!

"பெரிய அண்ணாவுக்கு அப்படிப் பெரிய சம்பளமும் இல்லை. சுமாராக வருகிற வரும்படியையும் சாப்பிடுவதற்குத் தயாராக இதோ இதோ என்று ஐந்து பெண்கள் பிறந்திருக்கின்றன. பெண்களும் லேசுப் பட்டவர்களல்ல. அது இது என்று காசு தண்டிக்கொண்டே இருக்க வேண்டும் அவர்களுக்கு. அப்படித்தான் கண்டதை வாங்கித் தின்று வளர்கிறார்களா என்றால் அதுவும் இல்லை. பொழுது விடிந்தால் நச்சு நச்சு என்று ஏதாவது வியாதி படுத்திக்கொண்டே இருக்கும், ஒவ்வொரு பெண்ணையும். மன்னிக்கும் செட்டு கட்டு இந்த இழவெல்லாம் தெரியாது.

மைத்துனன் இருக்கிறோமே, நம்மைப் போல்தான் அவளும். குடும்பம் நடத்துகிற தோரணையைப் பார்த்தால் யாரோ லக்ஷக்கணக்கில் மான்யம் கொடுத்து, “செலவழியம்மா உன் இஷ்டப்படி” என்று சொல்லிவிட்டுப் போனதுபோல் இருக்கும். இரண்டு கறி, ஒரு கூட்டு, அப்பளம் இல்லாமல் சமைக்கத் தெரியாது அவளுக்கு. வாரத்திற்கு நான்கு நாளாவது நெய் வாசனை அடிக்காமல் பகல் பொழுது கழியாது. இந்த ரகளையிலும் அண்ணா ஒரு நானூறு ஐந்நூறைத் தபாலாபீசில் போட்டுக் குருவிமாதிரி சேர்த்துத்தான் வைத்திருக்கிறார். இப்போது என்ன முடையோ அவருக்கு? கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்டால் அதில் என்ன தப்பு இருக்க முடியும்? யோசனை சொல்லுகிறதிலும் கெட்டிக்காரர் அவர்; பத்துப் பத்து ரூபாயாக அனுப்பித் தீர்த்துவிடலாம் என்று நமக்குத் தோன்றவேயில்லையே! நாளைக்கே பத்து ரூபாய் அனுப்பலாம். ஆனால் கையில் இருப்பது இரண்டே கால் ரூபாய்தான்.

“ஒருவேளை டிராம் பாஸ் வாங்காமல் இருந்திருந்தால் . .? ஹம். டிராம் பாஸ் இல்லாமல் என்ன செய்வது? திருவல்லிக்கேணியிருந்து பிராட்வேக்கு நடந்தா போக முடியும்? நாமும் நாலு வருஷமாகக் கஜகர்ணம் போட்டுத்தான் பார்க்கிறோம், பிராட்வேக்குப் பக்கத்தில் ஜாகை மாற்றிக்கொள்ளலாம் என்று. கிடைக்கவில்லையே!

“எட்டு வருஷமாக உத்தியோகம் பார்க்கிறோமே, ஒரு காலணாவாவது மிச்சம் பிடிக்க முடிகிறதா? ஏன் முடியவில்லை?

“ஒன்றியாக இருந்தபோது துரை தித்திப்பு இல்லாமல் டிபன் சாப்பிட்டுவிடுவாரா என்ன? ஓர் இங்கிலீஷ் படம், ஒரு கச்சேரி தவறியது கிடையாது. அப்படிப் பிரம்மசாரியாக இருந்தபோதே பக்கத்து அறை ஆசாமிகளிடம் இரண்டு மூன்று கடன் வாங்காமல் தள்ளியதில்லை.

“கடைசியாக நம் வீட்டில் தித்திப்பு என்று தின்றது கல்யாணத்தின் போதுதான். நம் வீட்டிலா! கல்யாணம் அவள் வீட்டில் அல்லவா நடந்தது! கல்யாணம் ஆகி மூன்று தடவையோ நாலு தடவையோ அவள் பிறந்த வீட்டுக்குப் போய் வந்திருக்கிறாள். வருகிறபோது ரவாலாடு, குஞ்சாலாடு என்று கொண்டு வந்திருக்கிறாள். அந்தக் குஞ்சாலாடுக்குக்கூட நான்கு நாட்களுக்குமேல் சரியாக இருக்க மனசுவராது; சிக்கு நாற்றம் வீச ஆரம்பித்துவிடும். கௌரியின் அப்பா என்ன கலெக்டரா, தாசீல்தாரா? ஜில்லா போர்ட் மேஸ்திரி. தேங்காயெண்ணெய் கலக்காமல் முழு நெய் விட்டுக் குஞ்சாலாடு எப்படிப் பிடிக்க முடியும் அவர்களுக்கு? அப்படியாவது, ஒரு மாப்பிள்ளையாக இருந்தால் போட்டடித்துப்

பண்ணிவிடலாம். ஆறு மாப்பிள்ளைகள்! வளைகாப்பு, மூன்றாவது பிரசவம், பச்சை போடல், புருஷனுக்குப் புதிதாக மாற்றலான இடத்தில் வீட்டுப் பஞ்சம், மாவிளக்கு வேண்டுதல் — இப்படி ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லிக்கொண்டு ஒவ்வொரு பெண்ணும் பிறந்தகத்திற்கு வர 'க்யூ' நிற்கிறார்கள். தித்திப்பாவது மண்ணாவது!

"கௌரிக்குச் சித்திரை நக்ஷத்திரம். சித்திரை நக்ஷத்திரத்திற்கு வறட்சியைத் தவிர ஒன்றும் தெரியாதாம். புருஷனைச் சம்பாதிக்கவும் விடாது; விட்டாலும் ஏதாவது ஒரு பெரிய ஓட்டே போட்டு அதிகப் படியான பணத்தை நழுவ விட்டுவிடுமாம். சை! கல்யாணமாகி மூன்று வருஷமாகி, ஒரு குழந்தையும் பிறந்து விட்டபிறகு என்ன அசட்டுக் குறைகள்? சித்திரை நக்ஷத்திரமா யிருந்தால் என்ன? இந்த அடக்கமும், 'நறுவிசும்' யாருக்கு வரும்? நம் தாரித்திரியத்திற்கு அவளா பொறுப்பு? இனிமேல் தப்பித் தவறிக்கூட இதுமாதிரி நினைக்கக்கூடாது.

நமக்கு மூன்று வேளை காபி வேண்டியிருக்கிறது. மத்தியானத்திற்காக் கொடுக்கிற தர்மாஸ் பிளாஸ்க் காபி போதவில்லை. சாயங்காலம் வீட்டுக்கு வந்ததும் ஓர் அரைச்சேராவது இல்லாவிட்டால் தலைவலி போடு போடு என்று போட ஆரம்பித்துவிடுகிறது.

காபிக் கொட்டை போதாதென்று பால் புட்டிகள்.

குழந்தைக்குப் பால் இல்லை. ஆறு மாசத்திலா பால் வற்றிவிடும்? இந்தக் காலத்துப் பெண்களே அதிசயமாகத்தான் இருக்கிறார்கள். மாசம் மூன்று பால்புட்டி. உள்ளிப்பூண்டு சேர்த்தால் நல்லது. இவளுக்கானால் குடல் பீறி விழுந்து விடுகிறதுபோல் குமட்டுகிறதாம்.

போதும் போதாததற்குக் கட்டி. வைத்தியனிடம் குழந்தையைக் கொண்டுபோய்க் காட்டியதும், முதுகோடு வயிற்றை ஒட்டி விடுகிறாற் போல நாலைந்து அமுக்கு அமுக்கிவிட்டுச் சொன்னான்:

"நல்ல வேளை. ஆரம்பித்திலேயே கொண்டு காண்பித்துவிட்டீர்கள். இன்னும் ஒரு மாசம் கவனிக்காமல் இருந்திருந்தால் சிரமமாய்ப் போயிருக்கும். இப்பொழுது வந்தது நல்லதாய்ப் போயிருக்கும். மருந்து கொடுக்கிறேன். கொடுங்கள். சரியாகிவிடும். கவலைப் படவேண்டா" என்று மருந்தைக் கொடுத்தான்.

"அது என்ன மருந்தோ தெரியவில்லை. கட்டியோ மிகவும் கொஞ்சமாக இருக்கிறதாம். ஆரம்பத்திலேயே கொண்டு காண்பித்து விட்டோமாம்.

கவலை வேண்டாமாம். ஆனால் எட்டு மாசகாலமாகிறது. இன்னும் மருந்தை நிறுத்தின பாடில்லை.”

“போன தடவை காண்பித்ததுக்கு இந்தத் தடவை கொஞ்சம் குணமென்றுதான் சொல்லவேணும். இன்னும் ஒரு மாசம் கொடுங்கள்” என்று தவறாமல் ஒவ்வொரு மாசமும் சொல்லிக் கொண்டிருக்கிறான். மருந்தும் கொடுக்கத் தவறவில்லை. ஒருவேளை அது ஈயக்கட்டி, இரும்புக் கட்டியாக இருக்குமோ, என்னவோ, தெரியவில்லை.

“மருந்து கிடக்கட்டும். குழந்தைக்கு அவன் கொடுக்கிற ஆகாரப் பட்டியல் அரண்மனைப் பட்டியலாக இருக்கிறது. தினமும் இரண்டு சாத்துக்குடி ஆரஞ்சு உரித்துக் கொடுக்க வேண்டும். அடிக்கடி திராக்ஷை ரசம் கொடுக்க வேண்டுமாம். பிறக்கிற குழந்தைகள் இப்படியா பிறக்கவேண்டும்?”

“நாம்தான் சும்மா இருக்கக்கூடாதா? “என் ஆண்டுநிறைவுக்கு ஊரைக் கூட்டிச் சாப்பாடு போடு; அம்மாவுக்குச் சில்க் புடவை எடு; உனக்கு ஒரு பட்டு அங்கவஸ்திரம் வாங்கிக்கொள்; எனக்கு ஒரு பட்டுவேஷ்டியும், கல்லிழைத்த லோலக்கும் வாங்கிப்போடு; மேளக்காரனைக் கூப்பிடு” என்று குழந்தையா சொல்லிற்று? நமக்கு ஏன் இந்த வம்பு? சாதாரண வேஷ்டியும், சாதாரணப் புடவையும் வாங்கினால் ஆண்டு நிறைவு நடக்காதா? மேளம் இல்லாமல் லோலக்குக் காதில் நுழைய மாட்டேன் என்றதா? இதெல்லாம் நாமாகச் செய்து கொண்டதுதானே? மாமனார் செய்ததுபோக நமக்குக் கைச்செலவு தொண்ணூறு ரூபாய். கையில் முப்பது ரூபாய்தான் இருந்தது. நல்ல வேளையாகக் கேட்டவுடனே அண்ணா அறுபது ரூபாய் எடுத்துக் கொடுத்தார். அதைத் திருப்பிக் கொடுக்கச் சிங்கியடித்தாகிறது. ஓர் அம்மன் காசு கொடுத்தபாடில்லை. கிருஷ்ண பரமாத்மா அவதாரம் பண்ணிவிட்டாரா, ஊரைக் கூட்டி அமர்க்களம் செய்து ஆண்டு நிறைவு கொண்டாட? த்ஸ, அதைத்தான் சொல்லி என்ன பயன்? முதல் முதலில் பிள்ளை பிறந்திருக்கிறது; தேவடியாள் பிள்ளை பிறந்தாற் போல் அழுதா விடியவேண்டும்? என்னவோ, செய்த வரையில் சரி; அதை நினைத்துக் குழம்புவதில் புண்ணியம் இல்லை.

“குழந்தையின் கல்யாணம், அதுவும் முதல் குழந்தையின் கல்யாணம், நன்றாக நடத்த வேண்டியதுதான். ஆனால் சிநேகிதன் கல்யாணத்திற்கு எண்பது ரூபாய் செலவு செய்தால் நமக்கு அடுக்குமா?

“நடராஜன் மிகவும் நெருங்கிப் பழகியவன். பால்யத்தில் அவனால் பல காரியம் ஆகியிருக்கிறது. அவனுடைய கல்யாணத்திற்குப் போகாமல் இருந்தால் அதைவிட நன்றிகெட்ட தனம் வேறு கிடையாது. ஆனால் நம் அதிருஷ்டம் கல்யாணம் எங்காவது பக்கத்து ஊரில் நடக்கக்கூடாதா? மைசூரில் நடந்தது. மைசூர் என்ன கூப்பிடு தூரத்திலா இருக்கிறது? கௌரியையும் அழைத்துக் கொண்டுபோக வர நான்கு கட்டணம். நடராஜனுக்கு வெள்ளிக் கிண்ணம். அவன் பெண்டாட்டிக்கு ரவிக்கைத் துண்டு, ஏழு ரூபாய் பணம். இந்தச் செலவெல்லாம் செய்யத் தெம்பு ஏது நமக்கு? பனங்காயைக் குருவியா தூக்க முடியும்? இத்தனைக்கு பணம் ஏது? மாமனார் சாப்பிடுவதற்காக வைத்த வெள்ளித் தட்டைக் குடியிருக்கிற கமலத்தம்மாளிடம் அடகு வைத்து எண்பது ரூபாய் கடன் வாங்கினோம். பாங்கியில் போனால் முப்பது ரூபாய்தான் கொடுப்பான். கமலத்தம்மாள் நல்ல பிராணி. தட்டை அடகு வைத்துவிட்டு இப்பொழுது தினமும் ஓர் அணாவுக்கு இலைவாங்க வேண்டியிருக்கிறது.

“கமலத்தம்மாள் கடனை எப்போது தீர்க்கிறது? அண்ணா கடனைத் தீர்த்தாகவேண்டும். இருப்பது இரண்டே கால் ரூபாய். இன்னும் இருபத்தொன்பது நாள் தள்ளியாக வேண்டும். இப்படியே போய்க் கொண்டிருந்தால் இந்த இரண்டு கடனையும் அடைக்க இன்னும் இரண்டு ஜன்மம் எடுத்துத்தான் ஆகவேண்டும் போல் தோன்றுகிறது.

“பணம் சம்பாதிக்கும் வழியும் எவ்வளவோ பார்த்தாகிவிட்டது.”

“ஆரம்பித்திலேயே ரெவின்யூ இலாகாவில் புகுந்திருந்தால் – இப்போது ஒரு மோட்டார் வாங்கியிருக்கலாம். சொக்கலிங்கம் நம்மோடு படித்துப் பாஸ் பண்ணியவன்தான். கலெக்டர் ஆபீஸ் குமாஸ்தாவாகப்போனான். ஆறு வருஷம் ஆகவில்லை. நாலு வீடு வாங்கிவிட்டானாம். இப்போது நினைத்துக்கொண்டு என்ன செய்கிறது? வயசு முப்பதாகி விட்டது. முப்பது வயசுக்குமேல் எல்லோரையும் கிழப்பயல்கள் என்று சர்க்கார் நினைத்துக்கொண்டிருக்கிறதே.”

“கிண்டிக் குதிரைகளைக் கெஞ்சினோம். ஆங்கிலத்திலும் தமிழிலும் ஆயிரம் அகராதிகளைப் புரட்டிப் போட்டிகளை எல்லாம் ஒருகை பார்த்தோம். யார் யாருக்கோ பரிசு விழுந்து கொண்டுதான் இருக்கிறது. நமக்குத்தான் கிடைக்கவில்லை. ஒரு சமயம் நமக்குச் செலவழிக்க வழி தெரியாது என்று விழவில்லை போலிருக்கிறது.

ஊரிலிருந்து ஒன்றுவிட்ட மைத்துனன் கைத்தறி வேஷ்டிகள்

அனுப்பினான். மாதத்திற்கு ஐந்தாறு ஜோடி என்று விற்றோம். ரூபாய்க்கு ஓர் அணா இரண்டு அணா லாபம் கிடைத்துக் கொண்டு வந்தது. கடைசியில் ஆடிட் ஆபீஸ் மாத்ருபூதம் நாற்பது ரூபாய்க்குக் கடனாக வேஷ்டிகளும் புடைவை ஒன்றும் வாங்கிப் போனவர், பணத்தைக் கொடுக்காமலே திடீரென்று பிராணனை விட்டுவிட்டார். குடும்பம் ஊரைவிட்டுப் போய்விட்டது. இப்போது இருக்கிற விலாசம் தெரியவில்லை. வந்த லாபம் முழுவதையும் இது அடித்துக்கொண்டு போய்விட்டது. தவிக்கிற குடும்பத்தை, விலாசம் கண்டுபிடித்தா வதைக்கிறது?"

சிதம்பரத்திற்கு உட்காரவேண்டும் என்ற பிரக்ஞையே அற்றுப் போயிருந்தது. சென்டிரல் ஸ்டேஷனுக்குமுன் நின்றதும், "ஏம்பா சிதம்பரம், என்னாப்பா யோசிச்சுக்கினே நிக்கிறே? வாப்பா, உக்காருப்பா" என்ற குரல் கேட்டது. சட்டென்று பின்னால் திரும்பிப் பார்த்தான் சிதம்பரம். சிவஞானம், "இண்ணாப்பா, ஊட்லெ தோசை இருக்குமா, உப்மா இருக்குமாண்ணு யோஸிக்கிறியா? உக்காருப்பா" என்று அழைத்தான்.

சிதம்பரம் சிரமப்பட்டு ஒரு வறட்டுப் புன் சிரிப்புப் பூத்துக்கொண்டே போய் உட்கார்ந்தான்.

"நம்ம மானேஜர் இருக்கான் பாருப்பா; நம்மெ சும்மாச் சும்மா வார்த்தை சொல்லிக்கினே இருக்குறான். ஒரு நாளைக்குப் படாகோவம் வரப்போவுது. டேய் போடா உன்னைத் தெரியும்னு வேலையை உட்டுட்டுப் பூடப்போறேன்; ஆமாம்" என்று ஆபீஸ் புராணத்தைத் தொடங்கிவிட்டான் சிவஞானம்.

"ஆமாம். நீ வேலையை விட்டூட்டா, கம்பெனியே மூடிவிடப் போறாங்க. போடா போக்கத்தவனே."

"இல்லெ, நான்தான் ஸெத்துப்பூடப் போறேனாக்கும். உட்டுத் தள்ளப்பா; இதெவிட்டா ஆயிரம் வேலை."

"நீ எம்.ஏ.ஜி.டி.ஏ. பாரு. உனக்கு வேலையை வச்சிண்டு எல்லாச் கம்பெனிகளும் காத்துண்டு நிக்கிறது."

"ஏம்பா, ஜீடியேக்குத்தான் வேலை கொடுப்பாங்களா? வாணாமே, இப்பத்தான் மதுவிலக்குக் கொண்ணாந்திட்டாங்கள். எல்லாரும் காபி, டீன்னு சரணாகதி பண்ண ஆரமிச்சிட்டாங்க. வண்ணாரப்பேட்டையிலெ ஒரு டீ பங்க் வச்சேன்னா, தினமும் பத்து ரூபாய்க்காக் குறஞ்சி

போயிடும்?”

“ஏன், நாளைக்கே வச்சூடேன்.”

“வக்யாமியா இருக்கப்போறேன்? நீ பாரு, சொல்றேன்.”

பதில் ஒன்றும் சொல்லாமல் ஸ்டேஷன் கடிகாரத்தைப் பார்த்தான் சிதம்பரம்.

பேச்சில் மனம் செல்லவில்லை. எல்லையில்லாத கவலை உள்ளத்தை வாட்டுகிறது. மலை மாதிரி இரண்டு கடன்கள், தீராத கடன்கள், தலை மீது அமர்ந்து அழுத்துகின்றன. அவற்றையும், அவற்றோடு சேர்த்து அமர்ந்துள்ள வேதனையையும் எப்படிக் கீழே தள்ளுகிறது?

முகம் எண்ணெய் வழிந்துகொண்டிருந்தது. கைக்குட்டையை எடுத்துக் கன்னம் நெற்றி மூக்கெல்லாம் அழுத்தித் தேய்த்துத் துடைத்துக் கொண்டான்.

ஒரு பார்ஸிக்காரனும் அவன் பெண்டாட்டியும் எதிரே உட்கார்ந் திருந்தார்கள். பக்கத்தில் ஒரு தமிழன். அப்பால் ஆவடியிலிருந்து ஓர் அகதிக் குடும்பம் தாடியும் மீசையும் கொண்ட தலைவனுடன் உட்கார்ந்திருந்தது. “இந்தப் பார்ஸிகளுக்கெல்லாம் பட்டைத் தவிர ஒன்றுமே தெரியாதா? என்ன சிவப்பு, என்ன மேனி! இந்த அகதிகள்! அகதிகளா! என்ன வளர்ச்சி, என்ன கட்டு, முகத்தில் என்ன ஜீவன்! இதெல்லாம் தேச வாக்கா, தேக வாக்கா, அல்லது பணத்தின் கோலமா? சிதம்பரம் பிரமித்துப்போய்ப் பார்த்துக்கொண்டிருந்தான். அந்த அகதியின் பெண்டாட்டி நாக்கில் பல் படாமல் பேசுவது போல் இருந்தது. வார்த்தைகள் வெள்ள விரைவில் வாயிலிருந்து வழுக்கி விழுவது போல் தோன்றின. முகம் பால் வடிந்து கொண்டிருந்தது. என்ன வளர்த்தி, என்ன களை! சரீரத்தின் ஒவ்வோர் அணுவிலும் சந்தோஷமும் ஜீவனும் துள்ளிக்கொண்டிருந்தன. சற்றைக்கொரு தரம் கும்டாவைச் சரிப்படுத்திக்கொள்வாள். பேச்சு ஓயவில்லை. சிரிப்பு வாயை நிறைத்திருந்தது. ஸென்டிரலில் தொடங்கிய பேச்சும் கலகலப்பும், மன்ரோ சிலை வந்தும் ஓயவில்லை. அவள் புருஷன், தாடிக்காரன், மீசையை எழுத்தாணி மாதிரி முறுக்கி விட்டுக்கொண்டே வாய் திறந்து சிரித்துவிடாமல் புன்சிரிப்புடன் தலையை லேசாக ஆட்டியவாறு அவள் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தான். பாஷை புரியவில்லை. ஏதோ கந்தர்வ ஜோடி தெவிட்டா இன்பங்களைப் பற்றி ஒருவருக்கும் புரியாத பாஷையில் பேசிக்கொள்வது போல் சிதம்பரத்துக்குத் தோன்றிற்று.

"நான் வர்றேனப்பா" என்று சிவஞானம் அவனை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டு இறங்கிப் போனான்.

"இத்தனை சந்தோஷத்திற்கும் பணந்தான் காரணமாக இருக்க முடியும். கவலைகள் அனைத்தையும் போக்கிவிடும் படியாக அவ்வளவு பணம் எங்கே கிடைக்கும்? வியாபாரத்தில் கிடைக்குமா? ஹோட்டல் வைத்தால் கிடைக்குமா? சினிமாவில் நடித்தால் கிடைக்குமா? நடிக்கத் தெரியாவிட்டாலும் பாடத் தெரியவேண்டும். நம் வம்சத்திற்கும் சங்கீதத்திற்கும் தலைமுறைக் கணக்கான விரோதம்.

மவுண்ட் ரோட்டில் டிராம் நின்றதும், திடுதிடு வென்று ஒரு பெரிய கூட்டம் ஏற ஆரம்பித்தது. அகதி தம்பதிகள் இரண்டு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு இறங்கிவிட்டார்கள். ஒரு நிமிஷத்தில் டிராம் முழுவதும் நிறைந்துவிட்டது. யாரோ ஸ்திரீ ஏறி அவன் முன்னால் நின்று அவஸ்தைப்படுவதைக் கண்டு எழுந்து இடம் விட்டுப் படியண்டை நகர்ந்தான் சிதம்பரம். வண்டி நகர்ந்தது.

படிக்கட்டுக்கு மேலும் கீழும் பக்கத்திலும் அசாத்திய நெருக்கடி. மூச்சுத் திணறும் போல் இருந்தது. கோட்டுக்குள் வேர்வை ஆறாக ஊற்றுகிறது. முதுகெல்லாம் சுடுகிறது.

சிதம்பரத்தை முட்டித் தள்ளிவிடுவது போல ஒரு பருத்த ஆசாமி வைரக் கடுக்கனும் வைர மோதிரங்களும் காவிப்பல்லும் சால் தொப்பையுமாக நின்று, உஸ் உஸ் என்று வேர்வை தாங்காமல் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தார். சரீரம் மிக மிக ஸ்தூல சரீரம். வேர்வை வஞ்சனை இன்றிப் பெருகிக்கொண்டிருந்தது. பக்கத்தில் இருப்பவர்கள் அந்த வாடையை விரும்பமாட்டார்கள் என்று வேர்வைக்கா தெரியும்? சிதம்பரம் மூச்சைப் பிடித்துச் சகித்துக்கொண்டே நின்றான். அப்பால் போகலாம் என்றால் ஓர் அடி எடுத்து வைக்க இடம் இல்லை.

மனுஷன் என்ன பருமன்! வெற்றிலை நிறைந்த வாய் மூச்சுவிடாமல் அரைத்துக் கொண்டிருந்தது. பெரிய ஜிப்பா ஒன்று அணிந்திருந்தார் அவர். பக்கத்துப் பையில் பளபளவென்று பெரிய மணிபர்ஸ் ஒன்றுநீட்டிக் கொண்டிருந்தது. என்ன அஜாக்கிரதை! கூட்டமோ தாங்க முடியவில்லை. இந்தக் கூட்டத்தில் இந்த மாதிரி பக்கத்தில் பை வைத்த ஜிப்பா அணிந்து கொள்வதே தப்பு. அதிலும் ஒரு மணிபர்ஸை, இவ்வளவு பெரிய மணிபர்ஸை, வைத்துக்கொண்டிருந்தால் இதைவிட அசட்டுத்தனம் வேறு என்ன வேண்டும்? ஸ்தூல சரீரிகளுக்கே வஞ்சனை தெரியாது. சிதம்பரம்

அவரை எச்சரிக்கலாமா என்று நினைத்தான். என்னவோ செய்யவில்லை.

மவுண்ட் ரோடில் வளைவைத் தாண்டிக் கிழக்கே வண்டி திரும்பி வேகமாகப் போக ஆரம்பித்தது. கடல் காற்றைக் கிழித்துப் போனது. சஞ்சீவிக் காற்றுப்படுவது போல இருந்தது.

திருவல்லிக்கேணிச் சாலை திரும்புகையில் சரேல் என்று இறங்கிவிட்டான் சிதம்பரம். நல்ல வேளையாக பின்னால் வந்த மோட்டார் மயிரிழையில் அவன் மீது ஏறிவிடாமல் நகர்ந்து பறந்தது. இறங்கிய சூட்டோடு விர்ரென்று நடந்து ஒரு சந்தில் புகுந்துவிட்டான்.

மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. உடல் மேலும் வேர்த்துவிட்டது. குபீல் என்று உடலுக்குள் அனல் அடித்தது.

“நாமா இந்தக் காரியத்தைச் செய்தோம்? எப்படிச் செய்தோம், ஏன் செய்தோம்? நூற்றுப்பத்து ரூபாய் சம்பளம் வாங்கும் நாமா இந்தக் காரியம் செய்தோம்?” என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டான். அவனுக்குத் தன்னையே நம்ப முடியவில்லை. இடப் பக்கம் மார்புமீது தடவிப் பார்த்தான். களவாடிய மணிபர்ஸ், பத்திரமாக, பெரிதாக, கோட்டின் உள்பையில் ரகசியமாக, உலகத்திற்கே தெரியாமல் உட்கார்ந்திருந்தது.

கீழே கால் பாவாமல்தான் நடந்தான் சிதம்பரம். ஆனால், அந்தக் கால்கூட நடக்கமுடியாமல் இற்றுவிட்டாற்போல் தோன்றிற்று. நடக்கிற வேகமோ, அசாதாரணமாக, ஜன்னி வேகமாக இருந்தது. இன்னொரு சந்தில் திரும்பினான். பின்னால் பார்த்துக்கொண்டான். யார் அவனைப் பின் தொடரப்போகிறார்கள்? டிராம் எவ்வளவோ தூரம் போய்விட்டது. வேறுயாரும் அவனோடு இறங்கவில்லை. அந்த வேகத்தில் கண்டக்டருக்குத்தான் இறங்க முடியும். அதுவும் அவனைப் பார்த்தால் திருடனாகவா தோன்றும்?

பீதி அனல் அனலாக அடித்தது. கிருஷ்ணசாமி முதலியார் சந்தில் திரும்பினான். கடற்காற்று குளுகுளுவென்று தவழ்ந்து வந்து அணைத்தது. அந்தக் காற்றுப் பட்டதும் யாரோ குழந்தை மௌனமாகப் புன்சிரிப்புச் சிரிப்பது போல அவனுக்குத் தோன்றிற்று. பெல்ஸ் ரோட் வந்ததும், கொஞ்சம் நடந்தான் அவன். ஆனால் அதன் விஸ்தாரத்தை, ஹோவென்று கிடந்த அதன் திறப்பை, அவன் நெஞ்சு தாங்க முடியாமல் துடித்தது. மறுபடியும் ஒரு சந்தில் நுழைந்துவிட்டான்.

"திருப்பிக் கொடுத்துவிடலாமா? என்ன சொல்லிக் கொடுப்பது? அதிருக்கட்டும். இந்த ஜன சமுத்திரத்தில் அந்த ஆளை எங்கே தேடப் போகிறோம்? ஹூம். எப்படித் துணிந்து அதை எடுத்தோம்? எப்படி அதைக் கோட்டு உள்பையில் போட்டுக் கொண்டோம், யாரும் பாராமல்?"

எல்லாம் கனவு மாதிரி இருந்தது.

சந்திலும் பொந்திலும் புகுந்து, பைகிராப்ட்ஸ் ரோட்டைக் கடந்து வீராசாமி தெருவை அடையும்போது ஜவுளிக்கடைக் கடிகாரம் ஆறு அடித்தது.

வீட்டுப் படி ஏறியதும், ரேழியில் குழந்தை விளையாடிக் கொண்டிருந்ததைக் கண்டான். அவனைக் கண்டதும், புன் முறுவல் பூத்து, தூக்கிக் கொள்ளுமாறு இரண்டு கைகளையும் உயர்த்திற்று அது. எப்போதும் தூக்கிக் கொள்ளுகிறவன், செருப்பை மாடத்திற்குள் உதைத்துவிட்டு, குழந்தையைக் கவனியாமலே உள்ளே நுழைந்தான். குழந்தை வீல் என்று அழத் தொடங்கிற்று.

கோட்டைக் கழற்றி மாட்டி அந்த மணிபர்ஸை நடுங்கிக் கொண்டே எடுத்தான். எவ்வளவு பெரிய பர்ஸ்!

பொத்தானைப் பலமாக இழுக்கவேண்டியிருந்தது. இழுத்தான், திறந்தான்.

பொல பொலவென்று கொட்டைப் பாக்குச் சீவல் மேஜைமேல் உதிர்ந்தது.

ஹா, சீவலா?

சீவலுக்கா மணிபர்ஸ்! பர்ஸில் காசு போடாமல் சீவலா போடுவார்கள்? எத்தனை சீவல்? பர்ஸ் நிறையச் சீவல் தவிர வேறு ஒன்றும் இல்லை.

"என்னன்னா இது? இன்னிக்கு ஏன் இத்தனை நாழிகை? என்ன இது, இவ்வளவு சீவல் எதற்கு? கடுதாசியில் கட்டி வந்தால் கிழிஞ்சு போயிடும்னு மணிபர்சிலே போட்டுண்டு வந்தேளா? ராஜா யோசனையே அலாதி" என்று முகம் மலர்ந்து மேஜையண்டை நின்றாள் கௌரி.

ஒன்றும் பேசாமல் சீவல் முழுவதையும் கொட்டினான் அவன்.

"ஏன், மேஜைமேலே கொட்டறேள்?"

"எடுத்து அள்ளி வை, ஒரு டப்பாவிலே."

“டப்பாவிலே எதுக்கு அள்ளணும்? நீங்க செஞ்சுதுதான் சரி. மணிபர்ஸிலே காசு இல்லாடாலும் சீவலாவது இருக்கட்டும். அது வெறுமே கிடக்கணுமா? மணிபர்ஸிலெயே போட்டுடலாம்.”

“சரி, போ, காபியைக் கொண்டுவா.”

அவள் அடுக்களைக்குள் சென்றதும், அயர்ச்சி தாளாமல் அந்த அதிருஷ்ட மணிபர்ஸில் மறுபடியும் சீவலை எடுத்துத் திணித்தான் சிதம்பரம்.

“நாமதான் முட்டாள்னா, தெய்வமும் முட்டாளா இருக்கே!” என்று அப்பொழுது அவன் வாய்விட்டுத்தான் சொன்னான்.

**கலைமகள், செப்டம்பர் 1949**

# வேறு வழியில்லை

"என்னடி தளுக்கு சுந்தரி, யாருக்காகடி இதெல்லாம்?"

கண்ணிலிருந்து சோப்பு நுரையைத் தண்ணீர் விட்டு வழித்துக்கொண்டிருந்தவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. திகிலில் உடல் பரக்க, முற்றத்திற்கு இறங்கும் படியில் ஓட்டுச் சார்பில் தலை இடித்துவிடாமல் சற்றுக் குனிந்து நெளிந்து நின்ற கிழவனைப் பார்த்தாள். அழுக்கு வேஷ்டி, வழுக்கைத் தலை, கசகசவென்று உடல் முழுவதும் வேர்வை. மூக்கின் இரு மருங்கிலும் வாய் ஓரம்வரை சரிந்த கிழட்டுக் கோடுகள். கிழம்! அவளுக்கு அருவருப்புப் பிடுங்கிக்கொண்டு வந்தது.

"மயிர் செம்பட்டை பரந்தது; வாரிப் பின்னிண்டேன். வேர்த்து ஊத்திற்று; மூஞ்சியை அலம்பிக்கிறேன். நான் பெண்ணாகப் பிறந்ததுக்குத் தளுக்கு வேறேயா?"

அவ்வளவுதான், ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான் அவன். பின்தலையில் சுருட்டிப் பந்தாகக் கட்டியிருந்த பின்னலைப் பிடித்துவிட்டான். நாய் கவ்வுகிற மாதிரிதான் இருந்தது அவளுக்கு. இரண்டு மூன்று பிடரி மயிர் மட்டும் மயிர்க்காம்பிலிருந்து கிளம்பிச் சுரீரென்று வலித்தது. பல்லைக் கடித்துக்கொண்டே, "என்ன சொன்னே, என்ன சொன்னே? இன்னொரு தடவை சொல்லு" என்று உறுமினான் அவன்.

நரை விழிகள்! சுற்றிக் கிழப் பழுப்பேறிய வெள்ளை விழி. கிழம்! அவளுக்குப் பயங்கூட இல்லை. அருவருப்புத்தான் ஓங்கி நின்றது.

"இப்ப என்ன சொல்லிவிட்டேனாம்?"

"நான் உனக்கு என்ன சொல்லியிருக்கேன்?"

"என்ன!"

"பின்னிக்கப்படாதுன்னு சொல்லலை?"

". . . "

"சோப்புத் தேச்சுக்கப்படாதுன்னு சொல்லலே?"

"தலைமயிரை விடுங்கோ."

“நான் கேட்டதுக்குப் பதில் சொல்லு. சோப்புத் தேச்சுக்கப்படாதுன்னு சொல்லியிருக்கேனா?”

“அப்படித்தான் தேச்சுப்பேன்.”

“என்ன, என்ன? அப்படித்தான் தேச்சுப்பியா, அப்படித்தான் தேச்சுப்பியா?” என்று கறுவிக்கொண்டே ஓங்கித் தலையில் ஓர் அறை விட்டான். முகத்தில் அறைந்தான். கன்னத்தில் அறைந்தான். வாயில் அடித்தான். முதுகில் குத்தினான். மாறி மாறி இடையீடில்லாமல் அடி விழுந்தது. செவிகளில் ஓர் அறை விழுந்ததும் அப்படியே கிணற்றுச் சுவர்மீது தலையை மோதிக்கொண்டு கீழே விழுந்தாள். ஓங்கி இடுப்பில் உதைத்தான்.

“ஐயோ, கொல்கிறானே, பாவி, பாவி!” என்று கடைசியில் தாங்க முடியாமல் கத்தினாள் அவள். கதறல் கேட்பதற்கு முன்னாலயே குடியிருக்கிறவர்கள் தாழ்வாரத்திற்கு ஓடிவந்து நின்றுவிட்டார்கள். அருகில் வந்து அவனை விலக்க யாருக்கும் தைரியம் வரவில்லை.

“ஓய் நரசிம்மையர்! என்னையா இது?”

திரும்பிப் பார்த்தான் அவன். முன் கட்டில் குடியிருக்கிற வாத்தியார் குஞ்சிதபாதம் மூடாத பேனாவைப் பிடித்துக்கொண்டு நின்று கொண்டிருந்தார்.

“என்ன?”

“நீர் என்ன மனுஷன்தானா?”

“உமக்கு என்னமாப் படறது?”

“மடத்து நாயை. அடிக்கிறாப் போலே அடிக்கிறீரே!”

“என் பெண்டாட்டியை நான் அடிக்கிறேன். நீர் வக்காலத்துக்கு வரவேண்டாம். உம்ம காம்பொஸிஷன் நோட்டெல்லாம் திருத்தி ஆயிட்டாப்போல இருக்கு.”

“திருத்த முடியலேன்னுதான் ஓடி வந்தேன். இப்படிக் கொலை விழுகிற வீட்டில் நிம்மதியா என்ன செய்ய முடியும்? இது என்ன பெண்ணா, கழுதையா?”

ஞானத்தின் நெற்றியிலிருந்து ரத்தம் பெருகிக்கொண்டிருந்தது. ரத்தப் பெருக்கும் கூட இருக்கிற ஆண்பிள்ளைத் துணையும் தைரியம்

அளிக்கவே, நடுக் கட்டிலுள்ள மளிகைக் கணக்குப் பிள்ளையின் தாய் ஓடி வந்து அவளைக் கையைப் பிடித்துத் தூக்கிக் காயத்தைக் கையால் அமுக்கிக்கொண்டே, "இப்படித்தான் அடிப்பாளா என்ன? இதுக்குக் கல்யாணமே பண்ணிண்டிருக்க வாண்டாமே" என்ற அவளை உள்ளே பிடித்து அழைத்துச் சென்றாள்.

ஆத்திரத்தில் குமுறிக்கொண்டே, "அப்படித் தான் தேச்சுப்பியா? இப்ப எப்படி இருக்கு?" என்று நரசிம்மன் உறுமினான்.

"சீசீ! பொழுது விடிஞ்சா இதே பேரெழவாய்ப் போய்விட்டது. இங்கே குடியிருக்கிறதைவிட எங்கேயாவது மீன்கடையிலே போய் உக்காந்துக்கலாம்."

"ஏன் உக்காந்துக்கறதுதானே? சத்தம் போடாதேன்னு நீர் கத்தறதுக்கு அதுவும் நல்ல இடந்தான்."

"பின்னே என்ன ஐயா? எங்கேயாவது கண் காணாத இடத்திலே உம்ம பெண்டாட்டியைக் கொலை பண்ணிக்குமே. இங்கே என்ன?"

"சரி போதும்; போம் உள்ளே."

"போகாட்டா?"

"போய்யான்னா!"

"அவரோட என்ன உங்களுக்கு இப்ப? உள்ளே வாங்கோ" என்று மனைவிகூப்பிடவே, குஞ்சிதப்பாதமையர் உள்ளே சென்றார்.

நரசிம்மன் வேகமாக வெளியே போய்விட்டான். ரத்தத்தை நீரால் துடைத்துத் தேங்காய் எண்ணெயைத் தடவித் துணியைக் கிழித்து ஒட்டினாள் கமலத்தம்மாள். வாத்தியார் மனைவியும் கொட்டிலில் குடியிருந்த அலமேலுக் கிழவியும் நின்று கொண்டிருந்தார்கள்.

"போயிட்டான் போ."

"உள்ளே வரபோதே நரசிம்மாவதாரம் வந்தாப் போல, வீடே கிடுகிடுத்துப் போறதடீம்மா?"

"பின்னே பேருக்குப் பொருத்தம் வேண்டாமா?"

"இப்ப எதுக்கு வந்தான்? வியாபாரம் முழிபுதுங்குகிற நேரமாச்சே இப்போ."

“எதுக்கு மாமி? எங்கேயாவது வாசல்லே நின்னுண்டிருக்கேனா, வீட்டலே இருக்கேனா, ஊரைச் சுத்தறேனான்னு தெரிஞ்சுக்கணும்; வேறே என்ன?”

“எதுக்காக இப்படிப் புடைச்சான் இப்ப? நீ என்ன சொன்ன?”

“ஆமாம், அவ சொல்லணும், அவளைப் பார்த்ததாலேதான் அவனுக்கு ஆங்காரம் பீரிட்டுண்டு வரதே.”

“ஒண்ணுமில்லே மாமி; தலைமயிர் நாராப் பறந்தது. ஒரு முட்டை எண்ணெய் தடவி வாரி ஒரு பின்னல் போட்டுண்டு மூஞ்சியைத் தேச்சு அலம்பினேன். திடீர்னு இவன் வரப்போறான்னு நான் கண்டேனா?”

“பின்னக்கப்படாது, சோப்புத் தேச்சுக்கப்படாது. நல்ல ஆக்ஞை இது! பிச்சைக்காரி மாதிரி நிக்கணுமாக்கும்.”

“அவன் கிழவனோல்லியோ? நானும் கிழவியா இருக்கணும் என்கிறான்.”

“அதுக்கு ஒரு குமரியைத்தானா கல்யாணம் பண்ணிக்கணும்?”

அலமேலுக் கிழவி சொன்னதைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள்.

“இப்பக் கிழங்களெல்லாம் குமரியாறெங்கிறது. நரசிம்மையர் பாடம் தலைகீழா இருக்கு.”

இந்த இரக்கப்பேச்செல்லாம் ஞானத்திற்கு ஆறுதல் அளிக்கவில்லை. எல்லாம் பழகிப் போனது; அர்த்தம் இழந்தது.

ஒவ்வொருவராகப் போய்விட்டார்கள். ஞானம் எழுந்து, தன் அறைக்கு வந்து விளக்கை ஏற்றிக் கலைந்த தலைமயிரைக் கோதி, கண்ணாடிக்குமுன் ஒரு குங்குமப் பொட்டை வைத்துக்கொண்டாள். சிராய்த்த முழங்கை வலித்தது. சற்று உட்கார்ந்தாள். இருப்புக் கொள்ளவில்லை. நீலக் காலர் பனியனும், நீள மூக்கும், துளைக்கும் விழியும் அவளை அழைத்தன. கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பினாள். அடிபட்டு வீங்கி அலங்கோலமாயிருக்கிற முகத்தை இன்று அவனிடம் காட்ட வேண்டுமா என்று தயங்கினாள். மனம் கேட்கவில்லை. கோயிலுக்குப் போய் ஒரு நமஸ்காரம் பண்ணிவிட்டுத் திரும்பி அந்த வீட்டிற்குள் தயங்கித் தயங்கி நுழைந்தாள்.

கூடத்தில் அவன் நாற்காலியில் சாய்ந்து படித்துக்கொண்டிருந்தான். அவளைப் பார்த்து ஒரு புன்சிரிப்புச் சிரித்தான்.

“மாமி!”

“அக்கா” என்று எழுந்து சமையல்கட்டைப் பார்த்துக் கூப்பிட்டான் அவன். “யாரோ வந்திருக்கா.”

“யாரு, நீயா? வாம்மா?” என்று அழைத்தாள் அவன் அக்கா.

கூடத்தை வேகமாகக் கடந்து உள்ளே சென்றாள் ஞானம்.

“வாம்மா, உக்கார்ந்துக்கோ.”

“இல்லே மாமி; நாழியாச்சு.”

“வரபோதே நாழியாச்சுங்கிறியே. கொஞ்சம் உக்காந்துக்கோ; போகலாம்.”

உடல் சிலிர்த்து நடுங்க, அவள் உட்கார்ந்து கொண்டாள். கூடத்தில் ஒரு சுவருக்கப்பால் உள்ள அவன் உருவம் அவளைப் புல்லரிக்கச் செய்தது.

“காலமேயே வரச்சொன்னேனே. வரப்படாதா?”

“முடியல்லே, மாமி. வேலை இருந்தது.”

“நெத்தியிலே என்ன?”

அவளுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. ஓய்ந்து கிடந்த துக்கம் எழுந்து தொண்டையைப் பிடித்தது. கண்ணீரை இமைக்குள் அடக்கிக் குனிந்துகொண்டாள்.

“விழுந்தியா?”

“ஒண்ணும் இல்லை.”

“என்னமோ மறைக்கிறே நீ. சொல்லு, பாதகம் இல்லை.”

அதற்குமேல் அடக்க முடியவில்லை. கன்னத்தில் கண்ணீர் விழுந்தது.

“ஏன், அவர் அடிச்சாரா?”

வாயில் வார்த்தை வராமல், “ஆமாம்” என்ற பாவனையில் தலையை ஆட்டினாள் அவள்.

“என்ன நடந்தது?”

“நான் இருபத்திரண்டு வயசுப் பொண்ணா இருக்கிறது பிடிக்கலே

அவனுக்கு. நான் சோப்புத் தேச்சுக்கப்படாது, தலை பின்னிக்கப்படாது."

"கல்யாணம் பண்ணிண்டு சந்தேகப்பட்டுண்டேயிருந்தா நாளை எப்படி ஒட்டுகிறது? கிழவன்னு தெரிஞ்சுதானே நீ கல்யாணம் பண்ணிண்டே?"

"தெரியும் மாமி! கிழவனாயிருந்தாலும் ஆசையாய் வச்சுப்பன்னு நினைச்சேன்."

"எப்பக் கல்யாணமாச்சு உனக்கு?"

"போன ஆவணியிலேதான் ஆச்சு. ஒன்பது மாசந்தான் முழுசா ஆயிருக்கு. தொண்ணூறு மாசம் ஆயிட்டாப்பலே இருக்கு, மாமி. நான் என்ன பண்ணுவேன் மாமி?" என்று ஞானம் வாயைத் திறந்து பெருமூச்சுவிட்டாள். மூச்சில் அனல் அடித்தது. "இன்னும் எத்தனை நாள் இப்படி இருக்கிறது? எனக்கு ஒண்ணுமே புரியலே."

"பிறந்தகத்துக்குப் போய் ரெண்டு மாசம் இருந்துட்டு வரப்படாதா?"

"பிறந்தகம் எது மாமி எனக்கு?"

"அப்பா அம்மா இருக்காளோல்லியோ?"

"அப்பா இல்லை. அம்மாதான் இருக்கா. அவளே இட்லிக்கும் தோசைக்கும் அரைச்சிண்டு உசிரைக் காப்பாத்திக்கறா. நானும் போகணுமா இப்ப? இருபத்திரண்டு வருஷம் அவளைச் சுத்திண்டு நின்னது போறாதா?"

"இந்தக் கிழவனைத் தவிர வேறு மாப்பிள்ளையே கிடைக்கலையா உங்க அம்மாவுக்கு?"

"என்ன மாமி செய்யறது? உறவிலே பிள்ளைகள் இருக்கு. யாரும் ஐந்நூறு ரூபாய்க்குக் குறைஞ்சு வாங்கிக்கமாட்டேன்னுட்டா. அம்மாகிட்ட இருநூறு ரூபா தான் இருந்தது. இந்தக் கிழவன் கிட்டே கொண்டுவந்து இருநூறு ரூபாயையும் என்னையும் கொடுத்துட்டா."

"மூந்நூறு ரூபாய் இல்லேன்னு பாழுங்கிணத்திலே கொண்டு தள்ளிவிட்டாளா?"

"நான் என்ன மாமி பண்ணுவேன்! எனக்கு ஒண்ணும் புரிய மாட்டேங்கறது" என்று மீண்டும், முடிவில்லாமல் வளர்ந்துகிடக்கிற வருஷங்களை நினைத்து அனல் வீசும் பெருமூச்செறித்தாள் அவள்.

“உனக்கென்ன குறைச்சல்? சுடராட்டமா நிக்குறையே. சிவப்பு கண்ணைப் பறிக்கிறது. உன் அழகைப் பார்த்தாவது உன்மேலே இரக்கப் பட்டுக் கல்யாணம் பண்ணுக்கிறேன்னு உன் உறவிலே ஒரு பிள்ளையாவது வரலியா?”

“ஒருத்தருக்காவது கருணை கிடையாது மாமி. அதனாலேதான் கிழவனாயிருந்தா என்ன, அருமையாவாவது வச்சுப்பன்னு சம்மதிச்சேன். இந்தக் காடும் முள்ளாத்தானிருக்கு. என் தலையில் எழுத்து இப்படி ஆயிட்டது.”

“தலையிலாவது எழுத்தாவது! நீ வேறே கல்யாணம் பண்ணிக்கோயேன்” என்றான் கூடத்திலிருந்து இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தவன். வேதனையும் குரோதமும் அந்தக் குரலில் புகைந்தன. “எனக்கா, பண்ணிண்டா என்ன?” என்று கேட்டுக்கொண்டே வந்து ஞானத்தைப் பார்த்தான். அவள் கை பருவத்தின் வளைவு குழைவுடன் சரிந்து நிலவில் தோய்ந்தது மாதிரி பளபளத்தது. கழுத்தில் எவ்வளவு உறுதி! வளைந்து வழிந்த தோள்கள். தலையில் கட்டுக்கடங்காத மயிர் அமுத்திச் சீவிச் சேர்க்கப்பட்டிருந்தது.

“இதென்ன பேச்சுடா, கவைக்குதவாத பேச்சு! நம்ம தேசத்துலே இதெல்லாம் நடக்கிற சேதியா? பதிதான் தெய்வம் நமக்கு. தலையெழுத்தை எப்படி மாத்தறது?”

“இப்படித் தலையெழுத்து காலெழுத்துன்னு சொல்லிச் சொல்லித்தான் மண்ணை வாரிப் போட்டுக்கறோம்.”

“சரி, கொஞ்சம் காபி சாப்பிடுடீம்மா” என்று சங்கரி எழுந்து அடுப்பண்டை போனாள். தன்னை அறியாமல் ஞானம் திரும்பிப் பார்த்தாள். அவன் உதட்டில் புன்னகை, ஒரு கருணைப் புன்னகை, தவழ்ந்தது.

“நான் காபியே சாப்பிடறதில்லையே!”

“அதியசமாயிருக்கே! காபி சாப்பிடறதில்லையா?”

“காபியாவது! அரிசியை நித்யம் ஒழுங்கா வாங்கிப்போட்டா போராதா? பாதி நாளைக்கு ஒருவேளைப் பழையது கிடைச்சாப் போரும்னு இருக்கு . . . மாமி, நான் என்ன என்னமோ சொல்றேன்னு நினைச்சுக்காதிங்கோ. வாயைத் திறக்காம பொறுத்துண்டுதான் இருக்கேன். உங்களைப் பாத்தாச் சொல்லணும் போலத் தோணறது.”

“சொன்னா என்னடிம்மா? நானும் உன் தாயார்னுதான் நினைச்சுக்கோ. இந்தா, இதைச் சாப்பிடு.”

அவள் காபியைச் சாப்பிட்டுவிட்டு, “மணி எட்டடிக்கப்போறது; நான் வரேன்” என்று கிளம்பினாள்.

“நித்யம் சயங்காலமா இப்படி வாயேன்.”

“அம்மாடி! நித்யமா! உங்காத்துக்கு வரது தெரிஞ்சாலே என் எலும்பு நொறுங்கிவிடும்.”

“ஏனாம்?”

“நான் எங்கேயும் போகப்படாது. யாரோடேயும் பேசப்படாதுன்னு உத்தரவு. குடியிருக்கிறவாளோடு பேசலாம். போனா முதலாளியாத்துக்குப் போகலாம். அதுக்கப்புறம் அநுமதி கிடையாது.”

அவன் சிரித்துக்கொண்டே சொன்னான், “நீ கெட்டிக்காரியா இருந்தா இங்கே வர வழி பண்ணிக்கமாட்டியா? அவன் சொன்னதைச் சிவனேன்னு கேட்டிண்டு பொறுத்துக்கொண்டிருந்தா ஏன் தடை சொல்றான்? கொஞ்சம் பிரியமா இருக்காப்போலே காட்டிண்டா, தானே சரிங்கறான்.”

அவள் சங்கரியம்மாளைப் பார்த்துப் புன்னகை பூத்தாள்.

“நான் வரேன்.”

“சரி” என்ற சமையலுக்குள்ளிருந்தே விடை கொடுத்துவிட்டாள் அவள்.

கூடத்தைக் கடந்து வாசலுக்குப் போகும் பொழுது அவன் கண்கள் தொடர்வதை அவளுடைய கடைக்கண் உணர்ந்ததுமட்டும் அல்ல; அவளுடைய கை கால் மேனி முழுவதும் உணர்ந்து புல்லரித்தது.

வாசலில் இறங்கியபோது திரும்பிப் பார்க்கத் துடித்தவள் தைரியம் இல்லாமல் அப்படியே படி இறங்கினாள்.

“இந்தப் புருஷர்களுக்கு என்ன தைரியம்!” என்று வியந்தாள். அவனுடைய ஒவ்வொரு பேச்சையும் சுவைத்துக்கொண்டே போனாள். அவன் என்னவோ நிறையப் பேசிவிட்டது போலத் தோன்றிற்று. இரண்டு மாதமாகத்தான் அவள் கண்ணில் பட்டுக்கொண்டிருக்கிறான் அவன். ஆனால் தேறிவிட்டு, கலெக்டர் பரீக்ஷைக்குப் படிக்கிறானாம்.

போன வருஷம் கல்யாணமாகி அவள் மதுரையிலிருந்து வந்ததும்

நான்கு மாதம் வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்தாள். பிறகுதான் ஆற்றுக்குக் குளிக்கப் போக அநுமதி கொடுத்தான் கிழவன்; அதுவும் குடியிருக்கிறவர்களின் துணையோடுதான். ஆனால் அவர்களுடைய நேரம் அவளுக்கு ஒத்து வரவில்லை. தனியாகவே போய்க்கொண்டிருந்தாள். இந்த வருஷந்தான் ஆற்றுப்பாதையில் தவறாமல் 'அவன்' அவளைக் கடந்து போய்க்கொண்டிருந்ததைப் பார்த்தாள். நாள் தவறாமல் அவன் கடந்து போய்க்கொண்டிருப்பான். பதினைந்து நாளைக்கு முன் திடீரென்று என்றும் இல்லாத ஒரு பார்வை பார்த்தான். அந்தப் பார்வை கண்ணையும் கடந்து உள்ளே எதையோ தேடுவதுபோலப் பார்த்தது. திரும்பி வந்தபோது அவன் இரும்புக் கிராதி அடைத்த திண்ணைக்குள் முடமுடவென்று வேஷ்டியைக் கட்டி நீலக் காலர் பனியன் அணிந்து, தலையை இழையச் சீவி, மழையில் நனைந்து காலில் வெயிலில் புதுமைபூத்து மின்னும் செடி மாதிரி நின்று, அவளைப் பார்த்து உதடசையாமல் புன்னகை புரிந்தான்.

மறுநாள் ஆற்றங்கரைப் பாதையில் அவள் எதிர்பார்த்தவாறே, சொல்லிவைத்தாற்போல அவன் குளித்து ஈர வேஷ்டியுடன் எதிரே வருவது தெரிந்தது. அவனைக் கடந்தபோது அவனைப்போல மெல்ல நடக்க முடியவில்லை அவளுக்கு. எதிலிருந்தோ தப்பி ஓடுவது போல் காலை வீசிப்போட்டு விறுவிறுவென்று கடந்தாள். நெஞ்சில் படபடப்பு நிற்கச் சற்று நேரம் பிடித்தது. திரும்பி வருகையில் அரசமரத்தருகே வரும்போது நெஞ்சு ஏக்கம் பிடித்து அலைந்தது. அழுகை வந்து விட்டது.

"பாழுங்கிணத்துலே விழுந்தாச்சு. எட்டாத கோட்டையெல்லாம் பார்த்து ஏங்கவேண்டியிருக்கே" என்று விநாயகரைப் பார்த்து ஒரு கணம் அழுது நகர்ந்தாள். சோறுகூட அவளுக்குச் சரியாக வேண்டியிருக்கவில்லை.

முந்தாநாள் காலை, ஆற்றுப்பாதையில் அவன் மட்டும் வந்து கொண்டிருந்தான். வேறு ஈ காக்கை இல்லை. அவளைக் கடந்த போது, "இப்படியே போயிண்டிருக்க வேண்டியதுதானா?" என்று கேட்டுக்கொண்டே அவளைப் பாராமலேயே நடந்தான். காலே இற்றுவிட்டாற்போல் இருந்தது. மார்பு துடிக்க நெஞ்சு நிறைந்து வழிந்தது. ஆற்றில் இறங்கி, தண்ணீரைக் குழந்தை மாதிரி அடித்து அடித்துக் குளித்தாள்.

இரவு தூக்கம் பிடிக்கவில்லை. பதினைந்து நாளாகவே சுமாரான தூக்கந்தான். அன்று கொஞ்ச நஞ்சம் வரும் தூக்கமும் வரவில்லை. "இப்படியே போயிண்டிருக்க வேண்டியதுதானோ" என்று அவளே கேட்க

விரும்பியதுதானே? அவன் ஆண்பிள்ளை, கேட்டு விட்டான்.

மறுநாள் காலையில் அவன் அக்கா குளித்துக்கொண்டிருந்தாள். அவளிடம் தானாகப் பேச்சுக் கொடுத்தாள் ஞானம்.

“மாமி, கொஞ்சம் அந்தக் கல்லில் தோச்சுக் கட்டுமா?”

“பேஷாத் தோச்சுக்கோயேன்” என்று புடைவையை எடுத்துக் கொண்டாள் சங்கரி.

“ஜலம் நல்ல தெளிவாப் போறது; இல்லையா மாமி?”

“எப்படிப்போனால் என்ன? காவேரி அம்மன் காவேரி அம்மன்தான். அவள் உடம்பிலே பட்டால் போராதா?

குளித்துக் கரை எறினபோது, அவளோடு சேர்ந்துகொண்டாள் ஞானம்.

“நீ யாரும்மா? எங்கே இருக்கே?”

“நீங்க இருக்கிற தெருவிலேதான் மாமி இருக்கேன்.”

“உன் புருஷன் என்ன செய்யறார்?”

“ஹோட்டல்லே வேலை செய்யறார்.”

“யாரு?”

“ஒரு சின்னப் பிள்ளை மாமி. ஐம்பது வயசு இருக்கும்!”

“இளையாளா வாழ்க்கைப்பட்டிருக்கிறயா?”

“ஆமாம்.”

“எந்த ஊர் உனக்கு?”

“மதுரை.”

“சரிதான்” என்று அவளை முன்னே விட்டு, சங்கரியம்மாள் அவளை உச்சி முதல் உள்ளங்கால்வரை பார்த்துக்கொண்டே வந்தாள்.

“குத்து விளக்கு மாதிரி பளிச்சுனு இருக்கியேடீம்மா. சின்னப் பிள்ளையாப் பாத்துக் கொடுக்க முடியலியா, உன்னைப் பெத்தவாளுக்கு? . . . ம், அவாவா கொடுத்து வச்சுது. இளையாளா வாழ்க்கைப்பட்டாச் சுகமில்லேன்னு சொல்ல முடியாது – ”

“ம். ரொம்ப சுகமாகத்தான் இருக்கேன். சுகத்துக்கு என்ன குறைச்சல்?”

ஆற்றங்கரைப் பாதை முடிந்து தெருவந்ததும் பேச்சை மாற்றிவிட்டாள் ஞானம். சங்கரியம்மாள் வீட்டுவாசல் வந்ததும், “வாயேன்; உள்ளே வந்து வெத்திலை சீவல் வாங்கிண்டு போகலாம்” என்று கூப்பிட்டாள். வாசலில் அவன் நின்றுகொண்டிருந்தான். உள்ளே போய் அவசர அவசரமாகக் குங்குமத்தை இட்டுக்கொண்டு வெற்றிலை சீவலை வாங்கிக்கொண்டு கிளம்பினாள்.

“நாளைக் காலமே வாயேன். வெள்ளிக்கிழமை; வெத்திலை சீவல் வாங்கிண்டு போகலாம்” என்றாள் சங்கரி.

“ஆகட்டும்” என்று பரக்கப் பரக்க நடையைக் கட்டினாள் ஞானம்.

அன்று காலை போவதாக இருந்தாள் அவள். ஆனால் கிழவன் அவள் வாயில் மண்ணைப் போட்டுவிட்டான். இருள் பிரிவதற்கு முன்னாலேயே ஹோட்டலுக்கு எழுந்து செல்லுகிறவன் அன்று காலை ஒன்பது மணி வரையில் தலைபாரமாக இருக்கிறது என்று படுத்துவிட்டான். தலைவலியாவது, மண்ணாவது! ஒன்றும் இல்லை. இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை ஏதாவது அழிம்பு வந்துவிடும் அவனுக்கு. வயிற்றுப் புரட்டல், உடம்பு வலி எனறு ஏதாவது சொல்லிக்கொண்டு படுத்துவிடுவான். அப்பொழுதெல்லாம் பாயில் அவனுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்திருக்க வேண்டும். எழுந்துபேய்ச் சமைக்கக்கூட விடமாட்டான். அறையை விட்டு வெளியேறக்கூடாது. பகல் பொழுதில்கூட நாலு குடித்தனம் குடியிருக்கிற வீட்டில் கதவைச் சாத்திக்கொண்டு புருஷனும் பெண்ஜாதியும் உட்கார்ந்திருந்தால் என்ன விகாரம்! அது மாதிரி ஆறுநாள் ஒரு தடவை உட்கார்ந்திருந்தாள் அவள்.

“வயத்தை வலிக்கிறதுங்கேறன். மேலே கூடப் படாம, என்னமோ முள்ளம்பன்னிகிட்ட உட்கார்ந்திருக்கிற மாதிரி ஒதுங்கி ஒதுங்கிப் போறயே, என்ன?” என்றான் அவன்.

“எல்லாம் இது போரும்“ என்ற அருவருப்பை யோஜனையில்லாமல் கொட்டிவிட்டாள். அவ்வளவுதான், அப்படியே கழுத்தை நெறித்து விட்டான் அவன். ஒரு வாரமாயிற்று அவளுக்குக் கழுத்துச் சுளுக்கு நிமிர.

“இப்படி வெறுமே வேலைக்குப் போகாம அடம் பண்ணிண்டு படுத்திண்டிருப்பாளா? அடுப்பிலே பூனை குடி பூந்துடும்போலிருக்கே”

என்று பசி தாங்காமல் புகைந்தாள் அவள்.

ஒருநாள் முழுவதும் பட்டினி கிடந்து அவளையும் பட்டினி போட்டுவிட்டு ஏழாம் நாள்தான் கடைக்குப் போனான் கிழவன்; அதுவும் முதலாளியிடமிருந்து கடுமையாக வார்த்தை வந்தபிறகு.

அந்த மாதிரி அழிம்புதான் இன்றும் வந்து விட்டதோ என்று அவள் பயந்தாள். நல்லவேளையாக உச்சி வேளைக்குக் குளித்துவிட்டுக் கடைக்குப் போய்விட்டான்.

அந்தி மயங்கியதும் ஆவலாகத் தலையைச் சீவிப் பின்னி முகத்தை அலம்பிக்கொண்டாள். அப்போதுதான் வந்து அடித்து நொறுக்கிவிட்டுப் போய்விட்டான் அவன்.

சங்கரியம்மாள் கொடுத்த வெற்றிலை சீவலை அலமாரியில் வைத்துவிட்டு, விளக்கைப் பெரிது பண்ணிச் சாப்பிட்டுவிட்டுப் படுக்கையைப் போட்டாள் ஞானம். இதுவும் அவன் ஆக்ஞைகளில் ஒன்றுதான். இரவு ஒன்பது ஒன்பதரை மணிக்கு அவன் வருவான். அவனுக்கு ஹோட்டலிலேயே இரண்டு வேளைச் சாப்பாடும். அவன் வரும்போது படுக்கையைப் போட்டுத் தயாராயிருக்க வேண்டும்.

படுக்கையில் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டாள் அவள். நீலக்காலர் பனியனும் நீள மூக்கும் வலது வகிடு கிராப்பும் புன்சிரிப்பும் தேடும் விழியும் அவள் முன் எழுந்தன. ஆனர்ஸ் முடித்தவன், கலெக்டர் பரீக்ஷைக்குப் படிப்பவன். ஓங்கி வளர்ந்து ஆற்றுநீரில் வளைந்து முத்தமிடும் ஆலங்கிளையில், மிதந்துவரும் கருவேலம்பூச் சிக்கியதுபோலிருந்தது அவளுக்கு.

'அந்த வீட்டுக்குப் போகிறது தெரிந்தால்?'

"கொஞ்சம் பிரியமா இருக்காப்போலக் காட்டிண்டாதானே சரிங்கறான்!"

"இந்தக் கிழத்திடமா பிரியமாகப் பேச முடியும்? இந்தச் சிடுமூஞ்சியிடமா? அறுபது நாழிகையும் எள்ளும் கொள்ளும் வெடிக்கும் இந்தக் கடுவன் பூனையிடமா? எப்படி அன்பைக் காட்டுகிறது?"

"கொஞ்சம் பிரியமாயிருக்காப்போலக் காட்டிண்டா, தானே சரிங்கறான்."

"ஈச்வரா?"

"என்னடி ஈச்வரனைக் கூப்பிடறே?" குரல் கேட்டது. அவள் வாரிச்

சுருட்டிக்கொண்டு எழுந்திருந்தாள்.

"ஈச்வரனைக் கூப்பிடாம நான் வேறு யாரைக் கூப்பிடப்போறேன்? எனக்கு யார் இருக்கா?" என்று பதில் கேள்வியைப் போடப் போனவள் அதை அடக்கிக்கொண்டு, "மணி பத்திருக்கும்போலிருக்கே; இன்னும் வரக்காணுமேன்னு பாத்துண்டிருந்தேன். ஒண்டியா எத்தனை நாழி இருக்கிறது?" என்றாள்.

"ஹூம், அப்புறம்!" என்று நையாண்டி செய்தான் அவன்.

"உங்களுக்கு எப்பவும் கேலிதான். ஏன் இத்தனை நாழியாம்?"

"நாளைக்குக் கடையடைப்பாச்சே. சனிக்கிழமைன்னா! நாளன்னி ஸ்வீட்டெல்லாம் போட்டு வச்சுட்டு வந்தேன்.'

"எதுக்காக இத்தனை நாழி வேலை வாங்கறான்? இதுக்குத் தனிக்கூலி உண்டா?"

"தனிக்கூலி கேட்டாச் சீட்டைக் கிழிச்சுப்பிடுவன்."

"அவன் வாழ்ந்தான்! கொஞ்சம் மோர் சாப்பிடலாமா?"

"இப்ப எதுக்கு மோரு?"

"நல்ல மோராயிருக்கு."

"சரி சாப்பிடறேன்"

மோரைக் குடித்தான் நரசிம்மன்.

"சரியாச் சாப்பிடலையா என்ன? இன்னிக்கி?"

"ஏன்?"

"மூஞ்சியெல்லாம் வாடினாப்போல இருக்கே!"

"அதெல்லாம் ஒண்ணும் இல்லே. கையிலே தணல் விழுந்தது. விரல்லே நன்னாச் சுட்டுது" என்ற வலது கை ஆள்காட்டி விரலை நீட்டினான் அவன்.

"அப்பா! எரிச்சலா எரியறது!"

ஆள்காட்டியில் துணி சுற்றியிருந்தது.

"பெரிய கட்டாக் கட்டியிருக்கே. மருந்து போட்டேளா?"

"தேங்காயெண்ணெய் போட்டுக் கட்டியிருக்கேன்."

"பிரிச்சுப் பார்க்கிறேனே."

"அதுதான் கட்டியிருக்கேனே. இப்ப ஏன் பிரிக்கறே அதை?"

"பாக்கறேனே" என்று பிரித்தாள் அவள். முக்கால் அங்குல நீளத்திற்கு நெருப்புச் சுட்டுத் தோல் வழன்றிருந்தது.

"இதோ வந்துட்டேன்" என்று கதவைத் திறந்துகொண்டு வெளியே போய் வாத்தியார் மனைவியை எழுப்பி ஆயிண்ட்மெண்ட் டப்பாவை வாங்கி வந்தாள்.

"கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்கப்படாதா?" என்று கடிந்து கொண்டே மருந்தைத் தடவினாள்.

"ஸ். மெள்ள மெள்ள, அப்பா!"

"போடறபோது எரியாதா? இதுக்கு ஒரு ஆட்டமா . . . ம். ஆச்சு" என்று டப்பாவை மூடினாள்.

"இப்படிக்கொடேன்" என்று அவன் அதைப் பிடுங்கித் திறந்து அவளுடைய நெற்றியில் இருந்த துணியை எடுத்து அந்தக் காயத்தில் பூச்சைத் தடவினான்.

"எனக்குந்தான் எரியறது; நான் உங்களைப்போல உஸ் உஸ்னு குதிக்கிறேனா பார்த்தேனா?"

"நீ பூமாதேவி. பொறுத்துக்கறே . . . ரொம்ப அடிச்சுட்டேனா?"

அவள் தலைகுனிந்து பேசாமல் இருந்தாள்.

"இந்த மாதிரி குளுமையாக நீ ஒரு வார்த்தை பேசிவிட்டால் நான் மனுஷனாக இருக்க மாட்டேனா?" என்றான் அவன். அவள் நிமிர்ந்து அந்தப் பரிவைப் பருகினாள்.

"இனிமே ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசமாட்டேன். உங்களை விட்டா எனக்கு யார் இருக்கா?" என்று அவனுடைய தோள் இரண்டையும் பிடித்துக் குனிந்து மார்பில் புதைந்தாள் அவள்.

"சரி சரி; எழுந்திரு அசடு!"

"நீங்க ஏன் இப்படி வேர்க்க வேர்க்க மாடாக உழைக்கணும்?

மென்டேஷன் படிச்சவா இந்த வேலைக்குத்தானா போகணும்?”

“என்னது? என்ன படிச்சுட்டு?”

“ஆமாம். என்னை இப்பப் பரிகாசம் பண்ண வேண்டாம்.”

“மெட்ரிகுலேஷன் என்று சொல்லு.”

“சரி, இந்த வேலைக்கு ஏன் வந்தேள்.”

“நான் இந்த வேலைக்கு வல்லே. இஞ்சினீர் ஆபீஸ் நூறு ரூபாய் படியளந்திண்டிருந்தது. ஏதோ ஒருநாளைக்கு எழுத்திலே தவறிப்போச்சு. உனக்கு மூளைகீளை இருக்காய்யா, கூஸ்னு கேட்டான் மானேஜர், வாளிப்பயல். ‘என்ன சொன்னே’ன்னு மைக்கூட்டை எடுத்து அவன் மேலே வீசினேன். ரகளை நடந்தது. வேலை போயிட்டது எனக்கு. அப்புறம் எங்கெல்லாமோ சுத்தினேன். நெல்லு முக்கால் ரூபாய்க்குச் சிரிப்பாகச் சிரித்த காலம். வேலை கிடைக்கல்லெ. கால் ஓஞ்சுது. வயசும் முப்பது தாண்டிவிட்டது. பேசாமல் ஹோட்டலுக்குள் நுழைந்து விட்டேன். இந்த வேலை என்ன மட்டமா? உடம்புக்கு நல்ல வேலை. இப்ப ஒண்டியாய் நாலுபேரை அடிக்கச் சொன்னால் அடிப்பேன். இந்த முண்டாவைப் பார்!” என்று கையை மடக்கினான் அவன். அவள் இரும்பாக உருண்டு திரண்டிருந்த அந்தப் புஜத்தை அமுக்க முடியாமல் அமுக்கினாள்.

“எங்கே அமுக்கு, பார்ப்போம் . . . இந்த வேலையிலே என்ன குறைச்சல்? இன்னும் இருபது வருஷத்துக்கு இதே போக்கிலே வண்டி ஓடும். துறையூர்ச் சின்னப் பண்ணை வம்சத்துக்கிளை இந்தக் கட்டை. ஆற அடிக்குக் குறைந்த ஆளே இந்த வம்சத்தில் பிறந்ததில்லை.”

“இவ்வளவு பெரிய வம்சத்து அடியை நான் தாங்க முடியுமா?” என்று அந்தக் கைமீது சாய்ந்துகொண்டாள் அவள், மலைப்பாம்பின் மீது புரள்கிற மாதிரி.

“பாலாகப் பொழியறையே இன்னிக்கி! எனக்கு ஒண்ணும் புரியலியே.”

அவள் பேசவில்லை. எங்கேயோ அற்புத லோகத்தில் புகுந்துவிட்டது போல் இருந்தது.

“இதோ கிடக்கிறேன். உன் கால் தூசி. மலர்ந்து ஒரு பார்வை பாரு.”

அவன் தூங்கியபொழுது மூன்று மணி ஆகிவிட்டது. வேற்று ஊருக்குப்

போய்த் தங்கிய இரவு மாதிரி, அவளுக்குத் தூக்கம் வரவில்லை.

தேக்கு மரத்தைப்போல அறையை நிறைத்துப் படுத்து அவன் உறங்கிக் கொண்டிருந்தான். வலுவின் வடிவமாக, வனப்பின் வடிவமாக, வைரம் பாய்ந்த அந்த உடல் மெல்லிய மூச்சொலி இசைய விரிந்து சுருங்கிக் கொண்டிருந்தது.

புழுக்கம் உடலை வறுத்தெடுத்தது. விசிறியை எடுத்து அவன்மீது விசிறிக்கொண்டே இருந்தாள் அவள்.

"நீ தூங்கலையா?" என்று விழித்தக் கொண்டு அவன் கேட்டான். "விடிஞ்சுபோயிட்டாப் போல இருக்கே" என்று மேலே பார்த்தான். ஓட்டுக் கூரையில் ஒளிக் கண்ணாடியில் காலையின் வெண்மை படர்ந்திருந்தது.

"நீ தூங்கலை? முழிச்சுண்டுடேயா உட்கார்ந்திருக்கே?"

அவள் எழுந்து வகிடு தரையில் பட அவனை வணங்கினாள். "போட்டதுதானே முளைக்கும்? வெறுப்புப் போட்டால் வெறுப்பு முளைக்கிறது; வேறு போட்டால் வேறு முளைக்கிறது. நான் ஒன்றும் தெரியாத மூடமாக இருக்கேன். என்னைக் கோவிச்சுக்காம இருக்கணும்."

அவளுடைய கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சொன்னான் அவன்: "உன்னைவிடத் தெரிஞ்சவ ஒருத்தி இருக்க முடியுமா என்ன? . . . சரி, கொஞ்ச நேரம் படுத்தத் தூங்கு. தோண்டியைத் தூக்கிண்டு காவேரிக்குக் கிளம்பிட வேண்டாம்; என்ன?"

"காவேரிக்கா? கண்ணெல்லாம் ஜிவுஜிவுங்கறது. இப்படியே காவேரியில் அமுங்கினால் சரி, ஜலதோஷமும் ஜுரமும் எங்கே எங்கேன்னு காத்திண்டிருக்கும். வெந்நீருக்கா பஞ்சம்? உடம்பெல்லாம் வலிக்கிறது."

"அப்ப நான் போய்க் காவேரிலே குளிச்சுட்டு வரேன்."

அவளுக்குக் காவேரியின் நினைவே இல்லை. அவன்தான் போனான். அரசமரத்துப் பிள்ளையாருக்கு முன் ஈரவேஷ்டியுடன் அவனைக் கடந்து வந்த பையன் யாரென்று அவனுக்குத் தெரியவில்லை.

கலைமகள், மே 1951

# குளிர் ஜுரம்

நெருப்புத் துண்டத்தைப்போல அந்த வெறும் ‘வணக்கம்’ கனிந்துகொண்டிருந்தது. ஆசிரியருக்கு அவ்வளவு கோபம். இல்லாவிட்டால், ‘அன்பார்ந்த, மதிப்பிற்குரிய ஸ்ரீ குலாலன் அவர்களுக்கு,’ என்று வழக்கம் போல ராஜோபசாரம் செய்திருப்பார். ஆனால் இப்போது, கடைசி நிமிஷத்தில் உயிரை வாங்குகிறானே என்று அவர் வயிறு எரிந்தது. ‘ஸ்வாமி பதினைந்து நாள் முன்னமேயே இதை வேண்டும் என்று தங்களுக்கு அறிவிப்புக் கொடுத்து விட்டோம். தாங்களும் இரண்டு நாளில் அனுப்புவதாகப் பிரமாணம் செய்யாத குறையாக எழுதியிருந்தீர்கள். போன வாரக் கடிதத்திலும் அதையே குறிப்பிட்டிருந்தீர்கள். இன்னும் தங்கள் கதைக்குச் சாதக பக்ஷியாகத் துடித்துக் கொண்டிருக்கிறோம். தங்கள் உடல் நலமா? . . . இனியும் எங்களைச் சோதனைக்குள்ளாக்காமல் உடனே கதையை அனுப்பி வைக்க வேண்டும். உங்கள் பெயரைப் போட்டு விளம்பரப் படுத்திவிட்டோம். அதற்காகத் தாங்கள் இப்படித் தண்டிப்பது முறையல்ல.” ஆசிரியரின் கடிதம் இது.

“ஆசிரியரே, உம்முடைய மனத்தின் வேகத்தில் பத்தில் ஒரு பங்கு எனக்கு இல்லையே! இருந்தால் இந்த ஜுரத்தைக் கூட லக்ஷ்யம் பண்ணாமல் இருபது கதை எழுதித் தள்ளியிருப்பேன்” என்று இரண்டு வரி எழுதிப்போடலாமா என்று குலாலன் கை துடித்தது. ‘இந்த ஜுரத்தைக்கூட லக்ஷ்யம் பண்ணாமல்’ என்பது அவருக்குப் பழக்கமாக ஏற்பட்ட வியாதி. தாலூகா கஜானா ஆபீசிற்கு அவர் லீவு எழுதிப் போடும் தோரணை அது.

இந்தச் செப்பிடு வித்தையைச் சற்று அளவு மீறிச் செய்துவிட்டதன் விளைவுதானோ இந்தக் கடிதம் என்று அவருக்கு ஒரு சங்கை உண்டாயிற்று. பதினைந்து நாள் முன் அழைப்பு வந்த போது, “நான்கு நாட்களாகக் கடும் ஜுரம். நாளை மறுநாள் தலைக்கு ஜலம் விட்டுக் கொண்டு விடுவேன். நாலாவது நாள், அல்லது அதிகபட்சம் அதற்கு மறுநாள் தபாலில் கதை உங்கள் கைக்கு வந்துவிடும்.” என்று பவ்யமாகவும் உத்தரவாதமாகவும் எழுதிவிட்டார். சென்ற வாரம் நினைவுறுத்தும் ஒரு கடிதம் வந்தது. அன்றுதான் அவர் படுக்கையை விட்டு எழுந்து தலைக்கு ஜலம் போட்டுக் கொண்டார்! ஸ்நானம் செய்த

களைப்பு இருப்பது இயற்கைதானே?

குலாலன் சிரித்துக்கொண்டார். அவருக்குத் திடீரென்று இந்த ஜுரத்திற்குப் புது அர்த்தம் ஒன்று உதயமாயிற்று. ஜுரம் என்றால், கையைக் காலை நடுக்கிப் படுக்கவிடும் ஜுரம் அல்ல. "ஐயோ எழுதச் சொல்லிவிட்டார்களே!" என்ற அதிர்ச்சிதான். பீதிதான், ஜுரம்.

"ஸ்வாமி . . . " என்று மேஜையில் கனிகிற கொள்ளித் துண்டம் அவருடைய மயக்கத்தைக் கலைத்து மீண்டும் வயிற்றைக் கலக்கியது.

"இந்தக் கடிதத்தை இந்தச் செவிட்டுச் சிரஸ்தேதார் பார்க்க வேண்டுமே. கெஜட் பதிவில்லாத, கெஜட் பதிவுள்ள எல்லா அதிகாரிகளுக்கும் எவ்வளவோ படிக்குமேல் உட்கார்ந்துள்ள ஆசிரியர், மாதம் பதினாயிரம் வாங்கும் ஜனதிபதி கூட என்ன எங்கே என்று மாதம் பிறந்ததும் வாங்கும் பத்திரிகையின் ஆசிரியர், நம்மிடம் இப்படிக் குலாம் போடுகிறார். பெற்றெடுத்தவனைவிட ஸ்வாதீனமாகக் கோபித்துக் கொள்ளுகிறார். இந்தக் கடிதத்தைச் சிரஸ்தேதார் பார்க்க வேண்டாமா? அன்று 'மாயூரம்' என்பதற்குப் பதிலாக 'மாயவரம்' என்று போட்டதற்காகச் சன்னதம் வந்தவன் போல ஆடினானே, அந்தச் சின்ன மனிதன். அவன் இந்தக் கடுதாசியைப் பார்க்க வேண்டாமா?" என்று ஜயபேரிகை கொட்டிக் கொண்டார் குலாலன்.

"பதினைந்து நாள் முன்னமேயே . . . "

"ஓய் ஆசிரியரே, பதினைந்து நாள் இராப் பகலாக உம் ஞாபகந்தான் எனக்கு. கம்சனுக்குக் கிருஷ்ண கிலி பிடித்தாற் போலச் சுற்றிச் சுற்றி ஆடுகிறேன். ஆசிரியரே. நீர் வந்து பாருமே என் அவஸ்தையை! பதினைந்து நாள் நோட்டீஸ் என்கிறீரே, பதினைந்து நாள் என்றால் என்ன அர்த்தம்? பதினைந்து பகல்; பதினைந்து இரவு. அதுதானே? ஒரு நாளைக்கு அறுபது நாழிகையாக இருக்கக்கூடாதா என்று நான் தவிக்கிறேன். பல் தேய்த்து, காபி குடித்து, கறிகாய் வாங்கி, குளித்து, சாப்பிட்டு, கஜானாவுக்குப் போய், தாலூகா வருமானங்களைப் பைசாத் தவறாமல் எழுதி, செவிட்டுச் சிரஸ்தேதாருக்கு அதை விளக்கி விட்டு, இரவு ஏழரை மணிக்கு எழுந்து கிளம்பி, சிரஸ்தேதார் பையனுக்காக மேட்டூர் மல்லுக்கும் அவர் வீட்டுக்குமாக வெள்ளைச் சர்க்கரையைக் கறுப்பில் வாங்கவும் அலைந்து வீட்டுக்கு வந்து, சாப்பிட்டு ஆபீஸ் கட்டு மிச்சங்களை ஒரு நோட்டம் விட்டு . . . "

"ஒரு வழி சொல்லட்டுமா? ஒரு கதைக்குப் பத்து ரூபாய்தான் நீர்

தருகிறீர். இனி மேல் முந்நூறு ரூபாய் தருவதாகச் சொல்லும் வேண்டாம், அதில் பாதி போதும். இந்தக் கஜானாவிற்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு நீரே சரணம் என்று விழுந்து கிடந்து வருஷத்துக்குப் பன்னிரண்டு கதை எப்படியாவது எழுதிக் கொடுக்கப் பாடுபடுகிறேன்.

" . . . ஆ! இப்போதல்லவா ஞாபகம் வருகிறது? பதினைந்து நாள் என்கிறீரே. என்ன அர்த்தம்? உமக்கு ஒரு ரகசியம் சொல்ல விரும்புகிறேன். எனக்கு ஒரு கதை எழுத, குறைந்தது ஒன்பது மாதமாகும்; சராசரியாக இரண்டு வருஷமாகும்; ஆனால் மூன்று வருஷத்திற்கு மேல் ஒரு கதைக்கு நான் சிரமப்பட்டது கிடையாது. அது நிச்சயம். பிரமாதமாக ஆச்சரியப்படுகிறீரே, என்ன? இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? 'ம்' மென்றால் முந்நூறு பாட்டு எழுதிய மகான்களும் முப்பது நாவல் எழுதும் பெரியார்களும் இருக்கிற இந்த நாட்டில் 'ம்'மென்று சொல்ல மூன்று வருஷம் பிடிக்கும் எழுத்தாளர் ஒருவர் இருப்பது புதுமையில்லையா?" 'ம்'மென்று சொல்ல மூன்று வருஷம் செலவிட்டிருந்தால். அதற்கு அவர் எவ்வளவு சிந்தனை செலவிட்டிருக்க வேண்டும்? அந்த 'ம்'மில் எவ்வளவு பொருட் செறிவு இருக்கவேண்டும்? அது போகட்டும். நீர் கொடுக்கிற பதினைந்து நாள் தவணையில் 'ம்' என்று சொல்ல நினைப்பதுகூட என்னால் முடியாதே! எனக்கு ஒன்றும் புரியவில்லை. உம்முடைய கடிதமோ பாம்புக் குட்டியைப் போலச் சீறுகிறது. சரி, மணி ஒன்பது அடித்துவிட்டது. கடை திறந்திருக்கும். கதை வாங்கி அனுப்புகிறேன் . . . ஒன்றும் இல்லை. மார்க்கட்டில் ஒரு பெண்மணி தேங்காய் வியாபாரம் செய்கிறாள். மாநிறம். எடுப்பான பெண்பிள்ளை. அவளுடைய வலது கை ஆள் காட்டி நகத்தால் தட்டுப்படாத தேங்காயே இந்த ஜில்லாவில் கிடையாது. அதாவது, லக்ஷக் (தேங்காய்) கணக்கில் கொள்முதல் செய்பவள். இருபத்தைந்து வயசாகிறது. ஆறு வருஷத்திற்கு முன் கணவனை இழந்தும் நித்தியசுமங்கலி என்று விருது பெற்ற வீராங்கனை. அவளைப்பற்றி முந்தாநாள் பரபரப்பான செய்தி கிடைத்திருக்கிறது. அவளுடைய காதலன் ஒருவன் தூக்குப் போட்டுக்கொண்டு இறந்துவிட்டான். செங்கமலம் துரோகம் செய்துவிட்டதுதான் இதற்குக் காரணமாம். அதைப் போய் விசாரித்துக் கதையாக்கித் தருகிறேன். திருப்திதானே?" என்று குலாலன் அந்த நெருப்புத் துண்டத்தினிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்.

பின்பனிக் குளிர் இன்னும் விலகாததால், வெள்ளையாக மாறிக் கொண்டிருந்த வெயில் உடம்புக்கு உணக்கையாக இருந்தது. உலகமே ஜீவகளை ததும்பி விளையாடத் தொடங்கிய நேரம். தெருச் சிறுவர்கள்

ஜண்டையாகக் குளத்துக்குக் குளிக்கப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஓர் அங்காடிக்காரி தளதளவென்று புதுமை செழித்து மின்னும் முளைக்கீரையை மதுரமாகக் கூவிக்கொண்டு வந்தாள். பனி விலகித் தெளிந்த வானத்தின் நீலப்பரப்பும் உயிரூட்டிக் குளிப்பாட்டிய வெயிலும் குலாலனுக்குக் கரை கடந்த நம்பிக்கையையும் உற்சாகத்தையும் அளித்தன. சேடத் தெருவிலிருந்து வந்து உகாரசாதகம் செய்துகொண்டே குப்பையைக் கொத்திய புறாக் கூட்டம் அவரைக் கண்டதும் படபடவென்று சிதறிப் போய் மீண்டும் கூடிக் கொண்டது. தோட்டிகள் தெருவில் கிடந்த வாழைப் பட்டைகளையும் அழுகல் கத்திரிக்காய்களையும் குவித்து உலகத்தையே சுத்தப்படுத்திக் கொண்டிருந்தனர்.

தேங்காய்க் கடை பூட்டிக் கிடந்தது.

குலாலன் விசாரித்தான்.

"அம்மா ஓர் ஆளை முளுங்கிப்பிட்டா! அம்மாவைப் போலீஸ்காரன் முளுங்கப் போறான்." என்று அடுத்த கடை ரத்தினம் சொன்னான்.

"விளங்கச் சொல்லு. ஒண்ணும் புரியலியே?"

"என்ன புரியலே, சாமி? ஊர் முளுக்கப் புளுதியாகப் பரவிக் கிடக்கு சேதி. டேசன் கிட்ட இலுப்பைத் தோப்பிலே தூக்குப் போட்டுக் கிட்டான் கோபாலசாமி!"

"யாரு?"

"அதாங்க. பேரீச்சம்பளம் விப்பானே செல்லையா, ஒசரமா நல்ல குறிப்பா இருப்பானே."

"ஆமா, ஆமாம்?"

"அவன்தான். இவள் பத்தினின்னு நெனச்சுக்கிட்டிருந்தானாம். கடாசியிலே முந்தாநாளு உண்மை விளங்கிடிச்சாம். தூக்கு போட்டிட்டானாம். போக்கத்த பயலுக. சீசீ! கழுதை விட்டுதுன்னு இன்னும் நாலு டன் பேரீச்சம் பளம் கொள்முதல் பண்ணத் துப்பில்லாத பய!"

"இவ எங்கே போயிருக்கா?"

"தூக்கு மாட்டிக்கக் காரணம் கண்டு பிடிக்கணுமே. போலீஸ்காரன் இவளை நாலு மிரட்டு மிரட்டப் போறான். விட்டுடப் போறான். கண்ணை

அப்படிச் சொருகி ஒரு சிரிப்புச் சிரிச்சான்னா, அடியே பரதேவதே, அவராதம்டீ அவராதம்டீன்னு கன்னத்துலே போட்டுக்கிட்டு வண்டி வச்சு வீட்டிலே கொண்ணாந்து விட்டிடப் போறான். இன்னிக்கித் தேங்காயில்லாம சாப்பிடுங்க. நாளைக்கு அம்மா கடை திறந்திருக்கும்; பாத்துக்கலாம்."

குலாலன் அயர்ந்துவிட்டான். "நெஞ்சில் எவ்வளவு வறட்சி எவ்வளவு அசட்டை! உயிரை மதிக்காமல் தொங்குகிறவன் மீது எவ்வளவு அநுதாபம்! இவள் நித்திய சுமங்கலி என்று இறந்தவனுக்குத் தெரியாதா? அப்படித் தெரியாத விஷயமல்லவே அது? அவனுக்கு மட்டும் தெரியவில்லையா? தெரிந்துதான் அவன் நம்பவில்லையா?"

கடைத்தெரு இந்தக் கவலையெல்லாம் படுவதாகவே தெரியவில்லை. என்றும்போல வியாபாரம் பரபரப்பிலாமல் நடந்துகொண்டிருந்தது. முடிவைப் பற்றி எல்லோருக்கும் ஒரு நிச்சயம் இருந்ததால்தான் இவ்வளவு அசிரத்தையோ? செங்கமலம் நாளைக்குத்தான் வெற்றிவாகை சூடி வரப்போகிறாள். இந்த நிகழ்ச்சிக்குப் பின் அவளுடைய போக்கு என்ன என்று அவளைப் பார்த்தால்தானே தெரியும்? மத்தியான்னத் தபாலுக்குத் தயாராகிற கதையா இது? ஸ்திரீயின் உள்ளம்! அதுவும் பௌருஷம் படர்ந்த ஸ்திரீயின் உள்ளம். தோல்வி காணாத அரசியின் உள்ளம். மூன்று யுகச் சிந்தனையில் தோய்ந்து உருப்பெற வேண்டிய விஷயம் என்று குலாலனுக்குத் தீர்மானமாகப் பட்டுவிட்டது. மேலே நடந்தார்.

கோவிந்து ஹோட்டல் வாசல் நெய் மணத்தது. கரிமண்டிய அந்த ஜன்னலிலிருந்து வரும் நெய் மணம் யாரைத்தான் தடுத்து ஆட்கொள்ளாது?

"ஏய் வேம்பு, முறுகலா ஒரு ரவா தோசை. நெய்யிலே ஏய்! ஸ்தாவர நெய்யில்லே; ஜங்கம நெய்! ஞாபகம் இருக்கட்டும்" என்று ஆர்டர் கொடுத்துவிட்டுக் கிணற்றண்டை போனார்.

அவர் கையலம்பிக் கொப்புளித்து நாக்கைத் தீட்டிக் கொண்டு மேஜைமுன் உட்கார்வதற்குள் ரவா தோசை, மொர மொர வென்று நெய் கசிய அமிர்தமே வடிவாக வந்துவிட்டது.

"சட்னியா, சாம்பாரா அண்ணா?"

"ஏய் பாவி, அதிருக்கட்டும். அதுக்குள்ளே என்னமாடா தோசை கொண்டுவந்தே? காலமே போட்டு வச்சிருந்ததை அப்படியே கல்லிலே போட்டு எடுத்துண்டு வந்துட்டியா?"

“அண்ணா, ஒரு விள்ளல் வாயிலே போட்டுப் பாருங்கோ. வேம்பு அப்பேர்ப்பட்ட கிராதகனான்னு தானே தெரியறது?”

“ஏய் நீ கிராதகன் தாண்டா, யமப் பயல்” என்று முறுகலை ஒடித்தார் குலாலன்.

“யமப்பயலா? அவன் அழிக்கிறவனாச்சே. பிரம்மான்னு சொல்லுங் கோண்ணா. அந்தப் பிரம்மாதான் இப்படித் தோசை கிருஷ்டிக்க முடியுமோ?”

“ஏய் நீ ஒரு மணிக்கு எத்தனை தோசை இப்படிப் போடுவே?”

“சுக்காக் காஞ்ச சவுக்க விறகு, நாலடிக்கு மூணடி தோசைக் கல்லு— ரெண்டும் கொடுத்துட்டா மணிக்கு ஆயிரம் தோசை!”

“ஆயிரம் தோசையா, அட பாவி!”

“ஆயிரம்னா எண்ணிக்கணும்”

“ஏய், பிசாசு ஆயிரக்கால் மண்டபம் கட்டறாப் போலிருக்கே. ஏய் காளமேகன்னு ஒரு கவியிருந்தானே, கேள்விப்பட்டிருக்கியோ?”

“பார்த்தே இருக்கேன்!”

“என்னது!”

“போன மாசம் ஓடித்தே யமுனாவிலே – செகண்ட் வீக்கிலே.”

“அவன் தாண்டா நீ.”

“என் தோசையை வாயிலே போட்டவுடனே அடி நாக்குச் சப்புக் கொட்டுமே. யோசிக்க வாண்டாமே. அர்த்தம் பண்ண வாண்டாமே. என்ன சொல்றேள்?”

“ஏய் வேலைக்காரா, காளமேகத்தை விடவா நீ ஒஸ்தி?”

“அது என்னமோ நீங்கன்னா சொல்லணும்.” என்று அடுத்த ஆர்டருக்குத் தோசை போட உள்ளே போய்விட்டான் வேம்பு.

சில்லறை கொடுத்துத் தெருவிற்கு வந்ததும் அவர் மனம் எங்கும் ஒண்டாமல் அலைந்தது. பைத்தியம் பிடித்தாற்போல நடந்து வந்தார். லோகல் பண்டு ஆஸ்பத்திரி வாசலில் திடீரென்று ஒரு குரல் கேட்டது.

“ரைட்டர் ஸார், இப்படி வாங்க, ஏ ஒன்னா ஒரு கதை காத்துக்கிடக்கு

உங்களுக்கு. பராமுகமாப் போறீங்களே.”

அசரீரியாக வந்த குரல் தெய்வத்தின் குரலோ!

“என்ன டாக்டர்” என்று உள்ளே சென்றார் அவர்.

“உட்காருங்க ஸார். இவனைப் பாருங்க. ஏலே நான் கேட்ட கேள்விக்கெல்லாம் மறுபடியும் பதில் சொல்லணும். மறைச்சயோ, பெரட்டி எடுத்துவிடுவேன்” என்று டாக்டர் அதட்டல் போட்டார்.

எதிரே ஒரு நடைப் பிணம் நின்றுகொண்டிருந்தது. சதையின் வாடையே அற்றுப் போன எலும்பும் தோலும். தேகம் முழுவதும் அடை அடையாகச் சொறி.

“இவனுக்கு எத்தனை வயசு ஸார் இருக்கும்?”

“முப்பத்தைந்து இருக்கும்.”

“என்னடா வயசு உனக்கு?”

“இருபத்திரண்டுங்க”

“பாருங்க ஸார். உடம்பு அவ்வளவு இளமையாகக் காட்டுது. உம் பேர் என்ன?”

“சுந்தர முதலி.”

“ஊரு?”

“திண்டுக்கல்லு.”

“உனக்கு அப்பா இருக்கிறாரா?”

“இருக்காரு.”

“என்னா வேலை அவருக்கு?”

“தரகு வேலைங்க.”

“நீ என் இப்படிப் பிச்சை எடுக்கிறே? அப்பன் கிட்டச் சண்டை போட்டுக்கிட்டு வந்திட்டியா?”

நடைப்பிணம் தலை குனிந்து மௌனம் சாதித்தது.

“களுத்திலே என்னாடா?”

“ . . . . . . . . . ”

“இப்பச் சொல்றியா இல்லையா?”

“உத்திராட்சக் கொட்டைங்க.”

“முருக பக்தனா?”

தலை குனிந்து மௌனம்.

“முருகன் எப்படி வச்சிருக்கான், பாத்தியடா உன்னை? ஏன் தெரியுமா? ஒரு துரும்பை எடுத்து அப்பாலே போடாமெ, உலகத்தை ஏமாத்திக்கிட்டுத் திரியுறே பாரு, அதனாலேதான். தெரிஞ்சுதாடாலே? நிக்க முடியலியா? படு படு; வேணும்டாலே உனக்கு. இந்தச் சொறி எப்படிடா வந்திச்சு உனக்கு?”

“ . . . . . . . . . ”

“ஏலே, என்ன தலை குனிஞ்சிட்டு நிக்கறே. செய்யறதையும் செஞ்சிட்டு, வெக்கம் வேறயா உனக்கு? ஏலே, அப்பன், ஆயி, உலகம் எல்லாத்தையும் துறந்தவனுக்கு இது என்னாத்துக்கடா? கலியாணம் பண்ணிக்கத் தான் முருகன் கிட்டப் பாடம் படிச்சியோ? இந்தா பாரு, நாளைக்கு இந்தக் கொட்டைகிட்டை யெல்லாம் அறுத்தெறிஞ்சிட்டு வா. ஆஸ்பத்திரிப் படுக்கையிலே வச்சுக் சொகம் பண்ணி அனுப்பறேன். அனுப்பறேன்னா வெளியிலே அனுப்பிச்சிட மாட்டேன். வேலைக்கு அனுப்பிச்சிடுவேன். ஆமாம். இஷ்டமிருந்துதுன்னா வா. இல்லாட்டா, ஓடிப் போயிடு. ஆம்மாம் . . . அவ்வளவு தான், ஸார். வெரி ஸாரி, நீங்க என்ன வேலையாப் போயிட்டிருந்தீங்களோ. நீங்க பார்க்கணும்னுதான் கூப்பிட்டேன். மன்னிக்கணும்” என்றார் டாக்டர்.

“டாக்டர், கொடுக்கிற தெய்வம் கூரையைக் கிளிச்சுக்கிட்டுக் கொடுக்கும்னு சொல்ற வழக்கம் நானும் கதைக்குத்தான் அலஞ்சிக் கிட்டிருந்தேன்.”

“அட அப்படியா, இந்தப் பயலெ நல்லா விளாசிப் போடுங்க ஸார், கொன்னுபோடுங்க.”

குலாலன் மனத்தில் உள்ளதைச் சொல்லி விட்டாரே தவிர, வெளியே வந்து மத்தியான்னத் தபாலை நினைத்தபோது அவருக்கு அஸ்தியில் ஜுரம் கண்டுவிட்டது.

“ஆசிரியரே, விளம்பரம் போட்டாகிவிட்டது என்று புலம்புகிறீரே. நான் படும் அவதியைப் பாரும். விளம்பரம் போட்டால் என்ன? போட்டபடி கதையைப் பிரசுரிக்க வேண்டுமென்று சாஸ்திரமா? சட்டமா? வாசகர்களுக்கு ஸ்டாம்பு மேல் கையெழுத்துப் போட்டுவிடவில்லையே! இல்லை, நீரே கதை எழுதி என் பெயரில் போட்டுவிடும். நான் ஒன்றும் தடை சொல்லவில்லை. என் கதையில்லாமல் உம்முடைய பத்திரிகையோ இந்த உலகமோ அஸ்தமித்துவிடப் போவதில்லை. ஜனங்கள் இந்தக் கதையை வாசிக்கிறார்கள் என்று என்ன உத்திரவாதம்? அவரவர்களுக்குத் தலைக்குமேல் வேலை கிடக்கிறது. ஒழிந்த வேளையில் படிப்பதற்கு விஷயமா இல்லை? நீராவி, அணுக்குண்டு, காசம், க்ஷயம், ஆனைக்கால், கருத்தடை, அடிப்படைக் கல்வி, இவ்வளவு நமக்குத் தெரிய வேண்டும். கதை படித்துப் பொழுதை மண்ணாக்கச் சொல்கிறீரே! கேட்க மாட்டீரா? என் கதை தான் வேண்டுமா? சரி, போம். விதி யாரைத் தான் விட்டது? உம்மையா, என்னையா, இரண்டும் இல்லை.”

பிள்ளையார் கோயில் வாசலில் ஒரு சின்ன வேடிக்கை. அதுவும் அவரை நிறுத்திவிட்டது. கதையைத் தவிர வேறு எதையும் பார்த்து, நினைத்து, அலசி, ஆராய வேண்டும் என்று அவர் மனம் அலைந்த அலைப்பில், எதையும் விட அவருக்கு மனம் இல்லை. அந்த வேடிக்கை அவரை அசையாமல் நிறுத்திவிட்டது. மளிகைக் கடையில் ‘பில்’ போடுகிற பிச்சைக்குப்பு சூடம் ஏற்றிக்கொண்டிருந்தான். கோயிலுக்குக் குறுக்கு வாக்காக மூங்கில் ப்ளாச்சு அடித்திருந்தது. லகுவில் கை நுழையாத இடுக்குகளில் ஒன்றின் வழியாகச் சூடத்தை உள்ளே தள்ளி விட்டு, வெளியே இருந்து நெருப்புக் குச்சியைக் கிழித்து உள்ளே இருந்த சூடத்தைப் பற்ற வைக்க அரும்பாடு பட்டுக்கொண்டிருந்தான் அவன். கை நுழையவில்லை. குச்சி அணைந்து விட்டது. இரண்டு, நாலு, பத்துக் குச்சிபோல் தீர்ந்துவிட்டன. பிறகு இரண்டு கைகளையும் இரண்டு இடுக்குகளில் உள்ளே திணித்து நெருப்புப் பெட்டையைக் கிழிக்க முயன்றான். கிழிக்கிற வாகுக்குக் கையை அசைக்க முடியவில்லை. மணிக்கட்டை உள்ளே தள்ளி வேறு குச்சி கிழித்தான். சூடம் எட்டவில்லை. கையை உள்ளே பிதுக்கினான். குச்சியெல்லாம் தீர்ந்துவிட்டன. சூடத்தை அப்படியே போட்டுவிட்டு, நெற்றியில் இரண்டு குட்டுக் குட்டு, இரண்டு தோப்புக்கரணம் போட்டுவிட்டுக் கிளம்பத் திரும்பினான் அவன்.

“ஓய், சூடத்தை விட்டுவிட்டுப் போகிறீர்” என்றார் குலாலன்.

“ஏத்த முடியலே; குச்சியெல்லாம் ஆயிட்டுது. அதையும் எடுக்க முடியலே.”

“குருக்கள் சாய்ங்காலம் வந்துடுவார். இருந்து எடுத்திண்டு போமேன்.”

“போனாப் போயிட்டுப் போறது, ஸார். ஒண்ணரைத் தம்பிடி” என்று பதில் சொல்லி விட்டு நடையைக் கட்டிவிட்டான் அவன்.

குலாலன் தனியாக நின்றார். அவருக்குப் போக்குக் காட்ட, ஆறுதல் சொல்ல ஓர் ஆத்மாவும் இல்லை.

மணி பத்தரை அடித்துவிட்டது. விறுவிறுவென்று வீட்டுக்குப் போய், “வயிற்றுவலி தாளவில்லை. ஒரு நாள் லீவு தயவு செய்து கொடுக்கவும்” என்று சிரஸ்தேதார் சமூகத்திற்கு ஒரு கடுதாசி கொடுத்தனுப்பிவிட்டுக் குளித்தார்; சாப்பிட்டார்; வெற்றிலை போட்டார்; சாய்வு நாறிகாலியில் அமர்ந்து, ஸ்டூலை இழுத்துப் போட்டு, ஒரு தஸ்தர்த் தாளை எடுத்து வைத்துக் கொண்டு கண்ணை மூடிக் குல தெய்வத்தைத் தியானம் செய்து பேனாவைப் பிடித்தார்.

என்ன ஆச்சரியம்! சுந்தர முதலி கதைதான் எழுத்தாக உருண்டுவர ஆரம்பித்தது. கடல் மடை திறந்துவிட்டாற் போலச் சொற்கள் பெருக்கெடுத்து வந்து குவிந்தன. ஒரு பக்கம் எழுதியதும் ஆவேசம் வந்தது போல, பிசாசைப் போல, எழுத ஆரம்பித்தார். காட்டு வெள்ளம் கரை புரண்டது. கஞ்சாக் குடித்தவனைப் போல அவர் மனம் கதையில் ஒன்றிற்று. உற்சாகம் தாங்கவில்லை. அவருக்கே புரியவில்லை. தம்மை மீறிய சக்தி பேனைவைப் பிடித்து எழுதிக்கொண்டிருப்பது போன்ற ஒரு துடிப்பு அவரை ஆட்கொண்டிருந்தது. ஒன்று, இரண்டு, பத்து, முப்பது, அறுபது, பக்கம் பக்கமாகத் தாவிற்று. பந்தயக் குதிரைபோல நுரைக்க நுரைக்க ஓடிவந்த அவர் உள்ளம் கடைசியில் எழுத்தை முடித்து, ‘அப்பாடா’ என்ற பெருமூச்சுடன் இரைத்துக்கொண்டு நின்றது. கவரில் கதையைப் போட்டு, தலையை ஒட்டி, பெட்டியில் சேர்த்தார். மணி ஐந்து பத்து. இந்த மாதிரி ஐந்து மணி நேரம் இருந்த இடத்தை விட்டு அசையாமல் அவர் ஜன்மத்திலேயே எழுதிய பேச்சே கிடையாது. பெட்டிக்குள் கவர் விழுந்ததும் அவருக்குக் குளிர்விட்டது.

ஆசிரியரிடமிருந்து நன்றிக் கடிதமும் வந்தது. அப்பா, குளிர் விட்டது!

குளிர் விட்ட அழகு பிறகுதான் தெரிந்தது. அவருக்கு.

“இதைப் பாருங்கோ, கண்ணை நன்னாத்திறந்து பாருங்கோ” என்று

அவர் மனைவி அவரைச் செல்லமாக உலுக்கி, தூக்கக் கலக்கத்தைத் தெளிய வைத்து நிமிர்த்தி உட்கார்த்தி, "இப்படி எழுதினது போதுமா, பாருங்கோ?" என்றாள். கண்ணை விழித்துப் பார்த்தார் அவர்.

"அன்பு மிக்க ஆசிரியருக்கு.

வணக்கம். என் கணவர் ஸ்ரீ குலாலனுக்கு மீண்டும் ஜுரம் திருப்பிக் கொண்டு பெரிய 'ரிலாப்ஸாக்' வந்திருக்கிறது. 104 டிகிரி ஜுரத்தில் படுத்திருக்கிறார். இன்று முழுவதும் மூச்சை போட்டாற் போல இருந்தது. இப்போதுதான் கண் திறந்திருக்கிறார். இந்த இதழுக்கு அவர் கதை அனுப்ப முடியாததற்காக அவர் சார்பாக என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வணக்கம்.

கௌரி."

"இதை அனுப்பிவிடட்டுமா?" என்று கேட்டாள் அவள்.

குலாலன் விழித்தார். தெளிந்தார். சிரித்தார். ஒரு தஸ்தர் வெள்ளைக் காகிதம் வெள்ளையாகவே ஸ்டூல்மீது இருந்தது.

"அனுப்பிவிடு"

மையிட்ட கண்ணும் அரக்கு வர்ணப் புடைவையுமாகக் கௌரி புன்னகை பூத்து வளைந்து நின்றாள்.

அவருக்கு, ஆசிரியர், விளம்பரம், அவருடைய நன்மதிப்பு, காலம், தேசம் எல்லாம் மறந்துவிட்டன.

**கலைமகள், ஏப்ரல் 1952**

# பட்சி சாஸ்திரக் கிளி

வாசல் குறட்டில் அலறல்.

க்ராச் — க்ராச் — க்ராச் — க்ராச் — க்ராச் — க்ராச்!

படபடபடவென்று சிறகடிக்கும் பரபரப்பு.

மறுபடியும் கத்தல் — க்ராச் — க்ராச் — க்ராச்!

காகிதம், அடிப்பலகை, மூடாத பேனா எல்லாவற்றையும் அப்படியே போட்டேன். வாசலுக்கு ஓடினேன். நாலைந்து பையன்கள். ஒரு பையன் கையிரண்டையும் அகற்றி எதையோ பிடிக்க முயன்றுகொண்டிருந்தான். கிளி க்ராச் க்ராச் என்று அருண்டு போய்க் கத்திக்கொண்டு சிறகடித்தது. குறட்டை விட்டு ஓர் அடி எழுந்து பறந்தது. மீண்டும் கீழே வந்தது. மீண்டும் பறந்தது.

க்ராச் க்ராச் க்ராச்!

பையன் கழுத்தில் கையைப் போட்டுப் பிடித்தவிட்டான்.

க்ராச் க்ராச் க்ராச்!

கிளி திமிறிற்று. ஓயாமல் கத்திற்று.

"டேய் எல்லப்பா, எனக்குடா!" — இன்னொரு பையன்.

"தம்பி, இஞ்ச கொண்ணாந்துரு" என்று எதிர்த்த வீட்டுக்கு அடுத்திருந்த கசாப்புக் கடையிலிருந்து ஒரு குரல்.

"என்னாத்துக்கு?"

"கொண்டாறியா இல்லையா?"

"போய்யா."

அதற்குள் கசாப்புக் கடைக்காரரின் ஆள் ஓடி வந்தான். கிளியைப் பிடுங்கிக்கொண்டான்.

வாசலில் இதற்குள் ஏழெட்டுப் பேர் கூட்டம்.

என் மனைவி ஓடி வந்தாள்.

“கிளியையா புடிச்சிட்டுப் போறாங்க?”

“ஆமாம்.”

“பேசாம நிக்கிறீங்களே! . . . ஐயா, உங்களைத்தானே?” குறட்டை விட்டுக் கீழே இறங்கி ஓர் அடி எடுத்து வைத்துவிட்டான்.

ஐயா, ஏய் தம்பி, கூப்பிடு அவரை.”

யாரோ தம்பி அவரைக் கூப்பிட்டான். கசாப்புக் கடைக்காரர் எட்டிப் பார்த்தார்.

“கொண்டாங்க கிளியை.”

“உங்களுதா?”

“பின்னே ஆருதாம்? கொண்டாங்கய்யா இப்படி!”

கிளியைக் கொண்டு வந்தான் கடை ஆள். “நீங்க வளர்க்கிறீங்களா?”

“ஆமாம்”

நடையிலிருந்த சைக்கிளின் ‘ஸீட்’டின்மேல் விட்டுவிட்டுப் போனான் கடையாள்.

“சும்மா சும்மா வாசல்லெ போகாதேன்னு சொன்னனால்லியா? பாத்திய இப்ப?” என்று சத்தம் போட்டாள் அவள். கிளி மூக்காலும் காலாலும் பற்றிக்கொண்டு ‘ஸீட்’டுக்கு அடியிலுள்ள சுழற்கம்பிக்குள் போய் ஒளிந்து கொண்டது. குனிந்து பார்த்தோம். தலையைக் குனிந்து உடம்பை ஒடுக்கிக் கம்பிக்குள் இருந்து விழித்தது. விசிறியை எடுத்துவந்து ‘வா இப்படி’ என்று சத்தம் போட்டு ஸீட்டண்டை பிடித்தாள். விசிறிமீது இறங்கிச் சிறகடித்துக் கீழே விழுந்து, பலகைச் சுவரின் அடியில் புகுந்து விறகு கரி வைக்கிற அறைக்குள் மறைந்தது கிளி. இவளும் போய்க் கூடையைப் போட்டுக் கிளியை மூடினாள். வாசல் கதவைச் சாத்தித் தாழிட்டாள்.

“புள்ளீங்கள்ளாம் வந்தா, புலம்ப ஆரமிச்சிருக்கும். நல்ல வேளையா ஆம்பிட்டுது” என்றாள் அவள்.

“புடிச்சிக்கிட்டுப் போறான். யாரோ எதையோ எடுத்துக்கிட்டுப் போறாப் போல, பாத்துக்கிட்டு நிக்கிறீங்களே!” என்று அவள் சொல்ல வில்லை. பார்வை சொல்லிற்று.

“இன்னமே வாசல்லே உடப்படாது. பூனை ஒண்ணு எப்பப் பார்த்தாலும்

எதித்த ஊட்டுக் குறட்டிலே கண்ணை மூடிட்டே படுத்துக் கிடக்கு. நல்ல வேளையா இப்பக் காணும் அதை. இருந்திருந்தா . . . " இதைத்தான் அவள் வாய் திறந்து சொன்னாள்.

நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன். அவள் பார்த்த பார்வை! நான் கிளி பறிபோவதைப் பார்த்துக்கொண்டு எப்படிப் பேசாமல் நின்றேன்? சத்தத்தைக் கேட்டு நாற்காலியிலிருந்து எழுந்து ஓடினது உண்மைதான். அது பழக்கம். தெருவில் திடீர் திடீரென்று சண்டைகள் மூளும். திடீர் திடீரென்று இரைச்சல் கேட்கும். நான் ஓர் இரைச்சலையும் வாசலுக்கு வந்து பார்க்கத் தவறியதில்லை. புத்தகத்தைப் போட்டுவிட்டு ஓடி வருவேன். பாஷை கேட்கிற ஆசை; வம்பில் ஆசை. வேறென்றும் இல்லை. அந்தமாதிரிப் பழக்கத்தில்தான் அப்போதும் போனேன் போலிருக்கிறது. ஆனால் கிளி போவதைப் பார்த்துக் கொண்டே ஏன் சும்மா நின்றேன்?

கிளி வந்து ஒரு வாரந்தான் ஆயிற்று. இரண்டு பிள்ளைகளும ஊர்க் குப்பையெல்லாம் வாரிக் கொண்டு வருகிறார்கள். தீப்பெட்டிப் படங்கள், ஸ்டாம்புகள், சிகரெட் பெட்டிகள், கோலிகள், சினிமாப் படத் துண்டுகள், என்ன என்னவோ வரும். வீட்டில் இறையும்.

ஒரு வாரம் முன்னால் பெரிய பையன் எதையோ துணிக்குள் பொத்திக்கொண்டு வந்தான்.

"என்னடாது?"

"கிளிப்பா" என்று துணியை வீசினான். சிறகடித்துக்கொண்டு கீழே இறங்கிற்று ஒரு பச்சைக் கிளி. ஒரு காலை வளைத்து வளைத்து நடந்து மூலையில் போய் நின்றது.

"ஏதுடா இது?"

"முன்ஸாமி குடுத்தான்."

"கிளி வளர்த்தாப் பாவம்" என்றேன்.

"நான் ஒண்ணும் ரக்கையை ஒடிக்கலெ கடையிலியே ஒடிச்சுத்தான் வித்தாங்களாம்.

ஆமாம். கிளிக்கு வால் இல்லை. நீளக் கோழ முட்டை மாதிரி பின்னால் கூம்பியிருந்தது.

அது கோணிக் கோணி நடந்து தாழ்வாரத்தின் ஒட்டில் நின்று முற்றத்தைக் குனிந்து பார்த்தது.

"ஏது தம்பி கிளி?" என்று உள்ளேயிருந்து வந்தாள் மனைவி. அவளிடம் அதையே சொன்னான்.

"ரக்கை, காலெல்லாம் ஒடிச்சுப் போட்டிருக்கானே பாவிங்க!" என்றாள் அவள் "இது ஒண்ணுந்தான் இல்லைன்னு கொண்டாதீங்களாக்கும்? படிங்கடான்னா, வயித்தை வலிக்குது, தூக்கம் வருதுன்னு அளும்பெல்லாம் பண்றீங்க. இதுக்கொல்லாம் ஒண்ணையும் காணும்" என்று அலுத்துக்கொண்டு உள்ளே போனாள் அவள்.

"அந்த முன்ஸாமி கிட்டவே கொண்டு கொடுத்திட்டு மறுவேலை பாக்கணும். தெரிஞ்சுதாடா?"

"இங்கியே இருக்கட்டும்பா." – கெஞ்சல்.

"அதெல்லாம் முடியாது."

ஆபிசுக்குப் போய்விட்டேன்.

மாலையில் வந்து பூட்ஸைக் கழற்றி விற உள் மாடத்தில் வைக்கப் போனபோது, அங்கு ஒரு கூடை. க்ராச் க்ராச் க்ராச்!

கூடையைத் தூக்கினேன். கிளி. பக்கத்தில் ஒரு மரச் செப்பில் தண்ணீர், கீழே அரிசி இறைந்து கிடந்தது. ஓர் அரைத் தக்காளிப் பழம் குதறிக் கிடந்தது.

"தண்ணியே குடிக்க மாட்டேங்குது" என்று மனைவி வந்து நின்றாள்.

"ஏன்"

"அரிசிதான் கொஞ்சம் தின்னிச்சு. பழங்கூட முழுக்கத் திங்கலியே!" என்று அருகில் போனாள். பயந்து மூலையில் போய் ஒண்டிக் கொண்டது கிளி.

"இடம் கிடம் எல்லாம் ஒழிச்சிருக்கறதைப் பாத்தா . . . "

"ஆமாம். புள்ளீங்க ஏதோ ஆசையாக் கொண்டு வச்சிருக்கு. நமக்கென்ன?" என்று இடைமறித்தாள் அவள்.

ஒரு வாரமாகிறது. வீட்டிலேயே இஷ்டப்படி திரிந்துகொண்டிருந்தது அது. தாழ்வாரத்தின் ஒட்டில் நிற்கும். உள் வாசற்படியில் நிற்கும். குழாய்

மேல் நிற்கும். நான் குளிக்கப் போகிறபோது வெந்நீர்த் தவலைமீது நிற்கும். என்னைக் கண்டவுடன் சறுக்கி இறங்கி அப்பால் போகும். தொடப் போனால் ஓடும். ஓட இடம் இல்லாவிட்டால் அலகால் கொத்தும்.

இவ்வளவுதான் நான் அதைப்பற்றித் தெரிந்துகொண்டது. கொஞ்சம் கோபங்கூட. எனக்கு இஷ்டமில்லாமல் வந்திருக்கிறது அது. வெளியே கொண்டு தொலைக்கவும் முடியவில்லை. எதற்காகத் தொலைக்க வேண்டும்? வேண்டாத விருந்து எத்தனையோ வருகிறதே? அதை யெல்லாம் தொலைக்கவா முடிகிறது? அதனால்தான் யாரோ பையன் அதைப் பிடித்தபோது பற்றில்லாமல் நின்றேன் போலிருக்கிறது. கசாப்புக் கடைக்காரர் பிடுங்கிப் போனபோதுகூட நான் ஒன்றும் அசைந்து விடவில்லை.

ஆனால் இவள் பார்வை! "பேசாம, என்னமோ சம்பந்தமே இல்லாது போலப் பாத்துக்கிட்டு நிக்கிறீங்களே! நம்முதுன்னு கொஞ்சமாவது இருக்கா உங்களுக்கு?" அவள் கண் சொன்னதுதான் இது.

மறுபடியும் நாற்காலியை விட்டு எழுந்தேன். நடை உள்ளில் போய்ப் பார்த்தேன். கூடையின் அடி வழியாக மல்லாந்து படுத்தவாறு தள்ளித் தள்ளி வெளியே வர முயன்றுகொண்டிருந்தது கிளி. கூடையைத் தூக்கினேன். நிமிர்ந்து நின்றது. சரியாக மூடினேன். உள்ளே வந்து அரிசியை எடுத்து வந்து இறைத்தேன்.

"தக்காளிப்பழம் இருக்கா?"

"என்ன?"

"தக்காளிப்பழம் இருக்கான்னேன்."

"எதுக்கு?"

"கிளிக்குத்தான்."

"இல்லியே. இப்பத்தான் ரசத்திலே போட்டேன்."

"கொஞ்சம் இதுக்கு வச்சிட்டுப் போடப்படாது?"

"ராத்திரிதான் ஒரு பழம் தின்னுருக்கே."

"ராத்திரி தின்னாப் போதுமா?" என்று சொல்லவேண்டும் போலிருந்தது எனக்கு. அதற்குள் என் பாசத்தைக் காட்டிக்கொள்ள மனம் இல்லை. கடைக்குப் போனேன். தக்காளிப் பழம் வாங்கி வந்து போட்டேன்.

உரிக்காத நிலக்கடலை வாங்கிப் போட்டேன்.

கூடையை எடுத்துப் பார்த்தேன். ஒரு வாரமாக இருக்கிறதை இப்போதுதான் நன்றாக பார்க்கிறேன். பளபளவென்று கருமணிக் கண்கள். பக்கவாட்டில் கூடப் பார்க்கும் போல் இருக்கிறது. கிளிப்பச்சை இதுதானா? இறக்கை நறுக்கித்தான் இருந்தது. வாலைக் காணவில்லை. அதையும் நறுக்கியிருந்தது. இந்த மூக்குத்தான் எத்தனை பலம்! தொட்டேன்.

க்ராச் க்ராச் க்ராச்! — அம்மாடி!

இடக் கால் முட்டில் முறுக்கிவிட்ட மாதிரி வளைசல். எப்படித்தான் மனசுடன் திருகினார்களோ! தஞ்சாவூர் ரெயிலடியில் ஒரு பிச்சைக்காரன் வருவான். நல்ல வைர உடம்பு. கால் மட்டும் முக்கால் முழம் நீளந்தான் இருக்கும். அதிலும் ஒரு பல்லக்கு வளைவு. நடக்கும்போது உட்கார்ந்த வாக்கில் நடக்கிறது போலிருக்கும். உடல் வடக்கும் தெற்குமாக மாறி மாறிப் பார்த்து வரும். கிளி கிட்டடத்தட்ட அந்த நடை போட்டது.

மறுநாள் சாயங்காலம் காரியாலயத்திலிருந்து வரும்போது விறகு அறையில் அதைக் காணவில்லை. கரிமூட்டையிடுக்கில் பார்த்தேன். பூட்ஸைத் தட்டித் தட்டிப் பார்த்தேன். என் அறையில் வந்து பார்த்தேன். அலமாரியில் புத்தகங்களுக்குப் பின்னால் இல்லை. குளிக்கிற அறையில் இல்லை. மாடி வளைவில் இல்லை. எங்கும் இல்லை.

“என்ன தேடுறீங்க, வந்ததும் வராததுமா?”

“ஒண்ணுமில்லெ”

“சொல்லுங்களேன்”

“ஒண்ணுமில்லெ”

“கடியாரமா?”

“ம்ஹும்,”

“துண்டா?”

“இல்லை.”

“கிளின்னு சொல்லுங்களேன், அதோ பாருங்க.”

கிளி என் அறைக் கதவின் மேலுள்ள காற்றுப் போக்கியின் குறுக்குக்

கம்பியின் மீது கூனி உட்கார்ந்திருந்தது. கால்பிடியையும் கூனலையும் பார்த்தால் அவதிப் பட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தது போல் தோன்றிற்று. கருமணியை உருட்டி என்னைப் பார்த்து விழித்தது. "அங்கே எப்படிப் போச்சு?"

"மத்தியானம் சாப்பிட வந்தது புள்ளீங்க. மூங்கிக்கழியிலே உட்கார்ந்திச்சு இது. அப்படியே குந்தினாப்பல தூக்கி அங்கே விட்டுது பெரிது. இது அப்படியே கம்பியைப் புடிச்சிக்கிட்டுது. அப்போ புடிச்சு அப்படியே குந்தியிருக்கு."

"மத்தியானம் ரண்டு மணியிலேந்தா?"

"ஒண்ணரை மணியே புடிச்சு."

"ரொம்பக் கெட்டிக்காரிதான், போ."

"என்ன?"

"பின்னே என்ன? உட்கார முடியாமத் தவிச்சிக்கிட்டிருக்கு. அப்படியே பாத்துக்கிட்டிருக்கியே நாலு மணி நேரமா?"

எழுதுகிற அட்டையை எடுத்துவந்து பிடித்தேன். பற்றி உட்கார்ந்து கிளி. மெதுவாகக் கீழே பாதி இறக்குவதற்குள் சிறகடித்துத் தானே கீழே இறங்கி நடைபோட ஆரம்பித்தது.

"பாவம்! கூனிக் கூனி எப்படி அவதிப்பட்டுதோ? உங்க இரக்கமெல்லாம் வாயோட சரி."

"சரி, காலைக் கழுவிக்கிட்டு வாங்க. உப்புமா வச்சிருக்குறேன்."

"அது கிடக்கட்டும். அஞ்சு மணி நேரமாக கழுவேத்தி வச்சிருந்தியே. அதுக்கு ஏதாவது கொடுத்தியா?"

"அதுக்குந்தான் போடப்போறேன் காலமே ஒரு முழுத் தக்காளி தின்னுது. முட்டை அரிசி தின்னுது. நடுவிலே என்னாத்தைத் திங்கப் போவுது?"

அப்புறம் வாசல் பக்கமே போகிறதில்லை அது. ஒரு நாள் பட்டது போதாதா?அறைக்குள்ளேயே சுற்றிக்கொண்டிருக்கும். பெட்டியிடுக்கு மூலை, படுக்கையிடுக்கு – இங்கேதான் பார்க்கலாம். இரவு நேரத்தில் விறகு அறையில் கூடையைப் போட்டு மூடி, மேலே ஒரு செங்கல்லைப் பாரம் வைத்துவிடுகிறது. வீட்டில் பூனை நடமாட்டம் அதிகம். அதற்காக

விறகு அறையின் ஜன்னல் கதவுகளையும் சாத்தி வைத்தார்கள். எனக்கும் காற்றுக் கிடைக்கவில்லை? என் அறை ஜன்னல் வாசல் பக்கம் பார்த்திருக்கிறது. பூனை அதன் வழியாக வருகிற வழக்கம் உண்டு. அதற்காகக் கீழ்க் கதவுகளைச் சாத்த வேண்டியிருந்தது. இரண்டு மாசமாகப் புழுங்கிப்போகிறது. வேறு வழி இல்லை.

காரியாலயத்துக்குப் புறப்படும்போது சைக்கிள் ரோதையில் மாட்டிக் கொண்டு விடுவது போல வந்து நிற்கும். சத்தம் போடாமல் விறகறையின் பலகைச் சுவரின் அடியில் நுழைந்து உள்ளே போகும்.

"ஜாக்ரதையாப் பாத்துக்க. அன்னிமாதிரி எங்கியாவது வாசல்லே போய் நிக்கப்போவுது!"

"அதுவா? நல்லா போகுமே! இப்பல்லாம் படி தாண்டறதில்லை."

"இருந்தாலும் பாத்துக்க."

ஒருவாறு கவலை விடத்தான் விட்டது. அதற்கு வீடு பிடித்துவிட்டது. இரண்டு மாசமாக வாசல்பக்கம் எட்டிப் பார்க்கவில்லையாம்.

"யப்பா யப்பா" என்று வந்தான் சின்னப் பையன், அன்று ஆபீசிலிருந்து வந்ததும்.

"என்னாடா?"

"அண்ணன் வந்து கிளியை ஓங்கி மூக்கிலெ அடிச்சிட்டாம்பா கொம்பாலெ. ரத்தமாக கொட்டு கொட்டுன்னு கொட்டிச்சு."

"ரத்தம் கொட்டிச்சா? எதுக்கு அடிச்சான்?"

"சொன்னதைக் கேக்கலேன்னு அடிச்சான்பா."

"எங்கே அந்தப் பய?"

"விளையாடப் போயிருக்கான்."

"எங்க அடிச்சான்?"

"மூக்கிலெ. அப்படியே ரத்தமாக் கொட்டு கொட்டுன்னு கொட்டிப் புடிச்சு" என்று மூக்கையும் புருவத்தையும் சுளுக்கினான் அவன்.

போய்க் கூடையைத் தூக்கினேன். கிளி அருண்டு போய் நகர்ந்தது. மூக்கின்மேல் ரத்தம் கசிந்த பொருக்குத் தெரிந்தது.

“பேசு பேசுன்னு சொல்லிக்கிட்டேயிருந்தான். ரங்கா ரங்கான்னான். பிடிக்கப் போனான். சொல்லல்லே. ஓங்கி அடிச்சுப் பிட்டுது பிசாசு” என்றாள் மனைவி.

“ரத்தமா கொட்டிச்சுப்பா.”

“ஆமாம், ரத்தம் கொட்டவும் இல்லே, ஒண்ணுமில்லே. துளிபூண்டு கசிஞ்சுச்சு . . . இது ஒண்ணுன்னா நூறுங்கும்.”

இருட்டுகிற சமயத்திற்கு வந்தான் பெரிய பையன்.

“எலே, இஞ்ச வாடா . . . கிளியை அடிச்சியாமே . . . அடிச்சியா?”

“ஆமாம்.”

“எதுக்குடா அடிச்சே?”

“அது என்னைக் கொத்திச்சு. இதைப் பாருங்க” என்று சிராய்ப்பைக் காண்பித்தேன்.

“உன்னை எதுக்குக் கொத்திச்சு அது?”

“பேசு பேசுன்னேன். பேசலே. கையாலெ சும்மா மெள்ளமாத் தட்டினேன். அதுக்காகக் கொத்திச்சு. அடிச்சேன்.”

“எதாலே?”

“கொம்பாலே?”

மேஜைமீது கிடந்த விசிறிக்காம்பால் பொட்டென்று அவன் முகத்தில் அடித்தேன்.

“ஐயூஐயூ ஐயூஐயூ” என்று கீழே விழுந்து துடித்தான். வீரிட்டான். மூக்கில் பட்டுவிட்டது.

“என்னாடா அங்கே?” என்று ஓடி வந்தாள் அவள்.

“உன்னை அடிச்சா எப்படிடா இருக்கு? . . . எப்படிடால இருக்கு? . . . ”

அவள் வாயைத் திறக்கவில்லை. “அதுக்காக இப்படி அடிக்கலாமா?” என்று ஒரு பார்வை.

“அதுக்கு மேலே நீங்களும் முட்டாளா இருக்கிங்களே” என்ற பார்வை.

“அதை வீட்டிலெ கொண்ணாந்து வச்சு ஏண்டா இப்படிக் கொல்லுறே?” என்று கடைசிச் சத்தமாகப் போட்டு என் அறிவீனத்தை மறைத்துக்கொண்டு உள்ளே வந்து உட்கார்ந்தேன்.

பெரிய பையனும் மாறிவிட்டான். அன்றிலிருந்து பாயைச் சுவரிலிருந்து சற்றுத் தள்ளிப் போட்டுக்கொண்டு தலைமாட்டிலேயே கூடையைப் போட்டுக் கிளியை மூடிப் படுத்துக் கொள்வான்.

நானும் நடுநிசியில் விழித்து எழுந்தால் விளக்கைப் போட்டுக் கூடையைத் தூக்கிப் பார்ப்பேன். பளபளவென்று கருமணிவிழியை உருட்டிப் பார்க்கும் அது. முதல் ஜாமத்தில் போட்ட தக்காளிப் பழத்தில் பாதி முடிந்திருக்கும். அரிசி இறைத்த சுவடு தெரியாது.

“தக்காளிப் பளமா போடறீங்க?” என்று மாடியிலே குடியிருக்கிற அம்மாள் கேட்டாள்.

“ஆமாம்.”

“கிளிக்கு மொளவாப்பளம், கோவைப்பளம் – இதெல்லாம் போடுவாங்க.”

“மொளவாப்பளமா?”

“ஆமாம்”

“உறைக்காது?”

“அது என்ன, மனுசங்களா?”

மிளகாய்ப் பழம் போடத் தைரியம் இல்லை. கோவைப் பழமே போடுவதாக முடிவாயிற்று. மார்க்கட்டில் கோவைக்காய்தான் கிடைத்தது. ஆபீஸ் சேவகனிடம் சொன்னேன். நாளைக்கு நாளைக்கு என்று பதினைந்து நாள் சொல்லிவிட்டுக் கடைசியிலே ஒரு பொட்டணத்தில் ஏழெட்டுப் பழத்தைக் கொண்டு வந்து கொடுத்தான். எப்படியோ, கிளிக்கு ஆகாரம் கிடைத்துவிட்டது. நம்மைப் போய்ச் சோற்றுக்குப் பதிலாகப் பூரியும் ரொட்டியும் சாப்பிடு என்றால் எப்படி இருக்கும்? அது மாதிரிதானே?

நல்ல கெட்டிக் காகிதத்தில் கோவைப் பழங்களைப் போட்டுக் கட்டி, நசுங்கிவிடாமல் கைப்பிடியிலே சணலால் தொங்கவிட்டு வந்தேன்.

“என்னாப்பா இது?” என்று சின்னப் பையன் ஓடிவந்து

பொட்டணத்தைப் பிடித்தான்.

"கோவைப்பழம் . . . கிளிக்குக் கொண்டு போடு."

"கிளி போயிடிச்சுப்பா!" என்று உற்சாகமாகக் கத்தினான் அவன்.

"எங்கடா போச்சு?"

"போயிடிச்சு. ஆமாம்" என்று இன்னும் உற்சாகத்துடன் கத்தினான் அவன்.

"எங்கடா போயிடுச்சு?"

"பட்சி சாஸ்திரக்காரன் வந்தான். பட்சி சாஸ்திரம் பட்சி சாஸ்திரம்னிட்டுக் கத்தினான் பாரு. கிளி விறகு அறையிலிருந்து வந்திச்சு. படபடன்னு அவன் பொட்டிமேலே போய் உக்காந்துக்கிச்சு. போயே போயிடிச்சு . . . அம்மா கூடப் போய்க் கூப்பிட்டுது. வரவே இல்லை. இல்லேம்மா?" என்று வாசலில் வந்த அம்மாவிடம் கேட்டான்.

"என்ன இது?"

"ஆமாம்."

அவள் முகத்தில் ஈயாடவில்லை, குரல்கூடக் கம்மிக் கிடந்தது. அழுதாளா என்ன?

என்ன ஆச்சு?

பட்சி சாஸ்திரம் பட்சி சாஸ்திரம்னு கூவிக்கிட்டுப் போனான் ஒருத்தன். இது உள்ளார இருந்திச்சு. கூடை போட்டு மூடலெ. அதான் பகல் முளுக்க வீடு முழுக்கத் திரியுமே. சத்தம் கேட்டுது. நான்கூட உள்ள இருந்து பாத்துக்கிட்டேயிருந்தேன். அது காலை வளைச்சு வளைச்சுக்கிட்டு வேகமாப் போச்சு. நிலையைத் தாண்டிச்சு. படபடன்னு பறந்திச்சு. உள்ளேருந்து ஓடிவந்தேன். அவன் தோளிலே ஒரு பொட்டி மாட்டிக்கிட்டிருந்தான். அது மேலே போய் உக்காந்திருதிச்சு . . . " அவளுக்கு மேலே பேச முடியவில்லை. சுதாரித்துக் கொண்டு செய்தியைச் சொல்ல இரண்டு நிமிஷம் பிடித்தது.

கிளி பிறகு பட்சி சாஸ்திரங்காரன் கை மேலேயே உட்கார்ந்து கொண்டதாம். "அட நீ எங்கடா வந்தே ராசா?" என்றானாம் அவன், ஆச்சரியம் தாங்காமல், "இந்தாய்யா?" என்று கூப்பிட்டாளாம் என் மனைவி.

“உங்களுதா இது?”

“ஆமாம்”

“எத்தினி நாளா இருக்கு?”

“ரொம்ப நாளா இருக்கு.”

“எத்தினி நாளுன்னு சொல்லுங்களேன் தெரிஞ்சுக்கறதுக்காகக் கேக்கறேன்.”

“ரெண்டு மாசம் இருக்கும்.”

“பாத்தீங்களா? ரெண்டு மாசமாத்தான் காணும் இதை. தேனாம்பேட்டையிலே மரத்தடிலே சாஸ்திரம் சொல்லிப்பிட்டு அசந்திட்டேன். நல்ல வெயிலு. இது இப்படித் தத்திகிட்டு இருந்திச்சு. முளிச்சுப்பாத்தாக்காணும் குறப் பய ஒருத்தன் சுத்திக்கிட்டிருந்தான் லாவிட்டான் போலிருக்கு. பைத்தியம் புடிச்சாப்பல ஆயிடிச்சு எனக்கு. பாருங்க உண்மையாப் பிரியம் வச்சா . . . நீங்களே பாருங்க, எப்படி வந்து ஒண்டிக்குது!”

இவள் கூப்பிடக் கூப்பிட அது வர மறுத்ததாம். விறகு அறையில் கொண்டுவிட்டானாம் அவன். க்ராச் க்ராச்சென்று சித்திரவதை செய்கிறாப்போலக் கத்திற்றாம். இதுவரையில் கத்தாத கத்தல்.

“பாத்தீங்களாம்மா. அது இருக்காதும்மா என் குரல் தெரியும். பச்சைப் புள்ளியிலேருந்து வளருது. மறந்திருமா? எனக்கும் அது போனதிலேர்ந்து தொளிலே சரியா நடக்கலெ நீங்க எது கேட்டாலும் தந்திடறேன்.”

அவன் சொல்லும்போதே கிளி கூண்டு பெட்டியின் கம்பியைக் கவ்விக் கவ்வி நின்றதாம். சரி என்று விட்டுவிட்டாளாம் இவள்.

“ரெண்டு மாசமாப் பளமும் பாலும் தின்னுக்கிட்டுக் கிடந்ததே. ஒட்டிச்சா? கிட்டப்போனா என்னமோ அடிக்க வந்தாப்பல பதுங்கிப் பதுங்கி மாமாலங்கள்ளாம் பண்ணிச்சே. அவன் சட்டைக் கையிலே பூந்துகிட்டு வரவே மாட்டேனிடிச்சு . . . ரோடு வரைக்கும் ஒரு தாவாத் தாவிப் பறந்துதே அதைப் பார்த்தால்ல தெரியும்? நன்னிகெட்ட ஜென்மம்!. . . உறவு கொண்டாடிட்டு அது பசப்பினதைப் பாக்கணுமே. குழைஞ்சு குழைஞ்சு கூவுறதும் குதிக்கறதும் . . . ஒழிஞ்சுது ரெண்டு மாசக் கடன் . . . அது என்னா மூட்டை?”

“கோவைப் பளம்.”

“கோவைப் பளம் திங்கற ஜன்மத்துக்கு தித்திக்கிற அறிவா இருக்கப்போவது? சனியன்!”

நானும் பிரமை பிடித்தாற்போல உள்ளே வந்தேன். கால்சராய், சட்டைகளைக் கழற்றிவிட்டு, முகங் கழுவ வந்தபோது, கிளிக்கு பால் வார்த்த கிண்ணமும், நீர் வார்த்த பழைய பல்பொடி டப்பாவும் குழாயடியில் தேய்த்துக் கழுவி வைத்திருந்தன.

கலைமகள், அக்டோபர் 1956

# போர்ஷன் காலி

“ஏதாவது கூச்ச நாச்சம் இருக்கா, பாருங்களேன். செய்யறத்தையும் செஞ்சுப்பிட்டு, நுளி பயம், துளி வெட்கமில்லாம முகத்தைக் காட்டிண்டு உலாத்தறதே. செஞ்சது ஒருத்தருக்கும் தெரியாதுன்னு நினைச்சிண்டிருக்காப்பல இருக்கு அது!” என்று கண்ணை உருட்டி உருட்டி விழத்தாள் கௌரி.

‘அது’ என்பது அதோ மொட்டை மாடியில் உலாத்துகிறாரே, அவர்தாம்.

“கிழட்டுப் பொணம்! என்ன திமிரு இருக்கும் அதுக்கு!” என்றாள் கௌரி மறுபடியும்.

அவர் அப்படிக் கிழவரும் இல்லை. நாற்பதைந்து வயசுக்குக் கீழேதான் சொல்லலாம்.

“எப்படின்னா துணிச்சல் இவ்வளவு வந்தது அதுக்கு?”

“நான் என்ன கண்டேன்?”

“உங்களுக்கு ரொம்ப சிநேகிதராச்சேன்னு கேக்கறேன்.”

“சிநேகிதர்னா எல்லாத்தையும் தெரிஞ்சுனுட முடியுமா என்ன?”

அவர் என் சிநேகிதர்தம். ஆனால் இந்த மாதிரி ஒரு குண விசேஷம் அவரிடம் இருப்பது என் கண்றக்குப் படத்தான் இல்லை.

“அப்படின்னா இனிமேலாவது ஜாக்ரதையா இருங்கோ.”

உண்மையில் அவரிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்றே பட்டது. கௌரி மேலே ஒன்றும் சொல்ல வில்லை. என்ன சொல்லியிருப்பாள் என்று மட்டும் எனக்குச் சொல்ல முடியும்.

“அந்த மனுஷனை இனிமே இந்த வீட்டுக் குத்துச் செங்கல் ஏறவிடக் கூடாது. வாங்க சார்னு உள்ளே கூப்பிடறது, உட்கார்த்தி வச்சிண்டு பேசறது, காபி கொண்டான்னு சமையல் உள்ளைப் பார்த்துக் கத்தறது, ஓமப்பொடி பண்ணினியே, அதைக் கொஞ்சம் கொண்டுவரப் படாதாங்கறது. இனிமேல் இந்த உபசாரம், குலாவல் எல்லாம் வாண்டாம்.

ஒரு குடும்பத்திற்குள் கூப்பிட்டுப் பழகறதுக்கு யோக்யதை இல்லாதவன். ஜாக்கிரதை!" என்றுதான் அவள் சொல்லியிருப்பாள்.

ஆமாம். குடும்பஸ்தர்கள் இருக்கிற வீட்டின் உள்ளே அநுமதிப்பதே தவறுதான். இந்த மாதிரி மனிதர்கள் குத்துச் செங்கல் மிதிப்பதைக்கூட விடக்கூடாது.

எனக்கு எப்படி இத்தனை நாள் புலப்படாமல் பாய்விட்டது?

"உங்க அருமந்த சிநேகிதரைப் பார்த்துப் பூரித்துப் போய் உட்கார்ந்திருக்கேளே. எனக்கு எப்படி வருகிறது தெரியுமோ? எழுதித்தே, அந்த விரலை இப்பவே ஓடிப்போய் ஒடிச்சுட்டு வந்து மறுகாரியம் பார்க்கணும்னு துடிக்கிறது."

எனக்குக்கூட அப்படித் துடிக்கிறது. அவள் பெண்பிள்ளை. போய் விரலை ஒடிக்க முடியாது. நான் ஒடிக்கலாம். ஆனால் முடியாதே! கொல்ல வருகிறவர்களைக்கூட நாம் கொல்லக் கூடாதாமே! "நீ யாரு அதுக்கு? உடனே ஓடி வந்து என்னிடமல்லவா சொல்லியிருக்க வேண்டும்?" என்று நீதிபதி விரட்டுவாரே. சம்பளம் கொடுத்து நீதிபதிகளையும், கூலி கொடுத்து வக்கீல்களையும் படைத்திருக்கிற இந்த உலகத்தில் நாம் யார் தண்டனை கொடுக்க? "நீங்கள் யார் தண்டனை கொடுக்க?" என்று கடவுள் கேட்டால் என்ன சொல்லுவார்களோ இவர்கள்?

"மீனாட்சியம்மா அப்படியே வெதறிப் போயிட்டா. 'வெளியிலே சொல்லாதேடிம்மா. மானம் கப்பலாப் பறக்கும். நாலு வருஷமாகக் கதர்றேன் கிடந்து. இப்படி இடம் தெரியாம வளந்துண்டு போறது பொண்ணு. ஏதாவது வரனைப் பிடிச்சுக்கொடுத்துங்கோன்னு நாலு வருஷமாக் கதறினேன். கேக்கலே. இப்ப வந்து தலையிலே கையை வச்சிண்டு உட்கார்ந்துட்டார்டி. நான் என்னடி பண்ணுவேன்னு சொல்ற விஷயமா இது? என்னமோ அவளுக்கு யார் கிட்டவாவது சொல்லி அழணும் போலிருந்தாப் போல்ருக்கு. வந்து அழுதுட்டுப் போறா. நீங்களும் வேறு யார் காதிலேயாவது போட்டுடாதீங்கோ."

நான் யார் காதில் போடப் போகிறேன்? கௌரி சொல்கிறாற்போல் யாரிடமாவது சொல்லக்கூடிய செய்தியா இது?

நினைத்து நினைத்துப் பார்க்கிறேன். எனக்கு நம்ப முடியவில்லை. என் நண்பரா இப்படிச் செய்தார்? இந்தக் காலத்தில் யாரை நம்புகிறது? யாரை நம்பாமல் இருக்கிறது? எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கும் என்று

யாருக்குச் சொல்ல முடிகிறது?

இவ்வளவையும் செய்துவிட்டு நிர்ப்பயமாக மாடியில் உலாத்துகிறாரே, அந்தத் துணிச்சல் தான் யாருக்கு வரும்? வடிக்கட்டின போக்கிரியாக, எதற்கும் துணிந்த கட்டையாக, எல்லாவற்றையும் துறந்தவனாகத் திரிகிறவனுக்குத் தானே வரும்?

"நினைச்சா வயிறெல்லாம் என்னமோ பண்றதுன்னா எனக்கு. அந்த வயசிலே அவனுக்கு ஒரு பொண்ணு வயிறும் பிள்ளையுமா நிக்கறதே! அதுகூட ஞாபகம் வந்திருக்காதா, எழுதற போது? அப்பறம் வேற நாலு குழந்தைகள்!"

"அதோ பார்" என்றேன்.

"என்னத்தை?"

"அதோ" என்று கவரக் காட்டினேன்.

ஒரு பல்லி டபக்கென்று பாய்ந்து ஓர் ஈசலைக் கவ்விற்று. மந்திரம் ஜபிக்கிறாற்போல முணுமுணுத்தது. மறுகணம் ஈசல் இறக்கையோடு வாய்க்குள் மறைந்துவிட்டது. மழை பெய்து ஓய்ந்திருந்தது. ஈசல் கூட்டம் எம்பி, அதில் ஒரு பகுதி இப்படிப் பல்லிக்கு இரையாகிக்கொண்டிருந்தது.

"இதுக்கு என்ன சொல்றே?" என்றேன்.

"இந்தப் பரமஹம்பை பேச்சு யாருக்கு வேண்டிருக்கு?"

"பல்லியை விரட்டினால் நமக்குத்தான் பாவம்."

"பல்லியும் உங்க ரத்னமையரும் ஒண்ணு தானா? உங்க ரத்னமையருக்கு மூளை, மனசு, குடும்பம், கௌரவம், மானம், சொரணை எனலாம் இல்லையா?"

பல்லி கன அவகாசமாக ஓடிக் கருகுமலைபோல் பளபளக்கிற ஒரு பூச்சியை வாயில் போட்டுக்கொண்டது. இது மெட்ராஸ் பல்லி நம் ஊர்ப் பல்லியைப் போல அப்பள மாவு மாதிரி வழவழவென்று நடுத்தர அளவாக இராது. சாம்பலும் கறுப்புமாக வரி ஓடின பல்லி. அளவும் பெரிது. உடும்புக்குட்டி மாதிரி. பார்க்கவே அசிங்கம். அருவருப்பு.

"சும்மா வேடிக்கைக்குச் சொன்னேன். இந்தப் பல்லியைப் பார்க்கிறாப் போலவே இருக்கு. எனக்கு இப்ப ரத்னமையரைப் பார்த்தால்" என்றேன்

ரத்னமையரிடம் நேற்று எதெதெல்லாம் அழகாகத் தோன்றிற்றோ அதெல்லாம் இப்பொழுது வயிற்றைக் குமட்டிற்று. எலும்பு தெரியாத தளதளவென்று பளபளக்கிற அவருடைய வண்ணம் வெள்ளைச் சாரை மாதிரி பயமுறுத்திற்று. கவர்ச்சியான அந்த உயரம், அசுர உயரமாக ஓங்கிவிட்டது. அவருடைய பேச்சினிமை ஆஷாடபூதித்தன மாகிவிட்டது. அவருடைய ரசிகத்தன்மை, படிப்பெல்லாம் ஏவல் பில்லி சூனியங்களாகிவிட்டன. குடியைக் கெடுக்கிற இனம்! கல்லூரியில் இவனை ஒரு பேராசிரியன் என்று வைத்துச் சம்பளம் வேறு கொடுக்கிறார்களே! இவனிடம் தயாராகிற பையன்கள் எப்படி உருவாவார்கள்?

அவர் நல்ல சிநேகிதர்தாம் எனக்கு. நான் அவரோடு பேசப் போவேன். அரை மணி அவரோடு பேசினால் அறுபது புத்தகங்களைப் படித்தாற் போலிருக்கும். சுகமாகப் பாடுவார். சுத்தசாவேரி, தேவகாந்தாரி, நாயகி இந்த ராகங்களைப் பாட ஆரம்பித்தால் போட்ட சங்கதியைத் திருப்பாமல் மணிக்கணக்கில் பாடுவார். அநாவசியச் சங்கதி எதுவும் வராது. அப்படியே ரசத்தைப் பிழிந்து பிழிந்து கொடுப்பார். அரசியல்தான் பேசுகிறாரே! என்ன தெளிவு! என்ன தீர்மானம்! சந்தேகம், குழப்பம் இதெல்லாம் பிறந்த ஊரிலேயே அவர் பிறக்கவில்லை. இலக்கியத்தில்தான் எவ்வளவு சிரத்தை, எவ்வளவு நோட்டம்! ஆதிகாலத்திலிருந்து இன்றுவரை, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் கிழக்கிலம் நம் தேசத்திலும் எப்படி எழுத்துப் போய்க்கொண்டிருக்கிறது என்று தெரியும் அவருக்கு. தமிழ்ப் பத்திரிகைகளையும் ஒன்று விடாமல் படிக்கிறாரே, அதைச் சொல்லவா? என் பெண்ணைப் போலவே நாலைந்து பத்திரிகைகளில் வரும் முப்பது தொடர்கதைகளைக் கன அக்கறையாகப் படித்து ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறாரே. அதைச் சொல்லவா? இவ்வளவுக்கும் அவருக்குப் பொழுது எங்கே இருக்கிறது? அந்தத் தலையில் இடம் எங்கே இருக்கிறது?

'சோறு, கவலை, சின்ன மரியாதைகள் என்றெல்லாம் மனிதனின் அன்றாடப் பிடுங்கல்களில் உழலாமல் பெரிய விஷயங்களிலேயே, உண்மையைத் தேடுவதற்கே உயிர் வைத்திருக்கிற ஆத்மா அது' என்றெல்லாம் இந்த நிமிஷம் நான் நினைக்கவில்லை. இந்தப் பிரமை, மயக்கம் எல்லாம் இன்ற காலையோடு போய்விட்டன. கௌரி கொடுத்த அதிர்ச்சியில் இவ்வளவும் கிடுகிடுவென்று தேக்குமரம் சாய்கிறாற்போலச் சாய்ந்துவிட்டன.

காதற் கடிதம் எழுதுவது தவறென்று மகா மகா ஞானிகள்கூடச்

சொல்லமாட்டார்கள். நானும் சொல்லவில்லை. சகுந்தலை எழுதினாள். ருக்மிணி எழுதினாள். கணவன் எழுதுவான். மனைவி எழுதுவாள். கணவன் மனைவி ஆகப் போகிறவர்கள் எழுதிக் கொள்வார்கள். நானகூட எழுதியிருக்கிறேன். நீங்கள் கூட எழுதியிருப்பீர்கள். (கோபித்துக் கொள்ளாதீர்கள். எழுதுவது தவறில்லை என்றுதான் சொல்லிவிட்டேனே.) இன்னும் எத்தனையோ பேர் எழுதுகிறார்கள். எழுதப் போகிறார்கள். புஷ்ப்பாணத்தைத் தொடர்ந்து வரும் சர்க்கரைப் பாணந்தான் அது. பாவம் இல்லை; தவறில்லை.

ஆனால் யார் யாருக்கு எழுதுவது?

கல்யாணமானவன், நாற்பத்தைந்து வயசாகப் போகிறவன், இரண்டு பெண்களையும் மூன்று பிள்ளைகளையும் பெற்றுத் தடிக்கம்பு மாதிரி நிற்கிறவனா எழுதுகிறது? சரி எழுதுட்டும், தன் சம்சாரத்துக்கு எழுதிக் கொள்ளக் கூடாதோ? அப்படி எழுதியிருந்தால் அவர் சம்சாரம் கௌரியிடம் வந்து, “என் கணவர் எனக்குக் காதற் கடிதம் எழுதியிருக்கிறார்” என்று சொல்லிக்கொண்டிருக்கவும் மாட்டாள். நானும் இப்படிப் பதைக்க மாட்டேன்.

கீழே குடியிருக்கிறவரின் பெண்ணுக்கு எழுதினால் அந்தக் கயமையை என்னென்று சொல்வது? வீட்டுக்காரன் என்றால் எது வேண்டுமானாலும் செய்துவிட முடியுமா என்ன?

என் நண்பர் பேராசிரியர் ரத்னம் இந்தக் கயமையைத்தான் செய்திருக்கிறார். “உன்னைப் பார்த்ததிலிருந்து தூக்கம் வராமல் தவிக்கிறேன். பனிக்கட்டி போன்ற உன் வதனத்தைக் காணும்போது நான் அடையும் பரவசம் . . . கண்ணே, மானே, தேனே!” இல்லையா, இந்த மாதிரி.

இவன் முட்டாளா, வஞ்சகனா, சுயவாளியா? பகவானே, எனக்குத் தலை சுற்றுகிறதே!

“தயமந்தி, பாவம்! அதுக்கு அழுது அழுது கண் மூஞ்சியெல்லாம் சிவந்து வீங்கிப் போயிட்டு நாம். காலமே குத்துவிளக்குமாதிரி வாசல்லே கோலம் போட வருமே. இன்னிக்குக் காணோம். என்னடாப்பா உடம்பு கிடம்பு சரியில்லையோன்னு நினைச்சேன். மீனாட்சியம்மா ஒரு கிண்ணம் காபிப்பொடி கடன் வாங்கிண்டு போயிருந்தா. அதைத் திருப்பிக் கொடுக்க வந்தா. வந்தவள் கரகரன்னு கண்ணாலே ஜலம் விட்டா. என்ன மாமி! என்னன்னு பதறிப் போய்க் கேட்டேன். அப்புறம் எல்லாத்தையும்

சொன்னா. வெக்கம் மானம் ஏதாவது இருக்கா, பாருங்களேன். மாடியிலே என்ன ஒய்யாரமா உலாத்தறது? மானத்தைப் பாக்கறது. மரத்தைப் பாக்கறது! பெரிய காளி தாசன்னு எண்ணம் போலிருக்கு!” என்ற மேலே பார்த்துக் காய்ந்தாள் கௌரி.

ஆமாம். ரத்னமையர் ஒன்றுமே தெரியாதவர்போல மேல்மாடியில் நின்று பொன்மேகங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். என்ன என்ன விஷமெல்லாம் அந்த மனசில் கொதித்துச் சமையலாகிக் கொண்டிருக்கிறதோ?

அவர் கண் திரும்பிற்று. என்னைப் பார்ர்ப்பார் போலிருந்தது. சட்டென்று ஜன்னலிலிருந்து முகத்தை இழுத்துக்கொண்டடேன்.

“மீனாட்சியம்மாளோட புருஷன் காலமே எட்டு மணிக்கு வீட்டை விட்டுப் போனவர்தானாம். மத்யான்னம் சாப்பிடக்கூட வரலையாம். டிபனுக்கும் வரலையாம்.”

“என்னது?”

எனக்குத் திகீர் என்றது.

“ஆமான்னா!” என்றாள் கௌரி.

குளம், கிணறு, ரெயில் என்று எனக்கு ஏதேதோவெல்லாம் கண்முன் வந்தன. ஓடிவரும் ரெயிலின் முன்னால் யாருக்குத்தான் குதிக்க முடியும்? தைரியம் வரும்?

எனக்கு உடல் பதறிற்று. வயிறு கனத்தது.

மானிகள் எதையும் செய்துவிடுவார்கள். எனக்கு உடம்பெல்லாம் என்னவோ செய்தது. மாடி அறையில் இந்தக் கோடிக்கும் அந்தக் கோடிக்கும் அலைந்தேன்; நின்றேன்; வானத்தைப் பார்த்தேன்; பல்லியைப் பார்த்தேன்; அந்த ரத்னமையனை அப்படியே கையில் பிடித்து நொறுக்கி...

மீனாட்சியம்மாளின் கணவர் சுந்தரம் இந்த அடுத்த வீட்டில் குடியிருக்கிறார் என்றே யாருக்கும் தெரியாது. அவர் உண்டு; அவர் காரியம் உண்டு. ஆபீசுக்குப் போவார்; வருவார். ஒரே பெண்; இரண்டு சின்னப் பிள்ளைகள். அந்தப் பெண்மீது இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது; அப்படி ஒரு வாஞ்சை. அது என்ன கேட்டாலும் கொண்டு சாய்த்துவிடுவார். அதற்குக் கல்யாணம் பண்ண வேண்டும்

என்று மாசம் நாற்றைம்பது ரூபாய் பத்து வருஷமாகப் பாங்கில் போட்டு வருகிறாராம். தம் செந்தச் சுகங்களையெல்லாம் குறைத்துக்கொண்டு, வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி, அதை எப்படியாவது நல்ல இடத்தில் கொடுத்துப் பார்க்க வேண்டும் என்ற ஆசை. இந்த மாசாந்தரச் சேமிப்புப் போதாதென்று கம்பெனி கொடுக்கிற நாலுமாதப் போனஸையும் ஏழு வருஷமாக அந்த நிதியிலேயே போட்டு வருகிறாராம். இதைத் தவிரப் பன்னிரண்டு பவுனில் இரண்டு சங்கிலி, வைரத் தோடு, ஒரு சுருகுமணிப் பதக்கம் போட்ட அட்டிகை இதெல்லாம் அந்தப் பணத்தில் சேரவில்லை.

இந்த மாதிரி சமயத்தில் தட்சகன் எலுமிச்சம் பழத்தில் வந்து புகுந்து பரீட்சித்து மகாராஜனைக் கடித்தமாதிரி இந்தக் காதற் கடிதம் வந்திருக்கிறதே! என்ன சோதனை இது?

மனிதனின் நம்பிக்கைகளை, ஆசைகளையெல்லாம் என்னவென்று சொல்வது? அதற்கெல்லாம் எத்தனை பகைகள், துரோகங்கள் காத்து நிற்கின்றன!

ஒரு வம்புக்கும் போகாத சுந்தரத்துக்கு ஏன் இப்படி ஓர் அதிர்ச்சி? அவர் யாருக்கு என்ன செய்தார்? ஓய் ரத்னமையரே! உமக்கு ஏன் இந்தத் துர்ப்புத்தி வந்தது?

வாசற்பக்கம் தற்செயலாகப் பார்த்தபொழுது, இரண்டு தள்ளு வண்டிகள் அடுத்த வீட்டு வாசலில் நின்றகொண்டிருந்தன. மேஜை, பீரோ, நாற்காலிகள் இரண்டு, கரி ஏறின வெந்நீர் அண்டா, ஒரு மெத்தை, பாய்கள், பாத்திரங்கள் போட்டுக் கட்டின மூன்று சாக்கு மூட்டைகள், விறகுக் கட்டைகள், அகப்பைக் கூடு, கோட் ஸ்டாண்டு, பழைய அரிக்கேன் இரண்டு, நிலைப்படியில் போடுகிற மிதியடிகள், கறுப்புத் தகரங்கள் எல்லாம் இரண்டு வண்டிகளிலும் ஏறிக்கொண்டிருந்தன.

சுந்தரம் கூட இருந்து வரிகயிற்றைப் போட்டுச் சமான்களைக் கட்டும் மூன்று ஆட்களையும் இரண்டு தள்ளுவண்டிகளில் பெட்டிகளும் மூட்டைகளும் இடங்கொண்டன.

மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்தார். அவர் முகத்தில் ஈயாட வில்லை.

“காலிபண்ணிண்டு போகிறாளாம், மீனாட்சியம்மா வீட்டில்” என்று கௌரி ஓடிவந்து சொல்லி, கீழ்நோக்கி வண்டிகளைப் பார்த்தாள்.

“வீடு கிடைத்துவிட்டதா?”

“அதுக்குத்தான் காலமே பிடிச்சு அலையோ அலைன்னு அலைஞ்சாராம் பாவம்! நாலு ப்ரோக்கரை இழுத்துண்டு அலைஞ்சாராம். எக்மோரில் நூத்திருபது ரூபாயிலே வீடு ஒண்ணு காலியாச்சாம். பரவாயில்லேன்னு மூணுமாச அட்வான்ஸைக் கொடுத்து முடிச்சிப்பிட்டாராம். ராத்திரி எல்லாரும் ஹோட்டலேந்து வரவழைச்சுச் சாப்பிடப் போறோம்; நாளைக்குச் சமையல் ஆரமிச்சுக்கறேன்னா மீனாட்சியம்மா.”

மானியென்றால் மானிதான் சுந்தரம். அவர் நல்ல தனத்துக்கு ஏற்ப வீடு கிடைத்ததே! அதையல்லவா சொல்ல வேண்டும்? கடவுள் அந்த மட்டும் நல்லவன் அல்லவா?

“என்ன ஆச்சரியம் பாருங்களேன். நேத்திக்குச் சாயங்காலம் இதுமாதிரி அவர் காலி பண்ணப் போறாக நாம நினைச்சிருப்போமா? அவாதான் நினைச்சிருப்பாளோ?” என்று விதியின் விளையாட்டுகளைப் புரிந்துகொள்ளாத கௌரி வியந்துகொண்டிருந்தாள். ஹிரோஷிமாவில் அணுக்குண்டை வீசிற்றே விதி ஓசைப்படாமல், அதை விடவா இது அதிசயம்?

ஏழு மணி இருக்கும். ‘அடுத்த வீட்டிலே போர்ஷன் காலியாயிருக்காமே’ என்று என் ஆபீஸில் என்னோடு வேலை பார்க்கும் குஞ்சுமணி வந்து வாசற்படியில் நின்றான். மந்தைவெளியில் இருக்கிறவனுக்கு அதற்குள் எப்படிச் சங்கதி எட்டியிருக்கும்? இதைவிட, சுந்தரம் காலி பண்ணினதா ஓர் அதிசயம்?

எட்டு மணி இருக்கும்.

“என்னய்யா! ஒய்!” என்று வழக்கம் போலக் குரல் கேட்டது. ரத்னமையர் தான். தடியன்!

அவர் குரலைக் கேட்டதும், “வாங்கோ வாங்கோ” என்று சங்கநிதி பதுமநிதி வந்தாற்போல வரவேற்பேனே; அதே நான், “என்ன, வாங்கோ” என்று புன்சிரிப்பை இடித்துத் தள்ளி உதட்டில் கொண்டுவந்து நிறுத்தி மனம் இல்லாமல் அழைத்தேன்.

அவர் என் முகத்தைப் பார்த்தார். ஆனால் புரிந்துகொள்ளவில்லை.

“என்ன, களைப்பாயிருக்கீர் இன்னிக்கு? வாரும், இப்படிக் காத்தாடப் பார்க்கிலே போய் உட்கார்ந்துட்டு வரலாம்“ என்றார்.

கௌரி புருவத்தைச் சுருக்கி விழியை உருட்டினாள்.

“எனக்கு உடம்பு என்னமோ போலிருக்கு” என்று இழுத்தேன்.

“அட வாரும்யா, ஒரு கப் காப்பி சாப்பிட்டால் எல்லாம் சரியாகி விடும். எனக்குச் சட்டைத் துணி வேற எடுக்கணும், கடைக்குப் போய்; வாரும்” என்றார்.

பேசாமல் கூட நடந்தேன்.

இந்த மனிதன் காபிக்குக் காசு, தான்தான் கொடுப்பான். இவன் கையாலா சப்பிடுகிறது? வேண்டாம் என்று மறுத்துவிட்டேன். சரியென்று நடந்தான். அரசியல் பேசினான். டென்னிஸ் பேசினான். ஜயராமன் பிடிலைப் பற்றிப் பேசினான். நான் ஏன் காதில் வாங்கிக் கொள்கிறேன்? நீ உபநிஷதமே பேசேன். நான் கேட்டுவிடுவேனோ? உன் வாயிலிருந்தா? அதுவும் இன்றைக்கா? பார்க் வரட்டும்! இன்னும் இரண்டு நிமிஷந்தான்! சிமின்டுப் பெஞ்சில் உட்கார்ந்து உன்னைக் கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டப் போகிறேனே! அப்போதல்லவா தெரியப் போகிறது?

பார்க்கில் கூட்டம் எல்லாம் கரைந்துவிட்டது. இந்தச் சமயத்தில்தான் நாங்கள் வந்து உட்காருகிற வழக்கம்.

சிறிது நேரம் மௌனம், சுற்றிலும் நீல விளக்குகளையும் சூரியகாந்திப் பூக்களையும் வரப்பு மலர்களையும் பார்த்துக்கொண்டேயிருந்தோம். எப்படிக் கேட்கிறது?

“இன்னும் நாலைந்து பெரிய மரமாக வைத்துப் பயிராக்கினால் இந்த இடம் பிரமாதமாக இருக்கும். இதையெல்லாம் எங்கே கவனிக்கிறான்கள்? அவனவனுக்குச் சம்பளத்தை வாங்கிண்டு வேலையைத் தட்டிக் கழிக்கிறதுக்கே போது சரியாயிருக்கு. இல்லாவிட்டால் லஞ்சம் வாங்கத் தெரியும்” என்று ஆரம்பித்தார் ரத்னம்.

பிடித்துக் கொண்டேன்.

“வேலையைத்தானே தட்டிக் கழிக்கிறான்கள்? லஞ்சந்தானே வாஙகுகிறான்கள்? குடியிருக்கிறவர்களின் பெண்ணுக்குக் காதல் கடிதம் எழுதவில்லையே அவன்கள்?” என்று தொபக்கென்று கொட்டிவிட்டேன். உதடும் கன்னச் சதைகளும் நடுங்கின.

“ஓய் ஓய், உமக்கு எப்படிய்யா தெரியும்?” என்று பளீரென்று திரும்பினார். அந்தத் திரும்பின சுருக்கு? நான் சொன்னது அப்படிச்

சுளீரென்று அடித்துவிட்டது அவரை

"எனக்குத் தெரியும்!"

"யார் சொன்னா?"

"யாரோ சொன்னா?"

"அவரே சொன்னாரா?"

"அவர் அவ்வளவு மானம் இல்லாதவரா இருந்தா, ஏன் வீட்டைக் காலி பண்றார்?"

"வீட்டைக் காலி பண்ணத்தானே செஞ்சது இது?"

"காலி பண்ணச் செஞ்சதா? என் கண்ணிலேயே பொடி தூவறேளே ஸார்!"

"நீர் இந்த மாதிரி குடி வச்சு, அநுபவிச்சிருந்தீர்னா தெரிஞ்சிரக்கும். பத்து வருஷம் சிக்ஷை சொல்லிண்டேன் ஐயா! அந்தச் சங்கீதமே எனக்கு மறந்து போயிடும் போல ஆயிடுத்து! உருப்படாம போயிடும் போல ஆயிடுத்து. காலமே சூரியாதயத்துக்கு. ஆரமிச்சாள்னா, ராத்திரி பதினொரு மணிவரைக்கும் சினிமாப் பாட்டுக் கேக்கறாய்யா அந்தப் பொண்ணு. அது போறாதுன்னு அவரக்குத் தங்கைபிள்ளை இருக்கானே; அவன் எம்.ஏ. வாசிக்கிறவனாம். ரேடியோவில் ஏதாவது நல்ல சங்கீதம் கேட்டால் உடனே திருகைத் திருகிச் சினிமாப் பாட்டிலே கொண்டு முள்ளை நகர்த்திப்பிடறான். கூடக் கையைத் தட்டித் தட்டி லொட்டு லொட்னு தாளம் வேற போட ஆரமிச்சுடறான். சேகைஷயர்கிட்ட நாலு வருஷம் சொல்லிண்டடேன்யா. அப்படியும் வேணுப்பிள்ளைகிட்ட ஆறு வருஷம் சொல்லிண்டேன். நான் பட்ட அவஸ்தை எனக்குன்னா தெரியும்? மெதுவா வையுங்கோன்னு சொல்லிச் சொல்லிப் பார்த்தேன். கேட்கலே. காலி பண்ணுங்கோன்னு சொல்லிப் பார்த்தேன்; கேட்கலே. மயிரைப் பிடிச்சிண்டு கத்தணும் போல ஆயிட்டுது. ரேடியோப் போதாதுன்னு அவ அப்பா ஒரு தட்டு மிஷினும் நூறு சினிமா ரிகார்டும் வாங்கிக் கொடுத்திருக்கார். ரேடியோ இல்லாத சயமத்திலே அதை வச்சுடறா பொண்ணு. என்னைக் கணுக் கணுவாச்சிதைச்சு நாலு வருஷம் சித்திரவதை பண்ணிருக்காய்யா அந்தப் பொண்ணு. கடைசிலே அந்தப் பையன் படிப்பை முடிச்சிண்டு போன வாரம் ஊருக்குப் போனான். சமயம் வந்துதுடான்னு வச்சேன் வத்தி."

எப்பொழுதுமே சிரித்துப் பேசுகிற ரத்னத்தின் மூக்கு மலர்ந்து கண் அகன்று கிடந்தது. அவ்வளவு கோபம்; ஆத்திரம்!

"நேத்திக்குச் சாயங்காலம் நான் ஜெயம் பிடில் கேட்டுண்டே இருக்கேன். அதைக் கேக்க முடியலியாம் அந்தப் பொண்ணுக்கு. திருகினாளே பார்ப்பம். ஒரு பெரிய ராட்சகன் நடுக்குக் குரல்லே 'வாழ்விலே காதலே இன்பம்'னு பெரிசா ஒரு அஞ்சறைப் பொட்டி ராகத்திலே கத்தியிருக்கான் பாரும்! . . . அப்பா! நல்ல வேளையா ஒழிஞ்சுதுகன்டாப்பா. இப்ப நினைச்சாலே பைத்தியம் புடிச்சிடும் போலிருக்கு!" எனறு மருள மருள விழித்தார் ரத்னம்.

நான் என்ன சொல்ல?

"அதுக்காக இப்படியா செய்வா? ஒரு கண்யம் நேர்மையெல்லாம் கிடையாதா எதுக்கும்?"

"கண்யமா? நான் உசிருக்கு மன்னாடறேன்! கண்யமாம்! ஏன்யா. நீர் ஏதோ கொஞ்சம் சங்கீதத்திலே சுவையுள்ளவர்னு நினைச்சேன். நீரும் அந்தக் கட்சிக்கே போயட்டீரா?"

"அந்தப் பொண்ணு ரொம்ப அழுததாம் ஸார்!"

"எல்லாரும் அழுதுண்டு ஓடணும்னுதானே பண்ணினேன்?"

"அவர் போலீஸூக்கு ரிபோர்ட் பண்ணியிருந்தா அப்பத் தெரியும் சேதி! இல்லை, ரெண்டு ஆளை விட்டிருக்கட்டும்!"

"விட்டா நான் எழுதலேன்னு சொல்லிட்டுப் போறேன். என் பெண்தானே எழுதினா?"

"உங்கபெண்ணா?"

"ஆமாம். அவளுக்கும் ஆறு வருஷம் சங்கீதம் சொல்லி வச்சிருக்கேன். ஏற்கனவே இதெல்லாம் காதிலே பட்டாலே நடுவள். இப்ப, பிரசவத்துக்கு வேற வந்திருக்கா. அவளைப் போட்டு இப்படியா வதைக்கிறது? நேத்திக்கு அந்தச் சுந்தரமும் மீனாட்சியும் கோவிலுக்குப் போயிருந்தா. அந்தத் தமயந்தி தனியா இருந்தது. எங்க வீட்டிலேயும் எல்லாம் பக்கத்துக் கோயிலுக்குப் போயிட்டு வறேன்னு போச்சு. என் பெண் ஒரு கவரை ஜன்னலாலே அந்த உள்ளுக்குள்ளே தள்ளிவிட்டுப் போனா. எனக்கு என்னன்னு புரியலே. திடீர்னு இப்ப சாயங்காலம் வந்து நான் இந்த க்ஷணமே ஏன்னு கேக்க வாயெடுத்தேன். என் பொண்ணு

பண்ணினா. வண்டியெல்லாம் போனப்பறந்தான் எங்கிட்டச் சொல்லிச் சொல்லிச் சிரிக்க ஆரம்பிச்சா அவ."

"உங்க பொண்ணா செஞ்சா?"

"நீரே வந்து கேளுமேன்."

"என்ன ஸார் இது?"

"என்ன என்ன?" என்று திருப்பிக் கேட்டார் ரத்னம்.

நான் என்ன சொல்கிறது?

"ஏதாவது விபரீதமா ஆயிருந்தா?" என்றேன்.

"இப்ப என்ன விபரீதமாயிட்டுது? ஆளைத்தேளை விட்டு அடிக்க வந்துடலே. நீர் சொன்னாப்பல போலீஸுஜக்குப் போகலே. வீடு காலியாயிடுத்து."

"இதென்ன ஸார் அக்ரமம்?"

எனக்கு வெகுநேரம் கழித்துத்தான் சிரிப்பு வந்தது.

"என் பொண்ணை லேசுப்பட்டவள்னு நினைச்சுப்பிடாதீரையா. அசட்டுப் பிசட்டுன்னு மாட்டிக்கமாட்டா அவ. ஆழம் தெரியாம காலை விடமாட்டா."

இரவு வீடு வந்ததும் கௌரியிடம் சொன்னேன்.

"என்னன்னா கதைக்கிறேள்?" என்று ரத்னமே நேரில் நிற்பதாக என்னை நினைத்துக் கொண்டு விழியை உருட்டினாள் அவள்; "என்ன! முழுப் பூசனிக்காயைச் சோத்திலே மறைச்சாறது! இதை நிஜம்னு நம்பிண்டு கேட்டுண்டு வந்தேளா நீங்க!"

கதையாம்! பூசனிக்காயாம்! சோறாம்! நான் என்னத்தைக் கண்டேன்? அவர் சொன்னதைச் சொல்கிறேன். நீங்கள் கூடச் கதைக்கிறீர்கள் என்று சொன்னாலும் சொல்லுவீர்கள். எனக்கு அப்படியெல்லாம் புளுகத் தெரியாது. நான் என்ன தெய்வமா? யானையைப் பிராக்கட்டில் போட்டு அசுவத்தாமாவின் உயிர் போய்விட்டது என்று ஜகப்புரட்டு பண்ண? சாதாரண மனிதன்.

கலைமகள் தீபாவளி மலர், 1961

# விரல்

மதிப்பிற்கும் அன்பிற்கும் உரிய திரு. ஏ.ஏ. ஐயர் அவர்களுக்கு, வணக்கம் பல. மெய்யான மதிப்பும் அந்தரங்கமான அன்பும் கொண்டுதான் உங்களை நான் இவ்வாறு அழைக்கிறேன். உங்களுடைய சிவந்த மேனி, வாட்ட சாட்டமான தோற்றம், கம்பீரமான பார்வை, அகன்ற பரந்த முகம், நீண்ட கூர்ந்த மூக்கு, நிமிர்ந்த மார்பு, முழுக் கால் சட்டை, அதற்கு மேல் மூடிய கோட்டு, கோட்டுப் பையில் விழிக்கிற கடிகாரத்தைப் பித்தானோடு இணைக்கும் தங்கச் சங்கிலி, நெற்றியில் மூன்று தங்கக்கீறுகள்போல் துலங்கும் சந்தனம், நடுவில் குங்குமப் பொட்டு, எல்லாவற்றையும்விடக் கம்பீரமாக அமர்ந்துள்ள வெள்ளைத் தலைப்பாகை, அதன் நடுவில், பிடிப்புக்காகத் தெரிந்தும் தெரியாமலும் மின்னுகிற தங்கக் குண்டூசியின் தலை, காலில் சிவப்புப் பூட்ஸு, வாயில் ஏலம் கிராம்பு பன்னீர்ப் புகையிலையுடன் மணக்கும் கும்பகோணத்து வெற்றிலை, அந்த மணத்தில் தோய்ந்துவரும் உங்கள் வெண்கலச் சொற்கள் – இத்தனையும் யாரைத்தான் ஈர்க்காது? ஆயிரம் பேர், பதினாயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டத்தில்கூட உங்களைப் பார்ப்பவர்கள் உங்களையேதான் பார்த்துக் கொண்டிருப்பார்கள். வீதியில் நீங்கள் போனால் உங்களை நின்று பார்க்காமல் போக முடியாது. உங்கள் பேச்சும் அப்படித்தான். நீங்கள் அந்தக் காலத்துப் பி.ஏ. பிரதி வெள்ளிக்கிழமையும் சிப்பந்திகளையும் குமாஸ்தாக்களையும் சேகரித்து ஒரு பத்து நிமிஷம் பேசுவீர்களே, அப்பொழுதெல்லாம், அந்த ஆங்கில நடையைக் கேட்கும் போதெல்லாம், பர்க், மெக்காலே, கிப்பன் – இவர்களுடைய நினைவெல்லாம் வருவதாக ஆராவமுது சொல்லுகிறார். எனக்கு என்ன தெரியும்? நான் வெறும் எஸ்.எஸ்.எல்.ஸி. ஆனால் பேச்சு உத்திகள் புரியாவிட்டாலும் நீங்கள் பேசுகிற ஆங்கிலத்தை இனிமேல் இந்த நாட்டில் கேட்க முடியாது என்று அடிக்கடி ஒரு வருத்தம் ஏற்படுவதுண்டு. உங்களுக்குக் கீதை முழுக்க நெட்டுருவா? குறள் முழுவதும் நெட்டுருவா? கம்பராமாயணம் தலைகீழ்ப் பாடமா? பாகவதத்தில் இத்தனை சுலோகங்களை எப்படி உங்களுக்கு ஞாபகம் வைத்துக்கொள்ள முடிகிறது? காளமேகம், இரட்டைப் புலவர், படிக்காசுப் புலவர் என்று பல பாட்டுகள் சொல்லிச் சிரிக்க அடிப்பீர்களே அவற்றை எங்கே கற்றீர்கள்? இவைகளுக்கெல்லாம் உங்களுக்கு நேரம் எங்கே இருந்தது? நிர்வாகம், கணக்கு, சம்பளம், படி, லீவு முதலியவை பற்றித்

தலையணை தலையணையாகச் சர்க்கார் அவ்வப்போது வெளியிடும் புத்தகங்களையும் திருத்தல்களையும் இப்படிக் கரைத்துக் குடித்திருக்கிறீர்களே. அதற்குத் தான் உங்களுக்கு நேரம் எங்கிருந்தது? இருக்கிறது? . . . என்னவோ . . . எனக்கு ஒன்றுமே சொல்லத் தோன்றவில்லை. ஒரு சர்க்கார் அதிகாரி எப்படி எல்லாம் இருக்க வேண்டும் என்பதற்குத் தனியாகப் புத்தகம் எழுதவேண்டியதில்லை; பாடம் நடத்த வேண்டியதில்லை. உங்களை ஒரு மாதம் பாத்துக்கொண்டிருக்கச் சொன்னால் போதும்.

ஆபீஸில் மட்டும் அல்ல; ஆபீசுக்கு வெளியே, வீட்டிலும் உலகத்திலும் எப்படி இருக்க வேண்டும் என்பதையும் உங்களைப் பாத்துத்தான் கற்றுக்கொள்ள வேண்டும். நீங்கள் வீடு வந்தவுடன் என்ன செய்கிறீர்கள்? மூன்று சீட்டு ஆடுகிறீர்களா? கழுதை ஆடுகிறீர்களா? ரம்மி ஆடுகிறீர்களா? கிளப்புக்குப் போய் அரட்டையடிக்கிறீர்களா? நல்லது கெட்டது என்று வித்தியாசம் தெரியாமல் எல்லா நாடகங்களையும், எல்லாச் சினிமாக்களையும் பார்த்துக் கெக்கக்கெக்கே என்று சிரித்து வீண் பொழுது போக்குகிறீர்களா? இல்லவே இல்லை. வந்தவுடன் கைகால் கழுவி, உப்புமாவோ, பஜ்ஜியோ, சொஜ்ஜியோ நன்றாகச் சாப்பிட்டு, நல்ல காபியாகக் குடித்து, பிறகு உங்கள் பிள்ளையையே விட்டு இன்ஸுலின் ஓர் ஊசி போடச் சொல்லி (டயபிடீஸ் வந்து விட்டதென்று நல்ல பண்டங்களை ஒதுக்கிவிடும் கோழையல்ல நீங்கள்— ரசிகர்களில் முதன்மையானவர் என்று நினைக்கும்போது என் மதிப்பு ஒரு பிடி உயர்ந்து விட்டது.) சிறிது ஓய்வெடுத்து, பிறகு ஸந்தியாவந்தனம் செய்து விட்டு, அரை ஆள் உயரத்திற்குத் தஞ்சாவூர் ராமபடமும் கிருஷ்ணபடமும் வீற்றிருக்கும் பூஜை அறையில் அமர்ந்து, நீங்கள் வீணை வாசிப்பீர்கள், வாசித்துக்கொண்டே பாடுவீர்கள். மாற்றலாகி இங்கு வந்து ஏழு வருஷமாகியும் உங்களுக்கு வீணைவாசிக்கத் தெரியும், பாடத் தெரியும் என்று யாருக்குமே சொல்லாமல் இருந்த உங்கள் நிறைகுட அறிவையும் அடக்கத்தையும் சிறியேன் எப்படி அளவிட முடியும்?

மூன்றாம் வருஷம் "வாங்கடா பசங்களா!" என்று ஸ்ரீராமநவமியன்று நீங்கள் எங்களை அழைத்தீர்கள். ஏதோ சுண்டல், பானகம், விசிறி கிடைக்கும் என்று வந்த எங்களுக்கு ஒரு வீணை விருந்து காத்திருக்கிறது என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? நான் பி.ஏ. இல்லை. ஆனால் மூன்று சபாக்களில் அங்கத்தினராக இருப்பதால் ஏராளமாகச் சங்கீதக் கச்சேரிகள் கேட்டிருக்கிறேன். ஆனால் அன்று நீங்கள் பாடியதையும், பாடிக்கொண்டே வீணை வாசித்ததையும் கேட்டபோது எனக்கு நெஞ்சைக் கட்டிக்கட்டி

அடைத்துக் கொண்டு வந்தது. பக்கத்திலிருந்த திருமலை நான் விசும்புவதைப் பார்த்து "என்னய்யாது?" என்று கேட்டான். எனக்கு வெட்கமாயிருந்ததால், காலில் ஆடுசதையில் அப்பொழுது புறப்பட்டுக்கொண்டிருந்த ரத்தக்கட்டியைக் காண்பித்துச் சமாளித்துக்கொண்டேன். நீங்கள் பாடிய தினுசே புதிதாக இருந்தது. சங்கதியே போடாமல் தியாகராஜர், கோபாலகிருஷ்ண பாரதியார் கீர்த்தனைகளை அப்பட்டமாகப் பாடினீர்கள். உணர்ச்சியில் தோய்ந்து உருகினீர்கள். எங்களை, முக்கியமாக என்னை, உருக்கிவிட்டீர்கள். அப்புறம் விசாரித்ததில் தாங்கள் பெரிய சங்கீத பரம்பரையில் வந்தவர் என்றும், உங்கள் பாட்டி அறுபது வருஷம் முன்னால் விடியற்காலையில் காவேரிக்குக் குளிக்கப் போகும்போது "ஹரே, ராமையா" என்ற பாட்டை உரக்கப் பாடிக்கொண்டு போகும் போது, காற்று, மரங்கள் எல்லாம் ஸ்தம்பித்துப் போய்க் கேட்டுக்கொண்டிருக்கும் என்றும் ஸி.ஏ.ஓ. சொன்னார். உணர்ச்சியோடு, உண்மையாகப் பாட வேண்டுமானால், அங்கே தான் கேட்க வேண்டும் என்று உங்கள் பாட்டியிடம் வந்து பல வித்துவான்கள் அந்தக் காலத்தில் பாடச் சொல்லிக் கேட்பார்களாம். இதை எல்லாம் கேட்கும்பொழுது எனக்கு உணர்ச்சி வசத்தினால் இதயமே வெடித்து விடும்போல் ஆகிவிட்டது. நாம் பணி செய்வது ஒரு வெறும் சர்க்கார்க் கணக்குத் தணிக்கை அதிகாரியின் கீழ் அல்ல – ஒரு மகான் கீழ் என்ற உணர்வு மேலிட்டது. ஏதோ மாதம் தொள்ளாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கி, சட்டை செருப்பு அணிந்துலவும் வெறும் சர்க்கார்ப் பிரதிநிதி அல்ல நீங்கள். ஒரு மகத்தான பண்பாட்டில், நாகரிகத்தின் பிரதிநிதி. இப்பொழுதெல்லாம் உங்களைப் பார்க்கும்போது எனக்கு நிழலும் சோலையும் மண்டின காவேரி நதியின் முன் நிற்பதுபோல் இருக்கிறது. உங்கள் குரலைக் கேட்கையில், அந்த நதியின் சோலையையும், சுற்று வெளியையும் நிரப்பும் குயில்களையும் நீச்சோக் குருவியையும் கேட்பது போலிருக்கிறது. உங்களைப் பணிந்து வணங்குவதைத் தவிர நான் வேறு என்ன செய்ய?

உங்கள் மீதுள்ள பயபக்தியினால்தான் நான் கீழ்க்கண்டவற்றையும் எழுதுகிறேன்.

உதவி அக்கௌண்டண்ட் மகாலிங்கம் நாலைந்து நாளாக என்னென்னவோ பிதற்றிக் கொண்டு திரிகிறான். ஏ.ஏ. ஐயர் என்றால் அசல் ஆஷாடபூதி ஐயர் என்கிறான். எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. "ஓய், மகாலிங்கம், அப்படியெல்லாம் பெரியவர்களைப் பற்றிச் சொல்லாதீர். ஐயர் ரொம்பவும் பெரியவர். அவர் வெறும் சர்க்கார்

அதிகாரி அல்ல. பரம ஞானி; வித்துவான், அவரைச் சொன்னால் நாக்கு அழுகிவிடும்" என்று பதில் சொன்னேன்.

"நீ சொல்கிற அதே காரணத்தினால்தான் நான் அப்படி அவரை நினைக்கிறேன்" என்றான் அவன். அதன்பிறகு அவன் சொன்னவற்றையும் சொல்லிவிடுகிறேன் சுருக்கமாக.

நீங்கள் ஒவ்வொரு தடவையும், கொச்சி என்ன, கோயம்புத்தூர் என்ன, திருச்சி என்ன, திருவனந்தபுரம் என்ன, மதுரை என்ன, மைசூர் என்ன, இந்த ஊர்களுக்கெல்லாம் தணிக்கைக்குப் போய்விட்டு வரும் பொழுதெல்லாம் ரெயிலுக்கு டிக்கட் வாங்குவதில்லை. வண்டி புறப்படும் சமயத்திற்கு முதல் வகுப்பில் ஏறிக்கொண்டு ஹோல்டாலை விரித்து, தட்டிக் கொட்டி, கதவுகளைச் சாத்தி, தாழிட்டு, பாதுகாப்புக் கொக்கியையும் தள்ளி விட்டு, விளக்கை அணைத்து நிம்மதியாகப் படுத்து உறங்கிவிடுவீர்களாம்.

"நீயும் நானுமாயிருந்தா, பிச்சைக்காரனை எழுப்பறாப்பல எழுப்பி நம்மை டிக்கட் கேக்கறான் டீஎக்ஸார். நாமெல்லாம் கபோதி மூணாங் கிளாசுதானே? அய்யர்வாளை யார் எழுப்ப முடியும்? முதல் வகுப்புப் பிரயாணின்னா? பகவானுக்கு ராத்திரி ரெண்டுமணி மூணு மணின்னு நெனச்சப்பல்லாம் திருப்பள்ளி எழுச்சி பாடலாம். முதல் வகுப்புப் பிரயாணிகிட்ட மூச்சு விட முடியுமா? அவர் நிம்மதியாகத் தூங்குவர். சென்டிரல் வந்தவுடன், ஹோல்டாலைப் போர்ட்டரை விட்டு இறக்கச் சொல்லிக் கீழ நிப்பர். பீ செக் ஷன் குமாஸ்தா இருக்கானே அய்யாத்துரை, அவன் அவருக்காக ஒரு ப்ளாட்பாரம் டிக்கட்டை வாங்கி வச்சுண்டு தயாரா வந்திருப்பன். கூட்டத்தோட கூட்டமா ஹோல்டால் போகும். இவா ரெண்டு பேரும் ஹாய்யா நடந்து ஒரு டாக்ஸியை வச்சிண்டு வீட்டுக்குப் போய்ச் சேருவா."

"ஓய், மகாலிங்கம் – இது என்ன ஐயா பிதற்றல்!"

"நானா பேத்தறேன்! ருஜூ வச்சிருக்கேன்யா ருஜூ! . . . மனுஷன் ஜன்மாயுசிலே டிக்கிட்டு வாங்கினது கிடையாதுய்யா . . . ஏதாவது ஒரு நாளைக்குத் தப்பித் தவறி டிக்கிட்டுக் கேட்டான்னா கேட்டிலெ, 'என் பர்ஸனல் கிளார்க்கிடந்தான் என் கடுதாசி, பர்ஸ், டிக்கிட்டு, இன்னும் மத்த டாகுமெண்ட்ஸ் எல்லாம் இருக்கு. அவன் அதோ வரான்'னு நகர்ந்துடுவர் இவர். இவர் என்ன உன் மாதிரியும் என் மாதிரியுமா இருக்கார்? நம்ம மூஞ்சியிலேயும் பார்வையிலியுந்தான் எழுதி ஒட்டிருக்கே, குமாஸ்தான்னு!

அவரைப் பார்த்தா ஏதோ சமஸ்தானத்துத் திவான்கள் மாதிரின்னா இருக்கார்? உசரம்! பார்வையிலே மிடுக்கு! அப்பேர்ப்பட்டவர் பின்னாடி இப்படிக் கையைக் காமிச்சார்னா, ஏன்யா வாயைத் திறக்கறான் அப்பறம்?"

"ஓய், நான் இதை நம்பவே மாட்டேன்."

"நீ நம்பி எனக்கு என்ன ஐயா ஆகணும்? ருஜூவெல்லாம் சேத்து வச்சிருக்கேன். சேத்து எழுதி நேர அவருக்கும் மேற்பட்ட அதிகாரிகளுக்கும் அனுப்பிச்சுட்டுப் போறேன்."

"ருஜூவா? ஏதுய்யா உமக்கு ருஜூ?"

"செப்டம்பர் இருபதாம் தேதி கொச்சியிலேந்து ஏ.ஏ. ஐயர்னு முதல் வகுப்பிலே ஏறினாரா? இல்லை. பதினஞ்சு டிக்கட் ரிஸர்வ் ஆயிருக்கு. இவர் பேர் இல்லை. வேற டிக்கட் விற்கவில்லை. அப்படியானா இவர் அந்த வண்டியிலே வந்து இறங்கினாரே, எப்படி? போன மே மாசம் ஆறாம் தேதி இவர் வந்த வண்டிக்குக் கடலூரிலே ஒரு முதல் வகுப்புக்கூட விக்கலியே! இவர் எப்படி அங்கேர்ந்து ஏறிண்டு வந்தார்? அந்த வண்டியிலே வந்ததாக எழுதிப் பணம் வாங்கிண்டிருக்காரே. யாரு வாங்குவா? பரம ஞானியா? ஆஷாடபூதியா? . . . இவனைத் தொலைச்சுட்டுன்னா மறுகாரியம் பாக்கப் போறேன். அந்தந்தத் தேதிக்கு அந்தந்த ஸ்டேஷன் மாஸ்டர் கிட்டேருந்து எழுத்து மூலமா வாங்கி வச்சிண்டிருக்கேன்யா. சும்மா தகரடப்பா மாதிரி கத்தறேன்னு நெனச்சுக்காதே."

"நன்னாக் கத்தும். நான் வாண்டாங்கலெ. ஆனா என் கேள்விக்கு மாத்திரம் பதில் சொல்லிபுட்டுக் கத்தும்."

"என்ன கேக்கப்போறே நீ?"

"நம்ம ஐயர் நீர் சொல்றபடி செஞ்சதாகவே வச்சுப்பம் — "

"வச்சுப்பமா? செஞ்சிருக்கார்; முகாந்தரம் வச்சிருக்கேங்கேறன் . . . "

"சரி, செஞ்சார். உமக்கென்ன அதனாலே?"

"எனக்கென்னவா? பொகு நியாயமாயிருக்கே! யார் காசுய்யா? சர்க்கார் காசு. அதாவது என் காசு, உன் காசு — வரி கொடுக்கறகாசு. இதோட காலணா செலவழிக்காம, பிரயாண அலவன்சுன்னு ஒவ்வொரு தடவையும் நூறு இருநூறுன்னு வாங்கிண்டிருக்கான். கொட்டிக்கத்தான்

கொட்டிக்கிறானே, அந்த ப்ளாட்பாரம் டிக்கட்டை வாங்கிண்டு வந்து ஓரோரு யமகண்டத்தையும் தாண்ட வக்யறானே, அவனுக்கு ஒரு அஞ்சு பத்தை வீசி எறியப்படாது? அது வாயில்லாப் பூச்சி. இவன்வெறும் ஆஷாடபூதி மட்டும் இல்லேய்யா, நன்றிகெட்ட மிருகம். இது எத்தனை சங்கீதம் படிச்சா என்ன, சாஸ்திரம் படிச்சா என்ன?”

“அது சரி, நீர் இப்படிக் கச்சை கட்டிண்டு கிளம்புவானேன்? உமக்கு ஏதாவது கெடுதல் பண்ணினாரா அவர்?”

“இது போராதா? எனக்கு வேற கெடுதல் பண்ணணுமா? போன வருஷம் மேல மாவரத்துக்குப் போய் இருபது நாள் தங்கி, ஆபீஸ் கணக்கெல்லாம் தணிக்கை பண்ணினதாக எழுதி இருபது நாளைக்கு அலவன்ஸ் வாங்கியிருக்காரையா உம்ம பரமஞானி. ஆனா இவர் அங்க போய்த் தங்கினது ரெண்டு நாள்தான்; முழுக்க இருபது நாளும் இருந்தவன் இவர் குமாஸ்தாதான். இதே மாதிரிதான். நாலு நாள் இருந்தா, பதினாறு நாள்னு எழுதிப் பணம் வாங்குவர். மூணு நாள் இருந்தா, பத்து நாள்.”

“உமக்கு ஏன் அவர்மேல் இத்தனை கோபம்?”

“பேசாம இருந்தாக் கோபம் வராது. வெள்ளிக்கிழமை வெள்ளிக் கிழமை நம்மை எல்லாங் கூப்பிட்டு வச்சு, தர்மக்கூட்டம் நடத்துவானேன்? உபதேசம் பண்ணுவானேன்? இவர் படிச்சவர்னா மேலதிகாரிகிட்டக் காமிச்சுக்கட்டுமே. இவருக்குப் பேசத் தெரிஞ்சா வேலையை விட்டுப்பிட்டுத் தேர்தலுக்கு நிற்கட்டுமே. நம்மை எல்லாம் கூப்பிட்டு வச்சிண்டு உபதேசம் பண்றது. இன்னிக்கு யார் யாரு மீட்டிங்குக்கு வரலேன்னு குறிச்சு வச்சிண்டு, மறுநாளைக்குக் கூப்பிட்டுக் கிண்டல் பண்றது. ‘நீங்க ரொம்பப் பெரியவா. நான் பேசினாக் கேக்கமாட்டேள். பாலிடிஷீயன்ஸ், மகரிஷிகள் அப்படி வந்து பேசினாத்தான் கேப்பேள்’ங்கிறது. சிரிக்கிறது. ரிப்போர்ட்டிலே சுமார்தான்னு எழுதறது . . . தொலைச்சுப்பிட மாட்டேன் இவனை! இந்த அத்தாட்சிகளை வச்சு ஒரு புகார் எழுதி அனுப்பப்போறேன். மொட்டைக் கடுதாசி இல்லே. என் கையெழுத்தையே போட்டு அனுப்பப் போறேன். அடுத்த மாசம் இவனை டிஸ்மிஸ் பண்ணிக் கம்பி எண்ண வைக்கிறேனா இல்லியா பாரும்!”

இதுதான் எனக்கும் மகாலிங்கத்துக்கும் இடையே நடந்த பேச்சு. அவன் எழுதியுள்ள புகார்க் கடிதத்தையும் அத்தாட்சிகளையும் பார்த்தேன். அந்தப் பயல் பொய் சொல்லவில்லை. வீறாப்பாகச் சொல்லவில்லை.

மெய்யாகவே தன் கட்சிக்கான ஆதரவுகளைப் பலமாகச் சேர்த்து வைத்துக்கொண்டிருக்கிறான். அந்தப் பாவி அதோடு நிற்கவில்லை. யுத்த காலத்தில் நீங்கள் உங்கள் சொல்வாக்கைப் பயன்படுத்தி ஆறு கடைகளில் சேர்ந்தாற்போல உணவு, மண்ணெண்ணெய் முதலிய ரேஷன்களை வாங்கி, சமாதான காலத்தில் இருப்பதைவிட ராஜபோக வாழ்வு வாழ்ந்ததாகவும், கடைசியில் கண்டுபிடிக்கப்பட்டுத் தேவதாஸ் என்ற குமாஸ்தாவினால் காப்பாற்றப்பட்டதாகவும், அதற்குப் பிரதியாக அந்தத் தேவதாஸுக்கு மூன்ற வருஷச் சம்பள உயர்வை நீங்கள் நிறுத்திவிட்டதாகவும் ஒரு கதையைச் சொன்னான். பிரமாணமாகச் சொல்கிறேன். எனக்கு இதையெல்லாம் நம்ப மனசு இடங்கொடுக்கவில்லை. இந்த ருஜூக்கள் இவ்வளவு ஆணி அறைந்தாற்போல இல்லாவிட்டால் நான் நம்பியே இருக்க மாட்டேன். நம்பும்படி என்னை அந்தக் கிராதகன் செய்து விட்டான்; அவனுடைய ருஜூக்கள் செய்து விட்டன. அதற்காக என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்.

இதையெல்லாம் கேட்ட பின்பும் பார்த்த பின்பும் எனக்கு இராத் தூக்கமே போய்விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். எனக்கு உங்கள் விரல்கள்தாம் கண்முன் நிற்கின்றன. தாசரதே என்ற ராமனையே தடவுவதுபோல் வீணையின் தந்திகளைத் தடவுகின்றன உங்களுடைய இடக் கை விரல்கள், “சபாபதிக்கு வேறு” என்று உங்கள் விரல்கள் தில்லை ஈசனைத் தொட்டுத் தடவிப் புளகிப்பதுபோல் வருடுகின்றன. அந்தப் புளகமெல்லாம் காதில் பாயும் அளவுக்குத் தந்தியை மீட்டி உங்கள் வலது விரல்கள் இன்னொலியை எழுப்புகின்றன. நான் இந்தப் போரானந்தத்தை அனுபவித்தவனாயிற்றே. அதனால் எனக்கு ஒரு சந்தேகம். இதே விரல்கள் எப்படிப் பொய்ப் பிரயாணப் படிகளை வாங்கக் கையெழுத்துப் போடும்? இரண்டு நாள் தணிக்கை செய்துவிட்டு இருபது நாள் செய்ததாக எப்படி எழுதும் டிக்கட்டுக்கோ, பணத்துக்கோ அசையாத இந்த விரல்கள் எப்படி அந்தப் பணத்தைச் செலவழித்ததாகக் கையெழுத்திட்டுப் பணம் வாங்கிக் கொள்கின்றன? வீணைக்கு அசையும் விரல்கள் இந்த வில்லங்க வீணைகளை எப்படிச் செய்ய அசைந்தன? வீணையை வருட இடக்கை விரல்தான் என்றாலும், மீட்டுவது வலக்கை விரல்தானே? இந்த இரண்டு கைகளையும் இரண்டு காரியங்களுக்கும் அசைப்பது ஒரே மூளைதானே? ஒரே மனசுதானே? இது எப்படிச் சாத்தியமாயிற்று? இந்தக் கேள்விதான் என்னைக் குழப்பிக்கொண்டே இருக்கிறது; தூக்கத்தைக் கெடுத்துவிட்டது. அதே விரல்களால் எனக்கு ஒரு பதில் எழுதி இந்தச் சிறியேன் தவிப்பைத் தணிப்பீர்களா என்று என்

மனம் ஏங்குகிறது. அழகாகப் பவித்திர மோதிரம் அணிந்த அந்த விரல்களையேதான் நான் கனவில்கூடக் கண்டுகொண்டிருக்கிறேன். மகாலிங்கத்தை நான் எனக்குத் தெரிந்த தர்மங்களைச் சொல்லித் தாற்காலிகமாக அடக்கி வைத்திருக்கிறேன். உங்கள் குடும்பம் பெரியது, ஏழு பிள்ளை பெண்களை மட்டுமின்றி இரண்டு விதந்து சகோதரிகளையும் நீங்கள் காப்பாற்றி வருகிறீர்கள் என்பதையும் சொல்லி, இந்தப் பாபகாரியத்தில் இறங்க வேண்டாமடா சண்டாளா என்று அவனை அடக்கி வைத்திருக்கிறேன். நீங்கள் வந்தவுடன் அவனைக் கூப்பிட்டு, தனிமையில் சமாதானம் செய்து இந்தத் தர்ம சங்கடத்திலிருந்து மீளுமாறு வேண்டிக்கொள்கிறேன். "என் வலது விரல்கள் என்ன தவறுகள் செய்தாலும் மாய ஓசைகளை எழுப்பி இறைவனையே மயக்குகிற இந்த இடது விரல்கள் ஈடுசெய்துவிடும். அதற்கு உதவியாக மீட்டுகிற வலது விரல்களும் பிராயச்சித்தம் அவ்வப்போது செய்து கொள்கின்றன. எனக்கு ஒரு குறையும் வராதுடா" என்று நீங்கள் சொல்வதுபோல என் காதுக்குக் கேட்கிறது. அநேக நமஸ்காரம். — தங்கள் அன்புள்ள சுகா கிகீ.

பி.கு. என் பெயரை எழுதாததன் காரணத்தை உங்களுக்கு நான் சொல்லவும் வேண்டுமா?

0 0 0

ஏ.ஏ. ஐயர் கடிதத்தை இரண்டு மூன்று முறை வாசித்துவிட்டார். வண்டி இருளைக் கிழித்துப் பறந்துகொண்டிருந்தது; முதல் வகுப்பு. இரண்டே இரண்டு இருக்கைகள். எதிர்த்த பெர்த்தில் ஒரு சர்தார்ஜி முண்டாசை அவிழ்த்துவிட்டு, கொண்டை அலுங்காமல் குறட்டைவிட்டுத் தூங்குகிறான்.

யார் இந்தக் கடிதத்தை எழுதியிருப்பார்கள்? ஒருவேளை அந்த மகாலிங்கமே எழுதியிருப்பானோ . . . சோழப் பிரம்மஹத்தி! இந்தக் கடிதம் வந்ததுகூட மர்மமாயிருந்தது. ஹோல்டாலை ரெயிலில் கொண்டு வைத்த பியூன், வண்டி புறப்படும் போது, "மறந்தே போயிட்டேனுங்க. ஒரு அய்யிரு வந்து இதை அய்யாட்டக் கொடுத்துரு; இப்பத் தொந்தரவு பண்ணவாணாம்; ராத்திரி ஊருக்குப் போறப்ப கொடுத்தாப் போதும்; ஒண்ணும் அவசர காரியமில்லேன்னு சொல்லிக் கொடுத்தாரு. நீங்க அப்பப் பூசை பண்ணிட்டிருந்தீங்களா, அந்தி வேளையிலே. அப்பறம் கொடுப்பம்னு இருந்தேன். மறந்தே போச்சு" என்று சட்டைப் பையிலிருந்து ஒரு கவரை எடுத்துக் கொடுத்தான். வண்டி நகரத் தொடங்கிவிட்டது. சர்தார்ஜி கேட்ட கேள்விக்கு, "மதராஸ் ஜாதா" என்று பதில் சொல்லி ஹோல்டாலைப் பிரித்து படுத்தார். சர்தாஜி விளக்கை

அணைத்துவிட்டுப் படுத்துக் கண்ணை மூடினான். ஏ.ஏ. ஐயர் தலைமாட்டு விளக்கைப் போட்டுக் கவரைப் பிரித்தார்; படித்தார்.

மூன்று தடவை படித்தார். நாலாம் தடவை படித்தபோது. அசட்டையும் புன்சிரிப்பும் மறைந்து அதன் உள்ளர்த்தம் உறைக்கத் தொடங்கிற்று. 'இது கூட்டுச் சதிதான். பொறாமைக்காரர்களுக்குக் கேடு செய்ய வேண்டாம். பிறர் நன்றாக இருப்பதே அவர்களுக்குப் போதும். ஆனால் இந்த ருஜூக்களை எப்படிச் சேகரித்தான்? இதற்காக முனைந்து வேலை செய்தாலொழிய லேசில் ஆகிற காரியமில்லையே!'

வயிற்றை என்னவோ செய்தது. பகிரங்கமாக . . . அம்பலமாக . . . அவமானம் . . . என்று பல சொற்கள் வயிற்றில் புகுந்து புரண்டன. கலக்கின. மகாலிங்கத்தை இப்பொழுதே பார்த்துவிட்டால் தேவலை போலிருக்கிறது. ஆனால் ரெயிலுக்கு இறக்கை இல்லை. விடிய விடியத்தான் சென்னை சேரும்.

தலைமாட்டு வெளிச்சத்தில் கைவிரல்கள் தெரிந்தன. மோதிர விரலில் கம்பி நெளியும் பவித்திர மோதிரம் மினுங்கிற்று. விரல்களைப் பார்க்கும்போது கண் எரிவதுபோலிருந்தது. பார்வையைத் திருப்பிக் கொண்டார். கண்ணை மூடிக் கொண்டார். காலைப் போர்த்திக் கொண்டார். முகத்தைப் போர்த்திக் கொண்டார். ஆனால் அடிவயிற்றில் விழுந்த அச்சம் உப்பி உப்பிப் பூதாகாரமாக வளர்ந்து கொண்டிருந்தது. புழு பாம்பாவதுபோல் நிண்டு பருத்தது. ஆணியில் தொங்கின கோட்டின் பையில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தார். அப்பாடா! . . . இன்னும் கால் மணியில் அடுத்து நிற்கும் இடம் வந்துவிடும். ஒன்று இரண்டு மூன்று என்று விநாடி ஊர்ந்தது. பத்து யுகங்களுக்குப் பிறகு ஸ்டேஷன் வந்தது. வண்டி நின்றது.

ஏ.ஏ. ஐயர் இறங்கினார். பின்பக்கமாக நடந்தார். கார்டு வண்டி கடைசியில் இருந்தது.

"குட் ஈவினிங், அவசரத்தில் வந்து ஏறி விட்டேன். டிக்கட் வாங்க நேரம் இல்லை. என்ஜினிலிருந்து மூன்றாவது பெட்டியில் இருக்கிறேன். டிக்கட் பணத்தை இங்கே கொடுக்கட்டுமா? . . . "

"பரவாயில்லே ஸார். டீடீ வருவார். நான் உங்களிடமே வந்து வாங்கிக் கொள்ளச் சொல்கிறேன். நீங்கள் போங்கள். இதோ வருவார் அவர்" என்றார் கார்ட்.

ஏ.ஏ. ஐயர் தம் பெட்டியண்டை வந்து நின்றார். பெட்டியில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சர்தார்ஜியைக் காணவில்லை. ஸ்நான அறைக்குள் போயிருக்கிறார் போலிருக்கிறது.

டீடீயை எதிர்பார்த்துக் கீழேயே நின்று கொண்டிருந்தார் ஏ.ஏ. ஐயர்.

அதோ ஒரு காக்கி முழுக்கைச் சட்டையும் தொப்பியும் தெரிகின்றன. அவன்தான் டீடீ போலிருக்கிறது!

ஐயோ! ஐயோ! அப்பா! அப்பா! கை . . . கை . . . கை! . . . ஹா! அம்மா . . .

ஸ்நான அறையிலிருந்து வெளியே வந்த சர்தார்ஜி இந்தக் கதவைப் படாரென்று சாத்திவிட்டார். ஓரமாக நின்ற ஐயரைக் கவனிக்கவில்லை. ஐயரின் கை கதவிடுக்கில் சிக்கி அவர் கூச்சலைக் கேட்டபிறகு சட்டென்று கதவைத் திறந்தார்.

ஐயர் அப்படியே ப்ளாட்பாரத்தில் உட்கார்ந்துவிட்டார். மூர்ச்சை போட்டுவிட்டது அவருக்கு.

கண்ணைத் திறந்தபொழுது ஒரே கூட்டம். கை ரத்தத்தை யாரோ கழுவிக் கொண்டிருந்தார்கள். இடக் கை விரல்கள் நசுங்கிக் கிடந்தன. விரல் எலும்புகள் நொறுங்கிவிட்டன. வண்டி புறப்பட அரை மணி தாமதம் ஆயிற்று.

இரவு முழுவதும் வலி தாளாமல் முனகினார் அவர். சர்தார்ஜி இரண்டு தடவை 'மாப்கீஜியே' சொல்லிவிட்டுக் கண்ணயர்ந்து விட்டார். விடிந்தது. சென்னை வந்தது.

விரலே போய்விட்டது. டீடீக்கு அவரிடம் டிக்கட்டுக் கேட்க எப்படி மனம் வரும்? டீடீயும், ஸ்டேஷனுக்கு வந்திருந்த அய்யாதுரையும் அவரைப் பிடித்து அழைத்துக் கொண்டு, டாக்ஸியில் ஏற்றிவிட்டார்கள். அய்யாதுரை கூடவே வந்தான்.

மூன்று மாத ரஜாப் போடும்படியாகி விட்டது, ஏ.ஏ. ஐயருக்கு. ஆபீசில் ஒரு பிராணி விடாமல் படுத்திருந்த அவரைப் பார்க்க வந்தார்கள்.

மகாலிங்கமும் ஒரு நாள் வந்தான். வெகுநேரம் இருந்தான். தனியாக ஒரு நிமிஷம் கிடைத்தபோது, "என்னால் ஒரு கெடுதலும் வராது உங்களுக்கு. எல்லாவற்றையும் கிழித்துப் போட்டுவிட்டேன்" என்று அவருடைய நசுங்கி ஒடிந்துபோன விரல்களைப் பார்த்து அழுதான்.

அவன் போன பிறகு ஏ.ஏ. ஐயர் தம் விரல் கட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார். இனிமேல் வீணை வாசிக்க முடியாது என்றுதான் டாக்டர் சொல்வதிலிருந்து முடிவு செய்து கொள்ள வேண்டியிருந்தது. விரலாக இல்லே அவை. கொத்தவரை வற்றலாகக் கிடந்தன. அவருக்கு எல்லாம் கனவு போலவும் கதை போலவும் இருந்தன. கடுதாசி, அதிலே விரல்கள் – பிறகு கதவு, விரல் நசுங்கல் – அதுவும் இந்த இடக் கை விரல்கள் என்ன பாவத்தை செய்தன? 'வலது விரலை விட்டு, இடது விரலை நசுக்கினானே இந்த ராமன்! அவன் போக்கே அலாதி. ஒரு பாவமும் அறியாத சீதையைக் காட்டுக்கு விரட்டின அளாச்சேப்பா நீ' என்று சொன்னவாறு தலையணைமீது சாய்ந்து கொண்டார் ஏ.ஏ. ஐயர்.

கலைமகள், நவம்பர் 1963

# தற்செயல்

**கல்யாணக் கூடம்:**

மேளச்சத்தம். தவுலடி. குழந்தைகளின் பிடிவாத அழுகை. இத்தனையையும் மீறிப் பேச்சிரைச்சல். பட்டுப் புடவைகளின் கொச கொச நடை. சந்தனத் தெறிப்பு. மல்லிகைப் பூக்களின் வாடல் நெடி. தாலி கட்டி, பானகம், வெற்றிலைப் பாக்கு கொடுத்தவுடன், பிட்ளை, ரசவங்கி, வாழைக்காய்க்கறி என்று பகுள சமையலுக்கே ஆன தனி மணத்துடன் சாப்பாடு. இந்தக் கோலாகலத்தில் மனசைக் கொஞ்சநேரம் குதிரைப் புரட்டல் புரட்ட வேண்டும் என்று தான் இந்தக் கலியாணத்திற்கு வந்திருக்கிறேன். கல்கத்தா, நாகபுரி, பட்டணம். டில்லி என்று, 'பைல்'களைக் கட்டி அழுது கொண்டு நிர்வாகக் குப்பை வண்டியை இழுக்கிற சோனிக் குதிரைக்கு, இப்படி இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு வருகிற ஒரு கலியாணம்தான் புரட்டு மணல். புரள ஓடோடி வந்தேன்.

ஆனால் குதிரை விழுந்திருக்கிறது, மணல் இல்லை. கருங்கல் ஜல்லிக் குளியல் போலிருக்கிறது. அதிகமாகப் புரண்டால் ரத்தம் வரும். வந்துகொண்டிருக்கிறது.

இவளைப் பார்ப்பேன் என்று கனவில்கூட நினைக்க வில்லை. பெண்டுகள் கூட்டத்தில், எல்லோருக்கும் பின்னால், சுவரோரமாக நிற்கிறாள் மங்களம். தலையில் முக்கால்நரை. குங்குமம் பளீரிட்ட நெற்றியில் ஒரு சோகை விபூதி விரலிழுப்பு. கன்னம் கழுத்தெல்லாம் சுண்டிப்போன இலையின் பழுப்பு. சோகை நீலத்தில் ஒரு புடவை. அவள் என்னைப் பார்த்ததும் ஒரு புன்சிரிப்புச் சிரித்தாள். இப்பொழுது, சற்றுமுன்பு என்னைப் பார்த்தாள். அடிக்கடி என்னைப் பார்க்கிறாள் போலிருக்கிறது.

மங்களத்திற்கு எப்பொழுது இந்தக் கோலம் வந்தது? நாலைந்து வருஷம் முன்பு என்று ஞாபகம்.

கைவிசிறியை முகவாய்க்கு முட்டுக்கொடுத்து மணமக்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஓமப்புகை கண்ணைக் கரிக்க, கலியாணப் பெண்ணின் கண்ணை யாரோ தோழி அம்மாள் கைக்குட்டையால் துடைத்துவிடுகிறாள். பார்வை நழுவுகிறது. பிரமைதான். மங்களம் அங்கே

உட்கார்ந்திருப்பது போல. பிரமை இல்லை. நானே மங்களத்தை அங்கே உட்கார்த்தி வைத்துப் பார்த்தேன்.

மங்களத்தின் கலியாணத்திற்கு நான் போகவில்லை. போக முடியவில்லை. ஊர் முழுவதும் பெரியம்மை சூறையாடிக் கொண்டிருந்தது. அப்பொழுது. வீட்டிலும் ஓர் ஆட்டம் ஆட்டிற்று. அண்ணாவின் பெண் ஒன்று பலியாயிற்று. ஒரு மாசத்திற்குள் மங்களத்திற்குக் கலியாணம்.

அது ஒரு வயிற்றெரிச்சல். அண்ணாவின் குழந்தை பலியாகி நாலாவது நாளோ, ஐந்தாவது நாளோ – எதிர் வீட்டுச் சுவர்மீது வெயில் பாதி இறங்கியிருந்தது. காப்பி சாப்பிட்டுவிட்டு, குழந்தை பட்ட பாட்டைப் பேசிப் பேசி ஆற்றிக் கொண்டிருந்தார்கள்.

"யாரோ கூப்பிடறாங்களே," என்று தெருக்கோடி மளிகைக் கடை பரிமளம் வந்து கூப்பிட்டார். அப்பா எழுந்து போனார். நான் வாசற் படிக்கு வந்து பார்த்தேன். தெருக் கோடியில் முகத்தில் பத்துநாள் வெள்ளை மயிருடன் சின்னம்மாவின் புருஷன் நின்றுகொண்டிருந்தார். அப்பா போனார். எனக்கு என்னமோ போகத் தோன்றவில்லை. அப்பா பேசிக்கொண்டு நின்றார். பத்து நிமிஷம் கழித்துத் திரும்பி வந்தார். அம்மாவைக் கூப்பிட்டார். சொன்னார்:

"உன் தங்கை ஆம்படையான் வந்திருக்கார். மங்களத்துக்குக் கலியாணம் நிச்சயம் பண்ணியிருக்காராம். இளையாளாகக் கொடுக்கறாராம். இன்னும் பன்னிரெண்டு நாள்லே முகூர்த்தத்தை வச்சு நடத்தி விடணும்னு கேக்கறானாம் பிள்ளைக்காரன். இந்தச் சந்தர்ப்பத்தை விட்டா கிடைக்காது. அவனுக்கு இருக்கிற அவசரத்திலே வேற எந்தப் பொண்ணையாவது பார்த்துக் கலியாணம்னு பண்ணிண்டு போயிடுவான் போலிருக்கு. விட இஷ்டமில்லை. ஒரு ஐந்நூறு ரூபாய் வேணும்னு வந்து நிற்கிறார் இவர். இதுவா சமயம்னு ஒரு நிமிஷம் தோணறது. ஆனா இவர் விட்டார்னா அந்த மாதிரி வரன் கிடைக்காது. நெல்லு வித்த பணம், பழைய பணம் எல்லாமா எழுநூறு இருக்கு. பாங்கிலே போய் எடுத்துக் கொடுக்கலாமா ஒரு ஐந்நூறை? நீங்க என்ன சொல்றேள்?" என்று நின்றார் அப்பா.

"யாரு வரன்?"

"பட்டணத்திலே ஸம்ஸ்கிருத வாத்யாராம். நாப்பத்தஞ்சு வயசுதான் ஆறதாம்."

“நாப்பத்தஞ்சு வயசுன்னா கிழ வயசில்லையாப்பா?” என்று நான் கத்தினேன். கத்தின ஞாபகம். எனக்கு ஆத்திரமோ, அழுகையோ– எதோ பிடுங்கிக் கொண்டு வந்தது. எனக்குப் பதினைந்து வயது. மங்களத்திற்குப் பதினைந்து வயது. ஒரு நாற்பத்தைந்து வயது கிழவியை எனக்குக் கலியாணம் பண்ணி வைப்பதற்காக, என்னை யாரோ துரத்தி வருவது போலிருந்தது.

அண்ணா என்னைப் பத்துவிநாடி பார்த்தான். அண்ணாவுக்குக் கோபம் வந்தால் புருவம் சுளிக்காது. கண் அகலாது. சாதாரணமாகப் பார்க்கும். ஆனால் நட்டாற்போலப் பார்த்துக்கொண்டேயிருக்கும்.

“நீ போய்ப் பாடத்தை வாசி.” என்று அந்தப் பத்து விநாடி கழித்து மெதுவாகச் சொன்னான் அண்ணா. நான் மாடிக்குப் போனேன்.

மூன்று வருஷம் கழித்து அதே மாதிரி ‘சரக்’கென்று ஒருநாள் மாடிக்குப் போனேன். மங்களம் வந்திருந்தாள். மொழு மொழுவென்று, முலாம்பழம் மாதிரி ஒரு பெண் குழந்தை – இடுப்பில். மொழுமொழுவென்று வழுக்கை மண்டை, முகத்தில் நாலு நாள் வெள்ளைமயிர், பஞ்சக்கச்சம், பழங்காலப் புரோகிதமூஞ்சி – இப்படி ஒரு கணவன் பக்கத்தில். மூக்கும் முழியும் மொழுமொழுவென்று ஒரு குழந்தையை எனக்கும் பெற முடியும் என்று சொல்வதற்காக அவரும், கூட வந்தது போலிருந்தது. எனக்குக் கோபம் வந்தது. அடக்கிக்கொண்டு, சௌக்கியம் விசாரித்துவிட்டு மாடிக்கு வந்தேன். அண்ணா இடுப்பில் சோமனைக் கட்டிக்கொண்டு அவரை விழுந்து விழுந்து கும்பிட்டான். அவனுக்குப் பஞ்சக் கச்சம் முகத்தில் பத்து நாள் மயிர் என்றால் புல்லரிக்கும். வியாச, வசிஷ்டாதிகளைப் பார்த்தாற்போல ஆகிவிடுவான்.

மாடிக்குப் போனேனே ஒழிய, இறங்கி வந்து மங்களத்தைப் பார்க்காமலிருக்க முடியவில்லை. கலியாணத்திற்கு நாலைந்து வருஷங்களுக்கு முன்னால் பார்த்தது. முருங்கையாக வளர்ந்து கிடந்தாள். பட்டை பெயர்த்த கசிதம் வெள்ளை. ஒரு நீலப் பட்டுப் புடவை. கை, கழுத்து எல்லாம் வடம் வடமாகச் சங்கிலியும் வளையுமாகப் புரண்டு கொண்டிருந்தன. தலையில் ஒரு பந்து மல்லிகை. பேச்சில் கூடப் பதினெட்டு வயதைக் காணவில்லை. நடுவயதுத் தோரணை.

அந்தக் குழந்தைக்கு முடியிறக்க மாரியம்மன் கோயில் பயணம். அரண்மனை, கடைத்தெரு, மிருகத்தோட்டங்களைக் கொண்டு காண்பிக்கிறது – இந்த வேலைகள் வழக்கம்போல எனக்கு வந்தன.

கடைக்குட்டி என்ற முறையில் விவரம் தெரிந்த நாள் முதலாக வருவோர் போவோர்களுக்கு நான்தான் இந்தச் சகாயம் செய்யும் வழக்கம்.

அரண்மனையைச் சுற்றிப் பார்க்கும்போது, "உச்சிக்குடுமி டோய்" என்று நாலைந்து பையன்கள் கத்தினார்கள். தொடர்ந்து, "பாப்பான் பருப்புத்தின்னி, வெள்ளாட்டு – தின்னி!" என்று பாடினார்கள். அந்தக் காலத்தில் அந்த ஊரில் பஞ்சக்கச்சம் விபூதிகளைப் பார்த்தால் நடக்கிற உபசாரம் இது. எனக்கு வெட்கமாக இருந்தது. எனக்குப் கிராப்புத் தலைதான். "பேஷ் – நன்றாயிருக்கே பாட்டு" என்றார் மங்களத்தின் அகமுடையான். "ஆனா நீதான் போய்ச் சொல்லணும். எனக்குக் குடுமியும் இல்லை. நான் யாகம் பண்ணினதில்லைன்னு," என்று என்னிடம் சொல்லிச் சிரித்துக் கொண்டே நடந்தார்.

ஒரு மணி நேரம் அவர் நூல் நிலையத்துக்குள் ஒவ்வொரு பீரோவாக அண்ணாந்து அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் எனக்கு அந்தப் பாட்டின் சூடு தணியவில்லை. இந்தக் கோடியில் நானும் மங்களமும் தனியாக இருந்தபோது வெடுக்கென்று சொன்னேன். "சின்னக் குழந்தையாயிருக்கிற போது, நீ யாரைடீ கலியாணம் பண்ணிக்கப் போறேன்னு கேட்பா எங்கம்மா. நான் தாத்தாவைத்தான் பண்ணிக்கப் போறேன்னு சொல்லுவே நீ. அப்படியே சத்திய வாக்கா நிறைவேத்திப்ட்டியே."

அப்போது இடுப்பிலிருந்த குழந்தை என்னவோ சிரித்தது.

"ஏண்டா கண்ணு சிரிக்கிறே? ஒண்ணு விட்ட மாமா உளர்றானேன்னு சிரிக்கிறியா? இல்லே, இந்த மாமாவையே கலியாணம் பண்ணிக்கலாம்னு நினைச்சுண்டு சிரிக்கிறியா?" என்று குழந்தையின் கன்னத்தை நிமிண்டிக் கொண்டே மெதுவாக நடந்து நழுவினாள் மங்களம். அப்புறம் அவரை விட்டு அகலவில்லை . . .

பின்னால் யாரோ இடித்துக் கொண்டு உட்கார்ந்தார்கள். "இப்ப என்ன கல்கத்தா சாரா, மீரட் சாரா, புனா சாரா, டில்லி சாரா? உங்களைத்தான் மாப்ளே சார்?" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். குறும்புச் சிரிப்பையும் ஒன்றரைக் கண்ணையும் பார்த்து அடையாளம் புரிந்துகொள்ள முடிந்தது. அந்த இரண்டைத் தவிர, சோமு முற்றிலும் மாறிப்போயிருந்தார். நாலு சுற்றுப் பருமன். பளபளவென்று கதர்ச்சட்டை பழைய சோமு மாமா இல்லை. துணிக்கடை பெரிய தென்னிந்திய எம்போரியமாக வளர்ந்து, பணத்திலும் குணத்திலும் புரள்கிறாராம்.

நகரசபையிலும் ஊடாட்டமாம்.

"எப்ப வந்தே! என்ன சேதி! வந்தவன் நேரே ஆபீசர் தோரணையிலே கலியாணக்கூடத்திலே வந்து உட்கார்ந்துடணுமோ! நாங்கள்ளாம் தேடிண்டு வந்து, கூட்டத்திலே தொடை தொடையா மிதிச்சிண்டு தாண்டி வந்து, பேட்டி காணணும்னு ஆசை."

"எல்லாரையும் பார்த்துப்டேன். பழைய சோமு மாமாவையும் பார்க்கலையேன்னு நெனச்சுண்டேயிருந்தேன். இடிச்சுண்டு வந்து தரிசனம் கொடுத்துட்டேள்."

"என்ன என்ன என்ன! இன்னொரு தடவை சொல்லு . . . இத பாரு, பழசு பழசுதான் மாப்ளே. இது குக்ராமச் சரக்கு. அரிசி. அரிசியிலே எது சிரேஷ்டம்? பழசா, புதுசா!"

சோமு மாமா கடகடவென்று தன் கவிதையை நினைத்துக்கொண்டு கொஞ்ச நேரம் சிரித்தார்.

தடதடவென்று ஒவ்வொருவராக எழுந்தார்கள். மாடியில் முதல் இலை போட்டாயிற்று என்று ஒரு குரல் இரைந்து கொண்டிருந்தது. சோமு மாமா என்னையும் இழுத்தார். ஒரு பத்து வயதுப் பெண் வந்து நின்றது. "மாமா, அம்மா உங்களைப் பார்க்கலாமான்னு கேக்கறா?" என்றது என்னிடம்.

"யாரம்மா குழந்தே?"

"அதோ நிக்கறா பாருங்கோ," என்று சிரித்துக்கொண்டே அப்பால் பார்த்தது. மங்களம் சிரித்தாள். எனக்கு அழ வேண்டும் போலிருந்தது.

"நீ மங்களத்தோட பொண்ணா?" என்று சிரமப்பட்டுக் கேட்டேன்.

சோமு மாமா வேறு தூபம் போட்டார். "சாட்சாத் உங்க ஒண்ணு விட்ட அக்கா பொண்ணு. வந்துபோயிண்டிருந்தான்னா உறவு, முறை, பத்து பங்காளியெல்லாம்? மங்களம் – அதுதான் உங்க ஒண்ணு விட்ட அக்கா – இங்க எப்படி வந்தான்னாவது தெரியுமோ . . . இந்தக் கலியாணப் பொண்ணு, அவ மூத்தாள் பிள்ளைக்கு மச்சினி. எதையும் விட்டுக் கொடுக்கத் தெரியாது அவளுக்கு. அந்த மாதிரி எல்லாரும் இருந்துட்டோமோ – "

"இதோ வரேன்" என்று நழுவினேன். பின் கட்டு நடையில் வந்து நின்றாள் மங்களம்.

“எப்ப வந்தே?”

“இப்ப தான் ஒரு மணியாச்சு”

“கல்கத்தாவிலே இருக்கிறயாமே?”

“ஆமாம்.”

“இப்படி தற்செயலா மாமாங்கத்துக்கு மாமாங்கம் பார்த்தாத்தான் உண்டு. மூணா வருஷம்கூட வந்தியாம். வந்து எட்டிப் பார்க்கப்படாதா?”

“நீங்க இப்ப எங்கே இருக்கேள்? ஹைதராபாத்திலே இருக்கறதாகத்தான் இன்னும் நினைச்சுண்டிருக்கேன்.”

“நாலு வருஷம் ஆச்சே, சேலத்துக்குக் குடிவந்து. பெரிய பிள்ளை இங்கேதானே இருக்கான். சாப்பிட்டதும் போகப் போறான். நீயும் அங்கேயே வந்திருக்கலாமே . . . எத்தனை வருஷம்டா ஆச்சு பார்த்து . . . டாடான்னு வந்துடறது. பழைய வாசனை.”

“என்ன மங்களம் இது!”

“கோச்சுக்காதே. இருபது வருஷமாச்சு உன்னைப் பார்த்து. எனக்கு என்ன என்னமோ பேத்தணும்போலிருக்கு.” கண்ணில் ஒரு ஈரப் பளபளப்பு.

“என்ன! தம்பியை அடையாளம் புரிஞ்சுதா?” என்று கத்திக் கொண்டே வந்தார் சோமு மாமா. “நீ யாரு குழந்தைன்னு உம் பொண்ணைப் பார்த்துக் கேட்கறார் உன் தம்பி. போறுமா? ஆபீசரோல்லியோ! இண்டர்வியூ நடத்தறார்.”

“மாமா.”

“அவன் கடைசிக் குழந்தையாப் போயிட்டான். நல்லது கெட்டதுக் கெல்லாம் மூத்ததெல்லாம் போகும். கடைக்குட்டி எப்பவும் யார் உறவு. யாரு ஜனம்னு தெரியாம தனியாகவே நிக்கும். இவன் என்ன பண்ணுவன் மாமா?” என்றாள் மங்களம்.

“குழந்தையைப் பாரு குழந்தையை! என்ன வயசு இப்ப மாப்பிள்ளைக்கு?”

“நாற்பத்தெட்டு,” என்றேன். அவர் என் மனைவிக்குத் தூரத்து உறவு.

“இத்தனை உத்யோகம் பார்க்கிறே. ஒரு கறுப்பைக் கூடக் காப்பாத்தத்

தெரியாம, தலைமுழுக்க நரையா அடிச்சுண்டிருக்கியே . . . ”

“சரி, நீ போய்ச் சாப்பிட்டு வந்துடு.” என்றாள் மங்களம்.

பிற்பகல் இரண்டு பேரும் சேர்ந்துதான் போனோம். வீடு பெரிய வீடு. சுற்றிலும் பெரிய காம்பவுண்டு. வராந்தா. மங்களம் பூட்டைத் திறந்தாள்.

“வீடு பிரமாதமாயிருக்கே!”

“கம்பெனியிலே கொடுத்திருக்கா, மாலுவுக்கு.”

“மாலுதானே உங்க மூத்தா பிள்ளை?”

“என்ன புதுசு புதுசாக் கேக்கறே? . . . உட்கார்ந்துக்கோ,” என்று ஊஞ்சலைக் காட்டினாள் மங்களம். “எப்பவோ தற்செயலாத்தான் பார்க்கறே . . . அதுக்காக எல்லாம் மறந்துபோயிடணுமா என்ன? . . . எழுதியாவது வச்சுக்கோ. எனக்கு மூத்தா பிள்ளை பேரு மாலு. மூத்தா பெண் பேரு, ருக்கு. அப்புறம் எனக்குன்னு ஒன்பது குழந்தை. மூணு பிள்ளை. ஆறு பொண்ணு. சீதாராமன், ராஜாராமன், கலியாணராமன், வைதேஹி, ஜானகி, மைதிலி, சுமித்ரா, கௌசல்யா, ஸரமா – எழுதியாவது வச்சுக்கோ. இன்னொரு மாமாங்கம் கழிச்சுத் தற்செயலாப் பார்க்கறவரையில் ஞாபகம் இருக்காது.”

“உனக்கும் தற்செயலில் தானே நம்பிக்கை? இல்லாட்டா, இவருக்கு நீ கழுத்தை நீட்டியிருப்பியா? அவர் தற்செயலா வந்தார். உங்கப்பா கிட்டே கேட்டார். போனா வராதுன்னு பயந்து விழுந்தடிச்சுண்டு உங்கப்பா கலியாணம் நிச்சயம் பண்ணினார். இந்த முப்பது வயசு வித்யாசத்துக்கிட்டே கொண்டு தள்றியேன்னு உங்கப்பா அம்மாவை ஒரு தடவை நீ கேட்டியோ?”

கலியாணமாகி முப்பத்து மூன்று வருடங்களாகி அவரையும் இழந்து தலையெல்லாம் நரைத்து, மூக்கின் பாரிசங்களில் கோடு விழுந்தவளோடு இது என்ன வீம்பு என்று எனக்கே புரியவில்லை. ஏதோ வெறி பிடித்தாற்போல மடக்கி மடக்கிக் கேட்க வேண்டும் போலிருந்தது. கலியாணச் சாப்பாட்டில் விஸ்கி மாதிரி ஏதாவது கலந்துவிட்டார்களா? ஏன் இப்படி நாக்கு அவிழ்ந்து நீண்டமணியாக இருக்கிறது? தற்கொலை பாபம். உயிருக்கு நாம் காவலாளி. அதேபோல இளமையை ஒரு கிழவனிடம் கொடுத்துக் கொல்லுவதும் பாபம். யௌவனத்திற்கு நாம் காவலாளி. வாயைத் திறந்து இதைக் சொல்லு சொல்லு என்று உள்ளே உந்தல். ஆனால் அது என்னமோ பச்சைப் பேச்சு மாதிரி பயந்து நாக்கு

சுருள்கிறது.

அவர் படம் பெரிது பண்ணி ஊஞ்சலுக்கு நேராகச் சுவரில் மாட்டியிருந்தது. வழுக்கை மண்டை, முகத்தில் இருபதுநாள் வெள்ளை மயிர், விபூதிப் பட்டை, நடுநடுவே வயது உழுத பள்ளம். புருவச் சுளுக்கலில் சந்தனப்பொட்டு, ஜரிகை சால்வை, விளக்கெண்ணெய் குடித்தாற்போல் தொய்ந்த உதடு.

“நானாக என் தலையிலே மண்ணள்ளிப் போட்டுண்டேன்னு கோபம் உனக்கு. அதுதானே?” என்று சிரித்தாள் மங்களம்.

“அதுதான் நீயே சொல்றியே?”

“உனக்கு எத்தனை குழந்தைகள்?”

“நாலு”

“விவரமாகச் சொல்லு.”

“ரண்டு பொண்ணு. ரண்டு பிள்ளை.”

“ரண்டு பிள்ளை – ரண்டு பொண்ணா, ரண்டு பொண்ணு, ரண்டு பிள்ளையா?”

“ரண்டு பிள்ளை – ரண்டு பொண்ணு”

“நீ எத்தனை தூரத்திலே இருந்தாலும் நான் விசாரிச்சு வச்சிண்டிருக்கேன்னு சொல்றதுக்காகத்தான் கேட்டேன். படிக்கிறதா எல்லாம்?”

“ஒருத்தன் பாங்கிலே வேலை பாக்கறான். இன்னொருத்தன் காலேஜிலே வாத்யாரா சேர்ந்திருக்கான். பொண்ணு ரண்டும் படிக்கிறது. ஒண்ணு காலேஜ். ஒண்ணு பள்ளிக்கூடம்.”

“எப்படிப் படிக்கிறது?”

“தேவலை, சுமாரா இருக்கு . . . ஏன் இப்படி கடகடன்னு கேட்கிற?” என்று சிரித்தேன்.

“ரண்டு அபார்ஷன் ஆச்சாமே உன் அகமுடையாளுக்கு?”

“ஆமாம். யாரு சொன்னா?”

“யாரு சொன்னா என்ன? எப்படியோ தெரியறது. தானாக ஏற்பட்டுதா?

இல்லை. டாக்டர்ட்ட போயி . . . ”

“டாக்டர்ட்ட போயிதான்.”

“அப்படி செய்யலாமோ?”

“என்ன செய்யறது? அவ உடம்பு தாங்காது போலிருந்தது.”

“அதெல்லாம் இல்லை. நாலு குழந்தைக்கு மேலே வச்சுக் காக்கப் பயம். திராணி இல்லை.”

“வாஸ்தவம்தான். ரண்டு குழந்தையே ஜாஸ்தி” என்றேன்.

“மூணாவதும் நாலாவதும் உங்களறியாமல் தற்செயலாப் பிறந்துட்டுது,” என்று மங்களம் சிரித்தாள்.

அப்போதுதான் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். “நீ எங்க போட்டோவெல்லாம் பார்க்கலியே . . . வா.” என்று எழுந்தாள் மங்களம்.

கூடத்து நிலையைக் கடந்ததும் ஒரு சிறிய நடை அறை. அங்கே நின்றாள்.

“பாரு”

சுவர் முழுவதும் படம் படமாக மாட்டியிருந்தது.

“இவன் பெரிய பிள்ளை சீதாராமன். பம்பாயிலே வியாபாரக்கப்பல்லே வேலை. ரண்டாயிரம் ரூபாய் சம்பளம்.”

“என்ன வயசு?”

“இருபத்து நாலு.”

“ரொம்ப உசரமா?”

“அவரைவிட உசரம்.”

“குறிப்பா இருக்கானே?”

“இது பெரிய பொண்ணு. நீ மாரியம்மன் கோயிலுக்கு முடியிறக்க அழச்சிண்டு போனியே – அது. எம்.ஏ. படிச்சுட்டு ரண்டு வருஷம் உதவி புரொபசரா இருந்தா. மூணாம் வருஷமே புரொபசராயிட்டா. நாலு வருஷம் அதையும் பார்த்துவிட்டு, கலியாணம் பண்ணிண்டு வீட்டோட இருக்கா மைசூர்லெ. இவதான் ரண்டாவது பொண்ணு. இவ ரயில்வே

உதவி சீப் என்ஜினீரா இருக்கா. அந்த மாப்பிள்ளையும் என்ஜினீர்தான். இவ மூணாவது பொண்ணு. இவ புனாவிலே சர்ஜனா இருக்கா. அவளுக்கும் கலியாணம் ஆயிடுத்து. ஆனா நீ ஒருத்தி கலியாணத்துக்கும் வரலெ. நீதான் கடைக்குட்டியாச்சே. இவ நாலாவது பொண்ணு– கெமிகல் என்ஜீனீரிங் படிக்கறா, பம்பாயிலே அண்ணாவோடு இருந்திண்டு. இவன் தான் ரண்டாவது பிள்ளை. காலேஜிலே படிக்கிறான். லீவுக்கு பம்பாய் போயிருக்கான். அவனும் கிளாஸிலே நாலு வருஷமா முதல் . . . கணக்கு வச்சுக்க முடியலியா?" மங்களம் நிறுத்தினாள்.

"போறும். எல்லாம் புலியும் வேங்கையுமா இருக்கு. பெரிசு எட்டடி. அதுக்கு அடுத்ததெல்லாம் பதினாலு அடி, முப்பத்திரண்டு அடின்னு தாண்டறதே. வள்ளுவரோ யாரோ சொல்லியிருக்காராமே, குழந்தைகள் இப்படியிருந்தா பெத்தவன் எத்தனை பூரிச்சிண்டிருப்பன்னு."

"ரண்டு பேரும் பூரிச்சிண்டுதான் இருந்தோம். இப்ப நான் ஒண்டியா பூரிச்சிண்டிருக்கேன் . . . இப்ப உனக்குத் திருப்தி தானே?"

"எதுக்கு?" என்றேன். இது பழைய மங்களமாகத் தோன்றவில்லை.

"தற்செயலாக் கழுத்தை நீட்டினேன்னு சொன்னியே, அது ஒண்ணு தான் தற்செயல். அப்புறம் ஒண்ணும் தற்செயலா நடக்கலெ. ஒரு குழந்தை கூடத் தற்செயலாப் பிறக்கலெ. கலியாணம் நிச்சயமானவுடனே, புளியங்கா பல்லாங்குழி ஆடற சிநேகிதிக் குட்டிகள்ளாம் வந்து, 'என்னடீ சரின்னுட்டே?'ன்னு நீ இப்ப கேட்டமாதிரியே வந்து அலமலங்க அடிச்சுது. பக்கத்தாத்துப் பொம்மனாட்டிகள்ளாம் வந்து அம்மாவை அழ அழ வச்சா. எனக்குக்கூட அழ அழத் தோணித்து. பணத்துக்குச் சோம்பிண்டு அப்பா எதோ போக்கு வண்டியிலே என்னைத் தும்பைக்கட்டி அனுப்பிக்கிறார்னு சொல்லித்து ஊர். குத்துவிளக்கைக் கொண்டு செருப்பு மாடத்திலே வைக்கலாமான்னு கேட்டார் சேதுமாமா. பதினெட்டு வயசிலே ஒரு பிள்ளையை வச்சிண்டுதான் அப்பாவை அப்படிக் கேட்டார். அப்பதான் நான் தீர்மானம் பண்ணிண்டேன். இனிமே தற்செயலா எதுவும் நடக்காதுன்னு. ஒரு குழந்தையைக்கூடத் தற்செயலாப் பெக்கறதில்லேன்னு முடிவு பண்ணிண்டேன். மார்க்கண்டன் ஒருத்தன் தானே பிறந்தான்? ஒன்பது பிறக்கும்னு நான் காமிச்சேன். இல்லே, அவர் காமிச்சார். கலியாணமாகி ஒரு பிரசவத்துக்குக் கூட நான் ஊருக்குப் போகலெ. இவர் விடலெ. ஒருநாள் கூட விட்டுப் பிரியலே. அவர் போறவரைக்கும் இந்தத் தலையிலே ஒரு காம்பு நரைக்கலெ. போனார் . . . ரண்டு மாசத்துக்கெல்லாம் கொலகொலன்னு ஒரு நரை– எங்கேருந்துதான்

வந்துதோ . . . பிள்ளைபெற்றது தற்செயல் இல்லே. அவர் இருந்திருந்தா இன்னும் ரண்டு இத்துணூண்டு இத்துணூண்டா ஓடிண்டிருக்கும்."

எனக்குப் பேச ஐந்து நிமிஷமாயிற்று.

"மங்களம்"

"என்ன?"

எனக்குப் பேச்சு வரவில்லை.

"நான் யார்கிட்டவும் இப்படிப் பேசினதே இல்லேடா. ஆனா யார் கிட்டவோ சொல்லத்தான் போறேன்னு நிச்சயமாயிருந்தது. நீ வந்தே. ஆனா நான் சொன்னது தற்செயலா நீ வந்ததனாலே இல்லெ. குழந்தையிலே நீ ஒரு தடவை ஊருக்கு வந்திருந்தே உங்க அம்மாவோட! ஒருமாசம் இருந்தே. ஒரு நாளைக்கு நீயும் நானும் கலியாண விளையாட்டு விளையாடினோம். பக்கத்து வீட்டுக் குட்டிகள் கல்லும் மண்ணும் வச்சுச் சமைச்சுது. நீயும் நானும் மணையிலே உட்கார்ந்திருந்தோம். அப்ப அம்மா வந்தா. "ரொம்ப அழகாயிருக்குடீ. அண்ணாவும் தங்கையும் ஆம்படையான் பொண்டாட்டி விளையாட்டு விளையாடறது. சீ, எழுந்துக்கோ. யாராவது நாப்புக் காட்டப் போறாடி, மக்குப் பொணமே'ன்னு என்னைத் தூக்கிவிட்டா. அதை இன்னும் மறக்கலெ. அதனாலெ உங்கிட்ட சொல்லணும் போல தோணித்து . . . உள்ளே வாயேன். காப்பிக்கு அடுப்பு மூட்றேன். அங்கே உட்கார்ந்து பேசுவோம்."

மங்களம் அடுக்களைக் கதவைத் திறந்தாள். நான் போட்டோக்களில் புலி – வேங்கைக் குட்டிகளைப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

குமுதம், 6.8.70

# பிரயாணக்கதை

கூவம் எக்ஸ்பிரஸ் யமுனாப்பூர் ஸ்டேஷனிலிருந்து புறப்படக் காத்திருந்தது. அது பறவை எக்ஸ்பிரஸ். கூவம் நகருக்குப் பயணம் போகிற விதவிதமான பறவைகள் பல நிறங்களும் குரல்களும் கூவல்களுமாக மூட்டை முடிச்சுகளுடன் அதில் ஏறியிருந்தன.

முதல் வகுப்பு வண்டியில் குருவி ஏறிக் கொண்டது. அதற்குக் குறிப்பிடப்பட்டிருந்தது, 'பி' அறையில் மேல் இருக்கை. குருவி அங்கே போகும்போது வெளியே ஒரு பெரிய காக்காய் நின்றிருந்தது. அழகான, வாட்ட சாட்டமான காக்காய். குருவியைப் பார்த்து அது புன்னகை பூத்துக் கும்பிடு போட்டது. குருவிக்கு அதை யார் என்று தெரியாததால் பதிலுக்கு ஒரு புன்னகை செய்துவிட்டு 'பி' அறைக்குள் நுழைந்தது. அது 'கூப்பே' அறை. மேலே ஒருவர், கீழே ஒருவர் ஆக இரண்டே பேருக்கான அறை.

"ஆகா, 'கூப்பே' போட்டிருக்கிறார்களே. மனைவியோடு வந்திருக்கலாமே" என்று குருவி ஒரு கணம் ஏமாற்றத்துடன் நினைத்துவிட்டு, மேல் இருக்கையில் படுக்கையைப் போட்டது. கீழ் இருக்கைக்கு அடியில் பெட்டியைத் தள்ளிற்று. தள்ளிவிட்டுக் கீழ் இருக்கையில் உட்கார்ந்தது.

வெளியே இருந்த வாட்ட சாட்டக் காக்காய், குருவியைப் பார்த்துப் புன்னகை பூத்தவாறு நின்றது. "என்ன தெரிந்தவர் மாதிரி சிரிக்கிறாரே, எனக்குத்தான் ஞாபகம் இல்லையா" என்று பதிலுக்குப் புன்னகை புரிந்தது.

வண்டி புறப்பட்டவுடன் பெரிய காக்காய் உள்ளே வந்தது. அதன் பின்னால் இளைத்துப் போன கிழக் காக்காய் ஒன்று வந்தது.

"குருவி சார் எங்கே போகிறதோ?" என்று கேட்டது கிழக் காக்காய்.

"கூவம் நகர்"

"ஒரே ஒரு விண்ணப்பம். நம்ம சிநேகிதர் இந்தக் காக்காய். வாயசப் பட்டியின் மக்கள் பிரதிநிதி. உடம்பு சரியாயில்லை. மருந்து அடிக்கடி சாப்பிடும். ராத்திரி இருமும் – காரும் – கனைக்கும். உங்களுக்குத் தொல்லையாக இருக்கும். நான் இதைக் கவனித்துக் கொள்ளுகிற அட்டெண்டெண்ட்டு. அவருக்குக் கீழ் இருக்கை கொடுக்கப்பட்டிருக்கிறது.

மேல் இருக்கையில் நான் இருந்தால் கவனித்துக்கொள்ளச் சௌகர்யமாயிருக்கும்.”

“அட்டெண்டெண்ட்டுக்கு முதல் வகுப்பு டிக்கட் உண்டா?” என்று குருவி கேட்டது.

“அதை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம். உங்களுக்கு வேறு பெர்த் ஏற்பாடு செய்யச் சொல்கிறோம்.”

குருவி யோசித்துக் கொண்டிருந்தது. அதற்குள் காக்காய் சொல்லிற்று: “அட ஏன்யா, மறைக்கணும். குருவி சார், எனக்கு கொஞ்சம் உடம்பு சரியாயில்லை. அடிக்கடி மது கஷாயம் சாப்பிடுவேன். மருந்து மாதிரிதான். உங்களுக்குத் தொந்தரவாக இருக்குமோ என்று நான்தான் கேட்கச் சொன்னேன்.”

“எனக்கு ஒன்றும் தொந்தரவே கிடையாது. எனக்காக நீங்கள் கவலைப்படவேண்டாம்.” என்றது குருவி.

“அப்ப சரி. ரொம்ப நல்லதாப் போச்சு. நீ பாட்டுக்குக் கீள படுத்துக்கய்யா. ஜமக்காளம் தாரேன். தலகாணி தாரேன்” என்றது காக்காய்.

வண்டி ஓடிற்று. அரைமணியானதும், காக்காய், பெட்டியைத் திறந்து ஒரு விஸ்கி பாட்டிலை எடுத்தது. முக்கால் கிளாஸ் நிரப்பி கால் பாகம் தண்ணீர் கலந்து சாப்பிடத் தொடங்கிற்று.

“நான் அப்பவே சொன்னேனோ இல்லியோ – கால் க்ளாஸ் மருந்து முக்கால் க்ளாஸ் தண்ணீன்னு” என்று சோடா பாட்டில் கண்ணாடியால் அதைப் பார்த்துக் கொண்டே கிழக்காக்காய் ஓர் அதட்டல் போட்டது. கிளாஸையும் பிடுங்கப் பார்த்தது.

“ஐயோ, ஆண்டவனே. நீ சொன்னது சரியா காதில் உளுவலெ. விகிதம் மாறிப் போச்சு. இப்ப உட்டுடு” என்று குருவியைப் பார்த்து கண்ணடித்துச் சிரித்தது பெரிய காக்காய். “அடுத்த க்ளாஸ் நீ சொல்றபடி தான் இருக்கும்” என்று ஒரு வாய் குடித்தது.

“என்னது! அடுத்த க்ளாஸா! இன்னும் அடுத்த க்ளாஸ் வேற இருக்கா? ஹ்ம். இனிமே பாட்டிலைத் தொட்டா, தெரியும் சேதி” என்று பாட்டிலை எடுத்துக் கீழ் இருக்கைக்கு அடியில் எட்டாத மூலையில் வைத்தது கிழக்காக்காய். அது உடலைச் சுருக்கி இருக்கைக்கு அடியில் குனிந்து

பாட்டிலை மூலையில் தள்ளி விட்டு எழுந்து கொள்வதற்குள் வாயசப்பட்டிப் பிரதிநிதியான வாட்டசாட்டக் காக்காய் மளமளவென்று ஒரே மூச்சில் க்ளாஸில் உள்ள மது கஷாயத்தைக் காலி செய்துவிட்டது. செய்துவிட்டுக் குருவியைப் பார்த்து "எப்படி" என்பது போல் கண் சிமிட்டிற்று.

பிறகு குருவியோடு பேசத் தொடங்கிற்று. தேர்தலில் எப்படி வெற்றி பெற்றது, எந்த எந்தத் தலைவர்கள் தனக்காக எத்தனை ஊர்களில் எத்தனை கூட்டங்களில் பேசினார்கள் என்று மிக மிக விவரமாகச் சொல்லிற்று.

குருவிக்கு இந்த மாதிரிப் பெரிய இடங்கள். அரசியல் உள் விவகாரங்களெல்லாம் பழக்கம் இல்லை. திகைப்புடனும் பெரிய இடத்துக்குரிய சிறிது பவ்யத்துடனும் எல்லாவற்றையும் கேட்டது.

பிறகு பொருளாதாரம், நீதி மன்றங்களில் நடக்கிற அடிப்படை உரிமை வழக்குகள் என்று, தான் பத்திரிகைகளில் படித்த செய்திகளைப் பற்றிக் கேட்கத் தொடங்கிற்று. அதற்கு ரொம்ப ஆவல் தெரிந்துகொள்ள.

"அதெல்லாம் இப்ப என்னாத்துக்குக் குருவி சார்? அங்க தான் 'போர்' 'தலைவலி'ன்னா இப்ப என்னாத்துக்கு? அந்தத் தலைவாதனை எல்லாம் வாணாம்னு தானே நிம்மதியா ஒண்ணரை நாளு ரயில்லெ போறோம். இல்லாட்டி ஏரோப்ளான்ல போக முடியாதா?"

"ம்க்கும். ஏரோப்ளான்ல போனா ரண்டு க்ளாஸ் முடியறதுக்குள்ளே ஊர் வந்துடுமே . . . " என்று கிழக் காக்காய் நையாண்டி பண்ணிற்று.

"நீ சும்மா இருய்யா."

"மாட்டேன்."

"மாட்டேன்னா இன்னும் கொஞ்சம் மருந்து எடுத்துக் கொடு."

"இன்னும் கொஞ்சமா! உங்க சம்சாரம் இதுக்குத் தான் என்னைக் கூட இருக்கச் சொல்லியிருக்காரா!"

"நீ என்னய்யா பாடி கார்டா, பாட்டில் கார்டா?"

"ரண்டும் தான். பாட்டில் கார்டா இருந்தாத் தான் பாடிகார்டா இருக்க முடியும்."

"நீ பேச்சிலெ சூரன் தான். ஒத்துக்கிட்டேன். போயேன். இதோ பாரு.

இது மட்டும் கொடு போதும்” என்று இடது கையால் தாடையைப் பிடித்துக் கெஞ்சிற்று பெரிய காக்காய். வலது கையால் ஆள் காட்டி விரலையும் பாம்பு விரலையும் காட்டிற்று.

“இது ஏதுரா சங்கடம்!” என்று கீழே குனிந்து மூலையிலிருந்து பாட்டிலை எடுத்தது கிழக்காக்காய்.

“ரண்டு விரலையும் கிளாஸ் மேல வச்சுக்குங்க” என்று சொல்லி ஊற்றிற்று. “என்னென்ன என்ன ரண்டு விரலும் அகண்டுண்டே போறது! சேத்து வச்சுக்குங்க”

வாயசப்பட்டிக் காக்காயின் கட்டை விரல் பாம்பு விரலிலிருந்து பிரிந்து கொண்டே போயிற்று.

“இன்னும் பாதிகூட வல்லியே” என்றது.

“அதெல்லாம் முடியாது.” என்று கிழக்காக்காய் பாட்டிலை நிமிர்த்தும் போது சடக்கென்று வாயசப்பட்டிக் காக்காய் இடது கையால் பாட்டிலைச் சாய்த்தது. க்ளாஸ் நிறைந்து விட்டது.

“என்ன என்ன என்ன! விளையாடறீங்களா? குருவி சார் புடிங்க சார் பாட்டிலெ. ரண்டு பேரா பிடுங்கினாத்தான் சரியா வரும்.” என்று அதட்டிக் கொண்டே மெதுவாகப் பாட்டிலைக் கழற்றிக் கொண்டு மூடிற்று.

“உங்க சம்சாரம் என்னைக் கேட்டா எங்க கொண்டு முகத்தை வச்சிப்பேன்” என்று மறுபடியும் பாட்டிலை இருக்கைக்குக் கீழே மூலையில் தள்ளி வைத்தது கிழக்காக்காய்.

“அவளுக்கு என்ன வேலை? ஒரு பிரியாணி ஒழுங்காப் பண்ணத் தெரியுமா? உடனொத்தவ இருக்காள புதுப் பேட்டக்காரி அவ ஒரு பருப்புத் துவையல் அரச்சு ஒரு ரசம் பண்ணிப் போடுவாளே கம்முனு மணக்க மணக்க, ராசா தலையை எரடும். அந்த மாதிரி ஒரு நாளைக்கு வைக்கச் சொல்லு, உன் பாடிகார்டு வேலை கொடுத்தவளை” . . . ஆவ், ஆ . . . வ்” என்று ஏப்பம் விட்டுக் கொண்டே சொல்லிற்று வாயசப் பட்டிக் காக்காய்.

“ம்க்கும், அவ இல்லாட்டா தெரியும் சேதி. புதுப்பேட்டைக்கே அத்தனையும் போயிருக்கும். அவ மகாலஷ்மி. ஏடா கோடமாப் பேசப் படாது. சொல்லிட்டேன்” என்று பூத மூக்குக் கண்ணாடி வழியாகக் குருவியைப் பார்த்தது கிழக் காக்காய்.

"போய்யா கிடக்கு . . . நீயும் உன் மகா லச்சுமியும். சரி எழுந்திரு. டைனிங்காலுக்குப் போயி ஒரு ஆம்லட்டுக்கு ஆர்டர் கொடுத்திட்டு வா போ."

"அதுக்குள்ளியும் பசியா" என்ற கிழக்காக்காய் "அப்பாடா" "அப்பாடா" என்று முனகிக் கொண்டே எழுந்து போயிற்று.

அது மறைந்ததும் வாயசப்பட்டி மெதுவாக எழுந்து கீழே குனிந்து பாட்டிலை எடுத்து அவசர அவசரமாக ஊற்றிக் கொண்டது. கிழம் திரும்ப வருவதற்குள் மெதுவாகச் சாப்பிட்டது.

கிழக் காக்காய் வந்தது. கைப் பையைத் திறந்து வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த மிளகாய்ப் பொடி எண்ணெய் போட்ட இட்லிகளைச் சாப்பிட்டது. பிறகு ஜமக்காளத்தை விரித்துப் படுத்துக் கொண்டது.

"ஆம்லெட் வந்ததும் சாப்பிட்டுப் பேசாமப் படுத்துக்கணும். குருவி சார் உங்களுக்கும் சொல்றேன் கவனிச்சுக்குங்க" என்று எச்சரித்துவிட்டுப் படுத்துக் கொண்டது. குறட்டை விட்டது.

"குருவி சார் . . . ஒரு ஹெல்ப்" – வாயசப் பட்டி.

"என்ன?"

"மெதுவா கஷாய பாட்டிலெ கொஞ்சம் எடுத்துக் கொடுக்கணும்."

குருவிக்கு உடம்பு சிறியது. எளிதில் லாகவமாக எடுத்து விட்டது. "நான் எடுத்துக் கொடுத்தேன்னு சொல்லப் படாது பெரியவர் கிட்ட" என்று கேட்டுக் கொண்டது.

"என்ன சார்! அப்படி இனம் தெரியாதவனைப் பார்த்தா தேர்ந் தெடுத்திருக்காங்கன்னு நெனச்சீங்க. நம்ப தொகுதியோட அறிவையே கொச்சைப் படுத்திட்டீங்களே" என்று பெரிய காக்காய் சிரித்து க்ளாஸில் ஊற்றாமல் அப்படியே மெதுவாக இரண்டு வாய் சாப்பிட்டு, ஓசைப் படாமல் மூடியைத் திருகி, குருவியிடம் கொடுத்தது. குருவி அதை வாங்கி மறுபடியும் கீழே வைத்தது. "ஸாரி" என்றது வாயசப் பட்டி.

ஆம்லட் கொண்டு வந்த டைனிங் கார் ஆளிடம் காதோடு ஏதோ சொல்லிற்று. பையிலிருந்து பணத்தை எடுத்துக் கொடுத்தது. நடுநிசியில் அவன் ஒரு பாட்டில் கொண்டு கொடுத்து விட்டுப் போனான். இந்த மாதிரி மறு நாளும் இரண்டு தடவை செய்தான். அந்தச் சமயங்களில் கிழக் காக்காயை வேறு ஏதாவது வேலை சொல்லி அனுப்பிவிடும்

வாயசப்பட்டி வாட்டசாட்டப் பிரதிநிதி.

"நீங்க சாப்பிட மாட்டீங்களா?" என்று ஒரு தடவை குருவியைப் பார்த்து வாயசப் பட்டி கேட்டது.

"எப்பவாவது வருஷத்துக்கொருதடவை ஜலதோஷம் காய்ச்சல் வந்தா ஒரு அவுன்ஸ் மிளகைத் தட்டிப் போட்டு வெந்நீர்லெ விட்டுச் சாப்பிட்டிருக்கிறேன். பழக்கமா இல்லெ."

"பளக்கம் கூடாது. எனக்கும் பளக்கம் இல்லெ. இப்படி ரெயில்லெ போறப்பதான். ஊருக்குப் போயி ஊட்டுக்குள்ள நுழைஞ்சிட்டா நெசமாவே மருந்து கணக்காதான். இந்தக் கிளம் இருக்கே நச்சத்திரையன் தான் போங்களேன். உசிரை எடுத்துடுவான் . . . இப்பக் கொஞ்சம் மருந்து மாதிரி சாப்பிடுங்களேன். மொளகு தட்டிப் போட்டு வெந்நீர் கொண்டாரச் சொல்றேன். டைனிங்கார் ஆள்கிட்ட" என்ற உபசாரம் செய்தது வாயசப்பட்டி.

குருவிக்கு நப்பாசை. "ம்" என்று இழுத்தது. டைனிங்கார் ஆள் வரும்போது உத்தரவு பிறந்தது. ஆனால் மிளகு தட்டிப்போட்ட வெந்நீர் வருவதற்குள் வாயசப்பட்டிக்கு மறந்து போய் விட்டது. சொச்ச பாட்டிலைக் காலி செய்துவிட்டது. ஞாபகப் படுத்தக் கூச்சப்பட்டு குருவி அது சாப்பிடுவதை ஏமாற்றமாகப் பார்த்துக் கொண்டிருந்தது.

மிளகு தட்டிப் போட்ட வெந்நீர் வந்ததும். வாயசப்பட்டிக்கு ஞாபகம் வந்தது. "அடேடே, மறந்தே போயிடிச்சே. நீங்க சொல்லப் படாதா சார். பார்த்துக்கிட்டே பேசாம இருந்தீங்களே . . . பொளைக்கிற பிள்ளையா நீங்க . . . ஏன்யா – இன்னும் ஒரு கால் அரை சைஸ் கிடைக்குமா?" என்று டைனிங்கார் ஆளைக்கேட்டது.

"இனிமே எப்படி சார். தட்டாரப் பேட்டை ஸ்டேஷன் தாண்டியாச்சே. அஞ்சு நிமிசத்திலெ இறங்க வேண்டியது தானே" என்றது டைனிங்கார் ஆள் பறவை.

"சாரி சார்."

"பரவால்லெ சார்"

"அடுத்த தடவை பார்த்துக்கலாம்" என்ற வாயசப்பட்டி, ஸீ பெட்டியில் யாரோடோ அரட்டை அடித்துக் கொண்டிருந்த கிழக் காக்காயைக் கூப்பிட்டு, பெட்டி படுக்கைகளை எடுத்து வைக்குமாறு உத்தரவு

கொடுத்தது. ஒன்றரை நாள் பயண அலுப்போடு குருவியும் கீழே இறங்கிப் போயிற்று.

**அமுதசுரபி, அக்டோபர் 1979**

# கதைகள்: காலவரிசை

| வ. எண் | கதைத் தலைப்பு | வெளியான இதழ் | வெளிவந்த காலம் | இடம்பெற்ற தொகுப்பு |
|---|---|---|---|---|
| 1 | மன்னித்து விடு | ஆனந்த விகடன் | டிசம்பர் 1937 | இத்தொகுப்பில் முதன்முறையாக இடம்பெறுகிறது |
| 2 | ஈசுவரத் தியானம் | ஆனந்த விகடன் | மே 1938 | -- |
| 3 | கமலியின் குழந்தை | ஆனந்த விகடன் | ஜூலை 1944 | இத்தொகுப்பில் முதன்முறையாக இடம்பெறுகிறது |
| 4 | ராஜ திருஷ்டி | ஆனந்த விகடன் | அக்டோபர் 1944 | ” |
| 5 | மணச் சட்டை | கலைமகள் | செப்டம்பர் 1945 | ” |
| 6 | காத்திருந்தவள் | சிவாஜி | அக்டோபர் 1946 | -- |
| 7 | ஆண்டவன் நினைத்தது | ஆனந்த விகடன் | டிசம்பர் 1946 | இத்தொகுப்பில் முதன்முறையாக இடம்பெறுகிறது |
| 8 | பசி ஆறிற்று | கலாமோஹினி | 1946 | கொட்டு மேளம் |
| 9 | இக்கரைப் பச்சை | சிவாஜி தீபாவளி மலர் | 1947 | ” |
| 10 | பொய் | சிவாஜி தீபாவளி மலர் | 1948 | சிவப்பு ரிக்‌ஷா |
| 11 | நரை | தேனீ | சித்திரை 1948 | -- |
| 12 | சாப்பாடு | தேனீ | வைகாசி 1948 | -- |

| | | | | |
|---|---|---|---|---|
| 13 | சண்பகப் பூ | தேனீ | ஆனி, 1948 | கொட்டு மேளம் |
| 14 | தூக்கம் | தேனீ | ஆடி, 1948 | -- |
| 15 | கழுகு | தேனீ | ஆவணி 1948 | கொட்டு மேளம் |
| 16 | ஆனைக்குப்பம் | தேனீ | புரட்டாசி 1948 | -- |
| 17 | அதிர்ஷ்டம் | கலைமகள் | செப்டம்பர் 1949 | தி.ஜானகிராமன் படைப்புகள் தொகுதி 2 (ஐந்திணை) |
| 18 | கடன் தீர்ந்தது | கல்கி | அக்டோபர் 1950 | சிவப்பு ரிக்ஷா |
| 19 | ஜீவனாம்சம் | அமுதசுரபி | நவம்பர் 1950 | -- |
| 20 | ரசிகரும் ரசிகையும் | மணிக்கொடி | 1950 | கொட்டு மேளம் |
| 21 | நானும் எம்டனும் | மணிக்கொடி | 1950 | ” |
| 22 | துணை | மணிக்கொடி | 1950 | அக்பர் சாஸ்திரி |
| 23 | அத்துவின் முடிவு | காதம்பரி | 1950 | கொட்டு மேளம் |
| 24 | வேறு வழியில்லை | கலைமகள் | மே, 1951 | தி.ஜானகிராமன் படைப்புகள் தொகுதி 2 (ஐந்திணை) |
| 25 | கொட்டு மேளம் | கலைமகள் | செப்டம்பர் 1951 | கொட்டு மேளம் |
| 26 | பஞ்சத்து ஆண்டி | கலைமகள் | அக்டோபர் 1951 | சிவப்பு ரிக்ஷா |
| 27 | வேண்டாம் பூசணி | அமுதசுரபி | 1951 | கொட்டு மேளம் |
| 28 | குளிர்ஜுரம் | கலைமகள் | ஏப்ரல் 1952 | தி.ஜானகிராமன் படைப்புகள் தொகுதி 2 (ஐந்திணை) |
| 29 | தவம் | கலைமகள் | அக்டோபர் 1952 | கொட்டு மேளம் |
| 30 | நான்தான் ராமன் நாயர் | கல்கி தீபாவளி மலர் | 1952 | சிவப்பு ரிக்ஷா |

| | | | | |
|---|---|---|---|---|
| 31 | பொட்டை | பொன்னி | 1953 | கொட்டு மேளம் |
| 32 | தேவர் குதிரை | கலைமகள் | பிப்ரவரி 1953 | சிவப்பு ரிக்ஷா |
| 33 | பரமபாகவதன் | கல்கி தீபாவளிமலர் | 1953 | –– |
| 34 | சிலிர்ப்பு | கலைமகள் | நவம்பர் 1953 | கொட்டு மேளம் |
| 35 | கோயம்புத்தூர் பவபூதி | கலைமகள் | ஏப்ரல் 1954 | சிவப்பு ரிக்ஷா |
| 36 | கோபுர விளக்கு | கலைமகள் | ஜூன், 1954 | யாதும் ஊரே |
| 37 | யதுநாத்தின் குருபக்தி | கலைமகள் | ஆகஸ்ட் 1954 | " |
| 38 | சிவப்பு ரிக்ஷா | கலைமகள் | அக்டோபர் 1954 | சிவப்பு ரிக்ஷா |
| 39 | தங்கம் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1954 | எருமைப் பொங்கல் |
| 40 | பாப்பாவுக்குப் பரிசு | விந்தியா | நவம்பர் 1954 | " |
| 41 | வெயில் | கலாவல்லி | பிப்ரவரி 1955 | யாதும் ஊரே |
| 42 | அடுத்த . . . | கலைமகள் | பிப்ரவரி 1955 | அக்பர் சாஸ்திரி |
| 43 | செய்தி | சுதேசமித்திரன் | 1955 | சிவப்பு ரிக்ஷா |
| 44 | காட்டுவாசம் | கலைமகள் | நவம்பர் 1955 | அக்பர் சாஸ்திரி |
| 45 | மறதிக்கு | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | 1955 | சிவப்பு ரிக்ஷா |
| 46 | அர்த்தம் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1955 | அக்பர் சாஸ்திரி |
| 47 | தூரப்பிரயாணம் | காதல் | 1956க்கு முன் | சிவப்பு ரிக்ஷா |
| 48 | ராவணன் காதல் | காதல் | 1956க்கு முன் | " |
| 49 | பரதேசி வந்தான் | அமுதசுரபி | 1956க்கு முன் | " |
| 50 | சத்தியமா | அமுதசுரபி | 1956க்கு முன் | " |
| 51 | ஆடை | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | அக்டோபர் 1956 | மனிதாபிமானம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 52 | பட்சி சாஸ்திரக் கிளி | கலைமகள் | அக்டோபர் 1956 | இத்தொகுப்பில் முதன்முறையாக இடம்பெறுகிறது |
| 53 | மணம் | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | அக்டோபர் 1956 | யாதும் ஊரே |
| 54 | கங்கா ஸ்நானம் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1956 | சக்தி வைத்தியம் |
| 55 | குளிர் | காதல் | நவம்பர் 1956 | அக்பர் சாஸ்திரி |
| 56 | குழந்தைக்கு ஜுரம் | கலைமகள் | அக்டோபர் 1957 | " |
| 57 | தீர்மானம் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1957 | சக்தி வைத்தியம் |
| 58 | உண்டை வெல்லம் | சுதேசமித்திரன் | 1958 | — |
| 59 | முள்முடி | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1958 | சக்தி வைத்தியம் |
| 60 | மரமும் செடியும் | கலைமகள் | நவம்பர் 1958 | அக்பர் சாஸ்திரி |
| 61 | அக்பர் சாஸ்திரி | கல்கி | ஏப்ரல் 1959 | " |
| 62 | மயில்சாமியின் தேவை | கல்கி | ஜூலை 1959 | எருமைப் பொங்கல் |
| 63 | அட்சராப்பியாசம் | கலைமகள் | அக்டோபர் 1959 | சக்தி வைத்தியம் |
| 64 | அதிர்வு | கல்கி தீபாவளி மலர் | 1959 | பிடி கருணை |
| 65 | கோவிந்தராவின் மாப்பிள்ளை | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1959 | — |
| 66 | எருக்கம்பூ | சிவாஜி | 1960 | — |
| 67 | மூர்ச்சை | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1960 | எருமைப் பொங்கல் |
| 68 | கள்ளி | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | 1960 | அக்பர் சாஸ்திரி |
| 69 | ஆரத்தி | கல்கி | அக்டோபர் 1960 | யாதும் ஊரே |
| 70 | நாய்க்கர் திருப்பணி | கலைமகள் | நவம்பர் 1960 | சக்தி வைத்தியம் |
| 71 | எருமைப் பொங்கல் | கல்கி | ஜனவரி 1961 | எருமைப் பொங்கல் |

| | | | | |
|---|---|---|---|---|
| 72 | போர்ஷன் காலி | கலைமகள் தீபாவளி மலர் | 1961 | இத்தொகுப்பில் முதன்முறையாக இடம்பெறுகிறது |
| 73 | வெங்கிடிசார் ஏன் ஓடினார் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1961 | சக்தி வைத்தியம் |
| 74 | கோதாவரிக் குண்டு | கல்கி தீபாவளி மலர் | 1961 | யாதும் ஊரே |
| 75 | சக்தி வைத்தியம் | கலைமகள் தீபாவளி மலர் | 1962 | சக்தி வைத்தியம் |
| 76 | யாதும் ஊரே | கல்கி தீபாவளி மலர் | 1962 | யாதும் ஊரே |
| 77 | ஐயரும் ஐயாறும் | கல்கி | ஜனவரி 1963 | அக்பர் சாஸ்திரி |
| 78 | இவனும் அவனும் நானும் | ஆனந்த விகடன் | 1963 | மனிதாபிமானம் |
| 79 | விரல் | கலைமகள் | நவம்பர் 1963 | இத்தொகுப்பில் முதன்முறையாக இடம்பெறுகிறது |
| 80 | ஒரு விசாரணை | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1963 | பிடி கருணை |
| 81 | புண்ணிய பாங்க் | கல்கி தீபாவளி மலர் | 1963 | ” |
| 82 | மாடியும் தாடியும் | கல்கி | ஏப்ரல் 1964 | யாதும் ஊரே |
| 83 | நடேசண்ணா | கலைமகள் தீபாவளி மலர் | 1964 | எருமைப் பொங்கல் |
| 84 | தாத்தாவும் பேரனும் | கல்கி தீபாவளி மலர் | 1964 | பிடி கருணை |
| 85 | பிடிகருணை | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1964 | ” |
| 86 | யோஷிகி | கல்கி | ஏப்ரல் 1965 | யாதும் ஊரே |
| 87 | அருணாசலமும் பட்டுவும் | தீபம் | ஆகஸ்ட் 1965 | மனிதாபிமானம் |
| 88 | ஸிடிஎன்/ 5 ஆர் x க | கல்கி | ஆகஸ்ட் 1965 | –– |
| 89 | வீடும் வெளியும் | கலைமகள் தீபாவளி மலர் | 1965 | மனிதாபிமானம் |
| 90 | கச்சேரி | கல்கி தீபாவளி மலர் | 1965 | எருமைப் பொங்கல் |

| | | | | |
|---|---|---|---|---|
| 91 | நடராஜக் கால் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1965 | " |
| 92 | அப்பா பிள்ளை | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | 1965 | யாதும் ஊரே |
| 93 | பாஷாங்க ராகம் | கல்கி | ஏப்ரல் 1966 | " |
| 94 | சாப்பாடுபோட்டு நாற்பது ரூபாய் | தீபம் | ஆகஸ்ட் 1966 | மனிதாபிமானம் |
| 95 | ஒரு சின்ன வாக்குவாதம் | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1966 | சக்தி வைத்தியம் |
| 96 | மாற்றல் | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | 1966 | யாதும் ஊரே |
| 97 | கண்டாமணி | கல்கி தீபாவளி மலர் | 1966 | " |
| 98 | மேரியின் ஆட்டுக்குட்டி | தினமணி கதிர் | 1967 | பிடி கருணை |
| 99 | தேடல் | தீபம் | ஆகஸ்ட் 1967 | மனிதாபிமானம் |
| 100 | நிலவு கருமேகம் | சுதேசமித்திரன் | 1967 | —— |
| 101 | இசைப் பயிற்சி | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1967 | சக்தி வைத்தியம் |
| 102 | சந்தானம் | கணையாழி | மே – ஜூன் 1968 | பிடி கருணை |
| 103 | நேத்திக்கு | கணையாழி | ஆகஸ்ட் 1969 | பிடி கருணை |
| 104 | பூச்சி டயலாக் | கல்கி | அக்டோபர் 1969 | —— |
| 105 | மனநாக்கு | கணையாழி | நவம்பர் 1969 | மனிதாபிமானம் |
| 106 | பஸ்ஸூம் நாய்களும் | தினமணி கதிர் தீபாவளி மலர் | 1969 | பிடி கருணை |
| 107 | தற்செயல் | குமுதம் | ஆகஸ்ட் 1970 | தி.ஜானகிராமன் படைப்புகள் தொகுதி 2 (ஐந்திணை) |
| 108 | கடைசி மணி | கல்கி தீபாவளி மலர் | 1970 | எருமைப் பொங்கல் |
| 109 | விளையாட்டுப் பொம்மை | ஆனந்த விகடன் தீபாவளி மலர் | 1970 | சக்தி வைத்தியம் |
| 110 | பாயசம் | கணையாழி | ஆகஸ்ட் 1971 | பிடி கருணை |

| | | | | |
|---|---|---|---|---|
| 111 | மனிதாபிமானம் | கணையாழி | ஆகஸ்ட் 1977 | மனிதாபிமானம் |
| 112 | பாட்டியா வீட்டில் குழந்தைக் காட்சி | அமுதசுரபி | மே, 1979 | ” |
| 113 | மறுபிறவி | அமுதசுரபி | ஜூன், 1979 | எருமைப் பொங்கல் |
| 114 | ஆயிரம் பிறைகளுக்கு அப்பால் | அமுதசுரபி | ஆகஸ்ட் 1979 | ” |
| 115 | பிரயாணக் கதை | அமுதசுரபி | அக்டோபர் 1979 | தி.ஜானகிராமன் படைப்புகள் 2 (ஐந்திணை) |
| 116 | ஆயா | அமுதசுரபி | நவம்பர் 1979 | மனிதாபிமானம் |
| 117 | கிழவரைப் பற்றி ஒரு கனவு | தினமணி கதிர் | நவம்பர் 1980 | ” |
| 118 | சுளிப்பு | அமுதசுரபி தீபாவளி மலர் | 1980 | ” |
| 119 | திண்ணை வீரா | ஆல் இந்தியா ரேடியோ | -- | அக்பர் சாஸ்திரி |
| 120 | அன்புவைத்த பிள்ளை | சந்திரோதயம் | -- | யாதும் ஊரே |
| 121 | ஸ்ரீராமஜெயம் | | -- | ” |
| 122 | மாப்பிள்ளைத் தோழன் | சுதேசமித்திரன் தீபாவளி மலர் | -- | ” |

# தொகுப்புகளும் கதைகளும்

## 1. கொட்டு மேளம்

வெளியீடு : கலைமகள் காரியாலயம்

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு, ஜூன், 1954

விலை : ரூ. 2

பக்கங்கள் : 204

### தொகுப்பிலுள்ள கதைகள்

1. கொட்டு மேளம் – கலைமகள் / செப்டம்பர் 1951
2. சண்பகப் பூ – தேனீ / ஆனி 1948
3. ரசிகரும் ரசிகையும் – மணிக்கொடி / 1950
4. கழுகு – தேனீ / 1948
5. பசி ஆறிற்று – கலாமோகினி / 1946
6. ‘வேண்டாம் பூசனி!’ – அமுதசுரபி / 1951 க்கு முன்
7. இக்கரைப் பச்சை – சிவாஜி தீபாவளி மலர் / 1947
8. நானும் எம்டனும் – மணிக்கொடி / 1950
9. அத்துவின் முடிவு – காதம்பரி / 1951 க்கு முன்
10. பொட்டை – பொன்னி / 1953
11. தவம் – கலைமகள் / அக்டோபர் 1952
12. சிலிர்ப்பு – கலைமகள் / நவம்பர் 1953

## 2. சிவப்பு ரிக் ஷா

வெளியீடு : கலைமகள் காரியாலயம், சென்னை

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு, அக்டோபர் 1956

விலை : ரூ. 2– 8– 0

பக்கங்கள் : 200

## தொகுப்பிலுள்ள கதைகள்

1. சிவப்பு ரிக் ஷா – கலைமகள் / அக்டோபர் 1954
2. கடன் தீர்ந்தது! – கல்கி / அக்டோபர் 1950
3. பொய் – சிவாஜி தீபாவளி மலர் / 1948
4. கோயம்புத்தூர்ப் பவபூதி – கலைமகள் / ஏப்ரல் 1954
5. தேவர் குதிரை – கலைமகள் / ஏப்ரல் 1953 (அல்லது பிப்ரவரி)
6. பரதேசி வந்தான் – அமுத சுரபி / 1956 க்கு முன்
7. சத்தியமா! – அமுத சுரபி / 1956 க்கு முன்
8. செய்தி – சுதேசமித்ரன் / 1955
9. மறதிக்கு . . . – சுதேசமித்ரன் / நவம்பர் 1955
10. பஞ்சத்து ஆண்டி – கலைமகள் / அக்டோபர் 1951
11. நான்தான் ராமன் நாயர் – கல்கி தீபாவளி மலர் / 1952
12. தூரப் பிரயாணம் – காதல் / 1956 க்கு முன்
13. ராவணன் காதல் – காதல் / 1956 க்கு முன்

## 3. அக்பர் சாஸ்திரி

வெளியீடு : மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 1

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு, ஆகஸ்ட் 1963

விலை : ரூ. 2– 50

பக்கங்கள் : 160

## தொகுப்பிலுள்ள கதைகள்

1. அக்பர் சாஸ்திரி – கல்கி / 12.4.1959
2. துணை – மணிக்கொடி / 1950
3. மரமும் செடியும் – கலைமகள் / நவம்பர் 1958
4. காட்டுவாசம் – கலைமகள் / நவம்பர் 1955
5. கள்ளி – சுதேசமித்ரன் தீபாவளி மலர் / 1960
6. குளிர்! – காதல் / 1956
7. ஐயரும் ஐயாறும் – கல்கி / 13 ஜனவரி 1963
8. குழந்தைக்கு ஜுரம் – கலைமகள் / அக்டோபர் 1957
9. திண்ணை வீரா! – சென்னை வானொலி நிலையம்
10. அடுத்த . . . – கலைமகள் / பிப்ரவரி 1955
11. அர்த்தம் – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / 1955

## 4. யாதும் ஊரே

வெளியீடு : மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு, டிசம்பர் 1967

விலை : ரூ. 3– 75

பக்கங்கள் : 203

## தொகுப்பிலுள்ள கதைகள்

1. கோபுர விளக்கு – கலைமகள் / ஜூன் 1954
2. யாதும் ஊரே . . . – கல்கி தீபாவளி மலர் / 1962
3. கண்டாமணி – கல்கி / தீபாவளி மலர் / 1966
4. யோஷிகி – கல்கி / 11– 4– 1965
5. மணம் – சுதேசமித்திரன் தீபாவளி மலர் / 1966
6. அப்பா – பிள்ளை – சுதேசமித்திரன் தீபாவளி மலர் / 1965

7. யதுநாத்தின் குருபக்தி – கலைமகள் / ஆகஸ்ட் 1954 (அக்டோபர்)

8. ஆரத்தி – கல்கி / 9– 10– 1960

9. ஸ்ரீராமஜெயம் – அமுதசுரபி – (கல்கி)

10. மாற்றல் – சுதேசமித்ரன் தீபாவளி மலர் / 1966

11. வெயில் – கலாவல்லி / 1955

12. மாடியும் தாடியும் – கல்கி / 12– 4– 1964

13. பாஷாங்க ராகம் – கல்கி / 17– 4– 1966

14. அன்பு வைத்த பிள்ளை – சந்திரோதயம்

### 5. பிடி கருணை

வெளியீடு : மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு, டிசம்பர் 1974

விலை : ரூ. 5– 00

பக்கங்கள் : 159

### தொகுப்பிலுள்ள கதைகள்

1. பிடி கருணை – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / 1964

2. சந்தானம் – கணையாழி / மே – ஜூன் 1968

3. பாயசம் – கணையாழி / ஆகஸ்ட் 1971

4. தாத்தாவும் பேரனும் – கல்கி தீபாவளி மலர் / 1964

5. புண்ணிய பாங்க் – கல்கி தீபாவளி மலர் / 1963

6. அதிர்வு – கல்கி தீபாவளி மலர் / 1959

7. ஒரு விசாரணை – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / 1969

8. பஸ்ஸும் நாய்களும் – தினமணி கதிர் தீபாவளி மலர், 1969

9. நேத்திக்கு – கணையாழி / ஆகஸ்ட் 1969

**10.** மாப்பிள்ளைத் தோழன் – சுதேசமித்திரன் தீபாவளி மலர்

**11.** மேரியின் ஆட்டுக்குட்டி – தினமணி கதிர் தீபாவளி மலர் / **1967**

## 6. சக்தி வைத்தியம்

வெளியீடு **:** மீனாட்சி புத்தக நிலையம், மதுரை

பதிப்பு விவரம் **:** முதற் பதிப்பு ஜூலை **1978**

விலை **:** ரூ. **6– 50**

பக்கங்கள் **: 202**

## தொகுப்பிலுள்ள கதைகள்

**1.** கங்கா ஸ்நானம் – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1956**

**2.** தீர்மானம் – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1957**

**3.** முள் முடி – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1958**

**4.** அட்சராப்பியாசம் – கலைமகள் / அக்டோபர் **1959**

**5.** நாய்க்கர் திருப்பணி – கலைமகள் / நவம்பர் **1960**

**6.** கோதாவரிக் குண்டு – கல்கி தீபாவளி மலர் / **1961**

**7.** வெங்கிடிசார் ஏன் ஓடினார்**!** – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1961**

**8.** சக்தி வைத்தியம் – கலைமகள் தீபாவளி மலர் / நவம்பர் **1962**

**9.** ஒரு சின்ன வாக்குவாதம் – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1966**

**10.** இசைப் பயிற்சி – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1967**

**11.** விளையாட்டுப் பொம்மை – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / **1970**

## 7. மனிதாபிமானம்

வெளியீடு : மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு ஆகஸ்ட், **1981**

விலை : ரூ. **8– 25**

பக்கங்கள் : **176**

## தொகுப்பிலுள்ள கதைகள்

**1.** மனிதாபிமானம் – கணையாழி / ஆகஸ்ட் **1977**

**2.** மனநாக்கு – கணையாழி – நவம்பர் **1969**

**3.** பாட்டியா வீட்டில் குழந்தைக் காட்சி – அமுதசுரபி / மே **1979**

**4.** இவனும் அவனும் நானும் – ஆனந்த விகடன் / **1963**

**5.** வீடும் வெளியும் – கலைமகள் தீபாவளி மலர் / **1965**

**6.** சாப்பாடு போட்டு நாற்பது ரூபாய் – தீபம் முதலாண்டு மலர் / **1966**

**7.** தேடல் – தீபம் இரண்டாவது ஆண்டு மலர் / **1967**

**8.** அருணாச்சலமும் பட்டுவும் – தீபம் ஆகஸ்ட் / **1965**

**9.** ஆயா – அமுதசுரபி தீபாவளி மலர் / **1979**

**10.** சுளிப்பு – அமுதசுரபி தீபாவளி மலர் / **1980**

**11.** ஆடை – சுதேசமித்திரன் தீபாவளி மலர் / **1956**

**12.** கிழவரைப் பற்றி ஒரு கனவு – தினமணி கதிர் / நவம்பர் **1980**

## 8. எருமைப் பொங்கல்

வெளியீடு : ஐந்திணைப் பதிப்பகம், சென்னை

பதிப்பு விவரம் : முதற் பதிப்பு டிசம்பர் **1990**

மறு பதிப்பு : செப்டம்பர் **1996**

விலை : ரூ. 20

பக்கங்கள் : 120

## தொகுப்பிலுள்ள கதைகள்

1. எருமைப் பொங்கல் – கல்கி / 15.1.1961
2. நடராஜக் கால் – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / 1965
3. நடேசண்ணா – கலைமகள் தீபாவளி மலர் / 1964
4. ஆயிரம் பிறைகளுக்கு அப்பால் – அமுத சுரபி / ஆகஸ்ட் 1979
5. மறு பிறவி – அமுதசுரபி / ஜூன் 1979
6. மயில்சாமியின் தேவை – கல்கி / 5.7.1959
7. கடைசி மணி – கல்கி தீபாவளி மலர் நவம்பர் / 1970
8. பாப்பாவுக்குப் பரிசு – விந்தியா / நவம்பர் 1954
9. மூர்ச்சை – ஆனந்த விகடன் தீபாவளி மலர் / 1960
10. தங்கம் – ஆனந்த விகடன் தீபாவளி மலர் 1954

(முதற் பதிப்பு விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன)

# சிறுகதை எழுதுவது எப்படி?

எல்லோரும் நாட்டியம் ஆடுவதில்லை. எல்லோரும் சங்கீதம் பாடுவதில்லை. எல்லோரும் வயலினோ, மிருதங்கமோ வாசிப்பதில்லை. சிலருக்குத்தான் இந்தக் காரியங்களைச் செய்ய முடிகிறது. அந்தச் சிலரிலேயே ஓரிரண்டு பேர் செய்யும்பொழுது நமக்கு மெய் மறந்துவிடுகிறது. தெய்வத்தையே கண்டு விட்டாற்போல புல்லரித்துப் போகிறோம். வேறு பலர் செய்யும்பொழுது, நமக்கு இந்த அனுபவம் ஏற்படுவதில்லை. ஒருசமயம் நாம் பிரமிக்கலாம்; மலைக்கலாம்; வியக்கலாம். நுட்பமான ரசானுபவம், தன்மறதி போன்ற உணர்வு நிலைகள் வருவதில்லை. கலைஞர் உணர்வு மயமாக ஆகி ஆடும்போதோ, வாசிக்கும்போதோ, தானாக ஒரு முழுமையும் ஓர் ஒருமையும் அந்தக் கலைப்படைப்பில் நிறைந்து, நம்முள்ளேயும் பரவி நிரம்பும். உணர்வு இல்லாமல் இயந்திர ரீதியில் படைக்கிறவர்கள் இருக்கிறவர்கள். இவர்கள் தங்கள் சாமர்த்தியத்தையும் அசகாய சூரத்தனத்தையும் காட்டி நம்மைப் பிரமிக்க வைக்க முடியும், ஆனால் மெய்மறக்கச் செய்ய இயலாது. நான் இந்த நோக்கில்தான் எந்தக் கலைப் படைப்பையும் பார்க்கிற வழக்கம். சிறுகதையையும் அப்படித்தான் பார்க்கிறேன்.

எந்தக் கலைப்படைப்புக்கும் முழுமையும் ஒருமையும் அவசியம். அவை பிரிக்க முடியாத அம்சங்கள். சிறுகதையில் அவை உயிர்நாடி. ஓர் அனுபவத்தைக் கலைவடிவில் வெளிப்படுத்த சிறுகதையில் இடமும் காலமும் குறுகியவை. எனவே எடுத்துக்கொண்ட விஷயம் – உணர்வோ, சிரிப்போ, புன்சிரிப்போ, நகையாடலோ – முறுக்கேறிய, துடிப்பான ஒரு கட்டத்தில்தான் இருக்கமுடியும். சிறிது நேரத்தில் வெடித்துவிடப் போகிற ஒரு தெறிப்பும், ஓர் அவசரத்தன்மையும் நம்மை ஆட்கொள்ள வேண்டும். தெறிக்கப் போகிறது பட்டுக் கயிறாக இருக்கலாம். எஃகு வடமாக இருக்கலாம். ஆனால் அந்தத் தெறிப்பும் நிரம்பி வழிகிற துடிப்பும் இருக்கத்தான் வேண்டும். இந்தத் தெறிப்பு விஷயத்திற்குத் தகுந்தாற்போல் வேறுபடுவது சகஜம். கதையில் பொருள் சோம்பல், காதல், வீரம், தியாகம், நிராசை, ஏமாற்றம், நம்பிக்கை, பக்தி, உல்லாசம், புதிர் அவிழல் அல்லது இவற்றில் சிலவற்றின் கலவைகளாக இருக்கலாம். அதற்குத் தகுந்தபடி அந்தத் தெறிப்பு பஞ்சின் தெறிப்பாகவோ, பட்டின்

தெறிப்பாகவோ, எஃகின் தெறிப்பாகவோ, குண்டு மருந்தின் வெடிப்பாகவோ சத்தம் அதிகமாகவோ குறைந்தோ மௌனமாகவோ மாறுபடும். எனக்கு வேறு மாதிரியாக இந்த அனுபவத்தை விளக்கம் தெரியவில்லை. பல சமயங்களில் சிறுகதையைப் பற்றி நினைக்கும் போது, நூறு அல்லது ஐம்பது கஜ ஓட்டப்பந்தயத்திற்கு ஆயத்தம் செய்துகொள்ளுகிற பரபரப்பும், நிலைகொள்ளாமையும் என்னைக் கவ்விக் கொள்கிறதுண்டு. இது ஒரு மைல் ஓட்டப் பந்தயமல்ல; சைக்கிளில் பல ஊர்கள், வெளிகள், பாலங்கள், சோலைகள், சாலைகள் என்று வெகுதூரம் போகிற பந்தயம் இல்லை. நூறு கஜ ஓட்டத்தில் ஒவ்வோர் அடியும் ஒவ்வோர் அசைவும் முடிவை நோக்கித் துள்ளி ஓடுகிற அடி அசைவு. ஆர அமர, வேடிக்கை பார்த்துக்கொண்டு செல்லவோ வேகத்தை மாற்றிக் கொள்ளவோ இடமில்லை. சிறுகதையில் சிக்கனம் மிக மிக அவசியம். வளவளப்புக்கு இடமே கிடையாது. வளவளப்பு என்றால் அதிகச்சுமை. ஓடுவது கஷ்டம்.

இத்தனை தெறிப்பும் துடிப்பும் வேகமும் தேவையான சிறுகதை எழுத எத்தனையோ பேர்வழிகள் சொல்லியிருக்கிறார்கள். வகுப்புக்கூட நடத்துகிறார்கள். தபால் ட்யூஷன்கூட நடத்துவதாகக் கேள்வி. என்ன நடத்தினாலும் உத்திகளைத்தான் சொல்லிக்கொடுக்கலாம். உணர்வில் தோய்வதைச் சொல்லிக் கொடுக்க முடியாது. உணர்வில் லயிப்பதையும் முறுக்கேறுவதையும் சொல்லிக்கொடுக்க முடியாது. ஆனால் உத்திகளைச் சரியாகக் கையாண்டு, இலக்கணரீதியாகப் பழுதில்லாத ஆயிரம் சிறுகதைகள் இப்பொழுது நம் நாட்டிலும் அயல்நாடுகளிலும் பல பத்திரிகைகளில் வருகின்றன. ஆனால் நாவலோ, நாடகமோ எழுதும் ஆசிரியர்களின் எண்ணிக்கையில் நூற்றில் ஒரு பங்குகூட அசல் சிறுகதை ஆசிரியர்கள் இந்த உலகத்தில் இல்லை. இதுதான் வேடிக்கை. உத்திகளைத் தெரிந்துகொண்டு மட்டும் சிறுகதைகள் எழுதி, பத்திரிகைகளை நிரப்பலாம். அது ஒன்றும் பெரிய காரியமல்ல. செக்காவின் உத்திக்கு ஓர் அச்சு தயார் செய்துகொண்டு அதில் நம் சரக்கைப் போட்டு வார்த்துவிடலாம். ஆனால் அது செக்காவ் அச்சின் வார்ப்பாகத்தான் இருக்கும். புதிதாக ஒன்றும் வந்து விடாது. உணர்வும் நம் பார்வையின் தனித்தன்மையும்தான் முக்கியம். அவை கண்யமாகவும் தீவிரமாகவும் இருந்தால் நமக்கு என்று ஓர் உருவம் கிடைக்கும். இதை எப்படிச் சொல்லிக் கொடுக்கப் போகிறார்கள்?

தனித்தன்மையும், உணர்ச்சி நிறைவும், தெறிப்பும் எல்லாம் இல்லாவிட்டால் சிறுகதையின் பிரசித்திபெற்ற இலக்கணமான

ஒருமைப்பாடு உயிரில்லாத ஜடமாகத்தான் இருக்கும். இன்று உலகப் பத்திரிகைகளில் வரும் பெரும்பாலான கதைகள் தனித்தன்மை இல்லாத, அல்லது போலி உணர்ச்சிகள் நிறைந்த ஜடங்கள்தான். ஆனால் பொதுவாக பத்திரிகைகள்தான் சிறுகதைக் கலையை வளர்ப்பதில் பெரும் பங்குகொண்ட கருவியாக இருந்திருக்கின்றன. செக்காவ், மாப்பஸான், ஹென்ரி ஜேம்ஸ், மாம், மெல்வில், ஸ்டீபன், க்ரேன், ப்ரெட் ஹார்ட்டி முதல் ஜெர்மனி, ஜப்பான், இந்தியா ஆகிய நாடுகளில் எழுதிய, எழுதுகிற சிறுகதை எழுத்தாளர்கள் வரை — முக்காலே மூன்று வீசம்பேர் பத்திரிகைகளில்தான் எழுதியிருக்கிறார்கள் — எழுதுகிறார்கள். எனவே, பொறுப்புள்ள பத்திரிகைகள் நல்ல சிறுகதைகளையும், பொறுப்பில்லாதவை ஜடங்களையும் வளர்க்கின்றன என்று சொல்லிவிட்டு மேலே போவோம்.

சிறுகதையில் வரும் கதையோ நிகழ்ச்சியோ ஒரு க்ஷணத்திலோ, நிமிஷத்திலோ, ஒரு நாளிலோ, பல வருடங்களிலோ நடக்கக்கூடியதாக இருக்கலாம். காலையில் தொடங்கி இரவிலோ, மறுநாள் காலையிலோ அல்லது அந்த மாதிரி ஒரு குறுகிய காலத்திலோ முடிந்துவிட வேண்டும் என்று அவசியமில்லை. சொல்லப்பட வேண்டிய பொருளின் ஒருமைதான் முக்கியமானது. எட்டு நாளில் நடந்த சங்கதியை முதல் நாளிலிருந்து வரிசையாகச் சொல்லிக்கொண்டு போகலாம். இரண்டாவது, மூன்றாவது, நாலாவது நாளிலிருந்தோ அல்லது கடைசிக் கணத்திலிருந்தோ ஆரம்பித்து, பின் பார்வையாகப் பார்த்துச் சொல்லிக்கொண்டு போகலாம். நடந்தது, நடக்கப் போவது இரண்டுக்கும் இடையே ஒரு வசதியான காலகட்டத்தில் நின்றுகொண்டு நிகழ்ச்சியைச் சித்திரித்துக்கொண்டு போகலாம். எப்படிச் சொன்னாலும், ஒரு பிரச்னை, ஒரு பொருள், ஓர் உணர்வு, ஒரு கருத்துதான் 'ஓங்கியிருக்கிறது' என்ற நிலைதான் சிறுகதைக்கு உயிர்.

சிறுகதையில் சொல்லக்கூடாத விஷயங்களே இல்லை. கடந்த 100 ஆண்டுகளில் சிறுகதை வளர்ந்துள்ள போக்கைப் பார்த்தாலே இது தெரியும். வெறும் புற நிகழ்ச்சிகளில் தொடங்கி நுட்பமான மனத்தத்துவ ஆராய்ச்சி வரையில் அதன் பொருள் இப்பொழுது விரிந்திருக்கிறது. மேலெழுந்த வாரியான கவனத்திற்குப் புலப்படாத அக உணர்வுகள், நினைவோட்டங்கள், அடிமன நிலைகள், வெறும் கண்பார்வைக்குப் பின்னால் ஒளிந்து கிடக்கும் மன உந்தல் — இவை எல்லாம் இன்று சிறுகதைப் பொருளாக வந்துள்ளன. ஆனால் எதைச் சொன்னாலும் ஓங்கி நிற்கும் ஒருமை அவசியம். ஒருமையுள்ள சிறுகதை முடிய வேண்டிய இடத்தில் தானாக முடிந்துவிடும். முடிகிற எல்லையைக் கடந்தால்

ஒருமைக்கோப்புக்கும் ஊறு விளையத்தான் செய்யும். பந்து எல்லையைக் கடந்து ஓடினால் கிரிக்கெட்டில் ஒன்றுக்கு நாலாக ரன் கிடைக்கும். சிறுகதையில் கிடைப்பது பூஜ்யம்தான்.

என்னை ஒரு நண்பர் கேட்டார். சிறுகதை, நாவல் எழுதுகிறவன் பெரிய இலக்கிய கர்த்தர்களின் நூல்களைப் படிக்க வேண்டுமா என்று. அவசியமில்லை என்று நான் சொன்னேன். அது எனக்கும் என்னைப் போன்றவர்களுக்கும் சொல்லவில்லை. இயற்கையாகவே அபாரமாக எழுதும் மேதை படைத்தவர்களை, புது வழிவகுக்கும் ஆற்றல் படைத்தவர்களை மனத்தில் வைத்துக் கொண்டு சொன்னது. என்னைப் போன்றவர் நிறைய படித்தால் தான் நல்லது. செக்காவ், மாப்பஸான், போ, மாம், தாகூர், கு.ப.ரா. புதுமைப்பித்தன், லா.சா.ரா., ஸீன் ஓகாஸி, ஜாய்ஸ், ஸ்டீஃபன்க்ரேன், ஹென்ரி ஜேம்ஸ், போவன், காவபாட்டா போன்ற வெவ்வேறு சிறுகதை ஆசிரியர்களைப் படித்தால், சிறுகதைக்கான பொருள்களை நாடுவதில் எத்தனை சாத்தியக் கூறுகள் உண்டு என்பதும், சிறுகதை உருவத்தில் எத்தனை நூறு வகைகள் சாத்தியம் என்பதும் தெரியும். உருவம் என்று சொல்லும் போது ஆரம்பம், இடை, முடிவு மூன்றும் தெள்ளத் தெளிவாகத்தான் இருக்க வேண்டிய அவசியமில்லை என்பதும் இந்தக் கதைகளைப் படித்தால் தெரியும். இந்த மூன்றும் தெளிவாகத் தெரிவதும், தெளிவில்லாமல் பூசினாற் போல் இருப்பதும் சொல்லுகிற விஷயத்தைப் பொறுத்தவை. ஒரு மரத்தின் நிழல் கருக்காகக் கத்தரித்தாற்போலும் விழலாம். பூசினாற் போலும் விழலாம். அது விளக்கின் தூரம், ஒளி முதலியவற்றைப் பொறுத்தது. உருவம் சரியாக அமைவது நம்முடைய உணர்வின் தீவிரத் தன்மையைப் பொறுத்தது. என்னுடைய அனுபவத்தில், உணர்ச்சியோ, சிந்தனையோ போதிய தீவிரத்தன்மை பெறும்போது, உருவமும் தானாக ஒருமைப்பாட்டுடன் அமைந்துவிடுகிறது. உணர்ச்சியின் தீவிரத் தன்மை எப்போது, எந்தக் கால அளவில் போதிய அளவுக்குக் கைகூடும் என்று சட்டம் போடுவதற்கில்லை. அது ஒவ்வோர் ஆசிரியரின் திறமையைப் பொறுத்தது. ஒருவருக்கு ஒரு மணியிலோ, ஒரு நிமிஷத்திலோ கைகூடுகிற தீவிரத்தன்மை, ஊறும் தன்மை, எனக்குக் கிட்ட ஒரு வாரமோ, ஒரு வருஷமோ பிடிக்கலாம். எனக்கு ஒரு கதையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், திடீரென்ற வேறு ஒரு கதை தோன்றிச் சில நிமிஷங்களில் அதை எழுதி முடித்ததுண்டு. யோசித்துப் பார்த்தால், அந்தக் கதைக்கான வித்து மனத்தில் விழுந்து எத்தனையோ வருஷங்கள் ஆகியிருக்கும். தோட்டத்து மண்ணில் எப்பொழுதோ உதிர்ந்த

விதையொன்று, மண்ணுள் பல காலம் உறங்கி, திடீரென்று ஒரு மழை அல்லது நைப்பிற்குப் பிறகு முளைப்பது மாதிரிதான் அது. உணர்ச்சியைக் குறுகிய காலத்தில் தீவிரமாக அனுபவிக்கப் பழக்கியும் கொள்ளலாம் என்று சொல்கிறார்கள். எழுத்து தொழிலாகி, பத்திரிகைகள் பெருகிவிட்ட இந்த நாளில் இப்படிப் பழக்கிக் கொள்வது அவசியம் என்பதில் தவறில்லை.

எப்படி எழுதுவது என்பதை எனக்குச் சரியாக விவரிக்கத் தெரியவில்லை. மாபஸான் "நெக்லேஸை"யோ, "இரு நண்பர்களை"யோ, செக்காவ் "டார்லிங்"கையோ, "கோரஸ் பாடகி"யையோ, கு.ப.ரா. "நூருன்னிஸா"வையோ, பிச்சமூர்த்தி "பதினெட்டாம் பெருக்கை"யோ, டாகூர் "ஊர் திரும்புதலை"யோ எப்படி எழுதினார்கள் என்று அவர்களைக் கேட்டால்தான் தெரியும். என் சொந்த அநுபவத்தில் தெரிந்ததைத்தான் நான் சொல்லுவேன். ஒரு நாள் நான் ரயிலில் போய்க்கொண்டிருந்தபோது கச்சலும், கறுப்புமாக நாய் பிடுங்கினாற்போன்ற ஒரு பத்து வயதுப் பெண்குழந்தையுடன் யாரோ பணக்கார அம்மாள் எதிர் இருக்கையில் அமர்ந்திருந்தாள். பள்ளிக்கூட விடுமுறைக்கு மூத்த அக்காளின் ஊரில் தங்கிவிட்டு ஊர் திரும்புகிறது அந்தப் பெண். நல்ல துணை ஒன்று இந்தப் பணக்கார அம்மாளின் உருவில் கிடைக்கவே, அக்காள் அந்த அம்மாளோடு குழந்தையை அனுப்பியிருக்கிறாள். ஏதோ பேசிக்கொண்டிருக்கும்போது அந்த அம்மாள் "இது படித்து என்ன பண்ணப் போகிறது? நான்கூட, கூடமாட ஒத்தாசையாயிருக்க இதையே சாப்பாடு போட்டு வீட்டில் வைத்துக் கொண்டு விடலாம் என்று பார்க்கிறேன்" என்றாள். என்னமோ, அந்த யோசனையும் அந்த அம்மாள் அதைச் சொன்ன தோரணையும் என் உள் மனத்தில் பாய்ந்து குத்திக்கொண்டுவிட்டன. அந்தப் பெண்ணையே பார்த்துக்கொண்டு வந்தேன். அந்த ஆறு மணி நேரப் பயணத்தில் ஒன்றும் வேண்டும் என்று கேட்காமல், ஆசைப்படாமல், கேட்ட கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல்லிக்கொண்டு வந்தது அது. எனக்கு உணர்ச்சி வசப்படுகிற இயல்பு அதிகம். அந்தப் பெண் தன் பொறுமையினாலும், பொறுப்பினாலும் எதையும் சமாளிக்கும். எதையும் ஆளும் என்று தோன்றிற்று. ஓடி ஆடி, கத்திக் கூச்சலிட்டு, விளையாடிப் பிதற்ற வேண்டிய வயதில் அது உலகத்தின் சுமைகளையும், கவலைகளையும் தாங்கிக் கொண்டிருப்பது போல் எனக்குத் தோன்றிற்று. எனக்குப் பயமாக இருந்தது. வயிற்றைக் கலக்கிற்று. அது ஒரு படம்.

இன்னொரு படம். என் மகன் ஆறு வயதில் ஒரு விடுமுறைக்கு அவன்

தாத்தா வீட்டுக்குப் போயிருந்தான். நான் போய்த் திரும்பி அழைத்து வந்தேன். குணத்தில் எனக்கு நேர் விரோதம் அவன். கூப்பிடாததற்கு முன் போய் யாரோடும் பேசிச் சிரித்து, நெடுவாள் சிநேகம் போல ஐக்கியமாகிவிடுகிற சுபாவம். பார்ப்பதற்கும் அப்போது கஷ்கு முஷ்கென்று உருட்டி விட்டாற்போல் இருப்பான். கூடப் பிரயாணம் செய்தவர்களோடு பேசிச் சிரித்துக் களைத்துப் போய் அவன் தூங்கத் தொடங்கினான். ஆரஞ்சுப் பழத்திற்காகக் கத்திவிட்டு, வாங்கிக் கொடுத்ததும் சாப்பிடாமல் தூங்கிவிட்டான். அது கையிலிருந்து உருண்டு ஒரு ஓரமாகக் கிடந்தது. அவ்வளவு கத்தினவன் ஏன் உடனே அதைத் தின்னவில்லை? எனக்கு அப்போது முன்பொரு தடவை ரயில் பயணம் செய்தபோது பார்த்த அந்தப் பெண்ணின் ஞாபகம் வந்தது. இந்த இரண்டு படங்களும் எனக்கு அடிக்கடி ஞாபகம் வருவதுண்டு. ஆனால் எழுதவேண்டும் என்று தோன்றவில்லை. சுமார் ஒரு வருடம் கழித்து கலைமகள் தீபாவளி மலருக்காக அழைப்பு வந்தபோது, இந்த இரண்டு படங்களும் இணைந்து கலந்து “சிலிர்ப்பு” என்ற கதையாக உருவாயின. அதை வேகமாக எழுதின ஞாபகம் எனக்கு. கம்ப்யூட்டரில் கொடுத்தது போல இந்த இரு நிகழ்ச்சிகளும் அந்த ஒரு வருஷ காலத்திற்குள் ஒரு கதையாக உருவாகி விட்டனவோ என்னவோ! உட்கார்ந்து கதையை எழுதி முடிக்கிற வரையில் என்னால் துயரம் தாங்க முடியவில்லை. ஒரு அபூர்வமான உணர்ச்சி லயம் அது. உடல், உள்ளமெல்லாம் நிரம்பி அன்று நான் கரைந்துகொண்டிருந்த ஞாபகம். 13 வருஷம் கழிந்து இன்னும் தெளிவாக நினைவிருக்கிறது. கடைசி வரிகளை எழுதும்போது ஒரு குழந்தையின் நிர்மாயமான அன்பில் திளைக்கும் சிலிர்ப்பும் கசிவும் என்னைக் கரைத்துக் கொண்டிருந்தன. எழுதி முடித்ததும் ஒரு அதிசயமாக சுமையிறக்கமும் விடுதலையும் நெஞ்சு கொள்ளாத நிறைவும் என்னை வந்து அணைத்துக்கொண்ட நினைவு இன்னும் எனக்கு இருக்கிறது. ‘சிலிர்ப்பு’ என்றே பெயர்வைத்துக் கதையை அனுப்பினேன். (எழுதி முடித்த பிறகுதான் தலைப்புக் கொடுக்கிற பழக்கம் எனக்கு.)

நான் ஒரு சின்ன ஹோட்டலில் சாப்பிடப் போனபோது ஒரு புதுக் கண்டாமணி கல்லாவிற்கருகில் வைத்திருந்தது. ஹோட்டல் முதலாளி அதைக் கோவிலுக்கு விடப் போவதாகச் சொன்னார். ஏதோ செல்லக் குழந்தையைப் பார்ப்பது போல அதை அவர் பார்த்துக்கொண்டு நின்றார். எதற்காக மணி வாங்கிவிடுகிறார் என்று எனக்குள் கேட்டுக்கொள்ளத் தொடங்கினேன். இன்னொரு நாள் லஸ் மூலை ஹோட்டல் ஒன்றில் சாப்பிடுகையில் ரவாதோசையின் மடிப்பைத் திறந்தபோது பாதி குடித்த

பீடி ஒன்று கிடந்தது. ஹோட்டல் முதலாளியிடம் காண்பித்தேன். அவருக்கு வருத்தம், பத்துப் பேருக்கு நடுவில் சொன்னார். அதே லஸ் மூலையில் இன்னொரு ஹோட்டலில் சாம்பாரில் ஒரு சின்ன கருவண்டு கிடைத்தது. நல்ல வேளையாகச் சுண்டை வற்றல் குழம்பு இல்லை. வண்டு அடையாளம் தெரிந்தது. (ஒரு தடவை ரசத்தில் பல்லிகூடக் கிடைத்திருக்கிறது. சாப்பாடு விஷயத்தில் எனக்குத் தனி அதிர்ஷ்டம் உண்டு.) சர்வரிடம் சொன்னதும், பீடி தோசை முதலாளி போலல்லாமல், அவர் பயந்து பரபரவென்று காதோடு காதாக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ராஜோபசாரம் செய்து என்னை வழியனுப்பி வைத்தார். பல ஆண்டுகள் கழித்து இவையெல்லாம் சேர்ந்து 'கண்டாமணி' என்ற கதையாக உருவாயின. இந்தக் கதைக்கு மையக்கரு, சந்தேகம் அல்லது பயம். ஒரு உணவு விடுதிக்காரரர் சாதம் குழம்புகள் பரிமாறிவிட்டு உள்ளே வந்தபோது, குழம்பிற்குள் கரண்டியை விட்டுக் கிளறித் தூக்கியபோது நீளமாகப் பாம்புக்குட்டி போன்ற ஒரு ஜந்து கிடப்பதைப் பார்க்கிறார். கணவனும் மனைவியும் பதறிப்போய் தெய்வத்திடம் அபவாதம் ஆபத்து ஏதும் வராமல் காப்பாற்றும்படி வேண்டிக்கொள்கிறார்கள். செய்தி பராவமலிருக்க வேண்டும் என்று அவர்களுக்குக் கவலை. கண்டாமணி வார்த்துக் கட்டுவதாக நேர்ந்துகொள்கிறார்கள். மறுநாள் காலை அந்த ஆள் செத்துப் போய்விட்டதாகத் தெரிகிறது. அது இங்கே சாப்பிட்டதனால்தானா என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. ஆனால் விடுதிக்காரருக்குத்தன் குழம்புதான் யமன் என்று பயம். சந்தேகமும் பயமும் அவரை ஆட்டுகின்றன. சொன்னபடி கண்டாமணி வார்த்துக் கோயிலில் கட்டிவிடுகிறார். ஆனால் அந்த மணியோசையைக் கேட்கும்போதெல்லாம், தான் செய்து விட்டதாக நினைத்த குற்றம் அவரை அலைக்கழிக்கிறது. கடைசியில் தாங்க முடியாமல் கோயில் நிர்வாகியிடம் சென்று வேறு என்னவோ சாக்குகள் சொல்லி மணியைத் திருப்பிப் பெறப் பார்க்கிறார். சின்னச் சின்னதாக வெள்ளிமணிகள் செய்து வைக்கிறேன் என்று வேண்டுகிறார். கண்டாமணியோ நன்றாக அமைந்துவிட்டது. அதிகாரி அதை எண்ணி, "போய்யா பைத்தியம்" என்கிற மாதிரி சிரித்துவிட்டு மறுத்துவிடுகிறார். விடுதிக்காரருக்கு அழுத்தி வற்புறுத்தவும் பயம். பேசாமல் திரும்பிவிடுகிறார். இந்தக் கதையைச் "சிலிர்ப்பு" மாதிரி பரபரவென்று நான் எழுதவில்லை. அந்தச் சந்தேகமும் பயமும் கதாநாயகர்களாக இருப்பதாலோ என்னவோ மெள்ள மெள்ளத் தான் எழுத முடிந்தது. வேறு தொல்லைகள் குறுக்கிட்டதனாலும் மூன்று நான்கு தடவை உட்கார்ந்து எழுதி முடித்ததாக ஞாபகம்.

இந்த மாதிரி பல கதைகளுக்குச் சொல்லிக்கொண்டு போகலாம். அதனால் உங்களுக்கு எந்தப் பிரயோசனமும் இராது. அவரவர்கள் அனுபவிப்பதும் எழுத்தாக வடிப்பதும் அவரவர் முறை.

என் அனுபவத்தை மீண்டும் ஒருமுறை சொல்ல ஆசைப்படுகிறேன். எந்த அனுபவத்தையும் மனசில் நன்றாக ஊறப்போடுவதுதான் நல்லது. பார்த்த அல்லது கேட்ட ஓர் அனுபவம் அல்லது நிகழ்ச்சியைப் பற்றி உணர்ந்து உணர்ந்து சிந்தித்துச் சிந்தித்து ஆறப் போடத்தான் வேண்டும். இந்த மன நிலையை ஜே. கிருஷ்ணமூர்த்தி அடிக்கடி சொல்லும் என்ற நிலைக்கு ஒப்பிடத் தோன்றுகிறது. ஒரு நிகழ்ச்சியைச் சுற்றி சித்தம் வட்டமிட வட்டமிட, அதன் உண்மை நம் அகத்தின் முன்னே மலரும். கதை உருவு முழுமையுடன் வடிவதற்கு என் அனுபவத்தில் இதுதான் வழி. அனுபவம் நம் முன்னில் தோய்ந்து ஒன்றி பக்குவ நிலைக்கு வருமுன் அவசரப்பட்டு எழுதினால் உருவம் மூளிப்பட்டு விடுகிறது. பழக்கத்தில் இது தெரியும்.

நான் சிறுகதை ஆசிரியனும் இல்லை. சிறுகதை வாத்தியாரும் இல்லை. (சிறுகதை எழுது என்று யாராவது என்னைக் கேட்டால் எனக்கு வயிற்றில் புளியைக் கரைக்கத் தொடங்கிவிடும்!) நான் எழுதிய நூற்றுக்கு மேற்பட்ட கதைகளில் ஒன்றோ இரண்டோதான் சிறுகதை என்ற சொல்லுக்குச் சற்று அருகில் நின்கின்றன. மற்றவைகளைச் சிறுகதை என்றால் சிறுகதை என்ற சொல்லுக்கே இழிவு செய்கிற மாதிரி. இப்படியானால் ஏன் இத்தனை நாழி கதைத்தாய் என்று கேட்காதீர்கள். தோல்வி பெற்றவர்கள்தான் உங்களுக்கு நல்ல வழி சொல்லமுடியும்.

'மகரம்' தொகுத்த 'எழுதுவது எப்படி?'

(பழனியப்பா பிரதர்ஸ், சென்னை 1969)

நூலில் தி.ஜா. எழுதிய கட்டுரை

# தொகுப்பு முன்னுரைகள்

## கொட்டு மேளம்

சிறுகதைகள் பல விதம். இன்ன மாதிரிதான் சிறுகதை உருவாக வேண்டும் என்று வரையறை செய்வது அவ்வளவு எளிதல்ல; அவசியமும் அல்ல. ஏனெனில், சிறுகதையின் லக்ஷணம் எதுவாயினும், எல்லா இலக்கியப் பிறப்பிலும் உள்ள சிருஷ்டி தத்துவம் அதற்கும் பொதுவானதுதான். முதலில் இதை உணர்ந்தால் இலக்கியத்திற்கும் இலக்கியமில்லாததற்குமுள்ள வேறுபாடு நம் மனதில் பதியும். உண்மையில் கலைஞனிடம் இலக்கியமாவது, அவனுடைய திருஷ்டி தேர்ந்தெடுக்கும் பொருளின் விஷேம் என்றாலும் தவறில்லை. கலை பிறப்பது, கருத்தின் செழுமையும் தெளிவும் கலைஞனிடம் பூரணமான நிலையை எய்தும் பொழுதுதான். ஓரளவு அவனுடைய எழுத்துத் திறமை கூட அப்பியாசத்தின் விளைவு என்று கருதுவதும் நியாயம்.

ஆகாயம் முழுவதும் பரவும் சூரியஒளி, ஒரு சின்னஞ்சிறு பனித் துளியினுடேயும் பாய்ந்து ஒன்றுபோலே அதனைப் பிரகாசிக்கச் செய்கையில், அகண்டத்தையும் அணுவினுள் காணும் ரகசியம் வெளியாகிறதல்லவா? அதையொத்ததே சிருஷ்டிக் கலையும். ஆயிரம் பக்கங்களிலிருந்து கிடைக்கும் இலக்கிய சுகத்தை ஒரே பக்கத்திலும் ஒரு சிறுகதையின் வாயிலாக அடையமுடியும். ஆனால் அக்காரணமே சிறு கதை புனைவது அவ்வளவு சுலபமல்ல என்னும் அநுபவமும் கூடவே ஏற்படும்.

இவ்விதம் கடினமானதோர் கலையைப் பலர் இன்று பயிலுகிறார்கள். ஆயினும் கைவிரல்களில் அடங்கும் எண்ணிக்கையே சிறந்த எழுத்தாளர்களாய் இத்துறையில் விளங்குகிறவர்கள். அப்படியுள்ள சிறுபான்மையினரின் வரிசையில்தான், நண்பர் தி. ஜானகிராமன் இடம் பெற்றிருக்கிறார்.

அவருக்கு இயல்பாயுள்ளது அநாயாசமாய்த் துள்ளியோடும் பேச்சுநடை. தஞ்சை ஜில்லாவின் தனிப்பெருமை என்று கூறத்தகுந்த சில அருமையான சொற்சிதைவுகளும் சேர்ந்து தமிழ்ப் பாஷையை உரிமையுடன் அவரிடம் வளர வைத்திருக்கின்றன. துளியும் பிரயாசை தோன்றாதபடி அவர்

எடுத்துக் காட்டும் வாழ்க்கைக் காட்சிகளோவெனில், தத்ரூபம் தமிழ் நாட்டின், அதிலும் எழிலுடன் நெளிந்தோடும் காவேரி நதி பாயும் கிராமவாசத்தின் தனிப் பொக்கிஷமாகக் கூறலாம்.

கொட்டு மேளத்துடன் தொடங்கும் இக்கதைக் கோவை, தாஸிப் பெண் சொர்ணாம்பாளுக்காகத் தவங்கிடக்கும் மனித இதயத்தின் தடைபடாத உணர்ச்சிச் சுழலில் நம்மைச் செருக வைக்கின்றது. ஆசிரியருக்குச் சுபாவமான வேடிக்கை விநோதங்கள் கதை ஒவ்வொன்றிலும் தனி அரசு செலுத்துகின்றன. அதனுடன் நில்லாமல், அவர் பார்வையின் போக்கும், சுவாரஸ்யம் காட்டும் கல்லிப் பேச்சும், இடுக்குவிடாது எல்லாவற்றையும் படம் பிடித்து நிழல் ஒளியுடன் பளிச்சென்று நம் முன்னே வைக்கும் திறனும் ஆச்சரியமாய்ப் படாததற்கு, அவ்வளவு இங்கிதமாய் வாசகர்களைத் தம்முடன் அவர் இழையும்படி செய்திருப்பதுதான் காரணம். பார்வதியின் கணவனான டாக்டர், அத்து, எம்டன் பயல், இவர்களெல்லாம் நமக்கு ஏற்கனவே சந்தித்தவர்களாய்க் காணப்படுவதின் சூட்சுமமும் இதுவே. முக்கியமாய். தாம் ஒன்றிலும் கலக்காமல், சம்பவங்களையும் வாக்குவாதங்களையும் தூரவே நின்று வேடிக்கை பார்க்கும் ஒருவருடைய இயல்புதான் இங்குள்ள கதைகளவ்வளவிலும் செல்லுகின்றதென அறியலாம். இவ்வித மனப்பான்மைக்குப் பண்பாடு வேண்டும். நண்பர் ஜானகிராமனுக்குச் சித்தித்திருப்பது அதுதான்; எழுத்திலும் வேண்டிய அளவு பயன்பட்டிருக்கிறது.

எந்தக் கதையை வாசகர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் ‘செண்பகப் பூ’வை மனக்கண்ணினின்றும் அகற்ற வகைதெரியாது திண்டாடுவார்கள். புது வாழ்க்கையின் வாசற்படியில் வந்து நிற்கும் இளநங்கையின் இன்பக் கோட்டை, மேகமற்ற வானத்திலிருந்து பிளந்துவரும் இடியைப்போன்று, கணவன் மறித்த அவச்செய்தியினால் தகர்ந்துவிடுகிறது. ஆனால் கதையின் சோகத்தைக் கிளறுவது அதல்ல; இளமையின் ஆட்சியில் புக இயலாத நிலையில் தவிக்கும் விதியின் முரட்டுப் பிரயாசைதான். சோகத்தையே வறண்டுவிடச் செய்யும் இதய ஆழத்திலுதிக்கும் சிரிப்பு, விதியையும் ஏளனம் செய்வது ஒன்றே இக்கதையின் சிகரம் எனலாம். சொன்னால் விளங்காது. செண்பகப்பூவை யொத்தவளின் பிடியிலடங்காத தலைப் பின்னலை எடுத்துக் கட்டியிருந்த சிவப்பு ரிப்பனும், முகத்தைத் தேய்த்துக் கழுவ வைத்திருந்த சந்தணச் சோப்பும், கல் மோதிரம் ஆள்காட்டி விரலில் பூரிப்புடன் பிரகாசிப்பதுமே நேருக்குநேர் சொல்லும். அப்பொழுது நம்பாமல் வழியில்லை. ஆசிரியரின் கலைப்பண்பையும் நம்பித்தான் ஆகவேண்டும் என்ற

எண்ணம் எழாமலிருக்கவும் வழியில்லை. கதைகளை வாசித்தபின் ஓர் எண்ணம் வாசகர்களிடம் தோன்றலாம். லேசான பரிகாசத்தின் கீழ் ஆழ்ந்த தீர்ப்பு ஆசிரியரின் மனத்தை வெளியிடுகிறது. மத்தியதரக் குடும்பங்களின் அனுபவங்கள் பேரிடிகளுடனும் புயற்காற்றுடனும் இல்லாமலிருக்கலாம். ஆயினும் அங்கே தான் மனித இதயத்தின் சாமான்ய சஞ்சலங்கள், சிறுமை பெருமைகள், அவ்வளவாக மேற்பூச்சு நாகரிகத்தின் வலையில் சிக்கி, வெளியில் தெரியாமல் உள்ளே குமைந்து உலகத்தை மாய்ப்பதில்லை. இதனைப் புரிந்து கொண்டால் ஆசிரியரின் இதயத்தை அறிந்த மாதிரிதான்.

**கி. சந்திரசேகரன்**

மயிலை

**28 – 5 – 54**

# சிவப்பு ரிக் ஷா

'ஆலமர் வித்தின் அருங்குற'ளான வாமனனுக்கும் சிறுகதைக்கும் ஒரே ஒரு வித்தியாசந்தான் உண்டு. வாமனன் விண்ணையும் மண்ணையும் அளக்க விச்வரூபம் எடுக்கவேண்டியிருந்தது. ஆனால் சிறுகதையோ, தன் 'வாமன' ரூபத்திலேயே சகலத்தையும் அளந்துவிடப் பார்க்கிறது. இலக்கியத்தின் மற்ற எல்லா வகைகளும், எதைக்காட்ட முயல்கின்றனவோ, அதையே தன் குறுகிய உருவத்தினால், அழுத்தமாகவும் வேகமாகவும் காட்ட முயல்கிறது சிறுகதை. கதையாகட்டும் இலக்கியமாகட்டும் எதைச் சாதிக்கின்றன என்று கேட்கிறவர்களும் இருக்கத்தான் இருக்கிறார்கள். சூத்திரம்போல் சுருக்கமாகப் பதில் இதைச் சொல்லலாம். 'கலையும், இலக்கியமும் நமக்கு ஒன்றிலே பலவற்றைக் காட்டுகின்றன. நிமிஷத்தை நித்தியமாக்குகின்றன. தோன்றுபவற்றில் தோன்றாததை நமக்குச் சொல்லாமல் சொல்லிக் காட்டுகின்றன' என்று சொல்லலாம். இலக்கியக் கலைகளில் சிறந்தது என்று போற்றப்படும் சிருஷ்டிகளில் இந்த அம்சங்களைக் காணலாம்.

பிரான்ஸ் வெர்பல் என்ற ஆசிரியர் ஒருதரம் சொன்னார்: இனிமேல், இதிஹாஸங்கள் வசனத்திலேதான் எழுதப்பட வேண்டும்; கவிதையில் எழுதும் காலம் போய்விட்டது, என்று. கவிதையின்மேல் அவருக்குக் கோபம் இல்லை. காலத்தின் போக்கை அநுசரித்து, அந்த முடிவிற்கு வந்தார். பார்க்குமிடத்து, மகான் டால்ஸ்டாயின் நூல்களை ஏன்

இதிஹாஸங்கள் என்று சொல்லக் கூடாது? இதிஹாஸங்கள் பரந்த அளவில் விஸ்தரித்துதான் எழுதப்படவேண்டும் என்ற அவசியமே இல்லை. சிறுகதையில்கூட அந்தக் கம்பீர்யத்தையும் அநுபவபுஷ்டியையும் கருத்தின் போஷணையையும் கொடுக்க முடியும் என்பதை, 'செக்காவ்', 'மாப்பஸான்', 'பவிஸ்', 'சரோயன்' போன்ற சிறந்த ஆசிரியர்களுடைய கதைகள் நமக்குப் பறை சாற்றுகின்றன.

மேலே சொன்ன, சிறுகதை 'இதிகாஸ' ஆசிரியர்கள் பரம்பரையில் வந்தவர்தான் ஸ்ரீ. தி. ஜானகிராமன். உலகத்துச் சிறு கதைகள், எதனால் மேம்பட்டு விளங்குகின்றனவோ, அத்தகைய மேன்மை வாய்ந்த குணங்களைப் பெற்றவை ஸ்ரீ. தி. ஜானகிராமனின் கதைகள்.

எதை நாம் சிறந்த சிறுகதை என்கிறோம்? எதை நாம் சிறந்த இலக்கியம் என்கிறோம்? என்பதற்குச் சுபலபமாகப் பதில் சொல்லிவிட முடியாது. எந்த மனிதனை நாம் சிறந்த மனிதன் என்று சொல்கிறோம். என்பதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு கஷ்டமான காரியம் அல்ல. எவன் ஒருவன், வாழ்விற்கு ஆதர்சமாக இருக்கும் லக்ஷ்யங்களை வாழ்க்கையிலே நடத்திக்காட்ட முயல்கிறானோ, அவனையே எல்லோரும் நல்ல மனிதன், உயர்ந்த மனிதன் என்று சொல்கிறார்கள். ஆகவே, நல்ல இலக்கியம். நல்ல மனிதர்களையும் நல்லெண்ணங்களையும் நற்காரியங்களையும் பற்றியதாக இருக்க வேண்டிய நிர்பந்தங்கூட ஓர் அளவு ஏற்பட்டுவிடுகிறது. ஆதிகவிகூடத் தம் காவியத்திற்கு விஷயமாக லக்ஷ்ய புருஷனைத் தேடி அலைந்தார். இந்த லோகத்திலுள்ளவர்களுக்குள் ஸகல கல்யாண குணங்களும் பொருந்தினவர் யார்? . . . ச்ருதி ஸ்மிருதிகளினால் உபதேசிக்கப்பட்ட தர்மங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர் யார்? . . . ஆபத்துக் காலங்களிலும் தருமத்தை விடாதவர் யார்? ஸத்யத்தைச் சொல்பவர் யார்? . . . கோபத்தை ஜயித்தவர் யார் . . .' இப்படித் தன் காவியத்திற்கு நாயகனைத் தேடினார் வால்மீகி. ஸ்ரீ ராமன் அவர் தேடியலைந்த லக்ஷ்யங்களை லக்ஷணங்களாகக் கொண்டிருந்தான். ஆகவேதான், அந்த ராமகதை, வால்மீகி தந்த இலக்கியமாயிற்று இலக்கியத்திற்கு இலக்கியமாகவும் ஆயிற்று. ஆனாலும் சத்யம், தர்மம் இவைகளைக் கடைபிடிப்பவர்கள்தான் சிறந்த இலக்கிய புருஷர்கள் ஆக முடியும் என்று தீர்மானமாகச் சொல்லிவிடமுடியாது. செக்காவ் எழுதிய சிறந்த சிறு கதைகளுள் ஒன்றான, 'தூங்குமூஞ்சி' என்ற கதையில் குழந்தைக்குத் தாதியான ஓர் ஏழைப்பெண். குழந்தை தன் தூக்கத்தைக் கெடுக்கும் அவஸ்தை பொறுக்க முடியாமல், குழந்தையையே கொன்றுவிடுகிறாள். ஆனால் அருவருப்பைத் தரும்,

கோரமான காரியத்தைச் செய்த அவளிடம் நமக்கு வெறுப்பு ஏற்படவில்லை; அநுதாபமே ஏற்படுகிறது. அவள் கொலையும் செய்யத் தூண்டும் சூழ்நிலைகளையும், சந்தர்ப்பத்தின் கொடுமைகளையும் பார்க்கும்பொழுது, அந்தக்கொலைகாரப் பெண்ணிடம் கருணையே பெருகுகிறது. அதுவே செக்காவின் மேதாவிலாசம். ‘இலக்கியத்திற்கும் வாழ்க்கையிலே ஒரு தேவை உண்டு. இலக்கியத்தினால் மக்களுக்கும் ஒரு பிரயோசனம் உண்டு’ என்பது இருக்குமேயானால், அது மனித இதயத்தில் கருணையைப் பெருகச் செய்வதுதான். இதைத்தான் மேதைகளான கலைஞர்கள் தங்கள் சிருஷ்டிகளால் நமக்குக் காட்டிச் சென்றிருக்கிறார்கள்.

ஸ்ரீ ஜானகிராமன் கதைகளிலே சத்யத்தையும் தருமத்தையும் கடைப்பிடிப்பவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் நம்முடைய மதிப்பிற்கும் பாராட்டுக்கும் உரித்தானவர்கள் ஆகிறார்கள். அவைகளிலிருந்து வழுவினவர்களும் இருக்கிறார்கள். அவர்களும் நம் அநுதாபத்திற்குப் பாத்திரமானவர்கள் ஆகிறார்கள்.

முதலாவதாகச் சத்யத்தைக் கைவிடாமல் பிடித்து வைத்துக் கொள்ளும் ஒரு கதாபாத்திரத்தை எடுத்துக் கொள்வோம். அரிச்சந்திரன் நாட்டை இழந்து. மனைவியை இழந்து மகனைச் சாகக் கொடுத்து, புலையனுக்கு அடிமையாகி, இடுகாட்டில் வேலைக்கு வந்தும் சத்யத்தைக் கைவிடவில்லை. ஆனால் சாதாரண மனிதனுக்கு இவ்வளவு மகத்தான சோதனைகள் தேவையில்லை. வாழ்விலே ஏற்படும் சின்னஞ்சிறு பரீட்சைகள் போதும். ‘சத்தியமா!’ என்ற கதையில் வரும் கதாநாயகன் அரிச்சந்திரனைப்போல் பெரிய தீரன் அல்ல. அவன் ஒரு சிறு பையன்தான். தன் நண்பனுக்கு, தான் அருமையாகச் சம்பாதித்துவந்த ‘காலண்டரை’ப் பெருமிதத்துடன் காட்டிக்கொண்டிருக்கிறான். ‘தவம்‘ செய்து அடைந்த காலண்டர் அது. ஆகவே அளவிறந்த பெருமை பையனுக்கு. நண்பன் ஒரு குள்ளநரி. பேச்சை மாற்றிவிட்டு. “நான் ஒன்று சொல்றேன். அதுமாதிரி செய்வாயா?” என்று கேட்கிறான். பையன் யோசிக்கிறான். நண்பன் பக்குவமாகப் பையனிடம் வார்த்தைகளைக் கக்க வைத்து, தான் கேட்பதைச் ‘சத்யமாக, சாமி சாட்சியாகச் செய்வதாக’ வாக்குத் தத்தம் வாங்கிக் கொண்டு காலண்டரைக் கேட்கிறான். பையன் திடுக்கிடுகிறான். ஆனால் காலண்டரைக் கொடுக்கத் தயங்கவில்லை. பையனின் தகப்பனார் பக்கத்து ஜையிலிருந்து, நடப்பதை எல்லாம் கேட்டுக்கொண்டே குமுறுகிறார். ‘அந்தப் பையன், வார்த்தையினாலேயே அவனைக் கட்டிவிட்டு, ஏமாற்றி காலண்டரை அடித்துக் கொண்டு போய்விட்டானே!” என்று பொருமுகிறார். பையனை அதே தந்திரம்

செய்து, அதைத் திருப்பி வாங்கச் சொல்கிறார். பையனும் அதே தந்திரத்தை அநுசரிக்கிறான். ஆனால், கொடுத்ததைக் கேட்கும் கயவனா அவன்! காலண்டரைக் கேட்கவில்லை. ரப்பர் துண்டை வாங்கிக்கொண்டு பெருமையோடு திரும்பி வருகிறான். தகப்பனாரின் கண் கலங்குகிறது. 'பொய்யும், கபடமும், ஏமாற்றும் இருக்கும் இந்தக் கெட்டிக்கார உலகத்திலே, பையன் உலக சாமர்த்தியம் இல்லாமல் இருக்கிறானே!' என்றா? 'இவ்வளவு கபடநாடகங்களிலும் சத்யத்தைக் கைவிடாமல் இருந்துவிட்டானே!" என்பதற்காகவா? தகப்பனாருடைய இதயத்தைப்போலவே, வாசகர் உள்ளத்திலேயும். அன்பும் ஆதரவும் அந்த 'அசட்டு'ப் பையன் மேல் சுரக்கின்றன.

சிறு பையனின் விளையாட்டுத்தனமான ஏமாற்றத்திலிருந்து, பெரிதானதொரு ஏமாற்றுக்கு வரலாம். சுந்தர தேசிகர் தங்கமான மனிதர். கண்யம் மிகுந்த மனிதர். ஆனாலும் அவருந்தான் ஏமாந்தார். யாரிடம்? ஓர் அயோக்கியன் ராம்தாஸிடம். குழி, பதினைந்துரூபாய் பெறுமான நிலங்களை நாலரை ரூபாய்க்கு வாங்கித் தருவதாக ஆசைகாட்டி, சிறிது சிறிதாகத் தேசிகர் சொத்தையெல்லாம் விற்கச்செய்து, அப்படி வந்த பணத்தையெல்லாம் சுருட்டிக்கொண்டு போய்விட்டான் ராம்தாஸ். தாம் ஏமாந்து, மோசம் போய்விட்டோம் என்பதைத் தேசிகர் தெரிந்து கொள்ளவே சிறிது காலம் ஆயிற்று. எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு, ஏமாந்து நிற்கும் தேசிகரை அவருடைய பந்து ரத்ன தேசிகர் ஆறுதல் சொல்லி, மோசடியைப் போலீசில் பதிவு செய்தார். வழக்கு நடந்தது. கேஸ் முடியும் தறுவாயில் ராம்தாஸ் பணத்தையெல்லாம் செலவழித்துவிட்டு உடல் நலம் குன்றியவனாய் மரணப் படுக்கையில் கிடக்கிறான். அப்பொழுது தேசிகர் அவன் வீடுதேடி வருகிறார். "அப்பா, உன் பிராணன் போயிட்டிருக்கு. வாங்கின கடனைக் கொடுக்காமல் செத்துப்போகக் கூடாதென்று சாத்திரம் சொல்லுகிறது. உனக்கு நல்ல கதி வரணும் என்பதற்குத்தான் இங்கு வந்தேன். உன்மேல் எனக்குச் சிறிதேனும் கோபமில்லை. உன் கையிலுள்ளது எதுவோ அதைக்கொடு. அதை வாங்கிக்கொண்டு, உன் கடன் தீர்ந்தது என்று சந்தோஷமாகச் சொல்லிவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, ராம்தாஸின் மனைவி கொடுத்த இரண்டணாவைத் தாம் கொடுத்த இருபத்து நாலாயிரத்திற்கும் வரவு வைத்துக்கொண்டு, மனநிம்மதியோடு வீட்டுக்குத் திரும்பிப் போகும் சுந்தர தேசிகரும் உலகத்திற்கு லாயக்கில்லாதவர்தான். ஆனால் இப்படிப்பட்ட 'பைத்தியக்கார' மனிதர்கள்தான் வாழ்க்கையின் தரத்தையே உயர்த்துகிறார்கள், வாழ்க்கையின் லக்ஷ்யங்களையும் வளர்ப்பவர்கள்

ஆகிறார்கள்.

பையனையும் தேசிகரையும்போல் அல்லாமல் உலகத்திலே ஜயமடைந்தவரும் சாமர்த்தியசாலியும் வாழ்விலே வெற்றி பெற்றவருமான மற்றொரு பாத்திரத்தை எடுத்துக்கொள்வோம். வக்கீல் அண்ணா, 'கோர்'டில் அண்ணா, வாழ்க்கையில் நீதிபதி. கொலை செய்துவிட்டு சட்டத்தின் வாயில் மாட்டிக்கொள்பவனை அபயம் கொடுத்துப் பிடுங்கிக் காப்பாற்றுவார். சின்ன விஷயமோ பெரிய விஷயமோ சாணக்கிய சாகசம் செய்து, வேரை ஏற்றி, நீறாக்கி வெற்றி அடைந்த பின்தான் அமைதி காணுவார்.

அந்த மனிதர், தம் ஒரே பிள்ளையின் கல்யாணத்தன்று, கம்பீரமாகப் பந்தி விசாரித்துக்கொண்டிருந்தார். ஒரு அபஸ்வரம். பெரிய மனிதர்களுக்கு மத்தியிலே, ஒரு பரதேசி உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருக்கிறான். சிறிதேனும் ஒழுங்கும் முறையும் அந்தஸ்தும் தவறாமல் நடக்கவேண்டும் என்று பழகிக்கொண்ட வக்கீலுக்கு அளவிறந்த கோபம் உண்டாயிற்று அப்படியே அந்தப் பரதேசியைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் வெளியே தள்ளிவிடுகிறார். அவன் பிரும்ம ரிஷியல்ல சாபம் கொடுக்க. வெறும் பரதேசிதான்! இருந்தாலும், பசியும் அவமானமும் வேதனையும் தாங்காமல், வைதுவிட்டுப் போகிறான். "நான் போகிறேன் ஆனால் திரும்பி வருவேன் அடுத்த மாதம் இதே தேதிக்கு உம் வீட்டிலேயே சாப்பிட வரேன். நீர் அழுதுகொண்டே போடற சாப்பாட்டுக்கு வரேன் பார்த்துக்கும்!" என்று நடந்தான். அவன் மகரிஷியல்ல. இருந்தாலும் அவன் வாக்கு எப்படியோ பலித்துவிட்டது. வக்கீலின்பிள்ளை மாரடைப்பினால் இறந்துபோகிறான். சொன்ன தேதிக்குப் பரதேசி வருகிறான். வக்கீலின் அகங்காரம் தவிடு பொடியாகிவிடுகிறது. மமதை மக்கிப் போய்விடுகிறது. அஞ்ஞானம் அழிந்து நிற்கிறது. 'பவ்ய' ஜீவனாகி நிற்கிறார். பரதேசியின் வாக்கு, யதேச்சையாகத்தான் பலித்தது. ஆனால், அகந்தை விலகின அவருக்கு, 'ஞானம்' உதயமாகிறது. அந்த வாக்கு, பரதேசியின் வாக்கல்ல. கடவுளின் வாக்கு! காலதேவனின் வாக்கு என்பதை அறிகிறார். வந்தவன் கேவலம் பரதேசியாகத் தோன்றவில்லை. பரம்பொருளாகத்தான் தோன்றுகிறது! சூன்யத்தைப் பார்த்துத் தேம்பிவிட்டு, "காலதேவரே! உட்காரும்" என்கிறார். இத்தகைய உயர்ந்த நிலையைச் சித்தரிக்கும் இலக்கிய சிருஷ்டிகள், எந்த மொழியிலும் சரி, எந்த இலக்கியத்திலும் சரி, மிகவும் அரிதாகத்தான் இருக்கும் ஆனால், ஜானகிராமன், இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களையும் சம்பவங்களையும் பாத்திரங்களையும்

வைத்துக்கொண்டு, சிகர நிலைகளில் நின்று நின்று ஜாலவித்தைகள் செய்கிறார்.

மற்றொரு மனிதரைப் பார்ப்போம். தாத்தாச்சாரி என்றால் ஊரில் எல்லோருக்கும் உயிர். சாஷாத் பகவானைப்போல் எல்லோருடைய யோக க்ஷேமங்களையும் வகிக்கும் தபாலகாரர். "கட்டை விழும் வரையில் தபால் கட்டை விடமாட்டீரா?" என்ற பரிகாசத்துடனும், அனுதாபத்துடனும் கேட்பார்கள், அவர் அவலை செய்வதன் ரகஸியத்தை அறியாதவர்கள். உயிருக்கு உயிராகத்தான் இருந்தாள் அவர் மனைவி ஜனகம். அவரிடத்தில் மரியாதையும் பக்தியும் அன்பும் கொண்டிருந்தாள். ஆனால் சந்தர்ப்பமும் வினைப்பயனும் சூழ்ச்சி செய்து, ஒரு விபரீதத்தை உண்டுபண்ணின. ஜனகம் தவறு செய்யவில்லை; தவறிழைக்கப்பட்டாள். தவ முனிவரான கௌதமன் தன் தவவலிமையையும் மறந்து, அகலிகையைக் கல்லாகச் சபித்தான். ஆனால் இதிகாசப்பாத்திரங்களையும் மீறிய தாத்தாச்சாரி தம் மனத்தையே கல்லாக்கிக் கொண்டார். தம்மை மறக்க, உலகத்தை மறக்க, அநீதியை மறக்க, அபவாதத்தை மறக்க, அரித்துக் கொல்லும் வேதனையை மறக்க, தபால்கட்டைத் தூக்கிக்கொண்டு அலைகிறார். 'எதை' எப்படி மறக்கிறது? தினமும் எட்டு மைல் வெயிலில் நடக்கிறதைவிடப் பெரிய போதை உண்டா, என்ன?' இடத்தில் மாத்திரம் நடக்கவில்லை தாத்தாச்சாரி! காலத்திலும் நடக்கிறார்!

ஒவ்வொரு கதையிலும் பாத்திர சிருஷ்டியும், சம்பவம் அமைக்கும் திறனும் கலைப்பண்புடன் திகழ்கின்றன. பாத்திரங்கள் ஜீவனுடன் திகழ்கின்றார்கள். அவர்கள் செயலும் பேச்சும் நமக்கு மிகவும் அறிமுகமானவைகளாகத்தான் தோன்றுகின்றன. நேற்றும் இன்றும் நாளையும் நம்முடன் பழகிவரும் ஜனங்கள்தான்; இருந்தாலும் அவர்கள் நமக்கு எட்டாத உச்சாணிக் கிளையைத்தான் தொட்டு நிற்கிறார்கள்.

கதைகள் எல்லாம், கலையழகு ததும்பி நிற்கின்றன. ஒவ்வொரு கதையிலும் எந்த எந்த ரஸபாவம் சொல்லப்படுகிறதோ அது நன்கு விருத்தி செய்யப்பட்டு, நல்ல முத்தாய்ப்புடன் முடிகிறது. ராகத்தை விஸ்தரிப்பதுபோல், கதை விஸ்தரிக்கப்பட்டாலும், அந்நிய ஸ்வரம் விழுவதில்லை; ரஸபங்கம், ரஸபேதம் ஒன்றும் ஏற்படுவதில்லை. இது ஆசிரியரின் சிறந்த கைத்திறனையே காட்டுகிறது.

வாழ்க்கையின் பல அம்சங்களையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர். இக் கதைகளில் எல்லாம் பலவிதமான காட்சிகளையும் பாவங்களையும் காட்டி, பல உத்திகளையும் கையாண்டிருக்கிறார். சோகம்

பரிகாசம், கோபம், இன்பம் இப்படிப் பல ரஸங்களையும் வார்த்துத் தருகிறார். 'நகைச்சுவையிலும் சரி. சோகத்திலும் சரி, விடம்பனம் *(Irony)* ரஸாபனுபவத்தில் ஒரு கூர்மையை உண்டு பண்ணுகிறது' என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். விடம்பனத்தை ஆசிரியர் கதைகளில் அள்ளி வீசி, வாரிவிட்டிருக்கிறார் என்றே சொல்ல வேண்டும். ஹாஸ்யத்தை அடிப்படையாகக் கொண்ட கதைக்குத் தேவர்குதிரையைச் சொல்லலாம் தம் பரம்பரை மரியாதைக்குப் போட்டியாக முளைத்த பஞ்சாயத்தின்மேல் தேவர் பழி வாங்கினார். தம் அல்லிக் குளத்தைப் பஞ்சாயத்துப் பார்க்குக்காக சாஸனம் செய்தார். அன்றிலிருந்து மூன்று வருஷமாகப் பஞ்சாயத்துப் போர்டு வண்டிகள், ஊர்க் குப்பையையெல்லாம் போட்டுக் குளத்தைத் தூர்த்து, பார்க்காக மாற்ற, படாதபாடு படுகின்றன. நூற்றுக்கணக்கான மணல் வண்டி அடித்தாகிறது. நாலாயிரம் ரூபாய் செலவாகிவிட்டது. குளம் இன்னும் பாதி கூடத் தூர்ந்தபாடில்லை. இன்னும் பதினாயிரம் ரூபாயாவது சாப்பிடாமல் அது பார்க்காக மாறப்போவதில்லை அதுவரையில் தேவர்வீட்டுக் குதிரை, அந்தக் கோரைகளை மேய்ந்து, அந்தத் தண்ணீரைக் குடித்து, தாகசாந்தி செய்துகொண்டுதான் இருக்கும். கதை முழுவதும், நாசுக்கான கேலியும் பக்குவமான கிண்டலுமாகத்தான் இருக்கிறது. விடம்பனத்தின் மற்றோர் அம்சத்திற்கு உதாரணம் பஞ்சத்திற்கு ஆண்டி: நெசவுத் தொழிலாளி. வேலையில்லாத் திண்டாட்டத்தினால் குரங்காட்டியாகிப் பிழைக்கிறான். அவன் குரங்கு, தந்திக் கம்பத்தில் மின்சாரம் பட்டு இறந்து விடுகிறது. அந்தக் குரங்குக்கு, கோவில் கட்டி 'ஹநுமான்' பூஜை செய்கிறார்கள். உயிருள்ள மனிதனைக் கொன்றாகிறது; செத்த குரங்கிற்குக் கோவில்! சவுக்கடி அழுத்தமாகத்தான் விழுகிறது!

எல்லாக்கதைகளும், கலைப் பண்பிலே தோய்ந்த கதாசிரியரின் உள்ளத்தை நன்கு காட்டுகின்றன. ஒவ்வொன்றும் அருமையாக அமைந்திருக்கும்பொழுது எதைச் சொல்வது? எதை விட்டுவிடுவது; கடைசியாக ஒன்றைப் பார்க்கலாம்

கலை எதற்கு? இலக்கியம் எதற்கு? என்று கேட்கிறார்களே அவர்களுக்கும் ஒரு பதில் இருக்கிறது ஒரு கதையிலே. மேனாட்டுக் கலாரஸிகர் ஒருவர், நம் சங்கீதக் கலைச் செல்வத்தின் உயர்வை அறிந்துகொள்ள ஒரு பழுத்த நாகஸ்வர வித்வானிடம் வந்து வாசிக்கச் சொல்லிக் கேட்கிறார். வித்வான், 'சாந்தமுலேகா ஸௌக்கியமுலேது' என்ற தியாகராஜ க்ருதியை வாசிக்கிறார். இதைக் கேட்டுவிட்டு, வெள்ளைக்காரர்

மெய்மறந்து கூத்தாடுகிறார். ஆவேசம் அடைந்தவர்போல் தோன்றுகிறார். வித்வானும், கூட வந்தவர்களும் திகைத்து நிற்கிறார்கள் 'எனக்கொரு செய்தி கிடைத்தது' என்கிறார். வெள்ளைக்கார ரஸிகர் போல்ஸ்கா. அவர் மனத்தோற்றத்தில் புயல் எழுகிறது; இடி இடிக்கிறது; யுத்த ஆரவாரம் கேட்கிறது; மரண ஓலமும் கேட்கிறது; கடைசியில் அவையெல்லாம் ஓய்ந்து, அமைதி ஏற்படுகிறது. "இந்த அமைதியைத்தான் இந்த சங்கீதத்தில் கண்டேன்" என்கிறார், பாஷை தெரியாத வெள்ளைக்காரர். 'இந்தப் பாட்டும் இதைத்தானே சொல்கிறது!' என்கிறார் நாகஸ்வரக்காரர். வெள்ளைக்காரருக்கு நம் சங்கீதத்திலே ஒரு செய்தி கிடைத்துவிட்டது! பிள்ளைக்கும் ஒரு செய்தி கிடைத்தது! அந்தச் செய்தியே வாழ்விலிருந்து தாவிக் கலையையோ கடவுளையோ பிடிப்பவர்கள் எல்லோரும் வேண்டி நிற்கும் ஒரு செய்தி. அந்தச் செய்தியே வேத மந்திரங்களும் திரும்பத் திரும்பக் கோஷிக்கும் செய்தி. அதுவே 'சாந்தி!'

ஜானகிராமன் இக் கதைத்தொகுதி மூலம் உலகத்திற்குக் கொடுக்கும் செய்தியும் அதுவேதான்.

ந. சிதம்பரசுப்ரமண்யம்

சென்னை 26

3– 10– 56

# தொகுப்புகளில் இடம்பெற்ற தி. ஜானகிராமனின் முன்னுரை குறிப்புகள்

## அக்பர் சாஸ்திரி

(முதல் பதிப்பில் இடம்பெற்றது)

### நன்றி

இத்தொகுதியில் வெளியாகியுள்ள கதைகள் வெவ்வேறு ஆண்டுகளில் மணிக்கொடி, கலைமகள், சுதேசமித்திரன், கல்கி, ஆனந்த விகடன், உமா, காதல் ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்தவை, முதலில் இவற்றை வெளியிட்ட இந்தப் பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கு என் நன்றி உரித்தாகிறது.

இவையெல்லாம் இலக்கண சுத்தமான சிறுகதைகள் என்று சொல்லவில்லை நான். சிறுகதைகள் என்று கூடச் சொல்லவில்லை. அசல் சிறுகதைகள் எழுதுகிறவர்கள் உலக இலக்கியத்திலேயே பத்துப் பேருக்குள் இருந்தால் அதிகம். எனவே சாட்சிகள், அல்லது வேறு ஏதாவது சொல்லி இவற்றை அழைக்கலாம்.

“ஐயரும் (ஐயறும் என்று தவறாக அச்சாகியிருக்கிறது) ஐயாறும்” என்பது கதையுமல்ல, சிறுகதையுமல்ல. நையாண்டி.

இந்தத் தொகுதியை வெளியிடும் மதுரை மீனாட்சி புத்தக நிலையத்தாருக்கு என் மனமார்ந்த நன்றி.

தி. ஜானகிராமன்

## யாதும் ஊரே

(முதல் பதிப்பில் இடம்பெற்றது)

இந்தத் தொகுதியில் காணும் கதைகள் சுதேசமித்திரன், கல்கி, கலைமகள், அமுதசுரபி, சந்திரோதயம், கலாவல்லி ஆகிய

பத்திரிகைகளில் வெளியானவை, இந்தப் பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கும் தொகுதியாக வெளியிடும் மீனாட்சி புத்தக நிலையத்தினருக்கும் என் நன்றி.

முன்பு ஒரு தொகுதியில் சொன்னதையே மீண்டும் சொல்கிறேன். இவை சிறுகதைகள் என்று சொல்ல நான் துணியவில்லை. கதைகள் அல்லது காட்சிகள் என்றே வைத்துக் கொள்ளலாம்.

ஆசிரியன்

## பிடி கருணை

(முதல் பதிப்பில் இடம்பெற்றது)

## நன்றி

இத்தொகுதியில் உள்ளவை, சுதேச மித்திரன், கணையாழி, கல்கி, ஆனந்த விகடன் முதலிய பத்திரிகைகளில் வெவ்வேறு ஆண்டுகளில் வெளிவந்தவை. இலக்கண சுத்தமான சிறுகதைகள் அல்ல. அந்த வகை எப்போதுமே என் கைவசமானதில்லை. குடிசைத் தொழில் பீங்கான் போல பொருக்கு, கட்டி எல்லாம் சேர்ந்திருக்கின்றன. இப்போது நீக்குவது சிரமம். இந்த நேரம் ஒருமுறை மீண்டும் படித்தபோது பழைய ஓலைக் கிலுகிலுப்பையை ஆட்டுவது போலிருந்தது. இதற்கும் பத்துப்பேர் இருப்பார்கள் என்ற ஒரு நம்பிக்கை. இந்த டில்லி குளிரில், நம்பிக்கை போர்வை மாதிரி தோற்றமளிக்கிறது.

இந்தக் கதைகளை வெளியிட்ட பத்திரிகைகளுக்கும் இப்போது தொகுதியாக வெளியிடுகிற திரு. செல்லப்பனுக்கும் நன்றியும் தைரியமும் கூறுகிறேன்.

தி. ஜானகிராமன்

30 – 11 – 74

# என் எழுத்து

## (1979ஆம் ஆண்டுக்கான ஸாஹித்ய அகாதமி பரிசைப் பெற்றுக்கொண்டு தி. ஜானகிராமன் நிகழ்த்திய பேச்சு)

இந்த வெகுமானம் அளித்ததற்காக ஸாஹித்ய அகாதமிக்கு என் நன்றி.

கேள்வி கேட்பதில் பிரியமுள்ளவர்கள் நான் ஏன் எழுதுகிறேன் என்று அடிக்கடி கேட்பதுண்டு. மனநிலைக்குத் தக்கவாறு பல்வேறு விடைகளை நான் தருவதுண்டு. அடிப்படையாக ஒன்று நிச்சயம்: நாலைந்து பெரியவர்களுக்கு மத்தியில் ஒரு குழந்தை. சிறிது நேரம் அதைக் கவனிக்காவிட்டால், அது வீல் என்று கத்தும், நாற்காலியைத் தள்ளும், ஒரு பாத்திரத்தை உருட்டும். நம் காதையோ, சட்டையையோ பிடித்து இழுக்கும். வேறு ஏதாவது சத்தம் போடும், அல்லது நம் மடியில் ஏறிக்கொள்ளும் நான் எழுதத் தொடங்கியது இந்த வகையில் தான். இன்னும் அப்படித்தான் இருக்கிறது என்று நினைக்கிறேன். என் எழுத்து மனித வாழ்க்கையை மாற்றவோ உலுக்கவோ போவதில்லை. அசத்தியம், நீதி வழுவல், நியாயமில்லா நடப்பு, வாக்கு மீறல் போன்றவைகளுக்கு, ராமாயண மகாபாரத ஆதிகாவியங்களில் ஆதாரமும் முன்னுதாரணமும் பல பிரமுகர்கள் தேடும் காலம் இது. அதாவது வியாச வால்மீகிகளே மனிதர்களை நிரந்தரமாக நியாய வழியில் தைத்து வைக்கக் கடைபட்டவர்களாக இருந்தார்கள் என்று அர்த்தம் நல்ல வேளையாக, இந்த மகாகவிகள் மேற்சொன்ன காரியங்களை அங்கீகரித்தார்கள் என்று யாரும் சொல்லவில்லை. மகாகவிகளின் பாடே இப்படி இருக்கையில், என்னைப் போன்ற ஒரு சிறுவன் தன் எழுத்துக்கள் பற்றி எந்த பிரமையும் கொள்ளத் தேவையில்லை. ஆனால் ஒரு சிறுவனைப்போல நான் அன்றாட உலகைப் பார்த்து வியக்கிறேன், சிரிக்கிறேன், பொருமுகிறேன், நெகிழ்கிறேன், முஷ்டியை உயர்த்துகிறேன், பிணங்குகிறேன், ஒதுங்குகிறேன், சில சமயம் கூச்சல் போடுகிறேன். இந்த ‘சக்தி வைத்தியம்‘ என்ற சிறுகதைத் தொகுப்பு, மற்ற தொகுப்புகளைப்போல, மேற்கண்ட சேஷ்டைகள் அடங்கிய தொகுப்புதான். வேறு ஏதுமில்லை. மனித நடமாற்றம் அற்ற இடங்களில் பல வர்ணங்களும் அமைப்புகளும் கொண்ட சின்னஞ்சிறு பூண்டு வகைகள் பூப்பதுண்டு. ஏன் பூக்கிறோம், யாருக்காக என்று அவைகளுக்குத் தெரியாது. ஒருக்கால் தெரிந்து கொள்ள அவை

விரும்பவில்லை போலும்.

(சிவப்பு ரிக் ஷா வயல் வெளியீடு பதிப்பில் இடம்பெற்றது)

# தி.ஜானகிராமன் வாழ்க்கைக் குறிப்பு

தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடியை அடுத்த தேவங்குடியில் 1921ஆம் ஆண்டு ஜூன் 18 அன்று பிறந்தார். தந்தை தியாகராஜ சாஸ்திரி வட மொழியில் தேர்ந்த புலமையும் கர்நாடக இசையில் ஆழ்ந்த ஞானமும் கொண்டவர். ஜானகிராமனுடன் பிறந்தவர்கள் ஓர் ஆணும் நான்கு பெண்களுமாக ஐந்து பேர்.

ஜானகிராமன் பிறந்த ஆறாவது மாதம் குடும்பம் கும்பகோணத்துக்கு இடம்பெயர்ந்தது. மீண்டும் அவரது நான்காவது அல்லது ஐந்தாவது வயதில் தஞ்சைக்குக் குடிபெயர்ந்தது.

தஞ்சாவூர் புனித பீட்டர் பள்ளி, சென்டிரல் பிரைமரிப் பள்ளி, கல்யாண சுந்தரம் உயர் நிலைப்பள்ளி ஆகியவற்றில் பள்ளிக் கல்வியைப் பெற்றார். தி. ஜானகிராமனின் ஆரம்ப கால எழுத்து முயற்சிகள் பள்ளிப் பருவத்திலேயே தொடங்கியிருக்கின்றன. 1936 – 40 ஆண்டுகளில் கும்பகோணம் அரசினர் கல்லூரியில் இண்டர் மீடியட், பி.ஏ. பயின்றார். சென்னை சைதாப்பேட்டை அரசினர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் 1942 – 43ஆம் ஆண்டுகளில் பயின்று எல்.டி. பட்டம் பெற்றார். கல்லூரிக் காலத்தில் இலக்கியத்தின் மீதான ஈடுபாடு தீவிரம் பெற்றது. கல்லூரிப் பருவத்தில் கு.ப. ராஜகோபாலனுடன் ஏற்பட்ட நட்பு அவரைத் தனது வழிகாட்டியாகவும் குருவாகவும் குறிப்பிடும் அளவு வாழ்நாள் தொடர்பாக அமைந்தது.

1942ஆம் ஆண்டு திருமணம் நடைபெற்றது. மனைவி ராஜம் என்கிற ராஜலட்சுமி. இரண்டு ஆணும் ஒரு பெண்ணுமாக மூன்று மக்கள். மகன்களான ராதா ராமன். சாகேதராமன் இருவரும் காலமாகிவிட்டனர். மகள் உமா சங்கரி ஆந்திர மாநிலத்தில் சித்தூரில் வசித்துவருகிறார்.

கும்பகோணம் நகர உயர் நிலைப் பள்ளியில் 1943 – 44 ஆண்டுகளில் ஆசிரியப் பணியைத் தொடங்கினார். 1944 – 45 ஆண்டுகளில் சென்னை எழும்பூர் அரசு உயர்நிலைப் பள்ளியிலும் 1945 – 54 ஆண்டுகளில் தஞ்சை மாவட்டம் அய்யம்பேட்டை குத்தாலம் கழகப் பள்ளியிலும் பணியாற்றினார்.

அகில இந்திய வானொலியின் அழைப்பின் பேரில் கல்வி ஒலிபரப்பு

நிகழ்ச்சி அமைப்பாளராகப் பணியேற்றார். 1954 முதல் 1968ஆம் ஆண்டுவரை அந்தப் பணியில் இருந்தார். 1968 முதல் 1974வரை தில்லி வானொலி நிலையத்தில் உதவி கல்வி ஒலிபரப்பு நிகழ்ச்சி அமைப்பாளராகவும் 1974 முதல் 1981ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஓய்வு பெறும்வரை தலைமைக் கல்வி ஒலிபரப்பு அமைப்பாளராகவும் பணிபுரிந்தார். கல்வி ஒலிபரப்பு அமைப்பாளராகப் பணியாற்றிய காலங்களில் பயிற்சிக்காக, ஜப்பான், ஆஸ்திரேலியா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்குச் சென்று வந்தார். இந்திய அரசின் பண்பாட்டுப் பரிமாற்றத் திட்டத்தின் கீழ் 1970இல் ரொமேனியா,செக்கோஸ்லாவாகியா ஆகிய நாடுகளுக்கும் சென்று வந்தார்.

1937ஆம் ஆண்டு ஆனந்த விகடன் இதழில் வெளியான ‘மன்னித்து விடு’ என்ற சிறுகதையே தி. ஜானகிராமனின் அச்சில் வெளிவந்த சிறுகதை. தொடர்ந்து சிறுகதைகள் எழுதி வந்திருக்கிறார். கிராம ஊழியன் இதழில் 1944ஆம் ஆண்டு முதலாவது நாவல் ‘அமிர்தம்’ வெளியாகி இருக்கிறது. இந்த இரு செயல்பாடுகளையும் ஒட்டி அவரது அறிமுகம் நிகழ்ந்திருந்தாலும் 1946இல் கலாமோஹினி இதழில் வெளியான ‘பசி ஆறிற்று’ சிறுகதையே அவருக்கு வாசக அங்கீகாரத்தைப் பெற்றுத் தந்தது. சாகித்திய அக்காதெமி 1979ஆம் ஆண்டு அவரது ‘சக்தி வைத்தியம்’ தொகுப்பை முன்வைத்து அவருக்கு விருது வழங்கியது.

தி. ஜானகிராமன் கர்நாடக இசையில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். முறையாக இசை பயின்றிருக்கிறார். இசை ரசனை சார்ந்து நுட்பமான கட்டுரைகளையும் எழுதியிருக்கிறார்.

அகில இந்திய வானொலிப் பணியிலிருந்து ஓய்வு பெற்று 1981இல் சென்னை திரும்பினார். திருவான்மியூரில் வசித்தார். கணையாழி மாத இதழின் கௌரவ ஆசிரியராக இருந்தார். உடல்நலக் குறைவால் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு 1982ஆம் ஆண்டு டிசம்பர் 18 அன்று மறைந்தார்.

# தலைப்பகராதி

சுளிப்பு

செய்தி

தங்கம்

தவம்

தற்செயல்

தாத்தாவும் பேரனும்

திண்ணை வீரா!

தீர்மானம்

துணை

தூரப் பிரயாணம்

தேடல்

தேவர் குதிரை

நடராஜக் கால்

நடேசண்ணா

நாய்க்கர் திருப்பணி

நான்தான் ராமன் நாயர்

நானும் எம்டனும்

நேத்திக்கு

பசி ஆறிற்று

பஞ்சத்து ஆண்டி

பட்சி சாஸ்திரக் கிளி

பரதேசி வந்தான்

பஸ்ஸும் நாய்களும்

பாட்டியா வீட்டில் குழந்தைக் காட்சி

பாப்பாவுக்குப் பரிசு

பாயசம்

பாஷாங்க ராகம்

பிடி கருணை

பிரயாணக்கதை

புண்ணிய பாங்க்

பொட்டை

பொய்

போர்ஷன் காலி

மணச் சட்டை

மணம்

மயில்சாமியின் தேவை

மரமும் செடியும்

மறதிக்கு . . .

மறு பிறவி

மனநாக்கு

மன்னித்து விடு

மனிதாபிமானம்

மாடியும் தாடியும்

மாப்பிள்ளைத் தோழன்

மாற்றல்

முள் முடி

மூர்ச்சை

மேரியின் ஆட்டுக்குட்டி